உ

ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## நான்காம் பகுதி

(3580—4323 செய்யுட்கள்)



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

திருவான்மியூர் •• சென்னை 41

உ

ஸ்ரீமத்

கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

## நான்காம் பகுதி

(3580 — 4323 செய்யுட்கள்)



சோபகிருதுஸூ கார்த்திகைமீ



மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

திருவான்மியூர்] 1963 [சென்னை-41.

# உள்ளுறை

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# யுத்தகாண்டம்

---

## பதிப்புரை

பொன்திகழு மேனிப் புரிசடையெம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங்கத் தால்திரிவ ரேனும் ஒருவன்
ஒருவனங்கத் தென்றும் உளன். —(இயற்பா)

'கல்வியிற் பெரியர் கம்பர்' என்பது 'இலக்கணத்து எடுத்துக் காட்டாக வந்த சொற்றொடர்'. 'கம்ப நாடன் கவிதையைப் போல் கற்றோர்க்கிதயம் களியாதே' என்றார் ஓர் அபியுக்தர். 'யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல், வள்ளுவர்போல், இளங் கோவைப்போல் யாங்கணுமே கண்டதில்லை' என்றான் அமரகவி பாரதி. இங்கு புகழ்ப்பெற்ற கம்பநாடர் இராமபிரானுடைய பத்தியில் திளைத்து, அந்த் அவதார புருஷனுடைய பல்வேறு பண்புகளையும் தமது பெருங்காப்பியத்தில் தெள்ளத் தெளிய விளக்கினர்.

அமிழ்தினும் இனிய நம் தமிழ் மொழியில் இராமயண வரலாற் றினைக் கூறும் நூல்கள் சங்ககாலத்திலேயே இருந்துவந்தன. என்பது தொல்காப்பியம், யாப்பருங்கலவிருத்தி, வீரசோழியம் என்ற இவற்றின் உரைகளாலும், ஆசிரிய மாலை என்ற தொகை நூலாலும், பிறவற்றாலும் புலப்படுகின்றது. செந்தமிழ்க்கண்

ணுள்ள பெருங் காப்பியங்களுள் இராம காதை நிகழ்ச்சிகள் சுட்டப் பெற்றுள்ளமையை யாவரும் அறிவர். 'மராமரமேழு மெய்த வாங்கு விற்றடக்கை வல்வில், இராமனை வல்லன் என்ப திசையலாற் கண்டதில்லை'. (1643) என்பது சீவக சிந்தாமணி; 'தாதை யேவலின் மாதுடன் போகிக், காதலி நீங்கக் கடுந்துயருழந்தோன், வேத முதல்வற் பயந்தோ னென்பது, நீயறிந் திலையோ நெடுமொழி யன்றோ' (சிலப். 14 : 46—49); 'பெருமகனேவலல்லதியாங்கணும், அரசே தஞ்சமென் றருங்கா னடைந்த, அருந்திறல் பிரிந்த அயோத்திபோல, பெரும் பெயர் மூதூர் பெரும் பேதுற்றதும்' (சிலப், 13 : 62—65); 'தம்பியொடும் கான்போந்து, சோவரணும் போர்மடிய, தொல்லிலங்கைக் கட்டழித்த, சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே', (சிலப். 17 ஆய்ச்சியர் குரவை). மற்றும் இராம இராவணர் போர் பதினெட்டு மாதம் நடந்ததென்பது. 'உயிர்த்தொகையுண்ட வொன்பதிற் றிரட்டியென், றுண்டு மதியும் நாளும்' என்ற இடத்துத் தேவாசுர யுத்தம் பதினெட்டு மாதத்திலும் பாண்டவ கௌரவ யுத்தம் பதினெட்டு நாளிலும் முடிந்ததென்பது, அவ்வரிகட்கு அரும்பதவுரைகாரர் கூறியது கொண்டு உணர்க. இவ்வாறு இராமாயணத்தைப்பற்றிய பழங்குறிப்புக்கள் காணலாம்.

மற்றும் 'மீட்சி என்பது இராமன்வென் றுன் என, மாட்சியில் இராவணன் தோற்றமை மதித்தல்' என்பது (மணி. 27 : 53—54); 'நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி, யடலரு முந்நீ ரடைத்த ஞான்று. குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்' (மணி. 7 : 8—11) என்ற வரிகளும், அவற்றின் கீழ்க்குறிப்பும் காணத்தகும்.

இனி, பண்டை நாள் தொட்டு, ஆதிகாவியத்தைப் பின்பற்றி வடமொழியிலும் பிறமொழிகளிலும், பிற்காலத் தெழுந்த இராமாயண நூல்களும், தனிப்பாடல்களும் பலவாகும். இனி புறநானூறு 378-ல் 'கடுந்தெறலிராமன் உடன் புணர் சீதையை வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை, நிலந்திகழ் மதாணி கண்ட குரங்கின்' என்ற பாடலும் இங்குக் காணத்தகும்.

தமிழில் திருவள்ளுவ மாலையில் உள்ள ஒரு பாடலால் (30) இந்நூல் சீராம கதை என்று வழங்கப்பெற்றமை தெரிய வருகின்றது. மற்றும் கம்பராமாயணம் அச்சுப்புத்தகங்களிலும், தற்சிறப்புப்பாயிரச் செய்யுட்களிலும், இராமன் கதை, மாக்கதை,

இராமகதை, இராமாவதாரம் முதலிய பெயர்களால் இந்நூல் குறிக்கப் பெற்றமை அறியலாம். பெருந்தொகை என்னும் தொகுப்பு நூலில் இராமாவதாரம் என்ற பெயரால் இந்நூல் குறிக்கப் பெற்றுள்ளது. சிலர் இராமாவதாரம என்ற பெயரே கம்பர் இந்நூலுக்கு இட்டபெயர் என்றும் கூறுவர்.

எனினும் இராமாயணம் என்னும் பெயராலேயே இந்நூல் பெரியோர்களால் தொன்றுதொட்டு வழங்கப்பெற்று வருகின்றது என்ற உண்மையைத் தக்கயாகப்பரணி உரையாசிரியர் வாக்காலும் (தாக. 168 உரை) தெரிந்துகொள்ளலாம். மேலும், தமிழில் வெண்பாயாப்பில் வழங்கி வந்ததாகத் தெரியவரும் இராமாயண நூல் அப்பெயராலேயே வழங்கிவந்த தென்பது யாப்பருங்கல விருத்தி, வீரசோழிய உரை முதலியவற்ருலும் தெரியக்கிடக்கும்.

கம்பர் என்ற பெயர்க்குக் காரணம, அவர் பிறந்த ஊர், வாழ்ந்த ஊர், காலம் முதலியவற்றை இக்காலத்து அறிஞர் பலர் துருவி ஆராய்ந்து தத்தம் கருத்துக்களை வெளியிட்டனர். இப் புலவர் பெருமானை ஆதரித்துப் போற்றியவர் பெருங்கொடை வள்ளலான திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப முதலியார் என்ப. இவ்வூர் மாயவரத்தருகில் உள்ள குற்ருலத் தண்மையில் உள்ளதும், இப்புலவர் பெருந்தகை பிறந்ததாகக் கூறப்பெறும் தேரழுந்தூர் வட்டத்து உள்ளதுமான ஓர் சிற்றூர் என்றும், கம்பநாடர் பாடியருள் பெற்றதாகக் கூறப்பட்ட ஓர் காளிகோயில் அங்கு உள்ளதென்றும் கூறுவர். சிலர் ஓர் சமயம் கம்பநாடரை 'உமது ஊர் எது' என்று கேட்டபோது, அவர்,

'மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று
வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்
அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற கையும்
உடையான் சடையப்பனூர்.'

என்று விடையிறுத்தாராம். இவர் தம்து பெருநூலை அரங் கேற்றிய இடம் திருவரங்கம் என்ப. 'பண்ணிய விராமகாதை பங்குனி யத்த நாளில், கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேறினனே' என்றது காண்க. இவர் செய்ந்நன்றி மறவாமல்

தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலைத் தமது நூலிற் பாராட்டிப் புகழ்ந்துள்ளார். 'நூறுபாட்டிற் கொருபாட்டாக நரத்துதி யுள்ளது அதனை ஆயிரம் பாட்டுக்கொன்றாக அமைக்கலாமே' என்று நாதமுனிகள் கூறப் புலவர்பெருமான் 'ஆயிரத்தில் ஒருவனாக அவரைப் பாராட்டுவதில் தனக்குத்தடையில்லை' என்று கூறியதாக ஒரு செய்தி வழங்கப்படுகிறது.

அப்பாடல்கள் :—

'நடையினின் றுயர் நாயகர் தோற்றத்தின்
இடைநிகழ்ந்த விராமாவ தாரப்பேர்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல் லூர்வயிற் றந்ததே'.

(பால. காப்பு. 11).

மண்ணவர் வறுமை நோய்க்கு
மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன
படைக்கல மருளினானே.

(பால. வேள்வி. 1)

'பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளவால்.'

(பால. மிதிலைப். 73).

'கொடை மீளி யண்ணல்
சடையன்றன் வெண்ணெ யனுகும்
தேசங் கலந்த மறைவாணர்
செஞ்சொ லறிவாளர் என்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோ லகன்ற
பதகன் துரந்த உரகம்.'

(யுத்த. 2199).

'வெண்ணையூர்ச் சடையன் தங்கள்,
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.'

(யுத்த. 4281).

கம்பரின் கவித்திறம்

கி. பி. 7, 8 நூற்றுண்டுகளில் பல சமயங்கள் ஊடாடியதால், மக்கள் மனத் தெளிவற்றிருந்த காலத்தில், சங்கரர் இராமாநுஜர் போன்ற பெரியாரும், நாயன்மார்களும், ஆழ்வார்களும் நாட்டில் தோன்றிச் சமய உணர்ச்சிக்கு மறுமலர்ச்சி அளித்திருந்தனர். கோயில் பூசைகளும் திருவிழாக்களும் மலிந்திருந்தன. சோழர் அரசாட்சியும் நன்னிலையில் இருந்தது. இக்காலத்தை யொட்டி எழுந்தவர் கம்பர்.

இவர் பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் விளக்குவதிலும், அவற்றை முறைப்படுத்தி அமைப்பதிலும், உவமைகளைத் தக்கபடி தேர்ந்தெடுத்தமைப்பதிலும், மிக நுணுகிய கருத்துப் பொருள்களையும் கண்முன் காட்டுவது போல நிறுத்துவதிலும், சிறந்த தத்துவப் பொருள்களை எளிதாக எடுத்துப் புகட்டுவதிலும், நீதிகளையும் அறங்களையும் வற்புறுத்துவதிலும், பழைய புராணக் கதைகளை ஏற்ற பெற்றி உவமை வாயிலாக அமைத்துச் செய்வதிலும், தமிழ்ச் சொற்களின் இனிமை, எளிமை, ஆழமும், உவமை முதலிய அழகுகளும் புலப்படுமாறு அமைத்துக் காட்டுவதிலும், சந்தப் பாடல்களில் வீரம், அவலம், மருட்கை அச்சம் பெருமிதம் முதலிய மெய்ப்பாடுகள் தோன்றச் செய்வதிலும், ஒப்புயர் உற்றவர் ஆவர். அவருடைய இயற்கை யறிவு, மானிடர் இயல்பறிவு, தத்துவ உணர்ச்சி, சமய நூல்களில் உள்ள பயிற்சி, கட்டுரை வன்மை முதலியவற்றை அப்பெருமான் நூலில் பரக்கக்காணலாம். அவர் தம் காலத்திற்கு முன்னர் இருந்த அரிய பெருநூல்களிலும் அருளிச் செயலிலும் உள்ள சிறந்த பொருள்களைப் பொன்னே போற் போற்றுவர்.

இத்தகைய பெயரும் புகழும் வாய்ந்த கவி சார்வபௌமன் இயற்றியருளிய பெருங்காப்பியத்தில் இப்பகுதி ஆறுவது காண்டமாகும். முன் உள்ள ஐந்து காண்டங்களும் ஐயாயிரம் செய்யுட்களைக் கொண்டிருக்க, இக்காண்டம் மட்டும் ஏறக்குறைய ஐயாயிரம் செய்யுட்களைத் தன் அகம் கொண்டுள்ளது. ஆகவே இக்காண்டம் நான்கு பாகங்களாக வெளியிடப் பெற்றுள்ளது. மகாமகோபத்தியாய டாக்டர் ஐயரவர்கள் அரிதில் தேடிவைத்த சுவடிகளையும், குறித்து வைத்த பல குறிப்புக்களையும் பிறவற்றையும் துணைக் கொண்டு, இந்நூல் நிலயத்தால் பதிப்பிக்கப் பெற்று

வரும் கம்ப ராமாயணக் காண்டங்களுள் குறிப்புரை முதலிய வற்றுடன் பால காண்டம் 1949-லும், அயோத்தியா காண்டம் 1951-லும், கலாக்ஷேத்திர வெளியீடுகளாக வெளிவந்தன. பிறகு பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் இந்நூல் நிலைய வெளியீடுகளாக ஆரணியம் 1959-லும், சுந்தர காண்டம் 1957-லும், கிட்கிந்தா காண்டம் 1961-லும் வெளியிடப் பெற்றன.

நான்காந் தொகுதி.

சுவடிகளிலும் அச்சிட்ட பகுதிகளிலும் இக்காண்டத்துக் குரியனவாகக் காணப்பெற்ற படலங்களினுடையவும், செய்யுட் களிலுடையவுமான எண்ணிக்கைகளின் வேற்றுமைகளைக் காட்ட, உதாரணமாகச் சிலவற்றை மட்டும் கீழே தருவோம்.

| சுவடி எண். | படலங்கள். | பாடல்கள். |
|---|---|---|
| 980 | 39 | 4117 |
| 483 | 39 | 4117 |
| 978 | 30 | 3823 |
| 14 | 33 | 3978 |
| 482 | 37 | 4707 |
| 13 | 47 | 4793 |
| பெரிய காகிதச் சுவடி | 42 | 4138 |

அச்சிட்ட நூல்கள் .

| | | |
|---|---|---|
| ஆழ்வார் திருநகரி | 46 படலம் | 4337 |
| கோவிந்த பிள்ளை | 37 ,, | 4358 |
| மர்ரே அண்டு கம்பெனியார். | 42 ,, | 4163 |
| கிருஷ்ணமாச்சாரியார் பதிப்பு | 39 ,, | 4358 |
| இராமரத்தினமையர் | 37 ,, | 4358 |

இவ்வாறு படலங்களின் பெயர்கள் எண்கள் செய்யுட்களின் தொகை ஆகியவை. சுவடிகளிலும் அச்சிட்ட நூல்களிலும் மாறி யிருப்பதையும், இப்பதிப்பு சில செய்யுட்களை விட்டுப் பிறவற்றை ஏற்றுக் கொண்டிருப்பதையும் இயன்ற வரையில்

காரணம் காட்டி ஆங்காங்கே குறித்துள்ளோம். பாடமாக ஏற்றுக் கொள்ளப் பெருத பாடல்களை அதிகப் பாடல்கள் என்று குறித் துள்ளோம்.

4ம் பக்கம் 286. பிரதி பேதங்களையும் அதிகப் பாடல்களையும் நீக்கி விடாமல் பதிப்பிலேயே தனித்துக் காட்டுவதால் படிப்பவர்கள் ஷை சுவடிகளை மறுபடியும நாட வேண்டிய அவசியமில்லை. இப்பிரதிபேதங்களுட் சிலவும் பாடங்களிற் சிலவும் ஏற்றுக் கொள்ளத் தக்கன வென்று அறிஞர்கட்குப் படுமாயின் அவ்வாறு செய்தற்கும் பயன்படு வனவாம்

## பிரதி பேதங்கள் :

மக்களின் காப்பியமாக ஆயிரம் ஆண்டுகட்குமேல் நாட்டில் வழங்கி வரும இப்பெரு நூலில் பல பிரதி பேதங்கள் நிகழ்ந் திருப்பது இயல்பே [சுவடிகளை ஒருவாறு பிராந்தி வாரியாகப் பிரித்துப் பார்க்கும்போது இவ்வேற்றுமைகளும் ஒவ்வொரு வகையாகப் பிரிந்து நிற்கின்றன என்பதும் காணப் பெறுகின்றன]. இவவாறு பெறப்பெற்ற பல்லாயிரம் பாட பேதங்களைத் தொகுத்து வைப்பதே இப்பதிப்புக்களின் முதற் பணியாக ஏற்றுக் கொள்ளப் பெற்றது. இவற்றிலிருந்து ஏற்ற பாடங் களைத் தேர்ந்தெடுக்க ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்களும் பழைய இராமாயண வசன நூல்களும், பறங்கி யுரைபோன்ற பழைய வுரைக் குறிப்புக்களும் சிறந்த புலவர்கள் கையாண்ட சுவடிகளும, அச்சிட்டு முன் வெளிவந்த பதிப்புக்களும் பேருதவி புரிந்தன. முன்னரே அச்சுப் பிரதிகளில் உள்ள சில பகுதிகளில் சிற்சில இடங்களில் எதுகை மோனைகளை ஒட்டியும், பொருள் இடங்கள் குறித்தும் புதுப் பாடங்கள் தரப்பட்டுள்ளன.

## அதிகப் பாடல்கள் :

மூல பாடமாக ஏற்றுக்கொள்ளப்பெற்ற செய்யுட்களே யன்றி, பிறவற்றை அதிகப்பாடல்கள் என்று கொண்டு, ஏற்ற இடங் களிற் காட்டியுள்ளோம். இவற்றில் பல ஒரே சுவடியிலும், சில ஒன்றுக்கு மேற்பட்ட சுவடிகளிலும், காணப்பெற்றாலும், ஆசிரியரின் கருத்து, கதையின் போக்கு, செய்யுட்களின் நடை, பழைய சுவடிகளில் அவை இல்லாமை போன்ற காரணங்களால், அவை இடைச்செருகல் ஆகலாம் என்று கருதப் பெற்று மூல பாடங்

களில் சேர்த்துக் கொள்ளப் பெருமல், தனியே பாடபேதங்கட்குக் கீழே தரப் பெற்றுள்ளன. இன்னும அச்சுப் புத்தகங்களில் ஏறிய செய்யுட்கள் இப்பதிப்பில் பாடங்களாகச் சேர்த்துக்கொள் ளப்பெருத இடங்களிற் காரணங்கள் காட்டப் பெற்றுள்ளன. இவ்வாறு இந்த நான்கு தொகுதிகளிலும் காட்டப் பெற்ற அதிகப் பாட்டல்கள் 1-ஆம் பாகம் 194 2-ஆம் பாகம் 129. 3-ஆம் பாகம். 113 4-ஆம் பாகம் 286.

**உரைகள் :**

பதவுரைகள் இயன்ற வரையில் பாடல்களின் அன்வயப் படியும், எளிய நடையிலும் பொருத்தமான முறையிலும் அமைதல் வேண்டும் என்ற கருத்துடன் வரையப்பெற்றுள்ளன. இவ்வாறு செய்வதால் பதங்களைப் பிரித்தல் அவற்றை முறைப்படுத்தல் ஆகியவற்றையும் ஒருங்கே செய்து காட்டியதாகும்.

விளக்க வுரை இப்பதிப்பின் ஒரு சிறந்த பகுதியாகும். செய்யுட் பொருள்களின் நயங்களை விளக்கிக் கூறவும், ஆசிரியரின் கவிச் சிறப்பினையும் அவர் தம் கொள்கைகளையும் வற்புறுத்தவும், செய்யுளின் நடை அழகு முதலியவற்றை அமைக்கவும், முதனூல் முதலிய இராமாயணப் பிற நூல்களில் இருந்து ஒற்றுமை வேற்றுமைகளைத் 'தெரிவிக்கவும், இப்பகுதி பயன்படவேண்டும் என்ற கொள்கையுடன் இஃது எழுதப் பெற்றுள்ளது.

இவ்வாருன முயற்சிகளால், இன்றெங்களுக்குக் கிடைத்த கருவி களைக்கொண்டும், தமிழின் மகோபகாரியான டாக்டர் ஐயர் அவர்கள் விரும்பித் தொடங்கிய இப்பணியையெமது எளிய ஆற்ற லுக் கேற்ற முறையில், உலகிற் களிக்க வேண்டும் என்ற உள்ளன் புடனும், இப்பதிப்புக்களை ஒன்றன் பின் ஒன்ருகத் தமிழ் அன்னை யின் திருவடிகளில் சமர்ப்பிக்கின்ருேம். ஆயிரம் ஆண்டுகட்கு மேலாகத் தமிழின உயிராகவும தமிழரின கண்களாகவும் ஒளிரும் இப்பெருங் காவியத்தை அறிஞர் முழுமையும் ஒம்புமாறு பதிப் பிப்பதென்பது எம்போல்வாருக்கு இயல்வதொன்றன்று எனினும் ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்களும் அவர்கள் தேடி வைத்த கருவி களும் உலகிற்குப் பயன்படவேண்டும் என்ற கடமை யுணர்ச்சியுடன் இம்முயற்சி மேற்கொள்ளப்பெற்ற தென்பதையும், இவற்றை வெளியிடுவதில் எவ்வளவு பக்தியும், ஊக்கமும், உழைப்பும் எம்மால் இயலுமோ அவ்வளவையும் இதில் பயன்

படுத்தியுள்ளோம் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறோம். இப்பதிப்பிற் காணப்பெறும் குறைகளைச் சுட்டியும் இஃது இன்னும் பயனுற வழிகளை வகுத்துக் காட்டியும், உதவும் அறிஞர் கட்கு என்றென்றும் கடப்பாடுடையோம்.

கம்ப ராமாயணப் பதிப்புகள் சில முன்பே நாட்டில் உலாவவும் சில இக்காலத்து வெளிவந்து கொண்டிருக்கவும் இந்நூல் நிலைய வெளியீடு வேண்டுமா என்று சிலர் ஐயுறக்கூடும். அவர்கள் இப் பதிப்பினை ஊன்றிப் படித்துப் பார்க்க வேண்டும் என்று அவர் களை மிக்க தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறோம். இவற்றை வெளியிடுவதில் இந்நிலையம் எடுத்துக்கொள்ளும் முயற்சி, கடமை யின்பாற்பட்ட தென்பதையும், தமிழ் உலகிற்குச் செய்யவேண் டிய இன்றியமையாப்பணி யென்ற எண்ணத்தின் பாற்பட்ட தென்பதையும் தெரிவித்துக் கொள்ளவும் விரும்புகின்றோம்.

யுத்த காண்டத்துக்கு இது காறும் பதவுரை எழுதப்படா மலே யிருந்தது. இதுவே முதல் முதலாக எழுதப்பெற்ற பதவுரையாகும்.

**நன்றியுரை :**

இப்பதிப்பு வெளிவர உதவியவர் பலராவர். இந்நூல் நிலையத் தினைப் பாதுகாத்து இதன் வழியாக ஸ்ரீஐயரவர்களின் புகழை நிலை நிறுத்தப ,பேரன்புடன் உழைத்துவரும் ஸ்ரீமதி ருக்மிணி தேவியார் அவர்களுக்குத் தமிழ் உலகம் பெரிதும் கடமைப்பட் டிருக்கிறது. இந்நிலையத்தின் அத்யக்ஷகரான அவர்களும், இதன் நிதியாளரான உயர்திரு. K. சங்கரமேனோன் அவர்களும் இப்பதிப்பு வெளிவருவதற்கு மிகுந்த சிரத்தை காட்டி நூல் நிலையத்திற்கு உதவிசெய்து வருகின்றனர். அவர்கட்கும் இப்பதிப்பின் செலவிற் கான தொகையை மானியமாகக் கொடுத்து உதவிய இந்திய கவர்ன்மெண்ட் Scientific Research and Cultural Affairs Ministry காட்டியுள்ள அன்பிற்கும் இந்நூலகம் மிகுந்த கடப்பாடு தெரிவிக் கின்றது. இப்பதிப்பு முதல் தொகுதியில் நரசிங்கப் பெருமா னுடைய திருவுருவப்படத்தைக் காணலாம்.

பிற காண்டங்களுக்கு உதவி வந்தமை போல, இக் காண்டத் திற்கும் (1) மூல ஏடுகளையும் அச்சு நூல்களையும் படித்துப் பிரதி

பேதங்களைச் சேகரித்தல் (2) மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள் பல் வேறிடங்களில் எழுதி வைத்த இக் காண்டத்திற்குரிய பாட பேதங்கள், பொருளமைதிகள், மேற்கோள்கள், ஒப்புமைகள் முதலியவற்றை ஒரு சேரத் தொகுத்தல், (3) வேறு நூல்களினின்று மேற்கோள்கள் முதலியவற்றை ஆராய்ந்து அவற்றை உரிய இடங்களில் அமைத்தல், (4) பழைய குறிப்புரைப் பகுதிகளினின்று தக்க பகுதிகளை எடுத்து அவ்வப் பாடல்களுக்குக் கீழ் அமையுமாறு எழுதி வைத்தல், (5) அச்சாகும் காலத்தில் ஒப்பு நோக்குதல் முதலியவற்றில் உதவுதல், (6) பாடல்களின் முதற் குறிப்பகாராதியைத் தொகுத்தல் (7) அரும்பதங்கள் முதலியவற்றில் அகராதிகளுக் குரியனவற்றைத் தேர்ந்தெடுத்து, முறைப்படுத்தல் ஆகிய பல பக்க உதவிகளை இந்நிலைய அலுவலாளர் அனைவரும் மிகுந்த ஊக்கத்துடன் செய்தமைத்தது குறிக்கத் தக்கது. சிறப்பாக இப்பணியில் அவகாசம் நேர்ந்த வழி உதவிய திரு. மு. நாராயணசாமி, திரு. தி. கோ. ராமாநுஜ தாஸர், திரு. ஆ. பரமசிவம் பிள்ளை ஆகியோர்க்கு இந்நூல் நிலையம் தன் கடப்பாட்டைத் தெரிவிக்கின்றது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பல ஆண்டுகள் தமிழ்ப் புலமை நடத்தி ஓய்வு கொண்டவர்களும், ஆங்கிலத்திலும் தமிழிலும் பல தமிழாராய்ச்சிக் கட்டுரை வெளியிட்டவர்களும், கம்ப ராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர்களுமான உயர் திரு. E. S. வரதராஜ ஐயரவர்கள்,, B.A. இப்பெருங் காண்டத்திற்கு பதிப்புப் பொறுப்பை முற்றிலும் ஏற்று அதனைத் திறம்பட ஆக்கியமைத்ததற்கு இந்நூல் நிலையம் அவர்பால் தன் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றது. (இக்காண்டத்தில் மாயா சீதைப் படலம் முதல் இராவணன் சோகப்படலம் ஈறாக உள்ள நான்கு படலங்களும், இராம விராவணர் தேரேறு படலங்களும் நீங்கலாக உள்ள காண்டம் முழுமைக்கும் அவர்களே உரைகள் எழுதினார்கள் என்பதையும் நன்றியுடன் குறிக்கின்றோம்).

ஏறக்குறைய 4800 பக்கங்கள் கொண்ட இப்பெரு நூலை மிக விரைவாகவும் அழகாகவும் அச்சிட்டு உதவிய சென்னை குமரன் பிரஸ் அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி மிகவும் உரித்து.

இப் பெருநூலின் பதிப்பு முயற்சியில் ஆதிமுதல் ஈடுபட்டுதவிய அன்பர்கள் அனைவர்க்கும் எம் பணிவுடன் கூடிய

நன்றியைச் செலுத்துகிறோம். இவர்களோடு, ஸ்ரீ ஐயரவர்களின் பேரர் உயர்திரு. க சுப்பிரமணிய ஐயர், பி.ஏ. அவர்கள் இங்கிலேயம் ஏற்பட்ட காலம் முதல் இதன் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் பேரன்பு காட்டி வருவதோடு, இக் கம்பராமாயணப் பதிப்புக்குத் தம் மேன்மை தங்கிய பாட்டனூர் அவர்கள் அரிதில் தேடி வைத்த கருவிகள் யாவற்றையும் முழு மனத்துடன் அளித்து உதவி வந்துள்ளார்கள். வழி வழியாக வளர்ந்து வரும் இவ் அறிவும் வள்ளன்மையும் என்றென்றும் பெருகி உலகத்திற்குத் தமிழ் வளத்தை அருளி வரவேண்டுமென்று இறைவன் திருவடிகளில் வணங்கிப் பிரார்த்திப்பதே இக்குடும்பத்துக்கு நாம் செய்யும் கைம்மாருகும். இவர்களோடு, இங்கிலேயப் பதிப்பு உதவிக் குழுவின் பிற உறுப்பினர்களான: (1) மு. வரதராஜனூர், (2) கி. வா. ஜகந்நாதன், (3) பெரிய சாமிதூரன், (4) ஜகந்நாதாசாரியார் அவர்களும். இப் பதிப்புக்கள் சிறக்க அமைவதற்கு வேண்டிய ஆலோசனைகளையெல்லாம் உதவி, ஊக்கி வருகின்றூர்கள். அவர்களுக்கும், இங்கிலேயின் ஆட்சிக் குழுவினர் அனைவர்க்கும் எம் மனமார்ந்த நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

இறைவன் கருணையே யாவற்றிற்கும்காரணமாதலால், அதனை முக் கரணத் தூய்மையுடன் வழிபடுகின்றோம்.

---

ஸ்ரீராமஜெயம்

# நூன்முகம்

பாருருவி நீரெரிகால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவம் ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோ தொன்றும் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவந் தானே.

யுத்த காண்டம் என்பது, முன்னர்ச் சுந்தர காண்டம் திருவடி தொழுத படலத்து இராமபிரானை நோக்கி, 'ஐயகேள், அரிவை நம்மால் காண்டற்கெளியள் ஆனாள் என்று மாருதி கூறிய பின்னரும், 'காலந்தாழ ஈண்டினி யிருத்தி போலாம்' என்று சுக்கிரீவன் கூற, 'எழுக வெம் படைகள்' என்ற இராமபிரான் கட்டளைக்கிணங்க, 'வழுவலில் வெள்ளத்தானை தென்றிசை வளர்ந்தது முதல், இராவணாதிகளைப் போரில் தொலைத்து இராமபிரான் திருமுடி புனைந்து நின்றது வரையில் உள்ள வரலாற்றைக் கூறும் காண்டமாகும். இது, இப் பெருங்காப்பியத்தின் ஆறுவது பெரும்பகுதியாக அமைந்து, 39 படலங்களையும், 4323 செய்யுட்களையும் தன்னகங் கொண்டு ஒளிர்வது. இக் காண்டத்தின் நிகழ்ச்சிகள் பெரும்பாலும் கடற்கரையிலும் இலங்காபுரியிலும் நிகழ்ந்தனவாக அறியப்படும். மீட்சிப்படலம், திருமுடி சூட்டுப்படலம், விடைகொடுத்த படலம் என்ற மூன்றும் யுத்தகாண்டப் பகுதிகளாக் சேர்க்கப்பெற்றுள்ளன.

வான்மீக ராமாயணம் 131 சர்க்கங்களிலும் அத்யாத்ம ராமாயணத்தும் துளசிதாசர் இராமாயணத்தும் இவ்வரலாறு அமைந்திருக்கக் காண்கின்றோம். 'ககன : ககனாகாரம் சாகரம் சாக

ரோபமம், ராம ராவண யுத்தமேவ ராம ராவண யுத்தம்' என்று வழங்குவது கொண்டே இந்த யுத்தத்தின் கடுமையும் பெருமையும் உணரலாம். ஏதோ வானவர் வானரர் என்ற இரு திறத்தாரும் தம்முட் பொருது மடிந்ததைக் கூறுவதுதானே என்று இக் காண்டத்தை யாரும் அதிகமாகப் பாராட்டுவதில்லை. எனினும், இந்தக் காண்டத்தில் உழைத்தவளவு வேறு எந்தக் காண்டத்திலும் கவிஞர் ஈடுபட்டுழைக்கவில்லை என்பதை இப் பகுதியை ஊன்றிக் கற்கும் அறிஞர் உணர்வர்.

## படலப் பெயர்கள்

சுவடிகள் தோறும் படலப் பெயர்கள் மாறிக் கிடக்கக் காணலாம். ஒவ்வொரு படலத்துக்கும் இரண்டு மூன்று பெயர்கள் உள்ளன. இப்பெயர் மாறுபாடுகள் பிற்காலத்தில் சுவடி எழுதுவோர்களாலும் படிப்போர்களாலும் நிகழ்ந்திருக்கக் கூடும் என்பது எம் கருத்து. யுத்த காண்டத்து இரண்டாவது படலம் மந்திரப் படலம் என வழங்கியுள்ளது. ஆயினும் அயோத்தியா காண்டத்தில் ஓர் மந்திரப் படலம் உண்மையின் அதினின்றும் வேறுபாடு தோன்ற இராவணன் மந்திரப்படலம் என்றே குறிக்கப் பெற்றுள்ளது. இரணியன் வதைப் படலம், இரணியன் கதைப் படலம் என்றே சில ஏடுகளில் காணப்படுகிறது. இலங்கை கேள்விப் படலம் 'ஒன்னார் வலியறி படலம்' என்று காணப்படுகிறது. வருணன் அடைக்கலப் படலம் 'கடல் சீறிய படலம்' என்றும் வருணன் அடைக்கலப் படலம் என்றும் இரண்டு படலங்களாகச் சில பிரதிகளில் உள்ளன. வருணனை வழி வேண்டு படலம் என்றும் இது குறிக்கப் பெற்றுள்ளது. ஒற்றுக் கேள்விப் படலம் பல பெயர்களுடன் காணபபெறுகின்றது. இலங்கை காண் படலத்தின் முதல் 23 கவிகள் செருப்பதிப் படலம் என்ற தலைப்புடன் திகழ்கின்றது. முதற் போர்ப் படலம் 'இராவணன் முதல் நாளிற்றோற்ற படலம், பங்கப் படலம் 'முதனாளை யுத்தம் என்றும் 'முதற் போரில் மருட்சி' என்றும் சில பிரதிகளில் மாறிக் காணப்படுகின்றது. நிகும்பிலைப் படலம் 'நிகும்பிலை யாக சங்காரப் படலம்' என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. வானரர் களங்காண் படலமும் இராவணன் களங்காண் படலமும் ஒன்றுபட்டு, களம்காண் படலம் என்ற பெயருடன்

காணப்படுகின்றன. இராமன் தேரேறு படலம் என்றும் இராவணன் தேரேறு படலம் என்றும் தனித்தனிக் கொள்ளப் பட்டுள்ளன. சில பிரதிகளிலும் அச்சிட்டப் புத்தகங்களிலும் 'தேரேறு படலம்' ஒன்ருகவே குறிக்கப் பெற்றுள்ளது.

படலங்கட்குக் கதைப் பகுதியை ஒட்டித் தலைப்புக்கள் தரப் பெற்றுள்ளன, செய்யுட்களில் சீர் பிரித்து அமைப்பதிலும், சந்திகளைப் பிரித்துக் காட்டுவதிலும், நிறுத்துப் புள்ளிகளைச் செய்யுட்குள்ளேயே அமைத்துக் காட்டுவதிலும் இக் காலத்து, நாட்டிற் பற்பல கருத்துக்கள் தோன்றியுள்ளன. சந்தமே பாடல்கட் குயிராகலின், அதனைக் குறைவு படுத்தல் இழுக்காகும் என்று எண்ணிச் சீர்களை மட்டும் பிரித்துக் காட்டிப் பாடல்களின் ஓசை நலத்தைக் கெடுக்காமல் பாதுகாக்கப் பெற்றுள்ளது. 'விருத்தம் என்னும் ஒண்பாவிற்குயர் கம்பன் என்று சிறப்பிக்கப் பெற் றுள்ளது. இப் புலவர் பெருமான் கையாண்டுள்ள விருத்த விகற்பங்கள் அனைத்தினையும் இவர் காலத்துக்கு முன்னிருந்த திருத்தக்க தேவரது பெருங்காப்பியமான சீவக சிந்தாமணியில் காணலாம். ஆயினும் உரையாசிரியர் நச்சினர்க்கினியர் சிந்தா மணியின் பழமை தெரிப்பான் வேண்டி அதன் செய்யுட்களைக் 'கொச்சக வொருபோகு' என்றதில் வகைப்படுத்தினர். இக் காண்டத்தில் காணப்பெறும் விருத்த விகற்பங்கள் பலவாகும். அவை அறுசீர், எழுசீர், ஆசிரிய விருத்தங்கள், கலி விருத்தம், கலி நிலைத்துறை அல்லது காப்பியக் கலித்துறை, வஞ்சி விருத்தம், கொச்சகக் கலி முதலியன ஆம. மற்றும் ஆங்காங்கு இடத்துக்கேற்ற சந்தங்களில் அமைக்கப் பெற்று, நகை, அவலம், வீரம், வெகுளி, உவகை, முதலிய மெய்ப்பாடுகளை வாசகர்களுக்கு உண்டுபண்ணும் அரிய கவிகள் பலவாகும். சந்தத்தில் அமைக்கப் பெற்ற கலி விருத்தங்கள், 219-232; 840-858; 1132-1140; போர்ச் சந்தம்: 1263-1282; 1801-1848; 1 97-2023; 2179-2202; 2969-3030; 3331 3334; 3388-3401; 3420-3422; 3615-3642; 3686-3697; 3724-3731; இரணியன் சீற்றமும் அதன் விளைவு களும் அறுசீராசிரிய விருத்தத்தில் அமைக்கப் பெற்றுள்ளன. 219-232 கலி விருத்தங்கள் பிரகலாதனைத் துன்புறுத்துமாறு மேற்கொண்ட இரணியன் வெகுளிச் செயல்களைக் குறிப்பன. 686-695, 840-858 என்ற செய்யுட்களின் சந்தம் 'தீதில் வரவாக

திருவின் வரவு'; 'நின்றவனை வந்த நெடியோனடி பணிந்தான்; மூளு முளதாய பழி' என்ற செய்யுட்கள் போன்றவை. 111-1140 போர்ச் சந்தங்கள் படிக்கும்போதே வீர மெய்ப்பாடு வாசகர்மாட்டு எழுப்பக்கூடியன. 1811-1838, 1997-2023, 2179-2202 என்ற பாடல்கள் 'பனியால் நனைந்து' என்ற அரிச்சந்திர புராணச் செய்யுட் போன்றவை. 2969-3030, 3068-3077 இவை பரணிச் செய்யுட்கள் போன்றவை. 3388-3401, 'மகர மறிகடலின் வளையும் வயவிருதர்' எனத் தொடங்கும் பரணித் தாழிசைகளை நிகர்த்திருப்பது காணலாம். விலாபம் அல்லது அவலத்தைக் குறிக்கும் செய்யுட்கள் பெரும்பாலும் அறுசீர் எழுசீர் ஆசிரிய விருத்தங்களிலும், கொச்சகக் கலியிலுமே காணப்பெறும். 1644-1658 கும்பகன்னன் இறந்தது கண்டும், 1929-1935 அதிகாயன் மரித்தது கண்டும், இராவணன் அவலித்ததும், 3837-3844 இராவணன் வீழ்ச்சியும், 3859-3866 வீடணன் புலம்பலும், 3877-3883 மண்டோதரி புலம்பலும் காண்க. மற்றும் செய்யுட்களின் உட்பிரிவான சீர்களை வகைப்படுத்தி அவைகளைக் கொண்டு பாக்களின் இலக்கணம் கூறுவது விரிவஞ்சி விடுக்கப்பட்டுள்ளது. உதாரணமாக முதற்சீரும் மாச்சீரும் ஏனைய சீர்கள் விளச்சீருமாக வந்த விருத்தம் என்று கூறுவது போன்று என்க.

உரைப் பகுதியில், (பதவுரை, விளக்கம் மேற்கோள் ஒப்புமைப் பகுதி, இன்றியமையா இலக்கணக் குறிப்புக்கள் ஆகியவற்றைக் கொண்ட) விசேடவுரை, செய்யுட்கள் சுவடிகளில் முன் பின்னாக அமைந்துள்ளவை. அதிகப் பாடல் முதலியவற்றைக் காட்டும் குறிப்புக்கள், பிரதிபேதங்கள் என்ற இவைகளைக் காணலாம். பழைய உரையில் காணும் சில குறிப்புக்களும் அவற்றின் நயம் நோக்கி ஆங்காங்குக் காட்டப் பெற்றுள்ளன. வான்மீகம் முதலிய நூல்களிலிருந்து இந்நூல் மாறுபட்டுள்ள இடங்களும், இதில் விளக்கமாகக் கூறப்படாத இடங்கள் வான்மீகம், துளசிதாசர் இராமாயணம், அத்யாத்மம் போன்றவற்றால் விளக்கம் உறும் பகுதிகளும் குறிக்கப் பெற்றுள்ளன. மேற்கோள்களும் ஒப்புமைப் பகுதிகளும் அவைகள் காணப்பெறும் நூல்களின் பெயர்களுடன் தரப்பெற்றுள்ளன. இவை இரண்டும் மகா மகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி ஸ்ரீ ஐயரவர்களின் தனிச் சிறப்புக்களாகும். அவர்கள் எழுதி வைத்த குறிப்புக்

களைப் பயன்படுத்திக் கொண்டு, மேலும் இயன்றவரையில் அவ களுடைய வழியைப் பின்பற்றிச் செய்ய முயன்றுள்ளோம். பிரதி பேதங்கள் செய்யுட்கள்தோறும் மலிந்து கிடக்கின்றன என்பது உண்மையாயினும் அவற்றுள் (1) எழுதுவோரால் நிகழ்ந்த எழுத்துப் பிழைகளையும், (2) ஒரெழுத்துக்குப் பதிலாய்ப் பிறிதோர் எழுத்தைக் கொண்டு பொருள் வேற்றுமை காணப்படா இடங்களையும் விடுத்துச் சிறந்தவற்றை மட்டும் அவை நிகழும் வரிகளைச் சுட்டி அமைத்துள்ளோம். செய்யுள் முதற் குறிப்பகராதி, நூற்கண் வந்த புராண வரலாறுகள் உவமைகள் அணிகள் முதலியவை அநுபந்தங்களாகச் சேர்க்கப் பெற்றுள்ளன. யுத்த காண்டம் நான்கு பகுதிகளாக அமைத்துள்ளமையின், அரும்பத அகராதி தனித்தனியாகப் பகுதி தோறும் அமைக்காமல், நான்காவது பகுதியின் இறுதியிலேயே தரப்பெற்றுள்ளது. செய்யுட்கள் அனைத்திற்கும் தொடர் எண் குறித்திருப்பதால் சொற்களோ சொற்றொடர்களோ வந்துள்ள இடங்களை எளிதில் அறிந்துகொள்ளக்கூடும். குற்றம் களைந்து குறைபெய்து கொள்ளுதல், கற்றறிந்த மாந்தர் கடன்.

---

## இப்பதிப்பில் எடுத்துக் காட்டியுள்ள நூல்கள் முதலியவற்றின்முதற் குறிப்பகராதி.

அகநா - அகநானூறு
அக. நி - அகராதி நிகண்டு
அத்யாத்ம ராமாயணம்
அப்பர் - அப்பர் தேவாரம்
அபிசிந் - அபிதான சிந்தாமணி
அயோத்தி - அயோத்தியா காண்டம்
அரிச். பு - அரிச்சந்திர புராணம்
அழகர் : கலம் - அழகர் கலம்பகம்.
அறநெறிச் - அறநெறிச்சாரம்.
ஆசாரம் - ஆசாரக் கோவை.
ஆரணிய - ஆரணிய காண்டம்
இயற்பா
இரகுவமிசம்
இரத்தினச் சுருக்கம்
இராசராசனுலா
இராம நாடகம்
இலக்கணக் கொத்துரை
இறையனூர் - இறையனூரகப் பொருள் உரை
ஈடு - ஈடு
உத்தர - உத்தர காண்டம்
ஐங்குறு - ஐங்குறுநூறு
ஒட்ட - ஒட்டக்கூத்தர்
ஒருதுறைக் கோவை
ஔவை
கந்தபு - கந்த புராணம்
கந்தர் கலி - கந்தர் கலிவெண்பா
கந்தரலங் - கந்தரலங்காரம
கந்த ரநு - கந்த ரனுபூதி
கம்பர் - காப்பு
கம்பர் - பாயிரம்
கம்பர் - தனிப்பா
கல் வெட்டு
கலிங் பரணி - கலிங்கத்துப்பரணி
கலித் - கலித் தொகை
களவழி - களவழி நாற்பது
கஞ் நூல்
காசிக் கலம்பகம்
காசி கண்டம்
காஞ்சிப் - காஞ்சிப் புராணம்
கார் நாற்பது
காரிகை
காவடிச் சிந்து
கிட்கிந்தா - கிட்கிந்தா காண்டம்
கீதை - பகவற் கீதை
குசேலோ - குசேலோபாக்யானம்
குமரகுரு - குமரகுருபரர் பிரபந்தம்
குலோத். கோவை - குலத்தோங்க சோழன் கோவை
குற்ருலக் குறவஞ்சி
குறள் - திருக்குறள்
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந் தொகை
கைவல்யம் - கைவல்ய நவநீதம்
கொன்றை வேந்தன்
கோயிற் புராணம்
சடகோபரந்தாதி
சாசனத் தமிழ்க் கவிசரிதம்
சிதம்பரச் செய்யுட் கோவை

சிதம்பரமும் மணி - சிதம்பரமும் மணிக்கோவை
சிலப் - சிலப்பதிகாரம்
சிவ : சித்தி - சிவஞான சித்தியார்
சிவஞான பாடியம்
சிவப்பிரகாசம்
சிவ: போதம் - சிவஞானபோதம்
சிறுபஞ்ச - சிறுபஞ்சமூலம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப் படை
சீவக - சீவக சிந்தாமணி
சுந்தர - சுந்தர காண்டம்
சுந்தரர் - சுந்தரர் தேவாரம்
சுருதி
சூடாமணி - சூடாமணி நிகண்டு
சூளா - சூளாமணி
சேக்கிழார் - சேக்கிழார் புராணம்
சேதுபு - சேது புராணம
சோண சைலமாலை
தக்க - தக்கயாகப் பரணி
தகடூர் - தகடூர் யாத்திரை
தஞ்சை வாணன் கோவை
தணிகைப் - தணிகைப் புராணம
தனிப்பா - தனிப்பா டற்றிரங்டு
தாயு - ாயு மானவர் பாடல்
திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது
திரிகடு - திரிகடுகம்
திருக்கருவை. கலி - திருக் கருவைக் கலித்துறை யந்தாதி
திருக்கருவை. வெண்பா - திருக் கருவை வெண்பா வந்தாதி
திருக்காளத்தி நாதர் உலா
திருச்செந் தூர்ப்பிள்ளைத் தமிழ்
திருத்தாண டகம்
திருப்பாவை
திருப்புகழ்
திருமாலை
திருமுருகு - திருமுருகாற்றுப் படை
திருவரங்கக் கலம்பகம்
திருவரங்கத் தந்தாதி
திருவள்ளுவ மாலை
திருவாசகம்
திருவாய்மொழி
திருவாரூர் நான்மணிமாலை
திருவாலவாயுடையார் திருவிளையாடல்
திருவானைக்கா உலா
திருவிசைப்பா
திருவிருத்தம்
திருவிளையாடல் (பரஞ்சோதி)
திருவெங்கைக் கோவை
திருவேங்கடக் கலம்பகம்
திருவேங்கடத்தந்தாதி
திருவேங்கடமாலை
திவாகரம்
தென்னிந்திய சாசனம்
தேவா - தேவாரம்
தொல் - எழுத்து.
தொல் - சொல்
தொல் - பொருள்
நந்தனர் - நந்தனர் சரித்திரக் கீர்த்தனை
நல்வழி
நவரத்ன ஒப்பாரி
நளவெண்பா
நற்றிணை
நறுந் தொகை
நன்னூல்
நன்னெறி
நாச்சியார் திருமொழி

நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக் கடிகை
நீதிநெறி - நீதிநெறி விளக்கம்
நீதி வெண்பா
நெடுநல் - நெடுநல் வாடை
நைடதம்
பகவற் - பகவற்கீதை
பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்
பட்டினப்பாலை
பண்டார மும்மணிக் கோவை
பதிற் - பதிற்றுப்பத்து
பதினோராந் திருமுறை
பரி - பரிபாடல்
பழ - பழமொழி
பாகவதம்
பாசவதைப்பரணி
பாரதம்
பால - பால காண்டம்
பிங்கலந்தை
பிரபுலிங்கலீலை
பிரபோத சந்திரோதயம்
பிரமோத்தர காண்டம
பு. வெ, மா. - புறப்பொருள் வெண்பா மாலை
புருஷசூக்தம் (வட)
புறத்திரட்டு

புறநா - புறநானூறு
பெரியதிரு - பெரிய திருமொழி
பெரியபு - பெரிய புராணம்
பெரியாழ் - பெரியாழ்வார் திருமொழி
பெருங் - பெருங் கதை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுபடை
பெருமாள்-பெருமாள் திருமொழி
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரைக் - மதுரைக் கலம்பகம்
மதுரைக் காஞ்சி
மலைபடு - மலைபடுகடாம்
மீனாட்சி - மீனாட்சி பிள்ளைத் தமிழ்
முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ்
முத்தொள்ளாயிரம்
முதனூல்-வான்மீகி ராமாயணம்
முல்லைப் - முல்லைப் பாட்டு
மூதுரை
வருணகுலாதித்தன் மடல்
வளையாபதி
வான்மீகம்
வி. பா. - வில்லி பாரதம்
விக்கிரம சோழனுலா

## வரலாற்றுச் சுருக்கம்

தேவர் வேண்டுகோட்கிணங்கத் தயரதன் மதலையாக வந்து அவதரித்தவனான திருமால், துட்டர்களை அழித்துச் சிட்டர்களைப் புரப்பதற்காகத் தோன்றியவன் என்ப. இப்பெருமானுக்கு உறு துணையாக வானுளோர் அனைவரும் வாநரங்களாக வந்தனர் என்று பால காண்டத்துக் குறிக்கப் பெற்றது. இக் கருத்தைக் கொண்டே கவிஞர் பெருமானாகிய கம்பநாடர் தொடக்கத்தி லிருந்தே இராமபிரானைத் திருமால்ாகவும் சீதா தேவியைத் திரு மகளாகவும் கூறிச் செல்வர்.

'அராவணைத் துயில்வோயென வந்நாள், விராவி யளித்தருள் மெய்ப் பொருளுக்கே, இராமனெனப் பெயரீந்தனன்' (பால. திருவவ. 120); 'முப்பரம் பொருளுக்கு முதலை' (பால. கடிமண. 69); 'திருவின் கேள்வனைக் கொணர்மின்' (பால. கையடை. 16); 'தொல்லாழி துயிலாதே துயராழி நெடுங் கடலுள் துயில் கின்றானே' (பால. மிதிலைக். 154); 'எங்கள் செய் தவத்தினி லிராமனென வந்தோன், சங்கினொடு சக்கர முடைத்தனி முதற் பேர்' (பால. கோலங். 32); 'மூவுலகு மீன்றானை முன்னீன் றானை,' (அயோத்தி. குகப். 65); 'வாராதேவர வல்லாய்' (ஆரணிய. விராத. 55); 'ஒருவினையு மில்லார் போல் உறங்குதியால் உறங்காதாய்' (ஆரணிய. விராதன். 57); 'மூன்றுகவடாய் முளைத்தெழுந்த மூலமோ' (ஆரணிய. கவந்தன். 42); 'மூலமே யில்லா முதல்வனே' (ஆரணிய. கவந்தன். 43); 'மறைகளு முனிவர் யாரும் மலர்மிசை யயனும் மற்றத், துறைகளும் பிறவு மெல்லாம் துணிபொருள் துணி விற்றாக்கி, யறைகழ லிராமனாகி யறநெறி நிறுத்த வந்த இறை' (கிட்கிந்தா, வாலி. 132); 'மும்மைசால் உலகுக்கெல்லா மூல மந்திரத்தை முற்றும், தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தை' (கிட்கிந்தா. வாலி. 71); 'மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக், கால்தரை தோயநின்று கட்புலக் குற்ற தம்மா, மால் தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்கு மைந்த' (கிட்கிந்தா. வாலி. 148); 'அரவி னீங்கியே தேவனே யிவன்' (சுந்தர. காட்சி. 66); 'ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப் பும் விட்டயோத்தி வந்தான்; (சுந்தர. பிணி வீட்டு. 80); 'வருவாய் போல வாராதாய்' (யுத்த. 2628); மற்றும் 'தேவரும்

தொழுகழற் சிறுவன்' (பால. எதிர்கொள். 22) என்றும், 'உம்பரும் இம்பரும் உரகருந் தொழவுளான்' (பால. எதிர்கொள். 20) என்றும், தெய்வத்தன்மை குறிக்கப்பட்டது. இனி 'மையறு மலரி னீங்கி யான் செய் மாதவத்தின் வந்து, செய்யவள் இருந்தாள் என்று' (பால. மிதிலைக். 1); 'செப்புங் காலைச் செங்கமலத்தோன் முதல் யாரும், எப் பெண்பாலும் கொண்டுவமிப்போர் உவமிக்கும் அப் பெண்' (பால. மிதிலைக். 24); 'கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப் போய்ப், பிரிந்தவர் கூடினாற் பேச வேண்டுமோ' (பால மிதிலை. 38); 'மானணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக்கெல்லாம் தானணி யென்றபோது தனக்கணியாது மாதோ' (பால. கோலங். 7); 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங். 35); 'அல்லி மலர் புல்லும், மங்கையிவள் ஆம்' (பால. கோலங். 32); 'சீதையை யிகழலம்மா, தூயவளமிர்தினோடும் தோன்றினா ளென்றும் தோன்றாத், தாயவள் உலகுக் கெல்லா மென்பதும் சாற்றுகின்றார்' (யுத்த. 762) என்று பல இடங்களிலும் பிராட்டியை யும் திருமகளாகவே கூறுவதும் காண்க. அயோத்தியா காண்டத் தின் தொடக்கத்தில் 'வானின்றிழிந்து' (1) என்ற செய்யுட்கண் கானும் கடலும் கடந்து இமையோரிடுக்கண் காத்த கழல் வேந்தன்' என்றிராமபிரானைப் புகழ்ந்து கூறினர். 'தசரதன் சிறுவனாக, மாசற்ற சோதி வெள்ளத் துச்சியின் வரம்பில் தோன் றும், ஈசற்கு மீசன் வந்தான்' (யுத்த. 757) என்றதும் காண்க. வான்மீக முனிவரும் இராமபிரானை அவதாரமாகக் கூறினும், காபபியம் முழுவதிலும் அவனை ஓர் மனிதனாகவும், மனிதருள் மாணிக்கமாகவுமே கூறிச் செல்வர். யுத்த காண்டத்தில் பிரமன் முதலானோர் இராமபிரானை வணங்கி அவனே பரம்பொருளாகிய திருமால் எனக் கூறியபோது, இராமன் தான் ஓர் சாமானியன் என்றும் தயரதன் மைந்தனாகவே தன்னைத்தான் நினைப்பதாகவும் கூறினன் என்பது முதனூலால் விளங்கும்.

இனி, 'சீதையைக் குறித்ததேயோ தேவரைத் தீமை செய்த, பேதையைக் கொல்வனென்று பேணிய விரதப்பெற்றி, வேதியர பயமென்றார்க் கன்றுதான் விரித்துச் சொன்ன, காதையைக் குறித்து நின்ற அவ்வுரை கடக்கலாமோ' (யுத்த. 421) என்ற இராமபிரான் கூற்றிலேயே அவதார ரகஸியம் வெளியாதல் காண்க. இவ்வாறு இராமபிரானையும் பிராட்டியையும் அவதாரமாகக் கூறிய போதிலும், இராமபிரான் மேற்கொண்ட வுருவிற்கேற்ப, இன்ப துன்பங்களைத் துய்த்ததாகக் கூறி, இரண்டினுக்கும முரண்

பாடில்லாத வகையில் கதையைக் கொண்டு செல்வர் மகாகவி கம்பர். நாக பாசத்தாற் கட்டுண்டு கிடந்த இலக்குவனை நோக்கி, இராமபிரான், 'உய்ந்து மிருந்தாய் நீயென நின்றேன் உரை காணேன், வந்தனனையா வந்தனனையா வினிவாழேன்' (யுத்த. 2580) 'மாண்டாய் நீயோ யானொருபோது முயிர்வாழேன்' (யுத்த. 2587); 'அறப் பாலுளதே லவன் முன்னவனுய்ப் பிறப்பானுறின் வந்து பிறக்க வெனு, மறப்பால் வடிவாள் கொடு மன்னுயிரைத், துறப்பானுறுகின்ற தொடர்ச்சியின்வாய்' (ஆரணிய. 1106) என்ற இடங்களில் இராமபிரான சாமானியன் போன்று உயிர் துறக்கத் துணிந்தமை காண்க. பிரமாத்திரப் படலத்துத் தேவர்கள் அவனைத் தேற்றியமையும் காண்க. (யுத்த. 2597-2603); மற்றும் மீட்சிப்படலத்தும், அசோகவனத்திற் சிறையிருந்து, இராவணன் வதையின் பின்னர், இராமபிரான் கட்டளைப்படி வீடணன் அழைத்துவர, வந்த சீதாதேவியை மிகவும் கடிந்து இராமபிரான் பேசித் தீப்புகுமாறு கூற, அக்கினி தேவன் பிராட்டியை ஏந்தி வந்து அவளது கற்பின் திறத்தினைக் கூறியபோது, தேவர்கள் வேண்டப் பிரமன் இராமபிரானுடைய உண்மைச் சொரூபத்தினை விளக்கித் தேற்ற நேர்ந்தமையும் காண்க. காப்பியத்தில் இயற்கைக்கப்பாற்பட்ட காட்சிகள் பல காணப்படும். ஜகப்பிரியர் எழுதிய நாடகங்களிலும் ஆவிகளும் அலகைகளும் ஆங்காங்குக் காணலாம். இதனை, (Supernatural element) என்பர். நடுவேனிற் கனவு, ஹாம்லெத், புயல் முதலியவற்றிற் காண்க. இக் காப்பியத்திலும் ஆவியாக மாறிய தயரதன் வருதல், இறந்து விண் சேர்ந்த வாநரர்கள் மண்ணுலகில் வருதல் முதலிய செய்திகள் காணப்படும். ஆசிரியர் எல்லா நிகழ்ச்சிகளையும் ஏற்றபெற்றி அமைத்துக் காட்டி இதனை ஓர் தெய்வீகக் காவியமாக சிறப்பித்தலைக் காண்க.

இங்ஙனம் திருமாலின் பரத்வம் வ்யூகத்வம் என்ற இரண்டையும் ஏற்ற பெற்றிக் கூறிச் செல்லும் இம்மகா கவியின் கூற்றுப்படி யுத்த காண்டத்தின் கதைத் தொடர்ச்சியை நோக்குவோம்.

வாநரப் படையுடன் இலங்கை நோக்கிச் சென்ற இராமபிரான் கடற்கரையை அடைந்து பிரிந்த தேவியை நினைந்து பலவாறு அவலிக்கின்றான். இங்குச் சிறந்த உவமைகளைக் காணலாம். அடுத்து இராவணன் மந்திரப் படலத்துக் கூறியுள்ளதைப் பார்ப்போம். அநுமனால் எரிவாய்ப்பட்ட இலங்கை நகரம் மயனால் மீட்டும் புதுப்பிக்கப் பெற்றது. இராவணன் அந்தரங்கக் குழுவின

ருடன் மேல் நிகழ்த்த வேண்டியவைகளைப் பற்றிச் சிந்திக்கின்ருன். முன்னர் அயோத்தியா காண்டத்து இராமபிரானுக்கு இளவரசு முடிசூட்டுச் செய்ய எண்ணி, நற்குடியில் பிறந்து கல்வி கேள்விகளில் வல்ல வசிட்டராதி முனிவரையும் சுமந்திரனுதி அமைச்சரையும் கேட்டு ஓர் முடிவிற்கு வருவதைக் கண்டோம். அதற்கு நேர் மாருக ஆணவத் தடிப்பாலும் மமதையாலும் பல அரக்கர்களுடன் ஆராய்பவன், முதல் முதலாகச் சேனைபதியின் உரையையே செவி யேற்கின்ருன். வீடணன் பிராட்டியின் கற்பினையும் இராவணன் அடைந்துள்ள சாபங்களையும் கூறியதோடு அமையாது, திருமாலே இராமபிரானுக அவதரித்தான் என்பதும் கூறினன். 'விநாசகாலே விபரீத புத்தி' என்றதற்கேற்ப, இராவணன் மனம் திருந்த வில்லை. அப்பொழுதும் விடாப்பிடியாய்த் தன் அண்ணன் சீரிய வாழ்வினை இழக்க நேருமே என வருந்தி மிகவும் பராக்கிரமசாலி யும் யாவராலும் அழிக்கவியலாதபடி வரம்படைத்தவனுமான இரணியன் வரலாற்றைக் கூறுகின்ருன்.

இங்கு இரணியன் வதைப் படலத்தைக் காண்கிருேம். இது கம்பநாடர் படைப்பு. முதனூலில் இவ் வரலாறு இல்லை. இவ் வரலாறு பாகவதத்தில் உள்ளதொன்று. அக் கதையைக் கம்ப நாடர் எடுத்தாண்டதற்கு ஒரு காரணம் ஊகிக்கலாம். கவிஞர் பெருமான் ஸ்ரீமத் பாகவதத்தையும் தமிழில் ஆக்க எண்ணினுர். ஆயினும் தமது வயது முதிர்ந்த நிலையில், அந்நூலை முடிவுபோக எழுத முடியுமோ என்ற சங்கை எழ, அந்தப் பெரும் புராணத்தின் சாரமான பிரகலாதன் வரலாற்றையேனும் பாடுவோம் என்று நினைந்தார். தாம் அமைத்த இராம காதையில் சிரஞ்சீவிகளாகிய அநுமனையும் வீடணனையும் பாடியவர், மற்றெருரு சிறந்த பக்தனும் சிரஞ்சீவியுமான பிரகலாதனைப் பாட வேண்டும் என்று எண்ணியே இப் படலத்தை ஆக்கினுர்.

கம்ப நாடருடைய கற்பனை ஆற்றல், வருணனைத் திறம், சந்தங்கள் அமைக்கும் வன்மை, சொல் நயம், பொருள் நயம், நடை நயம், தொடை நயம் என்ற இவற்றை விளக்க, இந்த ஒரு படலமே அமையும் என்பர் அறிஞர். இரணியனுடைய சௌரிய வீரிய பராக்கிரமங்கட்கேற்பவும் அவன் பெற்ற அரிய வரங்களைக் குறித் தும் பதினெட்டுக்கவிகளில் பாரித்துக் கூறிய கவிஞன். இரத்தினச் சுருக்கமாக, 'ஆயவன் தனக்கருமக வாகிஞர் வாறிஞல், தூய ரென்பவர் யாரினும மறையினுந் தூயன, நாயகன் தனிஞானி

நல்லறத்துக்கு நாதன், தாயின் மன்னுயிர்க் கன்பினன் உளனொருந் தக்கோன்' (யுத்த. 148) என்று கூறினன். இப் படலத்து இரணியன் மகன் பிரகலாதன் என்று யாண்டும் குறிப்பிடப் பெறவில்லை. பரிபாடலில் இவன் பெயர் பிருங்கலாதன் எனக் காணப்படுகிறது. பிரகலாதனுடைய ஆசிரியன் பெயரும் விதந்து கூறாமல் ஓர் அந்தணன் எனவே குறிக்கப் பெற்றுள்ளது. தன் தந்தையின் பெயரையே முதற்கண் கூற வேண்டும் என்று கட்டளையிட்ட ஆசிரியனிடத்தும், பின்னர் தந்தையான இரணியனிடத்தும், பிரகலாதன் கூறிய அரிய தத்துவ உரைகளில், விசிட்டாத்தவிதக் கொள்கைகள் அனைத்தும் சிறந்த முறையிற் காணலாம். இவைகளைச் செய்யுட்களின் விரிவுரையில் இயன்ற அளவு விளக்க முயன்றுள்ளோம். திவ்யப் பிரபந்தங்களிலும் அவற்றின் பேருரைகளிலும் நன்கு பயின்றுள்ள நமது ஆசிரியர் பெருமான் அவற்றின்கண் உள்ள பல சொற்றொடர்களையும் ஆழ்ந்த கருத்துக்களையும் தமது காப்பியத்தில் குறித்துள்ளார். 'காமம் யாவையும் தருவதும்; (யுத்த. 171) என்று தொடங்கிக் காணப்பெறும் சில செய்யுட்களில் திருவெட்டெழுத்தின் பெருமை பலவாறு பேசப்பட்டுள்ளது. இங்கே 'குலந்தரும் செல்வம் தந்திடும்; (பெரிய திரு. 1:1, 9) என்ற திருமங்கை மன்னன் பாசுரம் குறிக் கொள்ளத்தகும் ஆணவத்தையே மேற் கொண்ட இரணியன், அறிஞரின் அறிஞனான பிரகலாதன் நல்லுரைகளைப் பொருட்படுத்தாது, மகனைப் பலவாறு வருத்துகின்றான். எரியிலிட்டும், பாம்புகளைக் கொண்டு தீண்டச் செய்தும், மதயானையை ஏவியும், இறுதியாகக் கடலிற் கல்லுடன் இணைத்துத் தள்ளியும் தொந்திரவு செய்கின்றான். ஆனால் பிரகலாதன் எவ்விதமான ஊறுபாடுமின்றி இறைவன் திருவடித் தியானத்தினாலேயே பிழைத்து நிற்கின்றான். இங்குச் சமண அரசனான மகேந்திர பல்லவன் அப்பரடிகளைத் துன்புறுத்தியதும் அவர் சிவபெருமான் திருவடித் தியானத்தால் இடையூறின்றி யுய்ந்ததும் அறியத் தகும். அப்பரடிகள் பாடிய 'வானந் துளங்கிலென்' என்ற பாடல் இங்குக் கருதத் தகும். இந் நிலையில் இரணியன் மகனை நோக்கி, 'ஏவரே யுலகம் தந்தார்' என்றும், அவனால் பாராட்டப் பெற்ற அரியாண்டுளன் என்றும் கேட்ப, பிரகலாதன் 'சாணினு முளன்ஓர் தன்மை யணுவினைச்சத கூறிட்ட கோணினும் உளன் மாமேருக் குன்றினுமுளன்' என்று பெருமானுடைய எங்கும் நிறைந்துள்ள தன்மையைக் கூறுகின்றான். இரணியன் வெகுண்டு ஓர் தூணைப் புடைக்க, நரசிங்கப் பெருமான்

தோன்றி இரணியனுடன் பொருது அவனைக் கொன்றதும், பிரக லாதனுக்கு வரமளித்ததும் சிறந்த வகையில் ஆசிரியரால் சித்திரிக்கப் பெற்றுள்ளன. 'அநந்யாச் சிந்தை யந்தோமாம்; யேஜனுபர் யுபாசதே, தேஷாம் நித்யாபி யுக்தானும் யோகஷேமம் வகாம் யகம்' என்ற பகவற் கீதை ச்லோகமும், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற மூதுரையும் இங்கே அறியத்தகும்.

இரணியன் சரிதை கேட்டும் மனம் தெளியாது இராவணன் வீடணனை நோக்கி 'விழியெதிர் நிற்றியேல் விளிதி' என்ற அளவில், வீடணன் அநலன் முதலிய நால்வருடன் எழுந்து, இராம பிரானிடம் சரணம் புகுதற்குச் செல்கின்றான். இங்கு வீடணன் அடைக்கலப் படலம் தொடங்குகின்றது. இராமாயணம் முழுவதுமே சரணாகதி சாத்திரம் என்பர். பாலகாண்டத்துத் தேவர் சரணாகதியும், அயோத்தியா காண்டத்துப் பரதன் சரணாகதியும், ஆரணிய காண்டத்து முனிவர் சரணாகதியும், கிட்கிந்தா காண்டத்துச் சுக்கிரீவன் சரணாகதியும், சுந்தர காண்டத்துப் பிராட்டி சரணாகதியும், காக்காசுரன் சரணாகதியும் வந்துள்ளமை காண்க. மயிந்தன் என்ற வானர வீரன் வீடணன் வந்த செய்தி கேட்டு இராமபிரானிடம் அறிவிக்க, இராமபிரான் அவனை வரவேற்பதன் பொருட்டு வரதாபயக் கரங்களுடன், 'தருமமும் ஞானமும் தவமும் வேலியாய், மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க், கருணையங் கோயிலில் வீற்றிருக்கின்றான். இந்நிலையில் எல்லாம் அறிந்தவனான இராமபிரான் உலக நடைக்கும் அரசியல் முறைக்கும் ஏற்ப, தன் துணைவரை நோக்கி வீடணன், 'கைப்புகற் பாலனோ கழியற் பாலனோ' ஆராய்ந்து கூறுங்கள் என்கின்றான். சுக்கிரீவாதிகள் தத்தம் கருத்தை தெரிவிக்கின்றனர். அக் கருத்துக்கள் இராமபிரான் மனத்திற்கு அமைதி தராமையால் 'அறிவின் மேலுளானாகிய இராகவன், அறிவனான அநுமனை நோக்குகின்றான். இங்கிதமறிந்த மாருதி, சுக்கிரீவாதிகள் கூறியவற்றை முறையாகக் காரணம் காட்டி மறுத்து, வீடணனை ஏற்று அவனுக்குச் சரண் வழங்குவதே முறையென்றும், அவன் வரவு அநுகூலமான நல்வர வென்றும் மொழிகின்றான். அவை தருக்க முறையில் அமைந்தன ஆகவே, இராமபிரான் அந்த அநுமன சொற்களை செவிமடுத்து அமிழ்தின் மாந்துகின்றான். மாந்தி 'கருத்துற நோக்கிப் போந்த காலமு நன்று' (யுத்த. 410) எனத் தொடங்கும் செய்யுள் முதலாகப் பதினான்கு கவிகளில் சரணாகதியின் மேன்மையைப் பாரித்துப் பல உதாரணங்களுடன் எடுத்து மொழிகின்றான். இங்குதான்

கபோதாக்யானம் என்ற புறவின் வரலாறு, கசேந்திர மோட்சம் மார்க்கண்டர்க்கருளியது, சடாயு வரலாறு முதலானவைகள் குறிப்பிடப் பெறுகின்றன. சரணாகதவத்சலன் ஆன தாசரதி, பிரபத்தியின் சிறப்பை ஆரணிய காண்டத்து முனிவர்க் கபயம் கூறும் போதே, தன் வாக்கினாலேயே கூறியருளினர். 'புகல் புகுந்திலேற் புறத்தண்டத்தின' (ஆரணிய. 134); சூரறுத்தவனும் சுடர் நேமியும்' (ஆரணிய. 139) என்ற பாடல்களைக் காண்க. சுக்கிரீவன் வீடணனை யழைத்து வருகின்றான். வந்து பணிந்த வீடணனை இராமபிரான் அன்புடன் தழுவித் தன சகோதரனாகப் பாவித்து, அவன் விருப்பத்தின்படி, 'இளையவற்களித்த போலி, அவனுக்கும் சூட்டுகின்றான். பின்னர் வீடணனுக்கு இலக்குவன் முடிசூட்டுகின்றான். இராமபிரானுடைய இச் செயலிலிருந்து அவனுடைய கருணையையும் சௌலப்யத்தையும் காணலாம்.

வீடணனுக்கு முடிசூட்டிய பின்பு அவன் மூலமாகவே இலங்கையின் நிலைமையைக் கேட்டறிகின்றான் இராகவன். இதனை இலங்கை கேள்விப் படலத்துக் காணலாம். இப் படலத்தில் இலங்கையின் தோற்றமும், நீராண், நிலவரண், காட்டரண், மதிலரண் என்ற நால்வகை அரண்களும், அவற்றின் மிசை அமைக்கப்பட்ட பல்வகை யந்திரங்களும், கோட்டை வாயில்களைப் பாதுகாக்கும் காவலரும், சேனைத் தலைவர்களும், அவர்களின் வீர பராக்கிரமங்களும் கூறப்படுகின்றன. முடிவில் இராவணன் பெருமிதமும் பெருமையும் கூறப்படுகிறது. இடை நடுவில் அநுமன் முன்னர் இலங்கையிற் புரிந்த அரிய செயல்களும் தரப் பெற்றுள்ளன. அநுமனுடைய அரிய செயலை உவந்து அவனுக்குப் பிரம பதத்தை வாக்களிக்கின்றான் இரகுநந்தனன்.

இந் நிலையில் வீடணன் 'வருணனை அடைக்கலம் புக்கு அவன் அருளைப் பெறுவதே கடல் கடக்கும் வழி' என்ன, இராமபிரான் ஏழு நாட்கள் தருப்பைப் படுக்கையிற் படுத்து வருண மந்திரத்தினை ஓதியும், வருணன் நேரில் வாராயலிருக்க இராமபிரான் வில்லை எடுத்து அம்பைத் தொடுக்கின்றான். அதற்கும் அவன் அசையாமையின் சினங்கொண்டு பிரமாத்திரத்தைப் பிரயோகிக்கின்றான். அவ்வளவில் மேற்றிசைக் காவலன் நடுநடுங்கிக் காணிக்கையுடன் பெருமான் திருவடிகளில் வீழ்ந்து போற்றி அபயம் வேண்டினனாக, இராகவன் அபயமளித்து, அம்பினை அவன் கோரியபடி மருகாந்தாரம் என்னும் இடத்தை நோக்கிச்

செலுத்துகின்றான். பின்னர், வருணதேவன் தன் முதுகின்மீது சேதுவைக் கட்டுமாறு கூறி விடை பெறுகின்றான். பிரமாத்திரத்தால் விளைந்த பல கொடிய நிகழ்ச்சிகளை யுத்த காண்டம் 589 முதல் 593 வரையுள்ள செய்யுட்களில் காணலாம். இங்கு வருணன் இரந்து மன்றுடுதலை யுத்த காண்டம் 595 முதல் 603 ல் காண்க. இவ்விடத்து வருணதேவன் இராமபிரானை உலகின் நாயகன் என்றும், உலகில் உள்ள அனைத்துப் பொருள்களும் அவனே என்றும், படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழிற்கும் அவனே உரியவன் என்றும், மறையிற் கூறும் மூலத்துயாதிற்கு முதலாயுள்ளவன் என்றும் புகழ்ந்து, 'பாயிருள் சீய்க்கும் தெய்வப் பருதியைப் பழிக்குமாலை, மாயிருங்கரத்தான் மண்மேல் அடியுறையாக வைத்துத், 'தீயன சிறியோர் செய்தால் பொறுப்பதே பெரியோர் செய்கை, ஆயிரம் நாமத்தையா சரணம்' என்று அடியில் வீழ, இராமபிரான் சினம் தணிகின்றான்.

இதன் பின்னர் வீடணன், வானரத் தலைவர்கள் என்ற இவர்களுடன் சுக்கிரீவன் ஆலோசனை செய்து, நளனை அழைத்துச் சேதுவைக் கட்டுமாறு சொல்ல, அவன் குரங்குகளின் உதவியால் பேரணையை மூன்று நாட்களில் கட்டி முடித்து, இராமபிரானுக்கு அறிவிக்கின்றான். சேது அணை வகுக்கும்போது நிகழ்ந்த பல அரிய பெரிய நிகழ்ச்சிகள், அப் படலம் 10 ஆம் பாடல் தொடங்கி 28 ஆம் பாடல் வரையில் கூறப்படுகின்றன. இப் பகுதியில் பல அரிய உவமைகளையும் தற்குறிப் பேற்றங்களையும் பிறவற்றையும் காணலாம். அநுமன், நீலன், மயிந்தன், அங்கதன். குமுதன், பனசன் முதலிய வானர வீரர்கள் மலைகளைப் பெயர்த்து வந்து அணைக்குதவினர். இவ்வாறு மலைகளும் மரங்களும் பெருவாரியாகக் கடலிற் போகட்ட வளவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சிறந்த முறையில் கூறப்பட்டுள்ளன.

சேது கட்டி முடிந்த நளனைப் புகழ்ந்து இராமபிரான், அவனுக்கு வருணன் ஈந்த மணியாரம் முதலியவற்றை அளித்து, நீலனைக் கொண்டு பாடி வீடுகள் அமைக்குமாறு சொல்ல, அவைகள் தக்கவாறு அமைக்கப்படுகின்றன. அவற்றில் யாவரும் தங்கினர் அவ்விடத்து இராவணனால் அனுப்பப்பட்ட சுக சாரணர் குரங்குரு ஏற்று வேவு பார்க்குமாறு எய்த, வீடணன் அவர்களை அறிந்து கண்டிக்கத் தொடங்கக் கருணாநிதியான இராமபிரான், அவனைத் தடுத்து அவர்களுக்கு அபயம் அளிக்

கின்றான். இந் நிலையில் இராவணன் மந்திராலோசனைப் பேரவையில் மாலியவான் அறிவுரை கூற, அதனைப் பொருட்படுத்தாது, பிரகத்தனுடன் உரையாடுங்கால், வேவு பார்க்கச் சென்ற சுக சாரணர் வந்து நிகழ்ந்தவற்றைக் கூறுகின்றனர்.

இராமபிரான் சேதுவைக் கண்ணுற்று நளனுடைய ஆற்றலை மெச்சி அந்தப் பேரணைமீது ஏறிக் கடலை கடந்து அக்கரை சேர்கின்றான். அங்கும் நளனால் பாசறை யமைக்கப்பட்டது. ஒற்றருக்கு அபயம் அளித்து இராவணனிடம் சொல்லுமாறு இராம பிரான் பணித்த செய்திகள், இராவணனிடம் கூறுமாறு இராம பிரான் அங்கதனிடம் கூறியவற்றையே பெரும்பாலும் ஒத்திருக்கக் காணலாம். யுத்த. 718-722 காண்க.

அடுத்துக் காண்பது இலங்கை காண்படலம். இராவணன் புரிய வேண்டுவது போரே எனத் துணிகின்றான். சேனபதி பிரகத்தன் தான போருக்குச் செல்வதாக மொழிகின்றான். இத் தருணத்தில் மாலியவான் இராவணற்குக் கூறுவன இங்குக் குறிக் கொள்ளத்தகும். இராமபிரானுடைய அவதார ரகஸ்யம் இங்குக் கூறப்படுகின்றது. தயரதனின் சிறுவனை ஈசற்கும் ஈசன் என்றும், அவன் தமபி இலக்குவன், திருமாலின் அணையான ஆதிசேடன் என்றும், வாலி மகன் அங்கதன் இந்திரனே என்றும், நீலன் அக்கினியின் புதல்வன் என்றும், காலனை ஒக்கும் தூதன் காலும் கண்ணுதலும் என்றும், அரக்கரை வேரறுப்பதற்காகவே இலங்கைக்கு இராமபிரான் போந்துள்ளான் என்றும், தனித் தனித் தேவர்களே குரங்குகளாய் வந்துள்ளார்கள் என்றும், சீதாதேவியார் அமுதொடும் தோன்றிய உலக மாதா என்றும் காட்டுக்கு இராமபிரான் முதலானவர்கள் போந்தது தேவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கவே என்றும், இலங்கை வேந்தன் பெற்றுள்ள வரங்களை நன்குணர்ந்து அவனை ஒழித்தற்காகவே மானுட வடிவம் அவர்கள் கொண்டனர் என்றும், இலங்கையின் காவல் தெய்வம் நகரைவிட்டு வெளியேறி விட்டது என்றும் கூறி, முடிவில் பிராட்டியை விட்டுவிடுமாறு மொழிகின்றான். இச் செய்திகளுடன் பாலகாண்டம் திருவவதாரப் படலம் 21-29 கவிகள் இங்குக் காணத்தகும். நன்மையும் தீமையன்றோ நாசம் வந்துற்றபோது. இராவணன் மாலியவானுடைய மெய்யுரைகளைச் செவிக் கொள்ளாமல் ஆணவத் தடிப்பால் சில கூறுகின்றான். நிற்க, இராமபிரான் சுவேலை மலை மீதேறி இலங்கா நகரைக் கண்ணுறுகின்றான். கண்ணுற்று அதன்பல் வேறு

வளங்களேயும் கண்டு வியந்து 'இந்திரனிருக்கை யென்பார் இலங்கையை யெடுத்துக் காட்டார், அந்தரம் தெரிதல் தேற்ருர் அருங்கவிப் புலவரம்மா' என்று கூறுவதிலிருந்து இராமபிரான் இலங்காபுரியை எத்துணைப் பெருமைப்படுத்தினன் என்பது விளங்கும். இங்கும் வைகுண்டாதிபதியும் பூலோக வைகுண்டம் என்று கூறப்படும் அயோத்தி மன்னனுமான இராமபிரான் கூற்ருகவே இச் சொற்களே அமைத்த கவிஞர் பிரானுடைய அறிவு நுட்பம் மெச்சத் தக்கது. இங்கு, பதினேழு கவிகளில் இலங்கை நகரின் பல்வேறு காட்சிகளே இராமபிரான் தன் பின் தோன்றலான இலக்குவனுக்கு வகுத்துரைக்கின்ருன். இச் செய்யுட்களுடன், சித்திரகூடத்துப் பிராட்டியுடன் தங்கிய பொழுது வனவாசத்தால் சீதாதேவியார் எவ்வித ஆகுலமும் எய்தாதபடி அவட்கு மகிழ்வூட்டப் பல அரிய இயற்கைக் காட்சிகளேயும் எடுத்துக் கூறும் கவிகளே ஒப்பு நோக்குக. அயோத்தியா காண்டம் சித்திரகூடப் படலம் 746 லிருந்து, 'இனேயன யாவையும் ஏந்திழைக் கியம்பினன் காட்டி' என்ற 783-வது கவி வரையில் இந்த வருணனையைக் காணலாம்.

இதனே அடுத்து இராவணன் வானரத்தானே காண்படலம் 'இராவணன் இலங்கையின் வடக்கு வாயிற் கோபுரத்தின் மீதேறி நிற்கின்ருன். அவனுடைய பல பெருமைகளும் வருணிக்கப் படுகின்றன. ஒருக்கால் காற்றை விழுங்க உம்பர் மீதினிமிர்வாசுகி போன்று ஒற்றை வெண்கொற்றக் குடையின் கீழ் மலேயினின்று விடும் அருவி போன்று உத்தரீகம் நெடு மார்பில் உலாவ, உருப் பசி யாதிதேவ மகளிர் சானகிக் கழகுதந்து அயல்சார, நாரதர் வீணை பயில, வேத ஓசை முழங்க, ஆம்பையர் பஞ்சமம் சிவணும் இன்னிசை பாட, பல வாத்தியங்கள் முழங்க, மிகுந்த வைபவத் துடன் நிற்கின்ருன். நிற்கும் காலே இராமபிரானேப் பார்க்கின்ருன். சினம் மூள்கின்றது. உடனே சாரணனே வினவச் சாரணன் இலக்குவனேப் பற்றியும், சுக்கிரீவன் அங்கதன், அநுமன், நீலன், நளன், சாம்பன் முதலிய வானர வீரர்களேப் பற்றியும் தான் அறிந்த வற்றைப் பகர்கின்ருன். இங்கு அங்கதனேப் பற்றிக் கூறிப் பின்னர் அநுமனேப் பற்றிக் கூறிய முறைவைப்பு ஆராயத்தக்கது. இலக்குவனேப் பற்றிக் கூறும்போது இராவணன் முனிவு மிகும்படி அவன் சூர்ப்பணகையை அங்க பங்கம் செய்தது பற்றிக் கூறி, அவன் 'உறக்கம் என்பதனே யோட முனிந்தான்' எனவும் சொல் கின்ருன்.

இதனை அடுத்துக் காண்பது மகுடபங்கப் படலம். இதில் இராமபிரான் வீடணனை நோக்கி இராவணனுடைய சேனை வீரர்களைப் பற்றியும் அவர்களுடைய சௌரிய வீரிய பராக்கிரமங்களைப் பற்றியும் தெரிவிக்குமாறும் கேட்கின்றான். அவன் இராவணனைக் காட்ட அருகிலிருந்த சுக்கிரீவன் உதயக் குன்றினின்று பிறிதொரு குன்றிற் பாயும் அவன் தாதையான சூரியன் போன்றும், முன்பு இராவணன் மீது பாய்ந்த கழுகினுக்கரசன் போன்றும் ஒரே பாய்ச்சலாகப் பாய்கின்றான். பாய்ந்து சுக்கிரீவன் இராவணனோடும் மற்போர் புரிகின்றான். இங்கு போர் நிகழுங்கால் சுக்கிரீவன் வெகுநேரம் வரையில் வரவில்லையே என்று கவன்று இராமபிரான் பலவாறு அவலிக்கின்றான். இந்தப் புலம்பலிலிருந்து இராமபிரான் அவன் மீது கொண்டிருந்த அன்பும் நன்மதிப்பும் நன்றி கலந்த உணர்வும் அறியலாம். போரில் அரக்கன் மகுடத்திலிருந்த சில உயர்ந்த நவமணிகளைக் கவர்ந்து கொண்டு சுக்கிரீவன் இராமபிரானிடம் திரும்புகின்றான். எழுபது வெள்ளம் வானரச் சேனைக்கும் உயிர் வந்தது. இராமபிரான் சூரியன் காதலனை நோக்கி அவன் செய்தது தவறு என்கின்றான். இங்கு 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தது காட்டமாட்டேன் (872) என்று கூறி, நால் வலி காட்டும் சிந்தை ஐம்பெருந் தூதன் வெம்போர், வேல்வலி காட்டினார்க்கும் வில்வலி காட்டினார்க்கும், வால்வலி காட்டிப் போந்த வளநகர்புக்கு மற்றென், கரல்வலி காட்டிப் போந்தேன் கைவலிக் கவதியுண்டோ' என்று வருந்திக் கூறுகின்றான். வீடணனும் அவனுடைய ஆற்றலைப்பலபடி வியந்து, திருமாலின் மார்பில் இயங்கும் கவுத்துவ மணியைப் பறிப்பதைக் காட்டிலும் மிகவும் அருமையான செய்கை பிரதாப லங்கேச்வரன் முடியினின்று கற்கள் பறித்தமை என்று கூறி, 'ஒள்வாள் சிவன் வயின் வாங்கிக் கொண்டாய், முடிமணி பறித்திட்டாயோ அவனினி முடிக்கும் வெற்றிக் கடிபணி யிட்டாயன்றோ அரிக்குலத்தரச' என்று புகழ்கின்றான்.

இங்கு,

'கொலை துமித்துயர் கொடுங்கதிர் வாளினக் கொடியாள்
முலை துமித்துயர் மூக்கினை நீக்கிய முறைமை
மலை துமித்தென விராவணன் மணியுடை மகுடத்
தலை துமித்தற்கு நாட்கொண்ட தொத்ததோர் தன்மை.'

(ஆரணிய, 314).

'எதிரிலாதவ ரிறுதியி னிமித்த மா யெழுந்தாண்
டுதிர மாரிபெய் கார்நிற மேகமொத் துயர்ந்தான.'

(ஆரணிய. 315).

'ஒட்டி நாயகன் வென்றிநாள் குறித்தொளிர் முளைகள்
அட்டி வைத்தன பாலிகை நிகர்த்தன வழிந்து
நட்ட வாமென வீழ்ந்தன துடிகளி னடுவண்,
வட்ட வாய்களில் வயங்கிய வருண சாமரைகள்.'

(யுத்த. 1523).

'தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைகடோறும்,
முடியுடை யரக்கற் கந்நாண் முந்தியுற்பாத மாகிப்,
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.'

(பால. தாடகை. 75).

என்பன ஒப்பு நோக்கத் தகும்.

மேற்கூறியவாறு பங்கப்படுத்தப் பெற்ற இலங்காதிபன் மனத்துயருழந்து வாட்டமுற்ற நிலை, சில அரிய அவலச் சுவை பொதிந்த பாடல்களால் வருணிக்கப்படுகின்றது. 'மானத்தா னூன்றப்பட்ட மருமத்தான் வதனமெல்லாம், கூனற்ற மரையில் தோன்ற வான்தொடுங் கோயில் புக்கான், பானத்தானல்லன் தெய்வப்பாடலானல்லன் ஆடல், தானத்தானல்லன் மெல்லென் சயனத்தானுரையும் தாரான்' (யுத்த. 885) என்ற செய்யுளைக் காண்க. இங்குக் கம்பநாடர் இராவணனை, வையெயிற்றாலும் நேரா மணியிழந்திரங்கலாலும், பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப் பஃறலைப் பரப்பினாலும், மெய்யனைத் திரையின் வேலை மென்மலர்ப் பள்ளியான, ஐயனைப் பிரிந்து வைகுமனந்தனுக்குச் சிலேடை நயம் தோன்ற ஒப்புமை கூறுவது அறிந்து மகிழத்தக்கது. இந்த அவல நிலையில் சார்த்தூலன் என்ற ஒற்றன் வருகின்றான். வந்து பகைவர் செய்திகளை இலங்கேசனுக்குக் கூறுகின்றான். பின்னர் இராவணன் மந்திராலோசனை செய்யப் புகுகின்றான். பத்துக் கோடிப் பேய்க்கணம் காவல் காத்து நிற்க மண்டபத் தமர்கின்றான். நிகும்பன் சினந்து கூற, மாதுலத் தலைவனான மாலியவான், சுக்கிரீவனுடைய ஆற்றலை வியந்து கூறுகின்றான். இதனைக் கேட்டு இராவணன் வெகுண்டெழுந்து, அணி வகுத்து இன்னா ரின்னார் இன்னவாயிலின் நிறக்வென்று பணித்து, தான் இரு

நூறு வெள்ளம் சேனையுடன் வடதிசை வாயில் காப்பதாகக் கூறு கின்றான். அடுத்து வானரசேனை கோட்டை வாயிலினைச் சூழவே இராமபிரான் போருக்கு எழுகின்றான். அடுத்து அங்கதன் தூது. கருணைக்கடல் ஆன இராமபிரான், சாமோபாயத்தையே மீண்டும் கையாள எண்ணித் தூதனுப்புவது நலம் என்ன, இலக்குவன் வெகுண்டு இராவணனுடைய பல முறையற்ற செயல்களையும் எடுத்துச் சொல்லித் தூதனுப்ப வேண்டுவதின்று என்று கூறிச் சிறந்தது போரே 'என்னைச் சேவகன் முறுவல் செய்து, தூதனுப்பத் துணிந்து' மாருதியே மீண்டும் தூதனாகச் செல்வா னாயின், 'மற்றி வனன்றிவந்து, சாருநர் வலியோரில்லை' என்று பகைவர்கள் எண்ணக்கூடும் என்று கூறி, யாரை அனுப்பலாம் என்று வினவ, சுக்கிரீவன் அங்கதனை அனுப்பலாம் என்கின்றான; இராமபிரானும் ஒப்பினனாக, அங்கதன், 'மாருதியல்லனாகில் நீயெனுமாற்றம் பெற்றேன்' என்று மகிழ்கின்றான். இவ்விடத்தில் இராமபிரானுடைய செய்கை அரசியல் முறைமையை ஒட்டி நிற் பதை நன்கு காணலாம். பின்னர் இராவணனுக்கு ரோஷமும் சின மும் பிறக்குமாறு பல செய்திகளை அங்கதனிடம் சொல்லி யனுப்பு கின்றான். அங்கதன் இராவணனைக் கண்டு அவன் முடியினின்று மணிகளைக் கவர்ந்த, தன் இளைய தாதையை வியந்து பின்னர் இராவணனிடம் செல்கின்றான். இங்கு இராவணன் யார் என்று வினவ அங்கதன் கூறும் 'பூதநாயகன் என்று தொடங்கும் செய்யுள் பொருள் பொதிந்தது ஒன்றாகும். அங்கதன் தன்னை வாலி மகன் என்று கூற இராவணன் அவனைப் பிரித்தற்குப் பேதோபாயத்தைக் கையாள்கின்றான். ஆனால் அது பலிக்க வில்லை. பின்னர் இராமபிரான் சொல்லியனுப்பிய செய்திகளை ஆறு செய்யுட்களில் கூறுகின்றான். இராவணன் முனிவு குன்றாமை கண்டு அங்கதன் மீண்டும் வந்து 'முற்ற ஓதியென் மூர்க்கன் முடித்தலை அற்ற போதன்றி யாசையறான்' என்று கூறி நின்றான். அடுத்து முதற்போர்ப் படலம்.

வானரங்கள் மலையும் மரமும் கொண்டு அகழிகளைத் தூர்க் கின்றன. மதில்களை இடித்துப் பொரத் தொடங்குகின்றன. அரக் கர்க்கும் வானரர்க்கும் பெரும் போர் நிகழ்கின்றது. யுத்த. 975 முதல் 988 வரை போர் வருணனையைக் காணலாம். வச்சிரமுட்டி என்ற அரக்கன் சுக்கிரீவன் கையால் மடிகின்றான். சுபாரிசனை அங்கதன் கொல்கின்றான். துன்முகன் அநுமனுடன் பொருது வீழ் கின்றான். ஒற்றர்கள், பல பெரும்வீரர் இறந்தமையை இராவண

னிடம் கூறுகின்றனர். இராவணன் வெகுண்டு போர்க்கு எழுகின்ருன். அவன் ஏறிய தேர் ஆயிரம் பரி பூண்டது; மாயிருங் கடல் போன்றது. பண்டு இந்திரனே தந்தது. பல போர் முரசங்கள் ஒலிப்ப மேருபால் வரை என்ன விளங்குகின்ருன் இராவணன். இவன் எழுந்த செய்தி இராமபிரான் கேட்டு மகிழ்கின்ருன். அவன் போருக்கு எழுந்ததன் வருணனையை 1072 1087-லிருந்து வரைக் காணலாம். போர்க்களத்து இலக்குவனுடன் சேர்ந்தே பொருகின்ருன்; சுக்கிரீவன் பொருது சளேக்கின்ருன். அப்போது அநுமன் வர, இராவணனுக்கும் அநுமனுக்கும் போர் நிகழ்கின்றது. போரில் அநுமனும் சிறிது சோர்கின்ருன். அப்போது இலக்குவன் பொர வருகின்ருன். அரக்கர்க்கும் இலக்குவற்கும் போர் நடைபெறுங்கால் இராவணன் வெகுண்டு இலக்குவனை எதிர்க்கத் தொடங்குகின்ருன். அநுமன் விசுவரூபம் கொள்கின்ருன். இலங்கேசனுக்கும் அநுமனுக்கும் நிகழ்ந்த வீரவாதங்களை இங்குக்காணலாம். அநுமன் இராவணன் மார்பிற் குத்தவே இராவணன் மூர்ச்சித்துப் பின்னைத்தன் நினைவு வரப்பெற்று அநுமனின் பராக்கிரமத்தைப் புகழ்கின்ருன். இலக்குவனுக்குச் சலிப்பு ஏற்படுகிறது. 'அவன் சலித்தகாலையில் இமையவன் உலகெலாஞ் சலித்த, சலித்ததாலறம் சலித்தது மெய்ம்மொழி தகவும், சலித்ததன்றியும் தவமொடு சுருதியும் சலித்த, சலித்த நீதியும் சலித்தது கருணையும் தவமும்'; இந்த வருணனையிலிருந்து அநுமனுடைய பல பெரிய கல்யாண குணங்களை உணரலாம். நிற்க வாநரர் பெருமலைகளைக் கொண்டு பொருகின்றனர். இராவணனும் சரமாரி பொழிகின்ருன். இலக்குவன் நூருயிரம் கோடி சரங்களை ஏவி இராவணனுடைய பத்து விற்களையும் துணிக்கின்ருன். இந்நிலையில் இராவணன் வேற்படையை எறிய இலக்குவன் சிறிது அயர்கின்ருன். அயர்ந்த நிலையில் அவனை எடுத்துச் செல்ல இராவணன் முயல்கின்றனன். ஆயினும் எண்வகை மூர்த்தியைத் துளக்கி வெள்ளிவெண் பொருப்பொடெடுத்த தோள்களுக் கெழுந்தில னிராமனுக் கிளையான் (1165) இத்தருணத்தில் அநுமன் அங்கு வந்து இலக்குவனை 'மகவு கொண்டு போய் மரம்புகு மந்தி'யை ஒத்துத் தூக்கிச் செல்கின்ருன். அடுத்து இராவணனுக்கும் அநுமன் தோளின் மீதமர்ந்த இராமபிரானுக்கும் போர் நிகழ்கின்றது. இராவணனுடைய குதிரைகளும் சிலைகளும் அழிக்கப் பெறுகின்றன. அரக்கர்கோனுடைய மகுடம் துணிந்து கடலில் வீழ்கின்றது. மணிமுடி இழந்த வாளரக்கன, 'ஆற்றல் நல்நெடுங் கவிஞரோரங்கத முரைப்பப், போற்றரும்புகழ் இழிந்த போரொரு

வன்' போன்று தனித்து அயர்ந்து நிற்கின்றான். நின்ற அந்த அரக்கனை நோக்கி இராமபிரான், 'அறத்தினாலன்றி யமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்,மறத்தினாலரிதென்பது மனத்திடை வலித்தி, பறத்தி நின்னிடம் புதிபுகக் கிளையொடும்பாவி, இறத்தியானது நினைக்கிலன் தனிமை கண்டிரங்கி'(1206)'ஆளையா வுனக்கமைந்தன மாருதமறைந்த, பூளையாயின கண்டனை இன்று போய்ப் போர்க்கு, நாளை வாவென நல்கினன் நாகிளங்கமுகின், வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்' (1210); இங்கு இராமபிரானுடைய பரமகருணை யைப் பார்க்கலாம். இது தழிஞ்சியென்னும் புறப்பொருட் டுறை; 'அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சா, கழிதறுகண்மை காதலித்துரைத்தன்று' என்பது இதன் இலக்கணம் என்ப. இங்கு, கோசல நாடுடை வள்ளல் என்று குறித்தது ஆராயத் தக்கது. முன்னர் வீடணன் அடைக்கலப் படலத்தில் 'ஏழினோ டேழாய் நின்ற வுலகுமென் பெயருமெந்நாள், வாழுநாள் அன்று காறும் வாளெயிற்றரக்கர் வைகும், தாழ்கடல் இலங்கை செல்வ நின்னதே தந்தேன்' என்று இலக்குவனைக் கொண்டு அவனுக்கு முடிசூட்டவும் செய்தான். இப்போது ஒருசமயம் முதல் நாள் போரிலேயே முறியடிக்கப்பட்ட தன் அவசநிலையையும், எதிரியின் பெருமையையும் கண்டு சரண்புக வருவானேல், அந்த இரா வணற்கு அளிப்பதற்குத் தனக்குரிய கோசல நாடுள்ளது என்று குறிப்பிட்டபடி; சுக்கிரீவாதிகளிடம் வீடணன் மட்டுமின்றி 'இதிவா இராவணஸ்வயம்' என்று கூறியதாக முதனூல் கூறுவது இங்குக் காணத்தகும்.

### இதனை அடுத்து, கும்பகன்னன் வதைப்படலம்

முதல் நாட்போரில் தோல்வியுற்ற இராவணன் நகர்க்குத் திரும்புகின்றான். அவ்வாறு மீண்டவனுடைய நிலை அவலச் சுவை ததும்பக் கூறப்பட்டுள்ளது. 'வாரணம் பொருத மார்பும், வரையினை யெடுத்த தோளும், நாரத முனிவர்க்கேற்ப நயம்பெற வுரைத்த நாவும், தாரணி மவுலிபத்தும், சங்கரன் தந்த வாளும், வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடிலங்கை புக்கான்'. என்பது கவிக்கூற்று. எத்திசையையும் நோக்காமல், பல மாதர்கள் தன்னையே நோக்கத் தான் அவர்களில் யாரையும் பார்க்காமல், பூமிதேவியென்னும் நங்கையைப் பார்த்துக்கொண்டு செல்கின்றான். மாநில மடந்தையை நோக்கி 'உன் மகளால் நேர்ந்த விபத்து இது' என்று அவள்பால் மௌனமாகக் கூறுவது போன்றது இது. முதல்நாளிலேயே இந்தப் பரிபவம் நிகழ்ந்தமை

கண்டு வானரரும் பிறரும் நகுவர் என்பதற்கு அவன் நாணவில்லை. 'உன்வீரம் இதுதானு சவ்வீரம்' என்று மைதிலி ஏசுவாளே என்று தான் உழல்கின்றான். இந்நிலையில் மாலியவான் போரில் நிகழ்ந்தது யாதென்று வினவ, இராவணன், தன் குலத்துக்குப் பொருந்தாத பழி நேர்ந்தது என்று கூறி, இளையவன் இராமபிரான் என்ற இவர்களின் போர் வன்மையைப் புகழ்ந்து பேசுகின்றான். 'நல் லியற் கவிஞர் நாவிற் பொருள்குறித் தமர்ந்த நாமச், சொல்லெனச் செய்யுள் கொண்ட் தொடையெனத் தொடையை நீக்கி, எல்லையில் செல்வந் தீராவிசையெனப் பழுதிலாத, பல்லலங்காரப் பண்பே காகுத்தன் பகழி' (1232) என்று இராமபிரான் அம்பிற்கு சொற் சுவை பொருட்சுவை, எதுகை, மோனை முதலிய தொடைகளும் அணிமுதலியனவும் அமையப்பெற்றுச் சிறந்ததும் புலவர் பெரு மக்கள் இயற்றியதுமான, செய்யுள் உவமையாக்கப் பெற்றுள்ளது. மற்றும் ஆக்கவும் அழிக்கவும் வல்லனவுமான 'உற்பத்தி யயனோடொக்கும் ஓடும்போ தரியே யொக்கும், கற்பத்தின் அரனேடொக்கும் பகைவரைக் கலந்த காலைச், சிற்பத்தில் நம்மாற் பேசச் சிறியவோ வென்றும் தீராத், தற்பத்தைத் துடைத்த வென்றாற் பிறிதொரு சான்றும் உண்டோ' என்ற செய்யுளைக் காண்கின்றோம. இவ்வாறு கூறி நிறுத்திய அளவில் வெந்த புண்ணில் வேலெறிந்தாற் போன்று மாலியவான் 'முன் னுரைத்தேனை வாளா முனிந்தனை முனியாவும்பி, யின்னுரைப் பொருளுங் சேளா யேதுவுண் டெனினுமோராய்', என்று சுட்டிக் காட்டுகின்றான். வருந்திநின்ற இராவணனை மகோதரன் தெருட்டு கின்றான். தெருட்டவே இலங்கேசன் மகோதரனைப் புகழ்கின்றான். இங்குதான் 'இறுதியே யியைவதனுல் இடையொன்றால் தடை யுண்டாமோ' (1252) என்ற கவிக் கூற்றைப் பார்க்கின்றோம். பின்னர் கும்பகன்னன் வரவு நிகழ்கின்றது. இங்கும் 'உறங்கு கின்ற கும்பகன்ன' என்று தொடங்கும் செய்யுள் முதலாக நான்கு பாடல்கள் இடைச் செருகலென்று விடப்பட்டன. கும்ப கன்னன் துயில் நீங்கி எழுகின்றான். உணவும் மதுவும் உட்கொள் கின்றான். உடனே இராவணனை அணுகி, 'ஆனதோ வெஞ்சமம் அலகில் கற்புடைச், சானகி துயரினம் தவிர்ந்ததில்லையோ, வான் புகழ் போனதோ புகுந்ததோ பொன்றும் காலமே'; 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை விட்டிலையோயிது விதியின் வன்மையே' (1284) என்று இரங்கித் 'தையலை விட்டவன் சரணம் தாழுமாறு' வேண்டுகின்றான். மற்றும் தீர்க்கதரிசியான அவன் 'வென்றிவண் வருவனென்றுரைக்கிலன் விதி, நின்றது

பிடர் பிடித்துந்த நின்றது, பொன்றுவன் பொன்றினல் பொலங் கொள் தேவியை,' விடுத்தல் தகுதி என்றும், இந்திரசித்தும் இலக்குவன் வாளியால் மடிதல் சரதம் என்றும்கூறி முடிக்கின்ருன். பின்னர், 'இற்றை நாள்வரை முதலியான் முன் செய்தன, குற்றமு முளவெனிற் பொறுத்தி கொற்றவ, அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய, பெற்றனன் விடை' (1302) என்ற செய்யுள் படிக்கும் தோறும் உடன்பிறப்புப் பாசம் எத்துணை வலியது என்பது தெரியும். கும்பகன்னன் போர்க்களம் புகுகின்ருன். வீடணன் அவன் வரலாற்றையும் வலிமையையும் பற்றி இராம பிரானிடம் விண்ணப்பம் செய்கிருன். அண்மையி லிருந்தவனும், வீடணன் அடைக்கலம் புகுதற்கு வந்தபோது அவனை ஏற்கக் கூடாது என்று கூறியவனுமான சுக்கிரீவன் வலியவந்து கும்ப கன்னனைத் தம்முடன் கூட்டிக்கொள்ளலாம் என்றுகூற முன்வரு கின்ருன். இதுகொண்டு அவனுடைய உலகியலறிவை அறியலாம். இந்நிலையில் வீடணன் கும்பகன்னனைச்சார்ந்து பல காரணங்களைக் கூறி அவனையும் இராமபிரானிடம் சரணம் புகுமாறு வேண்டு கின்ருன். ஏற்கனவே இராமபிரானைக் சரணடைந்து மீண்டும் வந்த தம்பியை நோக்கி, இராமபிரானிடமே செல்லுமாறு கூறு கின்ருன். 'குலத்தியல்பழிந்ததேனும் குமர மற்றுன்னைக் கொண்டே, புலத்தியன் மரபு மாயாப்புண்ணியம் பொருந்திற் றென்ன, வலத்தியல் தோளை நோக்கி மகிழ்கின்றேன் மனமும் வாயும், உலர்த்தினை திரியவந்தாய்' (1336) 'இராம னென்பானைப் பற்றிப், பிறப்பெனும் புன்மை தீர்ந்தாய் நினைந்தென் கொல் பெயர்ந்த வண்ணம்' (1337), 'பிறர் மனை நோக்குவேமை யுற வெனப்பெறுதி போலாம், 'சாதியின் புன்மை யின்னும் தவிர்ந்திலை போலும் தக்கோய்', 'தோற்ற வெம்பக்கலைய வெவ்வலி தொலைய வந்தாய்' என்று இடித்துரைத் தேகுமாறு சொல்ல வீடணன், அண்ணனிடம் 'மருளுறு பிறவி நோய்க்கு மருந்து' இராம பிரான் என்றும், தனக்கு இராகவன் தந்துள்ள அரசச் செல் வத்தைத்தான் அவனுக்கு அளிப்பதாகவும் 'வேதநான் மரபுக் கேற்ற வொழுக்கமே பிடிக்கவேண்டும் என்றும் 'தூயவை துணிந்தபோது பழி வந்து தொடராது' என்றும், 'கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கருமம்' அன்று என்றும், 'மூவர்க்கு முதல்வரான மூர்த்தியாரறத்தை முற்றும், காவற்குப் புகுந்து நின்ருர் காகுத்த வேடங்காட்டி' என்றும், 'கனிவருங் காலத்துப் பூக்கொயக் கருதல் தக்கதன்று' என்றும் கூறி, இராமபிரான்பால் வருமாறு மன்ருடுகின்ருன்: 'அப்பொழுது

கும்பகன்னன் செஞ்சோற்றுக் கடனைக்கழிப்பதே சிறந்த தருமம் என்பதை நினைந்து 'நீர்க்கோல வாழ்வை நச்சி நெடிது நாள் வளர்த்துப் பின்னர்; போர்க்கோலம் செய்துவிட்டார்க்குயிர் கொடாதங்குப் போகேன்' என்றும் 'கருத்திலா விறைவன் தீமை கருதினால் அதனைக் கர்த்துத், திருத்தலாமாகி லன்றே திருத் தலாந் தீராதாயின், பொரு தொழற்குரியராகி, ஒருத்தரின் முன்னம சாதல் உண்டவர்க்குரியது' என்றும் 'உம்பரும் பிறருங் காணவொருவன் மூவுலகை யாண்டான், தம்பியையின்றி மாண்டுகிடப்பனோ தமயன் மண்மேல்' என்றும் மொழிந்து முடிவாக 'இன்றொடுந்தவிர்ந்த தன்றே யுடன்பிறப் பென்பது என்று' உரைப்பதைக் கேட்கும்போது கல்லான மனமும் கரையும் என்பது திண்ணம் 'பின்னர் வீடணன் இரகுராமனையணுகித் தான் தன்னாலானவரை காரணம் காட்டி அவனைத் தன்னுடன் வருமாறு அழைத்ததாகவும், அவன் ஒரே பிடியாக, வருவதற்கு மறுத்த தாகவும் கூற, இராமபிரான் 'விதி வலிது' என்று சொல்லியமை கின்றான். பின்னர்ப் போர் தொடங்குகின்றது. இவ்விடத்தில் கன்னனை நோக்கித் துரியோதனன் சிறிது ஐயுற்று ஒரு சமயம் போர் நிகழும்போது 'பாண்டவர் பக்கல் சேர்ந்து விடுவாயோ' என்று வினவ, 'ஓருரும் ஒரு குலமு மில்லா வென்னைச்செம்பொன் மணிமுடி சூட்டி அம்புராசி, நீருரும் புவிபாலர் பலரும் போற்ற நின்னினும் சீர் பெறவைத்தாய் நினக்கேயன்றி, ஏருரும் கதிர் முடியாயுற்ற போரில் யார்க்கினியென்உயிரளிப்ப தியம்புவாயே' என்ற கவியும், 'திடம்படுத்திடுவேலிராசராசனுக்குச் செரு முனைச் சென்று செஞ்சோற்றுக் கடன் கழிப்பதுவே யெனக்கினிப் புகழும் கருமமும் தருமமும்' என்ற கவியும் ஒப்பு நோக்கத்தக்கன. உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைத்தல் பெரும் பாதகம் என்பர். போர் தொடங்குகின்றது. கும்பகன்னனுக்கும் அங்கதனுக்கும் நிகழ்ந்த போரில், முன்னவன் அங்கதனைத் தூக்கிச் செல்கின்றான். அத்தருணத்தில் அநுமன் குமபகன்னன்மீது ஓர் பெரிய மலையை வீசுகின்றான். அரக்கன் வன்மைகண்டு அநுமனே ஒதுங்கு கின்றான். பின்னர்க் கும்பகன்னனுக்கும் இலக்குவனுக்கும் போர் நிகழ்கின்றது, அரக்கர் பொருது இறந்து வீர சுவர்க்கம் புகுகின்றனர். இலக்குவன் பகழி, 'நிலவரைத் தருபொருள் வழித் தண்டமிழ் நிரப்பும, புலவர் சொற்றுறை புரிந்தவும், போன்றன

புங்கம், யுத். 1430 இறுதிச் சொற்றொடரிலிருந்து கவிஞர் பிரான் காலத்து ஒருவன் கொடுக்கின்ற பொருட்கேற்ப அவனைப் புகழ்ந்து பாடுதலாகிய வழக்கம் உண்டென்றுணரலாம். கும்ப கன்னன் இலக்குவனுடைய வில்லாற்றலைப் புகழ்கின்றான். 'வீரரை வியவாதார் யார்? இலக்குவன் அநுமன் தோளில் ஏறிப் பொருகின்றான். கும்பகன்னனுக்கும் இளையவனுக்கும் வீரவாதம் நிகழ்கின்றது. பின்னர், கும்பகன்னன் சுக்கிரீவனுடன பொரு கின்றான். அநுமன் கும்பகன்னன் வேலை முறித்தெறிகின்றான். சுக்கிரீவன் சற்று உணர்வு நீங்கக் கும்பகன்னன் அவனைத் தூக்கிக் கொண்டு செல்கின்றான். எல்லோரும் வருந்துகின்றனர். இச் செய்தி இராமபிரானுக்கு எட்டுகின்றது. இராமபிரான் சினங் கொண்டு சரக்கூடம் கட்டிக் கும்பகன்னனைத் தடுக்கின்றான். அப்பொழுதுதான் கும்பகன்னன் சொண்டலிற் பொலிதரு கோலாத்தானாகிய இராகவனைக் கண்ணுறுகின்றான். பின்னர் இருவர்க்கும் போர் நிகழ்கின்றது. கும்பகன்னன் மூர்ச்சையடைய, சுக்கிரீவன் அவனுடைய மூக்கையும் காதையும் கடித்துக் கொண்டு செல்கின்றான். இராமபிரான் மகிழ்கின்றான். மீண்டும் கும்பகன்னன் எழுந்து போர் புரிகின்றான். பின்னர் ஆயுதங்களை யிழந்து தனிப்பட்டு நின்றபோது இராமபிரான் அவனைப்பார்த்துச் சில வுரைகள் கூறுகின்றான். கும்பகன்னன் கவசத்தைச் சங்கரன் வாளிகொண்டு சிதைக்கின்றான். கும்பகன்னன் தன தண்டா யுதத்தைக் கொண்டு பொருகினறான். இராமபிரான் அத் தண்டினையும் துணிக்கின்றான். கும்பகன்னன் கரங்கள் அறுபட்டுக் கடலில் வீழ்கின்றான். அரக்கன் வீராவேசம் கொள்கின்றான். பின்னர் அவன் கால்களும் அறுபடுகின்றன. கையும் காலும் துணிபடவே வாயினால் ஓர் மலையைப் பிடுங்கி எறிகின்றான். இந்நிலையில் கும்பகன்னன் உள்ளத்து ஓர் நல் லுணர்வு தோன்றச் சுந்தரப் பொற்றோளானை முக நோக்கி வீடணனைக் காக்கவேண்டுவது அவன் கடமை என்றும், எக் காரணம் கொண்டும் இலக்குவனையோ இராமபிரானையோ அநுமனையோ அவன் பிரிந்து நிற்கக்கூடாது என்றும்கூறி மூக்கிலா முகம் என்று யாரும் கண்டு பழிக்காதபடி, தன் நெடுந் தலையைக் கடலுட்டள்ளுமாறு வேண்டுகின்றான். இராமபிரானும் அவ்வாறே செய்கின்றான். கும்பகன்னன் மரிக்கவே தேவர்கள்

மகிழ்கின்றனர். இச்செய்தியை இராவணனிடம் கூற, அரக்கர் விரைகின்றனர்.

மாயாசனகப் படலம்

இப்படலமும் இரணியன் வதைப்படலம் போன்று கம்பநாடர் படைப்பு; முதனூலில் இந்த வரலாறு இல்லை. கும்பகன்னனுக்கும் இராமபிரானுக்கும் போர் நிகழ்கையில், மகோதரன், 'மருத்தன் என்ற அரக்கனைச் சனகனாக உருமாற்றிப் பிணித்துக் கொணர்ந்து சீதா பிராட்டியின் முன்பு நிறுத்தினால் அவள் இணக்கத்தைப் பெறலாம்' என்று கூற அரக்கர்கோன் அவன் யுக்தியை மெச்சிச் சீதாபிராட்டியிடம் சென்று, பலவாறு தன் வீரப்பிரதாபங்களைக் கூறி இரக்கின்றான். இங்கு 'பண்களாற் கிளவிசெய்து பவளத்தால் அதரமாக்கி' (1571) என்று தொடங்கும் செய்யுளிலிருந்து காணப்படும் சில கவிகள் செம்பாக மானவை. இங்கு 'வஞ்சனே னெனக்கு நானே மாதரார் வடிவு கொண்ட, நஞ்சுதோ யமுத முண்பான் நச்சினேன் (1576) 'தோற்பித்தீர் மதிக்கு மேனி சுடுவித்தீர் தென்றல் தூற்ற, வேர்ப்பித்தீர் வயிரத்தோளை மெலிவித்தீர் வேனில் வேளை, யார்ப்பித்தீர் என்னை யின்னல் அறிவித்தீர் அமரரச்சம், தீர்ப்பித்தீர் இன்ன மென்னென் செய்வித்துத் தீர்திர் (1577) 'புண்ணெலாம் எனக்கே யாக்கி விபரீதம் புணர்த்தி விட்டீர்' (1578), பெண்பால் வைத்த, வாசை நோய் கொன்ற தென்றால் ஆண்மைமா சுண்ணதோ தான் 'பாயிரம் உணர்ந்த நூலோர் காமத்துப் பகுத்த பத்தி, யாயிரமல்ல பொன்னே யையிரண் டென்பர் பொய்யே' என்றுரைக்கின்ற சொற்கள் காமபித்துத் தலைக்கேறிப் பிதற்றுகின்ற பிதற்றல் களாக மிகச்சீரிய முறையில் அமைந்துள்ளமை காண்க, என்னை இன்னல் அறிவித்தீர்' என்று இன்னல் என்பதே அறியாத தனக்கும் என்று ஆணவத் தடிப்புத் தோன்றப் பகர்கின்றான். இன்னும் என்னென்ன செய்வித்துத் தீர்திர்' என்பதிலிருந்து 'இறுதியான மரணத்தையும் தந்திடுவாய் போலும் என்று குறித்தல் காண்க. அடுத்துவரும் 'ஆசை நோய் கொன்ற தென்றால்' என்ற தொடரில் அவன் இறுதியையும அவனே குறித்தல் கண்டுணர்க, இங்கு அகலிகை வரலாறும் எடுத்துக் கூறப்படுகின்றது, பிசாசும் மறைகளிலிருந்து மேற்கோள் காட்டும் என்பர், (Even a devil can quote from the Scriptures). இவ்வாறு சொல்லி மகளிருடைய ஊடற்காலத்தும் வணங்காத இலங்கேசன் சீதாதேவியின் காலில் வீழ்கின்றான். அளவு மீறிய காமம் தன்மானம்

இழக்கச் செய்யும் அன்றோ? இங்குப் பிராட்டி கூறுவன இக்காப்பியத்திலேயே மிகச் சிறந்த பகுதி என்னலாம், 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும், திண்மையுண்டாகப் பெறின் (குறள். 54) என்றார் வள்ளுவப் பெருந்தகை, ஒரு பெண்ணுடைய கற்பினைப் பிறர் காக்க முடியாது; அவள் தானே தான் காத்துக் கொள்ளுதல் வேண்டும், 'சிறை காக்கும் காப்பெவன் செய்யும் மகளிர் நிறை காக்கும் காப்பேதலை (குறள். 67) என்பது பொய்யா மொழியன்றோ? பிராட்டி இறுத்த விடையை நோக்குவோம். 'பழி பாவம் பாராமலும், பேசத்தக்க சொற்கள் அறிந்து பேசாமலும் பேசுகின்ற தன் ஆசையின் கனி இராமபிரான் என்றும், அரக்கனிடம் ஊனிலா யாக்கை பேணி யுயர்புகழ் சூடாது உயிர் தாங்குவது 'நவையறு பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக், காணலாம் இன்னும் என்னும் காதலால் தான்' என்றும், தனக்கு உயிர் கனக்கருயேக மொன்று கார்முகம் தாங்கியார்க்கும், மனக்கினிதாக நிற்கும் இராமபிரானே என்றும் கூறுகின்றாள். இச்சொற்களிலிருந்து பிராட்டியின் கற்பு மேம்பாட்டை நன்கு உணரலாம்; சந்தர்ப்பங்கள் கோழைகளையும் தைரியசாலியாக ஆக்கும் என்பர். இராவணன் வெகுண்டு பேசுகின்றான், அந்நிலையில் சனகன் வந்து முன்நிற்க, 'தாயெரி விழக்கண்ட பார்ப்பென' அவலிக்கின்றாள். தந்தையின் பல்வேறு பெருமைகளையும் சுட்டிக்கூறி அழுகின்றாள். இப்பாடல்கள் அனைத்தும் அவலச் சுவையின் சிகரங்கள் என்னலாம். மீட்டும் இராவணன் அவளை வேண்டுகின்றான், தன்னுடைய ஆட்சியையும் புட்பக விமானத்தையும், சங்கரன் தந்த வாளையும் சனகனுக்குத் தருவதாகக் கூறுகின்றான். உடனே பிராட்டி மிகவும் வெகுண்டவளாய்க் கூறுகின்ற 'இத்திருப் ,பெறுகிற் பானும் (1621) எனத்தொடங்கும் செய்யுள்லிருந்து (1625) - ஆம் பாடல் ,வரையில் நன்கமைந்த கவிகள். இங்கு 'புன்மக கேட்டி' என்ற பாடலில் 'புகுந்த போரின், உன்மகனுயிரை யெம்மோய் சுமித்திரை யுய்யவின்ற, தன் மகன் வாளி நக்க நாயவன் உடலை நக்க, என்மக னிறந்தா னென்ன நீயெடுத்தரற்றல்' (1625) என்று ஓர் திர்க்க தரிசி போன்று சபிக்கின்றாள். இவ்வாறே பின்னர் நிகழ்வதை, இந்திர சித்து இறந்து பட்டவுடன் 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் இரங்கி யேங்கி, யுனக்கு நான் செய்வ தானேன்' (யுத்த. 3158) என்று சொல்லி :இராவணன் இரங்குவது கொண்டு தெளிக. 'சொல்லினாற் சுடுவேன் (சுந்தர. 624) என்கின்றாள் பிராட்டி. சிறந்த கற்புடையமாதர்களின் சாபம் நன்கு பலிதமாகும் எனபர். அரம்பை

யிட்ட சாபம் தானே இராவணற் கிறுதி விளைத்தது. பிராட்டி இயையாமை கண்டு இராவணன் அவனைக் கொல்லத் துணிகின்றான். இச்சமயத்தில் சனகனே ஒருவேளை பரிந்து பேசினால் அவன் இணங்கக் கூடும் என்று மகோதரன் கூற, அவன் அவனைக் கொல்லுதலைத் தவிர்கின்றான். சீதாதேவியை இணங்குமாறு மாயா சனகன் கூறுகின்றான். இங்கு பிராட்டி யிறுக்கும் 'அறங்கெட வழக்கு நீங்க (1631) 'வழிகெடவரினும் (1632), 'நீயு நின்கிளையும்' (1633) வரிசிலை யொருவன் (1634) என்ற செய்யுட்கள் ஒவ்வொரு பெண்ணும் மனத்திலமைக்கத் தக்கவை, காப்பியங்கள் சிறந்த படிப்பினைகளை மக்கட்கு எளிய முறையிற் புகட்டுவன எனபர். அவ்வாறு இப்பெருங் காப்பியத்திற் காணப்படும் நீதிகளும் அறவுரைகளும் எண்ணிறந்தன. மீட்டும் வெகுண்டு இலங்காதிபன் அவனைக் கொல்லப் புகுகின்றான். பிராட்டி அஞ்சா நெஞ்சினளாய் 'என்னையும் கொல்லாய்'(1637) என்று விடையிறுக்கின்றாள். இங்கு பலவிதமாக வருத்தி, முடிவாக அவனைக்கொன்று விடலாம் என்று எண்ணி இரணியன் வாளை யோச்சியது கண்டு, 'என்னுயிர் நின்னாற் கோறற் கெளிய தொன் றன்று' (யுத்த. 255) என்று பிரகலாதன் அமைதியுடன் கூறிய விடை அறியத் தக்கதாம். இராவணன் கொல்ல எழுந்த போது மகோதரன் மீட்டும் தடுக்கின்றான். இந்நிலையில் கும்பகன்னன் போரில் இறந்த செய்தி இராவணன் செவியில் வீழ்கின்றது. தம்பியை நினைந்து பலவாறு அரற்றுகின்றான். இச்செய்யுட்கள் அவலச் சுவை பொதிந்தவை, இராவணன் கதறுவது கண்டு கெண்டையங்கண்ணாள் உள்ளே கிளுகிளுக்கின்றாள். இராவணன் சீறுகின்றான். திரிசடை, வந்தவன் மாயா சனகன் என்று கூறிச் சீதாதேவியின் துயரத்தைத் தணிக்கின்றாள். செய்திகள் நாடக முறையில் அமைத்துக் காட்டப் பெறுதல் காண்க. அடுத்து அதிகாயன் வதை.

அதிகாயன் இராவணனுக்குத் தானிய மாலையிடம் பிறந்தவன். மிக்க பராக்கிரமசாலி; இவன் பெயரைக் குறிப்பிடும் போது 'பின்னேரிந்திரனிலாமையாற் பெயரதிகாயன்' என்பர் கவிஞர். இவன் வீரமொழிகள் கூறிப் போருக்குச் செல்வதற்குத் தன் தந்தையிடம் விடை வேண்டிப் பெற்றுப் போர்க்களம் புகுகின்றான். நால்வகைப் படைகளுடன் சென்று களத்தில் கும்பகன்னனுடைய குறை உடல் கண்டு வருந்துகின்றான். பின்னர், முன் சென்று போர்க்கு அறை கூவுகின்றான். மயிடன் என்ற தூதன் இலக்குவனிடம் அதிகாயன் கூறியதைக் கூறுகின்றான். இராமபிரான் விடைதர இலக்குவன்

போர்க்குச்செல்கின்ருன். இங்கு வீடணன் அதிகாயன் வரலாற்றை இராமபிரான் முன் பகர்கின்ருன், பகருங்கால் அவனுடைய பல் வேறு ஆண்மைச் செயலைக் கூறுகின்ருன். முன்னளில் திருமாலுடன் பொருத மதுகைடவரே முறையே கும்பகன்னனுகவும் அதிகாயனுகவும் தோன்றி, இராம இலக்குவர்களால் கொல்லப் பட்டனர் என்பது வரலாறு. இவ்வாறு கூறிய வீடணனிடம் இராமபிரான் தன் இளவல் இலக்குவனுடைய பேராற்றலைப்பற்றிக் கூறுகின்ருன். 'எண்ணுயிர கோடி' (1738) என்று தொடங்கும் செய்யுளிலிருந்து, 'என் தேவியை' (1741) என்ற பாடல் வரை காண்க. வீடணனும் செல்கின்ருன். இலக்குவனுக்கும் அதிகாயனுக்கும் பெரும் போர் நிகழ்கின்றது. படுகளம் சிறந்த முறையில் வருணிக்கப் படுகின்றது. மையல் தழை செவிமுற் பொழி (1801) என்று தொடங்கும் செய்யுளிலிருந்து, 1838 வரை போர்ச் சந்தம், திரிசிரசு அநுமன் கையில் மடிகின்ருன். அநுமன் ஆற்றலைச் சந்தம் நிறைந்த செய்யுட்களிற் காணலாம். அதிகாயன் புகழ்கின்ருன். இந்நிலையில் அங்கதன் தோள் மீதேறி இலக்குவன் பொருகின்ருன். இலக்குவற்கும் அதிகாயற்கும் வீரவுரை நிகழ்கின்றது. அதிகாயன் தீவிரமாகப் போர் புரிகின்ருன். குரங்குகள் பெருவாரியாக மடிகின்றன. கண்ணுற்ற தேவர்கள் 'மற்றிவன் தன்னை வெல்ல வல்லனே வள்ளல் தம்பி, கற்றது காலனேடோ கொலையிவ னெருவன் கற்ற விற்றெழிலென்னே' (1859) என்று வெருவறுலுகின்றனர். முடிவில் அதிகாயன் சிரத்தை இலக்குவன் பிரமாத்திரத்தால் அறுக்கின்ருன். தேவர்கள் ஆரவாரித்துப் பூமழை பொழிகின்ருர்கள். அடுத்து நராந்தகன் முதலானேர் மடிகின்றனர். மத்தன் மடிகின்ருன். கும்பனைச் சுக்கிரீவன் கொல்லுகின்ருன். அதிகாயன் இறந்துபட அவன் தாய் தானியமாலை வந்து அரற்றுகின்ருள். இங்குச் செய்யுட்கள் அவலச்சுவைத் ததும்பி நிற்பன. 'அக்கனுலந்தான் அதிகாயன் தான் பட்டான், மிக்க திறத்துள்ளார்கள் எல்லாரும் வீடினர், மக்களி னின்றுவான் மண்டோதரி மகனே, திக்கு விசயமினி யொருகாற் செல்லாயோ' (யுத்த. 1931); 'பேதையாய்க் காமம் பிடித்தார் பிழைப்பாரோ, சீதையால் இன்னம் வருவ சிலவேயோ' என்று புலம்புகின்ருள். இவ்வாறு அரற்றிய அரக்கியை உருப்பசியும் மேனகையும் அரண்மனைக்கு அழைத்துச் செல்கின்றனர்.

அதிகாயன் இறந்தது கண்டு அரக்கியர்மட்டும் அல்ல, வானவர் மகளிரும் தம் வாய்திறந்து மாழ்கினர். பேரிலங்கைபூரகலம் எல்லாம் அரந்தை யுவாவுற்ற, வார்கலியே யொத்த தழுத குரலோசை.

இதனை அடுத்து நாகபாசப் படலம். இது யுத்த காண்டத்தில் மிகச் சிறந்த பகுதி என்பர்,

அரக்கியர் பலவாறு ஓலமிட இந்திரசித்து அதன் காரணத்தை வினவுகின்றான். தம்பி அதிகாயன் பட்டது கேட்டு இந்திரசித்து இராவணனைக் காணச் சென்று, அங்கே, காட்டாதன காட்டிய தாதையைக் கண்ணிற் காண்கின்றான். இங்குப் 'பிறரால் செய்து காட்ட முடியாத செயலைக் காட்டிய' என்று பொருள் கூறுவர். ஆயினும், அது காறும் இராவணன் கண்கலங்கி யாரும் கண்டதில்லை. ஆகவே அது வரையிற் காட்டாதிருந்து அப்பொழுது காட்டிய கண்ணீருடன் நின்ற தந்தையைக் கண்டான் என்று சொல்வதே நேர். பின்னர் இந்திரசித்துத் தந்தையைப் பலவாறு ஏசிவிட்டு போர்க்களம் புக்குப் பழிக்குப் பழி வாங்குவதாகச் சூளுரைக்கின்றான். இராவணன் இலக்குவனை நாகபாசத்தாற் பிணிக்குமாறு மகனிடம் கூறுகின்றான். இந்திரசித்தும் இணங்கிப் போர்க்குச் சித்தமாகின்றான். ஆயிரம் ஆண் சிங்கங்கள் பூட்டப் பெற்ற தேரின் மீதேறிச் செல்ல, ஆயிரம் தேர்கள் சேமத் தேர்களாய் உடன் செல்கின்றன. எத்தேவரையும் பின் பலால் எவரையும் முன் கண்டறியாத வீட்டான், போர்க்களம் புகுகின்றான். 'அன்னநெடு போயின தானை யளந்து கூற, என்னலரிதேனு மியம்பு வான்மீக னென்னும், நன்னூன் மறையான் அது நாற்பது வெள்ளம் என்னச், சொன்னான் பிறர் யாரஃது துணர்ந்து தொகுக்க வல்லார்' என்று இங்குக் கவிஞர் கூறுவது கவனிக்கத் தக்கது. இக் கூற்றிலிருந்து கம்ப நாடர்க்கு வான்மீக முனிவனிடம் இருந்த நன் மதிப்பினைக் காணலாம். தொடக்கத்தில் பாயிரத்திலேயே 'ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனும் நறவமாந்தி, மூங்கையான் பேசலுற்றான் என்ன யான்மொழியலுற்றேன்.' என்று கூறியமை காண்க. இந்திரசித்தினைப் பற்றி வீடணன் 'இகல் அமரர் வேந்தனைப் போர் கடந்தவன் என்றும், போர் வலிதாயிருக்கும் என்றும், தக்க துணையொடும் பொருதலே நேரிது என்றும், மாருதி சாம்பவன் சுக்கிரீவன் அங்கதன் நீலன் போன்றவர்களின் உதவி கொள்ளுதல் நல்லது என்றும், இலக்கு

வனிடம் கூறுகின்ருன். அப்பொழுது அநுமன் அங்கு வருகின்ருன். சேனைகள் ஆரவாரித்துச் செல்கின்றன. போர் வருணனையை 1976 இலிருந்து 1985 வரை காணலாம். பல வீரர் கள் பொருகின்றனர். அரக்கர் சேனை தளர்கின்றது. இந்திர சித்து தனியே நின்று போர் புரிகின்ருன். இந்திர சித்துக்கும் அநுமனுக்கும் போர் நிகழ்கின்றது. இருவரு வீரவாதம் பேசு கின்றனர். அநுமனுக்குத் துணையாக நீலன் வருகின்ருன். இந்திர சித்தின் அம்புகளால் அங்கதன் தளர்ந்து வீழ்கின்ருன். இராக் கதத் தலைவர்களைத் தொலைத்து வாகை சூடினன் இராமன் பாதம் சூடிய தோன்றல் தம்பி. இங்கு இலக்குவனை இவ்வாறு குறித்ததன் கருத்து ஆழ்ந்து கருதத் தக்கது; காரண காரியம் தோன்றக் கூறுகின்ருன். பரதன் இராமனுடைய பாதுகை பெற்று அயோத்தி நகருக்குச் செல்லாமலிருந்தால், பின்னர் வரலாறு பெருகி, இலக் குவன் இலங்கைப் போர்களில் வெற்றி பெற்று வாகை சூடுதல் நிகழ்ந்திராது என்ற குறிப்பினை ஆசிரியர் உணர்த்துதல் உய்த் துணர்க. 'மடமானிரக்க மின்மையன்ருே யின்றிவ் வுலகங்களி ராமன்) பரக்குந்தொல்புகழ் அமுதினைப்பருகுகின்றதுவே' (அயோத்தி. மந்தன. 78) 'மாயையும் அவர் பெற்ற நல்வர முண்மையாலும் ஆய வந்தண ரியற்றிய வருந்தவத் தாலும்' (அயோத்தி மந்தரை. 77) என்ற வரிகள் இங்கு ஒப்பு நோக்கத்தகும். படுகளச் சிறப்பினைப் பின்னர்க் காணலாம். இலக்குவன் அநுமன் தோள் மீதேறிப் பொருகின்ருன். இந்திர சித்தின் தேர்ப்பரிகள் வீழ்ந்து இறக் கின்றன. தேர்ப்பாகனும் மரித்து வீழ்கின்ருன். இங்கு இந்திர சித்து இலக்குவன் ஆற்றலை வியந்து, 'அந்நர னல்லனுகில் நாரணன் ஐயனன்றேல், பின்னரன் பிரமனென்பார்ப் பேசுக பிறந்து வாழும், மன்னர் தம்பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி, இந்நரன் தன்னேடொப்பார் யாருளர் ஒருவர்' என்ருன். வீரரை வியவாதார் யார்? அரக்கர் கோவின் மகன் தான் ஏறியிருந்த தேர் அழியவே, ஆயிரம் புரவி பூட்டிய ஆழியம தேரில் ஏறிப் பொரு கின்ருன்; ஆயினும் சிறிது தளர்கின்ருன். இந்தத் தேரையும் அநுமன் அழிக்கின்ருன். உடனே ஆயிரம் பேய்கள் பூட்டப் பெற்ற தேரேறி அரக்கன் பொருகின்ருன். இத்தேரும் இலக்கு வனுல் அழிக்கப்படவே, வானவர்கள் மகிழ்ந்து ஆரவாரம் செய் கின்றனர். அங்கதனும் இந்திரசித்துடன் பொருகின்ருன்.

பின்னர் இந்திரசித்தும் இலக்குவனும் மீட்டும் பொருகின்றனர். பல அரக்கர்கள் உயிரிழக்கின்றனர். இலக்குவன் இந்திர சித்தின் கவசத்தை பிளக்கின்முன். இந்நிலையில் இராவணி வானத்தில் மறைய, அவன் தோற்றெடி விட்டதாகக் கருதி யாவரும் உவகை கொள்கின்றனர். இந்திர சித்து நாகபாசத்தால் இலக்குவன் தேரினைப் பிளக்கின்முன். பின்னர் தன் தந்தையின் அரண் மனை அடைகின்முன். நாகபாசத்தாற் பிணிப்புண்ட இலக்குவனைக் கண்டு வீடணன் புலம்புகின்முன். 'பாசத்தால் அனகன் தம்பி பிணிப்புண்ட படியைக் கண்டு, தேசத்தார் என்னை யென்னே சிந்திப்பார்' 'கொல்வித்தானுடனே நின்றங் கென்பரோ கொண்டுபோனுன். வெல்வித்தான் மகனை யென்று பகர்வரோ' என்று அரற்றுகின்முன். இந்நிலையில் அநலன் அவனைத் தேற்றி இராமபிரானிடம் நிகழ்ந்தது கூற. ஆயிரம் பெயரானும் அருந் துயர்க்கடலின் ஆழ்கின்முன் பின்னர்ப்போர்க்களம் புக்கு, அக்கினி யம்பால் இருளைப் போக்கி, வீழ்ந்து கிடந்த தம்பியைக் கண்டு பல வாறு அவலிக்கின்முன். வீடணனைப் பழிக்கின்முன். வீடணன் தெய்வவன் பாசத்தால் நிகழ்ந்தது மாயச் செய்கை என்று கூற இராமன் பொர எழுகின்முன். 'எவரும் பாசத்தால் உயிர் துறக்க வில்லை யென்றும் பாசம் நீங்கினுல் உயிர் பெற்றெழுவர் என்றும் வீடணன் கூறுகின்முன். இங்கு நாகபாசத்தின் வரலாறு கூறப் பெறுகிறது. இராமபிரான் வெகுண் டெழுந்து உலகத்தினையே அழிக்கத் துணிந்து பின்னர், ஒருவற்காக உலகினை யழிப்பது உசித மன்று என்ற முடிவிற்கு வருகின்முன். பின்னர்த் தம்பி யிறப் பானுகில் தானும் இறப்பது நிச்சயம் என்கின்முன். இந்நிலையில் கருடாழ்வான் வந்து இராமபிரானை வணங்குகின்முன். கருடன் வருகை வருணிக்கப்படுகின்றது. இங்கு நயமான பல கற்பனை களைக் காணலாம்.

இவ்விடத்து இராமபிரானைக் கருடாழ்வான் 'நின் அதிரேக மாயை அறிவாரியார்' என்ற மகுடம் கொண்ட பத்துப் பாடல்களி லும் எம்பெருமானுடைய பல்வேறு செயல்களும் விரிவாகக் கூறப் படுதல் காணலாம். தேவர்களும் அவன் திருநாமத்தைக் கூறுவர் என்றும், அவனே எல்லாவற்றிற்கும் முதலும் ஈறும் என்றும், முத் தொழிற்கும் அவன் உரியவன் என்றும், ஊனு யுயிர்க்கு முயிராகி, யுணர்வாகிப் பெண்ணின் உருவாய், ஆணுகி மற்றும் அலியாகி நிற்

பவன் அவன் என்றும், பலபடப்பாராட்டுகின்ருன். இவ்வாறு துதி செய்துகொண்டுவரும்போது நாகபாசமானது 'சடையன்றன்வெண்ணெயனும், தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொலறிவாளர் என்றிம் முதலோர், பாசங் கலந்த பசிபோலகன்ற பதகன் துரந்த உரகம்' என்று உபகாரஸ் மிருதி என்ற வகையில் தன்னைப் பல வகையாலும் ஆதரித்த சடையப்ப வள்ளலைப் பாராட்டுகின்ருர் கம்பநாடர். இறந்து பட்டவாநரர்கள் பிழைத்தெழுகின்றனர். அரக்கர் பிழைத்தெழுந்தாரில்லை, இராமபிரான், உவந்து கருடனுக்கு முகமன் கூறி, அவனுக்குத் தான் செய்யக் கூடிய கைம்மாறு யாது என்னக் கருடன், 'பறவையின் குலங்கள் காக்கும் பாவகன் பழைய நின்னே. டுறவுள தன்மை யெல்லாம் முணர்த்துவேனரக்க னோடம், மறவினை முடித்த பின்னர் வருவனின்னுழையன்' என்று கூறி விடைபெற்றுச் செல்ல, அவன் நன்றியைப் பாராட்டி, 'ஆருயிர் உதவியாதும், காரிய மில்லான் போனுன் கருணையோர் கடன்மையீதாற், பேரியலாளர் செய்கை யூதியம் பிடித்து மென்னுர், வானினை நோக்கிக்கைம்மாறியற்றுமோ வைய' மென்று சொல்கின்ருன். இங்கு, 'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட் டென்னாற்றும் கொல்லோ உலகு' என்ற குறட் பாவின் கருத்தமைந்திருத்தல் காணலாம். மகிழ்ச்சி கூர்ந்து அனைவரும் பேரொலி எழுப்ப அந்த ஒலி இராவணன் செவியில் வீழ்கின்றது. நிகழ்ந்ததை அறியாமல் இந்திர சித்துத் தந்தையிடம் நகையாடி நிற்கின்ருன். பேரோசை கேட்டு அரக்கரும் அரக்கியரும் நிலை குலைகின்றனர். இராவணன் இந்திர சித்தைக் கண்டு 'இலங்கையில் எழுந்த பேரொலியைக் கேட்கவில்லையோ என்று கேட்க', அப்போது தூதர்கள் வந்து போர்க்கண்வந்த கலுழனைப் பற்றியும், அவன் வருகையால் நிகழ்ந்தவற்றையும் கூறுகின்றனர். இராவணன் இந்திர சித்தினை நோக்கி மீட்டும் பொருமாறு வேண்டுகின்ருன். நாகபாசம் இராமபிரானையும்பிணித்ததாக முதனூல் கூறும்.

இதனை அடுத்து, படைத்தலைவர் வதைப் படலம், மகாபார்ச்வனும் தூமிராக்கனும் போரில் சமாளிக்க வியலாமை கண்டு வெகுண்டு அவர்களின் மூக்கினை யறுக்குமாறு இராவணன் ஆணையிட, மாலி பலகாரணங்கள் காட்டித் தடுக்கின்ருன். பின்னர் இவ்விருவரும் நாற் பெரும்படைகளுடன் போர்க்குச் செல்

கின்றனர். இக்நிலையில் வீடணன் போர்க்கு வருமவர்களில் முக்கிய மாணவர் இன்னாரின்னார் என்று இராமபிரானிடம் சொல்கின்றான். அரக்கரும் வாநரரும் கைகலக்கின்றனர். கவிக் குலத்தவர் ஆறு வெள்ளம் சேனையையும், இலக்குவன் மாத்திரம் நாலு வெள்ளம் சேனையையும் அழிக்கின்றார்கள். போர்க்களம் எங்கும் உதிரம் பெருக்கொடுத்து ஓடுகிறது. கணவன்மாரை இழக்கப் பெற்ற அரக்கிமாரின் இரங்கத்தக்க நிலை சொல்லப்படுகிறது. சிறந்த கற்பனை பொதிந்த அப்பாடல்கள் சுவைத்துப் படிக்கத்தக்கன. அநுமன் அங்கதன் என்ற இவர்களின் கையால் முறையே தூமிராக்கனும் மகாபார்சுவனும் மடிகின்றனர். வேள்விப் பகைஞன், சூரியசத்துரு, வச்சிர தம்ஷ்ட்ரன் என்ற இவர்களும் இறக்கின்றனர். இலக்குவன் கையாற் பிசாசன் உயிரிழக்கின்றான்.

இதனை அடுத்து மகரக் கண்ணன் வதைப்படலம், தூதர்கள் வாயிலாக இராவணன் போர் நிகழ்ச்சிகளை அறிகின்றான். இராவணன் கட்டளையை மேற்கொண்டு மகரக் கண்ணன்போர்க்களம் படர்கின்றான்; இவன் கரன்புதல்வன், மாயம் வல்லவன். மகரக் கண்ணனுக்கும் இராமபிரானுக்கும் போர்நிகழ்கின்றது. இராமபிரான் அவன் மாயையை உள்ளபடி யுணர்ந்து அவனைக் கொல்கின்றான். இரத்தாட்சன் நளன்கையால் வீழ்கின்றான். சிங்கனைப் பனசன் என்ற குரக்கு வீரன் கொல்கின்றான். இதனை அடுத்து பிரமாத்திரப் படலம். இது ஓர் முக்கியமான படலம், போர் நிகழ்ச்சிகள் அனைத்தையும் செவியேற்ற இந்திர சித்து போர்க்குப் புறப்படுகின்றான். சேனையின் செலவும் இந்திரசித்தின் தோற்றமும் வருணிக்கப்படுகின்றன. இராமபிரானும் இலக்குவனும் முறையே அநுமன் அங்கதன் என்ற இவர்களின் தோள்களிலேறிப் பொருகின்றனர். நீலன் முதலான படைத் தலைவரைப் பின் அணியில் நிற்குமாறு இராமபிரான் கட்டளையிடுகின்றான். போரின் திறம் கண்டு இந்திர சித்து இது இந்திர சாபமோ என மலைக்கின்றான். சில அரக்கர்கள் அஞ்சி ஓடுகின்றனர்; அவர்களைச் சினந்து இந்திரசித்து இராம இலக்குவர் மீது செல்கின்றான். இலக்குவன் சூளுரைக்கின்றான். அப்பொழுது அமரர் ஆர்த்தனர்; நல்லறமும் ஆர்த்தது, விலாப்புறம் வீங்க உண்ணுமாறு ஏராளமான உணவு கிடைக்கும் என்று நமனும் ஆர்க்கின்றான். இலக்குவனுடைய போராற்றலையும் ஊக்கத்தை

யும் கண்டு இராமபிரான் 'அறிவநீ யடுவலென் றமைதியா மெனின், இறுதியும் காவலும் இயற்று மீசரும், வெறுவியர்' எனக் கொண்டாடுகின்றான். இலக்குவன், தமையனைத் தொழுது போருக்கு எழுகின்றான், அரக்கர் படையைப் பெருவாரியாக அழிக்கின்றான். மற்றும் 'அமரில் கோளுற்றுன்னொடு குறித் தமர் செய்துயிர் கொள்வான், சூளுற்றேனிது சரதம் 'என் கின்றான். 'இந்திரன் பகைஞனு மிராமன் தம்பிகை மந்திர வம்பினால் மடிதல் வாய்மையால் (யுத். 1301) என்று தீர்க்கதரிசி யான கும்பகன்னன் முன்னர்க் கூறியதும்; 'மறைகளே தேறத் தக்க வேதியர் வணங்கற்பால, இறையவனிராமனென்னும் நல்லற மூர்த்தி யென்னில், பிறையெயிற்றிவனைக் கோறி யென்று' ஒரு பிறைவாய் வாளி நிறையுற வாங்கி விட்டான்' (யுத்த, 3101) என்றதும் குறிக்கொள்ளத் தகும். இங்கு மந்திரம் என்று குறிக் கப்பட்டது. ராம என்ற தாரக மந்திரம் என்பதுணர்க. அப் போது இந்திரசித்து இலக்குவனை நோக்கி 'முன் பிறந்த நின் தமையனை முறை தவிர்ந்துனக்குப் பின் பிறந்தவனுக்குவன் பின் பிறந்தோயை, முன் பிறந்தவ னுக்குவெனிது முடியேனேல், என் பிறந்ததனுற்டயனி ராவணற்கு, (யுத்த. 2437) என்றும், 'கும்பகன்ன னென்றொருவனீ யம்பிடைக் குறைத்த, தம்பி யல்லனு னிராவணன் மகனொரு தமியேன், எம்பிமாருக்கு மென் சிறு தாதைக்கு மிருவீர், செம்புனீர் கொடு கடன் கழிப்பேன்' (2440) என்றும் வீரம் பேசு கின்றான். அப்போது இளையவன் 'அரக்க ரென்பதோர் பெயர் படைத்தவர்க்கெலா மடுத்த, புரக்கு நன்கடன் செயவுளன் வீடணன் போந்தான், கரக்கு நுந்தைக்கு நீ செயக்கடவவக் கடன் கள். இரக்க முற்றுனக் கவன்செயும்' என்கின்றான். இங்கு 'ஐயநீ வேந்தற் கடைக்கலமாகி யாங்கே, உய்கிலை யென்னின் மற்றிவ் வரக் கரா யுள்ளோர எல்லாம், எய்கணை மாரியாலே யிறந்த பாழ் படுதும் பட்டாற், சையினு லெண்ணீர் நல்கிக் கடன்கழிப்பாரைக் காட் டாய்' (யுத்த. 1341) என்ற கும்பகன்னன் கூற்றும், 'உன்மக னுயிரை யெம்மோய் சுமித்திரை யுய்ய வீன்ற, நன்மகன் வாளிநக்க நாயவனுடலை நக்க,என்மக னிறந்தா னென்ன நீ யெடுத்தரற்றல்' (யுத்த. 1625) என்ற பிராட்டி கூற்றும், 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாமி ரங்கி யேங்கி, யுனக்கியான் செய்வ தானேன்' என்ற இராவணன் கூற்றும் காணத்தக்கன. இந்நிலையில் இந்திர சித்து கடும் போர் புரிகின்றான். இலக்குவனுடைய வெற்றித்திறம் கண்ட இராமபிரான் மகிழ்கின்றான். இத்தருணத்தில் இந்திர சித்து வானத்தில் மறைகின்றான். இலக்குவன் பிரமாத்திரம் தொடுப்ப

தாகக்கூற இராமபிரான் 'அறநிலை வழாதாய் ஈன்றவந்தணன் படைக்கலந் தொடுக்கில் இவ்வுலகம் மூன்றையும் சுடும் ஒருவனால் முடிகல' தென்கின்றான். அது கேட்டுச் சான்றவன்னது தவிர்க்கின்றான். இங்கு இராமபிரானுடைய கருணைத் திறத்தைக் காணலாம். முன்னர் ஓர் அம்பினால் மூவுலகும் அழிப்பதாகக் கூறி, அவவாறு செய்தான் இலக்குவன் ஒருவனுக்காக மூவுலகையும் அழிப்பதா என்று அருளொடு கூறியவனும் இவ்விராமபிரானே யன்றோ? இது இவ்வாறிருக்க இந்திரசித்துப் பிரமாத்திரம் விடத் துணிகின்றான். அவன் திடீரென்று மறைந்ததன் காரணத்தை அறியாராய்த் தேவர்கள் ஆரவாரிக்கின்றனர். இராம இலக்குவரும் பிறரும் இந்திரசித்து தோற்றோடினன் என்று கருதித் தத்தம் போர்க்கோலங்களைக் களைகின்றனர். இத் தருணத்து வானரர்கட்கு உணவு கொண்டு வருமாறு வீடணனை அனுப்புகின்றான் இராமபிரான். இடைநடுவில் அரக்கர்க்கும் வானரர்க்கும் போர் நிகழ்கின்றது. மடிந்த வானரர்கள் மட்டுமன்றி, விழுப்புண்பட்ட அரக்கரும் தேவர்களாக ஆயினர். இதனை, 'புரக்கு மாயமும் வஞ்சமுங் களவுமேகடனா இரக்கமே முதல் தருமத்தி னெறியொன்று மில்லா, அரக்கரைப் பெருந் தேவர்களாக்கின வமலன், சரத்தின் வேறினிப் பவித்திர முளதெனத் தகுமோ' என்று கவிஞர் நயம்பட மொழிகின்றார். (யுத்த. 2485) மேலும் அநுமன் கதை கொண்டு பொருகின்றான். இங்குப் போர்ச்சந்தமாக அமைந்த 2488-2494 வரையுள்ள செய்யுட்கள் இசையுடன் படித்தின்புறத்தக்கன. இங்கு, அகம்பன் வரலாறும் அவன் அநுமனுடன் பொருதமையும் கூறப்படுகின்றது. அகம்பன் அநுமன் கையில் மடிகின்றான். இலக்குவனும் பற்பல அரக்கர்களைக் கொல்கின்றான். இந்த நிலையில் இலக்குவாதியரைப் பற்றி எச் செய்தியும் கிடைக்காமையின், அநுமன் வருந்துகின்றான். இலக்குவனைத் தேடிச் சென்ற அநுமன் இளையவனுடைய பெரும்போரினால் நிகழ்ந்த பற்பல குறிகளைக் கண்டு செல்கின்றான். விசயப்பாவை தூர்த்தனாகிய அநுமனை இலக்குவன் தழுவிக் கொள்கிறான். அநுமன் பாசுபத அத்திரம் விடுமாறு கூற, இலக்குவன் அவ்வாறே விடுகின்றான். அரக்கர் சேனையில் பலரும் மடியத் தூதுவர் இராவணனிடம் சென்று மொழிய இலங்கேசன் அச் செய்தியை இந்திரசித்தினிடம் கூறுமாறு புகல்கின்றான். மேகநாதனும் அயன் படையை விடுதற்கு அங்கியில் வேள்வி புரிகின்றான். வேள்வியில் எரிவலஞ் சுழித்து எரியவே நல்ல அறிகுறி என்று எண்ணி எழுந்து மாயையால் மறைந்து

நிற்கின்றான் இராவணன் தனயன். இங்கு ஓர் மாயப் போர் நிகழ்கின்றது. மகோதரன் காமரூபியாகலின் இந்திரனாக உருமாறி வெள்ளை யானைமீது தோன்றுகின்றான். முனிவர் முதலானோரும் இலக்குவனை எதிர்க்கின்றனர். இங்ஙனம் யாவரும் மயங்கி நிற்கும் நிலையில் மேகநாதன் இலக்குவன்மீது அயன் படையை ஏவுகின்றான். அயன் படை இலக்குவன் மேல் தாக்கவே இலக்குவன் அயர்கின்றான. மற்றும் அநுமனும் சுக்கிரீவனும் வாநர வீரர்களும் மரித்து வீழ்கின்றனர். இறந்த வாநரர்கள் வீர சுவர்க்கத்திற்குச் சென்றாராக, தேவர்கள் அவர்களை உபசரித்து வரவேற்றுப் பின்னர் 'பார்படைத்தவன் படைக்கொடு பூசனை படைத்தீர், நெடியோன் பேர்படைத்தவற் கடியவர்க் கடியரும் பெறுவார், வேர்படைத்த வெம்பிறவி யாற்றுவக்குணுவிடு' (2558) 'நங்கள் காரிய மியற்றுவா னுலகிடை நடந்தீர், உங்களாருயி ரெம்முயிருடல் பிறிதுற்றீர்' செங்கணயகற் காக வெங்களத்திடைத் தீர்ந்தீர், எங்கணயகர் நீங்களென் றிமையவரிசைத்தார்' (2559). இடையே இந்திரசித்து இராவணனிடம் சென்று சேர்கின்றான். இராமபிரான் போர்க்களத்திற் கிடந்த வாநரர்களைப் பார்க்கின்றான். பார்த்துப் புலம்புகின்றான். தான் புரிந்த செயல்களை வெறுக்கின்றான். பின்னர் இலக்குவன் கிடந்ததைக் கண்டு, 'உருமினு லிடியுண்டதோர் மராமரம்' ஒத்துச் சாய்கின்றான். போர்க்களத்தில் கிடந்த கவந்த பந்தமும் இறந்த கணவரை நினைந்து அழும் மாதரும் சாதகத் தீட்டமும் ஓரியின் ஒழுக்கம் அன்றி, பிறர் யாரும் இன்மையின் இராமபிரானைத் தெருட்டுவார் யாரும் இல்லை. உலகில் உள்ள சராசரங்கள் அனைத்தும் இராமபிரான் வனம் பட்ரச் சென்ற காலத்து அவலித்தமை போன்று, 'எவையும் ஞானநாயகன் உருவமே யாதலால் நடுநடுங்கி இரங்கின. இரங்க வேண்டுவன அல்லாத 'பகையும் பாவமும் கலுழ்ந்தன பரிவால்', இராமபிரான் அவலித்துப் புலம்பியதை 2580 முதல் 2595 வரை காண்க. இங்கு 'பயிலுங் காலம் பத்தொடு நாலும் படர்கானத், தயில்கின்றேனுக்காவன நல்கி யயிலாதாய், வெயிலென் றுன்னாய் நின்று தளர்ந்தே மெலிவெய்தித் துயில் கின்றாயோ வின்றிவ் வுறக்கம் துறவாயோ' (2583) என்ற பாடலில் அவலச் சுவையின் சிகரத்தைக் காணலாம். இங்குப் பதினான்கு ஆண்டுகள் ஊண் உறக்கமில்லாமலிருந்தா லொழிய இலக்குவன் இந்திரசித்தைக் கொல்ல இயலாது என்ற வரலாறு அடங்கி யிருத்தல் காண்க. இங்கு 'ஆவன நல்கி அயிலாதாய்' என்ற தொடர்க்கு, இராமபிரானுக்கு முன்னர்த் தந்து அவன் அயின்றாலன்றி அயிலாதவன் என்று பொருள் கொள்வர் சிலர். ஒன்றுமே

அயிலாதவன் என்றும் வாதாசனியான ஆதிசேடன் அமிச மாதலின் வாயுவையே உண்டான் என்றும் கூறுவர் சிலர். இங்கு, பச்சிலை கிழங்கு காய் பரமனுங்கிய, மிச்சிலே நுகர்வது வேறு தானென்று, நச்சிலே னச்சினை னுயினுயுண்ட, எச்சிலேயது' (கிட்கிந்நா. 664) ஆம் பாடலும் அதன் உரையும் நோக்குக. மேலும் வருந்திக் கூறுவானுய் 'மண்மேல் வைத்த காதலின் மாதா முதலோர்க்குப் புண்மேல் வைத்த தீ நிகர் துன்பம் புகுவித் தேன், பெண்மேல் வைத்த காதலினிப் பேறுகள் பெற்றேன்' (யுத்த. 2586) 'பிறந்தா யென்னைப் பின்பு தொடர்ந்தாய் பிரி வாற்ருய், இறந்தா யுன்னைக் கண்டு மிருந்தேன்' (2588); 'காலிற் செல்லும் காகமணிக்கும் கரனுக்கும், மூலப் பொத்தற் செத்த மரத்தேழ் முதலுக்கும், வாலிக்கும்மேயாயின தென்கை வலி' 2590); என்றரற்றி இராமபிரான் சோர்ந்து துயில்கின்ருன். இந்த அவல நிலையைக் கண்ட தேவர்கள், அதுவே தருணம் என்று உணர்ந்து, 'அரக்கர் குலத்தைவேரறுத்தெம்மல்ல னீக்கி யருளா யென், றிரக்க வெம்மேற் கருணையினுல் இசையா வுருவமிவை யெய்திப், புரக்குமன்னர் குடிப் பிறந்து போந்தா யறத்தைப் பொறை தீர்ப்பான், கரக்க நின்றே நெடுமாய மெமக்கும் காட்டக் கடவாயோ' (2598) என்ற பாட்டில் அவதார ரகஸ்யம் முழுதும் கூறப்பட்டிருத்தல் காணலாம். துட்ட நிக்கிரக சிட்டபரி பாலனத் தின் பொருட்டும், மறத்தை யொழித்து அறத்தை நிலை நிறுத் தவுமே 'கசரத துரக மாகடல் கொள்காவலன் தசரதன் மதலையாக அவதரித்துப், பூமிபாரம் தீர்ப்பதற்காக எழுந்தருளி,' லீலா மானுஷ விக்கிரகமாக எடுத்த உருவிற்கேற்ப நடித்தருளும் இராமபிரா னுடைய மாயா விலாசத்தை தாங்கள் அறிவதாகக் கூறுகின்றனர். மேலும் கூறுவார் தொடங்கி, 'அண்டம் பலவுமனைத்துயிரு மகத் தும் புறத்தும் உளவாக்கி, உண்டு உமிழ்ந்தும் அளந்திடந்தும் உள்ளும் புறமும் உளையாகிக், கொண்டு சிலம்பி தன் வாயிற் கூர் நூலியையக் கூடியற்றிப், பண்டு மின்று மமைக்கின்ற படியை ஒரு வாய் பரமேட்டி' (2600) என்ற இடத்து 'உலகம் யாவையும் தாமுள ஆக்கலும், நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா, அலகிலா விளையாட்டுடையராவர்' (பால. பாயிரம்) என்று கூறப் படுவதை நோக்குக. கம்பநாடர் ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யப் பிரபந்தங்களிலும் அவற்றின் வியாக்யானங்களிலும் நன்கு ஈடுபட்டவர். எனவே அந்த அருளிச் செயல்களினின்றும் பல அரிய தொடர்களையும் கருத்துக்களையும் ஏற்றுத் தம்முடைய அமர காவியத்தில் பொன்னேபோற் போற்றி யமைத்துள்ளமை

கற்ருர் எல்லோரும் அறிவர். அத்தகைய இடங்களிற் பல இவ் வுரையில் ஏற்றப் பெற்றி காட்டப் பெற்றுள்ளன. இங்கும், 'உண்டு முமிழ்ந்தும் கடந்துமிடந்தும் கிடந்தும் நின்றும், கொண்ட கோலத்தோடு வீற்றிருந்தும், மணம் கூடியும், கண்ட ஆற்ருல் தன்னதே உலகென நின்ருன்' (திருவாய். 4 : 5 : 10) என்ற பாசுரம் அறியத் தகும். 'பாரை யிடந்தவனும், பாரை யளந்தவனும், பாரை யெடுத்தவனும் பண்பாகப், பாரை மாயையிற் கொண்டவ னும, உண்டவனும் கொண்டலென நின்ருனும், வண்டமருந் தண்டுளவமால்' என்பதும் காணத்தகும். சிலந்திப் பூச்சி தன் உருவத்திற்கு எவ்விதமான விகாரமும் இன்றி நூலினை உண்டு பண்ணி மீண்டும், தான் வெளிப்படுத்திய நூலை உள்ளே இழுத் துக்கொள்வது போன்றே, ஈசன் தன் உண்மை வடிவுக்கு எவ்வித விகாரமுமின்றியே அண்டங்களைப் படைத்து அவற்றைத் தன்னுள் அடக்குவன் என்று மறைகள் பகர்வதை ஒட்டி இச் செய்யுளின் இறுதியடிகள் அமைக்கப் பெற்றன. 'சின்னூல் பலபல வாயா லிழைத்துச் சிலந்தி பின்னும், அந்நூல் அருந்தி விடுவது போல வரங்கர் அண்டம், பன்னூறு கோடி படைத்தவை யாவும் பழம்படியே, மன்னூழி தன்னில் விழுங்குவர் போத மனமகிழ்ந்தே, (திருவரங். மாலை. 18); என்றதும் காண்க. மற்றும் 'வருவாய் போல வாராதாய்' என்றும் திருவாழ் மார்ப நின்மாயை யெம்மாற்றீர்க்கத் தீருமோ என்றும் புகழ்ந்தனர் அமரர்கள். இந்நிலையில் தூதர் இராவணனிடம் இராமபிரான் நிலையை அறிவிக்கின்றனர்.

## இதனை அடுத்துப் பிராட்டி களம் காண் படலம்

நிகழ்ச்சிகளைச் செவியேற்ற இராவணன் ஊரெங்கும் இச் செய்தியைப் பரப்புமாறு கூறி நெய்யாராடல் கொள்ளுமாறு ஏவுகின்ருன். அத்துடன் நில்லாமல் இறந்துபட்ட அரக்கர் உடலம் அனைத்தினையும் கடலில் வீழ்த்தும்படியும் கூறினன். இது விதியின் விளைவென்றே கூறவேண்டும். 'நுணலும் தன் வாயாற் கெடும்' என்றதன் உண்மையை இங்குக் காணலாம். இங்ஙனம் அவன் கட்டளையிடாதிருப்பின் பின்னர் மருத்து மலையால் இறந்த வானரர்கள் உயிர்பெற்றெழுந்தது போன்று இவ் வரக்கர்களும் உயிர் பெற்றெழுந்திருப்பார்கள். உத்திரவளித்த பின் தன் மகனுடைய வீரத்தைச் சீதாதேவிக் குணர்த்துமாறு தேவியை விமானத்திலேற்றிக் களத்தை அவட்குக் காட்டுமாறு

கூறுகின்றான். காட்டிய நிலையில் 'மங்கையழுதாள் வானாட்டு மயில்கள் அழுதார் மழவிடையோன், பங்கினுறையும் குயிலழுதலாய், பதுமமலர் மேல் மாதழுதாள், கங்கை யழுதாள் நாமடந்தை யழுதாள் கமலத்தடங்கண்ணன் தங்கையழுதாள் என்று எழுதி 'இரங்காத வாக்கி மாரும் தளர்ந் தழுதார் என்றதன் நயம் அறிந்து மகிழ்தற் பாலது' (2610) உரை காண்க. தன்னார் வயிற்றிலடித்துக் கொண்டு வருந்திப் பதைபதைக்கின்றான். இங்கு காணப்படும் 'உறமேவிய காதல்' 2615 முதலாக 2626 வரையுள்ள செய்யுட் சந்தத்துடன், 'கருமேக நெடுங்கடல்' (சுந்தர. 91) முதல் 497 வரையில் உள்ள செய்யுட்களையும் பாலகாண்டம் கடிமணப் படலத்து 'உரவேது மிலார் உயிரிது மெனா' 3 முதல் 18 வரையுள்ள செய்யுட் களையும் ஒப்பு நோக்குக, இங்கு மேதாவினை யோய் விதியார் வினைவாற், போதாநெறி யெம்மொடு போதுறு நாள், மூதா லானவன் முன்ன முடிந்தி டெனும், மாதா வுரையின்வழி நின் றனையோ' (2623) என்ற பாடல் ஆராயத் தக்கது. கம்ப நாடர் மிக்க நினைவாற்றல் உள்ளவர். தமது காப்பியத்தில் ஓரிடத்தில் ஒரு பொருளைக் கூறி அதனைப் பல இடங்களிலும் குறிப்பிடுவர். 'இங்கு மாதா வுரையின் வழி நின்றனையோ' என்ற குறிப்பு, அவன் அன்னையார் இராமபிரானைப் பின்தொடர்ந்து இளையவன் ஏகியபோது 'முன்னம் முடி' என்ற தொடரினைப் பின்பற்றியது. இப்பாட்டின் உரை காண்க. இங்ஙனம் புலம்பி நின்ற பிராட்டியை அவள் தேடிய தவமேயன்ன திரிசடை 'புண்டரீகனான இராமபிரானுக்கு இறுதி யில்லை யென்றும், 'இளையவன் வதனம்' ஊழி நாளிரவியென்ன ஒளிர்கின்ற தாகலின் உயிருக் கின்னல் இல்லை யென்றும், இராமபிரான் இறந்திருப்பின் ஈரேழுலகங்களும் இறந்துபட்டிருக்கும் என்றும், பிராட்டியின் வரத்தினாலே மாருதிக்கு மரணமில்லை என்றும், கூவலிற் புக்கு வேலை கோட்படா என்றும், அனைத்திற்கும் மேலாக மங்கல நீங்கினாரை யாருயிர் வாங்கினாரை, கடவுள் விமானம் தாங்கி நில்லாது என்றும் சொல்லித் தேற்றச் சிறிது 'அன்னை நீயுரைத்த தொன்றும் அழிந்திலதாதலானே, உன்னையே தெய்வமாக் கொண் டித்தனை காலம் உய்ந்தேன்' (2635) என்று மொழிகின்றாள் இந்நிலையில் அரக்கிமார் மீட்டும் அவளைச் சிஞ்சுபவனத்திற் கொண்டு சேர்க்கின்றார்கள்.

## இதனை அடுத்து மருத்துமலைப் படலம்.

இராமபிரான் கட்டளைப்படி வீடணன் வானரர்கட்கு உணவு கொண்டு போர்க்களம் அடைந்து, யாவரும் அயர்ந்திருத்தலையும் இராமபிரானுடைய அவல நிலையையும் கண்ணுறுகின்றான். எனினும் இராமபிரான் இறந்திலன் என்று உணர்ந்து பாசம் போயிற்றது போலப்பதுமத்தோள் படையுமின்றே நாசம்போ யெய்தும் நம்பி தம்பிக்கு நாசமில்லை என்று திடங்கொண்டு, யொள்ளிக் கட்டையைக் கொண்டு களத்தில் சென்று அநுமனைக் கண்டு அவன் மயக்கத்தைத் தெளிவிக்கின்றான். தெளிந்து எழுந்து, உலகம் மூன்றும் தலையின் மேற்கொள்ளும் துயோனை சிறிய திருவடி, சாம்பனைத் தேடி அடைகின்றான். சாம்பன் இராமபிரானைப்பற்றிக் கேட்டறிந்து, இறந்தவர் அனைவரையும் உயிர் பெறச் செய்யும் மருந்துகொண்டுவருமாறு கூறி, மருத்து மலைக்குச் செல்லும் வழியைக் கூறத் தொடங்குகின்றான். இங்குக் கூறப்பட்ட வழி முதனூலிற் கூறப்பட்டுள்ளது. அதனை ஒட்டியே கவிஞர்பிரானும் கூறுகின்றனர். சாம்பன் அநுமனிடம் மருந்துகளின் அங்க அடையாளங்களைப் புகல்கின்றான் 'மாண் டாரை யுய்விக்கு மருந்தொன்று மெய்வேறு வகிர்களாகக், கீண்டா லும் பொருத்துவிப்பதொரு மருந்தும் படைக்கலங்கள் கிளர்ப்ப தொன்றும், மீண்டே யுந்தம் முருவே யருளுவதோர் மெய்ம்மருந்து முள நீவீர, ஆண்டேகிக் கொணர்தி யெனப் பணிக்கின்றான் மேலும் மேற்கூறிய மருந்துகள் நான்கும் முன்னர் திருப்பாற்கடல் கடைந்த காலத்து எழுந்தன வென்றும், திருவிக்கிரமன் அவதார காலத்தில் தான் முரசம் சாற்றும்போது முனிவர் அம்மருந்து களின் தன்மையினைக் கூறினர் என்றும் சொல்கின்றான். உடனே அநுமன் பேருருவம் கொண்டு எழுந்த அளவில் உலகத்து நிகழ்ந்த பல அரிய நிகழ்ச்சிகளும் கூறப்படுகின்றன. அநுமான் செல்கின்ற விரைவினைக்கண்டு தேவர்கள் பலவாறு கருதுகின் றார்கள். 'உருவென்றார் சிலர் சிலர்கண் ஒளியென்றார் சிலர் சிலர்கள் ஒளிருமேனி, யருவென்றார் சிலர் சிலர் களண்டத்துக் கப்புற நின்றுலகமாக்கும், கருவென்றார் சிலர் சிலர்கள் காற் றென்றார்' (2676), அநுமன் வெகுதூரம் சென்று இமயத்தையும் கயிலையையும் அடைகின்றான், கயிலைப் பெருமான் அநுமன் செல்லும் காரணத்தை உமையாளுக்குக் கூறுகின்றான். அநுமன் மேருமலையை அடைந்து அங்குள்ளதும் பரத கண்டத்துக்குத் தன் பெயரை யளித்ததுமான நாவல்மரத்தைக் காண்கின்றான். பின்னர்

சத்தியலோகத்தில் பிரமனையும் வைகுண்டத்தில் திருமாலையும் தரிசிக்கின்றான். அடுத்து உருத்திர மூர்த்தியையும் கண்டு வணங்குகின்றான். 'இந்திரன் முதலான எட்டுத்திசைப் பாலகரையும் பார்க்கின்றான் உத்தர குருவை யடைகின்றான். ஆங்குச் செல்லும் வழியில் உள்ள பல்வேறு பூமிகளையும் கண்டு செல்கின்றான் என்னும்போது சும்ப நாடர் அந்நாடுகளைப் 'பொன்னி நாடுவமை வைப்பைப் புலன் கொள நோக்கிப் போனான்' என்று தான் அறிந்த பொன்னிவள நாட்டினைப் புகழ்ந்து சொல்கின்றான். இதிலிருந்து கம்பருடைய நாட்டுப் பற்று விளங்கும். இங்கு தான் சென்னி நாட்டெரியல் வீரன் தியாகமா விநோதன், என்ற ஓர் சோழ மன்னன் பெயர் கூறப்படுகிறது. (2695) உரை காண்க. பின்னர் நீலமால்வரைக்கப்பால் மருத்து மலையைக் காண்கின்றான், அங்கு அவ்வரிய மருந்துகட்குக் காவலாக இருந்த தேவதைகளின் இசைவுபெற்று 'இங்கு நின்றின்னன மருந்தென் றெண்ணிணுற், சிங்கு மாற் காலம்' என்று உணர்ந்து அந்த மருத்து மலையை அகழ்ந்து கொண்டு விண் வழியாக விரைகின்றான். இவன் இவ்வாறு வந்து கொண்டிருக்கும்போது இராமபிரான் விழித்துக் கொண்டு வருந்துகின்றான். வருந்தி மடிவதற்கும் துணிகின்றான். அந்நிலையில் சாம்பன், 'அநுமன் கொணரும் சஞ்சீவி மருந்தினால் யாவரும் உய்வர்' என்கின்றான். மற்றும் அம் மருந்து, 'ஆர்கலி கடைந்த நான் அமர்தின்வந்தன என்றும், திருமாலின் கையில் உள்ள சக்கரப்படையால் காக்கப்படுவதென்றும், மேருவின் உத்தர குருமேல் உள்ளதென்றும் மூன்றென முற்றிய வுலகம் முன்னை நாள் ஈன்றவ னிறப்பினும் ஆவியீயும் என்றும் 'சல்லிய மகற்றுவதொன்று சந்துகள், புல்லுறப் பொருத்துவதொன்று போயின, நல்லுயிர் நல்குவதொன்று நன்னிறத், தொல்லையதாக்குவதொன்று' என்றும் பகர்கின்றான். 'இவ்வாறு இராமபிரான் தெளிந்து நின்ற நிலையில், அநுமன் வருகின்றான். வரும்போதே சஞ்சீவிக் காற்றுப் பட்டே அனைவரும் உயிர் பெற்றெழுகின்றனர். இறந்துபட்ட அரக்கர்களும் உயிர் பெற்றிருப்பார்கள். ஆனால் அவர்கள் உடல்களைக் கடல் மிசைப்போடுமாறு இராவணன் பணித்து விட்டானாகலின், அவர்கள் உயிர்பெறவில்லை, இலக்குவன் உறக்கம் நீங்கி எழுந்தவன் போன்று எழுகின்றான், இராமபிரான் அவனைத் தழுவி மகிழ்கின்றான். தேவர்களும் மகிழ்ச்சி கூறுகின்றனர். அயன்படை இராமபிரானை வலம் வந்து வணங்கிச் செல்கின்றது. பின்னர் இராமபிரான் அநுமனை ஆர்வத்தோடும் அணைத்து 'முன்னிற் றோன்றினோர் முறையி

லிங்கலா, தென்னிற் றோன்றிய துயரி லீறுசேர், மன்னிற் றோன்றினே முன்னர் மாண்டுளோம். நின்னிற் றோன்றினேம் நெறியிற் றோன்றினுய் (2747) என்றும் 'பழியும் காத்தரும்பகையும் காத்தெமை, வழியுங் காத்தனே மறையும் காத்தனே' (2748) என்றும், வாயாரப் புகழ்ந்து 'ஒன்றுமின்னனே யுறுகிலா தென்றும் வாழுமாறு' வாழ்த்துகின்றான், எண்ணிய காரியம் இனிது முடியவே மருத்துவ மலையை முன்னம் இருந்த இடத்திற் கொண்டு வைக்குமாறு சாம்பன்கூற, அநுமன் அவ்வாறே செய்து திரும்புகின்றான்.

இதனையடுத்துக் களியாட்டுப் படலம் சீதைக்குக் களம் காட்டிய படலம் போன்றே இந்தக் களியாட்டுப் படலமும் முதனூல் இல்லை. இவைகளும் கம்ப நாடர் படைப்புக்களே; 'கொலைஞர் உலையேற்றித் தீமடுப்ப வாமை, நிலையறியாதந்நீர் படிந்தாடியற்றே. கொலைவல் பெருங்கூற்றம் கோட்பார்ப்ப வீண்டை, வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு' (331); என்பது நாலடியார். கம்ப நாடர் தமது காப்பியத்தை ஓர் நாடக முறையில் அமைத்துள்ளார் என்பது முன்னர் குறிக்கப்பட்டது. பின்னே நிகழ இருக்கின்ற பேரவல நிகழ்ச்சிகள் இன்னவென உணராது தாற்காலிகமாகப் பெற்ற சிறிய இன்பத்தில் மதிமயங்கி அறிவழியும் உலகம். இந்த இன்பத்தில் மிகவும் மனம் ஊன்றவே திடீரென்று ஓர் பெரும் விபத்து நிகழ்ந்த அளவில் துக்கமும் அளவு கடந்து உண்டாகும். இக்கருத்தை அறிவுறுத்தவே திருவள்ளுவப் பெருந்தகை 'இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன்' (குறள். 629) என்றார். பிரமன் படைப் பால் அனைவரும் இறந்தனர் என்று மகிழ்வு கொண்ட இலங்காதிபன், மகளிரின் களியாட்டம் காண்கின்றான். பல்வகை நாட்டியங்களில் அறிவைச் செலுத்துகின்றான். மகளிரும் கட்குடியால் பலவாறு விகாரப்பட்டுக் காண்கின்றனர்; இவை நகைச் சுவை விளைக்கும் முறையில் நயம்படக் கவிஞராற் கூறப்படுகின்றன. இவ்வாறு களியாட்டயரும்கால், உயிர் பெற்றெழுந்த வானரங்களின் பேரார்ப்பொலி அவன் காதில் வீழ்கின்றது. இராம இலக்குவர் குனித்த வில்லின் நாணொலி கேட்கின்றது. மகிழ்ச்சிக் கடலில் திளைத்த இராவணன் துயரக் கடலில் வீழ்கின்றான். ஒற்றர்கள் வந்து நிகழ்ந்த செய்தியைக் கூறுகின்றனர்.

அடுத்து மாயா சீதைப் படலம்

இராமபிரான் தனக்கு நேர்ந்துள்ள பரிபவத்தைக்கூற, மாலியவான் அவனைப் பார்த்து 'இலங்கையினின்று மேருப்பிற் படவிமைப்பிற் பாய்ந்து, வலங்கிளர் மருந்து நின்ற மலையொடுங் கொணர வல்லான்' அநுமனேயாதல் வேண்டும் என்றும், 'போரினிப் பொருவ தெங்கே போயின அநுமன் பொன்மா, மேருவைக் கொணர்ந்திவ்வூர் மேல் விடுமெனின் விலக்கலாமோ' (2777) என்றும் 'வேதங் கூறும் இறைவர் கண் மூவரென்ப தெண்ணிலா ரெண்ணமேதான், அறைகழ லநுமனோடும் நால்வரே முதல்வரம்மா' (2778) என்றும், இறந்துபட்ட அரக்கர்களைக் கடலில் போடாமலிருந்திருப்பின் நன்றாக இருந்திருக்கும் என்றும் கூறிச் சானகியை மரபினீந்தே, அறந்தரு சிந்தையோரை யமைக்கலம் புகுதும்' (2780) என்று, மேல் விளைவதோர்வான் ஆன மாலி அறிவுரை கூறுகின்றான். இங்கும் இராவணன் 'விநாசகாலே விபரீத புத்தி' 'கேடு வரும் பின்னே மதிகெட்டுவரு முன்னே' என்ற முதுமொழி கட்கேற்ப, மாலி சொற்களைச் செவியேற்காது, 'படைக்கலம் படைத்த வெல்லாம், கெட்டன எனினும் வாழ்க்கை கெடாது நற்கினியனாளை, விட்டிட வெண்ணியோதான் பிடித்தது வேட்கை வீய' (2783) என்று வீர வாதம் பேசுகின்றான். இங்குக் கும்பகன்னன் கூறிய அறவுரையும், சொந்த மைந்தன் இந்திரசித்துக் கூறிய அறவுரையும், இராவணன் வெகுண்டுரைக்கும் மொழிகளும் ஒப்பு நோக்கத் தக்கன. இங்கு இந்திரசித்துத் தனது பிரமாத்திரம் இராமபிரானையும் பிணிக்கும் என்றிருந்ததாகவும் ஆனால் அவன் மேனியை அது தீண்டவில்லையென்றும் கூறி, ஓர் நல்லுணர்வுண்டாக, 'மானிடனல்லன் தொல்லை வானவனல்லன் மற்றும், மேனிமிர் முனிவனல்லன் வீடணன் மெய்யிற் சொன்ன, யானென தெண்ணல் தீர்ந்தார் எண்ணுறு மொருவனென்றே, தேனகு தெரியல் மன்ன சேகறத் தெரிந்தது' (2786) என்று பகர்ந்து 'நிகும்பிலை வேள்வி வல்லை யியற்றினால் முடியும் துன்பம்' என்று மொழிகின்றான். இராவணன் அவன் கூறியதை ஏற்று, அந்த வேள்வி இனிது நடைபெறும் வகையைக் கூறுமாறு வினவுகின்றான். இந்திரசித்து உடனே 'சானகி யுருவமாகச் சமைத்தவள் தன்மை கண்ட, வானுயர் அநுமன் முன்னே வாளினாற் கொன்று மாற்றி, யானெடுஞ் சேனையோடு மயோத்தி மேல் எழுந்ததென்னப், போனபின்புரிவதொன்றும் தெரிகிலர் துன்பம் பூண்பார் என்றும், சீதையை மீட்க வந்தோம். அச்சீதையோ மாண்டாள்.

இனிப் போர் புரிவதால் யாது பயன் என்று எண்ணித் தம் தலை நகர்க்குத் திரும்பிவிடுவார் என்றும், பகர்கின்றான். இது நிற்க வாநரர்கள் தனித்தனியாகக் கொள்ளிக்கட்டையை எடுத்துக் கொண்டு இலங்கா நகரைத் தீயிலிட்டனர். இடையே இராமன் அம்பினால் ஊர்க்கோபுரம் வீழ்கின்றது. அநுமன் மேற்றிசை வாயிலை அணுகுகின்றான். அங்கு மாயா சீதையின் கூந்தலைப்பற்றி ஒரு வாள் கைக்கொண்டிருந்தான். நோக்கி நின்ற அநுமன் மாதையொறுத்தல் வசை என்று கூறுகின்றான். அதனைக் கேட்ட இந்திரசித்துத்தான் அயோத்திக்கும் செய்யப் போவதாக அச்சுறுத்திவிட்டு, வாளால் மாயா சீதையை வெட்டிவிட்டுப் புறப் படுகின்றான். கொல்லப்பட்டவள் பிராட்டியே என்று தவறாகக் கருதி மாருதி மூர்ச்சித்து விழுகின்றான். இடைநடுவில் இந்திர சித்து நிகும்பலை சேர்கின்றான். அநுமன் பெரிதும் புலம்புகின்றான். 'கல்விக்கு நிமிர்ந்த கீர்த்திக் காகுத்தன் தூதனாகிச், சொல்விக்க வந்து போனேன் நோய்விலித் துயர் செய்தாரை, வெவ்விக்கவன்று நின்னை மீட்பிக்கவன்று வெய்திற், கொல்விக்க வந்தேனென்றே கொடும்பழி கூட்டிக் கொண்டேன்' (2822), 'பெருங் கடற் கோட்டத் தெய்வை யொத்ததென் அடிமைப் பெற்றி' (2824) என்று கதறியழுது, இராமபிரானிடம் செல்கின்றான். சென்று பிராட்டியை அரக்கன் அயில் கொள்வாளால் போழ்ந்ததாகக் கூறுகின்றான். கேட்ட இராமபிரான் பெரிதும் வருந்தி மூர்ச்சை யடைகின்றான். இலக்குவனும் தாயினை இழந்த கன்றெனத் தவிக்கின்றான். இந்நிலையில் வீடணனும் இலக்குவனும் இராம பிரானைத் தேற்றுகின்றனர். சுக்கிரீவன் வெகுண்டு இலங்கை மேல் வாவலுற்றான். இராமபிரான் தன் தம்பியர் என்ன ஆவரோ என்று ஐயுற்று அயோத்திக்குச் செல்ல எண்ணுகின்றான். அப்பொழுது தெளிவுடைச் செம்மலான இலக்குவன் தன் தமையனை நோக்கி, 'பரதனை அமரிற்றாக்க, இந்திரசித்தேயன்று, தெவ்விடத்தமையின் மும்மையுலகமுந் தீந்தருவோ, வெவ்விடர்க் கடலின்வைகல்' எனக்கூறித் தேற்றுகின்றான். பரதனுடைய போர்த்திறனும் ஆற்றலும் யாண்டும் வெளிப்படையாகப்பேசப்பட வில்லை. இந்த இலக்குவன் சொற்களாலேதான் அவன் மகிமை விளங்குகின்றது. இவ்வாறு கூறி, 'தீக்கொண்ட வஞ்சன் வீசத் திசைமுகன் பாசந்தீண்டி, மீக்குண்டுவீழ யானோ பரதனும் வெய்ய கூற்றைக், கூய்க்கொண்டு,குத்துண்டன்னான் குலத்தொடு நிலத்த னுதல், போய்க் கண்டு கோடியன்றே' (2856) என்று கூறுகின் றான். இங்கு தன் வன்மையும் பரதன் வன்மைக்குத் தாழ்ந்ததே

என்று கூறுவது நன்கு கவனிக்கக் தக்கது. அநுமனே புட்பகத்தினும் விரைவாக அயோத்திக்குச் செல்வதாகக் கூறுகின்றான். தெளிந்த அறிஞன் ஆன வீடணன் சிறிதும் பதைபதைப்பின்றி, 'பத்தினி தன்னைத் தீண்டிப் பாதகன் படுத்தபோது, முத்திறத் துலகும் வெந்து சாம்பராய் முடியும்' மற்றும் அவன் அயோத்திக்குச் சென்றுள்ளானோ என்பதையும் நோக்குவோம் என்று ஆய்ந்து, வண்டின துருவம் கொண்டு, மானவன் மனத்திற்சென்று கண்களாற் கருத்தால் ஆவியுண்டிலை யென்னச் செய்த ஓவியம் ஒக்கின்றாளைக் காண்கின்றான். சென்ற இடத்து நிகழ்ந்தது அனைத்தும் போலிச் செயல்கள் என்றும், உண்மையில் இந்திரசித்து நிகும்பிலை யாகத்தினை முடிக்கச் செய்த சூழ்ச்சி யென்றும் ஓர்ந்தான். பின்னர், துன்புற்று நின்ற இராமபிரானிடம் சென்று, 'இருந்தனள் தேவியானே யெதிர்ந்தனன என்கணூர, அருந்ததிக் கற்பினாளுக் கழிவுண்டோ வரக்கனம்மை, வருந்திட மாயம் செய்து நிகும்பிலை மருங்கு புக்கான்' (2867) என்று பகர்ந்தான். எல்லோரும் மகிழ்ந்து ஆரவாரித்தனர்.

## இந்திரசித்து நிகும்பிலை யாகப்படலம்.

உண்மை நிலையை அறிந்து வந்துரைத்த வீடணனை இராமபிரான் புகழ்கின்றான். இந்திரசித்து இயற்றும் பெருவேள்வியைத் தடுக்க இலக்குவனை அனுப்புமாறு வீடணன் கேட்க, இராமபிரான் இந்திரசித்தினோடு போர் புரிதற்கான முறைகளை இளவலுக்குக் கூறிப் பல போர்க்கருவிகளை அளிக்கின்றான். இலக்குவன் போர்க்குச் செல்கின்றான். வாநரர்களும் உடன் செல்கின்றனர். இருதிறத்தார்க்கும கடும்போர் நிகழ்கிறது. இந்திரசித்தின் வேள்வி அழிகின்றது. பூரண கும்பம் உடைகின்றது. பல அரக்கர்கள் போரில் மடிகின்றனர். இந்திரசித்து அயர்கின்றான். அநுமன் அவனை நோக்கித்தொடர்ந்துபோ யயோத்தி தன்னைக்கிளையொடும் துணிய நூறி, நடந்ததெப்பொழுது' என்று சொல்லி நகையாடுகின்றான். இங்கு அநுமன் கூறும் சொற்கள் அவனுடைய வீரத்தை மட்டும் அன்று சொல் வலிமையையும் காட்டி நிற்பன ஆதல் படித்துணர்க. இந்திரசித்து இங்கு வீராவேசத்துடன், 'கூனுடைக் குரங்கினோடு மனிதரைக் கொன்று சென்றவ், வானிடைத் தொடர்ந்தும் கொல்வென் மருந்தினும் உய்யமாட்டீர்' (2950) என்று வீரியத்துடன் பேசுகின்றான். பேசிப் போருக்கு எழுகின்றான். அநுமனுக்கும் இந்திரசித்துக்கும் போர் நிகழ்

கின்றது. பின்னர் இலக்குவன் அநுமன் தோளின் மீதமர்ந்து அரக்கனுடன் பொருகின்றான். இருவரும் பொருவீரையும் பொருவீரையும் பொருதாலெனப் பொருகின்றார். போரில் இந்திரசித்து சிறிது சலித்து நிற்கின்றான். அதனை இலக்குவன் அறிகின்றான். பின்னர் இருவரும் பிரமாத்திரம் விடுகின்றனர். ஆயினும் இலக்குவனே வெற்றி பெறுகின்றான். இராம இலக்குவரை இங்கு நாராயணரும் நரரும் எனக் கூறிவிடுகின்றனர். இந்திரசித்து பசுபதி அத்திரம் தொடுக்கின்றான். வீடணன் இலக்குவன் சார்பில் பொர வந்தபோது இந்திரசித்து வீடணனை இகழ்கின்றான். இங்குள்ள சில பாடல்கள் மிகவும் சிறப்பானவை. தன் மகன் குற்றச் சாட்டிற்கும் பழிப்புரைக்கும் எதிராக, வீடணன், 'வெவ்விது பாவம் சாலத்தருமமே விழுமிது' 'அறந்துணையாவ தல்லா லருநரகமைய நல்கும், மறந்துணையாக மாயாப் பழியொடும் வாழ மாட்டேன், 'பெண்டிரிற் றிறம்பினரைத் துறந்தது பிழையிற்றாமோ' 'அறத்தினைப் பாவம் வெல்லாது' என்று கூறுகின்றான். இந்திரசித்து வெகுண்டு வீடணன்மீது ஓர் கடும்பகழி ஏவ, அதனை இலக்குவன் துணிக்கின்றான். இந்நிலையில் வீடணன் இந்திரசித்தினுடைய தேரின் சாரதியை அழிக்கின்றான். இந்திரசித்து உடனே இராவணனிடம் செல்கின்றான்.

### இதனை அடுத்து இந்திரசித்து வதைப்படலம்

தன்னிடம் வந்த இந்திரசித்தினை நோக்கி இலங்கேசன், 'தொடங்கிய வேள்வி முற்றுப் பெற்றிலாத் தொழில் நின் தோள் மேல், அடங்கிய வம்பே யென்னை யறிவித்தது என்று கூறும் கால், இந்திரசித்து, 'சலம்செயினுலக மூன்று மிலக்குவன் முடிப்பன்'. என்றும், சீதைபால் கொண்ட ஆசையை விட்டுவிடின், மாற்றார் சீற்றம் தவிர்வர் என்றும் கூறுகின்றான். அச்சொற்களைக் கேட்ட வணங்காமுடி மன்னன், வெகுளிநகை மேற்கொண்டு, போரில் இறந்துபட்டவர் எல்லாம் தன்பகைவரை ஒழித்து தவுவர் என்றும், மடியாது எஞ்சிநிற்பவர் வெற்றிகொண்டு மீள்வர் என்றும், அருமைப் புதல்வனன இந்திரசித்துத் தனக்கு வெற்றி யீட்டித் தருவன் என்றும் உணர்ந்தன்று, என்று மொழிந்து, தன்னையே நோக்கித் தானந் நெடும்பகை தேடிக்கொண்டதாகக் கூறுகின்றான். இங்கு இறுதியடி ஆராயத்தக்கது. தன்னையே நோக்கி என்பதற்குத் தன்னுடைய பேராற்றலிற் பூரண நம்பிக்கை வைத்து என்று பொருள் தருவர் எனினும், இங்கு இராவண

னுடைய ஆதிவரலாறு குறிக்கப்பெற்றுள்ளது என்பது உய்த்துணரலாகும். ஸ்ரீவைகுண்டத்தில் திருமாலின் வாயில் காவலராக இருந்து ஜயனும் விசயனும் முனிவர் சாபமேற்றபோது, பெருமாளிடம் தாங்கள் மூன்று பிறவிகளில் நேர் பகைவராக வந்து மீண்டும் தங்கள் ஸ்தானத்தை அடையப்பெறுவோம் என்ன, பெருமானும் அநுக்கிரகம் செய்யத் திரேதாயுகத்தில் இராவண கும்பகன்னனாகத் தோன்றினர் என்பது வரலாறு. எனவே என்னை என்பதற்கு என்னுடைய நன்மையை நோக்கியே என்பது பொருள், இங்கு 'நெடும் பகை' என்று குறிக்கப்பட்டதும் காண்க. நெடும்பகை மூன்று பிறவிகளிலும தொடர்ந்த நீண்ட பகை என்றும் திருவிக்கிரமாவதாரத்தில் நீண்டுயர்ந்த பகைவனான திருமால் என்றும், பொருள் தருவதும் ஓர்க தேடிக்கொண்டேன்' என்பதும் இதனை விளக்கும். மற்றும் நீர்மேற் குமிழி காயம் என்றும், போரில் வெற்றிபெறினும் பெருவிடினும் இராமபிரான் பேருள்ளளவும் தன்பேர் உலகில் நிற்பது உறுதியெனவும், ஆறிலும் சாவு நூறிலும் சாவு என்றும் பூதவுடல் அழியினும், 'நத்தம் போற்கேடும் உளதாகும் சாக்காடும்' என்றபடி புகழுடம்பு நிலைநிற்கும் என்றும், தான் இறந்துபடினும் 'குட்டுப் பட்டாலும் மோதிரக் கையாற் குட்டுப்படுவதே' மேல் என்றும், போர் செய்து அலசினானாகில், அவன் சிரமசாந்தி செய்து கொண்டு அரண்மனை சென்று தங்கலாம் என்றும் கூறித் தேரினைக் கொணருமாறு சொல்கின்றான். பிரதாபலங்கேசுரன் என்றதற்கேற்பப் பெருமிதம் பொதிந்த சொற்கள் இவை. இந்திரசித்து இச்சொற்களைக் கேட்டு ரோஷங்கொண்டு 'தெய்வத் தேர்மேல் ஏறினன் முடியலுற்றான்' என்கின்றார் கவிஞர் பெருமான். பின் அவன் இறந்துபடுவது உறுதி என்பதை 'முடியலுற்றான்' என்ற சொற்கள் சூசிப்பிக்கும். இதனை 'Dramatic liony' என்பர் ஆங்கிலம் வல்லார். 'உத்தமன் அந்நகர் ஒழியப் போயினான்' (யுத்த. 318) என்றது காண்க. தான் மரிப்பது நிச்சயம் என்று மனம் கொண்டானாகலின், 'இன்றுடன் கழிந்த தன்றே யுடன்பிறப்பு' என்று கும்பகன்னன் இராவணனிடம் கூறியது போன்று, கொடியோன் தன்னைக் கடைக்கணால் நோக்கி நோக்கி யிருகணீர் கலுழச் செல்கின்றான். மிகவும் அவலச் சுவை நிறைந்த இடங்களில் ஒன்று, மேகநாதன் ஏறிய தேர் ஒலி, இலக்குவன் செவியில் வீழ்கின்றது. இங்கு சிறந்த சந்தத்தில் இரதத்தின் செலவு முதலியன வருணிக்கப்படுகின்றன. இங்கு 'உய்வினை யொருவன் தூண்டா துலத்தலிற்றவத்தை

நண்ணி, ஐவினை நலிய நைவா னறிவிற்கு மூவமையாகி, மெய் வினை யமைந்த காமம் விற்கின்ற விரகிற்றேராம், பொய்வினை மகளிர் கற்பும் போன்றதப் பொலம்பொற்றிண்தேர்" (5078) என்ற தத்துவப் பொருள் பொதிந்த செய்யுள் குறிக்கொள்ளத்தக்கது. போரில் பரம்பரையான வைரிகளும் இவனை வீரரென்பார்கட்கெல் லாம் முன்னிற்கும் வீரர் வீரன் என்று புகழ்கின்றனர். வீரரை வியவாதார் யார்? தேவர்கள் என்ன, அவனுடன் பொரும் இலக்குவனே 'இவனே டெஞ்சு மாண்டொழில் ஆற்றல்' என்று கூறுகின்றான். 'இளையவன் தனக்கு மாற்றுதென் பெருஞ்சேனை நம்ப' என்றும், 'சயஞ்செயின் உலக மூன்றும் இலக்குவன் முடிப்பன் தானே' என்றும் இந்த இலக்குவனை இராவணனும் இந்திரசித்தும் புகழ்ந்தாரில்லையா? இங்கு வீடணன் இந்திர சித்தின் போராற்றலை இளையவற்குக் கூறுங்கால் 'மெய்ப் பகலி னல்லால் இருளின் விளிகிலன் வெய்யோன்' என்று மொழிகின் றான். 'மற்றும் சிவபிரான் தந்த தெய்வத்தேரும் சிலையும் அவன் வசம் உள்ள வரையில் அவனைக் கொல்ல வியலாது என்றும் குறிக் கின்றான். இலக்குவன் அதனை ஓர்ந்து அவனுடைய தேரைச் சிதைக்கின்றான். இந்நிலையில் இந்திரசித்து விண்ணில் மறை கின்றான். அப்பொழுது அவன் கையைத் துணிக்கின்றான். இலக்குவன கை அறுபடவே அரக்கர்கள் திகைத்து நிற்கின்றனர். இலக்குவன் 'இராமபிரானே பரம்பொருளானால் இந்திரசித்தைக் கொல்க' என்று அம்பினை ஏவ, இராவணியின் தலை துணிந்து வீழ்கின்றது அரக்கர்கள் நிலைகுலைந்து நடுங்கினர். பெரும் பகைவனும் இந்திரசித்து மரித்தது கண்டு, 'எல்லோரும் தூசு வீசியேறிட வார்த்தபோது, கொல்லாத விரதத்தார் தங்கடவுளர் கூட்டம் ஒத்தார், (3106) என்று கவிஞர் பெருமான் நகைச்சுவைபட எழுதுகின்றார். இறந்த வாநரர்கள் கடவுள் அருளினால் உயிர் பெற்றெழுகின்றனர். துணிபட்ட இராவணியின் தலையினை அங்கதன் ஏந்தி முன் போக, அநுமன் தோள்மீது இலக்குவன் ஏறிச் செல்கின்றான். இந்தக் காட்சியைக் கண்டு இந்திரன் பொருமல் தீர்கின்றான். இவ்வாறு வாகைசூடிவந்த தம்பியை ஆனந்தக் கண்ணீருடன் பார்க்கின்றான் இராகவன்; தழுவிக் கொள்கின்றான். பின்னர், 'ஆடவர் திலக நின்னாலன்றிகலநு மனென்னும், சேடனாலன்று வேறோர் தெய்வத்தின் சிறப்பு மன்று, வீடணன் தந்த வெற்றி' என்று வீடணனை வாயாரப் புகழ்கின்றான் இராமபிரான். இதனை அடுத்து இராவணன் சோகப் படலம்.

இந்திரசித்து இறந்துபட்ட செய்தி இராவணன் செவியில் வீழ்கின்றது. சினத்தோடு எழுகின்றனன். பின், துன்பம் மீதூர இராவணனுடைய பத்துத் தலைகளும் தனித்தனி புலம்பு; கின்றன. பின்னர் போர்க்களம் புக்கு மகன் உடலைத் தேடு கின்றான். கைமட்டும் தென்படுகிறது. தலையைக் காணமல் வருந்துகின்றான். 'இழந்த வென் மதலையாக்கை, நரியுணக் கண் டேன் ஊணின் நாயுறும் உணவு நன்றால்' என்று அவலிக்கின்றான் இங்கு, 'புன்மக கேட்டி கேட்டற் குரியன' (யுத். 1625) என்ற செய்யுள் நினைவுகூரத்தகும். மேலும் புலம்புவானாய் 'நேரிழை யொருத்தி தன்னால், 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலா மிரங்கி யேங்கி, உனக்கு நான் செய்வதானேன் என்னின் யார் உலகத் துள்ளார்' (3158) என்று இரங்குகின்றான். இங்கு 'கரக்கு நுந்தைக்கு நீ செயக் கடவனகடன்கள், இரக்க முற்றுனக் கவன் செயும்' (யுத்த. 2441) என்ற இளைய பெருமாள் கூற்றினை நினைவு கூர்க. மிகவும் அவலச்சுவை நிறைந்த கட்டம். கும்பகன்னன் வதைக்கு 354 பாடல்களும், அதிகாயன் வதைக்கு 275 பாடல் களும் அமைத்த கம்பநாடர் 'வில்லாளரானார்க்கெல்லாம் முன் னிற்கும் வீரர் வீரன்' ஆன இந்திரசித்து வதைக்கு 69 பாடலே அமைத்தது ஏன் என்பது ஆராயத்தக்கது. கம்ப நாடர்க்கு இந்திரசித்தினிடம் மிகுந்த பிரேமையுண்டு என்பது 'இந்திர சித்தின் சென்னி யிற்றிடை வீழ்ந்த தென்றால், யந்திரமனைய வாழ்க்கை யினிச்சிலர் உகந்தென்' என்ற கூற்றைக் கொண் டுணர்க. எனவே அவன் இறப்பினை விரிக்க அவர் கருதினாரில்லை போலும். ஊர்க்குள் இராவணியின் உடலினைக்கண்டு அரக்கியர் பலவாறு அரற்றுகின்றனர். கண்களால் உகுத்த வெள்ளம் கருங் கடல் மடுத்தது. மயன் மகள் மண்டோதரி புலம்பல் அவலச் சுவையின் சிகரம் என்பர் அறிஞர். இங்குக் காணப் பெறும் 'கலையினால் திங்கள் போல வளர்கின்ற' (3166) என்ற பாடலும், 'தாளரி சதங்கை யார்ப்ப' (3168) என்ற பாடலும் 'அம்புலியம்மவா' (3169) என்ற பாடலும், சுவைத்துப் படிக்கத் தகும். மற்றும் தீர்க்கதரிசி போன்று, அந்தக் கற்பின் மிக்காள் 'சீதையென்றமிழ்திற் றேய்ந்த, நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளையித்தகையன் அன்றே' (3172) என்று புலம்புகின்றாள். இங்கு 'மாதரார் வடிவு கொண்ட, நஞ்சுதோயமுத முண்பான் நச்சினேன்' என்று இராவணனே கூறுதல் காண்க. (யுத். 1578). இங்கு இராவணன் சீதையை வெட்டுதற்குச் செல்ல

மகோதரன் தடுக்கிருன். இந்திரசித்தின் உடல் தைலத்தோணியி லிடப்படுகின்றது.

## இதனை அடுத்துப் படைக்காட்சிப் படலம்

இராவணன் கட்டளைப்படி பலவிடங்களிலும் உள்ள சேனைகள் இலங்கை நோக்கி வருகின்றன. தூதர்கள் இன்ன இன்ன தீவுகளி லிருந்து இன்ன சேனைகள் வந்தன என்றும் அவற்றின் ஆற்றல் இத்தகையது என்றும், வரன்முறை காட்டி இராவணனுக்குச் சொல்கின்றனர்; சேனு வீரர்கள் அனைவரும் இராவணனை வணங்கு கின்றனர். வந்தவர் வருந்துதற்குக் காரணம் என்ன என்று கேட்க, சீதை காதலிற் பிறந்துள பரிசெலாம் தெரிக்கின்ருன், அச் சேனுவீரரில் வன்னியென்பவன் தன் பெருமையைச் சாற்ரு மலிரான். மானிடரிருவரின் வன்மையை வரன்முறையாகக் கூறு கின்ருன். அவற்றை யுத்த 3220-லிருந்து 3118 வரை காண்க. பகைவரை வெல்ல அரக்கர் விடைகொண்டு செல்கின்றனர்.

## அடுத்து மூலபல வதைப் படலம்

வந்து குவிந்த சேனுதிபதிகளை நோக்கி இராவணன் இராம இலக்குவரைக் கொல்லுமாறு கட்டளையிடுகின்ருன். உடனே குவலய முழுதுந் தழுவி விண்ணையும் திசையையும் தடவு மத்தானை எழுகின்றது. இங்கு அவற்றின் வருணனை மிகவும் உயர்ந்த ரகமானது. எடுத்துக்காட்டாகச் சில காண்போம். 'அறத்தைத் தின்றருங் கருணையைப் பருகி வேறமைந்த, மறத் தைப் பூண்டு வெம்பாவத்தை மணம்புணர் மணளர் ;' 'தூண்டு வானுரு மேற்றினைச் செவிதொறுந் தூக்கி, மூண்ட வான்மழை யுரித்துடுத் துலாவரு மூர்க்கர்'; 'உண்ணும் தன்மைய வூன்முறை தப்பிடின் உடனே, பண்ணி னின்றமாலியானையை வாயிடும் பசியார், தண்ணினீர் முறைதப்பிடிற் றடக்கையாற் றடவி, விண்ணின் மேகத்தை வாரிவாய்ப் பிழிந்திடும் விடாயார்'; 'காலன் மால்சிவன் குமரனென் றிவரையும் கடப்பார்' என்பன காண்க. இம்மாபெருஞ் சேனையைக் கண்டு தேவர்கள் அஞ்சிச் சிவபிரானிடம் முறையிட, 'இராமபிரான் எல்லோரையும் கொல் வார் நீர் அஞ்சற்க' என்று கூறுகின்ருர். குரங்குகள் அனைத் தும் மூலபலத்தைக் கண்டு அஞ்சி ஓடுகின்றன. வீடணன் இப் பெரும் படை வந்தவெவ்வாறு என்று இராமபிரானுக்குக் கூறு

கின்றான். அஞ்சியோடிய வானரர்களை மீட்டும் அங்கதன் அழைத்து வருகின்றான். அவர்கள் அச்சம் நீங்கப்பெறுமல் கனியும் காய்களும் உணவுள முழையு ளகரக்க, மனிதராளிலென் னிராக்கத ஞளிமெனன் னவயம்' என்று கூறுகின்றனர். சாம்ப னும் அஞ்சியோடிய குரங்குகட்குப் பரிந்து பேசுகின்றான். மேலும், 'மாலியைக் கண்டேன் பின்னை மாலியவானைக் கண்டேன், கால நேமியையும் கண்டேன் இரணியன் தனையும் கண்டேன், ஆல மாவிடமும் கண்டேன் மதுவினை யனுமனேடும், வேலையைக் கலக்கக் கண்டேன இவர்க்குள முடுக்கும் உண்டோ' என்று கூறச் சாம்பனை அங்கதன் தேற்றுகின்றான். ஓடும் சேனையை மாருதி முதலியவரோடிருந்து காக்குமாறு இராமபிரான் இலக்கு வற்குக் கூறுகின்றான். 'மாருதியோடு நீயும் சுக்கிரீவனும் சேனை காக்கப் போருதி' என்று இராமபிரான் கூற, இலக்குவன் உடன் படுகின்றான். இலக்குவனுடன் அநுமனும் வீடணனும் செல்கின்றனர். சுக்கிரீவன் முதலானேரும் செல்கின்றனர். இராம பிரான் போர்க்குச் சென்று வில்லின் நாண் ஒலி செய்ததும், பல துன்னிமித்தங்கள் தோன்றுகின்றன. இருதிறத்தார்க்கும் பெரும் போர் நிகழ்கின்றது. இங்கு இராமபிரானுடைய அம்பின் செயலைக் கூறும் ஓர் அரிய பாடலைக் காணலாம்; அது, பின் வருமாறு: 'சொல்லறுக்கும் வலியரக்கத் தொடுகவசத் துகள் படுக்கும் துணிக்கும் யாக்கை, வில்லறுக்கும் தலையறுக்கும் மிட லறுக்கு மடலறுக்கும் மேன்மேல் வீசும், கல்லறுக்கு மரமறுக்கும் கையறுக்கும் செய்யமள்ளர் கமலத்தோடு, நெல்லறுக்கும் திருநாட னெடுஞ்சரமென் ருலவர்க்கு நிற்கலாமோ' (3334). இங்கு இராமபிரான் ஆற்றிய அரும்போர் சிறந்த சந்தத்தில் அமைந்தவை; யுத்த. 3336 முதல் 3352 வரைக் காண்க. அரக்கர் படையனைத்தும் இராமபிரானுடைய சரமாரியால் அழிந்துபடு கின்றன. படைத் தலைவரும் இராமபிரானும் பின் பொருகின் றனர். எல்லோரும் அஞ்சச் சிவபிரான், 'அஞ்சலினி யாங்கவர் கள் எத்தனைவ ராயிடினும் அத்தனைவரும், பஞ்சியெரி யுற்றதென வெந்தழிவ ரிந்தவுரை பண்டும் உளதால், நஞ்ச மமிழ்தத்தை நனிவென்றிடினு நல்லற நடக்குமதனை, வஞ்சவினை பொய்க் கருமம் வெல்லினு மிராமனை யம்மாயர் கடவார்' (3385) என்று சொல்லித் தேற்றுகின்றார். இங்கு 'இந்த உரை பண்டுமுளதால்' என்ற தொடரும், 'நல்லறம் நடக்கும்' என்ற தொடரும் ஆராயத் தக்கன. மீட்டும் கடும்போர் கூறும் 3392 முதல் 3401 வரையுள்ள செய்யுட்கள் பரணியிற் காணும் தாழிசைகள் போன்ற

ஒலியுள்ளன. போரில் இராவணனுடைய வாளியால் மூலபலம் கோடிப்பொழுதில் அழிகின்றது. பின்னர் பாதாளத்தினின்று வந்த படைகள் எதிர்க்கின்றன. அவர்களும் இராமபிரான் அம்பினால் அழிகின்றனர். சிவபிரான் முதலியோர் இராமபிரானுடைய வில்லாற்றலைக் கண்டு வியக்கின்றனர். பல அரக்கர்கள் தேவர் படைகளை விடுகின்றனர். அவற்றை இராமபிரான் தேவர் படைகளைக் கொண்டே துணித்து வீழ்த்துகின்றான். எல்லா அரக்கரும் அவிய பூமிதேவி பாரம் நீங்கப் பெறுகின்றாள். போர் முடிந்தவுடன் இராமபிரான் இலக்குவனிடம் செல்கின்றான்.

## இதனை அடுத்து வேலேற்ற படலம்

இராவணன் தேர் ஏறிப் போர்க்களம் செல்கின்றான். அவனுடன் நூறு கோடித் தேர்களும் இருநூறு கோடிக் குதிரைகளும், பத்துக் கோடி யானைகளும், இருபது கோடி காலாட்களும் செல்கின்றன. பெரும்போர் நிகழ்கின்றது. அரக்கர் சேனை நிலைகுலைகிறது. இராவணன் சீறி அம்புகளைவிட வானரசேனை நிலைகெடுகின்றது இலக்குவன் அநுமன் தோளின்மீது ஏறி இராவணனை எதிர்க்கின்றான். இராவணன் மோகனாத்திரம் விட இலக்குவன் திருமாலின் படையால் அதனை ஒழிக்கின்றான். இந்நிலையில் இராவணன் வீடணன்மீது வெகுண்டு மயன் தந்த வேலால் வீடணனைக் கொல்ல முயன்று, அதனை அவன்மீது ஏவுகின்றான். வீடணன் அதனைக் கண்டு அஞ்சியது கண்டு, இலக்குவன் அந்த வேலை ஏற்குமாறு செல்கின்றான். இலக்குவனைத் தடுத்து வீடணன் முன் செல்கின்றான். இருவரையும் விலக்கி அங்கதன் முன்னேறுகின்றான். அவனையும் விலக்கிச் சுக்கிரீவன் செல்கின்றான். அவனையும் விலக்கி அநுமன் முன் செல்கின்றான். இறுதியாக இலக்குவன் அந்த வேலைத் தன் மார்பில் ஏற்கின்றான். இத்தருணத்தில் வீடணன் கதையினால் இராவணனுடைய தேர்ப் பரிகளையும் பாகனையும் அழிக்கின்றான். வேலெறிந்த அளவில் இலக்குவன் இறப்பான் என்று நினைந்து இராவணன் போர்க்களத்தை விடுத்துச் செல்கின்றான். இலக்குவற்கு நேர்ந்த அவகேடு நோக்கி, வீடணன் இறக்கத் துணிகின்றான். அப்போது சாம்பவன் தடுத்து, 'அநுமனிற்க நாம் ஆருயிர்க் கிரங்குவ தறிவோ?' என்று கூற, அநுமன் மருந்து கொணர்ந்து இலக்குவனை உயிர்ப்பிக்கின்றான். இங்கு 'பொன் போல் வைத்தது வாங்கிக்கொண்டு வருதலில் வருத்தமுண்டோ'

என்று கவி கூறுகின்றார். உயிர் பெற்றெழுந்த இலக்குவன், 'துணுக்கமும் துயரும் நீங்கிக் கொழுந்தியும் மீண்டாள் பட்டான் அரக்கன் றுவகைகொண்டான். என்று எல்லோரும் ஒன்றுகூடித் 'தருமமென் றறிஞர் சொல்லும் தனிப்பொருள் தன்னை யின்னே, கருமமென் றநுமனுக்கிக் காட்டிய தன்மை கண்டால், அருமை யென் ராமர்க் கம்மா, அறம் வெல்லும் பாவம் தோற்கும்' என்று கூறி, இராமபிரானிடம் செல்கின்றனர். இராமபிரான் நிகழ்ந்த வற்றைக் கேட்டறிந்து, 'வீரன் அநுமனைத் தொடரப்புல்லிப், பெற்றனன் உன்னை யென்னை பெருதன பெரியோ யொன்றும், மற்றிடை யூறுசெல்லா வாயுளை யாதி' என்று வாழ்த்துகின்றான். இளவலை இராமபிரான் தழுவி அவன் இரவிதன் குலத்துக்கேற்ற, வளவினமடைந் தோர்க்காகி யன்னுயிர் கொடுத்த வண்மையைப் புகழ்ந்து பாராட்டுகின்றான். புறவின் பொருட்டாகத் தன் உடலை அரிந்த சிபி மன்னன்கூட இலக்குவனை ஒவ்வான் என்று கூறி, 'பேரருளாள ரென்பார், கறவையும் கன்றும் ஒப்பார் தமர்க்கிடர் காண்கில்' என்றான்.

### அடுத்து வாநரர் களங்காண் படலம்

இராமபிரானை வாநரத் தலைவர்கள் வணங்கி வீடணனோடு சென்று போர்க்களம் காண்கின்றனர். வீடணன் இறந்த சேனை களைச் சுட்டிக்காட்டி வருணிக்கின்றான். இங்கு நமரங்காள் காணீர், காண்மின் என்ற மகுடத்துடன் காணப்பெறும் பாடல்களில் பலவிதமான கற்பனைகளைக் காணலாம். பல உவமைகள் இவற்றில் காணப்படும். அனைவரும் கண்ணுற்றுத் தத்தம் இருக்கைக்கு ஏகுகின்றனர்.

### இராவணன் களங்காண் படலம்

மாருதி மருந்து கொணர்ந்து இலக்குவனை உயிர்ப்பித்ததை அறியாத இராவணன் தனது வெற்றியை நினைந்து மகிழ்கின்றான். போரில் தனக்குதவிய அனைவர்க்கும் விருந்தளிக்குமாறு பணிக் கின்றான். உடனே விண்ணுலகத்துப் போகப் பொருள்களுடன் தேவமாதர்கள் வருகின்றனர். எல்லோரும் விருந்துட்கொண்டு குதூகலமாக இருக்கின்றனர். இந்நிலையில் மூலபலம் அழிந்த செய்தியை அத் தூதர் இராவணனிடம் கூறி உண்டாட்டுக்குரிய காலம் அன்றென்று மொழிகின்றனர். இராவணன் திகைத்துப்

பின்னர் தூதர் கூறும் செய்தி பொய்யோ என்று நினைக்கின்றான். இலக்குவன் உயிர் பெற்றதும் அவன் காதில் விழுகின்றது. ஐயம் கொண்டு கோபுரத்தின் மீதேறிக் களத்தைப் பார்க்கின்றான். அரக்கியரின் அழுகையொலி கேட்கின்றது. பலவகையான அவலக் காட்சிகளை இலங்கேசன் காண்கின்றான். பார்த்துவிட்டு அரசாட்சி மண்டபத்தை இராவணன் அடைகின்றான்.

## இராவணன் தேரேறு படலம்

மரிந்த சேனைபோக எஞ்சிய சேனைகளைத் திரட்டுமாறு கட்டளையிட்டு இராவணன் போர்க்கோலம் கொள்கின்றான். இதன் வருணனையை 3538 முதல் 3596 வரையில் காணலாம். தான் கருதிய விடமெல்லாம் நொடியினிற் செல்லக்கூடியதும், அமுதுடன் தோன்றினவும், சூரியன் தேர்க்குதிரைகளின் மரபினில் வந்தனவும், வடவைத்தீயின் உதித்தனவும், வாயு தோற்றுதற்கு முன்னரே வந்து உதித்தனவும், பஞ்ச பூதங்களிலும் தடையின்றிப் படர்வனவும் ஆன குதிரைகள் பூட்டப்பெற்ற தேரில் ஏறி, 'மன்றலங்குழற் சனகிதன் மலர்க்கையான் வயிறு, கொன்றலந்தலைக் கொடுநெடுந் துயரிடைக் குளித்தல், அன்றி தென்றிடின் மயன்மகளத்தொழில் உறுதல், இன்றிரண்டி னொன்றுக் குவன் தலைப்படின்' என்று சூளுரைக்கின்றான். காட்சிக்கு உலகளந்தவன் போன்றே காணப்படுகின்றான். இவன் வரவை வீடணன் இராமபிரானுக்கு அறிவிக்கின்றான்.

இதனை அடுத்து இராமபிரான் தேரேறு படலத்தில், இராமபிரான் உடனே, மடக்கொடி துயர்க்கு நெடு வானினுறைவோர் தம், இடர்க்கடலினுக்கு முடிவின்றெனச் சொல்லிப் போர்க்கோலம் கொள்கின்றான். தேவர் சித்தர் முதலியோர் வாழ்த்துகின்றனர். இந்திரன் கட்டளைப்படி மாதலி தேர் கொணர்கின்றான். அத்தேர், 'மாதிரமனைத்தையு மணிச் சுவர்களாகக், கோதற வகுத்தது மழைக் குழுவை யெல்லாம். மீதுறு பதாகையென வீசியது மெய்ம்மைப், பூதமவை யைந்தின் வலியிற் பொலிவது' (யுத்த. 3625); 'வேதமொரு நாலு நிறை வேள்விகளும் வெவ்வே, றோதமவை யேழு மலையேழு முலகேழும், பூதமவை யைந்து மெரிமூன்று நனி பொய்தீர், மாதவமு மாவுதியு மைம்புலனு மற்றும்', 'அருங்கரணமைந்து சுடரைந்து திசை நாலும், ஒருங்கரண மூன்று முழல் வாயுவொரு பத்தும், பெரும்பகலு நீளிரவு மென்றிவை பிணிக்கும்,

பொரும்பரிகளாக நனி பூண்டது' (3628, 3629). இராமபிரான் வினவ மாதலி தேர் இந்திரனால் அனுப்பப்பட்டது என்று கூறி அதன் பல்வேறு பெருமைகளையும் உரைக்கின்றான். கேட்ட இராமபிரான் ஒருவேளை அரக்கரால் மாயமாக அனுப்பப் பெற்ற தேரோ என்று சிறிது ஐயுறவே, அதில் பூட்டப் பெற்ற மொய்யுளை வயப்பரி மொழிந்தமுது வேதம்; அந்நிலையிலும் ஐயம் சிறிது எஞ்சி நின்றதாக இராமபிரான், மாருதி இலக்குவனிடம் கூறி அவர்களின் கூற்றால் தெளிந்து தேர் ஏறுகின்றான்.

## இராவணன் வதைப் படலம்

தேர்கள் புறப்படப் பேரொலி யெழுகின்றது. இராவணன் மகோதரனிடம் இலக்குவனுடன் பொருமாறு கூறுகின்றான். ஆனால் மகோதரன் இராமபிரான் மீதே தேரை விடுமாறு பணிக்கின்றான். சாரதி எச்சரிக்கவும் கேளானாய் மகோதரன் போரில் முனைகின்றான். இராமபிரான் வாளியால் துண்டிக்கப்படுகின்றான். பின்னர் இராவணனுக்கும் இராமபிரானுக்கும் போர் நிகழ்கின்றது. அரக்கர் சேனை நீறுபட்டழிந்தன. அப்பொழுது இராவணனுக்குப் பல தீநிமித்தங்கள் உண்டாயின. உதிர மாரி பொழிகின்றது, கதிரவனை ஊர் கலக்கின்றது, சிலைகளின் நாண்கள் அறுந்தன; நல்ல மலர் மாலை புலால் மணம் கமழத் தொடங்கிற்று, அரக்கர் கோனுடைய வீணைக் கொடிமீது கழுகும் காகமும் மொய்க்கின்றன' குதிரைகளின் கண்களில் நீர் ததும்புகின்றது. இந்த கெட்ட சகுணங்களையும் பொருட்படுத்தாமல் இலங்கேசன் போர் தொடங்குகின்றான். இங்கு இருவர்க்கும் நிகழ்ந்த போரைக் 'கருமமும் கடைக்கண்ணுறு ஞானமும், அருமை சேரு மவிஞ்சையும் விஞ்சையும், பெருமைசால் கொடும் பாவமும் பேர்கலாத், தருமமும் மெனச் சென்றெதிர் தாக்கினார்' (3666) என்று கூறுகின்றனர் கவிஞர் பிரான். மற்றும் ஆதிசேடனும் கருடனும் பொருதது போலவும், நரசிங்கமும் இரணியன் பொருதது போலவும் பொருதனர். இராவணன் சங்கத்தை ஊதித் தொனிவிளைக்கத் திருமாலின் கரத்தில் உள்ள வலம்புரி தானே ஒலித்தது. திருமாலின் ஐம்படைகளான, சங்கு சக்கரம் கதை கட்கம் சார்ங்கம் என்பன ஏவற்பணி மேற்கொண்டு இராமபிரான் அண்டையில் வந்து நிற்கின்றன தேர்க் கொடிகள் ஒன்றோடொன்று மோதிக் கொள்கின்றன. இ. நிலையில் வெல்பவர் யார் தோற்பவர் யார் என்று அலமருகின்றனர். 3686 லிருந்து 3697 வரையில் போர் வருணனை இனிய

சந்தச் செய்யுட்களில் காணலாம். இருவர் தேர்களும் வானத்தேறிப் பறக்கின்றன. இராவணன் விடும் படைக்கலங்கள் அனைத்தையும் இராமபிரான் அழிக்கின்றான். இராமபிரான் தேரின் மீதிருந்த இடிக் கொடியை இராவணன் சிதைக்கின்றான. அந்த இடிக் கொடி கடலில் வீழ்கின்றது. அடுத்து மாதலியின் மார்பில் அம்பு விடுகின்றான். இராமபிரான் வருந்துகின்றான். இராவணன் இராமன் மேனியினையே சரக்கூடத்தால் மறைக்கின்றான். இராமபிரான் இலங்கேசன் மீது அம்புகளை எய்து அவன் தேரிலிருந்த வீணைக் கொடியைத் துணிக்கின்றான். இந் நிலையில் இராமபிரான் தேர்க் கொடியில் கருடன் வந்தமரவே தேவர்கள் கவலை தீர்கின்றனர். இராமபிரான் இராவணன் மீது தாமதாத்திரம் விடுகின்றான். பின்னர் சிவன் வாளியை ஏவுகின்றான். இராவணன் ஆசுராத்திரம் விடுகின்றான். அதனை இராமபிரான் அங்கிப் படையால் அறுக்கின்றான். மற்றும் இராவணன் விடுத்த பல படைகளையும் இராமபிரான் பிறைமுக அம்புகளால் சேதிக்கின்றான். இராவணன் மாயாத்திரத்தை விடுக்கின்றான், அதனை இராமபிரான் காந்தர்ப்பக் கணையால் துணிக்கின்றான். இராவணன் தண்டாயுதத்தை யெறிய இராமபிரான் அதனைத் தூளாக்கி விடுகின்றான். இச் சமயத்தில் இராவணன் மாயாத்திரம் விடுகின்றான். விடவே, இறந்துபட்ட இந்திரசித்தும் அவற்கிளையோரான அதிகாயன் கும்பன் நீலன் என்பவர்களும் பெருஞ் சேனைத் தலைவரும் பிறரும் உயிர் பெற்றெழுந்தனர் போன்று ஆரவாரிக்கின்றனர். கும்பகன்னனும், மூலப்படை முதலிய இறந்தவைகளும் சுருக்கிக் கூறின் ஆயிரம் வெள்ளமான அரக்கர் படைகளும் எத் திசைகளிலும் வந்து நிற்கின்றன. மற்றும் அரக்கர்கோன் விடுத்த அத்திரத்தினல் பூதங்களும் பேய்களும் தோன்றுகின்றன. தோன்றிய வீரர்கள் படைக்கலமேந்தி நிற்கின்றனர். இந்த அதிசயத்தைக் கண்ணுற்ற இராமபிரான் மாதலியை வினவுகின்றான். மாதலி அது மாயம் என்றுரைத்து 'வீக்குவாயயில் வெள்ளெயிற் றரவின் வெள்விடத்தை, மாய்க்கு மாநெறி மந்திரந் தந்ததோர் நொடியின் நீக்குவாயுனை நினைக்குவார் பிறப்பென நீங்கும்' (3762) என்று கூற, இராமபிரான், 'வரத்தினுயினு மாயையினுயினும் வலியோன் உரத்தினுயினு முண்மையினுயினு மோடத், துரத்தியாலென ஞானமாக் கடுங்கணை துரந்தான், சிரத்தினுன்மறையிறைஞ் சவும் தேடவும் சேயோன்' (3763). இவ்வாறு ஞானத்திரத்தை விடுத்த அளவில் 'துறத்தலாற்றுறு ஞானமாக் கடுங்கணை தொடர, அறத்தலாது செல்லாது நல்லறிவு வந்தணுகப், பிறத்த

லாற்றுறும் பேதமை பிணிப்புறத் தம்மை, மறத்தலாற் றந்த மாயையின் மாய்ந்தது மாயம்' (3764). இவ்வாறு அவன் மாயாத்திரம் ஒழிக்கப்பட்ட அளவில் இராவணன் சூலத்தை எறிகின்றான், இராமபிரான் பல சரங்களை அதன்மீது வீசுகின்றான். ஆனால் அவைகள் அதனை ஒன்றும் செய்யக்கூட வில்லை. இராமபிரானே திகைப்புறுகின்றான். சூலம் நெருங்கவே தனது உங்காரத்தால் அதனைத் தூளாக்குகின்றான் இராமபிரான். தேவர்கள் கொண்டாடுகின்றனர். இந் நிலையில் இராவணன், 'வென்றானென்றே யுள்ளம் வெயர்த்தான் விடுசூலம், பொன்றானென்னிற் போகல தென்னும் பொருள் கொண்டான், ஒன்றா முங்காரத்திடையுக் கோடுதல் காணா, நின்றானந்நாள் வீடணனார் சொல் நினைவுற்றான்' இங்கு, யுத்த. 69-ம் இராவணன் மந்திரப் படலத்து, வீடணன் இராவணற்குக் கூறும் அறவுரைகள் அறியத்தகும்.

இங்கு இராவணன் இராமபிரான் பொரும் திறம் கண்டு, 'சிவனோவல்லன் நான்முக னல்லன் திருமாலாம், அவனோ வல்லன் மெய்வா மெல்லா மடுகின்றான், தவனோ வென்னிற் செய்து முடிக்கும் தரனல்லன், இவனோதானவ் வேதமுதற் காரணன் என்னு மலைக்கின்றான்' உடனே ராசத குணம் மேலிட, 'யாரேனுந்தான் ஆகுக யானென் தனியாண்மை பேரேனின்றே வென்றி முடிப்பேன் பெயர்கில்லேன்' என்று வீரம் பேசுகின்றான். போர் மீட்டும் தொடங்குகின்றது. இராமபிரான் கருடாத்திரத்தினால் இராவணன் விட்ட நிருதிப்படையை எதிர்க்கின்றான். இராவணன் சிறிது தளர்கின்றான். இராமபிரான் ஊக்கி யெழுந்து இராவணன் தலையைத் துணிக்கின்றான். அஃது கடலிடைப்போய் விழுகின்றது. விழுந்த தலை மீண்டும் முளைத்து இராமனை அதட்டுகின்றது. இராவணன் தோளில் இராமபிரான் பதினான்கு அம்புகளைச் செலுத்துகின்றான். அறுபட்ட அரக்கர் கோனின் கரம் மீட்டும் முளைக்கின்றது. அற்ற தன் கையை மற்றொரு கையால் எடுத்து அரக்கன் மாதலிமீதெறிகின்றான். இராவணன் எறிந்த தோமரம் இராமபிரானால் துகளாக்கப்படுகின்றது. பின்னும் இராவணன் தலைகளை இராமபிரான் அறுக்கின்றான். அவை துணிபட்டுச் சிதறி வீழ்கின்றன. அறுபட்ட இராவணனுடைய சிரங்களின் கண்களைப் பேய்கள் தோண்டுகின்றன. இராவணன் மேனியெங்கும் இராமபிரான் தன் அம்புகளால் மூட அவன் நிலைகுலைந்து மூர்ச்சிக்கின்றான். மூர்ச்சித்த நிலையில் இராவணன் தேர்ப்பாகன் தேரைச் சிறிது விலக்கி

நிறுத்துகின்றான். இத்தருணத்தில் இராவணனைக் கொல்லு மாறு மாதலி தூண்ட இராமபிரான் 'படை துறந்து மயங்கிய பண்பினை, இடை தெறும்படி பார்த்திகல் நீதியின், நடை துறந்துயிர் கோடலு நன்மையோ, கடை துறந்தது போரென் கருத்து இது என்கின்றான். இங்கு 'ஆனையா வுனக்கமைந்தன' (யுத். 1210) என்ற பாடல் குறிக் கொள்க.

இந்நிலையில் உணர்வு வரப்பெற்ற இராவணன் தேரை விலக்கி நிறுத்தியதற்காகச் சீறி வலவனைக் கொல்லத் துணிகின்றான். அப்பொழுது சாரதியானவன், 'ஆண்டொழிற் றுணிவோய்நதனை யாண்டிறை. ஈண்ட நிற்றிடினையலை நின்னுயிர், மாண்ட தக்கண மென்றிடர் மாற்றுவான், மீண்டதித் தொழில் எம்வினை மெய்ம்மையால்' (3820); 'ஓய்வும் ஊற்றமு நோக்கி யுயிர்ப் பொறைச் சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால், மாய்வு நிச்சயம் வந்துழி வாளினற், காய்வு தக்க தன்றுற் கடை காண்டி' என்று மொழிகின்றான். இராவணன் இரக்கம் கொண்டு தேரைத் திருப்புமாறு பணிக்கின்றான். பணித்து இராமபிரான் மீது அம்பு விடுகின்றான். இராமபிரான் அதனை அறுக்கின்றான். பின்னர் இராமபிரான், 'நாரணன் திருவுந்தியின் நான்முகன், பார வெம்படை வாவியிப் பாதகன், மாரி னெய்வெனென்றெண்ணி வலித்தனன், ஆரியன் னவனுவியகற்றுவான்' (3831); இராகவன் விடுத்த அயன் படையால் இராவணன் உயிரிழக்கின்றான், அந்த வாளி அரக்கர் கோன் மீது பாய்ந்து அவனைக் கொன்றதை, 'முக்கோடி வாணுளு முயன்றுடைய பெருந் தவமு முதல்வன் முன்னாள், எக்கோடி யெவராலும் வெலப்படா யெனக் கொடுத்த வரமு மேனைத், திக்கோடு முலகனைத்தும் செருக்கடந்த புயவலியும் தின்றுமார்பிற், புக்கோடி யுயிர் பருகிப் புறம்போய், 'ஆர்க்கின்ற வானவரும் அந்தணரும் முனிவர்களும் ஆசி கூறித், தூர்க்கின்ற மலர்மாரி தொடரப் போய்ப்பாற் கடலிற்றூய் நீராடித், தேர்க்குன்ற விராவணன்றன் செழுங் குருதிப் பெரும்பரவைத் திரைமேற் சென்று, கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப் புட்டிலினடுவட் காந்தது'. பிரதாப லங்கேச்வரன் தலை கீழாக வீழ்கின்றான். மரித்த நிலையிலும் அவன் முகம் பொலிவுற்றிருந்தது. இராமபிரான் தேரினின்றும் இழிந்து இராவணனைக் கண்ணுறுகின்றான். தேரைத் திருப்பி விண்ணுலகம் கொண்டு செல்லுமாறு மாதலிக்குக் கூறுகின்றான். இராவணனுடைய தலை முதலிய உறுப்புக்களில் ஏறிக் குரங்குகள் கூத்தாடுகின்றன. இராவணன் மார்பில் பாய்ந்த திக்கயங்களின்

தந்தம் முதுகில் அணி போன்று விளங்கியதை இராமபிரான் பார்க்கின்றான். அந் நிலையில் வெற்றி தனதேனும் அது சிறப்புடையதன்று என்று புகல்கின்றான். இராவணன் முதுகிற் பட்டிருந்த தழும்பு அவனைக் கவலச் செய்தது. முன்னர் கார்த்தவீரியனால் கட்டுண்டான். அஃது ஒன்றே யமையும் இவனுடன் பொராமைக்கு. அதன் மேலும் அவன் முதுகினில் தழும்பும் காணப்படுகின்றது என்று வருந்துகின்றான்; வருந்தி, 'ஆண்டொழி லோரிற் பெற்ற வெற்றியும் அவத்தம்' என்ற முடிவுக்கு வருகின்றான். அப்பொழுது வீடணன், இராமபிரானை நோக்கி, 'ஆயிரம் தோளினானும் வாலியு மரிதினைய, மேயின வென்றி விண்ணோர் சாபத்தின் விளைந்த மெய்ம்மை, தாயினும் தொழத் தக்காள்மேல் தங்கிய காதல் தன்மை, நோயு நின் முனிவுமல்லால் வெல்வரோ நுவலற் பாலார்' (3850); என்று கூறித் தெளிவிக்கின்றான்.

இதன்பின் இராவணனிடம் பகைமையை விடுத்து அவனுக்கு ஈமக் கிரியை செய்யுமாறு வீடணனைப் பணித்து, இராமபிரான் தன்னைக் காணவந்த தேவர்களைக் காணச்செல்கின்றான். இங்குதான் 'மரணாந்தானி வயிராணி' என்று முதனூல் கூறுகின்றது. வாலி வீழ்ந்து அழுதற்கும் இங்கு இராமபிரான் கட்டளையின்பேரில் வீடணன இராவணனிறந்ததற்காக அழுதற்கும் உள்ளவேற்றுமையை ஆராய்ந்தறிக. இங்கு, 'உண்ணாதே யுயிருண்ணும்' (3859) என்று தொடங்கும செய்யுளிலிருந்து (3865) வரையில் வீடணன் விலாபம் மிகச் சிறந்த கருத்துக்கள் பொதிந்தவை, 'இராகவனாற் புய வலியை யின்றறிந்து போயினையே' 'இன்றுதா னுணர்ந்தனையே யிராமனாரியாவர்க்கும் இறைவனாதல்', 'கொல்லாத மைத்துனனைக் கொன்றா யென்றது குறித்துக் கொடுமை சூழ்ந்து, பல்லாலே யிதழுக்கும் கொடும்பாவி நெடும்பாரப் பழி தீர்ந்தாளோ, நல்லாரும் தீயாரும் நரகத்தார் சொர்க்கத்தார் நம்பி நம்மோடெல்லாரும் பகைஞரே யார்முகத்தே விழிக்கின்றா யெளியையானாய்', 'போர் மகளைக் கலை மகளைப் புகழ் மகளைத் தழுவிய கை பொறுமை கூரச், சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந் தெரிவரிய தெய்வக் கற்பின், பேர் மகளைத் தழுவுவானுயிர் கொடுத்துப் பழி கொண்ட பித்தா பின்னைப், பார் மகளைத் தழுவினையோ திசையானை மருப்பிறுத்த பணைத்த மார்பால்' என்ற பாடல்கள் குறிக் கொள்ளத்தக்கன.

இவ்வாறு ஏங்கி யழுத வீடணனைச் சாம்பன் தேற்றுகின்றான். இந் நிலையில், மண்டோதரி தலைவிரி கோலமாகக் களத்துக்கு வருகின்றாள். அரக்கியர்கள் பலவாறு வருந்தி யழுகின்றனர். மயன் மகள் விலாபத்தை 3877 முதல் 3884 வரை காணலாம். இங்கு, 'வெள்ளெருக்கம் சடை முடியான் வெற்பெடுத்த திருமேனி மேலும் கீழும், எள்ளிருக்கும் இடனின்றி யுயிரிருக்கும் இடம் நாடி யிழைத்தவாறோ, கள்ளிருக்கு மலர்க் கூந்தற் சானகியை மனச் சிறையிற் கரந்த காதல், உள்ளிருக்கும் எனக் கருதி யுடற் புகுந்து தடவியதோ வொருவன் வாளி', 'காந்தையருக் கணியனைய சானகியார் பேரழகுமவர் தங்கற்பும், ஏந்து புயத் திராவணனார் காதலுமச் சூர்ப்பணகை யிழந்த மூக்கும், வேந்தர்பிரான் தயரதனார் பணியினால் வெங்கானில் விரதம் பூண்டு, போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்றம்மா' என்ற பாடல்கள் சிறந்த கருத்தமைந்தனவாம். இவ்வாறு அழுது அரற்றி மண்டோதரி தன் கணவன் உடலைத் தழுவி உயிர் விடுகின்றாள்; எந்தவிதமான களங்கமும் காணப் பெறாதவள் இப் பெண்ணரசி.

நிற்க இராவணனுக்கு நீர்க்கடனும் தீக்கடனும் செய்யப் படுகின்றன. மயன் மகளையும், ஈமத்தேற்றி ஈமக் கடனை முடிக்கின்றனர். அந்திமக் கடன்களை ஆற்றி வீடணன் இராமபிரானை அடைகின்றான்.

## இனி மீட்சிப் படலம்

'மீட்சி யென்பது இராமன் வென்றானென, மாட்சியில் இராவணன் தோற்றமை மதித்தல்' என்பது புறப்பொருளிலக்கணம்.

இராவணன் வதம் முடிந்தது. இராமபிரான் இலக்குவனை நோக்கிச் சுக்கிரீவன் முதலிய வானர வீரருடன் சென்று வீடணற்கு முடி சூட்டுமாறு பணிக்கின்றான். வானவர்கள் வீடணன் அபிடேகத்துக்கு வேண்டுவன செய்கின்றனர். பல இடங்களிலிருந்து புண்ணிய தீர்த்தங்கள் கொணரப் படுகின்றன. பிரமன் கட்டளையை யேற்று மயன் ஓர் சிறந்த மண்டபத்தை நிருமாணம் செய்கின்றான். இலக்குவன் வீடணனுக்கு முடிசூட்டுகின்றான். தேவர்கள் பூமாரி பொழிந்து வாழ்த்துகின்றனர். தன்னை வந்து வணங்கிய இலங்கைக்

கோமானை நோக்கி, 'உரிமை மூவுலகும் தொழ வும்பர்தம், பெருமை நீதியறன்வழிப் பேர்கிலாது, இருமை யேயரசாளுதி யீறிலாத், தரும சீல என்றான் மறை தந்துளான். பின்னர் இராமபிரான் அநுமன் மூலமாகப் பிராட்டிக்கு வெற்றிச் செய்தி தெரிவிக்கின்றான். அநுமன் சீதா தேவியைப் பார்த்துப் 'பாடினான் திருநாமங்கள் பன்முறை' பின்பு, 'ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்' என்று சொல்லி மகிழ்கின்றான். அவனைக் கண்ணுற்ற பிராட்டி, 'இனைய தின்ன தியம்புவ தென்பதோர் நினைவிலா திருந்தாள்' அப்பொழுது, 'யாதிதற்கொன் றியம்புவல் என்பது மீதுயர்ந்த வுவகையின் விம்மலோ, தூதுபொய்க்கு மென்றோ' என அநுமன் சொல்லினான். இதைக்கேட்ட பிராட்டி, அநுமனை நோக்கி, 'உலக மூன்றும் உதவற் கொருதனி, விலையிலாமையும் முன்னினன் மேலவை, நிலையிலாமை நினைந்தனன் நின்னையென், தலையினாற்றொழுவே தகுந் தனிமையோய்' என்று புகழ்ந்து 'வேத நன்மணிவேகடஞ் செய்தன்ன தூத வென்னினிச் செய்திறம்' என்று கேட்க, அநுமன் அரக்கியரை வினையிற் சுடவேண்டுமென்று கேட்கின்றான். இவன் சொற்களைக் கேட்ட அரக்கியர் பிராட்டியைச் சரணடைகின்றனர். அப்பொழுது சீதா தேவி, அரக்கிமார்க் கபயம் அளித்து, மாருதி மாமுக நோக்கி வேறு, 'என்ன தீமையிவரிழைத்தார் அவன் சொன்ன சொல்லினதல்லது' என்றும், 'கூனியிற் கொடியாரலரே' என்றும் கூறி, 'சழக்கியர் மனக்கு நோய் செயல்' என்றனள். இங்குப் பிராட்டியின் அளவு கடந்த கருணையைக்காணலாம். அநுமன் அவருடன் தண்ணருளை மெச்சி நின்றபோது, இராமபிரான் தேவியைச் சீரொடும் அழைத்து வருமாறு பணிக்கின்றான. வீடணன் சென்று 'வேண்டிற்று முடிந்ததன்றே வேதியர் வேதனின்னைக் காண்டற்கு விரும்புகின்றான்; பூண்டகக் கோலம் வல்லை புனைந்தனை வருத்தம் போக்கி, யீண்டுக்கொண்டணைதி என்று சொன்னான், என்று கூறி எழுந்தருள வேண்டுகின்றான். பிராட்டி கோலம் கொள்ள இயைய வில்லை. பின்னர் இராமபிரான் கட்டளை யெனவே தன்னைப் புனைந்து கொள்கின்றாள். தேவமாதர்கள் பற்பலவாகக் கோலம் செய்கின்றனர். அளவிறந்த தேவமாதர்களும் பிறரும் பிராட்டியைச் சூழ்ந்து வருகின்றனர். பேராரவாரம் எழுகின்றது. அவர்களை ஒறுக்கின்றான் வீடணன். இராமபிரான் அதுகேட்டு வீடணனைக் கடிகின்றான். வீடணன் நிலைகுலைகின்றான். இங்கு அநுமன் புரிந்த உதவியைக் பிராட்டி பாராட்டுமுகமாகச் சீலமும் காட்டி யென்கணவன் சேவகக், கோலமுங் காட்டிய கவிக்கு நாளருச்

காலமும் காட்டுங்கொல் என்றன் கற்பு என்று' கூறுகின்றாள். அடுத்துப் பிராட்டி இராமபிரானைத் தரிசிக்கின்றாள், தொழுது கவலை ஒழிகின்றாள். இந்தக் கற்பினுக்கரசினைப் பெண்மைக் காப்பினைப், பொறப்பினுக் கழகினைப் புகழின் வாழ்க்கையைத், தற் பிரிந்தருள்புரி தருமம் போலியை, அற்பினத் தலைவனும் அவளைய நோக்கிப் பலவாறு கடிந்து பேசுகின்றான். கடல் தாண்டி இலங்கை வந்தது அவளை மீட்கவல்ல வென்றும் தன் மனையாளை ஒருவன் கவர்ந்து செல்ல அவளை மீட்க முயலாமல் பேடியொத்திருந்தானே இராமபிரான் என்றும், உலகப்பழிக்குமே என்பதற்காக வந்ததாகக் கூறுகின்றான். குலத்தினிற் பிறவாமல் கோளில் கீடம் போல், நிலத்தினிற் பிறந்தமையை நிருபித்ததாகவும் பலவாறு ஏசு கின்றான். இராமபிரானுடைய நாராசம் போன்ற சொற்களைக் கேட்டு யாவரும் கலங்குகின்றனர். பெரும் பாலைவனத்தில் நீர் நசையாற் வந்து நீர் நிலையைக்கண்டு அதில் இருந்த நீரைப் பருக முடியாத நிலையை அடைந்த ஓர் மானைப்ப மனம் உளைகின்றாள். இலங்கை வந்து தனது அவச நிலையைக் கண்டு மீண்ட மாருதி தன்னைக் குறித்து ஒன்றும் சொன்னானில்லையோ என்று முன்னர் ஐயுறுகின்றாள். திருமூர்த்திகளும் மங்கையின் நிலையை உணரவல்லர் அல்லர் என்று கூறிச் சாதலே சிறந்தது என்ற முடிவுக்கு வருகின்றாள். முன்னர்ச் சுந்தர காண்டத்தில் கணவனைப் பிரிந்தயர்ந்த நிலையில் பலவாறு சிந்தித்து, 'ஆதலா னிறத்தலே யறத்தின் ஆறு' என்ற முடிவுக்கு வந்த பிராட்டி, இங்கு சாகத் துணிகின்றாள். இராமபிரான் சிறிது மனமிரக்க மின்றி இளையவனை நோக்கித் தீயமைக்கச் சொல்கின்றான். தீ மூட்டப் பெறுகின்றது. அதனை அணுகி நின்று, உலகில் பல உற்பாதங்கள் நிகழத் தேவரும் பிறரும் வருந்தப் பிராட்டி மனத் தினால் வாக்கினான் மறுவுற்றிருப்பின் சினத்தினால் சுடுமாறு தீச் செல்வனை வேண்டுகின்றாள். இங்கு மனம் வாக்கினைக் கூறிக் காயத்தைக் கூறாதது கொண்டு பிராட்டிக்குச் சிறிது குறை கற்பிப்பர் சிலர். காயம் உபலக்கணத்தாற் பெறப்படும். தீப்புகு கின்றாள். புகுந்த அளவில் சீதா தேவியின் கற்புத் தீயினால் எரிகின்ற தீயானது தீய்க்கப்படுகின்றது. பொறுக்க மாட்டாமல் அங்குக் கடவுள் பிராட்டியை ஏந்திக் கொண்டு இராமபிரான் முன்னர் வந்து முறையிடுகின்றான். இராமபிரான் அவனை யார் என்று வினவ அங்கிக் கடவுள் 'வேட்பது மங்கையர் விலங்கினா ரெனிற், கேட்பதும் பல்பொருட் கையங்கெடற மீட்பதுமென் வயினென்னு மெய்ப்பொருள், மறைகள் சொல்லும்' என்று

பகர்ந்து பிராட்டி களங்கம் அற்றவள் என்று கூற, இராமபிரான் அவளை ஏற்கின்ருன். இச்சமயத்து இராமபிரானுடைய உண்மைச் சொரூபத்தைப் பிரமன் எடுத்துரைக்கின்ருன். அதனை (3991-4001)ல் காண்க. சொன்ன நான்மறை முடிவினிற் றுணிந்த மெய்த் துணிவு அவனே என்றும் பிரகிருதி யென்றும் யாதினும் பழையவன் என்றும் எல்லாவற்றிற்கும் அவனே பரம் என்றும் அதனை உணர்ந்தவர் வினைத்துவக்குடை மீட்டரும் தளைநின்று மீள்வர் என்றும், எல்லா வுயிர்க்கும் அவன் சரணமல்லது வேறு சரணில்லை யென்றும், தோற்றக் கேடுகள் அவனுக்கில்லை யென்றும், படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று தொழில் களையும் ஆற்றுபவன் அவனே என்றும், ஓங்காரப் பொருள் தேடு வோர் தாம் அவனை உணரக்கூடும் என்றும் கூறி, மனையின் மாட்சியை வளர்த்த அன்னை போல்வாளான சீதாதேவியை வெறுத்துக் கடிதல்வேண்டாம் என்றும் கூறி முடிக்கின்ருன். இந் நிலையில் சிவபிரான் இராமபிரானைப் பார்த்துச் சீதாதேவி திருமகள் அன்றி வேறல்லள் என்றும், அவளைத் துறப்பது அறம் அன் றென்றும் கூறுகின்ருர். பின்னர்ச் சிவபெருமான் வீட்டின்பம் எய்தி நின்ற தயரதனை விளித்துப் பூவுலகம் சென்று, இராம பிரானைத் தெளிவிக்குமாறு பகரத் தயரதன் வந்து இராமனை நோக்கி, 'அன்று கேகயன் மகள் கொண்ட வரமெனு மயில்வேல், இன்றுகாறு மென்னிதயத்தினிடை நின்றதென்னைக், கொன்று நீங்கலதிப்பொழு தகன்றதுன் குலப்பூண், மன்றலாக மாங்காந்த மாமணியின்று வாங்க' என்று கூறிவிட்டுச் சீதாபிராட்டியினிடம் செல்ல, அவள் பணிகின்ருள். அப்பொழுது அவளைப் பார்த்துத் தயரதன், 'நங்கை மற்றுநின் கற்பினை யுலகுக்கு நாட்ட, அங்கி புக்கிடென் றுணர்த்திய வதுமனத் தடையேல், சங்கையுற்றவர் பெறுவது முண்டது சாதம்' என்று உலகியலைக் கூறிக் 'கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருத வேண்டாம் என்றும், சொல்லி, அவளுக்கு ஆறுதல் கூறிப் பின்னர் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுகின்ருன். பின்னர் இராமபிரானை நோக்கி அவன் வேண்டுவதியாதெனப் பெருமாள தீயவளென்றவன் துறந்ததன் தெய்வமும் மகனும் தனக்குத், தாயும் தம்பியும் ஆம் வரம் தரு கெனத் தாழ்ந்தான். தயரதன் பின்னதை ஏற்று மற்ருென்றை ஏற்க மறுக்கின்ருன். கைகேயி அவனைப் படுத்திய பாடு கல் லறையையும் கடந்து நின்று அவனை வருத்தியதால் அங்ஙனம் மொழிந்தான். இராமபிரான் மீண்டும் வேண்டச் சினம் தணிகின் ருன். தயரதன் மகிழ்ந்து வீட்டுலகிற்கு மீண்டும் ஏகுகின்ருன்.

பின்பு இராமபிரான் வேண்டத் தேவர்கள் வானரர்களின் பொருட்டு வரம் அளிக்கின்றனர். அவர்களின் ஆசியால் மரித்த வானரங்கள் உயிர் பெற்றெழுகின்றன.

இந்நிலையில் தேவர்கள் இராமபிரானை நோக்கி அவன் வாக்களித்தபடி அயோத்தி சென்று, பரதனைச் சந்திக்கும் காலம் வந்தது என்று கூற, வீடணன் விமானம் உண்டென்று நினைவூட்டப் புட்பகம் வருகின்றது. அதில் இராமபிரானும் பிராட்டியும் இலக்குவனும் ஏறுகின்றனர்; அப்பொழுது வீடணன் முதலியோரை நோக்கி அவரவருடைய இடங்கட்குச் செல்லலாம் என்று பகர, அவர்கள் தத்தம் ஊர்க்குச் செல்ல மனமின்றி இராமபிரான் முடிசூட்டினைக் காண விழைவதாகப் பகர்கின்றனர். இராமபிரானும் மகிழ்ந்து அனைவரையும் விமானத்தில் ஏறுமாறு பணிக்கின்றான். இராமபிரான் கட்டளையால் வானரர்கள் அனைவரும் மனிதவடிவம் பெறுகின்றனர். புட்பகம் வடக்கு நோக்கிச் செல்லுகையில் வழியில் உள்ள பல இடங்களையும் பிராட்டிக்குக் காட்டிச் செல்கின்றான். நளன் முதலானோர் கட்டிய சேது அணுகவே அதன் பல்வேறு பெருமைகளையும் புனிதத் தன்மையையும் பற்றிக் கூறுகின்றான். பின்னர் வருணன் சரணடைந்த இடம் திருமாலிரும் சோலைமலை, திருவேங்கட மலை முதலியன காட்டி ஏகும்போது, கிட்கிந்தையைக் காட்டுகின்றான். அதனைக் கண்ட சீதாதேவி வானர மகளிரையும் உடன் அழைத்துச் செல்ல விழைகின்றாள். சுக்கிரீவன் கட்டளைப்படி அநுமன் அம்மகளிரை அழைத்துவர அவர்களும் விமானத்தேறுகின்றனர். வாயுவேகம் மனோவேகத்தில் விமானம் செல்கின்றது. தண்டகவனம், சித்திர கூடம், பரத்துவாசர் ஆசிரமம் என்ற இவைகளையும் காட்டுகின்றான். பரத்துவாச முனிவன் இராமபிரானை எதிர்கொள்கின்றான். தன் ஆச்சிரமத்தின் உள் அழைத்து ஆதித்யம் செய்கின்றான். பெருவிருந்து நடைபெறுகின்றது. திரிகால ஞானியான அந்த முனிவன் பரதாழ்வானின் நிலைமையை எடுத்துச் சொல்கின்றான்; உடனே இராமபிரான் அநுமனைப் பரதனிடம் அனுப்புகின்றான். அவன் தன் தந்தை போன்றும், இராமபிரான் வில்லினின்றெழும் அம்புபோன்றும் விரைந்து படர்கின்றான். புட்பகமும் எழுந்து செல்கின்றது, நிற்க அயோத்தியாபுரியில், இராமபிரான் திருவடி நிலையைச் சிரமேற்கொண்டு சென்ற நாள் முதல் காய்கனிகளையே நுகர்ந்து தென்றிசையல்லது பிற திசைகளை நோக்காமல், அன்பு வடிவான பரதாழ்வான் இராம

பிரான் வரவேண்டிய நாள் யாதென்று அறிஞரைக் கேட்க அவர்கள் 'ஆண்டகைக் கின்றறுதி' யென்கின்றார். பின்பு இராமபிரான் குறித்தபடி வாராதது கண்டு பலவாறு எண்ணி இறக்கத் துணிகின்றான். சத்துருக்கினனை நோக்கித் தீயமைக்கு மாறு கூறி அரசியலை ஏற்குமாறும் வேண்டுகின்றான். இங்கு சத்துருக்கினன் கூறும் 'கானுள நிலமகளைக் கைவிட்டு' என்ற கவியும், 'மன்னிற் பின்' என்று தொடங்கும் கவியும் அவனுடைய அரிய பண்புகளையும், இராமபிரான்மீது அவன் வைத்திருந்த பேரன்பினையும் காட்டும். தீப்பாயத் துணிந்தமை நோக்கிக் கோசலை ஓடோடியும் வந்து 'எண்ணில் கோடியிராமர்கள் என்னினும், அண்ண னின்னருளுக்கருகாவரோ, புண்ணியம் என்னும் நின்னுயிர் போயினால், மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ' என்று சொல்லி விலக்குகிறாள். பரதன் அவள் சொல்லையும் மறுக்கின்றான். இந்நிலையில் மாருதி வந்து மூட்டப் பட்ட தீயை அவித்து இராமபிரானும் அவன் உடன் வருவோரும் பரத்துவாசன் ஆச்சிரமத்தில் விருந்தயர்கின்றார்கள் என்றும், சீக்கிரம் வந்துவிடுவார் என்றும் மொழிகின்றான். மற்றும் பரதனுக்கு நம்பிக்கை உண்டாகுமாறு இராமபிரானுடைய கணையாழியையும் காட்டுகின்றான். பரதன் அதைக் கண்டு பெருமகிழ்ச்சி கொள்கின்றான். வேதியரைத் தொழுகின்றான் வேந்தரைத் தொழுகின்றான். தாதியரைத் தொழுகின்றான். தன்னைத் தானே தொழுகின்றான். பின்னர் பரதன் அநுமனை யார் என்று கேட்க அநுமன் தன் வரலாற்றினைப் பகர்ந்து விசுவரூபம் கொள்கின்றான். அனைவரும் அஞ்சவே பழைய உருவுடன் நிற்கின்றான். பரதன் அயோத்தி நகரை அலங்கரிக்குமாறு கட்டளையிடுகின்றான். நகரம் அலங்கரிக்கப் படுகின்றது. பலரும் இராமபிரானை எதிர்கொள்ளச் செல்கின்றனர். தாயரும் பரதனும் செல்கின்றனர். செல்லும்கால் பரதாழ்வான் வினவ, சித்திரகூடத்திலிருந்து இராமபிரானும் பிராட்டியும் இலக்குவனும் புறப்பட்டதிலிருந்து இராவணன் வதை வரையில் நிகழ்ந்த அனைத்து நிகழ்ச்சிகளையும் பகர்கின்றான்; பரதன் கங்கைக்கரையை அடைகின்றான். மீண்டும் இராமபிரான் வராமை கண்டு ஐயுற்று மாருதியை வினவுகின்றான். அநுமன் பரத்துவன் விருந்துண்டு அயர்ந்த நிலையில் சிறிது தாழ்த்தது, என்றும் இராமபிரான் வருவது உறுதி என்றும் கூறித் தெளிவிக்கின்றான். இங்கு குகன் தன் சேனையொடும் இராமபிரானைக் காண வருகின்றான். இராமபிரான் சுக்கிரீவாதியர்க்குக் குகனை அறிமுகம் செய்விக்கின்றான். உதயமாகவே

இராமபிரான் விமானமேறிச் செல்கின்றான். அயோத்தி நகர் அணுகவே முத்திதரும் நகர் ஏழனுள் ஒன்றான அந்நகரத்தை எல்லோரும் வணங்குகின்றனர். பரதன் இராமபிரானைக் காண்கின்றான். விமானம் கீழ் இறங்குகின்றது. இராமபிரானைக் கண்ட அயோத்தி நகர் வாசிகள் பேருவகை கொள்கின்றனர். வசிட்ட முனிவன் முதலியோரும் விமானத்து ஏறுகின்றனர். வசிட்ட முனிவனை எல்லோரும் வணங்க அவன் ஆசி கூறுகின்றான். பின்னர் கைகேயியை முன்னம் வணங்கி ஏனைய தாய்மாரை வணங்குகின்றான். இராமபிரான் பிராட்டியும் இலக்குவனும் அந்த முறையிலேயே பணிந்து நிற்கின்றனர். பரதன் இலக்குவனைத் தழுவ 'தனிமை நீக்கிக் காடுறைந் துலைந்த மெய்யோ கையறு கவலை கூர, நாடுறைந் துலைந்த மெய்யோ நைந்தது' என்று உலகம் நைந்து கூறுகின்றது. இராமபிரான் தன்னுடன் வந்தவர்களைப் பரத சத்துருக்கினருக்கு அறிமுகம் செய்விக்கின்றான். பரதன் அவர்கட்கு முகமன் கூறுகின்றான். இந்நிலையில் சுமந்திரன் அமைச்சர் முதலானோருடன் இராமபிரானைக் காண வருகின்றான். பின்னர் புட்பகம் நந்திக் கிராமத்தை அடைகின்றது

## திருமுடி சூட்டுப் படலம்

இராமபிரான் சடாபாரத்தை நீக்கி நீராடி அலங்கரித்துக் கொள்கின்றான். தம்பிமார்கள் பணியியற்றப் பெருமான் தேர் மீதேறிச் செல்கின்றான். முடிசூட்டில் பரதன் பிடிக்கும் ஒற்றை வெண் கொற்றக் குடையை இலக்குவன் பிடிக்கின்றான். சத்துருக்கினன் கவரி வீசப் பரதன் உளவுகோல் பற்றப் பவனி செல்கின்றான். வீடணன் முதலானோரும் வானரர்களும் உடன் செல்கின்றனர். பதினெண் பூமி மன்னரும் இராமபிரானை வணங்கிச் சூழ்ந்து செல்கின்றனர். வானர மகளிர் புடைசூழத் தாரகைத் தொகுதிகள் மதிலைச் சுற்றிச் சென்றது போன்று, பூநிற விமானம் தன்மேலும் மிதிலை நாட்டன்னம செல்கின்றாள். தேவரும் முனிவரர்களும் பூமாரி பொழிகின்றனர். இராமபிரான் தாய்மார் முதலானோரை முறைப்படி வணங்குகின்றான். அயோததி நகரே மகிழ்ச்சியில் திளைக்கின்றது. மகிழ்ச்சி மீதேறத் தாம் செய்வதின்னதென்று அறியாது, 'வேசியர் உடுத்த கூறை வேந்தர்கள் சுற்ற வெற்றிப், பாசிழை மகளிராடை யந்தணர் பறித்துச் சுற்ற' என்று நகைச்சுவைப்படப் பாடுகின்றார். இங்கு பரதன் மகிழ்ந்ததாகக் கூறிய, 'வேதியர் தமைத்தொழும் வேந்தரைத் தொழும்'

(4139) என்ற பாடல் குறிக்கொள்ளத் தகும். தான் விரும்பியதற்கிணங்க இரணியன் அரண்மனைத் தூணிலிருந்து செங்கட் சீயம் சிரித்த அளவிலே, ஆடிப்பாடி அரற்றிச் சிரத்திற் செங்கை சூடித் தொழுது ஓடி உலகெலாம் துள்ளித் துகைத்த பிரகலாதன் போன்று விளங்கினான் பரதன். இந் நிலையில் விருந்தாக முடி சூட்டினைக் காண வந்த விடணனுதியர்க்கு அரண்மனையின் பல் வேறு பாகங்களையும் காட்டுமாறு இராமபிரான் பரதனுக்குக் கட்டளையிட, அன்னான் நாயகக் கோயிலுக்கு அழைத்துச் செல்கின்றான். இந்த நாயகக் கோயிலைச் சிலர், தேவ குலம் என்றே கொள்வர். எனினும், அரண்மனையிலேயே பூசை மாடத்தைத் தன்னகம் கொண்டுள்ள ஆடக மாடம் ஒன்றுண்டு. அதன்கண் அழைத்துச் சென்றனர் என்க. இங்கு, 'ஆடக மாடம் கடந்தறியாதவென் ஆரணங்கே' என்ற இறையனாரகப் பொருளின் கலித்துறை மேற்கோள் காணத்தகும். பாதன் நாயகக் கோயிலின் வரலாற்றினைப் பகர்கின்றான். திருமுடி சூட்டிற்காகப் பல புண்ணிய நதிகளினின்றும் தீர்த்தம் கொணர்கின்றான் காலின் தோன்றல். வசிட்ட முனிவன் வருகின்றான். அவனை அனைவரும் வந்தனை புரிகின்றனர். திருமுடி சூட்டு நாள் நாளை என்கின்றான் முனி புங்கவன். நாளும் ஓரையும் ஆராய்ந்து ஓலை தீட்டி அனைவர்க்கும் அனுப்புகின்றனர். 'முடி சூட்டிற்காக மூன்றுலகத்தவரும் அயோத்தியில் வந்து தங்கினர். முடி சூட்டின் முன்னர் நிகழ வேண்டிய பூர்வாங்கங்கள் நடைபெறுகின்றன. பிரமதேவன் கட்டளையை மேற்கொண்டு மயன் மகுடாபிஷேக மணிமண்டபம் இயற்றுகின்றான். மற்ற தீர்த்தங்களுடன் சரயு நதியின் புனலும் கொணரப்படுகிறது. இராமபிரான் பிராட்டியுடன் பளிங்குமாடத் திட்ட இரத்தின மயமான பீடத்தில் எழுந்தருள்கின்றான். தேவர்கள் இராமபிரானுக்கு எதிர் அபிடேகம் செய்கின்றனர்.

'மரகதஞ் சயிலஞ் செந்தா மரைமலர்க் காடு பூத்துத்
திரையெறி கங்கை வீசுந் திவலை யானனைந்து செய்ய
இருகுழை' தொடரும் வேற்கண் மயிலொடு மிருந்த தேய்ப்பப்
பெருகிய செவ்வி கண்டார் பிறப்பெனும் பிணிகள் தீர்ந்தார்'

என்பது கவிக்கூற்று. 'அரியணை யநுமன் தாங்க வங்கதன் உடைவாள் பற்றப், பரதன் வெண்குடை கவிக்க விருவருங் கவரிவீச,

vi

விரைசெறி கமலத் தாள்சேர் வெண்ணெய்மன் சடையன் தங்கள், மரபுளோர் கொடுக்க வாங்கி' வசிட்டனே இராமபிரானுக்கு மௌலி புனைகின்றான். இச் செய்யுட்கு வரையப் பெற்றுள்ள உரையைக் காண்க. 'வெள்ளியும் பொன்னு மொப்பரர் விதிமுறை மெய்யிற் கொண்ட, ஒள்ளியநாளி னல்ல வோரையின் உலக மூன்றும், துள்ளின களிப்ப மௌலி சூடினன் கடலின் வந்த, தெள்ளிய திருவும் தெய்வப் பூமியும் சேருந் தோளான். பரதாழ் வானுக்கு இளவரசு முடி சூட்டி இராமபிரான் இனிது வீற்றிருக்கின்றான்.

## விடை கொடுத்த படலம்

வந்தவர் அனைவோர்க்கும் விடையளிக்குமாறு பெருமான் பிராட்டியுடன் நாளோலக்க மண்டபத்துக்கு வருகின்றான். பல வகை நல்லிசைகள் முழங்கப் பற்பல முடி மன்னரும் பெருமான் திருவடியிணைப் பணிந்து போற்ற, ஐம்பெருங் குழுவினரும் பிறரும் சூழ இராமபிரான் வீற்றிருக்கின்றான். வந்த விருந்தினர்கள் அவரவர்க்கு அமைக்கப் பெற்ற விடுதிகளில் இனிது இருக்கின்றனர். இராமபிரான் அந்தணர்க்கு முதற்கண் தானம் அளிக்கின்றான். பின்னர் முறைப்படி அரசர்களுக்குப் பொன்னும் ஆடையும் பிறவும் வழங்குகின்றான். பின்னர் சுக்கிரீவன் முதலானோர்க்கு பரிசுகள் அளித்தமை 4302 லிருந்து 4315 வரை காண்க. மாருதியை நோக்கி முகமன் கூறி அவனைப் புல்லுகின்றான். இந் நிலையில் அண்மையிலிருக்கும் பிராட்டியை நோக்க இங்கிதமறிந்து பிராட்டி தனக்குக் கலைமகள் அளித்த முத்தாரத்தை அநுமனுக்கு அளிக்கின்றாள். பின்னர், அநுமன் முதலானோர்க்கும் விடையளிக்கப் பெறுகின்றது. வீடணன், குகன், சுக்கிரீவன் என்பவர்களைச் சிருங்கி பேரத்திலும், கிட்கிந்தையிலும் விட்டு விட்டுத் தனது நகர்க்குச் செல்கின்றான். எல்லோரும் விடைகொண்டு சென்ற பின், 'அருள்செறி துணைவரோடும், வையக முழுதும் செங்கோல் மநுநெறி முறையிற் செல்லச், செய்யமா மகளும் மற்றச் செகதலமகளும் சற்றும், நையுமாறின்றிக் காத்தான். நாநிலப் பொறைகள் தீர்த்து, அம்பரத்தனந்தர் நீக்கி அயோத்தியில் வந்த வள்ளல்'.

---

## பாத்திரங்கள்

கல்வியிற் சிறந்தவன் எனப் போற்றப் பெறும் கம்பநாடர் தமது பெருங் காப்பியத்தை நாடக முறையில் நடாத்திச் செல்வர். கதாபாத்திரங்களைப் பற்றிக் கவிக் கூற்றாக அவர் கூறுவன சில. பெரும்பாலும் பாத்திரங்களில் ஒருவர் ஒருவரைப்பற்றித் தமக்குள்ளே உரையாடுவன கொண்டும், அவரவர்களுக்கென ஏற்பட்ட ஒழுக்க வரலாறுகளைக் கொண்டும் அவற்றின் குணுகுணங்களைக் காட்டி வரைவர். அவர் காட்டிய முறையில் சிலவற்றை நோக்குவோம்.

### இராமபிரான்

'பரித்ராணாய சாதூநாம் விநாசாய சதுஷ்கிருதாம், தர்ம சம்ஸ்தாபனார்த்தாய, சம்பவாமி யுகே யுகே' என்ற கீதாசாரியன் வாக்கின்படி, தேவர் வேண்டுகோட்கிணங்க, நல்லவர் வாழவும் அல்லவர் தாழவும், 'மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர், நிசரத கணைகளால் நீறு செய்துமே, கசரத துரகமாகடல் கொள் காவலன், தசரதன் மதலை'யாக அவதாரம் செய்கின்றார். இது நால்வகை வ்யூகத்தில் விபவம் எனப்படும். ஏனைய மூன்றாகிய பரத்வம், வியூகத்வம் அந்தர் யாமித்வம் என்பவைகளும் இக் காப்பியத்தில் ஏற்றபெற்றி ஆங்காங்குக் காட்டப் பெற்றுள்ளன. வான்மீகி முனிவர், இராமபிரானைத் திருமாலின் அவதாரமெனவே கொண்டனரேனும், அவனை மனிதரில் மாணிக்கமாகவே கூறியமைவர். பிரமாத்திரப் படலத்தில் பிரமன் அவனுடைய உண்மைச் சொரூபத்தை விளக்கிக் கூறுகையில், பெருமான், 'மாநுஷம் மன்யே இராமம் தசரதாத்மஜம்' என்றதாக முதனூல் கூறும். கம்பநாடரோ தொடக்கத்திலிருந்தே இராமபிரானைத் திருமாலின் அவதாரமாகவே கூறுவர், அவதாரம் என்ற சொல்லின் பொருள்

விளக்குவார் போன்று, 'வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின் வைப்பெங்கும், ஊனும் உயிரும் உணர்வும்போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப' என்று கூறி அவதார மறையை வெளியிடுவதோடு நில்லாது, பல இடங்களிலும் இராமபிரானுடைய தெய்வத் தன்மையைக் குறித்துச் செல்வர். தேவர் பொருட்டே இப் பூவுலகில் இராமபிரான் உருவத் திருமேனி கொண்டான் என்பதை, 'அரக்கர் பாவமும் அல்லவரியற்றிய வறமும், துரக்க நல்லறம் துறந்தனள் தூமொழி மடமான்' (அயோத்தி. மந்தரை. 70) என்று கூறுவர்.

இனி இராமபிரான் பரத்வத்தை 'அளவையின் நிமிர நின்றவன்' (யுத்த. 2161); 'ஈசற்கு மீசன்' (யுத்த. 757); 'உயிர் தொறும் உறைவுறும் ஒருவன்' (யுத்த. 3724); 'உலகெங்கணுந் தானே யானான்' (யுத்த. 3750); 'பிறப்பறுக்கும் நாயகன்' (யுத்த. 4068); 'மலர்மேல் அயன்றன் முதலோர் தந்தை தாதை' (யுத்த. 2186); 'முற்றிய பொருட்கெலாம் முடிவுளான்' (யுத்த. 1494); 'மூவர்க்கும் முதல்வனான மூர்த்தியார்' (யுத்த. 1354); 'மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்' (யுத்த. 2158) என்பன கொண்டு காண்க.

இராமபிரான் உடன்பிறப்புப் பாசம்

'பரதனு மிளவலு மொருநொடி பகிராது, வரதனு மிளவலு மென மருவினர்' என்று பால காண்டத்தில் இராமபிரானும் இலக்குவனும் இணைபிரியாது வாழ்ந்தனர் என்று கூறப்பட்டது. 'யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன் பின்பு பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்' (அயோத்தி. குகப். 68); 'இருவரைப் பயந்தவள் ஈன்ற கான்முளை, யொருவனேயிவற் கிவ்வுருற வென்றார்' (அயோத்தி. நகர் நீ. 192) என்பன காண்க. இலக்குவனை அயோமுகி என்னும் அரக்கி எடுத்துச் சென்ற காலத்து இராமபிரான் மிகவும் வருந்தித் தற்கொலை செய்து கொள்ளத் துணிந்து 'அறப்பாலுளதேலவன் முன்னவனாய்ப், பிறப்பானுறின் வந்து பிறக்க' (ஆரணிய. 1106) என்று கூறுவதிலிருந்து தம்பிமீது

அவன் வைத்திருந்த பாசமும் அவன் தனக்காற்றி நின்ற சேவை யின் பெருமையும் காணலாம் பிரமாத்திரத்தால் அடிபட்டு மூர்ச்சையுற்றிருந்த இளவலைக் கண்டு, 'இலக்குவா வென்றழைக் கும்' தன் கையை வாயின் மூக்கின் வைத்தயர்க்குமையா, பிழைத் தியோ வென்னும்' (யுத்த. 2158); மற்றும் 'எம்பியே யிறக்கு மென்னின் எனக்கினி யிலங்கை வேந்தன், தம்பியே புகழ்தா னென்னை பழியென்னை யறந்தா னென்னை' (யுத்த. 2176) என்று கூறி நாகபாசம் தம்பியை வீட்டியதென்னில், பின்னை வீவன் என்றெண்ணும்' (யுத்த. 2178). பிரமன் அத்திரத்தால் இலக்குவன் அயர்ந்த நிலைகண்டு, 'எந்தை யிறந்தானென்று மிருந்தே னுல கெலாம், தந்தனன் என்னும் கொள்கை தவிர்ந்தேன் றனியல் லேன், உய்ந்து மிருந்தாய் நீயென நின்றேன் உரை காணேன் வந்தனையை-வந்தனன் ஐயவினி வாழேன்' (யுத்த. 2580); என் றும், 'தாயோ நீயே தந்தையு நீயே தவ நீயே, சேயோ நீயே தம்பியு நீயே திரு நீயே' (யுத்த. 2581); என்றும், 'பயிலும் காலம் பத்தொடு நாலும் படர் கானத், தயில்கின்றேனுக் காவன நல்கி யயிலாதாய்' (யுத்த. 2584); என்றும், 'மாண்டாய் நீயோ யானொரு போது முயிர் வாழேன்' (யுத்த. 2587); என்றும், 'அறந் தாய் தந்தை சுற்றமு மற்றுமெனை யல்லால், துறந்தா யென்று மென்னை மருதாய் துணைவந்து, பிறந்தா யென்னைப் பின்பு தொடர்ந் தாய் பிரிவாற்ருய், இறந்தா யுன்னைக் கண்டு மிருந்தே னெளி யேனே' (யுத்த. 2588) என்றும் அவலிப்பதினின்றும், இராமபிரான் தன் தம்பிமீது வைத்திருந்த அன்பினை உணரலாம், இந்திரசித் தினைக் கொன்று வெற்றியுடன் மீண்ட இலக்குவனைத், 'தன்புல நயனம் என்னும் தாமரை சொரியும் தாரை, அன்புகொ லழுகணீர் கொல் ஆனந்த வாரியே கொல், என்புகள் உருகிச் சோரும் கருணை கொல் யாரதோர்வார்' என்பது கவிக் கூற்று. தன் அடியில் வந்து வீழ்ந்த வெற்றி வீரனை இலக்குவனுடைய உடற் புண்களை யொற்றிப் போக்குகின்ருன். பின்னர் வேலேற்ற படலத்தில், இளவலைத் தழுவி, 'ஐய விரவிதன் குலத்துக்கேற்ற, வளவின மடைந்தோர்க்காகி மன்னுயிர் கொடுத்த வண்மைத், துளவியல் தொங்கலாய் நீ யன்னது துணிந்தா யென்ருல், அளவியலன்று

செய்தற்கடுப்பதே யாகுமன்றே' (யுத்த. 3514) என்றும், 'புற வொன்றின் பொருட்டா யாக்கை புண்ணுற வரிந்த புத்தேள், அறவனு மைய நின்னை நிகர்க்கிலன் அப்பால் நின்ற, பிறவினை யுரைப்பதென்னே பேரருளாளர் என்பார் கறவையும் கன்று மொப்பார் தமர்க்கிடர் காண்கில்' (3515) எனறும் சொல்லிப் பாராட்டு கின்றான். இந்திரசித்தினை வென்று வந்தபோது, 'தம்பியுடையான் படைக்கஞ்சான் என்னும் மாற்றம் தந்தனை' என்று வாயாரப் புகழ்கின்றான். இங்கு 'எம்பியை யீங்குப் பெற்றேனென்னெனக் கரியது' (சீவக. 1760) என்ற வரிகள் காணத்தகும்.

இராமபிரான் வீரம்

வருணன் அடைக்கலப் படலத்தில், 'மாண்ட வில்லிழந் தயருநான் வழிதருகென்ன, வேண்ட வில்லையென் றெளித்த தாமென மனம் வெதும்பி, நீண்ட வில்லுடை நெடுங்கனல் உயிர்ப் பொடு நெடுநாண், பூண்ட வில்லெனக் குனிந்தன கொழுங்கடைப் புருவம்' (யுத்த. 538); என்ற செய்யுள் தொடங்கி, 'மறுமை கண்ட மெய்ஞ்ஞானியர் ஞாலத்து வரினும், வெறுமை கண்ட பின் யாவரும் யாரென விரும்பார், குறுமை கண்டவர் கொழுங்கன லென்னினும் கூசார், சிறுமை கண்டவர் பெருமைகண் டல்லது தேறார்' (யுத்த. 544); வரையுள்ள செய்யுட்களைக் காண்க. அப் பெருமானுடைய அம்பின் பெருமை 'போரென்ன வீங்கும் பொருப் பன்ன பொலங்கொள் திண்டோள்' என்றபடி முதற் போரில் இராவணன் போருக்கெழுந்தான் என்ற அளவிலேயே 'வாங்கினன் சீதையை என்னும் வன்மையால், தீங்குறு பிரிவினுற் றேய்ந்த தேய்வற, வீங்கின ஆரியன் வீரத் தோள்களே' (யுத்த. 1063) எனப்பட்டது. நூல் தொடக்கத்துப் பாயிரத்திலேயே 'சூடிய சிலை யிராமன் தோள்வலி' என்றதும் காண்க. 'நல்லியல் நவை யறு கவிஞர் நாவரும், சொல்லெனத் தொலைவிலாத் தூணி தூக் கினான்' (1069); இராமபிரான் அநுமன் தோள் மீதேறிப் பொரு கின்றான். பொரில் இராவணன் மகுடம் இராமபிரான் அம்பினால் புணரியில் வீழ்த்தப்படுகின்றது. போரில் இராவணன் சுக்கிரீவனைத்

தூக்கிச் செல்ல, இராமபிரான் 'இன்றுணை யொருவனை யெடுத்த தோளெனும், குன்றினை யரிந்தயான் குறைக்கிலே னெனிற், பின்றின னுனக்கு விற் பிடிக்கிலேன்' (1490) என்றான். கும்ப கன்னனுடைய தீவிரம் கண்டு 'நண்ணின னடங்கெதிர் நமனை யின்றிவன், கண்ணிடை நிறுத்துவென்' (1511) என்று சூளுரைக் கின்றான். இராமபிரானுடைய அரிய போர்த் திறத்தை (யுத்த. 1522 - 1526) வரைக் காண்க. இங்கு 'வேத நாயகன் வெங்கணை வேகத்தின் மிகுதியை வெவ்வேறிட் டோதுகின்றதென் உம்பரு மரக்கர் வெங்களத்து வந்துற்றாரைக், காதல் விண்ணிடைக் கண்டனரல்லது கணவர் தம்முடல் நாடும், மாதர் வெள்ளமே கண்டனர் கண்டிலர் மலையெனும் பெரியாரை' (யுத்த. 1527).

மகரக் கண்ணனுடன் நிகழ்ந்த போரில் மாயையில் வல்ல மகரக் கண்ணனுடைய உண்மை யுருவை அநுமானித்து அம்பினை எய்து அவனை வீழ்த்துகின்றான் இராமபிரான் (யுத்த. 2367); படைக்காட்சிப் படலத்தில் மாலியவான் இராமபிரான் வல்லமை யைப் பல பாடல்களில் கூறுதல் காண்க. மூலபல வதைப் படலத் தில் தேவர்கள் மூலபலத்தைக் கண்டு அஞ்சிச் சிவபெருமானைச் சரண் அடைய, அப்பெருமான் 'ஒன்றுமஞ்சலிர் வஞ்சனை யரக் கரை யொருங்கே, கொன்று நீக்குமக் கொற்றவனிக் குலமெல்லாம்' (யுத்த. 3258) என்று மொழிகின்றான். அதே பெருமானுடைய வில் திறத்தைப் பற்றி 'காயிருஞ் சிலையொன்றேனும் கணைப்புட்டி லொன்றதேனும், தூயெழு பகழி மாரி மழைத் துளித் தொகையின் மேல, ஆயிரம் கைகள் செய்த செய்தன வமலன் செங்கை, ஆயிரம் கையும் கூடி யிரண்டுகை யாயவாறே' (யுத்த. 3450); 'பொய்யொரு முகத்தனுகி மனிதனும் புணர்ப்பி தன்றால், மெய்யுறவுணர்ந்தோம் வெள்ள மாயிர மிடைந்த சேனை, செய்யுறு வினையமெல்லாம் ஒரு முகம் தெரிவதுண்டே, ஐயிரு நூறுமல்ல வனந்தமாமுகங்கள் அம்மா. 'சிவபிரான் முதலியோரும்' பண்ணையால் வகுக்க மாட் டார் தனித்தனிப் பார்க்கலுற்றார். ஒண்ணுமோ கணிக்க வென்பார், உவகையின் உயர்ந்த தோளார்' (2453) என்ற பகுதிகளைக் கொண்டே இராமபிரானுடைய வில்லாண்மையைக் காண்க. மற்றும் மூலபல வதைப் படலத்து இறந்து பட்டவர்களின்

பெருந் தொகையை, 'ஆனையாயிரம் தேர் பதினாயிரம் அடர்பரி யொருகோடி, சேனை காவலர் ஆயிரம் பேர்படிற் கவந்தமொன் றெழுந்தாடும், கானமாயிரம் கவந்த நின்றுடிடிற் கவின்மணி கணி லென்னும், ஏனையம்மணி யேழரை நாழிகை யாடியதினிதன்றே' (யுத்த. 3460) என்றது கொண்டு காண்க.

பாலகாண்டத்தில் இராமபிரான் தாடகையை வில்லொன்றிற் கடிகை மூன்றில் கொன்றதாகக் கூறப்பட்டது. அவ்வண்ணமே 'வில்லொன்றாற் கவசமொன்றால் விறலுடைக்கரமோ ரொன்றால், கல்லொன்று தோளுமொன்றால் கழுத்தொன்றாற் கடிதின் வாங்கிச், செல்லொன்று கணைகளையன் சிந்தினன் செப்பி வந்த, சொல் லொன்றாய்ச் செய்கையொன்றாய்த் துணிந்தனன் மகோதரன் என்னும் அரக்கன் (3657) என்று கூறப்பட்டது. 'கருமமும் கடைக் காண்குறு ஞானமும், அருமை சேருமவிஞ்சையும் விஞ்சை யும், பெருமை சால் கொடும் பாவமும் பேர்கலாத், தருமமும்' என இராமபிரானும் இராவணனும் பொருதனர் எனப்பட்டது. அத் தருணத்தில் திருமாலின் சங்கு சக்காம் கதை கட்கம் சார்ங்கம் என்ற ஐம்படைகளும், அடித் தொழில் செய்யும் பொருட்டு இராமபிரான் முன் வந்து நின்றன. ஆயினும் தான் மனிதனாக வடிவெடுத்து நின்ற பாவனையால் அவற்றைக்காணாதவன் போன்று நிற்கின்றான் இராகவன். போரில் இராவணன் தாமதாத்திரம் விடு கின்றான். இராமபிரான் சிறிது நிதானித்துச் சிவாத்திரத்தால் அதனை மாய்க்கின்றான். அரக்கன் விடுத்த அசுரப் படையை இராமபிரான் அக்கினியம்பினால் அழிக்கின்றான். இராவணன் மயாத்திரம் எய்ய இராமபிரான் அதனைக் கந்தர்வ வாளியால் சிதைக்கின்றான். அரக்கன் எறிந்த தண்டாயுதத்தை இராம பிரான் துணிக்கின்றான். அவன் விடுத்த மாயாத்திரத்தை ஞானத்திரம் கொண்டு ஒழிக்கின்றான். இலங்கேசன் எறிந்த சூலப்படையினை தன் உங்காரத்தாலேயே துணிக்கின்றான் இராம பிரான். இந்நிலையில் இராவணன் இராமபிரானைப் பரம்பொருளா யிருத்தல் கூடுமோ என்னக் கருதுகின்றான். 'சிவனோ வல்லன் நான்முகனல்லன் திருமாலாம், அவனோவல்லன் மெய்வர மெல்லாம் அடுகின்றான். தவனோ வென்னிற் செய்து முடிக்கும் தரமல்லன்

இவனேதானவ் வேதமுதற் காரணன்' (3775) என்று அவன் கூறுவது காண்க. அரக்கர்கோன் விடுத்த நிருதர் படையைத் தனது கருடாத்திரத்தினால் போக்குகின்றான் இராமபிரான். இறுதியில் 'காலும் வெங்கனலும் கடைகாண்கிலா, மாலும் கொண்ட வடிக்கணை மாமுகம், நாலும் கொண்டு நடந்தது நான் முகன், மூலமந்திரம் தன்னொடு முட்டலால்' என்று இராகவன் விடுத்த அயன் படையால் இராவணன் இறந்துபடுகின்றான். 'ஆர்க்கின்ற வானவரும் அந்தணரு முனிவர்களும் ஆசிகூறித், தூர்க்கின்ற மலர்மாரி தொடரப் போய்ப் பாற்கடலில் தூய்நீராடித், தேர்க்குன்ற விராவணன் தன் செழுங்குருதிப் பெரும்பரவைத்திரை மேற்சென்று, கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப் புட்டிலி னடுவட் கலந்தது' இராமன் விடுத்த அயன்படை.

இராமபிரான் அடைக்கலம் புகுந்தோரைக் காக்கும் அருட்கொண்டல்

கருமம் ஞானம் பத்தி என்ற மூன்றும் முத்தி மார்க்கங்களே யாயினும் பிரபத்தி மார்க்கம் மிகவும் எளிதானது என்பர் அறிஞர். ஸ்ரீமத் இராமாயணம் முழுவதுமே சரணாகதி சாத்திரம் என்ப. பாலகாண்டத்தில் தேவசரணாகதியும், அயோத்தியா காண்டத்தில் பரதன் சரணாகதியும், ஆரணிய காண்டத்தில் முனிவர் சரணா கதியும், கிட்கிந்தா காண்டத்தில் சுக்கிரீவ சரணாகதியும், சுந்தர காண்டத்தில் பிராட்டி சரணாகதியும் காணலாம். முனிவர் சரணா கதி செய்தபோது 'புகல் புகுந்திலேற் புறத்தண்டத்தின், அகல்வ ரேனுமென் அம்பொடும் வீழ்வர்' (ஆரணிய. 131) என்றும், 'சூராறுத்தவனும் சுடர்நேமியும், ஊறுத்த வொருவனும் ஓம்பி னும், ஆறத்தினொடன்றி நின்றாரவர், வேரறுப்பன் வெருவன் மின் நீரென்றான்' (ஆரணிய. 134) என்றும் இராகவனே பிரபத்திச் சிறப்பினைக் கூறுதல் காண்க. வீடணன் சரணம் அடைந்த போது, 'கைப்புகற் பாலனோ கழியற் பாலனோ' (யுத்த. 361) என்று இராமபிரான் வினவுங்கால், சுக்கிரீவாதியர்கள் வீடணனை ஏற்றுக் கொள்ளுதல் கூடாது என்றார்கள். அப்போது மாருதி தக்க பல காரணங்கள் கூறி அவனை ஏற்பதே நல்லது என்று கூற, 'மாருதி

விளையவார்த்தை செவிமடுத் தமிழ்தின் மாந்தி', 'மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி வெற்றியே பெறுக தோற்க வீக வீயாது வாழ்க, பற்றுதலன்றி யுண்டோ புகலெமைப் பகர் கின்றனை' (யுத்த. 411) என்று கூறி வீடணனுக்கு அபயதானம் தருகின்றான். இங்கு கஜேந்திரன், மார்க்கண்டன் முதலியவர்களின் வரலாற்றினையும் அவர்கட்குத் திருமாலும் சிவபெருமானும் முறையே நல்வாழ்வளித்ததையும் காட்டிக் கபோதாக்யானம் என வழங்கும் புறவின் வரலாற்றைக் கூறியும் 'பேடையைப் பிடித்துத் தன்னைப் பிடிக்க வந்தடைந்த பேதை, வேடனுக்குதவி செய்து விறகிடைச் செந்தீ மூட்டிப், பாடுறு பசியை நோக்கித் தன்னுயிர் கொடுத்த பைம்புள், வீடுபெற்றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிது' என்று கூறுகின்றது காண்க. 'எல்லாம் அவன் செயலே யென்றிருக்க வல்லார்க் கில்லாததில்லை யிறையே பராபரமே' என்றார் தாயுமானவர். சரணாகதித் தத்வம் ஆனது இரணியன் வதைப்படலத்துப் பிரகலாதனுடைய அரிய செயல் களாலும், தெளிவாகும். மற்றும் விபீடண சரணாகதியில், 'உடைந்தவர்க் குதவானாயின் உள்ளதொன் றீயானாயின், அடைந் தவர்க்கருளானாயின் அறமென்னும் ஆண்மை யென்னும்' (யுத்த. 414), 'உய்ய நிற்கபயம் என்றானுயிரைத் தன உயிரின் ஓம்பாக், கையனும் ஒருவன் செய்த வுதவியிற் கருத்திலோனும், மீள்கிலா நரகின் வீழ்வார்' (யுத்த. 420) என்று பகர்கின்றான். தன்கொள் கைப்படி வாராமல் காலம் தாழ்த்த வருணன்மீது முதலில் வெகுண்டு அம்புகள் விடுத்தானேனும் பின்னர் அவன் பணிந் திரங்கிய அளவில் பொன் சுட்டு ஆறியது போன்று, அவன் சீற்றந் தணிந்து, வருணனுக்கு அபயம் அருள்கின்றான். இங்கு 'மெல்லவந்தெ னல்லடி பொருந்தி, ஈயென இரக்குவராயிற் சீருடை, முரசு கெழுதாயத் தரசோ தஞ்சம்' (73) என்ற புற நானூற்றுச் செய்யுள் காணத்தகும். இந்திரசித்து விடுத்த பிர மாத்திரத்தால் வீழ்ந்து கிடந்த அங்கதனை நோக்கி இராமபிரான், 'அடைக்கலப் பொருளைக் காத்தவாறு அழகிது' என்று வருந்து கின்றான். இராமபிரான் தன் தம்பியின் தியாக வுணர்ச்சியைப் புகழ்ந்து, 'இரவி தன் குலத்துக்கேற்ற, வளவின மடைந்தோர்க்

காகி மன்னுயிர் கொடுத்த வன்மை, துளவியற் றெங்கலாய் நீ யன்னது துணிந்தா யென்றால், அளவினையன்று செய்தற்கடுப்பதே யாகும்' (யுத்த. 3514) என்றும், புறவொன்றின் பொருட்டாக யாக்கை புண்ணுற வரிந்த புத்தேள், அறவனுமைய நின்னை நிகர்க்கிலன்' (யுத்த. 3515) என்றும் புகழ்கின்றான்.

**இராமபிரானுடைய அரசியல் அறிவும் உலகியல் அறிவும்.**

பெருமானுடைய அரசியல் அறிவினைக் கிட்கிந்தா காண்டத்தில் வாலி வதைப்படலத்துக் கணடோம். வாலி கேள்விகட்கெல்லாம் அவன் முறைப்படி விடையளித்து நீதிமுறையினை வற்புறுத்தி நின்றான். பின்னும் சுக்கிரீவனுக்கும் அநுமனுக்கும் அவன் கூறிய அரசியல் நீதியும் காண்க. விபிடணன் சரணகதியிலும் தன் நண்பர் பலரையும் அழைத்து வீடணனை ஏற்றுக் கொள்வதைக் கூறி வினவுவதிலும் அவனுடைய அரச நீதியைக் காணலாம்.

மீட்சிப் படலத்தில் அநுமனைப் பரதனிடம் அனுப்புமபோது, இராமபிரான் மாருதியை நோக்கி 'இன்று நாம் பதி வருது முன் மாருதியீண்டச், சென்று தீதின்மை செப்பியத் தீயவித் திளையோன, நின்ற நீர்மையும் நினைவுந் தேர்ந்தெம்மின் நேர்தல் நன்று' (யுத்த. 4088) என்று கூறுகின்றான். பரதன் மகா உத்தமன் என்று பல்லாற்றானும் தெரிந்து தெளிந்த இராமபிரானும், 'அறநிரம்பியவருளுடை யந்தணர்க்கேனும், பெறலருந் திருப்பெற்ற பின் சிந்தனை பிறிதாம்' (அயோத்தி. மந்தரை. 70) என்றதற்கேற்ப, பரதன் எண்ணத்தை அறிய அவாவுகின்றான். இதில் பெருமான் உலகியல் அறிவைக் காணலாம். இலங்கையை விடுத்துப் புட்பகத்தின் மீது ஏறும் சமயத்தில், வீடணன், சுக்கிரீவன் முதலானோரை அவரவர் நகர்க்கு ஏகுமாறு கூறும்போது, அவர்கள் அதற்கிசையாமல், பெருமான் முடிசூட்டு விழாவைக் கண்டு களிக்க உடன் வர வேண்டும் என்று மொழிய, இராமபிரான், 'அன்பினாலவர் மொழிந்த வாசகங்களு மவர்கள், துன்பமெய்திய நடுக்கமு நோக்கி நீர்துளங்கல், முன்பு நானினைந்திருந்ததப் பரிசு' என்று கூறினன்,

இங்கும் அவனது உலகியல் அறிவினைக் காணலாம். பிராட்டியின் கற்பு நிலையினை மாருதி வாயிலாகத் திருத்தமாகக் கேட்ட பின்பும் அவளிடம் சங்கை கொண்டு பிராட்டியைத் தீப்புகச் சொல்கின்றான். 'ஊர் வாயை மூட உலை மூடியின்றாகலின்' அவள் கற்பு மேம்பாடு நன்கு பல்லோர்க்கும் விளங்குமாறு, அங்ஙனம் செய்கின்றான். இது உலகத்தோடொட்ட வொழுகலாகக் கொள்ளலாம். இதனை 'நங்கை மற்று நின் கற்பினை யுலகுக்கு நாட்ட, அங்கி புக்கிடென் றுணர்த்திய வதுமனத் தடையேல், சங்கை யுற்றவர் பெறுவது முண்டது சரதம், கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல்', 'பொன்னைத் தீயிடைப் பெய்வதப் பொன்னுடைத் தூய்மை, தன்னைக் காட்டுதற்கென்பது மனக்கொளல் தகுதி, உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகில், பின்னைக் காட்டுவதரிய தென்றெண்ணி யிப்பெரியோன்' என்று தயரதன் கூறுதல் கண்டு தெளிக. முன்னர்க் கிட்கிந்தா காண்டத்தில் 'பெற்றார்கள் பெற்ற பயன் பெறும் பெற்றியல்லால், அற்றார் நவை என்றலுக்கு ஆகுநர் ஆர்கொல்' என்றது காண்க. மற்றும் இராவணன் இறந்து மலைபோற் கிடந்தானை வைரி என்று கருதாமல் அவனுக்குத் தீக்கடனும் நீர்க்கடனும் செய்யுமாறு பணிக்கின்றான் இராமபிரான். முன்பு வாலி, இராமபிரான் வாளியால் மடிந்து மலைபோற் கிடக்க அவன் மார்பினின்று உதிரம் அருவிபோற் பெருக்கெடுத்து ஓடுவது கண்டு, 'உடன் பிறப்பென்னுமப்பாசத்தாற் பிணிப்புண்டவத்தம்பியும் பசுங்கண், நேசத் தாரைகள் சொரிதர நெடுநிலம் சேர்ந்தான்' (கிட்கிந்தா. 290) என்று கூறினர் கவிஞர் பெருமான். இங்கு உடன் பிறப்பென்னும் பாசம் என்றும், நேசத்தாரை யென்றும் கூறப்பட்டமை காண்க. மரணாந்தானி வைராணி என்பது முதனூல். கடுத்த பகையும் கல்லறை கடவாதென்பர். 'உடன் பிறப்பாற்றேள் வலிபோம்' என்பது உலக வழக்கு. எத்தகைய பகைவனயினும் உடன் பிறந்தான் இறந்த அளவில் அப் பகைமை நீங்குவது உலகியல்.

### இராமபிரானுடைய எளிவந்த தன்மையும் கருணையும்

குகனையும் சுக்கிரீவனையும் உடன் பிறந்தாராகக் கொண்டது போன்று, 'குகனொடும் ஐவரானேம் முன்பு பின் குன்று சூழ்வான்;

மகனொடும் அறுவராளேம் எம்மிடை யன்பின் வந்த, வகனமர் காதலைய நின்னொடும் எழுவராளேம். புகலமர் கானம் தந்து புதல் வராற் பொலிந்தான் உந்தை' என மொழிகின்றான் இராமபிரான். குகனைச் சகோதரனாகக் கருதியதை 'ஏழை வேடனுக் கெம்பியுன் தம்பி நீ, தோழனங்கை கொழுந்தி யெனச் சொன்ன, வாழி நண்பு' (சுந்தர. 352) என்று பிராட்டியும், 'ஏ ழை யே த ல ன் கீழ் மகனென்னா, திரங்கி மற்றவற்கின் அருள் சுரந்து, மாழை மான் மடநோக்கி யுன்தோழி, யும்பி யெம்பி யென்றொழிந்திலை யுகந்து, தோழனீ யெனக்கிங் கொழியென்ற, சொற்கள் வந்தடியேன் மனத் திருந்திட, ஆழிவண்ண நின் அடியிணை யடைந்தேன், அணி பொழில் திருவரங்கத் தம்மானே' (பெரியதிரு. 6:8:1) என்று திரு மங்கை மன்னனும் கூறியமை காண்க. சுக்கிரீவனை நட்புக் கொண்டமை, 'மற்றினி யுரைப்ப தென்னே வானிடை மண்ணி னின்னைச், செற்றவ ரென்னைச் செற்றார் தீயரே யெனினு நின்னோ, டுற்றவ ரெனக்கு முற்றார் உன்கிளை யெனதென் காதற், சுற்றமுன் சுற்றநீயென் இன்னுயிர்த் துணைவன்' (கிட்கிந்தா. 104) என்றதனாற் காண்க. மற்றும் தன்னால் அடைக்கலம் பெற்ற சுக்கிரீவனைக் காணாது இராமபிரான் வருந்திக் கூறிய (யுத்த. 860 - 864) செய்யுட் களும், மீண்டுவரக் கண்டபின் சுக்கிரீவனை நோக்கிக் கூறிய (யுத்த. 868-871) செய்யுட்களும், பெருமானுடைய இளகிய உள்ளத்தையும் சரணாகதவத்ஸலத் தன்மையையும் காட்டும். பின்னும் பிரமாத்திரப் படலத்தில் இந்திரசித்து விடுத்த அயன் படையால் அனைவோரும் மரித்துக் கிடந்த நிலையில் அவர்களைக் கண்ணுற்று இராமபிரான் அவலிப்பதும் அவன் அருளின் உருவம் என்பதனை விளக்கும். பிரபத்தி மார்க்கத்தில் ஈடுபட்டு மனம் மொழி காயமென்னும் திரிகரணங்களையும், களம் விளர்ப்பெனக் கறுத்த கண்ணன் தன்னடிக்கே யாக்கி நிற்கும் அவர்கட்குப் பரமசௌலப்யனாகக் காணப்பட்ட தன்மையைத் 'தருமமும் ஞானமும் தவமும் வேலி யாய், மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்க், கருணையங் கோயிலிலிருந்த கண்ணன்' (யுத்த. 353); என்று கவிஞர் பெருமான் கூறியதும் காண்க. முதல்நாட் போரில் நிராயுதபாணியாக நின்ற இலங்கேசனை நோக்கி, 'இன்று போய் நாளை வாவென நல்கினன்,

நாகிளங் கமுகின், வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்' (யுத்த. 1210) என்பதும், போரில் இராவணன் தளர்ந்த நிலையில் அவனைக் கொல்லுமாறு மாலதி என்ற தேர்ப்பாகன் தூண்ட, இராமபிரான் 'படை துறந்தும் மயங்கிய பண்பினு, னிடைதெறும் படி பார்த்திக னீதியின், நடை துறந்துயிர் கோடலு நன்மையோ; கடை துறந்தது போரென் கருத்திது' (யுத்த. 3814); எனக் கூறுகின்றான். போர் தொடங்குவதே முறை என்று நண்பர்கள் கூறிய நிலையிலும் தண்ட நீதியைக் கையாள்வதன் முன்பு, சாமோபாயத்தையும் சிறிது மேற்கொள்வோம் என்று, இலக்குவன் தடுத்த போதும், 'அறிஞர் ஆய்ந்த, நயத்துறை நூலின் நீதி நாந்துறந் தமைதனன்றே, புயத்துறை வலியரேனும் பொறையொடும் பொருந்தி வாழ்தல், சயத்துறை யறனுமஃதே' (யுத்த. 920) என்கின்றான். பாஞ்சாலியைத் துகில் உரிந்தபோது, 'வீமன் கதைமேல் கைவைக்க விசயன் வில்மேல் விழி வைக்க; 'ஆம் போதனைத்தும் ஆமதன்றிப், போம்போதனைத்தும் போமுன்னம் பொறுத்தீரின்னம் பொறும்' என்ற தருமபுத்திரன் கூற்று இங்கு நினைவு கூறத்தகும். ஒற்றர்களாக மாறுவேடம் பூண்ட அரக்கரை யுணர்ந்து அவர்களைக் கொல்லுமாறு வீடணன் கட்டளையிட, அவர்களைக் கொல்ல வேண்டாம் என்று அருள்கின்றான். இலக்குவன் பிரமாத்திரத்தை யேவுவதாகக் கூற இராமபிரான், முதறகண் ஏவுதல் வேண்டாமென்றும், அரக்கன் ஏவினுல் பின்னர் ஏவு மாறும் கூறுகின்றான்.

### இராமபிரான் திருமேனியினெழில்

கங்கைப் படலத்தில் 'வெய்யோனொளி தன்மேனியில் விரி சோதியின் மறையப், பொய்யோ வெனுமிடையாளொடு மிளையானொடும் போனான், மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ' (அயோத்தி. கங்கை. 1); 'அமலத்திண் கரமும் காலும் வதனமும் கண்ணுமான, கமலத்தின் காடுபூத்த காள மாமேகம்' (யுத்த. 778); 'பொற் குவட்டிடையே தோன்றும் மரகதக் குன்றம்' (யுத்த. 779) 'கரிய கொண்டலைக் கருணையங் கடலினை' (யுத்த. 839); 'கடலே;

மழையோ முழுநீலக் கல்லோ காயா நறும்பூதோ, படர்பூங்குவளை நாண்மலரோ நீலோற்பலமோ பானலோ' (பால. மிதிலைக். 65); வதனம் வாய்கண்கை காலெனப் புண்டரிகத்தடம் பூத்துப் பொற் சிலை, மண்டலம் தொடர்ந்து மண்வயங்க வந்தோர், கொண்டலிற் பொலிதரு கோலத்தான்றனை (யுத்த. 1483); 'தண்டலை மருத வைப்பிற் கங்கை நீர்தழுவு நாட்டுக் கொண்டல்' (யுத்த. 2351); 'நின்ற ஞாயிறன்ன நெடியவன்' முதலியன காண்க.

இராமபிரானின் நடந்த நிலையும், சொரூப நிலையும்

அண்ட முதல்வன் (யுத்த. 687) 'ஊழி முதனாயகன்' (யுத்த. 689); 'பாம்பிழைப் பள்ளிவள்ளல்' (யுத்த. 712); 'ஆழித் துயில் கடந்தயோத்தி வந்தான்' (யுதத 926); 'பூதநாயகன்' (933) 'அறத்தை முற்றும் காவற்குப் பிறந்து நின்றுர் காகுத்த வேடங்காட்டி' (யுத்த. 1354); 'முற்றிய பொருட்கெலா முடிவுளான் (யுத்த. 1494); 'ஆயிரம் பெயரவன்' (யுத்த. 1507); 'அரசருருக் கொண்டமைந்த வேதியா' (1560); 'வேதத்தோட்டியின் றுடக்கி னிற்கும் துணைக்கை மால்யானை யன்னான்' (யுத்த. 2178); 'ஈதைகள் தீர்க்கும் நாமத்திராமன்' (யுத்த. 2211); 'எங்கும் முளன் ஒருவன் னெதிர்த் திருநான்மறை தெரிக்கும் செங்கண்ண வனிவனே' (யுத்த. 2489); 'இருமையும் துடைப்பவன்' (யுத்த. 2728); 'நாராயண நரனென்றிவர்' (யுத்த. 3008); 'பாம்பணை யமலனே மற்றிவ் விராமன்' (யுத்த. 3277); 'அளப் பரும் உலகம் யாவும் அமைத்தவன்' (யுத்த. 3567); மற்றும், இராமபிரான் பெருமையை வருணன் அடைக்கலப் படலத்து வருணன் கூறும் துதிகளைக் கொண்டும், பிரமாத்திரப் படலத்து இராமபிரான் துயிலுற்றது கண்டு, 'உன்னை யுள்ளபடி யறியோம்' (யுத்த. 2597); எனத்தொடங்கும் செய்யுளிலிருந்தும், 'அம்ப ரீடற் கருளியது மயனார் மகனுக் களித்ததுவும்' (யுத்த. 2603); என்று காணப்படும் செய்யுட் பகுதியில் தேவர்கள் கூறுவது கொண்டும, நாகபாசத்துப் படலத்துக்காணப்பெறும கருடாழ்வான் துதிகளைக் கொண்டும், மீட்சிப் படலத்தில் 'உணர்த்துவாய் உண்மை' (யுத்த. 3990) என்று தொடங்கி 'இனையதாகலின்' (யுத்த. 4004) என்று முடியும் பிரமன் துதிகளினாலும், 'உன்னை நீயென்று முணர்ந்திலை போலுமால் உரவோய்' (யுத்த. 4005); என்று தொடங்கி, 'மழு வலான் வழுத்தி' (யுத்த. 4006) என்று முடியும் சிவபெருமான் உரைகளாலும், இராமபிரான் பெருமைகளை உணரலாகும்.

இலக்குவன்

ஆதிசேடன் அவதாரம், ஆழித் தனிமுதல் நாயகற் கிளையான்; திருவவதாரப் படலத்தில் 'உலக்குநர் வஞ்சகரும் பருமுய்ந்தார், நிலக்கொடியுந்துயர் நீத்தனளிந்த, விலக்கரும் மொய்ம்பின் விளங்கொளி நாமம், இலக்குவனென்ன இசைத் தனன்' (பால. திருவவ. 122); என்றும், 'வளையொடு திகிரியும் வடவை தீதர, விளை தரு கடுவுடை விரிகொள்பாயலும்; இளைஞர் களென வடிபரவவேகி நாம், வளைமதிலயோத்தியில் வருதும் (பால. திருவவ. 23) என்று அவதார மறை கூறப்பெற்றது.

இலக்குவன் சேவை: 'லக்ஷ்மணோ லக்ஷ்மி சம்பந்நகா' என்றபடி இளைய பெருமான் கைங்கரிய லக்ஷ்மியுடன் கூடியவன். 'யாவர்க் குந் தொழுகுலமா மிராமன் பின்பு, பிறந்தான்' (அயோத்தி. குகப்.) என்றான் பரதன். கோசிக முனிவனால் அருளப்பெற்ற படைகள், 'மேவினம் பிரிதலாற்றேம் வீரநீ விதியின் எம்மை, ஏவின செய்து நிற்றும் இளையவன்போல, (பால. வேள்வி. 3) என்று கூறின. இராமபிரான். அயோத்தியிலிருந்து பெற்றோர்கட்குப் பணி புரியு மாறு கூறும்போது, இலக்குவன் 'நீருள வெனினுள மீனும் நிலமும், என்று தொடங்கி 'நாருள தனு வுளாய் நானும் சீதையும், ஆருளரெனினுளம் அருளுவாய்' (அயோத்தி. நகர்நீ. 156); என்ப திலிருந்து இராமபிரானைப் பிரிந்து உயிர் வாழ்பவனல்லன் இவன். இந்தச் செல்வனை நோக்கி 'ஆகாததன்றால் உனக்கவ்வனம் இவ் வயோத்தி' (அயோத்தி. நகர்நீ. 150) 'மகனே, இவன்பின் செல், மன்னும் நகர்க்கே யிவன வந்திடின்வா வதின்றேல், முன்னம் முடி' (அயோத்தி. நகர்நீ. 151); என்று கூறுகின்றாள் சுமித்திரை. இச் சொற்களை இலக்குவன் கவந்தன் படலத்து நினைவு கூர்கின்றான். பிராட்டியும் இலக்குவன் பிரமாத்திரத்தால் மரித்துக்கிடந்தபோது மாதாவின் உரைவழி நின்றனையோ' (யுத்த. 2623); என்று கூறி அவலிக்கின்றாள். சித்திரகூடத்தில் அண்ணனும் கொழுந்தி யாரும் இனிது அமர்ந்தருளுமாறு, காட்டில் அகப்படக் கூடிய வரிச்சுக்களையும், தருப்பைப் புற்களையும் மயிற்பிலிகளையும் இள மூங்கிற் கொத்துகளையும் கொண்டு ஓர் அரிய பன்னசாலை இழைக் கின்றான். இதனைக் கண்டு வியந்து, தம்பியை நோக்கிக் 'குன்று போலக் குவவியதொளினாய், என்று கற்றனை நீயிது போல்'

(அயோத்தி. சித்திர. 53); என்று பாராட்டுகின்றான் இராமபிரான். கார்காலப் படலத்து இராமபிரான் பிராட்டியின் பிரிவாற்றாது வருந்திய காலையில் பலவாறு கூறி அவனை ஆற்றுவிக்கின்றான்.

கங்கைப படலத்தில் 'விழித்த கண்ணன், தம்பி நின்றானை நோக்கித் தலைமகன் தன்மை நோக்கி, அம்பியின் தலைவன் கண்ணீ ரருவி சோர்குன்றின் நின்றான்' (49) என்றும், குகப்படலத்தில் 'அல்லையாண்டமைந்த மேனியழகனும் அவளும் துஞ்ச, வில்லை யூன்றியகையோடும வெய்துயிர்ப்போடும் வீரன், கல்லையாண்டுயர்ந்த தோளாய் கண்கள நீர் சொரியக் கங்குல், எல்லை காண்பளவு நின்றான் இமைப்பிலன் நயனம்' (42) என்றும் வருவன கொண்டு இரவும் கண்ணுறங்காமல் அண்ணனையும் பிராட்டியை யும் காத்து நின்று அரிய சேவையாற்றியமை உணரலாம். இவனுடைய அரிய சேவையைப் பிறர் பாராட்டுவது ஓர் புறம் இருக்க, இராமபிரான் கூறியதை நோக்குவோம். அயோமுகி என்ற அரக்கி இலக்குவனைத் தூக்கிச்செல்ல, வெகுநேரம்வரையில் திரும்பிவரக் காணாது இராமபிரான் வருந்தித் தற்கொலை புரிந்து கொள்ள எண்ணுகின்றான். அப்போது, அவன் 'அறப்பாலுள தேல் அவள் முன்னவனாய்ப், பிறப்பானுறின் வந்து பிறக்க' (ஆரணிய. 1106); என்று சொல்லி அவனுடைய சேவையை மெச்சிப் பேசுகின்றான். பிரமாத்திரப் படலத்தில், அத்திரத்தால் தம்பி மடிந்து கிடந்த பொழுது, 'பயிலும் காலம் பத்தொடு நாலும் படர்கானத், தயில்கின்றேனுக்கு ஆவன நல்கி யயிலா தாய், வெயிலெனறுன்னாய்' யுத்த. 2583); என்று சொல்லி அவன் செய்த சேவையைப் பாராட்டுகின்றான். இந்திரசித்தினைக் கொன்று திரும்பிய போது இராமபிரான் மகிழ்ந்து 'தம்பியுடையான் படைக் கஞ்சான் என்னும் மாற்றம் தந்தனையால்' என்று புகழ்கின்றான்.

### இலக்குவனுடைய சமயோசித புத்தியும் தீர்க்கதர்சனமும்

மாய மானாக வந்தவன் முன்னமுமகவாய் வந்த மூவருள் தப்பிப்போன மாரீசன் என்றே அயிர்ப்பதாகவும், பின்னது தெரியும் என்றும், பொன்மான் உலகில் இன்றெனறும், கூறித் தெளி வுடைத் தம்பி 'வெய்ய வல்லரக்கர் வஞ்சம் விரும்பினர் வினையிற் செய்த, கைதவமான்' (ஆரணிய. 786) என்றும், 'பின்

னின்றுரிளையரென்றும் உணர்கிலெம் பிடித்தமாயம் என்னென்றும் தெரிதல் தேற்றும்' (ஆரணிய. 788) என்றும் கூறுதல் காண்க. இவன் கூறியதற்கேற்பவே, 'செய்ய தன்றெனச் செப்பிய தம்பியை, ஐயன் வல்லன் என் ஆருயிர் வல்லனால், உய்ய வந்தவன் வல்லன்' (ஆரணிய. 802) என்று பாராட்டுகின்றான்.

**இலக்குவன் பிரமசரியம்**

பிராட்டியுடன கூடவே வனத்திருந்து சிறிது காலம் தணந்த நிலையில் ஒருநாள் நிலவு வீசுகின்றது. தம்பியை விளித்து, இலக்குவா! 'இதென்ன வெயில் கடுமையா யுள்ளதே' என்ற போது இளவல் 'அண்ணா! திவ்யமான சந்திரிகை யல்லவா' என் கின்றான். இராமபிரான் அவனுடைய நைஷ்டிக பிரமசரிய நிலையைப் பாராட்டுவதாக முதனூல் கூறும். கார்காலம் கடந்து விட்டது. சுக்கிரீவன் தான் வாக்களித்தபடி சேனைகளைத் திரட்டிக் கொண்டு பிராட்டியைத் தேடுவதில் முனைய வில்லை. செய்ந் நன்றி மறந்து வாக்குத் தவறிய, வாநரேந்திர னிடம் சென்று வாலியை வதைத்த அம்பு கையில் உள்ளது என்று நினைவுறுத்தி வருமாறு தம்பியிடம் கூறுகின்றான் இராகவன். இலக்குவன் வீராவேசத்துடன் செல்கின்றான். வாநரர்கள் அஞ்சி இரிகின்றனர். அப்போது வாலி மனைவி தாரை சில மகளிரொடும் அவண் வருகின்றாள். வந்து தன்னைச் சூழ்ந்து நின்ற மகளிரிடையில், 'தாமரை வதனம் சாய்த்துத் தனுநெடுந் தரையின் ஊன்றி, மாமியர் குழுவின் வந்தானென' மைந்தன் நிற் கின்றான். பின்பு தாரையைப் பார்த்தபோது, இலக்குவன் 'இனையராம் என்னை யீன்ற இருவரும' (604) என இரங்கு கின்றான். மற்றும் இராவணன் தன்னைக் கவர்ந்து செல்லும்கால் தான் அணிந்திருந்த பொற் கலன்களை ஓர் வத்திரத்தில் கட்டிக் கிட்கிந்தையில் எறிகின்றாள் பிராட்டி. இந் நகைகளை இராமனிடம் காட்டியபோது, இராமபிரான் தம்பியை நோக்கிப் பொற்கலன்கள் உண்மையில் கொழுந்தியதுதானா என்று கேட்ப, 'நாகம் ஜாநாமி கேயூரே நாகம் ஜாநாமி குண்டலே, நூபுரேத் அகம் ஜாநாமி நித்யம் பாதாபி வந்தனாத்' (வான்மீகம்) என்றதாக முதனூல் கூறும். இவ்வரிய கருத்து இங்குக் கூறப்படாமல், உத்தர

காண்டத்தில் கூறப்படுகின்றது. இராமபிரான் கட்டளைப்படி இளையவன் பிராட்டியை வனத்தில் விட்டுத் திரும்புகின்ருன். திரும்புங்கால், எக்காலமும் அவள் திருவடி தவிர மேனியைக் கண்டதில்லையென்றும், இப்பொழுதோ விடைபெற வேண்டி முகத்தைப் பார்க்க நேர்ந்ததென்றும் வருந்தி விடை பெறுகின்ருன். இந்த அவன் செயல்களிலிருந்து அவனுடைய பிரமசரியத்தை உணரலாம்.

இலக்குவனுடைய வெகுளியும் வீரமும்

இராமபிரானைக் காட்டிற்கு அனுப்பியது கொண்டு கைகேயியின் மீது வெகுண்டெழுந்த இலக்குவனுடைய வெகுளியும் இராமபிரான் அவன் சினத்தைத் தணித்ததும் அயோத்தியா காண்டம் நகர் நீங்கு படலத்துக் கண்டோம். பின்னர்ப் பரதன் கோவிதாரக் கொடியுடன் சித்திரகூடம் வரும்போது, இராமபிரானுடன் பொரக் கருதி வருவதாகத் தவருகக் கருதிச் சினந்தெழுந்தமை அயோத்தியா காண்டம் கிளை கண்டு நீங்கும் படலத்துக் கண்டோம், கார் காலம் வந்ததும் தன் உறுதிமொழிப்படி சேனைகளைப் பிராட்டியைத் தேடுதற்குக் கொணராமை குறித்து இராமபிரான் வெகுள, இலக்குவன் சுக்கிரீவன்மீது சினந்து சென்றதும், பின்னர்த் தாரையால் சினம் தனிந்ததும் கிட்கிந்தா காண்டத்துக் கண்டோம். இனி யுத்த காண்டத்தில் அவனுடைய வீரபராக்கிரமத்தைப் பரக்கக் காணலாம். மாலியவான் இராவணனிடம் ' அன்னவற் கிளவல் தன்னை யருமறை பரமென்ருேதும், நன்னிலை நின்றுதீரா நவையிலா உயிர்கள் தோறும், தொன்னிலை பிரிந்தானென்னப் பலவகை நின்ற தூயோன், இன்னணை யென்ன யாரும் இயம்புவர் (யுத்த. 758) என்று திருமாலின் பாயலான ஆதிசேடன் அவதாரம் என இலக்குவனைக் கூறுகின்ருன். இலங்கை காண் படலத்தில் 'விற்படி திரள் தோள்வீர' (786). 'பூசல் விற்குமர' (787); 'கோனிறக் குனிவிற் செங்கைக் குமரனே' (791); 'தோளவா வரியேறன்ன குரிசிலே' (792); 'கொற்ற வான் சிலைக்கை வீர' (794); 'காவலன் பயந்த வீரக்கார்முகக்களிறே' (795) என்று அவன் வீரத்திறத்தைப் புகழ்கின்ருன். இராவணனிடம் தூதனுப்பலாம் என்று இராமபிரான் கருதியபோது, 'தேவியைச் சிறையில் வைத்தான், தேவரை யிடுக்கண் செய்தான், பூசுரர்க்கலக்கணீந்

தான், மன்னுயிர் புடைத்துத் தினறுன், ஆசையின் அளவு மெல்லா வுலகமும் தானே யாள்வான், வாசவன் திருவும் கொண்டான், வழியலா வழிமேற் செல்வான்' (916), 'வாழியாய் நின்னை யன்று வரம்பறு துயரின் வைகச், சூழ்விலா வஞ்சம் செய்து துணைவியைப் பிரியச் செய்தான்' (917) என்று தேவர்க்கும், அந்தணர்க்கும், பொதுவில் சீவராசிகட்கும் பிராட்டிக்கும் அவன் இழைத்த தீங்குகளைச் சொல்லித் தூதனுப்புதல் கூடாது என்றும், சிறந்தது போரே யென்றும் வெகுண்டு மொழிகின்றுன். முதற் போரில் இராவணன் இலக்குவனை முதல் முதலாகக் கண்டு 'கூற்றின் வெம்புருவ மன்ன சிலை நெடுங்குரல் கேட்டு 'என்னே இவனொரு மனிசன்' என்று சொல்லி வியக்கின்றுன். இங்கு 'Nature might stand up and say to all the world.' 'This was a man' என்று ஜூலியஸ் சீசரைப் பற்றி ஜகப்பிரியர் வரைவது நினைவிற்கு வருகின்றது. போர் நிகழ்ச்சியில் இலக்குவன், பகழி மாரி பொழிகின்றுன். நமனும் உயிரின் போகம் வெறுத்தனன் என்று கூறப்படுகிறது. இராவணனுடன் பொருங்கால், அஞ்சாமல் எதிர்த்துச் 'சீற்றமும் தானுமாக நின்றுன், பெயர்ந்திலன் சிறிதும் பாதம்' (1111). இவ்விடத்து, 'காக்கின்ற வென்னெடுங் காவலின்' (யுத்த. 1112) என்ற செய்யுள் முதலாகச் சில பாடல்கள் அழகிய போர்ச் சந்தத்தில் அமைந்திருக்கக் காணலாம். இங்கு, 'நன்று போர்வலி நன்று போராள்வலி வீரம், நன்று நோக்கமும் நன்று கைக்கடுமையு நன்று, நன்று கல்வியும் நன்று நின்திண்மையும் நலனும், என்று கைம்மறித் திராவணன் ஒருவனீ' (1158) என்று இளைய பெருமானைப் புகழ்கின்றுன். வீரரை யார் வியலாதார்? மேலும் 'கானினின்றிகற் கரன்படை படுத்த வக்கரியோன், தானும் இந்திரன் தன்னை யோர் தனுவலம் தன்னுல், வானில் வென்ற வென்மதலையும் வரிசிலை பிடித்த, யானு மல்லவர் யாருனக் கெதிர்' யுத்த. 1159 என்றும் இசைக்கின்றுன். பின் நிகழ்ச்சியில் இராவணன் தன் வேலினை விட இலக்குவன் சிறிது அயர்கின்றுன். அந்நிலையில் இராவணன் அவனைத் தூக்கிச் செல்ல முயல்கின்றுன். ஆனல் 'எண்வகை மூர்த்தியைத் துளக்கி வெண் பொருப்போடு, எடுத்த தோள்களுக்கு எழுந்திலன் இராமனுக் கிளையான்' (யுத்த. 1165).

இனி, கும்பகன்னன் வதைப் படலத்தில் முதல் நாள் போர் நிகழ்ச்சியைப் பற்றி இராவணன் தன் தாய் மாமனுன மாலிய வானிடம் கூறும்போது, 'முளையமை திங்கள் சூடும் முக்கணன் முதல்'வராகக், கிளையமை புவன மூன்றும் வந்துடன் கிடைத்த வேனும், வளையமை வரிவில் வாளி மெய்யுற வழங்குமாயின், இளையவன் தனக்கு மாற்ருதென் பெரும் சேனை' (யுத்த. 1226) என்று புகழ்கின்ருன், போரில்' 'நாணெறிந்தனன் சிலையினை யரக்கியர் நகுபொற் பூணெறிந்தனர் படியிடை' (யுத்த. 1413) என்று இலக்குவன் போர் வன்மை கூறப்பெறுகிறது. இலக்குவன் பகழித் திறத்தைப் பற்றி 'ஒருவரைக் கரம் ஒருவரைச் சிர மற்றங் கொருவார், குரைகழற்றுணை தோளிணை பிறமற்றும் கொளலால், விரவலர்ப் பெரு வெறுமைய வாயின வெவ்வே, றிரவு கற்றன போன்றன' (யுத்த. 1429) என்றும், 'சிலவரைக் கரம் சிலவரைச் செவி, சிலர் நாசி, சிலவரைக் கழல் சிலவரைக் கண்ணொளும் செயலால், நிலவரைத்தரு பொருள்வழித் தண்டமிழ் நிரப்பும் புலவர் சொற்றுறை புரிந்தவும் போன்றன; (1430) என்றும் இலக்குவன் விடுத்த பகழி புகழப் பெற்றுள்ளது. கும்பகன்னனே, 'செருவில் மாண்டவர் பெருமையும் இலக்குவன் செய்த பொருவிலாண்மையும் நோக்கிய புலத்தியன் மருமான், திரிபுரம் செற்ற தேவனும் இவனுமே செருவின், ஒருவிலாள ரென்ருயிரங்காலெடுத்துரைத் தாள்' (1432). பின் கும்பகன்னன் வீரவாதம் பேச, 'மாற்றங்கள் நும்பால், வில்லினுற் சொல்லி னல்லது வெந்திறல் வெள்கச், சொல்லினுற் சொலக் கற்றிலமியாம்' (1440) என்று மொழிகின்ருன் இளையவன். அதிகாயன் வதைப் படலத்து, 'எண்ணுயிர கோடி யிராவணரும், விண்ணுடரும் வேறுலகத் தவரும், நண்ணு வொரு மூவரும் நண்ணிடினும், கண்ணுமிவன் விற்ருெழில் காணுதி' (1738) என்றும், 'வானென்ப தெவ்வையக மென்பதன் மால், தானென்பதன் வேறு தனிச்சிலையோர், யானென்பதென் ஈசனென் வானவர்தம், கோனென்பதென் எம்பி கொதித்திடுமேல்' (1739) என்றும் வீடணனிடம் கூறுகின்ருன். நாகபாசப் படலத்தில் இலக்குவனுடைய பேராற்றலைக் கண்டு, 'அந்நரனல்லனுகின் நாரணன் அனையன் அன்றேல், பின்னரன பிரமனென்பார்ப் பேசுக பிறந்து வாழும், மன்னர் தம்பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி, இந்நரன் தன்னே டொப்பா ரியாருள ரொருவர்' (2056)

என்று இந்திரசித்து மொழிகின்றான். பின்னும் இராவணன் கேட்க இந்திரசித்து, 'மனிதன் நோன்மை, மந்தரமனைய தோளாய் வரம் புடைத்தன்று' (2224) என்று கூறுகின்றான். பிரமாத்திரப் படலத்தில், 'செய்கின்றாரிருவர் வெம்போர் சிதைகின்ற சேனை நோக்கின், ஐயந் தானில்லா வெள்ள மறுபது மவிக வென்று, வைகின்று ரல்லராக வரிசிலை வலத்தான் மாள, எய்கின்று ரல்ல ரீதென் இந்திரசாலம்' (2400) என்று வியக்கின்றான். 'இப்திரன் பகையெனு மிவனையென் சரம், அந்தரத் தருந் தலையறுக்கலாதெனின், வெந்தொழிற் செய்கையன் விருந்துமாய் நெடு, மைந்தரிற் கடையெனப் படுவன் வாழியாய்' (யுத்த. 2415) என்று இளையவன் சூளுறவு கொள்வதிலிருந்து, அவனுடைய பேராண்மை அறியலாம். 'கொன்று கடன் கழிப்பதாகக் கூறிய இந்திரசித்தின் முன்பாக' 'அரக்கர் என்பதோர் பெயர் படைத்தார்க்கெலா மடுத்த. புரக்கு நன் கடன் செயவுளன் வீடணன் போந்தான், கரக்கு நுந்தைக்கு நீ செயக்கடவன கடன்கள், இரக்க முற்றுனக்கவன் செயும்' என மொழிகின்றான். இனி இந்திரசித்து வதைப்படலத்து நிலஞ் செய்து விசும்பும் செய்து நெடியவள் படை நின்றானை, வலஞ் செய்து போவதானல் மற்றொரு பொருளும் உண்டோ, குலம் செய்த பாவத்தாலே கொடும்பழி தேடிக்கொண்டாய். சலம் செயின் உலக மூன்றும் இலக்குவன் முடிப்பன் தானே' (யுத்த. 3054) என்று இந்திரசித்தே புகழ்வதும் இங்குக் காணத்தகும்.

**சீதாதேவி**

'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்', 'மையறு மலரினீங்கி மிதிலை வந்தவள்' 'கமலச் செல்வி' 'தாமரை தவிரப் போந்தாள்', 'அமிழ்தின் வந்த தேவி' என்று திருமகள் அவதாரமாகவே கூறப்பட்ட சீதாதேவியைக் கம்பநாடர் சித்திரிப்பதைச் சிறிது நோக்குவோம், 'செப்புங்காலைச் செங்கமலத்தோன் முதல் யாரும், எப்பெண்பாலும் கொண்டுவமிப்போர் உவமிக்கும் அப்பெண்' (பால. மிதிலைக். 24); என்பது கவிக் கூற்று. அழகிவளைத் தவம் செய்து பெற்றது காண் என்பது. (பால. கார்முக. 19; காண்க) பிராட்டியின் பேரழகைப் பலர் கூறுவதை விட, நேர் எதிரியான சூர்ப்பணகை கூற்றை

நோக்குவோம். 'அழகினுக் கெல்லையில்லை, கண்பிற பொருளிற் செல்லா, கருத்தெனினஃதே கண்ட, பெண்பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறர்க்கு' (ஆரணிய. 278) என்கின்றாள். இங்கு இக்கூற்றுடன் கோசிக முனிவன் கூறும், 'ஆடவர் பெண்மையை யவாவும் தோளினாய்' (பால. தாடகை. 24) என்ற சொற்களை ஒப்பு நோக்குக. இராமபிரான் 'பும்ஸாம் மோகன ரூபாய' என்றபடி விளங்கினான். கதாநாயகன் பெருமைக்கு லவலேசமும் குறையாத படி, பிராட்டியும் பெண்களால் காதலிக்கப்பட்ட நிலையிலிருந்தாள்' என்று இங்குக் கூறப்பட்டது. இங்கு பெண்களும் ஆண்மைய வாவும் தன்மையளாக என்று கூறாமல், என்படும் பிறருக்கென்று நயம்பட உரைக்கின்றாள். சீவகசிந்தாமணி ஆசிரியர் 'பெண்டிரும் ஆண்மை வெஃகிப் பேதுறு முலையினாளை' (சீவக. 587) என்றார். சூர்ப்பணகை கூற்றுக்கும் இத்தொடர்க்கும் உள்ள வேறுபாட்டினை உய்த்துணர்க. பிராட்டிக்குக் கோலம் செய்யும்போது 'தஞ்சொற்கள் குழறித் தத்தம்தகை தடுமாறி நின்றார், மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்ப தொன்றே யன்றோ' (பால. கோலங். 19) என்பதும் இங்குக் காணத்தகும். சித்திரகூடப் படலத்தில், 'ஆடுகின்ற மாமயிலினு மழகிய குயிலே' (12) என்று பிராட்டியின் சாயல், குரல்களையும், 'வில்லி வாங்கிய சிலையெனப் பொலிநுதல் விளக்கே' (13) என்று அவள் நுதலினையும், அகிலைவி தேனாறும், சோனைவார் குழற் சுமைபொறா திடுகிடைத் தோகாய்' (19) என்று அவள் கூந்தற் பாரத்தையும் சிறுகிய இடையையும், ஒருவில் பெண்மை யென்றுரைக்கின்ற வுடலினுக் குயிரே' (14) என்ற அவளுடைய அப்பழுக்கற்ற பரிபூரணமான பெண் தன்மையையும் 'குழுவு நுண்டொளை வேயினுங்குறி நரம் பெறிவுற், றெழுவு தண்டமிழ் யாழினு மினிய சொற்கிளியே' (28) என்று அவள் குரலொடு கிளி மொழியையும், வடுவின் மாவகிரி வையெனப் பொலிந்த கண்ணையும், 'தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச் செய்த திருவே' என்று பெண்பாலர்களின் அழகு குணம் என்ற இவைகட்கு மேல்வரிச் சட்டமாக அமைந்த லாவண்யைத் தையும் புகழ்வர் இராமபிரான். மற்றும் கிட்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில் அவளுடைய பல்வேறு உறுப்பிலக்கணங்

களையும் குறித்து விரிவாகச் சிறிய திருவடிக்கு இராமபிரான் கூறு தலும் இங்குக் காணத்தகும். கவிஞர் பெருமான், 'உழைகுலா நயனத்தார் மாட்டொன் றென்றே புகறற் கொத்த, அழகெலாம் ஒருங்கே கண்டால் யாவரே ஆற்றவல்லார்? என்றதும் காண்க.

மேலே சூர்ப்பணகை பிராட்டியை வருணித்ததைக் கூறி னோம். மாயாசனக படலத்தில் இராவணன் கூறுவதைப் பார்ப் போம், 'பண்களாற் கிளவி செய்து பவளத்தால் அதரமாக்கிப், பெண்களானார்க்குள் நல்ல உறுப்பெலாம் பெருக்கி யீட்டி, பெண் களா லளவாமானக் குணந் தொகுத்தி யற்றினுனை' (1571) என்று கூறுகின்றான். இனி பிராட்டியின் திருமேனியெழில் ஒருபுற மிருக்க அவள் உயரிய பண்புகளை நோக்குவோம். 'எண்களால் ளவா மானக் குணம் தொகுத்தி யற்றினுள்' என்றது இலங்கேசன் கூற்று. அவன் கூறிய அக் குணங்களுள் பாதி விருத்தியம் என்ற பண்பு அடங்கவில்லை போலும். கோலங்காண் படலத்து 'குணங்களை யென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவையுய்ய, அழகிவளைத் தவம் செய்து பெற்றது' எனப்பட்டது. இவ ளுடைய பலபண்புகளையும் இனிச் சொல்லின் செல்வனை அநு மன் வாயிலாகக் கேட்போம். இலங்கை சென்று தன் திறமையைக் காட்டி மீண்டு வந்த சிறிய திருவடி, 'கண்டனன் கற்பினுக் கணியை' என்கின்றான். கற்பு மங்கையரை அழகு செய்யும், இங்கு கற்பினையே பிராட்டி அழகு படுத்தியதாகக் கூறிய நயம் ஓர்க. உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும் (1270) என்ற பாடலில், இராமபிரானுக்கு ஏற்றவள் தானே பிராட்டி என்பதற்குப் பதிலாகப் பிராட்டிக்கு ஏற்றவன் தானே பெருமான் என்றும் மாற்றி யுரைக்குமாறு விளங்கினாள் சீதாதேவி என்பது தோன்றத் 'தகைமைக்கும் தகைமை சான்றாள்' எனப்பட்டது. மற்றும் மாருதி இராமபிரானை நோக்கி, 'நீர் என் தெய்வம், ஆயினும் பிராட்டி என்பெரு தெய்வம் என்று கூறிப் பிராட்டி தன் குலம் தன்னதாக்கிக் காண்டாள் என்றும் மொழிந்து, சொற்பொருள் நயம் சிறந்து விளங்குமாறு 'நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன், இற்பிறப்பென்ப தொன்றும், இரும்பொறை

யென்பதொன்றும், கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273) என்று பிராட்டியிடம் தலைசிறந்து விளங்கிய உயர்ந்த குடிப் பிறப்பு, பொறுமை, கற்பென்ற மூன்றினையும் உயர்த்துக் கூறுகின்றாள். இம்மட்டோ இலங்கையில் சிறையிருந்த ஈரைந்து திங்களும் கற்பச் சோலையங்கதனில் இலக்குவன் தொடுத்த தூய சாலையினிருந்து கொண்டு, இலங்கை பூமியும் மிதிக்கவில்லை யென்றும் கூறிப் பிராட்டியைப் புகழ்கின்றான். இலங்கை நீரையும் பருகாமை, 'தீர்விலே னிதொரு பகலுஞ் சிலை, வீரன் மேனியை மானுமிவ் விங்குநீர், நார நரண மலர்ப் பொய்கையை நண்ணுவேன், சோருமாருயிர் காக்கும் துணிவினால்' (சுந்தர. 631) என்ற பிராட்டி கூற்றைக் கொண்டே உணர்க. இங்கு 'நண்ணுவேன் என்றாளன்றி, நண்ணிப் பருகுவேன் என்று கூறாமை யுய்த்துணர்க. பெருமானைத் தணந்த நிலையில் 'பாலும் கசந்தருந் தேனும் புளித்தறக் கைக்குமன்றோ' எனவே இலங்கை நீரும் பருகினாளல்லள் என்றே கொள்க.

இனிக் கும்பகன்னன் 'அலகில் கற்புடைச் சானகி' (யுத்த. 1283); என்றும் 'திட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை' (யுத்த. 1284); என்றும் கூறுகின்றான். இராமபிரான் தோள்களை வெல்லுவதும், சீதை மேனியைப் புல்லுவதும் இயலாத காரியம் என்று இராவணனிடம் கூறுகின்றான். 'சேயவள் எளியள் என்னுஞ் சீதையை யிகழலம்மா, தூயவள் அமிர்தினோடும் தோன்றினாள் என்றும் தோன்றாத் தாயவள் உலகுக்கெல்லாம்' (யுத்த. 762) என்பது மாலியவான் கூற்று. 'அணிபறித்தழகு செய்யும் அணங்கு' என்கின்றான் அங்கதன். இங்கு 'உமிழ் சுடர்க்கலன்கள் நங்கை யுருவினை மறைப்பதோரார், அமிழ்தினைச் சுவை செய்தென்ன, அழகினுக் கழகு செய்தார்' (பால. கோலங். 3) என்றதை ஒப்பு நோக்குக. 'செயிர்ப்பினுமழகு செய்யும் திருமுகத்தணங்கை' (யுத்த. 706) என்பதும், 'குயிலும் கரும்பும் செழுந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும், அமிரு மமுதும் சுவை நீத்த மொழி' (ஆரணிய. 1058) என்பதும் கவிக் கூற்று. 'பெருஞ்சிறைக் கற்பினாள்' (2820) 'பத்தினித் தவத்துளாள்' 'பிழைப்பிலாள்' (2821); 'தவம்

செய்த தவமாந் தையல்' (சுந்தர. 619) என்பன அநுமன் கூற்று: 'தவத்தியை தருமக் கற்பின் தெய்வந் தன்னை' (3836); 'காந்தை யருக்கணி யனைய சானகியார் பேரழகு மவர் தங் கற்பும்' (3880) என்பது மண்டோதரி கூற்று. மீட்சிப் படலத்தில் இராமபிரான் ஏவலால் இளையவன் தீமூட்ட அதில் புகுதற்கு ஆயத்தமாகி நின்ற பிராட்டி 'மனத்தினுள் வாக்கினல் மறுவுற்றேனெனின், சினத்தினற் சுடுதியாற் றீச்செல்வா' என்று கூறி அங்கியிற் புக்கதும், பிராட்டியின் கற்புத் தீயினுல் அங்கிக் கடவுள் வெந்து, இராமபிரான் முன்னர் வந்து 'உதித்த வேர்கள் வாடாமலும், பாடிய வண்டொடும் பனித்த தேனெடும், சூடிய மலர்களுடனும்' (3979) விளங்கிய பிராட்டியைத் தாங்கி வந்து, 'அங்கியா னென்னையிவ் வன்னை கற்பெனும், பொங்கு வெந்தீச் சுடப் பொறுக்கிலாமையால், இங்கணைந்தேன் உறுமியற்கை நோக்கியும், சங்கியா நிற்றியோ வெவர்க்கும் சான்றுளாய்' (3983) என்று கூறிப்பணிந்த அளவில் இராமபிரான் 'பழிப்பிலள்' என்று ஏற்றுக் கொண்டதும் காண்க. இன்னும் பிராட்டியின் பல்வேறு கல்யாண குணங்களை இக் காண்டம் உரைப்பகுதியில் ஆங்காங்கு விளக்கியன கொண்டும் தெளிக. சிறையிருந்தவள் ஏற்றம் கூறுவதே இராமாயண காவியம் என்பர் பேரறிஞர். மற்றும் இப் பிராட்டியின் பெருங் கருணையை, அரக்கிகளைக் கொல்வதற்காக உத்தரவு கேட்ட அநுமனிடம், 'அரக்கியர் செய்த குற்றம் யாது இராவணன் ஏவற் படியே செய்தனர்' என்று கூறுவது கொண்டு காண்க.

அநுமன்

வாயுவின் புதல்வன், அஞ்சனைக்கொரு சிறுவன். 'வாயு மற்றெனது கூறு மாருதி' (பால. திருவவ. 28) என்றும், 'புராரி மற்றியானே வாதசேய்' (பால. திருவவ. 28); என்றும் முறையே திருமாலும் சிவபெருமானும் கூறுமாறு நின்றவன். 'இல்லாத வுலகத் தெங்குமிங்கிவன் இசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக்கடலுமே என்னும் காட்சி, சொல்லாலே தோன்றிற் றன்றே யார்கொலிச் சொல்லின் செல்வன்' (கிட்கிந்தா. 61) என்று இராமபிரானும், 'காதனுன் முகனுலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன் சென், றோதினுன் ஓதநீர் கடந்து பகை கடிந்துலகை

யுய்யக் கொண்டான்' (யுத்த. 408) என்று கம்பநாடரும் புகழுமாறு விளங்கியவன். பிரமதேவன் வரத்திஞல் நினைத்த வுருவம் கொள்ளும் ஆற்றல்மிக்கவன். 'இத்துணைச் சிறியதோர் எண்ணில் யாக்கையை, தத்தினை கடலது தவத்திஞயதோ, சித்தியினியன்றதோ செப்புவாய்' (சுந்தர. 586) என்று பிராட்டி வியக்குமாறு நின்றவன். 'ஆரியன் முன்னர்ப் போதுற வுற்ற வதனுனும், காரிய மெண்ணிச் சோர்வற முற்றும் கடனுனும், மாருதி யொப்பார் வேறிலை யென்ன' அயன் மைந்தன் அநுமனைப் பற்றிக் கூறுங்கால், அவனுடைய சிரஞ்சீவித் தன்மையையும், நல்லவை தீயவை நாடி நவைதீரச் சொல்லும் வன்மையையும், எண்ணிக் கருமம் துணியும் பெருமையையும், அவனுடைய பேருருவத்தையும், அணுவில் அணுவாகவும் மேருவில் மேருவாகவும் ஒளிரும் சித்தி வன்மையையும், சூரியனைச் சென்று தொடும் அவன் பேராற்றலையும், புகழ்கின்ருன். மற்றும் இராமபிரானிடம் வாலியின் பேராற்றலையும் அவன் அதிக்கிரமங்களையும் கூறி அவனை ஒழிக்கும்படியும் சுக்கிரீவனுக்கு முடி புனைவிக்குமாறும் செய்த அவனுடைய திறத்தைக் கருதி, 'அறிந்து திறத்தா றெண்ணி யறத்தா றழியாமை, மறிந்துருளப் போர் வாலியை வெல்லு மதிவல்லீர்' என்றும் மொழிகின்ருன் சாம்டன். 'நீதியினின்றீர் வாய்மை யமைந்தீர் நினைவாலும், மாதர் நலம் பேணுது வளர்ந்தீர் மறையெல்லாம், ஓதி யுணர்ந்தீர் ஊழி கடந்தீர் உலகினும், ஆதியயன்ருனே யென யாது மறைகின்றீர்' (கிட்கிந்தா. 992) என்றும், கருமமே கண்ணுகக் கொண்டு, புண்ணியம் ஒன்றே நிலைத்த பொருள் என்றும் கொண்டவன் என்றும் புகழ்வதும் இங்கே உணரத் தகும். இலங்கையை முழுதும் நாடி யிராவண னிருக்கை யெய்திப் பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் பொங்தேன்' (சுந்தர. 1279) எனறு மாருதியே கூறுவது கொண்டும், மீட்சிப் படலத்துக் கிட்கிந்தையில் இருந்த வாநர மகளிரை அழைத்து வருமாறு அங்கதன் முதலானவர்களிருக்க அநுமனையே சுக்கிரீவன் பணித்தமை கொண்டும், இவனுடைய நைட்டிக பிரமசரியத்தை அறியலாம். அடங்கவும் வல்ல காலமதன்றேல் அமர் வந்தால், மடங்கல் முனிந்தாலன்ன வலத்தன் மதி நாடித் தொடங்கிய தொன்ருே முற்று முடிக்கும் தொழில் வல்லவன் என்றும், இவன் புகழப் பெற்றமையும் காண்க.

அடங்கவும் வல்லன் என்பதை, 'ஊர்தேடு படலத்தில், இராவணனை அவன் மாளிகையில் கண்டு அவனைக் கொன்றுவிட முதலில் எண்ணிப் பின்பு, தன் சினத்தை யடக்கிக் கொண்டு, 'நின்றாக்கி யுணர்ந்துரைப்பா னேமியா னருளன்றால், ஒன்றாக்கி யொன்றிழைத்த லுணர்வுடையார்க் குரித்தன்றால், பின்றாக்கினவை சாலப் பிழை பயக்கும்' (சுந்தர. 316) 'ஆலம்பார்த் துண்டவன் போலாற்ற லமைந்துளரெனினும், சீலம்பார்க் குரியோர்கள் எண்ணாது செய்பவோ, மூலம்பார்க்குறி னுலகை முற்றுவிக்கும் முறை தெரினும், காலம் பார்த்திறை வேலை கடவாத கடலொத்தான் (317) என்று கூறுதல் கொண்டு தெளிக.

அநுமன் வீரம்

தன்னைக் கொல்வதற்காகப் பெரு முயற்சி செய்து இராம பிரானைச் சுக்கிரீவனுக்கு அபயம் நல்குமாறு செய்த விரோதியான அநுமனை 'ஆழி ஐய நின் செய்ய செங்கைத் தனுவெனநினைதி' என்று வாலி இராமபிரானிடம் கூறுகின்றான். இலங்கை கேள்விப் படலத்தில் 'கூட்டினார் படை பரகத்தின் மேற்படக் கொன்றாய், ஊட்டினா யெரியூர் முற்று மினியங் கொன்றுண்டோ, கேட்டவாற்றினாற் கிளிமொழிச் சீதையைக் கிடைத்தும், மீட்டிலாதடுதன் விற்றொழிற் காட்டக் கொல்வீர' (யுத்த. 527) என்றும், 'நின்செய் தோள்வலி நிரம்பிய விலங்கையை நேர்ந்தோம், பின் செய்தோளுஞ் சிலவவையினிப் பீடின்று பெறுமோ, பொன் செய் தோளினாய் போர்ப்பெரும் படைகொண்டு புகுந்தோம், என் செய்தோமென்று பெரும் புகழெய்துவா னிருந்தோம்' (யுத்த. 528) என்றும் பாராட்டி, 'என்ன தாக்கிய வலியொடவ் விராவணன் வலியும், உன்ன தாக்கினை பாக்கிய முருக்கொண்ட தொப்பாய், முன்ன தாக்கிய மூவுலகாகிய முதலோன், பின்ன தாக்கிய பதமினக்காக் கினன் பெற்றாய்' (யுத்த. 529) என்று அவனுக்கு பிரம பதம் அளிக்கின்றான். இதனைப் பின்னர், 'காலனை யொக்குந் தூதன் காலுங் கண்ணுதலு மென்றார், மேலுமொன்றுரைத்தார் அன்னான் விரிஞ்சனா மினிமேல்' (யுத்த. 760) என்ற மாலியவான் கூற்றிலும் காண்க. பின்னரும் மாதுலத் தலைவன் 'புக்கெரி மடுத்திவ்வூரைப் பொடி செய்து போயினாற்குச், சக்கரமுண்டோ கையில் தனு

வுண்டோ வாளியுண்டோ' (யுத்த. 899) என்றும் கூறுதலும் காண்க. முதல்நாட் போரில், இராவணன் முன்னிலையில் நின்று, அநுமன் 'என தோள்வலியதனு லெடுத்தியா லொற்றவுமிறவா, நின்றுயெனி னீபின்னெனே நின் கைத்தல நிரையால் மிடல் கொடு குத்துதிருத்தப், பொன்றேனெனின் நின்னேடெதிர் பொருகின்றிலென்' (யுத்த. 1121) என்று சூளுரைக்கின்றான். பின்னர் அநுமன் இராவணனைக் குத்திய குத்தின் விளைவை யுதத. 1129–1137ல் காண்க. அங்கு அநுமன் திறத்தை இராவணன் பாராட்டுகின்றான் (யுத்த. 1136). முதற்போரிலேயே மூர்ச்சித்து வீழ்ந்த இலக்குவனை இராவணன் தூக்க முயன்றும் தூக்க முடியவில்லை. அப்போது அநுமன் அந்த இலக்குவனை 'மகவு கொண்டு போய் மரம்புகு மந்தியை நிகர்த்தான்' (யுத்த 1168) என்று கூறப்பெற்றுள்ளது, கும்பகன்னன் சூலத்தை அநுமன் மீதெறிய அதன் ஓசையானது 'சித்திரவன மூலச் சீதை செவ்வியால், முத்தனுர் மிதிலை மூதறிவு முற்றிய, பித்தன் வெஞ்சிலையினை யிறுத்த பேரொலி, யொத்தது சூலமன்றிற்ற வோசை' (யுத்த. 1465) என்று கூறப் பெற்றுள்ளது. நாகபாசப் படலத்தில் 'வில்லெடுக்க வுரியார்கள் வெய்ய சிலை வீரரிங்குமுளர் மெல்லியோய், கல்லெடுக்க வுரியானு நின்றன னதின்று நாளையிடை காணலாம். (யுத்த. 2010) என்று அநுமன் இந்திரசித்தினை நோக்கி வீரம் பேசுகின்றான். மற்றும் அநுமனின் கடும் போர்த் திறத்தைப் பிரமாத்திரப் படலத்து (2488-2494)க் காண்க,

அநுமன் அருஞ் செயல்

இராமபிரானுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்புச் செய்து வைத்தவன். பின்னர் 'ஆழிகாட்டிப் பிராட்டிக்கு ஆருயிர் காட்டியவன். இராம இலக்குவர் பொருத காலத்து அவர்கட்கு வாகனமாக நின்று தாங்கியவன். பிரமாத்திரத்தினுலும் இராவணன் விடுத்த வேற்படையாலும் இலக்குவன் முதலானேரெல்லாம் இறந்து கிடந்த நிலையில் மருத்துமலை கொண்டு வந்து உயிர் தந்தவன். இவனுடைய அரிய உதவியைப் பாராட்டி 'முன்னிற்றேன றினேர் முறையி னீங்கலா, தென்னிற்றேன்றிய துயரி னீறுசேர், மன்னிற்றேன்றினே முன்னமாண்டுளோம், நின்னிற்றேன்றினேம் நெறி

யிற் றேன்றினேம்' (யுத்த. 2747) என்றும் 'அழியுங் காற்றரு முத வியையனே, மொழியுங் காற்றரு முகிலின் முற்றுமே, பழியுங் காற்தரு பகையும் காத்தனை மறையும் காத்தனை' (2748) 'ஊழி காணுநீ யுதவினையரோ' (2749); 'இன்று வீகலா தெவரு மெம் முடன், நின்று வாழுமா நெடிது நல்கினுய், ஒன்று மின்னல் நோயுறு இலாது நீ, என்றும் வாழ்தியா வினிதெனேவலால்' (2750) என்று வாழ்த்துகின்றான் இராமபிரான். முன்னர்ச் சுந்தர காண்டத்திலும், 'மும்மையாலுலகம் தந்த முதல்வர்க்கு முதல்வன் தூதாய்ச், செம்மையால் உயிர் தந்த அவனை, 'யான் மறுவிலா மனத்தான் என்னின், ஊழியோர் பகலா யோதும் ஆண்டெலாம் உலகமேழும் ஏழும் வீவுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' (சுந்தர. 561) என்று பிராட்டி வாழ்த்தியதைக் கண்டோம். இராவணன் வேலை விடுத்த பொழுது அந்த வேலைத் தாங்குவதற்கு முன் சென்றனன் அநுமன். இதனால் அவனுடைய தியாக வுணர்ச்சியை அறியலாம். மற்றும் இவன் சொல்வன்மை சமயோசித அறிவு, நன்றி யறிவு, இராமபக்தி முதலியவற்றை இக் காண்டத்தின் உரைகொண்டு தெளிக.

வீடணன்

இராவணன் தம்பி. இவன் அதருமமே மேலிட்டிருந்த இலங்கையில் ஒளிந்து வாழ்தரும் தருமம் போன்றிருந்தவன். தமையனுக்கு இராமபிரானுடைய உண்மை நிலையை அறிவித்துப் போர் செய்ய வேண்டாம் என்று தடுத்தவன். புத்திரர் குருக்கள் நின் பொருவில் கேண்மையர் முதலான அனைவரும் இராமபிரானும் அவன் நண்பர்களுஞ் சித்திரவதம் செய்து விடுவர் என்றும் அவர்களுடன் பகை வேண்டாம் என்றும் கூறியதுடன் மிகவும் பராக்கிரமசாலியான இரணியன் வரலாற்றையும் விரித்துக் கூறியவன். பின்னர் இராவணன் கேளாமையினல் இராமபிரானிடம் சரணுகதியடைந்தவன். இவனுடைய நற் பண்புகளைப் பற்றி அநுமன் பலபடியாக இராமபிரானிடம் கூறி நின்றமை வீடணன் அடைக்கலப் படலத்துக் காண்க. வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன், நுணங்கிய கேள்வியான். மகா கண்டகனை இராவணன் தம்பியான தன்னையும் தஞ்செனக் கருதி அபயம் அளித்த இராம

பிரானுடைய கருணையைப் பலபடப் பாராட்டி நின்று இராம பிரானால் உடன் பிறந்தவனாகத் தழுவப் பெற்றவன். 'குகனொடு மைவரானோம்' (யுத்த. 449) என்ற செய்யுளைக் காண்க. இராம பிரான் வினவ இலங்கையின் தோற்றத்தையும், அமைச்சர் காவலர் முதலியோரையும், நால்வகைப் படைகளையும், அரக்க வீரர்களைப் பற்றியும் எடுத்துக் கூறியவன். 'பாம்பறியும் பாம்பின் கால்' என்றபடி அரக்கர் சூழ்ச்சியனைத்தும் அறிந்து இராமபிரானிடம் அவ்வப்பொழுது அறிவித்து இராமபிரானுடைய வெற்றிக்குக் காரணமாயிருந்தவன். இராவணன் அனுப்ப மாறுவேடம் பூண்டு வந்த ஒற்றர்களை யொறுக்கத் தொடங்கிப் பின் இராமபிரான் வேண்டச் சினம் தணிந்தவன்; யுத்த. 711-716. கும்பகன்ன னுக்குச் சிறந்த அறிவுரைகளைக் கூறி இராமபிரானிடம் அடைக் கலம் புகுமாறு வேண்டியவன். 'நீதியும் தருமம் நின்ற நிலைமையும் புலமை தானும், ஆதியங் கடவுளாலே யருந்தவ மாற்றிப் பெற்றாய், வேதியர் தேவன் சொல்லால் விளிவிலா ஆயுள் பெற்றாய்' (1339) என்று கும்பகன்னனாற் பாராட்டப் பெற்றவன். வீடணன் கும்ப கன்னனுக்குக் கூறிய அறிவுரைகளை யுத்த. 1343-1357ல் காண்க. நாகபாசத்தால் பிணிப்புண்டு வீழ்ந்த இலக்குவனை நோக்கித் 'நேசத்தாரெல்லாம் வீழ்ந்தாரி யானொரு தமியனின்றேன், தேசத் தார் என்னை யென்னே சிந்திப்பா'ரென்று நைந்து 'கொல்வித்தா னுடனே நின்றங்கென்பரோ கொண்டு போனான், வெல்வித்தான் மதலையென்று பகர்வரோ விளைவிற் கெல்லாம், நல்வித்தாய் நடந் தான் முன்னே யென்பரோ (யுத்த. 2146) என்று உலகோர் கூறும் பழிச் சொல்லுக் கஞ்சியவன், தெளிவுடை யுள்ளத்தனாய்ப் பிரமாத் திரத்தால் அனைவரும் அடியுண்டு வீழ்ந்த போது, 'பாசம் போயிற்றாற் போலப் பதுமத்தோன் படையுமின்றே, நாசம் போயெய்தும் நம்பி தம்பிக்கு நாசமில்லை, வீசும் போர்க்களத்து வீழ்ந்த சேனையு மீளும் வெய்ய, நீசன் போர் வெல்வதுண்டோ' (யுத்த. 2645) என்று கூறி இருளூடே சென்று சாம்பனைக் கண்டு, அநுமனைக் கொண்டு மருத்துமலை கொணர்ந்து யாவரையும் பிழைப்பு மூட்டியவன். மாயாசீதைப் படலத்தில், இராமபிரானைத் தேற்றி, அனைத்தும் மாயச் செயல் என்றும் சொல்லி, 'பத்தினி தன்னைத் தீண்டிப் பாதகன் படுத்த போது, முத்திறத் துலகும் வெந்து சாம்பராய் முடியும்' என்றும் சொல்லி வண்டினதுருவம்

கொண்டு மானவன் மனத்திற் சென்று, கண்களாற் கருத்தால் ஆவி, உண்டிலை யென்னச் செய்த வோவியம் ஒத்தவளான பிராட்டியைக் கண்டு 'இருந்தனள் தேவியானே யெதிர்ந்தனன் எண்கணூர, அருந்ததிக் கற்பினுளுக் கழிவுண்டோ' (யுத்த. 2867) என்று மொழிந்தவன். பின்னர் நிகும்பிலை யாகம் நடக்கவொட்டாத படி இலக்குவனுக்குப் பல மறைகளைக் கூறி நின்றவன். நிகும்பிலை யாகப் படலத்து இந்திரசித்துப் பலவாறு ஏசியபோது, 'வெவ்விது பாவம் சாலத் தருமமே விழுமிதைய', 'அறந் துணையாவதல்லா லருநரகமைய நல்கும், மறந்துணையாக மாயப் பழியொடும் வாழ மாட்டேன்', 'உண்டிலெ னறவம் பொய்ம்மை யுரைத்திலென் வலியா லொன்றும், கொண்டிலென் மாய வஞ்சம், குறித்திலென் யாரும் குற்றம், கண்டிலரென்பால் உண்டே, நீயிரும் காண்டிர் அன்றே, பெண்டிரிற் றிறம்பினுரைத் துறந்தது பிழையிற்ருமோ', 'அறத்தினைப் பாவம் வெல்லா தென்னுமதறிந்து நானே, திறத் தினு முறுமென் றெண்ணித், தேவர்க்குந் தேவைச் சேர்ந்தேன். புறத்தினிற் புகழேயாக பழியொடும் புணர்க போதச் சிறப்பினிப் பெறுக தீர்க' என்றும் மொழிந்தவன். இச் சொற்களினின்றே வீடணனுடைய தூய தன்மையும், தருமத்தில் அவன் வைத் திருந்த மனப்பான்மையும் நன்குணரலாம். இராவணன் மோக ஞாத்திரத்தை ஏவத் திருமாலின் படையை அவன்மீது ஏவுமாறு இராமபிரானுக்கு உரைத்தவன். மற்றும் இவனுடைய நன்றி யறிவு, வீரம், இராம பக்தி, சமயோசித புத்தி முதலியவற்றையும் சொல்லாலும் செயலாலும் இராமபிரானுக்கு ஆற்றிய பேருதவி களையும் இக் காண்டத்தின் உரை கண்டு தெளிக. இராமபிரானே இலக்குவனை நோக்கி 'இது வீடணன் தந்த வெற்றி' என்றமை யும் காண்க.

**சுக்கிரீவன்**

சூரியன் புதல்வன். தமையன் ஆன வாலி வருத்தவே அநு மன் உதவியால் இராமபிரானைச் சரணடைந்து கிட்கிந்தா ராஜ்யத் தினை முடிசூட்டிக் கொண்டு, பெருமானுல் உடன் பிறந்தோர்களில்

ஒருவனாகத் தழுவப் பெற்றவன். பெருமானுடைய எளிவந்த தன்மையையும் கருணையையும் இதர பெருவமகளையும் கண்டு, 'அமரர்க்கெல்லாம் தேவராந் தேவரே, மாறியிப் பிறப்பில் வந் தார் மானுடராகி' (கிட்கிந்தா. 96) என்று தேறினவன். ஏராள மான வானர சேனைகளுடன்கூட இராமபிரானுடன் இலங்கை சேர்ந் தவன். இவன் கூடச் சென்ற வானர சேனை எழுபது வெள்ளம் என்ப. 'நாயகன் சுச்கிரீவனென்றுளன் நவையிற்றீர்ந்தான்' என்று அநுமனாற் புகழப் பெற்றவன். இவனுடைய நன்றியறிவும் ஆண்மையும் சமயோசித அறிவும், தியாக வுணர்ச்சியும் பிறவும் காப்பியத்தினூடே பல்லிடங்களிலும் காணலாம். இவனைக் குறித்து 'கையவன் தொடவமைந்த கரத்தான், ஐயவாலி யொடிவ் வண்டநடுங்கச், செய்தவன் செருவினிற் றிகழ்கின்றான், வெய்யவன் புதல்வன் யாரினும் வெய்யான்' (யுத்த. 821) என்று சாரன் இராமபிரானிடம் கூறுகின்றான். இராவணன்மீது தாவி அவனை மகுடபங்கம் செய்தவன். இதனை 'வெஞ்சமம் விளைக்கும் வேலை, வன்றிறலரக்கன் மௌலி மணிகளை வலியால் வாங்கி' (யுத்த. 365) என்றது கொண்டு காண்க. இராமபிரான் இவனைக் காணாமல் வருந்திக் கண்டவுடன் அவனுடைய எண்ணித் துணியாத செயலை யிடித்துக்கூற, 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தது காட்ட மாட்டேன், நாட்டிலே குகனார் செய்த நன்மையை நயக்கமாட்டேன், கேட்டிலே னல்லேனின்று கண்டுமக்கிளி யன்னாளை, மீட்டிலேன் தலைகள் பத்தும் கொணர்ந்திலேன் வெறுங்கை மீண்டேன்' (யுத்த. 872); 'நூல்வலி காட்டும் சிந்தைநும் பெருந்தூதன் வெம்போர், வேல்வலி காட்டினார்க்கும் வில்வலி காட்டினார்க்கும், வால்வலி காட்டிப் போந்த வளநகர் புக்கு மற்றென், கால்வலி காட்டிப் போந்தேன் கைவலிக் கவதியுண்டோ' (யுத்த. 875) என்று சுக்கி ரீவன் கூறிய அருமையான பாடல்கள் இங்கு நினைவு கூரத்தகும். இங்கு, 'பார்குலாம் செல்வ நின்னை யிங்ஙனம் பார்த்த கண்ணை, யீர்கிலாக் கள்வன் யானி னின்னலி னிருக்கை நோக்கித் தீர் இலேன்' (அயோத்தி. கங்கை. 44) என்ற குகன் கூற்றொடும் ஒப்பு நோக்குக. சுக்கிரீவன் ஆற்றிய இந்த அரிய செயலை 'வாங்கிய மணிகளன்னான் தலைமிசை மௌலி மேலே, ஓங்கிய வல்லவோ மற்றினி யப்பாலுயர்ந்ததுண்டோ, தீங்கவன் சிரத்தின் மேலு மூயி ரினும் சீரிதம்மா, வீங்கிய புகழை யெல்லாம் வேரோடும் வாங்கி

விட்டாய்' (யுத்த. 877); 'பாரகம் சுமந்த பாம்பின் பணமணி பறிக்க வேண்டின், வார்கழற் காலினாலே வவ்வவல்லவனை முன்னாத், தார் கெழு மௌலி பத்தின் தனிமணி வலிதில் தந்த, வீரனை விடை வலோற்கும் முடியுமோ' (யுத்த. 878); 'கருமணி கண்டத்தான்றன் சென்னியிற் கறைவெண்டிங்கள், பருமணி வண்ணன் மார்பிற் செம்மணி பறித்திட்டாலும், திருமணி பறித்துத் தந்த வென்றியே சீரிதன்றோ; 'வடிமணி வயிரத் தொள்வாள், சிவன் வயின் வாங்கிக் கொண்டான். முடிமணி பறித்திட்டாயோ அவனினி முடிக்கும் வென்றிக், கடிமணி யிட்டாயன்றே யரிகுலத்தரச' (880) என்று வீடணனும், 'படிக்கட் பேழ்வாய்ப், பணிபறித் தெழுந்த மானக் கலுழனின் இவனைப் பற்றி, மணிபறித் தெழுந்த வெந்தையாரினும் வலியன்' என்று அங்கதனும் கூறியன கொண்டுணர்க.

இனிக் கும்பகன்னனைப் பற்றிக் கூறப்பட்ட செய்திகளை யுணர்ந்து, முன்னர் வீடணனை ஏற்கக் கூடாது என்று கூறிய இவன், கும்பகன்னனைத் தம்முடன் கூட்டிக் கொள்ளலாம் என்று கூறியதிலிருந்து அவனுடைய சமயோசித புத்தியும், உலகிய லறிவும் காணலாம். கும்பகன்னனுடன் நிகழ்ந்த போரில் அவ்வரக்கனுடைய மூக்கையும் காதையும் கடித்தெகுகின்றான். இராவணன் வீடணன் மார்பில் வேல் ஏவியபோது, வீடணனை விலக்கிச் சுக்கிரீவன் அந்த வேலை ஏற்பதற்குச் சென்றதிலிருந்து அவன் தியாக புத்தியை உணரலாம்.

**அங்கதன்**

வாலிக்கும் தாரைக்கும் மகவாய்த் தோன்றியவன் 'பெரும் வீரன்' போர் தொடங்குவதற்கு முன் இராமபிரானால் இராவண னிடம் தூதாக அனுப்பப்பட்டவன். அனுப்பியபோது 'மாருதி யல்லனாகில் நீயெனும் மாற்றம் பெற்றேன், யாரினி யென்னை நேர் வார்' என்று மகிழ்ந்து; வீரன் வெஞ்சிலையிற் கோத்த சரத்தினில்' இராவணனிடம் செய்கின்றான். இராவணன் கேட்ட கேள்வி கட்கு அஞ்சாமல் விடையிறுக்கின்றான். தாதையைக் கொன்றான் பின்னே செல்வது இழிவு என்றும், கிட்கிந்தா ராஜ்யத்திற்கு முடிசூட்டி வைப்பதாகவும் கூறிய இலங்காதிபனை நோக்கி 'வாய்

தரத்தக்க சொல்லி யென்னை யுன்வசம் செய்வாயேல், ஆய்தரத் தக்க தொன்றோ தூது வந்தரச தாள்கை, நீதரக் கொள்வென் யானே யிதற்கு வேறுவமை யெண்ணின், நாய்தரக் கொள்ளும் சீயம் நல்லரசு' (யுத்த. 941) என்று கூறி நகையாடுகின்றான். முதற் போரில் சுபாரிசன் என்ற அரக்கனைக் கொல்கின்றான். இராவணன் வீடணன் மீது வேலெவியபோது அங்கதனும் ஓடோடிச் சென்று அதனை மார்பில் ஏற்க முற்படுகின்றான். மூலபல வதைப் படலத்தில் 'கனியுங் காய்களும் உணவுள முழையுள கரக்க, மனிதராளி னெனிராக்கத ராளினென் வையம்' (யுத்த. 3275) என்று வாநரங்கள் போரொழிந்து பின்வாங்க, அவர்களை ஆதரித்துச் சாம்பனும் சென்றான். அங்கதன் 'அறிவு சான்றோய், பாம்பணை யமலனேமற் றிராமனென் றெமக்குப் பண்டே, எம்பல் வந்தெய்தச் சொல்லித் தேற்றினை யல்லையோ' (3277) 'கூற்றின் வாயுற்றால் வீரம் குறைவரே யிறைமை கொண்டார்'; (3278). 'எத்தனை யரக்கரேனும் தரும மாண்டில்லை யன்றே, அத்தனை யறத்தை வெல்லும் பாவமென்றறிந்த துண்டோ' (3281) என்று சொல்லி ஊக்குவதிலிருந்து இவனுடைய பேராண்மையும் கடமை யுணர்ச்சியும்விளங்கும். மேலும் கூறுவானாய், 'எடுத்தலும் சாய்தல் தானும் மெதிர்த்தலு மெதிர்ந்தோர் தம்மைப், படுத்தலும் வீர வாழ்க்கை பற்றினர்க்குற்ற மேனாள், அடுத்ததே யஃதுநிற்க வன்றியு மொன்று கூறற், கெடுத்தது கேட்டீர் நீருங் கருத்துளீர் ஏது நோக்கின்' (3288); 'ஒன்று நீரஞ்சலைய யர்மெலா மொருங்கே சென்று, நின்று மொன்றியற்ற லாற்றேம் நேமியான் றானேநேர்ந்து, கொன்றுபோர் கடக்குமாயிற் கொள்ளுதும் வென்றியன்றேல், பொன்றுது மவனோடு' (3289) என்று அவன் துணிந்துரைப்பதும் இங்குக் காணத்தகும்.

### இராவணன்

பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வன் 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' என்று கூறப்படுபவன். சூர்ப்பணகை சொற்களைக் கேட்டுக் காம வெறிபிடித்து, மாயமானை ஏவிச் சீதாபிராட்டியைக் கவர்ந்து சிஞ்சுப வனத்திற் சிறை வைத்தமையும் அதன் 'தொடர்பான நிகழ்ச்சிகளும் ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டங்களில் கூறப்பட்டுள்ளன. இனி

யுத்த காண்டத்தில் அவனைப் பற்றிக் கூறப்படுவதை நோக்குவோம்.

இராவணனுடைய மந்திராலோசனை சபை நடைபெறுகிறது. சிறந்த சோழர் அரசியல் முறைகளை நன்குணர்ந்த கம்பநாடர் அந்த அரசியல் சபையைச் சீரிய முறையில் வரைகின்றார். 'பண்டிதர் பழையவர் கிழவர் பண்பினர், தண்டலின் மந்திரத் தலைவர் சார்கென, கொண்டுட னிருந்தனன் கொற்றவாணையான் வண்டொடு காலையும் வரவு மாற்றினான்' (யுத்த. 19); இலங்கையில் முன்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் குறித்து வருந்துகின்றான். சேனை காவலன் தேற்றுகின்றான். பல அரக்கர் சேனாதிபதிகளும் தத்தம் கருத்துக்களை மொழிகின்றனர். கும்பகன்னன் தமையன் செயலைக் கண்டிக்கின்றான், வீடணன், 'மூவரை வென்று மூன் றுலகு முற்றுறக், காவலி னின்று தங்களிப்புக் கைமிக, வீவது முடிவென வீந்ததல்லது, தேவரை வென்றவர் யாவர் தீமையோர்' (யுத்த. 81); இராவணனை நோக்கிக் 'கூறிய மனிதர்பாற் கொற்றம் கொள்ளலை, வேறினியவர் வயின் வென்றியாவதே' (யுத்த. 89) என்று மொழிகின்றான். இராவணனுக்குண்டான சாபத்தையும் நினைவூட்டுகின்றான். 'முனைவரு மமரரும் முழுதுணர்ந்தவர்களும் முற்று மற்றும், நினைவரும் தகையர் நம் வினையினால் மனிதரா யெளிது நின்றார்' (யுத்த. 96) என்றும், 'அன்னவர் தம்மொடும் வானரத் தலைவரா யணுகினின்றார், மன்னுநம் பகைஞராம் வானுளோ ரவரொடும் மாறு கோடல், கன்ன மன்று' (109) என்று அவதார மறையை மொழிந்து 'அசைவில் கற்பினள் ஆகிய சீதாதேவியை விட்டருளுமாறு வேண்டு கின்றான். 'விநாசகாலே விபரீத புத்தி' என்றதற்கேற்ப 'நந்தி சாபத்தினமையடுங் குரங்கெனி னம்பால், வந்த சாபங்கள் எனைப்பலவவை செய்த வலியென், இந்தியாதிகள் அவித்தவர் தேவர் நம்மிறுதி, சிந்தியாதவர் யாரவர் நம்மை யென் செய்தார்' (117) 'அரங்கினுடுவார்க்கன்பு பூண்டுடை வரமறியேன் இரங்கி யானிற்ப வென்வலியவன்வயினெய்த, வரங்கொள் வாலிபாற் றோற்றனென் மற்றும் வேறுள்ள குரங்கெலாமெனை வெல்லுமென் றெங்ஙனம் கோடி' (யுத்த, 118) எதிர் செலல் தவிர்ந்து, வாலிதன்னை யம்மனிதனு மறைந்து நன்றெய்தான்' (119) என்று பேசி வீடணனை மறுத்துரைக்கின்றான். பின்னும் அவன் மனம் திருந்தும்வண்ணம்

இரணியன் வரலாற்றைக் கூறி, முடிவாக 'ஈதாகு முன்னிகழ்ந்த தெம்பெருமா னென்மாற்றம், யாதானுமாக நினையா திகழ்தியேல் தீதா ய்விளைதல் நனிதிண்ணம்' எனச் செப்புகின்றான் வீடணன். இலங்கை கேள்விப் படலத்தில் இவன் வரலாற்றை இராம பிரானிடம் கூறி, 'இன்றுலப்பினு நாளையே யுலப்பினும் சிலநாட், சென்றுலப்பினும் நினக்கன்றிப் பிறர்க்கென்றும் தீரான்' (516) என்று வீடணன் அறைகின்றான். ஒற்றுக் கேள்விப் படலத்தில் அவதார ரகஸ்யத்தை மாலியவான் கூறுகின்றான். இராவணன் வெகுண்டு. பேதை மானிடவரோடு குரங்கல பிறவேயாகப், பூதல வரைப்பினுகர் புறத்தினப் புறத்ததாக, காதுவெஞ் செருவேட் டென்னைக் காத்தனர் கலந்த போதும், சீதை தன் திறத்தின் ஆயின் அமர்த் தொழில் திறம்புவேனே' (யுத்த. 768) என்று வீரம் பேசுகின்றான், சாரணன் வானர வீரர்களைப் பற்றிக் கூற, இராவணன் சிறுநகை செய்து 'மானின் இனங்கள் பலவென் செயுமரியினை எய்கின்றான். 'இடையில் சுக்கிரீவனால் மகுடபங்கம் நிகழ்கின்றது. நிகழவே இராவணன் 'மானத் தானூன்றப்பட்ட மருமத்தான் வதனமெல் லாம், கூனற்றாமரையில் தொன்ற வான்தொடும் கோவில் புக்குப், பானத்தானல்லன் தெய்வப்பாடலானல்லன் ஆடற், றானத்தா னல்லன் மெல்லென் சயனத்தா னுரையும் தாரான்', 'வையெ யிற்றாலும் நேரா மணியிழந்திரங்கலாலும், பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப்பஃறலைப் பரப்பினானும், மெய்யணைத் திரையின் வேலை மென்மலர்ப் பள்ளியான, ஐயனைப் பிரிந்து வைகும் அனந்தனே யரக்கர் வேந்தன் (886) என்று கவிஞர் பெருமான் அரக்கர் கோனுடைய அவச நிலையை வருணிக்கின்றார். தூதாகச் சென்ற அங்கதன் இராமபிரானிடம் வந்து, 'மூர்க்கன் முடித்தலை யற்ற, போதன்றி யாசையுறான்' என்கின்றான். போர் தொடங்குகின்றது, வானரரும் அரக்கரும் என்ற இருதிறத்தாரும் தம்முட் பொருது மடிகின்றனர். இராவணன் நாணெறிகின்றான். திரிபுவனமும் நிலை குலைகின்றது. இராவணன் இலக்குவனுடைய போராற்றல் கண்டு 'இவனொரு மனிசன்' என்கின்றான். போரில் அநுமன் குத்த இராவணன் சிறிது அயர்கின்றான். மீண்டும் நினைவு வர, 'வலியென்பது முளதேயது நின்பாலது மறவோய்' (1136) என்று அநுமனைப் புகழ்கின்றான், மறுத்து அநுமன் மார்பில் அரக்கன் குத்திய அளவில் அநுமன் சலிக்கின்றான். இலக்குவன் சிறிது

அயர்ந்தபோது அவனைத் தூக்க முயல்கின்றான். ஆனால் இராவணன் அவனைத் தூக்க முடியவில்லை, பின்னர் இராமபிரானுடன் நிகழ்ந்த கடும் போரில் மணிமுடி யிழந்து நிற்கின்றான். அப்பொழுது இராமபிரான் பரம கருணையுடன் 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' என நல்குகின்றான்' (1110).

கும்பகன்னன் வதைப் படலத் தொடக்கத்தில் சில செய்யுட்களில் அரக்கர் கோனுடைய பரிபவம் கூறப்படுகின்றது. மாலியவானிடம், 'நங்குலத்துக் கொவ்வாப், பங்கம் வந்துற்ற தொன்றோ பழியும் வந்துற்றது' என்றும் 'வளையமை வரிவில் வாளிமெய்யுற வழங்குமாயின். இளையவன் தனக்கு மாற்றாதென் பெருஞ்சேனை' என்றும் கூறி இராமபிரானுடைய வாளியைப் பலவாறு புகழ்ந்து பாராட்டுகின்றான். இந்நிலையில் மகோதரன் வந்து எரிகின்ற நெருப்புக்கு எண்ணெய் ஊற்றுகின்றான், கும்பகன்னன் பல அரிய வுரைகளைக் கூறியும் இராவணன் மனம் திருந்தாமல் 'அறிவுடை யமைச்சனீயல்லை யஞ்சினை, வெறுவிதுன் வீரம்' (1294) என்று கடிந்து 'மானிடரிருவரை வணங்கி மற்றுமக், கூனுடைக் குரங்கையும் கும்பிட்டுய் தொழில், ஊனுடை யும்பிக்கும் உனக்குமே கடன், யானது புரிகிலேன் எழுக' (1296) என்கின்றான்,

இனி, மாயாசனகப் படலத்தில், சீதாதேவியைப் 'பண்களாற் கிளவி செய்து' (1577) முதலிய பல பாடங்களால் தனக்கிணங்குமாறு மன்றாடுகின்றான் இலங்கேசன். இங்குச் சில செய்யுட்கள் நன்கு படித்துணர்ந்தின்புறத்தக்கவை. எத்தகையோரையும் காமவெறி யென்ன செய்யும் என்பதை இவை கொண்டு உணரலாம் 'பேயும் சொல்லும் பிறங்கும் மறைமொழி' என்றதற்கேற்பத் தனக்குச் சாதகமாக அகலிகை வரலாற்றை யெடுத்து மொழிகின்றான். 'கற்றவர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ; பலவற்றைக் கூறிக் குவவுத்தோள் நிலத்தைக்கூட மின் திரைத்தருக்கன் தன்னை விரித்து மீன தொடுத்த போலும் நின்றிமைப்பதும், வலிய புலவியினும் வணங்காததுமான முடியைப் படியில் வைத்து வணங்குகின்றான். பிராட்டி பல படியாகப் பழித்துரையாடுகின்றாள். இணங்காமற் போகவே சீதாதேவியைக் கொல்வதற்குச் சுரிகை வாள் உருவ மகோதரன் தடுக்கின்றான். ருடனால் நாகபாசம் விலக வானரரும் பிறரும் உயிர்பெற்றனர்

என்ற செய்தியைச் சொல்லிய அரக்கரைப் பற்றிக் கொல்லத் தொடங்கும்கால் மாலி தடுக்கின்றான். அரக்கன் மேற்கொள்ளும் எத்தொழிலும் ஆணவத் தடிப்பினாலேயே நிகழ்வது காண்க.

பிரமாத்திரத்தால் பலரும் இறந்ததை எங்கும் பரவச் செய்யுமாறு இராவணன் கட்டளையிட்டுப் பிராட்டிக்குப் படுகளம் காட்டுமாறு பணிக்கின்றான். மற்றும் மரித்த அரக்கரைப் பிறர் காணாதபடி கடலில் இடுமாறு சொல்ல மருத்தன் அங்ஙனமே செய்கின்றான். இந்தச் செயல் புரியாமலிருந்திருப்பின் பின்னர் மருத்துவமலையால் அவ் வரக்கரும் வானரர் ஒப்ப உயிர் பெற்றிருப்பர். எண்ணித் துணிபவன் அல்லன் இலங்கேசன். மனம் போன போக்கில் காரியங்களை நிகழ்த்துபவன். இன்பத்தின் முடிவில் ஆற்றொணாத் துன்பமும் துன்பத்தின் இறுதியில் சிறிது இன்பமும் நிகழ்வது உலகியல் என்ப. பிரமாத்திரத்தால் அனைவரும் மடிந்தனர் என்று அரக்கர்கோன் களியாட்டயர்கின்றான். இராம இலக்குவரின் நாண் ஒலி கேட்கவே அம் மகிழ்ச்சி குலைகிறது. நாடக முறையில் கதையினைக் கம்பநாடர் கொண்டு செலுத்துதல் இங்குக் கண்டு மகிழலாம். இங்கு அறவுரை கூறியும் இராவணன் விடாப் பிடியாக வீரவாதம் பேசி எழுகின்றான். இந்திரசித்து, சானகி யுருவமாகச் சமைத்து வானுயர் அநுமன் முன்னே வாளினாற் கொன்று காட்டுவதாகவும், தானும் அயோத்தி செல்வதாகவும் தந்தைபாற் கூறுகின்றான். இராவணனும் அதனை ஏற்கின்றான். 'இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன், கெடுப்பாரை யின்றிக் கெடும்' அன்றோ, பின்னர் இராவணன் நிகும்பிலை யாகம் செய்யுமாறு இந்திரசித்தினிடம் கூறுகின்றான். அந்த நிகும்பிலை யாகமும் வீடணன் சூழ்ச்சியாலே கெடுகின்றது.

இனி இந்திரசித்து 'நிலஞ் செய்து விசும்பும் செய்து' (3054) என்று தொடங்கும் சில செய்யுட்களால் எதிரிகளின் அளவு கடந்த வன்மையைக் கூறிச் சீதா தேவியை விட்டுவிடுமாறு கூறுகின்றான். இங்கு மகன் சொல்லை மறுத்து 'சயங்கொடு ,தருவ னின்றே மனிதரைத் தனுவொன்றாலே' என றும், 'முன்னையோ ரிறந்தா ரெல்லா மிப்பகை முடிப்பரென்றும், உன்னை நீ யவரை வென்றுதருதி யென்றுணர்ந்து மன்றால், என்னையே நோக்கி

யானிந் நெடும்பகை தேடிக் கொண்டேன்' (3058); என்ற சொற்றொடரில் அடங்கிய குறிப்பினை இச் செய்யுள் உரை கண்டு தெளிக. மேலும் கூறுவானாய், 'பேதைமை யுரைத்தாய் பிள்ளாயுலகெலாம் பெயரப் பேராக், காதை யென் புகழினோடு நிலைபெற வமரர்காண, மீதெழு மொக்குளன்ன யாக்கையை விடுவதல்லால்' சீதையை விடுவதுண்டோ இருபது திண்டோள் உண்டாய்' (3058) என்றும் 'வென்றிலெனென்ற போதும் வேதமுள்ளளவு மியானும், நின்றுளனன்றோ மற்றவ்விராமன் பேர் நிகழுமாயின், பொன்றுதல் ஒரு காலத்தும் தவிருமோ பொதுமைத் தன்றோ, இன்றுள்ளார் நாளை மாள்வர் புகழுக்கும் இறுதியுண்டோ?' (யுத்த. 3060) 'பட்டனன் என்ற போதும் எளிமையிற் படுகிலேன்பான், எட்டுமோ ரிரண்டுமாய திசைகளை யெறிந்து வென்றேன்' (3061) என்ற அவன் உரைகள் ஆணவம் அகந்தை என்ற பண்புகளின்பேரெல்லையைத் தீண்டி நின்றதும், உலகியலறிவுள்ளவன் என்பதும் தன்மானம் மிக்குள்ளவன் என்பதும் நன்குணரப்படும். அறிவிலியல்லவே, 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லான்' என்று புகழப் பெற்றவன் அன்றோ? இந்த வணங்காமுடி மன்னனுடைய கௌரவத்திற்கு எவ்விதமான பங்கமும் நிகழாதவாறு கல்வியிற் பெரியார் இறுதிவரை கொண்டு செலுத்துவது படித்து இன்புறத் தகும். இந்திரசித்து மரித்தவுடன் இராவணன் புலம்புவதும் மண்டோதரி விலாபிப்பதும் இக் காப்பியத்தில் உயர்ந்த ரசத்தில் அமைந்தவை. 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் இரங்கி யேங்கி, உனக்கு நான் செய்யலானேன், என்று அவன் புலம்பும் போது, அரக்கன் ஆனால் என்ன, அமரன் ஆனால் என்ன, கல்மனமும் கரையும் என்பது திண்ணம். இராவணன் வீழ்ச்சியைக் கண்டு இரங்காதவரில்லை, இராவணன் வதைப் படலத்தில் இவ்வரக்கர்கோனுடைய பேராற்றலைக் காண்க. இராமபிரானுடைய தெய்வீக ஆற்றல் கண்டு, 'சிவனோவல்லன் நான்முகனல்லன் திருமாலாம் அவனோ அல்லன் மெய்வர மெல்லாம் அடுகின்றான்' என்று பாராட்டுகின்றான். பின்னர் இராமபிரானுடைய வாளி பட்டு முக்கோடி வாழ்நாளும் முயன்றடைந்த பெருந்தவமும், வரமும் குலைய காமக் கேட்டிற்கே ஓர் எடுத்துக் காட்டாக இறந்து படுகின்றான்.

**இந்திரசித்து**

இவன் இராவணனுக்கும் மயன் மகள் மண்டோதரிக்கும் பிறந்த வீர மகன். இந்திரனை வென்றதன் காரணமாக இப் பெயர் பெற்றான். இவன் இயற் பெயர் மேகநாதன் என்பது. பிறந்த பொழுதே இவன் அழுத குரல் இடி போன்றிருந்ததாகலின் மேக நாதன் என வழங்கப் பெற்றான். அன்பெலாம் ஒரு பிழம்பெனத் திரண்ட கண்ணப்பன் பிறந்தபோது கைக்குத் திண்ணென்றிருந் தமையின் திண்ணன் என்று பெயர் பெற்றாற்போல என்க. இவன பிரமாத்திரத்தால் அனுமனைப் பிணித்து இலங் கேசன் முன்பு விடுத்ததும், பின் நிகழ்ந்த விளைவுகளும் சுந்தர காண்டத்திற் பாசப் படலம் பிணி வீட்டுப் படலங்களிற் காண்க. யுத்த காண்டத்தில் முதல் முதலாக இராவணன் மந்திரப் படலத் தில் இவன் தந்தைக்கு உரைப்பவற்றைக் காண்கின்றோம். இவனை மறுத்து வீடணன் உரைப்பதுவும் அங்குக் கண்டோம். இவனைப் பற்றி, 'கோளிரண்டையும் கொடுஞ் சிறைவைத்தவக் குமரன், மூளும் வெஞ்சினத் திந்திரசித்தென மொழிவர், ஆளு மிந்திரற் கன்னவன் பிணித்ததற் பின்னைத், தாளுமார்பினும் தோளினும் உளவினம் தழும்பு' (யுத்த. 506) என்று இவனை வீடணன் இராம பிரானுக்கு அறிமுகம் செய்து வைக்கின்றான். அடுத்து நாகபாசப் படலத்தில் (1939) மகன் அதிகாயன் இறந்துபடக், 'காட்டாதன காட்டிய தாதையைக் கண்ணிற் கண்டான்' என்று கூறப்பெறு கிறது. இங்கு இராவணன் செயலைக் கடிந்து 'கொன்றாரவரோ கொலை சூழ்கென நீ கொடுத்தாய், வன்றானையர் மானிடர் வன்மை யறிந்து மன்னா, என்றானுமெனைச் சேலவேவலையிற்றது (1943) என்று கூறுகின்றான். இவவண்ணமே, சுந்தர காண்டத்தில் அக்கனிறந்தபோது, 'ஒன்று நீ யுறுதியோராய் உற்றறிந் துளையகிற்றி, வன்றிறற் குரங்கினாற்றல் மரபுளி யுணர்ந்து மன்னா, சென்று நீர் பொருதிரென்று திறந்திறம் விடுத்துத் தேயக், கொன்றனை நீயே யன்றோ அரக்கர் தம் குழுவையெல் லாம் (989) என்று ஏசுகின்றான். 'வினைவலியும் தன் வலியும் மாற்றான் வலியும் துணை வலியும் தூக்கிச் செயல்' (குறள். 471); என்பது பொதுமறையன்றோ? மேலும் 'எம்பியைக் கொன் றுளானை, அந் நின்ற நிலத்தவனுக்கையை வீட்டி யல்லால், மன்னின்ற நகர்க்கினி வரலென் வாழ்வும் வேண்டேன்' (1945);

என்றும், 'மாற்ரு வுயிரெம்பியை மாற்றிய மானுடன்றன், ஊற்ருர் குருதிப் புனல் பார்மகள் உண்டிலாளேல், ஏற்ருனி கலிந்திரனீ ரிருகால் எனக்கே, தோற்ருன் தனக்கென்னெடுஞ் சேவகம் தோற்க' (1946); 'வெங்கண்ணெடு வாநரத்தானையை வீற்று வீற்ருய்ப் பங்கம்பட நூறியிலக்குவனைப் படேனேல், அங்கந்தர வஞ்சி யென்னுணை கடக்கலாத,' செங்கண் நெடுமால் முதற்றேவர் சிரிக்க' (1947) என்றும், 'இனிச் சோறுமுவந்து வாழேன்' (1948) என் றும், 'மருந்தெனிக ரெம்பி தன்னுருயிர் வவ்விஞனை, விருந்தே யென வந்தகற் கிகிலென் வில்லுமேந்திப், பொருந் தேவர்குழா நகை செய்திடப் போந்துபாரின், இருந்தேனெனில் நானிவ் விராவணி யல்லன்' என்றும் இவன் சூளுறவு கொள்வதிலிருந்து இவனது பல பராக்கிரமங்களும், தன்மானமும், ஆண்மையும் காணலாம். இந் நிலையில் இலக்குவனை நாகபாசத்தால் பிணிக்கு மாறு இராவணன் வேண்ட, இந்திரசித்து போர்க்கு எழுகின்ருன். போரில் அநுமனும் இந்திரசித்தும் வீரவாதம் பேசுகின்றனர். இலக்குவனுடைய பேராற்றல் கண்டு, 'அந்நரனல்லனுகில் நாரணன் ஐயன் அன்றேல், பின்னரன் பிரமனென்பார் பேசுக. பிறந்து வாழும், மன்னர்தம்பதியின் வந்து வரிசிலை பிடித்த கல்வி, இந் நரன் தன்னெடொப்பார் யாருளர் ஒருவர்' (2056) என்று இலக்குவனைப் புகழ்கின்ருன். போரில் இந்திரசித்தின் கவசம் இலக்குவன் வாளியாற் பிளக்கப்படுகின்றது. பின் நாக பாசத் தால் இலக்குவனைப் பிணிக்கின்ருன் மேகநாதன். கருடாழ்வான் வந்து நாக பாசத்தை விலக்கவே இராவணன் விழித்துக் கொள் கின்ருன், பின்னர் தந்தை நிகழ்ந்ததை கூற இந்திரசித்து நம்பக்கூட வில்லை. ஐயுறுகின்ருன். பிரமாத்திரப் படலத்து, 'முன்பிறந்த நின்தமையனை முறைதவிர்ந்துனக்குப், பின்பிறந் தவனுக்குவென் பின்பிறந்தோயை, முன்பிறந்தவனுக்குவென் இது முடியேனேல், என் பிறந்ததனுற் பயனிராவணற்கு' (2437) 'இலக்குவன்னெனும் பெயருனக்கியைவதே யென்ன, இலக்குவன் கணைச் காக்குவெனிது புகுந்திடையே, விலக்குவென்னென விடை யவன் விலக்கினும் வீரம், கலக்குவெனிது காணுமுன் தமையனும் கண்ணுல்' (2438) என்றும் மொழிகின்ருன். மற்றும், 'கும்ப கன்னனென்றெருருவனிய வம்பிடைக் குறைத்த, தம்பியல்லனு னிரா வணன் மகனெருதமியேன், எம்பிமாருக்கு மென்சிறு தாதைக்கும் இருவீர், செம்புணீர் கொடு கடன்கழிப்பேன்' எனத் தெரிக் கின்ருன். அரக்கன் மாயையால் இறந்து பட்டவர்கள்கூட வந்து தோன்றிப் பொரத் தொடங்கினுர்கள். இந் நிலையில் இந்திரசித்து

அயன் படையை இலக்குவன்மீது ஏவ, அவனும் அநுமன் முதலி யோரும் அயர்கின்றனர். பல வானரங்கள் மடிந்து வீர சுவர்க்கம் புகுகின்றன. இச் செய்திகள் ,இராவணன் செவியில் விழு கின்றன. இடை நடுவில் சாம்பன் கூற அநுமன் மருத்து மலையைக் கொண்டு வந்து யாவரையும் பிழைப்பு மூட்டுகின்ருன். இந்திரசித்து மாயா சீதையைத் தோற்றுவித்து அவளை வெட்ட முயல்கின்ருன். ஆனுல் அதன் உண்மை வீடணனுல் வெளிப்படவே, இந்திர. சித்தினை இராவணன் நிகும்பிலை யாகம் செய்யுமாறு தூண்டு கின்ருன். அந்த வேள்வியும் வீடணன் சூழ்ச்சியாலும் இலக்கு வனுடைய ஆற்றலாலும் அழிகின்றது. பின்னர் இந்திரசித்து எதிரிகளின் பேராண்மையைக் கூறிப் பிராட்டியை விட்டுவிடுமாறு தந்தையிடம் மொழிகின்ருன். அவன் சினந்து மகன் சொற் களைக் கேட்கவில்லை. எனவே போரிற் சென்று மடிகின்ருன். இவன் ஆற்றலைப் புகழாதவர் இல்லை. கவிஞர் பெருமான் கம்ப நாடரே 'இந்திரசித்தின் சென்னியிற்றிடை விழுந்ததென்ருல் யந்திரமனைய வாழ்க்கையினிச் சிலர் உகந்தென்' என்கின்ருர். இனி இவன் இறந்தவுடன் இராவணனும் மண்டோதரியும் புலம் பும்பகுதிகள் மிகக் சிறந்தவைகள் ஆகும; இவன் அன்னை வந்து புலம்புகின்ருளன்றி இவன் மனைவி சுலோசனை என்பவள் வந்து புலம்பினுள் என்று கூறப்படவில்லை.

### கும்பகன்னன்

இராவணன் தம்பி. துயிலுக்குப் பேர் போனவன். அரிய வரங்களும் பேராற்றலும் உடையவன். இராவணனிடம் 'திட்டி விடமன்ன கற்பின் செல்வியை, விட்டிலையோ இது விதியின் வண்ணமே' என்றும் போரில் தான் மடிவது நிச்சயம் என்று உணர்ந்து தான் இறந்துபடின் போரை நிறுத்திப் பிராட்டியை இராமபிரானிடம் விடுதலை நீதியென்றும், இந்திரசித்தும் இலக்கு வனுடைய மந்திர வாளியால் மடிவது உறுதியென்றும் தீர்க்கதரிசி போற் கூறுகின்ருன். வீடணன் வந்து இராமபிரானிடம் சரண் புகுமாறு இரந்தபோது இவன் செஞ்சோற்றுக்கடன் கழிப்பதே சிறந்த தருமம் என்றும், 'நீர்க் கோலவாழ்வை நச்சி நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப் போர்க்கோலம் செய்துவிட்டாற் குயிர் கொடாதங்குப்போகேன்' (1359) என்றும் கூறிப்போர்க்குச்சென்று மடிகின்ருன். இங்கு குந்திதேவி கன்னனைக் கண்டு பஞ்ச பாண்டவர் பக்கம் வந்து கூடுமாறு வெண்ட, 'ஒருரும் ஒரு குலமும் இல்லா

வென்னை' (வி. பா. 17ஆம் போர். 21) என்று தொடங்கும் செய்யுட்கண் 'யார்க்கினியென் உயிரளிப்ப தியம்புவாயே' என்று கன்னன் கூறிய சொற்கள் ஒப்பு நோக்கத்தகும். இவனுடைய வீரவாதங்களும், இராமபிரானும் திகைக்குமாறு இவன் ஆற்றிய போர்களும் ஊன்றிப்படிக்கத்தக்கன. இறக்கும்பொழுது இராமபிரானை நோக்கி இவன் வேண்டுவது மிகவும்உருக்கமான இடமாகும். 'நீதியால் வந்ததொரு நெடுந் தருமநெறியல்லால், சாதியால் வந்தசிறு நெறியறியான் என் தம்பி, ஆதியா யுனையடைந்தானரசருருக் கொண்டமைந்த வேதியா, வின்னமுனக் கடைக்கலமியான் வேண்டினேன்' (1580) என்றும் 'ஒல்லு மாறியலுமேல் உடன்பிறப்பின் பயன் ஓரான்' (1561). 'தம்பியென நினைந்திரங்கித் தவிரானதத்த கவில்லான், நம்பியிவன் தனைக்காணிற் கொல்லுமிறை நல்கானல், உம்பியைத்தான் உன்னைத்தான் அநுமனைத்தான் ஒருபொழுதும் எம்பிபிரியானாக வருளுதி' என்ற வரிகளைக் கண்டு தெளிக. இங்கு கிட்கிந்தா காண்டத்தில் வாலி இறந்துபடும்கால் சுக்கிரீவனையும் அநுமனையும அங்கதனையும் இராமபிரான் கையில் ஒப்புவித்துக் கூறிய பகுதிகள் ஒப்புநோக்கத் தகும்.

மண்டோதரி

இராவணனுடைய மனைவி. மயன் மகள். இந்திரசித்து இறந்துபட்ட நிலையில் மகன்பால் வந்து புலம்புகின்றாள். இந்திரசித்தினைப் பற்றிய பல நினைவுகள் அவள் உள்ளத்தெழுகின்றன. அவைகளைச் சொல்லி அரற்றுகின்றாள். 'தாளரிச் சதங்கையார்ப்பத் தவழ்கின்ற பருவம் தன்னில், கோளரி யிரண்டு பற்றிக் கொணர்ந்தனை கொணர்ந்து கோபம், மூளுறப் பொருத்தி மாட முன்றிலின் முறையினோடு, மீளரு விளையாட்டின்னும் காண்பனோ விதியிலாதேன்' (3188). 'அம்புலியம்மவா வென்றழைத்தலும் அவிர் வெண்திங்கள், இம்பர் வந்தானை யஞ்சலென விருகரத்திலேந்தி, வம்புறு மறுவைப்பற்றி முயலென வாங்கும் வண்ணம் எம்பெரும் களிறே காணவே சற்றே னெழுந்திராயே' (3169) என்ற செய்யுட்கள் எத்தகைய கல் மனத்தையும் கரையச் செய்யும். இராவணன் இறந்தபோது அவன் உடலைத் தழுவி இவள் கூறும் 'காந்தையருக் கணியனைய' (யுத்த. 3880) என்ற செய்யுளும், 'வெள்ளெருக்கம் சடை முடியான்' (யுத்த. 3878) என்ற செய்யுளும் எவரும் மறக்கமுடியாத செய்யுட்கள். கணவன் பிரிவாற்றுது

உடன்கட்டை யேறிய மாசுமறுவற்ற பெருஞ்சிறைக் கற்பினள் இப் பெண்ணரசி.

திரிசடை

வீடணனுடைய செல்வ மகள். இவளை முச்சடை என்றும் கூறுவர். சிஞ்சுபாவனத்தில் பிராட்டி சிறையிருந்தபொழுது அவளுக்கு உற்ற துணையாக அமர்ந்தவள். இன்சொலால் திருந்தினள்; அன்பினால் தாயினு மினியவள்; தூயவள். இவளிடம் பிராட்டி தான கண்ட கனவினைப் பற்றிக் கூறுகின்றாள். (சுந்தர. 361-364. அதைக் கேட்டவுடன் அவள் 'இயைந்த சோபனம். நன்றிது, நன்றிது, உன் துணைக்கணவனை யுறுவதுண்மையென மனப் புழுங்கி நின்றவளைத் தெருட்டி, அவள் கண்ட கனவின் விளைவினைக் கூறுகின்றாள்; கூறுங்கால் 'தீயது தீயவர்க்கெய்தல் திண்ணம்' என்றும் தான் கூறுவன 'வெயிலினு மெய்' என்றும் கூறித் தான் கண்ட கனவையும் அவட்குக் கூறுகின்றாள் (சுந்தர. 369-382); இங்கு, 'ஆயிரம் திரிவிளக்க மைய மாட்டிய, சேயொளி யொன்றேந்திச் செய்யவள், நாயகன் தனிமனை நின்று நண்ணுதல், மேயினன் வீடணன் கோயில்' என்று இராவணன் அழிவையும் இலங்கைக்கு வீடணன் தலைமையில் எய்த விருக்கும் புதுவாழ்வினையும் சூசிப்பிக்கின்றாள்.

பிராட்டி களங்காண் படலத்தில், பிரமாத்திரத்தால் அனைவோரும் இறந்துபட இராமபிரான்மீது சீதாதேவி விழப்போகும் சமயத்தில், தேடிய தவமேயென்ன திரிசடை 'மாயமரன் விடுத்த வாறும் சனகனை வகுத்த வாறும், போயநாள் நாகபாசம் பிணித்ததுபோன வாறும், நீயமா 'நினையாய் மாள நினைதியோ நெறியிலாரால், ஆயமா மாயமொன்றும் அஞ்சலை அன்ன மன்னாய்' (2628) என்றும், 'கண்டன கனவும் பெற்ற நிமித்தமும் நினது கற்பும், தண்டக முறையும் நாளிற் செய்கையும் தருமம் தாங்கும். அண்டர் நாயகன்றன் வீரத்தன்மையும அயரேற் செங்கட், புண்டரிகற்கு முண்டோ விறுதி யிப்புலையர்க் கல்லால்'; 'வீழ்ந்துளனிராம னென்னின் உலகமோ ரேழுமேழும், தீர்ந்தறு மிரவி பின்னும் திரியுமோ தெய்வ மென்னும், வீய்ந்துறும் விரிஞ்சன் முன்னா வுயிரெலாம் வெருவலன்னை, ஆய்ந்தவையுள்ள போதேயவருளர் அறமுமுண்டால்;' 'மாருதிக்கில்லை யன்றே மங்கைநின் வரத்தினாலே, ஆருயிர் நீங்கல் நின்பாற் கற்புக்குமழி வுண்டாமே,

சீரிய தன்றிதொன்றும் திசைமுகன் படையின் செய்கை, பேருமிப் பொழுதே தேவரெண்ணமும் பிழைப்பதுண்டோ' 'கூவலிற் புக்கு வேலேகோட் படுமென்று கொள்ளேல்' 'மங்கல நீங்கினுரை யாருயிர் வாங்கினுரை நங்கையிக் கடவுள் மானம் தாங்குறு நவையிற்றன்ருல், இங்கிவை யளவையாக விடர்க்கடல் கடத்தி' என்று பொருள் பொதிந்த இனிய சொற்களால் பிராட்டியைத் தேற்றுகின்ருள். இச்சொற்களைச் செவியேற்ற சீதாதேவி 'அன்னை நீயுரைத்த தொன்று மிழிந்திலதாதலானே, உன்னையே தெய்வமாக்கொண்டித்தனைகால முய்ந்தேன்' (2035) என்கின்ருள்.

பரதன்

'கரதல முற்ருெளிர் நெல்லிகடுப்ப விரத மறைப்பொருள் மெய்ந் நெறி கண்ட வரதன்' என்பது திருவவதாரப் படலத்துக் கண்டது. 'தள்ளரிய பெருநீதித் தனியாறுபுக மண்டும் பள்ளம்' என்று குலமுறை கிளத்து படலத்துக் கண்டோம். 'தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத், தீயவை யென்ன நீத்துச் சிந்தனை முகத்திற் றேக்கிப், போயினை யென்ற போது புகழினேய் தன்மை கண்டால், ஆயிரமிராமர் நின்கேழ் ஆவரோ' என்பது குகப்பெருமான் கூற்று. சித்திரகூடத்தில் இராமபிரான் தங்கியபோது பரதன் வர அவன் வரவினைத்தவருக எண்ணி இலக்குவன் போருக்கு ஆயத்தமானபோது 'எனைத்துள மறை யவை யியம்பற்பாலன, யனைத்துள பரதன் செய்கையே' என்றும், 'சேணுயர் தருமத்தின் தேவைச் செம்மையின் ஆணியை யன்ன துகருதலாகுமே' என்றும் இராமபிரான் இலக்குவனிடம் கூறு கின்ருன். 'நிறை குணத்தவன் நின்னினும் நல்லன்' என்பது கோசலை கூறியது, சகோதரர்களான வாலி சுக்கிரீவர் சண்டை யில் தலையிடுவது தகுதியன்றென்று இலக்குவன் கூறியபோது 'எத்தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்களெல்லாம் ஒத்தாற் பரதன் பெரிதுத்தம ஞதலுண்டோ' என்று இராமபிரான் கூறுகின்ருன். 'வற்கலை யினுடையானை மாசடைந்த மெய்யானை, நற்கலையில் மதி யென்ன நகையிழந்த முகத்தானைக் கற்கனியக் கனிகின்ற துய ரானைக்' கண்ணுற்றுக் குகன் திகைக்கின்ருன். இராமபிரான் குறித்த காலத்தில் அயோத்திக்கு வரவில்லையென்று வருந்தித் தீப்புகும்போது கோசலை தடுத்து 'எண்ணில் கோடி யிராமர்கள் என்னினும், அண்ணல் நின்னருளுக் கருகாவரோ, புண்ணியம் எனும் நின்னுயிர் போயினல், மண்ணும் வானுமறித்துயிர் வாழுமோ'

என்று வாயாரப் புகழ்கின்ருள். இவன் மாசுமறுவற்ற உத்தம புத்திரன். கைகேயி இராமபிரானை வனம் செல்லச் சொன்னதைக் குறித்து மனம் நொந்து இப்பொழுதே கொன்றுவிடுவேன் 'ஆயகன் முனியுமென்றஞ்சினேனலால். தாயெனும் பெயர் எனைத் தவிர்க்கற் பாலதோ' என்கின்ருன். 'சுடுமயான திடைத்தன் துணையேக (குகப். 69) படரெலாம் படைத்தானை' (குகப், 70) என்ற செய்யுட்களில் தாயைப்பலவாறு ஏசுகின்ருன். திருநகர்க்குவந்து முடிசூடுவதற்கு மறுத்தவளவில் எம்மையும் நல்குவதான திருவடிநிலைகளை இராமபிரான் உதவ, அவற்றைச் சிரமேற்ருங்கி, அந்தியும் பகலு நீரருதகண்ணினனாய் நகர்க்குள்ளும் செல்லாமல், நந்திகிராமத்திலேயே உறைகின்ருன். 'அழுத கண்ணினன்' என்ற கவிக்கூற்றினைக் கொண்டு, கண்ணீர், இராமபிரான் மீட்டும் நந்திக்கிராமம் அடையும் வரையில் நிற்கவில்லையென்றும் கொள்ளலாம். "இதனை வெயர்த்த மேனியன் விழிபொழி மழையன் மூவினையைச் செயிர்த்த சிந்தையன் தெருமரலுழந் துழந்தழிவான் அயிர்த்து நோக்கினும் தென்றிசையன்றி வேறறியான், பயந்த துன்பமே யுருவு கொண்டாலன்ன படியான்' (4080) என்ற பரத்துவாசன் கூற்றினுல் ஆய்ந்து தெளிக, இப்பரதனுடைய உடன் பிறபபுப் பாசத்தை வரதுங்க ராமபாண்டியன் மனைவியார் மதனலீலையார் அதிவீர ராமனிடம் கூறியதாக வழங்கும்,

'செஞ்சுடரோன் மைந்தனையும் தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே—துஞ்சா
விரதமே பூண்டிந்த மேதினியை யாண்ட
பரதனையும் இராமனையும்பார்' என்ற தனிப்பாடல் கண்டு அறிக,

### சத்துருக்கினன்

முத்துருக்கு என்று எதுகை எடுத்துச் சத்துருக்கன் எனத் தரித்தினன் நாமம் என்பது திருவவதாரப் படலம். சத்துருக்கினன் என்பதற்குப் பகைவரை வெல்பவன் என்பது பொருள் என்பர். இவன் எந்தச் சத்துருவையும் வென்றதாக இராமாயணத்திற் குறிப்பு ஒன்றுமில்லை. பின் ஏன் இப்பெயர் என்னின், அகச் சத்துருக்களாகிய பஞ்சேந்திரியங்களை வென்றவன். அலையும் மனத்தை யகத்தடக்கும் அவனே சரியை யாதிகளைக் கடந்தவன் என்பர் அறிஞர். பரதன் தீப்புகும்போது இவனை நோக்கிச் சொன்ன நாளிராகவன் தோன்றிலன், மின்னுதீயிடை யானினி

வீடுவன், மன்னு னுதியென் சொல்லை மருது' (4106) என்று கூற, 'இளர் தடக்கைகளால் தோட்ட தன் செவி பொத்தித் துணுக்குறு, வூட்டு நஞ்சமுண்டானைத் துயங்கினன்' நாட்டமும் மனமும் நடுங்கா நின்று (4107) 'விழுந்து மேக்குயர் விம்மலன் வெய் துயிர்த்து, எழுந்து நானுனக்கென் பிழைத்துளேன், அழுந்து துன்பத்தினய்' என்றாற்றினள். பின்னர் 'கானள நிலமகளைக் கைவிட்டுப் போனுனைக் காத்துப் பின்பு, போனு மொருதம்பி போனவர்கள் வருமவதி பொயிற்றென்னு. ஆனுத வுயிர்விட வென்றமையானும் ஒரு தம்பியயலே நாணுது, யானுமிவ் வரசாள் வெனென்னே யிவ்வரசாட்சியினி தேயம்மா' (4109) என்றும். மன்னிற்பின் வளநகரம் புக்கிருந்து வாழ்ந்தானே பரத னென்னும், சொன்னிற்கும் என்றஞ்சிப் புறத்திருந்து மருந்தவமே தொடங்கினுயே, என்னிற்பின்னிவனுளனு மென்றேயுன் னடிமை யுனக்கிருந்த தேனு, முன்னிற்பின்னிருந்ததுவும் ஒரு குடைக் கிழிருப்பதுவும் ஒக்கும்' என்றும் பகர்கின்றுன். இதிலிருந்து இவன் மண் பொன் ஆசைகளை வெறுத்தவன் என்றும் இந்திரிய நிக்கிரகம் செய்தவன் என்றும் உணரலாம்.

சாம்பன்

இக்காப்பியத்தில் இந்த எண்கின் வேந்தனை முதல் முதலாகக் கிட்கிந்தா காண்டம் தானை காண்படலத்துக் காண் கின்றோம். அங்கு இவன் ஆயிரத்தறுநூறுகோடிச் சேனையுடன் பிராட்டியைத் தேடுவதற்காக வந்தான் என்று கூறப்பட்டுள்ளது. பிரமன் கொட்டாவியிலிருந்து கரடி வடிவாகத் தோன்றியவன். இவன் திருமாலின் திருவிக்கிரம அவதாரத்தின்போது உலகம் முழுவதும் நிரம்பிய அப்பெருமானை பதினெட்டு முறைவலம் செய்தவனுக நூல்கள் கூறும், இவன் காலம் பல கடந்தவன் (கிட்கிந்தா. 699) உரை காண்க. இவன் அநுமனுடைய வீரம் முதலான் பல பண்புகளையும் கூறுவதைக் கிட்கிந்தா காண்டம் மயேந்திரப் படலம் 985-996-ல் காண்க. வீடணன் அடைக்கலப் படத்தில், வீடணன் 'கைப்புகற் பாலனே, கழியற் பாலனே' என்று இராமபிரான் வினவியபோது அலகில் கேள்வியால் தன்னிகர்

பிறிதிலாத்தகைய சாம்பன் தன் கருத்தை மொழிகின்றான். யுத்த: 376-380 காண்க. இவனைக் குறித்து முக்காலமு மொய்ம்மதியான் முறையின் னுணர்வான். புக்காலமெழப் புணரிப் புலவோர்கலக்கும், அக்காலமுள்ளான் கரடிக் கரசாகி நின்றான், இக்கால நின்று முல கேழு மெடுக்கவல்லான்' (யுத்த : 826) என்று சாரணன் இராவண னிடம் கூறுகின்றான்.

இனி இந்திரசித்து விடுத்த பிரமாத்திரத்தால் இலக்குவன் முதலானவர்கள் இறந்துபட, சாம்பனே அவர்களை வாழ்விக்க வல்லவன் என்றுணர்ந்து அவனைத் தேடியலைந்து கண்டான் வீடணன். சாம்பன், அநுமன் வீடணதியரைக் கண்டு 'யாவரும் உய்ந்தோம்' என்று மொழிந்து இராமன் நிலைமையையும் தெரிந்து கொண்டு எல்லோரையும் பிழைப்பிக்கும் மருந்தினைக் கொண்டுவரு மாறு மாருதியிடம் சொல்லி மருத்து மலையை அடையும் வழியை யும் பகர்கின்றான் (யுத்த. 2640-2666). அநுமன் கொணர்ந்த மருத்து மலையால் அரக்கர் நீங்கலாக அனைவோரும் உயிர்பெற் றெழுகின்றனர். பின்னர்ச் சாம்பன் கூறியவாறு அநுமன் சஞ்சீவி மலையை மீட்டுக் கொண்டு சென்று அஃது முன் இருந்த இடத்தி லேயே வைத்து விடுகின்றான். 'உய்த்த மாமருந்துதவ வொன்ன லார், பொய்த்த சிந்தையாரிறுதல் பொய்க்குமால், மொய்த்த குன்றையம் மலைமுழைவாய், வைத்து மீடியால் வரம்பிலாற்றலாய்' (2752) என்றது காண்க.

இனி, மூலபலவதைப் படலத்தில் வானரர்கள் மிகவும் அஞ்சி, 'அநுமனாற்றலும் அரசனதாற்றலுமிருவர், தனுவி னாற்றலும் தம்முயிர் தாங்கவுஞ் சாலா, கனியுங்காய்களும் உணவுள முழையுள கரக்க, மனிதராளி னெனிராக்கத ராளினென் வையம்' (யுத்த. 3275). அப்பொழுது சாம்பனும் பின்வாங்க அங்கதன் நோக்கி, 'அறிவு சான்றோய், பாம்பணைய மலனே மற்றிராம னென்றெமக்குப் பண்டே, எம்பல் வந்தெய்தச் சொல்லித் தேற்றினையல்லையோ நீ, ஆம்பலம் பகைஞன் தன்னோ டயிந்திர மறைந்தோன் அன்னாய்' (யுத்த. 3277) என்றும், 'எத்தனை யரக்கரேனும் தருமம் ஆண் டில்லை யன்றே, அத்தனை அறத்தை வெல்லும் பாவமென்றறிந்

த்துண்டோ, பித்தரைப் போல நீயுமிவருடன் பெயர்ந்த தன்மை ஒத்திலது' (யுத்த. 3281) என்றும் கூறச் சாம்பன் 'தோன்றிய வரக்கர் தோற்றம், காணத்தானிற்கத் தானக் கறை மிடற்றவர்க்கு மாமே, கோணற் பூவுண்ணும் வாழ்க்கைக் குரங்கின் மேற்குற்றம் உண்டோ' (யுத்த. 3282) என்றும், 'மூவகை யுலகினுள்ளாரிவர் துணையாற்றல் முற்றும், பாவகருளரே கூற்று மிவருடன் பகைக் கவற்றோ' (3283) என்றும், 'மாலியைக் கண்டேன் பின்னை மாலிய வானைக் கண்டேன், ஆலமாவிடமும் கண்டேன், மதுவினை யநுக னோடும், வேலையைக் கடக்கக் கண்டேனிவர்க்குள மிடுக்கும் உண்டோ' (3284) என்றும். 'ஆகினுமையம் வேண்டா வழகிதென் றமரினஞ்சிச், சாகினும் பெயர்ந்த தன்மை பழிதரு நரகிற்றுள்ளும், ஏகுதுமீள' (3286) என்கின்றான்.

நீலன்

இவன் அங்கிக் கடவுள் அமிசமாய்த் தோன்றியவன். (பால. திருவவ. 27); 'நீலன் முதற்போர் கெழுகொற்ற நெடுவீரர்' (கிட்கிந்தா. 831) என்று இவன் பெயரை முதற்கண் கூறியது கொண்டு, இவனைப் பெரும்போர் வீரனென்றறியலாம். இரா வணன் வாநரத்தானை காண்படலத்தில், 'நீலன் நின்றவன் நெருப் பின் மகன் திண்சூலமுங்கயிறும் இன்மை துணிந்தும், ஆலமென்னு நிறமின்மையறிந்தும்,'காலனென்பரிவனைக் கருதாதார்' (யுத்த.824) என்று இவனைக் குறித்துச் சாரணன் இராவணனுக்கு அறிவிக் கின்றான். முதற்போர்ப் படலத்தில் இந்த நீலன் பிரகத்தனைத் தன் வாலினாற் பிணித்து வீழ்த்துகின்றான். (யுத்த. 1033); கும்பகன்னனுக்குத் தோற்றுவிடுகின்றான். (யுத்த. 1390); சேது பந்தனத்தில், நெடுவரைகளைக் கொணர்ந்து அணை கட்ட வுதவு கின்றான். 'நாகபாசப் படலத்துச் சூலமும் மழுவும் தாங்கித் தோளிரு நான்கும் தோன்ற, மூலம் வந்துலகை யுண்ணு முருத்திர மூர்த்தி யென்ன, நீவனின்றுழியே நின்று னிரந்தரங் கணங்க ளோடும், காலனென் றொருவனியாண்டும் பிரிந்திலன் பாசக் கையான்' (யுத்த. 1990) என்று கூறப்பட்டமை காண்க. மற்றும் அநுமனுக்குதவியாகச் சென்று ஓர் நெடிய குன்றினை யெடுத்து

அரக்கன் மகன்மீது வீசுகின்ருன். (2019); ஆயினும் இந்திரசித்து விடுத்த வாளிகளால் சிறிது தளர்கின்ருன். 'நாக வெங்கணகு வாளிபாய் தொறு நடுங்கினுன் மலை பிடுங்கினுன்' (2020) என்றது காண்க. படைத்தலைவர் வதைப்படலத்தில் மாலிக்கும் நீலனுக்கும் போர் நிகழ்கின்றது. (2315); பின்னர், பிரமாத்திரப் படலத்தில் நீலன் முதலான படைத்தலைவர்களைப் பின்னணியில் நிற்குமாறு இராமபிரான் பணிக்கின்ருன். பிரமாத்திரத்தினுல் மயங்கிவீழ்ந்து மருத்து மலையால் உயிர் பெற்றவர்களுள் இவனும் ஒருவன், நீலனைப் பாடி வீடு அமைக்குமாறு சுக்கிரீவன் பணிக்கின்ருன். (யுத்த. 699) நீலன் குணதிசை வாயிலில் பதினேழு வெள்ளம் சேனையுடன் நின்ருன்' 'நின்றனன் நீலன் என்பான் குணதிசை வாயி னெற்றி' (யுத்த. 890) என்றது காண்க. நீலன் கைக் குத்தினுல் போர் மத்தன் மாள்கின்ருன்' (யுத்த. 1887); இந்த நீலனுக்கு நவமணிக்காழு முத்துமாலையும் நலங்கொள் தூசும், கவன வெம்பரியும் கதமலைக்கரசும் வெகுமதியாக இராமபிரானீந் தமை, 'காதற்பவனனுக்கினிய நண்பன் பயந்தெடுத்தவனுக் கீந்தான்' (யுத்த. 4309) என்று வருவது கொண்டுணர்க.

நளன்

தேவ சிற்பி. விசுவகன்மாவின் புதல்வன். இவனைச் சேது அணை அமைக்குமாறு சுக்கிரீவன் வேண்ட, 'காரியம் கடலினை யடைத்துக் காட்டலே, மேருவு மணுவுமோர் வேறுருவகை, ஏருற வியற்றுவன்' (யுத்த. 618) என்கின்ருன். இவன் அணைகட்ட முயன்றதை, யுத்த. 661, 662-ல் காண்க. ஒற்றுக் கேள்விப் படலத்தில், 'அன்றுலகு தந்த முதலந்தணன மைந்தான், என்ற பொழுதின் காணுமி தின்றியலும்' என்றும், 'ஏழு கடலுங்கடி தடைப்பனிவன்' என்றும், இராமபிரான் இவனை வாயாரப் புகழ் கின்ருன். பின்னர் அதே படலத்தில், பெற்ற தாதையும் நாணுட் கொள்ளுமாறு, 'வில்லினுலிருக்கை செய்யும் விருப்பினுற் பொருப்பின் வீங்கும், கல்லினுற் கல்லையொக்கக் கடலினுற் கழைகளாலா, நெல்லினுலலக்கும் காலு நிரப்பினுன் தருப்பை யென்னும், புல்லினுல் தொகுத்து வாசப் பூவினுல் வேய்ந்து போனுன்' (யுத்த. 701) என்று கூறப்படுகிறது. ஒரு சிறிது சிரமுமின்றி அநாயாசமாகப் பர்ணசாலை யமைத்தான் என்பது

இதனின்று தெரியலாம். இத்துடன், சித்திரகூடத்தில் இராம பிரானுக்கும் பிராட்டிக்கும் இலக்குவன் வகுத்த பர்ணசாலையை ஒப்பு நோக்குக. வல்லவனுக்குப் புல்லுமாயுதம் என்பர். இராவணன் வானரத் தானைகாண் படலத்தில், 'நளன் என்னும் விலங்கலன்னான், ஏரு வருணன் வழி தந்தில னென்றிராமன், சீருத வுள்ளத் தெழுசீற்ற முகுத்த செந்தீ, ஆருத முன்னம் மகன் வேலையை யாறு செய்தான்' (யுத்த. 825) என்று சாரணன் இராவணற்குரைக்கின்றான். சேது அணை திறம்படக் கட்டியதற் காகத்தனக்கு வருணன் அளித்த ஆரத்தை நளனுக் கீந்தான் இராமபிரான் (ஒற்றுக் கேள்வி)

மாலியவான்

இராவணன் முதாதை. (யுத்த. 1222) முதல் போரில் தோற்றுப் பரிபவப்பட்ட இராவணனை அணுகி, 'மூப்பின் யாக்கை, வாங்கிய வரிவிலன்ன மாலியவானென் றேரதும், பூங்கழலரக்கன், பொருந்தவந் துற்ற போரில் தோற்றனை போலுமென்ன, வருந்தினை மனமும் தோளும் வாடினை நாளும் வாடாப் பெருந்தவ முடையவையா வென்னுற்ற பெற்றி' யென்றான். அரக்கர்கோன் நிகழ்ந்தவற்றைப் புகல்கின்றான். மாலியவான் தான் சொன்ன அறம் கேளாததால், 'கிளை தரு சுற்றம் வெற்றி கேடிலாக் கல்விச் செல்வம், களைவரு தானையொடும் கழிவது காண்டி' (1243) என்று இடித்துரைக்கின்றான். மற்றும் படைக்காட்சிப் படலத்தில் மாலியவான் இராமபிரான் வல்லமையைக் கூறுகின்றான். யுத்த. 3220-3227; பல செய்திகளைக் கூறி, 'சீதையென்றிருந் தவத் தியைந்தாள், பொதுவியற்கைதீர் 'கற்புடைப் பத்தினிப் பொருட்டால், விதி விளைத்த தவ்வில்லியர் வெல்க நீர் வெல்க, முது மொழிப்பதம் சொல்லினெனென் றுரை முடித்தான்' (யுத்த, 3228)

---

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

# சு. யுத்த காண்டம்

## நான்காம் பகுதி

---

## 34. இராவணன் தேரேறு படலம்

இஃது, இராவணன் முடிவாக இராமபிரான்மீது போரிடும் பொருட்டுத் தன் தேர்மீது ஏறினதைக் கூறும் படலம் என விரியும். சில சுவடிகளிலும், அச்சிட்ட பதிப்புக்களிலும் இதுவும் அடுத்த படலமும் ஒன்ருகச் சேர்க்கப் பெற்றுத், 'தேரேறு படலம்' என்ற பெயருடன் காணப்பெறுகிறது. ஒரு சுவடியில் 'இருவர் தேரேறு படலம்' என்றும் பெயர் குறிக்கப்பெற்றுள்ளது.

### இராவணன் எஞ்சிய சேனைகளைத் திரட்டக் கட்டளையிடுதல்

3580. பூதர மனைய மேனிப் புகைநிறப் புருவச் செங்கண்
மோதர னென்னு நாமத் தொருவனை முறையி னேக்கி
ஏதுள திறந்தி லாத திலங்கையு ளிருந்த சேனை
யாதையு மெழுகென் ருனை யணிமுர சேற்று கென்ருன்.

(தன் பெரும்படைகள் யாவும் அழிவுற்றதைக் கண்ட இராவணன் தன் இருக்கைசேர்ந்து), பூதரம் அனைய மேனி - மலையை ஒத்த உடம்பையும், புகை நிற புருவ செம்கண் - புகை நிறத்தையுடைய புருவங்களையும் சிவந்த கண்களையும், மோதரன் என்னும் நாமத்து ஒருவனை - மகோதரன் என்னும் பெயருடைய ஒருவனை, முறையின் நோக்கி - முறைப்படி பார்த்து, 'இலங்கை ஊர் - இலங்கை நகருள், இறந்திலாதது இருந்த - இறந்து போகாதனவாய் இருந்த, சேனை - படைகள், ஏது உளது - எவ்வளவு உள்ளனவோ, யாதையும் - (அவ்வாறுள்ள) யாவற்றையும், எழுக என்று - போருக்குப் புறப்படுக என்று, ஆனை - யானைமீது, அணி முரசு ஏற்றுக - அழகிய போர் முரசைச்சாற்றச் செய்க' என்றான் - என்று இராவணன் கட்டளையிட்டான்.

இராவணன் தன் மூலபலச் சேனைகள் முற்றிலும் அழிந்து போனமையைக் கேட்டுப் போர்க்களத்தையும் நேரில் கண்டு மிகவும் வருந்தி, இனி முடிவாகத் தானே நேரிற் சென்று போர் புரியத் தீர்மானித்துப் படைகள் எழுமாறு போர்ப் பறை அடிக்க உத்தரவிட்டனன் என்க. பூதரம் - மலை; வடசொல்; நிலத்தைத் தரித்துக் கொண்டிருப்பது என்ற பொருளையுடையது. மேனி - உடம்பு. கண் தீயைப் பெற்றுச் சிவந்த நிறம் காட்டியது என்றும், அதன் புகை போன்று புருவம் விளங்கிற்றென்றும் கொள்க. மோதரன் - மகோதரன் என்பதன் திரிபு; பெருவயிற்றன். முறையின் நோக்கி - அரசன் தன் அமைச்சனைப் பார்க்க வேண்டிய முறைப்படி பார்த்து. இறந்திலாதது ஏதுளது என்றமையின், நகர்க் காவலுக்காகப் படைகளை நிறுத்தாமல் எஞ்சிய படை முழுமையையும் அழைக்கச் சொன்னான் என்பதாயிற்று. யாதையும்; எதுகை நோக்குக. சேனை யாதையும் என்பது, பலவினையைந்த ஒருமை. ஆனை மணிமுரசு - போர் முரசு.

பி - ம். 1. புருவச் செந்தீ, புருவச் செங்கேழ்,

2. முகந்தி னேக்கி.

3. யாதுள திறந்திலாத ; யாதினை யெழுகென்றானை; முரசறைகவென்றார்.

## சேனைகள் திரளுதல்

3581. எற்றின முரசி னோடு
மேழிரு நூறு கோடி
கொற்றவா ணிருதர் சேனை
சூழ்இயது கொடித்திண் டேருஞ்
சுற்றுறு துளைக்கை மாவுந்
துரகமும் பிறவுந் தொக்க
வற்றின வேலை யென்ன
விலங்கையூர் வறளிற் றுக.

முரசு எற்றின ஓடும் - முரசு அடிக்கப்பட்ட உடனே, ஏழ் இரு நூறு கோடி - பதினான்கு நூறு கோடி, கொற்றம் வாள் நிருதர் சேனை சூழ் இயது - வெற்றியும் கொடுமையும் உடைய அரக்கர் காலாட் படைகள் கூடின; வற்றின வேலை என்ன - நீர் வற்றிப் போன கடல் என்னும்படி, இலங்கை ஊர் வறளிற்று ஆக - இலங்கா நகரம் (படைகள்) அற்றுப் போகுமாறு, கொடி திண் தேரும் - கொடி கட்டிய திண்ணிய தேரும், சுற்றுறு - அத்தேர்களைச் சூழ்தல் அமைந்த, துளைகை மாவும் - துணையுடன் கூடிய துதிக்கையை யுடைய யானையும், துரகமும் - குதிரைகளும், பிறவும் - மற்றவை யும், தொக்க - தொக்குக் கூடின.

இச் செய்யுள் முந்தியதோடு அந்தாதித் தொடையில் அமைந் துள்ளமை காண்க. ஆயிரத்து நானூறுகோடி அரக்கர் படை யினர் இலங்கை நகரினுள் இருந்தனர் என்பது பெறப் பெற்றது. சுற்றுறு என்பதை துளைக்கையோடும் கூட்டிப் பொருள் உரைக்க லாம். பிற, ஒட்டகப் படை முதலியன. வேலை இங்கு இலங்கைக்கு. வறளிற்று - வறண்டுபோதலை யுடைத்து.

பி - ம். 1. எற்றிய முரசங் கேளா; ஏழிரு கோடி கோடி.
2. கொற்ற வேனிருதர்; நிருதர் தானை,
4. வறளிற்றுன,

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

ஏழிரு நூறு கோடி எனும்படைத் தலைவ ரோடும்
ஆழியின் வளைந்த சேனை யையிரு நூறு வெள்ளம்
ஊழியி னெழுந்த வோதத் தொலித்தது மரக்கர் வேந்தன்
வாளமர் முடிப்பெ னின்றே யெனமணித் தவிசு நீத்தான்.

## இராவணன் செய் பூசனை முதலியன

3582. ஈசனை யிமையா முக்க
 ணிறைவனை யிருமைக் கேற்ற
பூசனை முறையிற் செய்து
 திருமறை புகன்ற தானம்
வீசின னியற்றி மற்றும்
 வேட்டன வேட்டோர்க் கெல்லாம்
ஆசற நல்கி யொல்காப்
 போர்த்தொழிற் கமைவ தானன்.

(இராவணன்), ஈசனை - ஈசுவரனும், இமையா முக்கண் இறைவனை - இமைக்காத மூன்று கண்களையுடைய கடவுளும் ஆன சிவ பெருமானை, இருமைக்கு ஏற்ற - இம்மை மறுமை என்ற இருமைகளுக்கும் பொருந்த, பூசனை - வழிபாடுகளை, முறையின் செய்து - (ஆகமங்களில் விதிக்கப் பெற்ற) முறைப்படி இயற்றி, திரு மறை புகன்ற - வேதங்கள் கூறிய, தானம் - தானங்களை, வீசினன் இயற்றி - நிரம்பக் கொடுத்து நிறைவேற்றி, மற்றும் - மேலும், வேட்டோர்க்கு எல்லாம் - விரும்பினவர் யாவர்க்கும், வேட்டன - விரும்பினவற்றை, ஆசு அற நல்கி - குற்றமறக் கொடுத்து, ஒல்கா - குறைவற்ற, போர் தொழிற்கு அமைவது ஆனன் - போர் செய்தற்கு அமைந்தான்.

ஈசன் - எல்லா ஐசுவரியங்களுக்கும் உரியவன். இமையா முக்கண் - சூரியன், சந்திரன், அக்கினி என்பவை; இவை இமைத்தல் செய்யாதவை என்பது கூறப்பெற்றது. 'இருமை - இகபரம்; செயித்தால் இகத்தையடையவும்; செத்தால் பரத்தையடையவும்' (வேறுரை), வீசுதல் - தாராளமாகக் கொடுத்தல். சிவ பூஜை,

தானம், கொடை முதலிய செய்து போர்த்தொழிற்கமைவது வழக்கம் என்பது அழியற்பாலது.

பி - ம். 1. முக்கணொருவனை.

2. முறையோ செய்து ; புகன்றுதானம்.

3. வேட்டவர் வேட்டதெல்லாம். 3

## வேறு

## இராவணன் கொண்ட போர்க்கோலம்

3583. அருவி யஞ்சனக் குன்றிடை யாயிர மருக்கர்
உருவி னேடும்வந் துதித்தன ராமென வொளிரக்
கருவி நான்முகன் வேள்வியிற் படைத்ததுங் கட்டிச்
செருவி லிந்திரன் றந்தபொற் கவசமுஞ் சேர்த்தான்.

அருவி அஞ்சனம் குன்றிடை - அருவிகள் பாயும் கரிய மலையினிடையிலே, ஆயிரம் அருக்கர் - ஆயிரம் சூரியர், உருவினேடும் - தம் உண்மைத் திருவுருவங்களுடன், வந்து உதித்தனர் ஆம் என - வந்து உதயமானார்கள் என்று சொல்லும்படி, ஒளிர - ஒளி வீச, நான்முகன் வேள்வியில் படைத்தது கருவி உம் - பிரமன் தான் இயற்றிய ஒரு வேள்வியில் உண்டாக்கியதான கவசத்தையும், கட்டி - கட்டி, (அதன்மீது) செருவில் - போரில், இந்திரன் தந்த பொன் கவசமும் சேர்த்தான் - (தோல்வியுற்றோடிய) இந்திரன் அளித்த பொன்னாலான கவசத்தையும் சேர்த்துக் கட்டினான்.

இராவணன் ஒன்றின்மேலொன்றாக இரு கவசங்கள் அணிந்தான் ; அவற்றுள் ஒன்று பிரமன் வேள்வியிற் படைத்தது ; மற்றது இந்திரன் போர்க்களத்திலே தோற்றோடிப் போனபோது வீழ்த்தியது. கருவி நான்முகன் என்றதற்கு உலக சிருஷ்டிக்குக் காரணனான நான்முகன் என்று பொருள் கூறுவாரும் உளர். கருவினான்முகன் என்றும் பாடபேதமுளது. அருவி மாலைகளுக்கும், குன்று இராவணன் மார்புக்கும், அருக்கர் ஒளி கவசங்களின் ஒளிக்கும் உவமைகள்.

பி - ம். 2. ஒளிரும்.

4. இந்திரன்றீர்ந்த பொற்கவசமும். 4

இதன்பின் ஓர் அதிகப் பாடல்:—

உரைசெ யற்கருந் தவத்தினுக் குவந்துமை கேள்வன்
அருள வுறறதங் கவன்மழுக் குலிசமோ டாழி
முரிய மற்றவை முனைகளை மடித்தொன் றின்முடியா
விரவு வச்சிரக் கவசத்தை மேற்படப் புனைந்தான்.

3584. வாள்வ லம்பட மந்தரஞ் சூழ்ந்தமா சுணத்தின்
தாள்வ லந்தொளிர் தமனியக் கச்சொடுஞ் சார்த்திக்
கோள்வ லந்தன குவிந்தன வாமெனுங் கொள்கை
மீள்வில் கிம்புரி மணிக்கடி சூத்திரம் வீக்கி.

மந்தரம் சூழ்ந்த - மந்தர மலையைச் சுற்றிக் கட்டிய, மாசுணத்தின்-வாசுகி என்ற பாம்பைப் போல, தாள்-கயிறு, வலந்து-சுற்றிக் கட்டப் பெற்று, ஒளிர் - ஒளி விடுகின்ற, தமனியம் கச்சொடும் - பொன்னாலான கச்சை யென்னும் ஒருவகை உடையோடு, வாள் - உடைவாளை, வலம்பட - வலப்புறத்திலே, சார்த்தி - சேர்த்து, கோள் - கிரகங்கள், குவிந்தன வலந்தன ஆம் எனும் கொள்கை - ஓரிடத்தில் குவிந்த சுற்றியுள்ள என்று சொல்லும் இயல்பு தோன்ற, மீள்வு இல் கிம்புரி - மீளுதல் இல்லாத கிம்புரியையும், மணிகடி சூத்திரம் - இரத்தினத்தினாலான கடி சூத்திரத்தையும், வீக்கி - கட்டி.

வாளை கச்சுடன் சேர்த்து, கிம்புரியையும் கடி சூத்திரத்தையும் கட்டி என்க. வாள் - உடைவாள். வலம்பட - வன்மையாக என்றும் கூறுவர். தாள் வலந்து ஒளிர் தமனிய கச்சு, கச்சு என்பது அரைப்பட்டிகை; இது இடுப்பில் ஒரு கயிற்றினால் கட்டப்பெறும் என்று தோன்றுகிறது; தாள - சட்டைக் கயிறு; 'தாளுண்ட கச்சாற்றகையுண்ட' (பால. பூக்கொய். 14). வலத்தல் - சுற்றுதல்; தொடுத்தல்-பிணித்தல்; 'மாயா வாய்மொழி யுரைதர வலந்து' (பரிபாடல். 3-11). பிருங்கலாதன் பலபல பிணிபட, வலந்துழி' (பரிபாடல். 4-12) குடர்வலந்த வேற்றின்முன்' (கலித். 103). கோள்-கிரகங்கள். கொள்கை-இயல்பு; 'கொம்பினின்றும் நுடங்குறு கொள்கையார்' (அயோத்தி. கிளைகண்டுநீங்கு. 10). கிம்புரி - மகரவாயென்னும் ஆபரணம்; இஃதொரு தொடையணியாகும்; 'காசொடு கண்ணிழல் கஞலக்கைவினை, ஏசலில் கிம்புரி யெயிறு வெண்ணிலா, வீசலின் மகரவாய் விளங்கு வாண்முகம், ஆசையை யொளிகளா லளந்து

காட்டவே; (பால. கடிமணப். 65); இது குறங்குசெறி எனவும்படும்; ஒருவகைத் தோள்வளைக்கும் கிம்புரிப் பெயர் உண்டு; இங்குக் கூறியது குறங்குசெறி. கடி சூத்திரம் - அரைஞாண். வீக்குதல் - கட்டுதல். இதனின்று 18 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்; அச் செய்யுளிலுள்ள 'வருக தேர் என' என்பதோடு முடிவு பெறும்.

பி - ம். 1. சுழன்ற மாசுணத்தின், மந்தரம் அணைந்த மாசுணத்தின்.
3. கோள் வளர்ந்தன; குருந்துளவாயன, குவிந்துளவாயென்ன, குவித்துளவாமென்ன.
4. மின் விலங்கிய; மின் வலம்புரிமணி; சூத்திரம் விளக்கி. 5

3585. மறைவி ரித்தென்ன வாடுறு மானமாக் கலுழன்
சிறைவி ரித்தென கொய்சக மருங்குறச் சேர்த்தி
முறைவி ரித்தென்ன முறுக்கிய கோசிக மருங்கிற்
பிறைவி ரித்தன்ன வெள்ளெயிற் றரவமும் பிணித்து.

மறை விரித்தென்ன - வேதத்தை விரித்து வைத்தது என்று சொல்லும்படி, ஆடு உறு - ஆடுதலை உடைய, மானமா கலுழன் - பெருமை பெற்ற பெரிய கருடனுடைய, சிறை விரித்தென்ன - சிறகுகளை விரித்து வைத்தன போலக் காணும், கொய்சகம் - கொய்சக மடிப்புக்களை, மருங்கு உற சேர்த்தி - பக்கத்திலே அமையுமாறு சேர்த்துக் கட்டி, (விளங்கும்) முறை விரித்தென்ன - ஒரு முறையை விரித்தமைத்தது போன்று (ஒன்று போல் பிறிதொன்று அமையுமாறு) முறுக்கிய - முறுக்குதல் ஏற்றிய, கோசிகம் - கோசிகப் பட்டு என்னும் ஆடையை, மருங்கில் - இடுப்பில், (கட்டி) பிறை விரித்தென்ன - பிறைச் சந்திரனை பிரித்து வைத்தது போன்ற, வெள் எயிறு அரவும் பிணித்து - வெண்மையான பற்களையுடைய பாம்பையும் கட்டி.

கொய்சகங் கொண்ட கோசிகத்தை இடுப்பில் கட்டி, அதன் மீது அரவும் சேர்த்துக் கட்டி என்பது கூறப்பெற்றது. கருடன் வானத்தில் ஆடுறு கோலத்தை ஆசிரியர் வேதத்தை விரித்துக் கோஷ்டியினர் உரைக்கும்போது உண்டாகும் செவியின்பத்தைக்

காட்சிப்படுத்தி உவமித்திருப்பது கவனிக்கத்தக்கது. கொய்சகம் - ஓரங்கொய்து சுருக்கப்பட்ட உடை. கோசிகம் - பட்டாடை. கொய்சகத்துக்குக் கருடன் சிறை. அரவின் - எயிற்றுக்குப் பிறை. முறை விரித்தல் - கோசிக மடிப்பை அதன் முறைப்படி விரித்து அணிதல் போலும்.

பி - ம். 1. விரித்தென வாடுறு ; மானக்கலுழன்.

2. கோசிக மருங்குற, கொய்யக மருங்குற.

3. முறுக்கிய காசொடு முறையில், கோசிக முறையே.

4. எயிற்றரிமுகம் பிணித்து, அரவமும் பெயர்த்து. 6

3586. மழைக்கு லத்திடை வதியுமின் னினங்களை வாரி
இழைத்தெ டுத்தென வனைந்திடு முடைமணி யிசைத்து
முழைக்கி டந்தபல் லரியின முழங்கு போரார்ப்பிற்
றழைக்கு மின்னொளிப் பொன்மணிச் சதங்கையுஞ் சாத்தி.

மழை குலத்திடை - மேகங்களின் கூட்டத்திடையில், வதியும் - உறையும், மின் இனங்களை - மின்னல் தொகுதிகளையெல்லாம், வாரி - ஒரு சேரக்கூட்டி, இழைத்து எடுத்தென - இழைத்துச் செய்தது என்னுமாறு, வனைந்திடும் - செய்யப்பட்டுள்ள, உடை மணி - உடை மணி, இசைத்து - கட்டி, முழை கிடந்த பல் அரி இனம் - குகைக்குள் கிடந்த பல சிங்க இனங்கள், முழங்கு போர் ஆர்ப்பின் - முழங்கும் இரைச்சலைப் போன்று, தழைக்கும் மின் ஒளி - விளங்குகின்ற மின்னலின் ஒளியைப் போன்று, (ஒளி விடுவதான) பொன் மணி சதங்கையும் சாத்தி - பொன்னாலும் மணியாலும் செய்த சதங்கையை அதனோடு சேர்த்துக் கட்டி.

இச் செய்யுள் சுவடிகளிலும் அச்சிட்ட பிரதிகளிலும் வெவ்வேறு பாடங்கொண்டு காண்கின்றது. இராவணன் உடை மணி இசைத்ததும் அதனில் சதங்கைகளைச் சேர்த்ததும் இங்குக் கூறப்பெற்றுள்ளன. 15 ஆம் செய்யுளிலும் மணி முடித்தலங்கள் கூறப்பெற்றுள்ளன. 'உடைமணி - அரையிற் கட்டிய மணி ;

சதங்கை-அதனைச் சுற்றித் தொங்கவிட்ட சிறு சதங்கை' ஓர் உரை. சதங்கை ஒலிக்குச் சிங்க ஒலி.

பி - ம். 1. மழைக்கு லத்தொடு வானுறு மேறெலாம் வாரி; மழைச் சலத்தொடு; வானவவல்லேறெலாம், அழைத்தெ டுத்தன வனையவா ளுடைமணி யார்த்து.

2. இழைத்தொடுத்தன, அணையன விடைமணி யார்த்து, இழைந்தெடுத் தனவனை வானிடை.

3. வல்லரி; கிடந்த மால்கரியின் முழங்குபோர்வளி; முழங்குவ போல்வ வந்தழைக்கும், முழங்குவ போர்வ.

4. மின்றெலிப் பொன்மலர்ச்; இன்றெலிப் பொன்மலேர்; தழைத்து மின்னெளிப் பொன்முடி. 7

3587. உருமி டித்தபோ தரவுறு மறுக்கம்வா னுலகின்
இருநி லத்திடை யெவ்வுல கத்திடை யாரும்
புரித ரப்படும் பொலங்கழ லிலங்குறப் பூட்டிச்
சரியு டைச்சுடர் சாய்நலஞ் சார்வுறச் சாத்தி.

உரும் இடித்த போது - இடி இடித்த போது, அரவு உறு மறுக்கம் - பாம்பு அடையும் மயக்கத்தை ஒத்த, வான் உலகின் - விண்ணுலகிலும், இரு நிலத்திடை - பெரிய பூமியிலும், எ உலகத்திடை - வேறு எந்த உலகத்திலும் (உள்ள), யாரும் - எவரும், புரிதர - அடைய, படும் - உண்டாக்கும், பொலம் கழல் - பொன் கழலே, இலங்கு உற - விளங்கும்படி வீச, பூட்டி -(காலில் கட்டி), சரி உடை - சரிந்த (கால்) உடையின், சுடர் - ஒளி, சாய் - (வீரக்கழலின் பொன் தகட்டு) அழகின், நலம் - அழகோடு, சார்வு உற - பொருந்துமாறு, சாத்தி - கட்டி.

காலில் வீரக்கழலைக் கட்டி, அதன் ஓரமாகக் காலோடொட்டி யமையும் சரியுடை என்ற ஒருவகை உடையையும் அணிந்தான் என்க. சரி உடையின் அழகு, கழல் தகட்டின் அழகோடு பொருந்துமாறு மிக நெருக்கமாகவும் ஒரே நிறமுடையதாகவும் அமைத்துக் கட்டி என்க. சரியுடை மேலிருந்து சரிந்து இறங்கு மாறு வாலோடு சேர்த்துக் கட்டும் பட்டை போலும். சாய் - அழகு; 'சங்கஞ் சரிந்தன சாயிழந்தேன்' (திவ். திருவாய். 8, 2, 1); சாய் - நிறமும் ஆம். 'சாயற் கரியானை' (திவ். இயற். பெரிய திருவந். 14). அரவுறு மறுக்கம் - நடுக்கம்; இராவணனின் வீரக்கழல் ஓசை

கேட்டு, இடியோசை கேட்ட அரவுபோல் எல்லா உலகங்களும் நடுங்கும் எனப்பட்டது.

பி - ம். 1. உருமிடித்துழியரவெனக் கரக்குமாவுலகின் ; அயர்வுறு மயக்கம் ; உருமிடுத்துழிஇ, யாவெனக் கரக்கும்.

2. இவை நிலத்தினில் யார்க்கும்.

3. அலங்குறப் பூட்டிச் ; வலயமும் பூட்டி.

3. சாய்வுறச் சாத்தி ; சாய்வலஞ் சாத்தி, சாயலுஞ். 8

3588. நாலஞ் சாகிய கரங்களி னனந்தலை யனந்தன்
ஆலஞ் சார்மிடற் றருங்கறை கிடந்தென விலங்கும்
கோலஞ் சார்நெடுங் கோதையும் புட்டிலுங் கட்டித்
தாலஞ் சார்ந்தமா சுணமெனக் கங்கணந் தழுவ.

நால் அஞ்சு ஆகிய கரங்களில் - (இராவணன் தன்) இருபது ஆகிய கைகளில், நன தலை அனந்தன் - அகன்ற இடத்தையுடைய ஆதிசேடனின், ஆலம் சார் மிடறு அரும் கறை - விடம் சார்ந்த கழுத்திற் காணப்பெறும் அரிய களங்கம், கிடந்தென - கிடந்தது என்று சொல்லும்படி, இலங்கும் - விளங்கும், கோலம் சார் - அழகு பொருந்திய, நெடு கோதையும் - நீண்ட முன்கைத் தோற்கட்டியும், புட்டிலும் - விரற் சரடுகளும், கட்டி - கட்டி, (அதன்மேல்), தாலம் - பனைமரத்தை, சார்ந்த - சூழ்ந்த, மாசுணம் என - பாம்பு என்று சொல்லும், கங்கணம் - வளையல்கள், தழுவ - சூழ.

அனந்தனைப் பாம்புக்குப் பொதுப் பெயராக்கி, ஆலம்சார் மிடறு என்பதைச் சிவபெருமான் மிடற்றுக்காக்கிப் பொருள் காணலும் ஆம். கோதை - வில்லாளர் கையிற் பூணும் தோலுறை 'மூரிச் சிலையு முரட்கோதையுங் கட்டி' (பாரத வெண்பா. 776) புட்டில் - விரல் புட்டில் ; கைக்குத் தாலம் ; கங்கணத்துக்குப் பாம்பு. கங்கணம் - வாகு வலயமும் ஆம். தோள்வளை சாலஞ் சார்ந்த என்ற பாடங்கொண்டு மராமரம் சூழ்ந்த என்று சிலர் பொருள் கூறுவர். கங்கணம் - முன் கைக் கங்கணமும் ஆம்.

பி - ம். 1. நாலைந்தாகிய.

2. வலங்குங்.

3. கூட்டிச் ; கட்டிச்.

4. சாலஞ்சார்ந்த ; சேர்ந்த மாசுணம் ; மாதனமெனக். 9

3589. கடல்க டைந்தமால் வரையினைச் சுற்றிய கயிற்றின்
அடல்க டந்ததோ ளலங்குபோர் வலயங்க ளிலங்க
உடல்க டைந்தநா ளொளியவ னுதிர்த்தபொற் கதிரின்
சுடர்த யங்குறக் குண்டலஞ் செவியிடைத் தூக்கி.

கடல் கடைந்த - திருப்பாற் கடலைக் கடைந்த, மால் வரையினை - பெரிய மந்தரம் என்ற மலையை, சுற்றிய கயிற்றின் - சுற்றிய வாசுகி என்னும் பாம்பாகிய கயிற்றின், அடல் கடந்த - வலிமை மீறிய, தோள் - தோள்களில், அலங்கு - அசைகின்ற, போர் வலயங்கள் - போர்க்குரிய வாகுவலயங்கள், இலங்க - துலங்க, (மாட்டி) உடல் கடைந்த நாள் - (சூரியன்) உடலைத் (தேவர்கள் சாணையில் வைத்துக்) கடைந்தபோது, ஒளியவன் - (அச்) சூரியன், உதிர்த்த - தன் உடலிலிருந்து வெளிப்படுத்திய, பொன் கதிரின் சுடர் தயங்குற - பொன் நிறமுள்ள கதிர்களின் ஒளி விளங்குகிற, செவியிடை - செவிகளிலே, குண்டலம் தூக்கி - குண்டலங்களைத் தொங்கவிட்டு.

தோளுக்கு மந்தரமும், வலயத்துக்கு வாசுகியும். முன் செய்யுளில் கங்கணம் என்ற சொல்லுக்கு வாகுவலயம் என்று பொருள் கொண்டால், அவை இலங்க என்றிங்கு இயைத்துக் கொள்க. இன்றேல், 'மாட்டி' என்னும் சொல் வருவித்து குண்டல ஒளிக்கு, ஒளியவன் உடலிலிருந்த உதிர்ந்த கதிரின் சுடர்கள் என்க. ஒளியவன் உடல் கடைந்தது; (இதைப் பற்றி எமக்குக் கிடைத்த ஒருரையிற் கண்ட வரலாறு பின்வருமாறு:—' ஒரு முனிவருடைய பத்தினி மிகுந்த அழகுடையவளாயிருந்தாள். அம் முனிவர் அவளை விட்டுப் பிரிந்து வெளியிற் செல்ல மனமில்லாதவராயிருந்தார். எப்பொழுதேனும் பிரிய நேர்ந்தால் அவர் அவள் உயிரை ஆகர்ஷணம் செய்து, தன்னுடன் எடுத்துச் சென்று, பிறகு தாம் திரும்பியவுடன் அவ்வுயிரை அவ்வுடலிற் பாய்ச்சி அவளை எழுப்புவார். இந்திரனும் சூரியனும் அவளை அடைய விரும்பி, ஒருநாள் முனிவரில்லாத பொழுது, அவராச்சிரமத்துட் புகுந்து, அவள் உயிரற்றுக் கிடந்ததைக் கண்டு இந்திரன் அவளுடம்பில் உயிராகப் புகுந்திருக்கச் சூரியன் அவளைக் கூடினான். முனிவர் திரும்பி வந்து தமக்குத் துரோகம் செய்த

இரு தேவர்களையும் சபித்தனர். சூரியன் ஒளி இழந்து போனதால், பிற தேவர்களும் மூவருங்கூடி விசுவகருமனைக் கொண்டு சூரியனைச் சாணையில் வைத்துக் கடைய அவன் முன்பைவிட அதிகமாகத் துலங்கினன். இதற்கு மேற்கோள்; 'தண்டுத லின்றியே தானு நானுமாய்ப், பண்டொரு வனிதையை பிரிவிற் கூடினேம்;, அண்டரும் அறிகுவர் அற்றை நாட்கினம், உண்டுகொல் கதிரினம் உதிக்கிலா னென்பான்' (கந்த பு. 1, 24 குமாரபுரிப் படலம். 50).

இச் செய்யுளிற் காணும் வனிதை என்பதற்குப் பெண்ணுருவம் பெற்ற அருணன் என்று வேறு கதை கூறுவாரும் உளர்.

இன்னும், 'கூரிய சாணை வாயிற் கொடுத்திடப் பட்டு வெய்யோன், சீரிய வுடன்மெலிந்து சிறப்பொழிந் ததன்மேல் வந்து, வாரிசூ ழுலக மேத்தும் வைத்திய நாதஞ் சார்ந்தே, ஆரிணை மலரணிந்த வண்ணலைப் பூசை செய்தான்' (புள்ளிருக்கு வேளூர்ப் புராணம். சூரிய தீர்த்தச் சருக்கம். 2) என்ற செய்யுளிலும் இச் செய்தி கூறப் பெற்றுள்ளமை காண்க.

'துவஷ்டா தன் மகள் சாயாதேவியின் பொருட்டுச் சூரியனைக் கடைந்தான்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. பரஞ்சோதி திருவிளையாடற் புராணம், மாணிக்கம் விற்ற படலம். 71 செய்யுளில் இவ் வரலாற்றின் ஒரு பகுதியைக் காணலாம்.

பி - ம். 1. மால் மாசுணத்தின்மேல் சுற்றிய கயிற்றிடை.
2. அடைகிடந்த நான்; அடல்கிடந்த தோள்; பொன் வலயங்களிலங்க.
3. உதித்த பொற்கதிர்.
4. தயங்குறு குண்டலஞ்; செவிதோறும்; தாங்க; தூக்கி, தூங்க. 10

3590. உதயக் குன்றத்தோ டத்தத்தி னுலாவுறு கதிரின்
துதையுங் குங்குமத் தோளொடு தோளிடைத் தொடரப்
புதையி ருட்பகைக் குண்டலஞ் செவிதொறும் பொலியச்
சிதைவி றிங்களு மீனும்போன் முத்தினந் திகழ.

குங்குமம் தோளொடு தோளிடை.-குங்குமம் பூசிய தோள்களில், தொடர - வரிசையாக, புதை இருள் பகை - உலகைத் தன்னுள்

முடிக்கொள்ளும் இருளின் பகையாக ஒளி வீசும், குண்டலம் - குண்டலங்கள, உதயகுன்றத்தோடு - உதய கிரியோடு, அத்தத் தின் - அத்த கிரியில், உலாவுறு - திரிகின்ற, கதிரின் - சூரியனைப் போன்று, துதையும் - நெருங்கும், செவிதொறும் - ஒவ்வொரு செவி யிலும், பொலிய - விளங்க, சிதைவு இல் - குறைபாடில்லாத, திங்களும் - சந்திரனும், மீனும் போல் - நக்ஷத்திரங்களும் போல, முத்து இனம் திகழ - முத்து மாலை வரிசைகள் விளங்க.

குங்குமம் பூசிய அவனுடைய தோள்கள் உதயகிரி போன்றும் அத்தகிரி போன்றும் விளங்க, அவற்றில் சூரியன் போன்ற குண்டலங்கள் படிந்து ஊசலாட, சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் போன்றவை என்று சொல்லத்தக்க முத்து மாலைகள் ஒருபுறத் தோளிலிருந்து மறுபுறத் தோளிடையிலே மாட்டப்பெற்று விளங்கின என்பது கூறப்பெற்றது. புதை இருட் பகை, இங்குக் குண்டலங்களுக்கு; 'கதிரின் சுடர் தயங்குற' என்று இக் குண்டலங்களுக்கே கூறினமையும் காண்க. தோள்களுக்குக் குன்றுகள்; அவற்றில் பூசிய குங்குமத்துக்கு, உதய, அத்தமனச் செவ்வொளிகள்; முத்து மாலைக்குச் சந்திர நக்ஷத்திரங்கள் உவமைகளாம். 'அத்தம் - அத்தகிரி யென்னும், வடமொழிச் சிதைவு விகாரமாயிற்று; 'அத்தமென்னும் பொன்னஞ் சிலம்பு' (பாண்டிக் கோவை) என்றார் பிறரும்' (சீவக. 18. நச். உரை); சீவக. 1722ம் காண்க. கதிர் - சூரிய சந்திரர்கள்; சந்திரன் பெரிய முத்துக்கும், மீன், சிறிய முத்துக்கும்.

பி - ம். 1. குன்றத் தோடொத்ததின், குன்றத் தொடக்கத்தின்; குன்றத்தோ டோதத்தின்; உலைவுறு கதிரின்.
2. துதையக் குங்குமத்.
4. முகத்தினந் திகழ.

11

3591. வேலை வாய்வந்து வெய்யவ ரனைவரும் விடியுங்
காலை யுற்றன ராமெனக் கதிர்முடி காலும்
மாலை பத்தின்மேன் மதியமு ளிடைப் பலவாய்
ஏல முற்றிய வனையமுத் தக்குடை யிமைப்ப.

வெய்யவர் அனைவரும் - சூரியர்கள் யாவரும், விடியும் காலை - விடியற் காலத்தில், வேலை வாய் வந்து உற்றனர் ஆம் என - கடலி

ணிடத்திலே வந்து சேர்ந்தனராம் என்று சொல்லும்படி, கதிர் காலும் - கிரண சாலங்களை வீசும், மாலை முடிபத்தின் மேல் - ஒழுங்காக அமைந்த பத்துக் கிரீடங்களின்மீது, முன் நாள் இடை - பூர்வ பக்ஷத்தின் நாட்களிலே, பல ஆய் ஏல முற்றிய மதியம் அனைய - பல ஆகிய (கலைகள்) பொருந்த முதிர்ச்சியடைந்த பூரணச் சந்திரனை ஒப்ப, முத்த குடை - முத்துக்கள் கட்டிய (சந்திரவட்டக் குடைகள்) இமைப்ப - விளங்க.

பத்து முடிகளுக்கு மேலே பத்துக் குடைகள் விளங்கின என்க. மதியம் - மதியங்கள். ஏல - பொருந்த. முற்றிய - முதிர்ச்சி அடைந்த.

பி - ம். 1. அனைவரு மடியும்.
2. காலையுற்றுளராமெனக்; கதிர்க்குலங் காலும்.
4. மூல முற்றிய; முற்றிய வெண்குடைகணி றிமைப்ப; குடை நிழற்ற. 12

3592. பகுத்த பல்வளக் குன்றினின் முழையன்ன பகுவாய்
வகுத்த வான்கடைத் திசைதொறும் வளையெயிற் றீட்டம்
மிகுத்த நீலவான் மேகஞ்சூழ் விசும்பிடைத் தசும்பூ
டுகுத்த செக்கரிற் பிறைக்குல முளைத்தன வொக்க.

பல் வளம் பகுத்த குன்றினின் - பல்வேறு வளங்களாகப் பிரித்துக் கூறப்படும் குன்றினில், முழை அன்ன - குகைகள் போன்ற, வகுத்த பகு வாய் - வகுக்கப்பெற்ற பிளந்த வாய்களின், வான் - பெரிய, கடை - கடை வாய்களில், திசைதொறும் - திசைகள் தோறும் காணப்பெற்ற, வளை எயிறு ஈட்டம் - வளைந்த பற்களின் கூட்டம், மிகுத்த நீலம் - நிரம்பிய நீல நிறங்கொண்ட, வான் மேகம் சூழ் - மழைமேகம் சூழ்ந்த, விசும்பு இடை - ஆகாயத்திலே, தசும்பு ஊடு உகுத்த செக்கரில் - ஒரு குடத்தின் வழியாக ஊற்றிய சிவந்த வானத்திலே, பிறைகுலம் - மூன்றாம் பிறைக் கூட்டங்கள், முளைத்தன ஒக்க - முளைத்தன போன்றிருக்க.

தலை குன்றுக்கும். வாய் முழைக்கும். கடை - கடைவாய். செக்கர் வாய்ச் சிவப்புக்கு. கடைவாய்ப்பற்களின் ஈட்டம் - பிறைகளுக்கு. கறுத்த மேகத்திலெழுந்த செக்கரிலே பிறந்த பிறை;

கரிய தலைகளில், சிவந்த உதடுகளுக்கிடையிலிருந்து புறப்படும் பிறைபோன்ற பற்கள் என்க.

பி ம். 1. பல்கலைக் குன்றினின் ; பன்முறை நிறந்தன்ன பதுவாய்.
2. கடைக் கடைதொறும்.
3. நசும்பொடு.
4. ஒத்த, ஒப்ப, ஓங்க. 13

3593. ஒத்த தன்மையி னொளிர்வன தரளத்தி னொக்கத்
தத்து கின்றன வீரபட் டத்தொகை தயங்க
முத்த வோடையின் முரட்டிசை மும்மத யானை
பத்து நெற்றியுஞ் சுற்றிய பேரெழில் படைப்ப.

(இராவணன் தன்), பத்து நெற்றியும் சுற்றிய - பத்து நெற்றிகளிலும் சுற்றிக் கட்டினவும், ஒத்த தன்மையின் ஒளிர்வன - (ஒன்றுபோலவே எல்லாமும்) ஒருமித்த நிலையிலேயே பிரகாசிக்கின்றனவும், தரளத்தின் - முத்துக்களால் (அமைந்து), ஒக்க தயங்க தத்துகின்றன - ஒருமிக்க விளங்க ஒளிவிடுகின்றனவுமான, வீரபட்ட தொகை - வீரபட்டங்களின் கூட்டங்கள், முரண் - மாறுபாட்டினையுடைய, மும்மத திசை யானை - மூன்றுவித மதப் பெருக்கினையுடைய யானைகளின், முத்த ஓடையின் பேரெழில் படைப்ப - முத்துக்களாலான ஓடைகளின் மிகுந்த அழகினைப் பெறவும்.

இராவணன் தன் பத்து நெற்றிகளிலிருந்து கட்டிய முத்துக்களாலான வீரபட்டயங்கள், திக்கஜங்களில் நெற்றிகளில் கட்டியிருந்த ஓடைகளைப்போன்று பிரகாசித்தன என்பது கூறப்பெற்றது. வீரபட்டம்: வீரபட்டிகை யெனபதும் அதுவே ; வீரர் வெற்றிக்குறியாக நெற்றியில் அணியும் பொற்றகடு ; யானை ஓடையுடன் ஒப்பிடுவர் ; 'நுதலணி யோடையிற் பிறழும் வீரபட்டத்து' (ஆரணிய. 520); பால. கடிமணப். 54 ; சுந்தர. 882-ம் காண்க. ஓடை : யானை நெற்றிப்பட்டம்.

பி - ம். 1. ஒளியவ னுதயத்துள் ; தரளத்தி னேதம்.
2. வீரப்பட்டத்தொகை ததைந்து ; ததைந்த.
3. முத்தவோடைய ; முழுமத யானை, மும்மத கரிபோல்.
4. நெற்றியிற் சுற்றிய ; சந்திரன் பேரெழில் ; சுற்றின போலெழில் ; புடரெழில். 14

3594. புலவி மங்கையர் பூஞ்சிலம் பரற்றடி போக்கித்
தலைமை கண்ணினர்த் தாழ்கிலா மணிமுடித் தலங்கள்
உலக மொன்றினை விளக்குறுங் கதிரினை யோட்டி
அலகி லெவ்வுல கத்தினும் வயங்கிரு ளகற்ற.

புலவி - ஊடுதலையுடைய, மங்கையர் - பெண்டிரின், பூம் - அழகிய, சிலம்பு - சிலம்பணிகள், அரற்று - ஒலிக்கின்ற, அடி - காலடிகளை, போக்கி - நீக்கி, (மற்று) தலைமை கண்ணினர் - உயர்வு நிலையைக் கருதின (எவர் மாட்டும்), தாழ்கிலா - வணங்காத, மணி முடி தலங்கள் - இரத்தினம் பதித்த கிரீடஇடங்கள், உலகம் ஒன்றினை - ஓர் உலகத்தை மட்டும், விளக்குறும் கதிரினை - விளங்கச் செய்யும் சூரியனை, ஓட்டி - வெருட்டிவிட்டு, அலகு இல் - எல்லையில்லாத, எ உலகத்தினும் - எந்த உலகங்களிலும், வயங்கு - மிகுகிற, இருள் - இருள்களையெல்லாம், அகற்ற - நீக்கவும்.

இராவணன் ஊடலின் மங்கையர்க்கு வணங்கா முடியன்; 'மாதர் வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க' (ஆரணிய. 556): வணங்காமுடியன்: 'மனைவி யுயர்வும் கிழவோன் பணிவு நினையுங் காலைப் புலவியுளுரிய' (தொல். பொருளியல். 33); 'யாரையும் கும்பிடா என், தலை' (ஆரணிய. 872); கண்ணுதல் - கருதுதல். ஒவ்வோருலகத்துக்கும் ஒவ்வொரு கதிரவன் உண்டு என்ற கொள்கைபற்றி 'உலகமொன்றினை விளக்கலுங் கதிரினை' என்றார். ஓட்டுதல் - பயனறச் செய்தல். வயங்குதல் - மிகுதல்; 'அணி நிழல் வயங்கு.... மதி' 'பூச்சிலம் பரற்றடி தாழ்கிலாது போக்கி' என்று கொள்க என்பது ஒருரை.

பி - ம். 1. அழுஞ்சிலம்பரற்றிட; அரற்றடி பொங்கித்.

2. தலைமைக் கண்ணினர்; தலைமை கண்டிடிற் றாழ்கிலர், தலைமை கண்ணின் தாழ்கிலர்.

3. உலக மூன்றையும்; விளக்குறு மருக்கனை.

4. அலகு பல்லுலகத்தினும் படரொளியெறிப்பப். 15

3595. நாக நானில நான்முக னுடைன நயந்த
பாக மூன்றையும் வென்றுகொண் டமரர்முன் பணிந்த
வாகை மாலையின் மருங்குற வரிவண்டொ டளவித்
தோகை யன்னவர் விழிதொடர் தும்பையுஞ் சூட்டி.

நாகம் - நாகர்கள்வாழும் உலகம், நானிலம் - நான்கு நிலங்களைக் கொண்ட பூவுலகம், நான்முகன் நாடு - சத்தியலோகம், என - என்று, நயந்த - விரும்பிய, பாகம் - (பிரபஞ்சத்தின்) பகுதிகளான, மூன்றையும் - மூவுலகங்களையும், வென்றுகொண்டு - வென்றுதன் வயமாக்கிக்கொண்டு, முன்பு - முற்காலத்தில், அமரர் அணிந்த - தேவர்கள் சூட்டிய, வாகை மாலையின் - வெற்றி மாலையினுடைய, மருங்கு உற - பக்கத்திலே பொருந்துமாறு, வரி வண்டொடு - வரிகளையுடைய வண்டுகளோடு, தோகை அன்னவர் - மயில்போன்ற மாதர்கள், அளாவி - கலந்து, விழி தொடர் - தங்கள் விழிகள் தொடரும், தும்பையும் - தும்பை மாலையும், சூட்டி - தரித்துக்கொண்டும்.

நயந்த பாக மூன்றையும் - 'வையமும் வானும் உரகதேயமும்' என்று இப்படலம் 18-ஆம் செய்யுளிற் கூறியஃது காண்க. நாகம் - தேவருலகம் என்பாரும் உளர். நான்முகனுடு என்பதில் தேவருலகம் அடங்கியதாகக் கொண்டு, 'நாகம் - நாகலோகம்' என்று பொருள் கூறப்பெற்றது. அணிந்த, பிறவினைப் பொருளில் வந்தது. வாகை - வெற்றிக்குரியது. தும்பை - பகைவருடன் போர் செய்வதைக் கூறும் திணை; அச் செயலுக்குரிய மாலை, தும்பை மாலையாய், வண்டும் விழியும், தொடர்மாலை என்க.

பி - ம். 1. பாகை மூன்றையும், லோக மூன்றையும்; வென்றிதானமரரின்முன்.
2. பணிப்ப.
3. மாலையு மருங்குற! வண்டினளவித்; வண்டொடளரவித்.
4. சூடி. 18

3596. அகழும் வேலையி னகலத்தை யளக்கர்நுண் மணலை
நிகழு மானில விஞ்சையை நினைப்பதே னின்ற
இகழ்வில் பூதங்க ளிறப்பினு மிறுதிசெல் லாத்தன்
புகழு மெனச்சரந் தொலைவிலாத் தூணியும் பூட்டி.

அகழும் வேலையின் அகலத்தை - தோண்டப் பெறும் சமுத்திரத்தின் அகலத்தையும், அளக்கர் நுண் மணலை - கடலின் நுண்ணிய மணலையும், மாநிலம் நிகழும் - பெரிய உலகில் நிகழ்ந்து வரும், விஞ்சையை - மந்திரங்களை, நினைப்பது என்? (தூணிக்கு

உவமையாக்க்) கருதுவது ஏன்? நின்ற - வாழ்ந்து நின்ற, இகழ்வு இல் - இகழ்ச்சியற்ற, பூதங்கள் - ஐம்பூதங்களும், இறப்பினும் - அழிந்துபடுமாயினும், இறுதி செல்லா - முடிவு என்பதை அடையாத, தன் புகழ் என - இராவணனின் புகழே என்று சொல்லும்படியாக, அ சரம் - அம்புகள், தொலை இலா - அற்றுப் போகாத, தூணியும் - அம்புப் புட்டிலையும், பூட்டி - கட்டியும்.

வேலையின் அகலம், அளக்கர் மணல், ஆதி விஞ்சைகள் இவை அளந்து சொல்லமுடியாதவை என்று குறிக்க நினைப்பதேன்? என்றார். இறப்பினும், உம் உயர்வு சிறப்பு; சரம் தொலைவிலாத் தூணி - அம்பறுத் தூணி. தூணிக்குப் புகழ். விஞ்சை - மந்திரம்; 'விஞ்சைகளிரண்டு மவ்வழியின் ஊக்கினன்' (தாடகை.18); அளக்கர் - கடல். இப்படலம் மூன்றும் செய்யுளில் (இராவணன்) போர்த்தொழிற் கிசைவதானன் என்று கூறி, அடுத்த செய்யுள் முதல் இச்செய்யுள் முடிய, அவன செய்துகொண்ட போர்க் கோலத்தைப் பற்றிக் கூறினார்.

பி - .ம் 1. அகழ் வேலைமைக் காலத்தை.

2. நிகழும் மீன்களை; நிகழுமானிகள்; நிகழுமாதிகள்; நிகழுமாநியாம்; நினைப்பதேன்; நினைப்புற நின்ற.

3. செல்லாததன்.

4. தூணியின் பூட்டு. 17

## இராவணனுக்குத் தேர் வருதல்

3597. வருக தேரென வந்தது வையமும் வானும்
உரக தேயமு மொருங்குட னேறினு முச்சிச்
சொருகு பூவன்ன சுமையது துரகமின் றெனினும்
நிருதர் கோமக னினைந்துழிச் செல்வதோர் நிமைப்பில்.

(இவ்வாறு இராவணன் தனக்குரிய போர்க்கோலம் கொண்டபின்), 'தேர் வருக' என - தேர் வரட்டும் என்று கட்டளையிட - வையமும் வானும் உரக தேயமும் - பூலோகம், விண்ணுலகம், நாகலோகம் ஆகிய மூன்றும், ஒருங்கு - ஒருமிக்க, உடன் ஏறினும், ஒன்று கூடி (அதன்மீது) ஏறினலும், உச்சி சொருகு பூ அன்ன - தலையின் உச்சியிலே சொருகப்படும் பூப்போன்ற, சுமையது - சுமை

யுடையதும் (அதாவது, சிறிதும் சுமையை உணர்விக்காதது); துரகம் இன்று எனினும் - குதிரைகள் கட்டப்பெறவில்லை என்றாலும், நிருதர் கோமகன் - அரக்கரின் இறைவனான இராவணன், நினைந்துழி - கருதியவிடத்து, ஓர் நிமைப்பில் - ஒரு கணத்தில், செல்வது - செல்லக்கூடியதுமான (தேர்), வந்தது - அங்கு வந்து சேர்ந்தது.

'வருக தேர்'; (ஒப்பு): 'வருக தேர் விரைவி' னென்றான் (யுத்த. 3062) வையம், வானம், உரகதேயம் - மூவுலகு; (16). உச்சிப்பூ - குழந்தைகளின் தலையணி வகை. நிமைப்பு - இமைப்பு; நிமைத்தல் - இமைத்தல்; நிமை - இமை; 'நீலிக்குக் கண்ணீர் நிமையிலே' (பழையவுரை). இச் செய்யுளில் 'துரகமின்றெனினும் செல்வது' என்று கூறி, அடுத்த செய்யுளில் 'பல்வகைக் குதிரைகள்' என்று கூறியிருப்பதால், வந்தது இயந்திரத் தேரென்பதும், அதற்கும் குதிரைகள் கட்டியிருந்தனர் என்பதும் ஊகிக்கத்தக்கன. இதன்கீழ் அதிகப் பாடலையும் காண்க.

பி - ம். 1. வானமும் மண்ணும்.

2. உரக தேசமு மொருங்குட னிவரினுமுச்சி.

3. பூவன்ன வவையவை.

4. நினைப்பில்; இமைப்பில். 18

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :—

அண்ட கோடிக ளௌவற்றினுந் தன்னர சுரிமை
கண்டு போய்வரும் காட்சியின் கண்ணுதற் பிரமன்
பண்டவன் செய்யுந் தவத்தினின் பரிந்தினி தளிக்கக்
கொண்ட வானகத் தேரது; குதிரையைக் குறிக்கின்.

3598. ஆயி ரம்பரி யமுதொடு வந்தவு மருக்கன்
பாய்வ யப்பசுங் குதிரையின் வழியவும் படர்நீர்
வாய் மடுக்குமா வடவையின் வயிற்றின்வன் காற்றின்
நாய கற்குவந் துதித்தவும் பூண்டது நலத்தின்.

(அத் தேர்), நலத்தின் - அழகாக, அமுதொடு வந்தவும் - பாற் கடலில்) அமுதத்தோடு பிறந்தனவும், அருக்கன் - சூரிய

னுடைய, பாய்-பாய்கிற, வயம்-வெற்றியைத் தருகிற, பசுங் குதிரையின் - பச்சைக் குதிரைகளின், வழியவும் - வழிப் பிறந்தனவும், படர் - பரவிக் கிடக்கிற, நீர் வாய் மடுக்கும் - கடல் நீரைத் தன் வாயினாற் குடிக்கும், மா - பெரிய, வடவையின் - வடவாமுகாக்கினி என்னும் குதிரையின், வயிற்றின் - கருவிலே, வல் - வலிமையோடு கூடிய, காற்றின் நாயகற்கு - வாயு தேவனுக்கு, வந்து உதித்தவும் - வந்து பிறந்தனவும் (ஆன), ஆயிரம் பரி - ஆயிரம் குதிரைகள், பூண்டது - பூண்டிருந்தது.

நலத்தின் என்ற மிகையால் துரகமின்றியும் செல்லும் தேராயினும்,(18) அதிக வலிமையாகிய நலம் உண்டாகும்பொருட்டு என்றும் கொள்ளலாம். பாற்கடலில் பிறந்த குதிரை உச்சைச்சிரவம் என்பர்; இதன் நிறம் வெள்ளை; இதனை இந்திரன் கொண்டான் என்றும் அவனிடமிருந்து பலிச்சக்கரவர்த்தி அதனை எடுத்துக்கொண்டான் என்றும் கூறுவர். அருக்கன் குதிரைகள் பச்சைமா; 'பச்சைமா, ஏழு மேறப்போ யாறு மேறினர்' (பால. கையடைப். 22); 'பசும்பரி பகலவன் பைம்பொற் றேரரோ' (ஆரணிய. 414); (வி. பா. வசந்த. 1); இவற்றின் நிறங்களைப் பற்றி வேறு கூறுவாரும் உளர். வடவை - வடவாமுகாக்கினி என்ற வடசொல்லின் சிதைவு; பெண் குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தில் மேலே கிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ; பகன் தான் செய்த தவாக்கினியைப் பிதுர்க்கள் கட்டளைப்படி கடலில்விட, அது பெட்டைக் குதிரை உருக்கொண்டு தங்கியது என்றும், சூரிய மண்டலத்தைத் தேவர் சாணையில் பிடிக்கையில் தெறித்த தீப்பொறிகளை விசுவகர்மன் சேர்த்துக் கடனீரை யடக்கக் கடலிலிட்டனன் என்றும் வெவ்வேறு விதமாகக் கூறுவர். வடவைக் கனலில் வாயுவுக்குக் குதிரைகள் பிறந்தன என்பதற்கு ஆதாரம் ஆராய்தற்குரியது.

பி - ம். 1. அமுதோடு வந்தது, அமுதொடு பிறந்தவும், அமுதத்தின் வந்ததும்.
2. பாயவப்ப; வழியது படர்நீர்; வழியதும்.
3. வாய் மடுக்குறும்.
4. வந்துதித்ததும் பூண்டது நலத்தால்; பூண்டதோர் நலத்தால். 19

3599. பாரிற் செல்வது விசும்பிடைச்
செல்வது பரந்த
நீரிற் செல்வது நெருப்பினுஞ்
செல்வது நிமிர்ந்த
போரிற் செல்வது போய்நெடு
முகட்டிடை விரிஞ்சன்
ஊரிற் செல்வதெவ் வுலகினுஞ்
செல்வதோ ரிமைப்பின்.

(அக்குதிரைகளில் ஒவ்வொன்று) ஓர் இமைப்பின்-ஓர் இமைப் பொழுது நேரத்துள், பாரில் செல்வது - தரையில் செல்வதும், விசும்பிடை செல்வது - வானிடைச் செல்வதும், பரந்த நீரில் - அகன்று கிடக்கும் கடலில், செல்வது - போவதும், நெருப்பினும் செல்வது - நெருப்பினுள்ளும் புகுந்து போவதும், நிமிர்ந்த-மிகுந்த, போரில் செல்வது - போரில் செல்வதும், போய் - சென்று, நெடு முகடு இடை - (வானத்தில்) நீண்ட உச்சியின் இடையே, விரிஞ்சன் ஊரில் - நான்முகனின் நகரத்தில், செல்வது - போவதும், எ உல கினும் செல்வது - எந்த உலகத்திற்கும் போவதும் ஆகும்.

ஓர் இமைப்பின் செல்வது என இயைக்க. விரிஞ்சன்-பிரமன்.

பி - ம். 1. விசும்பிடைப் படர்வது.
2. நெருப்பிடைச் செல்வது.
3. மேருச் செல்வது ; பொன்னெடு முகட்டிடை ; போனெடு முகட்டிடை.
4. எவ்வுலகத்தும், எவ்வுலகமும். 20

3600. எண்டி சைப்பெருங் களிற்றிடை மணியென விசைக்கும்
கண்டை யாயிர கோடியின் றொகையது கதிரோன்
மண்டி லங்களை மேருவிற் குவித்தென வயங்கும்
அண்டம் விற்குநன் காசினங் குயிற்றிய தடங்க.

(அத் தேர்), எண் திசை பெரும் களிறு இடை மணி என - எட்டுத் திக்குகளிலுமுள்ள பெரிய களிறுகளிடமுள்ள மணிகள் என்னுமாறு, இசைக்கும் - ஒலிக்கின்ற, கண்டை - பெரு மணிகள், ஆயிர கோடியின் தொகையது - ஆயிர கோடிகள் என்று சொல்லும்

தொகையை உடையது; கதிரோன் மண்டிலங்களை - சூரிய மண்டிலங்களை, மேருவில் குவித்தென - மேருவில் குவித்துள்ளன என்று சொல்லும்படி, வயங்கும் - விளங்கும், அடங்க - முற்றிலும், அண்டம் விற்கும் - அண்டத்தையே தனக்கு விலையாகக் கொள்ளத்தக்க, நன் - நல்ல, காசு இனம் குயிற்றியது - இரத்தினத் தொகுதிகள் பதிக்கப் பெற்றது.

தேரிற் கட்டிய மணிகளும் பதித்த இரத்தினங்களும் இத்தகைய என்பது கூறப்பெற்றது. அண்டம் விற்றல்-அண்டத்தை விலையாகக் கொள்ளல். தேர் மணிக்கு யானை மணி.

பா - ம். 1 களிற்றிடு மணியென யிமைக்கும்.

2. ஆயிரங்கோடி; கோடியின் தகையது; தொகையது கதிர்சூழ்.

3. மண்டலங்களை.

4. கண்டவிற்கு நன்; காசினுலியற்றியதடங்க; காசினற் குயிற்றிய; இயற்றியது; குயிற்றியநிலங்க; வயங்க; தயங்க, அலங்க. 21

3601. முனைவர் வானவர் முதலின ரண்டத்து முதல்வர்
எனைவ ரீந்தவு மிகலினி லிட்டவு மியம்பா
வினையின் வெய்யன படைக்கலம் வேலையென்
[றிசைக்குஞ்
சுனையி னுண்மணற் றொகையன சுமந்தது தொக்கு.

முனைவர் - முனிவர்கள், வானவர்-தேவர், முதலினர்-முதலானவர்களும், அண்டத்து முதல்வர் - அண்டத்துக்கு மூலமாகவுள்ள திருமால், சிவபிரான், நான்முகன் ஆகிய; எனைவர் - எவரெவரும், ஈந்தவும்-கொடுத்துதவினவும், இகலினில்-பகைமையில் (போரில்), இட்டவும் - (தோற்று)க் கொடுத்தனவும் வினையின் - தொழிற்படுதலில், இயம்பா - சொல்லவியலா, வெய்யன - கொடியனவுமான, படைக்கலம் - போர்ப்படைகளை, வேலை என்று இசைக்கும் சுனையில் - கடல் என்று கூறப்படும் சுனையில் (காணப்படும்), நுண் மணல் தொகையன - நுண்ணிய மணல்களைப் போன்று (கணக்கற்ற) தொகையினவானவற்றை, தொக்கு சுமந்தது - ஒருமிக்க (அத் தேர்) சுமந்திருந்தது.

அத் தேர் கணக்கற்ற படைக்கலங்களைச் சுமந்திருந்தது என்பது கூறப் பெற்றது. அப் படைகள் முனைவர், தேவர் முதலியோரால் கொடுக்கப் பெற்றனவும், தோற்றவர்களிடமிருந்து போர்க்களத்தில் பறிக்கப் பெற்றனவுமாம். முனைவர் - முனிவர்; 'முனைவருமமரரு மூவர் தேவரும்' (சுந்தர. 1117); எனைவர் - எத்தனைவர் எனலும் ஆம். பகைவரிட்ட படைக்கலன்களை, வென்றவர் கையாளுதலாகிய வழக்கம் இங்குக்கூறப்பட்டது.

பி - ம். 1. முனிவர் முதலிய வண்டத்து.
2. எனைவரன்னவ, ரீந்த மிகலி லிட்டனவுங்.
3. வினையும்; வெய்யவன் படைக்கலம்.
4. தொகையினும் சுமந்ததல் சுமந்து பின்தொடர விரதம்; சுமந்தது தொக்க, தொகுக்க, தொத்த. 22

3602. கண்ண னேமியுங் கண்ணுதல் கணிச்சியுங் கமலத்
தண்ணல் குண்டிகைக் கலசமு மழியினு மழியாத்
திண்மை சான்றது தேவரு முணர்வருஞ் செய்கை
உண்மை யாமெனப் பெரியது வென்றியி னுறையுள்.

வென்றியின் உறையுள் - வெற்றியின் இருப்பிடமான (அத் தேர்), கண்ணன் நேமியும் - திருமாலின் சக்கரப் படையும், கண்ணுதல் கணிச்சியும்-சிவபிரானின் கோடாலியும், கமலத்து அண்ணல்- தாமரை மலரில் எழுந்தருளும் பிரமனின், குண்டிகைச் கலசமும் - கமண்டலமாகிய நீர்ப் பாத்திரமும், அழியினும்-நாசமடைந்தாலும், அழியா திண்மை சான்றது - என்றும் அழியாத வலிமை நிறைந்தது; தேவரும் உணர்வு அரு செய்கை உண்மை ஆம் என - தேவர்களும் உணர முடியாத வேலைப்பாடுகளை உடையதாகும் என்று சொல்லத்தகுமாறு, பெரியது - பெருமையுடையது.

கண்ணன் - திருமால்; 'கண்ணன் மணியுந்திக் கமல நாளத் திடைப்பண்டு பூத்த வண்டம்' (பால. மிதிலைக். 74); இந் நூலில் இன்னும் பல்வேறிடங்களில் திருமாலைக் கண்ணன் என்றே ஆசிரியர் அமைப்பது காணலாம். உண்மை என்பதற்கு, உளவாகும் தன்மை என்று பொருள் கொள்ளப் பெற்றது. பெரியது-பெருமை உடையது. உண்மையாமெனப் பெரியது என்றதில் உண்மை பெரியதென்பது தொனிப்பது காண்க. உறையுள் - இருப்பிடம்

குண்டிகைக் கலசம், நேமி, கணிச்சி இவற்றோடு ஓர் ஆயுதமாகக் கருதப்பட்டது காண்க. குண்டிகை; ஸ்தாலி எனப்படுவது. 18 வது செய்யுள் முதல் இது முடிய இராவணனை ஏற்றிச் செல்ல வந்த தேரின் வருணனையாகும்.

பி - ம். 2. கலசமு மழிலா.

3. தின்மை யான்றது; திண்ணம் போன்றது; தேவரு முனிவருஞ் செய்கை; தேவரு முனிவருந் திறம்பா. 23

## இராவணன் தேரைப் பூசித்து யாத்திராதானஞ் செய்தல்

3603. அனைய தேரினை யருச்சனை வரன்முறை யாற்றி
இனைய ரென்பதோர் கணக்கிலா மறையவ ரெவர்க்கும்
வினையி னன்னிதி முதலிய வளப்பரும் வெறுக்கை
நினையி நீண்டதோர் பெருங்கொடை யருங்கட னேர்ந்தான்.

அனைய தேரினை - அப்படிப்பட்ட தேருக்கு, வரன்முறை - அடிப்பட வந்த முறைமையால், அருச்சனை ஆற்றி - அருச்சனை முதலிய பூசனைகளை இயற்றி, இனையர் - இன்ன தொகையினர், என்பது ஓர் கணக்கிலா - என்பதாகிய ஒரு கணக்கு இலாத, மறையவர் எவர்க்கும் - (அரக்கர்) அந்தணராயினர் எவர்க்கும், வினையின் - செய்ய வேண்டிய முறைப்படி, நல் நிதி - நல்ல பொருள்கள், முதலிய அளப்பரும் வெறுக்கை - முதலான அளவிட்டுக் கூற முடியாத செல்வங்களை, நினையின் நீண்டது ஓர் பெரு கொடை அரு கடன் - நினைப்பைக் காட்டிலும் நீண்டதான ஒரு பெரிய கொடையாக அரிய கடமையை, நேர்ந்தான் - செயிதான் தான்.

இராவணன் தேருக்குப் பூசனை செய்து, அந்தணர்க்குத் தானங்கள் கொடுத்தான் என்பது கூறப்பெற்றது. தேருக்குப் பூசை செய்தல்; 'மன்னுக வென்றி யென்று மணிவள்ள நிறைய வாக்கி, இன்மதுப் பலியும் பூவுஞ் சாந்தமும் விளக்கு மேந்தி' (சீவக. 471). போர்க்குச் செல்லுமுன் அந்தணர்க்குத் தானம் கொடுத்தல்; 'கொடைத் தொழில் வேட்டோர்க் கெல்லாம் கொடுத்தனன்' (யுத்த. 3064) மறையவர் - இங்கு அரக்கமறையவர்; நிதி - பலவகைப் பொருள்கள். வெறுக்கை - செல்வம்.

நினையின், நினைவின் என்பதன் திரிபு. நேர்தல் - கொடுத்தல். கடன் - கடமை.

பி - ம். 1. இயற்றி.
2. இனையது.
4. நினைய. 24

## இராவணன் செய்த வஞ்சினம்

3604. மன்ற லங்குழற் சனகிதன் மலர்க்கையான் வயிறு
கொன்ற லந்தலைக் கொடுநெடுந் துயரிடைக் குளித்தல்
அன்றி தென்றிடின் மயன்மக ளத்தொழி லுறுதல்
இன்றி ரண்டினொன் றாக்குவன் றலைப்படி னென்றான்.

(அப்பொழுது இராவணன்), 'மன்றல் அம் குழல் சனகி - மணமிக்க அழகிய கூந்தலையுடைய சானகி, தன் மலர் கையால் - தன் மலர்போன்ற கையினால், வயிறு கொன்று - தன் வயிற்றை வருத்தி, அலம் - துன்பத்தை, தலை கொடு - தன் தலைமீது கொண்டு, நெடு துயரிடை - நீண்ட துயரத்தில், குளித்தல் - மூழ்குதல்; இது அன்று என்றிடின் - இவ்வாறு நடப்பது அன்று என்றால், மயன் மகள் - மயன் மகளான மண்டோதரி, அ தொழில் உறுதல் - அந்தச் செயலை அடைதல்; இன்று தலைப்படின் - இன்று யான் போர் செய்யத் தொடங்குதலினால், இரண்டின் ஒன்று - (மேலே கூறிய) இரண்டனுள் ஒன்று, ஆக்குவென் - செய்து முடிப்பேன்' என்றான் - என்று வஞ்சினம் கூறினான்.

சில சுவடிகளில் இச் செய்யுளும் அடுத்ததும் இடம் மாறி யுள்ளன. போர்க்குக் கிளம்புமுன் வீரர்கள் வஞ்சினங் கூறுதல் மரபு; வயிறு கொல்லுதல் - வயிறு பிசைதல். அலம் - துன்பம். அத் தொழில் உறுதல்; வயிறு கொன்று; அலந்தலைக் கொடு, நெடுந் துயிரிடைக் குளித்தல். இவை குறிப்பு; இவற்றால் இராவணன் கூறியது 'இன்றைப் போரில் ஒன்று இராமனை மாள்வித்தல்; அன்றித் தான் அவனால் மாள்தல்; இவ்விரண்டு

மின்றித் தோல்வியோடு திரும்புதல் இன்று' என்பதாகும். தலைப்படின்; இடம்பட்டால் என்றும் கூறுவர்.

பா-ம். 1. சானகிதன்.

2. கொன்றன் தலையொடும்; கொன்றலந்தலையொடு; நெடுங்கணீர் குளித்தல்; நெடுங்குருதி நீர் குளித்தல்; தண்மலர்க் ஒண்ணீரிடை, தன்னெடுங் கணீருற நெடுங்கண் கணீர் குளித்தல்; கொடுங் கண்ணீரினும் குளித்த.

3. அன்றதன்றெனின்; அத்தொழி லுழத்தல், உழைந்தல். ௫௫

## இராவணன் தேரேறுதல்

3605. ஏறி னன்றொழு திந்திரன் முதலிய விமையோர்
தேறி னர்களுந் தியங்கினர் மயங்கினர் திகைத்தார்
வேறு தாஞ்செயும் வினையிலை மெய்யினைம் புலனும்
ஆறி னர்களு மஞ்சின ருலகெலா மனுங்க.

(இவ்வாறு சபதம் கூறி), தொழுது - தேரினை வணங்கி, ஏறினன் - அதன்மீது ஏறினன்; தேறினர்களும் - (முன்பு அச்சத்தினின்று) மனம் தேறினவர்களாயிருந்தும், இந்திரன் முதலிய இமையோர் - இந்திரன் முதலிய தேவர்கள், தியங்கினர் - சோர்ந்தனராயினர்; மயங்கினர் - (அச்சத்தால்) மனமயக்கம் அடைந்தார்கள்; திகைத்தார் - பிரமித்தார்கள்; உலகெலாம் - எல்லா உலகங்களிலுமுள்ள உயிர் வருக்கங்கள் யாவும், அனுங்க - வருந்த, மெய்யின் ஐம்புலனும் - உடலிலுள்ள ஐந்து அறிவுகளையும், ஆறினர்களும் - அடக்கிய முனிவர்களும், அஞ்சினர்கள் - அச்சமுற்றார்; (அவர்களுக்கு) தாம் செய்யும் வினை வேறு இலை - தாம் (இராவணனுக்கு எதிராகச்) செய்யும் தொழில் (அஞ்சுவதையன்றி) வேறு இல்லாமற் போயிற்று.

தேரைத் தொழுதல்; (ஒப்பு): திருஞானசம்பந்தர் திருவரத்துறையில் பெற்ற முத்துச் சிவிகையைத் தொழுது போற்றியமை; 'சோதி முத்தின் சிவிகைசூழ் வந்துபார், மீது தாழ்ந்துவெண்

ணீற்றொளி போற்றிநின், ருதி யாரரு ளாதலி னஞ்செழுத், தோதி யேறினு ருய்ய வுலகெலாம்' (திருத்தொண்ட. திருஞான. 216) தேறினர்கள்; இந்திரசித்தின் வதை, மூலபல வதை, இராவணன் விடுத்த வேல் வீணானமை முதலியவற்றைக் கண்ட தேவர் முதலியோர் அச்சம் நீங்கி, மனம் தேறியிருந்தனர். தியங்கல் - சோர்தல்; சஞ்சலப்படுதல், புத்தி மயங்குதலுமாம். அனுங்குதல் - வருந்துதல்; கெடுதல், முணுமுணுத்தலும் ஆம். இச் செய்யுள் கவிக் கூற்று.

பி - ம். 1. ஏறினு னொழி லிந்திரன்; ஏறினனிரதங்கடிதிந்திரன்; ஏறினு னெழுந்திரன்.
2. தேறினர்களும் நடுங்கிட, நடுங்கினர்; தியங்கினர் மயங்கினர்.
3. நாம் சொலும்; மெய்யினைப் புல்லும்.
4. ஆறினர்களு மயங்கினர். 26

## அப்பொழுது இராவணனுடைய தோற்றம்

3606. பலக ளந்தலை மௌலியோ டிலங்கலிற் பஃறோள்
அலக ளந்தறி யாநெடும் படைகளோ டலங்க
விலக ளந்தரு கடற்றரை விசும்பொடு வியப்ப
உலக ளந்தவன் வளர்ந்தன னுமென வுயர்ந்தான்

(அப்பொழுது இராவணன்), பல களம் தலை - பல கழுத்துக்களுக்குமேல் தலைகள், மௌலியோடு - கிரீடங்களோடு, இலங்கலின் - பிரகாசிக்க, பல் தோள் - பல கைகள், அலகு - அளவு, அளந்து அறியா - அளந்து அறியமுடியாத, நெடு - நீண்ட, படைகளோடு - போர்க் கருவிகளுடன், அலங்க - அசைய, விலகு - விலகி நின்ற, அளம் - உப்பளங்களை, தரு - பக்கத்திலே கொண்ட, கடல் - கடல் சூழ்ந்த, தரை - தரையிலுள்ளவர்கள், விசும்பொடு வியப்ப - வானத்திலுள்ளவர்களோடு வியப்படைய, உலகு அளந்தவன் - (முன்னொரு நாள்) உலகை அளந்த திருமால், வளர்ந்தனன் ஆம் என - திரிவிக்கிரமனாக வளர்ந்து தோன்றினவனாகும் என்று சொல்லும்படி, உயர்ந்தான் - அத் தேரின்மீது உயரமாகக் காணப் பெற்றான்.

களம் - கழுத்து ; 'பாடுகள மகளிரும்' (சிலப். 6, 157) அலகு - அளவு (பிங்.) அலங்குதல் - அசைதல் ; 'அலங்குளைப் புரவி' (புறநா. 2) அளம் - உப்பளம்.

பி - ம். 1. இயங்கலின் பஃறேள் ; பல தோள் ; இயங்கலிற் பயில்வாள் ; அலங்கலிற் பஃறேள் ; மென்றேள், பல தோள்.

2. படைகளோ டிலங்க.

3. திருகடற்றிரை ; விசும்பொடு விம்ம, விசும்பொடு ஏிய.

4. ஓங்குனனுமெனை. 27

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

ஐம்முகம்பயின் றிரட்டியங் கடல்புல னலைந்து
ஐந்நான் கெனுங் கரத்தொடு முமையவ ளொழிய
இளம்மை யிவ்வுரு வியைந் தெழில் கயிலையோ டீசன்
வெம்மை யாடமர்க் கெழுந்தெனத் தேர்மிசை விரைந்தான்.

## இராவணன் தோள் புடைத்தார்த்தது

3607. விசும்பு விண்டிரு கூறுறக்
கற்குலம் வெடிப்பப்
பசும்புண் விண்டெனப் புவிபடப்
பகலவன் பசும்பொன்
தசும்பி னின்றிடைந் திரிந்திட
மதிதகை யமிழ்தின்
அசும்பு சிந்திநொந் துலைவுறத்
தோள்புடைத் தார்த்தான்.

(அப்பால் இராவணன்), விசும்பு - ஆகாயம், விண்டு-பிளந்து, இரு கூறு உற - இரண்டு கூறுகளாக அமையவும், கல்குலம்-மலைக் கூட்டங்கள், வெடிப்ப - வெடிக்கவும், புவி - பூமியானது, பசும் புண் விண்டென - பசிய புண் பிளந்து விட்டது என்று சொல்லுமாறு, பட - ஆக, பகலவன் - சூரியன், பசும் பொன் தசும்பின் நின்று - பசிய பொன்னாலான குடத்திலிருந்து, இடைந்து இரிந்திட - தளர்ந்து கெட்டோட, மதி - சந்திரன், தகை அமிழ்தின் அசும்பு - இயல்பாகவுள்ள அமுதத் துளிகளை, சிந்தி-வெளிவிட்டு, நொந்து-

வருந்தி, உலைவுற - கஷ்டமடைய, தோள் புடைத்து - தன் தோளைக் கொட்டி. ஆர்த்தான் - சத்தமிட்டான்.

போர் செய்யத் தோள் புடைத்தல் மரபு; கிட்கிந்தா. 238; சுந்தர. 1016 முதலியன. இச் செய்யுளுடன், 'ஆண்ட நாயகன் றாதனு மயனுடை யண்டம், கீண்ட தாமெனக் கிரியுக நெடுநிலங் கிழிய, நீண்ட மாதிரம் வெடிபட வவனெடுஞ் சிலையில், பூண்ட நாணிறத் தன்னெடுந் தோள்புடைத் தார்த்தான்' (சுந்தர. 1016); என்ற செய்யுளை ஒப்பிடுக. பூமி வெடித்தலால் உள்ளேயுள்ள பல நிற மண்களும் கற்களும் நீருங் காணப்படுதலால், 'பசும்புண் விண்டென' என்றார், பசும்பொன் தசும்பு; அவன் தேரைக் குறித்தது; தசும்பு - குடம்; குடம் போன்றிருத்தலின் தேருக் காயிற்று; இடைதல் - தளர்தல்; பின்வாங்குதலும் ஆம்; 'அசமுகி யிடைந்து போனாள்' (கந்தபு. மகாகாளர். 20). தகை அமிழ்தும் - தகைக்கப்பட்ட அமிழ்து எனினும் ஆம். அசும்பு - துளி; (திருக்கோ. 149). இராவணன் தோள் புடைத்ததால் நிகழ்ந்தவை இங்குக் கூறப்பெற்றன.

பி - ம். 1. விசும்புதன் மறுகூறுகக்; நூறுற மால்வரை; நூறுமக் குலவரை; கல்வரை; குலவரை வெடிப்பப், வெடித்த; வெடித்து.

2. விண்டெனப் புடைபடப், புடைப்படப் பகலவன்.

3. தசும்பு நின்றிடை திரிந்தன; மறிந்தகை; தசும்பு குன்றிடைந் திழந்திட மறிக்கையமிர்தின். 28

தன் நாணியைத் தெறித்தல்

3608. நணித்து வெஞ்சம மென்பதோ
ருவகையி னலத்தால்
திணித்த டங்கிரி வெடித்துகச்
சிலையைநா ணெறிந்தான்.
மணிக்கொ டுங்குழை வானவர்
தானவர் மகளிர்
துணுக்க மெய்தினர் மங்கல
நாண்களைத் தொட்டார்.

வெம் சமம் - கொடிய போர், நணித்து - அண்மையிலுள்ளது, என்பது ஓர் உவகையின் - என்ற ஒரு மகிழ்ச்சியின், நலத்தால் - நன்மையால், திணி தட கிரி வெடித்து உக - வலிய இடமகன்ற மலை வெடித்துச் சிந்துமாறு, சிலையை நாண் எறிந்தான் - தன் வில்லின் நாணியைத் தெறித்தான்; (அதைக் கேட்ட) மணி - இரத்தினங்களால் ஆகிய, கொடு - வளைந்த, குழை - குண்டலங்களை அணிந்த, வானவர் தானவர் மகளிர் - தேவர் அசுரப் பெண்கள், துணுக்கம் எய்தினர் - நடுக்கம் அடைந்து, மங்கல நாண்களை - தங்கள் திருமங்கலியங்களை, தொட்டார் - (கைகளால்) தொட்டுப் பிரார்த்தித்துக் கொண்டனர்.

'தொட்டார் - தாலியைத் தொட்டுத் தேவதாப் பிரார்த்தனை பண்ணினர்கள்' என்பது ஓர் உரை; இச் செய்யுளுடன், 'சேலியற்கணியக்கர் தந்தேவிமார், மேலினித்தவிர்கிற்பர் கொல் வீரநின், கோலவிற்குரல் கேட்டுக் குலுங்கித்தம் தாலியைத் தொட லென்னு மற்றோர்தலை' (யுத்த. 3140) என்ற செய்யுளை ஒப்பிடுக. 'சமமென்ப தோருவகை' (ஒப்பு) (புறநா. 279).

பா - ம். 1. நணித்த வெஞ்சமர்; அணித்த வெஞ்சமம்; உவகையினயத்தால். உவகையினமைவார்.

2. தடங்கிரி யிடிந்திடச், இரிந்திடச்; திணித்தவங்கு; எரிந்திடச்சிலைவம நாண்டெறித்தான்.

4. துணுக்கமுற்றனர். 29

## இராவணன் போர்க்களம் குறுகுதல்

3609. சுரிக்கு மண்டலந் தூங்குநீர்ச் சுரிப்புற வீங்க
இரைக்கும் பல்லுயி ரியாவையு நடுக்கமுற் றிரியப்
பரித்தி லன்புவி படர்சுடர் மணித்தலை பலவும்
விரித்தெ ழுந்தன னனந்தன்மீ தென்பதோர் மெய்யான்.

(இராவணன் தேரை நடத்தி வந்த அதிர்ச்சியால்), தூங்கு நீர் - அசைந்து கொண்டிருக்கும் கடல் நீர், சுரிப்பு உற - சுருள, சுரிக்கும் மண்டலம் - (அக் கடல் நீர்) வளைந்து கிடக்கும் பூமண்டலம், வீங்க - (கடல் சுருங்குதலால்) பருக்க, (இவற்றால்) இரைக்கும் - ஓலமிட்டு) ஒலிக்கும், பல் உயிர் யாவையும் - (உலகிலுள்ள பல

உயிர்த் தொகைகள் எல்லாம், நடுக்கமுற்று இரிய, நடுங்கி - ஓட, அனந்தன் - ஆதிசேடன், புவி பரித்திலன் - பூமியைத் தாங்கமாட்டா தவனாய், படர் சுடர் மணி தலை பலவும் விரித்து - பரந்த ஒளியினையுடைய இரத்தினம் அமைந்த தன் பல தலைகளையும் விரித்துக் கொண்டு, மீது எழுந்தனன் - மேலே எழுந்து நின்றனன், என்பது ஓர் மெய்யான் - என்று சொல்லத்தக்க ஒப்பற்ற உடலைக் கொண்ட இராவணன்.

இஃது குளகமாய் அடுத்த செய்யுளிலுள்ள 'தோன்றினான்' என்பதனைக் கொண்டு முடியும். தூங்குதல் - அசைதல்; 'தூங்குகையா னோங்கு நடையன்' (புறநா. 22). சுரித்தல் - சுருளல்; சுழலுதலும் ஆம்; சுரிக்கும் மண்டலம் - வளைவாய்க் கிடைக்கும் பூமண்டலம். வீங்குதல் - பருத்தல். தேர் ஓடுதலின் அதிர்ச்சியால் கடல் சுரிப்புற்றது; மண்டலம் வீங்கிற்று. இவ்வாறு உலகில் நிலைமாற்றம் உண்டாக உயிர்கள் இரிந்தன. அத்தகைய உலகைப் பரிக்கமாட்டாமல் பல்தலை அனந்தன் எழுந்து நின்றது போல, இராவணன் தன் பல்தலைகளோடு நின்றான் என்க. இப்பகுதிக்கு வேறுவிதமாகப் பொருள் கூறுவாரும் உளர். 'திருவனந்தாழ்வான் பூமி சுருங்கிக் கடல் விழும் சுழியிலே படப் பதினாலுலகும் வருந்த உலகம் பரியாமல் மேலெழுந்தது போல வந்தான்' என்பது ஓர் உரை. இராவணனுக்குச் சேடன். பரித்தல் - சுமத்தல்.

பி - ம். 1. துரித்து மண்டலம், சுரிந்து மண்டலம்; தாங்குநீர்; சுழியுற வீங்கி, சுழிப்ப வீங்கி.

2. இரைத்துப் பல்லுயிர்.

3. மணிதலை பலவும்.

4. விரைத்தெழுந்தன்; னனனப் பொலிமெய்யன்; வெய்யன். 30

3610. தோன்றி னான்வந்து சுரர்களோ டசுரரே தொடங்கி
மூன்று நாட்டினு முள்ளவ ரியாவரு முடிய
ஊன்றி னான்செரு வென்றுயி ருமிழ்தர வுதிரங்
கான்று நாட்டங்கள் வடவனற் கிருமடி கனல.

சுரர்களோடு - தேவர்களுடன், அசுரரே தொடங்கி - அசுரர் முதல், மூன்று நாட்டினும் உள்ளவர் யாவரும் முடிய - மேல், நடு, கீழ் என்ற மூன்று உலகங்களிலும் உள்ளவர் எல்லோரும் அடங்கலும், செரு ஊன்றினன் என்று - போரில் முனைந்து நின்றான் என்று, உயிர் உமிழ்தர - உயிர் வெளி வரவும், (இராவணன்), உதிரம் கான்று - இரத்தத்தைக் கக்கிக்கொண்டு, நாட்டங்கள் - கண்கள், வட அனலுகு - வடக்கே உள்ள வடவைக் கனலுக்கு, இரு மடி - இரண்டு மடங்குகள், கனல - நெருப்பெழ (க் கோபத்துடன்), வந்து தோன்றினன் - (போர்க்களத்துள்) வந்து தோன்றினன்.

உதிரங் கான்றலும் நாட்டங்கள் கனலலும் வெகுளியின் மெய்ப்பாடுகளானமையின் இராவணனுக்கு உரியனவாய்க் கூறப்பட்டன. இருமடி; 'கூற்றினும் மும்மடி கொன்றான்' (சுந்தர. 1237) என்பது போல; மடி - மடங்கு.

பி - ம். 1. உரகரே தொடங்கி.

2. யாரொடு முடிய, யாரொடு முனிய; யாரொடும் முடியும்.

3. உமிழ்தர வெந்தீ. 31

## இராவணன் தோன்றியதைச் சுக்கிரீவன் முதலியோர் அறிதல்

3611. உலகிற் றோன்றிய மறுக்கமு மிமைப்பில ருலைவும்
மலையும் வானமும் வையமு மறுகுறு மறுக்கும்
அலைகொள் வேலைக ளஞ்சின சலிக்கின்ற வயர்வும்
தலைவ னேமுதற் றண்டலி லோரெலாங் கண்டார்.

உலகில் தோன்றிய மறுக்கமும் - உலகத்தில் தோன்றிய கலக்கத்தையும், இமைப்பிலர் உலைவும் - தேவர்களின் நிலைகேட்டையும், மலையும் வானமும் வையமும் - மலைகளும் ஆகாயமும் பூமியும், மறுகுறும் மறுக்கும் - கலங்கும் கலக்கத்தையும், அலைகொள் வேலைகள் - அலைகளைக் கொண்டுள்ள கடல்கள், அஞ்சின சலிக்கின்ற அயர்வும் - அஞ்சினவையாய்ச் சலிக்கின்ற சோர்வையும் தலைவனே முதல் - சுக்கிரீவனே முதலாக, தண்டல் இலோர் எலாம் - மாறுபாடில்லாத வானரர்கள் யாவரும், கண்டனர் - பார்த்தார்கள்.

இராவணன் வருகையால் மூன்றுலகங்களிலும் உண்டான மாறுபாடுகளைச் சுக்கிரீவன் முதலியோர் கண்டார்கள் என்பதாம். மறுக்கம்; மறுக்கு - மனக்கலக்கம்; சுழற்சி, எனினும் ஆம். 'மன்பது மறுக்கத் துன்பம் களைவோன்' (பரிபா. 15, 52); 'மறுக்கினோடிரியல் போயுற' (அயோத்தி. பள்ளி, 100). சலித்தல் - சஞ்சலப்படுதல். தலைவன் - இங்குச் சுக்கிரீவன். தண்டலிலோர் - மாறுபடாதோர்; நீங்காதவர், தடுக்கப்படாத வலிமையுள்ளோர் என்றும் பொருள் கூறுவர்.

பி-ம். 1. இமைப்பிலா ருலைவும்.
2. வையமு மல்குரு மலைவும், நடுக்குறு மலைவும், மறுக்குறு மறுக்கும், நடுக்குறு மறுக்கும், நடுக்குறு லகையும்.
3. சலிக்கின்ற யாவும். 32

3612. பீறிற்ற மண்ட மென்பதோ
ராகுலம் பிறக்க
வேறிட் டோர்பெருங் கம்பலை
பம்பிமேல் வீங்க
மாறிப் பல்பொருள் மாய்வுறுங்
காலத்துண் மறுக்கம்
ஏறிற் றுற்றுள தென்னைகொ
லோவென வெழுந்தார்.

'அண்டம் பீறிற்று ஆம் என்பதோர் ஆகுலம் பிறக்க - இந்த அண்டகோளம் கிழிந்துபோய் விட்டது' என்ற ஒரு துன்பம் தோன்ற, வேறிட்டு ஓர் பெரும் கம்பலை - (இயல்புக்கு மாறுபாடாக) வேறுபாடுற்று ஒரு பெரிய முழக்கம், பம்பி மேல் வீங்க-(தோன்றிப்) பெருகி மேலே ஓங்கிட, பல் பொருள் - உலகத்தில் வாழ்ந்து வரும் பல பொருள்களும், மாறி - தம் நிலைமாறி, மாய்வுறும் காலத்துள் - அழியும் காலத்தில், உற்றுளது - உண்டாகும், மறுக்கம்-குழப்பம்' ஏறிற்று - பெருகியது; என்னை கொலோ? - இவற்றிற்கு காரணம் யாதோ?' என - என்று சொல்லிக் கொண்டே, எழுந்தார் - (அவ் வாநரர்கள்) மேலே எழுந்து நின்றார்கள்.

பீறுதல் - கிழிதல். வேறிட்டோர் கம்பலை என்பதற்கு, அரக்கர்களின் பெரு முழக்கம் என்றும் பொருள் கொள்ளலாம்; வேறிட்

டோர் - மானிட இயல்புக்கு மாறுபட்டவர். பம்பி மேல் வீங்க - பெருகி மேலே ஓங்கிட ; பம்புதல் - பெருகுதல், பரவுதலும் நிறைதலும் ஆம். வீங்குதல் - பருத்தல், ஓங்குதல். உற்றுளது மறுக்கம் ஏறிற்று என மாற்றுக.

பி - ம். 3. வருக்குறுங் காலத்துண் ; காலத்தில் மறுக்கம்.
4. கொலாமென வெழுந்தார் ; எழுந்தான் ; விழுந்தார். 33

3613. கடல்க ளியாவையுங் கன்மலைக்
குலங்களுங் காருந்
திடல் கொண்மேருவும் விசும்பிடைச்
செல்வன சிவண
அடல்கொள் சேனையு மரக்கனுந்
தேரும்வந் தார்க்குங்
கடல்கொள் பேரொலிக் கம்பலை
யென்பதுங் கண்டார்.

(அவ்வொலி முழக்கம்), கடல்கள் யாவையும் - கடல்கள் எல்லாமும், கல் மலை குலங்களும் - கற்களாலான மலைகளின் கூட்டங்களும், காரும் - மேகங்களும், திடல் கொள் மேருவும் - மேடுகளையுடைய மேரு மலையும், விசும்பிடை செல்வன சிவண - வானத்திலே செல்வனவற்றை ஒப்ப, அடல் கொள் சேனையும் - வலிமை கொண்டுள்ள சேனையும், அரக்கனும் - இராவணனும், தேரும் - அவனுடைய தேரும், வந்து ஆர்க்கும் - வந்து முழங்குகின்ற, கடல் கொள் பேர் ஒலி கம்பலை என்பதும் - கடலிடத்தில் உண்டாகும் பெரிய ஒலி முழக்கம் (போன்ற முழக்கம்) என்பதையும், கண்டார் - சுக்கிரீவன் முதலியோர் அறிந்தார்கள்.

கடல்களை, கால்களுக்கும் குதிரைப் படைக்கும், கன்மலைக் குலங்களை, யானைப்படைக்கும், காரை இராவணனுக்கும், மேருவை அவன் ஏறிவந்த தேருக்கும் உவமையாகக் கூறலாம்; வேறு வகையாகக் கூறுதலும் உண்டு. திடல் - மேடு; திட்டு; இது திடர் எனவும் வழங்கும்; 'திடர் விளங்கு கரைப் பொன்னி' (திவ்.

பெருமாள். 1) சிவணுதல் - ஒத்தல். 'நெடுவரை யெவையு மொரு வழித் திரண்டன சிவண' (சுந்தர. 407).

பி - ம். 2. நிடல் கொளமேரு.

3. அரக்கரும் தேரும்.

4. குடல்கள்; குடர்கொள் பேரொலி; என்பது கண்டார், கொன்டார், கண்டான். 84

## இராவணன் வருகையை வீடணன் இராமபிரானுக்குக் கூறுதல்

3614. எழுந்து வந்தன னிராவண
னிராக்கதத் தானைக்
கொழுந்து முந்துவந் துற்றது
கொற்றவ குலுங்குற்
றழுந்து கின்றது நம்பல
மமரரு மஞ்சி
விழுந்து சிந்தின ரென்றனன்
வீடணன் விரைவான்.

(அவற்றைக் கண்ட) வீடணன் - வீடணன், (இராமபிரானை நோக்கி) 'கொற்றவ - வெற்றி மன்னவ! இராவணன் எழுந்து வந்தனன் - இராவணன் (போர் குறித்து) புறப்பட்டு வந்து விட்டான்; இராக்கதத் தானைக் கொழுந்து - அரக்கர் சேனையின் முன்னணி, முந்து வந்து உற்றது - முன்னே வந்து சேர்ந்து விட்டது; நம் பலம் - நம் சேனைகள், குலுங்குற்று - (உடலும் மனமும்) குலுங்கி, அழுந்துகின்றது - தாழ்கின்றன; அமரரும் - தேவர்களும், அஞ்சி விழுந்து சிந்தினர் - பயந்து விழுந்து சிதறினர்', (என்று) விரைவான் - விரைபவனாய், என்றனன் - விண்ணப்பித்துக் கொண்டான்.

எழுதல் - புறப்படுதல்; 'எம்பெரு முதல்வநீ யெழுதியால்' (கந்தபு. சரவண. 4) தானைக் கொழுந்து; 'படருஞ் சேனையின், கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே' (பால. எழுச். 23). அழுந்துதல் - ஆழ்தல்; தாழ்தல். நம் பலம் - நம் சேனை என்பது

ஒருரை. விரைதல் - அவசரப்படுதல். சில சுவடிகளில் படலம் இங்கு முடியாமல், அடுத்த படலத்தையும் இதனுட் கொண்டு, முழுமையும் தேரேறு படலம் என்று பெயர் பெற்றுக் காண்கிறது.

பி-ம். 1. இராக்கதச் சேனை.
2. முன் வந்துற்றது ; கொற்றவவனுகுற்றறு.
3. கம்பலையமரரும் ; நம்படையமரரு.
4. விரைந்தே, விரைந்து. 35

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

சென்றி யிராமனைத் திருவடி வணங்கியெஞ் செல்வ
இன்றி யிராவணன் சேனையோ டியாவருஞ் சூழ
வென்றி யந்தடந் தேர்மிசை மேவினன் களத்தில்
என்று கூறலு மினிதுகேட் டெழுந்தன னிப்பால்.

இராவணன் தேரேறு படலம் முற்றும்.

---

# 35. இராமபிரான் தேரேறு படலம்

இராவணனுடன் போர் செய்ய இராமபிரான் இந்திரன் அனுப்பிய தேர்மீது ஆரோகணித்துக் கொண்ட செய்தியைக் கூறும் படலம் என விரியும். இது, முன் படலத்தோடு இயைந்து சில சுவடிகளிலும், தனியே இராமன் திருத்தேரேறு படலம் என்று சிலவற்றிலும், இராகவன் திருத்தேரேறு படலம் என்று சிலவற்றிலும் பெயர்கள் பெற்றுக் காணப் பெறுகிறது.

### வேறு

### இராமபிரான் போர்க்கு எழுதல்

3615. தொழுங்கையொடு வாய்குழறி மெய்முறை துளங்க
விழுந்துகவி சேனையிடு பூசன்மிக விண்ணோர்
அழுந்தவர வத்தமளி யஞ்சலென வந்நாள்
எழுந்தபடி யேகடி தெழுந்தன னிராமன்.

(இராவணன் வருகையைக் கண்ட) கவி சேனை - வானரப் படைகள், தொழும் கையொடு - (தம்) கூப்பித்தொழுது வணங்கும் கைகளோடு, வாய் குழறி - வாய் பேச முடியாமல் குழறி, மெய் - உடல்கள், முறை துளங்க - முறையாக நடுங்க, விழுந்து - தரையில் விழுந்து, இடு பூசல் மிக - இடுகின்ற பேரொலி அளவு மிக, இராமன் - (அவ்வொலி கேட்ட) இராமபிரான், அந்நாள் - முன்னொரு காலத்தில், விண்ணோர் அழுந்த - தேவர்கள் (தங்கள் துயர் தாங்க மாட்டாமல்) மனந்தாழ, 'அஞ்சல்' என - 'அஞ்சாதீர்கள்' என்று, அரவத்து அமளி எழுந்தபடியே - (திருப்பாற் கடலில்) ஆதிசேஷனாகிய படுக்கையினின்று எழுந்த அவ்வண்ணமே, கடிது எழுந்தனன் - (வானரர்களைக் காக்க) விரைவாக எழுந்தான்.

பாலகாண்டம் திருவவதாரப் படலம் 11, 19 ஆம் பாடல்களில் விண்ணவர் திருப்பாற்கடலை யடைந்து அங்கு அனந்தன்மீது அறிதுயில் புரிந்து கொண்டிருந்த திருமாலை வழுத்தித் தம் குறை கூற, அவன் எழுந்து அவர்களுக்கு அபயம் கூறிய செய்தி கூறப்

பெற்றுள்ளமை காண்க. மற்றும், 'வெள்ளிய கடலின் மேனாள் விண்ணவர் தொழுது வேண்டப், பள்ளிதீர்ந் திருந்தா னென்னப் பொலிதரும் பண்பினானை' என்ற யுத்த. 436 ஆம் செய்யுட் பகுதியையும் இங்கு ஒப்பிடலாம். வானரப் படைகள் இராவணன் வருகையைக் கண்டு அஞ்சி அழுங்கினது; முன் படலம் 32, 34. அழுந்த; முன் படலம் 35 ஆம் செய்யுள் உரை காண்க. இங்கு இராமபிரான் திருமாலாகக் கூறப்பெற்றமை காண்க, ஒரு சுவடியில் இச் செய்யுள் காணப்பெறவில்லை.

பி - ம். 1. மெய்ம்முறை துளங்கி; துளங்கா, துளங்க.

2. சேனையிமி பூசல்மிக; சேனைபடு பூசல்; பூசலிடு விண்ணோர்.

3. அழுந்துபடு பாலமன்; அழுந்துபட மீதமளி துஞ்சியென வந்நாள்; அமுந்துபணி மீதமளி; துஞ்சியெழுமந்நாள். 1

## இராமபிரான் போர்க்கோலங் கொள்ளுதல்

3616. கடக்களி றெனத்தகைய கண்ணனொரு காலன்
விடக்கயி றெனப்பிறழும் வாள்வலன் விசித்தான்
மடக்கொடி துயர்க்குநெடு வானினுறை வோர்தம்
இடர்க்கட லினுக்குமுடி வின்றென விசைத்தான்.

கட களிறு என தகைய - மதப் பெருக்கினையுடைய ஆண் யானை என்று சொல்லத்தக்க, கண்ணன் - திருமாலான இராமபிரான், ஒரு - ஒப்பற்ற, காலன் - இயமனுடைய, விட கயிறு என - விடம்போன்ற பாசம் என்று சொல்லத்தக்கவாறு, பிறழும் - விளங்குகிற, வாள் - உடைவாளை, வலன் - வலப்பக்கத்தில் (இடுப்பில்), விசித்தான் - கட்டி, மடக் கொடி - மடப்பம் பொருந்தியவளும் கொடி போன்றவளுமான பிராட்டியின், துயர்க்கும் - வருத்தத்திற்கும், நெடு - நீண்ட, வானின் உறைவோர் தம் - வானத்தில் தங்குபவர்களான தேவர்கள் முதலியோரின், இடர் கடலினுக்கும் - துன்பமாகிய கடலுக்கும், இன்று முடிவு - இன்று முடிவு நாளாகும், என - என்று, இசைத்தான் - சொன்னான்.

இராவணன் தான் ஏறும்போது இருவரைக் குறித்துச் செய்த சபதத்தின் அமங்கலத் தொனியையும் (முன் படலம் செய்யுள். 26), இங்கு இராமபிரான் செய்த சபதத்தின் மங்கலத் தொனியையும்

ஒப்பிட்டுப் பார்க்க. கண்ணன் - திருமால் (முன் படலம் 23 ஆம் செய்யுளின் குறிப்புக்களைக் காண்க). காலன் விட கயிறு - கால பாசம்; வாளுக்குக் கால பாசம். வலன்; ஈற்றுப் போலி. விசித் தல் - கட்டுதல்; 'அவனுடல் விசித்த பாம்பினை' (சுந்தர. 1110).

பி - ம். 1. கண்ணனெடு; கண்ணன்வரு.

3. மடக்கொடி தனக்குநெடு; நுயர்க்கு நிறை; உறைவேரர்க்கும்.

4. இசைப்பரன். 2

3617. தன்னக வசத்துலகு தங்கவொரு தன்னிற்
பின்னக வசத்தபொரு ளில்லைபெரி யோனை
மன்னக வசத்துற வரிந்ததெனின் மாதோ
இன்னக வசத்தையுமோ ரீசனென லாமால்

உலகு - உலகங்கள் எல்லாம், தன்ன - தன்னுடைய, கவசத்து தங்க - இரட்சையில் தங்க, ஒரு தன்னில் - ஒப்பற்ற தன்னினும் வேறாக, பின்னக வசத்த பொருள் இல்லை - பேதமான ஆட்சியை யுடைய (பரம்) பொருள் (வேறு) ஒன்றுமில்லை; (உண்மை இவ் வாறாக), பெரியோனை - பெரியோனாகிய இராமபிரானை, மன் - உறுதி யாக, அக வசத்து உற வரிந்தது எனின் - (கவசமானது) (தன்னுள்) தன் வசத்திலே பொருந்துமாறு வரிந்து (இராம பிரானைக்) கட்டியது என்றால், இன்ன கவசத்தையும் - இத்தகைய கவசத்தையும், ஓர் ஈசன் எனல் ஆம் - ஒரு பரம்பொருள் என்று கூறிவிடலாம். மாது, ஓ, ஆல், இவை அசைகள்.

பரம்பொருள் எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ளது. அப் பரம்பொருளைக் கவசம் தன்னுள் அடக்கிக் கொள்வது அதுவும் ஒரு பரம்பொருளாமே என்று நகைச்சுவை அமையக் கூறுகின்றார். இச் செய்யுளின் மூலம் ஆராயப்பட வேண்டுமென்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. கவசம் - இரட்சை; 'நீற்றுக் கவசம்' திருவாச. 2 ஆம் வரியில். பின்னகம்; பேதம் (யாழ். அக. 46, 1); வசம் - ஆட்சி (யாழ். அக.) 'தன்னிற் பின்னக- தனக்குப் பின்னாக வசப்பட்ட பேரில்லை யென்னும்படி யுயர்ந்தவன்' பின்னாக என்றது குறுகிப் பின்னக என்றாயிற்று. வசத்துற - தன்

னுள்ளே அடங்கும்படி காத்ததனுல். ஈசன் - அவனைப் போல் அதுவும் ஈசனே என்றார் கவிஞர். இவ்வாறு ஓர் உரை கூறுகிறது. இவ்வுரையின்படி தன்னிற் பின்னுக வசத்த பொருளில்லை என்பதற்குத் தன்னையன்றி வேறு எதுவும் தன் வசத்தில் எல்லா வற்றையும் வைத்துக் கொள்ளக்கூடிய பரம்பொருள் வேறொன்று இல்லை என்று பொருள் காணத்தகும்.

பி - ம். 1. கவசத்துருவு தங்க ; தங்குமொருதன்னில்.

3. உன்ன கவசத்துற, வரித்தெனல மாதேர ; வரிந்தென வென்கோ ; வரித்ததெனில்மாதோ.

4. மன்ன கவசத்துற வரிந்ததென வென்கோ; அன்ன கவசந்தையும். 3

3618. புட்டிலொடு கோதைகள் புழுங்கியெரி கூற்றின்
அட்டிலென யாயமல ரங்கையி னடங்கக்
கட்டியுல கிற்பொரு ளெனக்கரையில் வாளி
வட்டில்புறம் வைத்தயல் வயங்குற வரிந்தான்.

(இராமபிரான்) கூற்றின் - இயமனின், புழுங்கி எரி அட்டில் எனல் ஆய - நன்றாக வெந்து எரிக்கின்ற அடுப்பு என்று சொல்லத் தக்கதான, மலர் அங்கையின் - தாமரை மலர் போன்ற தன் அழகிய கையில், புட்டிலொடு-விரற் புட்டில்களோடு, கோதைகள் - கையுறைகளை, அடங்க-முற்றிலும்,கட்டி-(விரல்களும் முன்கைகளும் மறையும்படி) கட்டி, உலகில் பொருள் என - உலகில் எல்லாப் பொருள்களும் அடங்குமாறு போல, கரையில் - அளவற்ற, வாளி - அம்புகளைத் தன்னுட் கொள்ளத்தக்க, வட்டில் - அம்புப் பட்டிலை, புறம் அயல் - புற (முதுகின்) அயலிலே, வயங்குற வைத்து - விளங்குமாறு வைத்து, வரிந்தான் - கட்டினுன்.

இராமபிரான் கைக்குக் கூற்றின் அட்டிலும், அவன் அம்பருத் தூணிக்கு உலகும் உவமைகள். புட்டில் - விரலுறை; 'விரற்றலைப் புட்டில் வீக்கி' (சீவக. 2202); இதனை விரற்சரடு என்றும் கூறுவர். கோதை - வில்லாளர் கையிற் பூணும் தோலுறை; 'கோலஞ்சார் நெடுங்கோதையும் புட்டிலும் கட்டி' (யுத்த. 3588) அட்டிலை, புட்டிலோடும் கோதையோடும் கூட்டிப் பொருள் காணலுமாம்; 'பெருமாள் கையிலே விற்ற சரடு கட்டினவுடனே யமனுக்கு அடுக்களை கட்டினதாக எண்ணிக் கொள்வான்' என்பது ஓர் உரை.

வாளி வட்டில் - அம்பறுத் தூணி; உலகிற் பொருளென என்று புட்டிலேக் கூறினமையால் அம்புகளை ஆன்மகோடி எனக் கொண்டனர் என்பர் சிலர்.

பி - ம். 1. கோதை மெய்; புழுங்குவெரி.

2. பட்டிலென; ஆயமலனங்கையிடங்க, ஆயமலர் மங்கைகளினடநிக, அங்கையி னடக்கக், அங்கை யிலங்க.

4. வைத்தவை பொருந்திட விரிந்தான்; பொலித்தான். 4

## வானத்தில் சித்தர் முதலியோர் கூடி மகிழ்தல்

3619. இத்தகைய ஞகியிகல் செய்திவனை யின்னே
கொத்துமுடி கொய்வனென நின்றெதிர் குறித்து
தத்தமுறு வற்செய றவிர்ந்ததென வானில்
சித்தர்கண் முனித்தலைவர் சிந்தைமகிழ் வுற்றார்.

(இவ்வாறு இராமபிரான் போர்க்கோலம் கொள்வதைக் கண்டு), சித்தர்கள் - சித்தர்களும், முனி தலைவர் - தேவ இருடித் தலைவர்களும், (இராமபிரான்) 'இ தகையன் ஆகி - இப்படிப்பட்ட போர்க்கோலம் கொண்டவனாகி, இகல் செய்து - போரினைச் செய்து, இன்னே - இப்பொழுதே, இவனை - இந்த இராவணனின், கொத்து முடி - கொத்தாய் இருக்கும் தலைகளை, கொய்வன் - எடுத்தெறிவான்' என - என்றும், தத்தம் - தங்கள் தங்கள், உறுவல் செயல் - துன்பமுறும் செயல்கள், தவிர்ந்தது என - நீங்கிவிட்டன என்றும், வானில் எதிர் நின்று - ஆகாயத்தில் போர்க்களத்தின் எதிரிலே நின்று, குறித்து - தங்கள் கருத்தைப் புலப்படுத்தி, சிந்தை மகிழ் வுற்றார் - மன மகிழ்ச்சி யடைந்தார்கள்.

கொத்து - தொகுதி; பத்துத் தலையினன் ஆனமையின் இவ்வாறு கூறினர். உறுவல் - துன்பம்; 'பெண்பாலாள் தன்னுறுவ றீர்ப்பான்' (ஆரணிய. 987).

பி - ம். 1. இகல் செய்தவனை.

2. நின்றெதிர் குறிப்பத். 3

இச் செய்யுள் சில சுவடிகளிலும் சில அச்சிட்ட புத்தகங் களிலுமே காணப்படுகின்றது. ஒரு சுவடியில் இச் செய்யுள் பின் வருமாறு அமைந்துள்ளது :—

இத்தகைய னுயமல னிங்குற வரக்கன்
பத்துமுடி யோடுயிர் பறிக்குமென வெண்ணித்
தத்தமி தயந் தெளிதரக் கயிலை வாழும்
சித்தன்முத லாமரர் வானிடை செறிந்தார்.

## பிரமன் இராமனுக்குத் தேரனுப்புமாறு தேவர்களிடம் கூறுதல்

3620. மூண்டசெரு வின்றளவின் முற்றுமினி வெற்றி
ஆண்டகைய துண்மையினி யச்சமகல் வுற்றீர்
பூண்டமணி யாழிவய மாநிமிர் பொலந்தேர்
ஈண்டவிடு வீரமர ரீரென்றய னிசைத்தான்.

(அப்பொழுது), அயன் - நான்முகன் (தேவர்களை நோக்கி), 'அமரரீர் - அமரர்களே ! மூண்ட செரு - மூண்ட போரானது, இன்று அளவின் - இன்றோடு, முற்றும் - முடிந்துவிடும் ; இனி - இனிமேல், வெற்றி - (இப்போரில்) வெற்றியானது, உண்மையின் - உண்மையாக, ஆண் தகையது - வீரப்பண்புமிக்க இராமபிரானுடையது ; அச்சம் அகல்வு உற்றீர் - அச்ச நீக்கம் அடைந்துள்ளீர்கள்; மணி பூண்ட - மணிகள் கட்டிய, வயம்மா - குதிரைகள் கட்டியதும், ஆழி - சக்கரங்கள், நிமிர் - நிமிர்கின்றனவுமான, பொலம் தேர் - பொன் தேரை, ஈண்ட - விரைய, விடுவீர் - (இராமபிரானுக்கு) உதவ அனுப்புவீர்', என்று இசைத்தான் - என்று கூறினான்.

இங்குக் கூறியது போல அயன் இராமபிரானுக்குத் தேர் அனுப்புமாறு அமரர்களிடம் கூறினதாக வான்மீகம் கூறவில்லை. அங்குக் கூறப்பெறுவது :—' இராமன் பூமியின்மேல் நின்றும், இராவணன் இரதத்தின்மீதிருந்தும் போர் புரிவது பொருத்த மன்றென்று தேவர், கந்தர்வர், தானவர் ஆகியோர் பேசிக் கொண்டனர். அப்பால் தேவேந்திரன் இதனை ஆலோசித்து,

மாதலியை அழைத்து இராமபிரானிடம் தன் தேரைக் கொண்டு போகுமாறு கட்டளையிட்டனன்; அவன் அவ்வாறே செய்தனன்'. அவன் இராமபிரானிடம் வந்து இந்திரன் தன்னை அனுப்பிய செய்தியைக் கூறி, ஒரு வில், கவசம், பல பாணங்கள், சக்தி என்னும் ஓர் ஆயுதம் ஆகியவற்றையும் இந்திரன் கொடுத்தனுப்பினதாகச் சொல்லி அவற்றை அவனிடம் தந்தான்." அத்யாத்ம ராமாயணமும் இவ்வாறே இந்திரன் தானாகவே தன் தேரை மாதலியுடன் இராமபிரானுக்கு அனுப்பியதாகக் கூறுகிறது. அயன் - நான்முகன். ஈண்டுதல் - விரைதல். 'இடுக்கண் களைதற் கீண்டெனப் போக்கி' (சிலப். *13, 101*). சில சுவடிகளிலும் அச்சிட்ட நூல்களிலும் 'அரன்' இசைத்தான் என்று காணப் பெறுகிறது.

பி - ம். 1. முற்ற முனிவோனுல்; அளவில முற்றுமினி வெற்றி; மிக வெற்றி; முற்றி முனியோடே.

2. அச்சமற வுற்றிர், உம்மையினி யச்சமகள்; ஆண்டகையு முண்மை; தகையுமும்மை, தகையு நும்மை.

3. ஈண்டன விடுவிர மரரென்றரனிசைத்தான்; விடுவிர மரினொன்றவன்; ஈண்கு விடுவிர் புலவரென்று. 6

## இந்திரன் தேர்வரக் கட்டளையிடுதல்

3621. தேவரது கேட்டிது செயற்குரிய தென்றூர்
ஏவல்புரி மாதலியொ டிந்திர னிசைத்தான்
மூவுலகு மங்கொரு கணத்தின்மிசை முற்றிக்
காவல்புரி தேர்கடிது நீகொணர்தி யென்றே.

அது - அச் சொல்லை, தேவர் கேட்டு - தேவர்கள் கேட்டு, 'இது செயற்கு உரியது என்றூர் - (இராமபிரானுக்குத் தேர் அனுப்புவதாகிய) இச் செயல் செய்வதற்குத் தக்கது' என்று கூறினர்கள், இந்திரன் - தேவேந்திரன், ஏவல்புரி மாதலியோடு - தன் கட்டளைப்படி நடக்கிற மாதலி (என்ற தன்) தேர்ப்பாகனோடு, ஒரு கணத்தின் மிசை - ஒருகண நேரத்தில், 'மூவுலகும் முற்றி - மூன்றுலகையும் சூழ்ந்து, அங்கு - அவ்விடங்களில், காவல்புரி - (பகைவர்கள் வெளியேருதபடி) காவலைச் செய்கின்ற, தேர் - தேரை,

நீ கடி கொணர்தி - நீ விரைவில் கொண்டு வருவாயாக' என்று இசைத்தான் - என்று கூறினான். ஏ : அசை.

மாதலி - இந்திரனின் தேர்ப்பாகன். முற்றுதல் - சூழ்தல்; 'பாண் முற்றுகநின் னாண்மகிழிருக்கை' (புறநா. 29); வளைத்தலும் ஆம்.

பி - ம். 1. தேவரிது.

2. ஏவல்புரி யிந்திரனு மற்றென விசைத்தான்; யிந்திரனெனத் தொழி திசைத்தான்; தொழுதிறைஞ்சி; ஏவல்புரி யிந்திரனெனத் தொழு திசைத்தார்.

3. மூவுலகு முந்துமொர் கணத்தின் மிசைமுற்றி; மூவுலகு மின்றொடு கணத்தின் முறை முற்றிக்.

4. கோவில்புரி கேன்பொருவி றேர்கொணர்தி யென்றுன்; தேர் கொணர்தி காலம்; கொணர்தியென்ன. 7

## மாதலி தேர் கொணர்தல்

3622. மாதலி கொணர்ந்தனன் மகோததி வளாவும்
பூதல மெழுந்துபடர் தன்மைய பொலந்தேர்
சீதமதி மண்டலமு மேனையுள வுந்தன்
பாதமென நின்றது படிந்தது விசும்பில்.

மகோததி வளாவும் பூதலம் - கடல் சூழும் பூமியானது, எழுந்து - தன் இடத்திலிருந்து மேலே எழுந்து, படர் தன்மைய - பரவும் தன்மையுடையதான, பொலம் தேர் - பொன்னாலாகிய (இந்திரனுடைய) தேரை, மாதலி கொணர்ந்தனன் - மாதலி கொண்டு வந்தான்; (அத்தேர்) சீதம் மதி மண்டலமும் - குளிர்ந்த சந்திர மண்டலமும், ஏனை உளவும் - பிற (வானத்தில்) உள்ளனவும், தன் பாதம் என நின்றது - தன் அடியில் உள்ளன என்று சொல்லும்படி (உயர்ந்து) நின்றது; விசும்பில் படிந்தது - ஆகாயத்தில் தங்கிற்று.

மகோததி - கடல். வளாவுதல் - சூழ்தல்; 'இளவெயில் வளாவ' (பரிபா. 15 - 27). பாதம் - அடிப்பாகம்.

பி - ம். 1. கொணர்ந்தநன் மகோததி, அளாவும்.

3. சீதமைதி மண்டலமும்; உள்துந்தின், உளதுத்தன்.

4. படர்ந்தது விசும்பிலி. 8

3623. குலக்கிரிக ளேழின்வலி கொண்டுயர் கொடிஞ்சும்
அலைக்குமுயர் பாரின்வலி யாழியினி னச்சும்
கலக்கற வகுத்தது கதத்தரவ மெட்டும்
வலக்கயிறு கட்டியது முட்டியது வானே.

(அத் தேர்), குலகிரிகள் ஏழின் - குல கிரிகள் ஏழ் என்று கூறப்பெறும் சிறந்த மலைகளின், வலி கொண்டு - வலிமையைத் தன்பாற் கொண்டு, உயர்-உயர்ந்து விளங்கும், கொடிஞ்சும் - கொடிஞ்சு என்னும் உறுப்பையும், உயர் பாரின் வலி அலைக்கும் - உயர்ந்த பூமியின் வலிமையைக் குறைக்கும், ஆழியினின் - சக்கரங்களின், அச்சும்-அச்சு என்னும் உறுப்பையும், கலக்கு அற-கலக்கமில்லாமல், வகுத்தது-வகுத்துச் செய்யப் பெற்றது; கதத்து அரவம் எட்டும் - கோபிக்கும் இயல்பையுடைய அஷ்ட மகா நாகங்களையும், வல கயிறு கட்டியது - வலிமையுடைய விசி கயிருகக் கட்டியது, வானை முட்டியது - உயரத்தில் வானத்தை முட்டி நிற்பது.

இதுமுதல் ஏழு கவிகளில் மாதலி கொணர்ந்த தேரின் தன்மையும் வலிமையும் கூறுகின்றார். கொடிஞ்சு - தேர் ஓடும் விசையினால் ஊர்ந்து செல்பவர் விழாமலிருக்கப் பற்றிக்கொள்வதற்காக அமைக்கப்பெறும் தாமரை மொட்டு வடிவமாக உள்ள ஓர் உறுப்பு; இது கொடுஞ்சு எனவும்படும். அயோத். கங்கை. காண். 1055; அடிக் குறிப்புக் காண்க. ஏழு குல கிரிகள்: கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம்; இவற்றுடன் கந்தமாதனத்தையும் கூட்டி எட்டு என்பாரும் உளர். அலைத்தல் - நிலை கெடுத்தல்; (கந்தபு. ஆற்று. 16). ஆழி - தேர் உருளை. அச்சு - உருள்கோத்த மரம்; 'உருள்பெருந் தேர்க் கச்சாணி யன்னாருடைத்து' (குறள். 667) ஆழிக்குப் பார். பார் - வண்டியினடிப் பாகத்துள்ள பெருஞ்சட்டமும் ஆம். கலக்கற வகுத்தல் - இடைவெளியில்லாமற் கோத்தது எனினும் ஆம். அரவம் எட்டு: வாசுகி, அநந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். கயிறு - தேரின் குதிரைகளைக் கட்டும் கயிறுகள் போல்வன. 'வகுத்தது - ஸப்தகுல பருவதங்களின்

பலத்தை எடுத்துப் பாரும், அச்சும், வண்டிலுமாகப் பண்ணினது; கதத்தரவம் - கோபிக்கும் பாம்புகள்; அட்டமர நாகமே விசி கயிறு; நுகமென்று பாடமாயின் குதிரை கட்டும் நுகம் என்க' என்பன ஓர் உரை.

பி - ம். 1. கொடிஞ்சின்.

2. அலக்குமுயர் அலக்குரியப பாரும்; நலக்குமுயர் பாரும்; ஆழியும்; ஆழியு நலத்த, ஆழியினிலச்சும்.

3. அரவரெட்டின்; இலக்கணம் வகுத்தத னுகந்நரவமெட்டின்.

4. வலிக்கயிறு. 9

3624. ஆண்டினெடு நாளிருது திங்களிவை யென்று
மீண்டனவு மேலனவும் விட்டுவிரி தட்டின்
பூண்டுளது தாரகை மணிப்பொருவில் கோவை
நீண்டபுனை தாரினது நின்றுளது குன்றின்.

(அத் தேர்) ஆண்டினொடு - ஆண்டினையும், நாள் - கிழமை, இருது - பருவங்கள், திங்கள் - மாதம், இவை - ஆகிய இக் காலப் பகுதிகளின், மீண்டனவும் - கழிந்தவற்றையும், மேலனவும் - எதிர் காலத்திலுள்ளவற்றையும், விட்டு - (தேர் தட்டின் பகுதிகளாக) அமைத்து, விரி - விரிவாகச் செய்தவற்றை, தட்டின் - தட்டு என்ற பகுதியில், பூண்டுளது - கொண்டுள்ளது; தாரகை - நக்ஷத்திரங்களை, பொருவு இல் - இணையில்லாத, மணி கோவை - இரத்தின மாலைகளாகவும், புனை - தரிக்கும், நீண்ட தாரினது - நீண்ட ஆரங்களாகவும் கொண்டது; குன்றின் - மலையைப் போல, நின்றுளது - இந்திரனுக்கு முன்னே வந்து நின்றது.

தேர்த் தட்டு - தேரின் ஓர் உறுப்பு; 'பரவைத் தட்டிற் பன் மணிப் பலகை அடி தொடைக்கமைந்த கிடுகுடைக் காப்பின்' (பெருங். 1-48; 16-17); 'ஆக்குமணி செய் தேர்த் தட்டும்' (சீவக. 352.) இதனைத் தேரின் நடுவிடம் என்றும்; அதன் மேனிலை என்றும் கூறுவர். இங்குக் கூறியது; காலப் பிரிவுகளாகிய ஆண்டு, ருது, திங்கள், வாரம் முதலியவற்றைத் தேரின் மேல் தட்டில் அமைப்பரென்பது ஐதிகம்; 'பொங்கிய வருடமும், போகு வேகமாய், உத்தர தக்கணவயனமொடு பூஷ, வித்தகத் தேர்' (திருவதிகைப் புராணம்; திரிபுரதகனப்.) மீண்டனவும் மேலனவும்

என இரண்டு காலம் கூறி, நிகழ்காலம் கொள்ளாமை காண்க. 'இதனானே நிகழ்காலம் இன்று' என்பாரும் என்று தொல். சொல். 202 ஆம் சூத்திர உரையில் நச்சினார்க்கினியர் சுட்டியவாறு இங்குக் காட்டப் பெற்றது எனலாம். கோவை, தார் என்பன மாலை விசேடங்கள்.

பா - ம். 1. நாளுமிடு ; திங்களிவை யாவும், நிரிகளிவை யென்று.

2. மீண்டனவும் வெல்வன ; விட்டுவிசி தட்டின், விட்டுவிசி ; விட்டுமிசை தட்டின.

3. மணிப் பொருவு.

4. நீண்டு புனை, நின்றுலவு குன்றின ; நின்றுளதொர். 10

3625. மாதிர மனைத்தையு மணிச்சுவர்க ளாகக்
கோதற வகுத்தது மழைக்குழுவை யெல்லாம்
மீதுறு பதாகையென வீசியது மெய்ம்மைப்
பூதமவை யைந்தின்வலி யிற்பொலிவ தம்மா.

(அன்றியும், அத் தேர்), மாதிரம் அனைத்தையும் - திக்குகள் எல்லாவற்றையும், மணி - இரத்தினங்களினாலமைந்த, சுவர்களாக - (தன்) சுற்றுச் சுவர்களாக, கோது அற வகுத்தது - குற்றம் நீங்க அமைத்துக் கொண்டது ; மழை குழுவை எல்லாம் - மேகத் தொகுதிகளை எல்லாம், மீது உறு பதாகை என - தன் மேலே பொருந்திய கொடிகள் என்று சொல்லுமாறு, வீசியது - ஆடச் செய்தது ; (இன்னும்) பூதம் ஐந்தின் மெய்ம்மை வலியில் - ஐந்து பூதங்களின் உண்மையான வலிமையுடன், பொலிவது - விளங்கு வது, அம்மா ! வியப்பு.

மாதிரம் - திசை ; மாதிரம் சுவர்களானமை ; 'எண்டிசையுந் திண்சுவராய்' (ஆரணிய. 1176). வீசுதல் - ஆடச் செய்தல் ; 'தோள் வீசி' (திவ். பெரிய திரு. 3, 7, 5 வ்யாக்). பூதமவை ; அவை, பகுதிப் பொருள் விகுதி. ஐம்பூதம் : நிலம், விசும்பு, வளி, தீ, நீர் என்பன. ஐம் பூதங்களின் வலியிற் பொலிதல் ; (ஒப்பு): 'ஐம்பெரும் பூதத்தியற்கை போலப்......உடையோய்' (புறநா. 2 ; 5 - 8).

பா - ம். 1. மணிச்சுவரின் மானக் ; சுவர்களாக்கி.

4. பூதமிவையைந்தும். 11

3626. மரத்தொடு மருந்துலகில் யாவுமுள வாரித்
தரத்தொடு தொடுத்தகொடி தங்கியது சங்கக்
கரத்தொடு தொடுத்தகடன் மீதுநிமிர் காலத்து
உரத்தொடு கடுத்தகத மோதையத னோதை.

(அத் தேர்), உலகில்உள - உலகத்தில் உள்ள, மருந்து யாவும் - மருந்துகள் என்று சொல்லத்தக்க, எல்லா வற்றையும், வாரி - ஒன்று சேர்த்து, மரத்தொடு, தரத்தொடு தொடுத்த - (தேரின்) கைம்மரங்களுடன் தரவாரியாய்த் தொடுத்துக்கட்டிய, கொடி - கொடிகள், தங்கியது - (தன்னிடம்) தங்கப் பெற்றது; சங்க - சங்குகளைச் சுமந்து வரும், கரத்தொடு - கைகளாகிய அலைகளோடு, தொடுத்த - கூடிய, கடல் - கடலானது, மீது நிமிர் காலத்து - (உலகை அழிக்குமாறு) மேலே பொங்கியெழும் ஊழிக்காலத்து, உரத்தொடு - வலிமையுடன், கடுத்த - வேகமாக எழுகின்ற, கதம் - உக்கிரமான, ஓதை - ஒலி, அதன் ஓதை - அத்தேரின் ஒலியாகும்.

அத் தேரில் மருந்துப் பூண்டு, செடி வகைகள் முதலிய வற்றைக் கொடிகளாகக் கட்டியிருந்தனர்; 'தேரில் மருந்து முதலியவை வைத்தல்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. மரத்தொடு - கொடி கட்டும் கைம் மரங்கள். தரம் - வரிசைக்கிரமம். மரத்தொடு என்பதை மரங்களையும் என்று கொண்டும் பொருள் கூறுவர். ஊழிக் காலத்துக் கடல் பொங்கியெழுதலால் உண்டாகும் ஓசை அத் தேர் ஓடும்போது எழுந்தது என்பது பின்னிரண்டடி களின் பொருளாம். சங்கக் கரத்தொடு தொகுத்த கடன்மீது நிமிர் காலத்து என்பதற்குத் திருமால் தம் சங்கு பிடித்த கையோடு திருப்பாற் கடற்கரையில் தோன்றி நின்ற காலத்து என்றும், சங்க முழக்கமும் திரை முழக்கமும் கொண்டு பொங்கிக் கடலழும் காலத்து என்றும், பிற பிறவாலும் இவ்வடிகட்குப் பொருள் கூறுவர். கதழ்தல் - உக்கிரமாதல்; மிகுதலும் ஆம்.

பி - ம். 1. பரத்தொடு; தொடுத்துலகில்; தொடுத்தருகில்; யாவையும் வாரித்.
4. பூதமவை கொடுத்த; தொடுத்த கதழ்.

3627. பண்டரித னுந்தியயன் வந்தபழ முந்தைப்
புண்டரிக மொட்டனைய மொட்டினது பூதம்
உண்டுதன் வயிற்றிடை யொடுக்கி யுமிழ்கிற்போன்
அண்டசன் மணிச்சயன மொப்ப தகலத்தின்.

(மேலும் அது), பண்டு-பண்டைக் காலத்தில், அரி - திருமால், தன் உந்தி - தன் கொப்பூழில், அயன்வந்த-நான்முகன் தோன்றிய, பழமுந்தை-பழைய முன் காலத்தில் தோன்றிய, புண்டரிக மொட்டு அனைய - தாமரை மொட்டுப் போன்ற, மொட்டினது - மொட்டு என்ற உறுப்பினை உடையது; அகலத்தின் - (அத் தேர் தன்) அகலத்தில், பூதம் உண்டு - (ஊழிக் காலத்து) ஐம்பூதங்களையும் (அவற்றின் சேர்க்கையால் பிறந்த பிரபஞ்சங்களையும்) உண்டு, தன் வயிற்றிடை ஒடுக்கி-(அவ்வாறு உண்டனவற்றைத்) தன் வயிற்றிடை மறைத்து, உமிழ்கிற்போன் - (திரும்பவும் சிருஷ்டிக் காலத்தில் அவற்றை) வெளிப்படுத்துபவனாகிய திருமாலின், அண்டசன்-ஆதிசேடனாகிய, மணி - அழகிய, சயனம் ஒப்பது - படுக்கையை ஒப்பது.

பண்டு, பழ, முந்தை இவை ஒரு பொருட் பன்மொழிகள். மொட்டு ; 'நின், செல்வுறு திண்டேர்க் கொடுஞ்சினை கைப்பற்றிப், பைபயத் தூங்கு' (கலித். மருதம். 20 ; 18 - 20) என்ற அடிக்கு, 'நின்னுடைய உருட்டுதலுறுகின்ற திண்ணிய தேரில் வளைந்த தாமரை முகையினைக் கையாலே பிடித்து மெத்தென மெத்தென அசையா நின்று....... வருவாய்' என்ற நச்சினார்க்கினியர் உரையையும் பார்க்கும்போது, 'கொடுஞ்சியும், மொட்டும்' ஒன்றே என்பதும், அது, தேரோடுங் காலத்தில் மக்கள் சாய்ந்து விழாமலிருக்கப் பிடித்துக் கொள்வதற்காகத் தாமரை மொட்டின் வடிவத்தில் செய்யப்பட்டுள்ள ஓர் உறுப்பென்பதும் தெரிய வருகின்றன ; 'நெடுந்தேர்க் கொடுஞ்சி பற்றி, நின்றோன்' (அகநா. 110 ; 24-5); 'மணித்தேர்க் கொடுஞ்சி கையாற்பற்றி' (மணி. 5; 139) ம் காண்க. முன், 9 ஆம் பாட்டில் கொடுஞ்சியின் வலியினைக் கூறி, இங்கு அதன் பருமனையும் உருவத்தையும் கூறினார் என்க. புண்டரிக மொட்டு: 'புண்டரிக மொட்டின் பொகுட்டோ புரையம்மா' (ஆரணிய. 1176). 'பூதம் உண்டு........

உமிழ்கிற்போன்'; 'உலகங்கள் யாவையு நிரம்ப, உலைவுருவகை யுண்டு பண்டுமிழ்ந்த பேரொருமைத் தலைவன்' (யுத்த.3248) உமிழ் கிற்போன் சயனம் என்றியைக்க. அண்டசம் - பாம்பு; இங்கு அனந்தன்.

பி - ம். 1. வந்தபடி முந்தைப்.

3. உண்டன வயிற்றிடை; உண்டவை வயிற்றிடை; ஒடுக்கி யுறைகின்ற; உமிழ்கிற்பேசன்.

4. அண்டவமளிச், அண்டசனியச், ஒத்த தகலத்தின், ஒக்குமகலந்த.

3628. வேதமொரு நாலுநிறை வேள்விகளும் வெவ்வே
றோதமவை யேழுமலை யேழுமுல கேழும்
பூதமவை யைந்துமெரி மூன்றுநனி பொய்தீர்
மாதவமு மாவுதியு மைம்புலனு மற்றும்.

வேதம் ஒரு நாலும் - நான்கு வேதங்களும், நிறை வேள்வி களும் - நிறைந்த யாகங்களும், வெவ்வேறு - தனித் தனியே உள்ள, ஓதம் ஏழும் - ஏழு கடல்களும், மலை ஏழும் - ஏழு மலைகளும், உலகு ஏழும் - ஏழு உலகங்களும், பூதம் ஐந்தும் - ஐந்து பூதங்களும், எரி மூன்றும் - அக்கினிகள் மூன்றும், நனி - மிகவும், பொய் தீர் - குற்றங் களற்ற, மா தவமும் - பெரிய தவமும், ஆவுதியும் - ஆகுதிகளும், ஐம்புலனும் - ஐந்து அறிவுகளும், மற்றும் - பிறவும்.

இச் செய்யுள் அடுத்த செய்யுளோடு குளகமாகி அதனிலுள்ள, 'பிணிக்கும் பரிகளாக' என்பதனோடு இசைந்து, அத் தேரில் கட்டப் பெற்ற குதிரைகளைக் கூறின. நான்கு வேதங்கள்; ருக், யஜுஸ், ஸாம, அதர்வண என்பன. வேள்விகள் - ஐந்தென்பர்; அவை, கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி, மானிட வேள்வி, தென்புலத்தார் வேள்வி என்பனவாம். ஓதம் - கடல்; 'ஓதமலி நஞ்சுண்ட வுடையானே' (திருவாச. 38, 3). கடல் ஏழு:—உவர் நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு நிறைந்த கடல்கள். மலை ஏழு:—இப் படலம் 8 ஆம் செய்யுளைக் காண்க. உலகு ஏழு:—மேலேழு; பூ, புவர், சுவர், ஜன, தப, மகா, சத்திய லோகங்களாகிய ஏழும், கீழேழு; அதல, விதல, சுதல, தராதல, இரசாதல, மகாதல, பாதாள லோகங்களாகிய ஏழும். பூதம் ஐந்து; இப்படலம் 11 ஆம் செய்யுள் உரை காண்க. எரி மூன்று;

காருகபத்தியம், ஆகவனியம், தக்ஷிணாக்னீயம். ஆவுதி - அக்கினியில் மந்திர பூர்வமாகச் செய்யும் ஓமம். ஐம்புலன் ; சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இந்திரிய விஷயங்கள். இச்செய்யுளில் வந்த அவை பகுதிப்பொருள் விகுதிகளாம்,

பி - ம். 1. நான்கு நிறை.
2. உலகேழு மலையேழும் ; ஒது மலை.
4. மாதிரமுமாகுதியும். 14

3629. அருங்கரண மைந்துசுட ரைந்துதிசை நாலும்
ஒருங்குகுண மூன்றுமுழல் வாயுவொரு பத்தும்
பெரும்பகலு நீளிரவு மென்றிவை பிணிக்கும்
பொரும்பரிக ளாகநனி பூண்டது பொலந்தேர்.

பொலம் தேர் - பொன்னாலான அத் தேர், அருமை கரணம் ஐந்தும்-ஐந்து அரிய கரணங்களையும், சுடர் ஐந்தும் - நெருப்புக்கள் ஐந்தினையும், திசை நாலும்-நான்கு திசைகளையும், ஒருங்கு குணம் மூன்றும் - ஒன்றுகூடும் மூன்றென்னும் குணங்களையும், உழல்-சஞ்சரிக்கின்ற, வாயு ஒரு பத்தும்-தச வாயுக்களையும், பெரும் பகலும்-பெரிய பகலையும், நீள் இரவு - நீண்ட இரவையும், என்ற இவை - என்று சொல்லப்பெற்ற இவற்றை, பிணிக்கும் - (தேரில்) கட்டும், பொரும் பரிகளாக - போரிடும் குதிரைகளாக, நனி - மிகவும் பூண்டது-பூண்டுள்ளது.

கரணம்-இந்திரியம்; புறக் கருவிகள்; அவை மெய், வாய், கண், மூக்கு, செவி, என்பன. சுடர் ஐந்து - பஞ்சாக்கினி ; நாற்புறமும் மேலும் அக்னியைக் கொள்ளுதல் ; செம்மை, கருமை, பொன்மை, பசுமை, வெண்மை, என்று ஐந்து நிறங்கள் என்பாரும் உளர். திசை நாலு ; கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு. குண மூன்று ; சாத்துவிகம், இராசதம், தாமசம். ஒருங்குதல் - ஒன்று கூடுதல். பத்து வாயு; பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன். இவற்றையெல்லாம் அத்தேர் தன் குதிரைகளாகப் பூண்டது என்றார்.

பி - ம். 1. அஞ்சுடரஞ்சு ; மறை நாலும்.
2. பொருங்கரணம் ! ஒருங்கரணம் ;
4. நள்ளிரவும் ; ஆகிநனி, 51

## தேவர்கள் அத்தேரைவணங்கி வேண்டுதல்

3630. வந்ததனை வானவர் வணங்கி வலியோய்நீ
எந்தைதர வந்தனை யெமக்குதவு கிற்பாய்
தந்தருள்வை வென்றியென நின்றுதகை மென்பூச்
சிந்தினர்கள் மாதலி கடாவிநனி சென்றான்.

வந்ததனை - இவ்வாறு வந்த தேரை, வானவர் - தேவர்கள், வணங்கி - வணங்கி, (அதனை நோக்கி), 'வலியோய் - வலிமை யுள்ளவனே! நீ - நீ, எந்தை தர - இந்திரன் வரவழைக்க, வந்தனை - வந்தாய்; எமக்கு உதவுகிற்பாய் - எங்கட்கு உதவியை உறுதி யாகச் செய்தருளுவாய்; வென்றி தந்தருள்வை - (எமக்கு) வெற்றி யைக் கொடுத்தருள்வாய்' என - என்று, நின்று - அதனருகில் நின்று, தகை மென் பூ - அழகிய மெல்லிய பூக்களை, சிந்தினர்கள் - அதன்மீது தூவினார்கள்; மாதலி - மாதலி, நனி கடாவி - அதனை நன்றாகச் செலுத்திக் கொண்டு, சென்றான் - போனான்.

தேவர்கள் அத்தேவரை வணங்கி, இராமபிரானுக்கு வெற்றி யைத் தருமாறு வேண்டிக் கொண்டனர். 'எந்தை - பிரமன்; இந்திரனுமாம்' என்பன ஒருரை. உதவுகிற்பாய்; கில், ஆற்ற லுணர்த்தும் இடைநிலை. இச் செய்யுள் இரண்டு சுவடிகளில் இல்லை.

பி - ம். 1. வணங்கி மறைகாறு.
3. தந்துதவு, தந்துருவ; நின்ற தவமென்பூச்; தலமென்பூ. 10

## தேர் இராமபிரானிடத்து விரைந்து வருதல்

3631. வினைப்பகை மிசைக்கொடு விசும்புறைவி மானம்
மனத்தின்விசை பெற்றுளது வந்ததென வானோ
டனைத்துலக முந்தொழ வடைந்த தமலன்பால்
நினைப்புமிடை பிற்பட நிமிர்ந்தது நெடுந்தேர்.

விசும்பு உறை விமானம் - வானத்தில் தங்கியிருக்கும் (தெய்வ) விமானம் (ஒன்று), வினைமிசை - தீவினைகளின்மீது, பகை கொடு - பகைமை கொண்டு, (அத் தீவினைகளை அழிக்க), மனத்தின் விசை

பெற்றுளது வந்தது என - மனத்தின் வேகத்தைப் பெற்றுளதாகி வந்தது என்று சொல்லுமாறு, நெடு தேர் - (அந்தப்) பெரிய தேரானது, வானோடு - விண்ணுலகத்தோடு, அனைத்து உலகமும் தொழ - ஏனை எல்லா உலகங்களும் தொழ, அமலன்பால் - அழுக்கற்றவனான இராமபிரானிடம், நினைப்பும் இடை பிற்பட - எண்ணமும் (கூடச் செல்ல மாட்டாது) இடையிலே பின் தங்க, அடைந்தது - வந்து சேர்ந்து, நிமிர்ந்தது - ஓங்கி நின்றது.

திரிபுரர்களைச் சங்கரிக்கக் கருதி சிவபிரானுடைய திருத்தேர் நிலவுலகுக்கு வந்தது இங்கு நினைவூட்டப் பெறுகின்றது. வினைப் பகை - இங்கு இராவணனைக் குறித்தது. எனலும் ஆகும் வினைப் பகை - சத்துரு என்பது ஓர் உரை.

பி - ம். 1. வினைப்பகை மிகைக்கொடு ; மிசைக்கொடு ; விசும்புருவி, விசும்புறும்.

2. பெற்றதென ! வந்தனை : விசை போன்றுளது.

4. நினைப்பு மிடையிற்பட நிமிர்ந்துயர் நெடுந்தேர். 17

இச் செய்யுளின் பாடம் ஆராயத்தக்கது.

### அத்தேரினை இராமபிரான் வியந்து மாதலியை வினவுதல்

3632. அலரிதனி யாழிபுனை தேரிதெனி லன்றால்
உலகின்முடி விற்பெரிய வூழொளி யிதன்றால்
நிலைகொணெடு மேருகிரி யன்றுநெடி தம்மா
தலைவரொரு மூவர்தனி மானமிது தானோ.

(இராமபிரான் அத் தேரினைக் கண்டு, வியப்புடன்), அலரி - சூரியனின், தனி ஆழி புனை தேர் இது எனின் - ஒற்றைச் சக்கரம் புனைந்த தேர் இஃது ஆகும் என்றால், அன்று - அன்று ; உலகின் முடிவில் - உலகம் முடிவு பெறும் காலத்தில், (உண்டாகும்) ஊழ் பெரிய ஒளி இது அன்று - ஊழிக் காலத்துப் பெரிய ஒளி இது வாகும் என்றாலும், அஃது அன்று ; நிலைகொள் - தன்னிடத்தில் நிலைகொண்டு நிற்கும், நெடு - நீண்ட, மேரு கிரி அன்று - மேரு மலையும் அன்று ; நெடிது - மிகப் பெரியதாயிருக்கிறது ! அம்மா - இது வியப்பே ! ஒரு மூவர் தலைவர் - மூவர்களான தலைவர்களின், தனி மானம் இது தானோ - ஒப்பற்ற விமானம் இதுதானோ ? ஆல், ஈரிடங்களிலும் அசை. தானோ, ஓ : வினாப் பொருளில் வந்தது.

இச் செய்யுள் அடுத்த செய்யுளிலுள்ள 'என வெண்ணு' என்பதுடன் முடியும். அலரி - சூரியன்; (பிங்). அமைப்பு, ஒளி, பருமன் இவற்றால் அத்தேர் சிறப்புற்றிருந்ததால் சூரியன் தேரோடும், ஊழி ஒளியோடும், மேரு மலையோடும் ஒப்பிட்டுக் கூறினர். மூவர் - பிரமன், திருமால், சிவபிரான். மானம்-விமானம்.

பி - ம். 1. ஆழிமிகு தேர்; தேரிதனினன்றால்.
2. பெரியவோ மொழியனன்றால்.
4. தலைவரொடு; மூவர்தனின்; மதுதானோ. 18

3633. என்னையிது நம்மையிடை யெய்தலென வெண்ணு
மன்னவர்த மன்னன்மகன் மாதலியை வந்தாய்
பொன்னினொளிர் தேரிதுகொ டார்புகல வென்றான்
அன்னவனு மன்னதனை யாகவுரை செய்தான்.

மன்னவர் தம மன்னன் மகன் - சக்கர்வர்த்தி திருமகனான இராமபிரான், (அத் தேரைக் கண்டு), 'நம்மை இடை எய்தல் என்னை இது - நம்மிடத்தில் வந்து சேரும் இது யாது?' என எண்ணு - என்று எண்ணி, மாதலியை - மாதலியை நோக்கி, 'பொன்னின் ஒளிர் இது தேர் கொடு - பொன்னினாலே விளங்குகின்ற இந்தத் தேரை(க் கொண்டு), ஆர் புகல - யார் கட்டளையிட, வந்தாய் - (இங்கு) கொண்டு வந்தனை?' என்றான் - என்று வினவினன்; அன்னவனும் - அந்த மாதலியும், அன்னதனை - தான் வந்த காரணத்தை, ஆக - முழுவதும், உரை செய்தான் - சொன்னான்.

ஆக - அவ்வாறாக; 'ஆக ராகவனை யவ்வழி கண்டான்' (இராவணன்றானை. 817). மாதலியின் உரையை அடுத்துவரும் ஐந்து செய்யுட்களிற் காணலாகும்.

பி - ம். 1. எய்தலென வெண்ணணி.
2. மன்னவர்கண் மன்னன்மகன்.
3. கொடார்புகறி. 18

3634. முப்புர மெரித்தவனு நான்முகனு முன்னாள்
அப்பக லியற்றியுள தாயிர மருக்கர்க்
கொப்புடைய தூழிதிரி காலுமுலை வில்லா
இப்பொருவி றேர்வருவ திந்திரனி லெந்தாய்.

(மாதலி இராமபிரானை நோக்கி), 'எந்தாய் - என் தந்தையே! (இத் தேர்), முன் நாள் - முன்னொரு காலத்தில், அ பகல் - அந்தப் பகலிலே, முப்புரம் எரித்தவனும் - திரிபுரங்களை எரித்த சிவபிரானும், நான்முகனும் - பிரமனும், இயற்றியுளது - (ஒன்று கூடிச்) செய்தது; ஆயிரம் அருக்கர்க்கு ஒப்புடையது - (ஒளியில்) ஆயிரம் சூரியர்களுக்குச் சமமானது; ஊழி - ஊழிக்காலம், திரி காலும் - மாறுபடும் பொழுதும், உலைவு இல்லா - அழிதலில்லாத, பொருவில் இ தேர் - சமானமற்ற இந்தத் தேர், இந்திரனில் வருவது - இந்திரனிடமிருந்து வருகிறது.

அ பகல் என்பதற்கு உலகங்களைப் படைத்த அந்தப் பகல் என்றும், திரிபுர சங்காரத்திற்காகத் தேர் செய்த அப் பகல் என்றும் வெவ்வேருகப் பொருள் கொள்வர். திரிபுர சங்காரம்; தாரகாசுரன் குமாரராகிய வித்யுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்ற இவர்கள் மூவரும் தாமியற்றிய சிவ பூஜா பலத்தால் பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளைப் பெற்று, அவற்றுடன் பறந்து உலகை வருத்தினர். தேவர்கள் இவர்களால் உண்டான கொடுமைகளை ஒழிக்க வேண்டுமென்று சிவபிரானை வேண்டிக் கொள்ள, எல்லாத் தேவர்களையும் உறுப்புக்களாகக் கொண்ட ஒரு தேர்மீது அவர் ஆரோஹணித்துக்கொண்டு வந்து திரிபுரர்களை அழிக்கக் கருதி நிற்க, அப்பொழுது தேவர்களுக்கு உண்டான கருவத்தை அடக்க வேண்டி அவர் தம் புன்சிரிப்பால் அத் திரிபுரங்களையும் சாம்பராக்கியருளினர் என்பது வரலாறு. ஊழித் திரிகாலம் - யுகாந்த காலம்.

பி - ம். 3. ஊழிதிரி நாளுமுலைவில்லாது.
4. இந்திரனதெந்தாய். 20

3635. அண்டமிது போல்வன வளப்பில வடுக்கிக்
கொண்டுபெய ருங்குறுகு நீளுமவை கோளுற்
றுண்டவன் வயிற்றினையு மொக்கு முவமைக்குப்
புண்டரிக நின்சர மெனக்கடிது போமால்.

'புண்டரிக - தாமரைபோன்ற உருவங்களை யுடையவனே! இது போல்வன - இந்த (அண்டம்) போன்றவைகளான, அண்டம் - அண்டங்களை, அளப்பில அடுக்கி - கணக்கிடுவதற்கு முடியாதன

வாக ஒன்றன்மே லொன்ருக அடுக்கி, கொண்டு - (அந்த அடுக்கைச்) சுமந்துகொண்டு, பெயரும் - (இது) இடம்விட்டுப் பெயர வல்லது ; குறுகும் நீளும் - (இன்னும் அவ்வண்டங்களின் அளவுக் கேற்றபடி) குறுகவும் நீளவும் வல்லது ; அவை - அவ்வண்டங்களை, கோளுற்று - தன்னிடம் கொண்டு, உண்டவன் வயிற்றினையும் உவமைக்கு ஒக்கும் - (அவற்றை) விழுங்கினவனான (திருமாலின்) வயிற்றையும் இந்த விமானம் உவமைக்கு ஒக்கும் ; (மேலும் இது), மின்சரம் என - உன் அம்பு என்னுமாறு, கடிது போம் - வேகமாகவும் செல்லும். ஆல் : அசை.

புண்டரிகன் - இராமன் ; அவன் கால், கை, கண், முகம் உந்தி முதலியன தாமரை போன்றிருத்தலின், 'மாகனகம் பத்தினர் வாய்கண்கை யுந்திபதம், கோகனகம் பத்தினர்' (திருவேங்கடமாலை, 8) ; 'கரதலந் தாமரை கண்கள் செந்தாமரை காமருந்திப் பரதலந் தாமரை பாதமுந் தாமரை பண்ணடங்கப், பொருதலந் தாமரை பொற்புயர் தாமரை பொற்குடந்தை, மரகதந் தாமரை மார்புஞ் செந்தாமரை மாயனுக்கே' (குடந்தையந்தாதி). உண்டவன் வயிறு ; இப்படலம் 13ஆம் செய்யுள் காண்க. இராம பாணம் தேர்விசைக்கு உவமை.

பி - ம். 1. அளப்பிள வடுக்கில், அலப்பிலடுகிற்கு.
2. குறுகி நீளுமிவை.
3. உவமிக்கில்.
4. கடிது போதும், போகில், போதில். 21

3636. கண்ணுமன முங்கடிய காலுமிவை கண்டால்
உண்ணும் விசை யாலுணர்வு பிற்படர வோடும்
விண்ணுநில னும்மென விசேடமில தஃதே
எண்ணுநெடு நீரினு நெருப்பிடையு மெந்தாய்.

'(இத்தேர்), கண்ணும் மனமும் கடிய காலும் இவை கண்டால் - கருதும் மனம் வேகமாகச் செல்லும் காற்று ஆகிய இவற்றை வழியிலே கண்டால், விசையால் உண்ணும் - (அவற்றைத் தன்) வேகத்தால் (அழித்து) முன்னேறும் ; உணர்வு பின் படரஓடும் - உணர்ச்சியும் பின் செல்ல(த் தான் முந்தி) ஓடும் ; எந்தாய் - என் தந்தையே ! (இத்தேர்க்கு), விண்ணும் நிலனும் என விசேடம்

இலது - வான் பூமி என்ற சிறப்பு கிடையாது; எண்ணும் - எண்ணப்படுகின்ற, நெடு நீரினும் - நீண்ட கடலிலும், நெருப்பிடையும் - நெருப்பின் இடையிலும், அஃதே - அத்தன்மையதே (ஆகும்).

கண்ணுதல் - கருதுதல்; 'கண்ணிய துணர்தலும்' (மணி. 2, 25). மனத்தையும் உணர்வையும் மீறிய வேகம் என்று கூறப்பெற்றது. மனோவேகம் வாயுவேகம் என்று கூறும் வழக்கத்தையொட்டி, 'மனமும் காலும்' என்றியைத்தார். உண்ணும் என்றதைப் பெயரெச்சமாக்கிப் பொருள் காணலும் ஆம். உணர்வு, எண்ணத்தைவிட அதிக வேகமானது என்பது இங்கு தெரிவிப்பது காணலாம். விசேடம் சிறப்பு; 'மெய்பெறு விசேடம் வியந்தன னிருப்ப' (பெருங். மகத. 14, 102). விண்ணும் நிலமும் என விசேடமிலது என்றதால், விண்ணிற் செல்வதும் நிலத்தில் செல்வதும் அத்தேருக்கு ஒன்று போன்றதே என்பது குறிப்பு. 'நீர் - பிரளயம்; நெருப்பு - வடவாமுகம்' என்பன ஒருரை.

பி - ம். 1. நெடிய காலும்; இடை கண்டால்.

3. விகடசேட னிலத்தே; விசேடமிலதன்றே.

5. எண்ணி. 22

3637. நீருமுள வேயவையொ ரேழுநிமிர் கிற்கும்
பாருமுள வேயதி னிரட்டியவை பண்பிற்
பேருமொரு காலையொரு காலுமிடை பேராத்
தேருமுள தேயிது வலாலுலகு செய்தோய்.

'உலகு செய்தோய் - உலகங்கள் யாவற்றையும் உளவாக்கியவனே! ஓர் ஏழு நீரும் உளவே - ஏழு என்று சொல்லப்படும் கடல் உள்ளனவே! அதின் இரட்டி - அந்த ஏழின் இரட்டிப்பாக (பதினான்காக), நிமிர்கிற்கும பாரும் உளவே - (அந்நீரிலிருந்து) நிமிர்ந்து நிற்கும் பூமிகளும் உள்ளன; (ஆனால்), அவை - அவ்வேழு கடல்களும் பதினான்கு உலகங்களும், ஒரு காலை - ஒரு பொழுது, பண்பில் - தம் தன்மைகளில், பேரும் - மாறும்; (ஆனல்), ஒரு காலும் இடை பேரா - ஒரு காலத்திலும் தன் நிலையினின்று பெயராத, தேரும் - தேரும், இது அலால் - இந்தத் தேர் அல்லாது (வேறு ஏதேனும்), உளதே - உள்ளதோ? (இல்லை என்றபடி).

உலகம் செய்தோய்: 'உலகம் யாவையும் தாமுளவாக்கலே' விளையாடலாகக் கொள்ளும் திருமாலாகையால், இராமபிரானைக் குறித்தது. ஏழு கடல்கள், பதினான்கு உலகங்கள்; இப்படலம் 14ஆம் செய்யுட் குறிப்புக் காண்க. கடல்களும் உலகங்களும் அழியும்; இத்தேர் அழியாது என்பது கூறப்பெற்றது.

பி-ம். 1. நிருமுளவெய்தினி னிரிலெழுகிற்கும், நிளமுளதே யிதனினிரி லெழுகிற்கும், நிருமுளதே யதனில்.

2. பாருமுளதே யதனில், பாருமுளதே யிதினிரட்டியவை.

3. இடைதேராத்.

4. தேருமுளவே விதுவலாது, தேருமிதுவே யிதுவலாது. 23

3638. தேவரு முனித்தலைவ ருஞ்சிவனு மேனுள்
மூவுலகளித்த வவனும் முதல்வ முன்னின்
றேவினர் சுரர்க்கிறைவ னீந்துளதி தென்று
மாவின்மன மொப்பவுணர் மாதலி வலித்தான்.

'முதல்வ-தலைவ, தேவரும்-தேவர்களும், முனி தலைவரும்-தேவமுனிவர்களின் தலைவர்களா யுள்ளவர்களும், சிவனும்-சிவபெருமானும், மேல் நாள் மூவுலகு அளித்த அவனும்-பண்டைக்காலத்தில் மூன்று உலகங்களையும் படைத்தவனான நான்முகனும், முன்னின்று ஏவினர்-முன்னாலே நின்று ஏவ, இது-இந்தத் தேர், சுரர்க்கு இறைவன்-தேவராசன், ஈந்துளது-(உன் பொருட்டுக்) கொடுத்துளது', என்று-என்று, மாவின மனம ஒப்ப உணர் மாதலி-குதிரைகளின் உள்ளத்தை ஒருமிக்க அறியும் ஆற்றலையுடைய மாதலி, வலித்தான்-கூறினான்.

முன் 19ஆம் செய்யுளில் 'பொன்னினொளிர் தேரிதுகொடார்புகல வந்தாய்' என்று இராமபிரான் மாதலியை வினவ, அதற்கு விடையாக அவன் 20ஆம் செய்யுளிலிருந்து அத்தேரின் தன்மைகளைக் கூறி, இச்செய்யுளில் அது அனுப்பப்பட்ட விதத்தைக் கூறினான் என்க. முனித்தலைவர்: 5. பிரமன் தேர் அனுப்பச் சொல்லியது; 6. மாவின் மனமறிதல், சிறந்த தேர்ப் பாகரின் இயல்பாகும். வலித்தல்-செல்லுதல்.

பி-ம். 1. சிவனுமுன்னாள்.

2 முதல்வ முன்னின்று, முடுக முன்னின்று.

3. ஈந்துளவிதென்றான், ஈந்துளவ னென்றான். 24

## இராமபிரான் தேரின்உண்மையைப்பற்றி ஐயுறத் தேர்க்குதிரைகள் அந்தஐயத்தைப் போக்குதல்.

3639. ஐயனிது கேட்டிக லரக்கனது மாயச்
செய்கைகொ லெனச்சிறிது சிந்தையி னினைந்தான்
மெய்யவ னுரைத்ததென தேயிரத மேவும்
மொய்யுளை வயப்பரி மொழிந்தமுது வேதம்.

ஐயன் - இராமபிரான், இது கேட்டு - (மாதலி கூறிய இவ் வரலாற்றுச் சொற்களைக் கேட்டு, 'இகல் அரக்கனது - பகைமையை யுடைய அரக்கனுடைய, மாய செய்கை கொல் - அகன்ற மாயச் செய்கைகளோ?' என - என்று, சிந்தையின் - உள்ளத்தில், சிறிது நினைந்தான் - சிறிதளவு எண்ணினன்; (அப்பொழுது), 'அவன் உரைத்தது மெய் எனவே - அம்மாதலி சொன்னது உண்மை' என்றே, இரதம் மேவும் - இரதத்திற் கட்டியிருந்த, மொய் உளை வய பரி - நெருங்கிய பிடரிகளையுடைய வெற்றி பொருந்திய குதிரைகள், முது வேதம் - பழமையான வேதங்களை, மொழிந்த - சொல்லின.

இராவணன், இந்திரசித்து முதலானவர்களின் மாயைகளை நன்கு உணர்ந்தவனாதலின், 'இதுவும் அரக்கர் மாயச் செயலோ?' என்று அவன் சமுசயித்தான்; அப்பொழுது குதிரைகள் வேதங் களைக் கூறிக் கனைத்தன; அக்கனைத்தலின் பொருள் மாதலி கூறியவை மெய்யே என்பதாகும்; இராமபிரான் அதைக்கேட்டுத் தன் ஐயம் தீர்ந்தான் என்பது இங்குக் கூறப்பெற்றது. 'மொழிந்த - வேதவாக்கியமாகக் குதிரை மாதலி சொன்னது உண்மை என்றது' என்பது ஒருரை. 'இந்திரன் அளித்தது என்று தெரிவித்தது வேதமாய குதிரை' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. ஐயனது; அரக்கன் மகன்; மாயைச்.

3. வெய்யவ னுரைத்ததென, மெய்யுற வுரைத்ததென, உரைத்ததென வேண்டியிடை பூண்ட.

4. கொய்யுளை வயப்பரிகள் கூறியது வேதம்; முழுவேதம்.

## இராமபிரான் மேலும் மாதலியை வினுதல்

3640. இல்லையினி யையமென வெண்ணிய விராமன்
நல்லவனை நீயுனது நாமநவில் கென்ன
வல்லிதனை யூர்வதொரு மாதலி யெனப்பேர்
சொல்லுவ ரெனத்தொழுதி றைஞ்சியிவை சொன்னுன்.

இனி ஐயம் இல்லை என எண்ணிய இராமன் - இனிச் சந்தேகம் இல்லை என்று கருதிய இராமபிரான், (மாதலி வினவு தற்கு உரியன் என்று கொண்டு), நல்லவனை - நல்லவனுகக் காணப் பெற்ற மாதலியை நோக்கி, 'நீ உனது நாமம் நவில்க - நீ உன் பெயரைக் கூறுவாய்,' என்ன - என்று வினவ; (அவன்), 'வல்லி தனை - ஈடாதண்டத்தை, ஊர்வது ஒரு மாதலி என - ஏறிச் செலுத்துகின்றவனுன மாதலி என்று, பேர் சொல்லுவார் - (என்) பெயரை (உலகத்தார்) சொல்லுவார்கள்', என - என்று, தொழுது இறைஞ்சி - தொழுது வணங்கி, இவை - இச்சொற்களை, சொன்னுன் - சொன்னுன்.

வல்லி - ஈடாதண்டம் என்பது ஒருரை; ஈடாதண்டம் - ஏர்க் கால்; (மச்சபு. சூரியரத. 21). வல்லிதனை ஊர்தல் என்பதற்கு இரதத்தின் ஏர்க்காலின் தலையில் உட்கார்ந்து குதிரைகளைச் செலுத்துதல் என்று பொருள்படுதல் காண்க. இறைஞ்சுதல் - தாழ்தல்;

பி - ம். 2. நல்லவினை ; நீ யெவனையென்ன நவில்கிற்பாய், நவில்கிற்பான், நவில்கிற்பார்.
3. வல்லனை, வலலவனை.
4. தொழுத நெஞ்சினிவை, தொழுது நெஞ்சிறெடு, நெஞ்சிஞேடு, நெஞ்சினிலை.



## இராமபிரான் மாருதி இலக்குவன் இவர்களின் கருத்துக்களையும் அறிதல்

3641. மாருதியை நோக்கியிள வாளரியை நோக்கி
நீர்கருது கின்றதை நிகழ்த்துமென நின்றுன்
ஆரியன்வ ணங்கியவ ரையமிலை யையா
தேரிது புரந்தரன தென்றனர் தெளிந்தார்.

(அதன் பின்னும் இராமபிரான்), மாருதியை நோக்கி - மாருதியைப் பார்த்து, இள வாள் அரியை நோக்கி - இளமையான கொடிய சிங்கம்போன்ற இலக்குவனைப் பார்த்து, 'நீர் கருதுகின்றதை நிகழ்த்தும் என - (மாலதி கொண்டுவந்த தேரைப் பற்றி) நீவிர் நினைப்பதைச் சொல்லுங்கள்' என வினவி, நின்றான் - நின்றான்; தெளிந்தார் அவர் - (தாங்கள் தாங்களே தமக்குள் ஆராய்ந்து) நிச்சயம் செய்தவர்களான அவ்விருவரும், ஆரியன் - இராமபிரானை, வணங்கி - வணங்கி, 'ஐயா - ஐயனே! ஐயம் இலை - சந்தேகம் இல்லை; இது தேர் - இந்தத் தேரானது, புரந்தரனது - இந்திரனுடையது', என்றனர் - என்று கூறினார்கள்.

இலக்குவனுக்கு அரி; ஆரணிய. 424, 982, 1068, 1078, 1083; கிட்கிந்தா. 567. இலக்குவன் தெளிவுடையோன்; ஆரணிய. 786. மாருதியை நோக்கி வினவியதற்குக் காரணம், அவன் போர்க்களத்தில் இராமபிரானைச் சுமக்கும் இயல்புடையனாதலின் என்றும், இலக்குவன் பொன் மானை மாரீசனெனக் கண்டு கொண்ட வகையாலும் என்பர் சிலர்.

பி - ம். 3. ஆரியனையே வணங்கி யையமிலை, ஆரியனையே தொழுதோ ரையமிலையையா, ஐயமிலை மெய்யே.

4. என்றனர் தெரிந்தான்; தெரிந்தோர். 27

## ஸ்ரீராமபிரான் அத்தேரில் ஏறுதல்

3642. விழுந்துபுர டீவினை நிலத்தொடு வெதும்பத்
தொழுந்தகைய நல்வினை களிப்பினொடு துள்ள
அழுந்துதுய ரத்தமர ரந்தணர்கை முந்துற்
றெழுந்துதலை யேறவினி தேறின னிராமன்.

விழுந்து புரள் - (இராமபிரான் தேரேறினதால்) விழுந்து புரள்கிற, தீவினை - (உலகிலுள்ள) பாபங்கள், நிலத்தொடு - (தாம் விழுந்த) பூமியொடு, வெதும்ப - வெந்துபோக, தொழும் தகைய - யாவராலும் தொழப்படும் தகுதியையுடைய, நல்வினை - புண்ணியங்கள், களிப்பினொடு துள்ள - மிகுந்த மகிழ்ச்சியொடு துள்ள, அழுந்து துயரத்து - தாம் ஆழ்ந்துபோதற்குக் காரணமான

துயரத்தையுடைய, அமரர் - தேவர்களும், அந்தணர் - முனிவர்களும், கை - தம் கைகள், முந்து உற்று எழுந்து தலை ஏற - முன்னே நீட்டி மேலே எழுந்து தம்தம் தலைகளில் ஏறி, இராமன் இனிது ஏறினன் - இராமபிரான் (இந்திரன் அனுப்பிய தேரில்) இனிமையாக ஏறினன்.

இராமபிரான் தேரேறினமை இராவண ஸம்ஹாரத்தை உறுதியாக்கியதால் தீவினைகள் வெதும்பின; நல்வினைகள் துள்ளின; அமரரும் அந்தணரும் தம் கைகளைத் தம் உச்சிகளிற் கூப்பினர். அவதார ரகசியம் இங்குச் சுட்டப்பெற்றது காண்க.

பா - ம். 1. குலத்தொடு; விலங்கத் விளங்கத்.

2. கணத்தீநெடு துள்ள.

3. அந்தணர்கள், அந்தணா ரெழுந்தாது.

4. எழுந்து கரை.

28

# 36. இராவணன் வதைப் படலம்

இஃது, இராவணன் இராமபிரானால் போரில் வதையுண்ட செய்தியைக் கூறும் படலம் என விரியும்.

வேறு

## இராமபிரானைத் தேவர் வாழ்த்துதல்

3643. ஆழியந் தடந்தேர் வீர
னேறலு மலங்கல் சில்லிப்
பூழியிற் சுரித்த தன்மை
நோக்கிய புலவ ரெல்லாம்
ஊழிவெங் காற்றின் வெய்ய
கலுழனை யொன்றுஞ் சொல்லார்
வாழிய வனுமன் றோளை
யேத்தினர் மலர்கள் தூவி.

வீரன் - வீரனாகிய இராமபிரான், ஆழி அம் தடம் தேர் ஏறலும்-சக்கரமமைந்த அழகிய அகன்ற (அந்தத்) தேரின்மீது ஏறலும், அலங்கல் சில்லி - பிரகாசிக்கும் தேருருளை, பூழியில் - (மண்) புழுதியில், சுரித்த - புதைந்த, தன்மை - தன்மையை, நோக்கிய - பார்த்த, புலவர் எல்லாம் - தேவர்கள் யாவரும், (இராமபிரானின் உடற் பாரத்தை உன்னி), ஊழிவெம் காற்றின் - யுகாந்தத்தில் வீசும் வெப்பம் நிறைந்த காற்றைக் காட்டிலும், வெய்ய கலுழனை - கொடிய கருடாழ்வானின் (ஆற்றலை), ஒன்றும் சொல்லார்-(புகழ்ச்சியாக) ஒன்றையும் கூறாமல், அநுமன் தோளை - அநுமனின் (ஆற்றல் மிக்க) தோள்களின்மீது, மலர்கள் தூவி - மலர்களைச் சொரிந்து, ஏத்தினர் - அவற்றைப் பாராட்டினார்கள்.

இராமாவதாரத்தின் நோக்கமான இராவணன்வதை நிகழும் படலமாகிய இதனில் இராமபிரானுடைய தெய்வத்தன்மையையும்

இவ்வவதாரத்தில் அவனுடைய வலக்கைபோன்று நின்றுதவிய சிறிய திருவடியின் சிறப்பையும் படலத்தின்முதற் செய்யுளிலேயே நுட்பமாக அமைத்துப் போற்றும் ஆசிரியரின் நுண்ணிய அறிவை இங்கு நாம் உணர்வது நமக்கு இறும்பூதினை விளைப்பதாகும். அலங்குதல் - ஒளி செய்தல். (பிங்.) சில்லி - தேருருளை; 'வெள்ளிச் சில்லி புக்குற்றது' (பால. கடிமண. 71). சுரித்தல் - புதைதல். சில்லி பூழியில் சுரித்தமை தேர்மீது ஏறிய இராமபிரானின் பாரத்தைச் சுமக்கமாட்டாமையால் என்க. புலவர் - தேவர். (ஆரணிய. 740). "கலுழனை ஒன்றும் சொல்லார்: சுதசித்தமாக வாகனமானவர் கருடன்: அது நிற்க; இந்தப் பாரமான தேரை பொறுக்கமாட்டாத ஸ்ரீராமனை அநுமார் எப்படிச் சுமந்துலாவினர்? அவர் தோளுக்குத் திட்டி வாராதிருக்க என்று வாழ்த்தினர்கள்." என்பது ஒருரை. கருடன் திருமாலின் இயற்கையான வாகனம். அக் கருடனுக்கு ஒத்த வலிமையுடையவன் அநுமன் மற்ற அவதாரங்களில் திருமால் நிகழ்த்தியவலிய செய்கைகளுள், இராமாவதாரத்தில் நிகழ்ந்த இராமராவண யுத்தமே மிக வலியது; ஆதலின் அங்கு உதவிய அநுமனுக்கு ஏற்றம் கூறப்பெற்றது. வாழிய; முன்னிலை அசைநிலை.

பி - ம். 1. ஏறலுமாகி கூறிப்; அமலச்சில்லி, மலைச்சில்லி, அகலச்சில்லி.

2. பூழியிற் புக்க; புலவர் போத; புலவரூழி; புலவர் போல்வார்.

3. காற்றினன் கலுழனை; கலுழனை யுவமை சொல்லார்.

4. ஞேளென்றேத்தினர் மலருந்தூவி; இமையோரெல்லாம். 1

3644. எழுகதேர் சுமக்க வெல்லோம்
வலியும்புக் கின்றே யொன்றி
விழுகபோ ரரக்கன் வெல்க
வேந்தர்க்கு வேந்தன் வீரம்
அழுகபோ ரரக்கி மாரென்
றுர்த்தன ரமர ராழி
முழுகிமீ தெழுந்த தென்னச்
சென்றது மூரித் திண்டேர்.

(அத் தேவர்கள் மேலும்), 'தேர் எழுக - (இராமபிரான் ஏறியமைந்த திருத்) தேர் எழட்டும்; இன்றே எல்லோம் வலியும்

புக்கு - இப்பொழுதே எங்கள் யாவருடைய வலிமையும் இதனிடம் புகுந்து, ஒன்றி - ஒருமிக்க, சுமக்க - (அவ்வலிகளை யெல்லாம்) தாங்குக; போர் அரக்கன் விழுக - போர் (வெறிகொண்ட) அரக்கனை (இராவணன்) - அழியட்டும்; போர் அரக்கிமார் விம்மி அழுக - போர்க்குணம் நிறைந்த அரக்கியர் விம்மலுடன் அழட்டும்' என்று அமரர் ஆர்த்தனர் - என்று தேவர்கள் ஆரவாரித்தனர்; மூரி - வலிமை கொண்ட, திண் தேர் - திண்ணிய தேரானது, ஆழி - கடலில், முழுகி மீது எழுந்தது என்ன - முழுகிப் பின் மேலே எழுந்தது என்று சொல்லுவது போன்று, (புழுதியினின்று வெளியேறி), சென்றது - (போர்க்களத்தை நோக்கிச்) சென்றது.

தேவர்கள் 'எழுக' என்று தேரினை ஆசீர்வதிக்க, அது (புதைந்திருந்த புழுதியினின்று வெளியேறி) மேலே சென்றது என்றவாறு. ஆழி, சக்கரமும்ஆம். எல்லோம் - தன்மைப் பன்மை. அத் தேர் எல்லாத் தேவர்களின் வலியையும் அவர்களாசியால் பெற்றது என்க.

பி - ம். 1. எல்லா வலியும்; இன்றே பொன்றி;

2. விழுக போயரக்கன்; போரரக்க; எழுக வேந்தர்க்கு வேந்தன்; வேதத்தின் முதல்வன்.

3. அரக்கிமார்கள்; பேரரக்கிமா ரென்றழுதனர். 2

## இராவணன் தன் தேரை முன்னே செலுத்தச் செய்தல்

3645. அன்னது கண்ணிற் கண்ட
வரக்கனு மமர ரீந்தார்
மன்னெடுந் தேரென் றுன்னி
வாய்மடித் தெயிறு தின்றுன்
பின்னது கிடக்க வென்னுத்
தன்னுடைப் பெருந்திண் டேரை
மின்னிவர் வரிவிற் செங்கை
யிராமன்மேல் விடுதீ யென்றுன்.

அன்னது - அந்தத் தேரை, கண்ணில் கண்ட - தன் கண்களாற் பார்த்த, அரக்கனும் - இராவணனும், 'மன் நெடும் தேர் அமரர் ஈந்தார் - நிலையுற்ற நீண்ட இத் தேரினைத் தேவர்கள்

கொடுத்துள்ளனர்' என்று உன்னி - என்று எண்ணி, வாய் மடித்து - (கோபத்தால்) உதடுகளைக் கடித்து, எயிறு தின்றான் - பற்களைக் கடித்தான்; பின் - பிறகு, 'அது கிடக்க - அச் செயல் கிடக்கட்டும், என்னா - என்று (இகழ்ந்து விட்டு), தன் உடை பெரும் திண் தேரை - தன்னுடைய பெரிய வலிய தேரை, 'மின் இவர் வரிவில் செம்கை இராமன் மேல் விடுதி - ஒளி வீசுகின்ற, கட்டுக்களை உடைய வில்லைப் பிடித்த செம்மையான கையையுடைய இராமன்மீது செலுத்து,' என்றான் - என்று தன் சாரதிக்குக் கூறினான்.

வாய் மடித்து எயிறு தின்றல்; வெகுளிக் குறி. 'பின் அது; கிடக்க - தேவர்களைக் கவனித்துக் கொள்வது பிறகு; இப்பொழுது அது கிடக்கட்டும்', என்றும் பொருள் காணலாம். இவர்தல் - பாய்தல், வீசுதல்.

பி - ம். 2. வாய் கடித் தெயிறு தின்று.

3. பின்னிது முடிப்பனென்னு; பின்னது கிடக்க வென்னுத்; அன்னது கிடக்க.

4. மின்னகு வரிவில். 3

## வாநரர்கள் போருக்கு ஆயத்தமாதல்

3646. இரிந்தவான் கவிக ளெல்லா
மிமையவ ரிரத மீந்தார்
அரிந்தமன் வெல்லு மென்றற்
கையுற வில்லென் றஞ்சார்
திரிந்தனர் மரமுங் கல்லுஞ்
சிந்தினர் திசையோ டண்டம்
பிரிந்தன கொல்லென் றெண்ணப்
பிறந்தது முழக்கின் பெற்றி.

இரிந்த - முன் சிதைந்தோடின, வான் கவிகள் எல்லாம் - வாநரர்களெல்லோரும், 'இமையவர் - தேவர், இரதம் ஈந்தார் - இரதம் அளித்து விட்டனர்; அரிந்தமன் வெல்லும் - பகைவரை அடக்குவோனான இராமபிரான் வெல்லும், என்றற்கு - என்று கருதுவதற்கு, ஐயுறவு இல் - சந்தேகம் இல்லை, என்று - என்

றெண்ணி, அஞ்சார் - பயமற்றவர்களாய், திரிந்தனர் - அங்குமிங்கும் அலையலுற்று, மரமும் கல்லும் சிந்தினர் - மரங்களையும் கல்லையும் (பகைவர்மீது) வீசினார்கள்; திசையோடு அண்டம் பிரிந்தன கொல் - திசைகளும் அண்டங்களும் நிலைபெயர்ந்தனவோ என்று, எண்ண - எண்ணும்படி, முழக்கின் பெற்றி - (அவ்வானரர்கள் செய்த) முழக்கத்தின் தன்மை, பிறந்தது - தோன்றிற்று.

இரிந்த வானரர்கள்; இராவணன் தேரேறியது கண்ட உலகம் இரிந்த தன்மை முன் கூறப்பெற்றது காண்க. ஐயுறவு; 'தெளிந்தான்கண் ஐயுறவும்' (குறள். 510) பிரிதல் - இடம்விட்டு நகர்தல். அரிந்தமன் - பகைவரை அடக்குவோன்; ஆரணிய. 171 ஆம் செய்யுட் குறிப்புக் காண்க.

பி - ம். 1. இரிந்தன கவிகள்.

2. அரிந்தமன் கிடக்க வெல்லுமென்றற்கு; இல்லென்றஞ்சா.

3. தெரிந்தனர் மரனுங் கல்லுஞ்; இரிந்தன மரமுங்; மலையோடண்டம்.

3. பிறந்தன கொல்; கொல்லென்றெண்ணி. 4

## பலவகை யொலிகள்

3647. வார்ப்பொலி முரசி னோதை
வாய்ப்புடை வயவ ரோதை
போர்த்தொழிற் களத்தை முற்றுஞ்
சுற்றிய பொம்ம லோதை
ஆர்த்தலி னியாரும் பார்வீழ்ந்
தடங்கின ரிருவ ராடல்
தேர்க்குர லோதை பொங்கச்
செவிமுற்றுஞ் செவிடு செய்ய.

வார் பொலி முரசின் ஓதை - வார்க்கட்டினால் விளங்கிய முரசத்தின் ஓசையும், வாய் புடை வயவர் ஓதை - வாயின் புடைப் பினையுடைய வீரர்கள் முழங்கும் ஓசையும், போர் தொழில் களத்தை - போர்த் தொழில் நிகழும் போர்க்களத்தை, முற்றும் சுற்றிய பொம்மல் ஓதை - முழுமையும் சுற்றி நின்ற (சேனைகளின்) மகிழ்ச்சி நிறைந்த ஓசையும், இருவர் - இராமபிரான் இலக்குவன்

என்ற இருவரும், ஆடல் தேர் குரல் ஓதை - போரிடுவதற்காக ஏறி வந்த தேரின் முழக்க ஓசையும், செவி முற்றும் செவிடு செய்ய - யாவருடைய செவிகளையும் முற்றிலும் செவிடாக்குமாறு, ஆர்த்தலின் - ஒலித்ததனுல், யாரும் - அங்கு நின்ற (இரு திறத்தினர்) யாவரும், பார் வீழ்ந்து - தரையில் விழுந்து, அடங்கினர் - (தத்தம் பொறிகளும் புலன்களும்) அடங்கியவராயினர்.

வார் பொலி முரசு ; வார்களால் பொலிகின்ற முரசு. பொம்மல் - மகிழ்ச்சி ; 'போய்வருங் கரும முற்றிற் றென்பதோர் பொம்மல் பொங்க' (சுந்தர. 1247) ஆடல் - போர். (பிங்.) செவிடு செய்ய அடங்கின என்றியைக்க.

பி - ம். 1. பொலியியத்தி னோதை ; வரம்பிலா வயவ ரோதை ; வாய்ப்புண்ட வயவர் ; மதகிரி வயவர்.

2. களத்து மற்றும் முற்றிய பொம்ம லோதை.

3. ஆர்த்திலர் யாரும், ஆர்த்திலதியாரும்.

4. செவிடு செல்ல, செவிடு செய்த ; வேனேர் செவி செவிடு செய்ய. 5

இதன்பின் ஓர் அதிகப் பாடல் :—

புரந்தரன் பகைவ னுவி போக்கிய புனிதன் வென்றி
சுரந்தரு ளநும னீல னங்கதன் சுக்கி ரீவன்
உரந்தரு வீர ராதிக் கவிப்படைத் தலைவ ருள்ளார்
பரந்திடு மரக்கன் சேனை படுத்தனர் திரிய லுற்ருர்.

## நீ என் கருத்திற்கு இசையத் தேரோட்டுவாய் என்று மாதலியிடம் இராமபிரான் கூறுதல்

3648. மாதலி வதன நோக்கி
மாமறை யமலன் மாருக்
காதலோய் கரும மொன்று
கேட்டியாற் களித்த சிந்தை
ஏதலன் மிகுதி யெல்லா
மியற்றிய பின்றை யென்றன்
சோதனை நோக்கிச் செய்தி
துடிப்பிலை யென்னச் சொன்னுன்.

மாமறை அமலன்-பெரிய வேதங்களாற் கூறப்படும் அமலனான இராமபிரான் (இராவணன் தன்னை நோக்கி வருவதைக் கண்டு), மாதலி வதனம் நோக்கி - மாதலியின் முகத்தைப் பார்த்து, 'மாறு காதலோய் - மாறுபாடற்ற அன்புடையோனே! கருமம் ஒன்றும் - காரியம் ஒன்றினை, கேட்டி - (நான் சொல்லக்) கேட்பாயாக; களித்த சிந்தை ஏதலன் - (போர் வெறியினால்) களிப்புமிக்க உள்ளத்தையுடைய பகைவனான இராவணன், மிகுதி எல்லாம் இயற்றிய பின்றை - தீமைகள் யாவற்றையும் செய்து முடித்த பிறகு, என் தன் சோதனை நோக்கி - என் குறிப்பினை நோக்கி, செய்தி - உன் செயல்களைச் செய்வாயாக; துடிப்பு இலை - விரைய வேண்டா;' என்ன சொன்னான் - என்று கூறினான்.

'பெருந்திண் தேரை இராமன்மேல் விடுதி' (இப்படலம் 3) என்று இராவணன் தன் தேரோட்டிக்குக் கூறி, அவ்வாறே அத் தேர் இராமபிரானை நெருங்குகையில், தன் தேர்ப்பாகனான மாதலி இராவணனை எதிர்க்கத் துடிப்பதைக் கண்டு இராமபிரான் இவ்வாறு கூறினான் என்க. இதனால் அவனுடைய பொறுமையையும் நிதானத்தையும் காண்கிறோம். காதலோய், என்றதனால் மாதலி செய்தது அவனுக்கு இராமபிரான்பால் இருந்த காதலின் பொருட்டாகுமேயன்றி, அறிவின்பாலாகாது என்பதைச் சுட்டியவாறு. முன், வீடணனடைக்கலப் படலத்தில், பிரான் சுக்கிரீவன் முதலியோரை நோக்கி, 'இயம்பினி ரென்பால் வைத்த காதலால்' (யுத்த. 423) என்ற செய்தி இங்கு நினைத்தற்குரியது. களித்தல் - கள்ளைப் பருகி வெறி கொள்ளுதல்; இது போன்ற மகிழ்ச்சி யடைதல்; 'களித்தவர் தமக்கு மோர்கதி யுண்டாகுமோ' (கந்த. திருநாட். 12) என்றபடி களித்தவர் சிந்தை செவ்விபெறுது என்பது அறியற்பாலது. களிப்பு, செருக்கும் ஆகும்: 'முழுவதூஉங் கற்றனமென்று களியற்க' (நீதிநெறி. 14). ஏதலன் - பகைவன்; 'ஏதல னின்னுயிரை வவ்வி' (திவ். பெரிய தி. 1, 7, 4); மிகுதியியற்றல்; 'மிகுதியான் மிக்கவை செய்தாரை' (குறள். 158) என்ற பகுதிக்கு, 'மனச் செருக்கால் தங்கண் தீயவற்றைச் செய்தவரை' என்று பரிமேலழகர் உரை கூறுவது நோக்கத் தக்கது. சோதனை - குறிப்பு.

துடிப்பு இலை - துடிப்பற்றவன் ஆவாயாக. துடிப்பு - படபடப்பு: விரைவு.

பி - ம். 1. மன்னர்தம் மன்னன் மைந்தன்.

2. காதுதல் கருமம் ; காதலாற் கருமமென்று; காதலக் கருமம் ; பிற்றை யென்றான்.

3. ஏதிலன் மிகுதி ; மிகுதியெல்லா மிடையிற்ற பின்றை.

4. துடிக்கலை. 6

## மாதலி உடன்பட்டுக் கூறுதல்

3649. வள்ளனின் கருத்து மாவின்
சிந்தையு மாற்ற லார்தம்
உள்ளமு மிகையு முற்ற
குற்றமு முறுதி தானும்
கள்ளமில் காலப் பாடுங்
கருமமுங் கருதே னாகில்
தெள்ளிதென் விஞ்சை யென்றா
னமலனுஞ் சீரி தென்றான்.

(அச் சொற்களைக் கேட்ட மாதலி) 'வள்ளல் - வரையாதளிக்கும் பிரபுவே! நின் கருத்தும் - உன் திருக் கருத்தையும், மாவின் - குதிரைகளின், சிந்தையும் - எண்ணத்தையும், மாற்றலார் தம் உள்ளமும் - பகைவரின் நோக்கையும், மிகையும் - அவருடைய மிகுதிப் பாட்டையும், உற்ற - அதனால் விளையும், குற்றமும் - தீமையையும், உறுதி தானும் - நாமும் (அவரும்) கொண்ட உறுதிப் பாட்டையும், கள்ளம் இல் - வஞ்சனையற்ற, காலப்பாடும் - காலத்தின் தன்மையையும், கருமமும் - எடுத்த காரியத்தின் வலிமையையும், கருதேனாகில் - நான் நினையாதவன் ஆவனேயாகில், என் விஞ்சை - என் தேரோட்டும் வித்தை, தெள்ளிது - மிகவும் தெளிவுற்றதாகும்! (ஆகாது என்றபடி) என்றான் - என்று கூறினான்; அமலனும் - மலமற்ற இராமபிரானும், 'சீரிது - சிறப்பானது' என்றான் - என்று விடையளித்தான்.

போர்க்களத்தில் தேரோட்டும் ஒருவனுக்கு அமைய வேண்டிய இயல்புகள் யாவை என்பதை இங்கு மாதலி கூறுவது காணலாம். உறுதி - செய்யத்தக்கது; 'வீடுத லுறுதி யென்றே விளம்பி' (கந்த. சூர. வதை. 64) கள்ளமில் காலம் என்றது, ஆவதுபோல் காட்டி அழிவைக் கொடுக்கும் காலமும் உளவாதலால் கூறியது. கருமம் - வினை. தெள்ளிது என் விஞ்சை என்றது பிற குறிப்பு.

பி - ம். 2. மற்ற குற்றமும்; இறுதி காணும்; குற்றமும்.
4. செவ்விதென்றான். 7

## மகோதரன் இராவணனை வேண்டுதல்

3650. தோன்றின னிராம னீதாற்
புரந்தரன் துரகத் தேர்மேல்
ஏன்றிரு வீர்க்கும் வெம்போ
ரெய்திய திடையே யானோர்
சான்றென நிற்றல் குற்றந்
தருதியால் விடையீண் டென்றான்
வான்தொடர் குன்ற மன்ன
மகோதர னிலங்கை மன்னை.

(அப்பொழுது) வான் தொடர் குன்றம் அன்ன - வானத்தை எட்டும் மலை போன்ற, மகோதரன் - மகோதரன் என்ற வீரன், இலங்கை மன்னை - இலங்கையின் இறைவனான இராவணனை (நோக்கி), ஈது-இதோ, புரந்தரன் - இந்திரனுக்குரிய, துரகம் தேர் மேல் - குதிரைகள் பூட்டிய தேரின்மீது, இராமன் தோன்றினன் - இராமன் காண்கின்றான்; ஏன்று - (ஒருவரை ஒருவர்) எதிர்த்து, இருவீர்க்கும் - நும் இருவர்க்கும், வெம் போர் எய்தியது - கொடிய போர் அணுகிற்று; இடையே - நும் இருவருக்கும் இடையிலே, யான் ஓர் சான்று என - யான் ஒரு சாட்சி என்று, நிற்றல் - வாளா நிற்றல், குற்றம் - குற்றமாகும்; ஈண்டு - இப்பொழுது, விடை - போர் செய்தற்கு விடை, தருதி - கொடுப்பாய்', என்றான் - என்று கேட்டான். ஆல்: அசை.

போர் வீரனான மகோதரன் இராவணன் இராமபிரானோடு போராடும் போது தான் வாளா நிற்றலை விரும்பாமல், வேறோரிடத்

துக்குத் தான் போர் செய்தலை விரும்பி, விண்ணப்பித்தனன் என்க. சான்று என நிற்றல்; தான போரிடாமல் நிற்றலை இகழ்ந்து கூறியது. விடை - கட்டளை, ஏன்று; ஏல், பகுதி. ஏன்றல் - எதிர்த்தல்; 'ஏன்றடு விறற்களம் பாடி' (திருமுரு. 55). முதனூலில் இராவணன் தான் நேரில் இராமபிரானோடு போரிடச் செல்லுமுன் மகோதரனைப் போருக்கு அனுப்ப, அவனைச் சுக்கிரீவன் கொன்றனன் என்று கூறப் பெற்றுள்ளது.

பி - ம். 1. இராம னெந்தாய்.

2. ஏன்றிருவருக்கும்; ஏன்ற நம்மிடையே வந்த தம்பியுமிகலின் வாளோர்.

4. இலங்கை மன்னன். 8

## 'நீ இலக்குவனோடு பொருக' என்று இராவணன் கூறுதல்

3651. அம்புய மனைய கண்ணன்
தன்னையா னரியி னேறு
தும்பியைத் தொலைத்த தென்னத்
தொலைக்குவென் தொடர்ந்து நின்ற
தம்பியைத் தடுத்தி யாயிற்
றந்தனை கொற்ற மென்றான்
வெம்பிய லரக்க னஃதே
செய்வெனென் றயலின் மீண்டான்.

(அவ் விவண்டுகோளைக் கேட்ட இராவணன், மகோதரனை நோக்கி), 'அம்புயம் அனைய கண்ணன் தன்னை - தாமரை போன்ற கண்ணை உடைய இராமனை, யான்-நான், அரியின் ஏறு - ஆண் சிங்கம் ஒன்று, தும்பியை தொலைத்தது என்ன-யானை (ஒன்றை) அழித்தது என்று சொல்லுமாறு, தொலைக்குவென் - அழிப்பேன்; (நீ), தொடர்ந்து நின்ற - (அவ்விராமனைப்) பின்பற்றி நிற்கும், தம்பியை - தம்பியான இலக்குவனை, தடுத்தியாயின் - போருக்கு வராமல் தடுப்பாயானால், கொற்றம் தந்தனை - (எனக்கு நீ) வெற்றி அளித்தவனாவாய்' என்றான்-என்று இராவணன் சொன்னான்; வெம்பு இயல் அரக்கன் - கோபத்தால் வெம்புகின்ற இயல்பை

யுடைய அரக்கனுன மகோதரன், 'அஃதே செய்வென் என்று - அவ்வாறே செய்வேன்' என்று, அயலின் - ஒரு பக்கமாக, மீண்டான் - திரும்பினுன்.

பகைமேற் கொண்ட இராவணன் இராமபிரான் அழகில் ஈடுபட்டு 'அம்புய மனைய கண்ணன்' என்று கூறுதல் குறித்தற்குரியது; இவ்வாறே சூர்ப்பணகை, மாரீசன், வாலி ஆகியோரும் இராமபிரானின் அழகில் மூழ்கியவராவர். தான் இராமபிரானைத் தொலைப்பதாகக் கூறிய இராவணன், மகோதரனை நோக்கித் 'தம்பியைத் தடுத்தியாயின்' என்று கூறியது, இலக்குவனின் ஆற்றலில் அவனுக்கிருந்த உறுதியைக் காட்டுகின்றது.

பி - ம். 1. அனைய கண்ணுன் ; தன்னை வாளரியினேறு.

2. தம்பியைத் தொலைத்தாலென்ன.

3. தடுத்தியாகிற்.

4. வெம்பிகல ரக்கன், வெம்பிய வரக்கன் ; அவனும் மீண்டான், அவனின் மீண்டான்.

9

## மகோதரன் இராமன் மீதே தேரை விடுமாறு கூறுதல்

3652. மீண்டவ னிளவல் நின்ற
பாணியின் விலங்கா முன்னம்
ஆண்டகை தெய்வத் திண்டே
ரணுகிய தணுகுங் காலை
மூண்டெழு வெகுளி யோடு
மகோதரன் முனிந்து முட்டத்
தூண்டுதீ தேரை யென்ருன்
சாரதி தொழுது சொன்னுன்.

மீண்டவன் - (இராவணன் பக்கலில் நின்று இலக்குவன் நின்ற இடத்தை நோக்கிப்) புறப்பட்ட மகோதரன், இளவல் நின்ற பாணியின் - தம்பி இலக்குவன் நின்ற பக்கத்திற்கு, விலங்கா முன்னம் - செல்லா முன்பே, ஆண்டகை - வீரம் மிக்க இராமபிரானுடைய, தெய்வம் - தெய்வத்தன்மை பொருந்திய, திண் தேர் - வலிய தேர், அணுகியது - (அவன் அருகில்) நெருங்கியது; அணுகும் காலை - அவ்வாறு அணுகிய போது, மகோதரன் - மகோதரன், மூண்டு

எழு வெகுளியோடு - (தன்னுள்) பொங்கி எழுகின்ற கோபத்தோடு, (சாரதியை நோக்கி) முனிந்து - கோபித்து, 'தேரை - உன் தேரை, முட்டத் தூண்டுதி-(இராமன் தேரை) முட்டுமாறு தூண்டுவாயாக' என்றான் - என்று சொல்ல, சாரதி - தேர்ப்பாகன், தொழுது - (மகோதரனைத்) தொழுது, சொன்னான் - பின்வரும் சொற்களைச் சொன்னான்.

அவன் சொன்னவை அடுத்த செய்யுளில் காணலாகும். மீண்டவன் என்று தொடங்குவதால், இச் செய்யுள் அந்தாதித் தொடையாகும். பாணி - பக்கம்; இடமும் ஆம். விலகு, விலங்கு என்றாயிற்று. இலக்குவன்மீது எழுந்தவன், இடையே இராம பிரானை எதிர்ப்பட, அவன் தேரின்மீது மோதுமாறு தன் சாரதிக்குக் கட்டளையிட்டான் மகோதரன் என்க.

பி - ம். 1. பாங்கரின் விலங்கா.
2. தெய்வத் தேரை யணுகிய.
3. முனைந்த துட்டி; வெகுளி பொங்க.
4. தொழுது சொல்லும், சொல்வான். 10

சாரதி மகோதரனை எச்சரித்தது

3653. எண்ணருங் கோடி வெங்க
ணிராவண ரேயு மின்று
நண்ணிய பொழுது மீண்டு
நடப்பரோ கிடப்ப தல்லால்
அண்ணறன் தோற்றங் கண்டா
லையநீ கமல மன்ன
கண்ணனை யொழிய விப்பாற்
செல்வதே கரும மென்றான்.

(அப்பொழுது சாரதி மகோதரனை நோக்கி), 'ஐய - ஐயனே! அண்ணல் தன் - பெருமையுடைய இராமபிரானின். தோற்றம் - தோற்றத்தை, கண்டால் - கண்களாற் பார்த்து விட்டால், (ஓர் இராவணன் அல்லாமல்), எண் அரும் கோடி வெங்கண் இராவண ரேயும் - எண்ணுதற்கு அருமையான கோடி எண்ணுள்ள கொடிய

கண்களையுடைய இராவணர்களே ஆனாலும், இன்று நண்ணிய பொழுது - இன்று (இராமபிரானை) நெருங்கியபோது, கிடப்பது அல்லால்-இறந்து கிடப்பதே அல்லாமல், மீண்டு நடப்பரோ-(மேலே எழுந்து) நடப்பார்களோ?' (நடவார்); (ஆதலால்), நீ - நீ, கமலம் அன்ன கண்ணனை - தாமரை மலர் போன்ற கண்களையுடைய இராமபிரானை, இப்பால் ஒழிய - இப் பக்கத்தில் விட்டுவிட்டு, செல்வதே - (வேறு வழியிற்) செல்வதே, கருமம் - காரியமாகும்' என்றான்.

'அம்புயம் அனைய கண்ணன்' (9) என்று இராவணன் கூறிய வாறே இங்குச் சாரதியும் 'கமல மன்ன கண்ணன்'; என்கிறான். கிடப்பது - மாண்டு கிடப்பது. இராவணனுக்கும் மகோதரனுக்கும் விளங்காத இராமபிரானின் ஆற்றல், சாரதிக்குப் புலனானமை அவன் மனம் ஆணவமாகிய மாசற்ற நிலையில் நின்றமையால் என்க.

பி - ம். 1. இராவணரேயு மீண்டு, இராவணரேயு மின்னம்.

2. நண்ணினபோது.

4. அப்பாற் போவதே கருமம்; போதலே கருமம், பொருவதே கருமம்.

## மகோதரன் போரிட்டு முடிதல்

3654. என்றலு மெயிற்றுப் பேழ்வாய்
மடித்தெடா வெடுத்து நின்னைத்
தின்றனெ னெனினு முண்டாம்
பழியெனச் சீற்றஞ் சிந்தும்
குன்றன தோற்றத் தான்றன்
கொடிநெடுந் தேரி னேரே
சென்றதவ் விராமன் திண்டேர்
விளைந்தது திமிலத் திண்போர்.

என்றலும் - என்று சாரதி கூறலும், (மகோதரன்) எயிறு பேழ்வாய் மடித்து - (கோரப்) பற்களைக் கொண்ட பிளந்த தன் வாயை மடித்துக் கொண்டு, (அவனை நோக்கி) 'எடா - அடே! நின்னை - இவ்வாறு என்னிடம் பேசிய உன்னை, எடுத்து - வாரி,

தின்றனென் - உண்டேன், என்னினும்-என்றாலும், பழி உண்டாம்- (சாரதியைத் தின்றனன்) என்ற பழிச்சொல் எனக்கு உண்டாகும்; (ஆதலால், நான் அவ்வாறு சொல்லவில்லை);' என் - என்று, சீற்றம் - கோபத்தை, சிந்தும் - கீழே சிதறிவிடும், குன்றன தோற்றத்தான் தன் - குன்று போன்ற தோற்றத்தை உடைய மகோதரனுடைய, கொடி நெடு தேரின் நேரே - கொடிகள் கட்டிய நீண்ட தேரின் எதிரே, அ இராமன் திண் தேர் சென்றது - அந்த இராமபிரானுடைய வலிய தேர் சென்றது; (அதனால்) திமிலம் திண் போர் - முழக்கத்தையுடைய வலிய போரானது, விளைந்தது - உண்டாயிற்று.

மகோதரன் தன் தேர்ப்பாகன் தனக்கு நல்லறிவு கூறத் துணிந்தமையைப் பொருமல் அவனைத் தின்றுவிட முதலில் துணிந்து, அவ்வாறு செய்தால், தன் சாரதியையே தின்றான் என்ற பழி உண்டாகுமே என்றஞ்சி அவனை விடுத்தனன்.

பி - ம். 2. பழுதெனச் சீற்றஞ் சிந்தும்; சீற்றந் தீர்ந்துங்.

3. கொடிதடந் தேரினரே; குன்றன கொற்றந்துன்றன்; தோளினான்றன்,

12

3655. பொற்றடந் தேரு மாவும்
பூட்கையும் புலவு வாட்கைக்
கற்றடந் திரடோ ளாளு
நெருங்கிய கடல்க ளெல்லாம்
வற்றிய விராமன் வாளி
வடவனல் பருக வந்நா
ளுற்றவன் றடந்தே ரோட்டி
மகோதர னொருவன் சென்றான்.

(அப் போரில் மகோதரன் படையிலிருந்த) பொன் தடம் தேரும் - பொன்னாலான அகன்ற தேர்களும், மாவும் - குதிரைகளும், பூட்கையும் - யானைகளும், புலவு வாள் கை - புலால் நாற்றம் வீசும் வாள்களைக் கைகளிற் கொண்ட, கல் தடம் திரள் தோள் ஆளும் - கல் போன்ற அகன்ற திரண்ட தோள்களைக் கொண்ட

காலாட்களும், நெருங்கிய - (இந் நால்வகைப் படைகளால்) நெருக்கமுற்ற, கடல்கள் எல்லாம்-படைகளான கடல்கள் யாவும், அ நாள்-அன்று, இராமன் வாளி வடவனல் பருக - இராமபிரானின் அம்புகள் வடவைக் கனல் குடிக்க, வற்றிய - வற்றிப் போயின; (ஆதலால்), மகோதரன் - மகோதரன், உற்ற - தனக்குற்ற, வன் - வலிய, தடம் - விசாலமான, தேர் - தேரை, ஓட்டி - ஓட்டிக்கொண்டு, ஒருவன் - தனியனாக, சென்றான் - இராமபிரானின் அருகு சென்றான்.

இராமபிரான் அம்புகளால் மகோதரனின் சேனைகள் யாவும் அழிய, அவன் ஒருவனாக நின்ற இராமபிரான்மீது தன் தேருடன் போரிடப் புறப்பட்டான் என்பது இங்குக் கூறப்பெற்றது. சேனைகளாகிய கடல்கள் வாளிகளாகிய வடவனல் பருக வற்றிய - முற்றுருவகம்.

பி - ம். 1. இலங்கு வாட்கை, புலவும் வாட்கை.

2. திண்டோளாளு.

3. வற்றின ; பருகவென்றான்; பருக வன்றேன் ; பருகவென்றார்.

4. நடந்தேரோடு ; ஒருங்கு சென்றான். 13

3656. அசனியே றிருந்த கொற்றக்
கொடியின்மே லரவத் தேர்மேற்
குசையுறு பாகன் தன்மேற்
கொற்றவன் குலவுத் தோண்மேல்
விசையுறு பகழி மாரி
வித்தினன் விண்ணி னேடு
திசைகளுங் கிழிய வார்த்தான்
தீர்த்தனு முறுவல் செய்தான்.

(மகோதரன்), அசனி ஏறு இருந்த கொற்ற கொடியின்மேல் - (இந்திரனிடமிருந்து வந்த தெய்வத் தேரின்) பேரிடி எழுதப் பெற்றிருந்த வெற்றிக் ,கொடியின்மீதும், அரவம் தேர்மேல்-ஒலி மிக்க அந்தத் தேரின்மீதும், குசை உறு பாகன் தன்மேல் - கடிவாளத்தைக் (கையில்) கொண்ட பாகனை மாதலியின் மீதும், கொற்றவன் - வெற்றியோனான இராமபிரானின், குலவு - விளங்குகின்ற, தோள்மேல் - தோள்களின் மீதும், விசை உறு பகழி மாரி -

வேகம் நிறைந்த அம்பு மழையை, வித்திஞன் - விதை தெளிப் பதுபோல் தூவினன்; (மேலும்) விண்ணிஞேடு திசைகளும் கிழிய - வானமும் திசைகளும் கிழிந்து போகுமாறு, ஆர்த்தான் - முழக்கம் செய்தான்; தீர்த்தனும் - தூயவஞன இராமபிரானும், முறுவல் செய்தான் - புன்சிரிப்புச் செய்தான்.

இடிக்கொடி இந்திரனுக்குரியது; அது பாண்டியனுக்கும் உரியது; 'கொடிக் கண்ணிடியுரு மேந்திய தென்னவன்' (பெருந் தொகை. 888); அரவம் - ஒலி. குசை; கடிவாளம்; குதிரையின் வாய்க் கருவியிற் கோத்து முடியுங் கயிறு ஆகும். (வி. பாரதம். 16 ஆம் போர். 27; நெடுநல். 178, உரை). தீர்த்தன், இராமபிரா னுக்கு: ஆரணிய, 547; கிட்கிந்தா. 201, 450; சுந்தர. 677.

பி - ம். 1. அசனியன்றிருந்த கொற்றக் குசைகொள் வெம்பதகன்றன்.

2. குசைவிடுபாகன்; குசைதொடு பாகன்; குவவுத் தோள்மேல்.

3. பகழிமாரி விசினன்; மழையினு மும்மை விசினன்.

4. திசைமுகங் கிழிய; தீதுறும் முறுவல். 14

3657. வில்லொன்றாற் கவச மொன்றால்
விறலுடைக் கரமோ ரொன்றாற்
கல்லொன்று தோளு மொன்றாற்
கழுத்தொன்றாற் கடிதின் வாங்கி
செல்லொன்று கணைக ளையன்
சிந்தினன் செப்பி வந்த
சொல்லொன்றாய்ச் செய்கை யொன்றாய்த்
துணிந்தன வரக்கன் றுஞ்சி.

ஐயன் - இராமபிரான், ஒன்றால் வில் - தன் ஒரு கணையால் மகோதரனின் வில்லையும், ஒன்றால் கவசம் - ஒரு கணையால் அவ னுடைய கவசம், ஓர் ஒன்றால் - ஒவ்வொன்றால், விறல் உடை கரம் - வெற்றி பொருந்திய கை, ஒன்றால் - ஒரு கணையால், கல் ஒன்று தோளும் - மலையை ஒத்த தோளும், ஒன்றால் கழுத்து - மற்றொரு கணையால் கழுத்து (இவ்வாறு ஒவ்வோர் அம்பால் ஒவ்வோர் உறுப்புவீதம் அறும்படி), செல் ஒன்று கணைகள்

கடிதின் வாங்கி - செல்லுதல் பொருந்திய அம்புகளை விரைவில் எடுத்து, சிந்தினன் - வீசினன்; அரக்கன் - மகோதரனை அரக்கன், செப்பி வந்த சொல் ஒன்றாய் செய்கை ஒன்றாய் - இராவணனிடம் சொல்லி வந்த மொழி ஒன்றாகவும் செயல் மற்றொன்றாகவும் ஆகுமாறு, துஞ்சி துணிந்தனன் - இறந்து உடல் பிளவு பட்டான்.

செல் ஒன்று கணை - இடியை ஒத்த கணை என்றும் கூறுவர். 'சொல் ஒன்று, செய்கை ஒன்று' என்றது அவன் இராமபிரானைக் கொல்வதாகச் சொல்லிப் போர்க்கெழுந்து, தான் மாண்டதைக் குறித்தது. ஒவ்வோர் உறுப்பை ஒவ்வோரம்பு செலுத்தி அறுத்தது அவனைச் சித்திரவதை செய்யும் குறிப்பால் என்பது ஓருரை. கணை வாங்கி, என்றது, தூணியினின்று எடுத்ததைக் குறித்தது. கணையால்; வேற்றுமை மயக்கம். துஞ்சுதல் - இறத்தல்; துணிதல் - துண்டமாதல். மூல நூலில் மகோதரன் சுக்கிரீவனால் கொல்லப்பட்டான் என்று கூறப் பெற்றிருக்கிறது.

பி - ம். 1. வில்லுடைக் காமோ ரொன்றால்.

2. தோளுந் தாளுமோரொன்றால் கழுத்துமொன்றால்; தோளுந் தாளு மொன்றொன்றாற் கழுத்து மொன்றால்; கல்லென்ற தோளும்.

3. செல்லென்று கணை; கணையாலையன்; சிந்தினன் செப்பிய வழியே; சிந்தினன் செப்பிவந்த. 15

## இராவணன் இராமபிரான்மீது பொருதல்

3658. மோதரன் முடிந்த வண்ண
மூவகை யுலகத் தோடு
மாதிர மெவையும் வென்ற
வன்தொழி லரக்கன் கண்டான்
சேதனை யுண்ணக் கண்டான்
செலவிடு செலவி டென்றான்
சூதனு முடுகித் தூண்டச்
சென்றது துரகத் திண்டேர்.

மூவகை உலகத்தோடும் - மூன்று வகையான உலகங்களோடு, மாதிரம் எவையும் - திசைகள் எல்லாவற்றையும், வென்ற - வெற்றி

கொண்ட, வன் தொழில் அரக்கன் - வலிய செயல்களையுடைய இராவணன், மோதரம் முடிந்த வண்ணம் - மகோதரன் இறந்த தன்மையை, கண்டான் - கண்டான்; (அன்றியும்) சேதனை யுண்ண- (அவன்) வெட்டப்பட்டிருத்தலையும், கண்டான் - உணர்ந்தான்; (உடனே, அவன் தன் பாகனை நோக்கிச்) 'செலவிடு செலவிடு,' என்றான் - (தேரைச்) செலுத்து செலுத்து என்று வற்புறுத்தினான்; துரக திண் தேர் - குதிரை பூட்டிய வலிய தேரானது, சூதனும் - தேர்ப்பாகனும், முடுகித் தூண்ட - விரைந்து தூண்ட, சென்றது - வேகமாக முன்னேறிற்று.

சேதனை உண்ணக் கண்டான் என்பதற்கு 'இராவணன் தன் உணர்வு இழந்தான் என்று கூறுவாரும் உளர்; சேதனை - அறிவு; முடுகுதல் - விரைதல்; 'முடு கழலின் முந்துறுதல்' (பு. வெ. 3, 6) சூதன் - தேர்ப்பாகன். 'செலவிடு - பெருமான் பேரிலே தேர் செல்ல ஓட்டு' என்பது பழையவுரை.

பி - ம். 1. யுலக முற்றும், யுலகு முற்றும்.
2. மாதிரத்தோடு வென்றவன்; அரக்கன் றின்றான்.
3. சோதனையுண்ணக் கண்டான்; செலவிடு செலவிடென்ன; செலவிடு தேரையென்றான்.
4. முடுகத் தூண்டச். 16

## இராமபிரான் அரக்கச் சேனைகளை நீறுக்குதல்

3659. பனிப்படா நின்ற தென்னப்
பரக்கின்ற சேனை பாறித்
தனிப்படா னுகி னின்னந்
தாழ்கில னென்னுந் தன்மை
நுனிப்படா நின்ற வீர
னவனென்று நோக்கா வண்ணம்
குனிப்படா நின்ற வில்லா
லொல்லையி னூறிக் கொன்றான்.

(அப்பொழுது இராமபிரான் தன் உள்ளத்தில்), பனி படா நின்றது என்ன - (மூடு) பனி உண்டாகி நின்றது என்று சொல்லு

மாறு, பரக்கின்ற - விரிந்திருக்கிற, சேனை - (தன்) சேனைகள், பாறி - சிதறி, (தான்) தனிப்படான் ஆகின் - தான் மட்டும் தனியாக ஆகாத வரையில் இன்னம் தாழ்கிலன் - (இவ் விராவணன்) இன்னும் தாழ மாட்டான், என்னும் தன்மை - என்னும் நிலையை, நுனிப்படா நின்ற வீரன் - நன்ருக எண்ணியறிந்த வீரனுன இராமபிரான், அவன் ஒன்றும் நோக்கா வண்ணம் - (தன் செயல்) ஒன்றையும் அவன் கண்டறியாதபடி. குனிப்படா நின்ற வில்லால் - (தன்) வளைந்த வில்லால், ஒல்லையில் - விரைவில், (அச் சேனைகளை) நூறிக் கொன்ருன் - பொடியாக்கிக் கொன்ருன்.

பரந்து நின்ற சேனைக்கு மூடுபனி உவமை; சூரிய வெளிச்சம் பட்டவுடன் பனிப படலம் மறைந்தொழிவது போன்று, இராம பாணத்தால் அவ்வளவு சேனைகளும் மாய்ந்தொழிந்தன என்பது தொனி. பாறுதல் - சிதறுதல்; 'பாலி வானிற் காலொடு பாறி' (அகநா. 9), 'சேனைகளை ஒழித்து இராவணனைத் தனிக்கச் செய்ய வேண்டுமென்று கருதி, அவ்வாறே செய்தனன்' என்க, நுனித்தல் - எண்ணுதல். நூறுதல் - பொடியாக்குதல்.

பி - ம். 1. தனிப்படானுகி லுள்ளந் தாழ்கலன்; என்னினுள்ளந் தாழ்கிலன்.
2. நின்ற வள்ளல்; நின்ற வீரனவனென்று; நோக்காமுன்னம்.
3. ஒல்லெலன நூறி; குனிப்படா நின்ற காலத் துருமன்ன பகழி. 17

இங்கு பின்வரும் அதிகப் பாடல்கள் :—

வரம்படைத் துயர்ந்த வன்போர் வயப்படைத் தலைவ ரோடு
நிரம்பிய வெள்ளச் சேனை நிருதருங் களிறுந் தேரும்
மரம்படர் கானில் தீப்போல் வள்ளல்தன் பகழி மாரி
பொரும்படி யுடல்கள் சிந்திப் பொன்றின ரெவரு மம்மா. 1

பொங்கிய குருதி வெள்ளம் பொலிந்தெழு கடலிற் போகத்
தங்கிய பிணத்தின் குப்பை தடுத்தது சமர பூமி
யெங்கணுங் கவந்த மாட எய்தியங் கரக்கி மார்கள்
தங்கடங் கணவர்ப் பற்றித் தம்முட ருங்க ணீத்தார். 2

எழும்படை வெள்ள மெல்லா மிரண்டொரு கடிகை தன்னில்
களம்படைக் கமலக் கண்ணன் கடுங்கனல் பகழி மாரி
வளம்படச் சிலையிற் கோலிப் பொழிந்தவை மடித்தான் [கண்டாங்
குளங்கனல் கொளுத்தத் தேரி னுருத்தெதி ரரக்கன் [வந்தான.

## இராவணனுக்கு உண்டான தீ நிமித்தங்கள்

3660. அடல்வலி யரக்கற் கப்போழ்
தண்டங்க ளழுந்த மண்டும்
கடல்களும் வற்ற வெற்றிக்
கால்கிளர்ந் துடற்றுங் காலை
வடவரை முதல வான
மலைக்குலஞ் சலிப்ப மான
சுடர்மணி வலயஞ் சிந்தத்
துடித்தன விடத்த பொற்றோள்.

அப் போழ்து - அச் சமயத்தில், அடல் வலி அரக்கற்கு - மிக்க வலிமையையுடைய இராவணனுக்கு, அண்டங்கள் அழுந்த - அண்டங்கள் யாவும் தாழவும், மண்டும் கடல்களும் - பொங்கும் கடல்களும், வற்ற - நீரில்லாமற் போகவும், வெற்றி கால் - வெற்றியை யுடைய (ஊழிக்) காற்று, கிளர்ந்து - மேலெழுந்து, உடற்றும் காலை - வருத்தும்போது, வடவரை முதல ஆன - வடக்கேயுள்ள மலையான மேரு முதலிய, மலைக்குலம் - மலைக் கூட்டங்கள், சலிப்ப மான - அசைவனபோல, சுடர்மணி வலயம் சிந்த - ஒளிவிடும் மணிக ளழுத்திய வாகுவலயங்கள் சிதறுமாறு, இடத்த பொன் தோள் துடித்தன - இடப் பக்கத்திலுள்ள அழகிய தோள்கள் துடித்தன.

இது முதல் நான்கு கவிகள் அன்று போர்க்களத்தில் இரா வணனுக்கு உண்டான தீய நிமித்தங்களைக் கூறுகின்றனவாம். யுகாந்தப் பிரளயம் உண்டாகும்போது மேரு முதலியன சலிப்பன போல், இராவணனுடைய இடத் தோள்கள் துடித்தன என்பது கூறப்பெற்றது. பத்துத் தோள்களும் பத்து மலைகளுக்கு, 'இடத்தோள் துடிக்கப் பதிஇழப்பான என்றும், இடப் புருவம் துடிக்கப் பெரிய பொல்லாங்குப் பேச்சு உண்டாமென்றும், இடக்

கீழிமை துடிக்கின் துணைவருடன் இடர் பெறுவர் என்றும், இட முன்கை துடிக்கின் பயமும், இடப் புறங்கை துடிக்கின் பொல்லாங் கும், இடச் சிறுவிரல் துடிக்கின் நல்லுறவினர் சாவும், இட முதுகு துடிக்கின் அயலூர்ப்பிரயாணமும், இடதுவிலாத் துடிக்கின் இருந்த வீட்டை விட்டு வெளியேறலும், இடக் கணைக்கால் துடிப்பாற் சாவும், இட உள்ளங்கால் துடிப்பால் பிணியும் நிகழும் என்பது துடிநூல் அறிந்தோர் கூற்றுருகுமென்பர். (ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு).

பி - ம். 1. அரக்கற்கப்போது அண்டங்களெழுந்து, அழுந்து மண்டும்.
2. கடல்களுமற்ற.
3. சலிப்ப போன்று ; மலைகளும் சலிப்பமான.
4. சுடர்நிகர் இடத்துப் பொற்றேள். 18

## வேறு

3661. உதிர மாரி சொரிந்த துலகெலாம்
அதிர வான மிடித்த தருவரை
பிதிர வீழ்ந்த தசனி யொளிபெருக்
கதிர வன்றனை யூருங் கலந்ததால்.

உலகெலாம் - உலகம் முழுமையும், உதிர மாரி - குருதி மழை, சொரிந்தது-பொழிந்தது ; வானம்-மேகம், அதிர - (உலகமெல்லாம்) அதிர்ச்சி யடையுமாறு, இடித்தது - இடிகளை உண்டாக்கிற்று ; அசனி - இடியானது, அரு வரை பிதிர - அரிய மலைகள் பிதிர்ந்து போக, வீழ்ந்தது -(அம் மலைகள்மீது) விழுந்தது ; ஒளி பெரு கதிரவன் தனை - மங்கிய நிலையிலுள்ள சூரியனை, ஊரும் - ஊர் கோளும், கலந்தது - சேர்ந்து கொண்டது ; ஆல், அசை.

உதிரமாரி சொரி ; (ஒப்பு) : 'புண்டொடர் குருதியிற் பொழியும் போர் மழை' (சுந்தர. 376). 'அசனி - வெள்ளையிடி' என்பது ஒருரை. ஊர் - ஊர்கோள் ; - பரிவேடம். ஊர்கோள் துர்நிமித்தம் என்றது ; ஆரணிய. 431 அடிக்குறிப்புக் காண்க. 'பரிவேடம், கால

வருக்கன் உதயத்துச் சாரில் வட்டந் தலம்ழிவாம்' என்பது உள்ளமுடையான் என்பது ஓருரை காட்டும்.

பி-ம். 1, உதிரவாரி.
2. அதிரவாரி.
3. உதிர விழ்ந்த.
4. கதிரவன்றனி கலந்தவால். 19

3662. வாவும் வாசிக டுங்கின வாங்கலில்
ஏவும் வெஞ்சிலை நாணிடை யிற்றன
நாவும் வாயு முலர்ந்தன நாண்மலர்ப்
பூவின் மாலை புலால்வெறி பூத்தவால்

(இராவணனுடைய) வாவும் வாசிகள் - தாவிப் பாயும் குதிரைகள், தூங்கின - (இரதங்களிற் கட்டிய நிலையிலேயே) தூங்கி நின்றன; ஏவும் வெம் சிலை - (அம்புகளைச்) செலுத்தும் கொடிய விற்கள், வாங்கலின் - (அவற்றை) வளைக்கும் காலத்தில், நாண் - கயிறு, இடை - இடையிலே, இற்றன - அறுந்து போயின; நாவும் வாயும் - அவனுடைய நாக்களும் வாய்களும், உலர்ந்தன - காய்ந்து போயின; நாள் மலர் - அன்று பூத்த மலர்களால் கட்டப்பெற்ற, பூவின் மாலை - பூமாலைகள், புலால் வெறி பூத்த - புலால் நாற்றத்தைத் தோற்றுவித்தன.

வாசி - குதிரை. வாங்குதல் - வளைத்தல்; வாங்கலில், என்பதற்குப் பின் வாங்குதலில்லாத என்றும் பொருள் கூறுவர். ஏவுதல் - பிரயோகித்தல். பூவின் மாலை புலால் வெறி பூத்தல்; (ஒப்பு): 'முடியின் மாலைகள் புலாலொடு முழுமுடை நாறும்'. (ஆரணிய. 433).

பி-ம். 1. வாயும் வாசி நடுங்கின; வாங்கலில்; ஓங்கயில்.
2. நாணிடை யற்றன.
4. பூத்ததால். 20

3663. எழுது வீணைகொ டேந்து பதாகைமேல்
கழுகுங் காகமு மொய்த்தன கண்கணீர்
ஒழுகு கின்றன வோடிக லாடன்மாத்
தொழுவில் நின்றன போன்றன சூழிமா.

எழுது வீணை கொடு - வரையப் பெற்ற வீணையைச் (சின்னமாகக்) கொண்டு, ஏந்து - (அதனைச்) சுமந்து நிற்கின்ற, பதாகை மேல் - (இராவணனின்) கொடிமீது, கழுகும் காகமும் மொய்த்தன - கழுகுகளும் காகங்களும் (நெருக்கமாக) அமர்ந்திருந்தன ; ஓடு - ஓடும் இயல்புடைய, இகல் - போர்க்குரிய, ஆடல்மா - குதிரைகளின், கண்கள் - கண்களினின்று, நீர் - கண்ணீர், ஒழுகுகின்றன - ஒழுகுவனவாயின ; சூழிமா - முகபடாங்களையுடைய களிறுகள், தொழுவில் நின்றன போன்றன - கூடுகளில் (அடைபட்டு) நின்றன போன்று அடங்கியிருந்தன.

இராவணனுக்கு வீணைக் கொடி ; 'கொடியின் மேலேறு வீணையும்' (34) ; தொழு - காட்டு மிருகங்களை அடைக்கும் கூடு 'தொழு - கொப்பம்' என்பது ஒருரை ; கொப்பம்-யானை பிடிப்பதற்காக வெட்டும் பெருங் குழி ; 'கைம்மலை செல் கொப்பத்து வீழ' (குமர. பிர. மீனுட்சிப்பிள்ளை. 11) ; இம்மூன்று பொருள்களுள் எதுவும் இங்கு ஏற்கும். இழுகு வீணை என்றும், ஒழுகு வீணை என்றும் பாடபேதங்கள் உள்ளன. 'இசையில் எதிரில்லாததனால் வீணை இராவணனின் விருதுக் கொடி ஆயிற்றென்பர். 'தலையால் செய்த வீணைக்கொடி என வான்மீகம் கூறும்' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

பி - ம். 1. இழுகும், இழுகு, ஒழுகுவீணை.
2. கழுதுங்.
3. ஓடிள வாடன்மாத்.
4. தொழுது நின்றன.



## துன்னிமித்தங்களை மதியாமல் இராவணன் போர் தொடங்குதல்

3664. இன்னவாகி யிமையவர்க் கின்பஞ்செய்
துன்னி மித்தங்கள் தோன்றின தோன்றவும்
அன்ன தொன்று நினைந்தில னுற்றுமோ
என்னை வெல்ல மனித்தனென் றெண்ணுவான்.

இமையவர்க்கு இன்பம் செய் - தேவர்களுக்கு இன்பத்தைச் செய்கின்ற, துன் நிமித்தங்கள் - கெட்ட சகுனங்கள், இன்ன ஆகி - இப்படிப்பட்டன ஆகி, தோன்றின - (இராவணன் முன்னே) புலப்பட்டன; தோன்றவும் - (அவ்வாறு அவை) புலப்படவும்; 'என்னை வெல்ல மனித்தன் ஆற்றுமோ - என்னை வெல்வதற்கு மனிதன் ஆற்றல் உடையவன் ஆவானோ?' என்று எண்ணுவான் - என்று நினைப்பவனாய், அன்னது ஒன்றும் - அவற்றுள் ஒன்றையும், நினைந்திலன் - அவன் பொருட்படுத்தினானில்லை.

இமையவர்க்கு இன்பம் செய் துன்னிமித்தம் என்றது, இராவணனுக்கு விளையும் துன்பமெல்லாம் தேவர்க்கு இன்பமாக விளையுமாதலால் என்க.

பி - ம். 1. இன்ன தன்மை.

2. தோன்றின, தோன்றிட.

3. அன்னவொன்றும்; அன்னதன்மை; அறிந்தில னாற்றுமோ; உணர்ந்தில னாற்றுமோ; நினைத்திவ னாற்றுமோ; நினைத்தில னாற்றுமோ.

4. வல்ல மனித்தன்; மனிதனெண்ணுவான். 22

3665. வீங்கு தேர்செலும் வேகத்து வேலைநீர்
ஒங்கு நாளி னொதுங்கு முலகுபோல்
தாங்க லாற்ற கிலார்தடு மாறித்தாம்
நீங்கி னாரிரு பாலு நெருங்கினார்.

வேலை நீர் ஒங்கு நாளின் - கடல் நீர் பெருகி வரும் (ஊழிக்) காலத்தில், ஒதுங்கும் உலகு போல் - இரு பக்கங்களிலும் ஒதுங்கிக் கொள்ளும் நிலத்தைப் போல, இருபாலும் நெருங்கினார் - போர்க்களத்தில் இரு பக்கங்களிலும் நெருக்கமாகக் கூடினவர்கள், வீங்கு - வேகம் மிகுந்த, தேர் - (இராவணனுடைய) தேர், செலும் வேகத்து - செல்லும் வேகத்தினாலே, தாங்கல் ஆற்றகிலார் - (அவ் வேகத்தை) எதிர்த்து நிற்க வலிமையற்றவராகி, தடுமாறி - நிலைகெட்டு, (இரு பாலும்) நீங்கினார் - (இரண்டு பக்கங்களிலும்) ஒதுங்கிக் கொண்டனர்.

இரு பாலும் என்பது, ஈரிடங்களிலும் கூட்டப் பெற்றது. ஒதுங்குதல் - பின்னிடுதல்; கடல் பெருகினால் நிலம் அதனால் விழுங்கப் பெறுமே அன்றி, நிலம் ஒதுங்குவதில்லை; எனினும்

அவ்வாறு கூறியது உபசாரம். ஸ்ரீமத் கம்பராமாயண வசனத்தில், 'உகாந்தத்தில் யாவும் பசையறக் காய்கின்ற சூரியனுடைய வெப்பத்தைச் சகிக்கமாட்டாமல் ஒதுக்கிடத்தைத் தேடி தத்தளிப்பதுபோல, இரண்டு பக்கத்துச் சேனைகளும் தாங்கள் அணியணியாக நெருங்கியிருந்த நெருக்கம் குலைந்து சிதறிப் போயின' என்று இப் பாடலுக்கு வசனம் அமைக்கின்றது.

பி - ம். 1. வேகத்தின் வேலைநீர்.

2. நாளுக்கொதுங்கும் ; ஒதுங்கு முலகென.

3. ஆற்றகலார் ; தடுமாற்றத்தார், தடுசாற்றத்தர் ; தடுமாற்றத்தான்.

4. இருகாலும் ; நெருக்கினர். 23

## போர்

3666. கரும முங்கடைக் காண்குறு ஞானமும்
அருமை சேரு மவிஞ்சையும் விஞ்சையும்
பெருமை சால்கொடும் பாவமும் பேர்கலாத்
தரும மும்மெனச் சென்றெதிர் தாக்கினர்.

(அப்பொழுது இராவணனும் இராமபிரானும்), கருமமும் - கருமமும், கடை - (யோக முயற்சிகளின்) இறுதியிலே, காண்குறு - தோன்றும், ஞானமும் - ஞானமும் (போன்று), அருமை சேரும் அவிஞ்சையும் - இன்மையைச் சேரும் அவித்தையும், விஞ்சையும் - (பிரம) வித்தையும் (போன்று), பெருமை சால் - அளவிற் பெரிய தன்மை பொருந்திய, கொடும் - கொடிய, பாவமும் - பாவமும், பேர்கலா - (தம் தன்மையிலும் பயன்களிலும்) மாறுதலில்லாத, தருமமும் - அறம் (போன்றும்), என - என்று சொல்லுமாறு, எதிர் சென்று தாக்கினர் - ஒருவர் எதிர் மற்றொருவர் சென்று எதிர்த்தார்கள்.

இராவணனைக் கருமம், அவிஞ்சை, பாவம் ஆகிய மூன்றிற்கும் இராமபிரானை ஞானம், விஞ்சை, தருமம் ஆகிய மூன்றிற்கும் உவமையாக்கி, அவ்விருவருடைய எதிர்ப்பு இவற்றின் எதிர்ப்புப் போலவும் ஆயிற்று என்றனர். இதனால் இரு திறத்தாரின் வலியும், இறுதியில் இவர்களுள் வெல்பவர் யாவர் என்பதன்

குறிப்பும். காட்டப் பெற்றமை காண்க. கருமம், காம கருமம், நிஷ்காமிய கருமம் என இரு வகையாயினவற்றுள் இங்குக் குறிக்கப் பெற்றது காம கருமத்தை எனவும் இதனால் விளைவன வினைகள் என்றும் அறிக. ',பொங்கிமுற் றியவுணர்வு புணர்தலும் புகையி னெடு, பங்கமுற் றனையவினை பரிவுறும்' (கிட்கிந்தா. 42) என்று ஆசிரியர் கூறியதும் காண்க. கருமம் என்பதற்குக் கரும யோகம் என்றும் பிறவாறும் பொருள் கூறுவர்; கருமத்தினும் ஞானமே சிறந்தது என்பதை நிரூபிக்க வரலாறுகளும் உண்டென்பர். அவித்தை - அஞ்ஞானம்; ஞானம் - பிரமஞானம். பெருமை சார் பாவம் - பாவம் அளவிற் பெரியது என்பது சுட்டப் பெற்றது. 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' (சுந்தர. 190) என்பது போன்று, அறத்தின் மறுதலையாகப் பாவத்தைக் கூறுதல் மரபு. போகலாத் தருமம், என்றதால் தருமத்தின் இயல்பு கூறப் பெற்றது. இனிவரும் 3 செய்யுட்களும் இவ்வாறே இருவர்க்கும் உவமை கூறும்.

பி - ம். 1. கருமமுங் கடைக் கண்ணுறு.

2. நவ விஞ்சையும்.

3. பெருமைசால் நெடும்; சார்பெரும் பாவமும்; பேர்கிலாத். 24

3667. சிரமொ ராயிரந் தாங்கிய சேடனும்
உரவு தோற்றத் துவணத் தரசனும்
பொரவெ திர்ந்தனர் போலப் பொலிந்தனர்
இரவு நண்பக லென்னவு மாயினர்.

ஓராயிரம் சிரம் தாங்கிய சேடனும் - ஓர் ஆயிரம் தலைகளைக் கொண்ட ஆதிசேடனும், உரவு தோற்றத்து உவணத்து அரசனும் - வலிய தோற்றத்தினையுடைய கருடராஜனும், பொர - தம்முள் போர் செய்ய, எதிர்ந்த போல - எதிரெதிரே நின்றவர் போல, பொலிந்தனர் - (அவ்விருவரும்) விளங்கினார்கள்; (அன்றியும், இரவும் நண்பகல் என்னவும் ஆயினர் - ஓர் இரவும் ஒரு நடுப்பகலும் என்று சொல்லுமாறும் அவர்கள் ஆனார்கள்.

இச் செய்யுளில் இராவணனை ஆதிசேடனாகவும், இரவாகவும் கூறி இராமபிரானைக் கருடனாகவும் நண்பகலாகவும் கூறினர். கருடனுக்கும் நாகர்களுக்கும் பகைமை யுண்டென்பதைச் சுந்தர. 22, 32, 43 செய்யுள்களின் விளக்கக் குறிப்புக்களிற் காண்க.

பி - ம். 2. உவணற் கரசனும்.
3. பொரவு டன்றனர் போலப் பொருந்தினர்.
4. நன்பக லும்மென லாயினர். 25

3668. வென்றி யந்திசை யானை வெகுண்டுட
னொன்றை யொன்று முனிந்தவு மொத்தனர்
அன்றி யுந்தர சிங்கமு மாடகக்
குன்ற மன்னவ னும்பொருங் கொள்கையார்.

வென்றி அம் திசை யானை - வெற்றியையுடைய அழகிய திசையானைகளுள், ஒன்றை ஒன்று வெகுண்டு - ஒன்றை பிறிதொன்று கோபித்து, உடன் முனிந்தவும் - ஒருமிக்க வெறுத்து நின்றவற்றையும், ஒத்தனர் - (அவர்கள்) ஒத்திருந்தார்கள் ; அன்றியும் - அல்லாமலும், ஆடகம் குன்றம் அன்னவனும் - பொன்மலை போன்ற இரணியனும், நரசிங்கமும் - நரசிங்கமூர்த்தியும், பொரும் கொள்கையார் - போரிட்ட கொள்கையை (இங்கு இவ்விருவரும் தம்முள் ஆக்கிக்) கொண்டனர்,

இச்செய்யுள் இராவணன், இராமபிரான், இருவரையும் முதலில் இரு திசையானைகளாகக் கூறிப் பின் இராவணனை இரணியனாகவும், இராமபிரானை நரசிங்கமாகவும் அமைத்தனர். நரசிங்கம், குன்ற மன்னவன் இப்பெயர்களைப் பொருளமைதி நோக்கி இடம் மாற்றிப் பொருள் கூறப்பெற்றது.

பி - ம். 1. வெகுண்டன, வெகுண்டென.
2. முனிந்தன வொத்தனர்.
3. சிங்கமு மாதியாம், ஆதிமாக்.
4. பன்றியும் பொருமாறன்ன பண்பினர் ; பொரநின்றன்ன பண்பினர் ; பன்றியு மெனவாயினர் பண்பினல். 26

3669. துவன வில்லின் பொருட்டொரு தொல்லைநாள்
எவன வில்வலித் தென்றிமை யோர்தொழப்
புவன மூன்றும் பொலங்கழ லாற்றொடும்
அவனு மச்சிவ னும்மென லாயினர்.

தொல்லை ஒரு நாள் - பழங்காலத்து ஒரு நாள், துவன வில்லின் பொருட்டு - முழக்கம் நிறைந்த (இரண்டு) விற்களின் காரணமாக, இமையோர் - தேவர், 'எவன வில் வலித்து - எவனுடைய (கையிலுள்ள) வில் வலிமையுடையது, என்று தொழ - என்று (அறிய வேண்டி) வணங்க, (அவ்வலிமையைக் காட்ட அவர்கள் சண்டையிட்டபோது), புவன மூன்றும் - மூன்று உலகங்களையும், பொலன் கழலால் தொடும் - பொன்னாலாகிய வீரக்கழல் அணிந்த தம் திருவடிகளால் தொட்ட, அவனும் - அந்தத் திருமாலும், அ சிவனும் - அந்தச் சிவபிரானும், எனல் ஆயினர் - என்று கூறப்பெறும் நிலையினர் ஆனார்கள்.

இங்கு இராவண இராமர்கள் முன்னொருகால் மயன் படைத்த இரு விற்களுள் எது வலிவுடையது என்று அறியும்பொருட்டுத் தேவர்களின் வேண்டுகோளால் நான்முகன் அவ்விரு கடவுளர்க்கும் கலகம் மூட்டிவிட, அவற்றுள் ஒவ்வொன்றைத் தம் கைகளில் எடுத்த திருமாலும் சிவபெருமானும் அவற்றைக்கொண்டு நெடுநேரம் போரிட்டனர் என்றும், அப்பிணக்கில் சிவபிரான் கொண்ட வில் சிறிதளவு இற்றதென்றும் பாலகாண்டம் பரசுராமப் படலம் செய்யுட்கள் 26—29 கூறுவன காண்க. துவனம் - ஒலி; த்வன என்ற வடசொல்லின் திரிபு. கழலால் புவனம் தொடுதல் என்றது போரிட்டதைக் குறித்தது; 'இருவரு மிரண்டு வில்லு மேந்தின ருலக மேழும், வெருவரத் திசைகள் பேர வெங்கனல் பொங்க மென்மேல், செருமலை கின்றபோது' (பால. பரசுராம. 29) என்றமை காண்க. அவனும், அச்சிவன் என்பனவற்றுள் சுட்டுக்கள் உலகமறிந்த தன்மையைச் சுட்டின. முன் செய்யுளிற்போல உவமைகளை இடம் மாற்றிப் பொருள் கூறப்பெற்றது. இம்மூன்று செய்யுட்களால் போர் செய்தற்கு எதிர் எதிரே நின்ற இராவணனுக்கும் இராமபிரானுக்கும் ஏற்ற உவமைகள் கூறப்பெற்றமை

காண்க. சில சுவடிகளில் இதுவும் முன் செய்யுளும் தம்முள் இடம் மாறியுள்ளன.

பி - ம். 1. சுவண வில்லின், துவனி வில்லின்.

2. எவன வில்வலியென் றிமையோர் தொழ, எவன விசனென் பார் பொர வேற்றெறிர்; இமையோர் சொல. 27

## இராவணன் சங்கத்தொனி செய்தல்

3670. கண்ட சங்கர ஞன்முகர் கைத்தலம்
விண்ட சங்கத் தொல்லண்டம் வெடித்திட
அண்ட சங்கத் தமரர்த மார்ப்பெலாம்
உண்ட சங்க மிராவண னூதினன்.

கண்ட - (இராம இராவண போர்க்கள நிகழ்ச்சிகளை வானத்தி லிருந்து) கண்டு நின்ற, சங்கர நான்முகர் - சிவபிரானும் பிரம தேவனும், கைத்தலம் - (தங்கள்) கைகள், விண்டு - (அவற்றின் நிலையினின்று) நீங்கி, அசங்க - நடுங்கவும், தொல் அண்டம் - பழைமையான பிரமாண்டத்தில், வெடி - வெடிச்சத்தம், பட - உண்டாகவும், அண்டம் - விண்ணுலகில், சங்கத்து அமரர் தம் - தேவர் கூட்டத்தினது, ஆர்ப்பெலாம் - (களிப்பின் முழக்கங்களை யெல்லாம், உண்ட - (முன் திக்விஜய காலத்தில்) நீக்கிய, சங்கம் - சங்கினை, இராவணன் ஊதினன் - இராவணன் முழக்கினன்.

அண்டங்களுள் பிரமாண்டம் முற்பட்டதாகலின் அதனைத் தொல் அண்டம் என்றார். அசங்க, வெடிபட ஊதினன் என இயைக்க. வெளிபடுதல், பிளவுபடுதலும் ஆம். சங்கத்தமரர், அமரர்தம் சங்கம் எனக் கூட்டப்பெற்றது. இங்குத் திரிபு என்னும் சொல்லணி அமைந்துள்ளது காண்க.

பி - ம். 1. சங்கர நான்முகர்.

2. விண்டசங்கித்; வெடிபட, வெடிப்புற.

4. உண்ட சங்கை. 28

## திருமாலின் சங்கு தானே ஒலித்தமை

3671. சொன்ன சங்கின தோசை துளக்குற
என்ன சங்கென் றிமையவ ரேங்கிட
அன்ன சங்கைப் பொருமை யினலரி
தன்ன வெண்சங்கந் தானு முழங்கிற்றால்

அன்ன - அந்த (இராவணனுடைய), சங்கை - சங்கினைக் (கேட்டு), பொருமையினல் - (தான் கொண்ட) பொருமையினல், சொன்ன - மேலே சொன்ன, சங்கினது ஓசை - (இராவணனின்) சங்கினுடைய ஓசையே, துளக்குற - நடுங்கவும், இமையவர் - தேவர்கள், 'என்ன சங்கு என்று - (இது) என்ன சங்கு?' என்று, ஏங்கிட - ஏக்கமடையவும், அரி தன்ன - திருமாலினுடைய, வெண் சங்கம் தானும் - பாஞ்சசன்னியம் என்னும் வெள்ளை நிறத்து வலம் புரியும், முழங்கிற்று - (தானகவே) முழக்கஞ் செய்தது. ஆல்: அசை.

இராவணன் ஊதின சங்கினைக் கேட்டுத் திருமால் திருக் கரத்திலுள்ள சங்கானது பொருமைகொண்டு தானே முழங்க, அம் முழக்கத்தைக் கேட்டு இராவணனுடைய சங்கின் ஓசை நடுங் கிற்று; தேவர்களும் அஞ்சி இப்புதிய சங்கு யாது என்று வியந் தனர் என்பது இச்செய்யுளின் கருத்தாம். 'அரி தன்ன-பெருமாள் தன்னுடைய' என்பது ஓருரை. பெருமாளின் சங்கு பாஞ்ச சன்னியம் எனப்படும்; 'மன்னுகி நின்ற மதுசூதன் வாயமுதம் பன்னளு முண்கின்ருய் பாஞ்சசன்னியமே' என்பது நாச்சியார் திருமொழி 7 : 5. இச்செய்யுளால் திருமாலின் கைச்சங்கம் தானே முழங்கும் இயல்பினது என்பதை உணர்கின்ருேம்.

பி - ம். 1. சங்கின தோதை ; துளங்குற.
2. ஏங்குற.
3. பொருமையி னரியன்.
4. ஒண்சங்கந் தானும், வெண்சங்கு தானே, வெண்சங்கு தானும் முழக்கிற்ருல்.

## பஞ்சாயுதங்கள் அடிமை செய்யுமாறு வந்து அருகே நின்றமை

3672. ஐய னைம்படை தாமு மடித்தொழில்
செய்ய வந்தயல் நின்றன தேவரின்
மெய்ய னன்னவை கண்டிலன் வேதங்கள்
பொய்யி றன்னைப் புலன்றெரி யாமைபோல்.

ஐயன் - திருமாலின், ஐம்படை தாமும் - சக்கரம், சங்கம், கதை, வாள், வில் என்ற ஐந்து ஆயுதங்களும், அடி தொழில் செய்ய - (இறைவனுக்குத்) தொண்டு புரிய, வந்து - (பூவுலகிற்கு) வந்து, அயல் - பக்கத்திலே, நின்றன - (காத்து) நின்றன; (ஆனால்), வேதங்கள் - வேதங்கள், பொய்யில் தன்னை - பொய்யற்ற தன்னை, புலன் தெரியாமை போல் - (மானிடனாக அவதரித்து நின்ற நிலையில் அவனை) அறியாமைபோல, அன்னவை - அந்த ஐம்படைகளை, தேவரின் மெய்யன் - தேவர்களுக்குள் மெய்ப் பொருளாயுள்ள பிரான், கண்டிலன் - காணவில்லை.

'தானெடுத்த வேடத்தில் வேதங்கள் தன்னை எப்படி அறிய வில்லையோ, அப்படியே தானும் மனிதனென்று நடித்ததனாலே, தன்னைச் சூழ்ந்து நின்ற பஞ்சாயுதத்தையும் தான் அறிந்தா னல்லன்' என்பது பழையவுரை. ஐம்படை: சுதரிசனம் என்ற சக்கரம், பாஞ்சசன்னியம் என்ற சங்கு, கௌமோதகீ என்ற கதை, நாந்தகம் என்ற வாள், சார்ங்கம் என்ற வில் ஆகியவை. அடித்தொழில் - அடிமைத் தொழில். தேவரின் மெய்யன் என்றதால், தேவர்கள் அழியக்கூடியவர் என்பது தொனிப்பது காண்க. இச்செய்யுளால், இராமபிரான் தானெடுத்த இம்மானிடப் பிறப்பில் தன்னைத் தானறியாமல் நின்ற தன்மை குறிக்கப்பெற்றது. ஐம் படைகளுள் ஒன்றாகிய சங்கமே முன் செய்யுளில் முழங்கியதாகக் கூறப்பெற்றதாம். புலன் தெரிதல் - அறிந்து கொள்ளுதல்; வேதங்கள் பொய்ப்பில் தன்னைப் புலன் தெரியாமைபோல் என்ற உவமையின் பொருத்தம் இங்கு ஆராயத்தக்கது.

பி - ம். 1. ஐம்படை தானும்.
4. புறந்தெரி யாமைபோல், புலந்தெரி யாமையால்.

## மாதலி இந்திரன் சங்கை யெடுத்து ஊதுதல்

3673. ஆசை யும்விசும் பும்மலை யாழியும்
தேச மும்மலை யுந்நெடுந் தேவரும்
கூச வண்டங் குலுங்கக் குலங்கொள்தார்
வாச வன்சங்கை மாதலி வாய்வைத்தான்.

ஆசையும் - திக்குகளும், விசும்பும் - வானமும், அலை ஆழியும் - அலைகளைக்கொண்ட கடலும், தேசமும்-நாடுகளும், மலையும் - மலைகளும், நெடு தேவரும் - உயர்வுமிக்க விண்ணவர்களும், கூச - (அஞ்சிக்) கூச்சமடையவும், அண்டம் குலுங்க - அண்டம் பெயர்ந் தாடவும், குலம் கொள் தார் - கூட்டமாக (மலர்களைக் கொண்ட) மாலையையுடைய, வாசவன் சங்கை - இந்திரனுக்குரிய சங்கை, மாதலி - மாதலி என்ற தெய்வப்பாகன், வாய் வைத்தான் - தன் வாயில் வைத்து ஊதினன்.

குலம் - சிறப்பும் ஆம். இந்திரனுக்குரிய சங்கை மாதலி ஊத அப்பொழுது விளைந்தவை இச்செய்யுளிற் கூறப்பெற்றன.

பி - ம். 1. ஆழியின்.
3. குலுங்கிக் குலைந்திட. 31

இதன்பின் ஓர் அதிகப்பாடல்: (இதனைப்பற்றி, 'இப்பாடல் சில பிரதிகளில் இல்லை; இப்பாடல் இராமபிரானுக்குப் பெருமைக் குறைவு ஏற்படுகிறது' என்ற ஒரு குறிப்பு ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புப் புத்தகத்திற் காண்கிறது).

துமில வாளி யரக்கன் துரப்பன
விமலன் மேனியின் வீழ்வதன் முன்னமே
கமல வான்முக நாடியர் கட்கடை
அமலன் மேனியிற் றைத்த வனந்தமால்.

## தேர்க்குதிரைகளின் செயல்கள்

3674. சென்ற தேரொ ரிரண்டொடுஞ் சேர்த்திய
குன்றி வெங்கட் குதிரை குதிப்பன
ஒன்றை யொன்றுற் றெரியுக நோக்கின
தின்று தீர்வன போலுஞ் சினத்தன.

சென்ற-போக்களத்துக்குச் சென்ற, தேர் ஓர் இரண்டொடும் - (இராவணன், இராமபிரான் என்ற இருவரும் சென்ற) ஒப்பற்ற தேர்கள் இரண்டினேடும், சேர்த்திய - கட்டப்பெற்ற; குன்றி - குன்றிமணி போன்ற (சிவந்த) விழிகளைக் கொண்ட, வெம் கண் குதிரை - கொடிய பார்வைகளுடன் கூடிய குதிரைகள், குதிப்பன - குதிப்பனவாகவும், ஒன்றை ஒன்று உற்று - ஒரு பக்கத்திலுள்ள எதிர்ப் பக்கத்திலுள்ளனவற்றைப் பொருந்தி, எரி உக - நெருப்பைச் சிந்துமாறு (அமைந்த), நோக்கின - பார்ப்பனவாய், தின்று தீர்வன போலும் - (ஒரு பக்கத்திலுள்ளவை எதிர்ப் பக்கத்திலுள்ளவற்றை) தின்று ஒழித்துவிடும் (கருத்துக் கொண்டவை) போன்ற, சினத்தன - கோபத்தை உடையனவாயின-

'குன்றி வெம் கண் - குன்றி முத்துப்போன்ற விழி' என்பது பழையவுரை. குதிப்பன, நோக்கின, சினத்தின என்பனவெல்லாம் அவை தாம் நின்றவிடத்திலேயே நிகழ்த்தியவை. பின் மூன்றடிகளையும் முறை மாற்றிப் பொருள் கூறலும் ஆம்,

பி - ம். 1. இரண்டினுஞ் சேர்த்திய.
2. குன்றின்; குதிரை குனிப்பன.
3. எரியும் நோக்கின, எரியுற நோக்கின. 32

## தேர்க்கொடிகள் ஒன்ரேடொன்று மோதுதல்

3675. கொடியின் மேலுறை வீணையுங் கொற்றமா
இடியு னேறு முறையி னிடித்தன
படியும் விண்ணும் பரவையும் பன்முறை
முடியு மென்பதோர் மூரி முழக்கினல்.

கொடியின் மேல் உறை - (இராவணனின்) கொடியின்மீது தங்கியுள்ள, வீணை - வீணையும், கொற்றம் - வெற்றியையுடைய, மா இடியின் ஏறும் - (இராமபிரான் தேரின்மீதுள்ள கொடியில் எழுதப் பெற்றுள்ள) சிறந்த இடியும், படியும் - பூமியும், விண்ணும் - வானும், பரவையும் - கடல்களும், முடியும் - அழிந்துவிடும், என்பது - என்று கூறத்தக்க, ஓர் மூரி முழக்கினல் - ஒரு (மிக)

வலிய முழக்கத்துடன், முறையின் - மாறிமாறி, பன்முறை இடித்தன - பலதடவைகள் ஒன்றோடொன்று மோதின.

இராவணன் கொடி வீணை: 'எழுது வீணைகொ டேந்து பதாகைமேல்' (யுத்த. 3663). இராமபிரான் ஏறியிருந்த தேரின் கொடி இடி: 'அசனியே றிருந்த கொற்றக் கொடியின்மேல்' (யுத்த. 3656); இவ்விரண்டு கொடிகளில் எழுதப்பெற்றவை. இடித்தல் - மோதல்; தாக்குதலும் ஆம். முறையின் இடித்தல் - 'பணிமுறை மாறி' (சுந்தர. 144) என்ற விடத்திற்போல, 'மாறி மாறி' இடித்தலைக் கொண்டது என்க. மூரி - வலிமை. முழக்கு - ஒலி. கொடிகள் இடித்துக்கொண்டதால் உண்டான மூரி முழக்கினால் படி முதலியன முடியும் என்று கூறலாயிற்று என்பது குறிப்பு.

பி - ம். 2. முறையினிடித்தன.
3. பரவையும் பண்பற.
4. மாரி முழக்கென, முழக்கின, முழங்கின. 33

## வில்லொலிகளின் வருணனை

3676. ஏழு வேலையு மார்ப்பெடுத் தென்னலாம்
வீழி வெங்க ணிராவணன் வில்லொலி
ஆழி நாதன் சிலையொலி யண்டம்விண்
டூழி பேர்வுழி மாமழை யொத்ததால்.

வீழி - வீழிக்கனிபோன்ற, வெம் கண் - கொடிய கண்களை யுடைய, இராவணன் - இராவணனுடைய, வில் ஒலி - வில்லி னின்று எழுந்த ஒலியானது, ஏழு வேலையும் - ஏழு கடல்களும், ஆர்ப்பு எடுத்த என்னலாம் - முழங்கின என்று சொல்லுதற்கு ஒத்ததாயிருந்தது என்று கூறலாம், ஆழி நாதன் - சக்கரப்படை யைக் கொண்ட தலைவனான இராமபிரானுடைய, சிலை ஒலி - வில்லினின்று எழுந்த ஒலியானது, அண்டம் விண்டு - அண்டம் பிளக்கச்செய்து, ஊழி பேர்வு உழி - ஊழிக்காலம் பெயரும்போது, (அப்பொழுது உண்டாகும்), மா மழை ஒத்தது - பெரிய மேகங் களின் (இடி ஒலியை) ஒத்திருந்தது. ஆல்: அசை.

சிலை ஒலி அண்டத்தை விள்ளச் செய்தது; மழை ஒத்தது என்று கொள்க. மழை, இடியைக் குறித்ததால் ஆகுபெயர்.

பி - ம். 1. ஆர்ப்படுத்து.

4. போவுறு மாமழை; ஊழி யோவுழி; யொத்த, ஒத்தவால். 34

3677. ஆங்கு நின்ற வநுமனை யாதியாம்
வீங்கு வெஞ்சின வீரர் விழுந்தனர்
ஏங்கி நின்ற தலாலொன் றிழைத்திலர்
வாங்கு சிந்தையர் செய்கை மறந்துளார்.

(இவ்வொலிகளைக் கேட்டு), ஆங்கு நின்ற - அவ்விடத்திலே நின்ற, அநுமனை ஆதியாம் - அநுமன் முதலானவரான, வீங்கு வெம் சின வீரர் - பெருகுகின்ற கொடிய கோபத்தையுடைய வீரர், வாங்கு சிந்தையர் - ஓய்ந்த மனத்தை உடையவராய், ஏங்கி நின்ற தலால் - மனம் வாடி நின்றார்களேயல்லாமல், செய்கை மறந்துளார் - (தாம்) செய்யவேண்டிய செயல்களை மறந்து, ஒன்று இழைத்திலர் - ஒரு செயலும் புரியாமல், விழுந்தனர் - தரையிலே விழுந்தார்கள்.

வாங்குதல் - தாழ்தல்; இங்கு ஓய்தல் என்று பொருள் கொள்ளப் பெற்றது. அநுமனை; ஐ - சாரியை; அநுமன் ஆதியாம் என்றதால், மிகச் சிறந்த வீரர்களும் அவ்வொலிகளால் தாக்குண்டனர் என்பது காட்டப்பெற்றது. ஏங்கி நிற்றல்; மனம் வாடி இன்னது செய்வதென்று அறியாமல் நிற்றல்;

பி - ம். 1. அநுமனை யாதியாய், அநுமனை யாழியாய்.

2. வீரர் விழித்தனர்.

3. ஒன்று மிழைத்திலார்.

4. செம்மை மறந்துளார். 35

## தேவர்களின் செயல்

3678. ஆவ தென்னைகொ லாமென் றறிகிலார்
ஏவர் வெல்வரென் றெண்ணல ரேங்குவார்
போவர் மீள்வர் பதைப்பர் பொருமலால்
தேவ ருந்தங்கள் செய்கை மறந்தனர்.

தேவரும் - தேவர்களும், என்னை கொல் ஆவது ஆம் என்று - (இப்போர்) யாதாக முடியும் என்று, அறிகிலார் - அறிய மாட்டாத வராயும், ஏவர் வெல்வர் என்று எண்ணலர் - (இருவருள்) எவர் வெல்வர் என்று கருதக்கூடாதவராயும் (நின்று), ஏங்குவார் - மனம் வாடி. (அவர்கள்) தங்கள் செய்கை மறந்தனர் - தத்தம் தொழில்களையும் மறந்தவர்களாகி, பொருமலால் - (உள்ளம்) விம்முதலால், போவர் மீள்வர் பதைப்பர் - முன்னே செல்பவராகவும், மீள்பவராகவும், பதைபதைப்பு உற்றவர்களாகவும் ஆயினார்கள்.

போர்க்களத்தில் நின்ற வானர வீரர்களும், வானத்தில் நின்ற தேவர்களும், இராவணனும் இராமபிரானும் போரிடுதற்கு நெருங்கி நின்ற நிலையில் அடைந்த அச்சத்தையும் ஐயத்தையும் கூறினர்.

பி - ம். 1. ஆமென்றறைகுவர்.
2. என்னுவ ரேங்குவார்.
4. மறந்துளார். 38

இதன்பின் ஓர் அதிகப்பாடல் :— (இப்பாடல் சில சுவடிகளில் இல்லாமையாலும், இஃது இந்த இடத்திற்கொத்த பொருள் தொடர்பு இன்மையாலும், அதிகப் பாடலாகக் கொள்ளப் பெற்றது).

அதிகப்பாடல் :—

சேண வந்தர நோக்கலுந் திண்சரம்
பூண முந்தின சிந்தின பூமழை
காண வந்த கடவுளர் கையெலாம்
ஆண வந்துணை யாருள ராவரோ.

## இருவர் விற்களின் தோற்றம்

3679. நீண்ட மின்னொடு வானெடு நீலவில்
பூண்டி ரண்டெதிர் நின்றவும் போன்றன
ஆண்ட வில்லிதன் வில்லு மரக்கன்றன்
தீண்ட வல்லவ ரில்லாச் சிலையுமே.

ஆண்ட வில்லிதன் வில்லும் - தன் வில்லைக்கொண்டு எல்லா உலகங்களையும் ஆண்டுவரும் இராமபிரான் பிடித்த வில்லும், அரக்கன்தன் - அரக்கனின், தீண்ட வல்லவர் இல்லா சிலையும் - தொடுத்தற்கும் ஆற்றலுடையவர் (பிறர்) இல்லாத வில்லும், நீல வான் - நீல வானத்திலே (தோன்றும்), இரண்டு நெடுவில் - இந்திர விற்கள் இரண்டானவை, நீண்ட மின்னொடு பூண்டு - நீண்ட மின்னலாகிய (நாணுடன்) பூணப்பெற்று, எதிர் நின்றவும் போன்றன - எதிரெதிரே நின்றவற்றையும் ஒத்தன. ஏ, அசை.

இராம இராவணரின் விற்கள் எதிரெதிராக நின்றவை இரட்டை வானவிற்களை ஒத்திருந்தன என்கின்றார். அவற்றின் நாண்களுக்கு மின்னல்கள் உவமை. ஆண்ட வில்லி இராம பிரானுக்கு. இராம ராவணரின் விற்களைக் குறிக்குமிடத்து வில், சிலை என்ற சொற்களை மாற்றிக் கையாண்டு வருவது காண்க. தீண்டுதல் - தொடுதல்; இராவணனின் வில் பிறரால் தொடுத் தற்கும் இயலாத வலிமை வாய்ந்தது என்றதால், அதனை எடுத்து வளைப்பாரில்லை என்பது கூறப்பெற்றது. பாலகாண்டத்தில் சனகன் சபையிற் கொணர்ந்த வில்லைக் கண்டவர் 'சங்கொடு சக்கரந் தரித்த செங்கையச், சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டு வான், எங்குளன்' (பால. கார்முகப். 6) என்ற இடத்தில் தீண்டு வான் எங்குளன் என்று கூறியது காண்க. நீலவில் என்றது, நீலமேகத்தில் காணப்படுவதுபோல். இச்செய்யுளும் ஒரு சுவடியில் இல்லை.

பி - ம். 1. நீண்ட விண்ணொடு வானவில் நீடுநில; வானிடு நீலவில்; வானிடு நீண்டவில்.

2. நின்றன போன்றன.

4. வல்லரில்லாத, வல்லிரில்லாத; இல்லாச்சிலை. 37

## இராவணன் செய்த பெரு முழக்கம்

3680. அரக்க னன்றெடுத் தார்த்தன வார்ப்புமோர்
சிரிப்பு மாவிற் றெழிப்புமுண் டேகொலாம்
குரைக்கும் வேலையு மேகக் குழாங்களும்
இரைத் திடிக்கின்ற வின்றுமொ ரீறில.

குரைக்கும் வேலையும்-ஒலிக்கின்ற கடலும், மேக குழாங்களும், மேகக் கூட்டங்களும், இன்றும் - இன்றும் கூட, ஓர் ஈறு இல - ஒரு முடிவு இல்லாமல், இரைத்து - ஒலித்து, இடிக்கின்ற - இடித்தலைச் செய்கின்றன; (அவ்வாறு நிகழ்வது) அன்று - இராம இராவணப் போர் நிகழ்ச்சி அன்று, அரக்கன் - அரக்கனை இராவணன், எடுத்து ஆர்த்தன ஆர்ப்பும் - எடுத்து முழக்கிய முழக்கமும், ஓர் சிரிப்பும்-ஒப்பற்ற சிரிப்பொலியும், வில் தெழிப்பும்-வில்லினின்று (எழும்) பேரொலியும், (இன்னும்) உண்டே கொல் ஆம் - (இன்றும்) உண்டோ? ஆம், ஆசை.

ஆர்த்தல், குரைத்தல், இரைத்தல், இவையாவும் ஒரு பொருளன. அரக்கன் கடல் போன்று இரைந்து, இடிபோன்று முழக்கி நின்றான் என்பது கருத்து. இன்று அவை அவ்வரக்கனின் செயல்களோ என்று ஐயுறுத்தி நிற்கின்றன என்று கூறுகிறார். 'என்று மோரீறில - ஒரு காலமு மடியாத வானரக் கடலும் மேகமுமென அறிக' என்பது பழையவுரை. தெழித்தல் - ஒலித்தல்; 'தெழிக்கும் புறங் காட்டிடை' (தேவா. 462-4).

பி - ம். 1. ஆர்க்கின்ற வார்ப்புமற், ஆர்ப்புடை.

2. போர்பொருப்பு; உரப்புமோ விறெழிப்பு; உண்டோகொலாம்; உண்டென்பபோல்.

3. குரக்கு வேலையு மேகக் குழாங்களும்.

4. ஓரீறிலா.

38

## இராவணனின் சினம்

3681. மண்ணிற் காட்டுவ வானிடி யேற்றினம்
எண்ணிற் சூன்மழை யல்ல விராவணன்
கண்ணிற் சிந்திய தீக்கடு வெம்பொறி
விண்ணிற் செல்வன விண்ணின்று வீழ்வன.

வான் இடி ஏறு இனம் - வானத்தில் காண்கின்ற இடியேறுகளின் தொகுதிகள், மண்ணில் காட்டுவ - (அவை) பூமியிலும் தோன்றுவதன் (காரணத்தை), எண்ணின் - ஆராய்ந்தால்; (அவை) சூல் மழை அல்ல - கரு நிறைந்த மேகங்களினால் (உண்டானவை) அல்ல; (பின்பு அவை யாவையோ எனின்),

இராவணன் - இராவணன், (கோபத்தினால்) கண்ணின் சிந்திய - தன் கண்களினின்று கீழே சிந்திய, தீ கடு வெம் பொறி-நெருப்பை ஒக்கும் வெப்பமான பொறிகள், விண்ணில் செல்வன - வானத்தில் ஏறுவனவும், (அவையே) விண் நின்று வீழ்வன-வானத்தினின்று வீழ்வனவுமாம்.

முன் செய்யுளில் கடல், மேகம் இவற்றிற்குக் காரணம் அமைக்கிறார். இவை நற்குறிப்பேற்றம். அடுத்த செய்யுளும் காண்க. கடுத்தல் - ஒத்தல்; 'அவிரறல் கடுக்குமம்மென் கூந்தல்' (புறநா. 25, 13).

பி - ம். 1. மண்ணிற் செல்வன செல்லினு மாசற.

2. வண்ணிற் சூன்மழை ; சூன்மழை யன்றங் கிராவணன் ; சூன்மழை யில்ல விராவணன்.

3. சிந்தின திக்கடு வேகந்த.

4. வெந்தன ; மீண்டின்று விழ்வன. 39

## இராவணன் மருங்கிற் படைக்கலம் விளங்குதல்

3682. இக்க ணத்து மெறிப்ப தடித்தென
செக்கர் மேகத் துதிக்கும் நெருப்பெனப்
பக்கம் வீசும் படைச் சுடர் பஃறிசை
புக்குப் போகப் பொடிப்பன போக்கில.

பக்கம் - இராவணனுடைய பக்கங்களில், வீசும் - ஒளி வீசும், படை - ஆயுதங்களின், சுடர் - ஒளிப் பொறிகள், பல்திசை புக்கு போக - பல திசைகளிலும் புகுந்து செல்ல, பொடிப்பன - (அங்குள்ள யாவற்றையும்) சாம்பராக்கின ; போக்கில - தாம் அழியும் தன்மையைப் பெற்றன அல்ல; (அவை தாமே), இ கணத்தும் - இந்த நேரத்தில்கூட, செக்கர் மேகத்து-சிவந்த மேகத்தினிடத்து, உதிக்கும் - பிறக்கும், நெருப்பு என - (மின்னலாகிய) நெருப்பு என்றும், தடித்து என - (இசையாகிய) இடியென்றும், எறிப்ப - (உலகில்) வீசுவனவாயுள்ளன.

இச் செய்யுளின் பாடங்களும், உரைகளும் பலவாறு அமைந்துள்ளன. முன் இரண்டு பாடல்களின் பொருட்போக்கை ஒட்டி

இங்கு உரை கூறப்பெற்றுள்ளது. இஃது ஆராய்ச்சிக்கு உரியது. 'முன் சொன்ன, முழக்கமானது தடித்தும் நெருப்புப்போல மலைகளைப் பிளந்தது' என்பது பழையவுரை. இருபது கண்களினின்றும் எழுந்த அக்கினிப் பொறிகள் மின்னல்களைப் போலவும் இடி நெருப்புக்களைப் போலவும் பக்கங்களிற் பரவி, எதிர்ப்பட்ட பொருட்களைச் சாம்பராக்குவதன்றிச் சும்மா போவனவல்ல' என்பது கம்ப ராமாயண வசனம். சில சுவடிகளில் இச்செய்யுள் அடுத்த செய்யுளுக்கும் பிறகு காணப்பெறுகிறது.

பி-ம். 1. மெறிப்பத் தடித்தென ; தடிந்தன.
2. நெக்க மேகத் மேகத்துகுக்கும் ; மேகஞ்நுதிர்க்கும் ; உறிக்கும் நெருப்பல.
3. படர்சுடர் பஃறிசை ; படைக்கலம் பஃறிசை.
4. புக்கபோதப் ; பொடிந்தன போக்கில. 40

## இராவணன் வெகுளி நகை

3683. மால்க லங்கலில் சிந்தையின் மாதிரம்
நால்க லங்க நகுந்தொறு நாவொடு
கால்க லங்குவர் தேவர் கணமழைச்
சூல்க லங்கு விலங்கல் துலங்குமால்.

கலங்கலில் சிந்தையின் - கலங்கலில்லாத சிந்தையை உடைய, மால் - திருமால் போன்ற, நால் மாதிரம் கலங்க - நான்கு எல்லைகளும் கலக்கமடையும்படி, நகும் தொறும் - (இராவணன் தன் வெகுளியினால்) சிரிக்கும் போதெல்லாம், தேவர் - தேவர்கள், நாவொடு - தம் நாக்களும, கால் - கால்களும், கலங்குவர் - கலங்குவார்கள் ; சூல் - கருவையுடைய, கண மழை கலங்கும் - கூட்டமான மேகங்கள் கலங்கும் ; விலங்கல் - (திரிகூட) மலை, துலங்கும் - நடுங்கும் ; ஆல், அசை.

மாயவன் திருவுள்ளம் எப்படி அசையாதிருக்கும், அப்படி அசையாதிருக்கும் திக்கு நான்கும், என்பது இக்கவிக்குப் பயன். நகுதல் : வெகுளியாற் சிரித்தல் ; 'பகையே ....... வெகுளியுவகையென், றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப' (தொல். பொருள். 251); விலங்கல் : இலங்கை கட்டப்பெற்றுள்ள திரிகூடமலை. இச்செய்யுட்கு 'வசன நூல்' பின்வருமாறு உரை வகுக்கும் :—

'இராவணன் வாய்களைத் திறந்து வீராவேசத்தோடு சிரிக்குந் தோறும், ஸ்ரீராமமூர்த்தி ஒருவரே கலங்காத ஊக்கமுடையவரா யிருந்தனர்; மற்ற சதுர்த்திசைகளிலுள்ள யாவரும் ஒடுங்கினர்; சமஸ்த் தேவசமூகங்கள் சொற்கள் குழறிக் கால்கள் உதறின; மேகங்கள் தாங்கள் கொண்ட கருப்பங் கலங்குவன, இலங்கா நகரத்துள்ள அரக்கர்கள் கூட்டங்களும் திடுக்கிடும்'.

பி - ம். 1. சிந்தைய. சிந்தையன்.
2. நால்கலங்கும்; நகுந்தொறு நாளொடும்.
3. கால் கலங்குவ; தேவர்தங் கணமழை.
4. நூல்கலங்க லிலங்கல் துலங்குமால்; கலங்குமிலங்கை. 41

## இராவணனுடைய சினச் சொல்

3684. குற்றம் விற்கொடு கொல்லுதல் கோளிலாச்
சிற்றை யாளனைத் தேவர்தந் தேரொடும்
பற்றி வானிற் சுழற்றிப் படியின்மேல்
எற்று வேனென் றுரைக்கு மிரைக்குமால்.

'கோள் இலா - வலிமை யில்லாத, சிற்றையாளனை - சிறுவனை, விற்கொடு - (நம் கை) வில்லைக் கொண்டு, கொல்லுதல் - கொல்லுதலானது, குற்றம் - (நம் பெருமைக்குக்) குறைவாவதாகும்; (ஆதலால்) தேவர் தம் தேரொடும் - தேவர்களுக்குரிய தேரோடும், பற்றி - இவனைப் பிடித்து, வானில் சுழற்றி - வானத்தில் சுழலச் செய்து, படியின் மேல் - பூமிமீது, எற்றுவேன் - மோதுவேன்', என்று உரைக்கும் இரைக்கும் - என்று சொல்லிக் கூச்சலிடுவான். ஆல், அசை.

கோள் - வலிமை; 'கோள் வயிரக், கம்பம்' (ஆனிய. 95) சிற்றையாளன் - சிறுவன் (ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு). இரைத்தல் - ஒலித்தல்.

பி - ம். 1. கொற்றம் விற்கொடு; கொற்றம் பிறகொடு கொல்லுதல், கொற்றம் விற்கொடு கொள்ளுதல்.
2. சிற்றை யானின.
3. படியின்மிசை.
4. எற்றுகமென்று, இசைக்கு மிரைக்குமரி. 24

3685. தடித்து வைத்தன்ன வெங்கணை தாக்குற
வடித்து வைத்தது மானுடற் கோவலி
ஒடித்துத் தேரை யுதிர்த்தொரு வில்லொடும்
பிடித்துக் கொள்வன் சிறையெனப் பேசுமால்.

'தடித்து - இடியை, வைத்த அன்ன - அமைத்தது போன்ற, வெம் கணை - கொடிய அம்புகள், தாக்குற - தாக்க (அதனை ஏற்கும்) வலி - வலிமை, மானுடற்கோ வடித்து வைத்தது - மனிதனுக்கோ திருத்தமாகச் செய்து வைக்கப் பெற்றது? (அன்று); ஒடித்து - (அவ் வலியைத்) தகர்த்து, தேரை உதிர்த்து - தேரைச் சின்ன பின்னமாக்கி, ஒரு - ஒப்பற்ற, வில்லொடும் - அவனுடைய வில்லுடனே, (அவனை) சிறை பிடித்துக் கொள்வன் - சிறை பிடித்துக் கொள்வேன்' என பேசும் - என்று சொல்லுவான், ஆல், அசை.

பி - ம். 1. தடித்தி வைத்தன; வெங்கணை தாக்கற.
2. வடித்து வைத்தன்ன மானுடன் தோள்வலி, வடித்து வைத்தன மானுயர் தோள்வலி; மானிடர்க்கேவலி.
3. ஒடித்துந் தேரையுந் நிர்த்தொரு வில்லொடும்.
4. சிறையென்று பேசாயல், பேருமால்.

43

## வேறு

## போர்

3686. பதைக்கின்றதொர் மனமும்மழல்
படர்கின்றதொர் சினமும்
விதைக்கின்றன பொறிபொங்கின
விழியும்முடை வெய்யோன்
குதைக்குன்றென நிமிர்வெஞ்சிலை
குழையக்கடுங் கொடுங்காற்
றுதைக்கின்றன சுடுவெங்கணை
யுருமேறென வெய்தான்.

(இராவணன்), பதைக்கின்றது ஓர் மனமும் - நடுங்குகின்ற ஒரு மனத்தையும், அழல் படர்கின்றது ஓர் சினமும் - நெருப்பு பரவு

கின்றதான ஒரு கோபமும், விதைக்கின்றன - எல்லாத் திசைகளி லும் தூவுகின்ற, பொறி - நெருப்புப் பொறிகள், பொங்கின-பொங்கி யெழுந்த, விழியும் - கண்களும், உடை - பெற்ற, வெய்யோன் - கொடியோனான இராவணன், குதை - குதை என்னும் உறுப்பை யுடைய, குன்று என - மலை என்னுமாறு, நிமிர் - நிமிர்ந்து நின்ற, வெம் சிலை - கொடிய தன் வில், குழைய - வளைய, கடு கொடு காற்று - விரைந்து ஓடும் கொடிய காற்று, உதைக்கின்றன - செலுத்துகிற, உரும் ஏறு என - இடியேறு என்று சொல்லும்படி, சுடு வெம் கணை - சுடுகின்ற கொடிய அம்புகளை, (அச் சிலையி னின்று) எய்தான் - செலுத்தினான்.

'மனமும் சினமும் - எப்போது பொருவோம் என்று பதைத் துச் சிதைக்கின்றான்; முதனாளைப் போரில் தோற்றது போல இன்னும் பண்ணுவனோ என்று பதைக்கும் மனம்; பொருகிறோம் என்று வாயாற் சொல்லும்போது சினம்' என்பது பழையவுரை. குதைக் குன்று - இரு கழுந்து பெற்ற குன்று போன்ற சிலை; கழுந்து - விரல் முதலியவற்றின் திரண்ட நுனி; குதை - நாண் கட்டுதற்குரிய முடிப்பு; 'குதைவரிச் சிலைநுதல்' (பால. நகர. 49). விதைத்தல் - விதைகளைத் தூவுதல்; இங்கு, பொறிகள் சிதறின மையைக் குறித்தது. குழைதல் - வளைதல்; 'திண்சிலை குழைய' (நீளா. அரசியற். 319). உதைத்தல் - செலுத்தல்.

பி - ம். 1. மனமும் மிடை; படை பிடிக்கின்றதொர் சினமும்; மனதும் படை படிக்கின்றதொர்.
2. மிடை வெய்யோன்; விழியும்முள.
3. குதைக்கின்றன; குதிக்கின்றன குழையக் கடுங்காலால்; கொடுங் காலை.
4. சுடர் வெக்கணை; உதைக்கின்றனவென வெங்கணை. 44

3687. உருமொப்பன கனலொப்பன வூற்றந்தரு கூற்றின்
மருமத்தினு நுழைகிற்பன மழையொப்பன வானோர்
நிருமித்தன படைபற்றன நிமிர்வுற்றற வமிழ்தப்
பெருமத்தினை முறைசுற்றிய பெரும்பாம்பினும் பெரிய.

(இராவணன் எய்த அம்புகள்), உரும் ஒப்பன - இடிகளை ஒப்பன; கனல் ஒப்பன - நெருப்பை ஒப்பன; ஊற்றம் தரு

கூற்றின் - (உலகுக்கு) கேட்டினை விளைக்கும் இயமனுடைய, மருமத்தினும் - மார்பினும், நுழைகிற்பன - புகும் (ஆற்றல்) பெற்றன; மழை ஒப்பன - (பெருக்கத்தில்) மழை வீழ்ச்சியை ஒப்பன; வானோர் நிருமித்தன - தேவர்களால் படைக்கப் பெற்றன; படை - (எதிரிகளின்) படைக்கலங்கள், பற்று அற - பற்றுக்கள் அற்றுப் போகும்படி, நிமிர்வுற்றன - நிமிர்ந்து செல்வன; அமிழ்தம் பெரு மத்தினை - அமுதம் (எழுதற்காகப் பாற்கடலைக் கடைந்த) மத்தாகிய மந்தர மலையை, முறை - ஒழுங்காக, சுற்றிய - சுற்றிக் கட்டப் பெற்ற, பெரும் பாம்பினும் - பெரிய பாம்பாகிய வாசுகியை விட, பெரிய - உருவத்தில் பெரியன.

மருமம் - உயிர் நிலையும் ஆம். பாம்பு அம்புக்கு உவமை; இராவணன் பாணத்துக்கு வாசுகி.

பி - ம். 1. உருமொத்தன கனலொத்தன.
2. நுளைகிற்பன, நுழைகின்றன; மபைுயொப்பன.
3. படையுற்றன.
4. பெரும்பாம்பெனப் பெரிய. 45

3688. துண்டப்பட நெடுமேருவைத்
தொளைத்துள்ளுறை தொங்கா
தண்டத்தையும் பொதுத்தேகுமென்
றிமையோர்களு மயிர்த்தார்.
கண்டத்தெறு கணைமாரியை
கருணைக்கடல் கனகச்
சண்டச்சிலைச் சரங்கொண்டவை
யிடையேயறத் தடுத்தான்.

(இராவணன் விட்ட அம்புகள் ஒவ்வொன்றும்) நெடு மேருவை - நீண்ட மேரு மலையை, துண்டப்பட - பிளவு படுமாறு அதனை, தொளைத்து - துவாரம் செய்து, இறை - அற்பமும், உள் தொங்காது - உள்ளே நிலைத்து நிற்காமல், அண்டத்தையும் - உலக வுருண்டையையும், பொதுத்து - துளைத்து, ஏகும் என்று - செல்லும் என்று, இமையோர்களும் - தேவர்கள்கூட, அயிர்த்தார் - ஐய

முற்றூர்கள்; கருணை கடல் - கருணையில் கடல் போன்றவனான இராமபிரான், அ தெறு கணை மாரியை - அந்தச் சுடு அம்பு மழையை, கண்டு - பார்த்து, (தம்) சண்டம் - வலிமையுள்ள, கனகம் சிலை - பொன்னாலான வில்லிலிருந்து புறப்படும், சரம் கொண்டு - அம்புகளைக் கொண்டு, அவை இடையே அற - அவ்விராவணன் அம்புகள் நடு வழியிலேயே அற்றுப் போகுமாறு, தடுத்தான் - தடுத்து விட்டான்.

இறை - அற்பம்; 'இறையு ஞானமி லாதவென் புன்கவி' (கம்பராமா. சிறப்புப். 10) தொங்குதல் - நிலைத்து நிற்றல்; 'தொங் காது போலே யிருந்தது' (ஈடு. 2, 3, 7); தங்குதலும் ஆம். பொதுத்தல் - துளைத்தல். 'அண்டத்தைப் பொதுத் தப் புறத்தப் பினூலாடும்' (யுத்த. 133); தெறுதல் - சுடுதல்; 'நீங்கிற் றெறூஉம்' (குறள். 1104); சண்டம் - வலிமை; 'பல்லாயிர கோடி சண்ட தூணங்கள் போன்றன' (பாரத. காண்டவ. 38); கோபமும் ஆம். அறத்தடுத்தான், என்றிணைத்துப் பொருள் காணலாம்.

பி - ம். 1. துண்டப்படு தொளைத்துள்ளுறை; துணித்துள்ளுறை; துணிந்துள்ளிடைத் தொங்கா.
2. கண்டித்தவன் கணைமாரியை; கண்டத்தெறு கணைக்காற்றினை; கருணைக் கடல்வள்ளக்.
4. சண்டச்சர மழை கொண்டவை; சரஞ்சிலை கொண்டவையன்; முழுது மறத் தடுத்தான். 46

3689. உடையான்முயன் றுறுகாரிய
முறுதீவினை யுடற்ற
இடையூறுறச் சிதைந்தாங்கெனச்
சரஞ்சிந்தின விறலும்
தொடையூறிய கணைமாரிகள்
தொகைதீர்ந்தன துரந்தான்
கடைநாளுறு கணமாமழை
கால்வீழ்ந்தெனக் கடியான்.

உடையான் - ஒரு தலைவன், முயன்று உறு காரியம் - முயற்சி யுற்று (இயற்றும் ஒரு) செயல், உறு தீவினை - மிகக் கொடிய

(அவன்) வினைகள், உடற்ற - கெடுக்க, இடையூறு உற - (அவ் வினைகளுக்கு) இடையூறுகள் உண்டாக, சிதைந்த என - ஆங்கு ஆங்கே அவை அழிந்துபட்டன என்று சொல்லுமாறு, சரம் - (இராவணன் விடுத்த) அம்புகள், விறலும் சிந்தின - தம் வலிமை அழிந்தன; (ஆனால்) கடியான் - கொடியனான அவ்விராவணன், தொடை ஊறிய - (அம்புகளைத்) தொடுத்தலில் ஊற்றம் பெற்றவும், தொகை தீர்ந்தன - அளவு மிக்கனவும் ஆன, கணை மாரிகள் - அம்பு மழைகளை, கடைநாள் உறு - யுக முடிவு நாள்உறும், கண மாமழை - கூட்டமான கரிய மேகங்கள், கால் வீழ்ந்தென - கீழே இறங்கின என்னுமாறு, துரந்தான் - விடுத்தான்.

'ஒருவன் செய்த பயிர் அவன் வினையினாலே கரிந்தாப் போலப் பெருமாள் அம்பினாலே இராவணன் கணைகள் இற்றவுடனே பின்னும் துரந்தான்' என்பது பழையவுரை. தீவினை - பாவம். ஒருவன் எடுத்த காரியம் அவன் செய்த பாவத்தாலே இற்றொழியும் என்பது நீதி. தொடுத்தல் - அம்பு பூட்டுதல்; எய்தலும் ஆம். தொகை தீர்தல் - அளவு கடத்தல்; கணக்கறுதல். மேகம் கால் வீழ்தல் - மேகம் இறங்குதல்; 'ஓங்குகின்ற துளி கால்விழுதல் தவிர்ந்த உயர்ச்சியையுடைய அகன்ற பெரிய வானத்திடத்து' (பெரும்பாண். 291 - 2. நச். உரை).

பி - ம். 1. முயன்றுயர், முயன்றெரு; முதுதீவினை; தீருணையுற்றுங்; தீவினையுற்ற, தீவினையியற்ற.
2. இடையூறென; சிதைந்ததெனச்; சிந்தினனிறைவன், சிந்தினவிடலும்.
3. தீர்ந்தவை துரந்தான்; தீர்ந்தவன் துரந்தான்.
4. கடையூறுறு; கனல் மாமழை; கணை மாமழை; கடிவான். 47

3690. விண்போர்த்தன திசைபோர்த்தன
மலைபோர்த்தன விமையோர்
கண்போர்த்தன கடல்போர்த்தன
படிபோர்த்தன கலையோர்
எண்போர்த்தன வெரிபோர்த்தன
விருள்போர்த்தன வென்னே
திண்போர்த்தொழி லென்றுணையி
னுரிபோர்த்தவன் திகைத்தான்.

(இராவணன் எய்த அம்புகளின் பேரளவைக் கண்டு) ஆனை யின் உரி போர்த்தவன் - யானைத் தோலைப் போர்த்துக் கொண்ட சிவபெருமான், 'விண் போர்த்தன - (இராவணன் அம்புகள்) வானத்தை மூடிவிட்டன; திசை போர்த்தன - எல்லைகள் யாவற்றை யும் மூடி விட்டன ; மலை போர்த்தன - மலைகளையும் மூடி விட்டன ; இமையோர் கண் போர்த்தன - தேவர்களின் கண்களை மறைத்தன; கடல் போர்த்தன - கடல்களை மூடின ; படி போர்த்தன - பூமியை யும் மூடி விட்டன ; கலையோர் - கலையறிவுடையோர்களின், எண் - கணக்கை, போர்த்தன - மூடின ; எரி போர்த்தன - நெருப்புக்களை மூடின ; இருள் போர்த்தன - இருளுள்ள இடங்களையும் மூடிக் கொண்டன ; திண் - வலிய, போர்த் தொழில் இது - போர் முயற்சி யாகிய இச் செயல், என்றோ - யாதுதானோ ?' என்றான் - திகைத் தான் - என்று கருதி மனம் மயங்கினான்.

உரி போர்த்தவன் திகைத்தான் என்றியைக்க. ஆனையின் உரி போர்த்தவன் ; யானையுருக் கொண்டு செருக்கடைந்து தேவர் களை வருத்தித் தம்மையும் எதிர்க்க வந்த கயாசுரனை உடல் பிளந்து வெளி வந்து அவன் தோலையுரித்துப் போர்த்துக் கஜாரி மூர்த்தி என்ற திருநாமம் பெற்ற சிவபிரான். இச் செயல் சிவபெருமானின் வீரட்டங்களுள் ஒன்று; இது நிகழ்ந்த இடம் திருப்பழுவூர் என்பர். இராவணன் வீசிய அம்புகளின் பெருக்கைப் புகழ்ந்து கூறியது இது. போர்த்தன விண் முதலியவை; அம்புகளின் பெருக்கால் தாமிருந்த இடம் மறைந்தன என்பதாம். கலையோர் எண் - மிகச் சிறிய அளவை முதல் மிகப் பேரெண் ஈறாகக் கணிதக் கலையோர் எண்களின் தொகைகளுக்குப் பெயரிட்டுள்ளனர்; இவ்வம்புகளின் தொகை அக் கணக்குகளை மீறின என்று கூறப்பெற்றதாம். எரி, இருள் போர்த்தன என்பனவற்றை எரியால் போர்த்தன, இரு ளடையுமாறு போர்த்தன என்று கூறலும் ஆம்.

பா - ம். 1. மலை போர்த்தன மேலோர் விசையோர்.

5. இருளி போர்த்த விதென்றோ.

3. வெறி போர்த்தன ; இருள் போர்த்தனவெளி ; போர்த்தன விஃணோர்

4. திண்போர்த் தொழிலின்று.

## இராமபிரான் இராவணனம்புகளைச் சிதைத்தல்

3691. அல்லாநெடு பெருந்தேவரு
மறைவாணரு மஞ்சி
எல்லார்களுங் கரங்கொண்டிரு
விழிபொத்தின ரிரிந்தனர்
செல்லாயிரம் விழுங்காலுகும்
விலங்கொத்தது சேனை.
வில்லாளனு மதுகண்டவை
விலக்கும்படி விரைந்தான்.

(முன் செய்யுளிற் கூறிய சிவபெருமான்) அல்லா - அல்லாத, நெடு பெருதேவரும்-நீண்டு சிறந்த தேவர்களும், மறைவாணரும்-அந்தணர்களும், எல்லார்களும் - (ஆகிய) யாவரும், (இராவணன் எய்த அம்புகளின் பெருமைகளைக் கண்டு), அஞ்சி - பயந்து, கரம் கொண்டு - தம் கைகளைக் கொண்டு, இரு விழி - (தம்) இரண்டு விழிகளையும், பொத்தினர் இரிந்தனர் - மூடிக்கொண்டு இடம் விட்டுப் பெயர்ந்தார்கள்; சேனை - (வானர) சேனை, ஆயிரம் செல் விழுங்கால் - ஆயிரம் இடிகள் ஒரே நேரத்தில் விழும்போது, உகும் - (பொடியாகிச்) சிந்தும், விலங்கு - மலையை, ஒத்தது-ஒத்துச் சிதறிற்று; அது கண்டு - அந்த நிலைமையைப் பார்த்து, வில்லாளனும் - வில்லை ஆள்வதில் வல்லனான இராமபிரானும், அவை - (இராவணன் எய்யும்) பாணங்களை, விலக்கும்படி - தடுக்குமாறு, விரைந்தான் - விரைவு கொண்டான்.

விழி பொத்துதல், அச்சக் குறிப்பு. செல் - இடி; 'வான் முழக்குச் செல்' (பரிபா. 13, 44). விலங்கு; விலங்கல் - மலை; குறுக்கே நிற்பது என்ற பொருளுடையது. சேனையை விலங் சென்றதனால், அதன் ஒருமைத் தன்மையும், இராவணனின் முற் போக்குக்கு அது தடையாய் நின்ற தன்மையும் குறிக்கப் பெற்றன. வில்லாளன் - இராமபிரான்;

பா - ம். 1. அல்லாநெடு பெருப்; நெடுந் தேவரு.
2. எல்லாருந்தம்; பொத்தினரிருந்தார்; கண் பொத்தினர்; கொண்டு தம்விழி.
3. விலங்கொத்தன சேனை.
4. விலங்குந் தொழில்.

## இருவரும் விற்போர் புரிதல்

3692. செந்தீவினை மறைவாணனுக் கொருவன்சிறு விலைநாள்
முந்தீந்ததொ ருணவின்பய னெனலாயின முதல்வன்
வந்தீந்தன வடிவெங்கணை யனையான்வகுத் தமைத்த
வெந்தீவினைப் பயனொத்தன வரக்கன்சொரி விசிகம்.

முதல்வன் - மூலப் பொருளாகிய இராமபிரான், வந்து - போர்க்களத்தில் வந்து தோன்றி, ஈந்தன - எய்தனவனவான, வடி வெம் கணை - கூரிய வெப்பமான அம்புகள், ஒருவன் - ஒரு கொடையாளன், முந்து - முன்னொரு நாள், செம் தீ வினை மறைவாணனுக்கு - செம்மையான (மூன்று) அக்கினிகளை ஓம்பும் அந்தணனுக்கு சிறு விலை நாள் - பஞ்சகாலத்தில், ஓர் உணவின் - ஓர் உணவை, ஈந்தது - கொடுத்த, பயன் - பயன், எனல் - என்று சொல்லுதற்கு (இணையாக) ஆயின - வளர்ந்தன; ஆனால், அரக்கன் சொரி விசிகம் - இராவணன் இராமன்மீது சொரிந்த அம்புகள், அனையான் - அந்த இராவணன், வகுத்து அமைத்த வெம் தீவினை - தொகுத்து அமைத்த கொடிய பாவங்களின், பயன் ஒத்தன - (அழியும்) பயனை ஒத்தன.

'தான் சிறியதாயினுந் தக்கார்கைப்பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்துவிடும்' (நாலடி. 88) என்றபடி தக்கார்க்குச் செய்த உதவியின் பயன் எல்லையற்றதாகப் பெருகும்; 'குறளன்... வீய்ந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினன், உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே' (பால. வேள்விப். 35); 'ஞான முன்னிய நான்மறை யாளர்கைத், தான மென்னத் தழைத்தது நீத்தமே' (பால. ஆற். 5) செந்தீவினை, வெந்தீவினை என்று கூறிய சிலேடை நயம் ஓர்க. சிறுவிலை நாள் - பஞ்சகாலம். அரக்கன் வெந்தீவினையை வகுத்தமைத்தான் என்று கூறினமையால் ஆணவச் செருக்கு வற்புறுத்தப் பெற்றது காண்க. 'அல்லவை தேய அறம் பெருகும்' (குறள். 96) என்ற குறட் கருத்தும் இங்கு விளங்குதல் காண்க. முதல்வன் கணை ஈந்தனன் என்றமையால் இராமபிரான் அம்புகளைச் செலுத்துதலில் காணும் எளிமை புலப்படும். 'செந்தீவினை - யாகத் தொழில்; கணை, பெருமானுடைய

அம்பு; பிராமணனுக்கு ஒருவன் கொடுத்த புண்ணியம்போல் வளர்ந்தது; அனையான் - கொடுத்தவன்; பாபம் அற்றதுபோல இராவணன் அம்பு அற்றது' என்பது ஒருரை.

பி - ம். 1. மறையாளனுக்.
2. முந்நீர்ந்த; சிறுமலைநாவ்.
3. வந்நீர்ந்தோர், வருந்தமைத்த.
4. பலனெத்ததவ்வரக்கன் விடுவிசிகம். 50

3693. நூறுயிரம் வடிவெங்கணை நொடியொன்றினின் விடுவான்
ஆறுவிறன் மறவோனவை தனிநாயக னறுப்பான்
கூறுயின கனல்சிந்தின குடிக்கப்புனல் குறுகிச்
சேறுயின பொடியாயின திடராயின கடலும்.

ஆறு விறல் மறவோன் - தணியாத வெற்றியையுடைய வீரனான இராவணன், நொடி ஒன்றினில் - ஒரு கணத்தில், நூறு யிரம் வடி வெம் கணை விடுவான் - நூறுயிரம் கூரிய கொடிய அம்புகளை எய்வான்; அவை - அக் கணைகளை, தனி நாயகன் - ஒப்பற்ற தலைவனான இராமபிரான், அறுப்பான் - துண்டமாக்கி விடுவான்; கூறுயின - அவ்வாறு துண்டமாக்கப்பட்டவை, கனல் சிந்தின - நெருப்பைச் சுக்கினவையாய், குறுகி - நெருங்கி, கடலும் - கடலும், புனல் குடிக்க - (கடலின்) நீரை (முற்றிலும்) பருகிவிட, சேறு ஆயின - சேருகி, பொடி ஆயின - புழுதிகளாக ஆகி, திடர் ஆயின - மேடாகவும் ஆயின.

ஆறு விறல் மறவோன் - இராவணன். தனி நாயகன் - இராமபிரான்.

பி - ம். 1. ஒன்றினின் விடுவோன்.
2. ஆறுத்திற மறவோன்; தனிநாயகன்றுரப்பக், துரப்பான்.
3. கனல் சிந்துவ.
4. சேருவன; பொடியாவன; திடராவனே கடலே, கடறுன். 51

3694. வில்லாற்சரந் துரக்கின்றவற்
குடனேமிடல் வெம்போர்
வல்லானெழு மழுத்தோமர
மணித்தண்டிருப் புலக்கை
தொல்லார்மிடல் வளைசக்கரஞ்
சூலம்மிவை தொடக்கத்
தெல்லாநெடுங் கரத்தாலெடுத்
தெறிந்தான்செரு வறிந்தான்.

வில்லால் - தன் கை வில்லால், சரம் - அம்புகளை, துரக்கின்றவற்கு - (தன்மீது) எய்கின்ற இராமபிரானுக்கு (எதிரே), செரு அறிந்தான் - போர் முறைமைகளை அறிந்தவனும், மிடல் வெம்போர் வல்லான் - வலிமையும் கொடுமையும் நிறைந்த போர்களைச் செய்வதிலே வல்லவனுமான இராவணன், உடனே - அவ்வாறு எய்யும் பொழுதே, எழு, மழு, தோமரம், மணித் தண்டு, இரும்பு உலக்கை - எழு முதல் உலக்கை ஈருக உள்ள ஆயுதங்களையும், தொல் ஆர் மிடல் - பழமை மிகுந்த வலிமையுள்ள, வளை - சங்கு, சக்கரம், சூலம் இவை தொடக்கத்து - சக்கரம் சூலம் ஆகியவை முதலான, எல்லாம் - எல்லாப் படைகளையும், நெடும் கரத்தால் - தன் நீண்ட கைகளால், எடுத்து எறிந்தான் - எடுத்து (இராமபிரான்மீது) வீசினன்.

இராமபிரான் சரங்கள்விட, அவற்றிற்கெதிராக இராவணன் தன் இருபது கைகளாலும் பலவகைப் படைகளை வாரி அவன்மீது வீசினன் என்க. எழு - ஒருவகைப் படைக்கலம். மழு - கோடாலி, பரசாயுதம், பழுக்கக் காய்ச்சிய இரும்பு என்ற பல படைக்கலங் களைக் குறிக்கும் ஒரு சொல். தோமரம் - தண்டாயுதம்; கைவேலு மாம். தண்டு - கதை; மணித்தண்டு என்றதால் அதன் பிடியில் மணிகள் பதிக்கப் பெற்றிருந்தன எனக் கொள்ளலாம். வளை, சக்கரம், சூலம் முதலியவை கடவுளர்க்கு உரியனவாதலால், அவற்றின் சிறப்பைத் 'தொல்ஆர் மிடல்' என்ற அடை மொழி களால் விளக்கினர் என்னலாம். போர் வல்லான் என்றது அவன்

வல்லமையையும், செருவறிந்தான் என்றது அவன் அறிவையும் குறித்தன.

பி - ம். 1. துரக்கின்றவற் றிடையே.

2. வல்லான்மழு வெழுத்தோமரம்.

3. தொல்லாரயில் சுடர்ச் சக்கரம், அயில்வாள் சக்கரம்; சொல்லாரயில், தொல்லாரயில் வானரக்கரம் சூலமின்ன துடிக்கத்; புல்லாதொ ரறிவாளன், புவிநாயகன் மகன்மேல்.

4. நெடுந்தடக்கை யெடுத்து. 52

3695. வேலாயிர மழுவாயிர மெழுவாயிரம் விசிகக்
கோலாயிரம் பிறவாயிர மொருகோல்படக் குறைவ
காலாயின கனலாயின வுருமாயின கதிய
சூலாயின மழையன்னவன் தொடைபல்வகை தொடுக்க.

சூலாயின மழை அன்னவன் - கருக் கொண்ட மேகம் போன்ற, திருமேனி கொண்ட இராமபிரான், கால் ஆயின - காற்றின் தன்மை அமைந்தனவும், கனல் ஆயின - கனலின் தன்மையமைந்தனவும், உரும் ஆயின - இடியின் தன்மை அமைந்தனவும், கதிய - விரைவு கொண்டனவுமான, பல்வகை தொடை தொடுக்க-பலவகைப்பட்ட அம்புகளை வில்லிலே தொடுத்து எய்ய, ஒரு கோல்பட-அவற்றுள் ஓர் அம்பு பட்டவுடனேயே, (இராவணன் விட்ட) ஆயிரம் வேல்-ஆயிரம் வேல்களும், ஆயிரம் மழு - ஆயிரம் கோடாலிகளும், ஆயிரம் எழு-ஆயிரம் எழுக்களும், ஆயிரம் விசிகம் கோல்-ஆயிரம் விசிகம் என்ற அம்புகளும், ஆயிரம் பிற - ஆயிரம் பிற படைகளும், குறைவ - அழியலாயின.

ஆயிரக் கணக்கில் இராவணனால் விடப்பட்ட படைக்கலங்கள், இராமபிரான் விடுத்த ஓர் அம்பால் குறைந்தன; இவ்வாறு இராம பிரான் பலவகைத் தொடைகளை அன்று தொடுத்தான் என்க. இதனால் இராவணனின் படைக்கல அளவு தெரிவிக்கப் பெற்றது; முன் செய்யுளின் விரிவாக இச் செய்யுள் அமைந்துள்ளமை காண்க. 'விசிகம் - பாணம்; இது சிறையில்லாதது' என்பது ஸ்ரீ ஐயரவர் களின் குறிப்பு.

பி - ம். 2. படக்குறையும், குமையும், குறையக்.

3. உருமாயின கதியின், எனலாயின கனியச்.

4. மழையன்றொடை பலவாயின தொடுக்க; மழை மன்னவன். 53

3696. ஒத்துச்செரு விளைக்கின்றதொ
ரளவின்றலை யுடனே
பத்துச்சிலை யெடுத்தான்கணை
தொடுத்தான்பல முகில்கால்
தொத்துப்படு நெடுந்தாரைகள்
சொரிந்தாலெனத் துரந்தான்
குத்துக்கொடு நெடுங்கோல்படு
களிருமெனக் கொதித்தான்.

ஒத்து - (இராமபிரான்) தனக்கு நிகராக, செரு விளைக்கின்றது ஓர் அளவின் தலை - போரிடுகின்ற ஓரளவிலே, நெடும் குத்து கோல் கொடு - நெடிய குத்துக்கோல் கொண்டு, படு - அடிபடும், களிறு ஆம் என கொதித்தான் - யானை ஆவான் என்று சொல்லும்படி மனக் கொதிப்பு அடைந்த இராவணன், உடனே - அப்பொழுதே, பத்து சிலை எடுத்தான் - (தன் பத்துக் கைகளிலும்) பத்து விற்களை எடுத்துக் கொண்டவனாய், கணை தொடுத்தான் - அம்பு களைத் தொடுத்து, பல முகில் - பல மேகங்கள் (ஒன்றாகக் கூடி), கால் - விடுகின்றனவும், தொத்துபடு - தொகுதிப்படுவனவுமான, நெடு தாரைகள் சொரிந்தால் என துரந்தான் - நீண்ட மழைத் தாரைகளைச் சொரிந்தன போல (அம்புகளை) எய்தான்.

குத்துக்கோல் - முனையிற் கூரிய இரும்புள்ள கோல்; (சிலப். 16, 142, அரும்.); பரிக்கோல் என்றும் கூறுவர்; (திருக்கோ. 111 உரை). கோல்பட்ட யானைபோல் இராவணன் இராமபிரானம்பு களால் துளைக்கப்பட்டு வருந்தினான் என்க. இராமபிரானின் ஒரு கை வில்லுக்கெதிரே தான் வீசும் படைகள் யாவும் பழுதுபடுவன கண்டு, அவன் பத்துக் கைகளிலும் பத்து விற்களை எடுத்து, ஏழு மேகங்களும் ஒன்றுகூடி மழையைச் சொரிவனபோல அம்புகளைப் பொழிந்தான் என்க. குத்தினைக் கொடுக்கும் நெடுங்கோல் என்றும் பொருள் கொள்ளலாம். நெடுங்கோல் - ஈட்டியும் ஆம். தொத்து - கூட்டம்; தொகுதி. செரு ஒத்து; (யுத்த. 2984).

பா - ம். 2. பல முகிலாத், முகிலாய்த், முகிலான், முகில்போல்; முகமாய்; பல காத்தான்.

3. தொத்துப்படும்; சொரிந்தாலெனச் சொரிந்தான்.

4. குத்துப்படு.

3697. ஈசன்விடு சரமாரியு மெரிசிந்துறு தறுகண்
நீசன்விடு சரமாரியு மிடையெங்கணு நெருங்கத்
தேசம்முத லைம்பூதமுந் திடுக்குற்றன திகைத்துக்
கூசும்படி யுடல்வானவர் குலைந்தார்மன முலைந்தார்.

ஈசன் விடு சர மாரியும் - எல்லா ஐசுவரியங்களுக்கும் தலைவனான இராமபிரான் விடுகின்ற அம்பு மழையும், எரி - நெருப்பை, சிந்துறு - சிந்துகிற, தறுகண் நீசன் - கொடுமை நிறைந்த நீசனான இராவணன், விடு சர மாரியும் - விடுகின்ற அம்பு மழையும், இடை எங்கணும் - எல்லா இடங்களிலும், நெருங்க - நெருக்கமாக விழ, தேசம் - நிலம், முதல் ஐம் பூதமும் - முதலான ஐந்து பூதங்களும், திகைத்து - மருண்டு, திடுக்குற்றன - திடுக்கடைந்தன ; வானவர் - தேவர்கள், உடல் கூசும்படி - உடல் கூச்செடுக்குமாறு, மனம் குலைந்தார் உலைந்தார் - மனம் நடுங்கி நிலைகுலைந்தார்கள்.

ஈசன் - ஐசுவரிய சம்பந்தமுடையவன் ; இறைவன் : இராமபிரானை ஈசன் என்றது, (சுந்தர. 751). தறுகண் - கொடுமை ; 'தறுகட் டகையரிமா' (பு. வெ. 7, 20). இடை - இடம் ; 'கருங்கல் லிடைதொறும்' (புறநா. 5, 1). தேசம் என்றது பூவுலகினை. குலைதல் - நடுங்குதல் ; நிலைகெடுதலும் ஆம். உலைதல் - நிலைகுலைதல் ; கலைந்து போதலும் ஆம்.

பி - ம். 1. எரிசிந்துவ.
2. நீசன்விடு கணைமாரியும்.
3. தேசம் முதலைப்பூதமுஞ் செருக்கண்டன செருக்கிக் ; செருக்கண்டனர் நெருக்கி, செருவுற்றன செருவிற்.
4. கூசம்மயிர் பொடிப்பற்றன வனலாயின கொடிய ; கூசிம்மயிர் பொடிப்புற்றன வெனலாயின ; பொடியுற்றன, உற்றென, உற்றனர் ; மனம் வானவர் குலையா.

65

## வேறு

### இராவணன் தேருடன் வானத்து எழுந்து போரிடல்

3698. மந்தரக் கிரியென மருந்து மாருதி
தந்தவப் பொருப்பெனப் புரங்க டாமெனக்
கந்தருப் பந்நகர் விசும்பிற் கண்டென
அந்தரத் தெழுந்ததவ் வரக்கன் றேரரோ

(அப்பொழுது), அ அரக்கன் தேர் - அந்த அரக்கனான இரா வணனின் தேரானது, விசும்பில் கண்ட - வானத்தில் காணப் பெற்ற, மந்தரகிரி என-மந்தர கிரி என்று சொல்லுமாறும், மாருதி தந்த அ மருந்து பொருப்பு என - அநுமன் கொண்டு வந்து கொடுத்த சிறப்புற்ற சஞ்சீவி மலை என்னுமாறும், புரங்கள் தாம் என - திரிபுரர்களுக்குச் சொந்தமான முப்புரங்களுள் (ஒரோ வொன்றோ) என்னுமாறும், கந்தருப்ப நகர் என - கந்தர்வ நகரம் என்னுமாறும், அந்தரத்து எழுந்தது - வானத்திலே எழுந்தது. அரோ, அசை.

இராவணன் தான் தரையில் தேர்மீது நின்று போர் செய்த லால் இராமபிரானை வெல்ல முடியாமை கண்டு, தன் தேரை வானத் தில் எழுப்பி அதன்மீது நின்று போரிடத் தொடங்கினான் என்க. வானத்தில் நின்ற அவன் தேருக்கு, மந்தரம், சஞ்சீவிமலை, திரிபுரம், கந்தருப்ப நகர் இவை உவமைகளாகக் கூறப்பெற்றன. மந்தரம் கடல் கடைதற்காகக் கருடனால் வானவழியே எடுத்து வரப் பெற்றதாம்; அநுமன் சஞ்சீவியைப் பெயர்த்து வான்வழி வந்தது மருத்து மலைப்படல வரலாறு. தாரகாசுரன் குமாரர்கள் பொன், வெள்ளி, இரும்பு ஆனவற்றால் ஆகிய மூன்று கோட்டைகளைக் கட்டிக்கொண்டு, வானத்திலே பறந்து சென்று தேவர்களை வருத் தினர் என்றும், அக்கோட்டைகளே திரிபுரங்கள் எனப்படும் என்றும், அவரைச் சிவபெருமான் அழித்தனர் என்றும் கூறுவர். இங்குக் குறிக்கப் பெற்றது அத் திரிபுரங்களுள் ஒன்றாகும். கந்தர்ப்ப நகரம்; முன் சுந்தர காண்டம் 374 ஆம் செய்யுளில் காட்டிய பின்வரும் குறிப்பு இங்கும் கருதத்தக்கது. 'கந்தர்ப்ப நகரம்; கந்தர்வ நகரம் என்ற வடசொல்லின் திரிபு. கந்தர்வர்களின் பட்டணம் என்பது பொருள். இது வானத்தில் தோன்றி மறையும் என்றும், இது கண்ணிற்பட்டால் அரசனுக்கும் நாட்டிற்கும் அச்சத்தை விளைக்கும் என்றும் கூறுவர். இது பேய்த் தேரும் ஆகும் என்பர்'. கந்தர்ப்ப நகரங் காணல் சாவு அண்மையுள்ள மையை அறிவிக்கும் என்பர்.

பி - ம். 2. கபிலைதானென, புரங்கண்டாமென, படங்கண்டாமென.

4. அந்தரத்தெழுந்தன.

3699. எழுந்துயர் தேர்மிசை யிலங்கை காவலன்
பொழிந்தன சரமழை யுருவிப் போதலால்
ஒழிந்தது மொழிகில தென்ன வொல்லெனக்
கழிந்தது கவிக்குல மிராமன் காணவே.

இலங்கை காவலன் - இலங்கை மன்னனான இராவணன், உயர் தேர் மிசை எழுந்து - உயர்ந்த (தன்) தேரின்மீது (ஏறி வானத்தில்) எழுந்து, பொழிந்தன சரமழை - கொட்டிய அம்பு மழையானது, உருவி - (வானரர்களின் உடலில் பட்டு) உருவி, போதலால் - (அப்பால்) கழிதலால், ஒல்லென - விரைவாக, ஒழிகிலது ஒழிந்தது என்ன - அழியாதது அழிந்தது என்னுமாறு, கவிக்குலம் - வானரக் கூட்டம், இராமன் காணவே - இராமபிரான் (தன் கண்ணால்) காணும்படி, கழிந்தது - இறந்து நீங்கிற்று.

ஒழிந்தது ஒழுகிலது என்ன என்பதற்கு, முற்றிலும் சில இறந்துபட்டன, வேறு சில குற்றுயிராய்க் கிடந்தன என்றும் பொருள் கூறுவர். ஒல்லென - விரைவாக; 'ஒல்லென வொப்ப' (ஞானு. 1, 33). இராமன் காணவே என்றது, அடுத்த செய்யுளில் இராமபிரான் செயலாகக் கூறப்பெறுவதற்குக் காரணம் கற்பித்த வாறும்.

பி - ம் 2. பொழிந்தனன்; யுருவிப் போகலால். 57

## இராமபிரான் தன் தேரை வானத்திலெழச் செய்தல்

3700. முழவிடு தோளொடு முடியும் பல்தலை
விழவிடு வேலினி விசும்பிற் சேமமா
மழவிடை யனையநம் படைஞர் மாண்டனர்
எழவிடு தேரையென் றிராமன் கூறினன்.

(தன் சேனைகள் இராவணனால் மடிந்து வீழ்வதைக் கண்ட) இராமன் - இராமபிரான், (மாதலியிடம்), 'மழ - இளமையான, விடை அனைய - காளைகள் போன்ற, நம் படைஞர் - நம் படையிலுள்ளவர்கள், மாண்டனர் - இறந்துபட்டனர்; முழவு இடு தோளொடு - மத்தளம் ஒத்த (அவ்விராவணன்) தோள்களோடு, முடியும் - கிரீடங்களும், பல் தலை - பல தலைகளும், விழ - தரையின்

விழுமாறு, இனி விடுவேன் - இனி என் அம்புகளைச் செலுத்து வேன்; தேரை விசும்பில் சேமமா எழ விடு - (உன்) தேரையும் வானத்தில் பாதுகாவலுடன் எழும்படி விடு, என்று கூறினான் - என்று சொன்னான்.

முழவு - இதனைக் குடமுழா என்றும் கூறுவர். சேமம்-காவல்; "சேம வன்மதில்' (தேவா. 93, 4). வாலரர்க்கு விடை. மழ - இளமை. மழவிடை யனைய என்பதை, மாதலியைக் குறிக்கும் விளியாகவும் கொள்வர்.

பி - ம். 1. முழவடு ; முடியப்பஃறலை.

2. விழவிடு குவனினி விசும்பு சேமமோ ; விசும்பு சேமமா ; விழவிடு வன்றலை.

3. அனையவென் பகைஞர்.

4. தேரென விராமன் கூறினன். 58

3701. அந்துசெய் குவெனென வறிந்த மாதலி
உந்தினன் தேரெனு மூழிக் காற்றினை
இந்துமண் டிலத்தின்மே லிரவி மண்டிலம்
வந்தென வந்ததம் மானத் தேரரோ.

அறிந்த மாதலி - (இராமபிரான் கருத்தை) அறிந்த மாதலி, 'அந்து செய்குவென் - அவ்வாறே செய்வேன்' என்று - என்று கூறி, தேர் எனும் ஊழி காற்றினை - தேர் எனப்படும் பிரளயக் காற்றை, உந்தினன் - (மேலே) செலுத்தினான்; அ மான தேர் - அந்தப் பெரிய தேரும், இரவி மண்டலத்தின் மேல் - சூரியமண்டலத்தின்மேல், இந்து மண்டிலம் - சந்திர மண்டிலம், வந்தென - வந்தது போல, வந்தது - (இராவணன் தேர் வானத்தில் நின்ற இடத்துக்கு மேலே) வந்தது. அரோ, அசை.

அந்து - அப்படி; திசைச் சொல்; அந்தென்பது தெலுங்கு என்பது - ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு; செய்யுள் 2969 ஐயும் காண்க. உந்துதல் - செலுத்துதல்; 'தேரினைத் துரோண னுந்தினன்' (பாரத. நிரைமீ. 86). தேருக்கு ஊழிக்காற்று; அதன் விரைவையும் கொடிய பயன் விளைவையும் நோக்கி என்க. இந்து மண்டிலத் தின்மே லிரவி மண்டிலம்; இரவி மண்டிலத்தின்மேல் இந்து மண்டிலம் என்று மாற்றிப் பொருள் கொள்ளப் பெற்றது; 'நெடு

வெண்டிங்கள் என்றூர் ஆதித்தனுக்கு மேலாகலான்' என்ற அகநா. 2; 17ஆம் அடியின் குறிப்பும், 'இங்கிதன்மேற் சுரநதி செல் லிடனே அப்பால் இரவி பதம் தரணிக்கோர் இலக்க மாகும், அங்கதனின் முப்பான்முக் கோடி தேவர் அருக்கனுடன் வழிக் கொள்வர் அதற்கு மீதே, திங்கள் உல கோரிலக்கம்' (கந்தபு. அண்டகோசப். 62) என்ற செய்யுட் பகுதியும் இரவி மண்ட லத்துக்குமேல் இந்து மண்டலம் என்று கூறுவன காண்க. இம் மண்டிலங்களை இருவர் தேருக்கும் உவமித்ததாகவே பொருள் கொள்ளப் பெற்றது. பிறவாறு கூறுவாரும் உளர்.

பி-ம். 3. மண்டலம்.........மண்டலம். 59

## இருவர் தேரும் வானத்தில் சாரிகை வருதல்

3702. இரிந்தன மழைக்குல மிழுகித் திக்கெலாம்
உரிந்தன வுடுக்குல முதிர்ந்து சிந்தின
நெரிந்தன நெடுவரைக் குடுமி நேர்முறை
திரிந்தன சாரிகை தேருந் தேருமே.

தேரும் தேரும் சாரிகை நேர்முறை திரிந்தன - இராவணன் தேரும் இராமபிரான் தேரும் (வானத்தில்) நேரான முறைகளில் சாரி திரிந்தன; (அதனால்), மழைக் குலம் - மேகக் கூட்டங்கள், திக்கு எல்லாம் - திக்குகளிலெல்லாம், இழுகி - வீசி, இரிந்தன - விலகின; உடு குலம் - நக்ஷத்திரக் கூட்டங்கள், உரிந்தன - (தம் நிலையினின்று) கழன்று, உதிர்ந்து சிந்தின - பொடிப் பொடியாகச் சிந்தலாயின; நெடுவரை குடுமி நெரிந்தன - உயர்ந்த மலைகளின் சிகரங்கள் நொறுங்கிப் போயின.

இழுகுதல் - வீசுதல்; தளர்தலும் ஆம். 'தென்ற லிழுக மெலிந்து' (சுந்தர. 269). உரிதல் - கழலுதல். குடுமி - உச்சி. சாரிகை, சாரி ஒரு பொருளன.

பி-ம். 1. இழுக்கித் திக்கெலாம்.
2. முரிந்தன வுடுக்குலம்.
3. நேர்வரை. 60

3703. வலம்வரு மிடம்வரு மறுகி வானெடு
நிலம்வரு மிடம்வல நிமிரும் வேலையும்
அலம்வருங் குலவரை யனைத்து மண்டமும்
சலம்வருங் குயமகன் திகிரித் தன்மைபோல்.

(அத் தேர்களிரண்டும் சாரி திரிகையில்), வலம் வரும்-ஒன்றை யொன்று ஒரு சமயம் வலப்புறமாகச் சுற்றும்; இடம் வரும் - இடப் புறமாகச் செல்லும்; மறுகி - பலகாலுந் திரிந்து, வானெடு நிலம் வரும்-வானத்திடத்தையும் நிலத்திடத்தையும் (தொட்டு) வரும்; இடம் வலம் நிமிரும் - (மற்றொரு சமயம்) இடப்புறமாகவும் வலப்புற மாகவும் ஓங்கும்; (இவ்வாறு), வேலையும் - கடல்களும், குலவரை அனைத்தும் - சிறந்த மலைகள் யாவும், அண்டமும்-இந்த அண்டமும், சலம் வரும் குயமகன் திகிரி தன்மை போல் - சுழலும் தன்மை யுடைய குயவனுடைய சக்கரத்தின் நிலைமை போல, அலம் வரும் - சுழன்று, சலம் வரும் - நடுக்க மடையும்.

இருவர் தேர்களும் வானத்தில் சாரி திரிந்தபோது நிகழ்ந்த வற்றையும் அவற்றால் உண்டான பயன்களையும் இச் செய்யுள் குறிக்கின்றது. மறுகுதல் - பலகாலுந் திரிதல்; சுழலுதலும் ஆம். 'மலிவன மறுகி' (குறிஞ்சிப். 97); 'மறுகக் கடல் கடைந்தான்'; (திவ். இயற். 2, 68). நிமிர்தல் - ஓங்குதல், உயர்தல். அலம் வருதல்; அலமருதல் - சுழல்தல்; 'விளரிவண் டினங்க ளலமருங் கழனி' (நைடத. அன்னத்தைத் தூது. 10). அலம் - அமைவு என்று கொண்டு, கடல் ஒய்ந்து நிற்கும் என்றும் கூறுவர். சலம், சலனம் என்பதன் விகாரம் என்பர்; 'சலம் வருங் குயமகன் - அரண்மனை நிர்ப்பந்தத்துக்குப் பயந்து, கோபத்தினால் சீக்கிரம் சுற்றும் குயவன்' என்பது ஒருரை. குயமகன் திகிரித்தன்மை; 'குலான்மகன் முடுக்கி விட்ட மட்கலத் திகரி' (பால. மிதிலைக். 13); 'வன்றோட் குயவன் றிரிமட்கலத்தாழி யென்ன' (ஆரணிய. 276); 'கூட்டுறமுடுக்கி விட்ட குயமகன்றி கிரிபோல' (சீவக. 786).

பி-ம். 1. மறுகி வானவரும்; மறுகிவான்மிசை.

2. நிலம் வரும் இடம் வரும்; நீரும் வேலையும், நெடிய வேலையும் நீருண் வேலையும்.

3. குயவன்றிதிரித் தன்மையே; குலாலன்திகிரித் தன்மையே. 61

3704. எழும்புக ழிறைவன்றே ரரக்கன் றேரிதென்
றுழுந்துருள் பொழுதினெவ் வுலகுஞ் சேர்வன
தழும்பிய தேவருந் தெரிவு தந்திலர்
பிழம்பின திரிவன வென்னும் பெற்றியார்.

உழுந்து உருள் பொழுதின் - உழுந்து உருளும் நேரத்துள், எ உலகும் சேர்வன - எந்த உலகத்தையும் சேரும் (வேகத்துடன் சாரி திரியும் தேர்களைக் குறித்து, தழும்பிய தேவரும் - பழக்க முற்ற தேவர்களும், 'பிழம்பின - (தேர்கள்) உருவமுடையன; திரிவன - (அவை) திரிந்துகொண்டிருக்கின்றன' என்றும் - என்று சொல்லும், பெற்றியார் - தன்மையுடையராயினரே (அன்றி), எழும் - மேன்மேல் வளர்ந்துகொண்டிருக்கும், இது - இத் தேர், புகழ் - புகழினையுடைய, இறைவன் தேர் - மன்னனுன இராம பிரானின் தேர், அரக்கன் தேர் - (இது) அரக்கனுன இராவணன் தேர், என்று தெரிவு தந்திலர் - என்று அறிந்து தெரிவிக்க இயலாதவர் ஆயினர்.

தழும்புதல் - பழகியிருத்தல்; 'களவிற் றழும்பிய கள்வ னுடைய கையகத்தாயின்' (சிலப். 16, 152 உரை); தழும்பினர் - அழுதனர்; உலக வழக்கு என்று ஒரு குறிப்பு காண்கிறது தெரிவு தந்திலர் தெரிந்தவராகக் காட்டிக்கொள்ள இயலாதவர் ஆயினர். பழகிய தேவரும் தெரிவு தந்திலர் என்றமையால், பிறர் செய்தி சொல்ல வேண்டுவதில்லை என்றுயிற்று. பிழம்பு-உருவம்; 'அன்பு பிழம்பாய்த் திரிவார்' (பெரிய. பு. கண்ணப். 154); 'வண்மை யுணர்த்திப் பிழம்புணர்த்தப் படாதன' (இறை. 1-ம் பக். 15). பிழம்பின - உருவம் தெரியாமலிருந்தன என்றும் கூறுவர். 'தேர் போன்ற உருவங் கண்டோம்; அவை திரிவன கண்டோம்' என்று மட்டுமே அவர் கூறும் அறிவு பெற்றனர் என்க. உழுந்துருள் பொழுது; 'உழுந்துருள் பொழுதின் மீள்வே ஞெருகண மேனுந் தாழேன்' (சீகாளத்திப். கண்ணப்பச். 105).

பி - ம். 1. எழும்புகழிராமன்.

2. பொழுதினங் வானெடு மண்ணு சேர்தலால்; போதினுமெவ் வுலகும்; மண் சேரலால்.

3. தழும்பினர் தேவரும்; தெரிவு தாங்கிலர்.

4. பிழம்பிது திரிவன; பிழம்பின்றிரிவன, பிழம்புள திரிவன, பிழம்புள நீளினே. என்னும் பெற்றிய.

3705. உக்கிலா வுடுக்களு முருள்கள் தாக்கலின்
நெக்கிலா மலைகளு நெருப்புச் சிந்தலின்
வக்கிலாத் திசைகளு முதிரம் வாய்வழிக்
கக்கிலா வுயிர்களு மில்லை காண்பன.

உருள்கள் தாக்கலின் - (இரு தேர்களின்) சக்கரங்களும் (வான முகட்டைத்) தாக்கலினாலே, (அதனால்) உக்கிலா - சிந்தி விழா, உடுக்களும் - நக்ஷத்திரங்களும், நெருப்பு சிந்தலின் - (ஒன்றோ டொன்று உராய்தலினாலே உண்டாகும்) நெருப்பு சிந்திப் பரவு தலாலே, நெக்கு இலா மலைகளும் - பொடியாகாத மலைகளும், வக்கு இலா திசைகளும் - வெந்து போகாத எல்லைகளும், உதிரம் வாய்வழி கக்கிலா உயிர்களும் - உதிரத்தைத் தம் வாயின் வழி யாகக் கக்காத உயிர்ப்பொருள்களும், காண்பன -(கண்ணால்) காணத் தக்கனவாய், இல்லை - இல்லாதவாயின.

உகுதல் - சிந்துதல். நெகுதல் - பொடியாதல்; கெடுதலும் ஆம். வக்கு - வேகுகை; வதக்கப்படுதலும் ஆம்; 'தீயினாலே செறிந்த புகை நாறுமல் வக்கி மயிர்போகச் சீவி' (மலைபடு. 247-9 நச். உரை); 'வன்பெரும் பன்றி தன்னை யெரியினில் வக்கி'; 'கொழுப்பரிந்து, வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்கு வித்து' (பெரிய. கண்ணப்ப. 117, 145). இரு எதிர்மறைகள் ஓர் உடன்பாட்டைக் குறித்தன.

பி - ம். 1. உக்கிலா வுயிர்களும்; உருக்க டாக்கலின்.
3. வக்கிலாத் திசைகளு மில்லை. 63

3706. இந்திர னுலகத்தா ரென்ப ரென்றவர்
சந்திர னுலகத்தா ரென்பர் தாமரை
யந்தண னுலகத்தா ரென்ப ரல்லரால்
மந்தர மலையினு ரென்பர் வானவர்.

வானவர் - (அத் தேர்களை நோக்கி), தேவர்கள், 'இந்திரன் உலகத்தார் என்பர் - (ஒருபோது அவர்கள்), இந்திரன் உலகத்தில் உள்ளார்' என்று கூறுவர்; என்றவர் - அவ்வாறு சொன்னவர்

களே, 'சந்திரன் உலகத்தார் என்பர்-சந்திரலோகத்தில் நிற்கின்றனர்' என்பர் தாமரை அந்தணன் உலகத்தார் என்பர் - (வேறு (சிலர்) தாமரையிலுள்ள அந்தணனை பிரமனுலகத்தில் நிற்கின்றனர்' என்று கூறுவர்; அல்லர் - அவ்வாறு கூருதவர், 'மந்தர மலையினர் என்பர் - மந்தர மலையிலிருக்கின்றனர்' என்று கூறுவர் ஆல், அசை.

தேர்கள் சென்ற விசை இங்கு விளக்கப் பெற்றது. இந்திரனுலகம் - தேவலோகம். அந்தணனுலகம் - ஸத்யலோகம். மந்தரம் - அஷ்ட குலாசலங்களுள் ஒன்று. இச் செய்யுள் சில பிரதிகளிலில்லை.

பி - ம். 1. என்ப ரேனையர், என்ப ரெனையவர். 64

3707. பாற்கடல் நடுவனே ரென்பர் பல்வகை
மாற்கட லினுக்குமவ் வரம்பின ரென்பர்
மேற்கட லாரென்பர் கிழக்குளா ரென்பர்
ஆற்புடை யிதுவென்ப ரறியுந் தேவரும்.

அறியும் தேவரும் - (செய்மையி லுள்ளவற்றையும்) அறிய வல்ல தேவர்களும், (இராவணனும் இராமபிரானும் ஒருபோது) 'பாற்கடல் நடுவினேரென்பர் - திருப்பாற் கடலின் இடையிலே உள்ளார்' என்று சொல்லுவார்கள்; (சிறிது கழித்து), 'பல்வகை மால் கடலினுக்கும் அ வரம்பினர் என்பர் - பல வகைப்பட்ட பெரும் (புறக்) கடலுக்கும் அப்பக்கத்து எல்லையில் நிற்கின்றனர்' என்பார்கள்; (பிறகு அவர்களே), மேல் கடலார் என்பர் - மேற்குத் திசையிலுள்ள கடலிடத்தார்' என்பார்கள். (உடனே அவர்கள்), 'கிழக்கு உளார் என்பர்-கிழக்கே வந்துள்ளார்கள்' என்று கூறுவர்; (இன்னும்) ஆர்ப்பு உடை இது - (இவ்வொலி) அத் தேர்களின் முழக்கமாகும்,' என்பர் - என்று கூறுவர்.

இச் செய்யுளும் தேர்கள் ஒரு கணத்துள் வெகுதூரம் சென்ற தன்மை கூறும். மால் கடல் - பெரும் புறக்கடல் என்று பொருள் கொள்ளப் பெற்றது. ஆர்ப்பு, ஆற்பு என எதுகை

நோக்கித் திரிந்தது. 'ஆர்ப்புடை இது என்பர்-தேர் முழக் கொலி கேட்டதென்பர்' என்பது பழையவுரை.

பி - ம். 1. பாற்கடல் நடுவினூர், நடுவினேர், நடுவுளார்; என்பர் பல்கடல்.
2. மாற்கட லேழுக்கு வரம்பிறு ரென்பார், வரம்பிலா ரென்பார்.
3. மேற்படர் விசும்பினர்; கீழ்க்கடலாரென்பார்; கிழக்கு மேற் கென்பார்.
4. ஆர்ப்பிடை யுருமென்பா ரறியு மாதவர்; அறிந்த வானவர், அறியுந் தேவரும். 65

3708. மீண்டன வோவென்பர் விசும்பு விண்டுகக்
கீண்டன வோவென்பர் கீழ வோவென்பர்
பூண்டன புரவியோ புதிய காற்றென்பர்
மாண்டன வுலகமென் றணங்கும் வாயினர்.

(இத்தேர்களின் சுழற்சியால்) 'உலகம் மாண்டன - உலகங்கள் அழிந்துவிட்டன;' என்று - என்று எண்ணி, அணங்கும் வாயி னர் - வருந்தும் வாயினையுடைய தேவர்களும் பிறரும், 'மீண்ட னவோ என்பர் - (இத்தேர்கள் வானத்திலிருந்து தரைக்கு) மீண்டு விட்டனவோ?' என்று (ஒரு முறை) ஐயுறுவார்; 'விசும்பு விண்டு உக கீண்டனவோ என்பர் - வானம் பிளவுபட்டுச் சிந்துமாறு (அவ்வான இடங்கள்) கிழிந்து போயினவோ?' என்பார்; கீழவோ என்பர் - இவை கீழே இறங்கிவிட்டனவோ?' என்பர்; பூண்டன - தேரிற் கட்டியவை, புரவியோ - குதிரைகளோ? (அல்ல), புதிய - (இதுவரை கண்டு கேட்டு அறியாத) புதுமை வாய்ந்த, காற்று என்பர் - காற்றுகும்' என்று கூறுவார்கள்.

கீழவோ என்பதற்குப் பாதாளத்தனவோ என்றும் கூறலாம்.

பி - ம். 1. விசும்பை விண்டுக.
2. கீழுநவோ வென்பார்.
4. உணங்கும் வாயினர், உணங்கும் வானவர், உரைக்கும் வாயினேர். 66

3709. ஏழுடைக் கடலினுந் தீவோ ரேழினும்
ஏழுடை மலையினு முலகோ ரேழினும்
சூழுடை யண்டத்தின் சுவர்க ளெல்லையா
ஊழிய காற்றெனத் திரிந்த வோவில.

(அக்குதிரைகள்) ஏழுடை கடலினும் - ஏழு கடல்களினாலும், தீவு ஓர் ஏழினும் - ஏழு தீவுகளாலும், ஏழுடை மலையினும் - ஏழு மலைகளாலும், உலகு ஓர் ஏழினும் - கீழ் ஏழு மேல் ஏழு என்னும் உலகங்களினாலும், சூழ் உடை அண்டத்தின் - சூழ்தலை உடைய அண்டத்தினுடைய, சுவர்கள் எல்லையா - அண்டகடாகம் என்னும் எல்லைமட்டும், ஊழிய காற்று என - ஊழிக் காற்று என்று சொல்லுமாறு, ஓவு இல - ஒழியாமல், திரிந்த - (சுற்றித்) திரிந்தன.

முன் செய்யுளில், 'பூண்டன புரவியோ புதிய காற்றென்பர்' என்ற கருத்தை இங்கு விரித்துக் கூறுகின்றார். அண்டத்தின் அடக்கங்கள் இங்குக் கூறப்பெற்றன காண்க. ஊழிக்காற்று அண்டச் சுவர் மட்டும் வீசும் என்றதுபோல, குதிரைகளும் அண்ட எல்லைமட்டும் திரிந்தன என்றார். அண்டச் சுவர்; அண்ட கடாகம் என்றும், அண்டப்பித்தி எனவும்படும். அண்டம் ஒரு கோளவடிவம் என்பதும் அதற்கு எல்லையாக அதன் கோடி மூடியிருக்கும் என்பதும் ஐதீகம். ஓவுதல் - நீங்குகை; ஒழிவு. இந் நான்கு பாடல்களாலும் வானத்தில் இருவர் தேர்களும் சாரி வந்தமை கூறப்பெற்றதென்க.

பி - ம். 1. ஏழுடை மலையினும்.

2. ஏழுடை கடலினும்; உலகமேழினும்.

3. சுவரினெல்லையே.

4. ஊழியிற் காற்றெனத் திரிந்த தோய்வில. 87

## இராவணன் படைக்கலம் பொழிதலும், அவற்றை இராமபிரான் அழித்தலும்

3710. உடைக்கட லேழினு முலக மேழினும்
இடைப்படு தீவினு மலையொ ரேழினும்
அடைக்கலப் பொருளென வரக்கன் வீசிய
படைக்கல மழைபடு துளியின் பான்மைய.

(இவ்வாறு இரு தேர்களும் சூழ்ந்து வரும்), உடை கடல் ஏழினும் உலகம் ஏழினும் - ஏழு கடல்களிலும், (அவற்றை) உடை

யாகக் கொண்டு ஏழு பூமிகளிலும், இடைப்படு தீவினும் - அவற்றிற்கு இடையே உள்ள தீவுகளிலும், மலை ஓர் ஏழினும் - ஏழு மலைகளிலும், அடைக்கலம் பொருள் என - (இராவணன் தன்) பாதுகாவலுக்காக வைத்திருந்த பொருள்கள் என்னும்படி, அரக்கன் வீசிய - அவ்வரக்கன் (இராமபிரான்மீது) வீசியனவுமான, படைக்கலம் - படைக்கருவிகள், மழை படு துளியின் பான்மைய - மேகத்தினின்றும் விழும் துளிகளின் தன்மையவாயின.

உடை - ஆடை. உடை உலகம் ஏழினும், இடைப்படு தீவு ஏழினும் என்றும் மாற்றிக்கொள்ளலாம். அண்ட முழுமையும் திரிந்த தேரிலிருந்து இராவணன் அம்புகளை மழைத் துளிகளைப் போல் வீசினன்; அவ்வாறு வீசினவை கடல், உலகம், தீவு, மலை முதலிய இடங்களிலிருந்து வந்தமையால், அந்த அந்த இடத்தில் அவன் அடைக்கலப் பொருளாக வைத்திருந்த படைக்கலங்களை எடுத்து வீசினவை போன்றிருந்தன என்றார். அடைக்கலப் பொருள், 'அடைக்கலப் பொருள் காத்தவா றழகிது' (யுத். 2571); 'அடைக்கலப்பொருள் எப்படி அழியாமலும் ஒரு கைப் படாமலும் இருக்குமோ அப்படி ஒத்தன அம்புகள்' என்பது பழையவுரை. இராவணன் தனக்கு ஆபத்தில் பயன்படும்படி உலகில் பல இடங்களில் சேமித்து வைத்திருந்த படைக்கலன்களை அந்த அந்த இடங்களிலிருந்து வாரி வீசினதுபோல் இருந்தது என்றார். மழைபடு துளி; மழை - மேகம்.

பி - ம். 1. படைக்கடல், உடைகடல்; உலகொரேழினும்.

3. அரக்கர் வீசிய.

4. துளியின் பன்மைய.

68

3711. உறுத்துல கனைத்தையு முழலும் போரிடை
இறுத்திக லிராவண னெறிந்த வெய்தன
அறுத்ததுந் தடுத்தது மன்றி யாரியன்
செறுத்தொரு தொழிலிடைச் செய்த தில்லையால்.

உலகு அனைத்தையும் - உலகங்கள் யாவற்றையும், உறுத்து - கோபித்து, உழலும் போர் இடை - நடைபெறும் போரின் இடையிலே, இகல் இராவணன் - வலிமைமிக்க இராவணன், இறுத்து எறிந்த - நன்றாக எறிந்தனவும், எய்தன - எய்தனவு

மான படைக்கலங்களை, ஆரியன் - சிறந்தோனான இராமபிரான், அறுத்ததும் தடுத்ததும் அன்றி - அறுத்தும் தடுத்தும் பல வற்றையும் (அழித்தது) அல்லாமல், இடை - நடுவிலே, செறுத்து - கோபித்து, ஒரு தொழில் - வேறொரு தொழிலை, செய்தது இல்லை - செய்யவில்லை. ஆல் : அசை.

இறுத்தல், எறிதல் ஒரு பொருளன ; 'முனைகெட விறுத்த வெண்வேலாடவன்' (பு. வெ. 3, 24 கொளு.). எறிந்த, ஈட்டி முதலியன. எய்தன, அம்பு முதலியன. அறுத்தல் - ஒடித்தல். தடுத்தல் - வலியிழக்கச் செய்தல். ஆரியன் - இராமபிரான்; அயோத்தி. 580 ; ஆரணிய. 947 ; கிட்கிந்தா. 316, 980, 985 ; சுந்தர. 107. இராவணன் எய்த படைகளை இராமபிரான் பயனற்றனவாகச் செய்தனனேயன்றி, அவன் தன் படைக்கலன்களை இராவணன் மீது முதலில் எய்யவில்லை என்றது இங்குக் கூறப்பெற்றது.

பி - ம். 1. ஒறுத்துல களைத்தையு முழலு மோட்டிடை, உழலு மோரிடை, போரிடை ; ஊன்று கோட்டிடை.
2. இறுத்தில் விராவணன், இறுத்தில திராவணன்.
4. செறுத்திடை யொரு தொழில். 69

இதன்பின் இரண்டு அதிகப் பாடல்கள் :—

மூவுல கடங்கலு மூடு மண்டமேல்
தாவினன் றேரொடு மரக்கன் றாவியே
கூவின னங்கறை கூவக் கொண்டலும்
மேவின னரக்கனை விடாது பற்றியே.

அண்டமோ ராயிர கோடி யெங்கணும்
மண்டினர் செருத்தொழின் மலைதல் விட்டிலர்
அண்டர்கள் கலங்கின ரரக்கரா யுளோர்
உண்டினிக் கருவென வோதற் கில்லையால்.

## தேர்கள் இலங்கையை யணுகுதல்

3712. விலங்கலும் வேலையு மேலுங் கீழரும்
அலங்கொளி திரிதரு முலக னைத்தையும்
கலங்குறத் திரிந்ததோ ரூழிக் காலக்காற்
றிலங்கையை யெய்தின தீமைப்பின் வந்தரோ.

விலங்கலும் - மலைகளையும், வேலையும் - கடல்களையும், மேலும் - மேல் உலகங்களையும், கீழரும் - கீழ் உலகங்களையும், அலங்கு ஒளி - மிகவும் ஒளிசெய்யும் கதிரவன், திரிதரு - திரியும், உலகு அனைத்தையும் - எல்லா உலகங்களையும், கலங்குற திரிந்தது - (அவை யாவும்) கலங்குமாறு திரிந்த, ஓர் ஊழி கால காற்று - ஒப்பற்ற ஊழிக்காலத்துக் காற்றுக்கு ஒப்பான (இருவர் தேர்க் குதிரைகளும்), இமைப்பின் வந்து - இமைக்கும் நேரத்துள் வந்து, இலங்கையை எய்தினது - இலங்கையை அடைந்தது.

காற்று என்றது இரு தேர்களின் குதிரைகளை ஒருமிக்க உவமித்ததால் ஒருமையாயிற்று. குதிரைகளுக்கு ஊழிக் காலக் காற்று : 'பூண்டன புரவியோ புதிய காற்றென்பர்' (செய். 64). கீழர் - கீழுலகும் ; (ஒப்பு) : 'கீழவோ வென்பர்' (செய். 66). அர்' பகுதிப்பொருள் விகுதி ; (ஒப்பு) : 'பூவர் சோலை' (சீவக. 1328) ; சிலப். 7 : 26ம் காண்க. அலங்குதல் - ஒளிசெய்தல் ; (பிங்.). அலங் கொளி - மிக்க ஒளி ; இங்குக் கதிரவன். இமைப்பு - கணம்.

பி - ம். 1. கீழமேலரும்.

3. எய்தின னிமைப்பின் ; ஊழிக் காற்றென, ஊழிக் காற்றன ; கலங் குறத் திரியதோர்.

4. எய்திய திமைப்பின வந்ததோ, எய்தின பகலிரண்டினே. 70

## தேர்ப்பரிகளின் திறம்

3713. உய்த்துல கனைத்தினு முழன்ற சாரிகை
மொய்த்துயர் கடலிடை மணலின் மும்மைய
வித்தகர் கடவிய விசயத் தேர்ப்பரி
எய்த்தில வியர்த்தில விரண்டு பாலவும்.

மொய்த்து - நெருங்கி, உயர் - உயர்கின்ற, கடலிடை மணலின் - கடலிடத்திலுள்ள மணலைவிட, மும்மைய - மூன்று பங்கு எண்ணிக்கையுள்ள, உலகு அனைத்தினும் - உலகங்கள் யாவற்றினும், உய்த்து - செலுத்தப்பெற்று, உழன்ற - அலைந்தனவும், சாரிகை - சாரிகைகளைச் செய்தனவும், வித்தகர் - (தேரோட்டும் தொழிலில்) சிறப்படைந்தவர், கடவிய - ஓட்டிய, இரண்டு பாலவும் -

இராவணன் இராமபிரான் என்ற இரு பக்கத்தனவுமான, விசய தேர்பரி - வெற்றியைத் தரும் (இராம இராவணர்களின்) தேர்களிற் கட்டிய குதிரைகள், எய்த்தில - உடல் இளைக்காதனவாகவும், வியர்த்தில - வியர்வைகூட விடாவாகவும் இருந்தன.

இரு தேர்க்குதிரைகளும் உலகமெல்லாம் திரிந்து வந்தும் அவை களைப்போ, வியர்வையோ அடையவில்லை என்றதனால், அவற்றின் ஒப்பற்ற உடல் வலிமை கூறப்பெற்றது என்க. கடலிடை மணல்: அளவுகடந்த நிலைமைக்கு உவமை. இரு தேர்ப் பரிகள் உலகெலாம் சுற்றிச் சாரி செய்த திறத்தைக் கூர்ம புராணம் கூறுவதை இங்கு ஒப்பிடலாம்; 'விண்ணவ ரளித்த தேரிவ ரிறையும் வெஞ்சினத் தரக்கர்தம் கோவு, பண்ணி னீள்வெற்பின் மாதிர மெட்டின் வானவர் தானவ ருறையும், கண்ணகல் விசும்பிற் திரிந்து தாங்கற்ற கார்முக விஞ்சைகள் காட்டி, எண்ணி லெவ்வுலகும் வெருவொடுந் தளர வேழுநா ளிராப் பகல் மலைந்தார்' (கூர்ம. பூருவகாண். 25); இராவணன் வதை. 93. இரண்டு பாலவும் - இரண்டு பக்கங்களில் உள்ளனவும்.

பி - ம். 1. உலக னைத்தையும்; முயன்ற சாரிகை.

2. மொய்த்தது கடலிடை, மொய்த்தயர் கடலிடை; மொய்த்துள; மும்மைசால், மும்மையால்.

3. விசயத்தின்பரி, விசயத்திண்பரி.

4. எய்த்தில துயிர்த்தலது, எய்த்தில விளைத்தில, எய்த்தறி னுழைத் தில; பாலுமே.

71

## இராமபிரானேறிய இரதத்து இடிக்கொடியை இராவணன் அறுத்துச் சிதைத்தல்

3714. இந்திரன் தேரின்மே லுயர்ந்த வெந்தொழில்
உந்தரும் பெருவலி யுருமி னேற்றினைச்
சந்திர னனையதோர் சரத்தி னூற்றரைச்
சிந்தின னிராவண னெரியுஞ் செங்கணன்.

எரியும் செம் கணன் இராவணன்-நெருப்பு வீசுகின்றதும் சிவந்திருந்ததுமான கண்களை உடைய இராவணன், இந்திரன் தேரின்

மேல், உயர்ந்த - இந்திரனுடைய தேரின்மீது உயர்ந்து விளங்கிய, வெம் தொழில் உந்த அரும் பெரு வலி உருமின் ஏற்றினை - கொடுந் தொழிலை யுடையதும் தள்ளுதற்கு அருமையானதும் மிகுந்த வலிமை படைத்ததுமான இடியேற்றுக் கொடியை, சந்திரன் அனையது ஓர் சரத்தினால் - சந்திரன்போன்ற உருவத்தை உடைய ஒப்பற்ற அம்பினால், தரை - நிலத்தில் (விழுமாறு), சிந்தினன் - தள்ளினான்.

இந்திரன் தேர் - இந்திரன் இராமபிரானுக்கு அனுப்பிய தேர். அதன் கொடி இடிக்கொடி; (இராம. தேரேறு படலம். ). சந்திர னனைய தோர் சரம் - பிறைவாயம்பு.

பி - ம். 1. மீதுயர்ந்த ; உயர்ந்த வேந்தொழில்.

2. உய்ந்தரும்.

3. சந்திர னன்னது ; சுனையினற்றரை.

4. எரியுஞ் சிந்தையான். 72

## இடிக்கொடி கடலில் விழுதல்

3715. சாய்ந்தவல் லுருமுபோ யரவத் தாழ்கடல்
பாய்ந்தவெங் கனலென முழங்கிப் பாய்தலும்
காய்ந்தபே ரிரும்பின்வன் கட்டி காய்வறத்
தோய்ந்தநீ ராமெனச் சுருங்கிற் றாழியே.

சாய்ந்த - (கொடிமரத்தினின்று) சிந்திய, வல் - வலிய, உருமு - இடிக்கொடியானது, போய் - தன்னிடத்தை விட்டகன்று சென்று, அரவத்து - முழக்கத்தினையுடைய. ஆழ் கடல் - ஆழமான கடலில், பாய்ந்த - பாய்ந்து விழுந்த, வெம் கனல் என - கொடிய நெருப்புப் போல, முழங்கி - மிக்க ஒலியைச் செய்துகொண்டு, பாய்தலும் - பாய, காய்ந்த - நன்றாக நெருப்பிலே காய்ச்சியெடுத்த, பேர் இரும்பின் வன் கட்டி - பெரிய வலிய இரும்புக் கட்டியானது, காய்வு அற - அது காய்ந்திருந்த தன்மை நீங்க, தோய்ந்த நீர் ஆம் என - தோய்ந்த நீராக ஆயிற்று என்று சொல்லுமாறு, ஆழி சுருங்கிற்று - கடல்நீர் வற்றிற்று.

அரவம் - ஒலி. காய்ந்த இரும்பின் கட்டி தோய்ந்த நீர்; (ஒப்பு): 'தெறுகதிர்த் தீயினல், காய்த்திரும்பைக் கருமகக் கம்மியன், தோய்த்த தண்புனல்' (கிட்கிந்தா. 87).

பி - ம். 1. காய்ந்தவல், சாய்ந்தவல்; உருமும்போய்; உவரித் தார்கடல், உவரிக் கார்க்கடல்.

2. மாய்ந்தவல் ஆருமென; முருங்கிப் பாய்தலும், முடுகிப் பாய்தலும், முழக்கிப் பாய்தலும்.

3. இரும்பினே, இரும்பினன்.

73

## இராவணன் நிகழ்த்திய கொடிய போர்

3716. எழுத்தெனச் சிதைவிலா விராமன் தேர்ப்பரிக்
குழுத்தனை கூர்ங்கணைக் குப்பை யாக்கிநேர்
வழுத்தரு மாதலி வயிர மார்பிடை
அழுத்தினன் கொடுஞ்சர மாறிரு டாறரோ.

எழுத்து என சிதைவு இலா - எழுத்து என்று சொல்லுமாறு அழிவு இல்லாத, இராமன் - இராமபிரானுடைய, தேர் பரி குழுதனை - தேரிலே கட்டப்பெற்ற குதிரைகளின் தொகுதியை, கூர் கணை குப்பை ஆக்கி - கூரிய அம்புகளின் தொகுதிகளாக ஆக்கி, நேர் - நேர்மையாக, வழுத்த அரு மாதலி - துதிக்க இயலாத (பெருமை மிக்க) மாதலியின், வயிரம் மார்பு இடை-வயிரம் போன்ற மார்பிடத்தில், கொடு சரம் - கொடிய அம்புகள், ஆறிரண்டு ஆறு - பன்னிரண்டினை, அழுத்தினன் - அழுந்துமாறு எய்தான். அரோ: அசை.

எழுத்து, பிரணவம், சப்தபிரமம், என்றும் பலவாருகக் கூறுவர். அதே போன்று, எழுத்தை இராமனுக்கும், பரிக்கும் கூட்டுவர். பேச்சினும் எழுத்து சிதைவிலாதது என்பதும், கன் மேலெழுத்து நெடு நாளைக்கு நிற்கும் என்பதும் யாவரும் அறிந்தவை. பரிக் குழுவைக் கணைக் குப்பையாக்கியது என்பது, அக் குதிரைகள் தெரியாதபடி கணைகள் அவற்றின்மீது தூர்த்ததைக் குறித்தது என்க. குப்பை - தொகுதி; 'ஆம்பலங் குப்பையை' (கல்லா. 53, 28), நேர் வழுத்துதல் அரிய மாதலி; மாதலியின்

ஆற்றலையும் பிற பெருமைகளையும் உள்ளபடி எடுத்துக் கூறுதல் இயலாது என்றபடி.

பி-ம். 1. எழுக்தென ; சிதைவிலாரிராமன் ; யாக்கினுன்.

2. குழுக்களைக்.

3. வழுத்தலில்.

4. வெஞ்சரம். 74

## மாதலியின் மார்பில் அம்பு செலுத்தியது கண்டு இராமபிரான் வருந்துதல்

3717. நீல்நிற நிருதர்கோ னெய்த நீதியின்
சால்புடை மாதலி மார்பிற் றைத்தன
கோலினு மிலக்குவன் கோல மார்பின்வீழ்
வேலினும் வெம்மையே விளைந்த வீரற்கு.

நீல் நிற நிருதர் கோன் - நீல நிறத்தையுடைய அரக்க மன்னனை இராவணன், எய்த - விடுத்த, இலக்குவன் கோல மார்பின் வீழ் வேலினும் - இலக்குவனின் அழகிய மார்பில் விழுந்த வேலினைப் போல, நீதியின் சால்பு உடை மாதலி மார்பில் தைத்தன - நீதியின் நிறைவு உடைய மாதலி மார்பில் ஊடுருவிச் சென்ற, கோலினும் - அம்புகள், வீரன்கு - இராமபிரானுக்கு, வெம்மையே விளைந்த - வெப்பத்தையே உண்டாக்கின.

இலக்குவன் மார்பின் வீழ்வேல், உவமை. இங்குச் சரித்திரப் பகுதியின் ஒரு நிகழ்ச்சியையே உவமையாகக் கொண்டார். இச் செய்யுளால் இராமபிரான் தன்னை அண்டினவரைத் தன் தம்பி போல் கருதும் அவன் பண்பு புலனாயிற்று. வெப்பம்: வருத்தத்தால் உண்டாயது. ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை; இஃது இடம் மாறிக் காணப்பெறுகிறது.

பி-ம். 3. கோலிரு மிலக்குவன் கோல மார்பின்மேல்.

4. விளைந்த விரற்கு ; விளைத்த வீரற்கும் ; வீரற்கே. 75

## இராமபிரான் அம்புகளினுல் மறைக்கப்படுதல்

**3718. மண்டில வரிசிலே வான வில்லொடு**
**துண்டவெண் பிறையெனத் தோன்றத் தூவிய**
**உண்டைவெங் கடுங்கணை யொருங்கு மூடலால்**
**கண்டில ரிராமனை யிமைப்பில் கண்ணினர்.**

மண்டில வரி சிலை - மண்டிலமாக வளைந்த கட்டமைந்த (இராவணனின்) வில்லானது, வான வில்லொடு - வானத்திற் காணப்படும் இந்திர தனுவாகவும், துண்ட - பிளவுண்ட, வெண் பிறை என - வெண்மையான சந்திரனுகவும், தோன்ற - தோன்றுமாறு (பல முறைகளில் வகுத்து), தூவிய - எய்த, உண்டை வெம் கடும் கணை - தொகுதிகளாகவுள்ள வெப்பமான கொடிய அம்புகள், ஒருங்கு - ஒருமிக்க, இராமனை மூடலால் - இராமபிரானை மூடி மறைத்தமையால், இமைப்பில் கண்ணினர் - இமைத்தலில்லாத கண்களைக் கொண்ட தேவர்கள், கண்டிலர் - அவனைக் காணக்கூட வில்லை.

மண்டிலம், வானவில், வெண்பிறை இந்த உருவங்களில் வில்லை இராவணன் வளைத்து அம்புகளைத் தூவினுன் என்க. உண்டை என்பது பற்றி ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு பின்வருமாறு :— உண்டை - தொகுதி; தூவுண்டை வண்டினங் காள்வம்மின் சொல்லுமின் றுன்னிநில்லாக், கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்கொங்க நாட்டசெங்கேழ், மாவுண்டை வாட்டிய நோக்கிதன் வார்குழல் போற்கமழும், பூவுண்டை தாமுள வோநுங்கள் கான்ற பொழிலிடத்தே! (இறைய. 2ஆம் சூத்திர உரை.); மண்டிலம் - வட்டம். மண்டில சிலை; வட்டவார் சிலை என்பதும் அதுவே; 'வில்லை வட்டம்பட வாங்கி' (தேவா. 5, 9); என்றதால் வில்லை மண்டிலமாக வளைப்பது உண்டு என்க. இராவணன் வில்லுக்கு இந்திர வில்; 'மிடலைகொள் வெஞ்சிலை விண்ணிடு வின்முறந் தென்னக், ......கண்டார்' (ஆரணிய. 975). 'உண்டை - படை வகுப்புப் போல நடக்கும் கணை. இந்திர தனுவும் பிறையும்

வளைந்தது போல வளைந்த சிலையினெய்த அம்பினால் பெருமானைத் தெரியாதபடி வளைத்தான்' என்பது பழையவுரை.

பி - ம். 1. மண்டல வரிசிலை, வருசிலைமான; மான வில்லொரு.

2. நுண்டவன் பிறை; தோன்றறாவிய; தானே தூவிய.

3. உண்டவெங் கடுங்கணை யொருங்க முடலால்; வெங்கணையவை.

4. இமைப்பில் கண்ணினுள். 76

## தேவர்கள் அடைந்த கலக்கம்

3719. தோற்றன னேயினி யென்னுந் தோற்றத்தால்
ஆற்றல்சா லமரரு மச்ச மெய்தினர்
வேற்றவ ரார்த்தனர் மேலுங் கீழுமாய்க்
காற்றியக் கற்றது கலங்கிற் றண்டமே.

(இராமபிரானைக் காண மாட்டாத) ஆற்றல் சால் அமரரும் - வலிமை மிக்க தேவர்களும், ' இனி - இப்பொழுது, தோற்றனனே - (இராமபிரான்) தோற்று விட்டனனே !' என்னும், தோற்றத்தால் - (காட்சியால் உண்டான) எண்ணத்தால், அச்சம் எய்தினர் - பயத்தை அடைந்தனர்; வேற்றவர் - பகைவர், ஆர்த்தனர் - (மகிழ்ச்சியால்) ஆரவாரம் செய்தனர்; காற்று - (இயங்கும் ,தன்மையுள்ள) காற்றானது, மேலும் கீழுமாய் - மேலும் கீழும், இயக்கு அற்றது - அசைதல் நீங்கிற்று; அண்டம் கலங்கிற்று - அண்டம் முழுமையும் கலக்கமடைந்தது. ஏ, அசை.

இனி - இப்பொழுது; ' கேளினி ' (மூலபடு. 94) தோற்றத்தால் அஞ்சினர் என்றதால், உண்மையில் அஞ்ச வேண்டிய நிலை இன்று, என்பதாயிற்று. வேற்றவர் - பகைவர். மேலும், கீழும் ஆய் என்று கொண்டு, காற்று, மேலும் கீழுமாக இடங்களிற் சென்று பதுங்கி, உலகில் நடமாட்டம் அற்றது எனலும் ஆம்.

பி - ம். 2. ஆற்றல(ா)மரரு மச்சம்; அச்ச முற்றனர்; அச்சகந் தாஉந்தனர்.

3. வேற்றலரார்த்தனர்; ஏர்த்தனதாலற; மேலுங் கீழரும்.

4. காற்றது கனலது கலங்கிற் றும்பரே. 77

3720. அங்கியுந் தன்னொளி யடங்கிற் றார்கலி
பொங்கில திமிர்த்தன விசும்பிற் போக்கில
வெங்கதிர் தண்கதிர் விலங்கி மீண்டன
மங்குலும் நெடுமழை வறந்து சாய்ந்ததால்.

அங்கியும் - நெருப்பும், தன் ஒளி அடங்கிற்று - தன் சுய ஒளி குறைந்தது ; ஆர்கலி - கடல்கள், பொங்கில - பொங்குதலில்லாமல், திமிர்த்தன - பிரமை கொண்டு நின்றன ; வெம் கதிர் - சூரியனும், தண் கதிர் - சந்திரனும், விசும்பில் போக்கில - வானத்தில் செல்லுதலற்றனவாய், விலங்கி - (வழியினின்று) விலகி, மீண்டன - திரும்பின ; மங்குலும் - மேகங்களும், நெடு மழை - தன்னிடமுள்ள மிக்க மழை, வறந்து - காய்ந்து போய், சாய்ந்தது - வற்றியது. ஆல், அசை.

அண்டம் கலங்கிற்று என்று கூறியதை இச் செய்யுளில் ஓரளவு விளக்குகின்றார். திமிர்த்தல் - மரத்துப் போதலும் ஆம். விலங்கி மீண்டன என்றதால் அவை தம் இடத்திற்கே திரும்பின என்று கொள்க. மங்குல் - மேகம் ; 'மங்குறோய் மணிமாட......... நெடுவீதி' (தேவா. 41, 7) ; சாய்தல் - வற்றுதல் ; 'கான்யாற்றுக் கடும்புனல் சாஅய்' (அகநா. 25).

பி - ம். 1. அடங்கிற்றுதலின்.
2. பொங்கின, பொங்கியது ; அமர்ந்தன ; விசும்பிற் போகில.
3. வெங்கதி ரிரவியும்.
4. மங்குவ ; புனல் மழை ; மழை தழைத்தலால் ; மங்குலி னெடும்புயன் மழைவறந்ததால்.

78

3721. திசைநிலை கடகரி செருக்குச் சிந்தின
அசைவில வேலைக ளார்க்க வஞ்சின
விசைகொடு விசாகத்தை நெருக்கி யேறினன்
குசனென மேருவுங் குலுக்க முற்றதே.

குசன் - அங்காரகன், விசை கொடு - விரைவாக, விசாகத்தை நெருக்கி ஏறினன் - விசாக நட்சத்திரத்தில் நெருக்கி ஏறினன் ; என - எனவே, (கெட்ட அறிகுறியாக), திசைநிலை கடகரி - திசைகளில் நிலையாகவுள்ள மத யானைகள் எட்டும், செருக்கு சிந்தின -

தமது மதச் செருக்கு ஒழியப் பெற்றன; வேலைகள் அசைவு இல ஆர்க்க அஞ்சின - கடல்கள் அசைவற்றனவாய் ஒலிப்பதற்கும் அஞ்சின, மேருவும் குலுக்கம் உற்றது - அசையாத மேரு மலையும் சலிக்கத் தொடங்கியது. ஏ : அசை.

திசைநிலை கடகரி - திக்குகளிலிருந்து உலகினைத் தாங்கும் எட்டு யானைகள்; கிட்கிந்தா. 441 உரை பார்க்க. 'திக்கயங்களும் மதச் செருக்குச் சிந்தின' (கிட்கிந்தா. 243); கடகரி; 'துணை வெங்கபோல விசட கடகரி' (வி. பா. 16ஆம். 72); செருக்கு - மதத்தாலுண்டான மயக்கம். வேலைகள் அஞ்சின - மரபு வழுவமைதி. விசாகம் - இட்சுவாகு வங்கிசத்தாரின் நட்சத்திரம். அவர்கள் ஜன்ம நட்சத்திரத்தில் அங்காரகன் புகுந்தது அந்த வங்கிசத்தவர்க்கே ஓர் கெட்ட அறிகுறி என்பது 'ஆக்ரம் யாங் காரகஸ் தஸ்தௌ விசாகா மபிசாம்பரே' என்பது வான்மீகம். மற்றும் குசன் விசாகத்தை விருச்சிக ராசியில் நெருக்கி ஏறினன். அதாவது; வக்கிரித்துச் சென்றான். போர்க்கோளாகிய அங்காரகன் விருச்சிகத்தில் வக்கிரிப்பது ஓர் உற்பாதம் என்பதறிக. மேருவும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு; மலைக்கே அசலம் என்ற பெயருண்டு; அந்த மலையும் அசைந்தது: நிகழா நிகழ்ச்சி. குலுக்க முறுதல்: 'முலை குலுங்குமாகில் மாரன் முடி குலுங்கும் செய்யவாய்க், கஞ்சமுங் குலுங்குமாகில் நெஞ்சமுங் குலுங்குமே' (திருச்செந்திற் கலம்பகம்); கு - பூமி; குசனைப் பூமி புத்திரன் அல்லது பௌமன என்பர். ஆசிரியர் பலதுறைப் பயிற்சியுள்ளவர்; சோதிட சம்பந்தமான செய்திகள் சிலவற்றை இந்நூலில் ஆங்காங்குக் காணலாம். முன் செய்யுளில் ஆர்கலி பொங்கியது எனப்பட்டது. இங்கு ஒலியும் அவிந்தது எனப்பட்டது.

பி - ம். 2. அசைவிலா; ஆர்ப்ப.

3. விசையொடு; மிரதத்தை, மேகத்தை, ஒகுந்தை; நெருக்கிமேவிய; நெருங்கு, நெருக்கிமிக்கன.

4. மேற்கொண்ட. 79

3722. வானரத் தலைவனு மிளைய மைந்தனும்
ஏனையத் தலைவனைக் காண்கி லேமெனக்
கானகக் கரியெனக் கலங்கி னார்கடல்
மீனெனக் கலங்கினார் வீரர் வேறுளார்.

வாநரர் தலைவனும் - குரக்கரசனான சுக்கிரீவனும், இளைய மைந்தனும் - இலக்குவனும், ஏனை - பிறரும், 'அத் தலைவனை காண்கிலேம் - அந்தத் தலைவனான இராமபிரானைக்காண ஆற்றலில்லாதவராயினோம்', என - என்று சொல்லி, கானகம் கரி என கலங்கினர் - (இனத்திற்குத் தலைமையான யானையைக் காணப்பெறாத), காட்டு யானைகள் போன்று கலக்கமுற்றனர்; வேறுளார் ,வீரர் மீன் என கலங்கினர் - மற்றுமுள்ள வீரர்கள், (சேது பந்தனம் செய்த காலத்துக்) கடல் மீன் போன்று கலங்கினர்.

ஏனை - ஏனையோர். காட்டு யானைகள் குழாம் குழாமாக ஓர் தலைவனைப் பின் பற்றியே செல்லும் என்ப. 'இலங்கேந்து மருப்பினினம்பிரி யொருத்தல்' (மலைபடு. 298); யானைத் தலைவனை ஒருத்தல் என்பர்; (கலித். 46, 3 நச்; அகம். 78, 4 உரை); தலைமை வாய்ந்த ஆண் யானையை யானைத் தலைவன் எனக் கூறுதல் மரபு. 'ஊதத் தலைவனே யொத்துப் பொலிந்தது சந்திரசைலம்' (பால. வரைக்காட்சி. 7); ஒருத்தல் ஏந்தல் எனவும் வழங்கும். மீனெனக் கலங்கியது: சேது அணை கட்டியபோது; யுத்த. 555, 560 காண்க. வேறுளார் வீரர் எனக் கூட்டுக.

பி - ம். 1. தலைவரும்.
2. யாமுனைத்; காண்கிலாரெனக்.
3. கானகக்கிரி.
4. வீரர் மேலுளார், அம்பு வீய்ந்த நாள், ஆர்ப்பு விழ்ந்த நாள். 80

இதன்பின் 'நீலகிற' என்ற பாடல் ஓர் பிரதியில்.

## இராமபிரான் அவ்விராவணன்மீது அம்புகளை யெய்து வருத்தி அவன் தேர்க் கொடியையும் அழித்தல்

3723. எய்தன சரமெலா மிமைப்பின் முந்துறக்
கொய்தன னகற்றிவெங் கோலின் கோவையால்
நொய்தென வரக்கனை நெருங்க நொந்தன
செய்தன னிராகவன் றேவர் தேறினர்.

எய்தன சரம் எலாம் - (இராவணன்) விடுத்த வாளிகள் அனைத்தையும், இமைப்பின் முந்துற - கண்ணிமைப் பொழுதிற்கும் முன்னதாக, வெம் கோலின் கோவையால் கொய்தனன் அகற்றி - கடுமையான அம்புத் தொகுதியால் துணித்து நீக்கி, இராகவன் -

இராமபிரான், நொய்தின் - விரைவாக, அரக்கனை - இலங்கேசனை, நெருங்க - நெருங்குமாறு (செலுத்தி), நொந்தன செய்தனன் - அவன் மனம் நோதற்கான செயலைச் செய்தான்; (அதனால்) தேவர் தேறினர் - வானவர்கள் மனம் தேறினர்.

இமைப்பு - ஒரு மாத்திரை. கொய்தனன் - முற்றெச்சம். கோல் - அம்பு; 'கோலும் மழுவும் எழுவும் கொழுவும்' (யுத்த. 2894).

பி - ம். 1. காலையில்; எய்த்தற ; முன்னுறக்.
2. எய்தனன் விசும்பினை நிரப்பி, செய்தனன் விசும்பினை நிரப்பி.
3. நேர்ந்தன ; நேர்ந்தெனச். 81

வேறு

3724. தூணுடை நிரைபுரை கரமவை தொறுமக்
கோணுடை மலைநிகர் சிலையிடை குறையச்
சேணுடை நிகர்கணை சிதறின னுணர்வொ
டூணுடை யுயிர்தொறு முறைவுறு மொருவன்.

உணர்வொடு - நல்லறிவுடன், ஊண் உடை - (தன்னை) ஊணாக வுடையரான, உயிர் தொறும் - ஞானிகளிடத்தெல்லாம், உறைவுறும் ஒருவன் - (விருப்போடு) வசிப்பவரான திருமாலின் அமிசமுமான இராமபிரான், தூண் உடை நிரைபுரை - தூண்களினுடைய வரிசையை ஒத்தனவான, கரம் அவை தொறும் - (பத்துக்) கைகளிலும் கொண்டுள்ள, அ - அந்த, கோண் உடை - வளைதலையுடைய, மலை நிகர் சிலை - மலை ஒத்த விற்கள், இடை குறைய - நடுவிலே துண்டுபடும்படி, சேண் உடை - வெகுதூரம் செல்லுதலை உடையனவாய், நிகர் கணை - ஒளி கொண்ட அம்புகளை, சிதறினன் - வாரியிறைத்தான்.

இராவணனுடைய பத்துக் கரங்களிலும் இருந்த பத்து அம்புகளையும் இராமபிரான் இரண்டாகத் துணித்தான்; எல்லாவுயிர்க்குள்ளும் உள்ளான் இறைவன் என்னினும், அவனை இடைவிடாது நினைப்பவர் உள்ளத்தில் சிறப்பாக எழுந்தருள்வன் என்பது நூற்கொள்கை. 'நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்பன் பொன்னார் சடைப் புண்ணியன்' (தேவா. 1204:9); இடை குறைய -

நடுவே துணிபட; நிகர்: ஒளி. 'நீர்வார் நிகர்மலர்' (அகம். 22) சேண் உடை வெகுதூரம் செல்லுதலையுடைய. உயிர் தொறும் உறைவுறும் ஒருவன் - சருவ வியாபி அல்லது சர்வாந்தர்யாமி. 'ஊனுடையுயிர் என்பதற்குச் சகல இன்பத்தையும் துன்பத்தையும் அநுபவிக்கும் உயிர்' என்பது ஐயரவர்கள் குறிப்பு.

பி - ம். 1. தூணிடை; சுடுசர நிருதர்.
2. கோணிடை; மலைநுகர்; குலையச்.
3. சேணிடை; நிமிர்கணை, நிமிரனற்.
4. உணர்வுடை; முறையுறும். 82

இதன்பின் 'கயில்விரி' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3725. படையுக விமையவர் பருவரல் கெடவந்
திடையுறு திசைதிசை யிறுகுற விறைவன்
அடையுறு கொடிமிசை யணுகின னளவில்
கடையுக முடிகெழு கடல்புரை கலுழன்.

யுகம் கடை - கடையுக முடிவில், முடிகெழு - பொங்கி உயர்கின்ற, அளவில் கடல் புரை கலுழன் - அளவில்லாத கடல் போன்ற பெருந் தோற்றமுள்ள கருடன், படை உக - (இராவணனுடைய) விற்படை குறைபடுங்கால், இமையவர் பருவரல் கெட - தேவர்களது துன்பம் தொலைய, வந்து - (பூவுலகின் கண்) வந்து, இடை உறு - இடம் பொருந்திய, திசை திசை இறுகுற - பல திசைகளும் உறுதியாக நிலைத்தலைப் பொருந்த, இறைவன் - தலைவனாகிய இராமபிரானுடைய, அடை உறு - (தேரில்) அமைந்துள்ள, கொடிமிசை அணுகினன் - கொடிமீது சார்ந்தான்.

உக - உகுதல்; குறைதல். பருவரல் - துன்பம்; 'பருவரலின்பமென் றிரண்டும், ஒக்க நோக்கிய யோகரும்' (அபோத்தி. நகர்நீ. 215); இராமபிரான் தேர்மீது வெற்றிக் கொடியாகக் கலுழன் அமர்ந்தது; (ஒப்பு): அருச்சுனன் தேரில் அநுமன் கொடிமீதமர்ந்தது. வில்லி பாரதம்; முடிகெழு கலுழன் என இயைக்க.

பி - ம். 2. சிறை திசையிழுகுற, சிறைதிசை யிருளுற; இனைய.
4. முடியெமு, முடிவெழு. 83

இதன்பின் 'பண்ணவ' என்ற பாடல் ஓர் பிரதியில்.

3726. கயில்விரி வறவரு கவசமு முருவிப்
பயில்விரி குருதிகள் பருகிட வெயிலொ
டயில்விரி சுடுகணை கடவின னறிவின்
துயில்வழி யுணர்தரு சுடரொளி யொருவன்.

துயில்வழி - யோக நித்திரை புரியும்போதே, அறிவின் உணர் தரு - தன்னுடைய முற்றுணர்வினால் எல்லா நிகழ்ச்சிகளையும் அறியவல்ல, சுடர் ஒளி ஒருவன் - சோதி வடிவனான கடவுள், (இராம பிரான்), கயில் விரிவு அறவரு - மூட்டுவாய் விரிதலில்லாமல் உள்ள, கவசமும் - கவசத்தையும், உருவி - ஊடுருவிக் கொண்டு, பயில் விரி குருதிகள் பருகிட - (உடற்கண்) விரவியுள்ள மிக்க உதிரத்தைப் பருகுமாறு, வெயிலொடு - ஒளியுடனே, அயில் விரி - கூர்மை விரிந்த, சுடுகணை - சுட்டெரிக்கின்ற வாளிகளை, கடவினன் - செலுத்தினான்.

கயில் : கொக்குவாய் அல்லது மூட்டுவாய்; அறிவின் துயில் வழி யுணர்தரு சுடர் ஒளி ஒருவன் : இங்குத் திருமாலின் யோக நித்திரை அல்லது அறிதுயில் கூறப்பட்டது. 'ஒரு வினையு மில்லார்போல் உறங்குதியா லுறங்காதாய்' (ஆரணிய. 57). சுடு கணை : வினைத்தொகை. உணர்தரு ; தரு - துணைவினை.

பி - ம். 1. கயில் விரிவறவரி, கயில் விரிவுறவரு, கயில் பிரிவறவறக், கயில்விரி கடைபுணர்.
2. பயில்வரு.
3. அறிவுற்று, அறியும்.
4. உயிருடனென வுறை; துயிர் விரிவிழியுணர், துயில் பிரிவளிவுணர்.

3727. திசையுறு துகிலது செறிமழை சிதறும்
விசையுறு முகிழது விரிதரு சிரனொ
டிசையுறு கருவியி னினிதுறை கொடியைத்
தசையுறு கணைகொடு தரையுற விடலும்.

திசை உறு - திக்கில் பொருந்திய, துகிலது - ஆடையுடையதும், செறி - நெருங்கிய, மழை சிதறும் - மழையைச் சிதறக் கூடிய, விசை உறு முகிழது - வேகம் பொருந்திய அரும்பு போன்ற

உறுப்பினையுடையதும், விரிதரு சிரனொடு - அகன்ற தலையுடனே, இசை உறு கருவியின் - இசையும் அமைந்த கருவியாகிய வீணை, இனிது உறை கொடியை - இனிதாக அமையப்பெற்ற (இராவணனுடைய தேர்க்) கொடியை, (இராமபிரான்) தசை உறு - தசை படிந்துள்ள, கணை கொடு - அம்பினைக் கொண்டு, தரை உற விடலும் - தரையிற் படுமாறு தள்ளுதலும். விடலும் என்ற எச்சம் அடுத்த செய்யுட்கண் 'நண்ணலும்' என்ற சொல்லொடும் சென்றியையும்.

இராவணன் கொடி வீணைக் கொடி; அவன் கந்தர்வ வேதம் வல்லான் ஆதலின் இக் கொடியை ஏற்றான். 'வீணைக் கொடி யொன்று கிடந்தது பார்மேல்' (ஆரணிய. 911, 971)ம் காண்க. சிரம் - சிரன்; போலி. பகைவர் மார்பில் பாய்ந்து வெளி வந்த தாகலின் 'தசையுறு கணை' எனப்பட்டது.

பி - ம். 3. கருவியினிலகுறு, இனிதுயர்.

4. திசையுறவுரமி. 86

இதன்பின் 'படையுக' என்ற பாடல் ஓர் பிரதியில்.

## இராமபிரான் தேர்க்கொடியில் கருடன் வந்தமர்தலும் வானவர் கவலைதீர்தலும்

3728. பண்ணவ னுயர்கொடி யெனவொரு பரவைக்
கண்ணக னுலகினை வலம்வரு கலுழன்
நண்ணலு மிமையவர் நமதுறு கருமம்
எண்ணல முனிவின னிவறின னெனவே.

ஒரு - ஒப்பற்ற, பரவை கண்ணகன் உலகினை - கடலாற் சூழப்பட்ட இடமகன்ற உலகினை, வலம்வரு கலுழன் - வலமாகச் சுற்றிவரக்கூடிய கருடன், பண்ணவன் உயர் கொடி என - இராம பிரானுடைய சிறப்பமைந்த கொடியாகும் என்று, நண்ணலும் - பெருமானுடைய கொடியில் வந்து பொருந்துதலும், இமையவர் - வானவர்கள், நமது உறு கருமம் இனி எண்ணலம் - இனிமேல் நமக்கு ஆகவேண்டிய செயலைப்பற்றி எண்ணமாட்டோம்; (ஏனென்றால், கருடன்) முனிவினன் - சினங்கொண்டவனாகி, (இப்

பெருமானுடைய தேர்மீது அமர்தற்கு) இவறினன் - ஏறிக்கொண்டனன்', என - என்று மொழிதலும்; ஏயினன் என அடுத்த செய்யுளுடன் இயையும். ஏ: அசை.

பண்ணவன்: 'பரக்கவென் பகர்வது பகழி பண்ணவன்' (ஆரணிய. 7, 8); 'பண்ணவற் கிவன் பிழைக்குமேல்' (யுத்த. பிரமாத்திர. 80); பரவை: பரந்திருப்பது என்று கடலுக்குக் காரணக்குறி. கண் அகன்: இடமகன்ற; நாகபாச. 29. வலம்வரு, 'குண்டலங்கள் குலவரையை வலம் வருவான்' (ஆரண்ய. 557); நமது கருமம் எண்ணலம்; நமக்கு ஆகவேண்டிய நன்மையைப் பற்றி இனி எண்ணவேண்டுவதின்று; நம் காரியமாகத் திருவவதாரம் செய்துள்ள பெருமானுக்கு இனி வெற்றியே என்று தேரினர் அமரர். இவறுதல்: ஆசை கொள்ளுதல்; 'ஈட்டமிவறி' (குறள். 1003).

பி - ம். 1. கொடியினை; யினையுறு; பறவை.

3. நாமுறு கருமம்.

4. எண்ணல முனிவினன்றிவறின னெனவே, எண்ணலா முனிவனிவறின னெனவே, எண்ணின முனிவரோ டெய்தின னெனவே. 86

## இராமபிரான் இராவணன்மீது தாமதாத்திரம் விடுதலும் அதன் செயலும்

3729. ஆயதொ ரமைதியி னறிவினி னறிவான்
நாயக னொருவனை நலிகில துணர்வான்
ஏயின னிருளுறு சரமழை யெனுமத்
தீவினை தருபடை தெறுதொழின் மறவோன்.

ஆயது ஓர் அமைதியின் - அப்படிப்பட்ட ஓர் தருணத்தில், தெறு தொழில் மறவோன் - அழிக்கும் கருத்தை மேற்கொண்டு, பாவமே புரியும் கொடியோனான இராவணன், அறிவினின் அறிவான் - ஞானத்திலேயே உணர்தற்கு உரியவன் ஆன, ஒருவனை - ஒப்பற்ற, நாயகன் - உலகத்தின் இறைவனான இராமபிரானை, நலிகிலது - (தான் செலுத்திய அம்புகள் ஒன்றும்) வருத்தாமையை, உணர்வான் - தெரிந்துகொண்டவனாய், இருள் உறு - இருட்டை விளைக்கின்ற, சரம் மழை எனும் - சரமழை என்

இன்ற, அ தீவினை தருபடை - அந்தக் கெடுதியைச் செய்கின்ற படையை, ஏயினன் - விடுத்தான்.

அறிவினினறிவான் - ஞானிகளாலேயே உணரப்படுபவன்; 'ஞானத்தாற்றொழுவார் சில ஞானிகள்' (தேவா. 1204, 3); ஒருவன் நாயகனை என விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. இருள் உறுசரம்; தாமதாத்திரவர்ஷம்; தமஸ் என்ற வடசொல் இருள் என்றுபொருள் படும். தெறுதல் - அழித்தல்; 'போர் தெறுமாமறவோர்' (யுத்த. நிகும்பிலை. 41); தீவினை: 'தீவினை தீய நோற்றுத் தேவிற் பெற்றதென்றுள்' (ஆரணிய. 260).

பி - ம். 1. அறிவுனுளறிவன், அறிவினனமையும்.

2. நலிகிலதுணரான், நலிகிலதுணரா, நல்கின னுணரான்.

3. தாமதமெனுமத்.

4. தீயென வருபடை. 87

இங்கு அதிகப்பாடல் :—

உமையவன் ஒருபுடை யுடையவ னுதவிய
தமைவுறும் மயல்வினை யளவில புரிவது
சுமைபெறும் உலகொரு நொடிவரை தொடருவ
திமையவ ரடச்வலி பருகிய தெளிமையின்.

3730. தீமுக முடையன சிலமுக முதிரந்
தோய்முக முடையன சுரர்முக முடைய
பேய்முக முடைய பிலமுக நுழையும்
வாய்முகம் வரியர வனையன வருவ.

(மேற்கூறிய தாமதாத்திரத்தால் பிறந்த அம்புகளில்) சில முகம்-சிலவற்றின் முகம், தீ முகம் உடையன-அனலை உமிழ்கின்ற முகம் உடையன ஆம்; (சில முகம்) உதிரம் தோய் முகம் உடையன - இரத்தம் படிந்த முகங்களை உடையன; (சில முகம்) சுரர் முகம் உடைய - தேவர்களின் முகத்துடன் கூடியன; (சில முகம்) பேய் முகம் உடையன - பேய்களின் முகத்துடன் கூடியன; (சில முகம்) பிலம் முகம் - பிலத்தில், நுழையும் - புகுகின்ற, வாய்முகம் - வாயுடன் இயைந்த முகத்தைக் கொண்டு, வரி அரவு அனையன - கோடுகளுடன் கூடிய பாம்பினை ஒத்தனவாய், வருவ - வருவன.

தோய் முகம் - வினைத்தொகை; பில முகம் - பிலத் துவார மாகிய பொந்து.

பி - ம். 1. வான்முகம்.
4. விரியர வணையன. 88

3731. ஒருதிசை முதல்கடை யொருதிசை யளவும்
இருதிசை யெயிறுற வருவன பெரிய
கருதிய கருதிய புரிவன கனலும்
பருதியை மதியொடு பருகுவ பகழி.

(மேலும்) பகழி - அந்த அம்புகள், ஒரு திசை முதல் - ஒரு திக்கின் தொடக்க முதலாக, கடை ஒரு திசை அளவும் - (அதற்கு நேர் எதிரான), ஒரு திக்கின் முடிவுவரையிலும், இரு திசை - இரண்டுபக்கத் திசைகளிலும், எயிறு உற - தம் விடப் பற்கள் பொருந்த, வருவன - வருவன; பெரிய - மிகப் பெரியவை; கருதிய கருதிய புரிவன - (தன்னை ஏவினவன்) நினைந்தவற்றையெல்லாம் ஆற்றவல்லன; கனலும் - அழற்றும் தன்மையுள்ள, பருதியை - சூரியனை, மதியொடு பருகுவ - சந்திரனுடன் பருகும் இயல்பின.

இரு திசை - இரண்டுபக்கத் திசைகள். பருதி - சூரியன்; 'பருதியொத் திலங்கும் பைம்பூண்' (யுத்த. திருமுடி. 2).

பி - ம். 2. எரியக், வெருவ.
4. புரிவன வழலுறு சுழலும். 88

3732. இருளொரு திசையொரு திசைவெயில் விரியும்
சுருளொரு திசையொரு திசைமழை தொடரும்
உருளொரு திசையொரு திசையுரு முரலும்
மருளொரு திசையொரு திசைசிலை வருடம்

(மற்றும் அத்தாமதாத்திரத்தால்) ஒரு திசை இருள் - ஒரு திக்கின் இருளும், ஒரு திசை - பிறிதொரு திசையில், வெயில் விரியும் - வெயிலும் பரவும்; ஒரு திசை சுருள் - ஒரு திக்கில் சுழல் காற்றும், ஒரு திசை - பிறிதொரு திக்கில், மழை தொடரும் -

மழை தொடரும்; ஒரு திசை உருள் - ஒரு திக்கில் சக்கரமும்' ஒரு திசை உரும் முரலும் - பிறிதொரு திக்கில் இடியும் ஒலிக்கும்; ஒரு திசை மருள் - ஒரு புறத்தில் மயக்கம் (மிக), ஒரு திசை - பிறிதொரு புறத்தில், சிலை வருடம் - கல்மழை (பொழியும்).

ஒன்றுக்கொன்று எதிரிடையான பலவற்றையும் விளக்கும் அப்பகழிகள் என்க. முரலுதல் - ஒலித்தல்; 'வண்டின முரலும் சோலை' (திவ். திருமாலை. 14). வருடம் - வருஷம் என்ற வடசொல் திரிபு; சிலை வருடம் - கல்மழை.

பி - ம். 1. எரியெரியின்.

3. யுருமிடலும்.

4. திசை செலவருடம், திசையில வருடம்; திசையில வடரும். 90

## இராமபிரான் சிவன் வாளியை விடுதல்

3733. இனையன நிகழ்வுற வெழுவகை யுலகும்
கனையிருள் கதுவிட வமரர்கள் கதற
வினையுறு தொழிலிடை விரவலும் விமலன்
நினைவுறு தகைமையி னெறியுறு முறையின்.

இனையன நிகழ்வு உற - இத்தகைய நிகழ்ச்சிகள் நிகழா நிற்க, கனை இருள் - அடர்ந்த இருட்டானது, எழுவகை உலகும் - எழு வகையான உலகங்களையும், கதுவிட - கவ்விக்கொள்ளவும், அமரர்கள் கதற - தேவர்கள் வாய்விட்டலறவும், வினை உறு தொழில் இடை - தீவினையினால் நேர்ந்தாலொத்த செயலிலே, விரவலும் - (இப்புவனம்) சிக்கிப் பொருந்துதலும், விமலன் - குற்றமற்ற, இராமபிரான், நெறிஉறு முறையின் நினைவுறும் தகைமையின் - நேர்மையான வழியினால் நினைகின்ற தகைமையால்; கருதி விடுதலும் என்ற அடுத்த செய்யுளுடன் தொடரும்.

கதுவுதல்: 'கல்லும் மரமுங் காமுங் கதுவ' (யுத்த. 2893); 'கடுத்தகராம் கதுவ நிமிர்' (ஆரணிய. 49).

பி - ம். 2. கதுவிடவுயிரிடை.

3. வினையறு; தொழிலிகை.

4. வினையுறு; தகைபினன். 91

3734. கண்ணுத லொருவன தடுபடை கருதிப்
பண்ணவன் விடுதலு மதுநனி பருக
எண்ணுறு கனவினொ டுணர்வென விமையில்
துண்ணெனு நிலையினி னெறிபடை தொலைய.

கண்ணுதல் ஒருவனது அடுபடை - நெற்றிக் கண்ணனும் ஒப்பற்றவனுமான சிவபெருமானுடைய கொல்லும் தன்மையுள்ள அத்திரத்தை, கருதி - நினைந்து, பண்ணவன் விடுதலும் - இராம பிரான் ஏவுதலும், அது - அந்த சரம், நனிபருக - தாமதாத் திரத்தை மிகவும் பருகியதனால், எண்ணுறு - கருதப்படுகின்ற, கனவினோடு உணர்வு என - கனவுடன் நனவு போல, (கனவில் காணும் பொருள் நனவில் மறைந்து ஒழிதல்போல), இமையில் - கண்ணிமைக்கும் நேரத்திற்குள், துண்ணெனு நிலையினில் - யாரும் அச்சங்கொள்ளும் நிலைமையில், எறிபடை தொலைய - அரக்கன் எறிந்த தாமதாத்திரம் அழிந்துபட; எரிந்த கண்ணினன்', என்ற அடுத்த செய்யுளுடன் தொடரும்.

நுதற்கண் உடையவன் - சிவபிரான்; 'முழுமுதற்கண்ணுதல் முருகன்தாதை' (சுந்தர 909); 'நஞ்சங் கொண்ட கண்ணுதலைப் போல் நகுகின்றான்' (சுந்தர. 181); 'கண்ணுதலொழியச் செல்லும் கயிலையிங்கிரியும் மொத்தான்' (சுந்தர. 26); கண்ணுதலொருவனது அடுபடை: பாசுபதாத்திரம். பண்ணவன்' யுத்த. 3723. அது என்றது தாமதாத்திரத்தை. உணர்வு: நனவு; துண்ணெனல்: அச்சக் குறிப்பு

பி - ம். 1. ஒருவனை; தருபடை

2. தனிபருக.

3. எண்ணுவ; எண்ணரிறு; விடவிற்.

4. நிலையின, நிலைமையின். 92

## வேறு

## இராவணன் பல பாணங்களை இராமன் திருமேனியில் அழுந்தவிடுதல்

3735. விரிந்த தன்படை மெய்கண்ட பொய்யென வீய்ந்த
எரிந்த கண்ணின னெயிற்றிடை மடித்தவா யினன்தன்
தெரிந்த வெங்கணை கங்கவெஞ் சிறையன்ன திறத்தான்
அரிந்த மன்திரு மேனிமே லழுத்திநின் றார்த்தான்.

விரிந்த - பரந்திருந்த, தன்படை - தனது தாமதாத்திர மானது, மெய்கண்ட பொய் என வீய்ந்த - மெய்யைக் கண்டபொய் போன்று அழிந்ததாக, எரிந்த கண்ணினன் - தீயுமிழ்கின்ற விழிகளையுடையவனும், எயிறு இடை - பற்களினிடையே, மடித்த வாயினன் - மடித்த வாயினை யுடையவனுமான இராவணன், வெம் கங்கம் - கொடிய பருந்திற்கு, சிறை அன்ன - கட்டப்பட்டனவும், தெரிந்த - தெரிந்தெடுத்தனவுமான, தன் - தன்னுடைய, வெம் கணை - கொடிய அம்புகளை, திறத்தான் - வன்மையுடன், அரிந்த மன் - பகைவரை அடர்க்க வல்லவனான இராமபிரானுடைய, திரு மேனி மேல் அழுத்தி நின்று ஆர்த்தான் - திருமேனிமீது அழுத்தி நின்று ஆர்ப்பரித்தான்.

மெய் கண்ட பொய்: (ஒப்பு) 'அறத்தின் முன் நில்லாதாம் பாவம்'; எரிந்த கண். மடித்தவாய்: வெகுளியின் மெய்ப்பாடு; 'வாய் மடித்துருத்து நக்கான்' (சுந்தர. 985); கங்கம்: கழுகு; அரிந்தமன்: பகைவரை அழிப்பவன்; 'அரிந்த மன்றன்னை யொன்று மாற்றலது' (யுத்த. 2658); 'அரிந்தம நின்னையண்மி' (கிட்கிந்தா. 417).

பி - ம். 1. மெலிய வீந்தமை கண்டே; பொய்யென வீய.

2. எயிற்றினை; கடித்தனனெரியத்.

3. தெரிந்த வெங்கணை புவிந்திட வெஞ்ச மரதனல், தெரிந்த.........
திறத்த.

## இராவணன் ஆசுராத்திரம் விடுதல்

3736. ஆர்த்து வெஞ்சினத் தாசுரப் படைக்கல மமரர்
வார்த்தை யுண்டதின் னுயிர்களான் மறலிதன் [வயிற்றைத்
தூர்த்த திந்திரன் துணுக்குறு தொழிலது தொடுத்துத்
தீர்த்தன் மேல்வரத் துரந்தன னுலகெலாந் தெரிய.

(இராவணன்), ஆர்த்து - பெருமுழக்கம் செய்து, அமரர் வார்த்தை உண்டது - வானவர் புகழுரையை யுண்டதும், இன் உயிர்களால் - இனிய உயிர்களால், மறலிதன் வயிற்றை தூர்த்தது - யமனுடைய வயிற்றை நிறைத்ததும், இந்திரன் துணுக்குறு தொழிலது - இந்திரன் திடுக்குடும்படியான செய்கை யுடையது மான, வெம் சினத்து ஆசுரர் படைக்கலம் - மிகவும் தீவிரமான அசுர வாளியை, உலகு எலாம் தெரிய - உலகினர் யாவரும் காணுமாறு, தீர்த்தன் மேல்வர துரந்தனன் - தூய மூர்த்தியான இராமபிரான் மேல் செல்லுமாறு விடுத்தான்.

வார்த்தை - புகழ். மறலி - யமன்; 'இரை செய்வேன் மறலிக்கினி யென்னுமால்' (யுத்த. 3924). துணுக்குற: 'சொற்றது கேட்டலோடும் துணுக்குற' (யுத்த. 2832). தீர்த்தன்: 'தீர்த்தனை தருளை நோக்கி' (யுத்த. 446); 'தீர்த்தனை வாழ்த்தி' (யுத்த. 2272). உலகு: இடவாகு பெயர்.

பி - ம். 1. ஆர்ந்த; அரக்கன்வெம், அசுரர்தம்.
3. பலந்தனைத் தொலைந்தது.
4. மேல் செலத்; உலகங்கடிரிய. 94

## அசுரவாளியை அங்கிப்படையால் இராமபிரான் சேதித்தல்

3737. ஆசு ரப்பெரும் படைக்கல மமரரை யமரின்
ஏசு விப்பதெவ் வுலகமு மெவரையும் வென்று
வீசு வெற்பிறத் துரந்தவெங் கணையது விசையின்
பூசு ரர்க்கொரு கடவுண்மேற் சென்றது போலாம்.

அமரரை அமரின் ஏசுவிப்பது - வானோரைப் போரில் பழியுறச் செய்வதும், எ உலகமும் எவரையும் வென்று - எவ்வுலகத்து முள்ள எவரையும் வெற்றிகொண்டு, வீசு - (தன்மீது) வீசிய, வெற்பு - மலைகளை, இற - பிளக்கும்படி, துரந்த - வெளியிட்ட, விசையின் வெம் கணையது - விரைவுடன்கூடிய கொடிய அம்பு களை உடையதுமான, ஆசுரர்பெரும் படைக்கலம் - அந்த ஆசுரம் என்ற கடுமையான வாளியானது, பூசுரர்க்கு - பிராமணர்க்கு, ஒரு கடவுள் மேல் - ஒப்பற்ற கடவுளான இராமபிரான்மீது, சென்றது - படர்ந்தது.

அமரரை யமரின் என்ற இடத்து இணை எதுகை. ஏசுதல் - பழித்தல்; இங்கு ஏசுவிப்பது என வந்தது; 'உய்ஞ்சிவர் போய் விடின், நாய்க்குக னென்றனை ஏசாரோ' (அயோத்தி. குகப். 14); 'கள்வனூ ரிருந்தவ ளிவளென வேசநிற்பேனோ' (சுந்தர. 507); 'ஏசி யிடலி னிடாமையே நன்று' (தனிப். ஒளவை). விசையின் வெங்கணையது என்று மொழி மாற்றப்பட்டது. பூசுரர் - நிலத் தேவர், பிராம்மணர். பூசுரர்க் கொரு கடவுள்: 'பூசுரர்க் கலக்க ணீந்தான்' (யுத்த. 916); 'பூசுரா, விண்கொண்ட செந்தழல்வாய் வேகுதே அய்யய்யோ, மண்தின்ற பாணமென்ற வாய்' (தனிப்பா.). போலாம்: ஒப்பில் போலி.

பி - ம். 2. எவ்வுலகையும்.

3. உறுவெங்கணை யெனவவை விரையிற், உறத்துறந்தன வெங்கணை விசையிற்.

4. சென்றன; போலும். 95

3738. நுங்கு கின்றதிவ் வுலகையோர் நொடிவரை யென்ன
எங்கு நின்றுநின் றலமரு மமரர்கண் டிரைப்ப
மங்குல் வல்லுரு மேற்றின்மே லெரிமடுத் தென்ன
அங்கி தன்னெடும் படைதொடுத் திராகவ னறுத்தான்.

இ உலகை - இந்த உலகினை, ஓர் நொடிவரை நுங்குகின்றது என்ன - (அசுர வாளியானது) ஒரு நொடிப்பொழுதில் விழுங்கு கின்றது என்று, எங்கும் - எல்லாப் பக்கங்களிலும், நின்று நின்று - ஓயாமல் நின்றுகொண்டு, அலமரும் - மனம் சுழல்கின்ற, அமரர் கண்டு இரைப்ப - தேவர்கள் கண்ணுற்று (உவமையால்)

பெருமுழக்கம் செய்ய, மங்குல் - மேகத்தில் உள்ள, வல் - வலிய, உரும் ஏற்றின்மேல் எரி மடுத்தென்ன - இடியேற்றின்மீது நெருப்பு மிக்குப் படிந்தாற்போல, அங்கிதன் - அக்கினி பகவானுடைய, நெடு - நீண்ட, படை தொடுத்து இராகவன் அறுத்தான் - வாளியை விடுத்து இராமபிரான் (அந்த அத்திரத்தைத்) துணித்தான்.

நுங்குதல் - விழுங்குதல்; 'காகாதிகள் நுங்குதல் காணுதியால்' (யுத்த. 1742); 'மகரவாய் நுங்கியசிகழிகை' (கலித். 54). மங்குல் - மேகம்; 'மங்குலிற் பொலிந்த ஞாலம் மாதுமையுடைத்து' (சுந்தர. 1130). மடுத்தது என்ன என்பது மடுத்தென்ன. அங்கி: அக்னி என்பதன் திரிபு.

பி - ம். 1. நொடிவயினென்ன.
2. எங்குமெங்கு நின்றமரர்கள் கண்புடைத்து, எங்குமெங்கு நின்றலம் வருமமரர் கண்டு; இமைப்ப.
4. அவிந்தான். 96

## இராவணன் பலபடை தூரக்க இராமபிரான் முனிவர் பாராட்டும்வண்ணம் அவற்றைப் பிறைமுக அம்புகளால் அறுத்தல்

3739. கூற்றுக் கோடினுங் கோடல கடலெலாங் குடிப்ப
நீற்றுக் குப்பையின் மேருவை நூறுவ நெடிய
காற்றுப் பின்செலச் செல்வன வுலகெலாங் கடப்ப
நூற்றுக் கோடியம் பெய்தன னிராவண னெடியில்.

கூற்று கோடினும் - யமன் தன்னுடைய கொல்லுதல் தொழிலினின்று வழுவினும், கோடல - பிறழாதனவும், கடல் எலாம் குடிப்ப - கடல்நீர் அடங்கலும் பருகுவனவும், மேருவை - மேரு பர்வதத்தை, நீறு குப்பையின் நூறுவ - புழுதித் தொகுதி போல் ஆகுமாறு பொடிசெய்வனவும், நெடிய - நீண்டனவும், காற்று பின் செல - விரைவில் காற்றும் தமக்குப் பின்னிட, செல்வன - செல்வனவும், உலகெலாம் கடப்ப - உலகெல்லாம் தாண்டுவனவும் ஆன, நூறு கோடி அம்பு - நூறு கோடி அம்பு

களை, இராவணன் நொடியில் எய்தனன் - இராவணன் ஓர் கைந் நொடிப்போதில் விடுத்தான்.

கோடினும் என்ற உம்மை கோடாமையை விளக்கி நின்றது. கோடுதல் - பிறழ்தல்; 'கோடாத வேதனுக் கியான்செய்த குற்ற மென்' (கந்தரலங்.); 'கோடி யென்றனள் உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை. 81). மேருவை நீற்றுக் குப்பையின் நூறுவ எனக. நூறுதல் - பொடிசெய்தல்; 'கடித்துக் கரும் பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156). நெடிய காற்றுப் பின்செல என இயைத்தலுமாம். நொடி: கைந்நொடிக்கும் பொழுதாகிய ஓர் மாத்திரை அளவு.

பி-ம். 1. கோடலும் கோடும்; உலகெலாம்.

2. நீற்றுப்பையென; நூறுப நெடிய, நூறுவ நெரிய.

3. பின்செல வருவன.

4. நூற்றுக் கோடியிற். 97

3740. என்ன கைக்கடுப் போவென்பர் சிலர்சில ரிவையும்
அன்ன மாயமே யம்பல வென்பரவ் வம்புக்
கின்ன முண்டுகொ லிடமென்பர் சிலர்சில ரிகற்போர்
முன்ன மித்தனை முயன்றில னுமென்பர் முனிவர்.

முனிவர் சிலர் - முனிவரிற் சில்லோர், 'என்ன கைகடுப்போ - என்ன கைவிசையோ', என்பர் - என்று கூறுவர்; சிலர் - சில்லோர், 'இவையும் அன்ன மாயமே - இவையும் அத்தகைய மாயமே, அம்பு அல - வாளி அல்ல', என்பர் - என்று மொழிவர்; சிலர் - பின்னும் சில்லோர், 'அவ் அம்புகட்கு இன்னம் இடம் உண்டு கொல் - அப்படிப்பட்ட அம்புகளுக்கு இன்னம் இடம் உண்டு கொல்,' என்பர் - என்று பகர்வர்; சிலர்; 'முன்னம் - இதற்கு முன்பு, இகல் போர் - மாறுபாடுற்ற எந்தப் போரையும், இத்தனை முயன்றிலன் ஆம் - இத்தனை முயற்சியுடன் செய்திலனும்', என்பர் - என்று மொழிவர்.

கடுப்பு - விசை; 'கடுப்பின் கணமரரேயும்' (யுத்த. 1107). முனிவர் வியந்து கூறியது, 'இது மாயமே யொழியச் சரமல்ல; 'உண்டுகொ லிடமென்பர், ஆகாசத்துக்குள்ளே நாமிருக்கின்ற

இடமல்லாமல் வேறே நமக்கொளிக்க இடமுண்டோ என்றார்கள் தேவரும் முனிவரும்' என்பது ஸ்ரீ ஐயரவர்கள் குறிப்பு.

பி-ம். 1. சிலர்சில ரியையும்.

2. மாயமே யம்பரம் புக்கதென் றயிர்த்தார், மாயமா மம்பலம் புக்கதென் றயிர்த்தார், மாயமா வென்பரவ் வம்புக்கு.

4. முனைவர். 98

**3741. மறைமு தற்றனி நாயகன் வானினை மறைத்த**
**சிறையு டைக்கொடுஞ் சரமெலா மிமைப்பொன்றிற் றிரியப்**
**பொறைசி கைப்பெருந் தலைநின்றும் புங்கத்தி னளவும்**
**பிறைமு கக்கடு வெஞ்சர மவைகொண்டு பிளந்தான்.**

மறை முதல் தனி நாயகன் - வேத முதல்வனும் ஒப்பற்றவனுமான இராமபிரான், வானினை மறைத்த சிறை உடை - ஆகாய வீதியை மறைத்த சிறகை யுடையனவான, கொடு சரம் எலாம் - கடுமையான வாளிகள் அனைத்தையும், இமைப்பு ஒன்றில் - கண்ணிமைக்கும் நேரமாகிய ஒரு மாத்திரைக்குள்ளாக, திரிய - உருக்குலையுமாறு, பிறைமுகம் கடு வெம் சரம் அவை கொண்டு - அர்த்தசந்திரன் என்று சொல்லும் கடுமையான வெவ்விய அம்புகளைக் கொண்டு, பொறை - பாரமான, சிகை பெரு தலை நின்றும் - உச்சியினையுடைய பெரிய தலையினின்றும், புங்கத்தின் அளவும் - கூரிய நுனி வரையிலும், பிளந்தான் - பிளவுபடும்படி செய்தான்.

மறைமுதல்; (ஒப்பு): 'யாவருற வென்றான் வேதமுதல்' (ஆரணிய. 257). இராமபிரான் மறைகட்கு மூலபுருஷன்; 'அன்னமா யருமறைக ளறைந்தாய்நீ' (ஆரணிய. 60); மற்றும்,; பெரியதிரு. 2:7:10, 9:4:2; தொல். சொல். 146 நச். உரை; (வி. பா. துருவாச. 11. கடு வெம சரம் என்றதில் கடுமை விரைவையும், வெம்மை வெப்பத்தையும் குறித்தன. கொண்டு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு.

பி-ம். 2. சிறையுடைக் கொடுஞ் சரமெலா மிமையொன்றில், சிறைமுகக் கடுங் கணையெலா மம்பினிற்.

3. அறைசிதைப், அறைநிறைப்.

4. பிறைமுகப் பொருந்; கொடுஞ் சரங்களிற் பூரந்தெனப், கொடுஞ் சரங்களா லங்கத்தை, தடங்கடுங் கொடுஞ்சரம் கொண்டு, கொடு நெடுங் கடுஞ் சரங்களாற்.
99

## இராவணன் விடுத்த மாயாஸ்திரத்தைக் காந்தர்ப்பக் கணையால் இராமபிரான் ஒழித்தல்

3742. அயன்ப டைத்தபே ரண்டத்தி னருந்தவ மாற்றிப்
பயன்ப டைத்தவ ரியாரினும் படைத்தவன் பல்போர்
வியன்ப டைக்கலந் தொடுப்பெனு னினியென
[விரைந்தான்
மயன்ப டைக்கலந் துரந்தனன் தயரதன் மகன்மேல்.

அயன் படைத்த - பிரமதேவனால் படைக்கப்பட்ட, பேர் அண்டத்தின் - பெரிய அண்டத்தினுள், அரு தவம் ஆற்றி - அரிய தவத்தைப் புரிந்து, பயன் படைத்தவர் யாரினும் படைத்தவன் - பயன் பெற்றவர் யாவரினும் (பெரும்பயன்) படைக்கப்பெற்றவனான இராவணன், 'இனி - இப்போது, பல் போர் - பலவான போர்களினும் பயன்படுத்திய, வியன் படைகலம் - பெருமைவாய்ந்த போர்க்கருவியை, நான் தொடுப்பென் - நான் விடுவேன்', என விரைந்தான் - என்று விரைந்தவனாய், தயரதன் மகன்மேல் - தயரதன் புதல்வனான இராமபிரான்மேல், மயன் படைகலம் துரந்தனன் - மயன் வாளியை விடுத்தான்.

அருந்தவம் - செய்தற்கரிய தவம்; 'அருந்தவ மென்றுணை யாள விவன்புவி யாள்வானே' (அயோத்தி. குகப். 18). மயன் - தெய்வத் தச்சன். சக்கரவர்த்தித் திருமகனாக அவதரித்து அயோத்தியில் சார்வபௌமனாக ஆட்சிபுரிந்து வாழவேண்டியிருக்க, விதிவசத்தால் காடு போந்து, மனைவியைப் பிரிந்து ஓர் அரக்கன் படைக்கலத்திற்கு இலக்காக இருந்த அவல நிலைக்கிரங்குவான், தயரதன் மகன்மேல் எனப்பட்டது.

பி - ம். 2. யாரையும்.
3. இனியென்று.
4. படைக்கலந் தொடுத்தனன். 100

3743. விட்ட னன்விடு படைக்கலம் வேரொடு முலகைச்
சுட்ட னன்னெனத் துணுக்கமுற் றமரருஞ் சுருண்டார்
கெட்ட னம்மென வானரத் தலைவருங் கிழிந்தார்
சிட்டர் தந்தனித் தேவனு மதனிலை தெரிந்தான்.

'விட்டனன் - தொடுத்து விடுத்தவனாகிய இராவணன், விடு - (தான்) விடுத்த, படைகலம் - அந்த வாளியால், உலகை வேரொடு சுட்டனன் - உலகத்தை வேரொடும் சுட்டு ஒழித்தான்', என - என்று, அமரரும் - தேவரும், துணுக்கம் உற்று சுருண்டார் - அச்சம் கொண்டு சுருண்டார்; 'கெட்டனம் - நாம் தொலைந்தோம்', என - என்று வெருவி, வானரர் தலைவரும் கிழிந்தார் - குரக்குத் தலைவரும் பிளவுபட்டோடினர்; சிட்டர் தம் - சிரேட்டர்களுடைய, தனி தேவனும் - ஒப்பற்ற தேவனான திருமாலும், அதன நிலை தெரிந்தான - அந்தப் படைக்கலத்தின் தன்மையை அறிந்துகொண்டான்.

வேரொடும்: 'வேரொடு மரர்தம் புகழ் விழுங்கினுண' (சுந்தர. 1115). அமரரும்: உம்மை உயர்வு சிறப்பு. சிட்டர்: சிரேட்டர் என்ற வடசொல்லின்றிரிபு; 'சிட்டர் செயல் செய்திலை' (யுத்த. 64). அதன் நிலை - அந்தப் படைக்கலத்தின் இயல்பு.

பி - ம். 1. மயன் படைக்கலம்.
2. சுட்டனனெனும்.
3. கிளர்த்தார். 101

3744. பாந்தட் பஃறலைப் பரந்தகன் புவியிடைப் பயிலும்
மாந்தர்க் கில்லையால் வாழ்வென வருகின்ற வதனைக்
காந்தர்ப் பம்மெனுங் கடுங்கொடுங் கணையினுற் [கடந்தான்
ஏந்தற் பன்மணி யெறும்வலித் திரள்புயத் திராமன்.

'பாந்தள் - ஆதிசேடனாகிய அரவின், பல்தலை - பல தலைகளிலே, பரந்து - பரவி, அகல் - விரிந்துள்ள, புவி இடை பயிலும் - பூமியிலே வாழ்கின்ற, மாந்தர்க்கு - மன்பதைகட்கு, வாழ்வு இல்லை - இராமபிரானுக்கு வாழ்ச்சியில்லை', என - என்னுமாறு, வருகின்ற - வருகின்ற, அதனை - அந்த மயன்வாளியை, ஏந்தல் - மலை நிகர்த்தனவும், பல்மணி - பல மணிகளால் இயன்ற அணிகள் பூண்டற்குரியனவுமான, எறும்வலி - மிக்க வலியினையுடைய, திரள் - திரண்ட, புயத்து இராமன் - புயங்களையுடைய இராமபிரான், காந்தர்ப்பம் எனும் - கந்தருவம் எனப்படுகின்ற, கடு கொடு கணையினால் கடந்தான் - கடுமையான கொடிய அம்பினால் அழித்தான். ஆல்: அசை

பஃறலைப் பாந்தள் - ஆதிசேடன்; 'சகச்சிர பணபணி மண்டல மண்டிதே' (வேதம்); 'மாந்தர்: நித்யபகுவசனம். வாளி வரும் விசையால் இறப்பு நிச்சயம் என்பது தோன்ற 'இல்லையால் வாழ்வெனப்பட்டது'. கந்தர்வ சம்பந்தம் காந்தர்ப்பம். ஏந்தல்: மலை 'ஏந்தல் பொறற்கு ளிரைய்' (ஆரணிய. 272);

பி - ம். 1. பரந்தனன் புவியிடைப் பரந்த, பரந்தகுன்றவிசிடைப் பார்மேல்; 3. கடவுள் மாப்படையினுல். 4. தடம்புயத்து. 102

இங்கு அதிகப்பாடல்:—

மயன் படைக்கல மழிந்தது கண்டிகல் மறவோன்
சயம் படைத்தது நன்றிவன் செருக்கினைத் தடுக்கப்
பயன் படைத்துள தண்டமாப் படைகளுண் டதனுல்
நயம் படைப்பெனென் றுருகதை நாதன்மே லெறிந்தான்.

## இராவணன் தண்டாயுதத்தை யெறிய இராமபிரான் அதனைத் தூளாக்குதல்

3745. பண்டு நான்முகன் படைத்தது
கனகனிப் பாரைத்
தொண்டு கொண்டது மதுவெனு
மவுணன்முன் தொட்ட
துண்டிங் கென்வயி னதுதுரந்
துயிருண்பெ னென்னுத்
தண்டு கொண்டெறிந் தானைந்தொ
டைந்துடைத் தலையான்.

'பண்டு நான்முகன் படைத்தது - முன்பு பிரமனுல் படைக்கப் பட்டதும், கனகன் - இரணியன், இ பாரை - இந்தப் பூமியை, தொண்டு கொண்டதும் - தன்னடிப்படுதற்குக் கருவியாயிருந்ததும், மது எனும் அவுணன் - மது என்னும் அசுரன், முன்தொட்டது - முன்னர்க் கையாண்டதுமான, (ஒரு தண்டு), இங்கு என்வயின் உண்டு - இங்கு என் மாட்டுள்ளது; அது துரந்து - அதனை விடுத்து, உயிர் உண்பென் - (இவன் உயிரைப் பருகு

வேன்', என்று - என்று - பகர்ந்து, ஐந்தொடு ஐந்துடை தலையான் பத்துத் தலைகளையுடைய இராவணன், தண்டு கொண்டு - தண்டினை (கையிற்) கொண்டு, எறிந்தான் - வீசினான்.

கனகன்: இரணியாக்கன்; இப்பாரைத் தொண்டு கொண்டது; திருமாலின் வராகாவதார வரலாற்றிற் காண்க. மது: இவன் ஓர் அசுரன்; யுத்த. 1727. உரைக்குறிப்புக் காண்க. சுந்தர. 77-ம் காணத்தகும். தொட்டது - தொடு என்ற முதனிலையடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று. என்வயின் உண்டு என அந்வயிக்க. உயிர் உண்ணுதல்: மரபு வழுவமைதி. தண்டு: ஓர் ஆயுதம்; 'தண்டாயுதமும் திரிசூல மும்விழத் தாக்கி' (கந்தரலங்.).

பி-ம். 1. கனிப்பரும் பாரை, கண்கலிப் பாரை.

2. கொண்டு; அவுணனும்.

3. உண்டதென், உண்டதன், உண்டுதன்; இது, என்றேர்.

4. உயர்தலையான். 103

3746. தாரு கன்பண்டு தேவரைத் தகர்த்தது தனிமா
மேரு மந்தரம் புரைவது வெயிலன்ன வொளிய
தோரு கந்தனி னுலகநின் றுருட்டினு முருளாச்
சீரு கந்தது முகந்தது வானவர் சிரங்கள்.

பண்டு - முன்னர், தாருகன் - தாருகன் என்னும் அசுரன், தேவரைத் தகர்த்தது - தேவரை ஒழித்துக் கட்டுவதற்கு உதவியாயிருந்ததும், தனி - ஒப்பற்ற, மா - பெரிய, மேரு மந்தரம் புரைவது - மேரு மலையையும் மந்தரகிரியையும் ஒப்பதும், வெயில் அன்ன ஒளியது - சூரியன் போன்ற ஒளியுடன் கூடியதும், ஓர் உகம் தனில் - ஓர் உகத்தளவும், உலகம் நின்று - உலகம் எல்லாம் ஒருங்கியைந்து, உருட்டினும் - உருட்டினாலும், உருளா - உருளாத, சீர் உகந்தது - சிறப்பினால் பாராட்டப்படுவதும், வானவர் சிரங்கள் - தேவர்களின் தலைகளை, முகந்தது - கவர்ந்ததும்; வெருவ வந்தது என அடுத்த செய்யுளுடன் முடியும்.

தாருகன்: முருகக் கடவுளுடன் பொருது பட்டவன்; கந்த புராணம் காண்க. தகர்த்தல்: 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156); வானவர்: தேவர்; 'வானவரும் தானவரும்

மற்றுளரும், போனவிடம் புல் முளைத்துப் போகாதோ' (திருக்கருவை. கலித். அந்.).

பி - ம். 2. சுந்தரம் புனைவது ; வெயிலினுமொளியது, வெயிலெனமிளிர்வது.

3. ஒருகஞ் செல.

4. நெரிந்ததுவானவர் சிரத்தை. தானவர் சிரங்கள்,



3747. பசும்பு னற்பெரும் பரவைபண் டுண்டது பனிப்புற்
றசும்பு பாய்கின்ற தருக்கனி னொளிர்கின்ற தண்டம்
தசும்பு போலுடைந் தொழியுமென் றனைவருந் தளர
விசும்பு பாழ்பட வந்தது மந்தரம் வெருவ.

பசுபுனல் - பச்சை நிறமுள்ள, பெரு பரவை - பெரிய கடலை, பண்டு உண்டது - முன்காலத்தில் பருகியதும், பனிப்பு உற்று - குளிர்ச்சி பொருந்தி, அசும்பு பாய்கின்றது - நீர் கசியப் பெற்றதும், அருக்கனின் ஒளிர்கின்றது - சூரியனைக் காட்டிலும், ஒளிவிடுகின்றதுமான, - அந்தத் தண்டாயுதமானது, அண்டம் இவ்வண்டம், 'தசும்புபோல் உடைந்து ஒழியும் - நீர்க்குடம்போல் சிதறிக் கெடும்' என்று-என்று, அனைவரும் தளர - எல்லோரும் மனம் தளரவும், விசும்பு பாழ்பட - ஆகாயம் பாழாய்விடவும், மந்தரம் வெருவ வந்தது - மந்தரமும் வெருவுமாறும் வந்தது.

கடல் நீரைப் பச்சை நிறம் என்றும் நீல நிறம் என்றும் கூறுவர் அறிஞர். 'நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும்' (குறள். 452) என்றபடி நிலத்தின் நிறத்தைப் பொறுத்தே நீர்நிறம்பெறுமன்றித் தனித்துச் சுத்தப் புனலுக்கு நிறம் இல்லை என்பது விஞ்ஞானிகளின் துணிபு. அசும்பு : நீர்க்கசிவு ; 'அசும்புற வுருகிய வுலகம்' (யுத்த. 1749); 'அசும்புபடு சோரி' (யுத்த. 3379); 'அசும்பு பாய் வரை' (அயோத்தி. சித்திரகூட. 36); அருக்கன் - சூரியன் ; 'அருக்கன் மாமகன்' (மருத்து. 100); தசும்பு - குடம் ; 'தசும்பெலாம் வாசமூட்டி' (யுத்த. 632). மந்தரம் : ஓர் மலை ; எட்டுக் குலமலைகளுள் ஒன்று.

பி - ம். 1. புனற்படு : உண்டெனப், பனிவுற்று.

3. அழியுமென்று : யாவரும்.

4. மேருவும் தேவரும்.

3748. கண்ட தாமரைக் கண்ணனக் கடவுண்மாக் கதைதான்
அண்டர் நாயக னுயிரங் கண்ணினு மடங்காப்
புண்ட ரீகத்தின் முகையன்ன புகர்முகம் விட்டான்
உண்டை நூறுடை நூறுபட் டுளதென வுதிர்த்தான்.

கண்ட - அதனைக் கண்ணுற்ற, தாமரை கண்ணன் - செந்தாமரைக் கண்ணனான இராமபிரான். அ - அந்த, கடவுள் மா கதை - தெய்வத் தன்மை பொருந்திய பெரிய தண்டினை, அண்டர் நாயகன் - தேவர்கள் தலைவனான இந்திரனுடைய, ஆயிரம் கண்ணினும் - ஆயிரம் கண்களிலும், அடங்கா - அடங்காததாய், நூறு உண்டை உடை - நூறு உண்டைகளையுடையதும், புண்டரீகத்தின் முகை அன்ன - தாமரையின் கொட்டையை ஒத்த, புகர் முகம் - ஒளி பொருந்திய முகமுள்ளதுமான அம்பினை, விட்டான் - செலுத்தி, 'நூறுபட்டு உள து - முன்னரே நூறுபட்டுள்ளதோ', என - என்று, (கண்டவர்) கருதுமாறு, உதிர்த்தான் - பொடியாகச் சிதறினன். தான் : அசை.

கடவுள் மா கதை - தெய்வத்தன்மை வாய்ந்த தண்டாயுதம். அண்டர் நாயகன் : 'அண்டர்நா யகனு ரென்னை யறிவரேல்' (பெரிய.பு. காரைக்கால். 54); ஆயிரம் கண் : இந்திரனுக்கு ஆயிரங் கண்கள் வந்த வரலாறு பாலகாண்டம் அகலிகைப் படலம் கொண்டறிக. புண்டரீகம் : வெண்டாமரை என்பர். உண்டை : வில்லில் வைத்து விடுக்கும் உண்டைகள். நூறுபடுதல் - சுக்கு நூறாகப் பொடி பட்டுப்போதல்.

பி - ம். 1. கடவுள் மாப்படையெனக்கருதா, கழரு ; படையன்னகதையை.
2. ஆயிரத்தளவினு மடங்கா, அடங்க.
3. பொருட்டன்ன ; மொட்டனையதோர் புகர்முகவம்பால், புகர் முகக்கணையால்.
4. நீறுபட்டுள ; ஒல்லையினுதிர்த்தான். 106

அதிகப் பாடல்கள் :—

ஆயதாக்கிய செய்கைகண் டரக்கனும் சினந்தே
தீயின் மாப்படை செலுத்தவப் படையினின் செறுத்தான்
தூய நீக்கமில் வாயுவின் படைதொட வரக்கன்
ஏய அப்படை யேவியங் கமலனு மிறுத்தான். 1

இரவி தன்படை யேவின னரக்கன்மற் றமலன்
கருதி யன்ன திண் படைகொடு காத்தனன் மதியின்
விரவு வெம்படை வெய்யவன் விடுத்தலும் வீரன்
உரவு திங்களின் படைகொண்டங் கதனையு மொறுத்தான். 2

வாரு திக்கிறை படைகொண்டங் கரக்கனும் மறைத்தான்
நேரு திக்கவப் படைகொண்டு நிமலனும் நீக்கத்
தார் உதித்திடு தடம்புயத் தரக்கனும் தருக்கிப்
பேரு விப்பென்மற் றிவனுயிர் எனும் உளம் பிடித்தான். 3

முக்க ணன்படை முதலிய தேவர்தம் படைகள்
ஒக்க வாரியங் கரக்கனு மூழ்முறை துரப்பப்
புக்கி யண்ணலை வலங்கொண்டு போனதும் பொடிபட்
டுக்கியோடின தும் மன்றி யொன்று செய் துளதோ. 4

## இராவணன் மாயாத்திரம்விட முன் மடிந்த அரக்கர்கள் உயிர் பெற்றெழுந்தனர் போலத் திரண்டு ஆரவாரித்தல்

3749 தேய நின்றவன் சிலைவலங் காட்டினுன் தீராப்
பேயை யென்பல துரப்பதிங் கிவன்பிழை யாமல்
ஆய தன்பெரும் படையொடு மடுகளத் தவிய
மாயை யின்படை தொடுப்பனென் றிராவணன்
[மதித்தான்.

தேய நின்றவன் - அழியுமாறு நின்றவன், ‘சிலை வலம் காட்டினுன் - (நாம் வலுவற்ற அம்பினை விடுத்தால் பகைவன் தனது) வில்லாண்மையைக் காட்டினுன்; (இவனைத்), தீரா - தீர்க்க முடியாத, பேயை - பேய் போன்ற (பயனற்ற), பல - பல அம்புகளை (இவன் மீது), துரப்பது என்பலன் - விடுப்பது என்ன பலன்; இங்கு - இப்போது, இவன - இவன், பிழையாமல் ஆய - பிழையாமல் அமைந்த, தன் பெரு படைகலத்தோடும் - தன் பெரும் போர்க் கருவியோடும், அடுகளத்து அவிய - ஒருவர் ஒருவரைக் கொல்கின்ற போர்க் களத்து அழியுமாறு, (பெரும் படையாகிய), மாயையின் படை தொடுப்பன் - மாயாத்திரத்தை விடுப்பேன்’ என்று இராவணன் மதித்தான் - என்று இராவணன் நிச்சயித்தான்,

தீராத என்பது தீரா என ஈறு குறைந்து நின்றது. அடுகளம் - வினைத் தொகை. பேய் என்று ஆயுதங்கள் இகழ்ந்து கூறப்பட்டன.

பி - ம். 1. நின்றிவன் ; காட்டியாரன்.

2. பேயை யென்பதில் ; துரக்குவதினிப்.

3. கிளையொடும்படிய, கிளையொடுமடங்க.

4. வலித்தான். 109

3750. பூசனைத்தொழில் புரிந்துதான் முறைமையிற் போற்றும்
ஈசனைத்தொழு திருடியுஞ் சந்தமு மெண்ணி
ஆசை பத்தினு மந்தரப் பரப்பினு மடங்கா
வீசினன்செல வில்லிடைத் தொடைகொடு விட்டான்.

பூசனை தொழில் புரிந்து - (அந்த அத்திரத்தைப்) பூசிக்கும் தொழிலைச் செய்து, தான் முறைமையில் போற்றும் - தான் கிரமமாகத் துதிக்கின்ற, ஈசனை - சிவபிரானை, தொழுது - வணங்கி, இருடியும் சந்தமும் எண்ணி - (அத்திரத்துக்குரிய) ரிஷியையும், சந்தஸ்ஸையும் நினைந்து, ஆசை பத்தினும் - பத்துத் திக்குகளிலும் அந்தரம் பரப்பினும் - ஆகாய வெளிப் பரப்பிலும், அடங்கா - அடங்காது, (எங்கும்) செல - செல்லுமாறு, வில் இடை தொடை கொடு வீசினன் விட்டான் - வில்லிடத்து அம்பு வைத்து வீசித் தொடுத்துவிட்டான்.

அத்திரங்கட்குப் பூசனை புரிவது பண்டை வழக்கு. பூசனை : 'பூசனை விதிமுறை யியற்றி' (யுத்த. 2563); பூசனைத் தொழின் முறைமையிற் புரிந்து எனக் கூட்டினும் ஆம். 'அனைய தேரினை யருச்சனை வரன்முறை யாற்றி' (யுத்த. 3603); முறைமையிற் போற்றுமீசனை - சிவபிரான்; இராவணன் பரமசிவ பக்தன் என்பது ஈண்டு அறியற்பாலது. அவன் சிவபிரானிடமிருந்து வாள் பெற்றது. 'முக்கணான் வாளை வாங்கி யுலகொரு மூன்றும் வென்றாய்' (சுந்தர. 991); 'சங்கரன் கொடுத்த வாளும்' (யுத்த. 1211); 'வாளு மூள தோதவிடம் உண்டவன் வழங்கும், நாளுமுள' (ஆரணிய. 613); மற்றும்: 'சிவன் தடக்கை வாள் கொண்டாய்' (ஆரணிய. 322); ஆரணிய. 931 ம் பார்க்க. 'எவ்வகைப் படையும் வெல்லும் சந்திரவாளுமீந்தான்' (யுத்த. வரையெடுத்த. 75). இருடி

யும் சந்தமும் : ஒவ்வொரு அத்திரத்திற்கும் மந்திரத்திற்கும் அவற்றிற்குரிய இருடிகளும் சந்தசும் உண்டென்பர். 'வாமதேவ ருஷி: அநுஷ்டுப் சந்தகா' என்றது காண்க. ரிஷி என்ற வடசொல் இருடியென வந்தது. சந்தஸ் என்பது சந்தம்; இஃது ஆறங்கங்களில் ஒன்று. ஆசை பத்து; எட்டுத் திக்குகளும் ஆகாயமும் பூமியும் என்பர். ஆசை திக்கு: 'ஆசையினளவு மெல்லாவுலகமுந்தானே யாள்வான்' (யுத்த. 916); ஆசை பத்தினும் என்று கூறிப் பின்னும் அந்தரப் பரப்பினும் என்றது. அண்ட முகட்டினுக்கப்பால் உள்ள வெளியை என்க. 'நாதமும் கடந்த வெளி' (திருவிசைப்பா,) என்க.

பி-ம். 2. சாந்தமும்.

4. விசிமுற்; மேற்; ஈசன்மேற்; வில்விசை. 110

3751. மாயை பொத்திய வயப்படை விடுதலும் வரம்பில்
காய மெத்தனை யுளநெடுங் காயங்கள் கதுவ
ஆய முற்றெழுந் தாரென வார்த்தன ரமரில்
தூய கொற்றவர் சுடுசரத் தான்முன்பு துணிந்தார்.

மாயை பொத்திய - மாயை நிறைந்துள்ள, வயம் படை விடுதலும் - வெற்றிப் படையைச் செலுத்திய அளவில், தூய - தூய்மையான, கொற்றவர் - வெற்றி வீரரான இராம இலக்குவருடைய, சுடு சரத்தான் - சுடுகின்ற அம்பினால், முன்பு அமரில் துணிந்தார் - முன்னர் போரில் அறுபட்டு உயிரிழந்து கிடந்த அரக்கர்களின், வரம்பில் காயம் எத்தனை உள - எல்லையற்ற உடல் எவ்வளவு உள்ளன (அவையனைத்தும்), நெடு காயங்கள் கதுவ - நீண்டகன்ற வானத்தைத் தீண்டுமாறு (உயிர்), ஆயம் உற்று - உயிர் வருதலாகிய லாபத்தை அடைய, எழுந்தார் என ஆர்த்தனர் - (மரித்தவர்) உயிற் பெற்றெழுந்தார் போன்று ஆரவாரம் செய்தனர்.

பொத்துதல் - நிரப்புதல்; 'கதுமெனக் கனல் பொத்தித் தள்ளுமின்' (யுத்த. 213); காயம்: முன்னது உடல்; பின்னது ஆகாயம் என்பதன் முதற்குறை. காயம்: உடல்; 'காயத்தாற் பெரியர் வீரம் கணக்கிலர்' (யுத்த. 150); 'காயத்திடையுயிருண்டிட' (யுத்த. 3343); 'தம் காயம் தீதலால்' (கிட்கிந்தா. 817);

காயம் : ஆகாயம் ; 'வறிது நிலைஇய காயமும்' (புறநா. 20, 30); ஆகாயம் முதற் குன்றந்தமைக்கு மேற்கோள்' (நன். 268) ; மயிலை. ஆயம் : லாபம் வருவாய் ; 'பொருளாயம்' (குறள். 933) ; இங்கு உயிர் பெறுகையாகிய இலாபம் என்க. மாயாத்திரம் இறந்த அரக்கர் உயிர் பெற்றெழுந்தது போலக் காட்டிற்று என்பது பொருள். சுடுசரம் ; 'சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம்' (பால. தாடகை : 73).

பி - ம். 1. பொந்நியல் ; விடுத்தலும்

2. காயமத்தனையுள ; அத்தனையும்.

3. ஆயவுந்றெழுந்து.

4. கொற்றவன் ; அமர் துணிந்தார் ; முனைந்தொலைத்தான். 111

3752. இந்தி ரற்கொரு பகைஞனு மவற்கிளை யோரும்
தந்தி ரப்பெருந் தலைவருந் தலைத்தலை யோரும்
மந்தி ரச்சுற்றத் தவர்களும் வரம்பிலர் பிறரும்
அந்த ரத்தினை மறைத்தனர் மழையுக வார்ப்பார்.

இந்திரற்கு ஒரு பகைஞனும் - இந்திரசித்தும், அவற்கு இளையோரும் - அவனுக்குத் தம்பிமாரான அதிகாயன் கும்பன் நிகும்பன் என்பவர்களும், பெரும் தந்திர தலைவரும் - பெரிய சேனைத் தலைவர்களும், தலை தலையோரும் - மற்றும் தலைமை பெற்றுயர்ந்தோரும், மந்திரம் சுற்றத்தவர்களும் - (மகோதரன்) முதலிய அமைச்சரும், வரம்பு இலர் பிறரும் - கணக்கற்ற ஏனையோரும், அந்தரத்தினை மறைத்தனர் - ஆகாயத்தினை மறைத்துக் கொண்டவராய், மழை உக ஆர்ப்பார் - மழையும் சிதறும்படி ஆரவாரம் செய்பவரானார்.

இந்திரற்கொரு பகைஞன் ; 'இந்திரன் பகைஞனும்' (யுத்த. 1301); மந்திரச் சுற்றம் ; 'மந்திரச் சுற்றத்தாரும் வானுதற் சுற்றத்தாரும்' (யுத்த. 1215) ; அந்தரம் ; 'அந்தரத்திந் துவைத் தீண்டுகின்றது' (கிட்கிந்தா. 739) ; இவர்களின் பெரு முழக்கத்தால் மேகமும் சிதறும் என்க.

பி - ம். 1. அரும் பகைஞனும் ; இளையோனும்.

2. பெரும் பரவையின், பரவையும் ; தலைத் தலையெவரும்.

3. சுற்றத் தேவர்களும் ; வரம்பில் ; மற்றும்.

4. நிறைத்தனர். 112

3753. குடப்பெ ருஞ்செவிக் குன்றமு மற்றுள குழுவும்
படைத்த மூலமாத் தானையு முதலிய பட்ட
விடைத்தெ ழுந்தன யானைதேர் பரிமுதல் வெவ்வே
றடைத்த வூர்திக ளனைத்தும்வந் தவ்வழி யடைய.

குடம் பெரு செவி குன்றமும் - குடம் போன்ற பெருங் காது களைக் கொண்ட மலைபோன்று காட்சியளிக்கும் கும்பகருணனும், மற்றுள குழுவும் - மற்றுமுள்ள வீரர் தொகுதியும், படைத்த - (இராவணன்) தன்னதாகப் பெற்றிருந்த, மூலமாத்தானையும் முதலியபட்ட - பெரியமூலப்படை முதலிய இறந்தவைகளும், (மற்றும்), யானை தேர் பரிமுதல் - யானை தேர் குதிரை முதலாக, வேறு வேறு அடைத்த ஊர்திகள் அனைத்தும் வந்து-யானை தேர் குதிரை ஆதியாக வேறு வேருக நிரம்பிய வாகனங்களும் வந்து, அவ் வழி அடைய - அவ்வழிப் பொருந்த, விடைத்து எழுந்தன - வெகுண்டு எழுந்தன.

குடப்பெருஞ் செவியன் - கும்பகருணன் பெயர்க் காரணம் குறிக்கப்பட்டது. விடைத்தெழுதல் - வெகுண்டு எழுதல்; 'வெங்க ணெரியப் புருவமீதுற விடைத்தான்' (ஆரணிய. 742); 'வேகத் தொடு வீரர் விடைத்தெழலும்' (யுத்த. 1706); வேறு வேறு - வெவ்வேறு. அவ்வழி; 'அவ்வழிக் கருணன் செய்த பேரெழி லாண்மை' (யுத்த. 1567).

பி - ம். 1. குடைப்; கடப்.
2. படைத்த வீரமா: முந்துள்ர் பட்டார், முதலினர் பட்டார்.
3. எழுந்தனர்; வெல்வேல்.
4. படைந்த, அடைந்த. 113

முதலடி குடச் செவிக் கும்பகருணனும் மற்றுள குழுவும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

3754. ஆயி ரம்பெரு வெள்ளமென் றறிஞரே யறைந்த
காய்சி னப்பெருங் கடற்படை களப்பட்ட வெல்லாம்
ஈச னிற்பெற்ற வரத்தினு லெய்திய வென்னத்
தேச முற்றவுஞ் செறிந்தன திசைகளுந் திகைக்க.

பெரு ஆயிரம் வெள்ளம் என்று - பெரிய ஆயிரம் வெள்ள மென்று, அறிஞரே அறைந்த - அறிஞரால் கூறப்பட்டனவும், களம்பட்ட - களத்தில் மரித்தனவுமான, காய் சினம் பெரு கடல் படை எல்லாம் - சினம் கொண்ட பரந்த கடல் போன்ற சேனை எல்லாம், ஈசனில் பெற்ற வரத்தினால் - சிவபிரானிடத்துப் பெற்ற வரத்தின் விளைவாக, எய்திய என்ன - உயிர் பெற்றன என்னுமாறு, திசைகளும் திகைக்க - திக்கில் உள்ளார் எல்லாரும் திகைக்குமாறு, தேச முற்றவும் செறிந்தன - தேசம் முழுவதும் நெருங்கின. ஏ : தேற்றம்.

ஆயிரம் பெரு வெள்ளம் என்றது இந்நூலில் அடிக்கடி வருதல் குறிக்கொள்ளத் தகும். களப்பட்ட ; 'கன்னின்று னெந்தை கணவன் களப்பட்டான்' (புற. வெ. வா. வாகை. 22); ஈசன் - சிவபெருமான். இப் பெயர் திருமாலுக்கும் அவன் அவதார மான - இராமபிரானுக்கும் இந் நூற்கண் ஆசிரியரால் வழங்கப் பெற் றுள்ளது. 'ஈறிலாதவன் ஈசன் ஒருவனே' என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. ஈசன் - சிவன். 'ஈசனாண்டிருந்த பேரிலங்குமால்வரை' (ஆரணிய. 848); மற்றும்: யுத்த. 1874; 2210; 1178; 1233. இனி; ஈசன் - இராமபிரான்; யுத்த. 3373; யுத்த. வருணன். 721.

பி - ம். 1. ஆசிலப் ; அறைந்தார்.
3. எய்தியது.
4. தேசு ; தெரிந்தது ; நிரைப்ப. 114

3755. சென்ற வெங்கணுந் தேவரு முனிவருஞ் சிந்த
வென்ற தெங்களைப் போலும்யாம் விளிவது முளதே
இன்று காட்டுது மெய்துமி னெய்துமி னென்னுக்
கொன்ற கொற்றவர் தம்பெயர் குறித்தறை கூவி.

'வென்றது எங்களை போலும் - வெற்றி கொண்டது எங்களைப் போலும் ; யாம் விளிவதும் உளதே - நாங்கள் இறப்பதும் உண்டோ? இன்று காட்டுதும் - (இன்று) எங்கள் வல்லமையைக் காட்டுவோம் ; எய்துமின் எய்துமின் - (போர் புரிய) வாருங்கள் வாருங்கள்' என்னு - என்று, கொன்ற கொற்றவர் தம் பெயர் குறித்து - (தங்களைக்) கொல்வித்த வெற்றி வீரர்களின் பெயரைக் குறிப்பாக விளித்து, அறை கூவி - அறை கூவிக்கொண்டு,

தேவரும் முனிவரும் சிந்த - வானவரும் முனிவரும் சிதறி இரியும் படி, (உயிர்த்தெழுந்த அப் படைகள்), எங்கணும் சென்ற-எல்லாப் பக்கங்களிலும் சென்றன.

சிந்துதல் - சிதறுதல். போலும் - ஒப்பில் போலி. விளிதல் - இறத்தல். 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில், தீமை புரிந்தொழுகுவார்' (குறள். 143); ஓகாரம் எதிர்மறைப் பொருளைக் குறித்து நின்றது. அறை கூவுதல் - போருக்கழைத்தல். கொற்றவர் - வெற்றி வீரர்; 'கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்த போது' (சுந்தர. 523).

பி - ம். 1. சென்றது; திசைப்ப.

2. வென்ற; போலுமால், போலுமாம்; உளதேல்; விதியே.

4. அறைகூறி, அறைகூற. 115

## அத்திரத்தினுற் பூதங்களும் பேய்களும் தோன்றுதல்

3756. பாரி டந்துகொண் டெழுந்தன பாம்பெனும் படிய
பாரி டந்துனைந் தெழுந்தன மலையன்ன படிய
பேரி டங்கது வரிதினி விசும்பெனப் பிறந்த
பேரி டங்கரின் கொடுங்குழை யணிந்தன பேய்கள்.

(மாயாத்திரத்தினுற் பாதலத்துள்ள), பாம்பு - வாசுகி முதலிய அரவங்கள், பார் இடந்து கொண்டு - பூமியைப் பிளந்து கொண்டு, எழுந்தன எனும் படிய - எழுந்தன என்னும் தன்மையனவும், பேர் இடம் கதுவரிது - (இவற்றிற்கு) இந்தப் பெரிய பூமி உறைதற் குப் பற்றாது, இனி விசும்பு - இனி ஆகாயமே (உறைதற்குரியது), என - என்று தோன்ற, மலை அன்ன படிய - மலை போன்ற உடல் பெற்றனவுமான, பாரிடம் - பூதங்கள், துனைந்து எழுந்தன - விரைந்து மேலே கிளம்பின; பேர் இடங்கரின் - நீரில் பெயர்ந்து உலாவும் முதலையை ஒத்த, கொடு குழை - வளைந்த குழைகளை (குண்டலங்களை), அணிந்தன பேய்கள் பிறந்த - புனைந்த பேய்கள் தோன்றின.

பார் இடந்து கொண்டு எனப் பிரிக்க. இரண்டாமடியில் பாரிடம் - பூதம். பேரிடம் - பெரிய இடமாகிய பூமி. கதுவு -

முதனிலைத் தொழிற் பெயர். இறுதியடியில் பேர் இடங்கர் - காலம் கரந்த பெயரெச்சம். பேய்கள் அணிந்த கொடுங் குழை முதலை போன்றிருந்தன. இடங்கர் - முதலை வகை. ' இடங்கர்மா ' (வீடண. 113); இது முதல் ஐந்து பாடல்கள் யமகம்.

பி - ம். 1. எழுந்துளவாம், எழுந்தனவாம் ; படியப்.
2. பாரிடந் தொடர்ந்து ; படிவம்.
3. பெறலரிதினி விசும்பினிற். 116

## மாயாத்திரத்தினலுயிர் பெற்றவர்கள் முனிவரஞ்சப் பலவகைப் படைக்கலமேந்தி நிற்றல்

3757. தாம சத்தனிற் பிறந்தவ ரறந்தெறுந் தகையர்
தாம சத்தினிற் செல்கிலாச் சதுமுகத் தவற்குத்
தாம சத்திரஞ் செய்பவர் பரிந்தனர் தளரத்
தாம சத்திரஞ் சித்திரம் பொருந்தினர் தயங்க.

தாமசத்தினில் பிறந்தவர்-மாயாத்திரத்தினல் உதித்தவரும், அறம் தெறும் தகையர் - அறத்தை அழிக்கவல்ல ஆற்றல் உள்ளவரும், தாம் - தாம், அசத்தினில் - போலிவழியில், செல்கிலா - செல்லாதவராய், சதுமுகத்தவற்கு - நான்முகனுக்கு, உத்தாமம் - சிறந்த, சத்திரம் - யாகத்தை, செய்பவர் - புரிபவரான முனிவர், பரிந்தனர் தளர - மனம் உளைந்தவராய்த் தளர்ச்சியுறவும், உத்தாமம் - ஒளி சிறந்த, சத்திரம்-படைக்கலங்கள், தயங்க - ஒளிரவும், சித்திரம் - விசித்திரமாக, பொருந்தினர் - அமைந்தனர்.

தாமசம் - தாமதாத்திரம். மூன்றுமடியில், சத்திரம் - சஸ்திரம் என்ற வட சொல்லின் திரிபு. வேல் போன்று கையில் வைத்துக் கொண்டே பயன் படுத்தப்படுவது. இதற்கு மறுதலைச் சொல்; அத்திரம் : கையினின்று விடுப்பது. மூன்றுமடியில் சத்திரம் : யாகம். நான்காமடியில் சத்திரம் சித்திரம் : இணையெதுகை காண்க.

பி - ம். 2. செல்கிலர் ; தசமுகத்தவர்க்கு, முகந்தவற்கும்.
3. தாமசத்தினைத் தொடர்ந்தவர் பரிந்தனர் தாழ்ந்தார், தாமசத்தினைத் தொடரவர் பரந்தவா ளரக்கர்.
4. தாமசத்தினை மதித்தனர் ; பொருதனர், பொருந்திய. 117

## அசுரர் விஞ்சையர் இவர்கள் மாயாத்திரத்திறல் திசைதொறும் தோன்றி நெருங்குதல்

3758. தாம விந்துமீ தெழுந்தவர்க் கிரட்டியின் தகையர்
தாம விந்துவின் பிளவெனத் தயங்குவா ளெயிற்றர்
தாம விஞ்சையர் கடற்பெருந் தகையினர் தரளத்
தாம விஞ்சையர் துவன்றினர் திசைதொறுந் தருக்கி.

தாம் அவிந்து - தாம் இறந்து, மீது - அதன்மேல், எழுந்தவர்க்கு - உயிர் படைத்தெழுந்தவரான இராக்கதர்கட்கு, இரட்டியின் தகையர் - இரு மடங்கு தகுதி பெற்றவர்களும், தாமம் விந்துவின் - ஒளியுள்ள சந்திரனது, பிளவு என - பிளவு போன்று, தயங்கும் - ஒளிரும், வாள் எயிற்றர் - கூர்மையான கோரப் பற்களுடன் கூடியவர்களும், தாம் அவிஞ்சையர் - தாவுகின்ற மாயா சத்தியை உடையவர்களும், கடல் பெரு தகையினர் - கடல் போன்ற பெருந்தகைமை யுடையவருமான அசுரர்களும், தரளம் தாமம்-முத்து மாலை புனைந்த, விஞ்சையர் - வித்தியாதரரும், திசை தொறும் - திக்குகள் தோறும், தருக்கி - செருக்குடன், துவன்றினர் - நெருங்கினர்.

தாம் அவிந்து என்றும், தாமம் இந்து என்றும் தாம் அவிஞ்சையர் என்றும், தாமம் விஞ்சையர் என்றும் முறையே பிரிக்க. அவிதல் - மடிதல். 'அத்தனை வெள்ள மரக்கரவிந்தார்' (யுத்த. படைத். 11); இந்து - சந்திரன்; 'இந்துவை வளைக்கு மெழிலிக் குலம் என' (ஆரணிய. 524); 'இந்து வென்பான், என்று தான் இரவியோடும் வேற்றுமை தெரிவதென்பால்' (மாயா சனக. 9) இந்துவின் பிளவு - பிறைமதி. அவிஞ்சை - மாய வித்தை; அவித்தை என்றதன் திரிபு எனலாம். தரளம் - முத்து; 'பவள வாய்த் தரளப்பத்தி' (யுத்த. மீட்சி. 44).

பி - ம். 2. இந்துவிற் பிளவென்ன.

3. தாமவிஞ்சையிற்; கடப்பருந்; தவராத், சார்ந்த, சாரந். 118

3759. தாம டங்கலு முடங்குளை யாளியுந் தகுவார்
தாம டங்கலு நெடுந்திசை யுலகொடுந் தகைவார்
தாம டங்கலுங் கடலுமொத் தார்தருந் தகையார்
தாம டங்கலுங் கொடுஞ்சுடர்ப் படைகளுந் தரித்தார்.

தாம் - தாவும் இயல்புள்ள, மடங்கலும் - சிங்கத்தையும், முடங்கு உளை யாளியும் - வளைந்த பிடரி மயிரையுடைய யாளியையும், தகுவார் - நிகர்ப்பவரும், தாம் அடங்கலும் - தாம் அனைவரும், நெடு திசை - நெடிய திசைகளை, உலகொடும் - உலகுடனே, தகைவார் - (போரில்) தடுக்க வல்லவரும், தா - வலிமையுடைய, மடங்கலும் - ஊழிக் கனலையும், கடலும் - ஆழியையும், ஒத்து - (உருவத்தால்) நிகர்த்து, ஆர்தரும் - சமர்க்களம் எங்கும் நிறைந்து விளங்கும், தகையார் - தகுதி பெற்றுள்ளவருமான அவர்கள், தாம் - ஒளி வாய்ந்த, மடங்கலும் - இடிகளையும், கொடு சுடர் படைகளும் - கொடிய ஒளியுள்ள படைகளையும், தரித்தார் - தாங்கி நின்றனர்.

முதலடியில் தாவும் என்பது தாம் எனத் தொகுத்தது. மடங்கல் : சிங்கம். பிடரி மயிர் மடங்கியிருக்கப் பெற்றது. இரண்டாம் அடியில் தாம் அடங்கலும் எனப்பிரிக்க. தகைதல் : தடுத்தல் ; 'சென்றி பெரும நின்றகைக்கு ஓர் யாரே (கலித்.); மூன்றாமடியில் மடங்கல் : ஊழித்தீ ; மடங்கல் வண்ணம் கொண்ட (பதிற். 62) நான்காவது அடியில் மடங்கல் : இடி. இச் செய்யுள் யமகம்.

பி - ம். 1. தகைவார், தகையார், தருக்கார்.
2. உலகெலாம்.
3. காரையொத்தார் தருந்தகைத்தார், ஒத்தார்த் திடுந்தகையார், ஒந்தார்த் தரும்பகையைத், ஒத்தனர் தருவகையனையார்.
4. படையொடுந். 119

இங்கு அதிகப் பாடல் :—

இத்தி றம்பட மாயையின் படைவகுத் தெழுந்தங்
கெத்தி றங்களும் யிடியுரு மெறிந்திட வெருவிச்
சித்தி ரம்பெற வடங்கிய கவிப்பெருஞ் சேனை
மொய்த்து மூடிய தண்டங்கள் முழுவதும் மாய. 1

அண்ட கோடிகள் முழுவதும் அடுக்கழிந் துலையக்
கொண்ட காலமீ தோவெனக் குலைகுலைந் தமரர்
துண்ட வான்பிறை சூடியைத் தொழ அவன் துயரம்
கண்டி ராகவன் கடிந்திடும் கலங்கலீர் என்றான். 2

## மாயாத்திரத்தின் விளைவினைக் கண்ட இராமன் மாதலியை வினவுதல்

3760. இனைய தன்மையை நோக்கிய விந்திரை கொழுநன்
வினைய மற்றிது மாயமோ விதியது விளைவோ
வனையும் வன்கழ லரக்கர்தம் வரத்தினோ மற்றோ
நினைதி யாமெனிற் பகரென மாதலி நிகழ்த்தும்.

இனைய - இப்படிப்பட்ட, தன்மையை - நிலையை, நோக்கிய - கண்ணுற்ற, இந்திரை கொழுநன் - திருமகள் கேள்வனான இராம பிரான், (மாதலியை நோக்கி) 'இது வினையம் மாயமோ - இந்தச் செயல் மாயச் செயலோ? விதியது விளைவோ - (அல்லது) விதியால் நிகழ்ந்ததோ? வனையும் - புனைந்த, வல்கழல் அரக்கர் தம் - வலிய வீர கண்டையையுடைய இராக்கதர்களின், வரத்தினோ - வரத்தின் பெருமையால் நிகழ்ந்ததோ? மற்றோ - வேறு காரணத்தால் உண்டானதோ? நினைதியாம் எனில் - நீ அறிந்திருந்தால், பகர் - (இதனை இன்னதென்று) சொல்வாயாக', என - என்று கேட்க, மாதலி நிகழ்த்தும் - மாதலி கூறுவான். அவன் கூறியதை அடுத்த செய்யுளில் காண்க. மற்று : அசை. ஓகாரம் : வினா.

இந்திரை - திருமகள். மாதலி - இராமபிரானுடைய தேரைச் செலுத்தியவன். இந்திரன் கட்டளையால் அத் தொழிலை மேற் கொண்டு தேவர்கள் வேண்ட வந்தவன். யுத்த. 3657, 3660 பார்க்க.

பி - ம். 2. மாயையோ.
4. நிரப்பும்.

## மாதலி இது மாயம் என்ன இராமபிரான் ஞானக்கணையால் அதனை அழித்தல்

**3761. இருப்புக் கம்மியற் கிழைநுழை யூசியொன் றியற்றி
விருப்பிற் கோடியால் விலைக்கெனும் பதடியின் விட்டான்
கருப்புக் கார்மழை வண்ணவக் கடுந்திசைக் களிற்றின்
மருப்புக் கல்லிய தோளவன் மீளரு மாயம்.**

'கருப்பு - வற்கடக்காலத்துப் பெய்யவெழுந்த, கார் மழை வண்ண - கரிய (நீர் கொண்ட) மேகத்தைப் போன்ற நிறத்தவனே! இரும்பு கம்மியற்கு - இரும்புப் பணி செய்கின்ற கருங் கொல்லனுக்கு, இழை நுழை - நூலிழை புகுகின்ற, ஊசி ஒன்று இயற்றி - ஊசியொன்றைச் செய்து, விருப்பின் - விழைவோடு, 'விலைக்கு கோடியால் - (இந்த ஊசியை) விலைக்குப் பெற்றுக்கொள்வாயாக', எனும் - என்று கூறுகின்ற, பதடியின் - அறிவிலி போன்று, அ - அந்த, கடுதிசை களிற்றின் - கடுமை வாய்ந்த திசை யானையின், மருப்பு - தந்தத்தினால், கல்லிய - அகழப்பட்ட, தோளவன் - தோள்களை யுடையவனான இராவணன், மீள் அரும் - திரும்புவதற்கு அருமையான, மாயம் - மாயாத்திரத்தை, விட்டான் - விடுத்தான்.

இருப்பு - கம்மியன்; இருப்புக் கம்மியன். கம்மியர்: 'கலையிற் படு கம்மியர் கூட மலைப்ப' (யுத்த. 1906); ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த' (புறநா. 353); இழை: 'இழை நக்கி நூல் நெருடும் ஏழையறி வேனோ, குழை நக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து' (கலிப்பா); இழை நுழை ஊசி: நூல் கோக்கப்படும் ஊசி. விருப்பின்: உருபு மயக்கம். கொள்: தீ: கோடி; 'கோடியென்றனள் உள்ளமுங் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை. 81); விலைக்குக் கோடி என மாற்றுக. இங்குக் கொல்லர் தெருவில் ஊசி மாறுதே என்ற பழமொழி உணரற்பாலது. 'வைகொண்ட ஊசிகொற் சேரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப். பொய்கொண்டு நிற்கலுற்றோ புலை யாத்தின்னி போந்ததுவே' (திருக்கோ. 386); 'கொண்டுழிப் பண்டம் விலையொரீ இக்கொற்சேரி, நுண்டுளைத்துன்னூசி விற்பாரின்' (ஐந்திணையைம்பது. 21); 'கற்றதொன்றின்றி விடினும் குடிப் பிறந்தார், மற்றொன்றறிவாரின் மாணமிக நல்லரால், பொற்ப

வுரைப்பான் புகவேண்டா கொற்சேரித், துன்னூசி விற்பவ ரில்' (பழ. 73); என்பனவும் காண்க. ஊசி: 'ஊசி நுழையாவகை' (யுத்த. 5373); அகடிதகடனு சாமர்த்தியமுள்ள மகா மாயாவி யான உன்னை நோக்கி அரக்கன் மாயாத்திரம் விடுத்தது, கருங்கைக் கொல்லனிடத்து ஊசி விற்கச் சென்ற பேதையின் தன்மையை நிகர்ப்பதாகும் என்றவாறு; கடுங்களிற்றின் என இயைக்க. கருப்பு: பஞ்சம்; கார்தட்டிய பஞ்சகாலத்துப் பெய்யும் கருமுகில் போன்றவனான இராமன்; உருவுவமையோடு பண்புவமை. திசைக் களிற்றின் மருப்புக் கவ்வியதோளன்; 'திசையானை மருப்பொடியப் பொருப்பிடியத் தோணிமிர்த்த (ஆரணிய. 323); 'திசையானை விசை கலங்க செருச் செய்து மருப் பொசித்த' (ஆரணிய. 328); 'வயக் களிற்றின் மருப்பொடிய வடர்த்த பொற்றோள்' (ஆரணிய. 557); 'உயர் திசை சுமந்த வோங்கல், வன்றிறல் மருப்பினுற்றன் மடித்த வென்மார்பு' (ஆரணிய. 875); மற்றும் கந்தபு. 303, 312-ம் காண்க. பதடி - பதர்; உள்ளீடாகிய அரிசியில்லாத நெல்; 'மக்கட் பதடியெனல்' (குறள். 196); 'பன்னுவான் குலைப்பதடி' (அயோத்தி. பள்ளிப் படை 135).

பி-ம். 1. கம்மியர்க்கு, கம்மியர்; இழைநுழை; ஊசியென்று.
2. சோடிரால்; பதகரில், தன்மையின்.
3. கார்நிற; அன்ன.
4. தோளினுன் செய்த மாயை. 121

3762. வீக்கு வாயயில் வெள்ளெயிற் றரவின்வெவ் விடத்தை
மாய்க்கு மாநெடு மந்திரந் தந்ததோர் வலியின்
நோய்க்கு நோய்தரு வினைக்குநின் பெரும்பெயர் [நொடியின்
நீக்கு வாயுனை நினைக்குவார் பிறப்பென நீங்கும்.

'நோய்க்கும் - பிறவிப் பிணியைப் போக்கும் பொருட்டும், நோய்தரு வினைக்கும் - அப்பிணியை விளைக்கும் வினைகளைப் போக்கும் பொருட்டும், நின் பெரும் பெயர் நொடியின் - உனது பெருமை சான்ற திருநாமத்தை உச்சரித்தால், நீக்குவாய் - அங்

நாமம் பாராயணம் செய்பவர்க்கு அவற்றைப் போக்குபவனே! வாய் - வாயில், அயில் வெள் எயிறு - கூரிய வெண்மையான பற்களைக்கொண்ட, அரவின் - சர்ப்பத்தினுடைய, வீக்கும் வெவ் விடத்தை - உயிரையழிக்கும் வெவ்விய விடத்தை, மாய்க்கும் - அழிக்குமாறு, நெடு மந்திரம் தந்தது ஓர் வலியின் - பெருமை பெற்ற மந்திரம் ஈன்றதான ஒப்பற்ற வன்மையாலே போன்று, (உன்னுடைய வாளியின் வலியால் தீர்க்கப்பட்டு இந்த மாயாத் திரமானது, உனை நினைக்குவார் பிறப்பு என நீங்கும் - உன்னைத் தியானிப்பவரின் பிறப்பு அகல்வது போல 'அகன்றுவிடும்', என்று மாதலி கூறினான்.

இராம நாமத்தின் பெருமை இதில் கூறப்பட்டது. வெவ் விடத்தை வீக்கும் எனக் கூட்டுக. அயில் வெள்ளெயிறு; (சீவக. 1288; நக்க. 155-ன் உரைக் குறிப்பும் காண்க. அயில் எயிறு: 'அயிலெயிற்றினேந்துதியால்' (ஆரணிய. 58); வெவ்விடம்; 'வெவ்விடத்தை யமிர்தென வேண்டுவான்' ( ): மாய்க்கும்: 'வள்ளற்றனமென்னை மாய்க்கு மாய்க்குமென்றான் (அயோத்தி. 359) நெடு மந்திரம்: நாகவிடத்தைப் போக்கும் மந்திரம்; 'நின்னை யச்செல்வ மென்னே செய்யும் நேர தகத்தோடு, பன்னு மந்திர முள்ளாரைப் பாம்பின்வாய் விடமென் செய்யும்' (குசேலோ. 3, 201); 'கடிக்கும் வாளரவும் கேட்கு மந்திரம்' (சுந்தர. 465); 'கதந்தவிர மந்திரத்தினுற் பிணிப்பர் மாநாகம்' (நான்மணிக்,) மந்திரம்: 'நிறைமொழி மாந்தராணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திரமென்ப' (தொல். செய்யுள். 178)-ம், சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டுங் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையவ ராவார், ஆணையிற் இளக்கப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொட ரெல்லாம் மந்திரம் எனப்படும்' என்ற அதன் உரையும் காண்க. 'நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து, மறைமொழி காட்டி விடும்' (குறள். 28); என்பதும் காணத்தகும். நோய்: பிறவி நோய்; நோய்தரு வினை - நல்வினை தீவினை; 'வினைப்போக மேயுறு தேகங்கண்டாய் வினைதா னொழிந்தால், தினைப்போதளவு நில்லாது கண்டாய்' (பட்டினத். பொது: 8); இந்த வினைதனைப் பொன்விலங்கும் இருப்பு விலங்கும் என்ப; நல்வினையும் பிறத்தற் கேதுவாகலின் பொன் விலங்கு எனப்பட்டது.

இராம நாம பாராயணம், பிறவிக்குக் காரணமான ஆகாமிய சஞ்சித பிரார்த்த வினைகளைப் போக்கி இறுதியில் பிறவியையும் போக்கவல்லது; 'தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சென்ம முமரணமுமின்றித் தீருமே, இம்மையே இராம வென்றிரண் டெழுத்தினால்' (பால. பாயி. 17); 'அரந்தை வெம் பிறவி நோய்க்கோ ரருமருந்தனைய வையா' (கிட்கிந்தா. 349); 'மால் தரும் பிறவி நோய்க்கு மருந்தென வணங்குமைந்த' (கிட்கிந்தா. 376); என்பன வாலிகூற்று. இராமபிரான் திருநாமத்தின் மகிமை கருதிப் பெரும் பெயர் எனப்பட்டது, 'பெருந்தவமியற்றி னோர்க்கும் பேர் வரும் பிறவி நோய்க்கு, மருந்தென நின்றான்' (யுத்த. 442); உன்னை நினைக்குவார் பிறவிப்பிணி விலகுவதுபோல ஓர் நொடியின் இந்த மாயாத்திரத்தின் வலியொழியும் என்றான். நினைக்குவார் என்பதில் கு சாரியை. உவமையணி. நொடித்தல் - சொல்லுதல்; நொடி பிசி என்று கூறப்படுவன காண்க. நொவ் வியலுற்றன நொடிப்ப தென்னினி' (யுத்த. 786); நின்பெரும் பெயர் உச்சரித்தால் நொடியின் நீக்குவாய் எனினுமாம்; இங்கு நொடி: கைந்நொடிப் பொழுதாகிய ஓர் மாத்திரையளவு.

பி - ம். 1. விக்கும் மாயின, விக்கு வாயன், விய்க்கு வாயன்ன.

2. வலியும்.

3. நுன்பெரும். 122

3763 வரத்தி னாயினு மாயையி னாயினும் வலியோன்
உரத்தி னாயினு முண்மையி னாயினு மோடத்
துரத்தி யாலென ஞானமாக் கடுங்கணை துரந்தான்
சிரத்தினுன் மறை யிறைஞ்சவுந் தேடவுஞ் சேயோன்.

நான்மறை - நான்கு வேதங்கள், சிரத்தின் - (தமது) சிரசு என்று சொல்லப்படும் உபநிடதங்களினாலும், இறைஞ்சவும் தேடவும் சேயோன் - வணங்குவதற்கும் தேடுவதற்கும் இயலாத வாறு அப்பாற்பட்ட பரம்பொருளான இராமபிரான் (இங்கு தோன் 'றியது), வலியோன் - வன்மையாளன் ஆன இராவணன். வரத்தின் ஆயினும் மாயையின் ஆயினும் - வரத்தினாலேனும் மாயையினாலே னும் அல்லது, உரத்தின் ஆயினும் - உடல் வன்மையாலேனும் அல்லது, உண்மையின் ஆயினும் - உண்மையினாலேனும் சரி,

(எந்த வகையினாலேனும்), ஓட - ஓடுமாறு, துரத்தி-(இதனை) ஓடச் செய்வாய்' என - என்று மொழிந்து, மா கடு ஞானம் கடுகணை - பெருமை வாய்ந்ததும் விரைவுடன் கூடியதுமான ஞானாத்திரத்தை, துரந்தான் - செலுத்தினான். ஆல், அசை.

சேயோன் துரந்தான் என்க. இராவணன் பெற்ற உன்னதமான வரங்களை, உத்தரகாண்டம் அரக்கர் பிறப்புப் படலத்துக் காண்க. உரம்: வன்மை; இங்கே உடல்வன்மை. 'உரமொருவற் குள்ள வெறுக்கை' (குறள். 600); அவன் வன்மை வரத்தினாலோ, மாயையினாலோ, உரத்தாலோ இவையன்றி உண்மையாகவே அவன்பாலுள்ள வன்மையாலோ எந்தவகையில் ஏற்பட்டதாயினும் அந்த வன்மை அறும்படி செய்கவென்று வாளி விடுத்தான். உபநிடதங்களை வேதங்களின் சிரசென்ப. இங்கு நான் மறையென்று வந்த போதிலும், வேதம் அநந்தம் என்ப. 'அநந்தாவை வேதாகா' என்பது முதனூல்; இராவணனை 'ஐயன் வேதமாயிரம் வல்லான்' (சுந்தர. 483); என்பர் கம்பநாடர் 'மறை நான்கு மனையார்கள்' (பால. குலமறை: 23), நான்காமடிக்கு: 'மறையினாலயனால் மாலால் ...........கூறொணாதாகி நின்ற இறைவன்' (சிவரிந்தி. 4); 'வேதமும் முடிவு காணா மெய்ப்பொருள் வெளிவந்தெய்தி' (யுத்த. 416). ஓடத்துரத்து என்றது வில்லின் அதிதேவதையைக் குறித்துக் கூறியது.

பி - ம். 1. வலியோர், வலிய.
2. ஓடித்.
3. துரத்திறவென, துரத்திவாவென; கொடுங்கணை.
4. தொடரவும், தொடர்வரும்; தெரியான், செய்யோன். 123

3764. துறத்த லாற்றுறு ஞானமாக் கடுங்கணை தொடர
அறத்த லாதுசெல் லாதுநல் லறிவுவந் தணுகப்
பிறத்த லாற்றுறும் பேதைமை பிணிப்புறத் தம்மை
மறத்த லாற்றந்த மாயையின் மாய்ந்தது மாயம்.

துறத்தலால் - (இராமபிரான்) ஏவியதனால், துறு - நெருங்கிய, கடு - கடிய, மா ஞானம் கணை தொடர - பெருமை தங்கிய ஞானாத்திரம் பின்தொடர, அறத்து அலாது - அறவழியிலே அல்லாமல், செல்லாது - (மாறான வழியில்), புகாதபடி நல் அறிவு வந்து அணுக - நல் உணர்வு வந்து பொருந்துதலால், பிறத்தலால் -

பிறப்பினாலே, துறும் - நெருங்கிய, பேதைமை பிணிப்புஉற - அறியாமையானது பிணிப்ப, தம்மை மறத்தலால் - தம் உண்மை நிலையை மறந்திட்டதனால். தந்த - விளைந்த, மாயையின் - மாயை தோலைவது போல, மாயம் மாய்ந்தது - அந்த மாயாத்திரம் தொலைந்தது.

உண்மைப் பதிஞானத்தால் பிறப்பிற்குக் காரணமான மாயை நீங்குவதுபோன்று இராமபிரான் செலுத்திய ஞானாத்திரத்தால் இராவணனுடைய மாயாத்திரம் அழிந்தது எனப்பட்டது. 'பிறப் பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்ப தறிவு' (குறள். 358); இந்தக் காணத்தகும். இங்குப் பிறப் பென்னும் பேதைமையெனவும், சிறப்பென்னும், செம்பொருள் எனவும் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். காமமாதி குற்றங்களில் அன்றேயுள்ள அவித்தையாகி, அஞ்ஞானம் அல்லது பேதைமை பிறப்புக்கு காரணம் என்ப. 'இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி மாசறு காட்சி யவர்க்கு' (குறள். 352); என்றபடி 'அவிச்சையினீங்கி மெய்யுணர்வுடையராயினார்க்கு, அம்மெய்யுணர்வு பிறப்பினை நீக்கி வீட்டினைக் கொடுக்கும். உயிர் கள பிறந்து துய்த்தற்கான ஆகாமிய சஞ்சித பிராரத்தமாகிய வினைகள், விளக்கின் முன் இருள்போன்று ஞானயோகங்களின் முன் கெடும் என்பது உறுதியாதலின், நல்லறிவு வந்தணுகப் பிறத்த லாற்றுறும் பேதைமையின் பிணிப்பால் தன்னை மறந்திட்டதனால் தோன்றிய மாயை அழிவது போன்று எனக்கூறப்பட்டது உவமையணி. அநாதியெனக் கருதப்படுகின்ற மாயையும் அதனால் உண்டாகும் அஞ்ஞானம் முதலிய ஏழு அவத்தைகளும், தன்னையறிந்து தனக்காதாரத் தலைவனையும் உள்ளபடியறிந்து நின்ற நிலையில் வேதகத் திரும்பு பொன்னானாற் போல, நிலைகெட்டு தூயஞானநிலை ஏற்படும் என்பது கைவல்யமாதி விரிந்த நூல்களிற் கண்டு தெளிக, 'உன்னை நீயறிந்தாயாகில் உனக்கொரு கேடுமில்லை. என்னை நீயடுத்ததாலே யீதுபதேசித் தேனே' (தத்துவ. 20); என்பது கைவல்யநவநீதம்: 'எப் பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு' (குறள். 355); என்ற குறட்பாவும் அதற்குப் பரிமேலழகர் எழுதியுள்ள உரையும் இங்கு அறியத்தக்கன,

ஆகாமிய சஞ்சித பிராரத்தமாகிய கன்மங்கள் ஞானத்தீயால் அழியும், அழியவே அந்தக் கன்மங்கள் காரணமாக வந்த பிறவி நீங்கி வீடுபேறுறும் என்ப. 'ஞானக்னி தக்தகர்மாணி' என்ற பகவற்கீதை வரியும் காண்க. நல்லறிவு என்றது மெய்யுணர்வு; அதாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத வையங்களாலன்றி உண்மையாலுணர்தல்; இதனை வட நூலார் தத்துவ ஞானம் என்ப. இந்த ஞானம் கைவரப்பெற்றவர் இறைவன் அருளுக்கத்திற்குப் பாத்திரராகிப் பிறப்பு நீங்கப் பெற்று அந்தமில் இன்பமாகிய வீட்டினை யடைந்து இன்ப அன்பு வடிவான ஈச்வரனிடத்தொன்றுவர் என்ப. இதனை, 'முன்பு திருக்காளத்தி முதல்வனார் அருளுக்கில், இன்புறு வேதத் திரும்புபொன்னுற்போல், தன்பரிசும் வினையிரண்டும் சாருமல மூன்றுமற, அன்பு பிழம்பாய்த் திரிவார்' (பெரிய. பு. கண்ணப்பர் 154) என்றதனால் அறிக.

பி - ம். 2. அறத்தலாரறது, அறந்நிறனது; சேறலால், தேறலால்.
3. பிறத்தலாற்றுமப்.
4. மறத்தலால்; மாய்ந்ததம் மாயை. 122

இங்கு அதிகப்பாடல்:—

மாயையின் படை தொலைந்திட வகுப்பொடு மெழுந்த
தீய வெவ்வினைச் செய்கைகள் யாவையும் சிதைத்தே
போய தெங்கணு மிருளற வொளித்தப் பொழுதில்
காயும் வெஞ்சினத் தரக்கனும் கண்டுளம் கறுத்தான்.

வேறு

இராவணன் சூலத்தை விடுத்தல்

3765. நீலங் கொண்டார் கண்டனு நேமிப் படையோனும்
மூலங் கொண்டார் கண்டக ராவி முடிவிப்பான்
காலங் கொண்டார் கண்டன முன்னே கழிவிப்பான்
சூலங் கொண்டா னண்டரை யெல்லாந் தொழில்
[கொண்டான்.

நீலம் கொண்டு ஆர் - நீல நிறம் கொண்டு பொருந்திய, கண்டனும் - கண்டத்துடன் கூடியவனான சிவபெருமானும், நேமி படை

யோனும் - ஆழிப்படை தாங்கிய திருமாலும், மூலம் கொண்டார் - (திருமாலின் நாபிக்கமலமாகிய) இடத்தில் தோன்றிய பிரம தேவனும், கண்டகர் ஆவி முடிவிப்பான் - உலக கண்டகர் இருடி கண்டகராகிய இராக்கதரின் உயிரை ஒழிப்பதற்கு, (ஏற்ற) காலம் கொண்டார் - காலத்தை உண்டாக்கிக் கொண்டனர்; அண்டரை எல்லாம் தொழில் கொண்டான் - தேவரை யெல்லாம் ஏவற் பணி புரியுமாறு கொண்டவனான இராவணன், முன்னே கண்டன கழி விப்பான் - கண்எதிரிற் காணப்படும் பொருளை யெல்லாம் போக்குவது கருதி, சூலம் கொண்டான் - சூலாயுதத்தைக் கைக் கொண்டான்.

பிரமன் திருமால் சிவன் என்ற திரிமூர்த்திகளும் அரக்கர் ஆவியை ஒழிப்பதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டு அதற்குரிய காலம் பார்த்திருக்கையில், இராவணன் சூலத்தைக் கையேற்றான்; எல்லாப் பொருள்களும் அதனால் ஒருசேர அழியும் என்பது அவன் கட்டிய மனக்கோட்டை. மூலம் - பிரமதேவனுக்குப் பிறப் பிடமான கொப்பூழ்த் தாமரை. 'கண்டகர்' - முள் போன்று கொடியர். 'தருமந்தா, னீருங்கண்டாய் கண்டக ருய்ந்தா ரெவரையா' (ஆரணிய. 734); கண்டன - வினையாலணையும் பெயர். அண்டர் - தேவர். 'அண்டரே தேவராயர்' (நிகண்டு); 'அண் டருந் தன்குற் றேவல் அடிமையாக் கொண்ட வெம்மான்' (திருவிளை. விறகு. 24); 'அண்டர்நா யகனுரென்னை யறிவரேல் அறியா வாய்மை' (பெரிய பு. காரைக்கால். 54); அண்டரை யெல்லாம் தொழில் கொண்டான் - இராவணன். சுந்தர. 145, 146, 1092; ஆரணிய 560, 561, 562, 563 முதலியன காண்க.

பி - ம். 1. நிலங்கொண்ட.

2. முடிவிப்பார், முடிகிற்பார்.

3. கொண்டனர் முன்னே கழிவிப்பான், ஆயினு முன்வரிப் கழிவிக்கும், கொண்டென முன்னே கழிவிக்கும்.

4. தொலைவித்தான், தொலைகொண்டான்.

123

3766. கண்டா குலமுற் றுயிர மார்க்கின் றதுகண்ணிற்
கண்டா குலமுற் றும்ப ருயிர்க்கின் றதுவீரர்
கண்டா குலமுற் றுஞ்சுடு மென்றக் கழல் வெய்யோன்
கண்டா குதன்முன் செல்லவி சைத்துள் ளதுகண்டான்.

ஆயிரம் கண்ட ஆகுலம் - ஆயிரம் கண்டையின் தொகுதி, முற்றும் - முற்றிலும், ஆர்க்கின்றது - ஒலிக்கப் பெற்றதும், உம்பர் - வானவர், கண்டு - கண்ணுற்று, ஆகுலம் உற்று - துன்பமெய்தி, அயிர்க்கின்றது - (இது யாது விளைக்குமோ) என்று ஐயுறுதற் கேதுவானதும், 'வீரர் கண் - (எதிர்த்து நிற்கும்) வீரர் மாண்டுள்ள, தா - வலிமையையும், குலம் - குலத்தையும், முற்றும் சுடும் - அடியோடு தீய்த்துவிடும்', என்று - என்று, அ கழல் வெய்யோன் - அழகிய வீரக் கழலை யணிந்த கொடியவனான இலங்காதிபன், கண் தாகுதல் முன் - (பிறருடைய) கண் காண்பதற்கு முன்னம், செல்ல - செல்லுமாறு, விசைத்து உள்ளது - வேகமாக விடுத்துள்ளதுமான, சூலாயுதத்தைக் கண்டான் - இராமபிரான் கண்ணுற்றான்.

கண்டை - ஒருவகை ஒலிக் கருவி. 'காடிகை துடிவேய் கண்டை' (யுத்த. 2381); கண்டை - மணியுமாம். கண்டா - வடசொல். கண்டைபோல் ஒலிப்பதும், உம்பர் அயிர்க்கின்றதும், எதிர்த்தோர் வலியை அழிப்பதும் ஆன சூலப்படை என்க. சுடுமென்று விசைத்துள்ளது என இயைக்க. இரண்டாமடியில் ஆகுலம் - துன்பம்; வியாகூலம் என்ற வடசொற் றிரிபு. 'சிந்தவந் தோராகுலம் பிறந்ததால்' (யுத்த. 3312); 'சிந்தாகுல முற்றென்னை வென்னைவாட்டந் திருத்துவதே' (திருக்கோ. 12); தாக்குதல் என்பது யமகச் செய்யுளின் எதுகையை ஒட்டித் தாகுதல் என நின்றது. கண் தாக்குதல் - கண்ணிற் படுதல். தாவுதல் என்பது தாகுதல் என நின்றது எனினுமாம்.

பி - ம். 1. கண்டார்.
2. பதைக்கின்றது கண்ணிற், அயர்க்கின்றது வீரர்.
4. கண்டாயுதன்முன், கண்டாவுதன்முன். 124

3767. எரியா நிற்கும் பஃறலை மூன்று மெரியஞ்சத்
திரியா நிற்கத் தேவர்க ளோடத் திரளோட
இரியா நிற்கு மெவ்வுல குந்தன் னொளியேயாய்
விரியா நிற்கு நீர்கில தார்க்கும் விழிசெல்லா.

எரியா நிற்கும் பல்தலை - எரியும்படியான (அந்தத்) திரிசூலமானது, எரி மூன்றும் அஞ்ச - மூன்று அக்கினிகளும் பயப்படுமாறு, திரியா நிற்க - சுழல, (அதைக் கண்ணுற்றுத்) தேவர்கள் ஓட -

வானவர்கள் ஓட்டம் பிடிக்கவும், திரள் ஓட - (வாநரர் முதலான ஏனையரின்) கூட்டம் இரியவும், இரியா நிற்கும் எவ் உலகும - நிலை தடுமாறுகின்ற எந்த உலகத்திலும், தன் ஒளியேயாய் விரியா நிற்கும்-தன் ஒளியேயாகி முற்பட்டு விரியும்; ஆர்க்கும்-எவர்க்கும், (அதனைக் கண்ணுற்றின்) விழி செல்லா நிற்கிலது - விழி செல்லாமல் நிற்கிலது.

நிற்கிலதார்க்கும் விழி செல்லா - எல்லாருடைய கண்களையும் கவரும் தன்மையுள்ளது என்க. வடமொழி இலக்கணத்து மூன்று முதல் பன்மை எனப்படுதலின், முத்தலைச் சூலம் 'பஃறலை' எனப் பட்டது. இது பண்புத் தொகை அன்மொழி. நான்கு வரிகளிலும் ஆநின்று என்பது நிகழ்கால இடைநிலை. பல்தலை - பஃறலை; இங்கு சூலத்துக்காகி வந்தது. 'குறில் வழிலளத் தவ்வணையி னாய்தம், ஆகவும் பெறுஉம் அல்வழியானே' (நன். 228); தேவர்கள் ஓட எனச் சிறப்புப்பற்றி விதந்தமையின் திரள் என்பது ஏனைய தொகுதியினரைச் சுட்டிற்று எனக. சூலத்தின் ஒளி உலகில் உள்ள எல்லா ஒளிப் பிழம்புகளையும் விஞ்சியது என்பது. முதலடியில் மூன்றுமெரி என்பது விகுதி பிரித்துக் கூட்டி எரி மூன்றும் எனக் கொள்க. மூன்றெரி ஆகவனீயம் காருக பத்தியம் தென்றிசைத்தீ என்ப.

பி - ம். 1. என்றிலை மூன்றி னெரியஞ்சி, பல்தலை மூன்று மெரிசிந்தித்.

2. தெரியா; நிற்கும்; தேவரை நாடித் திரளோடும், தேவர்களோடே, திரளோட, தேவரையோடத் திரளோடும்.

3. எவ்வுலகும் பேரொளியாக.

4. நின்றவர் யார்க்கும்; விழிசெல்ல.

125

## இச் சூலத்தை வெல்வாயென்று இராமபிரானைத் தேவர் வேண்டுதல்

3768. செல்வா யென்னச் செல்ல விடுத்தா னிது தீர்த்தற்
கொல்வாய் நீயே வேறொரு வர்க்கும் முடையாதால்
வல்வாய் வெங்கட் சூல மெனுங்கா லனைவள்ளால்
வெல்வாய் வெல்வா யென்றனர் வானோர் மெலிகின்றார்.

வானோர் - விண்ணவர், மெலிகின்றார் - உடலும் உள்ளமும் வாடப் பெற்றவராய், 'செல்வாய் - செல்வாய், என்ன - என்று

பகர்ந்து, செல்ல விடுத்தான் - (சூலப் படையைச்) செல்லுமாறு இராவணன் விடுத்தான ; இது தீர்த்தற்கு ஒல்வாய் நீயே - இதனை ஒழித்தற்கு வல்லவன் நீயே', (இது) வேறு ஒருவர்க்கும் உடையாது - பிறர் எவர்க்கும் அழியாது; (ஆதலின்) வல்வாய் வெம்கண் சூலம் எனும் காலனை - வலிய வாயுடன் கொடுமையும் கொண்ட சூலம் எனப்படும் யமனை, வள்ளால்-கருணாநிதியே, நீயே வெல்வாய் வெல்வாய் - நீ வெற்றி கொள்வாயாக வெற்றி கொள்வாயாக', என்றனர் - என்று இரந்தனர். ஆல்: அசை. இக் கவி தேவர் கூற்று.

ஒல்லுதல் - இயலுதல்; 'ஒல்லுவ தொல்லு மென்றலும்' (புறநா. 196); 'ஒல்லும் வகையா லறவினை யோவாதே' (குறள். 33); 'ஒல்லும் வாயெல்லாம் வினைநன்றே' (குறள். 673); வல்வாய் - வலியவாய்; 'வல்வாய்ச் சாடியின் வழைச்சற விளைந்த' பெரும்பாண். 286); 'வல்வாய்ப் பஃறி' (பட்டினப். 30); 'வல்வாயெல்லரி' (மலைபடு. 10); 'வெல்வாய் வெல்வாய்' என்ற அடுக்கு வானோர்க்கு அச்சத்தால் நிகழ்ந்த உணர்ச்சி வேகத்தைக் குறித்து நின்றது. மெலிகின்றார் வானோர் என மாற்றி இயைத்தலுமாம். 'வானோர்' 'வானோர் கொள்ளார் மண்ணவருய்யார்' (அயோத்தி. கைகேசி. 27); 'வானோர் தொழு நின்மட் பாத்திரத்தை வனைந்தது நீதானோ' (பிட்சாடன நவமணி மாலை).

பி - ம். 2. மிடையாதால், முடியாதால்.
3. வள்ளல், வாளா.
4. மெலிவுற்றார். 126

## இராமன் அந்தச் சூலத்தின்மீது எறிந்த சரங்கள் வீணுதல்

3769. துனையும் வேகத் தாலுரு மேறுந் துண்ணென்ன
வனையுங் காலிற் செல்வன தன்னை மறவாதே
நினையு ஞானக் கண்ணுடை யார்மேல் நினையாதார்
வினையம் போலச் சிந்தின வீரன் சரம்வெய்ய

துனையும் வேகத்தால் - விரைகின்ற வேகத்தால், உரும் ஏறும் துண் என்ன - பேரிடியும் திடுக்கிடுமாறு, வனையும்-சூழும், காலில் -

காற்றுப் போன்று, செல்வன - செல்லக்கூடியவான, (வீரன்) வெய்ய சரம் - இராமபிரான் விடுத்த கொடிய வாளிகள், தன்னை மறவாதே நினையும் - தன்னை இடையறாது எண்ணுகின்ற, ஞானம் கண் உடையார்மேல் - ஞான நேத்திரத்தையுடைய பரம அன்பர்கள் மேல், (இறைவன் ஒருவன் உளன் என்றுகூட), நினையாதார் - கருதவும் மாட்டாதவருடைய, வினையம் - சூழ்ச்சிச் செயல்கள், போல - பயன் விளையாது ஒழிவதுபோன்று, சிந்தின - (அந்தச் சூலப்படை மீது) சிந்தின.

சூலப்படைமீது இராமபிரான் எய்த சரங்கள் பெரிய ஞானிகளிடம ஞானமற்றவர் புரியும் பில்லி சூனியம் முதலிய தீச்செயல்கள் பயன் விளையாது ஒழிதல் போன்று பயனற்றனவாயின. துனைதல் - விரைதல்; 'துனைபரி கரிதேர்' (யுத்த. மீட்சி. 347); 'துனை வெங் கபோல விகடகடகரி' (வி. பா. 16 ஆம். 72); உவமையணி. வீரன் சரம்; 'வீரன் சரத்துக்கும் கூறிற்றுண்டோ' (சுந்தர. 449); பிரகலாதனையும் அப்பரையும் முறையே இரணியனும் பல்லவ மன்னனும் செய்த கொடுமைகள் பயனற்றுப்போன செய்தி இங்கு உணரத்தக்கது.

பி - ம். 1. ஏறுந்துனினென்ன.
2. செல்வன தன்மை, செல்வதுறன்னை.
3. கண்ணுடையான்.
4. வினையம் என்ன; சிந்தினன். 127

இதன்பின் 'மறந்தான்' என்னும் பாடல் ஓர் பிரதியில்.

## அந்திரங்களை யெய்தும் ஒன்றும் பயன்படாமற் போகவே திகைத்தவன்போல் இராமபிரானிருந்தல்

3770. எய்யு மெய்யுந் தேவ
ருடைத்திண் படை யெல்லாம்
பொய்யுந் துய்யு மொத்தவை
சிந்தும் புவி தந்தான்
வையுஞ் சாப மொப்பென
வெப்பின் வலிகண்டான்
ஐய னின்றுன் செய்வகை
யொன்று மறிகில்லான்.

புவி தந்தான் - பூமியைப் புரப்பவனுன இராமபிரான், தேவர் உடை திண் படை எல்லாம் - வானேரின் வலிய ஆயுதங்கள் அனைத்தையும், எய்யும் எய்யும் - விடாமல் விடுத்தான்; அவை பொய்யும் துய்யும் ஒத்து - அவை பொய்யையும் பஞ்சினையும் நிகர்த்து, (அந்தச் சூலப்படையை யாதும் செய்யமாட்டாது) சிந்தும் - சிதறின; ஐயன் - இராமபிரான், வையும் சாபம் ஒப்பு என - வைகின்ற சாபம் போன்று, வெப்பின - வெம்மையுடைய, அந்தச் சூலத்தின, வலி கண்டான் - வன்மையைக் கண்டான்; செய் வகை ஒன்றும் அறிகில்லான் நின்ருன் - செய்யும் வகை ஒன்றையும் அறியாதான் போன்று நின்ருன்.

எய்யும் எய்யும் என்னும் அடுக்கு, இடையருத சரமாரியைக் குறித்து நின்றது. பொய்யும் துய்யும்: உண்மையின் முன் பொய் போலவும், தீயின் முன் பஞ்சு போலவும் அவை பயனற்றொழிந்தன. துய்: பஞ்சு. வையும் சாபம் ஒப்பான்; 'வைதெனக் கொல்லும் விற்கைமானுடர்' (யுத்த. 751); 'வைதாலென வைதாவின் வடிவாளி' (யுத்த. 1113); 'வைவன முனிவர் சொல்லனைய வாளிகள்' (யுத்த. 1776); 'வைதவைவினில் ஒழிந்தன' (யுத்த. 3495); 'வைதவைவில் மராமர மேழ்துளை செய்தவன்' (பால. பாயி,)) எல்லா மறியவல்ல சரவஞ்ஞனை அறிகில்லான் என்றது அவன் எடுத்த மனித வடிவுக்கேற்ப அறியாதோன் போன்று நடிப்பதைக் குறிக்க என்க.

பி - ம். 2. பொய்பு மெய்யும்; ஒப்பன, ஒத்தில்லை.
3. ஒப்பதின் வெம்பும், ஒப்பனவொப்பின், ஒப்பனவம்பின்; எய்ப்பின்; கண்டே.
4. செய்வதை; எல்லாம்; அறிகின்ருன், அறிவில்லான். 128

### சூலம் இராமனை நெருங்கி வருதல்

3771. மறந்தான் செய்கை மாறெதிர் செய்யும் வகையெல்லாம்
துறந்தா னென்னு வும்பர் துணுக்கந் தொடர்வுற்ருர்
அறந்தா னஞ்சிக் கால்குலை யத்தா னறியாதே
பிறந்தான் நின்ருன் வந்தது சூலம் பிறரஞ்ச.

'மறந்தான் செய்கை - (சூலத்திற்குச் செய்யக்கூடிய) செயலை மறந்தவனாய், மாறு எதிர் செய்யும் வகை எல்லாம் துறந்தான் - அதற்கு எதிரிடையாகச் செய்யும் வகைகளனைத்தையும் கைவிட்டான்', என்னா - என்று சொல்லி, உம்பர் - வானோர், துணுக்கம் தொடர்வு உற்றார் - அச்சம் தொடரப் பெற்றனர்; அறம் அஞ்சி கால் குலைய - அறக் கடவுளும் பயந்து கால் நடுங்க, பிறந்தான் - மனிதனாகத் தோன்றிய இராமபிரான், அறியாதே நின்றான் - தன் தெய்வத் தன்மையை உணராமலே நின்றான்; (அச் சமயம்) சூலம் பிறர் அஞ்ச வந்தது - (தாம் ஒழியப்) பிறர் நடுங்குமாறு சூலப்படை வந்தது.

வானோர் மெலிகின்றார் என்று 3769 இல் கூறப்பட்டது. அதே வானவர் பின்னும் அஞ்சினர் என்பது தோன்றத் துணுக்கம் தொடர்வுற்றார் எனப்பட்டது. வானோர் மட்டுமோ அறக் கடவுளும் அஞ்சி நிலை குலைந்தது என்க. மக்கள் வடிவெடுத்ததற்கேற்பத் தெரியாதவன் போன்று நடித்தான் என்பான். 'பிறந்தான் அறியாதே நின்றான்' எனப்பட்டது.

பி - ம். 1. மற்றெதிர்; சொல்லும்தியெல்லாம்.
3. அறியாது.
4. பிறந்தானென்றான்; வந்தன. 129

அதிகப் பாடல்கள் :—

நெற்றிவிழி யானய னிறைந்தமறை யாள
மற்றையம ரர்புவியில் வானவர்க ளிரைந்
துற்றதலை தானவன் விடும்கொடிய சூலம்
இற்றொழிய வான்றளியு மோவென விசைத்தான். 1

வேதமொரு நாலுமுள வேள்விகளும் வெவ்வே
றோதமுத லாயுதவு பூதமவை யைந்தும்
நீதியொடு கால்குலைய நீசன்விடு சூலம்
ஈதழியு மென்றிதய மெண்ணின னிராமன்.

## இராமபிரானுடைய உங்காரத்தால் சூலம் பொடியா யுதிர்தல்

3772. சங்கா ரத்தாற் கண்டை யொலிப்பத் தழல்சிந்தப்
பொங்கா ரத்தான் மார்பெதி ரோடிப் புகலோடும்
வெங்கா ரொத்தான் முற்று முனிந்தான் வெகுளிப்பேர்
உங்கா ரத்தா லுக்கது பன்னூ றுதிராகி.

(அந்தச் சூலம்), சங்காரத்தால் - அழிக்கும் தொழிலுடன், கண்டை ஒலிப்ப - மணிகள் சத்திக்கவும், தழல் சிந்த - நெருப்புச் சிதறவும், பொங்கு காரத்தான் - பொங்குகின்ற சினத்தினையுடைய, (இராமபிரானுடைய) மார்பு எதிர் ஓடி - மார்புக்கு நேராக விரைந்து சென்று, புகலோடும் - நுழைந்த அளவில், வெம் கார் ஒத்தான் முற்றும் முனிந்தான் - கொடிய மேகத்தை யொத்தான் மிகவும் சினந்தான்; வெகுளி - (அவனுடைய) சினத்தினால் எழுந்த, பேர் உங்காரத்தால் - பெரிய உங்கார ஒலியால், (அந்தச் சூலம்), பல் நூறு உதிர் ஆகி - பல நூறு தூள்களாகி, உக்கது - சிதறியது.

சங்காரம் - அழித்தல்; 'சாற்றியிடு மங்கியிலே சங்காரம்' (உண்மை விளக்கம்); சம்ஹாரம் என்ற வட சொற்றிரிபு. கண்டை - மணி; கண்டா வட சொல். பொங்கு காரம் எனப் பிரிக்க. காரம் - கோபம்; வழக்கு. முற்று முனிந்தான். 'பற்றுதி ரென்றான் முற்று முனிந்தான்' (சுந்தர. 1228); உங்காரம் - அநுகரணம். கடுங் கனைப்பு; 'உங்காரத்தி னுரப்பு மோதையான்' (கந்தபு. அக்கினி. 95); உக்கது; 'பண்டை நாளுக்க வெள்ளென்பும்' (அரிச். விவாக. 12); பன்னூறுதிராகி யுக்கது என மாற்றுக.

பி - ம். 1. சங்காரத்தார், சங்கரரார்த்தார்; தண்டை.

2. பொங்காரரார்த்தான்.

3. வெங்காரரார்த்தான்; முற்ற.

## அது கண்ட வானோரின் கொண்டாட்டம்

3773 ஆர்ப்பா ரானு ரச்சமுமற்ரு ரலர்மாரி
தூர்ப்பா ரானுர் துள்ளல் புரிந்தார் தொழுகின்ருர்
தீர்ப்பாய் நீயே தீயென வேருய் வருதீமை
பேர்ப்பாய் போலா மென்றனர் வானே ருயிர்பெற்ருர்.

(அலைதக் கண்ணுற்ற), வானோர் - அமரர்கள், உயிர் பெற்ருர் - (இழந்ததே போன்ற தம்முடைய) உயிர் திரும்பப் பெற்றவராய், ஆர்ப்பார் ஆனுர் - ஆர்வாரித்தார்கள்; அச்சமும் அற்ருர் - பயமும் ஒழிந்தவரானுர்; அலர் மாரி - மலர் மழையை, தூர்ப்பார் ஆனுர் - நிறைப்பவரானுர், துள்ளல் புரிந்தார் - துள்ளுதலைச் செய்தார், தொழுகின்ருர்-வணங்குவாராய், தீர்ப்பாய் நீயே-(இந்தச் சூலத்தின் ஆற்றலைப்) போக்க வல்லவனுகிய நீயே, தீ என - நெருப்புப் போன்று, வேருய் வரு தீமை - (இனி) வெவ்வேருய் நிகழக்கூடிய தீமைகள் எல்லாம், பேர்ப்பாய் போலாம் - நீக்குவை போலும், என்றனர் - என்று மொழிந்தார். போல் - ஒப்பில் போலி.

உவகையின் மெய்ப்பாடுகள் இதில் கூறப்பட்டுள்ளமை காண்க. பேர்த்தல்; 'பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' (குறள். 367).

பா - ம். 1. அச்சமுன்.
2. தொடர்கின்ருர்.
3. தீயன நீயே, தீயன தீயாருயர் தீமை.
4. ஓர்ப்பாய் போலாம்.

131

## இராவணன் இராமபிரானை 'வேத முதல்வனே' எனக் கருதுதல்

3774. வென்ரு னென்றே யுள்ளம்
வெயர்த்தான் விடுசூலம்
பொன்ரு னென்னிற் போகல
தென்னும் பொருள்கொண்டான்

ஒன்று முங்கா ரத்திடை
யுக்கோ டுதல்காணு
நின்று னந்நாள் வீடண
ளுர்சொல் நினைவுற்ருன்.

'விடு சூலம் - நாம் எறிந்த சூலப்படை, பொன்ருன என்னில் போகலது - (இராமன்) இறந்தாலன்றி (அவனை விட்டு) அப்புறம் செல்லாது', என்னும் பொருள் - என்கின்ற கோட்பாட்டை, கொண்டான் - மனத்திற் கொண்டவனுன இராவணன், ஒன்று ஆம் - ஒப்பற்றதான, உங்காரத்திடை - (இராமனது) உங்காரத்தினுல், உக்கு ஓடுதல் - (அந்தப் படை) சிதறி ஓடுதலை, காணு நின்ருன் - கண்டு நின்றவனுகி, 'வென்ருன் - இவன் நம்மை வெல்பவனே ஆவன', என்றே - என்று கருதி, உள்ளம் - மனதில் எழுந்த (அச்சத்தால்), வெயர்த்தான் - வெயர்த்தான்; அந் நாள் - முன்னுளிலே, வீடணனுர் சொல் - விபீடணன் சொன்ன நல்லுரையை, நினைவுற்ருன் - மனத்திற் கருதி நின்ருன்.

உள்ளம் வெயர்த்தான் 'பொள்ளென வாங்கே புறம வேரார் காலம்பார்த், துள்வேர்ப்ப ரொள்ளியவர்' (குறள். 487); உள் வேர்த்தலாவது: உள்ளே வெகுண்டு புழுங்குதல். சூலம், எறியப்பட்டவன உயிரைக் கவர்ந்தே தீரும் என்ற கொள்கையை யுடையவன் என்பது இங்குக் குறிக்கப்பட்டது. இறுதியடியில் 'அந்நாள்' என்பதற்கு அப்போது எனக் கோடலுமாம். வென்ருன் அன்றே; தெளிவுபற்றி யெழுந்த கால வழுவமைதி. 'கூறிய மனிதர் பாற் கொற்றங் கொள்ளலை, வேறினி யவர்வயின் வென்றி யாவதோ' (யுத்த. 89) காண்க. மற்றும் இராவணன் மந்திரப் படலத்து வீடணன் இராவணற்குக் கூறும் அறவுரைகளும் இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. வென்றேனென்றே, வென்றே நின்றே; வெயர்ந்தான்.

2. பொன்ருவாயின், பொன்ருநின்ற, பொன்ரு வென்னில்; போகிலதென்னும்.

3. நீயுற்ருேடுதல் காணு.

4. நின்ருனன்னுன்.

3775. சிவனோ வல்லன் நான்முக னல்லன் திருமாலாம்
அவனோ வல்லன் மெய்வர மெல்லா மடுகின்றான்
தவனோ வென்னிற் செய்து முடிக்குந் தரனல்லன்
இவனோ தானவ் வேத முதற்கா ரணனென்றான்.

'மெய் வரம் எல்லாம் அடுகின்றான் - (நமது) உண்மையான வரம் அனைத்தையும் பாழ்படுத்துபவனான இவன், சிவனோ அல்லன் - சிவபிரானோ எனில் (அவன்) அல்லன்; நான்முகன் அல்லன் - பிரமனோ என்னில் (அவன்) அல்லன்; திருமாலாம் அவனோ அல்லன் - திருமால் என்று சொல்லப் பெறுபவனோ என்னில் (அவனும்) அல்லன்; தவனோ என்னில் - பெருந்தவத்தினருள் ஒருவனோ என்னில், செய்து முடிக்கும் தரன் அல்லன் - அவற்றைச் செய்து முடிக்கும் தகுதியுடையவனாகவும் காணப்படுகின்றானில்லை; (எனவே), இவன் அ வேதம் முதல் காரணனோ - இவன் அந்த வேத முதல் காரணனான பரம்பொருளாயிருத்தல் கூடுமோ' என்றான் - என்று சங்கித்தான் (இராவணன்).

ஐயவனி: இச்செய்யுட்கொப்பு; 'சிந்தையிலுறுபவற் குருவம் தியந்ததால்; இந்திரற் காயிர நயன மீசற்கு, முந்திய மலர்க்கணோர் மூன்று, நான்குதோள் உந்தியினுலகளித்தாற்கு' (ஆரணிய. 231); படைப்பாதித்தொழில் புரியும் மும்மூர்த்திகளும் தன் கைக்கடங்கிக் கிடந்தமையின் அவர்களுள் ஒருவன் அல்லன் இவன் என்றான். மும்மூர்த்திகளின் மேலானது பரம்பொருள். இம்மூவரும் படைப்பாதிக்காரிய நிகழ்ச்சிகாகத் தோன்றியவர் என்பது நூல் துணிபு. 'தவனோ என்னில் செய்து முடிக்குந் தரனல்லன்' வெகு காலம் தவம் புரிந்தவனோ என்னில்; சிறுபிள்ளை நாற்பத்திரண்டு வயதுக்குள்ளே தவம் செய்து முடிக்கும் தகுதியுடையவன் அல்லன்; ஆதலின் 'வேத முதற் காரணனோ என்றான' என்பது பழைய வுரைக் குறிப்பு. மெய் வரம் - தவறாமல் பலிக்கும் வரம். வேத முதற் காரணன் - வேதங்களைத் தோற்றுவித்தவன். இனி வேதங்களால் போற்றப் பெறுபவனும் உலகினுக்கு முதற் காரணமும் ஆன இறைவன் எனினுமாம். வேதம் அபௌருஷேயம் என்பதே கம்பநாடர் கொள்கை. சுருதி நாயகன் (சுந்தர.

338, 632, 1107; 'வேத முதல்' (ஆரணிய. 257); இவனே : ஒகாரம் ஐயம்.

பி - ம். 3. தரமல்லன்.

4. வேதமுதற் காரணனென்பான், ஆவான். 113

## யாரெதிர்ப்பினும் போர் செய்வதாக இராவணன் உறுதிகொண்டு படைகளை விடுதல்

3776. யாரே னுந்தா னுகுக யானென் தனியாண்மை
பேரே னின்றே வென்றி முடிப்பென் பெயர்கில்லேன்
நேரே செல்வன் கொல்லெ னரக்க னிமிர்வெய்தி
வேரே நிற்கு மீள்கிலெ னென்னு விடலுற்ருன்

(எதிர்த்து நிற்பவன்) யாரேனுந் தான் ஆகுக - எவனுக இருப்பினும் இருக்கட்டும்; யான் - நான், என் - எனது, தனி ஆண்மை பேரேன் - ஒப்பற்ற வீரப் பான்மையினின்றும் நீங்காதவனுய், நின்றே - நின்றே, வெற்றி முடிப்பென் - வெற்றியை முடிப்பேன்; பெயர்கில்லேன் - (முடிக்காமல்) பெயரமாட்டேன்; கொல்ல நேரே செல்வன் - (எதிரியைக்) கொல்வதற்கு நேர்ப்படவே போவேன், என் அரக்கன் - என்று மொழியும் இராவணன், நிமிர் வெய்தி - உள்ளத்தின் ஊக்கம் கொண்டு,' வேர் நிற்கும் - வெற்றியின் வேர் என்னிடம் நிலைபெறும், மீள்கிலென் - (அங்ஙனம் முழு வெற்றியடைந்தாலன்றித்) திரும்பேன்', என்னு - என்று பகர்ந்து, விடல் உற்ருன் - மேன்மேலும் அம்புகள் விடுவதில் அமைந்தான். ஏ: அசை

இராமபிரானையும் அவன் அரிய காட்சியையும் வியந்து சிறிது சத்துவநிலை வரப்பெற்ற அரக்கன், அடுத்து ராஜஸ குணம் திரும்ப வீராவேசம் கொண்டு பேசுகின்ருன். இராஜஸம் மிகவே சத்துவ குணம் சிறிது அழுந்தியது. முருகப் பெருமானின் பல்வேறு அரிய செயல்களைக் கண்டு அவனுடைய தெய்வத் தன்மையைப் பலபடி புகழ்ந்த சூரபன்மன், மறு நொடியில் ராஜஸம் மிக உரையாடியவற்றைக் கந்தபுராணத்திற் காண்க. 'கோலமா மஞ்ஞை மீது குலவிய குமரனுறன்னை' (சூரபன்ம. 433) என்று தொடங்கும் செய்யுளும் அதனை அடுத்துவரும் செய்யுட்களும

இங்குக் காணத்தகும். மூன்றாமடியில் கொல்லவென் என்பது கொல்லென் எனத் தொகுத்தது. நிமிர்வு - எழுச்சி. விடல் உற்றான் என்பதற்குச் சிறிதே தோன்றிய சத்துவ குணப்பான்மை தளர, ராஜஸம் எய்தப் பெற்றான் எனினுமாம்.

பி - ம். 1. ஆரேனும்.
2. பேரே நின்றே, பேரே நின்றேன் ; அகலல்லேன்.
3. கொல்லுமெனிற்றானிமிர் வெய்தி, கொல்லுமரக் கனிமிரெய்தி.
4. வேரா நிற்க ; மீள்கலது ; மிடலுற்றான். 134

3777. நிருதித் திக்கி னின்றவன்
வென்றிப் படைநெஞ்சில்
கருதித் தன்பால் வந்த
தவன்கைக் கொடுகாலன்
விருதைச் சிந்தும் வில்லின்
வலித்துச் செலவிட்டான்
குருதிச் செங்கண் தீயுக
ஞாலங் குலைவெய்த.

நிருதி திக்கில் நின்றவன் - நிருதியின் திசையில் நிற்கும் திக்குப்பாலகனுடைய, வென்றி படை - வெற்றி தரும் படையை, நெஞ்சில் கருதி - மனத்தால் தியானிக்க, தன்பால் வந்தது - தன்னிடம் வந்தடைந்ததான அந்த அத்திரத்தை, அவன் - அந்த இராவணன், கைகொடு - கையினில் ஏற்று, காலன் விருதை சிந்தும் - யமனுடைய வீர விருதுகளையும் போக்கவல்ல, வில்லில் வலித்து - வில்லில் ஏற்றி, (தன்னுடைய) குருதி செம் கண் - உதிரம்போல் சிவப்பேறி நின்ற கண்களினின்று, தீ உக - நெருப்புச் சிந்தவும், ஞாலம் குலைவு எய்த - பூமி நிலைகுலையவும், செலவிட்டான் - விடுத்தான்.

நிருதி திக்கு - தென் கிழக்கு; 'நிருதி தன் குலப் புதல்வர்' (யுத்த. 3200); விருது - பராக்கிரமத்தின் சின்னம். 'விருது மேற் கொண்டுலாம் வேனில்' (பால. தாடகை. 5); 'வென்றிகொள் விருதினோடும் விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான்' (திருவிளை. விறகு. 2); குருதிச் செங்கண் இயல்பாகவே சிவந்த கண்கள் மேலும்

சினத்தால் உதிரம் போன்று சிவந்து நெருப்பை யுமிழ்ந்தன என்க. வெகுளியின் மெய்ப்பாடு.

பி - ம். 1. நின்றவர்.

2. வந்ததை வன்கைக்கொடு; கானை.

3. விருநிற் சிந்தி; வில்லினிலுந்தி. 135

3778. வையந் துஞ்சும் வன்பிடர் நாக மனமஞ்சப்
பையுங் கோடிப் பல்தலை யோடு மளவில்லா
மெய்யும் வாயும் பெற்றன மேருக் கிரிசால
நொய்தென் றோதுந் தன்மைய வாக நுழைகின்ற.

வையம் துஞ்சும் - இப் புவனம் தங்குதற்கிடமான, வல்பிடர் நாகம் - வலிய பிடரையுடைய ஆதிசேடன், மனம் அஞ்ச - உள்ளம் அச்சுறுமாறு, கோடி-வரிசையாக அமைந்த, பல் தலையோடும்-பல தலைகளுடன், பையும் - படமும், அளவு இல்லா மெய்யும் - அள வில்லாத உடலும், வாயும் பெற்றன-வாயும் பெற்றனவும், மேருகிரி - மேரு மலையும், சால நொய்து என்று-மிகவும் இலேசானது என்று, ஓதும் தன்மைய ஆக - சொல்லும் தன்மை பொருந்த, நுழை கின்ற - நுழைகின்றனவும். மேல் கவியுடன் தொடர்ந்து முடியும்.

வையம் - பூமி; 'வையந் தந்த நான்முகன் மைந்தன்' (யுத்த. 'மனிதராளினெனிராக்கதர் ஆளினென் வையம்' (யுத்த. 3275); துஞ்சுதல் - தங்குதல்; 'புலி துஞ்சும் வியன்புலத்தற்றே' (புறநா. 54); 'அம்பு துஞ்சுங் கடியரண்' (புறநா. 20); ஆதிசேடன் தனது ஆயிரம் தலையால் பூமியைத் தாங்குகிறான் என்பது புராணம். பை - படம்; 'பையராவினிற் கண்டுயில்' (கந்த. வழிநடை. 4); இது முதல் மூன்று செய்யுட்கள் இராவணன் ஏவிய வருணனை. கோடி - வரிசை; 'ஆபரண கோடியிலும்' (ஈடு). நுழைகின்ற - வினையாலணையும் பெயர்.

பி - ம். 1. வல்விட நாகம், மன்பிடர் நாகம்; அஞ்சாப்.

2. ஐயங் கோடிப், ஐயாங் கொள்ளப்; அமைவில்லா.

3. மேகத்திரி; காலன், தானும்.

4. வானின், ஆன. 136

3779. வாய்வாய் தோறு மாகடல்
போலும் விடவாரி
போய்வார் கின்ற பொங்கனல்
கண்ணிற் பொழிகின்ற
மீவா யெங்கும் வெள்ளிடை
யின்றி மிடைகின்ற
பேய்வா யென்ன வெள்ளெயி
றெங்கும் பிறழ்கின்ற.

வாய்வாய் தோறும் - ஒவ்வொரு வாயினிடத்தும், மாகடல் போலும் - பெரிய கடல் போலும், விடம் வாரி - விடநீர், போய் வார்கின்ற - மிகுதியாக ஒழுகப் பெற்றனவும், பொங்கு அனல் கண்ணில் பொழிகின்ற - மிக்க நெருப்பை விழிகளின் முலமாக வெளிப் படுத்துவனவும, மீவாய் எங்கும் - மேலிடம் எங்கும், வெள் இடை இன்றி - வெற்றிடமில்லாமல், மிடைகின்ற - நெருங்குவனவும், பேய் வாய் என்ன - பேயின் வாய்போன்று, எங்கும் - எல்லாப் பக்கங் களிலும், வெள் எயிறு - வெண்ணிறமான பற்கள், பிறழ்கின்ற - விளங்கப் பெற்றனவும்.

விட வாரி - விடப் பெருக்கு. போய் - மிகுதி என்னும் பொருளது. வெள்ளிடை - வெற்றிடம்; கண்ணில் பொங்கனல் பொழிவது இட்டி விடம் என்ற நாகம். யுத்த. 559 உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 1. விட வாழி.
2. வெங்கனல்; பொலிகின்ற.
3. மீவான், மிய்வாய்; மெலிகிற்ப.
4. பேன்வா யென்ன, பேய்வா யெங்கும். 137

3780. கடித்தே தீருங் கண்ணகன் ஞாலங் கடலோடும்
குடித்தே தீரு மென்றுல கெல்லாங் குலைகின்ற
முடித்தா னன்றே வெங்க ணரக்கன் முழுமுற்றும்
பொடித்தா னுகு மிப்பொழு தென்னப் புகைகின்ற.

'கடித்தே தீரும் - (இந்த அத்திரம்) இராமபிரானைக் கடித்தே தீரும்; கண் அகல் ஞாலம் கடலோடும் குடித்தே தீரும் - இட

மகன்ற மாநிலத்தை (அதனைச் சூழ்ந்த) கடலுடன் பருகியேவிடும்' என்று - என்று நினைந்து, உலகு எல்லாம் குலைகின்ற - உலகம் எல்லாம் நிலைகுலைவதற்குக் காரணமானவையும், வெம்கண் அரக்கன் - கொடுங் கண்களையுடைய இராவணன், முழுமுற்றும் முடித்தான் - உலகடங்கலும் ஒழித்துக் கட்டினவனாய், இப்பொழுது - இக்கணத்திலேயே, பொடித்தான் ஆகும் - பொடிசெய்தான் ஆவன். அன்றே - அல்லவோ? என்ன புகைகின்ற - என்று கனல் வனவுமாயின (அந்த அத்திரத்தினின்று வெளி வந்த நாகங்கள்.)

கடித்தே - குடித்தே; ஏகாரம் தேற்றம். அன்றே - ஓ வினா; முழுமுற்றும்; 'மேரு வெங்ஙனம் விளர்க்குமோ முழுமுற்றும் வெள்கி' (சுந்தர. 115); 'முலையோ முழுமுற்றும் போந்தில' (திருவிருத்தம். 60); 'முழுமுற்றுந் தானே விளக்காய்' (சீவக. 1870); 'முழுமுற்றும் ஒரு சொல்லாக்கியும் உரைப்ப' என்று அதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரைக் குறிப்பும் காண்க.

பி - ம். 1. கடலேழும்.

2. உயிரெல்லாம்.

3. முடித்தவனென்றே.

4. புகைகின்றார். புகைகின்றான். 138

## இராமபிரான் கருடாத்திரத்தினால் நிருதிப் படையை எதிர்த்தல்

3781. அவ்வா றுற்ற வாடர வங்கா லகல்வாயால்
கவ்வா நின்ற மால்வரை முற்று மவைகண்டான்
எவ்வாய் தோறு மெய்தின வென்னா வெதிரெய்தான்
தவ்வா வுண்மைக் காருட மென்னும் படைதன்னால்

அவ்வாறு உற்ற - அங்ஙனம் பொருந்திய, ஆடு அரவம் - படமெடுத்தாடு மியல்புள்ள நாகங்கள், கால் - (நஞ்சினைக்) கக்கு கின்ற, அகல்வாயால் - அகன்ற வாயினால், கவ்வா நின்ற - கவ்விய, மால்வரை அவை - பெரிய எல்லையினையுடைய அந்த இடங்கள், முற்றும் - முழுதும், கண்டான் - கண்ணுற்றவனாகிய இராமபிரான், 'எவ்வாய்தோறும் எய்தின - (இந்த நாகங்கள்) எல்லா இடங்கள்தோறும் வந்து அடைந்தன', என்னா - என்று

எண்ணி, (அந்த நாகாத்திரத்தைத் தொலைப்பதற்காக) தவ்வா - தவருத, உண்மை - மெய்யினையுடைய, காருடம் என்னும் படை தன்னுல் எதிர் எய்தான் - கருடாத்திரம் என்னும் படை கொண்டு எதிராக விடுத்தான்.

'ஆடரவப் பாயலமர்ந்தோனும்' (திருப்பூவண. 220); காலுதல்: உமிழ்தல்; இங்கே விடமுமிழ்தல். 'பச்சை மாலனைய மேகம் பௌவ நீர் பருகிக்கான்ற எச்சில் நாற்றிசையும் உண்ணும்' (டாக்டர். சாமிநாதையர் தமிழ்ப் பாமஞ்சரி): எவ்வாய்: 'பல்நணை யெவ்வாயும் பாய்தலிற் செல்லாது' (களவழி. 10); 'கொல்யானை பாயக் குடை முருக்கி யெவ்வாயும்' (களவழி. 15); 'எவ்வாயுமோடி வயவர் துணித்திட்ட' (களவழி. 26); தவ்வா: தவருத; தவ்வுதல், 'தவ்வலில் ஆறுபத்தாயிரம்' (யுத்த. மீட்சி. 335). கருட சம்பந்தம் காருடம்: தத்திதாந்தநாமம். நாகத்தைத் தொலைப்பது கருடனுகலின், நாகாத்திரத்தின் எதிராகக் கருடாத்திரம் ஏவினுன் என்க.

பி - ம். 1. ஆடரவந்தன்னடல், காலனல், தன்னகல், தானகல்.
2. முற்றும்வகை.
3. ஏகினவென்ன.
. தவ்வாமெய்ம்மை, மேன்மைக்; படைதன்னை. 138

## கருடாத்திரத்தின் தன்மை

**3782.** எவணைத் தன்மைத் தேகின நாகத் தினமென்னப்
பவ்வணத் தன்ன வெஞ்சிறை வேகத் தொழில்பம்பச்
சுவணக் கோலத் துண்ட நகந்தொல் சிறை வெல்போர்
உவணப் புள்ளே யாயின வானே ருலகெல்லாம்.

நாகத்து இனம் - (இராவணன் விடுத்த) நாகத்தின் தொகுதி, எவண் - எவ்விடத்து, எ தன்மைத்து ஏகின - எத்தன்மை யுடையதாயப் போயிற்ரே, என்ன - அவ்விடத்தை ஒப்பவே, பவணத்து அன்ன - காற்றை நிகர்த்த, வெம் சிறை - கொடிய சிறகின், வேகம் தொழில் பம்ப - விசையுடன் கூடிய தொழில் நிரம்ப, சுவணம் கோலம்-பொன்மயமான நிறத்தையும், துண்டம்- மூக்கையும், நகம்-உகிரையும், தொல் சிறை-பழமையான சிறகினை

யும் கொண்ட, போர் வெல் - போரினை வெல்லும் தகுதிவாய்ந்த, உவணம் புள்ளே - கருடப் பறவையின் மயமாகவே, வானோர் உலகு எல்லாம் ஆயின - அமரர் உலகம் எல்லாம் மாறின.

எவண் எத்தன்மைத்து எனப் பிரிக்க. பவணம்: காற்று. பவனம் என்ற வடசொல்லின் திரிபு. 'பவணமே யிராசி பூமி பகர் காற்றுமனையே கோயில்' என்பது நிகண்டு. இங்கு எதுகை நோக்கித் திரிந்தது என்ப. சிறையின் வேகத்திற்குப் பவணத்தின் வேகம் உவமை. பம்ப - பரவ, 'அங்கங்கிழி செம்புனல் பம்ப' (யுத்த. 2910); சுவணம்: பொன்; சுவர்ணம் என்ற வடசொல்லின் திரிபு. 'சுவணவண்ணனொடு' (ஆரணிய. 38); துண்டம்: நகம்; 'சிறையொடு துண்டஞ் செங்கண்' (யுத்த, 2387); 'துண்டப் படையால்' (ஆரணிய. 913); உவணம்: கருடன்; சுபர்ணன் என்ற வடசொற்றிரிபு; ஏகாரம் தேற்றம். உலகம் எங்கும் கருடப் புள்ளாயின. எவண் எத்தன்மைத் தேகின நாகத்தினமென்ன; கருடன் உலகிடங்கொள்ளாது விரிந்த அத்தன்மைக்குப் பயந்து, எவ்விடத்து ஏகிற்று நாகக் கூட்டங்கள் என்று உலகம் சொல்லுமாறு, நாகங்களை மறைத்தார் சிறையினால் என்பது பழைய உரைக் குறிப்பு.

பி - ம். 1. எவணத்தன்மைத்து.

2. வெஞ்சின வேகத்தொழில், வெஞ்சிறை வேகத்தழல்.

3. கொல்லத் தண்டங்கத்தோர், கோலத்துண்டநகத்தொர்; வெம் போர், வேல்போல். 140

வேறு

3783. அளக்கரும் புள்ளின மடைய வாரழல்
துளக்கரும் வாய்தொறு மெரியத் தொட்டன
இளக்கரு மிலங்கைத்தீ யிடுது மீண்டென
விளக்கின மெடுத்தன போன்ற விண்ணெலாம்.

அளக்க அரும் - அளவிடற்கரிய, புள்ளினம் அடைய - கருடப் பறவைக் குலம் எல்லாம், துளக்க அரும் - அசைத்தற்கரிய, வாய் தொறும் - வாய்கள்தோறும், ஆர் அழல் - நிறைந்த நெருப்பை, எரிய தொட்டன - எரியுமாறு கொண்டவை; 'இளக்க அரு -

நெகிழச் செய்வதற்கு அரியதான, இலங்கை - இலங்கையிலே, ஈண்டு - விரைவுடன், தீ இடுதும் - தீயிடுவோம்,' என - என்று, விண் எலாம் - விண்ணுலகத்தவர் யாவரும், விளக்கு இனம் எடுத்தன போன்ற - விளக்குகளின் தொகுதியை எடுத்தவற்றை நிகர்த்திருந்தன.

அளக்கரும்: அளக்க அரும்; அகர ஈறு தொக்கது. புள்ளினம்; 'பூநக்கி ஆறுகால் புள்ளினத்திற் கொன்பதுகால்' (தனிப்பா.) அடைடய முழுவதும். துளக்க அரும்: துளக்கரும்; 'துளக்கலாகா' (நன். பொது. 28); தொட்டன: தொடுபகுதி; ஒற்று இரட்டி இறந்தகாலம் காட்டிற்று; இளக்க அரும்: இளக்கரும்; இளக்குதல்: நெகிழ்த்தல்; 'இளக்குவார் அமரர்தம் சரத்தை' (யுத்த. 1880); விண்: இடவாகுபெயராக. அங்குள்ளோரைக் குறித்தது. செய்யுள் நான்கடிகளிலும் முறையே மேற்கதுவாய் மோனை, ஒரூஉ மோனை, முற்று மோனை. ஒரூஉ மோனைகளைக் காண்க. கருடன் வாளியால் பலகருடப்புட்கள் தோன்றின என்றும் அவற்றின் வாயில் சினத்தால் அங்கி எழுந்ததென்றும் கூறப்பட்டது. கருடன் வாய்தோறும் அக்கினி விளங்குவது இலங்கா நகரைச் சுடத் தேவர்கள் கைப்பந்தம் கொண்டது போன்றது.

பி - ம். 1. ஆயவரழல், ஆவமாரழித், அரவமாரழல்.

2. துளக்கறு; எரியிற்றேன்றும், எரியத் தோன்றுவ.

3. வளப்பெரு; இடுமின்.

4. எடுத்தது; விண்ணினை, விண்ணினே, விண்ணை. | 4 |

3784. குயின்றன சுடர்மணி கனலின் குப்பையிற்
பயின்றன சுடர்தரப் பதும நாளங்கள்
வயின்றொறுங் கவர்ந்தெனத் துண்ட வாள்களால்
அயின்றன புள்ளின முகிரி னள்ளின.

குயின்றன - நாகங்களின் தலைகளில் பதிந்து நின்ற, சுடர் மணி - ஒளியுள்ள மாணிக்கங்கள், கனலின் குப்பையில் பயின்றன - தீயின் தொகுதியைப்போன்று பொருந்தினவாய், சுடர்தர - ஒளி விட, புள் இனம் - அந்தக் கருடப் பறவைகள்) பதுமம் நாளங்கள் - தாமரைத் தண்டுகளை, வயின்தொறும் - இடந்தோறும், கவர்ந்தென - கவர்ந்தாற்போல, உகிரின் அள்ளின - (அவ்வரவங்களைக்)

கால் நகங்களால் அள்ளினவாய், துண்டம் வாள்களால் - மூக்குக் களாகிய வாள்களைக் கொண்டு, அயின்றன - கொத்தித்தின்றன.

கருடப் பறவைகளால் கவ்வப்பெற்ற பாம்புகள் தாமரைத் தண்டுகள் போன்றிருக்க, அந்த நாகங்களின் தலைகளிலிருந்த மாணிக்கங்கள் தாமரை மலர்களை நிகர்த்து விளங்கின எனப் பட்டது. பதுமம் : தாமரை; பத்மம் என்ற வடசொல்லின் தமிழாக்கம்; 'பதுமத்தண்ணலை பண்டுபோ லந்நகர் படைத் தான்' (யுத்த. 524); நாளம் - தாமரைத்தண்டு; 'கமல நாளத் திடை' (பால. மிதிலைக். 75); துண்ட வாள் - பண்புத்தொகை; உகிர் - நகம்; 'துவச மன்ன தங்கூருகிர்ப் பெருங்குறி' (யுத்த. 2302); 'அரிந்த கூருகிராலழி சாந்துபோய்' (பால. நீர்விளை. 27); கருடன் முத்து மாணிக்க வொளிபோன்ற மேனியோடும் பறந்து. தாமரை நாளம் போன்ற பாம்புகளை அருந்தியது என்க.

பி. - ம். 1. கவின.

2. சுடர்சுடர்ப்; பதுமராகங்கள்.

3. கவர்ந்தன; பணியை; வாய்களால்.

4. உகிரின் அள்ளியே. 142

அதிகப் பாடல் :—

எவ்வகை யுரகமு மிரியல் போயின
நொவ்விய லுற்றென நொடிப்ப தென்னினி.
அவ்வயி னரனணி யடல ராவுமே
கவ்வையி னுழந்தன சிறையின் காற்றினே.

## இராவணன் சினத்துடன் சரங்களைத் தூவ இராம பாணம் அவற்றை யழித்து அவன் மார்பிற் புகுதல்

3785. ஆயிடை யரக்கனு மழன்ற நெஞ்சினன்
தீயிடைப் பொடிந்தெழு முயிர்ப்பன் சீற்றத்தன்
மாயிரு ஞாலமும் விசும்பும் வைப்பறத்
தூயினன் சுடுசர முருமின் தோற்றத்த.

ஆயிடை - அப்போது, அரக்கனும் - இராவணனும், அழன்ற நெஞ்சினன் - வேகின்ற நெஞ்சினனாய், தீ - நெருப்பானது, இடை - இடையே, பொடிந்து எழும்-பொடியாகச் சிதறுகின்ற, உயிர்ப்பன்- நெட்டுயிர்ப்புடன் கூடியவனும், சீற்றத்தன் - சினம் உடையவனுமாகி, மா இரு ஞாலமும் விசும்பும் - விரிந்த இந்த உலகமும் ஆகாயமும், வைப்பு அற - இடமின்றி ஒழிய, உருமின் தோற்றத்த - இடியொத்த காட்சியை யுடைய, சுடுசரம் - எரிக்கின்ற அம்புகளை, தூயினன் - வாரி யிறைத்தான்.

அவ் + இடை : ஆயிடை ; (பதிற்று. உரைக் குறிப்பு) ; 'தென் மங்குமரியொ டாயிடை' (பதிற்று. 43) ; 'ஆயிடையமுதின்வந்த (ஆரணிய. 284). வைப்பு - பூமி ; இங்கு இடம் என்ற பொருளில் வந்தது. இச் செய்யுட்கண் வெகுளியின் மெய்ப்பாடுகள் காண்க. மாயிரு ஞாலம் - பெரிய பூமி. மா இரு பெயரொட்டு ; 'மாயிருங் குஞ்சி' (குறிஞ்சிப். 112) ; உருமின் தோற்றத்த சுடுசரம் என மாற்றுக. ஒளியினாலும் பேரொலியினாலும் அழித்தலினாலும், இடியை ஒத்த சரம் என்க.

பி - ம். 1. தீயினிற் ; பொடித்தெழு.
3. மாய்ந்தறத்.
4. தோற்றத்தான். 143

3786. அங்கவெங் கடுங்கணை யயிலின் வாய்தொறும்
வெங்கணை படப்பட விசையின் வீழ்ந்தன
புங்கமே தலையெனப் புக்க போலுமால்
துங்கவா ளரக்கன துரத்திற் றோற்றல.

அங்கு - அப்போது, அ - அந்த, வெம் கடு கணை - வெம்மையும் வேகமும் கொண்ட அம்புகள், அயிலின் வாய்தொறும் - (தம்முடைய) கூரிய வாய்தோறும், வெம்கணை படபட - (இராமனுடைய) கொடிய வாளிகள் படப்பட, விசையின் - வேகமாக, வீழ்ந்தன - வீழ்ந்தனவாய், துங்கம் - உயர்ந்தவனான, வாள் அரக்கனது உரத்தில் - கொடிய இராவணனுடைய மார்பிடத்து, புங்கமே தலை என - புங்கமே தலையாக, புக்க - புகுந்தனவாய், தோற்றல - கட்புலன் ஆகாமல் மறைந்தன, போலும் : ஒப்பில்போலி. ஆல் : அசை.

அங்கு அ வெம் கடுங்கணை என்க. போலும்; அசை. அரக்கன் விடுத்த வாளிகள் இராம பாணத்தால் மீண்டு அந்த அரக்கன் மார்பிலேயே தைத்து அங்கேயே அழுந்திக் கிடந்தன. புகுந்து கவருங்கால் அம்பின் முனை காணப்படாது தலையே கட்புலனுய தாகலின் 'புங்கமே தலையெனப் புக்க' எனப்பட்டது. புங்கம் - அம்பின் முனை என்பர். துங்கம் - உயர்வு; 'துங்க மார்பையுந் தோளையும் தடிக்கணை துளைக்க' (யுத்த. 2550).

பி - ம். 1. அங்கவங்; அயில, அயிலை.

2. மின்டன.

4. அரக்கன் றன்பிறத்தில்; தோன்றல, தோற்றுள, தோற்றலை. 144

## இராவணனுடைய தளர்ச்சியும் இராமனுடைய ஊக்கமும்

3787. ஒக்கநின் றெதிரம ருடற்றுங் காலையின்
முக்கணன் தடவரை யெடுத்த மொய்ம்பற்கு
நெக்கன விஞ்சைகள் நிலையிற் றீர்ந்தன
மிக்கன விராமற்கு வலியும் வீரமும்.

ஒக்க நின்று - சரிசமமாக நின்று, எதிர் - எதிர்த்து, அமர் உடற்றும் காலையின் - போர் புரியுங்கால், முக்கணன் தடவரை எடுத்த மொய்ம்பற்கு - மூன்று கண்களையுடையவனுன சிவபெருமானுடைய பெரிய கயிலை மலையைத் தூக்கிய தோளையுடைய இராவணனுக்கு, விஞ்சைகள் - (கற்ற) மாய வித்தைகள், நெக்கன - நினைவினின்றும் நெகிழ்ந்தனவாய், நிலையில் தீர்ந்தன - (தம்) நிலையினின்றும் அகன்றன; இராமற்கு - இராமபிரானுக்கு, வலியும் வீரமும் - வன்மையும் ஆண்மையும், மிக்கன - அதிகரித்தன.

எதிரி சிறிது சளைக்கக் கண்ட அளவில் மாற்றானுக்கு உற்சாகம் நிகழ்வது இயல்பாகலின், இராமற்கு வலியும் வீரமும் மிக்கன எனப்பட்டது இருவரும் சரி பராக்கிரமசாலிகள் ஆகலின் 'ஒக்க நின்று' எனப்பட்டது. ஒத்த படை யெடாதவன்மீது அம்பு எய்தல் போர் நீதியன்றாகலின். முக்கணன் தடவரை எடுத்தது இந் நூலிற் பல இடங்களிலும் குறிப்பிடப் பெறுதல்

காணலாம். யுத்த. 36 உரைக் குறிப்புக் காண்க. மரணம் நேர்வழி மதியழியும் என்பது வழக்காகலின்; 'நெக்கல் விஞ்ஞைசகள்' எனப் பட்டது. நெகுதல் - தளர்தல், இளகுதல்.

பி-ம். 1. உழக்குங்.

3. நெக்கென விஞ்ஞையும், விஞ்ஞையின்.

4. வேகமும். 145

இதன்பின் 'மேருவின் கொடு' என்ற பாடல் ஓர் பிரதியில்.

## இராவணன் தலையை இராமனறுக்க அது கடலில் போய் விழுதல்

3788. வேதியர் வேதத்து மெய்யன் வெய்யவர்க்
காதிய னணுகிய வற்ற நோக்கினன்
சாதியி னிமிர்ந்ததோர் தலையைத் தள்ளினன்
பாதியின் மதிமுகப் பகழி யொன்றினல்.

வேதியர் வேதத்து மெய்யன் - அந்தணர்கள் ஓதுகின்ற நான் மறையின் உண்மைப் பொருளான இராமபிரான், வெய்யவர்க்கு - தீயவர்களான இராக்கதர்க்கு, ஆதியன் - முதல்வனை இராவணன், அணுகிய அற்றம் நோக்கினன் - கிட்டிய சமயம் பார்த்து, (இதுவே அரக்கன் தலையைத் துணிக்கத்தக்க சமயம் என்று கருதி), சாதியில் - இனத்தில், நிமிர்ந்தது ஓர் தலையை - நிமிர்ந்து விளங்கும் தோற்றமுள்ளதொரு தலையை, பாதியின் மதி முகம் பகழி ஒன்றினல் - அர்த்த சந்திர பாணம் ஒன்றினல்; தள்ளினன் - அறுத்து வீழ்த்தான்.

வேதியர் வேதத்து மெய்யன் - வேதப் பிரதிபாத்தியன். இராமபிரானை உண்மை வேத சொரூபி என்றதற்கு நேர் எதிரிடையாகத் தீயோர்களில் தலைசிறந்தவன் என்று இராவணனைக் குறித்தமை காண்க. அற்றம் - சமயம்; 'அறிவற்றங் காக்கும் கருவி' (குறள். 421); 'தந்தையை அற்ற நோக்கியே' (பால. 41); அரக்கர் தலைவனுக ஆணவததுடன் தலைநிமிர்ந்து நின்றவனுகலின் சாதி

யின் நிமிர்ந்த தோர் தலை எனப் பட்டது. வணங்கா முடி மன்னன் என்றும், 'மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றி மாதர், வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுட நிரை' (ஆரணிய. 556) யுடன் கூடியவன் என்றும் இராவணன் போற்றப் பெறுதல் காண்க. 'குலைவுறலன்ன முன்னம் யாரையும் கும்பிடா வென், தலைமிசை' (ஆரணிய. 872) என்று இராவணனே கூறு தலும் காண்க, 'பாதியின் மதிப்பகழி' அர்த்த சந்திர பாணம்.

பி - ம். 1. வேதியன் ; வைத்தது ; மெய்யும்.
2. ஆதியின், ஆதியை ; அணுகினன் ; ஆற்றல் ; ஆரை ;
4. பிறைமுகப் பகழி. 148

முன்னிரண்டடிகள் வேதியர் வேதத்து மெய்த்த வித்தகன, நீதி முறைமையு நெறியு நிற்கலா என்று ஓர் பிரதியில் உள்ளன.

3789. மேருவின் கொடுமுடி வீசு காலெறி
போரிடை யொடிந்துபோய்ப் புணரி புக்கென
ஆரியன் சரம்பட வரக்கன் வன்றலை
நீரிடை விழுந்தது நெருப்பொ டன்றுபோய்.

வீசு கால் - வீசும் தன்மையுள்ள வாயு தேவனோடு, எறி போர் இடை - (ஆதிசேடன்) தாக்கிச் செய்த போரின்கண், மேரு வின் கொடுமுடி - மேரு மலையின் சிகரமானது, ஒடிந்து போய் - முறிந்து ஓடி, புணரி புக்கென - கடலில் புகுந்தாற் போல, ஆரியன் சரம்பட - இராமபிரானுடைய வாளி தாக்கியதன் விளைவாக, அரக்கன் வல் தலை - இராவணனுடைய பெரிய வலிய தலை, நெருப பொடு - நெருப்புடனே, அன்று - அத்தினத்திலே, போய் நீரிடை விழ்ந்தது - (கடலின் நீரில்) படிந்தது.

முதல் இரண்டடிகளில் குறிக்கப்பெற்ற வரலாறு: ஆதி சேடற்கும் காற்றிற்கும் போட்டி நிகழ்ந்த காலத்துக் காற்றின் கடுமையால் மேரு மலையின் சிகரம் முறிந்தது என்பது. சுந்தர. 35 உரைக் குறிப்பிற் காண்க. 'நாகம், ஒடுக்குறு வால வன்காற

றடியொடு மொடித்த வந்நாள்' (சுந்தர. 24); 'பூசைநக்கு-புக்கென' (பால. பாயி.). நீரிடை நெருப்பொடு என்ற இடத்துத் தொடை முரண் காண்க. ஆரியன் - இராமபிரான்; 'சூரியன் மரபிற்குபொர் தொல்மறு, ஆரி யன்பிறந் தாக்கினை யாமரோ' (கிட்கிந்தா. 313).

பி - ம். 1. விசுங்.

2. ஒடித்துப்.

4. நெருப்பொடொன்று, என்று.

147

## இராவணன் சிரம் விழுந்தது கண்டு வானவர் கொண்டாடுதல்

3790. குதித்தனர் பாரிடைக் குன்று கூட்டற
மிதித்தனர் வடகமுந் தூசும் வீசினர்
துதித்தனர் பாடின ராடித் துள்ளினர்
மதித்தன ரிராமனை வானு ளோரெலாம்.

வான் உளோர் எலாம்-விண்ணுலக வாசிகள் யாவரும், குதித்தனர் - குதித்து, பார் இடை - பூமியிலே, குன்று - திரிகூட பர்வதமானது, கூட்டு அற - மூட்டு நெகிழும்படி, மிதித்தனர் - துகைத்தார்கள்; வடகமும் தூசும் வீசினர் - மேலாடையையும் அரையாடையையும் வீசினார்கள்; துதித்தனர் - வாழ்த்தினார்கள்; பாடினர் - கானம் செய்தனர்; ஆடி துள்ளினர் - ஆடித் துள்ளினார்கள்; இராமனை மதித்தனர் - இராமபிரானை உயர்த்திப் பேசினார்கள்.

குன்று - திரிகூட மலை. கூட்டு அறுதல் - நெக்கு விடுதல். வடகம் - மேலாடை; 'வடகமுந் துகிலும் தோடும்' (சீவக. 462); தூசு - ஆடை; 'தூசினல் அங்கை நீவி' (சீவக. 1302); எல்லாரும் தூசுநீக்கி யேறிநின்றார்த்த போது' (யுத். 3106); 'தூசுங் கலையும் தொலையா வழகெறிக் கும்தொடியும்' (அம்பிகாபதிக் கோவை. 7); மதித்தல்-இராமபிரானுடைய அசாதாரணமான பராக்கிரமத்தைப் பாராட்டுதல்.

பி - ம். 1. குன்றங்; கூறுற.

2. வடமொடு, படமுகம்.

4. மதித்தனன்.

148

## இராவணன் தலை மீண்டும் முளைத்து ஆரவாரித்து இராமனை அதட்டுதல்

3791 இறந்ததோ ருயிருடன் கருமத் தீட்டினாற்
பிறந்துள தாமெனப் பெயர்த்து மத்தலை
மறந்தில தெழுந்தது மடித்த வாயது
சிறந்தது தவமலாற் செயலுண் டாகுமோ.

இறந்தது ஓர் உயிர் - மரித்துப் போன ஓர் உயிர், கருமத்து ஈட்டினால் - கருமத் தொகுதியினால், உடன் - உடனே, பிறந்துளது ஆம் என - பிறந்திடுவது போன்று, பெயர்த்தும் - திரும்பவும் மறந்திலது, (முன் பெற்ற நிலையை) மறவாமல், மடித்த வாயது - (சினத்தினால்) மடித்த வாயுடன் கூடியதாய், அ தலை எழுந்தது - அந்தத் தலை மீண்டும் முளைத்தது; சிறந்தது தவம் அலால் - சிறந்த தான தவம் இன்றாகில், செயல் - (இவ்வாறான) அரிய செயல், உண்டாகுமோ - நிகழக் கூடுமோ?.

ஓகாரம்: எதிர்மறைப் பொருள். மரித்த வுடலை விட்டவுயிர் பின்னும் ஒரு உடலிலே புகுவதுபோல அற்றதலை முளைத்தது என்க. அறுபட்டதான இராவணன் தலை மீண்டெழுந்தது தவத்தின் ஆற்றலால் என்பது கருத்து. வேற்றுப் பொருள்வைப்பணி. கருமத் தீட்டினால் - கருமமே பிறப்பிற்குக் காரணம் ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. 'வினைப்போகமே ஒரு தேகங் கண்டாய்' (பட்டினத்தார். பொது. 8); 'உறங்குவது போலும் சாக்காடுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு' (குறள். 339); பிறந்தவர் சாதலுமிறந்தவர் பிறத்தலும், உறங்கலும் விழித்தலும் போன்ற 'துண்மையின்' (மணி. 16, 86); என்பதனால் 'உடன்' எனப்பட்டது. மறந்திலது என்றது இறக்கும் காலத்து என்ன எண்ணம் நிகழுமோ அந்த எண்ணமே மறுபிறப்புக்குக் காரணமாகும் என்பதுகொண்டு. மடித்த வாயது- வெகுளிக் குறிப்பு. போர் ஆற்றும்போது இருந்த வெகுளியால் மடிக்கப்பட்ட வாய், மரித்த நிலையிலும் மடிந்தே காணப்பட்டது என்று வெகுளியின் தீவிரம் கூறப்பட்டது. தவமலாற் செயலுண் டாகுமோ' 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப்படும்' (குறள். 265); பெயர்த்துத்தலை எழுந்தது பிரமதேவன் அவனுக்களித்த வரத்தின் விளைவு; 'நின் கரத்தால் முன்னம்

அரிந்ததலை யெல்லா முன்பு போல முளைத்திடுக, என்ன வலைவதாம் பண்டையிலும் மெழிலுண்டாக 'வெழுந்தன' (உத்தர. இராவணன் பிறப்பு. 27). முன்னர் இராவணன் பெருந்தவ மியற்றுங்கால் 'ஓரா யிரமாண் டுபவசித்துக் கழிந்தா லோரோர்தலையாகச், சிரார் சிர மொன்பதுந் தடிந்து செந்தீயிடை யோமம் புரிந்து, பேரா வுபவாசத் தினனுய்ப் பின்பு மோராயிரத் தாண்டில், தாரார் மறறைத்தலை தடிய லுற்றுன் பற்றித் 'தசக்கிரிவன்' என்று அவன் தன் தலை களைத் தடிந்து ஓமகுண்டத்தில் இட்டதும் அவை மீண்டும் முளைத்ததும் கூறப்படுதலும் காண்க.

பி - ம். 1. பிறந்ததோர் ; உயிரிடைக் ; தருமந்து.
2. பெயர்த்து மோர்தலை.
4. உண்டாகுமே. 149

இங்கு அதிகப் பாடல்கள் :—

பிறைத்தலைப் பகழியாற் பின்னும் ஓர்தலை
யறுத்தனன் முளைத்தங் கதுவு மார்த்துடன்
மறுத்திரு தலைதனை மாற்ற வள்ளலும்
குறைத்தில னெனும்படி முளைத்த குன்றுபோல். 1

ஆயிரப் பதின்மடங் கரக்கன் மாத்தலை
நீமுகப் பகழியாற சிலைந் இராகவன்
ஒய்வறத் துணிக்கவு முடன்முளைத்ததால்
தீயவன் தவப்பெருஞ் செயலின் வன்மையால். 2

3792. கொய்தது கொய்தில தென்னுங் கொள்கையின்
எய்தவந் தக்கணத் தெழுந்த தோர்சிரம்
செய்தவெஞ் சினத்துடன் சிறக்குஞ் செல்வனை
வைதது தெழித்தது மழையி னூர்ப்பினுல்.

கொய்தது - திருகப் பெற்றதாகி, (ஆனல்) கொய்திலது - கொய்யப்பட்டிலது. என்னும் கொள்கையின் - என்ற எண்ணம் எழும்படி, எய்த அ கணத்து - எய்த அந்தக் கணத்திலேயே வந்து, எழுந்தது ஓர் சிரம் - எழுந்து காணப்பட்டதான ஒரு தலை, செய்த வெம் சினத்துடன் - வெளிக் காட்டிய கொடும் கோபக் குறியுடனே, சிறக்கும் செல்வனை - சிறந்து விளங்கும் செல்வனுன

இராமபிரானை, மழையின் ஆர்ப்பினால் - மழை போன்ற ஆரவாரத்தினுடனே, வைதது தெழித்தது - திட்டி அதட்டியது.

செய்த வெஞ்சினம் - மரித்தும் மறையாத சினக்குறி, அல்லது மடித்தவாயின ஆதல். சிறக்கும் - போரில் வெற்றி பெற்று மேம்பட்ட. தெழித்தல் - அதட்டுதல்; 'பகடுதெழி தெள்விளி' (அகநா. 17); இனி, ஐதது தெரிகில வமரர்க்காயினும்' என்று இரண்டாமடிக்குப் பாடம் கொண்டு 'சீக்கிரம் அரக்கன் தலை பத்தும் அறுக்க முனைக்கின்ற விரைவு, தேவரும் அறியமாட்டினாரில்லை' என்பது பழையவுரைக் குறிப்பு. ஐது சீக்கிரம் என்ற பொருளது; 'அநந்தன்பாலும் கருடன்பாலு மைது நொய்தாக' என்பது பெரியாழ்வார் திருமொழி. ஐது - விரைவு; 'ஐதெனக் கதுமெண' என்ற திவாகரம் காண்க.

பி - ம். 1. கொய்திலனேனுங், கொய்தில வென்னுங்; கோனெறி.

2. ஐதது தெரிந்திலவமரர்க் கச்சந்தான், ஐதது தெரிகில வமரக்காயினும். ஐதது தெரிந்தது.

3. செய்ததுந் தெரிந்ததுஞ் சிலைக்குத் தேவனை, செய்தது கொய்திடச் சிலைக்குச் செல்வனை, செய்தது தெரிந்ததில் சிலைக்கைச் செல்வனை, செய்தது தெரிந்தது சிவற்குஞ் செல்வனை, செய்தும் தெரிந்தில சிலைக்குந் தேவனை.

4. வைததுந் தெழித்தது மழையினார்ப்பதும்; ஆர்ப்பது. 150

இங்கு அதிகப் பாடல்:—

அண்ணலு மிடைவிடா தறுத்து வீழ்த்தலால்
மண்ணொடும் வானகம் மருவு மெண்ணிலா
எண்ணுறு மிடமெலாம் இராவ ணன்றலை
நண்ணிய தமரரும் நடுக்க மெய்தினர்.

## கடலில் வீழ்ந்த இராவணன் தலையும் ஆரவாரித்தல்

3793. இடந்தது கிரிக்குவ டென்ன வெங்கணும்
படர்ந்தது குரைகடல் பருகும் பண்பது
விடந்தரு விழியது முடுகி வேலையில்
கிடந்தது மார்த்தது மழையின் கேழது.

விடம் தரு விழியது - நஞ்சை வெளி விடுகின்ற கண்களை யுடையதாகி, முடுகி - விரைந்து, வேலையில் கிடந்ததும் - கடலிற் கிடந்ததான தலையும், கிரிகுவடு இடந்தது என்ன - மலைச் சிகரம் குத்தி எடுக்கப்பட்டதென்னுமாறு (தோன்றி), எங்கணும் படர்ந்தது - எங்கும் சென்றதாகி, மழையின் கேழது - மேகத்தின் ஒப்பைக் கொண்டு, குரை கடல் - ஒலிக்கின்ற கடலின் நீரை, பருகும் பண்பது - பருகுகின்ற தன்மையைப் பெற்று, ஆர்த்தது - ஆரவாரித்தது.

கேழ் - ஒப்பு. மலைமுடி போன்ற இராவணன் தலை, நஞ்சினைக் கக்கும் விழிகளுடன் எங்கும் ஓடி மேகத்தைப் போலக் கடலிற் கிடந்து கடல்நீரை உட்கொளும் தன்மையது எனப் பட்டது.

பி - ம். 1. இடைந்தது.

3. தகு, தழு ; விழியின் ; முழுகி, முழுதும்.

4. கிடந்தது வார்த்தது கிழ்மையோன்றலை, கிடந்தன வார்த்தன மழையின் கேழன, கேனென. 151

இங்கு அதிகப் பாடல் :—

இத்திறத் திராமனங் கேவும் வாளியின்
தத்துறுந் தலைமுளைத் தெய்துந் தன்மையால்
அத்திறத் தரக்கனும் அமரொ ழிந்திலன்
முத்திறத் துலகமும் முருக்கும் வெம்மையான்.

## இராமபிரான் தோளில் இராவணன் பதினான்கு அம்புகளை யெய்தல்

3794. விழுத்தினன் சிரமெனும் வெகுளி மீக்கொள
வழுத்தின னுயிர்களின் முதலின் வைத்தவோர்
எழுத்தினன் தோள்களி னேழொ டேழுகோல்
அழுத்தின னசனியே றயிர்க்கு மார்ப்பினன்.

அசனி ஏறு அயிர்க்கும் ஆர்ப்பினன் - பேரிடியும் அயிர்க்கக் கூடிய ஆரவாரத்தை உடையவனான இராவணன், சிரம் விழுத்தினன் எனும் - (தன் தலையை) வீழச் செய்தான் என்னும், வெகுளி

மீமொள - சினம் அதிகரிப்பதால், வழுத்தினன் - (யாவராலும்) போற்றப் பட்டவனாகி, உயிர்களின் முதலில்-உயிரெழுத்துக்களின் முதலிலே, வைத்த - வைக்கப்பட்டுள்ள, ஓர் - ஒரு, எழுத்தினன் - அகரத்தின் வடிவாயுள்ளவனான இராமபிரானுடைய, தோள்களின் - தோள்களிலே, ஏழொடு ஏழுகோல் - பதினான்கு சரங்களை, அழுத்தினன் - பதியச் செய்தான்.

வழுத்தினன் - வழுத்தப் பட்டவன். உயிர்களின் முதலின் வைத்த ஓர் எழுத்தினன் - முதல்எழுத்து அகாரம். 'அக்ஷராணும் அக்ாரோஸ்மி' (பகவற் கீதை. விசுவரூபம்) ; என்பதனால் அறிக. 'அகர முதல எழுத்தெல்லாம்' (குறள். 1) ம் 'அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாத மாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை, செயற்கை யுணர்வானன்றி இயற்கை யுணர்வான் முற்று முணர்தலானும் கொள்க' என்ற அதற்குப் பரிமேலழகர் உரையும் காண்க. நமது முழக்கினும் கடுமையான முழக்கம் உண்டோ என அசனி அயிர்த்தல். இராமன் பிரணவவடிவன் எனப்பட்டது. 'ஓமெனு மோரெழுத்து' யுத்த. 205 ம் அதன் உரையும் காண்க.

பி - ம். 1. தலையெனும், தலையென.

2. வழுத்தின ; வைத்ததோர், வைத்த வேர், வைத்த பேர்.

4. அயிர்க்க வார்த்தனன். 152

## இராவணன் கையை இராமபிரான் அறுக்க அதுவும் முன்போல் முளைத்தல்

3795. தலையறிற் றருவதோர் தவமு முண்டெனா
நிலையுறு நேமியா னறிந்து நீசனைக்
கலையுறு திங்களின் வடிவு காட்டிய
சிலையுறு கையையுந் தலத்திற் சேர்த்தினன்.

தலை அறின் - தலை அற்றால், தருவது - (மீண்டும் அதனைத்) தருவதாகிய, ஓர் தவமும் - ஒப்பற்ற தவப்பயனும், உண்டு - (இவனுக்கு) உளது, என அறிந்து - என்றுணர்ந்து, நிலை உறும் நேமி

யான் - சாசுவதமாக உள்ள ஆழிப் படையை உடையவனான இராமபிரான், நீசனை - மிகவும் இழிந்தவனான (அந்த) அரக்கனை, கலை உறு திங்களின் - (சில) கலைகள் அமைந்த மதியினுடைய, வடிவு காட்டிய - வடிவைக் காட்டிய (பாதிமதி போன்று வந்துள்ள), சிலை உறு கையையும் - விற்றாங்கிய கரத்தையும், தலத்தில் சேர்த்தினன் - (துணித்துப்) பூமியில் வீழ்த்தினன்.

வில்லுக்குத் திங்கள் உவமை.

பி - ம். 1. தலையிறத், தலையறத் ; தவமுண்மடன்பதை.

5. நிலையுற நோக்கிய நேமியோன் மகன்.

3. வளைவு காட்டிய, வளையுங் காட்சிய, வளையுங் காட்சியிற்.

4. நிலத்திற், தலத்துச். 153

3796. கொற்றவெஞ் சரம்படக் குறைந்து போனகை
பற்றிய கிடந்தது சிலையைப் பாங்குற
மற்றொர்கை பிடித்தது போல வவ்விய
தற்றகை பிறந்ததை யார றிந்துளார்.

கொற்றம் வெம் சரம் பட - (இராமபிரானுடைய) வெற்றி செறிந்த கொடிய வாளி பட்டதனால், குறைந்து போனகை - வெட்டப்பட்ட கை, பற்றிய கிடந்தது சிலையை - பற்றியிருந்த வில்லை, பாங்கு உற - அழகு பெற, மற்று ஓர் கை பிடித்தது போல - மற்றொருகை பிடித்ததுபோல, (தோன்றிய கையானது), வவ்வியது - பற்றிக் கொண்டது; அற்ற கை பிறந்ததை அறிந்துளார் யார் - துணிபட்ட கை மீண்டும் உதித்ததை அறிபவர் யாருளர் ?

இராவணன் அற்ற கைக்குப் பிரதியாகப் பிறிதொரு கை தோன்றியது; தோன்றிய விரைவினால் இன்ன கை யற்றதென்று எவரும் அறியக்கூடவில்லை என்பது கருத்து.

பி - ம். 1. கொற்றவன்.

2. பற்றியே.

3. அடுத்தது காலை, பிடித்தது சிலையை ; வறுவியது, வவ்வியை.

4. அற்றகை, யொழிந்ததை, பிறந்ததை ; யாரதோர்குவார், யாவர்தேர்குவார். 154

## இராவணன் அற்ற தன் கையை மாதலிமீது மற்ருெரு கையால் எடுத்தெறிதல்

3797 பொன்கயிற் றூர்தியான் வலியைப் போக்குவான்
முன்கையிற் றுறுமயிர் முள்ளிற் றுள்ளுற
மின்கையிற் கொண்டென வில்லை விட்டிலா
வன்கையைத் தன்கையின் வலியின் வாங்கினுன்.

(இராவணன்), பொன் கயிறு ஊர்தியான் - அழகிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு தேரைச் செலுத்துபவனுன மாதலியின், வலியை போக்குவான் - வன்மையைப் போக்குபவனுகி, முன் கையில் - முன்னங்கையிலே, துறும் மயிர் - அடர்ந்த மயிர், முள்ளில் துள்ளுற - முள்ளுப்போல் துடித்துக்கொண்டிருக்க, மின் கையில் கொண்டென - மின்னலைக் கையிற் கொண்டால் ஒத்த, வில்லை - வில்லை, விட்டிலா - செலுத்தாததான, வல் கையை - வலிய கரத்தை, தன் கையின் - தன் கரத்தால், வலியின் வாங்கினுன் - வலிமையுடன் எடுத்து எறிந்தான்.

பொன்கயிறு - குதிரைச் சேணத்தின்மீது வரிந்து கட்டும் பொன் நாண். இராவணன் கை வில் பற்றியிருப்பது மின்னலைப் பற்றியிருப்பது போலும் என்பது கருத்து. மாதலி - இராமபிரானுடைய தேர்ப்பாகன்; மாதலி - இந்திரன் கட்டளையால் இராமபிரானுக்குதவியாகத் தேரை விண்ணுலகினின்று கொணர்ந்தவன்; இராமன் தேர் ஓட்டிய சாரதி; இராமன் தேரேறு படலம் 6, 7 காண்க. இந்த மாதலிமீது அற்றகையை எடுத்து வீசும்போது அதனைப் பிடித்த கையில் உவகையால் மயிர்க்குச் செறிந்தது, 'முன்கையில் துறுமயிர் முள்ளிற் றுள்ளுற' எனப் பட்டது.

பி - ம். 1. பொன்கையிற்று; போக்கினுன், போக்கென.
2. முன்னில்; துள்ளுறும்.
3. பின்கையிற்; கொண்டனன், கொண்டன.
4. வலியின் வீசினுன். 155

## இராவணன் அற்ற தன் கையை யெறியவே, மாதலி வாயினுல் இரத்தத்தைக் கக்கிகொண்டு நிலைதளர்தல்

3798. விளங்கொளி வயிரவா ளரக்கன் வீசிய
தளங்கிளர் தடக்கைதன் மார்பிற் ருக்கலும்
உளங்கிளர் பெருவலி யுலைவின் மாதலி
துளங்கினன் வாய்வழி யுதிரந் தூவுவான்.

விளங்கு ஒளி - விளங்குகின்ற ஒளியையுடைய, வயிரம் வாள் அரக்கன் - வயிர வாளைப் பெற்ற இராவணன், வீசிய - எறிந்த, தளம் கிளர் - பருத்துக் கிளர்ந்த, தடகை - பெரிய கரம், தன் மார்பில் தாக்கலும் - தன் மார்பில் தாக்கியவுடனே, உளம் கிளர் - மனத்தெழுகின்ற, பெருவலி - பெருவலி, உலைவில் மாதலி - அழிவில்லாத மாதலி, வாய் வழி உதிரம் தூவுவான் - வாயின் வழியாக உதிரத்தை வெளிச் சிந்துவானுய், துளங்கினன் - நிலை குலைந்தான்.

தளத்தல்: பருத்தல்; துளங்குதல்: அசைந்து தளர்தல்; 'சுடுகணை படுதலோடுந் துளங்கினுன் துளங்கா முன்னம்' (யுத்த. 1087).

பா - ம். 2. தளங்களி; தடக்கையில்.
3. உலவி.
4. தூங்குவார், தூங்குவான்.



## இராவணன் தோமரத்தை அந்த மாதலிமேல் வீச, இராமபிரான் அதனைத் தூளாக்குதல்

3799. மாமரத் தார்கையால் வருந்து வானையோர்
தோமரத் தாலுயிர் தொலைப்பத் தூண்டினன்
தாமரத் தாற்பொராத் தகைகொள் வாட்படை
காமரத் தாற்சிவன் கரத்து வாங்கினுன்.

அரத்தால் பொரா - அரத்தினுல் அராவப் படாத, தகைகொள் - தன்மையைக் கொண்ட, (இயற்கையாகக் கூர்மை செறிந்த), வாள் படை - வாட்படையை, காமரத்தால் - சீகாமரம் என்ற பண்ணைப்

பாடிச், சிவன் கரத்து - சிவபிரானுடைய கையினின்று, வாங்கினான் - பெற்றவனாகிய இராவணன், மா மரத்து ஆர் - பெரிய மரம் போன்று பொருந்திய, கையால் வருந்துவானை - (தன்) கை (மார்பிலே தாக்கி)யதனால் உழல்பவனான மாதலியை, ஓர் தோமரத்தால் - ஓர் தோமரம் என்ற ஆயுதத்தால், உயிர் தொலைப்ப தூண்டினான் - உயிரை ஒழிக்குமாறு செலுத்தினான். தாம், அசை.

இராவணன் கை மாதலி மார்பில் தாக்கியதும் அதனால் அவன் வலி குன்றாததும் முன் கவியிற் கூறப்பெற்றது. சிவன் அளித்த வாளாகலின் இயற்கைக் கூர்மையுள்ளது; ஆகவே அதனை அரம் பொராததாகக் கூறப்பட்டது. அரம் பொருதல்: 'அரம் பொருத பொன்போலத் தேயும் உரம் பொரு, துட்பகை யுற்றகுடி' (குறள். 888); காமரம் - சீகா மரம் என்ற பண். சாம கானத்தைச் சேர்ந்தது. 'காமரம் பழுத்த பாடல்' (ஆரணிய. 622); 'தும்பிகாமரம் செப்பும்' (சிறுபாண். 77); குறிப்பிட்ட பண்களை முறைதெரிந்து பாடுவனவல்ல தும்பிகளும் வண்டுகளும்; அவற்றின் ஓசை இனிமைபற்றி அவ்வாறு கூறப்பட்டது. 'தென்னா தெனாவென்று வண்டு முரல் திருவேங்கடத்து' (திருவாய். 3, 9, 1); 'மூசுவண்டு வாசவண்டு மோகன முகாரிராகம் பாடுமே' (அண்ணாமலைக். காவடிச் சிந்து) 'மந்தார மாலை மலர் வேய்ந்து மகிழ்ந்துதீந்தேன், கந்தாரம் செய்து களிவண்டு முரன்றுபாட' (சீவக. 1950); இராவணன் சிவபிரானிடம் வாள் பெற்றமை ஆரணிய. 522, 613; சுந்தர. 449, 991; 'எவ்வகைப்படையும் வெல்லும் சந்திர வாளுமீந்தான்' (உத்தர. வரையெடுத்த. 75). என வருவன காண்க.

பி - ம். 1. தடக்கையால்.

2. தொலையத்.

3. தாமரத்தாற் பெறு, காமரத்தாற் பெற்ற, தாம் வரத்தாற் பெற்ற, தாம் வரத்தாற் பெறும்; தன்மை முற்றுறக்; தவத்த னென்னினும், தவநன் றென்னவும், தவமின் றென்னநல், தவமின் றென்னவும்.

4. கரத்துவாட் கொண்டான்.

## வேறு

3800. மாண்ட தின்றொடு மாதலி வாழ்வென
மூண்ட வெந்தழல் சிந்த முடுக்கலும்
ஆண்ட வில்லியோ ரைம்முக வெங்கணை
தூண்டி னுன்துக ளானது தோமரம்.

'மாதலி வாழ்வு இன்றொடு மாண்டது - மாதலியின் பூவுலக வாழ்க்கை இன்றுடன் கழிந்தது', என - என்னும்படி, மூண்ட வெம் தழல் சிந்த - மூண்ட கொடிய அனலைச் சிந்துமாறு, முடுக்கலும் - (தோமரப் படையை) விரைந்து விடுத்தவளவில், ஆண்ட வில்லி - யாவரையும் ஆட்கொள்பவனும், கோதண்டம் என்னும் வில்லை ஏற்றவனுமான இராமபிரான், ஓர் - ஒப்பற்ற, ஐ முகம் வெம்கணை - ஐந்து தலைகளையுடைய கொடிய வாளியை, தூண்டினுன் - செலுத்தினுன்; (அதுபட்டு) தோமரம் துகள் ஆனது - தோமரம் தவிடு பொடியாயிற்று.

மாதலி வாழ்வு இன்றோடு மாண்டது என அந்வயிக்க. முடுக்கல் - விரைந்து செல்லுதல்; 'மூண்டு வந்தது தீவினை முன்னின்று முடுக்க' (யுத்த. 3265); ஆண்ட வில்லி - தன்னை ஆட்கொண்ட வில்லியென்று கவி கூறியதுமாம்; 'என்னை யாளுடைய ஐயன்' (திருவவ. 26); 'தன் சீரடியார் குலம் பணி கொள்ள வெனைக்கொடுத்தோன்' (திருக்கோ. 54)-ம் காணத்தகும், ஐம்முக வெங்கணை - பாசுபதாத்திரம்; பசுபதியின் அத்திரம் ஆதலான் ஐம்முகம் எனப்பட்டது. ஐம்முகம் - அகோரம், வாமனம் தத்புருடம், ஈசானம், சத்தியோசாதம் என்பன.

பி - ம். 1. வாழ்வெனு.

2. சிந்த வெம்படை; முடுக்கினுன்; வெந்தழல் சிந்த முடுகலும், சிந்தி முடுக்கலும், சிந்த முடுக்கிலும்.

3. அயின்முக.

4. நெடுந் தோமரந் தோமற. தோமரந் தோய்வர. 158

இங்கு அதிகப்பாடல்:—

தொடுத்த ஆழியின் தோமரம் தூள்பட
விடுத்த வீரனவ் வெய்யவன் மாத்தலை
அடுத்து மீளவும் நின்றறுத் தானுயிர்
முடித்தி லன்வினை யாடலை முன்னியே,

## இராவணன் தலைகளை இராமபிரான் அறுக்க, அவை சிதறி வீழ்தல்

3801. ஒய்வ கன்ற தொருதலை நூறுறப்
போய கன்று புரளப் பொருகணை
ஆயி ரந்தொடுத் தானறி வின்றனி
நாய கன்கைக் கடுமை நடத்துவான்.

அறிவின் தனி நாயகன் - ஞானத்தின் ஒப்பற்ற தலைவனான இராமபிரான், கைகடுமை நடத்துவான் - (தனது) கைவேகத்தைச் செலுத்துபவனாய், ஒய்வு அகன்றது - ஒய்வு நீங்கப்பெற்றதாகி, (ஒழிவின்றி), ஒருதலை நூறு உற - ஒருதலை நூறாக முளைக்கவும், (அவை அனைத்தும்), அகன்று போய் - (வெகுதூரம்) நீங்கிச் சென்று, புரள - புரளுமாறு, பொருகணை - பொருதற்குரிய வாளிகள், ஆயிரம் தொடுத்தான் - ஆயிரம் விடுத்தான்.

ஒய்வு அகலுதல் - ஓவாமை. பொருகணை - வினைத்தொகை. அறிவின் தனிநாயகன் - இராமபிரான்; 'அறிவனை நோக்கினன் அறிவின் மேலுளான்' (யுத்த. 389); 'ஒண்டாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்குமுணர்வு' (இயற்பா. 1, 67).

பி - ம். 1. அகன்ற; நூறுறை, நூற்றுறை, நூறுறை, நூறறப்.
3. திருவின்றனி.
4. நடந்தியே. 159

3802. நீர்த்த ரங்கங்கள் தோறு நிலந்தொறும்
சீர்த்த மால்வரை தோறுந் திசைதொறும்
பார்த்த பார்த்த விடந்தொறும் பஃறலை
ஆர்ந்து வீழ்ந்த வசனிகள் வீழ்ந்தென.

பல்தலை - (துணிபட்ட) பலதலைகளும், நீர் தரங்கங்கள் தோறும் - கடலின் அலைகளிலும், நிலம்தொறும் - நிலங்களிலும், சீர்த்த - சிறப்பெய்திய, மால்வரை தோறும் - பெரிய மலைகளிலும், திசைதொறும் - திக்குகளிலும், பார்த்த பார்த்த இடந்தொறும் - கண்ட கண்ட இடங்களிலும், அசனிகள் வீழ்ந்தென - இடிகள்

விழுந்தாற்போல, ஆர்த்து வீழ்ந்த - ஆரவாரம் செய்துகொண்டு வீழ்ந்தன.

தரங்கம் - அலை, வடசொல்; 'தாங்கிய தரங்கமாக' (யுத்த. 1923); 'தரங்க மீட்டிய திரள்மணிக் குப்பையும்' (யுத்த. 332); 'கத்துந் தரங்க மெடுத்தெறியக் கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள்' (திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ். முத்தப். 1). பல் + தலை = பஃறலை; (யுத்த. இராவணன் வதை. 127). அசனி - இடி; 'மாதர் அடங்கலும், அசனிகேட்ட வளையுறை யரவ மொத்தார்' (யுத்த. 2220)

பி - ம். 1. தடங்கடரேறும்.

2. சிலைதொறும்.

4. ஆர்த்து வீழ்ந்தது, விழ்ந்தவன்; அசனியின்; நாணிகள்; விழ்ந்தன.

3803. தகர்ந்து மால்வரை சாய்வுறத் தாக்கின
மிகுந்த வான்மிசை மீன மலைந்தன
புகுந்த மாமக ரக்குலம் போக்கற
முகந்த வாயிற் புனலினை முற்றுற.

(அங்ஙனம் அறுப்புண்ட இராவணனுடைய தலைகள்), தகர்ந்து - பிளவுண்டு, மால்வரை சாய்வு உற தாக்கின - பெரிய மலைகள் சாயும்படி மோதின; மிகுந்த வான்மிசை - விரிந்த ஆகாயத்தின் மீதுள்ள, மீனம் மலைந்தன - நட்சத்திரங்களைத் தாக்கின; புகுந்த - (அல்லாமலும் கடலிற்) புக்கனவாய், மா - பெரிய, மகரம் குலம் - சுறுமீன் தொகுதிகள், போக்கு அற - செல்லும் இடம் அற்றுப் போகும்படி, புனலினை முற்றுற-கடல்நீர் முழுவதையும், வாயில் முகந்த - (தம்) வாயில் அடக்கிக்கொண்டன.

தகர்த்தல்: 'கல்லும் தகரும் தகரா கனங்குழாய், கொல்லுலை கூடத்தினால்' (நீதிநெறி. 14). மீனம் - உடுக்கள்; 'விரித்த பந்தர் பிரித்ததாமென மீனொளித்தன வானமே' (அயோத்தி. கைகேசி. 50) முகத்தல்: 'நாழி முகவாது நானாழி' (மூதுரை.19); 'கருங் கடல் நீர்சென்று புயல் முகந்து, பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு' (நன்னெறி. 4). முற்றுற முகந்த என்க.

பி - ம். 1. சாயறத்.

2. வாம்மிசை யாற்றலை வீழ்ந்தன.

4. வாரிப்; புணரியை; முற்றவும்.

## அறுபட்ட இராவணனுடைய சிரங்களின் கண்களைப் பேய்கள் தோண்டுதல்

3804. பொழுது நீட்டிய புண்ணியம் போனபின்
பழுது செல்லுமன் றேமற்றப் பண்பெலாம்
தொழுது சூழ்வன முன்னின்று தோன்றவே
கழுது சூன்ற விராவணன் கண்ணெலாம்.

பொழுது நீட்டிய - பலகாலம் நீண்டு துய்த்துவந்த, புண்ணியம் போனபின் - புண்ணியப்பயன் தீர்ந்தபின், மற்ற பண்பு எலாம் - மற்ற புகழ் முதலிய பண்புகள் யாவும், பழுது செல்லும் அன்றே - பழுதுபட்டுப் போகும் அல்லவா? (ஆதலின் முன்பெல்லாம்), தொழுது சூழ்வன கழுது - வணங்கி வலம் வரக்கூடிய பேய்கள், முன் நின்று - நேராக நின்று, தோன்ற - வெளிப்படையாக, இராவணன் 'கண் எலாம் - இராவணனுடைய விழிகளை எல்லாம், சூன்ற - தோண்டின. ஏ : அசை.

முன்னர் இராவணனை அஞ்சி அவனைச் சுற்றிப் பணிந்து வந்த பேய்கள், இப்பொழுது தைரியத்துடன் அவன் நேராக நின்று அவன் கண்களைத் தோண்டின என்ற சிறப்புப்பொருளை, ஒருவனுடைய புண்ணியம் அகன்றபின் அவனுடைய புகழ் முதலிய அனைத்தும் பழுதுபடும் என்ற பொதுப்பொருள் விளக்கி நின்றதாகலின் இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பணி. இதனைப் பிறிது மொழிதல்' ஒட்டு நுவலா நுவற்சி என்ற பல பெயர்களால் வழங்குவர்; அணியிலக்கணம் உடையார். (ஒப்பு): வினையுலப்ப வேருகி வீழ்வர் தாம் கொண்ட மனையாளை மாற்றார் கொள' (நாலடி. 3); பழுது செல்லுதல்: 'பழுதே கழிந்தன' (திருவாய்.). கழுது - பேய்; 'கழுதினமும், நமனும் வரிசிலையு மறனு நடநவில்' (யுத்த. 3398); 'கழுதொடு காட்டிடை நாடகமாடி' (திருவாச. திருச்சதகம். 6). சூலுதல் - அகழ்தல்; செந்தீக் கண்களைச்சூலும்' (யுத்த. 267); 'உறச்சுலவிச் சூன்றிடலும்' குசேலோ. 2, 54).

பி - ம். 1. நீட்டிந்த; செல்லினும்.
2. பழுது சொல்லும், காட்டும், போகும், போக்கும்.
3. ஆதலிற் றூன்றிய; முன்னின்று தோற்றவெங்.
4. கழுது சூழ்ந்த, சூழ்ந்தது, சூழ்வன, சூல்கின்ற; முன்னெலாம். 162

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

ஆன போதங் கரக்கனத் தேரொடும்
வான மீதெழ மாதலி தூண்டிட
ஞான நாயகன் தேரு மெழுந்துறப்
போன தண்டப் புறத்தமர் கோலினர்.

## இராவணன் இராமபிரான்மீது வாள் முதலியன வீசல்

3805. வாளும் வேலு முலக்கையும் வச்சிரக்
கோளுந் தண்டு மழுவெனுங் கூற்றமும்
தோளின் பத்திகள் தோறுஞ் சுமந்தன
மீளி மொய்ம்ப னுருமென வீசினன்.

மீளி மொய்ம்பன் - மிக்க வலி படைத்தவனான இராவணன், தோளின் பத்திகள் தோறும் - (தன்) தோளின் வரிசைகள் தோறும், சுமந்தன - தாங்கி நின்ற, வாளும் வேலும் உலக்கையும் - வாளும் வேலும் உலக்கையும், வச்சிரம் கோளும் - வலிமையுடைய வச்சிரப்படையும், தண்டு - கதையும், மழு எனும் கூற்றமும் - மழு எனப்படும் யமனும், (ஆகிய இப்படைகளை), உரும் என வீசினன் - இடி ஒப்ப எறிந்தான்.

உலக்கை - முசலம். வச்சிரக்கோளும் என்பதை கோள்வச்சிரமும் என மாற்றுக. தோளின் பத்தி, பத்தி - வரிசை; 'பெரியநாள்......பித்திப் பத்தி' (சுந்தர. 197); மீளி மொய்ம்பன் : வலிய தோளினன் எனினுமாம். மொய்ம்பு - தோள்.

பி - ம். 2. எழுவெனும்.
3. சுமந்தவன், சுமந்ததம்.
4. மொய்ம்பின்.

163

3806. அனைய சிந்திட வாண்டகை வீரனும்
வினைய மென்னினி யாதுகொல் வெல்லுமோ
நினைவெ னென்ன நிசாசரன் மேனியைப்
புனைவன் வாளியி னுலெனப் பொங்கினன்.

அனைய - அத்தகைய போர்க்கருவிகளை, சிந்திட - (இராவணன்) எறியவும், ஆண் தகை வீரனும் - ஆண்மைப் பண்பிற் சிறந்த வீரனான இராமபிரானும், 'இனி வினையம் என் - இனிப் புரியவேண்டிய செயல் என்ன ? வெல்லுமா யாதுகொல் - இராவணனை வெல்வதற்கான ஆலோசனை யாது, நினைவென் - ஆராய்வேன', என்ன - என்று, 'நிசாசரன் - அரக்கனுடைய, மேனியை - உடலை, வாளியினால் புனைவன் - சரங்களால் அலங்கரிப் பேன்', என - என்று, பொங்கினான் - வெகுண்டான்.

அனைய : பலவின்பால், வினையாலணையும் பெயர். ஆண் டகை : 'ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை யழிவுண் டாமோ' (சுந்தர. 525). கொல் - ஐயம். வெல்லுமாறு என்பது ஈறு குறைந்து வெல்லுமா என நின்றது; 'வெல்லுமா மிகவல்ல விறன்மிண்டர்க் கடியேன்' (திருத்தொண்டத்தொகை). நிசாசரர் : நிசியில் அல்லது இரவில் சஞ்சரிப்பவர் என்று அரக்கர்க்குக் காரணக்குறி; 'நிசாசர னுருப்புணர் நெருப்பி னீர்மையான்' (யுத்த. 53); 'தெற்கு வாயிலிற் சென்ற நிசாசரர்' (யுத்த. 1035). புனைவன் : பிறகுறிப்பு.

பி - ம். 1. சிந்திய.

2. யாதுகொலோவெற. யாதுகொல்வேறலாம், யாதுகொல் வெல்லலாம்.

3. நினைவை நாவினைந்தானொடு, நினைவமன் னினைந்தான், நினைவ முன் னினைந்தான், நினைவ வென்னினைந்தீர், நினைவனென் னினைந் தான்

4. வாளியினாலென்று ; பொங்குவான். 164

## இராவணன் மேனியெங்கும் இராமபிரான் தன் அம்புகளால் மூட, அவன் நிலைகுலைந்து வருந்துதல்

3807. மஞ் ரங்கிய மார்பினுந் தோளினும்
நஞ்ச ரங்கிய கண்ணினு நாவினும்
வஞ்சன் மேனியை வார்கணை யட்டிய
பஞ்ச ரம்மென லாம்வகை பண்ணினான்.

மஞ்சு அரங்கிய - மேகத்தினைத் தோல்வியுறச்செய்த (மிக்க கருநிறம் செறிந்த), மார்பினும் தோளினும் - மார்பிலும் புயத்

திலும், நஞ்சு அரங்கிய - விடத்தைத் தோல்வியுறச்செய்த, கண்ணினும் நாவினும் - கண்களிலும் நாவிலும் (எங்கும் அம்புகளை விடுத்து), வஞ்சன் மேனியை - வஞ்சகனான இராவணன் உடலை, வார்பணை - நீண்ட அம்புகள், அட்டிய - உறைவதற்கேற்ற, பஞ்சரம் எனலாம் வகை பண்ணினான் - கூடு என்று சொல்லுமாறு செய்தான்.

மஞ்சு - மேகம்; 'மஞ்சொக்கு மளகவோதி' (ஆரண்ய. 623). நஞ்சு அரங்கிய என்ற தொடரைக் கண், நா இரண்டிற்கும் கொள்க. கண் பார்வையாலும், நாவின் கடிய உரையாலும் வருத்துதல் என்க. பஞ்சரம் - கூடு, பறவைக்கூடு என்று கொண்டு அம்புகளைப் பறவைகள் ஆக்குக; 'பஞ்சரக் கிளியெனக் கதறு பாவையை விடா' (ஆரணிய. 25).

பி - ம். 3. வஞ்ச மேனியை; வட்டியின், வட்டியாய்ப்.

4. எனலாம்படி.



3808. வாய்நி றைந்தன கண்கள் மறைந்தன
மீநி றங்களி னெங்கு மிடைந்தன
தோய்வு றுங்கணை செம்புனல் தோய்ந்தில
போய்நி றைந்தன வண்டப் புறமெலாம்.

வாய் நிறைந்தன - (இராவணன்) வாய்களில் நிறைந்தனவும், கண்கள் மறைந்தன - விழிகள் மறைந்தனவும், மீ - மேலான, நிறங்களின் எங்கும் - மார்பின் இடங்கள் எல்லாம், மிடைந்தன - நெருங்கினவுமாகி, தோய்வு உறும் கணை - பதியப்பெற்ற வாளிகள், செம் புனல் தோய்ந்தில - உதிரம் தோயப்பெறாமல், (அவன் மேனியைத் துளைத்துவிட்டு), அண்டம் புறம் எலாம் போய் நிறைந்தன - அண்டத்தின் புறம் எல்லாம் சென்று நிறைந்தன.

நிறம் - மார்பு; 'மொய்நிறத் தெறிவர்' (யுத்த. 2350); 'ஊறுபடு செம்புனல்' (யுத்த. 851). உடலில் நுழைந்து வெளிவந்த விசை செம்புனல் தோய்ந்தில என்ற தொடரால் விளக்கப்பட்டது.

பி - ம். 1. வாய் மறைந்தன, வாயு மடைந்தன.
2. மேனிறங்கனி ; வியமேனிக ளெங்கும், மியமேனிதன்.
3. தோய்வுறுங் கனல் ; தோய்ந்ததின்.
4. நிறைந்ததிவ். 166

3809. மயிரின் காறொறும் வார்கணை மாரிபுக்
குயிருந் தீர வூருவின வோடலும்
செயிருஞ் சீற்றமு நிற்கத் திறல்திரிந்
தயர்வு தோன்றத் துளங்கி யழுங்கினன்.

மயிரின் கால்தொறும் - (தனது) மயிர்க் கால்கள்தோறும், வார் கணை மாரி - (இராமபிரானுடைய) நீண்ட அம்பு மழையானது, புக்கு - நுழைந்து, உயிரும் தீர - உயிர்த்தலும் ஒழியும்படி, ஊடுருவின - ஊடுருவினவாய், ஓடலும் - ஓடுதலும், செயிரும் - பகைமையும், சீற்றமும் - சினமும், நிற்க - நிற்கவும், திறல் திரிந்து - வலிமை மாறி, அயர்வு தோன்ற - தளர்ச்சி புலப்பட, துளங்கி அழுங்கினன் - அசைந்து வருந்தினன் (இராவணன்).

உயிரும் என்ற உம்மையால், இராவணன் வாழ்நாளில் அடைந்த கீர்த்தி முதலியனவும் உருவப்பெற்றமை தொனிக்கும். செயிர் - குற்றம்; 'உயிரினுஞ் சிறந்தன்று நாணே' (தொல். களவி. 22).

பி - ம். 1. வாளிபுக்கு.
2. உயிருந்திய.
3. நிறந்திரிந்து.
4. அயர்வும் ; அழுந்தினன். 167

## இராவணன் தன் தேரின்மீது மூர்ச்சித்துக் கிடக்க அவன் சாரதி தேரை விலக்கி நிறுத்தலும் இராமன் அம்பெய்தல் தவிர்தலும்

3810. வாரி நீர்நின் றெதிர்மக ரம்படச்
சோரி சோர வுணர்வு துளங்கினன்
தேரின் மேலிருந் தான்பண்டு தேவர்தம்
ஊரின் மேலும் பவனி யுலாவுவான்.

பண்டு தேவர் தம் ஊரின் மேலும்-முன்பு வானவரின் ஊரிலும், பவனி உலாவுவான் - பவனி வருபவனான இராவணன், வாரி நீர் நின்று - கடலின் நீரிலிருந்து, எதிர் - எதிர்த்து வந்த, மகரம்பட - மகர மீன்கள் இறந்து படுமாறு, சோரி சோர - (தன் உடலினின்று) இரத்தம் வடிய, உணர்வு துளங்கினான் - அறிவு கலங்கப் பெற்றவனாய், தேரின் மேல் இருந்தான் - தேரின்மீது கிடந்தான்

இராவணன் மெய்யினின்று பெருகிய உதிரத்தின் வெம்மையால் மகரங்கள் இறந்தன என்க. சோர்வதன் காரணமாகவே சோரி எனப்பட்டது. எனவே சோரி சோர என்றார். பண்டு தேவர் தம் ஊரின் மேலும் பவனி வருவான் ; இலங்கேசனுடைய பண்டைப் பெருமையைக் குறித்து நின்றது. இராவணனுடைய திக்விஜயம் காண்க. (உத்தரகாண்டம்) (ஒப்பு): 'மரபின் மாபெரும் புறக்கடல் மஞ்சன மருவி, யரவி னுட்டிடை மகளிரோ டின்ன முதருந்திப், பரவுமிந்திரன் பதியிடைப் பகற்பொழு தகற்றி, யிரவி னுலக்கம் நான்முக னுலகத்து ளிருக்கும்' (யுத்த: 134) என்று இரணியன் வருணிக்கப்படுவது காண்க. ஊரின் மேலும் - உம்மை உயர்வு சிறப்பு. பவனி - நாண்மங்கலத்தும், பிற விசேட நாட்களிலும் அரசர் முதலானோர் வீதிவலம் வருதல். 'வெங்கட் களிற்றின் மிசைபவனி போந்தணைந்தான்' (திருவிளை. வெள்ளை யானை. 7); 'வானெனத்தகையன் முருகப்ப பூபன் வரும்பவனிக், கேனத்தை கொண்டு திரிந்தனை யேயடி யேமகளே' (தனிப்.). இனி, கடலின் நீரைவிட்டு உதிரத்தின் வழியே வந்து மகரம் வாயிலே புகும்படி சோர்ந்தான் என்றும் பொருள் கூறுவர்.

பி - ம். 1. வந்திழிந்தென ; மகரம் வர, மகரம் படர்.
2. துளங்கியே.
4. உவாவினுன்.



3811. ஆர்த்துக் கொண்டெழுந் தும்பர்க ளாடினர்
வேர்த்துத் தீவினை வெம்பி விழுந்தது
போர்த்துப் போய்ந்தன னென்று பொலங்கொள்தேர்
பேர்த்துச் சாரதி போயினன் பின்றுவான்.

(இராவணன் மூர்ச்சையுற்றுக் கிடந்தது கண்டு உவகையினால்) ஆர்த்து கொண்டு - ஆர்ப்பரித்துக் கொண்டு, எழுந்து - மேலெழுந்து, உம்பர்கள் ஆடினார் - தேவர்கள் கூத்தாடினார்கள்; தீவினை வெம்பி வேர்த்து விழுந்தது - தீவினை (மனம்) புழுங்கி வீழ்ந்தது; சாரதி - (இராவணனுடைய) தேர்ப்பாகன், 'போர்துப்பு ஓய்ந்தனன் - (இலங்கேசன் இராமன் விடுத்த வாளிகளால்) போர் புரியும் வலி ஓய்ந்தான்', என்று - என்று, பின்றுவான் - (அங்கு நிற்கப்) பின்வாங்கினவனாய், பொலம் கொள் தேர் - பொன் மயமான தேரை (அங்கிருந்து), பேர்த்து போயினன் - திருப்பிக் கொண்டு சென்றான்.

உம்பர் - தேவர்; 'உப்பரான் முனிவரான்' (பால: டாயி); சாரதி பேர்த்துப் போயினன் என்க. பேர்த்து; 'பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே' (திருவாச. திருவெம். 9); 'ஓர்த்துள்ள முள்ள துணரின் ஒருதலையாப், பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' (குறள். 357); சாரதி - தேர்ப்பாகன்; வடசொல். 'சாரதி, பல்லொடு நெடுந்தலைமடிய' (யுத்த. 2277); 'சாரதி மலை புரை தலையை' (யுத்த. 3077); பின்றுதல்; 'பின்றாத வலத்துயர் பெற்றியனை' (யுத்த. 2323); 'பின்றாதுடற்றும் பெரும்பாவமழுத பின்னென் பிறர் செய்கை' (யுத்த. 2611).

பி ம். 2. வெந்து விழுந்தது.
3. போர்த்துப் போய்த்தனன் என்று, போர்க்கயர்ந்தனனென்று.
4. பின்னுற. 160

3812. கைது றந்த படையினன் கண்ணகன்
மெய்து றந்த வுணர்வினன் வீழ்தலும்
எய்தி றந்தவிர்ந் தானிமை யோர்களை
உய்தி றந்துணிந் தானற முன்னுவான்.

இமையோர்களை - தேவர்களை, உய்திறம் துணிந்தான் - கடைத்தேறச் செய்கின்ற வழியிலே, துணிவு கொண்டு உழைப்பவனாகி இராமபிரான், கைதுறந்த படையினன் - கையினின்றும் நழுவிய படைக்கலம் உடையவனும், கண் அகல் - இடம் அகன்ற, மெய் துறந்த உணர்வினன் - உடலை நீத்து நின்ற மெய்யுணர்வினனும் ஆகி, வீழ்தலும் - (இராவணன்) அறிவு மயங்கி வீழ்ந்த அளவில்,

அறம் உன்னுவான் - போர் நெறியைக் கருதுபவனாய், எய்திறம் தவிர்ந்தான் - அம்பினை விடுக்கும் செயலை ஒழிந்தான்.

கைதுறந்த படையினன், மெய்துறந்த உணர்வினன், வட மொழி நடை. படைக் கருவியைக் கைவிட்டு, உணர்வு கலங்கிப் போர்க்களத்தில் மாற்றான் வீழ்ந்த அளவில், அவன்மீது வாளி ஏவுதல் அறனன்று என்று கருதி, அம்பினைச் செலுத்தலைத் தவிர்ந்தான் இராமபிரான் என்க. 'சிறப்புடை அரசியல் ஆவன மடிந்த உள்ளத்தோனையும் மகப்பெறாதோனையும், மயிர் குலைந் தோனையும், அடி பிறக்கிட்டோனையும், பெண் பெயரோனையும், படையிழந்தோனையும் ஒத்தபடை யெடாதோனையும் பிறவும் இத் தன்மையுடையோரையும் கொல்லாது விடுதலும் கூறிப் பொரு தலும் என்ப' தழிஞ்சி என்ற புறப் பொருட்டுறையும் இங்குக் காணலாம். 'ஆளையாவுனக்கமைந்தன' (யுத்த. 1210) எனத் தொடங்கும் செய்யுளும் இங்குக் காணத்தகும். மற்றும்; 'பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால், ஊராண்மை மற்றதனெஃகு' (குறள். 773) ம் அதன் உரையும் காண்க. எய் திறம் - வினைத்தொகை. அறம் முன்னுவான் என்று பிரித்தலு மாம். முன்னுதல் - நினைதல்; 'முன்னு மாமறை முனிவரும் தேவரும்' (வி. பா: பாயி); 'முன்னிய வேள்வி முற்றுவரை' (யுத்த. 2789); துணிதலை செயற்கு முன்னிகழ்வாதலின் துணிந்து முயன்றான்' எனப் பொருள் தரப்பட்டது. எண்ணித் துணிக கருமம்: (குறள்: 467) அறம் - போரறம்.

பி - ம். 3. எய்திறந் துறந்தான்.
4. தவம், என்னது. 170

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

## மாதலி இராவணனைக் கொல்லச் சொல்ல, இராமபிரான் 'நீதியன்று' என மறுத்தல்

3813. தேறி னாற்பின்னை யாதுஞ் செயற்கரி
தூறு தானுற்ற போதே யுயர்தவன்
நூறு வாயென மாதலி நூக்கினன்
ஏறு சேவக னும்மீ தியம்பினன்.

(அப்போது) மாதலி - மாதலியானவன், (இராமபிரானை நோக்கி) 'உயர்தவன் - மிக்க தவத்தையுடையவனாகிய இராவணனை, தேறினுல் பின்னை யாதும் செயற்கு அரிது - (உணர்வு வரப் பெற்றுத்) தெளிந்தால் பின்னர் ஒன்றும் புரிதற்கு இல்லை; (ஆதலின்), ஊறு உற்றபோதே - அவனுக்கு இடையூறு நிகழ்ந்த போதே, நூறுவாய் - அழித்திடுவாயாக', என - என்று கூறி, நூக்கினன் - தூண்டினன்; ஏறு சேவகனும் இது இயம்பினன் - சிங்க வேறனைய வீரஞ் செறிந்த இராமபிரானும் பின் வருவதைப் புகன்றுன். இதனை அடுத்த செய்யுளிற் காண்க. தான்: அசை.

தேறுதல் - தெளிதல். இங்கே நல்லுணர்வு கூடப்பெறுதல். அரிது இன்மை மேற்று; ஊறு - இடையூறு. இங்கு நினைவு தவறப் பெற்றமை- அரக்கர்கோன் உயர்தவன் ஆதலின் நினைவு கூடப்பெறின் அவனை அழித்தற் கில்லையென உணர்ந்தவனாதலின் மாதலி இராமபிரானை ஊக்கினன் என்க. 'தாவு மாதவமல்லது பிறிதொன்று தகுமோ' (சுந்தர. 105); 'செங்கண்வாளரக்கன், மெய்யொத்தாற்றிய தவத்தையே வியத்துமோ' (சுந்தர. 113); நூறுதல்; 'சரம், நூற்ரு னுண் பொடிபட. நூறினன்' (ஆரணிய. 541); ஏறு; 'உடையா னரசருள் ஏறு' (குறள். 381); ஏறு சேவகன்; 'ஏறு சேவகன் மேனியல் லாலிடை' (சுந்தர. 625); சேவகன் - வீரன்; 'சேவகனும் யாமும்' (சுந்தர. 167).

பி - ம். 1. தேறினன்; யாரும்.

2. போழ்தினைனின்னுயிர், போழ்தே யுயர்ந்தவன், போதவுயிர்தனை, போதினுய் யாதவர்.

3. நோக்கினன். 171

3814. படைது றந்து மயங்கிய பண்பினு
னிடைதெ றும்படி பார்த்திகல் நீதியின்
நடைது றந்துயிர் கோடலு நன்மையோ
கடை துறந்தது போரென் கருத்தென்ருன்.

'படை துறந்து - போர்க் கருவியைக் கைவிட்டு, மயங்கிய பண்பினுன் இடை - நினைவு இழந்து நின்ற தன்மையையுடையவனாகிய இராவணனிடத்து, தெறும்படி பார்த்து - அழிக்கக் கூடிய

நிலைமை உண்டாயிருப்பதைப் பார்த்து, இகல் நீதியின் - போர் நீதியின், நடை துறந்து-நிகழ்ச்சி முறையைக் கைவிடுத்து, உயிர் கோடலும் நன்மையோ - உயிர் கொள்வதும் சிறந்ததாமோ? என் கருத்து-என் எண்ணம், போர் - போர் புரிவதை, கடை துறந்தது- முற்றும் நீக்கியுள்ளது', என்றான்-என்று இராமபிரான் பகர்ந்தான்.

படை துறந்தும் மயங்கியும் நின்ற பண்பு என்க. தெறுதல் - அழித்தல்; 'பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்' (கலித். 11); இகல் நீதி - போர் அறம். கொள் + தல் : கோடல். ஓகாரம் எதிர்மறை. கடை துறந்தது - போரை இறுதி வரையில் கைவிடுவது என்று கொள்க.

பி - ம். 1. மயங்கினன் ; பன்னிரிறேர், பன்னிரேறு.

2. பெறுந்துயர், பெறும்படி ; பார்துக.

3. கோடல் செய், கொள்வது ; நன்மையைக்.

4. பிறந்தது பேரின், துறந்த போருனற், துறந்து பேரென்ன. 172

## உணர்வு பெற்ற இராவணன் தேரைத் திருப்பி நிறுத்தியதற்காக வெகுண்டு, சாரதியை எறிய முற்படுதல்

3815. கூவி ரஞ்செறி பொற்கொடித் தேரொடும்
போவ ரஞ்சின ரன்னதோர் போழ்தினின்
ஏவ ரஞ்சலி யாதவ ரெண்ணுடைத்
தேவ ரஞ்ச விராவணன் தேறினன்.

கூவிரம் செறி - கூவிரம் அமைந்த, பொன் கொடி தேரொடும் போவர் - பொன் கொடியுடன்கூடிய தேருடன் செல்வாராய், அஞ்சினர் - அச்சம் கொண்டவரான இராக்கதருள், அன்னது ஓர் போழ்தினின் - அப்போது, ஏவர் அஞ்சலியாதவர் - (இராமபிரானுடைய அறச்சிந்தையை எண்ணி, அவனை) வணக்கம் புரியாதவர் யாவர்? (எல்லோரும் இராமபிரானை வணங்கினார்கள்); (பின்னர்) எண் உடை - மதிப்பினையுடைய, தேவர் அஞ்ச - அமரர்கள் அஞ்சுமாறு, இராவணன் தேறினன் - இராவணன் தெளிவுவரப்பெற்றான்.

கூவிரம்; 'தேரில் ஆசனத்துக்கு எதிராக நடப்பெற்றுக் கையாற் பற்றிக் கொள்ளுதற்கு உதவுவதும் தாமரை மொட்டு வடிவில் அமைந்ததுமான ஓர் உறுப்பு; இதனைக் கொடிஞ்சி என்பர். 'நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்' (புறநா. 77); 'மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி' (மணி. 4, 48); பொன் கொடி அழகிய கொடியுமாம். இராமபிரானுடைய அறச் சிந்தையினையும் இரக்கத்தினையும் கண்ட இராக்கதரும் அஞ்சலி செய்தனர் என்பது கொண்டு, இராமபிரானுடைய அருள் நோக்கத்தின் பெருமை உய்த்துணரலாகும். இலங்கை வாசிகளான அரக்கரைப் பற்றிக் கூறும்போது கவியரசர் கம்பநாடர் 'இரக்க மென்றொரு பொருளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129) என்று எழுதினர். அவரைப் பற்றி மேலும் கூறுங்கால் மாயா சீதைப் படலத்து, 'இரங்காத வரக்கிமாருந் தளர்ந் தழுதார்' (யுத்த. 2610) என்று குறித்தமை காண்க. அத்தகைய அரக்கரும் இங்கு அஞ்சலி செய்தார் என்றவாறு, அஞ்சலித்தல் - கூப்பி வணங்குதல். 'அஞ்சலித்தறியாச் செங்கை யாணையாய்' (கிட்கிந்தா. 373).

பி - ம். 1. கோவரஞ்.
2. அஞ்சினரென்னும் பொழுதிடைப், பொழுதினின்.
3. அஞ்சலிலாதவரென்னுடைத். 173

3816. உறக்க நீங்கி யுணர்ச்சியுற் றானென
மறக்கண் வஞ்ச னிராமனை வான்றிசைச்
சிறக்குந் தேரொடுங் கண்டிலன் சீற்றத்தீப்
பிறக்க நோக்கினன் பின்னுற நோக்கினான்.

மறம் கண் வஞ்சன் - கொடுமை நிறைந்த விழிகளையுடையவனும் வஞ்சகனுமான இராவணன், உறக்கம் நீங்கி - மயக்கம் ஒழிந்து, உணர்ச்சி உற்றான் என - நினைவு வந்தவன் போன்றவனாக, (அப்போது), வான் திசை - உயர்ந்த திக்குகளில், சிறக்கும் தேரொடும் - சிறந்து விளங்கும் தேருடனே, இராமனை கண்டிலன் - இராமபிரானைக் காணாதவனாய், (நாணத்தினால்), பின் உற நோக்கினான் - பின்புறம் நோக்கி(த் தன் தேர்ப்பாகனை), சீற்றம் தீ பிறக்க - சினத் தீ எழ, நோக்கினான் - பார்த்தான்.

உறக்கம் - நித்திரை; 'உறக்கமுற்றான் என உணர்வு நீங்கினன்' (ஆரணிய. 195); அவன் தேர் பல திசைகளிலும் செல்ல வல்லதாகலின், 'வான்திசை சிறக்கும் தேர்' எனப்பட்டது. எட்டு மட்டும் அல்லாது பத்துத்திக்கிலும் செல்லக்கூடிய தேர் படைத்தது பற்றி, 'இராமனென்னும், மொய்ம்மாண் கழலோற்றரு நல்லற மூர்த்தி யன்னானை' (பால. அரசியல். 1); மன்னர்பிரானைத் தசரதன் என்று கூறியது காண்க. வான்திசை என்பதற்கு வானாகிய திசை எனினுமாம். ஆகாயமும் ஓர் திசையெனக் கூறப் படுமாதலின்; சிறக்கும் பெருமையால் உயர்ந்த; 'சிறக்குமா மியர் மூவர்க்கும்' (சுந்தர. 639); சீற்றத்தைத் தீயாகக் கூறுவதுண்டு. 'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள். 306) என்றது காண்க.

பி - ம். 1. உணர்தலுற்றானென, உணர்ச்சியுற்றனவன், உணர்வு பெற்றானென
2. வான்றனி, வன்றனி, வன்றிசை.
3. திறக்கும். 174

3817. தேர்தி ரித்தனை தேவருங் காணவே
வீர விற்கை யிராமற்கு வெண்ணகை
பேர வுய்த்தனை யேபிழைத் தாயெனாச்
சார திப்பெய ரோனைச் சலிப்புறு.

'தேவரும் காண - வானோரும் கண்ணுறுமாறு, தேர் திரித்தனை - தேரைத் திருப்பி ஓட்டினை, (அதனால்) வீரம் வில்கை இராமற்கு - வீரம் செறிந்த கோதண்டம் என்னும் வில்லை ஏந்திய கரத்தினையுடைய இராமபிரானுக்கு, வெள் நகை பேர உய்த்தனை - வெள்ளிய புன்னகை எழுமாறு செய்தனை; (எனவே), பிழைத்தாய் - தவறு செய்தாய்', எனா - என்று, சாரதி பெயரோனை சலிப்பு உறு - சாரதி என்று பெயர் தாங்கியவனை வெறுத்தவனாய், 'உருத்தெழா' என்ற கவியுடன் பொருள் முடிவு கொள்ளும். ஏ: அசை.

திரித்தல் - திருப்புதல்; 'சென்று சென்றழியுமாவி திரிக்குமால்' (யுத்த. 1589); வீரம் விற்கை - வீரம் நெஞ்சுரத்தையும், வில் - வில்லின் ஆற்றலையும் விளக்கி நின்றன. பிழைத்தல் - தவறுதல்; 'பிழைத்தனை பாவியுன் பெண்மையால் என்றான்' (கிட்கிந்தா. 257); 'பேதைப் பிள்ளை நீ பிழைத்தது பொறுத்தனன்'

(யுத்த. 185); எதிரிக்கு முன்னர்ச் செலுத்த இயலாமல் தேரைத் திருப்பினமையின் 'சாரதிப் பெயரோனே' எனப்பட்டது. இகழ்ச்சி-பெயருக்கேற்ற தொழில் வன்மை காணப்படாமையின்; சலிப்புறு-செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.

பி-ம். 1. காணவோ.

3. என்னிழைத்தாய். 175

3818. தஞ்ச நானுனைத் தேற்றத் தரிக்கிலா
வஞ்ச நீபெருஞ் செல்வத்து வைகினை
அஞ்சி னேனெனச் செய்தனை யாதலால்
உஞ்சு போதிகொ லாமென் றுருத்தெழா.

'தரிக்கிலா வஞ்ச - பொறுக்க முடியாத (அளவிற்கு மிஞ்சிய) வஞ்சனையுடையோய்? தஞ்சம் - புரப்பவனாய், நான் உனை தேற்ற - நான் உன்னைத் தேறும்படி செய்து ஆதரிக்க, நீ பெரும் செல்வத்து வைகினை - நீ மிக்க செல்வத்துள் வாழ்ந்தனை, (நான் புரிந்த கைம் மாற்றிற்குப் பிரதியாக) அஞ்சினேன் என செய்தனை - பயந்தேன் என்று (என்னை மாற்றார்) கருதுமாறு செயலாற்றினை, ஆதலால் - ஆதலின், (இவ்வாறு புரிந்த நீ), உஞ்சு போதி கொல் - பிழைத்துப் போவாயோ'? என்று - என்று பகர்ந்து, உருத்து எழா - சினந்து எழுந்து.

தரிக்கிலாத என்பது ஈறு குறைந்து தரிக்கிலா என நின்றது. அஞ்சினேன் என்று பிறர் ஏசுமாறு. உய்ந்து - உஞ்சு; இடைப் போலி. 'உய்ஞ்சிவர் போய் விடின்' (அயோத்தி. குகப். 14). கொல்-ஐயம். எழா-எழுந்து. உஞ்சு: உய்ந்து; இவ்வாறு பாகனைக் கடிந்ததாக முதனூலிலும் உள்ளது.

பி-ம். 1. பொன்னைத் தருதலால், நானுனைத் தேற்றத் தருக்கிலா, நானுனைத் தேற்றத் தருக்கெலாம்.

2. வஞ்சம்; கோபத்து; மலகினாய்.

3. அஞ்சினான், அஞ்சினாய்.

4. உஞ்சு போதிகொலோ. 176

## சாரதி அவனைப் பணிந்து தேரைத் திருப்பியதன் காரணத்தைத் தெரிவித்தல்

3819. வாள்க டைக்கணித் தோச்சலும் வந்தவன்
தாள்க டைக்கணி யாத்தலை தாழ்வுரு
மூள்க டைக்கடுந் தீயின் முனிவொழி
கோள்க டைக்கணித் தென்றவன் கூறுவான்.

(இராவணன்), வாள் கடை கணித்து - வாளைக் கடைக் கண்ணால் நோக்கி, (அந்தத் தேரோட்டிமீது செலுத்துமாறு), ஓச்சலும் - உயர்த்தலும், அவன் - அந்தப் பாகன், வந்து - அணுகி வந்து, (அந்த இராவணனுடைய) தாள் கடை கணியா - பாதங்களைப் பார்த்து, தலை தாழ்வு உரு - தலை வணங்கி, 'கோள் கடை கணித்து - என்னுடைய கருத்தை அருள் கொண்டு ஆராய்ந்து, கடை - வழிக் காலத்து எழுகின்ற, கடு தீயின் - கொடிய தீப்போன்று, மூள் - மூண்டெழுகின்ற, முனிவு - சினத்தை, ஒழி - தவிர்வாயாக', என்றவன் - என்று மொழிந்தவனாய், கூறுவான் - (மீண்டும்) சொல்வான்.

சாரதி கூறுவதை அடுத்துவரும் இரண்டு செய்யுட்களிற் காண்க. முனி மொழி என்றே பாடம்கொண்டு - வினைத் தொகையாக்கிச் சின வார்த்தை என்றே பொருள்கொண்டு, கடைக் கணித்துக் கோள் - கருணை வைத்து, அடக்கிக் கொள்வாயாக எனினுமாம். கடைக் கொடுந் தீயின் மூள் முனிவு என்க.

பி - ம். 2. தாழ்வுற, சாய்குரு.

3. நீள் கடைக்கடுந் தீயின்ன நின்முனி, யாள் கடைத்தொன் றறிவிப்ப துண்டெனு, மூள்கடைக் கடுந் தீயென நிமுனி யான் சுடைத்தொன் றறிவிப்ப துண்டெனு, மூள் கடைக் கடுந்தீயினின் முன்னம் வந்து.

3820. ஆண்டொ ழிற்றுணி வோய்ந்தனை யாண்டிறை
ஈண்ட நீற்றிடி னையனே நின்னுயிர்
மாண்ட தக்கண மென்றிடர் மாற்றுவான்
மீண்ட தித்தொழி லெம்வினை மெய்ம்மையால்.

'ஐயனே - ஐயனே! ஆண் தொழில் துணிவு ஓய்ந்தனை - வீரச் செயலைத் துணிவு கொண்டு புரிதலினின்றும் ஒய்ந்து ஒடுங்கினாய்; ஆண்டு - அந்த இடத்திலேயே, இறை - ஒரு கணப்போது, ஈண்ட நின்றிடின் - நெருங்கி நின்றால், நின் உயிர் - உன் பிராணன், அக் கணம் மாண்டது - அந்தக் கணத்திலேயே இறப்பது நிச்சயம், என்று - என்று கருதி, இடர் மாற்றுவான் - உனக்கு நேரவிருந்த துன்பத்தை மாற்றும் பொருட்டு, மீண்டது இ தொழில் - தேரைத் திருப்பியதாகிய இந்தச் செயல் (நிகழ்ந்தது), எம் வினை - உன் அடியவனான எமது செயல், மெய்ம்மை - (என்றும்) உண்மை யானதே யாகும். ஆல்: அசை.

ஈண்டுதல் - நெருங்குதல். நின்றிடின் என்பது வலித்து நிற்றிடின் என நின்றது. நில்லுதியோ என்பது நிற்றியோ என வருதல் காண்க. 'நிற்றியோ வினையோ யொருநீயென' (ஆரணிய. 810); 'தேவரிற்றெரிய நிற்றி' (கிட்கிந்தா. 406); மாண்டது - தெளிவு பற்றி இறந்த காலம் வந்தது; காலவழுவமைதி. மீண்டது இத் தொழில் - மீண்டதாகிய இத்தொழில் என்க.

பி - ம். 1. ஆங்கிறை.

2. நிற்பினையே நெடியோய், நிற்பினோரே கணையே, நிற்றிடினையனே நின் மீண்டெதிர்ப்பவன் மேவினையேயுயிர்.

3. மாண்டொழித்தி யனையது, மாண்ட திக்கினமென்று.

4. வெம்மையால். 178

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

3821. ஓய்வு மூற்றமு நோக்கி யுயிர்ப் பொறைச்
சாய்வு நீக்குதல் சாரதி தன்மைத்தால்
மாய்வு நிச்சயம் வந்துழி வாளினுற்
காய்வு தக்கதன் றுற்கடை காண்டியால்.

'சாரதி தன்மைத்து - தேர்ப்பாகன் மேற்கொள்ளவேண்டிய இயல்பான தொழில், ஓய்வும் - தேர்மீது ஆரோகணித்திருப்பவன் தளர்ச்சியையும், ஊற்றமும் - வலிமையையும், நோக்கி - தெரிந்

துணர்ந்து, மாய்வு நிச்சயம் வந்துழி - இறப்பு நிச்சயமாக நேரும் என்றபோது (அவனுடைய), உயிர் பொறை - உயிராகிய பாரத்துக்கு, சாய்வு நீக்குதல் - தளர்வு எய்தாமல் அப்புறப்படுத்தல் (ஆகும்); (ஆதலின்), வாளினால் காய்வு தக்கது அன்று - வாள் கொண்டு ஒறுத்தல் தக்க காரியம் அன்று; கடை காண்டியால் - இறுதியில் என் செயலின் உண்மையான நோக்கத்தைக் காண்பாயாக'. ஆல்: அசை.

ஊற்றம் - வன்மை; 'ஊற்ற மில்லவன் ஓடினன் கனகனை உற்றான்' (யுத்த. 164); 'உரவு நல்லணை யோட்டிய ஊற்றமும்' (யுத்த. 724).

பி - ம். 1. ஓய்வு முற்றவும்; உயிர்பெற்ற.
2. தன்மையால்.
3. வந்தது, வந்துள. 179

இராவணன் இரக்கங்கொண்டு 'தேரைமீட்க' என்ன, பாகன் அவ்வாறே செல்ல, இராமனைக் காணுதல்

3822. என்றி றைஞ்சலு மெண்ணி யிரங்கினான்
வென்றி யந்தடந் தேரினை மீட்கெனச்
சென்றெ திர்ந்தது தேருமத் தேர்மிசை
நின்ற வஞ்ச னிராமனை நேர்வுரு.

என்று - என்று மொழிந்து, இறைஞ்சலும் - வணங்கிய அளவில், எண்ணி - (இராவணன்) அவன் (பணிவுச்) செயலை நினைந்து, இரங்கினான் - (அவன்மீது) இரக்கம் கொண்டவனாய், 'வென்றி அம் தட தேரினை மீட்க - வெற்றிபொருந்திய அழகிய பெரிய தேரைத் திருப்பிச் செலுத்துவாயாக', என - என்று கட்டளையிட, தேரும் - (இராவணன்) தேரும், சென்று எதிர்ந்தது - (இராமபிரானைச்) சென்று எதிர்ந்தது; அ தேர்மிசை நின்ற வஞ்சன் - அந்தத் தேர்மீது நின்ற வஞ்சகனான இராவணன், இராமனை நேர்வு உரு - இராமபிரானை எதிர்ப்பட்டு; தூற்றினான் என்ற அடுத்த கவியுடன் பொருள் முடிவு கொள்ளும்.

மீட்க என என்பதில் அகர ஈறு தொக்கது. நேர்வுரு : செய்யா என்னும் வாய்பாடு.

பி - ம். 1. இரங்குவான்.
2. மீளெனுச்.
3. தேர்த்திசை. 180

## இராவணன் இராமபிரான்மீது அம்பு விடுதல்

3823. கூற்றின் வெங்கணை கோடியின் கோடிகள்
தூற்றி னன்வலி மும்மடி தோற்றினன்
வேற்றோர் வாளரக் கன்னென வெம்மையால்
ஆற்றி னன்செருக் கண்டவ ரஞ்சினர்.

கூற்றின் - யமனைக் காட்டிலும், வெம் கணை - வெம்மை வாய்ந்த அம்புகள், கோடியின் கோடிகள் - கோடிக்கணக்காக உள்ளவைகளை, தூற்றினன் - வாரி வழங்கினன்; 'வேறு ஓர் வாள் அரக்கன் - இவன் பிறிதொரு கொடிய இராக்கதனே', என - என்னக் கருதுமாறு, மும்மடி வலி தோற்றினன் - (முன்னைக் காட்டிலும்) மூன்று மடங்கு வலிமை விளங்கப்பெற்றவனாய், வெம்மையால் - உக்கிரமாக, செரு ஆற்றினன் - போர் புரிந்தான்; கண்டவர் அஞ்சினர் - (அதனைக்) கண்ணுற்றவர்கள் பயந்தனர்.

கூற்றின் வெங்கணை : கூற்றுப்போன்ற வெங்கணை எனினுமாம். கோடியின் கோடி - பல கோடிகள் ; 'கோடியின் கோடியான குருக்கடஞ் சேனை தன்னை' (வி. பா. நிரைமீட்சி. 122). மும்மடி - மூன்று மடங்கு ; 'மும்மடி யிராவண னெனும்ப டிமையோர்' (யுத்த. 3385); 'எரியின் மும்மடி கொடியன சுடுசரம் எய்தான்' (யுத்த. 448). செரு ஆற்றினன் என மொழி மாற்றுக.

பி - ம். 1. கோடிய.
2. மும்முறை. 181

இங்கு அதிகப்பாடல்கள் :—

அஞ்ச லின்றி யமர்க்களத் தாரியன்
வெஞ்சி னத்தொடு வேலரக் கன்பொர
எஞ்ச வேழு திவச மிராப்பகல்
விஞ்சு போர்செயும் வேலையில் வீரனும். 1

ஆய கண்டங் கமலன் விடுஞ்சரம்
சாய கங்களை நூறி தலைத்தொகை
போய கன்றிடச் செய்தலும் போக்கிலாத்
தீய வன்சினத் திம்மொழி செப்புவான். 2

துறக்க மென்பதை யெண்ணிச் சிரத்தொகை
அறுக்கு முன்முளைத் துய்குவ தன்றியே
மறுக்கு மென்று மனக்கொளல் மாநிலத்
திறக்கு மானுடர் போன்றென் உயிரும்நீ. 3

ஈத ரக்கன் புகல விராமனும்
தீதி ருக்குறும் சிந்தையி னீதெளிந்
தோது ரைக்கெதி ருற்றென் பகழியிப்
போது ரைக்கும் எனக்கொடு பொங்கினான். 4

## இராமன் கணைவிடுத்து இராவணன் வில்லைத் துணித்தமையைக் கூறும்

3824. எல்லுண் டாகி னெருப்புண் டெனுமிதோர்
சொல்லுண் டாயது போலவன் தோளிடை
வில்லுண் டாகின் வெலற்கரி தாமெனச்
செல்லுண் டாலன்ன தோர்கணை சிந்தினான்.

'எல் உண்டாகில் நெருப்பு உண்டு - புகையுண்டானால் நெருப்பு உண்டு', எனும் - என்கின்ற, இது ஓர் சொல் உண்டாயது போல் - இது ஒரு பழமையான உரை உண்டாகியது போன்று, 'அவன் - அந்த இராவணனுடைய, தோள் இடை - தோளினிடத்து, வில் உண்டு ஆகில் வெலற்கரிது ஆம் - வில் இருக்குமெனில் வெற்றி கொளற்கரிது ஆம்', என - என்று கருதி, செல் உண்டால் அன்னது ஓர் கணை சிந்தினான் - இடியை உட்கொண்டதை ஒத்த ஓர் வாளியை (நாராயணாத்திரத்தைச்) செலுத்தினான்.

எல்-இருள், இங்கே இலக்கணையால் அதன் நிறமுள்ள புகைக்கு ஆகிவந்தது; 'புகையுண்டெனின் நெருப்புண்டு' என்பது தார்க்கிகர் அடிக்கடி கூறும் பழமொழி. 'புகையுடைத் தென்னி

னுண்டு பொங்கல லங்கென் றுன்னும், மிகையுடைத் துலக நூலோர் வினையமும் வேண்டற் பாற்றே' (கிட்கிந்தா. 407); 'புகை யுளவிடத்து நெருப்புண்டு' (மணி. சமயக்கணக்கர் தந்திரம் கேட்ட காதை). புகையுண்டெனின் நெருப்புண்டு அதுபோன்று, இராவணன் தோளில் வில் உள்ள வரையில் அவனுக்கு வெற்றிதான் உண்டு, தோல்வியில்லை என்று எண்ணி, அந்த அரக்கனுடைய வில்லை முறிக்கத் தலைப்பட்டான இராமபிரான என்க. வெலற்கரிது: 'என்னையும் வெலற்கரி திவனுக் கிண்டிவன், தன்னையும் வெலற்கரி தெனக்கு' (சுந்தர. 1104). செல் - இடி; 'செல்லோ டெழுமா முகில்' (யுத்த. 343).

பி - ம். 1. எனுமிதச், எனுமியற்.

2. போலிவன்.

4. சிந்தியார். 182

3825. நார ணன்படை நாயக னுய்ப்புருப்
பார ணங்கினைத் தாங்குறும் பல்வகை
வார ணங்களை வென்றவன் வார்சிலை
ஆர ணங்கை யிருதுணி யாக்கினன்.

நாரணன் நாயகன் - திருமாலின் அவதாரமான இராமபிரான், படை உய்ப்பு உரு - (அங்ஙனம்) கணைகளைச் செலுத்தி, பார் அணங்கினை - பூமகளை, தாங்குறும் - சுமக்கின்ற, பல்வகை - பல வகையான, வாரணங்களை வென்றவன் - திக்கு யானைகளை வெற்றி கொண்டவனான இராவணனுடைய, வார் சிலை - நீண்ட வில்லாகிய, ஆர் அணங்கை - மிக்க அச்சம் தருவதை, இரு துணி ஆக்கினன் - இரு துண்டமாகச் செய்தான்.

நாரணன் - இராமாவதாரத்திற்கு மூலமான திருமால்; 'நாரணன் விளையாட் டெல்லாம் நாரதமுனி வன்கூற' (பால. பாயிர. 5) நாரணன்: நாராயணன் என்ற சொல்லின் குறுகிய படிவம்; 'நாரணன் றிருவுந்தியி ஞன்முகன்' (யுத்த. 3833); 'நாராயணனே தனிநாயகனே' (சுந்தர. 494), நாரணன் நாயகன் என இயைக்க.

பாரணங்கு - பூமகள். திசையானைகள் பூமியைத் தாங்குவதாகப் புராணம் நவிலும். இராவணன் வாரணங்களை வென்றமை, இக் காப்பியத்தில் பல இடங்களிலும் கூறப்பட்டுள்ளது. ஆர் - நிறைவு. அணங்கு - துன்பம்.

பி - ம். 1. நாரணன் படையாதி நயப்புருப், ஆக, நயப்புருப் 183

3826. அயன்ப டைத்தவில் லாயிரம் பேரினன்
வியன்ப டைக்கலத் தாலற்று வீழ்தலும்
உயர்ந்து யர்ந்து குதித்தன ரும்பரால்
பயன்ப டைத்தனம் பஃறவத் தாலென்றார்

அயன் படைத்த வில் - பிரமதேவனால் ஆக்கப்பட்ட வில், ஆயிரம்பேரினன் வியன் படைகலத்தால் அற்று வீழ்தலும் - ஆயிரம் திருப்பெயர்களை ஏற்றவன் ஆன இராமபிரானுடைய, பெரிய போர்க்கருவியால் துணிபட்டு வீழ்தலும், உம்பர்-வானோர், உயர்ந்து உயர்ந்து குதித்தனர் - உயர்ந்து உயர்ந்து குதித்தாராய், 'பல் தவத்தால் - பலவகைத் தவத்தினால். பயன்படைத்தனம் - பயன் அடைந்தோம்', என்றார் - என்று பகர்ந்தார், ஆல், அசை.

அயன் படைத்தவில் - வரலாறு அறியதக்கது. ஆயிரம் பேரினன் - சகச்சிரநாமன்; 'அனைத்து புரிவனென்ற வாயிர நாமத்தண்ணல்' (2531); 'ஆயிர நாமத்தாழியரி' (யுத்த. 1633); அயன் படைத்தவில் ஆயினும், திருமாலின் வியன் படைக் கலத்தின்முன் நில்லாது துணிபட்டது எனப்பட்டது. உயர்ந்துயர்ந்து குதித்தல்-பெருமகிழ்ச்சியின் மெய்ப்பாடு. பல்தவத்தால் பயன்படைத்தமை. 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய் தவம், ஈண்டு முயலப்படும்' (குறள். 225).

பி - ம். 1. ஆயிர நாமத்தான், பெயரினன்.
3. குனிந்தனர்; உம்பரார், உம்பரும், உம்பரே.
4. பேரறிவாலென்றான். 184

## இராவணன் விடுத்த அம்புகள் முதலியவற்றை யெல்லாம் இராமன் அழித்து அவன்மீது அயன்படையை விடுதல்

3827. மாறி மாறி வரிசிலை வாங்கினன்
நூறு நூறினொ டையிரு நூறவை
வேறு வேறு திசையுற வெங்கணை
நூறி நூறி யிராம னுறுக்கினன்.

(இராவணன்), மாறிமாறி - ஒன்றன்பின் ஒன்றாக, வரிசிலை வாங்கினன் - கட்டமைந்த வில்லைக் கைக் கொண்டவண்ணமிருந்தான்; இராமன் - இராமபிரான், நூறு நூறினொடு-ஐயிருநூறு நூறு அவை - அந்த கோடி விற்களை, வேறு வேறு திசையுற - வெவ்வேறு திசையிலே பொருந்த, வெங்கணை - கொடிய அம்புகளால், நூறி நூறி - துகளாக்கி, நுறுக்கினன் - பொடி செய்தான்.

வரிசிலை - வரிசிலை வடித்த தோளான் வாளெயிறிலங்க நக்கான்; (ஆரணிய. 275); நூறுநூறு - பதினாயிரம்; அத்துடன் ஐ இருநூறுன. ஆயிரத்தைப் பெருக்கக் கோடி என்ற எண் வருதல் காண்க. நுறுக்கினன்; 'நாலொன்றுவரிவிலானு மதனையு நுறுக்கி வீழ்த்தான்' (யுத்த, 3047).

பி - ம். 2. ஆறநூறினொடு, ஆறிநூறினொடு, நூறிநூறினொடி.
3. வேறுவிவிவுற; சிலையுறவெங்கணை.
4. நுறுக்கினன். 185

3828. இருப்பு லக்கைவேல் தண்டுகோ லீட்டிவாள்
நெருப்பு லக்க வருநெடுங் கப்பணம்
திருப்பு லக்கவுய்த் தான்திசை யானையின்
மருப்பு லக்க வழங்கிய மார்பினன்.

திசையானையின் - திக்கு வேழங்களின், மருப்பு உலக்க - தந்தங்கள் ஒடியும்படி, வழங்கிய - காட்டிய, மார்பினன் - மார்பினையுடையவனான இராவணன், (அந்த இராமபிரான் மார்பில் அகலாதுறைகின்ற), திரு - திருமகள், புலக்க - புலவி கொண்டாற்போல, (அம்மார்பைவிட்டு) அப்பாற் செல்லும்படி, இரும்பு உலக்கை - இருப்புலக்கை, வேல் - வேல், தண்டு - கதை, கோல் -

குத்துக்கோல், ஈட்டி - ஈட்டி, வாள் - வாள், நெருப்பு - நெருப்பு என்ற இவையனைத்தும், உலக்க - (தன்) வெம்மை குன்றும்படி, (மிகக் கொடுமையுடன்) வரு - வருகின்ற, நெடு - நெடிய, கப்பணம் - கப்பணம் ஆகிய இவற்றை, உய்த்தான் - விடுத்தான்.

இச் செய்யுள் திரிபு என்னும் சொல்லணி: கப்பணம்; நெருஞ்சிமுட் போல் இரும்பினாற் செய்த, ஓர் கருவி. 'கப்பணம் சிதறினானே' (சீவக. 285); திருப்புலத்தக்க - வினையுலப்ப பெருகி நிற்றல் திருமாள் செயல்; திசையானையின் மருப்புலக்க வழங்கிய மார்பினன்; ஆரணிய. 328, 557, 646, 848, 875; சுந்தர. 303, 312; யுத்த. 3852; காண்க. உலக்க; 'உலக்கவின் னுயிர்குடித் தொல்லை மீள்குவல்' (கிட்கிந்தா. 249).

பி - ம். 1. உலக்கை நீ டண்டு வேலிட்டி, கோறண்டு.

2. கற்பணம். 188

3829. அவைய னைத்து மறுத்தகன் வேலையிற்
குவைய னைத்து மெனக்குவித் தான்குறித்
திவைய னைத்து மிவனைவெல் லாவெனா
நவைய னைத்துத் துறந்தவ னாடினன்.

அவை அனைத்தும் - (இராவணன் எடுத்த) ஆயுதங்கள் எல்லாவற்றையும், அறுத்து - (தன் வாளிகளால்) துணித்து, அனைத்தும் - அவையாவும், அகல் வேலையில் - பரந்த கடலிடத்து, குவை என குவித்தான் - ஒரு குவியல்என எண்ணுமாறு குவித்தவனாய், நவை அனைத்தும் துறந்தவன் - குற்றங்கள் எல்லாம் நீங்கப்பெற்றவனான இராமபிரான், 'இவை அனைத்தும் இவனை வெல்லா - இப்படைகள் எல்லாம் இவனை வெல்லா', எனா - என்று' குறித்து - மனத்துட்கொண்டு, (அவனை முறியடிக்க யாது செய்வது) என்று நாடினன் - என்று ஆராய்வானாயினன்.

அனைத்தும் இவையெனக் குவித்தான் என்க. 'நவை யனைத் தும் துறந்தவன்' 'குற்றம் வீய்ந்த குணத்தினென் கோமகன், (ஆரணிய. 810); என்று பிராட்டி கூறுதல் காண்க. 'நவை யறு குணங்கள் என்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி' (யுத்த. 1588).

பி - ம். 1. அறுத்தனன், அறுத்தனே வேலையை, அறுத்தகன் வேலையைக்.

2. குழித்தான்.

3. வெல்லாதென.



3830 கண்ணி னுண்மணி யூடு கழிந்தன
எண்ணி னுண்மண லிற்பல வெங்கணை
புண்ணி னுன்னுழைந் தோடிய புந்தியோர்
எண்ணி னுண்ணிய வென்செயற் பாற்றென.

'எண்ணின் - ஆராயுங்கால், நுண் மணலில் பல - நுட்பமான மணலினும் பலவாகி, புந்தியோர் - அறிவாளிகளின், எண்ணின் நுண்ணிய - எண்ணத்திலும் சூக்குமமான, வெங்கணை - கொடிய சரம், கண்ணின் உள் மணி ஊடு கழிந்தன - கண்ணினுள் மணி யூடும் நுழைந்து சென்றன; (அல்லாமலும்), புண்ணின் உள் நுழைந்து ஓடிய - புண்ணினுள்ளும் புக்கு ஓடின; (அவை அனைத்தும் இராவணனை ஒன்றும் செய்யக்கூடவில்லை; (ஆகவே), என் செயல் பாற்று - மேற்கொண்டு செய்யக்கூடிய செயல் யாது, என - என்று ஆராய்ந்து, எண்ணி வலித்தனன் என்று அடுத்த செய்யுளுடன் முடிபுகொள்ளும்.

கண்ணின் மணி - 'காகத்திரு கண்ணிற் கொன்றே மணி' (திருக்கோ. 7); 'என் கண்ணே கண்ணிற் கருமணியே' (தேவா. 482:1); 'கருவிழியிற் பாவாய் நீ போதாய்' (குறள். 1123); மணலிற் பல: 'மணலிற் பலரால் வாநரத்தின், எண்ணற்கரிய படைத் தலைவர்' (சுந்தர. 602). புந்தியோர் எண்ணின்: 'சான்றோர் உசாப்போல' (யாப். காரிகை).

பி - ம் 1. கலந்தென.

2. எண்ணு; சார்ங்கணை.

3. ஓடின புந்தியோர், ஓடிய புண்ணியர்.

4. எண்ணு நுண்ணிய, எண்ணினுன்விலது; என்செயற்பாற்றென்னுன்.

3831. நாரணன்திரு வுந்தியி னுன்முகன்
பார வெம்படை வாங்கியிப் பாதகன்
மாரி னெய்வனென் றெண்ணி வலித்தனன்
ஆரி யன்னவ னுவி யகற்றுவான்.

ஆரியன் - இராமபிரான், அவன் ஆவி அகற்றுவான் - அந்த இராவணனுடைய உயிரைப் போக்கும் பொருட்டு, நாரணன் - ஸ்ரீமந் நாராயணனுடைய, திருவுந்தியில் நான்முகன் - திரு உந்தியிலே தோன்றிய பிரமதேவனுடைய, பாரம் வெம்படை வாங்கி - பெருமை சான்ற கொடிய சரத்தை எடுத்து, 'இ பாதகன் - இந்தக் கொடியவனுடைய, மாரின் எய்வென - மார்பிலே செலுத்துவேன்' என்று எண்ணி வலித்தனன் - என்று நினைந்து அதனை உறுதி செய்தான்.

நாரணன்; யுத்த. 3826; உரைக் குறிப்புக் காண்க. - திருவுந்தியினான்முகன்; நான்முகன் கரியமாலுந்தி வந்தோன்' (ஔவை. தனிப்.); 'அன்றவன் உந்தி வந்தனமெனத் தோன்றினுல்' (யுத்த. 260); பாரவெம்படை: 'பாரவெஞ்சிலை வீரம் பழிப்பதே' (கிட்கிந்தா. 319). பாதகன்: 'முன்னின்ற பாதகனும் தன் கருத்தே முற்றுவித்தான்' (பெரிய பு. ஏனாதி 40). மார் - மார்பு. வலித்தல் - உறுதியாக நினைதல். ஆரியன் - இராமபிரான்; 'ஆரியன் பிறந்தாக்கினை' (கிட்கிந்தா. 316). அகற்றுவான்: வானீற்று வினையெச்சம்.

பி - ம். 1. நாரநாண் மலர்மேல்வந்த.

2. வாளியை வாங்கினன் பார்த்தனன், வாளியை வாங்கிய பாதகன், வாளியை நோக்குடன் பார்த்திலன்.

3. மார்பிலெய்வல், மார்பினுய்ப்பன்; மதித்தனன். 189

3832. முந்தி வந்துல கீன்ற முதற்பெயர்
அந்த ணன்படை வாங்கி யருச்சியாச்
சுந்த ரன்சிலை நாணிற் றொடுப்புரு
மந்த ரம்புரை தோளுற வாங்கினான்.

முந்தி வந்து - முற்பட்டுத் தோன்றி, உலகு ஈன்ற முதல் பெயர் அந்தணன் - உலகினைப் படைத்த முதல்வன் எனப் புகழ் பெற்ற அந்தணன் ஆன பிரமதேவனுடைய, படை வாங்கி - அத்திரத்தை எடுத்து, அருச்சியா - அருச்சனை வழிபாடு செய்து,

சிலை நாணில் தொடுப்பு உரு - வில் நாணியில் தொடுத்து, சுந்தரன் - பேரழகனான இராமபிரான், மந்தரம் புரை தோள் உற வாங்கினன் - மந்தர பர்வதத்தை ஒத்த தோளிற் பொருந்துமாறு இழுத்தான்.

அந்தணன் - பிரமன். அவன் படை - பிரமாத்திரம். மந்தரம் - மந்தர மலை. சுந்தரன் : அழகன். ; 'அல்லை யாண்டமைந்த மேனி யழகனும்' (அயோத்தி. குகப். 42).

பி - ம். 1. முந்து ; முதற்பொருள்.

2. படையாங்கு.

3. சுந்தரச் ; தொடுக்குரு, தொடுத்துடன். 190

3833. புரஞ்சு டப்பண் டமைத்தது பொற்பணை
மரந்து ளைத்தது வாலியை மாய்த்துள
தரஞ்சு டர்சுடர் நெஞ்ச னரக்கர்கோன்
உரஞ்சு டச்சுட ரோன்மக னுந்தினன்.

புரம் சுட பண்டு அமைத்தது - முப்புரத்தைச் சுட்டெரிப்பதற்கு முன்னர் அமைக்கப் பெற்றதும், பொன் பணை மரம் துளைத்தது - அழகிய கிளைகளையுடைய மராமரத்தைத் துளைத்ததும், வாலியை மாய்த்துளது - வாலியைக் கொன்றதும் ஆன அந்த அத்திரத்தை, அரம் சுட - அரம் தாக்க ; (அச்சமின்றி மகிழ்வுடன்), சுடர் - ஒளிர்கின்ற, நெஞ்சன் - (கடினமான) உள்ளம் படைத்த, அரக்கர் கோன் - அரக்கர் தலைவனான இராவணனுடைய, உரம் சுட - மார்பினைத் தாக்குமாறு, சுடரோன் மகன் உந்தினன் - சூரிய வழித்தோன்றலான இராமபிரான் விடுத்தான்.

அரம் சுடச் சுடர் நெஞ்சம் : பகைவரின் படைக்கலத்துக்கு அஞ்சாத நெஞ்சு என்க.

பி - ம். 1. அமைந்தது, அமர்ந்தது ; போர்ப்பணை.

2. மாய்த்தது, மாய்த்துள.

3. அரஞ்சுடர் ; அம்பு வரத்தினல், அம்பத வாற்றலான்.

4. சுடரோன் மகன் தோன்றினன், சுடர் மேனியி னுந்தினன். 191

## அயன்படை இராவணன் மார்பிற் பாய்தலும், அவன் உயிரிழத்தலும்

3834. காலும் வெங்கன லுங்கடை காண்கிலா
மாலுங் கொண்ட வடிக்கணை மாமுகம்
நாலுங் கொண்டு நடந்தது நான்முகன்
மூல மந்திரந் தன்னொடு மூட்டலால்.

மாலும் - திருமாலின் அவதாரமான இராமபிரான், கொண்ட - கைக்கொண்டதாகி, காலும் - காற்றும், வெம் கனலும் - கொடிய தீயும், கடை காண்கிலா - முடிவு காணமுடியாத (விரைவும் கொடுமையும் கொண்ட), வடி கணை - கூரிய அந்த அத்திரமானது, நான்முகன் மூலம் மந்திரம் தன்னொடு மூட்டலால் - பிரமதேவனுக்குரிய பீஜாட்சரத்தைக் கொண்ட மந்திரத்துடன் அபிமந்திரித்து விட்ட அளவில், மா முகம் நாலும் கொண்டு நடந்தது - பெரிய முகங்கள் நான்கினையும் கொண்டு சென்றது.

நான்முகன் படையாதலின் அதற்கேற்ப நான்முகம் கொண்டு நடந்தது எனப்பட்டது. ஒவ்வொரு அத்திரத்துக்கும் பீஜ மந்திரம் என்ற மூலமந்திரம் உண்டு; அதனை உச்சரித்துத்தான் அந்த அத்திரம் விடப்படும். அதுபற்றியே, 'மூலமந்திரம் தன்னொடு மூட்டலால்' எனப்பட்டது என்க. மந்திரம்: 'நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த, மறைமொழி தானே மந்திரம்' (தொல்.செய் 178). பிரமாத்திரம் - சதுமுகன் படை; யுத்த. 589. வருணன்மீது வெகுண்டு இராமபிரான் பிரமாத்திரம் விடுத்ததும், அதன் கொடிய விளைவுகளும் யுத்த. 590இலும், அதனை அடுத்துள்ள செய்யுட்களிலும் காண்க.

பி - ம். 1. காலங் கண்டவர் காண்கிலா நெடு.
2. மேலுங் கொண்டிவ்.
4. முட்டலால்.



3835. ஆழி மால்வரைக் கப்புறத் தப்புறும்
பாழி மாக்கட லும்வெளிப் பாய்ந்ததால்
ஊழி ஞாயிறு மின்மினி யொப்புற
வாழி வெஞ்சுடர் பேரருள் வாரவே.

(அந்த அத்திரம் தன்னுடைய), வெம் சுடர் - கொடிய ஒளியி னால், பேர் இருள் வார - மிக்க இருளை அகற்றுகையில், ஊழி ஞாயிறும் - ஊழி இறுதியில் உதிக்கும் கதிரோனும், மின்மினி ஒப்புற - மின்மினியை நிகர்த்துக் காணப்பட, மால் ஆழிவரை - பெரிய சக்கரவாள கிரிக்கு, அப்புறத்து - அப்புறத்துள்ள, அப்பு உறும் - நீர் நிறைந்த, பாழி மா கடலும் - வலிய பெரிய கடலும்; (பெரும்புறக் கடலும்), வெளி பாய்ந்தது - வெளிப்பாய்ந்தது. ஏ, ஆல், வாழி: அசைகள்.

ஆழி மால்வரை - சக்கரவாள கிரி; 'ஆழி மால்வரை' (யுத்த. 550); 'ஆழியங்கிரி' (யுத்த. 1218). ஊழி ஞாயிறு - யுகமுடிவில் தோன்றி உலகை யழிக்கும் கதிரோன். இருள் வார - இருளைக் கவர. ஞாயிறு - சூரியன்; 'ஞாயிறன்ன வெந்திற லாண்மையும்' (புறநா. 55). அப்புறும் பாழிமாக் கடல் - பெரும்புறக் கடல்; 'மரபின் மாபெரும் புறக்கடல் மஞ்சன மருவி' (யுத்த. 134). 'அண்டத்தைப் பொதுத் தப்புறத் தப்பின லாடும்' (யுத்த. 133)' மின்மினி: 'மின்மினி ஒளியின் மாயும் பிறவியை வேரின் வாங்க; (யுத்த. 441).

பா - ம். 1. அப்புறம், அப்புறப்.

2. மால்வரையும்; பாய்தலால்.

3. மின்மினி யொத்தவால், ஒப்புறும்.

4. சுடர்ப் பேரிருள். 193

3836 அக்க ணத்தி னயன்படை யாண்டகை
சக்க ரப்படை யோடுந் தழீஇச்சென்று
புக்க தக்கொடி யோனுரம் பூமியும்
திக்க னைத்தும் விசும்புந் திரிந்தவே.

அக்கணத்தின் - அந்தக் கணத்தில், அயன் படை - பிரமாத் திரமானது, ஆண் தகை - ஆடவரிற் சிறந்தவனான இராமபிரா னுடைய, சக்கரம் படையோடும் - ஆழிப்படையுடனே, தழீஇ சென்று - தழுவிப்போய், அ கொடியோன் - அந்தக் கொடியவனான இராவணனுடைய, உரம் புக்கது - மார்பில் நுழைந்தது; (அப்

16

போது), பூமியும் - நிலமும், அனைத்து திக்கும் - எல்லாத் திசைகளும். விசும்பும் - ஆகாயமும், திரிந்த - சுழலலுற்றன. ஏ : அசை.

முதலடி முற்றுமோனை. இராவணன் அளவுகடந்த வன்மையுடையன் ஆகலின், அயன் படையுடன் திருமாலின் சக்கரப் படையும்கூடி அவன்மீது பாய்ந்தது எனப்பட்டது. ஆண்டகை : 'ஆண்டகை தேவியுள்ளத் தருந்தவ மனையச் சொல்லி' (சுந்தர. 1253). பிரமாத்திரம் சக்கரத்தாழ்வாரையும் தனக்குத் துணை கூட்டிச் சென்றது என்க.

பி - ம். 1. அயல் நின்ற ; ஆண்டகைச்.

3. புக்கதக் கொடிபோல் ; உரம் போக்கியே.

4. தெரியவே, திரியவே. 194

## வேறு

3837. முக்கோடி வாணாளு முயன்றுடைய
பெருந்தவமு முதல்வன் முன்னாள்
எக்கோடி யெவராலும் வெலப்படா
யெனக்கொடுத்த வரமு மேனைத்
திக்கோடு முலகனைத்துஞ் செருக்கடந்த
புயவலியுந் தின்று மார்பிற்
புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற்
றிராகவன்றன் புனித வாளி.

இராகவன் தன் புனித வாளி - இராமபிரான் விடுத்த தூய அத்திரமானது (இராவணனுடைய), முக்கோடி வாழ்நாளும் - மூன்று கோடி ஆயுளையும், முயன்று உடைய பெரு தவமும் - முயன்று செய்த பெரிய தவத்தையும், முதல்வன் - முதற்கடவுளான பிரமதேவன், முன் நாள் - முன் காலத்தில், 'எக்கோடி எவராலும் - முப்பத்து முக்கோடி தேவர்களில் எந்த வரிசையிற் சேர்ந்தவராலும், வெலப்படாய் - நீ வெல்லப்படமாட்டாய்', என கொடுத்த வரமும் - என்று தந்த வரமும், ஏனை - மற்றும், திக்கு ஓடும் - திசைகளோடும், அனைத்து உலகும் - எல்லா உலகத்திலும், செரு கடந்த - போரினால் வென்ற, புயம் வலியும் - புயவலியையும்,

தின்று - அழித்துவிட்டு, மார்பில் புக்கு - (அவனுடைய) மார்பில் நுழைந்து, ஓடி - உடலெங்கும் சுற்றி, உயிர் பருகி - உயிரைக் குடித்துவிட்டு, புறம் போயிற்று - வெளிச் சென்றது.

இக்கவியில் திரிபு என்னும் சொல்லணி காண்க. எக்கோடி எவராலும் என்பதற்கு உலகில் எந்தக் கோடியில் அல்லது ஓரத்தில் உள்ள யாவராலும் எனினும் ஒன்றும். முக்கோடி வாணாள்: 'மூவ்வகை யுலகுமான மூன்றரைக் கோடி யாண்டும், எவ்வகைப் பகையும் வெல்லும் சந்திர வாளு மீந்தான்' (உத்தர. வரையெடுத்த. 75). பெருந்தவம், முயன்றே புரிதல் வேண்டு மாதலின், முயன்றுடைய பெருந்தவமும் எனப்பட்டது; 'செய்தவ மீண்டு முயலப் படும்' (குறள். 265) என்றது காண்க. முயலப்படும் என்றாரே யன்றி, அந்த முயற்சியினால் மட்டும், 'வேண்டிய வேண்டியாங் கெய்திடாது' என்ற தொனியும் இங்குக் காணலாம்; 'கர்மண்யே வாதிகாரஸ்தே மாபலேஷு கதாசன' (பகவற்கீதை) என்றபடி, பலன் அளிப்பவன் இறைவன் என்பது புலப்படும்; 'அரக்கனுக்கு முக்கோடி யரைக்கோடி வாணாளு மளித்து' (உத்தர. வரையெடுத்த. 76). இங்கு மூன்றரைக்கோடி வாழ்நாள் உதவினபோதும், தீயசெயலே புரிபவன் ஆதலின் அவன் வாழ்நாளைக் குறுக்கி அரைக் கோடியாகத் திருமால் செய்ததாக உத்தரகாண்டம் வரையெடுத்த படலம் 79—82-ல் காண்க. முக்கோடி யென்றே இங்குக் கூறப்பட்டதெனினும் மூன்றரைக்கோடி ஆயுள் என்றே கொள்க.

பி - ம். 1. பெருவரமும்; முதல்வர்தாமே, முனிவர்தாமே, முனைவர்தாமே.
2. யாரானும்; வெலப்படான், வெலப்படாது; மேன்மை.
3. திக்கோடி; எவ்வுலகும்; பெருவலியும். 195

## இராவணனைக் கொன்ற அம்பு மீண்டு இராமபிரானுடைய ஆவத்திற் புகுதல்

3838. ஆர்க்கின்ற வானவரு மந்தணரு
முனிவர்களு மாசி கூறித்
தூர்க்கின்ற மலர்மாரி தொடரப்போய்ப்
பாற்கடலிற் றூய்நீ ராடித்

தேர்க்குன்ற விராவணன்தன் செழுங்குருதிப்
பெரும்பரவைத் திரைமேற் சென்று
கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப்புட்
டிலினடுவட் கரந்த தம்மா.

ஆர்க்கின்ற வானவரும் - (உவகையால்) ஆரவாரம் செய்கின்ற தேவர்களும், அந்தணரும் - அந்தணரும், முனிவர்களும் - இருடிகளும், ஆசி கூறி - ஆசீர்வாதம் செய்து, தூர்க்கின்ற - பூமியை) நிரப்பிவிடுமாறு மிகுதியாகப் பொழிகின்ற, மலர் மாரி - பூ மழையானது, தொடர போய் - பின்தொடரச் சென்று, பால் கடலில் - திருப்பாற்கடலில், தூய் நீராடி - தூய்மையாக நீராடி (திரும்பி), குன்றம் தேர் - மலைபோன்ற தேரையுடைய, இராவணன் தன் - இராவணனுடைய, செழு குருதி - செழிப்பான உதிரம் நிறைந்த, பெரு பரவை திரைமேல் சென்று - பெரிய கடலின் அலைமீது போய், கார் குன்றம் அனையான் தன் - கரிய மலையை ஒத்தவனான இராமபிரானுடைய, கடுகணை புட்டிலின் நடுவண் கரந்தது - கடும் வேகமுள்ள அம்பு புட்டிலின் நடுவே சென்று ஒளித்தது. அம்மா : வியப்பிடைச்சொல்.

வானவர் ஆர்த்தது, 'பெருங் கண்டகனான இராவணன் தொலைந்தான் என்பது கருதி, 'பனிக்கற் சுரத்து' (சுந்தர. 544) எனத்தொடங்கும் செய்யுள் இங்குக் காண்க. இராமபிரான் விடுத்த வாளி இராவணனுடைய மார்பினை ஊடுருவிச் சென்று அலை கடலிற் படிந்து பின்னர் இராகவனுடைய அம்புப் புட்டிலிலேயே வந்து தங்கிற்று என்று அதன் பெருமை கூறப்பட்டது. மார்பினை ஊடுருவி இரத்தக்களரி செய்து உயிரைக் கவர்ந்த வாளி புனித வாளி யாகுமோ எனின், இராமபிரான் துட்டநிக்கிரக சிட்டபரிபாலனத்தின் பொருட்டே திருமால் அவதாரமாகத் தோன்றினனாதலினாலும், கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ் களைகட் டதனொடு நேர்' (குறள். 550); என்று கூறியிருத்தலானும், அந்த வாளி புனித வாளியே என்க; மற்றும், இராமபிரான் வாளிபட்டிறந்த இராவணனுக்கு மீட்டும் பிறவியின்றாகலின் அது புனிதமே என்க. இராமபாணம் திரும்பவும் புட்டிலுட் சென்றது, பால. 426, 1390; கிட்கிந்தா. 5, 153; தக்க

யாகப்பரணி 163 உரையும் விளக்கமும் இங்கு மேற்கோள் காணத் தக்கது.

பி - ம். 1. ஆர்க்கின்ற வமரர்களும்; முனிவரரு மந்தணரும்.

2. அலர்மாரி; சொரியப்.

3. நீர்க்கின்ற, போர்க்கின்ற, தேர்க்கின்ற; பெருங்குருதிச் சேழுந்.

4. நடுவும். 196

இங்கு இராவணன் வதைப் படலம் முற்றிற்று என்று சில ஏடுகளில் காணப்படுகின்றது.

## தலைகீழாக இராவணன் விழுதல்

3839. கார்நின்ற மழைநின்று முருமுதிர்வ
வெனத்திணிதோட் காட்டி னின்றும்
தார்நின்ற மலைநின்றும் பணிக்குலமு
மணிக்குலமுந் தகர்ந்து சிந்தப்
போர்நின்ற விழிநின்றும் பொறிநின்று
புகையோடுங் குருதி பொங்கத்
தேர்நின்று நெடுநிலத்துச் சிரமுகங்கீழ்ப்
படவிழுந்தான் சிகரம் போல்வான்.

சிகரம் போல்வான் - அரக்கர்க்குச் சிகரம் போன்றவனான இராவணன், கார் நின்ற - கருமை அமைந்த, மழை நின்றும் - மேகத்திலிருந்து, உரும் உதிர்வ என - இடி உகுவது போன்று, திணி - வலிய, தோள் காட்டின் நின்றும் - தோள் தொகுதியினின்றும், தார் நின்ற - மாலை அணியப்பட்ட, மலை நின்றும் - மலை போன்ற மார்பினின்றும், பணி குலமும் மணி குலமும் - அரதனத் தொகுதிகளும் ஆபரணத் தொகுதிகளும், தகர்ந்து சிந்த - உடைந்து சிதறவும், போர் நின்ற - போரில் நின்ற, விழி நின்றும் - விழியிலிருந்து, பொறி நின்று - தீப்பொறி வெளிப்பட்டு நின்று, புகையோடும் குருதி பொங்க - புகையுடனே உதிரம் பொங்கவும், தேர் நின்று - தேரிலிருந்து, நெடு நிலத்து - அகன்ற பூமியிடத்து, சிரம் முகம் கீழ்பட விழுந்தான் - தலையுடன் கூடிய முகம் கீழ்ப்பட (குப்புற) விழுந்தான்.

இருபது தோள்கள் இராவணற்குண்டாகலின் தோட்காடு எனப்பட்டது. தார் நின்ற மலை - மாலை யணியப் பெற்ற மார்பு. பணி - இரத்தினம். அணி - ஆபரணம். போர் நின்ற விழி - இறந்துபட்ட நிலையிலும் உக்கிரம் மாறாது நின்ற விழி. (ஒப்பு); 'சிறுவனை நோக்கியும் சிவப்பானுவே' (புறநா. 100); வாழ்நாள் முழுவதும் ஆணவம் தடிக்கப் பெற்றுப் பலரையும் வருத்தி, மற வழியில் சென்று தலைகீழாக நின்ற இராவணன் என்று காட்ட, அவன் மரித்துக் கிடந்ததும் சிரமுகங் கீழாக என்று கூறிய நயம் காண்க.

பி - ம். 1. கார் நின்று ; அதிர்வ, அதிர்ந்த, அதிர்ப்ப.

2. மலை நின்ற ; தளர்ந்து.

3. வழி நின்று, வழி நின்றும், விழ நின்றும் ; பொறி நின்ற, பொறை நின்று, பொங்கித்.

4. பேர் நின்று ; நிலத்தின் முகங்கள், நிலந்துச் சினமுகம். 197

இங்கு 'வீடணன் மண்டோதரி புலம்புறு' படலம் என்று சில பிரதிகளில் உள்ளது.

## இராவணனுடைய முகம் பொலிவுற்றிருத்தல்

3840. வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க
மனமடங்க வினையம் வீயத்
தெம்மடங்கப் பொருதடக்கைச் செயலடங்க
மயலடங்க வாற்றல் தேயத்
தம்மடங்கு முனிவரையுந் தலையடங்க
நிலையடங்கச் சாய்த்த நாளின்
மும்மடங்கு பொலிந்தனவம் முறைதுறந்தா
னுயிர்துறந்த முகங்க ளம்மா.

வெம் மடங்கல் - கொடிய சிங்கம், வெகுண்டனைய - சினந்தாற் போன்ற, சினம் அடங்க - வெகுளி அடங்கவும், மனம் அடங்க - மனம் ஒடுங்கவும், வினையம் வீய - சூழ்ச்சிகள் அழியவும், தெவ் மடங்க - பகைவர் ஒடுங்குமாறு, பொரு தடகை செயல் அடங்க -

போர் புரிய வல்ல பெரிய கரங்களின் செயல் ஓயவும், மயல் அடங்க - (சீதைமீது கொண்ட) காமப்பித்துத் தீரவும், ஆற்றல் தேய - வலி மாயவும், உயிர் துறந்த - உயிர் நீங்கப் பெற்ற, அம் முறை துறந்தான் - அந்த நெறி முறையை விட்டவனுன இராவண னுடைய, முகங்கள் - (பத்து) முகங்களும், தம் அடங்கு - தமக்குள்ளே அடங்கி ஒழுகிய, முனிவரையும் - முனிவரையும், தலை அடங்க நிலை அடங்க - தலை தாழவும் நிலை தளரவும், சாய்த்த - முறியடித்த, நாளின் - நாளினும், மும்மடங்கு பொலிந்தன - மூன்று மடங்கு விளக்கமுற்று நின்றன. அம்மா : வியப்பிடைச் சொல்.

வெம் மடங்கல்; 'வெம்மடங்கலை யுன்னி வெதும்புவாள்' (சுந்தர. 348); சின மடங்க மன மடங்க; (ஒப்பு) : 'சினமிறக்கக் கற்றுலும் சித்தியெலாம் பெற்றுலும், மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே' (தாயு. பராபரம். 169); வினையம் - சூழ்ச்சி; 'வினைய மீதல்ல தில்லை' (ஆரணிய. 274). தெம்மடங்க - தெவ் மடங்க; 'தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே, மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்' (நன். மெய்யீறு. 33); 'தெம்மடங்கிய சேணிலங்கேகயன்' (சுந்தர. 348); தம்மடங்கு - தமக்குள் படிந்து நின்ற. மும்மடங்கு பொலிந்த; 'மும்மடங்கு பொலிந்த முகத் தினன்' (சுந்தர. 348).

பி - ம். 2. பொருந்தடங்க; மயலடங்கர.

3. தலையடங்கு, தலையடங்கா; சாய்ந்தவேனும், சாய்ந்தவேனும், சாய்த்தவேலும்.

198

இங்கு அதிகப் பாடல் :—

மாறுபடத் தேவர்களை யேவல்கொளும்
வாளரக்கன் மடிய வன்னுன்
ஏறிவரும் பொற்றடந்தேர்ப் பாகனும் பொன்
றிடப்பண்டங் கிமையா முக்கண்
ஈறில்பரன் புகன்ற படிக்கரந் திமைப்பி
னேகியதால் இடையே கூடித்
தேறுதல்செய் துழல்போதில் தீவினைமாய்த்
திடப்போம்நல் வினையேபோல.

## இராமபிரான் தேரினைக் கீழிறக்குவித்து இராவணனைப் பார்த்தல்

3841. பூதலத்தி னுக்குவாய் நீவிடுமிப்
பொலந்தேரை யென்ற போதின்
மாதலிப்பே ரவன்கடவ மண்டலத்தி
னப்பொழுதே வருத லோடும்
மீதலைத்த பெருந்தாரை விசும்பளப்பக்
கிடந்தான்தன் மேனி முற்றுங்
காதலித்த வுருவாகி யறம்வளர்க்குங்
கண்ணுளன் தெரியக் கண்டான்.

'நீ விடும் - நீ செலுத்துகின்ற, இ பொலம் தேரை - இந்தப் பொன்மயமான தேரை, பூதலத்தின் ஆக்குவாய் - பூமியிற் படியும் படி விடுவாயாக', என்ற போதின் - என்று (இராமபிரான் மாதலிக்கு உத்தரவிட்ட) பொழுதில், மாதலி பேரவன் - மாதலி என்னும் பெயரினன் ஆன அந்த வலவன், கடவ - செலுத்த, மண்டலத்தின் - பூமண்டலத்தில், அப்பொழுதே - அக்கணத்திலேயே, வருதலோடும் - (தேர்) வந்தவளவில், தன் மேனி முற்றும் - தன் மேனி முழுவதும், (கண்டவர்கள்), காதலித்த உருவாகி - கண்ணுற்றவர்கள் ஆசை கொள்ளத்தக்க எல்லா இலக்கணங்களும் பொருந்தப் பெற்று, அறம் வளர்க்கும் கண்ணுளன் - தருமத்தை வளர்க்கின்ற கருணையை யுடையவனான இராமபிரான், மீது அலைத்த - மேலே அலை மோதிக் கொண்டுள்ள, பெரு தாரை - மிக்க உதிரப் பெருக்கு, விசும்பு அளப்ப - ஆகாயம் வரையில் செல்ல, கிடந்தான் - விழுந்து கிடந்தவனான இராவணனை, தெரிய கண்டான் - விளங்கப் பார்த்தான்.

இனி, 'மேனி முற்றும் காதலித்த உருவாகித் தெரியக் கண்டான்' என்பதற்கு, தன் உடல் முழுதும் தன்னால் காதலிக்கப் பட்ட ராகத்தின் உருவாய் விளங்கக் கண்டான் என்பாரும் உளர். ராகம் - காதல். சிகப்பு நிறம் - சிலேடை. உதிர வெள்ளத்தில் கிடந்ததால் இராவணனுடைய அநுராகமே விழுந்து கிடந்தது என்னுமாறு கிடந்தான் என்க; மற்றும், 'காதலித்த உருவாகி' என்பதற்கு யார் யார் எந்த உருவில் விரும்புகின்றாரோ அந்த

உருவில் காட்சி தந்தருளும் எனினுமாம். இங்கு, 'யோயோ யாம்யாம்' (பகவற்கீதை. 7 : 21)ம், 'யாதொரு தெய்வம் கொண்டீர்' (சிவ. சிந்தி. 2 : 25)யும் காண்க. 'அறம் வளர்க்கும் கண்ணுளன்' கிட்கிந்தா. 360 ; சுந்தர. 1123 ; பால. குலமுறை. 20 ; ஆரணிய. 50 ; யுத்த. 1354. கண்ணுளன் : 'கண்ணுளா வீதென் கருத்து' (அற்புத அந்தாதி. 72).

பி - ம். 1. பூதலத்ததாக்குவாயாகவினிப், பூதலந்ததாக்குவாயாமினியிப்.
3. மிதலத்த ; பெருஞ்சோரி ; விசும்பலேச, அலச, அளக்க.
4. அறங் காக்கும். 199

## தேரை இந்திரனிடம் கொண்டுபோமாறு மாதலியை அனுப்பிவிட்டு, இராமபிரான் இராவணனைச் சென்று காண்டல்

3842. தேரினை நீ கொடுவிசும்பிற் செல்கென்ன
மாதலியைச் செலுத்திப் பின்னர்ப்
பாரிடம் தினினணுகித் தம்பியொடும்
படைத்தலைவ ரெவருஞ் சுற்றப்
போரிடைமீண் டொருவருக்கும் புறங்கொடாப்
போர்வீரன் பொருது வீழ்ந்த
சீரினையே மனமுவப்ப வுருமுற்றுந்
திருவாளன் தெரியக் கண்டான்.

'நீ தேரினை கொடு விசும்பில் செல்க - நீ தேரைக் கொண்டு விண் படர்க', என்ன - என்று சொல்லி, மாதலியை செலுத்தி - மாதலிக்கு விடை கொடுத்து, பின்னர்-பின்பு, பார் இடம் மீதினின் அணுகி - பூமியின்மீது கிட்டி, திருவாளன் - திருமகள் கணவனான இராமபிரான், தம்பியொடும் - தம்பியான இலக்குவனுடனே, படை தலைவர் எவரும் சுற்ற - சேனைத் தலைவர் அனைவரும் புடைசூழ, போர் இடை மீண்டு - இது காறும் போர்க்களத்தினின்று பின் வாங்கி, ஒருவருக்கும் புறம் கொடா - ஒருவருக்கும் புறமுதுகு

காட்டாத, போர் வீரன் - போர் வீரனுன இராவணன், பொருது வீழ்ந்த - போர் புரிந்து விழுந்து கிடந்த, சிரினையே - சிறந்த நிலையையே, மனம் உவப்ப - (தன்) உள்ளம் உவகை யெய்தும்படி, உரு முற்றும் தெரிய கண்டான - அவனுடைய மேனி முழுதும் விளங்கப் பார்த்தான்.

செல்க எல என்பது அகர ஈறு குறைந்தது. பாரிடம் - பாராகிய இடம் என்க. 'போரிடை மீண்டு ஒருவருக்கும் புறங் கொடாப் போர்வீரன்' என்றது தான் உளனுய காலத்து இராவண னுடைய அளவுகடந்த பராக்கிரமத்தைக் குறித்து நின்றது. பொருது வீழ்வதில் சீர் யாது என்பர். பல்லோராலும் புகழப்பட்டு வீரசுவர்க்கம் அடைதல்; 'புதுவது வந்த மகளிர்க்கு, வதுவை சூட்டிய வான்படர்ந்தோரே' (தொல். புறத். 72. உரை) 'அரும் பெறலுலக நிறைய, விருந்துபெற் றனராற் பொலிக நும்புகழே' (புறநா. 62); 'தற்கொள் பெருவிறல் வேந்துவப்பத் தானவற், கொற்கத் துதவினு னுகுமாற் பிற்பிற், பலர் புகழ் செல்வந் தருமாற் பலர் தொழ, வானக வாழ்க்கையு மீயுமா லன்னதோர், மேன்மை யிழப்பப் பழிவருவ, செய்பவோ, தானேயும் போகும் உயிர்க்கு' (தொல். புறத். 727 உரை மேற்கோள்).

பி - ம். 1. மாதலியுஞ் சென்ற.
2. பாரிடைப் போயினிது; படைத் தலைவர் பலரும்.
3. புறங்கொடாத் தீரனையே.
4. திருமார்பன். 200

இச் செய்யுள் சில ஏட்டுப் பிரதிகளில் இல்லை.

## இராவணனுடைய தலை முதலிய உறுப்புக்களின்மீது வாநரங்கள் ஏறிக் குதித்தல்

3843. அலைமேவுங் கடல்புடைசூ ழவனியெலாங்
காத்தளிக்கு மடற்கை வீரன்
சிலைமேவுங் கடுங்கணையாற் படுகளத்தே
மனத்தீமை சிதைந்து வீழ்ந்தோன்

தலைமேலுந் தோண்மேலுந் தடமுதுகிற்
படர்புயத்துந் தாவி யேறி
மலைமேனின் றுடுவபோ லாடினவால்
வாநரங்கள் வரம்பி லாத.

அலை மேவும் - அலை பொருந்திய, கடல் புடைசூழ் அவனி எலாம் - கடலாற் சூழப்பட்ட பூமண்டலம் முழுதும், காத்து அளிக்கும் அடல்கை வீரன் - புரந்தளிக்கின்ற வலிய கரங்களையுடைய ஆண் மகனான இராமபிரானுடைய, சிலை மேவும் - வில்லில் அமைந்த, கடு கணையால் - கொடிய அம்பினாலே, படுகளத்தே - போர்க்களத்தே, மனம் தீமை சிதைந்து - உள்ளத்தின்கண் குடியிருந்த தீய செயலழிந்து, வீழ்ந்தோன் - இறந்து கிடந்தவனான இராவணனுடைய, தலைமேலும் - தலைகளின் மீதும், தோள் மேலும் - தோள்மேலும், தட முதுகில் - பெரிய முதுகின் மீதும், படர் புயத்தும் - பரந்த புயத்தின்மீதும், தாவி ஏறி - தாவி ஏறி, வரம்பு இலாத - வரம்பற்றனவான, வாநரங்கள் - குரங்குகள், மலை மேல் நின்று ஆடுவ போல் - மலையிலிருந்து கூத்தாடுவன போல, ஆடின - கூத்தாடின. ஆல்: அசை.

பி - ம். 3. பிடர்ப் புறத்தும்; தாவித்தாவி.
4. மலைமேல்; நின்றுடின. 201

சில பிரதிகளில் முன்னிரண்டடியில், 'புலைமேலுஞ் செலற் கொத்துப் பொது நின்ற செல்வத்தின் புன்மைத் தன்மை, நிலை மேலு மினி யுண்டோ நீர்மேலைக் கோலமெனு நீர்மைத் தன்றே'.

இராவணன் மார்பிற் பாய்ந்த திக்கயத்தின் தந்தம் முதுகில் அணிபோல் விளங்க இராமபிரான் காணுதல்

3844. தோடுழுத நறுந்தொடையற் றுகையுழுத
கிளைவண்டின் சுழியத் தொங்கற்
பாடுழுத படர்வெரிநின் பணியுழுத
வணிநிகர்ப்பப் பணைக்கை யானைக்

கோடுழுத நெடுந்தழும்பின் குவைதழுவி
யெழுமேகக் குழுவின் கோவைக்
காடுழுத கொழும்பிறையிற் கறை கழன்று
கிடந்தனபோற் கிடக்கக்கண்டான்.

தோடு உழுத - அகவிதழுடன் கூடிய, நறு தொடையல் - நறுமணமுள்ள மலரால் தொடுக்கப்பட்ட, தொகை உழுத - தொகுதிகளில் கிண்டிக் கிடக்கும், (பல சாதிகளான) கிளை - பிளவுகளைக் கொண்ட, வண்டின் சுழியல் தொங்கல் - வண்டுகள் வந்து படிகின்ற சுழியல் என்ற மாலைகள், பாடுழுத - பக்கங்களிற் படியப்பெற்ற, படர் - விரிந்த, வெரிந் - முதுகு, இன் பணி உழுத - இனிய வேலைத்திறம் அமைந்த, அணி நிகர்ப்ப - அணிகலத்தை ஒக்குமாறு, பணை கை - பருத்த கையையுடைய, யானை கோடு உழுத - (திக்) வேழத்தின் கொம்பு (தாம்) குத்தி உழுவதனால் தோன்றிய, நெடு தழும்பின் குவை தழுவி - நீண்டகன்ற தழும்பின் தொகுதியைப் பொருந்தி, எழும் மேகம் குழுவின் - எழுகின்ற மேகத்திரளின், கோவை-வரிசையாகிய, காடு - காடு, உழுத-உலவும் தன்மையதான, கொழும் பிறையில் - வளவிய பிறையினுடன், கறை கழன்று - களங்கம் நீங்கப்பெற்று, கிடந்தனபோல் கிடக்க கண்டான் - கிடந்தனபோன்று கிடப்பக் கண்டான்.

தொடையல் - தொடுக்கப்பட்ட மலர் மாலை; தோள் அலங்கல் என்பர். 'தொடுக்கும் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே' (மீனாட்சி பிள்ளைத் தமிழ்) என்ற சிலேடையில் தொடை என்ற பதம் அமைக்கப்பட்டமை காண்க. சுழியல் - முடிமாலை; அல் பெயர் விகுதி. இராவணன் மார்பிற் குத்திய திக்கு யானைகளின் மருப்புக்கள். முதுகின் ஊடே சென்று வெளிப்பட்டுக் கிடப்பவை. பிறைச் சந்திரனையும், அத்தந்தத்தை அடுத்துக் காணப்படும் தழும்பு, பிறையினின்று நீங்கித் தனியே கிடக்கும் களங்கத்தையும் ஒத்திருக்க, இராவணன் முதுகு மேகம்போலும் எனப்பட்டது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. 'பணைக்கை யானைக் கோடுழுத' (யுத்த. இராவணன் வதை. 189 உரைக் குறிப்புக் காண்க. இராவணன் தார் கிடந்த முதுகில் பணி செய்யும் அணி போல எட்டுத் திக்கு யானைகளும் பாய்ந்ததால் எழுந்த தழும்பின் குவைகள், வட்டம் வட்டமாக உதிரத்துடனே சிவந்துள்ளது. ஒரு மேகத்திலே

களங்கமற்ற முழுமதி கோவைப் பழத்திலே முழுகிச் சிவப்பேறி யிருப்பதை ஒத்தது என்றுமாம்.

பி - ம். 1. தோடுழுது; நறுந் தெரியல், தொடையில்; நிணைபடர் சுழியில்,

2. படர்வெள்ளில்; மணியுழுது; நிரைய, நிகர்த்த; பகை நல்யானை.

3. நெடுந் தழும்பும்.

4. கொடும் பிறையின்; சுழன்ற; கிடப்பன. 202

இச் செய்யுளோடு இராவணன் வதைப் படலம் முடிய அடுத்த செய்யுள் முதல் 'மற்றையோர்க்கும்' என்ற பாடல் முடியும் வரையில் மண்டோதரி சோகப் படலம் என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது. மற்றும் சில பிரதிகளில் 'அன்னதோ வென்னு' என்ற செய்யுளோடு, இராவணன் வதைப்படலம் முடிய 'அவ்வகை யருளி வள்ளல்' என்ற பாடலில் மண்டோதரி புலம்புறு படலம் தொடங்குகின்றது.

## வேறு

### இராவணன் வென்றமை தனக்குச் சிறப்பைத் தராதென்று இராமபிரான் புன்சிரிப்புடன் கூறுதல்

3845. தளிரியல் பொருட்டின் வந்த
 சீற்றமுந் தருக்கி னேன்றன்
சிளரிய லுருவி னேடுங்
 கிழிப்புறக் கிளர்ந்து தோன்றும்
வளரியல் வடுவிற் செம்மைத்
 தன்மையு மருவ நின்ற
முளரியங் கண்ணன் மூரன்
 முறுவலன் மொழிவ தானன்.

மருவ நின்ற - (இராவணனை) அணுகுமாறு நின்ற, முளரி அம் கண்ணன் - செந்தாமரை மலர் போன்ற அழகிய நேத்திரங்களை யுடைய இராமபிரான், தளிர் இயல் - தளிர் போன்ற மெல்லிய பண்பு செறிந்த சீதாதேவியின், பொருட்டின் வந்த - பொருட்டுத் தோன்றிய, சீற்றமும் தருக்கினேன் தன் - சினமும் செருக்கும் மிக்க

வனன இராவணனுடைய, கிளரியல் - விளங்கும் தன்மையுள்ள, உருவினோடும் - வடிவினோடும், கிழிப்பு உற - கிழிபட்டு இறந்து போக, இளர்ந்து தோன்றும் - விளங்கித் தோன்றுகின்ற, வளர் இயல் - வளரும் தன்மையுள்ள, வடுவில் - தழும்பினாலே, செம்மைத்து அன்மையும் - (தன் வீரச் செயல்) செம்மையுடைய தல்லாமையையும், (உளத்திற் கொண்டு) மூரல் முறுவலன் - புன் சிரிப்புக் கொண்டவனாய், மொழிவது ஆனான் - (பின்வருமாறு) கூறலானான்.

தளிரியல் பொருட்டின் வந்த சீற்றம் - தன் மனைவியை இராவணன் கவர்ந்து சென்றதால் எழுந்த சினம். அப்பிரானுடைய சீற்றமும் தருக்கும், பரம வைரியான இராவணன் அறுபட்டு வீழ்ந்ததால் தீர்ந்தன என்க. செம்மைத்து - ஒன்றன்பாற் குறிப்பு முற்று. இராவணன் திருமேனியைப் பிளந்த செயல் நடுவு நிலைமையது போலத் தோன்றினும், அவன் முதுகில் அவன் விடுத்த வாளியினால் உற்ற தழும்பைக் கண்டு இராமபிரான் மனம் உளைந்தது என்க. 'இங்குப் புறப்புண்ணணி வடக்கிருந்தோனே' (புறநா. 66) என்ற வரிகள் காணத்தகும். முளரி - தாமரை; தண்டின் முள்ளையுடையது. இதனைக் காரண விடுகுறி என்பர் இலக்கண நூலார்.

பா - ம். 1. சிற்றத்தான்; தரிக்கினன்றன்.

2. குழிப்புறக், கிழிவுறக்.

3. திலகமன்ன செம்மையை மருவி (நின்ற, உலக மன்ன செம்மையை மருவி; வாய்ந்த, கருணைச் செம்மைத் தன்மையு; வதிரிற் செம்மைத் தன்மையும்.

4. முளரியல்.

203

3846. வென்றியா னுலக மூன்று
மெய்ம்மை யான்மேவி னலும்
பொன்றினு னென்று தோளைப்
பொதுவற நோக்கும் பொற்பும்
குன்றியா சுற்ற தன்றே
யிவனெதிர் குறித்த போரிற்
பின்றியான் முதுகிற் பட்ட
பிழம்புள தழும்பி னம்மா.

'உலகம் மூன்றும் - மூன்று புவனங்களையும், மெய்ம்மையான் - உண்மையாக, வென்றியால்-வெல்லும் தொழிலுடன், மேவினாலும்-பொருந்தினாலும், பொன்றினான் - (இராவணன்) இறந்தான், என்று - என்ற காரணம் பற்றி, தோளை - (எனது) தோள் வலியை குறித்து, பொது அற நோக்கும் - சிறப்பாக நோக்கக்கூடிய, பொற்பும்-பொலிவும், இவன் - இவ்வரக்கன், எதிர் குறித்த போரில்-எதிராகக் குறித்து ஆற்றிய போரில்; பின்றியான் - பின்னடைந் தவனாய், (அது காரணமாக), முதுகிற் பட்ட - முதுகில் தைத்த, தழும்பின் உள - தழும்பாக உள்ள, பிழம்பு - பிழம்பினால், குன்றி ஆசு உற்றது அன்றே - குறைந்து குற்றம் பொருந்தியதாகும் அல்லவோ? அம்மா - வியப்பிடைச் சொல்.

வென்றியான் உலகம் மூன்றும் - இச் செய்தி இந் நூலில் பல இடங்களிலும் குறிப்பிட்டுள்ளமை காண்க. பொதுவற - பொதுத் தன்மை நீங்கிச் சிறப்பாக; 'பொலங்கிளர் மானந்தானே பொது வறக் கொடுப்பேன்' (யுத்த. 1617); 'பொதுவற நோக்கிப் பொன் போல்' (யுத்த. 3507); 'உலக மூன்றும் பொதுவறப் புரந்தேன்' (யுத்த. 3155); தோளை நோக்குதல் - வெற்றிக் குறிப்பு. பின்றி யான் - வினையாலணையும் பெயர். தழும்பின் பிழம்பு - தழும்பின் திரட்சி. 'முதுகிற் பட்ட பிழம்பு' (புறநா. 62, 65).

பி - ம். 1. வென்றியால்; வெம்மையின் மேயினானும், மெய்ம்மையின் மெய் யினாலும்.

2. பொன்றியானென்னும், பொன்றியார்கின்ற, பொன்றியானென்று, பொதுவுற; பொற்புக்.

2. குன்றியாசிற்றதன்றே, குன்றியாச் சுற்றதன்றே, குன்றி மாசுற்ற தன்றே; அவன்; குறிப்ப.

4. தழும்புள பிழம்பின்.

204

3847. கார்த்தவீ ரியனென் பானாற்
கட்டுண்டா னென்னக் கற்கும்
வார்த்தையுண் டதனைக் கேட்டு
நாணுறு மனத்தி னேற்குப்

போர்த்தலைப் புறகிட் டேற்ற
புண்ணுடைத் தழும்பும் போலாம்
நேர்த்ததுங் காண லுற்ற
விசனு ரிருக்கை நிற்க.

'கார்த்த வீரியன் என்பானுல் - கார்த்த வீரியார்ச்சுனன் என்பவனுல், கட்டுண்டான் - (இவ்விராவணன்) பிணிக்கப்பட்டான்', என்ன கற்கும் - என்று சொல்லப்பட்ட, வார்த்தை உண்டு - சொல் உண்டு; அதனை கேட்டு - அதனைச் செவிக்கொண்டதனுலேயே, நாண் உறு மனத்தினேற்கு - வெட்கமுற்ற மனத்தையுடைய எனக்கு, போர் தலை - (இவ்வரக்கன்) போரிடத்தே, புறகிட்டு - முதுகு காட்டியதனுல், ஏற்ற - பெற்ற, புண் உடை தழும்பும் - புண்ணினுடைய தழும்பும், நேர்த்ததும் காணல் உற்ற - கண்ணெதிரே காணப்பட்டது; ஈசனுர் இருக்கை நிற்க - சிவபிரானுடைய கைலாசம் நிற்கட்டும். போலாம்: ஒப்பில்போலி.

'முன்னர் இராவணன் கார்த்த வீரியனுற் கட்டுண்டவன்; அஃது ஒன்றே அமையும் நான் இவனுடன் போர் புரியாமைக்கு; அதனின் மேலும், இப்பொழுது முதுகுத் தழும்பும் பெற்றுன்; ஆதலின் எனக்கு நாணம் மிகுகின்றது' என்றுன் இராமபிரான். இனி 'ஈசனுர் இருக்கை நிற்க' என்றது என்னெனின்; அத்தகைய பரிபவத்திற்குள்ளான அரக்கனுடன் நான் பொருது வென்றது எனக்குச் சிறப்பளிக்காது. எனினும் ஈசனுர் கைலையை உயர்த்தி அரக்கன் துன்புற்றதைப் பெரிதாகக் கூறற்கில்லை; அது தெய்வ மலையாதலின் என்க; மற்றும், 'ஈசன் மலை எடுத்தான் என்ற ஓர் பழைய வார்த்தை உண்டு; எனினும் பின் பல காயம் பட்டவன் ஆகலின் அவனைச் சிறந்த அல்லது சமமான வீரன் என்று கூறற்கில்லை என்றுன் இராகவன். கார்த்த வீரியனுல் கட்டுண்டது: 'ஆயிரந் தடக்கையானின் ஊனான்கு கரமும் பற்றி, வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த' (சுந்தர. 464); என்றது கொண்டு காண்க. புறகிடுதல் - முதுகு காட்டல்.

பி - ம். 1. என்பான்கைக்; கேட்கும்.
2. மனத்தினேற்கும்.
3. தழும்பு.
4. ஏற்றமும்; உற்றது; நிற்கும்.

3848. மாண்டொழிந் துலகி னிற்கும்
வயங்கிசை முயங்க மாட்டா
தூண்டொழி லுகந்து தெவ்வர்
முறுவலென் புகழை யுண்ணப்
பூண்டொழி லுடைய மார்பா
போர்ப்புறங் கொடுத்தோர்ப் போன்ற
ஆண்டொழி லோரிற் பெற்ற
வெற்றியு மவத்த மென்றான்.

'பூண் தொழில் உடைய மார்பா-அணிகளைத் தரிக்கும் தொழிலைக் கொண்ட மார்பினை உடைய வீடணனே! ஊண் தொழில் உகந்து - உண்ணும் செயலையே விழைந்து, தெவ்வர் முறுவல் என் புகழை உண்ண-பகைவருடைய புன்னகை என்றன் புகழை இல்லையாக்க, போர் புறம் கொடுத்தோர் போன்ற - போரில் முதுகு காட்டினாரைப் போன்ற, ஆண் தொழிலோரின் - ஆண்மைச் செயலையுடைய இவ்விராவணனால், பெற்ற வெற்றியும்-அடைந்த வென்றியும், அவத்தம் - உண்மையானதன்று; மாண்டு ஒழிந்தது - (ஆதலின் போரில் இராவணன்) இறந்து பட்டதால், உலகில் நிற்கும் - உலகில் அழியாது நிலைபெற்று நிற்கும், வயங்கு இசை - விளங்குகின்ற புகழும், முயங்க மாட்டாது - இனி என்பாற் சார மாட்டாது', என்றான் - என்று கூறினான் இராமபிரான்.

உலகின் நிற்கும் வயங்கிசை: 'நத்தம் போற் கேடும் உளதாகும் சாக்காடும், வித்தகர்க் கல்லாலரிது' (குறள். 235); 'ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது நிற்பதொன் றில்' (குறள். 233); 'வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய, வாழ்வாரே வாழா தவர்' (குறள். 240) என்பன காண்க. முறுவல் - எள்ளல் நகை; 'நகைவர நாணுக் கொண்டான்' (கிட்கிந்தா. 301) என்ற இடத்துப்போல; அபத்தம் என்ற வடசொல் தமிழில் அவத்தம் என நின்றது. வெற்றியும் - இழிவு சிறப்பு.

பி - ம். 1. உலகமேத்த ; வழங்கமாட்டார், முயங்கமாட்டார்.

2. விண்டொழில் ; உயர்ந்த தெவ்வர் நகை செயவுயிரையோம்.

3. தூண்டொழிற் றுறந்த தோளாற்றம் முயிர்க் குதவரேற்ற, தூண் டெழிற் ருெடர்ந்த தோளிற்றம் முயிர்க்குமுதவத் தோற்ற, தூண் டொழிற்றுறந்த தோளின்ருருயிர்க் குதவற்கொத்த, தூண்டொழிற் றுறந்த தோளிற்றருளிய ரேற்றநந்தோற்ற.

4. ஆண்டொழிலறிவு, ஆண்டொழிலழகிற்று, அழகிது, விசைத்தது, அசைத்தது. 206

## வீடணன் கூறத் தொடங்குதல்

3849. அவ்வுரை யுரைப்பக் கேட்ட
வீடண னருவிக் கண்ணன்
வெவ்வுயிர்ப் போடு நீண்ட
விம்மலன் வெதும்பு நெஞ்சன்
செவ்வியிற் ருெடர்ந்த வல்ல
செப்பலே செல்வ வென்று
எவ்வுயிர்ப் பொறையு நீங்கி
யிரங்கிநின் றினைய சொன்னான்.

அவ் உரை உரைப்ப கேட்ட வீடணன் - அத்தகைய சொற்களைச் செவிமடுத்த வீடணன், அருவி கண்ணன் - அருவி போன்று கண்ணீர் பெருகுகின்ற விழிகளை யுடையவனாயும், வெம்மை நீண்ட உயிர்ப்போடு - வெப்பத்துடன் கூடிய நீண்ட பெருமூச்சுடனே, விம்மலன் - விம்மலுடன் கூடியவனாயும், வெதும்பும் நெஞ்சன் - வாடிய மனமுடையவனாயும், 'செல்வ - செல்வனே, செவ்வியில் தொடர்ந்த அல்ல - செம்மையுடன் இயையாதனவாய வார்த்தைகளை, செப்பலே - சொல்லாதீர்', என்று - என்றுரைத்து, எவ் உயிர் பொறையும் நீங்கி நின்று - நித்தியத்வம் பெற்றுப் பற்பல பிறவிகள் எடுப்பதினின்றும் தவிர்ந்து நின்ற வீடணன், இரங்கி இனைய சொன்னான் - இரக்கம்கொண்டு (பின்வருமாறு) இத்தகைய சொற்களைக் கூறலானான். 'வீடணன் கூற்றினை இதனை அடுத்து வரும் ஐந்து கவிகளிற் காண்க.

விம்முதல்: 'விழுதல் விம்முதல்' (சுந்தர. 334); 'நின்றுநின் றுயிர்த்து நெஞ்சம் வெதும்பினான்' (யுத். 1595). உயிர்ப்பொறை:

'உழந்துவிழி பெற்றதொ ருயிர்ப் பொறையும் ஒத்தாள்' (சுந்தர. 554). நின்று : நின்ற என்று செய்ய என்னும் வாய்பாடாக ஆக்கப் பட்டது.

பா - ம். 1. அவ்வுரைக்கிறுதிநோக்கி.

2. உயிர்ப்பொடுங்கி நீண்ட, உயிர்ப்போடு நின்ற.

3. செவ்வியாற்.

4. பொறையினோடு, பொறையு மேங்கி, பொறையினோடும், பொறையு நல்கி. 207

## இராமபிரானுக்கு வீடணன் ஆறுதல் கூறுதலைத் தெரிவிக்கும்

3850 ஆயிரந் தோளி னுனும்
வாலியு மரிதி னைய
மேயின வென்றி விண்ணோர்
சாபத்தின் விளைந்த மெய்ம்மை
தாயினுந் தொழத்தக் காண்மேற்
றங்கிய காதற் றன்மை
நோயுநின் முனிவு மல்லால்
வெல்வரோ நுவலற் பாலார்.

'ஐய - ஐயனே! ஆயிரம் தோளினுனும் - ஆயிரம் தோள்களை உடையவனான கார்த்த வீரியனும், வாலியும் - வாலியும், அரிதின் மேயின வென்றி - அருமையாகப் பெற்ற வெற்றிகள், விண்ணோர் சாபத்தின் விளைந்த - (இராவணனுக்கு) வானோரிட்ட சாபத்தினால் நேர்ந்தன; மெய்ம்மை - இஃது உண்மை; (இப்போது), தாயினும் தொழ தக்காள் மேல் - அன்னையிடத்துக் காட்டிலும் (பெரும் பணிவுகொண்டு) வணங்கத்தக்காளான சீதாதேவியின் மீது, தங்கிய - நிலைபெற்ற, காதல் தன்மை நோயும் - காதலின் இயல்பு கொண்ட காம நோயும், நின் முனிவும் அல்லால் - நின் முனிவும் அல்லாமல், நுவலல் பாலார் - சிறப்பாக உயர்த்துச் சொல்லக் கூடியவராயினும், (அவர்கள்) வெல்வரோ - வெல்லும் வன்மை யுள்ளவரோ? (அல்லர்) என்றவாறு.

ஆயிரம் தோளினன் - கார்த்த வீரியார்ச்சுனன் ; சுந்தர. 464 ; அவன் இராவணனைச் சிறையில் வைத்தது ; சுந்தர. 664 ; பரசுராமனால் தோள்கள் அறுப்புண்டது ; சுந்தர. 456 ; இவன் வரலாற்றினை யுத்த. 1245ன் உரைக் குறிப்பிற் காண்க. வாலி : இவன் இராவணனை வென்று வாலாற் பிணித்தது ; உத்தரகாண்டம். வாலி வாலாற் கட்டுண்ட படலத்துக் காண்க. மற்றும் இச் செய்தி ; சுந்தர. 580, யுத்த. 936 என்ற இடங்களிலும் குறிக்கப் பெற்றுள்ளமையும் காணத்தகும். விண்ணோர் சாபத்தின விளைந்த- பேராற்றல் படைத்தோரேனும் பெருந் தவத்தோரின் வெகுளிக்குட் பட்டால் அழிவர் என்பர். 'அருமை யுடைய வரண் சேர்ந்து முய்யார், பெருமை யுடையார் செறின்' (நாலடி. 164) என்றது காண்க. 'அந்தணாளர் முனியவு மாங்கவர், சிந்தை யாலருள் செய்யவும் தேவரில், நொந்துளாரையும் நொந்துயர்ந் தாரையும், மைந்த வெண்ண வரம்புமுண் டாங் கொலோ'; 'ஆவதற்கும் அழிவதற்குமவர், ஏவ நிற்கும் விதியுமென் றுலினி, யாவதேப் பொருளிம்மையு மும்மையும், தேவரைப்பர வுந்துணை சீர்த்ததே' (அயோத்தி. மந்தரை. 8, 10) இங்குக் குறிக்கொள்ளத் தக்கன. அரிதின் மேயின வென்றி என்றது கொண்டு, இராவணனுடைய அளவுகடந்த ஆற்றல் புலப்படும். தாயினும் தொழத்தக்காள் - சீதாபிராட்டியார் ; அன்னையைக் காதலிப்பவன் போன்ற தீயோன் இராவணன் எனப்பட்டது. 'பேருலகின் மாதாவனையானை மனக் கொடு' (ஆரணிய. 899) என்பது சடாயு கூற்று. 'சேயவ ளெளிய ளென்னுச் சீதையை யிகழலம்மா, தூயவ ளமிர்தி னோடும் தோன்றினு ளென்றும் தோன்றுத், தாயவள் உலகுக் கெல்லாம்' (யுத்த. 762) என்பது மாலியவான் கூற்று. 'தாய் தெரிந்துலகு காத்த தவத்தியைத் தன்னைக் கொல்லும், நோய்தெரிந் துணரான் தேடிக் கொண்டனன்' (யுத்த. 717) என்பது இராவணனுடைய ஒற்றர் கூறியது. 'தாய் தொழத்தக்கவள்' என்பது 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்று அன்னையை முதல் வைத்து ஔவைப் பிராட்டியார் கூறியது கொண்டும், 'அம்மையேயப்பா' என்ற திருவாசகம் கொண்டும் 'மாதுர் தேவோ பவா பிதுர் தேவோ பவா' என்று தைத்திரீய உபநிடதம் கூறியது கொண்டும் அறிக. காதலை நோயாகக் கூறுவது கவி மரபு ; 'காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்'

(குறள். 1227); 'பெண்பால் வைத்த ஆசை நோய்' (யுத்த. 1579) என்று இராவணனே கூறுதல் காண்க. மற்றும் (குறள். 1102, 1159, 1175)ம் காணத்தகும். சாபத்தின் விளைந்த மெய்ம்மை - எதிர்ந்தார் வலிமையிற் பாதி பெறுமாறு வாலி வரம் பெற்றுள்ளமையாலும் மனிதர் முகத்துக்கு மாறான பிராணிகளினால் தீங்கு நேரும் என்று நந்தி சாபமிட்டதனாலும் வாலி இராவணனை வெல்ல முடிந்தது என்க. கார்த்தவீரியன் இராவணனை வெல்லுதற்கான சாப வரலாறு ஆராய்ந்துணரற்பாலது.

பி - ம். 2. அன்றிஇன்னேர்; விளைந்தமென்னூழ், விளைந்த மேன்மை. 208

3851. நாடுள தனையு மோடி
நண்ணலார் காண்கி லாமற்
பீடுள குன்றம் போலும்
பெருந்திசை யெல்லை யானைக்
கோடுள தனையும் புக்குக்
கொடும்புறத் தழுந்து புண்ணின்
பாடுள தன்றித் தெவ்வர்
படைக்கலம் பட்டென் செய்யும்.

'நாடுள தனையும் ஓடி - உலகமுள்ள எல்லை வரையில் விரைந்து சென்று, (அனைவரையும் வென்று) நண்ணலார் காண்கிலாமல் - மற்றும் வெல்லற்குப் பகைவரைக் காணப்பெறாமல், (இவைகளையேனும் தாக்குவேன் என்று), பீடு உள குன்றம் போலும்-பெருமை பொருந்திய மலையை நிகர்த்த, பெருதிசை எல்லை யானை - பெரிய திக்குகளின் எல்லையில் உள்ள யானைகளுடன் (பொர), கோடு - அவ்யானைகளின் மருப்புக்கள், உள தனையும் - உள்ள அளவெல்லாம், புக்கு - (மார்பினூடே) நுழைந்து, கொடு - வளைந்த, புறத்து - முதுகின் வெளிப்புறம் வரையில், அழுந்து - அழுந்துவதனாலாய, புண்ணின் - புண்ணின் தழும்பு, பாடு உளது-இவன் முதுகின்கண் உள்ளது; அன்றி - (இங்ஙனம் இவன் முதுகில் எழுந்த தழும்பிற்குக் காரணம் திக்கு வேழங்களின் தந்தங்களேயன்றி), தெவ்வர் - பகைவர்களது, படை கலம்பட்டு என் செய்யும் - போர்க் கருவிகள் இவன் உடலிற் பட்டுச் செய்யக்கூடியது யாது?

இது கொண்டு திசை யானைகளின் கொம்புகள் படைக் கலத்தைக் காட்டிலும் வலியன என்பது பெறப்படும். குன்றம் - மிக்க உயரம், திண்மை, சலியாத தன்மை முதலியவற்றால் யானைக்கு உவமை. யானைக் கோடுதளையும் புக்கு; யு.நீ. 3829 உரைக் குறிப்புக் காண்க. தெவ்வர் - பகைவர்.

பி - ம். 1. நாடுளதனையுமுற்று ; நலிந்த நாளரி முன்னுக, நவின்றநாளரிமுன்னுக.
2. மாடுளதனையுமுற்றும் வவ்வின ; வலியினனே.
3. கொழும்புறத்து; எழுந்தபுண்கோட், தழும்புண் கொண்ட ; அழுந்தும் புண்ணினின்.
4. இவன் மேற்றேவர். 209

3852. அப்பணை யனைத்து மார்புக்
கணியெனக் கிடந்த வீரக்
கைப்பணை முழங்க மேனு
ளமரிடைக் கிடைத்த காலன்
துப்பிணை வயிர வாளி
விசையினுங் காலின் தோன்றல்
வெப்பணை குத்தி னுலும்
வெரிநிடைப் போய வன்றே.

'அ பணை அனைத்தும் - அந்தத் தந்தங்கள் யாவும், (அவன் மார்பிற்பட்டு முறிந்தவை) மார்புக்கு அணி என கிடந்த - இராவண னுடைய மார்பிற்கு ஆபரணமாக அமைந்து கிடந்தன ; (அவை) மேனுள் - முன் நாளில், வீரம் - வீரத்திற்கடையாளமாக, கைபணை முழங்க-கைச்சங்கம் ஒலிக்க, அமர் இடை-போரிடத்து, கிடைத்த- எதிர்த்து நெருங்கிய, காலன் - யமனுடைய, துப்பு இணை - வலிமை செறிந்த, வயிரம் வாளி - உறுதியான வாளிகளின், விசையினும் - வேகத்தாலும், காலின் தோன்றல் - வாயு குமாரனை அநும னுடைய, வெம் பணை - வெம்மை பொருந்திய, குத்தினுலும் - குத்தி னுலும், வெரிந் இடை போய - முதுகிடம் சென்றன. அன்று, ஏ : அசை.

பணை - தந்தங்கள். துப்பு இணை - வன்மை பொருந்திய. காலின் தோன்றல் வெம்பணைக் குத்தினல் முதுகி னூடுபோயது -

அநுமன் குத்திய குத்தினுல் இராவணன் மார்பில் ஊன்றியிருந்த தந்தங்கள் ஒடியப் பெற்றன என்பது. 'கைக்குத்தது படலுங்கழ னிருதர்க்கிறை கறைநீர், மைக்குப்பையின் எழில் கொண்டொ ளிர் வயிரத்தட மார்பில், திக்கிற்சின மதயானைகள் வயவெம்பணை செருவிற், புக்கிற்றன போகாதன புறமுக்கன புகழின்' (யுத்த. 1131) ம் அதன் உரைக் குறிப்பும் காண்க. வெம்பணை - வெப்பணை யென வலித்தல் விகாரம். வெரிந் - முதுகு; 'அமரர்கோன் விடையதாய் வெரிநின் மேலாய்' (யுத்த. 94).

பி-ம். 1. விரன்.

2. கலந்த, கலந்தான்; நாளில், என்று.

3. துப்பன, துப்பணை; கரனற்றேன்றல்.

4. குத்தினுலே; போயது. 210

3853. அவ்வடு வன்றி யிந்த
வண்டத்தும் புறத்து மான்ற
தெவ்வடு படைக ளஞ்சா
தீவன்வயிற் செல்லிற் றேவ
வெவ்விட மீசன் தன்னை
விழுங்கினும் பறவை வேந்தை
அவ்விட நாக மெல்லா
மணுகினு மணுக லாற்ரு.

'தேவ - பெருமானே! செல்லில் - ஆராயுமிடத்து, அ வடு அன்றி - அந்த(க் கொம்பு பாய்ந்ததனுல் எழுந்த) தழும்பே யல்லாது, வெவ்விடம் ஈசன் தன்னை விழுங்கினும் - கொடிய விட மானது சிவபெருமானை விழுங்கினுலும், பறவை வேந்தை - பறவை கட்கு அரசனுன கருடனை, அவ்விடம் நாகம் எல்லாம் - அந்த விடம் பொருந்திய நாகங்கள் யாவும், அணுகினும் - (துன்புறுத்துமாறு) நெருங்கினுலும், இந்த அண்டத்தும் - இவ்வுலகத்திலும், புறத் தும் - வெளியுலகங்களிலும், ஆன்ற - உயர்ந்த, தெவ் அடு படை கள் - பகைவரைக் கொல்லவல்ல போர்க் கருவிகள், அஞ்சாது - பய மின்றி, இவன் வயின் - (இவனிடம்) ஊறு படுத்துமாறு, அணுகல் ஆற்ரு - நெருங்குதற்கு வல்லமை யுள்ளன ஆகா.

'செல்லுதற் பொருளையுடைய வினைச் சொற்கள் அறிதற் பொருளையும் உடையன' என்பர் ஆதலின், செல்லின் என்பதற்கு ஆராயுமிடத்து என்று பொருள் தரப் பெற்றது. செல்லுதல் - புத்தி செல்லுதல் என்க. படைக்கலம் ஏந்தியவரின் அஞ்சாமையை அசேதனமான படைக்கலத்தின்மீது ஏற்றிக் கூறியது உபசார வழக்கு. வடு: 'நாவினாற் சுட்டவடு' (குறள். 129). தெவ்வடு: 'தெவ் வடு சிலைக்கை யென்சிறுவர் செவ்வியர்' (அயோத்தி. மந்தரை. 46); விடம் ஈசனை விழுங்குதல், கருடனை நாகம் அணுகுதல்; என்ற இவைகள் நிகழா நிகழ்ச்சிகள். 'பாஅல் புளிப்பினும் பகலிருளி னும், நாஅல் வேத நெறிதிரியினும்' (புறநா. 2) என்ற இடத்துப் போல; 'பால் புளித்துப் பகலிருண்டு மாறுபடினும் எக்காலத்திலும் தப்பா சான்றோர் மெய்ம்மொழி' (பு. வெ. மா. 167 உரை). வெவ் விடம்: 'வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்' (சுந்தர. 430).

பி - ம். 1. இன்றி; அண்டத்தின், அண்டத்துப், திறத்தும்; மற்ற, மானத்.
2. படைக்கணஞ்சாது, படைக்கஞ்சாவின்; அவன்; செல்லுமன்றே.
4. மறுகாவெல்லாம்; அடுகினும், அணுகாதன்றே. 211

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

3854. வென்றியாய் பிறிது முண்டோ
வேலைசூழ் ஞால மாண்டோர்
பன்றியா யெயிற்றுக் கொண்ட
பரம்பரன் முதல பல்லோர்
என்றியா மிடுக்கண் டீர்வ
தென்கின்றா ரிவனின் றன்னால்
பொன்றினா னென்ற போதும்
புலப்படார் பொய்கொ லென்பார்.

'வென்றியாய் - வெற்றியோனே! பிறிதும் உண்டோ - வேறாக யாதேனும் உளதோ? வேலை சூழ் ஞாலம் - கடலாற் சூழப்பட்ட பூமியை, ஆண்டு - அக்காலத்தில், ஓர் - ஒப்பற்ற, பன்றியாய் - வராகமாய், எயிற்று கொண்ட - (தன்னுடைய) கோரப் பற்களிற் கொண்ட, 'பரம்பரன் முதல பல்லோர் - பராபரன் முதலான பலரும், யாம இடுக்கண் தீர்வது என்று என்கின்றார் - நாங்கள் (இவனால் நிகழும்) துன்பத்தினின்று விலகுவது என்றைக்கு',

என்று விடாமல் சொல்லிக் கொண்டிருக்கின்றனர், 'உன்னால் இவன் இன்று பொன்றினன் - உன் கையால் இராவணன் இன்று இறந்தான்', என்ற போதும் - என்று சொன்ன போதிலும். பொய் கொல் - இச் செய்தி பொய்யோ, என்பார் - என்று ஐயங் கொள்வாராய், புலப்படார் - வெளியில் காணப்படாமல் உள்ளார்கள்,

பன்றியாய் ஞாலம் எயிற்றுக் கொண்டது; திருமாலின் வராகவதாரத்தில்; ஆரணிய. 58, 60; கிட்கிந்தா. 120; யுத்த. 180. என்றியாமிடுககண தீர்வதெனகின்றூர்; 'மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர், நிசரத கணைகளால் நீறு செய்துமே, கசரததுரகமாக் கடல்கொள் காவலன், தசரதன் மதலையா வருதும் தாரணி' (பால· திருவவ. 22); 'ஆரறத்தினுடன்றி நின்றூரவர், வேரறுப்பன் வெருவன்மின்' (ஆரணிய. 139) என்று திருமாலும் அவன் அவதாரமான இராமபிரானும் முறையே கூறியவை இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. வென்றியா; ஞாலம் வின்டோர், ஞாலமெல்லாம், ஞாலமுண்டோய்.
3. பராபரன்.

3. நிர்வதென நின்றூர்; இவனின்றுன்னூர், இவனை நின்றால், இவனி னுன்னுல்.

4. பொன்றியான்; போது; புலப்பட்டார், பொய்யே யென்பார். 212

## இராமபிரான் விடணனை நோக்கி இராவணனிடத்துப் பகைமைவிட்டு ஈமக்கிரியை செய்க என்று பணித்தல்

3855. அன்னதோ வென்னு வீச
னையமு நாணு நீங்கித்
தன்னதோ ளிணையை நோக்கி
வீடணு தக்க தன்றால்
என்னதோ விறந்து ளான்மேல்
வயிர்த்தல்நீ யிவனுக் கிண்டச்
சொன்னதோர் விதியி னாலே
கடன்செயத் துணிதி யென்றான்.

'அன்னதோ - அப்படியா', என்னு - என்று சொல்லி, ஈசன் - இராமபிரான், ஐயமும் நாணும் நீங்கி - சந்தேகமும் (அதனால்

எழுந்த) வெட்கமும் நீங்கப்பெற்று, தன்வ தோள் இணையை நோக்கி - தன் இரண்டு தோள்களையும் பார்த்து, (பிறகு வீடணனை நோக்கி), 'வீடண - விபீஷண, இறந்துளான்மேல் - இறந்தொழிந்தவன்மீது, வயிர்த்தல் என்னதோ - வயிரம்கொண்டு வாளா இருத்தல் என்ன செயல்; தக்கது அன்று - நீதியாகாது; நீ - நீ, இவனுக்கு - இந்த இராவணனுக்கு, ஈண்ட - விரைவாக, சொன்னதோர் விதியினாலே - நூல்களிற் கூறப்பட்டுள்ள விதியின்படி, கடன் செய துணிதி - (அண்ணனுக்கான) நீர்க்கடன் தீக்கடன்களைச் செய்ய மனம் கொள்வாயாக', என்றான் - என்று கூறினான் (இராமபிரான்). ஆல்: அசை.

ஈசன் - இராமபிரான்; தோளிணை நோக்குதல் - மகிழ்ச்சிக் குறிப்பு. இறந்துளான் மேல், வயிர்த்தல் என்னதோ என மாற்றுக. வயிர்த்தல்: பகைமை கொள்ளுதல்; (வீடணன். 80); கடன - நீர்க்கடன் தீக்கடன். 'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம்' (யுத்த. 3158); இறந்துளான்மேல் வயிர்த்தல்: 'கடுத்த பகையும் கல்லறை கடவாது' என்பது பழமொழி; மரணந்தானி வயிராணி என்றதும் காண்க. விழுந்தழடா வீடண என்பது உலக வழக்கு.

பா - ம். 1. விரன்.

2. அனைய; விடணன் தகர்த்த தன்றால்.

ப். இறந்துளார்மேல், இறந்துளான்பால்; வயிரநி; ஈண்டு. 213

## இராமபிரான் தன்னைத் தொழவந்த தேவர்களைக் காணச் செல்லல்

3856. அவ்வகை யருளி வள்ள லனைத்துல கங்க ளோடும்
எவ்வகை யுள்ள தேவ ரியாவரு மிரைத்துப் பொங்கிக்
கவ்வையிற் றீர்ந்தார் வந்து வீழ்கின்றார் தம்மைக் காணச்
செவ்வையி னவர்முற் சென்றான் வீடண னிதனைச்
[செய்தான்.

வள்ளல் - இராமபிரான், அவ்வகை அருளி - அவ்வாறு (வீடணனை நோக்கி) அருள்செய்து, (இராவணனைக் கொன்றதற்காக, இராமபிரான்மீது), இரைத்து பொங்கி - ஆரவாரித்து மனம்

பூரித்து, கவ்வையில் தீர்ந்தார்-துன்பத்தினின்று விடுபட்டவராய், வந்து வீழ்கின்றார் - வந்து பணிகின்றவரான, அனைத்து உலகங்களோடும் எவ்வகை உள்ளதேவர் யாவர்தம்மையும் - எல்லா உலகங்களிலும் உள்ள பலவகைப்பட்ட தேவர்கள் யாவரையும், காண - காண்பதற்காக, செவ்வையின் - நேர்மையுடன், அவர் முன் சென்றான் - அத்தேவர்கள் முன்னர்ப் போனான்; (அப்போது), வீடணன் இதனை செய்தான் - விபீடணன் இதனைச் செய்தான்.

செய்ததை அடுத்த செய்யுளிற் காண்க. எவ்வகையுள்ள தேவர் என்பதிலிருந்து, இலங்கையில் இராவணனுக் குட்பட்டுப் பணியாற்றிய தேவரையும் கொள்க. 'தேவ ரோடிருந் தரசியல் ஒருமுகம் செலுத்த' (சுந்தர. 1092); 'ஆட்டுவாரமர மாதர் ஆடுவார் அரக்கர் மாதர்' (சுந்தர. 198); கவ்வையில் தீர்தல்: துன்பத்தினின்று நீங்கப்பெறுதல். கவ்வை: 'சவ்வை யின்றாகி வென்றிக் கவிக்குலம் பெற்று வாழ்க' (யுத்த. 4084); 'கவ்வையிலன்பினாற் களிக்கும் சிந்தையான்' (யுத்த. 4151).

பி-ம். 1. அருள ; உலகங்கடோறும்.
2. உரைத்து.
3. கவ்வையிற் றிரிந்தார்.
4. செவ்வயின் றவமுன். 214

இங்கு 'மண்டோதரி புலம்பல்' என்று ஓர் பிரதியில் காணப் படுகிறது.

## இராமபிரான் கட்டளைப்படி ஈமக்கடன் செய்யக்கருதிய விடணன், துயரினால் இராவணன்மீது வீழ்தல்

3857. போழ்ந்தென வரக்கன் செய்த
புன்றொழில் பொறையிற் றாமால்
வாழ்ந்தநீ யிவனுக் கேற்ற
வரன்முறை வகுத்தி யென்னத்
தாழ்ந்ததோர் கருணை தன்னாற்
றலைமக னருளத் தள்ளி
வீழ்ந்தன னவன்மேல் வீழ்ந்த
மலையின்மேன் மலைவீழ்ந் தென்ன.

போழ்ந்தென - பிளந்தாற் போன்று, அரக்கன் செய்த புல் தொழில் - இராவணன் புரிந்த அற்பச் செயல், பொறையிற்று ஆம் - (இப்போது) பொறுக்கத்தக்கது; (இராவணனைப் போலன்றி), வாழ்ந்த நீ - வாழ்ச்சி பெற்ற நீ, இவனுக்கு ஏற்ற - இறந்துபட்டவனுக்குத் தகுதியான ஈம வினைகளை, வரன்முறை வகுத்தி - கிரமப்படி செய்வாய்' என்ன - என்று, தாழ்ந்தது ஓர் கருணை தன்னால் - இரக்கத்தை உணர்த்தும் ஒப்பற்ற கருணையினால், தலைமகன் - இராமபிரான், அருள - அருள் வழங்க, வீழ்ந்த மலையின் மேல் மலை வீழ்ந்தென்ன - சாய்ந்து கிடந்த மலைமீது மலை விழுந்தாற்போன்று, தள்ளி - (துன்ப மிகுதியால்) உந்தப்பட்டு, அவன் மேல் வீழ்ந்தனன் - அவன்மீது வீழ்ந்தான் (வீடணன்). ஆல்: அசை.

போழ்தல்: 'போழ்ந்த துன்பங்கள் புறப்பட' (யுத்த. மீட்சி. 117); பொறையிற்று: ஒன்றன்பாற் குறிப்பு முற்று; வாழ்ந்த நீ; யுத்த. 445 காண்க. இனிப்பன்னெடுங்காலம் அண்ணன் ஆதரவில் வாழ்ந்த நீ எனினுமாம். இங்கு 'வார்க்குறு வனைகழற் றம்முன் வாழ்ந்த நாள், சீர்க்குறவாய்' (யுத்த. 369) என்று வருதல் காண்க. ஏற்ற: தகுதியான இறுதிக் கடன்கள்; மூத்த மகன் இந்திரசித்து ஆற்றவேண்டிய கடன்கள் பலர் சாபத்தால், அவனால் ஆற்றப்படாமல், தம்பி ஆற்றவேண்டிய துக்ககரமான நிலை இங்குக் குறிக்கொள்க. மற்றும், போதுநீ யைய பின்னைப் பொன்றினார்க் கெல்லா நின்ற, வேதியர் தேவன்றன்னை வேண்டினை பெற்று மெய்ம்மை, ஆதிநூன் மரபினாலே கடன்களு மாற்றி யேற்ற, மாதுயர் நகர நண்ணு வண்ணமுங் காத்தி' (யுத்த. 1369); என்ற 'குமரமற்றுன்னைக் கொண்டே, புலத்தியன் மரபு மாயாப் புண்ணியம் பொருந்திற்றென்னு' (யுத்த. 1335); 'ஐய நீ யயோத்தி வேந்தற் கடைக்கல மாகி யாங்கே, யுய்கிலை யென்னின் மற்றிவ் வரக்கரா யுள்ளோ மெல்லாம், எய்கணை மாரியாலே யிறந்து பாழ் படுதும் பட்டாற், கையினா லெண்ணீர் நல்கிக் கடன் கழிப் பாரைக் காட்டாய்' (யுத்த. 1341) என்ற கும்பகன்னன் சொற்களும் இங்கே காணத்தகும். மேலும், 'அரக்கரென்பதோர் பெயர் படைத் தவர்க்கெலா மடுத்த, புரக்கு நன்கடன் செயவுளன் வீடணன் போந்தான்' (யுத்த. 2441); என்ற இலக்குவன் கூற்றும் காண்க. தாழ்ந்ததோர் கருணை: இயல்பாகவே இராமபிரானிடம்

தங்கி நின்ற கருணை எனினுமாம்; 'இரக்கமெங் குகுத்தாயப்பா' (கிட்கிந்தா. 308); என்ற இடத்து 'இயல்பாகவே உன்பால் அமைந்த இரக்கத்தை எங்கு கைவிட்டாய்' என்று வாலீ வினவுதல் காண்க. தள்ளி: தள்ளவென்னும் செயவெனெச்ச மாகக் கொள்ளப்பட்டது. மற்றும் முன்னர் இருந்த பகைமையை நினையாது எளியரிடம் இரங்கிக் காட்ட வேண்டிய கருணையோடு வகுத்தி என்று வீடணனுக்கு அனவயித்தலுமாம். இங்கு, இறந்து மலைபோன்று கிடந்த வாலிமீது 'உடன் பிறப்பெனனுமப் பாசத்தால் பிணிப்புண்டு, நேசத்தாரைகள் சொரிந்த சுக்கிரீவன் அவலநிலை ஒப்பு நோக்கத்தக்கது. மரணுந்தானி வயிராணி என்பது உலகியல்; அங்ஙனம் இருக்கவும், 'வீடணுதக்கதன்ருல், என்னதோ விறந்துளான்மேல் வயிர்த்தல்' என்று இராமபிரான் நினைவுறுத்தும் அளவு வீடணன் தாழ்த்தமை ஆராயத்தக்கது; 'களவிய லரக்கன்பின்னே தோன்றிய கடன்மைதீர, இளையவற் கவித்த மோலி யென்னையும் கவித்தி என்று' (யுத்த. 448). இரந்த வீடணன் அரக்கர் குழுவினின்று விடுதலை பெற்றது ஒருவாறு இந்த வீடணன் செய்கைக்குச் சமாதானம் ஆகலாம். 'விழுந் தழடா விபீஷணு' என்ற உலக வழக்குச் சொல்லையும் காண்க. மலையின்மேல் மலைவீழ்ந்த தென்ன' 'மலைமேலே வந்ததொரு மலை வீழ்ந்த தென்ன வீழ்ந்தான' (உத்தர. திக்குவிசய. 96).

பி - ம். 1. போழ்ந்தன, போழ்ந்தெழ; செய்கை; பொறையினுற்றல், பொறையி னுன்றன்.

2. வழிக்கடன்; வருத்தி.

3. அருளத்தாளின்.

4. விழ்ந்தவன் தன்மேல் வீழ்ந்தான். 215

## வீடணன் புலம்பல்

3858. ஒவரு முலகத் தெல்லா வுயிர்களு மிரங்கி யேங்கத்
தேவரு முனிவர் தாமுஞ் சிந்தையி னிரக்கஞ் சேரத்
தூவரும் பொறையி னுன்ற னறிவினைத் தகைந்து நிற்கும்
ஆவலும் துயருந் தீர வரற்றினன் பகுவா யார.

'ஒவு அரும் உலகத்து எல்லா உயிர்களும் இரங்கி ஏங்க-ஒழித லில்லாத உலகத்துள்ள எல்லா சீவராசிகளும், இரக்கமுற்று

ஏங்கவும், தேவரும் முனிவர் தாமும் சிந்தையின் இரக்கம் சேர-தேவரும முனிவரும் கூட (த்தம்) உள்ளத்தில் இரக்கம் கொள்ள வும், தாஅரும் - அழிதலில்லாத, பொறையினன் - பொறுமை யையுடையவனான வீடணன், தன் அறிவினை, தகைந்து நிற்கும் - தனது பற்றற்ற உணர்வினைத் தடுத்து நிற்கும், ஆவலும் துயரும் தீர - ஆர்வமும் துன்பமும் அகலுமாறு, பகுவாய் ஆர - பிளந்தவாய் நிரம்ப, அரற்றினன் - புலம்பத் தொடங்கினன்.

கண்டகன் ஆன அரக்கன் இறந்தது கண்டு ஆரவாரித்து நின்ற தேவரும் முனிவருமே இங்கு இரக்கம் கொண்டனர் என்றார். இது உலகியல்; உலகியலைப் படம் பிடித்துக் காட்டுபவர் கம்ப நாடர்; முன்னர் 'இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினா ரான' (ஆரணிய. 129) 'இரங்காத அரக்கிமாரும் தளர்ந்தழுதார்' (யுத்த. 2610) என்றும்; 'பாவமும கலுழ்ந்தனபரிவால்' (யுத்த. 2578) என்றும் வருவதும் பிறவும் காண்க. அறிவினைத் தகைந்து நிற்கும் ஆவலும் துயரும்; உயிர்கள் பிறவுயிர்கள்மீது வைக்கும பற்றே துயர்க்குக் காரணம்; இந்தப் பற்றுத்தான் ஜாதஸ்யஹித்ருவோ மிருத்யு' என்பது போன்ற மெய்யுரைகளை உணரமுடியாமற் செய்கின்றது; எனவே அறிவினைத் தகைந்து நிற்கும் எனப்பட்டது. ஆவலும் துயரும்; காரண காரியங்கள். இவைகளை அரற்றியே தீர்க்கவேண்டும்; வேறு வழியில்லை; எனவே ஆவலும் துயரும் தீர எனப்பட்டது. பகுவாய்: பிளந்த வாய்.

பி - ம். 1. ஏவரும்; இரங்க நெஞ்சிற், இரங்கி நெஞ்சிற், எரியி னெஞ்சின்.
2. சிந்தையி னவலங்கூர; இரக்கஞ் செய்த, இரக்கம் செய்ய.
3. பொறையிஹனும்; தாங்கலாந் தரத்த தல்லால்; அறிவினற் றகைந்து நின்ற, தகைக்க நின்ற, அறிவினைத் தகைத்து நிற்கும்.
4. யாவரும்; துயரம்.

219

## வேறு

3859. உன்னுதே யுயிருண்ணு தொருநஞ்சு
சனகியெனும் பெருநஞ் சுன்னைக்
கண்ணாலே நோக்கவே போக்கியதே
யுயிர்நீயுங் களப்பட் டாயே

எண்ணாதே னெண்ணியசொ லின்றினித்தா
னெண்ணுதியோ வெண்ணி லாற்றல்
அண்ணாவோ வண்ணாவோ வசுரர்கள் தம்
பிரளயமே யமரர் கூற்றே

'எண் இல் ஆற்றல் - அளவிறந்த வன்மை சான்ற, அண்ணாவோ அண்ணாவோ - அண்ணனே அண்ணனே! அசுரர்கள் தம் பிரளயமே - அசுரர்க்கு ஊழிக்காலம் போன்றவனே! அமரர் கூற்றே - தேவர்கட்கு யமனே! ஒரு நஞ்சும் - (எந்த விதமான) ஒப்பற்ற விடமும், உண்ணாதே உயிர் உண்ணாது - உட்கொள்ளாமலே உயிரைப் பருகமாட்டாது; (அதற்கு எதிரிடையாக), சனகி எனும் பெரு நஞ்சு - சானகி என்ற பெருவிடமானது, கண்ணாலே நோக்கவே - (நீ) கண்ணாலே கண்டவளவில், உன்னை உயிர் போக்கியதே - உன் உயிரைப் போக்கிவிட்டதே, (இது வியக்கத் தக்கதாகும்); நீயும் - (வீராதி வீரனான) நீயும், களப்பட்டாயே - (சாமானியன்போன்று) படுகளத்தில் மரித்துக்கிடந்தனையே) எண்ணாதேன் - (உன்னைத் தமையன் என்று) பாவியாமல் விடுத்துச் சென்றவனான, என்னுடைய எண்ணியசொல் - ஆராய்ந்து கூறிய சொல்லை, இன்று இனி தான் எண்ணுதியோ - இன்று இப்போதுதான் எண்ணப்போகின்றாயோ?

உண்ணாதேயுயிருண்ணாது : நஞ்சு கண்ணாலே நோக்குதல்; அயோத்தி. 887. சீதாப்பிராட்டியைத் திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி; (யுத்த. 1284); என்றது காண்க. களப்படுதல்: 'கணவன் களப்பட்டான்' (பு. வெ. மா. 8 : 22); எண்ணாதேன் எண்ணிய: முரண்தொடை. பிரளயம் : ஊழி; ஊழிக்காலம் போன்று அழிப்பவன் என்க. 'பெருங்கடல் மூடிப் பிரளயம் கொண்டு' (தேவா. 1199 : 7).

பி - ம். 1. உண்ணாத, உண்ணவொரு, உயிருண்ணா, உண்ணுமொரு; ஒரு மருந்து; சனகியெனு மொருநஞ்சு; உன்றன்.

2. போகியதே, போக்கினாய்; நீயுயிருங்.

3. எண்ணுதியோ.

4. அசுரர்கடற்.

3860. ஓராதே யொருவன்ற னுயிராசை குலமகண்மே
லுற்ற காதல்
தீராத வசையென்றே னெனை முனிந்த முனிவாறித்
தேறி னையோ
போராசைப் பட்டெழுந்த குலமுற்றும் பொன்ற வுந்தான்
பொங்கி நின்ற
பேராசை பெயர்ந்ததோ பெயர்ந்தாசைக் கரி யிரியப்
புருவம் பேர்த்தாய்.

'ஆசை கரி - திசை வேழங்கள், பெயர்ந்து இரிய - நிலைகெட்டு ஓடுமாறு, புருவம் பேர்த்தாய் - புருவ இடம் பெயர்ந்து மீதுறச் செய்தவனே! ஓராதே - உணராமல், ஒருவன் தன் உயிர் ஆசை குலமகள் மேல் உற்ற காதல் - ஒருவனுடைய உயிர்போன்று விரும்பற்குரிய குடிப்பிறந்த வனிதையிடம் பொருந்திய காம விருப்பமானது, தீராத வசை என்றேன் - என்றும் அழியாத பழியை விளைக்கும் என்று பகர்ந்தேன்; (அப்போது நீ), எனை முனிந்த முனிவு ஆறி தேறினையோ - என்னைக் கடிந்த சினம் தணியப்பெற்று, (இப்போது) நான் கூறியதன் உண்மையைத் தெளிந்தாய் கொல்லோ? போர் ஆசைபட்டு எழுந்த - போரிலே விழைவுகொண்டு எழுந்த, குலம் முற்றும் - (அவ்வரக்கரின்) குலம் முழுவதும், பொன்றவும் - இறந்து படவும், பொங்கி நின்ற - மேன் மேல் மிகுந்து நின்ற, பேர் ஆசை பெயர்ந்ததோ - பேராசை ஒழிந்ததோ?'. தான்: அசை.

ஓராதே: பிறர் மனையைக் காமுறுவதால் நிகழ்வனவற்றை ஆராயாமல்; 'பகை பாவம் அச்சம் பழியென்ற நான்கும், இகவாவாம் இல்லிறப்பான் கண்' (குறள். 146); 'எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும், விளியாது நிற்கும் பழி' (குறள். 145); 'அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா, பிறன் தாரம்—நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்' (நாலடி. 82) என்பன காண்க. ஒருவன் றனுயிராசைக் குலமகள்: 'ஈண்டு நீயிருக்க வாண்டங்கெவ் வுயிர்விடு மிராமன' (சுந்தர். 525) என்று சிறிய திருவடி கூறுதல் இங்குக் காணத்தகும்; 'இன்னுயி ரின்றி யேகும் எந்திரப்படிவ

மொப்பான்' (சுந்தர. 566) காண்க. குலமகள் - தன் குலத்துக்கே சிறப்புத் தேடித்தந்த மகள்; 'தன்குலம் தன்னதாக்கி' (சுந்தர. 1272). வசை என்றேன்: யுத்த. 84—87 பார்க்க; மற்றும், 'இசையும் செல்வமு முயர்குலத் தியற்கையு மெஞ்ச, வசையும் கீழ்மையு மீக்கொளக் கிளையொடு மடியா, தசைவில் கற்பினவ் வணங்கைவிட் டருளுதி' (யுத்த. 110) என்பது வீடணன் கூற்று. இராவணன் முனிவு: யுத்த. 111 முதல் 123 வரை காண்க. பின்னிரண்டடிகளில் உள்ள ஓசை நயம் படித்துணர்க. உன் வலியால் ஆசைக்கரி பெயர்ந்ததே யன்றி, உன் பேராசை பெயர்ந்ததில்லையே என்றதன் நயம் ஓர்ந்துணர்க. உன் உடல் உரத்தால் திசைக் கரிகளையெல்லாம் அடக்கிய நீ, உன் மனம் அடங்கக் கற்றுயில்லையே எனப்பட்டது.

பி - ம். 1. ஓராசை; ஒருவன்மேல்; உய்த்துகாதல்; உடைய.

2. நீராசை; பழியென்றே எனை, பழியென்றேதனை, வழியன் றென்றனை.

3. பேராசை; பொங்கா நின்ற, பொன்று நின்ற.

4. பேராராசை; தீர்ந்தனையே; பெயர்ந்ததே; பிறவாசை; கிரியிரிய, முரிய. 218

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

வான்கயிலை யீசனயன் வானவர்கோன்
முதலமரர் வாழ்த்தி யேத்தத்
தான்புவனம் ஒருமூன்றும் தனிபுரந்து
வைகியநீ தாய்சொல் தாங்கிக்
கான்புகுந்த மறைமுதல்வன் விடுங்கடவுள்
வாளியொன்று கடிதின் வந்துன்
ஊன்புகுங்கல் உரமுருவி யோடவுளம்
நாணினையோ உயிரும் உண்டோ?

3861. அன்றெரியில் விழுவேத வதியிவள்கா
ணுலகுக்கோ ரன்னை யென்று
குன்றனைய நெடுந்தோளாய் கூறினே
னதுமனத்துட் கொள்ளா தேபோய்

உன்றனது குலமடங்க வுருத்தமரிற்
படக்கண்டு முறவா காதே
பொன்றினையே யிராகவனூர் புயவலியை
யின்றறிந்து போயி னையே.

'அன்று - அக் காலத்தில், எரியில் - தீயில், விழு - விழுந்த, வேதவதி - வேதவதி என்பவளே, உலகுக்கு ஓர் அன்னை - உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தாயான, இவள் காண் - இவள் காண்', என்று - என்று, குன்று அணைய - குன்றை யொத்த, நெடு தோளாய் - நீண்ட தோளை யுடையவனே! கூறினேன் - சொன்னேன்; அது - அவ்வுரையை, மனத்துள் கொள்ளாதே போய் - மனத்துள் கொள்ளமாட்டாதவனாய்ச் சென்று, உன் தனது குலம் அடங்க - உன்னுடைய குலமெல்லாம் ஒடுங்க, அமரில் உருத்து - போரில் வெகுண்டு, பட கண்டும் - இறந்து வீழ்தலைக் கண்டும், உறவு ஆகாதே - (நீ இராமபிரானோடு) உறவு கொள்ளாமல், பொன்றினையே - இறந்து விட்டாயே; இராகவனார் புயம் வலியை இன்று அறிந்து போயினையே - இராமபிரானுடைய புயவன்மையை இன்று நேரே கண்டுணர்ந்து உயிர் நீங்கப்பெற்றனையே'.

எரியில் விழு வேதவதியிவள்; யுத்த. 88 உரை காண்க. 'உலகுக்கோர் அன்னையென்று' யுத்த. 3851 உரை காண்க. வேதவதி சாபம்; உத்தர. திக்விசயம். 18; வேதவதியே சீதை என்பது; உத்தர. திக்விசயப். 19; குலமடங்க; 'புத்திரர் குருக்கள் நின்' (யுத்த. 317); இங்குக் காண்க. இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

பி - ம். 1. அமருலகுக்கு, உலகுதனக்கு.
2. கொன்றிலாதாய், கொள்ளாதேயே.
3. இன்றுனது.
4. இராகவன்றன்; புயவலியின் றறிந்துதான்; போகின்றாயே. 219

சில பிரதிகளில் இச் செய்யுள் 221 ஆம் பாடலின் பின்னாக இல்லாமல் 'போர் மகளை' என்றதன் பின் உள்ளது.

3862. மன்றன்மா மலரோனும் வடிமழுவாட்
படையோனும் வரங்க ளீந்த
ஒன்றலா தனவுடைய முடியோடும்
பொடியாகி யுதிர்ந்து போன
அன்றுதா னுணர்ந்திலையே யானாலும்
வானாட்டை யணுகா நின்ற
இன்றுதா னுணர்ந்தனையே யிராமனு
ரியாவருக்கு மிறைவ னாதல்.

'மன்றல் - மணமுள்ள, மா மலரோனும் - பெரிய தாமரை மலரில் உள்ளவனான பிரமதேவனும், வடி - கூர்மையான, மழுவாள் படையோனும்-மழுவாள் என்கின்ற போர்க் கருவியை உடையவன் ஆன சிவபெருமானும், ஈந்த - தந்தருளிய, வரங்கள் - வரங்கள், ஒன்று அலாதன உடைய - (ஒன்று அல்லாமல்) பத்தாகவுள்ள, முடியோடும் பொடி ஆகி - முடியோடும் பொடியாகி, உதிர்ந்து போன - உதிர்ந்து கழிந்தன ; அன்றுதான் - (நீ சீதையை அபகரித்து வந்த) அக்காலத்து, உணர்ந்திலையே ஆனாலும் - (இராமனுடைய ஆண்மையைக் குறித்து) அறியவில்லை ஆனாலும், வான் நாட்டை அணுகா நின்ற - வீர சுவர்க்கத்தை யடையா நின்ற, இன்றுதான் - இன்றேனும், இராமனார் யாவருக்கும் இறைவன் ஆதல் - அவ்விராமனார் எல்லோர்க்கும் தலைவராதலை, உணர்ந்தனையே - அறிந்தனையோ ?

முடியுடன் வரங்களும் உதிர்ந்தமை ; உடனவிற்சியணி. பிரமதேவனும் சிவபெருமானும் ஈந்த வரங்கள். உத்தர காண்டம் வரையெடுத்த படலத்துக் காண்க.

பி - ம். 1. மன்றலார், மன்றல்கமழ் ; மழுவாளி.

2. உடைவ ; பொடியாக ; போனது.

3. அறிந்திலையே ; ஆனாலுமவனாட்டை ; அடையநின்ற, அணுகிநின்ற.

4. இன்றுதான் தெரிந்தனையே, தெரிந்ததே அறிந்திலையே ; இராமன்னுன் ; இறைவர் ; ஈசன். 220

இங்கு 'அருவினை வந்தெய்தி' என்ற பாடல் என்பது ஐயரவர்கள் குறிப்பு.

இங்கு அதிகப் பாடல்கள் :—வி. எம். கோ. பதிப்பிற் கண்டவை.

அருவினைவந் தெய்தியபோ தாரரசே யுன்றன்
திருவினைநீ பெறுதற்குத் திருநாமங் களைப்பரவ
ஒருபதுவா யுளவணங்க வொள்முடிபத் துளவினிய
விருபதுகை யுளவிலங்கை யென்னாக வீந்தாயே. 1

அருவினைவந் தெய்தியபோ தார்தடுப்பா
ராரதனை யறிவார் வீட்டின்
திருவினைநீ பெறுதற்கிங் கிவன்றிருநா
மங்கடனைச் சிந்தித் தேத்த
ஒருபதுநா வுளவணங்க வொண்முடிகள்
பத்துளவே யிறைஞ்ச மேரு
இருபதுகை யுளவிலங்கை யென்னாக
வுயிரோடு மிழந்திட் டாயே. 2

3863. வீரநா டுற்றாயோ விரிஞ்சனும்
யாவருக்கு மேலா முன்றன்
பேரனா டுற்றாயோ பிறைசூடும்
பிஞ்ஞகன்தன் புரம் பெற்றாயோ
ஆரணா வுன்னுயிரை யஞ்சாதே
கொண்டகன்றா ரதெலா நிற்க
மாரனார் வலியாட்டந் தவிர்ந்தாரோ
குளிர்ந்தானோ மதிய மென்பான்.

'வீரர் நாடு உற்றாயோ - வீரர்கள் சென்று சேரும் நாட்டினை அடைந்தாயோ? விரிஞ்சன் ஆம் - விரிஞ்சனாகிய, யாவருக்கும் மேலாம் உன்றன - யாவர்க்கும் உயர்ந்தவனான உன் தன், பேரன் நாடு உற்றாயோ - உன்றன் பாட்டனுடைய நாட்டை மேவினாயோ? பிறை சூடும் பிஞ்ஞகன் தன் - பிறை மதியைச் (சென்னியிற்) சூடும் சிவபெருமானுடைய, புரம் பெற்றாயோ - கைலாசபுரத்தை அடையப் பெற்றாயோ? அணா - அண்ணனே, உன் உயிரை அஞ்சாதே கொண்டு அகன்றார் ஆர் - உன்னுயிரை அச்சமின்றிக் கைக்கொண்டு பெயர்ந்தவர் யார்? அது எலாம் நிற்க - அது எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும்; மாரனார் வலி ஆட்டம் தவிர்ந்தாரோ -

மன்மதனுர் (தம்முடைய) வலிமையின் ஆட்டத்தை தவிர்ந்தாரோ (இப்போதாவது) விடுத்தாரோ! மதியம் என்பான் குளிர்ந்தானே - சந்திரன் எனப்படுபவனை குளிரப் பெற்ருனே.

வீர நாடு - வீர சுவர்க்கம். விரிஞ்சன் - பிரமதேவன்; 'வேதங் கண்ணிய பொருளெலாம் விரிஞ்சனே யீந்தான்' (யுந்த. 150). இராவணனுக்குப் பௌலஸ்தியன என்ற பேர் உண்டு. பேரன் - பிதாமகன். ஓகாரம்: கழிவுப் பொருள்; 'ஓதமக் கோருறுதி யுளராரோ' என்பதுபோன்று கழிவிரக்கப்பொருள் தருதலின் என்க; (நன். இடை. 4). 'பிறைசூடும் பிஞ்ஞகன்', 'பித்தா பிறை சூடி' (தேவா. 1001:1). ஆர் அண்ணு என்பது ஆரணு என எதுகை நோக்கிக் குறுகிற்று; ஆரணு - வேதம் வல்லவனே எனினுமாம்; 'ஐயன் வேதம் ஆயிரம் வல்லான' (சுந்தர. 483) என்றது காண்க. 'மாரனுர் வலியாட்டம் தவிர்ந்தாரோ', 'பரங்கிடந்த' (ஆரணிய. 646) எனத்தொடங்கும் செய்யுளும், 'வேனில் வேளையார்ப்பித்தீர்' (யுந்த. 1577) என்பன போனறவையும் காண்க. குளிர்ந்தானே மதியம்: 'மதிக்கு மேனி சுடுவித்தீர்' (யுந்த. 1577) என முனனர் இராவணன் கூறியது காண்க,

பி - ம். 1. விரனுடு, விரர்நாடு; விரிஞ்சனுர்; முன்பன்.

2. பேரநாடு; பிறைசூடு மிறையவனுர், பெருமானுர்; ஒருவன்றன்; உற்ருயோ.

3. அதுதான் தேவா.

4. மாரனுர் வலியாரே, அமராட்டம், போராட்டம்; தவிர்ந்தாரே; குளிர்ந்தானே; வதனமம்மா, மதியினுரும், மதியினுர்தாம். 221

3864. கொல்லாத மைத்துனனைக் கொன்ருயென்
றதுகுறித்துக் கொடுமை சூழ்ந்து
பல்லாலே யிதழதுக்குங் கொடும்பாவி
நெடும்பாரிற் பழிதீர்ந் தாளோ
நல்லாருந் தீயாரு நரகத்தார்
சொர்க்கத்தார் நம்பி நம்மோ
டெல்லாரும் பகைஞரே யார்முகத்தே
விழிக்கின்ரு யெளியை யானுய்.

'கொல்லாத - கொல்லக்கூடாத, மைத்துனனை - மைத்துனனே, கொன்ருய் என்றது குறித்து - கொன்ருய் என்றதனை

மனத்துட்கொண்டு, கொடுமை சூழ்ந்து - கொடிய செயலைப் புரியச் சூழ்ச்சி செய்து, பல்லாலே இதழ் அதுக்கும் கொடு பாவி - பல்லினாலே இதழைக் கடிக்கும் கொடிய பாவியான சூர்ப்பணகை, நெடு பாரில் - நீண்ட பூமியில், பழி தீர்ந்தாளோ - பழியை தீர்த்துக் கொண்டாளோ? நம்பி - நம்பி; நரகத்தார் சொர்க்கத்தார் - நரக வாசிகள், சொர்க்க வாசிகள் ஆகிய, தீயாரும் நல்லாரும் - தீயோரும் நல்லவரும் என்ற, எல்லாரும் - அனைவரும், நம்மோடு பகைஞரே - நம்மிடத்துப் பகைமை பாராட்டுபவரேயாவர்; ஆகவே, (இப்பொழுது) யார் முகத்தே விழிக்கின்றாய் - யார் முகத்தே விழிக்கின்றாய்; எளியை ஆனாய் - இரங்கத்தக்கவன் ஆயினையே.

கொல்லாத மைத்துனனைக் கொன்றவன் இராவணன்; மைத்துனன் வித்துருசிங்கன்: வித்யஜ்ஜிஹ்வன் என்றும் சொல்வர்; (உத்தர. இராவணன் பிறப்பு. 56); 'தன்னுடைய தங்கையாந் தடவரைத்தோட் சூர்ப்பணகை தன்னைக் கொண்ட, மின்னனைய சுடரிலைவேல் வித்துருசிங் கன்றனைவெங் களத்து வீழ்த்தான்' (உத்தர. திக்குவிசய. 83); நெடும்பாரிற் பழிதீர்ந்தாளே 'முன்னமே தானென்னை முறைமையா லேகொடுத்துப், பின்னே யென்னை நூறு விழப்பித்த விராவணனு மென்றமையன், தன்னை மூவுலகாள யான கண்டு தாரவுணர், மன்னனே யுடல்சுமந்து வாழ்வேனோ வாழ்வேனோ' (உத்தர. திக்குவிசய. 101) என்று கறுக்கொண்டது காண்க. இக்கருத்துக் கொண்டேதான் நிலமா மணிமுடி நிருதர் வேந்தனை, மூலநா சம்பெற முடிக்கு மொய்ம்பினள், மேலைநா ளுயிரொடும் பிறந்து மேல்வினை, காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்' (ஆரணிய. 227); என்றும், 'வந்தது சேனை வெள்ளம் வள்ளியோன் மருங்கு மாய, பந்தமா வினையை மாளப் பற்றறு பெற்றி யோர்க்கும், உந்தரு நிலைய தாகி யுடனுறைந் துயிர்க டம்மை, யந்தகற் களிக்கு நோய்போல் அரக்கி' (417) என்றும் கூறப்பட்டன என்க. இராவணன் தேவகண்டகன் இருடி கண்டகன் மானிடகண்டகன் ஆதலின் 'நல்லாரும் தீயாரும் பகைஞரே' எனப்பட்டது.

பி - ம். 1. கொன்றான்; என்பது; கேட்டு; கூர்ந்து, கூறி.
2. இதழ் மறைக்கும்; நெடும்பாரப்; பகை.
3. நரகத்தார் துறக்கத்தார்.
4. எல்லோரும்; எளிமை யானாய். 222

3865 போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத்
தழுவியகை பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்குந்
தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவுவா னுயிர்கொடுத்துப்
பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையோ திசையானை
மருப்பிறுத்த பணைத்த மார்பால்.

'போர் மகளை - வெற்றித் திருவையும், கலை மகளை - சரசுவதி தேவியையும், புகழ் மகளை - கீர்த்தியாகிய மகளையும், தழுவியகை - அணைத்த கரமானது, பொருமை கூர - பொருமை மிகுந்து விளங்க, சீர்மகளை திருமகளை - சிறப்பு வாய்ந்த மகளான திரு மகளும், தேவர்க்கும் தெரிவு அரிய - தேவர்களாலும் அறிதற்கு முடியாத, தெய்வம் கற்பின் பேர்மகளை - தெய்வத்தன்மை பொருந்திய கற்பினுல் பெயர் பெற்றவளுமான, சீதாதேவியை' தழுவுவான - அணைக்கும் பொருட்டு, உயிர் கொடுத்து - உயிரை விடுத்து, பழிகொண்ட - வசையை மேற்கொண்ட, பித்தா - உன்மத்தனே! திசை யானை மருப்பு இறுத்த பணைத்தமார்பால் பின்னை பார்மகளை தழுவினையோ - எட்டுத்திக்கு வேழங்களின் தந்தங்களை முறித்த பருத்த மார்பினுல் பிறகு பூமிதேவியைத் தழுவிக்கிடந்தாயோ?'

சிறப்பு வாய்ந்த திருமகளைத் தழுவ விரும்புவது கண்டு, போர்மகள் முதலியவரை அணைத்தகை பொருமை கூர்ந்ததென்க. இனிப்போரிலும் கல்வியிலும் புகழிலும் மேமபட்டு அவற்றிற்கு அதிதேவதைகளான துர்க்கை முதலிய மூவரையும் நீ தழுவினுய்; அவ்வாறு தழுவப்பட்ட அவர்கள், (இவன் பிறர்மனை விழைத லாகிய பாவத்தைச் செய்தானே, அதனுல் அழிந்து ஒழிவானே என்று மனம் வருந்துதலைப்) பொறுக்கமாட்டாமை அதிகரிக்க என்று கோடலுமாம். உயிர் கொடுத்தேனும் புகழ் பெறுதற்குப் பிரதியாக உயிர் கொடுத்துப் பழிகொண்டதனுல் பித்தா என

விளிக்கப்பட்டான். புகழை மகளாகக் கூறுதல் வடநூல் புரம பற்றி; வடமொழியில், 'கீர்த்தி' என்ற பதம் பெண்பால் அல்லது ஸ்திரீ லிங்கம். பார்மகளைத் தழுவுதல் - பிறகுறிப்பு; பூமியிற் பிணமாகக்கிடத்தல் என்க. போர்மகள் புகழ்மகள் என்ற இவர்களைத் தழுவுதல் என்று கூறுதல் கவிமரபு. சீவக சிந்தா மணி என்ற மண நூலில் நாமகள் இலம்பகம், பூமகளிலம்பகம், மண்மகளிலம்பகம் என வருதல் காண்க.

பி-ம். 1. போர்மகளைக் குலமகளை; தழுவியவா, தழுவியவப்; பொருமை போகச்.

2. தேவர்க்குந் தேவர்தந் திருமகளை; திருந்தேவர்க்குந் தம்மோயை; தெய்வகற்பை.

3. தழுவாதுன், தழுவினையோ; பழிபூண்ட

4. மருப்பொசித்த; பருதிமார்பா, பருதிமார்பால். 223

## சாம்பவன் தேற்ற, வீடணன் தேறுதல்

3866. என்றேங்கி யரற்றுவான் தனையெடுத்துச்
சாம்பவனு மெண்கின் வேந்தன்
குன்றோங்கு நெடுந்தோளாய் விதிநிலையை
மதியாத கொள்கைத் தாகிச்
சென்றோங்கு முணர்வினையோ தேருதே
யழுந்துதியோ வென்னத் தேறி
நின்றனப் புறத்தரக்க னிலைகேட்டாள்
மயன்பயந்த நெடுங்கட் பாவை.

என்று ஏங்கி - என்று ஏக்கமுற்று, அரற்றுவான் தனை - வாய்விட்டுக் கதறுபவனான வீடணனை, எடுத்து - தூக்கி, சாம்பவனும் எண்கின் வேந்தன் - சாம்பவன் என்கின்ற கரடித்தலைவன், 'குன்று ஓங்கு நெடு தோளாய் - மலைபோல் உயர்ந்து நீண்ட தோளையுடையாய்! விதி நிலையை மதியாத கொள்கைத்து ஆகி - விதியின் தன்மையைக் கவனியாத கோட்பாட்டினைக் கொண்ட தாய், சென்று ஓங்கும் - சென்று உயர்கின்ற, உணர்வினையோ - உணர்வினையுடையை யாயினையோ? தேருதே - தெளியாமல், அழுந்துதியோ - (இவ்வண்ணம் நீ) துன்பத்தில் அழுந்தலாமோ?' என்ன - என்று பகர, தேறி - மனம் தேறியவனாய், அ புறத்து நின்றான் - அப்புறத்து நின்றான்; மயன் பயந்த நெடு கண் பாவை -

மயன் பெற்ற நீண்ட விழிகளையுடைய பாவைபோன்ற மண்டோதரி, அரக்கன் நிலை - இராவணன் மரித்துக் கிடந்த நிலைமையை, கேட்டாள் - கேள்வியுற்றாள்.

'விதிநிலைமை மதியாத: ஓங்கிய உணர்வுடைய நீ இராவணன் இறந்தது விதியின் செயல் என்று அறியாது வருந்துதல் தகுமோ' என்றான் சாம்பவன்; 'ஜாதஸ்யஹித்ருவோ மிருத்யு' என்பது காண்க.

பி - ம். 1. எண்கின் மன்னன்.

2. திரள் தோளாய்; உணராதே, மதியாதே.

3. வருந்துதியோ : உணர்விலர்போற்றேருதே வருந்தினையோ, உணர்வினர் போற்றேருதே வருந்துதியோ, தேருதே வருந்துவரோ, உணர்விலரிற் போற்றுதே வருந்தினையோ.

4. நின்றுங்குப். 224

## வேறு

## மண்டோதரி பல மாதருடன் இராவணன் இறந்து வீழ்ந்துகிடக்கும் இடத்திற்கு வருதல்

3867. அனந்தநூ றுயிர மரக்கர் மங்கைமார்
புனைந்தபூங் குழல்விரித் தரற்றும் பூசலார்
இனந்தொடர்ந் துடன்வர வேகினு ளென்ப
நினைந்தது மறந்தது மிலாத நெஞ்சினுள்.

அனந்தம் நூறு ஆயிரம் அரக்கர் மங்கைமார் - பல இலட்சம் தொகையினரான இராக்கதப் பெண்கள், புனைந்த - அலங்கரிக்கப் பட்ட, பூ குழல் விரித்து அரற்றும் பூசலார் - (தம்) கூந்தலை விரித்துக்கொண்டு கதறுகின்ற அழுகையினராய், இனம் தொடர்ந்து - கும்பலாகத் தொடர்ந்து, உடன் வர - தன்னுடன் வர, நினைந்ததும் மறந்ததும் இலாத நெஞ்சினள் - நினைப்பதும் மறப்பதும் அற்ற நெஞ்சை உடையவளான மண்டோதரி, ஏகினள் - வந்தாள். என்ப : அசை.

தன் கணவனை மறந்துவிடுவது பிறகு நினைப்பது என்பதின்றி எப்போதும் அவனை மனத்துக் கொண்டிருப்பவள் என மண்டோ தரியின் கற்பு மேம்பாட்டைக் கூறியவாறு. அனந்தம் - அள வற்றது. கணவன் உள்ள காலத்துப் பலவகையாக வகுத்துப் பூ முடித்த ஐம்பாலார் இப்பொழுது விரித்த கூந்தலராயினர். பூசல் - அழுகை ஆரவாரம். குழல் விரித்தல் - அவலக்குறி, பூங்குழல் விரித்து: 'தலைக்குவட் டணைத்த செக்கர் சரிந்தன குழல்கள் தத்த' (யுத்த. 1927); 'கருங்குழற் கற்றைப்பாரங் கால் தொட' (யுத்த. 3163). பூசலார்: 'ஓயாப் பூசலிட் டேங்கி வந்தாள்' (யுத்த. 1926). நினைந்தது மறந்ததும் இலாத நெஞ்சினுள்; (ஒப்பு): 'உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப் புல்லாள் புலத்தக் கனள' (குறள். 1316). 'பரமானந்தத்தே தேங்கார் மறப் பும் நினைப்பு மருர்' (கந்தரலங்.).

பி - ம். 3. இனந்திரிந்து; எய்தினளென்ப, ஏகினளென்ப.

4. நெஞ்சினர். 225

3868. இரக்கமுந் தருமமுந் துணைக்கொண் டின்னுயிர்
புரக்குநன் குலத்துவந் தொருவன் பூண்டதோர்
பரக்கழி யாமெனப் பரந்து நீண்டதால்
அரக்கியர் வாய்திறந் தரற்று மோதையே.

இரக்கமும் - இரங்குதலும். தருமமும் - தருமமும் என்பன வற்றை, துணை கொண்டு - துணையென ஏற்று, இன் உயிர் புரக்கும் - இனிய உயிரைப் பாதுகாவல் செய்கின்ற, நல் குலத்து - சிறந்த குலத்திலே, வந்த ஒருவன் - தோன்றிய ஒருவன், பூண்டது ஓர் - மேற்கொண்டதான ஒரு, பரக்கழி ஆம் என - நாணமற்ற செயல் போன்று, அரக்கியர் வாய் திறந்து அரற்றும் ஓதை - அரக்கிமார் வாய் திறந்து புலம்பும் ஓசையானது, பரந்து நீண்டது - பரவி மிகுந்தது. ஆல்; ஏ: அசை.

வந்தொருவன்: தொகுத்தல். அரக்கியர் அரற்றும் ஒலி யானது இராவணன் மேற்கொண்டதான பிறன் தாரம் நச்சும் நாணங்கெட்ட செயலைத் தூற்றுவது போன்றிருந்தது. பரக்கழி; 'பரக்கழி யிதுநீ பூண்டாற் புகழையார் பரிக்கப்பாலார்' (கிட்கிந்தா. 308); பரக்கு - அழிவு; பெருங்கேடு; அபகீர்த்தி என்பர் பழைய

யுரைகாரர். இரக்கம்; 'இரக்கமென் றென்று நானோர் ஏந்திழை வடிவமெய்தி' (சுந்தர. 1280).

பி - ம். 2. புரக்குநங் குலத்து. 226

3869. நூபுரம் புலம்பிடச் சிலம்பு நொந்தழக்
கோபுரந் தொறும்புறங் குறுகி னார்சிலர்
ஆபுரந் தரன்பகை யற்ற தாமென
மாபுரந் தவிர்ந்துவிண் வழிச்சென் றார்சிலர்.

நூபுரம் புலம்பிட - நூபுரம் ஒலிப்பவும், சிலம்பு நொந்து அழ - சிலம்பு வருந்தி அழவும், (நகர வாயில்) கோபுரம் தொறும் புறம் சிலர் குறுகினார் - கோபுரந்தோறும் வெளியே சிலர் அணுகினார்; சிலர் - மற்றும் சிலர், 'புரந்தரன் பகை அற்றது ஆம் - இந்திரன் பகை ஒழிந்ததாகும்', என - என்று சொல்லி, மாபுரம் தவிர்ந்து - பெரிய (தமது) உடலை விடுத்து, (உயிர் நீங்க) விண்வழி சென்றார் - ஆகாய வழியாகப் போயினர்.

நூபுரம் சிலம்பு என்பன - தம்முட் சிறிது வேறுபாடுடையன. 'நூபுரமு மேகலையும்' (ஆரணிய. 253). சிலம்பு ஒலிப்பது அழுவது போன்றதென்க. வளர்ந்து பருத்த தனங்கள் தாங்காது இடை ஒடியும் என அஞ்சிச் சிலம்பு ஒலிப்பதெனக் கவிஞர் சமத்காரமாகக் கூறுவர். கோபுரம் தொறும என்பதனால், நகர்க்கு நாற்புறமும் கோபுர வாயில்கள் உண்டென்பது பெறப்படும். முன்னர் யுத்த. அணிவகுப்புப் படலத்து, மேலைவாயில், தென்றிசை வாயில். வாயில்தோறும் என்று வருவன கொண்டு தெளிக. ஆ: இரக்கக் குறிப்பு. 'புரந்தரன் பகையற்றது' பின்னர் 'புரந்தரனார் பெருந்தவமாய்ப் போயிற்று' (யுத்த. 3881) என்றது காண்க. மாபுரம், உடல் என்ற பொருளில் வந்தது. மாபுரம் தவிர்ந்து விண்வழிச் செல்லுதல்: இறந்து விண்ணுலகடைதல் என்னும் பொருளது. புரம்: உடல்; (பிங்.)

பி - ம். 1. நூபுர மலம்பிடச், சிலம்பிட; நொந்தெழக்.
2. புறந்தொறும், தொறுந்தொறும்.
4. தவிர; செல்வார். 227

3870 அழைப்பொலி முழக்கெழ வழகு மின்னிடக்
குழைப்பொலி நல்லணிக் குலங்கள் வில்லிட
உழைப்பொலி வுண்கணீர்த் தாரை மீதுக
மழைப்பெருங் குலமென வான்வந் தார்சிலர்.

அழைப்பு ஒலி முழக்கு எழ - விளிக்கின்ற ஒலி இடிபோல் முழங்கவும், அழகு மின்னிட - அழகு மின்னல் போன்று திகழவும், குழை - காதணி முதலிய, பொலி - விளங்குகின்ற, நல் அணி - சிறந்த ஆபரணங்களின், குலங்கள் - கூட்டங்கள், வில் இட - வில் போன்று காணப்படவும், உழை பொலி - மான் போல் விளங்கும், உண் கண் - மை தீட்டப்பெற்ற விழிகளிலிருந்து, நீர் தாரைமீது உக - நீர்த்தாரைகள் மேலே சிதறவும், மழை பெரு குலம் என - மழையின் பெருங் குழுப்போன்று, சிலர் வான் வந்தார் - சிலர் வானின் வழியாக வந்தார்கள்.

உருவகவணி : மகளிர் குலம் மழைக் குலமாக உருவகம் செய்யப்பட்டது. மகளிரின் விளிப்பு ஒலி இடி முழக்கு, அழகு மின்னல் ஒளி, அணிக்குலங்கள் வில் ஒளி, அவர்கள் விடுக்கும் கண்ணீர் ஒழுக்கம் மழைத்தாரை, என்று காண்க. 'வீருக்கிய பொற்கலன் வில்லிட வாரமின்ன, மாருத் தனிச்சொற் றுளிமாரி' (அயோத்தி. நகர்நீ. 125). அழைப்பொலி : கூக்குரல். உழை : மான் ; 'உழைகுலா நயனத் தார்மாட் டொன்றென்றே விரும்பற் கொத்த' (பால கோலங்காண். 20). மழைப பெருங் குலம் : இங்குத் தொகுதி மட்டுமன்றி அரக்கர் மகளிரின் நிறத்தையும் குறித்து நின்றது என்க.

பி · ம். 1. அழைப்பனேல், அழைப்பொடு ; முழக்கிட, முழக்கென ; அலங்க, வழங்கு ; மின்னிடை, மன்னிடைக்.

2. குழைப்பொரு ; நன்மணி ; மின்னிட.

3. உழைப்பன.

4. கருங்குலம் ; விழ்ந்து மாழ்கினர். 228

இச் செய்யுள் சில பிரதிகளில் 'அனந்த நூறு' என்ற செய்யுளின் பின் உள்ளது.

## மகளிர் வீழ்ந்தழுதலின் வருணனை

3871. தலைமிசைத் தாங்கிய கரத்தர் தாரைநீர்
முலைமிசைத் தூங்கிய முகத்தர் மொய்த்துவந்
தலைமிசைக் கடலின்வீ ழன்னம் போலவன்
மலைமிசைத் தோள்கள்மேல் வீழ்ந்து மாழ்கினர்.

தலை மிசை தாங்கிய கரத்தர் - தலைமீது சுமந்த கையை யுடையவரும், தாரை நீர் - கண்களினின்றும் பெருகிய நீர், முலை மிசை தூங்கிய முகத்தர் - முலை முகட்டில் இடையறாத வீழ்தற்குக் காரணமான (தொங்கிய) முகத்தினருமான பெண்கள், மொய்த்து வந்து - நெருங்கி வந்து, கடலின் அலை மிசை - கடலின் அலை மீது, வீழ் அன்னம் போல் - வீழுகின்ற அன்னப் பறவை போன்று, அவன் - அந்த இராவணனுடைய, மலை மிசை தோள்கள் மேல் - மலையினும் மேலாக உயர்ந்து விளங்கிய தோள்களின்மீது, வீழ்ந்து மாழ்கினர் - விழுந்து அறிவு தளர்ந்தனர்.

தலைமிசைத் தாங்கிய கரத்தர்: 'தலையின்மேற் சுமந்தகையள்' (யுத்த. 3164); தாரை நீர்: 'தம்பியை யுன்னுந் தோறுந் தாரை நீர் ததும்பும் கண்ணன்' (சுந்தர. 985); தாரை நீருடன் முலையிடத்துத் தாழ்ந்த முகத்தர் எனினுமாம். துன்பமேலீட்டால் தலைகவிழ்ந்து காணப்பட்டார் என்க; (ஒப்பு): 'மாலோன் பதியை அரன்பதி நாடி வரினும்' (ஔவை. தனிப்பா.) என்றாற்போல. தூங்குதல்: இடை யறாது வீழ்தல்; 'வீழ் பனி தூங்க' (திருக்கோ. 320); 'அங்கிலிலை மேலே தூங்கும் பனிபோல' (தனிப்பா.) 'கடலின் வீழன்னம் போல வன் மலைமிசைத் தோள்கள் மேல் வீழ்ந்து' (ஒப்பு): 'மலையின் மேல் மயில் வீழ்ந்தென்ன, (யுத்த. 3164); மாழ்குதல்: அறிவு கலங்குதல்; 'சமரில் இரிக்க மாழ்கி' (யுத்த. மீட்சி. 110).

பா - ம். 1. கரத்தின்.
2. தூக்கிய; கண்ணினர்.
3. விழ்ந்தன்னம்.

3872. தழுவினர் தழுவினர் தலையுந் தாள்களும்
எழுவுயர் புயங்களு மார்பு மெங்கணும்
குழுவினர் முறைமுறை கூறு கூறுகொண்
டழுதன ரயர்த்தன ரரக்கி மார்களே.

அரக்கிமார்கள் - இராக்கத மகளிர், குழுவினர் - திரண்டவராய், தலையும் - தலைகளும், தாள்களும் - கால்களும், எழு உயர் புயங்களும் - கணைய மரம் போன்று உயர்ந்த தோள்களும், மார்பு - மார்பும் ஆகிய, எங்கணும் - எல்லா இடத்தும், முறை முறை கூறு கூறு கொண்டு - முறை முறையாகப் பகுத்துக் கொண்டவராகி, தழுவினர் தழுவினர் - பலமுறை தழுவி, அழுதனர் அயர்த்தனர் - அழுதவண்ணமாக அறிவொடுங்கினர். ஏ : அசை.

எழு : கணைய மரம்; 'எழுவினு முயர்ந்த தோளாய்' (அயோத்தி. குகப். 33) அயர்த்தனர் - தம்மை மறந்தார் எனினுமாம்.

பி - ம். 2. எழுவிய.

3. குழுவின ; கூறு கொண்டனர்.

4. அழுதில ருயிர்த்தில ராவிநீர்த்திலர் ; ஆவி நீத்திலர். 230

3873. வருத்தமே தெனினது புலவி வைகலும்
பொருத்தமே வாழ்வெனப் பொழுது போக்கினர்
ஒருத்தர்மே லொருத்தர்வீழ்ந் துயிரிற் புல்லினர்
திருத்தமே யனையவன் சிகரத் தோள்கள்மேல்.

'வருத்தம் ஏது - (அந்த மகளிர்க்கு இதுகாறும் நேர்ந்த) துன்பம் யாது?' எனின் - என்று சிந்திப்போமானால், அது புலவி - அது (இராவணனிடம்) நேர்ந்த ஊடலாகும்; வைகலும் - (அப் புலவி) நிலைபெற்ற போதும், (அவனுடன்) வாழ்வு பொருத்தமே - அவனுடன் வாழ்வுற்றியைவது பொருந்துவதே, என - என்று, பொழுது போக்கினர் - காலத்தைக் கழித்தார்கள்; (இப்போது இவன் மடிந்ததால்) திருத்தமே அனையவன் - வீரம் தங்கிய துறையை நிகர்த்தவனான அந்த இராவணனுடைய, சிகரம் தோள்கள் மேல் - மலை முடி போன்ற புயங்களின் மிசை, ஒருத்தர்மேல் ஒருத்தர் வீழ்ந்து - ஒருத்தர் ஒருத்தராக விழுந்து, உயிரில் புல்லினர் - உயிரைத் தழுவது போன்று (அம் மகளிர்) தழுவினர்.

வைகல் : தங்குதல் அல்லது நீளுதல் ; வைகலும் : நாடோறும் எனினுமாம். 'வைகலும் வைகல் வரக்கண்டும்' (நாலடி. 39) ; திருத்தம் : தீர்த்தம் என்ற வடசொல்லின் திரிபு ; புண்ணிய தீர்த்தம் அல்லது துறை. இங்கு அரக்கர் கோனுடைய வீரத்துறை என்க. 'உயர் குடுமித் திருத்தம் பயின்று சுனை குடைந்தாடி' (திருக்கோ. 62) ஏகாரம் : தேற்றம். புண்ணிய தீர்த்தங்களிற் படிவது போன்று மகளிர் அவன் திருமேனியிற் படிந்தனர் என்க.

பி - ம். 2. வாழ்வெனும் ; புலவி ; போக்குவார்.
3. வந்துயிரிற் ; புல்லுவார்.
4. திருத்தமேயென, திருத்தமேதென ; தோளின்மேல். 231

3874. இயக்கிய ரரக்கிய ருரக ரேழையர்
மயக்கமில் சித்தியர் விஞ்சை மங்கையர்
முயக்கியன் முறைகெட முயங்கி னர்கள்தம்
துயக்கிலா வன்புமூண் டெவருஞ் சோரவே.

இயக்கியர் - யக்ஷ மாதரும், அரக்கியர் - இராக்கத மகளிரும், உரகர் ஏழையர் - நாகலோக மாதரும், மயக்கம் இல் - மயக்கமற்ற, சித்தியர் - சித்த கன்னிகைகளும், விஞ்சை மங்கையர் - வித்யாதர அரிவைகளும் ஆகிய, எவரும் - அனைவரும், தம் - தம்முடைய, துயக்கு இலா - தளர்தல் இல்லாத, அன்பு மூண்டு - அன்பு முனைந் திருத்தலால், (அரக்கர் கோன் மடிந்து கிடந்தது கண்டு), சோர - அறிவு சோர்ந்து, முயக்கியல் முறை கெட - தழுவுகின்ற முறைமை கெட, முயங்கினர்கள் - (அவனைத்) தழுவினர். ஏ : அசை.

இங்குக் கூறப்பட்ட இயக்கியர் முதலானோர் இராவணனுடைய பட்ட மகிஷிகள அல்லாத இற்பரத்தையர் என்க. உரகர் ஏழையர் - நாக கன்னிகைகள். 'ஏகநாயகன் றேவியை யெதிர்ந்ததன் பின்பு, நாகர் வாழிட முதலென நான்முகன் வைகும், மாக மால்விசும் பீறென நடுவுள வரைப்பில், தோகை மாதர்கள்' (சுந்தர. 1087) என்று முன்னர் அவன் தேவிமார்கள் இவரிவர் என்று தொகுத்துக் கூறியமை காண்க. மயக்கமில் சித்தியர் : எளிதில் பிறரைக் கண்டு மயங்காத சித்தியர் என்க ; அவர்களும் இராவணனைக் கண்டு மயங்கினர் என அறிக. கலவிக் காலத்தில் உள்ள

ஆலிங்கன முறை போலன்றி மாறுபட்ட முறையில் முயங்கினர் என்க. துயக்கு-தளர்ச்சி; 'துயக்கிலன் சுகேது' (பால. தாட. 26).

பி - ம். 2. மயக்கலில்; பித்திய.

3. முயக்கிய, முயக்கியென், முயக்கினர்; முயக்கினர்; கிடந்து.

4. அன்பு கண்டு, கொண்டு. 232

3875 அறந்தொலை வுறமனத் தடைத்த சீதையை
மறந்திலை யோவினு மெமக்குன் வாய்மலர்
திறந்திலை விழித்திலை யருளுஞ் செய்கிலை
இறந்தனை யோவென விரங்கி யேங்கினர்.

(அவ்வாறு தழுவிய மகளிர்), 'அறம் தொலைவு உற - தருமம் அழியுமாறு, (தகாத காதல் கொண்டு) மனத்து அடைத்த சீதையை - உள்ளத்தில் வைத்துள்ள சீதாதேவியை, இனும் - இறந்த பின்னும், மறந்திலையோ - மறந்தா யில்லையோ? (அவ்வாறு அவளை மனம் கொண்ட பின்), எமக்கு - எம்மனோர்க்கு, உன் வாய் மலர் அளித்திலை - உன் வாய் மலரை அளித்தாயில்லை; விழித் திலை - கண் விழித்துப் பார்த்தாயில்லை; அருளும் செய்கிலை - எம் மீது அருள் புரியவும் இல்லை; இறந்தனையோ - நீ மரித்தனையோ' என - என்று சொல்லி, இரங்கி ஏங்கினர் - மனமிரங்கி ஏக்க முற்றனர்.

வாய் மலர் திறந்திலை: வாய் திறந்து உரையாடினுயில்லை; எங்களுடைய அதர பானத்தைப் பருக வாய் மலர் திறந்திலை எனினுமாம். விழித்திலை: கண் திறந்து எங்களைப் பார்த்தாயு மில்லை. அருளும்: உம்மை இறந்தது தழீஇயது. பாராமலும் பேசாமலும் அருளாமலும் கிடந்தமை கொண்டு இறந்தனையோ என விளித்தார்; 'இரங்கி யேங்கினர்' 'என்றழைத் திரங்கி யேங்கி' (யுத்த. 3173).

பி - ம். 1. தலையுற, தொலைவிலர்; அடைந்த.

2. மறந்திலையோவென, மறந்திலையோயினும்.

4. எமக்கு மெய்க்கண்; ஏங்கினன். 332

## மண்டோதரி இராவணன் மார்பில் வீழ்ந்து இரங்கிப் புலம்புதல்

3876. தரங்கநீர் வேலையிற் றடித்து வீழ்ந்தென
உரங்கிளர் மதுகையா னுரத்தி னுற்றனள்
மரங்களு மலைகளு முருக வாய்திறந்
திரங்கினள் மயன்மக ளினைய பன்னினுள்.

மயன் மகள் - மயன் புதல்வியான மண்டோதரியானவள், உரம் கிளர் - மனத் திண்மையுடன் விளங்குகின்ற, மதுகையான் - உடல் வன்மையுள்ளவனான இராவணனுடைய, உரத்தின் - மார்பின்மீது, தரங்கம் நீர் - அலைகளுடன் கூடிய நீரையுடைய, வேலையில் - கடலிலே, தடித்து வீழ்ந்தென - மின்னல் வீழ்ந்தாற் போன்று, உற்றனள் - பொருந்தினவளாய், மரங்களும் மலைகளும் உருக - மரங்களும் மலைகளும் உருகுமாறு, வாய் திறந்து - வாய் விட்டு, இரங்கினள் - அவலித்து, இனைய பன்னினுள் - இவ்வாறு கூறலானுள். அவள் புலம்பிக் கூறியதை அடுத்துவரும் எட்டுக் கவிகளில் காண்க.

இங்குக் கூறப்பட்ட உவமை முதனூலிலும் உளது. மதுகை - உடல் வலியென்றும்; உரம் - மனவலி யென்றும் கொள்ளப் பட்டன. 'நெஞ்சி லுரமுமின்றி' (பாரதி.). உரம் - அறிவுமாம்; 'உர மொருவற்குள்ள வெறுக்கை' (குறள். 600); 'உரனென்னுந் தோட்டியான்' (குறள். 24); மதுகை - வலி; 'மதுகை தடந்தோள் வலிகாட்டிய வான வேந்தன், முதுகைத் தழும்பாக்கிய' (யுத்த. 1958); 'வார்க்கடை மதுகைக் கொங்கை மணிக்குறு முறுவன் மாதர்' (யுத்த. 2141); மணடோதரி - மயன் மகள். இரண்டாம் அடியில் உரம் என்ற சொல் மனவலி, மார்பு என்ற இரு பொருள் களில் வந்தமை காண்க.

பி - ம். 2. உரங்கிளரிராவணன்; உருவின்; விழ்ந்தனள். 234

இச் செய்யுள் ஓர் பிரதியில் இல்லை.

### வேறு

3877. அன்னேயோ வன்னேயோ வாகொடியேற்
கடுத்தவா றரக்கர் வேந்தன்
பின்னேயோ விறப்பதுமுன் பிடித்திருந்த
கருத்ததுவும் பிடித்தி லேனே
முன்னேயோ விழுந்ததுவு முடித்தலையோ
படித்தலைய முகங்கள் தானே
என்னேயோ வென்னேயோ விராவணனார்
முடிந்தபரி சிதுவோ பாவம்?

'அன்னேயோ! அன்னேயோ? கொடியேற்கு அடுத்தவாறு ஆ-கொடிய எனக்கு நிகழ்ந்த நிலைமை மிகவும் கடினமானது; அரக்கர் வேந்தன் பின்னேயோ இறப்பது-(யான்) அரக்கர் கோனாகிய இராவணன் மரித்த பின்னரோ மரிப்பது? முன்-முன்னர்த் தொடங்கி, பிடித்திருந்த-உறுதியாக மேற்கொண்டிருந்த, கருத்ததுவும்-எண்ணத்தையும், பிடித்திலேனே-(நான்) கைப்பற்றாமல் ஒழிந்தேனே? முன்னேயோ விழுந்ததுவும்-என் முன்புறத்தில் வீழ்ந்து கிடப்பதும், முடி தலையோ-இராவணனுடைய முடியணிந்த சிரம்தானே? படி தலைய-பூமிமீது காணப்படுவை, முகங்கள் தானே-என பிராண நாயகனுடைய தலைகள்தாமோ? இராவணனார் முடிந்த பரிசு இதுவோ என்னேயோ என்னேயோ-இராவணனார் உயிர் முடிந்திட்ட நிலை என்னவோ என்னவோ? பாவம்: இரக்கக் குறிப்பு.

மனமொத்த தம்பதிகள் 'இருவர்க்கும், உடனே உலந்ததுயிர்' (பு. வெ. மா. பொது. 9) என்றபடி, ஒருசேர இறக்க வேண்டும் அல்லது மனைவி கணவனுக்கு முன்னர் இறக்கவேண்டும் என்பது.

பி-ம். 1. அன்னையோவன்னையோ; ஆ கொடியோர்க் கென்னே நான், ஆ கொடியோர்க்கடுத்ததுதான், அடுத்ததுமிவ்.

2. பின்னையோ; இருப்பதுமுன், பிடித்திருந்தன்; மனக் கருத்தும்; பெற்றிலனே, பெற்றிலேனே, பிடித்திலேனே.

3. முன்னையோ; இறப்பதுவும், இருப்பதுவும், விழுந்திவன், முடித்தொகையோகங்கலைய; கரத்தொகையோ, படித்தலையே; முகங்காட்டாயோ, முகங்காட்டானே.

4. என்னையோ வென்னையோ; முடிந்ததுவும், கிடந்த பரிசு. 235

3878 வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
திருமேனி மேலுங் கீழும்
எள்ளிருக்கு மிடமின்றி யுயிரிருக்கு
மிடநாடி யிழைத்த வாறோ
கள்ளிருக்கு மலர்க்கூந்தற் சானகியை
மனச்சிறையிற் கரந்த காதல்
உள்ளிருக்கு மெனக்கருதி யுடல்புகுந்து
தடவியதோ வொருவன் வாளி.

'ஒருவன் வாளி - ஒப்பற்ற இராமபிரானுடைய அம்பு, வெள் - வெண்ணிறத்ததான, எருக்கம் சடை முடியான் - எருக்க மலரை யணிந்த சடை முடியை யுடையவனான சிவபெருமான் எழுந்தருளி யுள்ள, வெற்பு - கயிலை மலையை, எடுத்த - தூக்கி எடுத்த, (இராவணனுடைய) திருமேனி - அழகிய உடலின், மேலும் கீழும் - மேலும் கீழும், எள் இருக்கும் இடம் இன்றி - எள் இடுதற் குரிய இடமுமின்றி, உயிர் இருக்கும் இடம் நாடி - உயிர் தங்கியுள்ள இடத்தைத் துருவி, இழைத்த ஆறோ - செய்த வண்ணமோ? கள் இருக்கும் - தேன் குடியிருக்கும், மலர் கூந்தல் - மலர் புனைந்த கூந்தலை யுடைய, சானகியை - சீதாப் பிராட்டியை, மனம் சிறை யில் கரந்த காதல் - உள்ளமாகிய காவற் கூடத்திலே ஒளித்து வைத்துள்ள காதலானது, உள் இருக்கும் - உள்ளே பதுங்கி யிருக்கும், என கருதி - என நினைந்து, உடல் புகுந்து தடவியதோ - உடல் முழுவதும் நுழைந்து தடவிப் பார்த்ததோ?

வெள்ளெருக்கு, சிவபிரான் சூடும் மலர்களில் ஒன்று; 'புல்லிலை யெருக்க மாயினுமுடையவை கடவுள் பேணே மென்னா' (புறநா. 106); துன்னிய வூரினும் விரைசார்ந் தறியாத புல்லெருக்கும் (வாட்போக் கிக்கலம்பகம். 99); எள்ளிடவும் இட மின்றி இராவணன் உடல் துளையுண்டிருப்பதைக் கண்ட மண்டோதரி, துளைத்த இராமபாணம், அந்த அரக்கனுடைய உயிர்த் தானத்தைத் துருவியதனாலாகியதோ? அல்லாது, புறத்திற் சீதையை வைத்ததற்குக் காரணம் மனச்சிறைக்கண் உள்ள காதலாதலின், அதனை ஒழித்தற்கு அவ்விராம பாணம் உடல் எங்கும் திரிந்ததனாலாகியதோ எனப்பட்டது; தற்குறிப்

பேற்றம் : வழியல்லா வழியிற் கொண்ட அவன் காதல் அவனிடம் உள்ளவரையில் அவனுக்கு நல்ல கதியிராது. இராமன் வாளி புனிதமுள்ளதாகலின், அக்காதலை ஒழித்தே அவனுக்கு நல்ல கதியுதவுதல் வேண்டும் ஆகலின் உடற புகுந்து தடவியது என்க. இராமபிரான் வாளியைப் 'புனித வாளி' ((யுத்த. 2838) என்று கூறியதும் காண்க.

பி - ம். 1. வெள்ளெருக்கு மலர், வெள்ளெருக்கின் மலர்

2. நுழைந்தவாரே.

3. கடுஞ் சிறையிற், கடுந்துயரிற் ; வைத்த.

4. உள்ளிருக்கு மென்றெண்ணி ; பிளந்து தடவினதோ, புகுந்திங் குலாவினதோ, பிளந்து தடவியதே. 236

3879. ஆரம்போர் திருமார்பை யகன்முழைக
ளெனத்திறந்திவ் வுலகுக் கப்பால்
தூரம்போ யினவொருவன் சிலைதுரந்த
சரங்களே போரிற் றேற்றும்
வீரம்போ யுரங்குறைந்து வரங்குறைந்து
விழுந்தனையே வேறே கெட்டேன்
ஓரம்போ யுயிர்பருகிற் றிராவணனை
மானுடவ னூற்ற மீதோ.

'ஒருவன் சிலை துரந்த சரங்கள் - ஒப்பற்றவனான இராமபிரானுடைய வில் வெளிவிட்ட வாளிகள், ஆரம்போர் திருமார்பை - முத்து மாலையை அணிந்த அழகிய மார்பை, அகல் முழைகள் என - விரிந்த குகைகள் போல, திறந்து - பிளக்கும்படி செய்து, இவ் உலகுக்கு அப்பால் - இந்த உலகிற்கு அப்பால், தூரம் போயின - வெகு தொலைவு சென்றன ; (அந்தச் சரங்களினால்), போரில் தோற்றும் - போரிடைக் காணப்படுகின்ற, வீரம் போய் - ஆண்மை கெட்டு, உரம் குறைந்து - மனத்திடம் குன்றி, வரம் குறைந்து - வரங்கள் அழிந்து, ஏறே - ஆண் சிங்கம் போன்றவனே ! விழுந்தனையே - இறந்துபட்டனையே ; (அந்த இராம பாணம்) ஓரம் போய் - ஒருதலைப் பட்சம் நீங்கி, இராவணனை உயிர் பருகிற்று - இராவணனையும் உயிர் குடித்து நின்றது ; மானுடவன்

ஊற்றம் ஈதோ - மனிதனின் வன்மை இத்தன்மையதோ இது காறும் தெரிந்திலேனே', ஓகாரம் : ஐயம்.

மானுடவர் ஊற்றம் இராவணனைக் கொல்வதற்கில்லை; எனவே இராமன் பரம் பொருளாகத்தான் இருக்க வேண்டும் என்ற கருத்து இங்கே காணலாம். உலகுக்கப்பால் தூரம் போயின சரம்; 'புக்கோடி யுயிர் பருகிப் புறம் போயிற் றிராகவன்றன் புனிதவாளி' (யுத்த. 3837) என்றது காண்க. கெட்டேன் : அவலம் குறிக்கும் சொல். ஓரம் : ஒருதலைப் பட்சம்.

பி - ம். 1. ஆரம்பேர்; நன்மார்பை, அகல் மார்பை, பெரு மார்பை, என வைந்தும்.
2. நெடுஞ் சரங்கள், சரங்களென; போரிற்றேற்று.
3. உரங் குறைத்து; விழ்ந்தானே, விழுந்தானே; வேறே, ஒருங்கே.
4. ஓரம்போ: அறிகின்றே விராவணனுர், இராவணனே, மானிடவன், மானுடனுர். 237

3880. காந்தையருக் கணியனைய சானகியார்
பேரழகு மவர்தங் கற்பும்
ஏந்துபுயத் திராவணனுர் காதலுமச்
சூர்ப்பணகை யிழந்த மூக்கும்
வேந்தர்பிரான் தயரதனுர் பணியினுல்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனுர்
பெருந்தவமாய்ப் போயிற் றம்மா.

'காந்தையருக்கு அணி அனைய-மகளிர்க்கெல்லாம் அணிகலம் போல விளங்குகின்ற, சானகியார் பேர் அழகும் - சீதா தேவியின் பேரழகும், அவர் தம் கற்பும் - அவருடைய கற்பும், ஏந்து புயத்து இராவணனுர் காதலும் - உயர்ந்த புயங்களை யுடையவனுன இராவணனுருடைய காதலும், அ சூர்ப்பணகை இழந்த மூக்கும் - அந்தச் சூர்ப்பணகை யிழந்த மூக்கும், வேந்தர்பிரான் தயரதனுர் பணியினுல் - அரசர்க்கரசன் ஆன தயரதனுர் ஏவலினுல், வெம் கானில் விரதம் பூண்டு - கொடிய காட்டில் விரத ஒழுக்கத்தைக் கைக்கொண்டு, போந்ததுவும் - (இராமபிரான்) வந்ததுவும், கடை

முறையே - முடிவாக, புரந்தரனர் பெருந்தவமாய் போயிற்று - இந்திரன் செய்த தவப்பயனுக ஆகிவிட்டது.

இச் செய்யுட்கண் காரணகாரிய முறையில் இராமாயண நிகழ்ச்சிகள் கூறப்பட்டுள்ளமை காண்க. இந்திராதி தேவர்களின முறையீடும் அதன் பயனுக இராமாவதாரமும், தந்தை கட்டளை நிறைவேற்ற இராமபிரான் கானகம் சென்றதும், சூர்ப்பணகையின் அங்க பங்கமும், தங்கை தூண்டுதலால் இராவணனுக்குப பிராட்டிமீது ஏற்பட்ட காதலும், இந்திராதி தேவர்கட்கெல்லாம் பெரும் பயனை விளைத்தன என்பது கருத்து. காந்தையருக்கணி; 'தெய்வமங் கையர்க்குமெல்லாம் திலகத்தைத் திலகம் செய்தார்' (பால. கோலங்காண். 16); சானகியார் பேரழகின் சிறப்பை அவளுக்கு விரோதியான சூர்ப்பணகையின் கூற்றிலேயே சிறப பாக அறியலாம். மற்றும் கோலங்காண் படலத்தும், பின்னர் இராமபிரான் அநுமானிடம் தேவியைப் பற்றிக் கூறிய அங்க இலக்கணங்கள் கொண்டும் அறிக. காந்தா என்ற வடசொல் தமிழ் முறைக்கேற்ப ஐயிறுதி பெற்றது; இங்கு 'வேந்தன் வீயவும் யாய்துயர் மேவவும்,. ஏந்தல் எம்பி வருந்தவு மென்னகர் மாந்தர் வன்றுயர் கூரவும் யான் வனம், போந்த தென்னுடைப் புண்ணியத்தால் என்ருன்' (ஆரணிய. 135) என்ற செய்யுள் கருதத் தகும்.

பி-ம். 1. அணியான; சானகியா ரழகு மவர் கற்பும் வெற்போடு.
2. இராவணனுர் காமமும்.
3. வெங்கானம்.
4. போந்தனவும்; கடை முறையிற், கடை முறைபோய்; அன்றே. 238

3881. தேவர்க்குந் திசைக்கரிக்குஞ் சிவனுர்க்கு
மயனுர்க்குஞ் செங்கண் மாற்கும்
ஏவர்க்கும் வலியானுக் கென்றுண்டா
மிறுதியென வேமாப் புற்றேன்
ஆவற்க ணியுமுன்ற வருந்தவத்தின்
பெருங்கடற்கும் வரமென் றுன்ற
காவற்கும் வலியானேர் மானுடவ
னுளனென்னக் கருதி னேனே.

'தேவர்க்கும் - வானவர்கட்கும், திசை கரிக்கும் - திக்கு வேழங்கட்கும், சிவனார்க்கும் - சிவபிரானுக்கும், அயனார்க்கும் - பிரமதேவனுக்கும், செம் கண் மாற்கும் - செந்தாமரைக் கண்ணனான திருமாலுக்கும், ஏவர்க்கும் - மற்றுமுள்ள எல்லோரைக்காட்டிலும், வலியானுக்கு - வலியவனான இராவணனுக்கு, இறுதி என்று உண்டாம் - முடிவு எப்போது உண்டாகப்போகின்றது? (ஒருபோதும் இல்லை), என - என்று, ஏமாப்பு உற்றேன் - இறுமாப்புக் கொண்டேன்; (அந்த உள்ளச் செருக்கினால்), நீ ஆவல்கண் - நீ ஆர்வத்துடன், உழன்று - வருந்தி ஆற்றிய, அரு - செயற்கரிய, பெரு கடல் தவத்திற்கும் - பெரிய கடல்போன்ற தவத்திற்கும், வரம் என்று ஆன்ற காவற்கும் - வரம் என்று சொல்லும்படியான உயர்ந்த ரக்ஷைக்கும் (அழிவை யுண்டுபண்ணக்கூடிய), ஓர் - ஒப்பற்ற, வலியான் மானுடவன் - வன்மைசான்ற மனிதன், உளன் என்ன - இருக்கின்றான் என்று, கருதினேனோ - நினைத்தேனோ?

முதலிரண்டடிகளில் இராவணனுடைய திக்விசயமும், அதில் அவன்கொண்ட வெற்றிகளும் குறிக்கப்பட்டன. பின்னிரண்டடிகளில் அவன் ஆற்றிய பெருந்தவமும் அத் தவத்தின் பயனாக அவன் பெற்ற வரங்களும் குறிக்கப்பட்டன. இவற்றை உத்தர காண்டம் இராவணன் பிறப்புப் படலம், திக்குவிசயப் படலங்களுள் காண்க. ஏவர்: எவர் என்ற வினா நீண்டது. ஏமாப்பு: 'ஏமாப்போம் பிணியறியோம்' (தேவா. 1236: 1). ஆவற்கண்: உருபு மயக்கம். அருமை - செயற்கருமை. தவத்தின் பெருங் கடற்கும் என்ற தொடரில் உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது.

பி-ம். 1. செங்கணற்கும்.
2. யாவர்க்கும்.
3. நீ யிழைந்த; யாவர்க்கு நியுழந்த, வாவற்கு நீயிழைத்த; இருந் தவத்தின்; வரமென்றேதும், இறையானெய்தும்.
4. மானுடனு ருளரென்னக், மானிடனுருள ரென்று. 239

3882. அரைகடையிட் டமைவுற்ற முக்கோடி
யாயுவும்பே றறிஞர்க் கேயும்
உரைகடையிட் டளப்பரிய பேராற்றற்
றோளாற்றற் குலப்போ வில்லை

திரைகடையிட் டளப்பரிய வரமென்னும்
பாற்கடலைச் சீதை யென்னும்
பிரைகடையிட் டழிப்பதனை யறிந்தேனே
தவப்பயனின் பெருமை பார்ப்பேன்.

'அரை கடையிட்டு அமைவுற்ற முக்கோடி ஆயுவும் - மூன்றரைக்கோடி ஆயுளுக்கும், பேர் அறிஞர்க்கேயும் - பெருமை பெற்ற அறிஞர்களாலும், உரை - வாய் வார்த்தையால், கடை இட்டு அளப்பு அரிய - முடிவுகாட்டி அளக்க முடியாத, பேர் ஆற்றல் தோள் ஆற்றற்கு - பெருவன்மை கொண்ட புயவலிமைக்கும், உலப்பு இல்லை - அழிவு இல்லை (என்று நினைந்தேன்); (ஆகவே), தவம் பயனின் பெருமை பார்ப்பேன் - தவத்தின் விளைவினையே பெரிதாகப் பாராட்டி நின்றநான், திரைகடை இட்டு அளப்பு அரிய - அலைகளை முடிவுகாட்டி அளக்க இயலாத, வரம் என்னும் பால்கடலை - வரம் என்னப்படுகின்ற பாற்கடலை, சீதை என்னும் பிரை - சீதை என்கின்ற பிரையானது, கடை இட்டு - இறுதிக்காலத்து இடப்பட்டு, அழிப்பதனை - அழிக்கப்போவதனை, அறிந்தேனோ - அறிந்தேனோ? (இல்லையே). ஓ : அசை.

அரைகடையிட் டமைவுற்ற முக்கோடி: முக்கோடி என்ற எண்ணின் கடையில் அரை என்ற எண்ணத்தை இடவே, மூன்றரைக்கோடியாதல் உணர்க. முன்னர் அரை என்பதை விடுத்து, 'முக்கோடி வாழ்நாளும்' (யுத்த. 3838) என்றே கூறப்பட்டது. அச்செய்யுட்கண் உள்ள உரைக்குறிப்புக் காண்க; (ஒப்பு): 'ஐயைந் தடுத்த யோசனை யிரட்டி' (ஆரணிய. 1132). வரமென்னும் பாற்கடலை: முன்னர், 'அருந்தவத்தின் பெருங்கடற்கும்' (யுத்த. 3882) என்று வந்தமை காண்க. ஆயுள் என்ற வடசொல் இறுதி குறுகி ஆயு என நின்றது. கடையிட்டளத்தல்: 'பெருங்கடல்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப், பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகும்' (சேக்கிழார் புராணம். 51) முற்றுருவகம். வரத்தைப் பாற்கடலாக உருவகித்து அதனை நிலைகெடச் செய்த பிராட்டியைப் பிரையாகக் கூறினர். சீதை என்று இருந்தபோதிலும் சீதைபால் வைத்த

காதலே இங்குப் பிரையெனப்பட்ட தென்க; யுத்த. 186 உரை பார்க்க.

பி - ம். 1. கோடி மூன்றுயுவினும், முக்கோடி யாயுவுமுன், கோடிமூன்று யுளைப்பேர், கோடி மூன்றுயுப்பேர்.

2. அளப்பரிது; போராற்றற்கு.

3. அமைப்பரிய.

4. அழிப்பரிய. 240

3883. ஆரனு ருலகியற்கை யறித்தக்கா
ரவையேழு மேழு மஞ்சும்
வீரனு ருடல்துறந்து விண்புக்கார்
கண்புக்க வேழ வில்லால்
நாரநாண் மலர்க்கணையால் நாளெல்லாந்
தோளெல்லா நைய வெய்யும்
மாரனுர் தனியிலக்கை மனித்தனு
ரழித்தனரே வரத்தினுலே.

'உலகு இயற்கை அறிதக்கார் அனுர் ஆர் - உலகின் இயல்பினை உணர்தற்குத் தகுதிவாய்ந்தவரான அவர் யார்? (யாரும் அதனை அறிய முடியாது என்றபடி), அவை - அந்த, ஏழும் ஏழும் அஞ்சும் - மேலுலக மேழும் கீழுலக மேழும் அஞ்சத்தக்க, வீரனுர் - ஆண மகனும், உடல் துறந்து விண்புக்கார் - உடலை விடுத்து வீர சுவர்க்கம் அடைந்தார்; கண்புக்க வேழம் வில்லால் - கணுக்களுடன் பொருந்திய கரும்பு வில்லினுல், நாரம் - (வண் டொழுங்காகிய) நாணியைக்கொண்ட, நாண்மலர் கணையால் - அன்றலர்ந்த மலர்ச் சரத்தால், நாள் எல்லாம் தோள் எல்லாம் நைய - நாள் முழுவதும் தோள்கள் எல்லாம் வருந்தும்படி, எய்யும் - எய்கின்ற, மாரனுர் தனி இலக்கை - மன்மதனுடைய தனிப்பட்ட குறியை (இராவணனை) மனித்தனுர் - மனிதர், வரத்தினுல் அழித்தனரே - மேன்மையான வரத்தினுலே அழித்துவிட்டனரே. ஏ, அசை.

உலகியற்கை அறித்தக்கார் அனுர் ஆர்: என்று மொழி மாற்றியுரைக்கப்பட்டது. அறியத்தக்கார் என்பது அறித்தக்கார் என நின்றது. அவை: பண்டறி சுட்டு. கண் என்பது கரும்பின கண்; 'கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி' (நாலடி. 156) வேழம்:

கரும்பு; மன்மதனுக்குக் கரும்பு வில்; நாரம்: நார்; அம்சாரியை. நாள்மலர்: அன்றலர்ந்த புதியமலர்; தேவியின் மீதெழுந்த காதலால் இராவணன், மன்மதன் வாளிக்கு இலக்காகியது இங்குக் குறிக்கப்பட்டது. 'பரங்கிடந்த மாதிரம்' (ஆரணிய. 416); என்ற செய்யுள் அவன் மதனுற்பட்ட கடும் வேதனையை விளக்கும். மாரனூர்: இகழ்ச்சி; 'காமனூர் வீட்டினிலே கள்ளன் புகுந்தானே' (தனிப்பா.); என்ற இடத்துப்போல. இவ்வரி, தலைவனைப் பிரிந்த தலைவி கூறியது. பரமகாமுகன் இராவணன் என்பது 'மாரனூர் தனியிலக்கு' என்ற தொடரால் அறியப்படும். இலக்கு: குறி; 'இலக்குவனென் கைவாளிக் கிலக்கிவன்' (யுத்த. 1096); 'என்றதான னங்கவாளிக் கிலக்கிடா திருக்கலாவது' (யுத்த. 1075) வேற்றுப் பொருள் வைப்பணி. இராமபிரான் சரத்தால் அழிப்பதன் முன்பு மன்மதன் சரம் தவிர, வேறு யார் சரத்திற்கும் இலக்காகா திருந்ததுகொண்டு மாரனூர் தனி இலக்கை எனப்பட்டது. 'இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக், கையாருக் கொள்ளாதா மேல்' (குறள். 627).

பி-ம். 1. அறிநக்கார்; அஞ்ச.
2. வேழவில்லார்.

241

இங்கு அதிகப்பாடல்கள் :—

அன்னையவள் சீதை யனைத்துலகு மீன்றுளென்
றுன்னி யுரைத்தேன உரைகேளா துத்தமனே
பின்னை யிராமன் சரத்தாற் பிளப்புண்ட
உன்னுடைய பேருடலம் உற்றுருகால் நோக்காயோ?

3884. ஆரா வமுதா யலைகடலிற் கண்வளரும்
நாரா யணனென் றிருப்பே னிராமனைநான்
ஓராதே கொண்டகன்று யுத்தமனூர் தேவிதனைப்
பாராயோ நின்னுடைய மார்பகலம் பட்டவெல்லாம்.

'நான் - நான், இராமனை - இராமபிரானை, ஆரா அமுதாய் - திகட்டாத அமுதம் போன்றவனாய், அலை கடலில் கண் வளரும் - அலைகின்ற (பாற்) கடலிலே துயில்கின்ற, நாராயணன் என்று இருப்பேன் - நாராயணன் என்று எண்ணியிருக்கும் தன்மையேன்; ஓராதே - சிறிதும் ஆராயாமல், உத்தமனூர் தேவிதனை - (அந்த)

உத்தமனுருடைய மனைவியை, கொண்டு அகன்றாய் - கவர்ந்து சென்றாய்; (அதன் விளைவாக) நின்னுடைய மார்பு அகலம்பட்ட எல்லாம் பாராயோ - உன்னுடைய மார்பின் பரப்பு பட்டபாட்டை எல்லாம் பார்க்க மாட்டாயோ ?'

வேறு வகையாக இராவணனை வதைத்தால் பிரமன் கொடுத்த வரத்தினை மீறியதாகும். ஆதலின், மனிதவுருவாக வந்து கொன்றான் என்று ஓர்ந்து இராமபிரானுடைய பரத்வத்தை மண்டோதரி கூறியதாகக் கொள்க.

பி-ம். 1. கன் வளர்ந்த.

2. என்று பலகாலு நானுரைப்ப.

3. உத்தமன்றன்.

4. பாராய் நீ. 24

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

### வேறு

## மண்டோதரி இராவணனுடலைத் தழுவி, தன்னுயிர் நீங்க, யாவரும் புகழ்தல்

3885. என்ற ழைத்தன ளேங்கி யெழுந்தவன்
பொன்ற ழைத்த பொருவரு மார்பினைத்
தன்ற ழைக்கைக ளாற்றழு வித்தனி
நின்ற ழைத்துயிர்த் தாளுயிர் நீங்கினள்.

என்று அழைத்தனள் - என்று கூக்குரலிட் டழுதவளாய், (அந்த மண்டோதரி), ஏங்கி - ஏக்கமுற்று, (பின்னர்), எழுந்து - எழுந்து, அவன் - அந்த இராவணனுடைய, பொன் தழைத்த - பொன் அணிகள் மிகுதியாக அணியப்பெற்றிருந்த, பொரு அரு மார்பினை - ஒப்பற்ற மார்பினை, தன் தழை கைகளால் தழுவி - தனது தளிர்போன்ற கரங்களால் அணைத்து, தனி நின்று - தனித்து நின்று, அழைத்து - கூவி, உயிர்த்தாள் - நெட்டுயிர்ப்புக் கொண்டு, உயிர் நீங்கினள் - உயிர் நீங்கப்பெற்றாள்.

பொன் தழைத்த பொருவரு மார்பினன்: ஆரணிய. 557, 558, 559-ம பார்க்க. சுந்தர. 1084, 1085-ம் காணலாம். தழை: தழை; இளந்தளிர். மண்டோதரி ஏங்கி உயிர் நீத்ததைச் சிலப்பதிகாரத்தில் பாண்டியன் மனைவி 'தன்னுயிர் கொண்டவ னுயிர் தேடினள் போல்' இறந்துபட்டதுடன் ஒப்பிட்டு நோக்குக. எவ்விதக் களங்கமுமற்ற தூய்மையான கற்பினள் ஆதலின் அன்றோ. வடமொழி வாணர் இவளைப் போற்றத்தக்க பஞ்ச கன்னிகைகளில் ஒருத்தியாகச் சேர்த்து வழங்கினர்.

பி-ம். 1. தழிக், தனிக், தளிர்க்கு. 243

3886. வான மங்கையர் விஞ்சையர் மற்றுமத்
தான மங்கைய ருந்தவப் பாலவர்
ஆன மங்கைய ரும்மருங் கற்புடை
மான மங்கையர் தாமும் வழுத்தினர்.

வானம் மங்கையர்-வானுட்டு மகளிரும், விஞ்சையர் - வித்தியா தரப் பெண்களும், மற்றும் அ தான மங்கையரும் - மற்றும் அந்த (த்தானவ) அரிவையரும், தவம் பாலவர் - தவத்தின் பகுதியிலே, ஆன - அமைந்த, மங்கையர் - முனிவர்களின் பத்தினிகளும், அரு கற்புடை மானம் மங்கையர் தாமும் - அரிய கற்பினையுடைய மானிடப் பூவையரும், வழுத்தினர் - (அந்த மண்டோதரியைப்) பாராட்டித் துதித்தனர்.

மற்றும் அத்தானம்: என்பதற்குப் பாதாள உலகம் என்ற பொருள் கொள்ளப்பட்டது. கற்புக்கருமை: கணவனில்லாத பிறர் உள்ளத்துப் புகாமை; மானம் மங்கையர்: மானமா வனையராய்ப் பெருமை மிக்கவர்; 'வழுத்தினள் தும்மினே னுக வழித்தழுதாள், யாருள்ளித் தும்மினீ ரென்று' (குறள். 1317); தான மங்கையர் - தானவ ஸ்திரீகள்; மான மங்கையர்: மானவ மாதர்கள்.

பி-ம். 1. மங்கையரும்; மற்றுமெத்; முற்றுடைத். 244

## வீடணன் ஈமத்தில் இராவணன் உடலை ஏற்றுதல்

3887. பின்னர் வீடணன் பேரெழிற் றம்முனை
வன்னி கூவி வரன்முறை யான்மறை
சொன்ன வீம விதிமுறை யாற்றொகுத்
தின்ன னெஞ்சினெ டிந்தனத் தேற்றினன்.

*பின்னர்* - (இந்த நிகழ்ச்சி முடிந்த) பிறகு, **வீடணன்** - விபீடணன், *வரன் முறையான்* - கிரமப்படி, **வன்னிகூவி** - அக்கினியை ஆஹ்வானம் செய்து, *மறைசொன்ன* - வேதம் சொல்லியுள்ள, *ஈம விதி முறையால்* - ஈம நியமங்களைக் காடக நூல் கூறிய முறைப்படி, **தொகுத்து** - கூட்டிச்செய்து, *இன்னல் நெஞ்சினெடு* - துயர்மிக்க உள்ளத்தனாய். **பேர் எழில்** - மிக்க வீரத்தின் எழுச்சியை கொண்டு விளங்கிய, **தம்முனை** - தன் அண்ணனை, *இந்தனத்து ஏற்றினன்* - (அந்த) ஈமக் காட்டத்து ஏற்றினன்.

*எழில்*: இங்கு ஆண்மையின வனப்பு. *தம்முனை*: 'அரசன் உவாத்தியான தாய் தந்தை தம்முன்' (ஆசாரக். 16); *வன்னி*: அக்கினி; *வன்னி கூவுதல்*: அக்கினி பகவானை அழைத்தல்; *ஈமம்*: இடுகாடு; 'ஈமம் சேர் மாலைபோல இழித்திடப்பட்டதன்றே' (சீவக. 210); *இன்னல்*: துன்பம், இனிமை அல்லாதது என்று பொருள்படும். 'இருளுடை யுலகந் தாங்கு மின்னலுக் கியைந்து நின்றான்' (அயோத்தி. கைகேசி. 109); 'இன்னலே யுழந்தோர் காலம்' (வி. பா. நிரை. 106); 'இந்தனத்திற்றி' (வேதாந்த சூளா. 154); 'இந்தனங்களின் வெந்தெரி சிந்தின' (சுந்தர. 716); 'இந்தனமாக வேண்டும் காரகில்' (ஆரணிய. 1025). *இந்தனம்*: வடசொல்.

பி - ம். 1. பின்னை ; தம்முனர்.
2. மன்னிமுன்றும், மன்னமுன்னும், மன்னிகழ்ந்த, மன்னிமுன்னி, வன்னிமுன்னம்.
3. சொன்ன நன்னர், நன்னர் சொன்ன ; விதிவழியால்.
4. அஞ்சலித் தேற்றினன், இந்தனம் ; ஏற்றினன்.

## வீடணன் இராவணனுக்குத் தகனம் முதலியன செய்தல்

3888. இந்த னத்தகில் சந்தன மிட்டுமேல்
அந்த மானத் தழகுறத் தானமைத்
தெந்த வோசையுங் கீழுற வார்த்திடை
முந்து சங்கொலி யெங்கு முழங்கிட.

இந்தனத்து - எரிகின்ற விறகாக, அகில் சந்தனம் இட்டு - அகில் கட்டைகளையும், சந்தனக் கட்டைகளையும் அடுக்கி, மேல் - அதனமேல், அந்த மானத்து - அத்தகைய விமானத்து, அழகு உற - அழகு அமைய, தான அமைத்து - (இராவணனின் உடலை) ஈமப் படுக்கைமீது கிடத்தி, எந்த ஓசையும் கீழ் உற - எந்த ஒலியும் அடங்கும்படி, இடை ஆர்த்து முந்தும் - இடையிடையே பேரொலியுடன முறபடுகினற, சங்கு ஒலி - சங்கின் ஒலியானது, எங்கும் முழங்கிட - எல்லாப் பக்கங்களிலும் முழங்க.

மானம் : விமானம் போன்று அலங்கரிக்கப்பட்ட ஈமப்படுக்கை.

பி - ம். 1. இந்தனத்தொடு ; ஏற்படுத்து, ஏர்படுத்து.
2. மானமழகுடன், வானமழகுடன்.
3. எந்த நாமமும் ; ஆர்த்தெழ.
4. தந்த ; ஓங்கி ; தழங்கிட.



3889. கொற்ற வெண்குடை யோடு கொடிமிடைந்
உற்ற வீம விதியி னுடம்படீஇச்
சுற்ற மாதர் தொடர்ந்துடன் சூழ்வர
மற்ற வீரன் விதியின் வழங்கினன்.

கொற்றம் வெண் குடை ஓடு - வெண்கொற்றக் குடையோடு, கொடி மிடைந்து உற்ற - கொடியும் நெருங்கிப் பொருந்திய, ஈமம் விதியின் உடம்படீஇ - ஈமச்சடங்குக்கு ஒத்திருந்து, சுற்றம் - உறவினரும், மாதர் - மகளிரும், தொடர்ந்து உடன் சூழ்வர - தொடர்ந்து உடன் சூழ்ந்துவர, மற்று - பின்பு, அ வீரன் - அந்த வீரன் (வீடணன்), விதியின்வழங்கினன் - விதியின்படி (கொள்ளி வைத்து) அக்கினி சமஸ்காரம் செய்தான்.

கொற்ற வெண்குடை - வீரச்சின்னமான ஒற்றை வெண்குடை; ‘தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதிதழைத் தென்ன, அலங்கல் வெண்குடை கண்குடை யவிரொளி பரப்ப’ (சுந்தர. 1080) என்றது காண்க. ஈமத்திட்டு அக்கினி சமஸ்காரம் செய்யுங்கால், அந்த ஈமச்சிதையை உற்றார் உறவினர் சுற்றி வருவதை இன்றும் காணலாம்.

பி - ம். 2. உடம்படச்.

3. பதிந்துடன்.

4. மதியின், விழியின் ; வணங்கினன். 247

3890 கடன்கள் செய்து முடித்துக் கணவனே
டுடைந்து போன மயன்மக ளோடுடன்
அடங்க வெங்கன லுக்கவி யாக்கினன்
குடங்கொள் நீரினுங் கண்சோர் குமிழியான்.

குடம் கொள் நீரினும் - குடங்கொண்ட நீரினும் மிகுதியாக, குமிழியான் - குமிழி எழும்படி, கண் சோர் - கண்ணீரைப் பெருக்கும், (வீடணன்), கடன்கள் செய்து முடித்து - நீர்க்கடன் தீக்கடன்களைச் செய்து முற்றி, கணவனோடு உடைந்துபோன - கணவனுடனே மனமுடைந்து உயிர் விடுத்த, மயன் மகளோடு உடன் - மயன் மகளான மண்டோதரியுடன், அடங்க - (அந்த இராவணன்) அடங்கும்படி, வெம் கனலுக்கு அவி ஆக்கினன் - கொடிய அக்கினிக்கு அவிசாகச் செய்தான்.

மண்டோதரி உடன்கட்டையேறிய செய்தி இங்கு குறிக்கப்பட்டது. இதனை வடநூலார் சககமனம் என்பர். அவி - அக்கினிக்கிடும் உணவு; ‘அவிசொரிந் தாயிரம் வேட்டலின்’ (குறள். 259); ‘அவியை நாய்வேட்ட தென்ன வென்சொனு யரக்க வென்று’ (சுந்தர. 873).

பி - ம். 1. கடன்செய் செய்கை, கடன்கொள் செய்கை ; கணவன்றேள், கணவனை.

2. தொடர்ந்துபோன, உடன்தொடர்ந்த ; மகன் தன்னுடன்.

3. அடங்கலும் ; கனலிற்கரி. 248

## வீடணன் இறந்த அரக்கரனைவர்க்கும் ஈமக்கடன் செய்து இராமபிரானை அடைதல்

3891. மற்றை யோர்க்கும் வரன்முறை யால்வகுத்
துற்ற தீக்கொடுத் துண்குறு நீருகுத்
தெற்றை யோர்க்கு மிவனல தில்லென
வெற்றி வீரன் குரைகழன் மேவினன்.

மற்றையோர்க்கும் - போரில் இறந்துபட்ட ஏனைய வீரர்க்கும், வரன் முறையால் வகுத்து - நூல்களில் கூறியபடி வகைசெய்து, உற்ற - பொருந்திய, தீ கொடுத்து - தீக்கடன்களைச் செய்து, உண்குறு நீர் உகுத்து - உண்ணுமாறு நீர்க்கடன்களையும் உதவி, எற்றையோர்க்கும் இவன் அலது இல் என - எவர்க்கும் இவனை யல்லாமல் இல்லையென்னுமாறுள்ள, வெற்றி வீரன் - வெற்றி வீரனான இராமபிரானுடைய, குரை கழல் மேவினன் - ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த இராமபிரான் திருவடிகளை வந்து அடைந்தான் (பணிந்தான்).

உண்ணுநீர் உகுத்தல்: வாசோதகம் திலோதகம் கொடுத்தல். ஓர்க்கும் வரன்முறை என்று கொண்டு ஆராயும் கிரமம் என்றும் உரைப்பர் ஒரு சாரார். இவனல தில்லென: 'யாதுமொன றறியா வென்னை யிவனலா தில்லை யென்றிம், மேதினி மதிக்குமாறு' (வி. பா. நிரைமீட்சி. 88).

பி - ம். 2. உற்றவை செய்தனன்; உண்குறு நீர்கொடுத்து.
3. இற்றையோர்க்கும்; எவர்க்குமிவனென, இங்கியானலதில்லென, இன்றியானலதில்லென.

249

ஓர் பிரதியில், 'கார்நின்ற' என்ற செய்யுள் முதல் இது வரையில் வீடணன் மண்டோதரி புலம்பற் படலம் என்று உள்ளது. இதனோடு இப்படலம் முடிய, அடுத்த பாடல் முதல வேறு படலம் தொடங்குகின்றது.

3892. வந்து தாழ்ந்த துணைவனை வள்ளலும்
சிந்தை வெந்துயர் தீருதி தெள்ளியோய்
முந்தை யெய்து முறைமை யிதாமென
அந்த மில்லிடர்ப் பார மகற்றினன்.

வந்து தாழ்ந்த துணைவனை - வந்து வணக்கம் புரிந்த தம்பியான வீடணனைப் பார்த்து, வள்ளலும் - வண்மையனான இராமபிரானும், 'தெள்ளியோய் - உள்ளத் தெளிவுள்ளவனே! சிந்தை வெம் துயர் திருதி - உன் மனத்துள்ள கடுந்துன்பம் தீரப்பெறுவாயாக! முந்தை எய்தும் முறைமையது ஆம் - முந்தையோர் கண்ட முறைமை ஆகும்', என்று - என்று, அந்தம் இல் இடர் பாரம் அகற்றினான் - எல்லையில்லாத துன்பச்சுமையை நீக்கினான்.

சமக்கடன் ஆற்றித் துன்பம் தோன்றும் முகத்துடன் தன் அண்மையில் வந்து நின்ற வீடணனைப் பார்த்து, 'ஜாதஸ்ய ஹி த்ருவோ மிருத்யு' ஆதலின் இறந்தவர்பொருட்டு இரங்குதல் ஞானியான உன்கடன் அன்று' என்று சொல்லித் தேற்றினான். இங்கு, 'உடற் கழுதனையோ வுயிர்க் கழுதனையோ' (மணி. 23 : 73) எனத் தொடங்கும் மணிமேகலைப் பகுதி அறியத்தக்கது. 'பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும், உறங்கலும் விழித்தலும் போன்றதுண்மையின்' (மணி.16 : 86-87); 'செத்த பிணத்தைச் சுமந்து சாம்பிணம் கத்துதையோ தில்லைவாழும் சங்கரனே' (பட்டினத்தார். திருத்தில்லைச். 1).

பா - ம். 2. தீரினித்.

3. முந்தையோர்க்கு, முந்தையோது, முந்தியெய்து; முறைமையுளோய்.

4. அந்த வில்லிடைப் பாசம். 250

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

இனைய வீர னிளவலை நோக்கிநீ
புனையு நன்முடி சூட்டுதிபோ யென
அனைய வீர னடியி னிறைஞ்சவே
அனைய னேடு மநுமனைச் சார்கென.

இந்தச் செய்யுளுடன் படலம் முடிவடைய, அடுத்த பாடல் முதல் வீடணன் அபிடேகப் படலம் என்று சில பிரதிகளில் உள்ளது. சில பிரதிகளில், பிராட்டியார் திருவடி தொழுத

படலம் என்றும், சிலவற்றில் சீதை திருவடி தொழுத படலம் என்றும், மற்றும் சிலவற்றில் வீடணன் முடிசூட்டுப் படலம் என்றும், வீடணன் பட்டாபிடேகப் படலம் என்றும் பெயர்கள் கொண்டு படலம் தொடங்குகின்றது.

இராவணன் வதைப் படலம் முற்றும்.

---

## இராவணன் வதைப் படலம்; இது குறித்து முதனூல் கூறுவது:

இந்திரசித்து மடிந்த செய்தி கேட்டு இராவணன் மிகவும் சீற்றம்கொண்டு விளங்குகின்றான். மகோதரன முதலான அமைச்சர்களை நோக்கித் தான் கடும்போர் புரிந்து தன் மக்களையும் சகோதரர்களையும் வதைத்ததற்காகப் பழிவாங்கப் போவதாகக் கூறுகின்றான். மகாபார்சுவன் முதலானோரும் அரக்கர் சேனை வீரரும் போர்க்குப் புறப்பட ஆயத்தமாகின்றனர். இராவணன் தேர் ஏறுகின்றான். கெட்ட அறிகுறிகள் உண்டாகின்றன. அவற்றை அவன் புறக்கணித்துப் புறப்படுகின்றான். அரக்கர்க்கும் வானரர்க்கும் கடும்போர் நிகழ்கின்றது. சுக்கிரீவன் கையால் விரூபாட்சன் மகோதரன் என்ற அரக்கர்கள் மடிகின்றனர். அரக்கர் சேனை அஞ்சி ஓடுகின்றது. பின்னர் மகாபார்சுவன் போர்க்கு எழுகின்றான். அவனும் அங்கதன் கையாற்கொல்லப்படுகிறான். . இச் செய்தி கேட்டு இலங்காதிபனே போர்க்களம் செல்கின்றான். தாமதாத்திரத்தால் வானரர்களைக் கொல்லத் தொடங்குகிறான். இலக்குவன் விடுத்த அம்புகளை இராவணன் அறுக்கின்றான். இராமபிரானும் இராவணனும் சரமாரியாக அம்பு எய்கின்றனர். இராவணன் பின்னர் பல விலங்குகள், பறவைகள் என்ற இவற்றின முகங்களுடன் கூடிய பாணங்களைப் பொழிகின்றான். இராவணன் விடுத்த ஆசுராத்திரத்தை இராமபிரான் அக்கினி அம்புகொண்டு அழிக்கின்றான்.

இந் நிலையில் இராவணன் மாயாத்திரத்தை விடுக்கின்றான். அந்த வாளியிலிருந்து பல சூலங்களும் கதைக்களும் பிற கருவி

களும் எழுகின்றன. இராமபிரான் அவற்றைக் கந்தருவாத்திரம் கொண்டு போக்குகின்முன். இராவணன் ஆழிப் படையும் இராமபிரானுல் துணிக்கப்பட்டது. உடனே இலங்கேசன் இராம பிரானுடைய மர்மத்தானங்களில் அம்புகள் எய்கின்முன். இது கண்டு இலக்குவன் வெகுண்டு இராவணனுடைய தேர்க் கொடியைச் சேதித்து, அவன் தலைப்பாகையையும் வில்லையும துண்டிக்கின்முன். இச் சமயத்து இராவணனுடைய தேர்ப்பாகனை வீடணன் கொல்கின்முன். இராவணன் வெகுளி மிக்கவனுய்ச் சக்தி என்னும் ஆயுதத்தை வீடணன்மீது ஏவுகின்முன். ஆனுல் அது வீடணனைச் சாருமுன்னரே, இலக்குவன் மூன்று சரங்களால் வெட்டி எறிகின்முன். வெட்டி எறியவே இராவணன் பெரிய சக்திவேலை வீடணன்மீது ஏவுகின்முன். அதையும் இலக்குவன் தடுக்கின்முன். பௌலஸ்தியன் வெகுண்டு அதனை இளைய பெருமான்மீது செலுத்துகின்முன். இலக்குவன் மார்பு பிளப்புண்டு விழுகின்முன். அந்த ஆயுதத்தை இராமபிரான் தம்பியின் மார்பிலிருந்தும் பிடுங்கி, முறித்தெறிந்து மிகவும் உக்கிரமான மொழிகளைப் பேசிக்கொண்டு, இராவணனை வதைக்க முற்படுகின்முன. இலக்குவன் இறந்தமை கண்டு மிகவும் புலம்பி நின்ற இராமபிரானைச் சுஷேசஷணன் தேற்றி, இலக்குவன் இறக்கவில்லை என்று சொல்லிப் பிழைப்பூட்டும் ஒஷதிகளைக் கொணருமாறு அநுமனிடம் கூறுகின்முன். அநுமன உடனே சென்று அம் மருந்துகளைக் கொண்டு வந்து இலக்குவனைப் பிழைப்பு மூட்டுகின்முன்.

இந் நிலையில் இராமபிரான் இந்திரன் அனுப்பிய தேர்மீதேறி இராவணனுடன் போர் தொடங்குகின்முன். இந்திரன் கொடுத்த கவசத்தையும் அம்புகளையும் மாதலி என்ற சாரதி இராமபிரானிடம் அளிக்கின்முன். பெரும் போர் நிகழ்கின்றது. பற்பல அத்திரங்களை இரு சாராரும் பிரயோகிக்கின்றனர். இராமபிரானுடைய சாரதியையும், தேர்ப் பரிகளையும் இராவணன் நையப் புடைக்கின்முன். இராமபிரான் சிறிது சளைக்கின்முன். அப்பொழுது சில கெட்ட சகுணங்கள் தோன்றுகின்றன. ரோகணியைப் புதன் கூடி நிற்கின்றது. சூரியன் கரிய நிறத்துடன் காணப்படுகின்முன்.

இக்குவாகு வங்கிசத்தாரின் நட்சத்திரமான விசாகம் என்னும் நட்சத்திரத்தை அங்காரகன் என்ற கிரகம் பற்றி நிற்கின்றது. இராவணன் இராமபிரான்மீது சூலத்தை எறிகின்றான். இராமபிரான் அதனை இந்திரன் அளித்த சக்தி ஆயுதத்தால் துணித்து, இராவணன்மீது பற்பல அம்புகளை ஏவுகின்றான். இராவணன் களைத்துச் சோர்வடைகின்றான். அப்போது அவன் தேர்ப்பாகன் அவன் ஏறியிருந்த இரதத்தை அப்பாற் செலுத்தவே, இராவணன் சாரதியைக் கண்டிக்கின்றான். சாரதி அங்ஙனம் செய்ததற்குச் சமாதானம் பகர்வானாய் 'வீரரே! தாங்கள் இளைத்தீர்கள்; பல உற்பாதங்கள் எழுந்தன. தேரைச் செலுத்தும் சாரதியானவன் காலம், இடம் இவைகளையும், சகுனங்களையும், முகக் குறிகளையும், தேர் வீரனுடைய சிரமம், மகிழ்ச்சி, பலாபலம் என்னும் இவைகளையும், மேட்டு நிலம், பள்ள நிலம் என்ற இவற்றையும், போர்புரிய வேண்டிய சமயத்தையும் அறிவதுடன், எந்த வேளையில் எதிரியை நோக்கித் தேரைச் செலுத்த வேண்டும், எப்பொழுது அவன் எதிரில் நிற்றல் வேண்டும என்பதையும் அறிய வேண்டும' என்று கூறுகின்றான். இச்சொற்களைச் செவியேற்று இராவணன் மகிழ்ந்தவனாய், தேரை இராமனை நோக்கிச் செலுத்துமாறு கட்டளையிடுகின்றான். இந்நிலையில்தான் அகத்திய முனிவர் இராகவனுக்கு, 'ஆதித்யஹிருதயம்' உபதேசித்து அவனுக்கு வெற்றி நிச்சயம் எனறு சொல்லிச் செல்கிறார். சூரிய பகவானும் இராமபிரான் ஆராதனைக்கு மகிழ்ந்து போருக்கு விரையுமாறு தூண்டுகின்றார். இராமபிரானுக்கு நல்ல சகுனங்களும் இராவணனுக்குப் பல தீய சகுனங்களும் நிகழ்கின்றன. போர்க்குச் சென்ற இராமபிரான், இராவணனுடைய தேர்க் கொடியை அறுத்து வீழ்த்துகின்றான். பின்னர் அவ்வரக்கன் தலையை அறுக்க, அது மீண்டும் முளைக்கின்றது. இராமபிரான் கவலையுள் ஆழ்கின்றான். அப்போது, மாதலி இராகவனை நோக்கிப் பிரமாத்திரத்தைப் பிரயோகிக்குமாறு கூறுகின்றான். இராமபிரானும் அதனை விடுக்க, இராவணன் உயிர் நீங்கித் தரையில் வீழ்கின்றான். இராமபிரான் விடுத்த அம்பும் தன் காரியத்தை முடித்துக் கொண்டு இராமபிரானுடைய அம்புக் கூட்டில்

மீட்டும் நுழைகின்றது. தேவர்கள் ஆரவாரித்துக் கற்பகம் முதலிய மலர்களைப் பொழிகின்றார்கள். இராமபிரானை அனைவரும் கொண்டாடுகின்றனர். பின்னர் இராவணன் இறந்தமை குறித்து வீடணன் புலம்புகின்றான் அரக்கியர் ஓலமிடுகின்றனர். மண்டோதரி பலவாறு சொல்லி அவலிக்கின்றாள். இந் நிலையில் மாவீரனான இராவணனுக்கு உத்தரகிரியை செய்யத் தயங்குகின்றான் வீடணன். இராமபிரான் 'மரணாந்தானி வயிராணி' என்று சொல்லி அவனைத் தேற்றி, அவன் கடமையை உணர்த்தவே, வீடணன் தன் தமையனுக்கு நீர்க்கடன் தீக்கடன்களைச் செய்து முடிக்கின்றான். பின்னர் இராமபிரான் கட்டளையை மேற்கொண்டு இலக்குவன் வீடணனுக்கு முடி சூட்டுகின்றான்.

---

# 37. மீட்சிப் படலம்

இஃது, இராவண வதத்திற்குப் பின் இராமபிரான் சீதா தேவியை மீட்டுக் கொண்டு இலங்கையினின்று அயோத்தி மாநகர்க்கு மீண்டும் வந்த செய்தியை உணர்த்தும் படலம் என விரியும். இது வீடணன் முடிசூட்டுப் படலம் என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

## இராமன் வீடணனுக்குத் தேறுதல் கூறி, இலக்குவனை நோக்கி ஒன்று சொல்லத் தொடங்குதல்

3893. வருந்தல் நீதி மனுநெறி யாவையும்
பொருந்து கேள்விப் புலமையி னோயெனு
அருந்த வப்பய னுலடைந்தாற் கறைந்
திருந்த வத்திளை யோற்கி தியம்பினன்.

'மனு நெறி நீதி யாவையும் - மனு தரும சாத்திரத்திற் சொல்லப்பட்ட நியாய முறைகள் அனைத்தும், பொருந்து கேள்வி புலமையினோய் - பொருந்திய நூற் கேள்வியையும் அறிவு நுட்பமும் உடையவனே! வருந்தல் - வருந்தாதே'! எனு - என்று, அருதவம் பயனுல் - (ஆற்றற்கரிய) தவத்தைப் புரிந்ததன் பயனுக, அடைந்தாற்கு - (தன்னை வந்து சார்ந்தவனுன) வீடணற்கு, அறைந்து - (தேறுதல்) கூறி, இரு தவத்து இளையோற்கு - பெரிய தவத்தினையுடைய இலக்குவனுக்கு, இது இயம்பினன் - இதனை மொழிந்தான். இதனை அடுத்த கவியிற் காண்க.

மனு நெறி - கேள்வி; 'நீதியான்' சுந்தர. 1152, 1153; யுத்த. 327, 356 காண்க. 'கவிஞரினறிவு மிக்காய்' (யுத்த. 1335); 'நீதியுந் தரும நின்ற நிலைமையும் புலமை தானும், ஆதியங் கடவுளாலே யருந்தவ மாற்றிப் பெற்ருய்' (யுத்த. 1339) என்பது கும்பகன்னன் கூற்று. அருந்தவம் - அருமை செயற் கருமை. நல்லறிவு வந்து பெருமானைச் சரண் புகல் வேண்டும் என்ற தூய எண்ணம் பெருந் தவத்தினுல் உண்டாவதாதலாலும், முன்னர் வீடணன் தவம் புரிகையில் பிரமன் கொடுத்த வரத்தினு

லும் கண்டகருன தன் அண்ணன் தொடர்பினை யொழித்து இராமபிரானிடம் சரண் புகுந்தான் ஆதலின், வீடணனை 'அருந்தவப் பயனுலடைந்தான்' எனப்பட்டது. லக்ஷ்மணை லக்ஷ்மி சம்பந்தகா என்றபடி கைங்கரிய லக்ஷ்மியால் அதிட்டிக்கப் பெற்று, நீர் நின்று பிரியாத மீன்போல, இராமபிரான் உடனே தானும் சென்று, பதினுன்கு ஆண்டுகள் ஆகார நித்திரை யின்றிப் பணியாற்றும் பெரும்பேறு பெற்றவன் ஆதலின் இருந் தவத்திளையோர்க்கு' எனப்பட்டது. எல்லாம கடந்த ஞானிகட்கும் பிரிவுத் துன்பம் 'உண்டெனபர், என்றும பிறந்தார் இறப்பர் என்பது உலகியல் கூற்றுகலின், இறந்த தமையன் பொருட்டு இரங்கி வருந்துதல் புலமிக்கவற்குப் பொருந்துவதன்று என்று 'நீதி மனுநெறி யாவையும் பொருந்து கேள்விப் புலமையினேற் கு'ச் சொன்னுன்.

இச் செய்யுள் 'வீடணன் முடிசூட்டு' படலத்தின் முதலாவ தாக மர்ரே பதிப்பில் உள்ளது.

பி-ம். 1. வருந்தோல், வருந்து நிதி, வருநெறி.

2. பொருந்து கோவிற்; புலமையிதாமென.

3. அறம்.

4. இருந்தநல், திருந்தால், இளையோன் முக நோக்கியே. 6

அதிகப் பாடல் :—

வங்க நீள்நெடு வடதிசை வானவன் விமானம்
துங்க மாகவி யெழுபது வெள்ளமும் சூழ்ந்தால்
எங்கு ளாரெனும் இடமுளத தன்மிசையேறிப்
பொங்கு மாநகர் புகுதியிப் பொழுதினி லென்ருன்.

'நீ வாநர வீரர்களுடன் சென்று
வீடணனுக்கு முடிசூட்டுக' என்று
இராமன் இலக்குவனை ஏவுதல்

3894. சோதி யான்மகன் வாயுவின் தோன்றல் மற்
றேதில் வானர வீரரொ டேகிநீ
ஆதி நாயக னுக்கிய நூன்முறை
நீதி யானை நெடுமுடி சூட்டுவாய்.

'சோதியன் மகன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், வாயுவின் தோன்றல் - வாயு குமாரனான அநுமனும், மற்று - மற்றும் உள்ள, ஏது இல் - குற்றமற்ற, வானர வீரரொடு - குரங்கு வீரர்களும் ஆகிய இவர்களுடனே, ஏகி - சென்று, நீ - நீ, ஆதி நாயகன் - எல்லாவற்றிற்கும் முதல்வனான திருமால், ஆக்கிய - வெளியிட்ட, நூல் முறை - (வேதம் முதலிய) நூல்களில் கூறப் பட்ட முறைப்படி, நீதியானை - நீதி நெறி பிறழாதவனான வீடணனுக்கு, நெடுமுடி சூட்டுவாய் - பெருமை சான்ற மகுடத் தைச் சூட்டுவாயாக', என்று கூறினான். அடுத்த செய்யுளுடன் முடிவு கொள்ளும்.

சோதி - சூரியன். தோன்றல் - பெருமையாளன். அல் - பெயர் விகுதி. ஆதி நாயகன் - இங்குத் திருமால் ஆக்கிய நூன்முறை : 'அன்னமா யருமறைக ளறைந்தாய் நீயே' (ஆரணிய. 60). மற்றும் : (பெரியதிருமொழி. 2, 7 : 10 : 9 : 42). (தொல். செய். 146 : நச். உரை). (வி. பா. துருவாச. 11 காண்க. நீதியானை ; (யுந்த. 327) உரை காண்க. வீடணன் சிரஞ்சீவியாதலின் 'நெடுமுடி' எனப் பட்டது. 'நீண்ட முடி வேந்தன்' (சுந்தர. 550) என்று முன் வந்துள்ளமை காண்க. முன்னர் 'ஆழியானவனை நோக்கி' (யுந்த. 445) எனத் தொடங்கும் செய்யுட்கண் 'தாழ்கட லிலங்கை செல்வ நின்னதே' என்று கூறித், தன் இளவலை நோக்கி, 'துஞ்சலில் நயனத்தைய சூட்டுதி மகுடம்' என்று இலக்குவனையே பணித்தமை இங்குக் கருதத் தகும். அங்கு தீர்க்கதரிசியான இராமபிரான் கூறியதை இங்கு உறுதிப்படுத்தவே இளையோனைப் பார்த்து, 'நீதியாளனை நெடுமுடி சூட்டுவாய்' என்றான் என்க. தான் பதினான்கு ஆண்டுகள் வனவாசம் மேற்கொண்டவனாகலின் நாடக் கண் புகுதல் முறையன்று என்று கருதியே இளையவற்கு இவ்வாறு கட்டளை யிட்டான் இராமபிரான் என்க. முன்னர், கிட்கிந்தா காண்டத்தும், சுக்கிரீவனுக்கும் இலக்குவனைக் கொண்டே முடி சூட்டியதும் நகர்ப் பிரவேசம் தனக்குப் பொருத்தமற்றது என்பது நினைந்தே என்க. 'மதிசால் தம்பியை வல்லை யேவினான், கதிரோன் மைந்தனை யைய கைகளால், விதியால் மெளலி மிலைச்சுவா யென' (கிட்கிந்தா. 400) ம் அதன் உரையும் காண்க.

பி - ர். 2. வாநரர் யாவரொடு.

3. ஆதிநான்முகன்.

4. நீதியொடு ; மிலேச்சுக நீள்முடி ; சூட்டென்றான். 2

## இராமன் இலக்குவனுக்கும் ஏனையோர்க்கும் விடையளிக்க, தேவர்கள் வீடணன் முடிசூட்டிற்கு வேண்டுவ செய்யத் தொடங்குதல்

3895. என்று கூறி யிளவலொ டாரையும்
வென்றி வீரன் விடையருள் வேலையில்
நின்ற தேவர் நெடுந்திசை யோரொடும்
சென்று தத்தம செய்கை புரிந்தனர்.

என்று கூறி - என்று மொழிந்து, வென்றி வீரன் - வெற்றி பெற்ற வீரனான இராமபிரான், இளவலொடு - (தன்) தம்பியாகிய இலக்குவனுக்கும், ஆரையும் - ஏனையோர்க்கும், விடை அருள் வேலையில் - அநுமதியளித்து விடுத்த பொழுது, (அச் செய்தியை யறிந்து), நின்ற தேவர் - நின்ற வானவர், நெடு திசையோரொடும் - நீண்டத் திக்குகளின் காவலர்களுடனே, சென்று தத்தம செய்கை புரிந்தனர் - போய் தத்தமக்கியன்ற உதவிச் செயல்களைச் செய்யத் தலைப்பட்டனர்.

விடை யருள்தல் - அநுமதி யளித்தல். வேலை - சமயம்; யுத்த 834; செய்கை - முடி சூட்டிற்கு வேண்டிய உதவிச் செயல்கள் ஆபரணங்கள் முதலியன என்க. செய்கை - கை விகுதி பெற்ற தொழிற் பெயர். தேவர்கள் முடி சூட்டிற்கு ஆவன புரிய உடன்பட்டமை, இராவணனைக் கொல்வதற்காக இராமபிரானுக்கும் இலக்குவன் முதலானோர்க்கும அவன் ஆற்றிய உதவி பற்றி என்க. 'வீடணன் தந்த வென்றி' (யுத்த 3119) என்று இராமபிரானே கூறியுள்ளமை காண்க.

பி - ம். 1. இளவலொடிசாரையும்.
3. திசையாரொடு. 3

## தேவர்கள் முடி சூட்டுவதற்கு வேண்டுவன செய்தல்

3896. சூழ்க டற்புன லும்பல தோயமும்
நீள்மு டித்தொகை யும்பிற நீர்மையும்
பாழி துற்றரி பற்றிய பீடமும்
தாழ்வில் கொற்றத் தமரர்கள் தந்தனர்.

சூழ் கடல் புனலும் - (நிலவுலகைச்) சூழ்ந்துள்ள கடல் நீரையும், பல தோயமும - (மற்றும்) பலவான (கங்கை யமுனே முதலிய) புண்ணிய தீர்த்தங்களேயும, நீள் முடி தொகையும் - நீண்ட கிரீடங்களின் தொகுதியையும், பாழி துற்ற அரி பற்றிய பீடமும்-வலிமை செறிந்த சிங்கத்தினுல் தாங்கப்பட்ட அரியணையையும், பிற நீர்மையும் - மற்றும் முடி சூட்டிற்குத் தேவையான பல பொருந்திய உபகரணங்களேயும், தாழ்வு இல் கொற்றத்து அமரர்கள் - இனி எந்த விதமான தாழ்வும் இருக்கப் பெருதவர்களாய வெற்றியுடன் கூடிய தேவர்கள், தந்தனர் - கொணர்ந்து கொடுத்தார்கள.

தோயம் - புனல்; 'ஏழ்கடல் தனிற்ருேயம், இருநதி பிறவிற்ருேயம்' (யுந்த. முடிசூட்டு. 2); முடித் தொகை - ஐந்து வகைக் கிரீடங்கள். பாழி - வன்மை; 'பாழிய பணைத்தோள் வீர' துற்று - துறுதல் அடர்தல் அல்லது செறிதல்; 'துறுவன சுடுகணை' (யுந்த. 1793) அரி பற்றிய பீடம் - சிங்காசனம். பரம சண்டாளனுன இராவணன் ஒழிந்தமையின், 'தாழ்வில் கொற்றத்தமரர்கள்' எனப்பட்டதென்க. நீண்முடி யென்னப் புணர்தற்பாலது எதுகை நோக்கி, நீள்முடி யெனவே இயல்பாக நின்றது. ழகரத்துக்கு ளகரம் இனவெதுகை. முடித்தொகை யென்ருர்; இராவணன் அணிந்திருந்த பத்து மகுடங்களும் குறித்தற்கென்க.

பி - ம். 1. பல தோசமும். 4

இங்கு அதிகப் பாடல்கள் :—

மாருதி தீச்செல மங்கலம் யாவையும்
மாருதிப் பெயர் கொண்டுடன் வந்தனன்
வீர விற்கை யிளவலவ் வீடணன்
வீரபட்ட மென நுதல் வீக்கினுன். 1

செய்த மாமணி மண்டபத் தேசமுந்
துய்ய நன்மணிப் பீடமும் தோற்றுவித்
தெய்து வானவா........................கம்மி. 2

மேவி நாரத னேமுதல் வேதியர்
ஓவில் நான்மறை யோதிய நீதியில்
கூவி யோம விதிமுறை கொண்டிடத்
தாவில் சங்கொலி யாதி தழைக்கவே. 3

3897. வாச நாண்மல ரோன்சொல மான்முகன்
காசு மாநிதி யுங்கொடு கங்கைசூ
டீச னேமுத லோர்வியந் தேத்திடத்
தேசு லாமணி மண்டபஞ் செய்தனன்.

வாசம் நாண் மலரோன் சொல - நறுமணமிக்க அன்றலர்ந்த (திருமாலின் நாபிக்) கமலத்தில் உதித்தவனான பிரமன் ஏவ, மான் முகன் - மானின் முகத்தினையுடைய மயன் என்பவன், காசும் - அரதனங்களையும், மா நிதியும் கொடு - மிக்க பொன் முதலிய நிதிகளையும் கொண்டு, கங்கை சூடு ஈசனே முதலோர் - கங்கையை (த் தன் சடாபாரத்திலே) அணிந்துள்ள சிவபிரானே முதலான தேவர்கள், வியந்து ஏத்திட - (கண்டு) அதிசயித்துப் பாராட்டுமாறு, தேசு உலாம் மணி மண்டபம் செய்தனன் - ஒளி திகழும் நவமணிகளைக் கொண்டு மண்டபம் இயற்றினன்.

மான் முகன் - மயன்; 'மான் முக நலத்தவன் மயன்' (கிட்கிந்தா. 851); காசு - இரத்தினம். தேசு - தேஜஸ் என்ற வட சொற்றிரிபு; 'பல்கிய கிளையும் தேசும்' (வி. பா. நிரை மீட்சி. 127); இங்கு ஈசன் என்றது சிவபெருமானை, மயன் - அசுரத் தச்சன்; முன்னர் சுந்தர காண்டத்து விசுவகன்மா என்ற தெய்வத்தச்சனைக் கொண்டு இராவணன் இலங்கை நகரை நிருமாணித்தது, தனக்கு விண்ணுலகத்தும் சலுகை உண்டென்று காட்ட என்க. 'தெய்வச் தச்சனைப் புகழ்துபோ' (சுந்தர. 113).

பி - ம். 1. வாசமா ; மாமுகன், வாசவன்.
2. காசுலா நிதியும், காசு மாமணியும்.
3. எய்திடத்.
4. சேர்ந்தனர். 6

இச் செய்யுள் 'சூழ்கடல்' என்றதன் முன் சில பிரதிகளில் உள்ளது.

## இலக்குவன் வீடணனுக்கு முடி சூட்டுதல்

3898. மெய்கொள் வேத விதிமுறை விண்ணுளோர்
தெய்வ நீள்புன லாடல் திருத்திட
ஐய னாணையி னாலிளங் கோளரி
கையி னான்மகு டங்கவித் தானரோ.

மெய்கொள் - சத்தியமான, வேதம் - நான்மறைகளில் கூறப்பட்டுள்ள, விதிமுறை - நியம விதிப்படி, விண்உளோர் - தேவர்கள், தெய்வம் நீள் புனல் ஆடல் திருத்திட - தெய்வத்தன்மை வாய்ந்த சிறந்த தீர்த்தங்களைக் கொண்டு நீராட்டத்தைச் செவ்விய முறையிற் செய்ய, ஐயன் - தலைவனான இராமபிரானுடைய, ஆணையினால் - ஏவலின்படி, இள கோளரி - இளஞ்சிங்கம் நிகர்த்த இலக்குவன், கையினால் - தனது கரத்தால், மகுடம் கவித்தான் - கிரீடத்தை (வீடணன முடியில்) சூட்டினான். அரோ, அசை.

விதிமுறை: 'வேண்டுவமரபி னெண்ணி விதிமுறை யியற்றி' (கிட்கிந்தா. 405); தெய்வ நீள் புனல் - கங்கை யமுனை கோதாவரி சரஸ்வதி நருமதை சிந்து காவேரி முதலியன. ஐயன் - அழகன் எனினுமாம். 'பிறந்தானெனப் பெரிய கோளரி பெயர்ந்தான்' (சுந்தர 83); கவிழ்த்தல் - சூட்டுதல்; 'இளையவற் கவித்த மோலி யென்னையும் கவித்தி என்றான்' (யுத்த. 448): என்று நவரத்னமயமான மகுடத்தின் முன்பு, தன்மீது பாதமலர் சூட்டுமாறு வீடணன் வேண்டினமை காண்க. பொன்னாலாகிய மகுடம் அழியும் மாலைய தென்பதும். எம்பெருமான் திருவடி மகுடம் அழியாப் பேறளிப்பதும் காண்க. கோளரி மகுடம் கவித்தான் எனவே கையினால் என்பது பெறப்படுமேனும், கையினால் என்று விசேடித்தது அவதார புருடனான இலக்குவனுடைய கரத்தின் பெருமை தோணிக்க என்க; (ஒப்பு): 'கையினாலெண்ணீர் நல்கிக் கடன் கழிப்பாரைக் காட்டாய்' (யுத்த. 1341); கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்' (சுந்தர. 1269).

பி-ம். 2. செய்ய; நீர்ப்புனல்; திருத்தினர்.
3. ஆரியனாலினங், ஆணையினாயினங், ஆணையிலங்கிளங். 9

இங்கு அதிகப்பாடல் :—

வேதவோசை விழாவொலி மேலிட
நாததுந்துமி யெங்கு நடித்திட
வேத பாரக ராசி விளம்பிட
ஆதிதேவ ரவர்மழை யார்த்திட.

## வீடணன் அரியணையில் வீற்றிருத்தல்

3899. **கரிய குன்று கதிரினைச் சூடியோர்**
**எரிம ணித்தவி சிற்பொலிந் தென்னவே**
**விரியும் வெற்றி யிலங்கையர் வேந்தனீ**
**டரிய ணைப்பொலிந் தானற மார்த்தெழ.**

கரிய குன்று - கரு நிறத்ததான ஓர் மலை, கதிரினை சூடி - சூரியனைத் தன் உச்சியிற் கொண்டு, எரி - தீயொப்ப ஒளிர்கின்ற, மணி - அரதனங்களில் வைத்து இழைக்கப்பெற்ற, ஓர் தவிசில் - ஒரு பீடத்தில், பொலிந்தென்ன - விளங்கினாற் போன்று, விரியும் வெற்றி - பரந்த வெற்றியை யுடையவனும், இலங்கையர் வேந்தன் - இலங்காபுரியில் உள்ளார்க்கு மன்னனுமாகிய வீடணன், அறம் ஆர்த்து எழ - தருமம் ஆர்ப்பரித்து எழ, நீடு அரி அணை பொலிந்தான - பெருமை வாய்ந்த சிங்காசனத்தின்மீது (முடி யணிந்து) வீற்றிருந்தான். ஏ : அசை.

உவமையணி. கரிய குன்று - நிறத்தானும் பெரு வடிவானும், சலியாத தன்மையானும் வீடணற்குவமை. முதலடிக்கு ; 'திருவடி நிலையைச் சூடிச் செங்கதி ருச்சி சேர்ந்த, அருவரை யென்ன நின்ற வரக்கர் தம்மரசை' (யுத்த. 151) என்றதை ஒப்பிடுக. வீடணன் கருநிறம் ; 'எல்லியும் பகலும் போல' (யுத்த. 426) என்றது காண்க. மகாக் கொடியவன் ஆன இராவணன இறந்துபட, தரும சொரூபி யான வீடணன் முடி சூடினமையின தான் தலையெடுத்தல் கூடும் என்ற மகிழ்வுடன் அறமார்த்து எழுந்தது என்க. 'பனிக்கற் சுரத்துக்கரன் முதலோர் கவந்தப் படையும் பல்பேயும், தனிக்கைச் சிலையும் வானவரும் முனிவர் குழுவும் தனியறனும், இனிக் கட்டழிந்ததரக்கர் குலம் என்றே சுருதி யீரண்டும், குனிக்க, (சுந்தர. 544) என்றது இங்குக் காணத்தகும்.

பி - ம். 1. சூட்டியோர், சூடியே.

3. வேந்தவை, வேந்தேன.

4. நமரார்த்தெழ. 7

## தேவர்கள் முதலியோர் மலர்மாரி சொரிதலும் வாழ்த்தலும்

3900. தேவர் பூமழை சித்தர் முதலினோர்
மேவு காதல் விரைமலர் வேறிலார்
மூவ ரோடு முனிவர்மற் றியாவரும்
நாவி லாசி நறைமலர் தூவினர்.

தேவர் - வானவர்கள், பூமழை - (கற்பகம் பாரிசாதம் முதலிய) மலர்களையும், சித்தர் முதலினோர் - சித்தர் வித்யாதரர் முதலான பதினெண் கணத்தார், மேவு காதல் - பொருந்திய ஆர்வமொடு, விரை மலர் - நறுமணமிக்க பலவகை மலர்களையும், வேறு இலார் - (தம்மில் மாறுபாடில்லாத), மூவரோடு - திருமூர்த்திகளுடன், முனிவர் - முனிவர்களும், மற்று யாவரும் - (மற்றும் அந்தணர் முதலிய) எல்லோரும், நாவில் - தமது நாவினாற் கூறும், ஆசி - ஆசியுரைகளாகிய, நறை மலர் - நல்ல மலர்களையும், தூவினர் - வாரி யிறைத்தார்கள்.

சித்தர் முதலானோர் - பதினெண்கணத்தார். விரைமலர்; நரை - நறுமணம். நறை மலர் - தேனை அகத்துக் கொண்டுள்ள சொன் மலர் என்க. தேன் போன்ற இனிய ஆசிகள். இன்றியமையாத படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய முத்தொழில்களையும் இயற்றும் பிரமன் திருமால் உருத்திரன் என்ற இவர்கள் தம்முள் ஏற்றத் தாழ்வில்லை என்பார். 'வேறிலார் மூவர்' என்றார். ஆசியாகிய நறைமலர் என்க. தேவர்களும் பதினெண்கணத்தாரும் பொழிந்ததால் மலர்கள் இல்லையாக, முனிவர்களும் பிறரும் வாய் மலர்ந்து நல்லாசி வழங்கினர் என்க.

பி - ம். 1. சிந்திச் செறிந்துற.

2. வேறிலா ; மெய்யினர். 8

## முடி சூட்டப் பெற்ற வீடணன் இராமபிரானை அடைந்து தொழுதல்

3901. முடிபு னைந்த நிருதர் முதலவன்
அடிவ ணங்கி யிளவலை யாண்டையந்
நெடிய காதலி னேற்குயர் நீர்மைசெய்
திடிகொள் சொல்ல னநலற்கி தியம்பினன்.

முடி புனைந்த - முடி சூட்டப்பெற்ற, நிருதர் முதலவன் - அரக்கர் தலைவனான வீடணன், இளவலை - இலக்குவனை, அடிவணங்கி - திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, ஆண்டை - அவ்விடத்தில், அ நெடிய காதலினேற்கு - அந்த நீண்ட அன்புடையவனான இலக்குவற்கு, உயர் நீர்மை செய்து - மேன்மையான உபசாரங்களைப் புரிந்து, இடிகொள் - இடிமுழக்கம் போன்ற, சொல்லன் - சொற்களை உடையவனான வீடணன், அநலற்கு - அனலனுக்கு, இது இயம்பினன் - பின்வரும் வார்த்தைகளைப் பகர்ந்தான். இதனை அடுத்த கவியிற் காண்க.

இளவலை அடி வணங்கி என மாற்றுக; அல்: பெயர் விகுதி; யாண்டை - இடம் குறித்து; 'எம்முன் யாண்டையான்' (அயோத்தி. பள்ளியடை. 90); கொள் - உவம உருபு; இங்கு அரக்கர்க்கு இயல்பாக உள்ள வெடி குரலை அரக்கனான வீடணனுக்கும் ஏற்றிக் கூறப்பட்டது என்க. 'அனலற்கியம்பினன' அனலன் வீடணனுடைய அமைச்சன்; 'அனலனு மநிலனு மரன் சம்பாதியும்' (யுத்த 319) என்றது காண்க. இங்கு 'சொல்லனவற்கியம்பினன' என்று கொண்டு இலக்குவர்க்குக் கூறியதாகக் கூறுவர். இராமபிரானே இன்னும் நகர் சென்று அரசு ஏற்காத நிலையில், எவ்வகையிலும் தனக்குத் தொடர்பில்லாத அரக்கராட்சியை இலக்குவன ஏற்குமாறு கூறுதல் பொருத்தமன்று எனக. நிழல் போல் இராகவனை விட்டுப் பிரியாத இலக்குவன் வீடணனுக்குப் பிரதியாக இலங்கையரசினை ஏற்றல் கூடுமோ? எனவே அனலன் மந்திரியாதலின் அவன் ஏற்றல் முறை எனபதும் காண்க.

பி - ம். 1. புனைந்தங்கிருந்த; புனைந்தபின் வீடணன் முந்துவந்து.
2. அடிவணங்க; யாண்டையின், ஆண்டுறு; யாண்டையான்.
3. காதலினேர்க்கு; உறு; நீர்மையின், நீர்மைசேர்.
4. சொல்லனவற்கியம்பினன், சொல்லற்கினிதினியம்பினன். 9

3902. விலங்கல் நாண மிடைதரு தோளினுய்
இலங்கை மாநகர் யான்வரு மெல்லைநீ
கலங்க லாநெடுங் காவ லியற்றெனு
அலங்கல் வீர னடியிணை யெய்தினன்.

'விலங்கல் நாண - மலையும் (உவமையாக மாட்டாது) வெட்க முறும்படி, மிடைதரு தோளினுய் - (பருமனும் உரமும்) செறிந்த தோள்களையுடைய அநலனே! யான் - நான், (இராமபிரானிடம் போய்), இலங்கைமாநகர் வரும் எல்லை - இலங்கை மாநகரத்திற்கு மீண்டு வருமளவும், நீ - நீ, கலங்கலா - கலக்கமுறாத வண்ணம், நெடு காவல் இயற்று - பெரிய (இந் நகரத்தைக்) காவல் புரிவாயாக', எனு - என்று, அலங்கல் வீரன் அடி இணை எய்தினன் - (வீடணன்) வெற்றி மாலை புனைந்து நின்ற மகாவீரனை இராமபிரான் திருவடியினிடம் வந்தடைந்தான்.

விலங்கல் நாண; 'நாகமு நாகமு நாண நடந்தான்' (பால. கார்முக. 33); (ஒப்பு): 'பொன்னுருக்கொண்ட மேரு புயத்திற்கு முவமை போதாத், தன்னுருக் கொண்டு நின்றான்' (கிட்கிந்தா. 73); விலங்கல் - மலை. பூமிக்குக் குறுக்கே நிற்பது என்ற காரணக்குறி. மற்றும்: 'ஊர்க்கு ஒருபுறமாக விலகி நிற்பதெனக் கூறுவாரும் உளர்; 'இருபுனலும் வாய்ந்த மலையும்' (குறள். 737) என்ற திருக்குறளில், 'வாய்ந்த மலை' என்பதற்குப் பரிமேலழகர் இடையதன்றி ஒருபுடையதாதலை மலைக்கு வாய்ப்பாகக் கூறியமை உணர்க' என எழுதுதல் காண்க. இராமபிரானைக் கண்டு வரும்வரையில், இலங்கை ஆட்சியை மேற்கொள்ளுமாறு வீடணன அநலற்குக் கூறினன். இது ராஜதந்திரம்; ஒரு சிறு பொழுதும் அராஜகம் நிகழ்தல் கூடாது. இங்கு, 'நிரம்பினன் ஒருவன் காத்த நிறையரசிறுதி நின்ற, வரம்பிலா ததனை மற்றோர் தலைமகன் வலிதிற் கொண்டால், அரும்புவ நலனுந்தீங்கும்' (கிட்கிந்தா. 427) என்ற செய்யுள் குறிக்கொள்ளத் தக்கது. கலங்கலாமல் என்றது கலங்கலா என நின்றது. அலங்கல் - வாகை மாலை.

பி - ம். 1. விலங்கருந் தோளினுய்.
2. சூழ்வரும்.
3. கலங்கலாய்; காவலினுற்றெனு.

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

வீர மாமுடி சூடிய வீடணன்
வீர ராகவன் றுளிணை மேவிட
ஆர மார்பொ டமுந்திடப் புல்லினன்
ஆரி னுனு மறிவரு மாதியான்.

## சுக்கிரீவனேடும் அங்கதனேடும் வந்து வணங்கிய வீடணனிடம் இராமன் ஒன்று சொல்லத் தொடங்குதல்

3903 குரக்கு வீர னரசிளங் கோளரி
அரக்கர் கோமக னேடடி தாழ்தலும்
பொருக்கெ னப்புகல் புக்கவற் புல்லியத்
திருக்கொண் மார்ப னினையன செப்பினன்.

அரக்கர் கோமகன் - இராக்கத வேந்தனன வீடணன், குரக்கு வீரன் - வானரர்களிற் சிறந்த வீரனய், அரசு - அரசன் என்று பெயர் பெற்ற சுக்கிரீவனேடும், இள கோளரி - (வானரர்கட்கு) இளவரசனன, வலிய சிங்கம் போன்ற அங்கதனேடும், அடி தாழ் தலும் - (இராமபிரானுடைய) திருவடிகளில் வணங்கிய அளவிலே, அ திருகொள் மார்பன் - அந்தத் திருமகளைத் தன் மார்பகத்து ஏற்ற இராமபிரான், பொருக்கென - விரைவாக (வந்து), புகல் புக்கவற்கு - (தன்னைச்) சரணம் அடைந்தவனன வீடணனை, புல்லி - அணைத்துக் கொண்டு, இனையன செப்பினன் - இச் சொற் களைப் பகர்பவனுனன். அவற்றை அடுத்த செய்யுளில் காண்க.

குரங்கு + வீரன் - குரக்கு வீரன். 'பொருகின்றனர் கோளரி போல்வார்' (யுத்த. 1898); பொருக்கென - விரைவுக் குறிப்பு. பிரமாத்திர. 190; புகல் புகுதல் - சரணடைதல்; 'புகல் புகுந்தில ரேற்புறத் தண்டத்தின்' (ஆரணிய. 134); திருக்கொள் மார்பன் - இராமபிரான். அரசோடு, இளங்கோளரியோடு என்று ஒடு என்ற மூன்றனுருபு ஈரிடத்தும் கூட்டப்பட்டது. நெறி பிறழ்ந்த இராவணன் அரண்மனையை விட்டுப் புகலிடமான இராம

பிரானிடம் விரைந்து வந்தான் என்பது தோன்ற, 'பொருக்கென எனப்பட்டது.

பி - ம். 1. வேந்துமிளவலுங் ; கோதிலா.
2. தாழலும், தாழ்தர.
3. புக்கனர் புல்லிய, புக்கவனைத்தழீஇத்.
4. செப்புவான்.

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

ஆதி நாளி லருண்முடி நின்னதென்
றோதி னேனவை யுற்றுள துத்தம
வேத பாரகர் வேறுளர் யாவரும்
ஓது நீதி யொழுக்கி னொழுக்குவாய்.

## இராமபிரான் வீடணனுக்கு நீதி கூறுதல்

3904. உரிமை மூவுல குந்தொழ வும்பர்தம்
பெருமை நீதி யறன்வழிப் பேர்கிலா
திருமை யேயர சாளுதி யீறிலாத்
தரும சீலவென் றுன்மறை தந்துளான்.

மறை தந்துளான் - வேதங்களை ஆதியில் வெளியிட்டருளிய வனான திருமாலின் திருவவதாரமாகிய இராமபிரான், (வீடணனை நோக்கி) 'ஈறு இலா தரும சீல - அழிவற்ற அறவொழுக்கத்துடன் கூடியவனே! மூஉலகும் - மூன்று உலகத்துள்ளாரும், தொழ - வணங்க, உம்பர் தம் பெருமை - தேவர்களின் பெருந்தன்மைக்கும், நீதி - (அரச) நீதி நெறிக்கும், அறன்வழி - தரும நெறிக்கும், உரிமை - உரிய நிலையில் நின்று, இருமையே - இம்மை மறுமைப் பயன்களான புகழும் புண்ணியமும், பேர்கிலாது - நீங்காமல் நிலை பெறுமாறு, அரசு ஆளுதி - (உனக்கு உரிய இலங்கை இராச்சியத்தை) ஆட்சிபுரிவாயாக.

உரிமை மூவுலகும்; (ஒப்பு): 'குடிமை மூன்றுலகும் செய' (சுந்தர. 443); இருமை - இம்மை மறுமை. ஈறிலா தரும சீல 'கரு நிறத்தோர் பால், வெளுத்து வைகுதல் லரிதென வவருரு மேவி.

ஒளித்து வாழ்கின்ற தருமமன்னன்' (சுந்தர. 231); 'நீதியுந் தரும நின்ற நிலைமையும் புலமை தானும், ஆதியங் கடவுளாலே யருந்தவ மாற்றிப் பெற்றாய்' (யுத்த. 1339) என்பது கும்பகன்னன் கூற்று. இச்செய்யுளும் அதன் உரையும் காணத்தகும். மற்றும் யுத்த. 349, 358, 403-ம் அவற்றின் உரையும் காண்க. 'நீதி அறன் முதலிய வற்றைக் கடைப் பிடியாது உன் தமையன் இருமையு மிழந்தான் அவனைப் போலன்றி சன்மார்க்கத்திலேயே நின்று நல்ல முறையில் அரசாள்வாயாக' என்றான் இராமபிரான். சிரஞ்சீவிப் பட்டம் பிரமனிடம் பெற்றவன் ஆகலின் 'ஈறில்லாத் தருமசீல' எனப் பட்டது. மறை தந்துளான் - வேதங்களைக் கவர்ந்து சென்ற சோமுகாசுரனை வானவர் வேண்டுகோட்கிணங்க, திருமால் மீனுரு வெடுத்துக் கொன்ற பின்பு, தான்மீட்டுக் கொணர்ந்த அவ் வேதங் களை நான்முகனுக்கு அன்ன வடிவிலிருந்து கூறியருளினன் என்பது வரலாறு. 'அன்னமா யருமறைக ளறைந்தாய் நீயே' (ஆரணிய. 60); 'அன்னமு மீனும் ஆமையு மரியும் ஆயவெம் மாயவனே' (பெரிய திரு. 2, 7, 10); 'அன்னமாய் நூல்பயந்தாற் காங்கிதனைச் செப்புமினே' (பெரிய திரு. 9, 4, 2); மற்றும் தொல். செய். 146 நச். உரை; 'அந்தவன்னம் சதுர்மறையு மன்னமாகி யருள் செய்தோன்' (வி. பா. துருவாச. 11); பேர்கிலாது என்பதை உரிமை இருமை இரண்டிற்கும் கூட்டுக. புதிதாக அரசுரிமை பெற்றவர்க்கு ஆன்றோர் நீதி கூறுதல் மரபு; அதனை ஒட்டியே இராமபிரான் வீடணனுக்குக் கூறினன் என்க. இராமபிரான் சுக்கிரீவற்குக் கூறிய அரசியல் நீதியும், இளவரசுப் பட்டம் சூட்டு தற்கு முன் வசிட்ட முனிவன் இராமபிரானுக்குக் கூறிய அரசியல் நீதியும் இங்குக் குறிக்கொள்ளத் தகும். முன்னது கிட்கிந்தா காண்டத்தும் பின்னது அயோத்தியா காண்டத்து மந்திரப் படலத்தும் காண்க. கவிராட்சசன் கச்சியப்ப முனிவர் இயற்றிய விநாயக புராணம் அரசியற்கைப்படலத்துச் சோம காந்தன் தன் மகனுக்குக் கூறிய நீதிகளும் இங்குக் காண்டற்குரியன.

பா - ம். 1. உருமை; மூன்று; ஓங்குமுன்.

3. இருமையும், இருமையேசய்.

3905. பன்னு நீதிகள் பற்பல கூறிமற்
றுன்னு டைத்தம ரோடுயர் கீர்த்தியோய்
மன்னி வாழ்கென் றுரைத்தடன் மாருதி
தன்னை நோக்கினன் தாயர்சொல் நோக்கினான்.

தாயர் சொல்நோக்கினான் - (தனது மாற்றாந் தாயான) கைகேயி னது கட்டளையைப் போற்றி ஒழுகியவனான இராமபிரான், பன்னும் பற்பல நீதிகள் - (ஆன்றோர்கள்) விடாது வற்புறுத்திக் கூறும் பலவகையான நீதிகளை, கூறி - சொல்லி, மற்று - பின்னும், (வீடணனைப் பார்த்து) 'உயர் கீர்த்தியோய் - மேன்மையான புகழினையுடையாய், உன் உடைத் தமரோடு மன்னி - உன்னுடைய இனத்தாருடன் கூடி, வாழ்க - வாழ்வாயாக', என்று - என்று, உரைத்து - பகர்ந்து, அடல் மாருதி தன்னை - வலிமை சான்ற அநுமனை, நோக்கினன் - பார்த்தான்.

பன்னுதல் - விடாது கூறுதல்; 'என்ன பன்னிப் பன்னிப் பேசுகிறாய்' என்ற வழக்கும் காண்க. 'என்னப் பன்னி' (யுத்த. மீட்சி. 218); 'முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும், பன்னுமா மொழிப் பாரதப்' (வி. பா. சிறப்பு. 8); தமர் - தம்மவர், உறவினர்; 'தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல், வன்மையு ளெல்லாந் தலை' (குறள். 444); ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை, பெருஞ்செல்வ முற்றக் கடை' (குறள். 837); 'யாக்கை தமர்க் கொழிய நீத்து' (நாலடி. 30); உயர் கீர்த்தி - வினைத் தொகை. தாயர் சொல் நோக்கினான்; 'தாயுரை கொண்டு தாதை யுதவிய' அயோத்தி. குகப். 37); 'மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ' (அயோத்தி. கைகேசி. 110); தாயர் சொல்; 'ஆழி சூழுலகமெல்லாம்' (அயோத்தி. கைகேசி. 107) என்று தொடங்கும் கவி.

பி - ம். 2. உன்னுடைத்தவரோடு, உன்னுடைந்தவரோடு; கீர்த்தியின், கீர்த்தியே.
3. வாழ்க வரைத்திடம், வாழ்கென்றுரைத்தனன்.
4. தாய் சொலல், தாய் சொலே. 13

வீடணன் முடிசூட்டுப் படலம் என்று ஓர் பிரதியில் உள்ளது. இக் கவியில் விபீஷணன் அபிஷேகப் படலம் முடிய, அடுத்த

பாடல் முதல் 'பிராட்டி திருவடி தொழுத படலம்' சில பிரதிகளில் தொடங்குகின்றது.

இங்கு ஓர் அதிகப் பாடல்:—

வஞ்ச கக்கொடி யான்முனம் வவ்விடப்
பஞ்ச ரக்கிளி யென்னப் பதைப்பவன்
நெஞ்சி னிற்றுயர் நீங்கிய தென்றுநீ
அஞ்ச னைப்புதல் வாவருள் வாயென்ருன்.

ஒரு பிரதியில் இப்பாடலின் பின் சீதாபிராட்டி திருவடி தொழுத படலம் தொடங்குகின்றது.

## இராமன் அநுமனிடம் சீதைக்குச் செய்தி கூறி விடுத்தல்

3906. இப்பு றத்தின வெய்துறு காலையில்
அப்பு றத்ததை யுன்னி யனுமனைத்
துப்பு றச்செய்ய வாய்மணித் தோகைபால்
செப்பு றிப்படிப் போயெனச் செப்பினன்.

இ புறத்து - இந்தப் பக்கத்தில், இன - இப்படிப்பட்ட செயல்கள், எய்துறு காலையில் - நிகழாநின்ற போதில்; அ புறத்ததை - அப்பால் நடைபெற வேண்டியதை, உன்னி - ஆராய்ந்து, அநுமனை - மாருதியை (நோக்கி), 'துப்பு உறுஅ செய்யவாய் மணி தோகை பால் - பவளம் போன்ற அந்தச் சிவந்த வாயையுடைய அழகிய மயில் போன்ற சாயலளான பிராட்டியினிடம், இ படி போய் - இங்கு நடந்த செய்திகளை, செப்பு உறு - சொல்வாயாக', என - என்று, செப்பினன் - சொல்லினன்.

இப்புறத்து இன என்று பிரிக்க. துப்புறழ் செய்யவாய்; துப்பு - பவளம். 'துப்பழி செவ்வாய் வஞ்சியை' (ஆரணிய. 729); 'பவளமும் கிடையும் கொவ்வைப் பழனும்' (கிட்கிந்தா. 768); தோகைபால் - கூந்தற் கற்றையாலும் சாயலாலும் பிராட்டிக்கு மயில் உவமை. 'மயிலுடைச் சாயலாளை' (ஆரணிய. 638); 'ஆடுகின்ற மா மயிலினு மழகிய குயிலே' (அயோத்தி. சித்திரகூடப். 12);

துப்பு உறு அ செய்ய வாய்; என்று பிரிக்கப்பட்டது. அச் செய்ய வாய் - அழகிய சிவந்த வாய்; 'அவ்வாய் வளர்பிறை' (பெரும்பாண். 412); 'அவ்வித ழவிழ்பதம்' (நெடுநல். 41); 'அவ்வாங்குந்தி' (குறிஞ்சிப். 140); என்ற இவற்றிற்கு நச்சினார்க்கினியர் உரை காண்க. மணி - நீல மணியுமாம். செப்புறு - ஏவல்.

பி - ம். 1. இப்புறத்தின்ன செயலுறும் வேலையில், இப்புறந்தினி தெய்துறு மெல்லையில், இப்புறத் தின்னதெய்துறு காலையில், இப்புறத்தின செய்கையிக் காலையென்று.

2. அப்புறத்தினே! உன்னும்.

3. துப்புற; பெருந் தோகை.

4. படியோய். 14

இங்கு 'பிராட்டி திருவடி தொழும் படலம்' ஆரம்பம் 'என்று ஓர் பிரதியில் உள்ளது.

## அநுமன் பிராட்டியைத் தொழுது சோபனம் கூறிச் செய்தியையும் சொல்லுதல்

3907. வணங்கி யந்தமின் மாருதி மாமலர்
அணங்கு சேர்கடி காவுசென் றண்மினுன்
உணங்கு கொம்புக் குயிர்தரு நீரெனச்
சுணங்கு தோய்முலை யாட்கிவை சொல்லுவான்.

அந்தமில் மாருதி - சிரஞ்சீவியான அநுமன், வணங்கி - (இராம பிரானை) வணங்கி, (விடையேற்றுப் போய்), மாமலர் அணங்கு - சிறந்த தாமரை மலரில் வதியும் பெண் தெய்வமும், திருமகள் அமிசமுமான சீதாபிராட்டி, சேர் - (சிறை) சேர்ந்திருந்த, கடி - காவலமைந்த, காவு சென்று அண்மினுன் - சிஞ்சு பவனத்தை அணுகினவனாய், உணங்கு கொம்புக்கு - வாடியுலர்ந்த பூங்கொம்புக்கு, உயிர் தரு நீர் என - (மீளத்) தழைப்பதற்குக் காரணமான தண்ணீர் போன்று, சுணங்கு தோய் முலையாட்கு - அழகிய தேமல் படர்ந்துள்ள தனங்களையுடைய சீதாதேவிக்கு, இவை சொல்லுவான் - (நிகழ்ந்த) இச் செயல்களை பகர்வான் ஆயினான். அநுமன் கூறியதை 3909 - 3911 ல் காண்க.

பிரமன் பிராட்டியார் இராமபிரான் முதலானோர்களின் பூரண ஆசி பெற்றுத் தீர்க்காயுளுடன் கூடியவனாதலின் 'அந்தமில் மாருதி எனப்பட்டான். 'ஈறில்லான்' (சுந்தர. 606); 'உலகேழ் தேயினு மொருதன் புகழிறை தேயாதான்' (சுந்தர. 968); 'ஊழி தோறு முயர்வுறுங் கீர்த்தியான்' (சுந்தர. 429); 'சாகா வரத் தலை வரிற்றிலக மன்னன்' (சுந்தர. 85); என்பன காண்க. 'ஒருநாளும் விளியாநாளும் உறுக' (உந்தர. அநுமப் 38) என்பது பிரமன் கூற்று. 'ஊழியோர் பகலா யோதும் யாண்டெலா முலக மேழும், ஏழும் வீவுற்ற ஞான்று மின்றென விருத்தி' என்பது பிராட்டி வாழ்த்தியது. 'ஒன்று மின்னல் நோயுறுகிலாது நீ, என்றும் வாழ்தியாலி னினி தெனேவலால்' (யுத்த. 2750) என்பது இராமபிரான் கூறியது. 'மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகைநாளீர்' (கிட்கிந்தா. 986); 'வெப்புறு செந்தீ நீர் வளியாலும் விளியாதீர், செப்புறு தெய்வப் பல் படை யாலும் சிதையாதீர்' (கிட்கிந்தா. 987); 'ஓதி யுணர்ந்தீர் ஊழி கடந்தீர்' (கிட்கிந்தா. 992) என்பன சாம்பன் கூற்று. 'மாருதிக் கில்லை யன்றே மங்கை நின் வரத்தினாலே ஆருயிர் நீங்கல்' (யுத்த. 2632) என்பது திரிசடை கூறியது. 'முன்னைத்தேவர் தம் வரங்களும் முனிவர் தம் மொழியும், பின்னைச் சானகி யுதவியும் பிழைத்தன' (யுத்த. 2568) என்று இராமபிரான் நொந்து கூறியதும் அதன் உரை விளக்கமும் இங்குக் காணத்தகும். அணங்கு - தெய்வப் பெண்; தன்னுடைய பேரெழிலால் பிற மாதர்களை வருத்துபவள் என்றும் கூறுவர். கடி என்னும் உரிச்சொல், காப்பு, கூர்மை, முதலிய பல பொருள்களைக் குறிக்கும். கா - சிஞ்சு பவனம். 'சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத் தானரோ' (சுந்தர. 950) என்றது காண்க. உணங்கு கொம்புக் குயிர் தரு நீர்' உவமையணி. 'இழைந்த நூலிணை மணிக்குடஞ் சுமக்கின்ற தென்ன, குழைந்த நுண்ணிடைக் குவியிள வனமுலைக் கொம்பே' (அயோத்தி. சித்திர கூடப். 9); 'செம்பொனாற் செய்து குலிசமிட் டெழுதிய செப்போர், கொம்பார்தாங்கிய தெனப்பொலி வனமுலைக் கொடியே' (அயோத்தி. சித்திரகூடப். 28).

பி-ம். 1. வணங்கியே நின்ற, வணங்கியேகியே, வணங்கியேகிய, வணங்கி யெய்திய ; வாரணம்.

2. இணங்கு ; தன், தண் ; எய்தினன்.

3. உயிர்பெறு, வரு.

4. முலையாட்கவை ; சொல்லினன்.

3908. பாடி னுன்திரு நாமங்கள் பன்முறை
கூடு சாரியிற் குப்புற்றுக் கூத்துநின்
ருடி யங்கை யிரண்டு மலங்குறச்
சூடி நின்றனன் குன்றன்ன தோளினுன்.

குன்று அன்ன தோளினுன் - மலையொத்த தோள்களை யுடைய வனுன அநுமன், திரு நாமங்கள் பல்முறை பாடினுன் - (இராம பிரானுடைய) திருப்பெயர்களைப் பலமுறை சொல்லிக் கானம் செய்து கொண்டு, கூடு சாரியில் - பொருந்திய வலசாரி இடசாரி முறையில், குப்புற்று - குதித்து, நின்று கூத்து ஆடி - நின்று கூத்தாடி, அம் கை இரண்டும் அலங்குற - அழகிய கைகள் இரண்டையும் கம்பிக்குமாறு குவித்து, சூடி - தலைமேல் வைத்துக் கொண்டும், நின்ருன் - (பிராட்டியின்) எதிரில் நின்ருன்.

இராம வென்றிரண்டெழுத்து, நன்மையும் செல்வமும் நாளும் நல்குமாதலின், திருநாமங்கள் பாடினுன் எனப்பட்டது. சாரி - இடசாரி வலசாரி. குப்புற்று - குதித்து ; 'இப் பேரார்கலிகுப்புற்று' (கிட்கிந்தா. 983) ; 'குப்புறி னண்டத் தப்புற மேயுங் குதிகொள்வீர்' (கிட்கிந்தா. 987) ; அலங்குதல் அசைதல் அல்லது நடுங்குதல். மிகப் பெரியாரிடம் அணுகிப் பணியும்கால் ஏற்படும் மெய்ப்பாடு களுள் ஒன்று. அளவு கடந்த மகிழ்ச்சி காரணத்தாலும் நிகழும். 'மெய்தானரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென், கைதான் தலை வைத்து' (திருவாச. திருச்சத. 1) ; குன்றன்ன தோளினுன் ; 'எம்மலைக் குலமுந் தாழ விசை சுமந்தெழுந்த தோளான்' (கிட்கிந்தா. 59) ; இச் செய்யுளுடன், 'வந்தடி வணங் கினள் வழங்கு மோதையள், அந்தமி லுவகைய ளாடிப் பாடினள்' (பால. கார்முகப். 57) என்ற நீலமாலை செயலை ஒப்பு நோக்குக.

பி - ம். 1. மெய்ப்படித்தல மண்டலம்.

2. சாரிகைக் கூத்துக் குனித்து நின்றுர் சாரிகை கொட்டிக் குனித்து நின்று, சாரியிற் கூட்டிக் குனித்து நின்று, சாரிகைக் கொட்டிக் குனித்து நின்று, சாரியிற் கூட்டிக் குனித்து நின்று.

3. இரண்டு மிணங்குற.



இச் செய்யுள் சில பிரதிகளில் 'ஏழை சோபனம்' என்றதன் பின் உள்ளது.

3909. ஏழை சோபன மேந்திழை சோபனம்
வாழி சோபன மங்கல சோபனம்
ஆழி யான வரக்கனை யாரியச்
சூழி யானை துகைத்தது சோபனம்

'ஏழை - பேதாய்! சோபனம் - நினக்கு மங்கலம் உண்டாயிற்று; ஏந்திழை சோபனம் - தரித்த அணிகளை உடையாளே! சோபனம் - சோபனம்; வாழி சோபனம் - வாழ்வாயாக; உனக்கு மங்களம்; மங்கலம் சோபனம் - மங்களத்தின்மேல் மங்களம்; ஆழியான - (இய பண்புகளும் செயலும்) நிறைந்த, ஆரியர் சூழியானை துகைத்தது - இராமபிரானுகிய முகபடாத்தினையுடைய பட்டத்து யானை (காலினால்) மிதித்து அழித்து விட்டது.

ஏழை - மகளிர்க்குரிய நாற்பண்புகளில் முதன்மையான பேதைமைக் குணம். 'பேதைமை யென்பது மாதர்க்கணிகலம்' என்றது காண்க. சோபனம் - வடசொல்; மங்கல மொழி கூறுகின்றேன் எனினுமாம். ஏந்திழை - பண்புத்தொகை யன்மொழி; ஆழி; வரம்பு அல்லது எல்லை எனினுமாம்; 'பெருங்கடற் காழி யனையன்' (புறநா. 330); ஆரியன் - சிரேட்டன் என்று பொருள் படும் ஓர் சொல். 'சூரியன்மர பிற்குமொர் தொன்மறு, ஆரியன் பிறந் தாக்கினை யாமரோ' (கிட்கிந்நா. 316); 'மங்கலம் சோபனம்' (நாச்சியார் திருமொழி). உருவகம்.

:9 - ம். 2. மங்கலம்.
3. ஆழியானைய; அண்ணலாருெ.
4. தொலைந்தது. 17

இங்கு சில அதிகப் பாடல்கள் :—

மங்கை சோபன மாமயில் சோபனம்
பங்க யத்துறை பாவையே சோபனம்
மங்குல் வாளி யரக்கனை யாரியச்
சிங்க மின்று சிதைத்தது சோபனம். 1

வல்லி சோபன மாதரே சோபனம்
சொல்லி னல்லநற் ருேங்கையே சோபனம
அல்லி ஞளி யரக்கனை யாரிய
வல்லி யங்கள் வதைத்தது சோபனம். 2

அன்னை சோபனம் ஆயிழை சோபனம்
மின்னி னுண்ணிடை மெல்லியல் சோபனம்
அன்ன வாளி னரக்கனை யாரிய
மன்ன னின்று வதைத்தது சோபனம். 3

நாறு பூங்குழ ஞயகி சோபனம்
நாறு பூங்குழ ஞரியே சோபனம்
ஆறு வாளி யரக்கனை யாரிய
வேறு மின்று மெரித்தது சோபனம். 4

சொன்ன சோபனம் தோகை செவிபுக
அன்ன முன்னி யநுமனை நோக்கியே
அன்ன போரி லறிந்துள தையநீ
இன்ன மின்ன மியம்புதி யாலென்ருள். 5

3910 தலைகி டந்தன தாரணி தாங்கிய
மலைகி டந்தன பொன்மணித் தோள்நிரை
அலைகி டந்தன வாழி கிடந்தன
நிலைகி டந்த ருடல்நிலத் தேயென்ருன்.

'தலை - (அந்த இராவணனுடைய) தலைகள், தாரணி தாங்கிய - பூமியைத் தாங்குகின்ற, மலை கிடந்து அன - மலைகள் (விழுந்து) கிடந்தன போல, கிடந்தன - (கீழே வீழ்ந்து) கிடந்தன; பொன் மணி தோள் நிரை - பொன் அணியும் இரத்திஞபரணமும் அணிந்த அவனுடைய தோள் வரிசைகள், ஆழி அலை கிடந்து அன கிடந்தன - கடலிற் பொருந்தினவாகிய அலைகள் போலக் கிடந்தன; உடல் - அவனுடைய உடல், நிலத்தே - பூமிமீது விழுந்து, நிலை கிடந்த - அசைவற்றுக் கிடந்தன', என்ருன் - என்று மொழிந்தான் அநுமன். ஏ : அசை.

தாரணி; 'தந்தை சொல்லைத் தலைக்கொண்டு தாரணி' (ஆரணிய. 211) தரணி என்ற வடசொல்லின் விகாரம். பருமன் பற்றி மலையையும், நீண்டு உயர்ந்த உதிரப் பெருக்கிற் கிடந்து வரிசை வரிசையாகப் புரண்டமையின் அலையும் உவமை கூறப் பட்டன. தாரணி தாங்கிய மலை - நிலத்தில் மிகுந்த ஆழத்தில் இருந்து பூமியைத் தாங்குவதால் தாரணி தாங்கிய மலை எனப் பட்டது. பூதரம் என்ற வடசொல் இப் பொருட்டாதல் காண்க. நிலை கிடந்த - கிடந்ததென்பதன் விகாரம். இராவணன் தலைகளும் புயங்களும் கடலும் முறையே மலை அலை கடல் போன்று கிடந்தன என்க. 'தோளெனு மலைகிடந்த' (2, 3) 'திரைக்கையா லடி வருடப்பள்ளி கொள்ளும்' (பெருமாள் திருமொழி. 1) என்ற இடத்தும் அலையைக் கையாகக் கூறியது காண்க.

பி - ம். 1. தலை கிடந்ததும்.
2. மலை கிடந்தது; தோளெனும்.
3. அலை கிடந்தன; கிடந்ததும் வாளி.
4. கிடந்ததுடல்; அநிலத்து. 18

3911. அண்ண லாணையின் வீடண னுமறக்
கண்ணி லாதவன் காதல் தொடர்தலால்
பெண்ண லாது பிழைத்துள தாகுமென்
றெண்ண லாவதோர் பேரில தாலென்றான்.

'அண்ணல் - பெருந்தகையான இராமபிரானுடைய, ஆணை யின் - கட்டளையினாலும், வீடணன் ஆம் - விபீஷணனாகிய, மறம் கண் இலாதவன் - கொடிய இயல்பில்லாதவனுடைய, காதல் - அன்பு, தொடர்தலால் - இடைவிடாமல் இருந்ததனாலும், பெண் அலாது பிழைத்துளது ஆகும் - பெண்பால் ஒழியப் பிழைத் துள்ளதென்று, என்று - என்று, எண்ணல் ஆவது பேர் இலது - நினைக்கத்தக்கவர்கள் யாரும், (இலங்கை மாநகரில்) இல்லை யாயிற்று', என்றான் - என்று சொன்னான். ஆல்: அசை.

இலங்கையில் பெண்பாலார் தவிர, ஆண்பாலாராகப் போர்க் கண் சென்றவர் அனைவரும் இறந்தனர் என்பது கருத்து. மறக்

கண் - கொடிய கண். மறக் கண்ணிலாதவன் - சீலன். இராம பிரானுடைய சூழுறவும், அதற்குத் துணையாக இருந்த வீடண னுடைய பேரன்புமேதான் இராவணாதி அரக்கன் ஒழிந்ததற்குக் காரணங்கள் என்று கூறப்பட்டது. 'வீடணன் தந்த வென்றி' ((யுத்த. இந்திர. 71); என்று இராமபிரானே கூறுவது காண்க. போரில் பெண்பாலரைக் கொல்வது அக்காலத்து வழக்கில்லை. இதனை 'ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும், பெண்டிரும் பிணி யுடையிரும்' (புறநா. 9) என்பது கொண்டு காண்க. மற்றும் தொல்:புறத் திணையியல் (90) உரையில் 'சிறப்புடை அரசியலாவது' எனத் தொடங்கும் பகுதியையும் காண்க. எண்ணலாவதோர் பேர் - எண்ணத்தக்க பேர்கள்.

பி - ம். 1. ஆணையால் ; விடணனுமகற்.

2. கண்ணனுனவன், கண்ணலாதவன் ; கால் தொடர்ந்தானலால்.

3. பிழைந்துள.

4. இலதாம் ; இலவாம். 19

## அச் செய்தி கேட்ட பிராட்டியின் நிலை

3912. ஒருக லைத்தனி யொண்மதி நாளொடும்
வருக லைக்குள் வளர்வது மானுறப்
பொருக லைக்குலம் பூத்தது போன்றனள்
பருக லுற்ற வமுது பயந்தநாள்.

பருகல் உற்ற - பருகுதற்குரிய, அமுது பயந்த நாள் - அமுதம் போன்ற அவ் வார்த்தைகளை, (அநுமன் பிராட்டியிடம்) சொன்ன பொழுது, (அவள்) ஒருகலை தனி ஒள் மதி - ஒற்றைக் கலை யொன்றையேயுடைய ஒள்ளிய பிறைச் சந்திரன், நாளொடும் - நாள் தோறும், வரு கலைக்குள் வளர்வது - ஒவ்வொன்றாய்த் தோன்றும் கலையில் வளர்வதாகிய, மான் உற - மான் பொருந்துதலால், (அங்ஙனம் களங்கமாகிய மான் தோன்றுமலிருக்கும் பொருட்டு), பொரு கலைகுலம் பூத்தது போன்றனள் - நெருங்கிய அக் கலைகள் அனைத்தும் ஒருசேர நிரம்பப் பெற்றதை ஒத்தனள்.

அமுது - அநுமன் கூறிய இனிய சொற்கள். அவற்றைப் பிராட்டி பருகினாள், பருகவே முன்னர் வாடி மெலிந்து கிடந்த உடல் திடீரென்று பூரித்தது. பூரித்த அளவிலே ஒற்றைப் பிறையானது நாளடைவிலன்றி, திடீரென்று பதினைந்து கலைகளும் ஒருங்கே நிரம்பப் பெற்றாற் போன்றன எனப்பட்டது. நாளுக்கு நாள் வளர்ந்தால் மானாகிய களங்கம் ஏற்படும். அவ்வாறன்றி ஏக காலத்தில் பதினாறு கலைகளும் வளர்ந்தாற் போன்று என்க. தற்குறிப்பேற்றவணி. இங்கு 'வருநாட் டோன்றும் தனி மறுவும் வளர்வும் தேய்வும் வாளரவம், ஒருநாள் கவ்வு முறுகோளு மிறப்பும் பிறப்பும் ஒழிவுற்றால், விருநாற் கலி னிலங்குமதி' (சுந்தர. 545) என்ற பாடல் கருதத்தக்கது.

பா - ம். 1. ஒரு கலைக்களின் ; வெண்.

2. வரு கலைக்கு ; வளர்ந்தது; வருவது, வருமாறு, மானுறு, மாறுறப்.

3. பொருவரைக் குலம் : பூத்தன.

4. பருகலுற்ற வமுதன்ன பான்மையாள். 20

3913. ஆம்பல் வாயு முகமு மலர்ந்திடத்
தேம்பு நுண்ணிடை தேயத் திரண்முலை
ஏம்ப லாசைக் கிரட்டிவந் தெய்தினாள்
பாம்பு கான்ற பனிமதிப் பான்மையாள்.

பாம்பு கான்ற -(இராகு கேது என்ற) பாம்புகளினால் விழுங்கப்பெற்று வெளிப்பட்ட, பனிமதி பான்மையாள் - குளிர்ந்த சந்திரன் போன்ற தன்மையுடையவளான சீதாதேவி, ஆம்பல் வாயும் - செவ்வாம்பல் மலர் போன்ற வாயும், முகமும் - முகமும்' மலர்ந்திட - மலரா நிற்க, தேம்பும் நுண் இடை - வாடுகின்ற நுட்பமான இடை, தேய - பின்னும் மெலிய, திரள் முலை - திரண்ட தனங்கள், ஏம்பல் - மகிழ்ச்சியோடும் தோன்றிய, ஆசைக்கு - ஆசையினால், இரட்டி வந்து எய்தினாள் - இரண்டு மடங்காக வந்து பொருந்தப் பெற்றாள்.

ஆம்பல் வாயும் - கொவ்வைப் பழனும் குமுதப் போதும்' (கிட்கிந்தா. 768) ; தேம்புதல் - வாடுதல் ; 'தேம்பலஞ் சிற்றிடை

யிங்கிவள் தீங்கனி வாய்கமழும், ஆம்பலம் போதுளவோ வளிகாள் நும்மகன்பணைக்கே' (திருக்கோ. 11); முன்னரே பாரம் தாங்காது வாடிய இடை இப்பொழுது பூரித்த முலைகளால் பின்னும் தேய்ந் தது என்க. ஏம்பல் - மகிழ்ச்சி; 'ஏம்பலினிமேலை விதியால்' (கிட்கிந்தா. 836); இரட்டி : அன்பிரட்டி கொண்டதுநானறிவிலேனே' (ஆரணிய. 351); கான்ற - இராது கேதுக்களினின்று வெளிப்பட்ட மதியம் மிக்க ஒளியுடன் விளங்கும். அது போன்ற முகமலர்ச்சி பிராட்டியிடம் காணப்பட்டது.

பி - ம். 1. அலர்ந்தன.
2. நோவத்.
3. இரட்டி விசைத்திடப்.
4. பாவையாள்.

21

3914. புந்தீ யோங்கு முவகைப் பொருமலோ
உந்தி யோங்கு மொளிவளைத் தோள்கொலோ
சிந்தி யோடு கலையுடைத் தேர்கொலோ
முந்தி யோங்கின யாவை முலைகொலோ.

(அந்தப் பிராட்டியின்), புந்தி ஓங்கும் - உள்ளத்தில் பொங்கு கின்ற, உவகை பொருமலோ - மகிழ்ச்சியாலுண்டான எழுச்சியோ (உடற் பருமனல்), உந்தி - தள்ளப்பட்டு, ஓங்கும் - அகல்கின்ற, ஒளி வளை தோள்கொளோ - பிரகாசம் பொருந்திய வளையலை அணிந்ததோள்களோ, சிந்தி ஓடு கலை உடை தேர் கொலோ - நெகிழ்ந்து புறம் செல்கின்ற மேலையணிந்த அல்குலோ; முலை கொல் ஓ- தனங்கள் தாமோ, முந்தி ஓங்கின யாவையோ - முற்பட்டு ஓங்கினவை எவை? ஓகாரம் : ஐயம்.

புந்தி என்பது புத்தி என்றும்வரும்; மனம் புத்தி சித்தம் அகங் காரம் என்ற நான்குமே அந்தக் கரணங்கள் ஆகலின், புந்தி என்பதற்கு உள்ளம் என்று பொருள் தரப்பட்டது. வளை - தோள் வளை ; இதனை வங்கி, பாஜிபந்து, கடகம் எனப் பலபடியாக வழங்கு வர் இக் காலத்தார். 'சூடகமே தோள்வளையே' (திருப்பாவை. 27)

என்பது காண்க. உடல் பூரித்துப் பருத்தமையின் கலையும் நெகிழ்ந்தது; கலையுடைத் தேர் என்றதனால் தேர் என்பதற்குத் தேர் ஒத்த அல்குல் எனப்பட்டது. தேர் அல்குலுக்கு உவமை; 'பாந்தளும் பனிவென்றேங்கும், ஓராழித் தேருங் கண்ட வுனக்குநா னுரைப்ப தென்னே' (கிட்கிந்தா. 756) ம் அதன் உரையும் காண்க. உவகை மீதூருங்கால் பல நிகழ்ச்சிகளை ஒருசேர ஒன்றன்பின் ஒன்றாகக் கூறுவது கம்பநாடர் முறை; (ஒப்பு): இறந்தவர்; 'இழந்த மணி, இருந்துபசி' (சுந்தர. 553, 554, 558) காண்க. முந்துதல்: 'முனிவனு முவகையுந்தானு முந்துவான்' (அயோத்தி. மந்தரை. 4).

பி - ம். 1. புந்தியோ பேர், புந்தியோ நல்.

2. ஒளிர்வளை; தோள்களோ.

3. சிந்தையோடு, சிந்தியோங்கு; கடையுடைத்.

4. முந்தி ஓங்கியது; முலைகளோ. 22

3915. குனித்த கோலப் புருவங்கள் கொம்மைவேர்
பனித்த கொங்கை மழலைப் பணிமொழி
நுனித்த தொன்று நுவல்வதொன் றாயினள்
கனித்த வின்களி கள்ளினிற் காட்டுமோ.

கோலம் புருவங்கள் குனித்த - அழகிய புருவங்கள் வளையப் பெற்றன; கொங்கை - கொங்கைகள், கொம்மை - பருமனுடன், வேர் பனித்த - வியர்வு அரும்பின; மழலை பணி மொழி - கொச்சை யெனச் சொல்லப்படுகின்ற மிருதுவான சொற்களையுடைய அச் சீதாதேவி, நுனித்தது ஒன்றும்-கூர்ந்து ஆலோசித்தது ஒன்றும், நுவல்வது ஒன்று ஆயினள் - சொல்லுவது பிறிதொன்றுமாகப் பெற்றாள்; கனித்த இன்களி கள்ளினில் காட்டுமோ - முதிர்ந்த இனிய உவகை கள்ளிடத்துக் காணப்படுமோ? ஓ: வினா.

குனித்த புருவம்; 'குனித்த புருவமும் கொவ்வைச் செவ் வாயிற் குமிண்சிரிப்பும்' (தேவா. 11, 4); 'குனிக்கக் குனிந்த புரு வத்துக் குவமை நீயே கோடியால்' (சுந்தர.. 544); பனித்த; 'பனித்த சடையும்' (தேவா. 11, 4); மழலை; யுத்த. 2756 உரைக்

குறிப்புக் காண்க. பணிமொழி; 'பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி வாலெயி றூறியநீர்' (குறள். 1121); நுனித்தல் - கூர்ந்து ஆராய்தல். 'நான்முக நுனித்த நெறி' (கிட்கிந்தா. 851); 'நுனிப்பதொரு வரம்பிலாத்' (ஆரணிய. 555); 'நாடகக் காப்பிய நன்னூ னுனிப்போர்' (மணி. 19, 80); 'கள்ளினிற் காட்டுமோ; இங்கு உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும், கள்ளுக்கில் காமத்திற்குண்டு' (குறள். 1281); 'உண்டார்கணல்ல தடுநறுக் காமம்போற், கண்டார் மகிழ்செய்த லின்று' (குறள். 1090) என்பன காணத்தக்கன. பிராட்டி நற்செய்தி கேட்கின்றாள். இராமபிரான் வெற்றியைச் சிந்திக்கின்றாள்; 'பைப்பயப் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி, மெய்யுற வெதும்பி யுள்ளம் மெலிவுறு நிலையை' விடுகின்றாள்; 'நினைந்த அளவிலேயே உள்ளம் களிக் கின்றாள். செய்தியைக் கேட்ட வளவிலேயே மகிழ்ச்சி விளை கின்றது. இத்தகைய நிகழ்ச்சிகள் கட்குடியர்க்கில்லை. அவர்கட்கு நினைப்பதனாலேயோ காண்பதனாலேயோ களி நிகழாது; பருகினாற் றான் நிகழும் என்பதறிக. இனி கள்ளினில் காட்டுமோ என்பதற் குக் கள்ளினைப் போல் என்று கூறி, புருவம் குனித்தல், வேர் பனித்தல் முதலியன கள்ளுண்டாரிடமும் காணப்படும் என்பர்.

பி-ம். 2. பனிமொழி.

3. நுனிப்பது; ஒன்றாய்.

4. களிக்கவின்; கள்ளுண்டு காட்டுவான், கள்ளினைக் காட்டுமால், கள்ளென்று காட்டுமால், கண்ணின்று காட்டுமால். 23

3916. அனைய ளாகி யநுமனை நோக்கினாள்
இனைய தின்ன தியம்புவ தென்பதோர்
நினைவி லாது நெடிதிருந் தாள்நெடு
மனையின் மாசு துடைத்த மனத்தினாள்.

நெடு மனையின் மாசு துடைத்த மனத்தினாள் - பெருமை சான்ற இல்வாழ்க்கையின் களங்கத்தை ஒழித்தருளிய மன நிலையை யுடையவளான பிராட்டி, அனையள் ஆகி - அத்தன்மை

யளாய், (மனமும் உடலும் பூரித்தவளாய்) அநுமனை நோக்கினுள் - அநுமானைப் பார்த்து, இனையது - இத்தன்மையதான, இன்னது - இன்ன சொற்களை, இயம்புவது என்பது ஓர்நினைவு இலாது - சொல்வது என்ற ஓர் எண்ணம் எழாமலே, நெடிது இருந்தாள் - வெகு நேரம் வாளாதிருந்தாள்.

நோக்கினுள் - முற்றெச்சம். இரண்டாம் அடி முற்றுமோனை. நெடுமனை - நெடுமை பெருமையேற்று. பத்துமாதங்கள் ஒரு பெருங் கண்டகனுடைய ஊரில் இருந்தும்; 'மனைமாட்சி யில்லாள்கணில்லாயின் வாழ்க்கை, யெனைமாட்சித் தாயினுமில்' (குறள். 42); 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற் பென்னுந், திண்மை யுண்டாகப் பெறின்' (குறள். 54) என்ற நல்லுரைக்கிணங்கத் தன் கற்பினைக் காத்துத் தான் பிறந்த குலத்துக்கும் வாழ்க்கைப்பட்டுப் புகுந்த குலத்துக்கும் எந்தவிதமான குற்றமும் நிகழாதபடி நடந்து கொண்டாள் என்பது, 'மனையின் மாசு துடைத்த மனத்தினுள்' என்பதனுற் பெறப்படும். இதனை 'இற்பிறப்பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273); 'உன் குலம் உன்னதாக்கி' (சுந்தர. 1272) என்ற அநுமன் கூற்றினைக் கொண்டு உணரலாம். மாசு துடைப்பதென்பது செய்கை மட்டுமன்றி மனத்தின் கட்டுப்பாட்டினுலேயே நிகழ்வ தொன்ருகலின் 'மனத்தினுள்' எனப்பட்டது. 'மனத்தினுல் வாக்கினுல் மறுவுற் றேனெனின், சினத்தினுல் சுடுதியால் தீச் செல்வா' (யுத்த. 3976); 'என்பழி துடைப்பவர் என்னில் யாவரோ' (சுந்தர. 504) என்று பிராட்டி கூறுதல் கொண்டும் இதனைத் தெளியலாம். 'புக்க வழிக்கும் போந்த வழிக்கும் புகை வெந்தீ, ஒக்க விதைப்பானுற்றனை' (சுந்தர. 485) என்ற அரக்கியர் கூற்றுக்கு மாருக, அந்த இரண்டு வழிக்கும் பெருமையைத் தேடித் தந்தவள் ஆதலின், மனையின் மாசு துடைத்த மனத்தினுள் என்ருர் என்க. மிகுந்த மகிழ்ச்சியால் நா எழாது, மறதியும் நிகழும் என்பது இறுதியிரண்டடிகளால் உணரப்படும்.

பி - ம். 3. நினைவிலாமை.

4. மனையின் மாட்சி. 24

## அநுமன் பிராட்டியை நோக்கி, 'ஒன்றும் சொல்லாதது ஏன்' என்றல்

3917. யாதி தற்கொன் றியம்புவ லென்பது
மீது யர்ந்த வுவகையின் விம்மலோ
தூது பொய்க்குமென் றேவெனச் சொல்லினன்
நீதி வித்தக னங்கை நிகழ்த்தினள்.

நீதி வித்தகன் - நியாயம் உணர்ந்தவனான அநுமன்; (பிராட்டியை நோக்கி), மீது உயர்ந்த உவகையின் விம்மல் - எல்லைகடந்து மேலிட்ட களிப்பின் மிகுதியால், இதற்கு - இந்நற்செய்திக் கேற்ப, யாது ஒன்று இயம்புவல் - யாது மறுமொழி கூறுவன், என்பது - என்று திகைத்தபடியோ? (அன்றி), தூது பொய்க்கும் - இத் தூதன் வார்த்தை பொய்யாயிருத்தல்கூடும், என்றே - என்று எண்ணி அலட்சியம் செய்த வகையோ? என சொல்லினன் - என்று கூறி வினவினன்; நங்கை நிகழ்த்தினள் - (அதற்கியைந்த மறுமொழியை) மகளிரிற் சிறந்தவளான பிராட்டி கூறுவாளானாள். அவள் கூறியவை அடுத்துவரும் நான்கு செய்யுட்களில் காண்க. ஓ : அசை.

நீதி வித்தகன் - நியாய வழிகளில் தேர்ந்தவர் தூதர் மூவகையினருள், 'தான்வகுத்துக் கூறுவான்' தலையாதலினாலும், அநுமன் அத்தகையனாதலினாலும், 'நீதிவித்தகன்' எனப்பட்டான்; திருக்குறள் தூது அதிகாரத்தின் அவதாரிகை பார்க்க.

பி - ம். 1. ஏது; இயம்பலை, இயம்பலம்.
4. நிகழ்த்துவாள்.



## பிராட்டியின் மறுமொழி

3918. மேக்கு நீங்கிய வெள்ள வுவகையால்
ஏக்க முற்றேன் றியம்புவ தியாதென
நோக்கி நோக்கி யரிதென நொந்துளேன்
பாக்கி யம்பெரும் பித்தும் பயக்குமோ.

'மேக்கு நீங்கிய - தனக்கு மேலொன்று இல்லாததான, உவகை வெள்ளத்தால் - களிப்பு மிகுதியால், ஏக்கம் உற்று - யான்

திகைத்து, இயம்புவது ஒன்று யாது - இந்தச் செய்திக்கு ஏற்பக் கூறும் மறுமொழி யாது?' என - என்று, நோக்கி நோக்கி - (மனத்தால்) ஆராய்ந்து ஆராய்ந்து, அரிது - இதற்கேற்ப என்னால் சொல்லக்கூடியது ஏதுமில்லை, என - என்று, நொந்துளேன் - கவலைக்குள்ளானேன்; பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ - (ஒருவர்க்குப்) பாக்கியம் பெரும் உன்மத்தத்தையும் தரக்கூடியதோ? ஓகாரம்: வினா.

மேக்கு நீங்குதல் - தனக்கு மேற்பட்டதொன்று இன்றுதல்; 'மேக்குயரு நெடுமூக்கு மடந்தையர்க்கு மிகையன்றே' (ஆரணிய. 348); 'மேக்குய ரங்குசக்கைய' (யுத்த. 1774). உவகை வெள்ளத்தால் என மாற்றுக. பாக்கியம்: பாக்யம் என்ற வடசொல் தமிழில் இகரம்பெற்று வந்தது.

பி - ம். 1. விங்கிய.
2. ஆக்கம்; உற்றிங்கு.
3. நோக்கி யிருந்தனன்.
4. வேறு.



3919. முன்னை நீக்குவென் மொய்சிறை யென்றநீ
பின்னை நீக்கி யுவகையும் பேசினை
என்ன பேற்றினை யீகுவ தென்பதை
உன்னி நோக்கி யுரைமறந் தோவினேன்.

'முன்னை - முன்பு, 'மொய்சிறை நீக்குவென் - வலிய (உனது) சிறை வாசத்தை (நான்) ஒழிப்பேன்', என்ற நீ - என்று, (எனக்குக்) கூறிய நீ, பின்னை நீக்கி - பின்னர் அதனைச் செய்து முடித்து, (அந்தச் சிறை வாசத்திற்குக் காரணமாக இருந்த இராவணனைக் கொல்ல உதவிபுரிந்து), உவகையும் பேசினை - மகிழ்ச்சிச் செய்தியையும் சொல்லினை; என்ன பேற்றினை ஈகுவது - (அவ்வாறு உதவிய உனக்கு) என்ன பாக்கியத்தை (க் கைம்மாறாகக்) கொடுப்பது', என்பதை - என்பதை, உன்னி நோக்கி உரை மறந்து ஓவினேன் - ஆராய்ந்து பார்த்துக்கொண்டிருந்த நிலையில் பேச மறந்து ஒன்றும் உரையாதிருந்தேன்.

முன்னை : கடல் தாவிச்சென்று பிராட்டியைக்காண விழைந்த போது. பின்னை : இராவணன் மரித்தபின். பேறு - பாக்கியப் பேறு ; 'நன்கலம் நன்மக்கட் பேறு' (குறள். 60) ; 'பேற்றைத் தவம்சற்று மில்லாத வென்னை' (கந்தரலங். 1). மொய்சிறை - வலிய சிறை, அழகிய சிறை ; 'சிறையிருந்தவ ளேற்றம்' என்று பெரியார் எழுதியது காண்க.

பி - ம். 2. பின்னை நோக்கி, நீக்கினை ; ஓசையும்

3. என்ன பேற்றினை யிகுவ னென்பதை, என்ன வின்றுனக் கிகுவ னென்பதை, என்ன விகுவ னென்பது பெற்றிலன்.

4. ஒயினேன், ஓய்வினேன். 27

3920. உலக மூன்று முதவற் கொருதனி
விலையி லாமையு முன்னினென் மேலவை
நிலையி லாமை நினைந்தனெ னின்னையென்
தலையி னாற்றொழ வேதகுந் தன்மையோய்.

'தன்மையோய் - நல்ல பண்புகள் உடையவனே ; (நீ ஆற்றிய பேருதவிக்குக் கைம்மாறாக), மூன்று உலகம் உதவற்கு - மூன்று உலகங்களையும் (உனக்குக்) கொடுக்கலாம் என்று கருதுமிடத்து ; (அவை நீ புரிந்த உதவிக்கு), ஒரு தனி விலையிலாமையும் - ஒரு சிறிதும் ஈடாகாமையையும், முன்னினென் - ஆராய்ந்தேன் ; மேல் - மற்றும், அவை - அவ்வுலகங்கள், நிலையிலாமை நினைந்தனென் - என்றும் நிலைபெறுவன அன்றி அழியும் தன்மை யுடையன வாதலையும், கருதினேன் ; (இந்தச் சிறந்த உதவிபுரிந்த) நின்னை என் தலையினால் தொழவே தகும் - உன்னை என் தலையால் வணங்குவதே பொருந்தும்'.

உலகம் மூன்று: சொர்க்கம், மத்யம், பாதாளம். உலக மூன்றும் தனிவிலையிலாமை : 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்ற லரிது' (குறள். 101) ; 'காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது' (குறள். 102). தொழவே தகும் என்றதில் ஏகாரம் பிரிநிலை மட்டுமன்று ; உயர்வு சிறப்புமாம். 'தலையினாற் றொழவே தகும்', 'தலையல்லாற் கைம்மாறிலேனே' (நாச்சியார் திருமொழி. 5, 6); என்ற ஆண்டாள் பாசுரமும். அதற்கு எழுதப்பட்ட பேருரையும் காண்க. தன்மை :

ஆடவர்க்குரித்தாகக் கூறப்பட்ட 'அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி' என்ற பண்புகள்.

பி-ம். 1. உதவினு முத்தம்.

2. இலாமையின் ; முன்னலன் ; மேவுரீர்.

3. நிலையிறுவதென் றெண்ணினன், நிலையிலாவதென் றெண்ணியும், நிலையிலாதவென் றெண்ணினன்.

4. தொழவும் ; தன்மையோய், தன்மையே. 28

3921. ஆத லாலொன் றுதவுத லாற்றலேன்
யாது செய்வதென் றெண்ணி யிருந்தனென்
வேத நன்மணி வேகடஞ் செய்தன்ன
தூத வென்னினிச் செய்திறஞ் சொல்லென்றுள்.

'ஆதலால் - இவ்வாறுதலின், ஒன்று உதவுதல் ஆற்றலேன் - ஒன்றும் (உனக்குக் கைம்மாறாக) உதவற்கு சக்தியில்லாத யான், யாது செய்வது - என்ன செய்வது, என்று - என்று, எண்ணி - கருதி, இருந்தனென் - வாளாதிருந்தேன் ; வேதம் நல் மணி வேகடம் செய்தன்ன - துளைசெய்து பயன்படுத்தற்குரிய நல்ல இரத்தினத்தைச் சாணை பிடித்துத் தூயதாக அணிசெய்தாற் போன்ற, தூத - தூதனே ! இனி செய் திறம் என் சொல் - இனி செய்யத்தக்கது யாது என்று பகர்வாயாக', என்றுள் - என்று மொழிந்தாள்.

வேதம் - துளையிடுகை, வடசொல் ; 'மண்சேர்ந்த காசை வேகடம் செய்யு மாபோல்' (யுந்த. 3936). 'தூது பொய்க்கு மென்றோ' என அநுமன் வினவியதற்கு, இனி மன மொழி மெய்கள் நன்கு வழுவறத் தூய்மை செய்யப்பெற்ற நல்ல வேதரத்தினம் போன்ற தூதன் என்றுள் எனினுமாம். முன்னர் 'மீதுயர்ந்த வுவகையின் விம்மலோ, தூது பொய்க்குமென்றோ' என்று சிறிய திருவடி கேட்டதற்கு, பிராட்டி பின்னதன்று முன்னதே என்று ஐயமகற்றிக் கூறினள் என்க.

பி-ம். 1. இயம்புதல்.

3. வேதநாயகன் ; ஏவிய செய்திடும், வேகடம் செய்மணி மேவிய, செய்திடும். 29

## அநுமன் 'இன்னது செய்ய வேண்டுவது' என்றல்

3922. எனக்க ளிக்கும் வரமெம் பிராட்டிநின்
மனக்க ளிக்குமற் றுன்னையம் மானவன்
தனக்க ளிக்கும் பணியினுந் தக்கதோ
புனக்க ளிக்குல மாமயில் போன்றுளாய்.

'எம்பிராட்டி - என் இறைவியே! புனம் களி குலம் மா மயில் போன்றுளாய் - வானத்திலே களித்துத் திரிகின்ற சாதி மயிற் பெடை போன்று மகிழ்வுடன் கூடியவளே! எனக்கு அளிக்கும் வரம் - எனக்கு நீ தரும் வரம். நின் மனம்களிக்கு - உன்னுடைய உள்ளத்துவகைக் கேற்ப, உன்னை - உன்னை; (அழைத்துச் சென்று), அம் மானவன் தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ - அந்த மநுவழியில் வந்தவனை இராமபிரானிடம் சேர்ப்பிக்கின்ற அடிமைத் தொழிலினும் தகுதியுள்ள காரியம் பிறிதுண்டோ?' (இல்லை). ஓ: எதிர்மறைப்பொருள். மற்று: அசை.

எம்பிராட்டி: அண்மைவிளி. புனக் களிக்குல மாமயில்: எவ்வகையான கட்டுப்பாடுமின்றி மனக்களிப்புடன் எதேச்சையாக ஓடி ஆடித் திரியும் மயில்; இங்குச் சிறைவாசம் நீங்கி மகிழ்வுற்ற நிலையைக் குறித்து நின்றது. சாயலால் மயில்: 'மயிலியற் குயில் மொழி மறக்கற் பாலதோ' (கிட்கிந்தா. 253). மற்று - வினைமாற்று; அசையெனினுமாம்.

பி - ம். 1. களிப்பும்.
2. உன்னி மன்னவன்.
3. பணியிது. 30

3923. எனவு ரைத்துத் திரிசடை யாளெம்மோய்
மனவி னிற்சுடர் மாமுக மாட்சியாள்
தனையொ ழித்திவ் வரக்கியர் தங்களை
வினையி னிற்சுட வேண்டுவென் யானென்றான்.

என உரைத்து - என்று கூறி; (பிராட்டியை நோக்கி), எம் மோய் - எமது அம்மையே! மனவினில் - அரதனம் போன்று

யான் - நான், சுடர் - ஒளிவிடுகின்ற, மா முகம் மாட்சியாள் - அழகிய முகத்தில் மலர்ந்த தோற்றம் உடையவளான, திரிசடையாள் தனை ஒழித்து - திரிசடை நீங்கலாக, இவ் அரக்கியர் தங்களை - இந்த அரக்கிமார் அனைவரையும், வினையினில் சுட வேண்டுவென் - கொடிய வழியில் எரித்தொழிக்க விரும்புகிறேன்', என்றான் - என்று கூறினன்,

திரிசடை - வீடணன் மகள்; இவள் பல்லாற்றானும் பிராட்டிக்கு உதவிபுரிந்தது இக்காப்பியத்தில் பல இடங்களில் குறிக்கப்பெற்றிருத்தல் காண்க. மணவு: மணிகளின் பொதுப் பெயர். பிராட்டியை அரக்கிமார் துன்புறுத்தி நின்றதை நேரில் பார்த்தவன் ஆதலின் அவர்களைக் கொல்ல நினைந்தான். எம்மோய் என்பதை விளியாக்காது எம்மோய் போன்ற திரிசடை எனினுமாம்; 'ஆயிடைத் திரிசடை யென்னு மன்பினால், தாயினி மினியவடன்னை' (சுந்தர. 360) என்றது காண்க. எம்மோய்: 'ஆரண மறையோ னெந்தை யருந்ததிக் கற்பின் எம்மோய்' (ஆரணிய. 269). ஒய்-தாய்; 'என்னினிச் செய்வ தெம்மோய்' (சுந்தர. 1272); 'தேவர்க்குந் தம்மோயை' (யுத்த. 292); மற்றும் பெருங். 2:10:50. வினையினில் சுட: ஒருவன் செய்த வினையானது அவனைச் சுடுவதுபோல எனினுமாம்; 'தன்வினை தன்னைச் சுடும்' (பட்டினத்தார்.).

பி - ம். 1. திரிசடை யாளெனும், திரிசடை யாயசெம், திரிசடை யெம்மைசெம்.
2. மனையினிற்; தொடருமன மாட்சியாள். 31

3924. உரைய லாவுரை யுன்னை யுரைத்துராய்
விரைய வோடி விழுங்குவ மென்றுளார்
வரைசெய் மேனியை வள்ளுகி ராற்பிளந்
திரைசெய் வேன்மற லிக்கினி யென்னுமால்.

உரை அலா உரை - சொல்லக்கூடாத வார்த்தைகளை, உரைத்து - சொல்லி, விரைய ஓடி - விரைவாக ஓடி, உராய் - மேல் விழுந்து, உன்னை விழுங்குவம் - உன்னை விழுங்குவோம், என்று உளார் - என்று அதட்டிப் பேசியுள்ளவர்களாகிய இராக்கத மகளிருடைய, வரை செய் மேனியை - மலைபோன்று (பருத்த) உடலை, இனி வள் உகிரால் பிளந்து - இப்பொழுதே கூரிய நகங்

களால் பிளந்திட்டு, மறலிக்கு இரை செய்வேன் - யமனுக்கு உண வாக்குவேன்', என்னும் - என்று சொல்வன் (அநுமன்). ஆல்: அசை.

உரையலா வுரை: வழியலா வழிபோல; (யுத்த. 916) என்றது போல. இராக்கத மகளிரைக் கொல்வதற்குக் காரணம் இங்குக் கூறப்பட்டது. அரக்கியர் தெழித்து உறுக்கியதை, சுந்தர. 482—485ல் காண்க. உராய் - உராய்ந்து, பகுதியே வினையெச்சப் பொருள் தந்தது. 'வரிப்புனை பந்து' (திருமுரு. 292) என் பதில் வரி என்பது வரிந்து எனப் பொருள்படுதல் காண்க. வரைசெய்: செய் உவம உருபு.

பி - ம். 1. உரைப்பிலாவகை; உரைத்துளார்.

2. விரைவின்; விழுங்குவன்.

3. வசைசெய்.

4. இசைசெய்; இனிதெள்பறல். 32

## அனுமன் சொற்கேட்ட அரக்கியர் பிராட்டியைச் சரணமடைதல்

3925. குடல்கு றைத்துக் குருதி குடித்திவர்
உடன்மு ருக்கியிட் டுண்குவெ னென்றலும்
அடல ரக்கிய ரன்னை நின் பாதமே
விடல மெய்ச்சர ணென்று வெருவலும்

'இவர் குடல் குறைத்து - இவ்வரக்கியர்களின் குடல்களைப் பறித்தெடுத்து, குருதி குடித்து-உதிரத்தைப் பருகி, உடல் முருக்கி இட்டு-உடம்பைப் பலவாறு சிதைத்து, உண்குவென்-உண்பேன்', என்றலும் - என்று (அநுமன்) சொன்னவுடன், (அது கேட்ட), அடல் அரக்கியர்-வலிமை வாய்ந்த அரக்கிகள், 'அன்னை - தாயே! நின் பாதமே - உன்னுடைய திருவடியே, மெய் சரண் - உண்மை யான புகலிடம், விடலம் - அதனை நாங்கள் விடோம்', என்று வெருவலும் - என்று அஞ்சிச் சரண் புகுந்த அளவிலே, நோய் செயல் என்றனள் என அடுத்த செய்யுளுடன் தொடரும்.

முருக்கியிடுதல் - அழித்தல்; 'முருக்கி நிரு தக்குல முடித்து வினை முற்றி' (சுந்தர. 614); 'இப்புறத் தரக்கரை முருக்கி யேகின'

(சுந்தர. 671) ; விடலம் - விடமாட்டோம். அல் - எதிர்மறை இடைநிலை. அன்னை - அண்மைவிளி. மெய்ச்சரன் : எங்கள் உடலுக்கும் புகலிடம் எனினுமாம்.

பி - ம். 1. குடர் ; குடித்து வந்திட ; குடித்தவர்.
2. உடல்.
3. விளம்பலும். 33

## சீதை அநுமனுக்குக் கூறுஞ் சமாதான வார்த்தை

3926. அன்னை யஞ்சன்மி னஞ்சன்மின் நீரெனு
மன்னு மாருதி மாமுக நோக்கிவே
றென்ன தீமை யிவரிழைத் தாரவன்
சொன்ன சொல்லின வல்லது தூய்மையோய்.

அன்னை - பிராட்டி, 'நீர் அஞ்சன்மின் அஞ்சன்மின் - நீங்கள் பயப்படாதீர்கள், பயப்படாதீர்கள்' என்று சொல்லி, (அவ்வரக்கியர்க்கு) அபயம் அளித்து, மன்னும் மாருதி மாமுகம் நோக்கி - நிலை பெற்ற அநுமனுடைய பெரிய முகத்தைப் பார்த்து, 'தூய்மையோய் - (மனம் மொழி காயங்களில்) பரிசுத்தமானவனே! இவர் - இந்த அரக்க வனிதையர், அவன் சொன்ன சொல்லின அல்லது - தங்கட்குக் கட்டளை யிட்டதைச் செய்தார்கள் அன்றி, வேறு என்ன தீமை இழைத்தார் - வேறு என்ன கெடுதியை விளைத்தார்கள்? ஒன்றுமில்லையே!

சிரஞ்சீவியாகலின் 'மன்னுமாருதி' எனப்பட்டது. 'தலைவன் இட்ட கட்டளையை நிறைவேற்றுவது பணியாளரின் கடமை. எனவே, 'அஞ்சுவித் தானு மென்மை யறிவுறத் தேற்றி யானும், வஞ்சியிற் செவ்வி யாளை வசித்தென்பால் வரச்செய்யீரேல், நஞ்சுமக்காவேன்' (சுந்தர. 480) என்று அச்சுறுத்தினமையின் அரக்கியர் என்னை ஒறுக்கத் தொடங்கினர்; ஆகவே அவர்கள்மீது குற்றமில்லை. அவர்களைக் கொல்வதும் முறையாகாது; அவர்கள் தாமாக எவ்விதத் தீமையும் எனக்கு இழைக்கவில்லை' என்ருள் பிராட்டி. இதிலிருந்து பிராட்டியின் அளவுகடந்த கருணை விளங்கும். மற்றும் பிராட்டி 'ஆதலா லிறத்தலே யறத்தினாறு' என்ற முடிவுக்கு வந்து தற்கொலை செய்யத் துணிகையில், திரிசடைதான்

கண்டகனவினைச் சொல்லித் தேற்ற, அது கேட்டுத் தேறிநின்ற பிராட்டியைக் காவல் செய்திருந்த அரக்கியர் அச்சமுற்றுச் சீதா தேவியைச் சரண் புகுந்தாராக, 'உங்கட்குச் சரணம ஆவேன்' என்று பிராட்டி பகர்ந்தாள், என முதனூல் கூறும். இங்குதான் புலி கரடி வேடன் வரலாறுக் குறிக்கப்பெற்றுள்ளது. (வான்மீகம். யுத்த. 116); இதே சருக்கத்தில்தான் அனுபவித்தது ஊழ்வினையே யன்றி தலைவன் ஏவற்படி செய்த அரக்கிமார் நிரபராதிகள் என்றாள் பிராட்டி. தூய்மை: திரிகரண சுத்தி.

பி-ம். 2. நோக்கிறான்.
3. இழைத்தாரென.
4. சொல்லின நல்லது ; தூய்மையோ. 34

3927. யானி ழைத்த வினையினி னிவ்விடர்
தான டுத்தது தாயினு மன்பினேய்
கூனி யிற்கொடி யாரல ரேயிவர்
போன வப்பொருள் போற்றலை புந்தியோய்.

'தாயினும் அன்பினேய் - பெற்ற தாய் மக்களிடம் காட்டும் மிக்க அன்பினை என் திறத்து உடையவனே! யான் இழைத்த வினையினின் இவ் இடர் அடுத்தது - யான் புரிந்த தீமையின் விளைவாகத்தான் இந்த இன்னல் (எனக்கு) நேர்ந்தது; (எனவே இதன் பொருட்டு இவர்களிடம் வெகுட்சி கொள்ளுதல் முறையன்று); இவர் - இந்த அரக்கிமார், கூனியின் கொடியார் அலர் - (எமது துயர்கட்கெல்லாம் மூல காரண மான) கூனி போன்று கொடியவர் அல்லரே ; புந்தியோய் - அறிஞ! போன அ பொருள் போற்றலை - கழிந்துபோன அச் செயலைப் பெரிதாகப் பாராட்டாதே. தான் : அசை.

'அவசியம் அநுபோக்தவ்யம்' என்றதற்கேற்ப வினையின் பயனைத் துய்த்தே ஆகல் வேண்டும் என்று பிராட்டி வற்புறுத்து கின்றாள். ஆகாமியம், சஞ்சிதம் என்ற இரண்டையும் ஒருவேளை அகற்றினாலும் பிராரத்தம் துய்த்தே ஆகவேண்டும் என்று நூல் கள் கூறும். 'விதியின் பயனீ யீதற்கென்னை வெகுண்டதென்றான் (அயோத்தி. நகர்நீ. 133) என்று இராமபிரானும், 'வினையினால் வரும் மேன்மையும் கீழ்மையும்' (கிட்கிந்தா. 344) என்று வாலியும்,

'விதியது வலியினுலும் மேலுள விளைவினுலும்' (ஆரணிய. 639); என்று கவிக் கூற்ருகக் கம்பநாடரும்; 'விதி பிடித்துந் துகின்றது' (யுத்த. 1299) எனக் கும்பகன்னனும், 'அரிது போகவோ விதி வலி கடத்தல்' (சுந்தர. 338) 'விதியின்னமு மெவ்வினை யியற்றுமோ' (ஆரணிய. 936) என்று பிராட்டியும், விதியின் வன்மையைக் கூறுதல் இக் காப்பியத்தில் ஆங்காங்குக் காண்க. 'ஊழ்வினை யுருத்துவந் தூட்டுமென்பது' சிலப்பதிகாரக் காப்பியத்தின் மூன்று படிப்பினைகளில் ஒன்று என்பதும் இங்கு உணரத்தக்கது. தாயினும் அன்பினேய்; 'தாயொக்கும் அன்பில்' (பால அரசியல். 4); 'பாலினைந் தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, (திருவாச. பிடித்த. 9); 'தாயே யன்ன கருணையான்' (சுந்தர. 1169). 'போற்றலாற் ருயரொத்தும்' (சீவக. 1895); 'தாயிநல்லயினு சங்கரன்' (தேவா. 1319 : 9); 'நற்ருயினு நல்லனிவன் நமக்கு' (சுந்தர; 58); 'அன்பினல் தாயினு மினியவள்' (சுந்தர. 360); என்று இந் நூலினும் பிறவற்றிலும் வருவன கொண்டு பெற்ற அன்னையின் மேம்பாட்டினை உணரலாம். 'அம்மையே யப்பா' (திருவாச. பிடித்த. 3); என்று அப்பர் பாடினர்; 'தாயிற் சிறந்த தொரு கோயிலுமில்லை' (கொன்றை. 58) என்பதும், 'மாதுர் தேவோபவ பிதிர் தேவோ பவா' என்று தைத்திரியம் கூறுவதும் இங்கு உணரத் தகும். கூனியிற் கொடியாரலரே: கூனி கொடுமை இங்குப் பிராட்டியாற் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. புறம் மட்டுமன்றி, 'உள்ளமும் கோடிய கொடியாள்' (அயோத்தி. மந்தரை. 81) என்ருர் கம்பநாடர். யார்செய்த எவ்விதத்தீமையும் பொறுத்தருளும் கருணைக்கடலான இராமபிரானே, 'குறியதாம் மேனியாய கூனியாற் குவவுத் தோளாய், வெறியன வெய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்' (கிட்கிந்தா. 410) என்று கூறுதல் காண்க. பிராட்டியின் கருணைத்திறம் இச் செய்யுளில் வெளிப்படும். நான் துய்ப்பது விதியின் பயனே என்பதை நீ உணராமலில்லை எனினும் என்மீது நீ கொண்ட அன்பினுல், இங்ஙனம் பேசுகின்றனை என்பது தோன்றத் 'தாயினுமன்பினேய், புந்தியோய்' என அநுமனை விளிக்கின்ருள்; 'நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல தன்றே மறப்பது நன்று' (குறள். 108); 'ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்' (குறள். 156); என்ற பொன்னுரைகளை எண்ணி அரக்கியர் மாட்டுக் கடுமொழியும்

கையிகந்த தண்டமும் தவிர்த்தலே நலம் என்பாள், 'போலவப் பொருள் போற்றலே' என்றாள்.

பி - ம். 1. யானடுத்த; வினையின நீட்டத்தார்.
2. அடுத்துளவாயினுந் தன்மையார். 35

3928. எனக்கு நீயரு ளிவ்வரந் தீவினை
தனக்கு வாழ்விட மாய சழக்கியர்
மனக்கு நோய்செய லென்றனள் மாமதி
தனக்கு மாமறுத் தந்த முகத்தினள்.

'தீவினை தனக்கு வாழ்விடம் ஆய-கொடிய பாவச்செயல்கட்கு இருப்பிடமாகவுள்ள, சழக்கியர்-(தாம் செய்வது இன்னது என்றறியாத) இந்த அரக்கியரின், மனக்கு-மனத்துக்கு, நோய் செயல் - துன்பந் தாராதே; நீ எனக்கு இவ் வரம் அருள்-நீ எனக்கு இந்த வரத்தைத் தந்தருள்வாயாக'; என்றனள் - (என்று மாருதியைப் பார்த்துப்) பகர்ந்தாள், (யாரெனில்) மாமதி தனக்கு - பெரிய பூர்ண சந்திரனுக்கு, மாமறு தந்த முகத்தினள் - பெரிய களங்கத்தை யுண்டாக்கிய முகத்தழகு கொண்ட பிராட்டியார்.

'நீ சொல்லுமாறு அரக்கியர்கள் தீயவரேயெனினும், பிறப்பால் பாவமும் பழியுமே மேற்கொள்ளும் அவர்கள் தீவினை இயற்றுதல் இயல்பாதலின், அவ்வரக்கியரை வருத்தாதிருத்தலாகிய வரத்தினை வேண்டுகின்றாள்'. 'பாபாநாம்வா சுபாநாம்வா, வதார்ஹாணும் ப்லவங்கமா, கார்யம் கருணமார்யேயை நகஸ் சிந்நா பாரத்யதி' இயல்பாகவுள்ள களங்கத்தைப் பிராட்டியின் முகத்துக்குத் தான் ஒப்பாகமாட்டாமையின் அடைந்த அவமானத்தின் குறியாகக் கற்பனை செய்து, 'மாமதி தனக்கு மாமறு தந்த முகத்தினள்' எனப்பட்டது. தற்குறிப்பேற்றவணி. 'அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்போல, மறுவுண்டோ மாதர் முகத்து' (குறள். 1117); என்பது இங்குக் காணத் தகும். சழக்கு; 'சழக்கனேன் உனைச் சார்ந்திலேன்' (திருவாச. 30, 2); மனக்கு-மனத்துக்கு என்பது தொக்கது.

பி - ம். 4. தனக்குலாமறு, தனக்குலாமதி. 36

### அதற்கு அநுமன் இசைதலும், இராமன் வீடணனை நோக்கிச் 'சீதையைக் கொணர்க' என்றல்

3929. என்ற போதி னிறைஞ்சின னெம்பிரான்
தன்று ணைப்பெருந் தேவி தயாவெனு
நின்ற காலை நெடியவன் வீடண
சென்று தாநம தேவியைச் சீரொடும்.

என்ற போதில் - என்று பிராட்டி மொழிந்த போதில், (அநுமன்), 'எம்பிரான் தன் - எமது தலைவனான இராமபிரானுடைய, துணை பெருதேவி தயா - இல்வாழ்க்கைத் துணையான பெருமைமிக்க மனையாளாகிய உனது, கருணையின்படியே (ஆவதாக)', எனு - என்று சொல்லி, இறைஞ்சினன் நின்றகாலை - வணங்கி நின்ற பொழுது, நெடியவன் - (திருவிக்கிரமாவதாரத்தில் விசுவரூபம் கொண்டு), உயர்ந்தவனான இராமபிரான், (அரக்கர்கோனைப் பார்த்து), 'வீடண - விபீஷணா, சென்று நம் தேவியை சீரொடும் தா - (நீ) போய் எம்முடைய மனையாளை அலங்காரத்துடன் அழைத்துவா'. என்னுங்காலை என்ற அடுத்த கவியுடன் தொடரும்.

இறைஞ்சினன் நின்றகாலை என இயைக்க. தன் துணைப் பெருந்தேவி தவத்தொழில் (சுந்தர. 633) நெடியவன் - திருமாலமிசமாகிய இராமபிரான். வீடண - அண்மை விளி. பெருந்தேவி பெருமை - கற்பின் பெருமை; 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும் திண்மை யுண்டாகப்பெறின்' (குறள். 54); 'உன் பெருந்தேவி யென்னுமுரிமைக்கும்' (சுந்தர. 1270); என்று சிறிய திருவடி கூறுதல் காண்க. தயா என்ற வடசொல் தமிழ் முறைப்படி ஐகாரம் பெற்றுத் தயை என நிற்கப்பாலது ஆகார விருகவே நின்றது. 'தயா வெனுமீரந்தானகத்தில்லை யென்ருலும்' (சுந்தர. 636) என்பது பிராட்டி கூற்று.

பி - ம். 1. என்றகாலை ; இறைஞ்சிநின்று.

3. வீடணன், வீடண.

4. தாழ்ந்தனன் சீதையை, தம்மினச் சீதையை, தாநந்தந் தேவியை. 37

## வீடணன் சென்று பிராட்டியைக் கோலம் செய்து எழுந்தருள வேண்டுதல்

3930. என்னுங் காலை யிருளும் வெயிலுங்கார்
மின்னுங் காலை யியற்கைய வீடணன்
உன்னுங் காலைக் கொணர்தீயென் றோதுமப்
பொன்னின் காற்றளிர் சூடினன் போந்துளான்.

என்னும் காலை - என்று (இராமபிரான்) கட்டளை யிட்ட அள விலே, இருளும் வெயிலும் - இருளுடனும் வெயிலுடனும், கார் மின்னும் - மேகத்தில் தோன்றும் மின்னலையுங்கூட்டி, கால் - வெளிவிடுகின்ற, ஐ இயற்கைய வீடணன் - அழகிய இயல்பினை யுடையவனான வீடணன், (சிஞ்சுபவனத்துக்கு), போந் துளான்-வந்து, 'உன்னும் காலை-நினைக்கும் அளவில், கொணர்தி- அழைத்து வா', என்று - என்று, ஓதும் - (இராமபிரானால்) சொல்லப்பட்ட, அபொன்னின் கால் தளிர் சூடினன் - அத் திரு மகளின் அமிசமான பிராட்டியின் பாதமாகிய தளிர்களை முடியில் அணிந்தான்.

இங்கு இருள் என்றது வீடணனுடைய மேனியின் கரிய நிறத்தையும், வெயில் அவன் புனைந்திருந்த நவமணி யிழைத்துச் செய்யப்பட்ட கிரீடத்தையும். கார் மின்னல் அவன் திருமேனியில் அணிந்திருந்த பல ஆபரணங்களையும் குறித்தன என்க. இரண் டாம் வரியில் கால்+ஐ எனப் பிரிக்க. ஓதும் - சொல்லப்பட்ட. 'தழுவிய புளிநர் வேந்தன்' என்ற இடத்துப் போல. ஐ - அழகிய உரிச் சொல்.

இங்கு 'முடிசூடும் படலம் முற்றும்' என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 1. வெயிலும் போல், பயிலுங்கார், வெயிலுங்கான்.
2. மின்னுமோலி.
3. கொணர்வனென்றோதியப்பி கொணர்வெனென்றோடியப், கொணர்வ னென்றோதவப், கொணர்நியென்றோதவப்.
4. போற்றினன், போதுவான், போயினன்,

வேறு

3931. வேண்டிற்று முடிந்த தன்றே
வேதியர் வேத னின்னைக்
காண்டற்கு விரும்பு கின்று
னும்பருங் காண நின்றார்
பூண்டகக் கோலம் வல்லை
புனைந்தனை வருத்தம் போக்கி
ஈண்டுக் கொண் டணைதி
யென்று னெழுந்தரு ளிறைவியென்றான்

'இறைவி - எம்பெருமாட்டியே! வேண்டிற்று முடிந்தது - விழையப்பட்டதான வெற்றி கைகூடி விட்டது; வேதியர் வேதன் - வேதோத்தமர்களால் உணரப்படுபவனாகிய இராமபிரான், நின்னைக் காண்டற்கு விரும்புகின்றான் - உன்னைப் பார்ப்பதற்கு ஆவலுள்ள வனாகி யிருக்கின்றான்; உம்பரும் காண நின்றார் - தேவர்களும் (உன்னைத்) தரிசிக்க வந்து நிற்கின்றனர், ஈண்டு கொண்டு அணைதி - இவ்விடத்திற்கு அழைத்துக் கொண்டுவா', என்றான் - என்று (இராமபிரான்) எனக்கு உத்திரவிட்டுள்ளான்; (ஆகையால் நீ), வருத்தம் போக்கி - மனக் கவலையை விடுத்து, வல்லை - விரை வினில் பூண்டக கோலம் புனைந்தனை - அணிகளால் தக்க முறையில் சிங்காரித்துக் கொண்டு,' எழுந்தருள் - எழுந்தருள்வாயாக', என்றான் - என்று (வீடணன்) மொழிந்தான். அன்றே : அசை.

வேண்டிற்று-வினையாலணையும் பெயர். 'மேனெறி யுணர்வுகூர வேண்டிற்றே பெறுவார்' (பெரிய பு. காரைக்கா. 50); வேண்டிற்று முடிந்தது என்பதற்கு அவலந் தீர்ந்து நின்ற முறையில் இராம பிரானுடன் பிராட்டி சேர்த்தியைச் சேவிக்கும் வாய்ப்புக் கிட்டிற்று எனினுமாம். மாயா சீதைப் படலத்துக்கூடப்பிராட்டி நிலை கண்டறிய வண்டாகச் சென்றதால் அங்குச் சேவிக்கும் வாய்ப்புக் கிட்டவில்லை. வேதியர் வேதன்; (ஒப்பு); 'சுருதி நாயகன்' சுந்தர. 338, 632, 1107; 'நான்மறையின் கனி' (ஆரணிய. 97); வேதன் - அறியப்பட்டவன். வித் என்பது தாது; உம்பரும் -

உம்மை உயர்வுச் சிறப்பு. புணர்ந்தனை - முற்றெச்சம். ஈண்டு - இவ்விடத்து எனவே தன்னிடத்து என்க. இச் செய்யுட்கண் தனக்கு இராமன் கட்டளையை நிறைவேற்றும் பொருட்டுக் காலம் தாழ்த்தலின்றிச் சொற் சுருக்கமாக வீடணன் கூறுதல் காண்க. 'தொகச் சொல்லித் தூவாத நீக்கி' (குறள் 685) காண்க. யுத்த. 3857-ல் இராவண வதம் ஆனவுடன் தன்னைத் தொழ வந்த தேவர்களைக் காணச் சென்றான் இராகவன் என்று கூறப் பெற்றமையின், இச் செய்யுள் இரண்டாம் அடியில் வந்தார் என்ற இடத்து நின்றார் என்ற பாடம் தழுவப்பட்டது.

இங்கு சானகி சிறைமீட்சிப் படலம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

பி - ம். 1. வேதியர் தேவர், வேதியர் தேவன்.
2. காண வந்தார்.
3. பூண்டக்க ; வல்ல.
4. ஈண்டற் கொண்டு.



## 'புணர்தலின்றி யான்வருதலே தகுதி' என்று பிராட்டி மொழிதல்

3932. யானிவ ணிருந்த வண்ணம்
யிமையவர் குழுவு மெங்கள்
கோனுமம் முனிவர் தங்கள்
கூட்டமுங் குலத்துக் கேற்ற
வானுயர் கற்பின் மாத
ரீட்டமுங் காண்டல் மாட்சி
மேனினை கோலங் கோடல்
விழுமிய தன்று வீர.

'வீர - வீரனே! யான் இவண் இருந்த வண்ணம் - நான் இவ்விடத்திலிருந்த விதத்தை, இமையவர் குழுவும் - தேவர்களின் திரளும், எங்கள் கோனும் - எனக்கும் எம்போன்ற பலர்க்கும் இறைவனான இராமபிரானும், அ முனிவர் தங்கள் கூட்டமும் - அந்த முனிவர்களுடைய குழுவும், குலத்துக்கு ஏற்ற - (தாம்

பிறந்த புகுந்த) குலத்துக்குப் பொருந்திய, கற்பின் மாதர் ஈட்டமும் - கற்பினையுடைய மகளிரின் தொகுதியும், காண்டல் மாட்சி - கண்ணுறல் பெருமை தருவதாகும்; மேல் - இங்ஙனம் ஆன பின்னர், நினைகோலம் - நீ மனத்தில் நினைந்து சொல்லிய அலங்காரத்தை, கோடல் - செய்து கொள்ளுதல், விழுமியது அன்று - சிறப்புடைய தாகாது.

பிராட்டி சிறைக்கூடத்தில் இருந்த தன்மை. சுந்தர. காட்சிப் படலத்துத் 'துன்றல் ஓதிதன் னிலையினைச் சொல்லுவான் துணிந்தாம்' (சுந்தர. 331) என்று தொடங்கிக் கவி கூறுவன கொண்டுணர்க. சுந்தர. 332-359; மாட்சி: முற்றுவினை - மாட்சித்து என்க. 'விழுமியது; விழுமிய குணத்து வீரன்' (யுத்த. மீட்சி. 160); வீர என்பதிலிருந்து வீரப்பான்மை சிறந்து விளங்குவதன்றி, உலகியல் உணர்வு போதியதாக இல்லை என்ற குறிப்பும் காணலாம். எனினும் (3929)-ல் 'வீடண, சென்றுதா நம தேவியைச் சீரொடும்' என்று ஆராயத்தக்கது. இது பின்னர் இராமபிரான் இவள் பூண்ட கோலத்தைக் கடிந்துகூறும் செய்யுட்கள் கொண்டுணரலாம். எங்கள் தன்மைப் பன்மை எல்லோரையும் குறிதததது என்க.

பி - ம். 1. தன்மை.

4. மாதர் வருக்கமும்; கண்டால்.

4. மேனவி, மேலினைக்; காண்டல், கொள்வல். 40

## 'இராமபிரான் கட்டளை' என்று வீடணன் வற்புறுத்திக் கூற, பிராட்டி உடன்படத் தேவமாதர்கள் கோலங்காணுதல்

3933. என்றன விறைவி கேட்ட
    விராக்கதர்க் கிறைவ னிலக்
குன்றன தோளி னுன்றன்
    பணியினிற் குறிப்பி தென்றான்
நன்றென நங்கை நேர்ந்தாள்
    நாயகக் கோலங் கொள்ளச்
சென்றனர் வான நாட்டுத்
    திலோத்தமை முதலோர் சேர.

என்றனள் இறைவி - என்று மறுத்துரைத்தனள் பிராட்டி; கேட்ட (அதுகேட்ட), இராக்கதர்க்கு இறைவன் - அரக்கர் கோனாகிய வீடணன், 'நீலம் குன்று அன தோளினான் தன் - நீலமலைபோன்ற தோள்களை யுடையவன் ஆன இராமபிரானுடைய, பணியினில் - கட்டளையினால், குறிப்பு இது - நான் விண்ணப்பித்தவண்ணம் இது', என்றான் - என்று பகர்ந்தான்; (அவ்வாறு மொழிந்த அளவில்), நங்கை - பெண்டிரிற் சிறந்தவளான பிராட்டி, 'நன்று - நல்லது', என - என்று, நேர்ந்தாள் - கோலங்கொள்ள இணங்கினாள்; நாயகம் கோலம் கொள்ள - (அங்ஙனம்) தலைசிறந்த அலங்காரம் அவள் கொள்ளும்பொருட்டு, வான நாட்டு திலோத்தமை முதலோர் - தெய்வலோகத்துத் திலோத்தமை முதலிய அப்சர ஸ்தீரிகள், சேர சென்றனர் - ஒருங்கு வந்து கூடினர்.

பணியினிற் குறிப்பு: கட்டளையின் கருத்து. முதற்கண் கோலம் கொள்ள மறுத்தவள் கணவனார் கட்டளை என்று வீடணன் மொழிந்த அளவில், வேறு ஒன்றும் ஆராயாமல் கொழுநன் சொற்படி ஒழுகுவதே கற்புடை மகளிர் கடன் என்று கோலம் கொள்ள இணங்கினாள். திலோத்தமை: வானத்து அரம்பை மார்களில் ஒருத்தி. பேரழகு வாய்ந்த மகளிர்களின் உறுப்புக் களில் திலம் அல்லது எள்ளளவாக எடுத்துத் திரட்டிப் பிரமன் படைத்த ஓர் எழில் உரு என்பர்; இப்பேரழகியே, 'இராவணன் செருப்பினைத் தாங்கிச் சென்றதாகக் குறிப்பிட்டமை' சுந்தர. 408ல் காண்க. 'சிந்தோடரியுண்கண் திலோத்தமை காதல் செற்ற, சுந்தோப சுந்தர்' (கிட்கிந்தா. 274) என வந்தமையும் காணலாம். முன்னர் இராவணன் ஆதிக்கத்திற்கஞ்சி அரக்க மாதரை நீராட்டியும், பூச்சூட்டியும், தங்கள் ஆடல்பாடல்களால் மகிழ்வூட்டியும் நின்ற தேவமாதர்கள், புருஷோத்தமனும் தேவாதி தேவனுமான இராமபிரான் காதலியான பிராட்டிக்குக் கோலம் செய்ய வந்ததில் என்ன புதுமையுள்ளது? இராமபிரானுடைய திருவுள்ளப்பாங்கினை யறிந்தே அங்ஙனம் வந்தனர் என்க.

பா - ம். 1. கெட்டான்; அந்தக்; நீதக்க.

2. பணியெனா, பணியினும், பணியினிக்; குறிப்போன்; குறிப்பன்.

4. முதலோர் சேர்ந்தார், முதல செய்யோர் முதல சேர்ந்தார்.

3934. மேனகை யரம்பை மற்றை யுருப்பசி வேறு முள்ள
வானக நாட்டு மாதர் யாருமஞ் சனத்துக் கேற்ற
நானநெய் யூட்டப் பட்ட நவையிலாக் கலவை தாங்கிப்
போனகந் துறந்த தையல் மருங்குற நெருங்கிப் புக்கார்.

மேனகை அரம்பை மற்றை உருப்பசி - மேனகையும் அரம்பையும் மற்றும் உருப்பசியும், வேறும் உள்ள - (இவர்களின்) வேருக உள்ள, வானகம் நாட்டு மாதர் யாரும் - விண்ணுலகத்து வனிதையர்கள் அனைவரும், மஞ்சனத்துக்கு ஏற்ற - (பிராட்டியை) நீராட்டற்கேற்ற, நானம் நெய் ஊட்டப்பட்ட - கத்தூரிப்புழுகு கலந்த, நவை இலா - குற்றம் தீர்ந்த, கலவை தாங்கி - கலவைச்சாந்தை ஏந்திக்கொண்டு, போனகம் துறந்த - (இராவணனுல் சிறைப்படுத்தப்பட்டது முதலாகப் பத்துமாத காலம்) ஊண் ஒழித்து நின்ற, தையல் மருங்கு உற நெருங்கி புக்கார் - சீதாப்பிராட்டியின் அண்மையில் பொருந்தி நெருங்கிப் புகுந்தனர்.

மேனகை: இவள் இராவணன் ஆட்சியில் அவன் நாளோலக்கத்திருந்து மகிழுமாறு நடம்புரிந்த செய்தி, 'அருந்தவ முனிவர்க்கு மமைந்த வீடு மீட்குறு மேனகை மேனகை விளங்க' (சுந்தர. 1090). உருப்பசி யுடைவாளேந்தினள் தொடர, மேனகை வெள்ளடை யுதவ' (சுந்தர. 408) என்றதும் காணலாம். உருப்பசி: ஊர்வசி என்ற வடசொல்லின் தமிழாக்கம்; பிரமனுடைய ஊரு அல்லது தொடையினின்றும் தோன்றியவள் என்று கூறுவர். வானகம்: 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்ற லரிது' (குறள். 101). நானநெய், கத்தூரிப்புழுகு, நறுமணத்தைலம்: 'நானநெய்ந் நன்குரைத்து' (யுத்த. 5559). நவை - குற்றம்; 'மானம் தாங்குறு நவையிற் றன்ருல்' (யுத்த. 2634). போனகம் - உணவு; 'போனகத் தொழின் முற்றுதி' (யுத்த. 1282); 'பரமனைப் பாடிப்பாடிப் போனகம் படைக்க வாரீர்' (நக்க. 752). போனகம் துறந்த தையல்: பத்து மாதங்களாக உணவின்றி, 'இராமாமிர்தம் ஜீவனம்' என்றதற்கேற்ப, பரம தாரகமாகிய இராமநாம உச்சாரணத்தாலேயே உயிர் தாங்கியிருந்தவள் என்க. முன்னர்ச் சுந்தரகாண்டத்து (631) 'தீர்விலேன்' எனத்தொடங்கும் செய்யுட்கண் பிராட்டி அநுமனிடம் கூறிய போது, 'வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர், நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன், சோரு மாருயிர் காக்கும் துணிவி

னுல்' என்ற இடத்து நண்ணுவேன் என்றனள் அன்றி, நண்ணிப் பருகினேன் என்று கூருமை கொண்டு, இலங்கையிலிருந்த காலத்துப் புனலும் பருகவில்லை என்று துணியலாம்: இந்தப் பொய்கையும் இலங்கைப் புனலன்று, இராவணன் எடுத்துவந்த பர்ணசாலையில் இளவல் இயற்றிய நீர்நிலை யென்பதும் (சுந்தர. 630) இங்கு அறியத்தக்கது.

பி - ம். 1. மற்ற வுருப்பசி ; என்னும்.

2. வானகை ; யாவரு மனத்திற்கேற்ற, ஆடுமஞ் சனத்தின் வாய்ந்த.

3. நானகை ; யுடனீராடி, உப்பட்டாய், உடன்பட்டாய் ; நவையிலா, நனைமலர்.

4. நோக்கிப் புக்கார். 42

3935. காணியைப் பெண்மைக் கெல்லாங்
கற்பினுக் கணியைப் பொற்பின்
ஆணியை யமிழ்தின் வந்த
வமிழ்தினை யறத்தின் தாயைச்
சேணுயர் மறையை யெல்லா
முறைசெய்த செல்வ னென்ன
வேணியை யரம்பை மெல்ல
வரன்முறை சுகிர்த்து விட்டாள்.

பெண்மைக்கு எல்லாம் காணியை - பெண்களின் இலக்கணங்களுக்கெல்லாம் விளைநிலமானவளும், கற்பினுக்கு அணியை - கற்புநெறிக்கு அழகு செய்பவளும், பொற்பின் ஆணியை - அழகு என்னும் பொன்னுக்கு (மாற்றறிய) உரையாணிப் பொன் போல் உள்ளவளும், அமிழ்தின் வந்த அமிழ்தினை - (திருப்பாற் கடலிலே) தேவர் அமுதுடன் எழுந்த திவ்யாமுதம்போன்ற திருமகளின் அமிசமானவளும், அறத்தின் தாயை - தருமத்திற்குத் தாய் போன்றவளுமான, வேணியை - பிராட்டியின் கூந்தற் சடையை, சேண் உயர் மறையை எல்லாம் முறை செய்த செல்வன் என்ன - மிகவும் உயர்ந்த வேதங்கள் அனைத்தையும் ஒழுங்கு செய்கின்ற திருமால் போன்று, அரம்பை - அரம்பையானவள், மெல்ல - மெதுவாக, வரன் முறை சுகிர்தது விட்டான் - முறைப்படிச் சீவிச் சிடுக்கறுத்து வகைப்படுத்தி வாரிவிட்டனள்.

காணி - விளைவிடம். பெண்மை; நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் பண்புகள். கற்பினுக்கு அணியை - கற்பு மகளிர்க்கு அணி என்பர்; பிராட்டி அந்தக் கற்பினுக்கு அணி செய்பவள் என்று பாற்றிக் கூறப்பட்டது; 'குணங்களையென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவையுய்ய' (பால. கார்முகப். 18). கண்டனென் கற்பினுக் கணியை: (சுந்தர. 1269) 'அருங்குலக் கற்பினுக் கணியை' (யுத்த. 3941). ஆணி-அழகினை மாற்றுரைத்துக் காணும் உரையாணி. அமிழ்தின் வந்த - அமிழ்துடன் வந்த அமுதம் போன்றவளை; 'அமிழ்தின் வந்த தேவியை' (கிட்கிந்தா. 307). சேனுயர்: 'சேனுயர் தருமத்தின் தேவை' (அயோத்தி கிளைகண்டு. 47); 'சேணுயர் திருக்காளத்தி மலைமிசை' (பெரியபு. கண்ணப்பர். 96). வேதங்களில் உள்ள சிக்கல்கண்டு நீக்கித் திருமால் வேதவியாசராக அவதரித்து வகைசெய்தது போன்று என்று உவமை கூறினர்; 'வியாசாய விஷ்ணுரூபாயா வியாசரூபாய விஷ்ணவே' என்றது காண்க. மிகச் சிறந்த உவமை. 'இங்கு வேதத்தை வகைப்படுத்தித் தொகுத்தது கூறப்பட்டது. (ஒப்பு): 'வேத வேதாந்தங் கூறும் பொருளினை விரிக்கின்றார் போல், தூது வாணிக டோறும் வரன்முறை காட்டிச் சொன்னர்' (யுத்த. 3189) என்றது காண்க. வேணி - சடை, ஏகவேணி என்பது முதனூல்; 'ஒரு சடையாகிய குழலாள்' (சுந்தர. 339) என்பர் கம்பநாடர். யோனிவாய்ப் பட்டுப் பிறவாத பிராட்டிக்கு அபௌருஷேயமான வேதத்தை உவமை கூறினர். அமிழ்தின் வந்த அமிழ்து: இனி, வியாசர் துவாபர யுகம்; அம்முனிவர் வகைசெய்ததை முந்தின யுக நிகழ்ச்சியாகிய அரம்பை வகைசெய்தற் குவமைகூறலாமோ எனின், பிற்காலத்து வந்த கம்பர் இரு நிகழ்ச்சிகளையு அறிந்தவர் உலகப் பிரசித்தமான ஒன்றை உவமை கூறினர் என்க. மேலும் கூறும் உபமானம் உபமேயத்திற்கு முற்பட்டே யிருத்தல் வேண்டும் என்ற நியதியும் இல்லை அன்றோ? ஜகப்பிரியர் எழுதிய 'ஜூலியஸ் சீசர்' என்ற நாடகத்தில், 'கடியாரம் மணி அடித்தது' என்றதுபோலக் கொள்க, இங்குக் 'கற்பினுக் கரசினைப் பெண்மை காப்பினைப், பொற்பினுக் கழகினைப் புகழின்

வாழ்க்கையைத், தற்பிரிந் தருள்புரி தருமம் போலியை' (யுத்த. 3952) என்ற செய்யுள் ஒப்பு நோக்கத்தகும்.

பி - ம். 1. பெண்ணுக் கெல்லாம்; கற்பினுக் கிடைந்த, அமைந்த; பொற்பார்.
2. வந்த அழகினை.
3. முறையை; உரைசெய்த; செல்வனன்ன, செல்வனென்று, செய்கையென்ன.
4. வேணியைவிட்டார் வகிர்ந்து, சுகிர்ந்து; வரன்முறைத் திறந்து, வரன்முறை சுருக்கு, வரன்முறை சுருக்க, முறை விரன்முறை சுகிர்ந்து, சுருக்கிவிட்டாள். 43

3936. பாகடர்ந் தமுது பில்கும் பவளவாய்த் தரளப் பத்தி
சேகற விளக்கி நானந் தீட்டிமண் சேர்ந்த காசை
வேகடஞ் செய்யு மாபோல் மஞ்சன விதியின் வேதத்
தோகைமங் கலங்கள் பாட வாட்டின ரும்பர் மாதர்.

உம்பர் மாதர் - தேவகன்னியர்கள், பாகு அடர்ந்து - இனிமை செறிந்து, அமுது பில்கும் - அமுதம்போன்று இன்சொற்களை வெளிவிடும் இயல்பினதான, பவளம் - பவளம்போன்று சிவந்த, வாய் - (பிராட்டியின்) வாயிலுள்ள, தரளம் பத்தி - முத்து வரிசை போன்ற பல்வரிசையை (ஈரைந்து மாதங்களாகத் துலக்காமையின்), சேகு அற - நன்கு ஊன்றிய ஊத்தை அகலும்படி, விளக்கி - பற்களை விளக்கி, நானம் - நறுமணத் தைலத்தை, தீட்டி - தூய்மை செய்து சிரசில் தேய்த்து, மண் சேர்ந்த காசை - மாசு படிந்த இரத்தினத்தை, வேகடம் செய்யுமாபோல் - சாணைபிடித்துத் தூய்மை செய்வதுபோன்று, வேதத்து - வேதங்களில் விதித்த, மஞ்சனம் விதியின் - நீராட்டுக்குரிய முறைமைப்படி, ஓகை - மகிழ்ச்சியுடன், மங்கலங்கள் பாட - மங்கல வாழ்த்துக்களைப் (பல மாதர்) பாட, ஆட்டினர் - நீராட்டுவித்தனர்.

'பாகு அடர்ந்தது' என்பது பிராட்டியின் வாலெயிறூறிய நீரைக் குறித்தது; 'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி வாலெயி றூறியநீர்' (குறள். 1121) என்றது காண்க. பிராட்டியின் வாய்க்குப் பவளம்; கிட்கிந்தா. 768, 769 உரைக்குறிப்புக் காண்க. தரளப்பத்தி: 'முத்தினு நிலவினும் முறுவல் முற்றினாள்' (சுந்தர. 586). பத்தி - வரிசை. வேகடம் செய்தல்: 'வேத

நன்மணி வேகடம் செய்தன்ன' (யுத்த. 3921) "வேகடஞ் செய்மணி யென மின்னினர்' (பால நீர்விளை. 22); மஞ்சனம் - நீராட்டு; 'மரபின்மா பெரும் புறக்கடல் மஞ்சன மருவி' (யுத்த. 134); 'வானவர் மகளிராட்ட மஞ்சன மாடுவாரை' (சுந்தர. 199). ஓகை - பெரு மகிழ்ச்சி; 'ஓகையாற் செருக்கி மீண்டா ருதிட்டிரன் சேனை யுள்ளார்' (வி. பா. 16ஆம் போர் 90).

பி - ம். 1. அமர்ந்து; நல்கும், மல்கும், பல்கும்.
2. விளங்கி.
3. செய்யுமாறின், செய்யுமார்பின்.
4. ஓதை; பாடி; வாழ்த்தினர். 44

3937. உருவிளை பவள வல்லி
பானுரை யுண்ட தென்ன
மருவிளை கலவை யூட்டிக்
குங்கும முலையின் மாட்டிக்
கருவிளை மலரின் காட்சிக்
காசறு தூசு காமன்
திருவிளை யல்குற் கேற்ப
மேகலை தழுவச் செய்தார்.

உருவிளை - அழகு மிக்க, பவள வல்லி - பவழக்கொடி, பால் நுரை உண்டது என்ன - பால் நுரையால் மூடப்பட்ட தென்னு மாறு, (பிராட்டியின் சிவந்த மேனியில்), மருவிளை - நறுமணம் மிக்க, கலவை ஊட்டி - வெண்ணிறச் சாந்தினைப் பூசி, குங்குமம் - குங்குமக் குழம்பை, முலையின் மாட்டி - (அவள்) தனங்களில் அப்பி, கருவிளை மலரின் காட்சி - கருவிளை மலர் போன்ற தோற்றமுள்ள, காசு அறு - குற்றமற்ற, தூசு - பட்டாடையுடன், காமன் திருவிளை அல்குற்கு ஏற்ப - மன்மதனது போகச் செல்வம் பொலிகின்ற அல்குற்குப் பொருந்த, மேகலை தழுவ செய்தார் - மேகலை என்னும் இடையணியையும் பொருத்தமாக அமைத்தார்.

பவளவல்லி பால்நுரை யுண்டதன்ன என்றதனால் சிவந்த திரு மேனியில் வெண்ணிறமான சந்தனச் சாந்து என்று உரைக்கப் பட்டது. உவமையணி. சிவந்த திருமேனிக்குக் கறுப்பு ஆடையே பொருத்தமாகலின் 'கருவிளை மலரின் காட்சிக் காசறு தூசு'

என்றார். கம்பநாடரின் உலகியல் அறிவினை இங்குக் கண்டு மகிழலாம். தூசு; நல்லாடை; 'தூகம் கலையும் தொலையா வழ கெறிக்கும் தொடியும்' (அம்பிகாபதிக் கோவை. 16); அல்குல் போகத்தானமாகலின் திருவினை அல்குல் எனப்பட்டது. 'புணர்ந் தாற் புணருந் தொறும் பெரும்போகம் பினும்புதிதாய், மணந்தாழ் புரிகுழலா ளல்குல் போல வளர்கின்றதே' (திருக்கோ. 9); (ஒப்பு): 'போகமார்த்த பூண்முலையாள்' (தேவா 539); 'கருத்து முற்றத் தோய்ந்தே கடந்தான் திருவிற் றெடர் போக பௌவம்' (பால. அர. 5) என்று தயரதனைக் கூறியதும் காண்க. மற்றும் உத் தம இலக்கணமமைந்த மகளிரின் அல்குல் அதனை அணைவார்க்குப் பெரும்போகம் தரும் என்று சாமுத்திரிகா இலக்கண நூல் கூறு வதும் காண்க. 'திருமகளிவளைச் சேர்ந்தான் தெண்டிரை யாடை வேலி, யிருநில மகட்கும் செம்பொ னேமிக்கு மிறைவ னுகும்' (சீவக. 744) என்றதும் காணத்தகும். விரிசிகை மேகலை கோவை என்பன மகளிர் அணியாதல் காண்க. மேகலை:- எண்கோவை யிசையணி என்பர். காசறு தூசு மேகலை; 'நிறஞ் செய்கோசிக நுண்டுசு நீவி, நீவாத வல்குல், புறஞ்செய் மேகலையும் தாழ' (பால. கோலங். 13).

பி-ம். 1. உருவினைப்.

2. மருவினை சாந்தம் பூசி; முலையினூட்டி.

3. கருவினை கமலம்; மலரின் நாட்டத் தஞ்சன மெழுதி; சாந்தி.

4. திருவினை யுலகுக்கேற்ப, திருவினை யல்குற் கேற்ற; சேர்த்தார். 45

3938. சந்திரன் தேவி மாரிற்
றகையுறு தரளப் பைம்பூண்
இந்திரை தேவிக் கேற்ப
வியைவன பூட்டி யாணர்ச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தேம்பசும் பாகு தீற்றி
மந்திரத் தயினி நீரால்
வலஞ்செய்து காப்பு மிட்டார்.

இந்திரை தேவிக்கு ஏற்ப - திருமகளின் அமிசமாக வந்துள்ள வளாகிய பிராட்டிக்குத் தக, இயைவன-பொருந்தியனவும், சந்திரன் தேவிமாரில் - சந்திரனுடைய மனைவியரான உடுக்கள் போன்று, தகை உறு-அழகு மிகுந்த, தரளம்-முத்துக்களால் இயன்றனவும்

பைம்பூண் - பசும் பொன்னுற் செய்யப்பட்டனவும் ஆன, (அணிகளை) பூட்டி - தரிக்கச்செய்து யாணர் - புதிய, சிந்துரம் - சிந்துரம் போலவும், பவளம் - பவழம் போலவும், செவ்வாய் - செந்நிறம் வாய்ந்த (அப்பிராட்டியின்) வாயில், தேம் பசும் பாகு தீற்றி - இனிய பசிய தாம்பூல சாரத்தைத் தடவி, மந்திரத்து - மந்திரம் சொல்லி, அயினி நீரால் - ஆலத்தி நீரை, வலம் செய்து - வலது புறமாகச் சுழற்றி, காப்பும் இட்டார் - அந்த ஆலத்தி நீரை நெற்றியில் தடவி (அதனால்) திருட்டித் தோடம் எய்தாமல் செய்தார்.

சந்திரன் தேவிமார் - தக்கன் மகளிரான அசுவினி முதலிய இருபத்தேழு உடுக்களும். இந்திரை - திருமகள். இங்கு, 'இந்திரன் தேவி' என்ற பாடங்கொண்டு உரை வரைந்தாரும் உளர். ஆயினும் பிராட்டி இந்திராணியைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தவள் ஆதலினாலும் 'உயர்ந்ததன் மேற்றே யுள்ளும் காலை' (தொல்: உவம: 3) என்றபடி உவமானம் உயர்ந்ததாக இருத்தல் வேண்டுமாதலினாலும் இந்திரைதேவி என்ற பாடமே தழுவப் பட்டது. இயல்பாகவே உத்தம வனிதையர்கட்கு அதரம் சிவந்திருக்கும் என்பர். அதனை மேலும் சிவப்பேறும்படி தாம்பூலம் தீற்றினர் என்க. 'சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்' (அயோத்தி. மந். 55) என்றது இங்குக் காணத்தகும். கூனி இதனைக் கூறும்போது பிராட்டியின் இயல்பாகச் சிவந்த அதரத்தைக் கூறினளில்லை. இளவரசுப் பட்டம் பெறவிருந்த இராமபிரானுடன் தம்பலம் தின்று சிவப்பேறியதையே குறித்தனள் என்க. (ஒப்பு); 'சுந்தரக் குமுதச் செவ்வாய்' (யுத்த. 1582) என்று இராவணன் கூறுதல் காண்க. 'தேம்பலஞ் சிற்றிடை யீங்கிவள் தீங்கனி வாய்கமழும், ஆம்பலம் போது' (திருக்கோ. 11) என்பது திருக்கோவை, காப்பு - கண்ணேறு வராமல் இடும் ரக்ஷை. பாகு - பாக்கு. இது வெற்றிலை சுண்ணாம்பு முதலியவற்றிற்கும் உபலக்கணம். வலம் செய்து என்பதற்குப் பிராட்டியைச் சுற்றி வந்து எனினுமாம். இப்பொழுதும் திருமணக் காலங்களில் மணமக்களைச் சுமங்கலிகள், கைகளில் தீபம், நீர், செஞ்சோறு முதலியன கொண்டு சுற்றி வருதல் வழக்கு. அயினி நீர் சுற்றுதல்; 'ஐயவி

நுதலிற் சேர்த்தி யாய்பிற வயினிசுற்றிக், கைவளர் மயிலனுளை வலம் செய்து காப்புமிட்டார்' (பால. கோலங். 18); அயினி - உணவு; (மலைபடு. 467) எனவே, அயினிநீர்; சோற்றுடன் கலந்த மஞ்சள்நீர் என்க. 'அயினியு மின்றயின் றனனே' (புறநா. 77).

பி - ம். 1. தசைகபெற; பவளப்

2. இந்திரன், ஏற்ற.

3. பாகுந்நீற்றி, பாகும்பற்றி.

4. மந்திரித்தயினி, மந்திரத்தயனிர்; சுற்றி வலம் செய்தார்; சுற்றி வாழ்த்தினர். 46

இங்கு அதிகப் பாடல்கள் :—

சென்றவன் தன்னை நோக்கித்
திருவினு ளெங்கே யென்ன
மன்றலங் கோதை யாளும்
வந்தனள் மானந் தன்னில்
என்றன னென்ன லோடு
மீண்டுநீ கொணர்க வென்ன
நன்றென வணங்கிப் போந்து
நால்வரைக் கொணர்க வென்றான். 1

காத்திர மிகுந்தோர் நால்வர்
கஞ்சுகிப் போர்வை யாளர்
வேத்திரக் கையோ நீண்டி
விரைவுடன் வெள்ளந் தன்னைப்
பாத்திடப் பரந்த சேனை
பாறிடப் பரயன் சீறி
ஆர்த்தபே ரொலியென் னென்ன
வரிகளார்ப் பரவ மென்றார். 2

என்றபோ திராம னைய
வீடணு வென்ன கொள்கை
மன்றலங் குழலினுளை மணம்
புணர் காலமன்றித்
துன்றிய குழலினுர் தாஞ் சுயம்வர
வாஞ்சை (சூழ) போதும்
வென்றிசேர் களத்தும் வீர
விழுமியதன்று வேலோய். 3

அற்புத னினைய கூற
வைய வீடணனு மெய்தச்
செப்பின முலையா டன்பாற்
செப்பவுந் திருவ னாளும்
அப்பினுட் டுயிலை நீத்து
அயோத்திவந் தடைந்த வண்ணல்
ஒப்பினைக் கண்ணிற் கண்டே
யுளநினைந் தினைய சொன்னான். 4

## பிராட்டியை விமானத்திலேற்றி இராமபிரானிடம் அழைத்துச் செல்லுதல்

3939. மண்டல மதியி னுப்பண்
மானிருந் தென்ன மானம்
கொண்டன ரேற்றி வான
மடந்தையர் தொடர்ந்து கூட
மண்டிவா னரரு மோட
வரக்கரும் புறஞ்சூழ்ந் தோட
அண்டர்நா யகன்பா லண்ணல்
வீடண னருளிற் சென்றான்.

மதியின் மண்டலம் நாப்பண் - மதி மண்டலத்தின் நடுவிலே, மான் இருந்தென்ன - மான் வீற்றிருந்தாற் போல, மானம் - விமானத்திலே, கொண்டனர் ஏற்றி - (பிராட்டி அமருமாறு அதில் அவளைக்) கொண்டு ஏற்றுவித்து, வானம் மடந்தையர் - தேவ மகளிர், தொடர்ந்து கூட - (விடாமல்) தொடர்ந்து உடன்வர, வானரரும் மண்டி ஓட - குரக்கு வீரர்களும் நெருங்கி ஓடிவர, அரக்கரும் - இராக்கதர்களும், புறம் சூழ்ந்து ஓட - புறத்தே சுற்றி விரைந்துவர, அண்டர் நாயகன்பால் - தேவர்கள் தேவனான இராம பிரானிடத்து, அண்ணல் வீடணன் - பெருமையாளனான வீடணன், அருளில் சென்றான் - (அப் பெருமான்) கட்டளை யிட்டருளிய வண்ணம் சீதாதேவியை அழைத்துச் சென்றான்.

மண்டலமதி - மானம்; சந்திரனிடத்துக் காணப்படும் உருவை மான் என்பர். எனவே மதியின் நடுவில் காணப்படும் மான் போன்று என்று பிராட்டியைக் கூறினர். பின்னிகழ்ச்சியில், இங்கு

மானகக் கூறப்பட்ட தொன்று அதன் களங்கமாக இராமபிரானுக்குத் தோற்றுதல் காண்க. மானம் - விமானம் என்றதன் முதற்குறை. இங்கு விலங்கினங்களை வானரர் என்று உயர்திணை வாய்பாட்டாற் கூறியது ஏற்குமோ என்னின் ஏற்கும். தொல்காப்பியம் மரபியலில் 'மாவு மாக்களு மையறி வினவே' 'மக்கள் தாமே ஆறறிவுயிரே' (தொல்: மரபு. 32. 33) என்ற சூத்திரங்களையும் அவற்றிற்குப் பேராசிரியர் கூறிய உரையையும் காண்க. 'மற்றும் ஓரோவழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற் பேசுவன உளவாயின், அது தெய்வத் தன்மை முதலிய விசேடத்தானன்றிப் பொருட்டன்மையா னன்மையின் அமைத்துக் கொள்வது' என்ற இலக்கண விளக்கச் சூருவளியும் இங்குக் காணத்தகும். 'மாடு பற்றி யிடங்கர் வலித்திடக், கோடு பற்றியகொற்றவற் கூயதோர், வீடுபெற்ற விலங்கும் விலங்கரோ' (கிட்கிந்தா. 338) என்று இராமபிரான் கூறியதும் இங்குக் காணலாம்.

பி - ம். 1. மின்.

2. கொண்டதில் ; மான.

3. உண்டை, உண்ட ; வானவரு மொள்வாள் ; ஒருங்குசூழ. 47

இதன்பின் 'எச்சிலென்' என்ற பாடல்.

## வேறு

### அளவிறந்த தேவர்களும் முனிவரரும் தேவ மாதர்களும் பிறரும் பிராட்டியை நெருங்கல்

3940. இப்புறத் திமையவர் முனிவ ரேழையர்
துப்புறச் சிவந்தவாய் விஞ்சைத் தோகையர்
முப்புறத் துலகினு மெண்ணின் முற்றினோர்
ஒப்புறக் குவிந்தன ரோகை கூறுவார்.

இ புறத்து - இப்பால், (சீதாதேவி இராமபிரானிடம் சென்ற இடத்து), இமையவர் முனிவர் ஏழையர் - தேவர்களும் இருடிகளும் (அவர்தன்) மனைவிமாரும், துப்பு உற சிவந்த வாய் விஞ்சை தோகையர் - பவழத்தை யொப்ப, சிவந்த வாயினையுடைய வித்தியாதரப் பெண்களும், (மற்றும்) முபுறத்து உலகினும் எண்ணில்

முற்றினோர் - மூன்று வகை யுலகங்களிலும் உள்ள 'எண்ணிக்கையில் மிக்கவரான பிறவனிதையர்களும், ஓகை கூறுவார்-மகிழ்ச்சிச் செய்திகளைச் சொல்லிக்கொண்டே, ஒப்புற குவிந்தனர் - ஒருசேர (வந்து) குழுமினர்.

முனிவர் ஏழையர் - இருடி பத்தினிகள். உற - உவம வாசகம். வித்தியாதரன் என்ற வடசொல் விஞ்சை எனக் குறுகியது. ஓகை - மகிழ்ச்சி விளைக்கும் செய்தி. ஏழை - பெண்; 'ஏழை சோபனம் ஏந்திழை சோபனம்' 'ஏழை வழங்குறு சொல்லி னிரங்கினான்' (யுத்த. 2815); ஒப்புற - ஒன்றாக; யுத்த. 361.

பி - ம். 1. முனிவ ரேழையர், முனையர் சேனையர்.

2. சிவந்த வாய்த்தெய்வந் தோகையர்.

3. எண்ணி; முற்றிலார்.

4. ஒப்பிவ; கூடுவார், கூறவே. 48

இது முதல் 59 கவி வரையில் உள்ள பாடல்கள் சில பிரதிகளில் இல்லை. சில பிரதிகளில் 'எச்சிலென்றுடல்' (57) என்ற பாடல் (48) ஆவதாகவும், மானமீது என்ற பாடல் (49) ஆவதாகவும் 'இப்புறத்து' என்ற இந்தப் பாடல் முதல் 'அருந்ததியனைய' (55) என்ற பாடல் வரையில் உள்ளவை முறையே 52-59 பாடல்களாகவும் உள்ளன.

## இங்ஙனம் அனைவரும் பிராட்டியைச் சுற்றி நெருங்குகையில் அவர்களை அரக்கர் அடித்துத் துரத்த அவர்கள் மிகக் கதறுதல்

3941. அருங்குலக் கற்பினுக் கணியை யண்மினார்
மருங்குபின் முன்செல வழியின் றென்னலாய்
நெருங்கினர் நெருங்குழி நிருத ரோச்சலால்
கருங்கடன் முழக்கெனப் பிறந்த கம்பலை.

(இங்ஙனம் அனைவரும்) அரு குலம் கற்பினுக்கு அணியை - அருமையான குலத்தில் தோன்றியவளும் கற்பினுக்கு அணியாவாளுமான பிராட்டியை, அண்மினார் - நெருங்கினாராய், மருங்கு - அருகிலும், பின் முன் - பின்னும் முன்னும், செல வழி இன்று,

என்னலாய் - ஒதுங்குதற்கும் வழி இல்லை யென்னுமாறு, நெருங்கினர் - கிட்டினார்கள்; நெருங்கு உழி - நெருங்கிய இடத்து, நிருதர் ஓச்சலால் - இராக்கதர்கள் கோலை உயர்த்தி, அதட்டியதால், கரு கடல் முழக்கு என - கரிய கடலின் ஆரவாரம் என்னும்படி, கம்பலை பிறந்த - பேரொலி எழுந்தது.

கற்பினுக்கணியை; யுத்த. 3935; சுந்தர காண்டம் 1269. ஓச்சுதல் - உயர்த்தல். 'கைச்சிறிய தொருமாறு கொண்டோச்ச' (பெரியபு. திருஞா. 72); 'கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்கம், நீங்காமை வேண்டுபவர்' (குறள். 562); கம்பலை - பேராரவாரம். அரக்கர்கள் கைகளையோ கழிகளையோ உயர்த்திய அளவில், எழுந்த வாநரரின் பேரொலி. 'கடல் பேரொலிக் கம்பலை' (யுத்த. 3613).

பி ம். 1. அருந்ததிக் கற்பினுக்கு; அன்பினைற், அன்பினர்.
2. மருங்குற.
4. பொலிந்த கம்பலை. 49

## ஒலி கேட்ட இராமன் அதன் காரணம் அறிந்து விடணனைக் கடிதல்

3942. அவ்வழி யிராமனு மலர்ந்த தாமரைச்
செவ்விவாண் முகங்கொடு செயிர்த்து நோக்குறு
இவ்வொலி யாவதென் றியம்ப விற்றெனக்
கவ்வையின் முனிவரர் கழறி னரரோ.

அவ்வழி - அப்பொழுது, இராமனும் - இராமபிரானும், அலர்ந்த தாமரை - மலர்ந்த தாமரை மலர் போல, செவ்வி வாள் முகம் கொடு - அழகாய் ஒளிர்கின்ற முகத்தால், செயிர்த்து - சினந்து, நோக்குறு - நோக்கி, 'இவ் ஒலி யாவது - இந்த ஓசை எதினாலாகியது?' என்று இயம்ப - என்று கேட்க, கவ்வையின் முனிவரர் - பேரொலியோடு (உரத்த குரலில்) மனனசீலர்கள், இற்று என கழறினர் - (அதன் காரணத்தை) இன்னது என்று எடுத்து மொழிந்தார். அரோ - அசை.

அலர்ந்த தாமரைச் செவ்வி வாண்முகம்; 'அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா' (அயோத்தி. கைகேசி. 108);

செயிர்த்து; 'செயிர்ப்பினு மழகுசெய்யும் திருமுகத்தணங்கு' (யுத்த. 706); 'செற்றன்றாயினுஞ் செயிர்த்தன்றாயினும்' (புறநா. 226)ன் உரையில், 'தன் மனத்துள்ளே கறுவு கொண்டதாயினும், வெளிப்பட நின்று வெகுண்டதாயினும்' என்று வரைதல் காண்க. நோக்குறு - நோக்கி. செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம்.

பி - ம். 2. செவ்வியாள்.

3. இயம்புகின்றெறு.

4. கூறினாரோ.

50

3943. முனிவரர் வாசகங் கேட்பு றுதமுன்
நனியிதழ் துடித்திட நகைத்து வீடணன்
தனையெழ நோக்கிநீ தகாத செய்தியோ
புனிதநூல் கற்றுணர் புந்தி யோயென்றான்.

முனிவரர் - முனிபுங்கவர்கள் மொழிந்த, வாசகம் - வார்த்தைகளை, கேட்புறுத முன் - கேட்பதற்கு முன்னரே, (இராமபிரான்) இதழ் நனி துடித்திட - உதடு பெரிதும் துடிக்க, நகைத்து - வெகுளிச் சிரிப்புக் கொண்டு, வீடணன்தனை எழ நோக்கி - வீடணனை நிமிர்ந்து பார்த்து, 'புனித நூல் கற்று உணர் புந்தியோய் - தூய்மையான நூல்களைக் கற்றுத் தேர்ந்த அறிவுடையவனே!, நீ தகாத செய்தியோ - நீ தகுதியற்ற செயல்களைச் செய்யக் கடவையோ?' என்றான் - என்று (வெகுண்டு) கூறினான். ஓகாரம்: வினா.

தேவர் முதலானோரை அரக்கர்கள் கரம் ஓச்சி அதட்ட அச்செயல், வீடணனாலோ அவன் ஏவலாலோ நிகழ்ந்ததாக எண்ணி, இராமபிரான் வீடணனிடம் சினந்தான் என்க. 'கேட்புறுத முன் என்றான்' என்றமையின் வெகுட்சியின் வேகம் புலனும். வாசகம் - வடசொல். 'மற்றவன் சொன்ன வாசகங் கேட்டலும்' (அயோத்தி. மந்திரப். 42); இதழ் துடித்தல் - சினத்தின் மெய்ப்பாடு. நகை - வீரத்தெழுந்த வெகுளி நகை. 'வம்பியல் சிலையை நோக்கி வாய் மடித்துருத்து நக்கான்' ((சுந்தர. 985); என்ற இடத்துப் போல. தகாத - நடு நிலைமைக்குப் பொருந்தாத. தகுதி - நடுவு நிலைமை. 'புனித நூல் கற்றுணர் புந்தியோய்' 'கல்விக்கண் மிக்கோன்' (யுத்த. 714); 'மதுணர்வின் மிக்கான் மதிவீடணன்; (யுத்த. 1747).

பி - ம். 1. முனிவர்கள்.

1. நகைத்த.

3. தனையுற ; தகாது.

51

3944. கடுந்திற லமர்க்களங் காணு மாசையால்
நெடுந்திசைத் தேவரு நின்ற யாவரும்
அடைந்தன ருவகையி னடைகின் றூர்களைக்
கடிந்திட யார்சொனூர் கருது நூல்வலாய்.

'கருதும் நூல் வலாய்-நன்கு ஆராயப்பெறுகின்ற நூல்களில் வல்லவனே ! கடு திறல் அமர்களம் காணும் ஆசையால் - கொடிய வன்மையுடன் போர் நடத்திய களத்தைக் காண வேண்டும் என்ற ஆர்வத்தினுல், உவகையின் அடைகின்றூர்களை - மகிழ்ச்சியுடன் நெருங்கி வந்து சேர்கின்றவர்களான, நெடு திசை தேவரும் - நீண்ட திக்குகளில் உறைகின்ற தேவர்களையும், நின்ற யாவரும் - மற்று நின்ற எல்லோரையும், கடிந்திட சொன்னூர் யார் - கடுமையாக விலக்குமாறு சொன்னவர் யார் ?

கடிதல் - குரலாற் கடிதல். கருது நூல் ; 'கருதிய நூல் கல்லாதான் மூடனாகும்' கருது நூல் வலாய் ; யுத்த. 3943 உரை காண்க. யார் சொனூர் - 'என் கட்டளை யன்று, நீ கட்டளை யிட்டிருப்பின் அது முறையாகாது. நம்மிருவர் கட்டளை யின்றேல் அரக்கர்கள் நல்ல வாநரர்களைத் துன்புறுத்தல் முறையன்று' என்றுன் இராமபிரரன். இதினின்று இராமபிரானுடைய அருட்டிறம் அறியலாகும்.

பி - .ம் 1. கடுந்திறலமரர்கள்.

3. அணைகின்றூர்களை.

4. கடிந்திடல் ; ஆர் சொனூர் ; நிறிவலார்.

52

வேறு

3945, பரசுடைக் கடவுள் நேமிப்
பண்ணவன் பதுமத் தண்ணல்
அரசுடைத் தெரிவை மாரை
யின்றியே யமைவ துண்டோ

கரைசெயற் கரிய தேவ
ரேனையோர் கலந்து காண்பான்
விரசுறின் விலக்கு வாரோ
வேறுளார்க் கென்கொல் வீர.

'வீர - வீரனே! பரசு உடை - மழு என்னும் ஆயுதத்தை யுடைய, கடவுள் - சிவபெருமானும், நேமி பண்ணவன் - ஆழிப் படை தாங்கிய திருமாலும், பதுமத்து அண்ணல் - தாமரை மலரி லிருக்கும் பிரமனும், அரசு உடை தெரிவை மாரை - தலைமை வாய்ந்த (தத்தம் தேவிமாராகிய) மகளிரை, இன்றி - உடன் கொள்ளாமல், அமைவது உண்டோ - இருப்பது உண்டோ? (இறைமை பூண் டொழுகும் மும்மூர்த்திகளே இங்ஙனம் ஆயின்), வேறுளார்க்கென் கொல் - மற்றும் உள்ளோர்களைப்பற்றிப் பேசுவதென், கரை செயற்கு அரிய தேவர் - எல்லை காண்டற்கரிய தேவர்களும், ஏனை யோர்-மற்றும் முனிவர் முதலானோரும், கலந்து - கூடி, காண்பான் விரசுறின் - நம்மையும் போர்க்களத்தையும் காண நெருங்குவா ராலுல், விலக்குவாரோ - அவர்களை) வெருட்டி யடிப்பாருண்டோ? ஓகாரங்கள் : எதிர்மறைப் பொருள்.

அன்புடன் காண வருவாரைக் கடிந்து விலக்குதல் குற்றம். மற்றும் மகளிரை விலக்குதல் அதனினும் கொடிய குற்றம் என்றான் இராமபிரான். வீர என்பது பிற குறிப்பு. பதுமம் - திருமாலின் நாபிக்கமலம். அரசுடைத் தேவிமார் - பட்ட மகிஷி போன்ற வர். 'விரசுதல்' 'விரசு கோலங்கள் காண விதியிலேன்' (சுந்தர. 642); தெரிவை - மகளிர் எனப் பொதுப்பட நின்றது; 'பருவம் குறித்து வந்ததன்று' 'தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச் செய்ததிருவே' (அயோத்தி. சித்திரகூட. 33).

பி - ம். 2. அரசுடைத் தேவிமாரை.

3. உன்னையோர்; கரந்து காண்பான், காண்கின்றோரை.

4. விலக்குவாமோ, விலங்குவாரோ, விலகலாமோ.

## வீடணன் அஞ்சுதல்

3946. ஆதலா னரக்கர் கோவே
யடுப்பதன் றுனக்கு மின்னே
சாதுகை மாந்தர் தம்மைத்
தடுப்பதென் றருளிச் செங்கண்
வேதநா யகன்று னிற்ப
வெய்துயிர்த் தலக்க ணெய்திக்
கோதிலா மனனு மெய்யுங்
குலைந்தனன் குணங்கள் தூயோன்.

'ஆதலால் - ஆதலால், அரக்கர் கோவே-அரக்கர் மன்னவ! இன்னே - இப்பொழுதே, சாதுகை மாந்தர் தம்மை - சாதுவான ஒழுக்கத்துடன் கூடிய மக்களை, தடுப்பது உனக்கு அடுப்பது அன்று-விலக்குவது உனக்குத் தகாது; ' என்று அருளி - என்று அருளி, செம் கண்-சிவந்த விழிகளையுடையவனும், வேத நாயகன்-வேதநாயகனுமான இராமபிரான், நிற்ப - பேசி நின்றுனுக, குணங்கள் தூயோன் - பண்புகளால் தூய்மைபெற்ற வீடணன், அலக்கண் எய்தி - துன்பம் உற்று, வெய்துயிர்த்து - பெருமூச் செறிந்து, கோதிலா மனனும் மெய்யும் - குற்றம் தீர்ந்த உள்ளமும் உடலும், குலைந்தனன் - (அச்சத்தால்) நடுங்குவானாயினன்; தான் : அசை,

சாதுகை மாந்தர் : பணிவான ஒழுக்கத்தை உடைய மக்கள்; சாதுகை மாந்தரெல்லாம் தயரதன் தன்னை ஒத்தார்' (அயோத்தி. கைகேசி. 66); செங்கண் வேதநாயகன் என்று கூறியது. மேலே எழுந்த சினம் மாறுது சிவந்திருந்த கண்ணையுடைய இராமபிரான் என்க. 'சிறுவனை நோக்கியும் சிவப்பானுவே' (புறநா. 100) என்றது காண்க. அலக்கண் - துன்பம; 'அலக்கணுற்றேற்கு' (கிட்கிந்தா. 31); குணங்கள் தூயோன் - வீடணன்; 'ஆதியம் பரமனுக்கன்பு நல்லறம், நீதியின் வழாமையு முயிர்க்கு நேயமும், வேதியர் அருளும் உள்ளவன்' (யுத்த. 327)-ம் அதன் உரையும் காண்க. 'கோதிலா தவனை நீயே யென்வயிற் கொணர்தி' (யுத்த. 423); என்று இராம

பிரான் கூறியதும் 'மெய்யினுக்குறையுளான வொருவன்' (யுத்த. 424); என்ற கவிக்கூற்றும் இங்கு நோக்கத்தகும்.

பி - ம். 1. பின்னே, முன்னே.
2. சாதுவாம்.
4. குலுங்கினன். 54

## பிராட்டி போர்க்களஞ் சார்ந்து இராமபிரானது திருக் கோலத்தைக் காண்பாளாய் அநுமனைப் புகழ்தல்

3947. அருந்ததி யனைய நங்கை
யமர்க்கள மணுகி யாடற்
பருந்தொடு கழுகும் பேயும்
பசிப்பிணி தீரு மாறு
விருந்திடு வில்லின் செல்வன்
விழாவணி விரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணு நெஞ்சுங்
களித்திட வினைய சொன்னாள்.

அருந்ததி அனைய நங்கை - (கற்பில்) அருந்ததி போன்ற பிராட்டி, அமர் களம் அணுகி - போர்க்களத்தை நெருங்கி, ஆடல் பருந்தொடு - வலிய பருந்துகளும், கழுகும் - கழுகுகளும், பேயும் - பேய்களும், பசி பிணி தீருமாறு - (தத்தம்) பசி நோய் நீங்குமாறு, விருந்திடு - (அவற்றிற்கு அரக்கர் உடலாகிய உணவினை) விருந்தாகப் படைத்த, வில்லின் செல்வன் - கோதண்டம் என்னும் வில்லையேந்திய இராமபிரானுடைய, அணிவிழா - அழகிய போர் விழாக் காட்சியை, விரும்பி நோக்கி - விருப்பத்தோடு நோக்குபவளாய், கருதட கண்ணும் நெஞ்சும் களித்திட இனைய சொன்னாள் - கரிய அகன்ற விழிகளும் மனமும் மகிழ்வுற இத்தன்மையனவான சொற்களைச் சொல்லலானாள்.

அருந்ததி: வசிட்ட முனிவரின் மனைக்கிழத்தி; 'சிலமின்னதென் றருந்ததிக் கருளிய திருவே' (அயோத்தி. சித்திரகூட. 16); என்பது இராமபிரான் கூற்று; 'அருந்ததிக் கற்பினாளை' (யுத்த. 2867); 'அண்ணற் பெரியோன் அடிவணங்கி யறிய வுரைப்பான் அருந்ததியே' (சுந்த. 602). அருந்ததியின் தனிச்சிறப்பு

வசிட்ட முனிவன் உடுவான நிலையிலும் அவனுடன் சேர்ந்து நிற்றல். மற்றும் குமரன் அவதாரத்தின் போது அவன் உடற்கருவை ஏனைய முனிபத்தினிமார் ஏற்கவும், இவள் ஏற்க மறுத்தமை எனினும் ஆம். அருந்ததியின் கற்பினை எண்ணியே தான், இந்துக்கள் திருமணத்தில் 'அம்மிமிதித்து அருந்ததி பார்க்கும் வழக்கமும் ஏற்பட்டது என அறிக.

பி - ம். 1. அமர்க்களத்தணுகி ; களங்குறுகி, களநணுகி.

3. செல்வ விழா,



இங்கு சீதை மீட்சிப் படலம் முற்றிற்று என்று ஓர் பிரதியில் உள்ளது.

## வேறு

3948. சீலமுங் காட்டியென் கணவன் சேவகக்
கோலமுங் காட்டியென் குலமுங் காட்டியிஞ்
ஞாலமுங் காட்டிய கவிக்கு நாளருக்
காலமுங் காட்டுங்கொ லென்றன் கற்பென்றாள்.

'சீலமும் - (என்னுடைய) நல்லொழுக்கத்தின் நிலைமையையும், காட்டி - (என் கணவனுக்கு எடுத்துக்) காட்டி, என் கணவன் - எனது கணவனாகிய அப்பெருமானுடைய, சேவகம் கோலமும் - வீரக் காட்சியையும், காட்டி - உலகறியுமாறு செய்து, என் குலமும் - எனது குலத்தின் மாண்பினையும், காட்டி - யாவரும் அறியுமாறு செய்து, இஞாலமும் - இவ்வுலகத்தையும், காட்டிய-(அழியாதபடி) நிலைக்குமாறு செய்த, கவிக்கு - குரங்காகிய அநுமானுக்கு, என்தன் கற்பு - என் கற்பு, நாள அரு - நாள்கள் இடையறாத, காலமும் - காலம் உள்ளளவும் வாழ்தலாகிய சிரஞ்சீவியின் தன்மையை, காட்டும் கொல் - தவறாமல் உண்டு பண்ணுமா? (என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டாள் பிராட்டி).

சீலம் : தூய ஒழுக்கம். சேவகம் - வீரம். இங்கு 'உன்குலம் உன்ன தாக்கியுயர் புகழ்க் கொருத்தி யாய, தன்குலம் தன்ன தாக்கி' (சுந்தர. 1272); என்ற செய்யுள் காணத்தகும். பிராட்டியின் கற்பு

நெறிக்கு ஏதாவது குறைவு நிகழ்ந்திருக்குமானால் உலகமே நிலை குலைந்திருக்கும் அவ்வாறு நிகழாமற் காத்தவன் சிறிய திருவடி யாகலின், 'ஞாலமும் காட்டி' எனப்பட்டது. 'தீண்டில னென்றும் வாய்மை திசைமுகன் செய்த முட்டை கீண்டிலது' (சுந்தர. 1277); என்றதும் காண்க. மற்றும் 'யான்மறுவிலா மனத்தேன் என்னின், ஊழியோர் பகலாயோதும் ஆண்டெலாம் உலகம் ஏழும், ஏழும்வீ வுற்ற ஞான்றும் இன்றென இருத்தி' (சுந்தர. 561) என்று முன்னர்ப் பிராட்டி கூறியதும் தெளிக.

பி - ம், 1. செய்தவக் கோலமும்.
2. என் குணமும்.
3. ஞாலமுங் காட்டியக்.
4. காட்டுமே கொல்லென். 56

## பிராட்டி இராமபிரானைக் காணுதல்

3949. எச்சிலென் னுடலுயி ரேகிற் றேயினி
நச்சிலை யென்பதோர் நவையி லாளெதிர்
பச்சிலை வண்ணமும் பவள வாயுமாய்க்.
கைச்சிலை யேந்திநின் றதனைக் கண்ணுற்றாள்.

'என் உடல் - எனது உடம்பு, எச்சில் - (இராவணன் கொண்டுவந்து சிறைவைத்ததனால்) தூய்மை இழந்தது; உயிர் ஏகிற்றே - (அவ்வுடல்) உயிர் நீங்கியதே போன்றதாயிற்று; இனி நச்சு இலை - (எனக்கு எவ்விதமான) ஆசையும் இல்லை;' என்பது ஓர் - என்பதான எண்ணத்தைக் கொண்ட, நவை இலாள் - குற்றம் தீர்ந்தவளான சீதா பிராட்டி, எதிர் - தன் முன்பாக, பசு இலை வண்ணமும் - பச்சிலை போன்ற திருமேனி நிறத்தையும், பவள வாயும் ஆய் - பவழம் ஒத்த திருவாயையு முடையனாய், கைசிலை ஏந்தி - (இராமபிரான்) கையில் வில்லினைத் தாங்கி, நின்றதனை கண்ணுற்றாள் - நின்றதை நோக்கினாள்.

பிறரால் சிறைப்படுத்தப் படுதற்கு முன்னரே அவன் மனதில் புகுந்தமையே குற்றம்; 'மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம், பெண்டிராயிற் பிறர் நெஞ்சுபுகார்' (மணி: 22; 35; 46). என்ற மருதி என்னும் பார்ப்பனி கூற்றுக்காண்க. நச்சு: பெயர்;

நச்சுதல் : விரும்புதல் ; நச்சினார்க்கினியன் என்று இறைவற்குப் பெயருண்மை காண்க. 'நஞ்சுதோ யமுது முண்பா னச்சினேன்' (யுத்த. 1576); நவை - குற்றம் ; 'நாழி நவைதீர் உலகெலாமாக' (ஆரணிய. 102); கைச்சிலை : 'கைச்சிலை விழுந்ததோரார்' (பெரியபு. கண்ணப்ப. 108); தன் உடல் தூய்மை யிழந்ததென்றும் அந் நிலையில் அதனை ஒழித்தலே கடன் என்றும், தூய்மையிழந்த உடலைப் பெருந்தூய்மையனான இராகவன் விரும்பான் என்றும் பலவாறு சிந்தித்தனள் பிராட்டி. முன்னர்ச் சுந்தர காண்டத்துப் 'பிறர்மனை யெய்திய பெண்ணைப் பேணுதல், திறனல தென் றுயிர்க் கிறைவன் 'தீர்ந்தனன' (சுந்தர. 502) என்று கூறியதும் காண்க. இந்நினைவினுக்கு ஏற்பவே பின்வரும் இராமபிரான் கடிந்து கூறும் செய்யுட்களை காண்க.

பி - ம். 1. எய்திற்றேயினி, ஏற்றேனென.
2. நகைவந்துன்னுறப்.
4. கைச்சிலை தாங்கி ; நின்றனை.

57

## சீதை விமானத்தினின்று இறங்கி இராமபிரானைத் தொழுது ஏக்கம் நீங்குதல்

3950. மானமீ தரம்பையர் சூழ வந்துளாள்
போனபே ருயிரினைக் கண்ட பொய்யுடல்
தானது கவர்வுறுந் தன்மைத் தாமென
ஆனனங் காட்டுற வவனி யெய்தினள்.

அரம்பையர் சூழ - அரம்பை முதலான தேவ மாதர்கள் (தன்னைச்) சுற்றிவர, மானம்மீது வந்துளாள் - விமானம் ஊர்ந்து வந்தவளான பிராட்டி, போன - (தன்னை விடுத்து) அகன்று சென்ற, பேர் உயிரினை - பெரிய உயிரினை, கண்ட - மீளவும் கண்ணுற்ற, பொய்யுடல் - நிலையற்றதான உடல், தான் - தான், அது - அந்த உயிரை, கவர்வுறும் தன்மைத்து ஆம் என - உட்கொள்ள முயலும் தன்மையதெனக் கருதுமாறு, (உயிர்த் தலைவனான இராமபிரானைச் சாருமாறு விளங்கி) ஆனனம் காட்டுற - (தன்) முகத்தை (இராகவனுக்கு)க் காட்ட, (விமானத்தினின்று), அவனி எய்தினள் - பூமியில் இறங்கினாள்.

மானமீது வந்துளாள் என இயைக்க, 'போன பேர் உயிரினைக் கண்ட பொய்யுடல்'; 'துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்தது கொல் என்கோ' (சுந்தர. 553); உயிர் - இராமபிரான். பொய்யுடல் - பிராட்டியின் சரீரம். 'எனக்குயிர் பிறிதுமொன் றுண்டெண்ணலே' (யுத்த. 1590) என்று பிராட்டி கூறுதல் காண்க. உயிர்தனித் தேகுவதும் மீண்டு வந்து கூடுவதும் உண்டு என்று கவிகள் கற்பனை களிற் காணலாம். (ஒப்பு): விசுவாமித்திர முனிவர் பின்சென்ற இராமபிரானைத் தயரத மன்னனுடைய இன்னுயிர் (பால. கையடை. 20) என்று பாடிய கம்பநாடர், 'தேவரும் தொழுகழற் சிறுவன் முன் பிரிவதோர், ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகி னான்' (பால. எதிர்கொள். 22) என்று மறவாது தணந்த உயிரை உரிய இடத்துச் சேர்த்துக் கூறிய நயம் உய்த்துணர்க. ஆனனம் - முகம். வடசொல்; 'ஆனன மலர்ந்ததில்லை' (யுத்த. மீட்சி. 310); 'ஆனனம் வெளித்தெதிர் விழிக்கவும் வெள்கி' (கிட்கிந்தா. 552).

பி - ம். 1. வந்துளார்.

2. ஏகினர்.



3951. பிறப்பினுந் துணைவனைப் பிறவிப் பேரிடர்
துறப்பினுந் துணைவனைத் தொழுது நானினி
மறப்பினு நன்றிது மாறு வேறுவீழ்ந்
திறப்பினு நன்றென வேக்க நீங்கினாள்.

'பிறப்பினும் - (இப் பிறப்பில் மட்டுமன்றி) எந்தப் பிறவி யெடுத்தாலும், துணைவனை - (வாழ்க்கைத்) துணைவன் ஆகின்றவ னும், பேர் பிறவி இடர் துறப்பினும - பெரிய பிறவித்துன்பம் ஒழிந் தாலும், துணைவனை - என்றும் உயிர்த் துணைவனாகின்றவனுமான மூர்த்தியை, நான் தொழுது - (கண்ணுற்றுச்) சேவிப்பதனால், இனி - இனி, மறப்பினும் - (அப் பெருமானை) மறக்க நேர்ந்தாலும், நன்று - நல்லது; இது மாறு - இதற்கு எதிரிடையாக, வேறு வீழ்ந்து இறப்பினும் - வேறு வகையாக (நான்) விழுந்து உயிர் நீங்கப் பெற்றாலும், நன்று - (அதுவும்) நல்லதே', என - என்று நினைந்து, ஏக்கம் நீங்கினாள் - துயரம் ஒழியப் பெற்றாள்.

காதல் இருவர் கருத்தொருமித்து வாழ்தரும் தம்பதிகள் 'பிறப்பானடுப்பினும் பின்னும் துன்னத்தகும் பெற்றியர் (திருக்கோ.

205) என்ப' 'இம்மை மாறி மறுமை யாயினும் நீயா கியரெங் கண வனே, யானு கியர்நின் னெஞ்சுநேர் பவளே' (குறுந். 49) என்றது காண்க. 'இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக் கண்ணிறை நீர் கொண்டனள்' (குறள். 1315); 'ஈண்டு நானிருந் தின்னுயிர் மாயினும், மீண்டு வந்து பிறந்து தன் மேனியைத், தீண்டலாவ தோர் தீவினை தீர்வரம், வேண்டி னாள் தொழு தென்று விளம்புவாய் (சுந்தர. 64) என்று பிராட்டி கூறுதலும் இங்குக் காணத் தகும். இனி மறப்பினும் என்ற உம்மை மறவாமையை உணர்த்தி நின்றது. பத்து மாதங்கள் பிறன் மனைகளிருந்து பேரார்வத்துடன் வெற்றி வீரனான இராமபிரானைக் கண்ட பின்னர் அவனை மறக்க முடியாதென்பது திண்ணம். 'ஆரூரானை மறக்கலுமாமே' (தேவா. 741 : 1) என்றார் ஆளுடைநம்பி. இறப்பினும் நன்று எந்த இடத்தும், உம்மை இறவாமையை யுணர்த்திற்று. சன்மமு மரணமு மின்றித் தீருமே. இம்மையே ராமவென் றிரண் டெழுத் தினால் (பால. பாயி. 5) என்று இராமபிரான் பெயருச்சாரணத் திற்கே அத்தகைய பெருமை யிருக்கும்போது, அப்பிரானை நேர்முக மாகத் தரிசிக்கப் பெற்றவர் மீட்டும் பிறக்கும் நெறியை மேவுவரோ? மேவார் என்ற குறிப்புக் காண்க. உயிர்கள் உலகத்துக் கன்ம வயத்தால் உருவெடுக்கும்; அவற்றிற்கு அவை கன்ம மலத்தை ஒழிப்பதற்காகத் தனுகரண புவன போகங்களை அளித்து வாழ் விற்கு உற்ற துணைவனா யிருப்பவன் பரமான்மாவேதான். மீட்டும் முத்தி நிலையிலும் அவனே உதவி புரிபவன். பெத்த நிலையிலும் முத்தி நிலையிலும் உற்ற துணைவன் சர்வேச்வரன் ஆதலின், பிறப் பினும் துறப்பினும் துணைவன் எனப்பட்டது.

பி - ம். 2. தொழுத; நாளெனை, நானெனை, நானுனை.
3. மறப்பினு நன்றினி, நன்றெனப்; மற்றும்; வேறுவந்து. 59

## இராமன் பிராட்டியை நோக்குதல்

3952. கற்பினுக் கரசியைப் பெண்மைக் காப்பினைப்
பொற்பினுக் கழகினைப் புகழின் வாழ்க்கையைத்
தற்பிரிந் தருள்புரி தருமம் போலியை
அற்பினத் தலைவனு மமைய நோக்கினன்.

தலைவனும் - தலைவனான இராமபிரானும், கற்பினுக்கு அரசியை - பதிவிரதா தருமத்துக்குத் தலைவியும், பெண்மை காப்பினை-(நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு) என்ற பெண்மைப்பண்புகட்குப் பாதுகாவலாக உள்ளவளும், பொற்பினுக்கு அழகினை - அழகுகட்கு அழகு செய்பவளா யிருப்பவளும், புகழின் வாழ்க்கையை - கீர்த்தி எங்கும் பரவி நிலைத்து வாழ்தற்குக் காரணமானவளும், தன் பிரிந்து அருள்புரி தருமம் போலியை - தலைவனாகிய தன்னைப் பிரிந்து (தனியே நின்று) கருணை புரியும் தருமத்தின் வடிவம் போன்றவளுமான பிராட்டியை, அன்பின் அமைய நோக்கினான் - அன்புடன் நன்றாகப் பார்த்தான்.

பெண்கட்கு வேண்டப்படும் பெண்மை - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பன. பொற்பினுக் கழகினை: 'அழகெனு மணியுமோ ரழகு பெற்றதே' (பால. மிதிலைக். 34); 'அழகிவனைத் தவம் செய்து பெற்றது காண்' (பால. கார்முகப். 18); புகழின் வாழ்க்கை - கீர்த்தியின் வாழ்விடம். 'அருளின் வாழ்வே' என்பது போலக் கொள்க. தற்பிரிந் தருள்புரி தருமம் போலியை - சீதாதேவி சிறைவாசம் செய்தது தேவ மாதர்களின் சிறையை விடுவிக்கைக்காக ஆகையாலும், சிறைமீளும் முன்னரே தன்னை நலிந்த அரக்கியரின் நடுக்கம் கண்டு, 'அஞ்சன்மின்' என்று அபயமளித்ததனாலும், சீதையைத் தற்பிரிந் தருள் புரிதருமம் போலியை என்றது காண்க, இங்குப் பிராட்டி முற்படப் பிரிந்தது தன் கிருபையை வெளியிடுகைக்காக என்ற ஸ்ரீவசனபூஷண வாக்கியமும் அதன் வியாக்யானமும் காணத்தக்கன. இனி, தற்புரிந்தருள் புரிதருமம் என்ற பாடம் கொண்டு, உலகத்தார் புத்திக்குத் தன் புத்தியைக் கொடுத்து அருள் புரியும் தன்மம் என்றும் உரைப்பர்.

பி - ம். 1. கற்பினுக் கரசினை.

2. அணியணிப்.

3. தப்புறப் புரிந்தருள், தற்புரிந்தருள்புரி; தருமபோலியை.

4. அப்பினுட், அற்பெனுந், அற்புறத், அற்புதத். 60

இதன்பின் 'சீலமும் காட்டி' என்ற பாடல் ஓர் பிரதியில்.

## இராமன் சீதையின் கற்புறுதியைப் பரிசோதிக்கக் கடிந்துரைத்தல்

3953. சுணங்குறு துணைமுலை முன்றிற் றூங்கிய
அணங்குறு நெடுங்கணீ ராறு பாய்தர
வணங்கியன் மயிலினை மாசில் கற்பினை
பணங்கிள ரரவென வெழுந்து பார்ப்புரு

சுணங்கு உறு - அழகு தேமல் படர்ந்த, துணைமுலை-இரட்டையான முலையின், முன்றில் - முகப்பில், தூங்கிய - (விழிகளினின்று சோர்ந்த), அணங்கு உறு - துன்பத்தை அறிவிப்பதான, நெடு கணீர் ஆறு பாய்தர - மிக்க கண்ணீர்ப் பெருக்குப் பாய, வணங்கு - வணங்கிய, இயல் மயிலினை - சாயலால் மயில் நிகர்த்தவளும், மாசில் கற்பினை-களங்கமற்ற கற்பின் வடிவினளுமான பிராட்டியை, பணம் கிளர் அரவு என எழுந்து பார்ப்புரு - படம் உயர்த்தி நின்ற நாகப் பாம்பு போன்று சினந்து எழுந்து, பார்ப்புரு: பார்த்து. பார்ப்புரு என்ற செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டெச்சம். 68-ஆம் செய்யுட்கணுள்ள 'என்றனன்' என்ற முற்றொடு மியையும்.

பிராட்டி இவள் விடுத்த கண்ணீர்ப் பெருக்கு ஒருசார் துன்பத்தாலும் ஒருசார் இன்பத்தாலும் எழுந்ததென்க. துன்பம் நீல மேக சியாமளனான இராகவனைப் பிரிந்து பத்துமாத காலம் தனித்துப் பிறனகத்திருந்தமை; இன்பம்: அப் பெருமானைக் காணப்பெற்றமை என்க. இத்தகைய நிலை மக்கட்கு ஏற்படுவதுண்டு; 'துன்பமும் உவகையும் சுமந்த வுள்ளத்தாள்' (சுந்தர. 583) காண்க. இங்குத் துன்பம் சுமந்தது இராமபிரான் தன் பிரிவால் வருந்திய நிலைக்குத் தான் வருந்தியதனாலும், உவகை சுமந்தது, தன்பால் இராமபிரான் கொண்ட அன்பை நினைத்து எழுந்த மகிழ்வாலும் என்க. சுணங்கு; 'மின்னுமிழ்சாயற் பொன்னுமிழ் சுணங்கின்' (பெருங். மகத. 16, 5); 'அணங்கென வுருத்த சுணங்கணி யாகத்து' (பொருந. 35); 'சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி' (நற். 9); சுணங்கிற்கு அதன் மஞ்சள் நிறத்தால் வேங்கை மலர் உவமை. 'வேங்கை நாண்மலர் நச்சிக், களிச்சுரும் பரற்றும் சுணங்கிற சுணங்கு பிதிர்ந்து' (சிறுபாண். 23,

24)ம் இதன் கீழுள்ள உரை மேற்கோளும் காண்க. முன்றில் - மேற்புறம், இல்முன் என்பது முன் பின்னாக மாறிய போலி. தூங்குதல் - இடைவிடாது ஒழுகுதல்; 'வீழ்பனி தூங்க' (திருக்கோ. 320); நெடுங்கணீராறு என்றமையின் பிராட்டி விடுத்த கண்ணீர்ப் பெருக்கு புலனாம். முன்னர்க் காட்சிப் படலத்தில் 'புழைத்த போலநீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால், மழைக்க ணென்பது காரணக் குறியென வகுத்தாள்' (சுந்தர. 335) என்று ஆசிரியர் நயம்பெறக் கூறியமை காண்க. பாஞ்சாலி துரியோதனன் பேரவையில் மானபங்கப் பட்டபோது, 'ஆறாகி யிருதடங்கண் அஞ்சன வெம்புனல் சோர' (வி. பா. சூது போர். 247) என்று கூறப்பட்டமை காண்க. பாய்தர: தர துணைவினை. 'வணங்கியல் என இடத்து வணங்கிய தன்மையையுடைய என்று கூறுவர். ஆயினும் இங்கு வணங்கு இயல் மயில் என்று பிரித்துப் பொருள் செய்யப்பட்டது. மயில் மகளிர்க்குச் சாயலும் தோகையாலும் ஒப்பாவது. சாயல் - அழகின் மென்மை என்பர் பேராசிரியர். 'சாயல்மென்மை' (தொல். உரி. 27); 'விழியாற் பிணையாம் விளங்கிய லான மயிலாம்' (திருக்கோ. 29); கற்பினை - பண்பு பண்பியாகக் கூறப்பட்டது. 'இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன' (சுந்தர. 1273) என்ற இடத்துப் போல, 'பொருவி லன்புருவமானார்' (பெரியபு. கண்ணப்ப. 104); என்றதும் காண்க. 'பிரிவெனும துயர் உருவுகொண் டாலன்ன பிணியாள்' (சுந்தர. 338). பணம் - அரவின் படம்; 'பணந்தாழரவரைச் சிற்றம்பலவர்' (திருக்கோ. 34); அணங்கு - வீற்றுத் தெய்வம்.

பி - ம். 1. முன்பிற்; சுற்றி நீக்கிய.

2. வார்வுற, பாருற, பாடுற.

3. வணங்கிய, மயிலியல்; கற்பின் வாழ்வினை.

4. முனிந்து, முனிவன்; பன்னுவான், பன்னவன். 

3954. ஊண்டிற முவந்தனை யொழுக்கம் பாழ்பட
மாண்டிலை முறைதிறம் பரக்கன் மாநகர்
ஆண்டுறைந் தடங்கினை யச்சந் தீர்ந்திவண்
மீண்டதென் னினைவெனை விரும்பு மென்பதோ.

முறை திறம்பு அரக்கன் - நீதி முறையினின்றும் வழுவிய இராவணனுடைய, மாநகர் ஆண்டு - பெரிய நகரமாகிய அவ் விடத்தே, உறைந்து - (நெடுநாள்) வசித்து, அடங்கினை - அவன் கீழ் அடங்கி நின்றனை, :(அங்கு), ஊண் திறம் உவந்தனை - அறு சுவையுடன் கூடிய உணவினை மகிழ்ந்து உண்டாய்; ஒழுக்கம் பாழ் பட - உனது நல்லொழுக்கம் பாழடைந்த நிலையிலும், மாண்டிலை - நீ இறந்துபட்டா யில்லை; (இத்தன்மையான நீ), அச்சம் தீர்ந்து - பயம் இன்றி, இவண் - இவ்விடத்திற்கு, மீண்டது என் நினைவு - மீண்டு வந்தது யாது நினைந்து;? 'எனை விரும்பும் என்பதோ-(இரா மன்) என்னை விரும்புவான்' என்ற எண்ணமோ? ஓகாரம் : வினா.

திறம் : வகை ; அறுசுவையுடன் கூடிய வேறுபாடு. ஒழுக்கம்- கணவனைப் பிரிந்து நிற்க நேரும் தூய கற்புடைய மாதர் கடைப் பிடிக்க வேண்டிய நியதி. 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர் நீப்பர் மானம் வரின்'; (குறள். 969); 'மானமிழந்தபின் வாழாமை முன்னினிதே' இனிது நாற்பது; 'ஒழுக்கம் விழுப் பந் தரலா னொழுக்க முயிரினு மோம்பப்படும்' (குறள். 131) என்ற முதுமொழிகட்கேற்ப, ஒழுக்கம் கெடவந்த இடத்து உயிர் விடுவர் சான்றோர். அவ்வாறன்றி 'ஒழுக்கம் பாழ்படவும் மாண்டிலை' என்றார். முறை - நீதி முறை. அச்சம் - பிறர் மனையில் ஈரைந்து மாதங்கள் தனித்து உறைவதால் இயல்பாக எழும் பயம். இந்தக் குற்றச்சாட்டினை முன் கருதியேதான் 'பிறர்மனை யெய்திய பெண் ணைப் பேணுதல், திறனல தென்றுயிர்க் கிறைவன் தீர்ந்தனன்' (சுந்தர. 502); ' 'இற் புகத் தக்கலை யென்னின் யானுடைக் கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன்' (சுந்தர. 508) என்று கூறியதும் என்க. பிராட்டி சிறையிருந்த பத்துமாத காலமும். 'ராமாமிர்தம் ஜீவனம்' என்று அவன் நாம உச்சாரணத்தாலேயே உயிர் தரித் தவள் அன்றி உணவோ நீரோ உட்கொள்ளவில்லை. 'உண்ணும் சோறு பருகும் நீரு தின்னும் வெற்றிலையும், எல்லாம் கண்ண னெம்பெருமான் (திருவாய். 6:7:1) என்றபடி பிராட்டி தாரகமாகிய இராமபிரானுடைய பெயரைக் கூறியே வாழ்ந்தவள். முன்னர்ச் சுந்தர காண்டத்து (631) 'வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர், நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன், சோரு

மாருயிர் காக்கும் துணிவினுல் என்ற' விடத்தும் பொய்கையை நண்ணுவேன் என்றதன்றி நீர் பருகுவேன் என்று கூறுமையும் கருதத் தகும். மற்றும் 'ஆண்டு நின்று மரக்க னகழ்ந்து கொண் டண்டு வைத்த திளவ லியற்றிய, நீண்ட சாலை யொடு நிலை நின்றது, (சுந்தர. 630) என்று கூறித் தண்டக வனத்தில் இளவலி யற்றியதும், அரக்கனுல் அகழ்ந்தெடுத்துக் கொள்ளப்பட்டதுமான நீண்ட பன்ன சாலையிலேயேதான் பிராட்டி யிருந்தனள் என்றும், இலக்குவனுல் அகழப்பட்ட பொய்கையும் அச் சாலையிலேயே இருந்தது என்றும் காட்டிப், பிராட்டி' இலங்கையில் தங்கியிருந்த பத்துத் திங்களும், இலங்கைப் பூமியையும் மிதிக்க வில்லை யென்றும், நீரும் 'பருகவில்லை யென்றும் விளக்கியது கொண்டு, கல்வியிற் பெரியார் பிராட்டியின் கற்புத் திறத்தை எடுத்துக் காட்டிய பேராற்றல் மிகவும் பாராட்டற்பாலதாம். இந்த எண்ணம் கொண்டேதான் பிராட்டியை அரக்கன் கவர்ந்து வந்த செய்தியில், புலவர் பெருமான முதனூலினின்றும் மாறுபட்டனர் என்று கொள்க. உண்மை இங்ஙனம் இருக்கவும் இராமபிரான், பிராட் டியை நோக்கி 'ஊண்திறம் உவந்தனை' என்றது, பத்துமாத காலம் உணவு நீரின்றி வாழ்தல் எவ்வாறு கூடும் என்று அநுமா னித்து கூறியது என்றே கொள்க. 'நல்ல உயிரும் நாற்பதே நாள்' என்பது பழமொழி.

பி - ம். 2. மாணகர்.
3. அடங்கிநீ.
4. இவனெனை, இவனாம.



3955. உன்னைமீட் பான்பொருட் டுவரி தூர்த்தொளிர்
மின்னைமீட் டுறுபடை யரக்கர் வேரறப்
பின்னைமீட் டுறுபகை கடந்தி லேன்பிழை
என்னைமீட் பான்பொருட் டிலங்கை யெய்தினேன்.

'உன்னை மீட்பான் பொருட்டு - உன்னைச் சிறை நின்றும் மீட்ப தற்காக, உவரி தூர்த்து - கடலை (மலைகளைக் கொண்டு) நிரப்பி, (அணை வகுத்து), ஒளிர் மின்னை - ஒளி விடுகின்ற மின்னலை, மீட்டுறு படை - (தமது ஒளிக்கு நிகராகாமையின்) புறங்காட்டி இரியச்

செய்கின்ற, (பேரொளியுள்ள) போர்க் கருவிகளை உடைய, அரக்கர் வேர் அற - இராக்கதர் அடியோடழிய(ச் செய்து), பின்னை - பின்னரும், மீட்டு - மேன்மேற் போர் புரிந்து, உறு பகை கடந்திலேன - மிக்க பகையான இராவணனை வென்றேனில்லை; பின்னை (எதன் பொருட்டு என்னில்), பிழை - (தன் தாரத்தை வலிந்து கவர்ந்து சென்றவனைக் கொன்றிலன் என்ற) தவற்றினின்று, என்னை மீட்பான் பொருட்டு - என்னை மீட்டுக்கொள்ளும் பொருட்டே, இலங்கை எய்தினேன் - நான் இலங்கைக்கு வந்து பகைவரை வெற்றி கொண்டேன்.

'நான் கடல் தாண்டி அரக்கரைப் பொருது வென்று இலங்கேசனையும் கொன்றது, உன்னைச் சிறையினின்றும் மீட்டற்கன்று; மனையாளைப் பிறன் கவர யாதொன்றும் எதிராகப் புரியாது வாளாதிருந்தனன் இராமன் என்ற வசைக்கஞ்சியே அங்ஙனம் செய்தேன்' என்றான் இராமபிரான். பான் - வானீற்று வினையெச்சம், எதிர் காலம் காட்டிற்று. உவரி - உப்புநீர்க் கடல். இ - பெயர் விகுதி. 'கைத்தலத் துவரி நீரைக் கலக்கினான் பயந்தகாளை' (கிட்கிந்தா. 367); வேரற; 'வேர றுப்பன் வெருவன்மின்' (ஆரணிய. 139); பின்னை மீட்டு - பின்னர் திரும்பவும் போர் செய்து. பகை கடத்தல்; 'வாளாற் காய்ந்தே கடந்தான் பகைவேலை' (பால. அரசியல். 5); உறு பகை - மிக்க பகை. 'உறு பசியும் ஓவாப் பிணியும்' (குறள். 734); என்ற இடத்துப் போல. தனக்குப் பிழை யொன்றும் சாராததற்காக இலக்கைக்கு வந்ததன்றி, தன் ஏந்திழையைச்சிறை மீட்டதற்கன்றென்றான் இராமபிரான். 'வாராதொழியா னென்னும் வன்மையினால்' (சுந்தர. 494); 'ஆரம் தாழ்திரு மார்பற்கமைந்ததோர், தாரந் தானள லேனும் தயாவெனும், ஈரந்தானகத்தில்லையென்றாலுந்தன், வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்' (சுந்தர. 636) என்ற பிராட்டி கூற்றும், சுந்தர. 624ம் 'தார மற்றொரு வன்கொளத் தன்கையில், பார வெஞ்சிலை வீரம் பழிப்பதோ' (கிட்கிந்தா. 319) என்ற வாலியின் ஏச்சுமொழியும்; 'உயர்வனங் குறுகி, யாளிழைத்திட வில்லிழந் தின்னுயிர் சுமக்கும், மானிடன்' (யுத்த. 120) என்ற இராவணன் சொற்களும் இங்குக்காணத்தகும். 'பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச், சுருதிநாயகன் வரும்

வருமென்பதோர் துணிவாற், கருதி மாதிரமனைத்தையும் அளந்து நின்ற கண்ணுளிடம், இங்ஙனம் செவியில் நாராசம் ஊற்றியது போன்ற சொற்கள் எத்தகைய துன்பத்தினை விளைத்திருக்கும் என்பதை நினைத்தற்கும் இல்லை. -

பி-ம். 2. மீட்டுறு பகை, விடறு படை ; வேரறுத்து.
3. இன்ன, பன்னி, இடித்திலேன் ; பழி.
4. மீட்பா னமைந்து. 83

இச் செய்யுள் சில பிரதிகளில் 'பெண்மையும்' என்பதன் பின் உள்ளது.

3956. மருந்தினு மினியமன் னுயிரின் வான்றசை
அருந்தினை யேநற வமைய வுண்டியே
இருந்தனை யேயினி யெமக்கு மேற்பன
விருந்துள வோவுரை வெம்மை நீங்கினாய்.

'வெம்மை நீங்கினாய் - (என்னிடத்து) விருப்பம் நீத்தவளே ! மன் உயிரின் வான் தசை - (பின்னும் சிலகால் உயிருடன் நிலை பெறக் கூடியனவும், இறுதிக் காலத்துக்கு முன்னரே வயிற்றுப் பெருமான் பொருட்டுக் கொல்லப்பட்டனவுமான) பிராணிகளின் உயர்ந்த மாமிசங்களை, மருந்தினும் இனிய - அமிர்தத்தைக் காட்டிலும் சுவைமிக்கனவாகக் கொண்டு, அருந்தினையே - (இலங்கையில்) புசித்தாயே ; நறவு அமைய உண்டியே - மதுவினைக் கருத்து முற்றும்வரை பருகினையே ; இருந்தனையே - (இவ்வாறு ஊனும் கள்ளும் உட்கொண்டு) இருந்தனையே ; இனி எமக்கும் ஏற்பன விருந்து உளவோ - இனி எம்போலியர்க்கும் ஏற்றதாக அமைக்கும் விருந்துகளும் உள்ளனவோ ?' உரை - பகர்வாயாக. ஓ : வினா.

அரக்கன் நகரில் ஐயிரண்டு மாதங்களிருந்தவள் ஆகலின், இராக்கதர் உணவாகிய மது மாமிசத்தை யுண்டிருத்தல் கூடும் என்று சொல்லிய அளவில் நில்லாது, குதிரை கீழே தள்ளியதுடன் குழியும் அகழ்ந்தது போன்று தனக்கும் அத்தகைய தலைசிறந்த உணவு தயாராக வைத்துள்ளனள் போலும் என்று இடித்துரைக்கின்றான் இராமபிரான். மருந்து - தேவாமிருதம். 'சாவா மருந்து' (குறள். 82) ; 'மருந்தினுமினிய மாமன் மடிந்த

நாள்' (யுத்த. 944); 'மருந்து நம் மல்லற் பிறவிக்கு' (திருக்கோ. 148) விருந்தே புதுமை - இங்குப் புதிய உணவைக் குறித்தது. வெம்மை வேண்டல்; (தொல். சொல் இடை. 37); 'வெம்மை' விரும்புதலாகிய பண்பை யுணர்த்தும். இனி வெம்மை வெப்பம் உணர்த்துதலும் வழக்காகலின்; கணவனைப் பிரிந்து பிறன் நகரில் வசித்தது பற்றி எவ்விதமான மனக்கொதிப்பும் இல்லாதவளே எனினுமாம். உண்டியே என்று சொல்லி யமையாது மேலும் 'இருந்தனையே' என்றதிலிருந்து 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகும் இலங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயில்' என்று தெளியாது, கடவுளின் அருள் நோக்கத்திற்கும் மாறாக நடந்து கொண்டாயே என்ற தொனிப் பொருளும் உய்த்துணர்க.

பி-ம். 1. அரிய, உரிய.
2. பெரு; உண்டனை.
3. போயினி; எமக்கு மேற்பன, எமக்குமேபோன.
4. விருந்துளவே; வெறுமை.

64

3957. கலத்தினிற் பிறந்தமா மணியிற் காந்துறு
நலத்தினிற் பிறந்தன நடந்த நன்மைசால்
குலத்தினிற் பிறந்திலை கோளில் கீடம்போல்
நிலத்தினிற் பிறந்தமை நிரப்பி னையரோ.

'கலத்தினில் - ஆபரணங்களில், பிறந்த - அமைக்கப்படுகிற, மாமணியில் - சிறந்த இரத்தினங்கள் போன்று, காந்துறு - விளங்குகிற, நலத்தினில் - நன்மையுடன், பிறந்தன - பொருந்தியனவான, குணப் பண்புகள், நடந்த - (உன்னை விட்டு) விலகின; (ஆகவே) நன்மைசால் - மேன்மை மிக்க, குலத்தினில் பிறந்திலை - உயர்ந்த குலத்திற் பிறவாமல், கோள இல் - வலிமை யில்லாத, கீடம்போல் - புழுப்போன்று, நிலத்தினில் பிறந்தமை நிரப்பினை - நிலத்தினின்று (நீ) தோன்றியதற்குப் பொருந்திய தன்மையை நன்றாக விளக்கிக் காட்டிவிட்டாய். அரோ: ஈற்றசை.

'சிறந்த அணிகலங்களில் உரிய உம்மிச்சங்களில் பதிக்கப் பெறும் மதிப்பிற்குரிய நவமணிகள் ஒளி செய்வது போன்று, புகழுடன் ஒளிரும் நற் பண்புகள் உன்னிடம் இல்லாமல் ஒழிந்தன' என்றான் இராமபிரான். கலத்தினில் பிறந்த மாமணி என்பதற்கு

இரத்திஞகரமான கடலில் பிறந்து மரக்கலத்திற் கொணரப்பட்ட மணி எனினுமாம். மேலும், 'கருவினின்று பிறவாமல் நிலத்தினின்று தோன்றியவளாதலின் யோனி வாய்ப்பட்டுப் பிறவாதவள் என உயர்த்துக் கூற இடமுண்டு; ஆயினும் நற்குணமும் நற் செய்கைகளும் உன்பால் இன்மையின் அங்ஙனம் கூறற்கு மில்லை, எனவே நிலத்திற் பிறந்த புழுப்பேரன்று இழிந்தவளானய்' என்றும் கூறினன், 'நிலத்திற் பிறந்தமை கால்காட்டும்' (குறள். 959) என்பர் திருவள்ளுவர். 'உன்குல முன்னதாக்கி யுயர்புகழ்க் கொருத்தி யாய,' தன் குலம் தன்ன தாக்கி' (சுந்தர. 1272) என்றும், 'வண்மை மிக்கிடும், சனகர்தங் குலத்தையோ யாது சாற்றுகேன்' (சுந்தர. 398) என்றும் கூறிய அநுமன் கூற்றுக்கு எதிராக, இங்கு இராமபிரான் கூறுவதை ஒப்பிட்டு நோக்குக. சனகராசன் யாக பூமியை உழுதபோது உழுபடைச் சாலினின்று தோன்றியவள் சீதை என்பது இங்குக் குறிக்கப் பெற்றது. 'உழுகின்ற கொழுமுகத்தின்' (பால. கார்முக. 17) காண்க.

பி - ம். 1. பிறந்து.

2. பிறந்தது, பிறந்தொளி; நடந்து, நடாத்து.

3. கிட்டம் பொன். 65

3958. பெண்மையும் பெருமையும் பிறப்புங் கற்பெனும்
திண்மையு மொழுக்கமுந் தெளிவுஞ் சீர்மையும்
உண்மையு நீயெனு மொருத்தி தோன்றலால்
வண்மையின் மன்னவன் புகழின் மாய்ந்ததால்.

'பெண்மையும் - (நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு) என்ற மடவார்க்குரிய பண்புகளும், பெருமையும் - பெருமிதமின்மை முதலிய குணங்களும், பிறப்பும் - உயர் குடிப் பிறப்பும், கற்பெனும் திண்மையும் - கற்பு என்னும் உறுதியான மனப்பான்மையும், ஒழுக்கம் - நன்னடத்தையும், தெளிவும் - மனத் தெளிவும், சீர்மையும் - கீர்த்தியும், உண்மையும் - சத்தியமும், நீ எனும் ஒருத்தி தோன்றலால் - நீ யொருத்தி பிறந்ததனல், வண்மையில் மன்னவன் புகழின் மாய்ந்தது - வள்ளன்மையில்லாத அரசனுடைய புகழ் (அழிவது போன்று), மாய்ந்தது - அழிந்தது. ஆல்: அசை.

பெண்மை - பெண்மைகட்குரிய பல நற் பண்புகளும் பொருந்தி யிருத்தல். பெருமை - பெருமிதமின்மை, செயற்கரியன செய்தலுமாம். பிறப்பு - வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பு. கற்பெனுந் திண்மை; 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந், திண்மை யுண்டாகப் பெறின்' (குறள். 54); ஒழுக்கம் - உயிரினும் ஓம்பப்படுவதும் விழுப்பம் தருவதும், 'தெய்வந் தொழா அள் கொழுநற் றொழுதெழுவதும்' 'குலமகட்குத் தெய்வங் கொழுநனே' எனக்கருதி வாழ்வதுமான நடைமுறை. இங்கு 'தன்னலதில்லை தன்னை யொப்பென' (சுந்தர. 1271); 'உயர்புகழ்க் கொருத்தியாய தன் குலம் தன்னதாக்கி' (சுந்தர. 1272); 'கற்பினுல் தொழுதற் கொத்த, மாகத்தார் தேவிமாரும் வான்சிறப்புற்றுர்' (சுந்தர. 1278) என்று வந்துள்ள அநுமன் கூற்றினை ஆராய்ந்து, இராமபிரானுடைய குற்றச்சாட்டுக்களின் உண்மையன்மையை யுய்த்துணர்க. தெளிவு-சீர்மை, புகழை விளைவிக்கக் கூடிய எண்ணமும் செயலும். உண்மை - பொய்யா தொழுகுதல். நீ ஒருத்தி தோன்றலால் என்று அமையாது, நீ எனும் ஒருத்தி என்றது. உலகிலேயே கணவனைப் பிரிந்து பிறன் மனைக்கண் பத்து மாதங்கள் இருந்த தனி ஒருத்தி என்று இகழ்ந்தது என்க. 'கற்புடை மடந்தையர் கதையுளோர் கடாம், இற்பிரிந் துய்ந்தனர் யாவர் யானலால்' (சுந்தர. 501); என்று பிராட்டியே கூறுதல் காண்க. கொடைப் பண்பில்லாதவன் புகழ் தேய்ந்து மாய்வது போன்று மேற்கூறிய நற்பண்புகள் அனைத்தும் மாய்ந்தன என்று கூறப்பட்டது. இது கொண்டு உத்தம மகளிர்க்குரிய சிறந்த பண்புகள் பலவும் கூறப்பட்டமை காண்க. இனிப் பிராட்டியைப் புகழ்ந்துரையாதவர் இல்லை. இலங்கை சென்ற சிறிய திருவடி, பிராட்டியைக் கண்டு வந்து, அவள் வலியள் என்றும், அவள்பால் இற்பிறப்பு, பொறை, கற்பு என்ற மூன்று பண்புகளும் நிறைந்து விளங்குவதாகவும் அவள், 'சிறை யிருந்தவள் ஏற்றம்' என்று பெரியார் புகழுமாறு, அந்த உயர்ந்த நிலையில் இருந்ததை இராமபிரான் காணும்பேறு பெற்றிலனே என்றும் கூறியருளியதைச் செவிமடுத்தும், இராமபிரான் பிராட்டியை இவ்வாறு கூறியதன் காரணம் என்ன? எல்லாம் அறிந்த இராமபிரான் பிராட்டியின் உள்ளநிலை அறியாதவர் என்று புகல்வதா; எனின் அற்றன்று-அவன் அறிந்தே யிருந்தான். 'ஒருவில் பெண்மை யென்றுரைக்கின்ற வுயிரினுக்குயிரே' (அயோத்தி.

சித்திர. 14) ; என்றும், 'சீலமின்னதென் றருந்ததிக் கருளியே திருவே (அயோத்தி. சித்திர. 16) என்றும் புகழ்ந்த இராகவன் இங்ஙனம் கூறத்தகுமா எனின், உலகியலை நோக்கி இங்ஙனம் கூறினன் என்க. லீலா மானுஷ விக்ரகமாகத்திருவவதாரம் செய்து மக்களுக்கு ஒழுக்கத்தைக் காட்டித் தரவந்த இராமபிரான், உலகிடை மேற்கண்டவாறு காரணமின்றி மனைவிமாரிடம் குற்றஞ் சாட்டுபவரும் உண்டு என்று காட்டுதற்காகவே இங்ஙனம் கூறினன் என்க. இதனை 'நங்கை மற்றுநின் கற்பினை யுலகுக்குநாட்ட, அங்கி புக்கிடென் றுணர்த்திய வதுமனத் தடையேல், சங்கை யுற்றவர் பெறுவது முண்டது சரதம், கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல்' (யுத்த. மீட்சி. 122) என்றும், 'பொன்னைத் தீயிடைப் பெய்வதப் பொன்னுடைத் தூய்மை, தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொளல் தகுதி, உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகிற், பின்னைக் காட்டுவ தரியதென் றெண்ணியிப் பெரியோன்' (யுத்த. மீட்சி. 123) என்றும் கூறியன கொண்டு, பிராட்டியின் கற்பு மேம்பாடு பெறப்படும். ஜாம்பூநதம் போன்ற நல்லபொன எத்தனை முறை அக்கினிப்புடம் செய்யினும் எடையோ மாற்றோ குறையாது. அது போன்று பொன் என்று பெயர் கொண்ட பிராட்டியும் கற்பினால் தொழுதற்கொத்த தூய்மையள் என்க. பெண்மையும் பெருமையும்...... . மாய்ந்தது ; பன்மை ஒருமை மயக்கம் ; 'ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்' ஓரிடம் பிறவிடம தழுவலும் உளவே' (நன். பொது. 29).

பி - ம். 1. பிறப்பில்.

4. மாய்ந்தவால், மாய்த்ததால். 66

3959. அடைப்பரைம் புலன்களை யொழுக்க மாணியாச்
சடைப்பரந் தகைந்ததோர் தகைவின் மாதவம்
படைப்பர்வந் திடையொரு பழிவந் தாலது
துடைப்பர் தம்முயிரொடுங் குலத்திற் றோகைமார்.

'குலத்தில் தோகைமார் - உயர்ந்த குலத்துத் தோன்றிய மகளிர், (தத்தம் கணவன்மாரைப் பிரிந்து நின்ற) காலையில், ஐம்

புலன்களை - ஐந்து இந்திரியங்களை, அடைப்பர் - (தத்தமக்குரிய புலன்களில் தடையின்றிப் புகவொண்ணுதபடி) அடக்குவர்; ஒழுக்கம் - நல்லொழுக்கத்தை, ஆணியா - உறுதியாகக் கொண்டு, சடைபரம் தகைந்தது ஓர் தகவின் - தமது கேசத்தைச் சீவிச் சிக்கறுத்து முடியாமல் சடையாகத் திரித்து, அந்தச் சடாபாரத்தைத் தாங்குதலோடு கூடிய ஒப்பற்ற, மாதவம் - பெரிய கற்பென்னும் தவ நிலையை, படைப்பர் - உண்டாக்கிக் கொள்வர்; இடை ஒரு பழி வந்தால் உயிரொடும் வந்து அது துடைப்பர்-நடுவில் ஒரு பழி நேருமாகில், தமது உயிரை விடுத்து வந்த அந்தப் பழியைப் போக்கிக் கொள்வர்'. இத்தகைய நற்பண்புகளும் செயலும் உன்பாலில்லையே என்று இகழ்ந்தனன் இராமபிரான்.

ஆணி - இங்கு உறுதியென்ற பொருட்கண் வந்தது. சடைப் பரந் தகைந்தது ஓர் தகைவின் மாதவம்; இங்கு, 'குமையுறத் திரண்டொரு சடையாகிய குழலாள், (சுந்தர. 339); 'விரிசடை நறுமலர் வண்டு பாடிலாத், துரிசடை புரிகுழற் சும்மை சுற்றிய, ஒருசடை யுடையவட்கு' (யுத்த. 1659); என்ற இவற்றுடன் இராமபிரான் கூற்று முரணுதல் ஓர்க. பழி வந்தாலது துடைப்பர்; 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னர், உயிர் நீப்பர் மானம்வரின்' (குறள். 969); 'வருந்தலின் மானமா வனைய மாட்சியர், பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன், கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வரூர், இருந்தவ ளிவளென வேச நிற்பனே' (சுந்தர. 507) என்று பிராட்டியே உளைந்து கூறுதலும் காண்க. துடைப்பர்; 'என் பழி துடைப்பவ ரென்னின் யாவரே' (சுந்தர. 504) என்ற சீதா தேவியே கூறுதலும் காணத்தகும். எனவே பழி பாவங்கட்கஞ்சி, அல்லும் பகலும் இடையறாது, இராமபிரானையே எண்ணிக் கற்பு நெறி சிறிதும் வழுவாது விளங்கியவள் பெருந்தேவியாகிய பிராட்டி என்பதும், அப் பிராட்டியிடம் இராமபிரான் வகுத்த குற்றச் சாட்டுகட்கு ஒரு சிறிதும் இடமில்லை என்பதும் மேலே காட்டிய மேற்கோள்களிலிருந்து துணியலாம்.

பி - ம். 2. புனைந்தொளிர்ந் தகைவின், புனைந்தொளிர் தகையின், தவிர்ந்ததோர் தன்மை, தரிப்பதோர் தகையின்.

3. படைப்பரந்து.

4. தம் உயிர் கொடு; தோகையார்.

அதிகப் பாடல்கள் :—

அழிபுகழ் செய்திடு மரக்க ராகையால்
பழிபடு மென்பரால் பாரு ளோரெலாம்
விழுமிய தன்றுநீ மீண்ட திவ்விடம்
கழிபடு மென்றனன் கமலக் கண்ணனே. 1

கண்ணுடை நாயகன் கழிப்ப னென்றபின்
மண்ணிடைத் தோன்றிய மாது சொல்லுவாள்
எண்ணுடை நங்கையர்க் கினிய னென்றநான்
விண்ணிடை யடைவதே விழுமி தென்றனள். 2

பொங்கிய சிந்தையள் பொருமி விம்முவாள்
சங்கைய னென்றசொல் தரிக்கிலா மையால்
மங்கையர் குழுக்களு மண்ணும் காணவே
அங்கியின் வீழலே யழகி தாமரோ. 3

3960. யாதியா னியம்புவ துணர்வை யீடறச்
சேதியா நின்றதுன் னொழுக்கஞ் செய்வது
சாதியா லன்றெனிற் றக்க தோர்நெறி
போதியா லென்றனன் புலவர் புந்தியான்.

புலவர் புந்தியான் - ஞானிகளின் அறிவில் வீற்றிருக்கும் இராமபிரான், 'யான் இயம்புவது யாது-யான் சொல்ல வேண்டுவது என்ன உள்ளது? உன் ஒழுக்கம் - உன் தகாத ஒழுக்கம், உணர்வை - உன் அறிவை, (மனத்தை) ஈடு அற - வன்மை கெட, சேதியா நின்றது - அறுக்கின்றது; (ஆதலின்), செய்வது - (நீ இப்போது) செய்யத் தக்கது (யாதெனில்), சாதி - இறந்து படுவாயாக; அன்று எனில் - அங்ஙனம் செய்யாயாயின், தக்கது ஓர் நெறி போதி - உனக்குத் தக்கதோர் இடத்திற்குப் போய்விடு' ஆல் : ஈரிடத்தும் அசை.

ஈடு - வலிமை; 'ஈடுண் டேகுவான்' (கிட்கிந்தா. 250); சேதியா நின்றது; ஆ நின்று நிகழ்கால இடைநிலை - இப்பொழுது வழக்கு வீழ்ந்தது. ஒழுக்கம் - படிற்றொழுக்கம். சாதி - ஏவல். தக்கதோர் நெறி - இந்த இடத்தில் இராமபிரான் பிராட்டியை மிகவும் கடிந்து பேசியதாக முதனூல் கூறும். அதனை 'உனக்குத்

தக்கதோர் நெறி' என்றூர் கம்பநாடர் என ஓர்க. புலவர் புந்தியான்; 'அறிவின் மேலுளான்' (யுத்த. 389); இங்ஙனம் கடுமையாகக் கூறிய இராமபிரானைப் புலவர் புந்தியோன், என்றது என்னை எனின், அறிவினுக்கறிவா யிருப்பவனுன அப் பிரான் பிராட்டியின் நன்னெறியையும் தூய்மையையும் அறியாதவனன்று, பிராட்டியின் கற்பு நிலையை உலகத்தார்க்கு நன்கு விளக்கிக் காட்டவே இவ்வாறு செய்தான் என்பது பின்னர் விளங்கும். யுத்த. 3958 உரையும் காண்க.

பா - ம். 1. ஏது; இயம்புவன்; ஈண்டறச்

2. ஒழுக்கச் செய்தியாற், ஒழுக்கஞ் செய்தியாற்.

3. சாதியான்; தக்கதோ.

68

## இராமனது கடுஞ்சொற் கேட்டு அனைவரும் கலங்குதல்

3961. முனைவரு மமரரு மற்று முற்றிய
நினைவரு மகளிரு நிருத ரென்றுளார்
எனைவரும் வாநரத் தெவரும் வேறுளார்
அனைவரும் வாய்திறந் தரற்றி னுரரோ.

முனைவரு - முனிபுங்கவரும், அமரரும் - வானவர்களும், மற்றும் - பின்னர், முற்றிய - நிறைந்த, நினைவு அரு மகளிரும் - மனத்தால் நினைந்து அளத்தற்கியலாத மடவாரும், நிருதர் என்று உளார் எனைவரும் - இராக்கதர்கள் என்று உள்ளோரனைவரும், வாநரத்து எவரும் - வாநர குலத்தைச் சேர்ந்த பல்லோரும், வேறு உளார் அனைவரும் - மற்றும் (ஜாம்பவான் முதலிய வர்க்கங்களில்) சேர்ந்தவர்கள் எல்லோரும், (இராமபிரான் இங்ஙனம் வெகுண்டு கூறிய சொற்களைக் கேட்டு மனம் பொருமல்), வாய் திறந்து அரற்றினர் - வாய் விட்டுப் புலம்பினர்கள். அரோ: ஈற்றசை.

முனைவர் - முன்னோர்; 'முன்னோனை முனைவன் என்பது ஓர் சொல் விழுக்காடாம், முன் என்பதனை முனை என்பராகலின்' என்பது தொல்காப்பிய உரை. 'முனைவன் கண்டது முதனூ

லாகும்' (தொல். மரபி. 94) எனைவரும்; 'எனைவருள்ளவர்' (யுத்த. 177).

பி - ம். 1. முனிவரும்.
2. நிருபர்.
3. தேவரும். 69

## இராமபிரான் கடுஞ் சொற்களைச் செவியேற்ற பிராட்டி வருந்துதல்

3962. கண்ணிணை யுதிரமும் புனலும் கான்றுக
மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்
புண்ணினைக் கோலுறுத் தனைய பொம்மலாள்
உண்ணினைப் போவிநின் றுயிர்ப்பு வீங்கினாள்.

மண்ணினை நோக்கிய - (நாணத்தால்) பூமியைநோக்கி (த் தலை கவிழ்ந்து) நின்ற, மலரின் வைகுவாள் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் அவதாரமாகிய பிராட்டி, (இச் சொற்களைக் கேட்டு), புண்ணினை கோல் உறுத்து அனைய - புண்ணைக் கோல் கொண்டு குத்தினாற் போன்ற, பொம்மலாள் - வருத்தத்துடன் கூடியவளாய், கண்ணிணை - (தனது) இரண்டு விழிகளினின்றும், உதிரமும் புனலும் - இரத்தமும் கண்ணீரும், கான்று உக - மிகுதியாகச் சிந்த, உள் நினைப்பு ஓவி நின்று உயிர்ப்பு வீங்கினாள் - உள்ளத்தில் அறிவிழந்தவளாய், பெருமூச்செறிந்தாள்.

நாணத்தாலும் துயர் மிகுதியாலும் தலை கவிழ்ந்து நில நோக்குவது மகளிர் இயல்பு; 'யானோக்குங் காலை நிலனோக்கும்' (குறள். 1094) என்றது காண்க. முதல் நாள் போரில் முறியடிக்கப் பட்ட இராவணனைப் 'பூதலமென்னு நங்கை தன்னையே நோக்கிப் புக்கான்' (யுத்த. 1213) என்றதும் காண்க. 'மண்ணினை நோக்கிய' என்ற தொடரிலிருந்து தன்னைப் பிறப்பித்த பூமி தேவியை நோக்கித் தன் நிலை அறிவித்தாள் என்ற தொனியும் காண்க. புண்ணினைக் கோலுறுத்தல்; (ஒப்பு): 'வெந்த புண்ணில் வேலிடுதல்' வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்' (யுத்த: 3129); உதிரம் கான்றது சினத்தாலும்,

புனல் கான்றது துயரத்தாலும் என்றுணர்க. ஏக 'காலத் தெழுந்த இரு மெய்ப்பாடுகள். 'துன்பமு முவகையும் சுமந்த வுள்ளத்தாள்' (சுந்தர. 583) என்ற இடத்துப் போல.

பி-ம். 1. கான்றது.

2. நோக்கியே, நோக்கியம், நோக்கினள்.

3. புன்னிடை, புன்னினிவ்; பொம்மலால்.

4. நினைவோய, நினைவோட, நினைப்போடு; விங்குவாள். 70

3963. பருந்தடர் சுரத்திடைப் பருகு நீர்நசை
வருந்தருந் துயரினுன் மாள லுற்றமான்
இருந்தடங் கண்டதி னெய்து ருவகைப்
பெருந்தடை யுற்றெனப் பேதுற் ருளரோ.

பருந்து அடர் - பருந்துகள் நிறைந்த, சுரத்து இடை - பாலை வனத்திலே, (சிக்கி) நீர் பருகும் நசை - தண்ணீர் பருக வேண்டும் என்ற விழைவால், வருந்து அரு துயரினால் - வருந்துதற்குக் காரணமாகிய துன்பத்தால், மாளல் உற்றமான் - இறக்கும் தருவாயை யடைந்த மான, இருதடம் கண்டு-பெரிய நீர் நிலையைக் கண்ணுற்று, அதின் - அந்தக் குளத்தில், எய்துருவகை - இறங்க வியலாதபடி, பெருதடை யுற்று என பேதுற்ருள் - பெரிய தடங்கல் நிகழ்ந்தது போன்று (பிராட்டி) அறிவு கலங்கப் பெற்ருள். அரோ: ஈற்றசை.

நீர் பருகு நசை என்க. மாளல் - தொழிற்பெயர். பருந்தடர் சுரம்: கொடிய அரக்கர் வதியும் இலங்கை. நீர் நசை: இராமபிரானைக் காணவேண்டிய ஆர்வம்: துயர்; காணவியலாமையினுல் நிகழ்ந்த மனத்துயர். இருந்தடம் கண்டது: வாசத்தடம் போன்ற இராமபிரானைக் கண்டது; பெருந்தடை: இராமபிரானின் கருணையற்ற கொடுஞ் சொற்கள்; உவமையணி. சுரம்: நீரும் நிழலுமற்ற பாலைவனம். இராமபிரானை அடையப்பெருத பிராட்டிக்கு நீர் உண்ணப்பெருத மான் உவமை.

பி-ம். 1. பருந்தடை.

3. இருந்தடங் கண்டதில்.

71

3964. உற்றுநின் றுலகினை நோக்கி யோடரி
முற்றுறு நெடுங்கணீ ராலி மொய்த்துக
இற்றது போலும்யா னிருந்து பெற்றபே
றுற்றதா லென்றவ மின்றென் றோதுவாள்.

•

உற்று நின்று-(இவ்வாறு) பேதுற்று நின்று, (பிராட்டி) ஓடு-உலாவுகின்ற, அரி முற்றுறும் நெடுங்கண் நீர்-செவ்வரி நிரம்பிய நீண்ட விழிகளினின்று, ஆலி மொய்த்து உக-நீர்த்துளி மிக்குச் சிந்த, உலகினை நோக்கி-உலகில் உள்ளாரைப் பார்த்து, 'யான்-நான், இருந்து-(இவ்வளவு நாட்கள் தீய ஒழுக்கமின்றி நல்லொழுக்கத்துடன்) உயிர் வாழ்ந்திருந்து, பெற்ற பேறு-அடைந்த பயன், இற்றது-இவ்வளவினதே போலும்; என்தவம்-நான் புரிந்த தவம், இன்று உற்றது-இவ்வளவோடு பயன் தந்து கழிந்தது', என்று-என்று, ஓதுவாள்-(இராமபிரானை நோக்கிச்) சொல்பவளானாள்.

உலகு: இடவாகுபெயர். ஆலி: நீர்த்துளியோடு தனித்திருந்து பெறறபேறு இற்றது போலும்; இந்த இராமபிரானைக் கண்டு தொழப்பெறுதலாகிய இவ்வளவினதே போலும்; போலும்: ஒப்பில் போலி. முன்னர் உலகோரை நோக்கிக் கூறிப்பின்னர் இராமபிரானை நோக்கிப் பேசலானாள்.

பி-ம். 1. ஓரடி.

3. இற்றறு.

4. இன்றெனற்றவ மென்று, இன்றேடென் றென்று, இன்றவமென் றென்று.



இது ஓர் பிரதியில் இல்லை.

பிராட்டி இராமபிரானை நோக்கிச் சொல்லும் மறுமொழி

3965. மாருதி வந்தெனைக் கண்டு வள்ளனீ
சாருதி யீண்டெனச் சமையச் சொல்லினன்
யாரினு மெய்ம்மையா னிசைத்த தில்லையோ
சோருமென் னிலையவன் றூது மல்லனோ.

'வள்ளல் - வண்மையுடையனே! மாருதி - அநுமன், வந்து (முன்னர் இவ்விலங்காபுரிக்கு) வந்து, எனை கண்டு - என்னைப் பார்த்து, 'நீ ஈண்டு சாருதி - நீ இவ்விடத்திற்கு எழுந்தருள்க', என - என்று, சமைய சொன்னான் - (எனக்குத்) தேறுதல் அமையுமாறு சொல்லிச் சென்றான்; யாரினும் மேன்மையான் - யாவரினும் சிறந்த சத்திய சந்தனான அநுமன், சோரும் என் நிலை - (இங்குத்) தளர்ந்து கிடந்த என் தன்மையை, இசைத்தது இல்லையோ - உள்ளபடி (உனக்குக்) கூறியதில்லையோ? தூதும் அல்லனோ - அவன் சரியான (கடமையுணர்ந்த) தூதுவன் அல்லன் போலும்.

வள்ளல்: அண்மை விளி. இலங்கை சென்று திரும்பிய அநுமன் பிராட்டியின் கற்பினையும் வேறு பெருமைகளையும் பற்றி இராமபிரானிடம் கூறியவற்றைச் சுந்தர காண்டம் 1269 முதல் 1292 வரையில் உள்ள செய்யுட்களிற் காண்க. அநுமன் சமையச் சொல்லிப் பிராட்டியைத் தேற்றியது; சுந்தர. 645 முதலாக வரும் செய்யுட்களிற் காண்க. 'ஈண்டொரு திங்களீயிடரின் வைகவும், வேண்டுவ தன்றியான் விரைவின் வீரனைக், காண்டலே குறைவுபின் காலம் வேண்டுமோ? 'ஆண்டகை யினி யொரு பொழுது மாற்றுமோ?' 'குராவருங்குழலி நீ குறித்த நாளினின், விராவரு நெடுஞ்சிறை மீட்கலானெனின், பராவரும் பழியொடு பாவம் முற்றுதற் கிராவணனல்லனே, யிராமனென்றனன்' (சுந்தர. 672, 680)-ம் காண்க. இந்தத் தேறுதற் சொற்களாலேயே, 'ஆதலா லிறத்தலே யறத்தினாறு' (சுந்தர. 509); என்ற முடிவிற்கு வந்த பிராட்டி. 'வாராதொழி யான்' (சுந்தர. 494); 'நாணிலா திருந்தேனல்லேன், நவையறு குணங்கள் என்னும், பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி தன்னைக், காணலாம் இன்னும்' (யுத்த. 1588); என்றும் துணிந்து உயிருடன் வாழ்ந்தது. இது 'ஒழுக்கம் பாழ்பட மாண்டிலை' என்று இராமன் கூறியதற்கு விடை. மற்றும் தூதனான அநுமன் தன்னுடைய அவச நிலையை இராமபிரானிடம் கூறியிருப்பின் இத்தகைய கடுஞ் சொற்கள் பிறந்திரா. ஒருசமயம் அவன் கூறவில்லைபோலும் என்று சங்கை கொண்டாள். உடனே நிதானித்துத்தான் உயிர் துறக்கத் துணிந்த காலத்து, இராமபிரான் நாமஞ் சொல்லி உணர்

வினை யுருக்கி உயிர்தந்தவனும், ஆழிகாட்டி யவளாருயிர் காட்டியவனும் ஆன அநுமன் ஆதலின் அவனை 'யாரினு மெய்ம்மையான்' என்று புகழ்ந்தாள்.

பி-ம். 1. வந்தெனக்கு; ஆண்டு.

2. சமையச் சொல்லிப்பின்.

3. மேன்மையான். 73

3966. எத்தவ மெந்நல மென்ன கற்புநான்
இத்தனை காலமு முழந்த வீதெலாம்
பித்தென லாயவம் பிழைத்த தாலன்றே
உத்தம நீமனத் துணர்ந்தி லாமையால்.

'உத்தம - புருடோத்தமனே! இத்தனை காலமும் - இவ்வளவு காலமாக, நான் உழந்த - நான் வருந்திச் செய்த, எத்தவம் - எத்துணை உயர்ந்த தவமும், எ நலம் - எத்துணை நற்செய்கைகளும், என்ன கற்பும் - எத்துணை மேம்பட்ட கற்பு நெறியும், (ஆகிய) ஈது எலாம் - இவை யாவும், நீ மனத்து உணர்ந்திலாமையால் - நீ (உனது) திருவுள்ளத்தில் அறிந்திடாமையின், (ஒவ்வொரு சொல்லும்), பித்து எனல் ஆய - பித்துப் பிடித்தவன் செயலாகுமாறு, வம்பு இழைத்தது - வீணே இயற்றப்பட்டுக் கழிந்தது. அன்று: ஏ, அசை.

எத்தவம்: இளையவன் தொடுத்த தூய சாலையினிருந்தாளைய தவஞ்செய்த தவமாந்தையல்' என்று பெருமையுடன் மாருதி கூறியமை காண்க. 'கமையினுள் திருமுகத்து' (சுந்தர. 339); 'இரும் பொறை யென்பதொன்றும்' (சுந்தர. 1273); என்ற இடங்களில் பிராட்டியின் தவம் குறிக்கப்பெற்றமை காண்க. 'உற்ற நோய் நோன்றல் உயிர்க் குறுகண் செய்யாமை, அற்றே தவத்திற் குரு' (குறள். 261); என்பது உத்தரவேதம்; 'காசுண்ட கூந்தலாள் கற்பும் காவலும், ஏசுண்ட தில்லையால்' (சுந்தர. 397); 'குலத்தில் வந் தில்லின் மாண்புடை-, நங்கையர் மனத்தவ நவிலற்பாலதே' (சுந்தர. 401); 'தனிமையும் பெண்மையும் தவமுமின்னதே' (சுந்தர. 403); 'தெய்வப்பத்தினி தவத்துளாளைப், பேதையைக் குலத்தின்

வந்த பிழைப்பிலாதானை ' (யுந். 2822); என்ற இம் மேற்கோள்கள் பிராட்டியின் தவச்சிறப்பை நன்கு விளக்கும். வம்பு - நிலையின்மை. (தொல். சொல். உரி. 31). இனி நீ உத்தம மனத்துஎன்று பிரித்துக்கூட்டி, இயல்பான கருணையும் பெருந்தன்மையும் நிறைந்த உன் உயர்ந்த உள்ளத்தால் உணராமையின் எனினுமாம். பிழைத்த இடத்தும் பெருங்கருணை புரியாநிற்கும் இறைவன் ஒருசிறு பிழையுமில்லா திருக்கும்போதே அபாண்டமான பழிகளைத் தூற்றுவது பெருமான் ராஜச குணமே என்று காட்டுகின்றாள் பிராட்டி என்றோர்க. மற்றும் மனத்து உத்தமம், மத்திமம், அதமம் என்று பாகுபாடுகள் உண்டோ என்னில் உண்டு; சத்துவத்தின் விளைவாக எழும் நினைவுகள் உத்தமம்; ராஜசத்தின் விளைவாக எழுவன மத்திமம் என்க.

பி - ம். 1. என்றன், என்னல்.

2. காலமாய்; உளைந்த, உழன்ற; இவ்வெலாம்.

3. பித்தெனலாயறம், பித்தெனலாயது, பிழைத்ததாம்; என்றே, யன்றே.

4. உத்தமநின்.

74

சில பிரதிகளில் 'மாருதி, பங்கயத்து' என்று தொடங்கும் செய்யுட்களின் பின் இச் செய்யுள் காணப்படுகின்றது.

3967. பார்க்கெலாம் பத்தினி பதுமத் தானுக்கும்
பேர்க்கலாஞ் சிந்தைய ளல்லள் பேதையேன்
ஆர்க்கலாங் கண்ணவ னன்றென் றுலது
தீர்க்கலாந் தகையது தெய்வந் தேறுமோ

'பேதையேன் - பேதைப் பெண்ணாகிய யான், பார்க்கு எலாம் - நில உலக மடங்கலும், பத்தினி - (உத்தமமான) கற்பரசி; பதுமத் தானுக்கும் - (ஆக்கும் கடவுளான) பிரமதேவனுக்கும், பேர்க்கலாம் சிந்தையள் அல்லள் - பேதிக்கக்கூடிய மன நிலை யுடையேனல்லேன்; (இங்ஙனம் எனினும்), பார்க்கெலாம் ஆர்க்கலாம் கண்ணவன் - புலத்தோரெல்லாம், மகிழ்ந்து ஆரவாரிக்கும்படியான, அருட்கண்ணைக்குடையவன் ஆன இராமபிரான், (எனது கற்பு), அன்று என்றால் - அத்தன்மையதன்றென்று பகர்வதால், அது -

அந்த எண்ணத்தை, தீர்க்கலாம் தகையது - போக்கும்படியான வகைமைய தெய்வம் தேறுமோ - பிறிதொரு தெய்வம் அறிந்து கொள்ளக் கூடுமோ ?. ஓ : எதிர்மறைப் பொருள்.

'பார்க்கெலாம் பத்தினி' 'சோகத்தாளாய நங்கை' (சுந்தர. 1278); 'பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல், நாண நோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால்' (சுந்தர. 402); என்று வந்தமை காண்க. பார்க்கெலாம் ஆர்க்கெலாம் என்று இணைத்துப் பொருள் தரப்பட்டது. ஆர்க்கெலாம் என்ற பாடம் கொண்டு உலகத்தவர் எல்லோர்க்கும் என்று பொருள் கூறினுரும் உளர். கண்ணவன் : 'ஞான நேத்திரமுடையவனும், சக்ஷோர் சூரியோ அஜாயதா' என்று சூரியனைத் தன் விழியினின்று தோற்றுவித்த வனும், ஆதலின் 'கண்ணுவான்' எனப்பட்டான். 'கண்ணுவா னென்றும், மண்ணோர் விண்ணோர்க்குத், திண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே' (திருவாய்மொழி. 1, 8 : 3); கண்:யாவர்க்கும் கணகண் எனினுமாம்; இராமபிரான் தனது கற்பு நிலையைச்சங் கித்தல் கூடும் என்ற எண்ணம் பிராட்டியிடமிருந்தது என்பது; 'அற்புத னரக்கர்தம் வருக்க மாசற, விற்பணி கொண்டரும் சிறை யின் மீட்ட நாள், இற்புகத் தக்கிலே யென்னின் யானுடைக், கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன்' (சுந்தர. 508); என்றது கொண்டு காண்க. தாமே நிரூபித்துக் காட்டவியலாத நிலையில் பரந்தாமனுடைய இந்த ஐயத்துடன் கூடிய உள்ளப் பாங்கினைஎந்தத் தெய்வந்தான் மாற்ற முடியும் என்று பிராட்டி இரங்குகின்ருள் என்க. 'எப்பொழுதிப்பெரும் பழியி னெய்தினேன். அப்பொழுதேயுயிர் துறக்கு மாணையேன்' (சுந்தர. 403); என்று கூறி ஒரே உறுதியாக, 'இறத்தலே யறத்தினுறு' என்று எண்ணிய தற்கேற்ப, இறந்துபட்டிருப்பின் இத்தகைய பழிச்சொற்கட்குப் பாத்திர மாகாமலிருந் திருத்தல் கூடும். அவ்வாறு புரியாமையின், பேதையேன் என்று தன்னைச் சொல்லிக் கொள்கின்ருள். பதுமத் தான் : பிரமன் ; 'பல்லைத்தான் றிறக்கத்தான் பதுமத்தான் புவியிற் றுன் பண்ணி னுனே' (தனிப்பா.).

பி - ம். 2. பேதையென்று.

3. ஆர்க்கெலாம் ; கணிவனும், கணவனது ; சொல்லியென்.

4. தகையதோ.

3968. பங்கயத் தொருவனும் பசுவின் பாகனும்
சங்குகைத் தாங்கிய தரும மூர்த்தியும்
அங்கையி னெல்லிபோ லனைத்து நோக்கினும்
மங்கையர் மனநிலை யுணர வல்லரோ.

'பங்கயத்து ஒருவனும் - தாமரை மலரில் தோன்றிய ஒப்பற்ற பிரமனும், பசுவின் பாகனும் - ஆன்மாவின் அருகிலேயே யிருக்கின்ற பசுபதியாகிய சிவபெருமானும், சங்கு கை தாங்கிய தரும மூர்த்தியும்-சங்கினைக் கரத்தில் ஏந்திய தரும வடிவான திருமாலும், அங்கையின் நெல்லி போல் அனைத்தும் நோக்கினும் - உள்ளங்கை நெல்லிக் கனியைப் போன்று எல்லாப் பொருள்களையும் உள்ளது உள்ளவாறு அறிய வல்லாரேனும், மங்கையர் மனநிலை உணர வல்லரோ - மகளிரின் உள்ளத்தின் நிலையை (இன்ன தன்மைய தென்று உள்ளபடி) தெரிந்துகொள்ள வல்லரோ? (அல்லர்) ஓ : வினா.

அங்கையின் நெல்லி - உள்ளங் கையிற் கொண்ட நெல்லிக் கனியின் மேலுள்ள வரைகளைக் கொண்டே அகத்தேயுள்ள விதையின் வரைகளையும் உணரக்கூடும். ஆதலின், தெள்ளத் தெளிய ஒன்றினை உணர்வதற்கு உவமையாகக் கூறப்படும். இங்கு 'மடக்கொடி நெஞ்சமும் வானின் நீளமும், கடற்குழி யாழமும் கண்டதில்லையால்' என்ற பழம்பாடல் நினைவிற்கு வருகின்றது. இச் செய்யுள் கொண்டு பெண்கள் உள்ளப் பான்மையைப் பெண்பாலரேயன்றி, ஆண்பாலர் அறிதற்கில்லை என்ற பொருளும் தொனிக்கும்.

பி - ம். 1. விடையின் பாகனும்.



3969 ஆதலிற் புறத்தினி யாருக் காகவென்
கோதறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்
சாதலிற் சிறந்ததொன் றில்லை தக்கதே
வேதநின் பணியது விதியு மென்றனள்.

'வேத - வேத வடிவினனே! ஆதலால் - இவ்வாறு ஆதலின், இனி - இனிமேல், என் - என்னுடைய, கோது அறு தவத்தினை - குற்றம் தீர்ந்த கற்பு நெறியை, புறத்து-வெளியே, யாருக்கு ஆக கூறி காட்டுகேன் - (வேறு) யாருக்குத்தான் சொல்லி அறிவிக்கக்

கடவேன்; சாதலில் சிறந்தது ஒன்று இல்லை - இறந்துபடுதலைக் காட்டிலும் மேலானது யாதும் இன்று; நின் பணி - (சாதி) என்று நீ கட்டளையிட்டருளியது, தக்கதே - தகுதியானதே; விதியும் அது - என் தலை விதியும் அவ்வாறு உள்ளது போலும்', என்றனள் - என்று மொழிந்தாள் (பிராட்டி). ஏகாரம் : தேற்றம்.

தவம் - இங்குக் கற்பு நெறி. 'கண்டாரிகழ்வனவே காதலன் றான் செய்திடினும், கொண்டானை யல்லால் அறியாக் குலமகள் போல்' (பெருமாள் திருமொழி. 5, 2) இங்குக் காணத்தகும். சாதலிற் சிறந்ததொன்றில்லை; 'மானமழிந்த பின் வாழாமை முன்னினிதே' (இனிது நாற்பது. 14.); 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர் நீப்பர் மானம்வரின்' (குறள். 969); 'வருந்தலின் மான்மா வனைய மாட்சியர்' (சுந்தீர. 507) என்ற இடங்களைக் காண்க. காட்டுகேன்; 'காட்டுகேன் வம்மின் கடிவஞ்சி யார் கோமான், வேட்டமேற் செல்லும் பொழுது' (முத்தொள்.      ) வேத - மறை வடிவினனே; 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன' (அயோத்தி. மந்தரை. 47) என்று இராமபிரானைக் கைகேயியே கூறுதல் காண்க. 'அலையாழி யென வளர்ந்தார் மறைநான்கு மனையார்கள்' (பால. குலமுறை. 23) 'நின் செய்கை கண்டு நினைந்தனவோ நீண்மறைகள், உன் செய்கை யன்னவைதாம் சொன்ன ஒழுக்கினவோ' (ஆரணிய. 1177) தக்கதே - நீ சாதி என்றது தக்கதே; (யுத்த. 3960) காண்க. இனி அது விதியும்; என்பதற்கு அது எனது கடமையும் எனினுமாம்.

பி - ம். 1. பிறர்க்கினி, புறத்துநான், புறத்தினின்.

2. ஆருக்காகுகேன், உயிருக்கரகவென், ஆருக்காகவிக்; காட்டுவேன்.

4. பணியிது.



## பிராட்டி இலக்குவனை நோக்கித் தீயமைக்கச் சொல்ல இராமபிரானும் அநுமதி தருதல்

3970. இளையவன் றனையழைத் தீடுதி தீயென
வளையொலி முன்கையாள் வாயிற் கூறலும்
உளைவுறு மனத்தவ னுலகம் யாவுக்கும்
களைகணைத் தொழவவன் கண்ணிற் கூறினன்.

வளை ஒலி முன் கையாள் - வளையல்கள் ஒலிடுகின்ற முன்னங்கையை உடையவளான சானகி, இளையவன் தனை அழைத்து - கொழுந்தனாகிய இலக்குவனை விளித்து, 'தீ இடுதி - (யான் குதித்தற் பொருட்டு) தீயை அமைப்பாயாக', என - என்று, வாயில் கூறலும் - (வாயினால் வெளிப்படையாகச்) சொல்லியவளவில், (அதைச் செவியேற்று), உளைவு உறு மனத்தவன் - வருத்தம் மிக்க மனத்தையுடையவன் ஆன அந்த இளைய பெருமாள், (இராமபிரானுடைய) திருவுள்ளப் பாங்கினைத் தேர்தற்பொருட்டு, உலகம் யாவுக்கும் களைகண் தொழ - உலகத்துள்ள சராசரங்கட்கெல்லாம் புகலிடமான இராமபிரானை வணங்க, அவன் - அந்த இராமபிரானும், கண்ணில் கூறினான் - கண் பார்வையின் குறிப்பால் (தீ யமைக்குமாறு) கட்டளை யிட்டான்.

இளையவனை அழைத்து இடுதி தீ: முன்னர் 'யானினி யெரியிடைக் கடிது வீழ்ந்திறப்பெனிண்டு' (ஆரணிய. 819) என்று இளையவன் மூட்டாத தீயில் விழுவேன் என்று அச்சுறுத்திய பிராட்டி கூற்றுக்கும் இங்கு தீ இடுதி எனக் கூறியதற்கும் உள்ள வேற்றுமை உணர்க. இங்குத் தீயமைக்கச் சொல்லியது சோகத்தால் என்றுணர்க. இனி, கூறினாள் என்று கூறியமையாது 'வாயினால்' என்று வேண்டாது கூறியது பிராட்டியின் பரபரப்பைக் குறிக்கும். 'இங்கிதங்காஸ்து கோசலாகா' என்று கோசல நாட்டில் உள்ளவர்கள் இங்கிதத்தினாலேயே உரையாடுவர் என்ப. மற்றும் பிராட்டியின் நெஞ்சகத்திருந்த வருத்தமானது அவளை வாய்விட்டுக் கூறவும் செய்தது என்று கொள்க. 'என் துயரைச் சுவரிடமானது அறைந்து தணித்துக்கொள்வேன்' என்று வழங்குவதும் காண்க. மற்றும் பிராட்டி கண்ணினிற் கூறாதது ஏன் எனின், இலக்குவன் பிராட்டியின் பதவிணைகளையன்றி அவள் உருவத்தை நேர்முகமாகப் பார்த்தவனில்லை. எனவே அவள்கட் குறிப்பை அவன் அறிய முடியாது; எனவே இளையவன் இயல்பினை யறிந்திருந்த அவள் அவன் செவிகளிற் படுமாறு வாயிற் கூறினாள் எனினுமாம். 'நாகம் ஜானமிகேயூரே, நாகம் சானமி குண்டலே' என்ற முதனூல் சுலோகம் இங்குக் காணத்தகும்; மற்றும் இதனை,

'கன்றிய சிந்தையினு யுன்கணவனுனைக் கைப்பிடித்த, அன்று முதலின்றளவு முன்னுடைய வடிபணிந்தே, நின்ற பொழுதினுந் தாயோய் நின்மேனி கண்டறியேன், இன்றுதா னுனைக்காண வல்லேனே வெனவுரைத்தாள்' (உத்தர. சீதை வனம்புகு. 80) என்ற வரிகள் கொண்டும் தெளிக. மற்றும் வாயில் என்பதற்கு உண்மையாகவே அரைமனதாகவன்றி மனப்பூர்வமாகவே என்றும் கொள்ளலாம். வாய் - உண்மை. கண்ணிற் கூறுதல்; 'கண் ணெனும் தூதினுற றுணிபொருள் விளக்கி' (சீவக. 1485); என்றது காண்க. உலகம் - இடவாகு பெயர். களைகண் : 'காவ லாளர் விழக் களை கண்ணிலா ஏவலாளரின்' (யுத்த.671); 'அறனே களைகணென்பார்' (சீவக. 2557).

பி - ம். 1. அமைத்தடுதி, அமைத்திதி, அமைத்திடுக.

2. வாயிற் கூறினள்.

3. உளைவரு ; மனத்தினன், மனத்தற்கு.

4. களைகளை தொழிலவன், களைகளை யனையவன் ; கடவுளே யனையவன். 78

## இலக்குவன் தீ மூட்ட, பிராட்டி அதனை அடுத்தல்

3971. ஏங்கிய பொருமலி னிழிக ணீரினன்
வாங்கிய வுயிரின னனைய மைந்தனும்
ஆங்கெரி விதிமுறை யமைவித் தானதன்
பாங்குற நடந்தனள் பதுமப் போதினுள்.

(இராமபிரான் எண்ணத்தை அறிந்த அளவில்), வாங்கிய உயிரினன் அனையமைந்தனும் - நீங்கப் பெற்ற உயிருடையவன் போலாகிய, அத்தகைய வீரனான இலக்குவனும், ஏங்கிய பொரு மலின் இழி கணீரினன் - ஏங்குதலால் உண்டான வருத்தத்தால், சொரிகின்ற கண்ணீரை யுடையவனாய், ஆங்கு - அவ்விடத்தில், எரி - தீயை, விதி முறை - (நியமமாய்த் தீயுட் புகுதற்கு வகுக்கப் பட்ட) விதியினைக் கூறுகின்ற நூல்களின்படி, அமைவித்தான் - (மூட்டிச்) சித்தம் செய்தான், பதுமம் போதினுள் - செந்தாமரை மலரில் வாழும் திருமகளின் அவதாரமான பிராட்டி, அதன் பாங்கு உற நடந்தனள் - அந்தத் தீயின் அருகில் பொருந்தச் சென்றாள்.

பொருமல்; 'போயதெம் பொருமலென்று விந்திர னுவகை பூத்தான்' (பால. திருவவ. 25); பதுமப் போதினுள்-கம்பநாடர் திருமகள் அவதாரமாக. பிராட்டியைக் கூறுதற்கேற்ப, இங்கும்பதுமப் போதினுள் என்றார்; 'போதினை வெறுத்தாசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங். 35) 'செப்புங்காலை' (பால. மிதிலை. 591) என்று தொடங்கும் செய்யுளும் 'சீதையை யிகழலம்மா, தூயவளமிர் தினோடுந் தோன்றினு ளென்றுந் தோன்றாத், தாயவள் உலகுக் கெல்லாம்' (யுத்த. 762) என்று மாலியவான் இராவணனிடம் கூறியதும், மற்றும் இச்செய்யுளின் உரையும் காண்க. பதுமம்போதினுள் எரியில் வீழத் துணிந்தாள் என்று பிராட்டியின் மென்மைக்கு இரங்கினர் கவி: 'ஒன்பதின்சா ணடப்பினு மொருகாத மென்றஞ்சும், மென்பஞ்சிச் சீறடியும்' (சீவக. 179); என்றார் திருத்தக்க தேவர். 'ஆண்டை நகரானரையொடு வாயிலகலாமுன், யாண்டையது கான்' எனக் கேட்ட பிராட்டி யல்லவோ இவள்'.

பி - ம். 1. பொருமலன்.
2. இளைய மைந்தனும்.
3. விரிமுறை ; அமைப்பித்தான்.
4. பதுமத் தாளினுன், பதுமப் போதனுள்.

79

## அப்பொழுது உலகத்திலுண்டான தடுமாற்றம்

3972. தீயிடை யருகுறச் சென்று தேவர்க்கும்
தாய்தனிக் குறுகலுந் தரிக்கி லாமையால்
வாய்திறந் தரற்றின மறைகள் நான்கொடும்
ஓய்வினல் லறமுமற் றுயிர்கள் யாவையும்.

தேவர்க்கும் தாய் - (எண்பத்து நான்கு கோடி சீவராசிகட்கு மட்டுமன்றிச்) சிறப்பு மிக்காரான வானவர்க்கும் தாயான சீதாப் பிராட்டி, தனி - தனித்து, தீ இடை - தீயின், அருகு உற - அண்மையிற் பொருந்த, சென்று குறுகலும் - சென்று கிட்டிய அளவிலே, தரிக்கிலாமையால் - (அந்தக் கொடுமையான செயலை) ஆற்றமாட்டாமையின், நான்கு மறைகளொடும் - நான்கு வேதங்களுடனும், ஓய்வில் - (என்றும்) தளராத, நல் அறமும் - சிறந்த தருமமும், மற்று - பின்னும், உயிர்கள் யாவும் - எல்லா உயிர்களும், வாய் திறந்து அரற்றின - (தத்தம்) வாய் திறந்து கதறின.

தேவர்க்கும் தாய்-உம்மை உயர்வு சிறப்பு. (ஒப்பு): 'தேவர்க்குந் தம்மோயை' (யுத்த. 292); உலக மாதாவான பிராட்டி இக்கொடுஞ் செயலாகிய தீமூழ்கும் நிலையைக் கண்டு சராசரங்கள் மட்டுமன்றி மறைகளும் தரும தேவதையும் அரற்றின எனப்பட்டது. இந்தக் கருத்துடன் இராமபிரான் வனம் புகுவான் எனக் கேட்டு நகரத்தி லுள்ளாரும் பிறரும் விலாபித்த பகுதியை ஒப்பு நோக்குக. அங்கும் 'யாவரும் மெய்ம்மறந்தனர் ஒலி மறந்த வேதம்' (அயோத்தி. நகர் நீ. 210) என்றது காண்க. ஒலி மறத்தலாவது பயில்வாரருகின மையின் உதாத்தம் அநுதாத்தம் ஸ்வரிதமாகிய ஒலி அபஸ்வரம் பேசுதல். மற்றும், சீதை களங்காண் படலத்துப் பிராட்டி துயரம் கண்டு, 'தன்று மறையுந் தருமமுமெய் குழைந்து குழைந்து தளர்ந்தழுத' (யுத்த. 2611) என்றதும் காண்க. தாய்-உலக மாதா: 'சீதையை யிகழலம்மா, தூயவ ளர்மிதி லேடும் தோன்றினு ளென்றுந் தோன்றாத், தாயவ ளுலகுக் கெல்லாம்' மென்பதும் சாற்றுகின்றார்; (யுத்த. 762) என்று மாலியவான் கூறுதலும் காணத்தகும்.

பி - ம். 1. தீயினே.

2. உறுதலும்.

3. வரைக்கண்.

4. மாய்வி னல்லறமுமற்று, ஓய்விலாவறமுது, ஒய்வுறு மறமுமற்று. 80

3973. வலம்வரு மளவையின் மறுகி வான்முதல்
உலகமு முயிர்களு மோல மிட்டன
அலம்வர லுற்றன வலறி யையயவிச்
சலமிது தக்கில தென்னச் சாற்றின.

வலம் வரும் அளவையின் - (சீதாதேவி தீயில் புகும் பொருட்டு அக்கினியைச்) சுற்றிவரும் அளவில், வான் முதல் உலகமும் - சுவர்க்கம் முதலிய புவனங்களும், உயிர்களும் - அவற்றின் கண் உள்ள உயிர்களும், மறுகி - மனம் வருந்தி, அலம் வரல் உற்றன - நிலை பெயர்ந்து சுழன்று, ஓலமிட்டன - கோவென்று கதறின; அலறி - கதறி, (இராமபிரானைப் பார்த்து), 'ஐய-ஐயனே! இ சலம் இது - இந்தக் கோபம், தக்கிலது - தகுதியல்லாதது,' சாற்றின - என்று சொல்லின.

வலம் வருதல் ; வலம் வந்த மடவார்கள் நடமாட' (தேவா. 278) 'குலவரையை வலம்வருவான் இரவி கொழுங்கதிர்' (ஆரணிய. 557) ஓலமிடுதல் - வாய்விட்டுக் கதறுதல்; 'ஓலமிட்டன வோடியுலகெலாம்' (யுத்த. 653); 'ஓலமிட்டசுரும்பு தனு தனுவென' (திருப்புகழ்.); அலம்வரல்; 'அலம்வரல் தெருமரலாயிரண்டும் சுழற்சி' (தொல். உரி. 14); சலம் - தணியாக் கோபம்; 'சலமுறு கறுவினர்' (யுத்த. 1798); 'சலம் புரிதண்டு' (பரிபா. 15, 58); தக்கிலது ; 'தக்கில தென்னும் பக்கம்' (கிட்கிந்தா. 312).

பி - ம். 3. அமுதவையனச், அலறியையனச் ; அலறியைப்பனே.

4. சாற்றினன்.

81

3974. இந்திரன் தேவியர் முதல வேழையர்
அந்தர வானினின் றரற்று கின்றவர்
செந்தளிர்க் கைகளாற் சேய ரிப்பெருஞ்
சுந்தரக் கண்களை யெற்றித் துள்ளினர்.

இந்திரன் தேவியர் முதல ஏழையர் - இந்திரனுடைய மனைவிமார் முதலான அமர மாதர்கள், அந்தரம் வானின் நின்று அரற்றுகின்றவர் - வான வெளியிலே நின்று ஓலமிடுபவராய், செ தளிர் கைகளால் - சிவந்த தளிரொத்த (தங்கள்) கரங்களால், செம்மை அரி - சிவந்த இரேகைகளையுடைய, பெரு - பெரிய, சுந்தரம் கண்களை - அழகிய விழிகளை, எற்றி துள்ளினர் - (கைகளால்) அறைந்து கொண்டு துடித்தார்கள்.

வான மகளிரில் தலைமை பற்றி இந்திரன் தேவியர் முதலா எனப்பட்டது. ஏழையர் - மகளிர். அந்தரம் வான் - ஒரு பொருட் பன்மொழி. சேயரி - கண்களில் காணப்படும் இரேகை வரைகள். 'சேலனைய சில்லரிய கடைசிவந்து' (சீவக. 167); இத்தகைய அவல நிலையில் பிராட்டியைக் காண நேர்ந்தமை பற்றி வருந்திக் கண்களில் அறைந்து கொண்டனர் என்க. சுந்தரம் - அழகு. வடசொல். 'சுந்தரத் தோகைமார் தொடர்ந்து வாழ்த்தியே' (அரிச். விவாக. 235).

பி - ம். 1. தேவியே, தேவியை ; முதலா.

4. சுந்தரக் கணவனை ; சோர்ந்தனர்.

3975. நடுங்கினர் நான்முகன் முதல நாயகர்
படங்குறைந் ததுபடி சுமந்த பாம்புவாய்
விடம்பரந் துளதென வெதும்பிற் றுலுல
கிடந்திரிந் தனசுடர் கடல்க ளேங்கின.

நான்முகன் முதல நாயகர் - பிரமதேவன் முதலான தலைமைத் தேவர்கள் யாவரும், நடுங்கினர் - நடுக்க முற்றனர்; படி சுமந்த - (கீழிருந்து) பூமியைத் தாங்குகின்ற, பாம்பு - ஆதிசேடனும், படம் குறைந்தது - படமும் உள்ளடங்கப் பெற்றது; உலகு இடம் - பூதல முழுவதும், வாய் - அவ்வரவின் வாயிலிருந்து, விடம் பரந்து உளது என - (கக்கப் பெற்ற) நஞ்சு எங்கும் பரவுதலால் உண்டாகும் வருத்தம் போன்று, வெதும்பிற்று - வருத்தத்தை யுற்றது; சுடர் - சூரியன் முதலிய சோதிகள், இடம் திரிந்தன - இடம் மாறி நின்றன; கடல்கள் ஏங்கின - எப்பொழுதும் ஏங்கும் கடல் பின்னும் தீவிரமா யோங்கி யொலித்தன.

படி சுமந்த பாம்பு - ஆதிசேடன். வெதும்புதல்; 'நின்று நின் றுயிர்த்து நெஞ்சம் வெதும்பினுள்' (யுத்த. 1595); கடல் ஏங்குதல்; 'ஏங்காக் கிடக்கு மெறிகடற்கு மெனக்கும் கொடியையானுயே' (பால. மிதிலைக். 75).

பி - ம். 1. நாயகன் ; முதலா.
2. பாந்தளும்.
3. பிறந்துளது ; பரந்துளவென.
4. ஏந்திய.



சீதை அங்கியங் கடவுளை நோக்கி,
'நான் கற்புக்குறையுடை யேனுயின் என்னைச் சுடுக' எனல்

3976. கனத்தினுற் கடைந்தபூண் முலைய கைவளை
மனத்தினுல் வாக்கினுன் மறுவுற் றேனெனின்
சினத்தீனுற் சுடுதியாற் றீச்செல் வாவென்றுள்
புனத்துழாய்க் கணவற்கும் வணக்கம் போக்கினுள்.

(அப்பொழுது), கனத்தினுல் கடைந்த பூண் - பொன்னுல் அராவிச் செய்யப்பட்ட அணிகலம் புனைந்த, முலைய - தனங்களை

யுடையவளும், கைவளை - கையில் வளை தரித்தவளுமான சீதாதேவி, (அங்கியைப் பார்த்து), 'தீ செல்வா - அக்கினி தேவனே! (நான்)' மனத்தினால் வாக்கினால் மறுஉற்றேன் எனின் - மன மொழிகளால் களங்க முற்றவளெனின்; (என்னை நீ), சினத்தினால் சுடுதி - கோபத்தினால் சுட்டெரிப்பாயாக', என்றுள் - என்று சொல்லி, புனம் துழாய் கணவற்கும் - புனத்திற் செழிக்கும் திருத்துளவம் அணிந்த கணவனான இராமபிரானையும், வணக்கம் போக்கினாள் - வணக்கம் செய்தாள். ஆல்: அசை.

கனம் - பொன்; 'கனங்குழாய்' (கலித். 57); கைவளை - அன்மொழித் தொகை. காயம் உபலக்கணத்தாற் கொள்க; 'ஒரு மொழி யொழிதன் இனங் கொளற்குறித்தே' (நன். பொது. 7); என்றது காண்க. புனத்துழாய்; 'புல்லுண வளித்துக் காக்கும் புனத் துழாய்க் கண்ணியண்ணல்' (குசேலோ. 1, 99); முலை; 'முலையோ முழுமுற்றும் போந்தில' (திருவிருத்தம். 60); கணவற்கும் என்ற உம்மையால் தீச் செல்வற்கு முன்னம் வணக்கம் செலுத்தியது பெறப்படும்.

பி - ம். 1. கனத்தினன்; சுடர்ந்த; பூ; முலையள்; முலையை, முலையக்.
2. மனத்தினல் கற்பினல்.
4. வனத்துழாய்; கணவற்கு.

84

## பிராட்டி அக்கினிப் பிரவேசஞ் செய்ய, அவளுடைய கற்புத் தீயினல் அனற் கடவுள் வேதல்

3977. நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்ததன் கோயிலே யெய்து வாளெனப்
பாய்ந்தனள் பாய்தலும் பாலின் பஞ்செனத்
தீந்ததவ் வெரியவள் கற்பின் தீயினல்.

நீந்த அரு - நீந்த இயலாத, புனல் இடை - நீரில், நிவந்த - உயர்ந்து எழுந்த, தாமரை - செந்தாமரை மலராகிய, ஏய்ந்த - பொருந்திய, தன கோயிலே எய்துவாள் என - தனது இருக்கையையே சென்று அடைபவள் போன்று (அந்த எரியில் பிராட்டி), பாய்ந்தனள் - விரைந்து புகுந்தாள்; பாய்தலும் - (அவ்வாறு அவள்) பாய்ந்த அளவிலே, அவ் எரி - அந்தத் தீயானது, அவள்

கற்பின் தீயினல் - அப் பிராட்டினுடைய கற்பாகிய நெருப்பினல், பாலின் பஞ்சு என - வெண்ணிறமுள்ள (தூய்மையான) பஞ்சு போன்று, தீந்தது - எரிந்திட்டது.

தீந்த அரு என்பது அகர ஈறு தொக்கது. பஞ்சு தீயின் எரிந்தது போன்று, அக்கினியானது பிராட்டியின் கற்புத் தீயால் வெந்தது எனப்பட்டது. செந் தீ-செந்தாமரைக்குச் செந்நிறத்தால் உவமை. சீதாதேவி அங்கியிற் புக்கது, அவள் தனக்குச் சொந்த இருக்கையான தாமரை மலரில் இனிதாகப் புக்கது போன்றது என்ருர். கோயில் - திருமகள் உறைவிடம் ஆன தாமரை. (ஒப்பு) : 'தாமரை வனத்திடைத் தாவுமன்னம் போல், தூமவெங் காட் டெரித் தொடர்கின்ருடனே' (ஆரணிய. 820); என்று முன் வந்தது காண்க. காட்டுத் தீக்குத் தாமரை மலர் உவமையாதல் உண்டு; 'அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ வெள்ளந் தீப்பட்ட தென வெரீஇ' (110) என்ற முத்தொள்ளாயிரப் பாடலே இங்கு ஒப்பு நோக்குக. இனி இங்குக் கற்பினைத் தீயென்றது போன்றே மன்னர் வெகுளியை வெந்தீயெனக் கூறினர் திருத்தக்க தேவர்; (சீவக. 1117); 'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி' (குறள். 306); என்றதும் ஒப்பு நோக்குக. பிராட்டி முன்னர், 'சொல்லினுற் சுடுவேன்' (சுந்தர. 624); என்று கூறியுள்ளமையும் இங்குக் காணத் தகும்.

பி . ம். 2. ஏய்ந்தன ; கோயிலுள்.

3. அனலிற், பாலிற், பறக்கும் பஞ்சென. 85

## அக்கினிதேவன் தவிப்படைந்து பிராட்டியை ஏந்திக் கொண்டு இராமபிரானிடம் ஓலமிடுதல்

3978. அழுந்தினள் நங்கைமற் றங்கை யாற்சுமந்
தெழுந்தன னங்கிவெந் தெரியு மேனியான்
தொழுங்கரத் துணையினன் சுருதி ஞானத்தின்
கொழுந்தினைப் பூசலிட் டரற்றுங் கொள்கையான்.

அழுந்தினள் நங்கை - (இங்ஙனம் மனம்) அழுங்கினவளான பிராட்டியின், அங்கி - கற்புத்தீயால், வெந்து - (உடலும் மனமும்)

வேக்காடெய்தி, எரியும் மேனியான் - எரிகின்ற யாக்கையை யுடையவனான (அக்கினிதேவன்), சுருதி ஞானத்தின் - வேதங்களால் உணரப்பெறும் தத்துவ உணர்ச்சியின், கொழுந்தினை - நுண்ணிய பாகமாகிய இராமபிரானைக் குறித்து (அருள் புரிய வேண்டி), பூசல் இட்டு - பேரொலி செய்து, அரற்றும் கொள்கையான் - உரக்க அழுகின்ற தன்மையை யுடையவனும், தொழும் - கூப்பி இறைஞ்சுகின்ற, கரம் துணையினன் - இரு கைகளை உடையவனுமாகி, அங்கையால் சுமந்து - தனது அழகிய கரங்களில் ஏந்திக்கொண்டு, எழுந்தனன் - எழுந்தான். மற்று : அசை.

அங்கி : அக்கினி என்பதன் தமிழாக்கம்; 'ஐயனுக் கங்கி முன்னர் அங்கையாற் பற்றும் நங்கை, கையென லாயிற் றன்றே கைபுக்க மணியின் காட்சி' (சுந்தர. 1291). சுருதி - கேள்வி எனப் படும் வேதம்; 'சுருதித் தொன்னூல் மாதவத்தோர்' (கிட்கிந்தா. 747); 'சூடுகின்ற துழாய்முடியோன் சுரருடனே முனிவர்களும் சுருதி நான்கும், தேடுகின்ற பதம் சிவப்ப' (வி. பா. கிருட்டினன். 19). கரத்துணை - இணைக்கை; கொழுந்து; 'மண்ணில் வளர்மதிக் கொழுந்தை' (பெரியபு. திருஞான. 728). பூசலிடுதல் : 'பூமருவும் வண்டுமிவை பூசலிடும் ஓதை' (ஆரணிய. 253). அங்கை : அக்கினி தேவற்கு 'சப்தஜிஹ்வா' என்றபடி ஏழு நாக்கும், ஸப்த ஹஸ்தாஸோ அஸ்ய' என்றபடி ஏழு கைகளும் உண்டு என்ப; இங்கு இருகைகள் கூப்பி நிற்க, ஏனைய கரங்கள் பிராட்டியைத் தாங்கின என்று கொள்க.

பி - ம். 1. அழுந்தின ; நங்கையை ; எடுத்து.
2. அங்கம்.
3. துணைக்கரத்தினன்.

86

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

அஞ்சின னஞ்சின னைய வஞ்சினன்
பஞ்சிவர் மெல்லடிப் பதுமத் தாடன்மேல்
விஞ்சிய கோபத்தால் விளையு மீதெலாம்
தஞ்சமோ மறைமுதற் றலைவ வீதென்றான்.

## நீக்குதித்ததனல் பிராட்டியின் மேனி சிறிதும் வாட்டமுருமை

3979. ஊடின சீற்றத்தா லுதித்த வேர்களும்
வாடின வில்லையா லுணர்த்து மாறுண்டோ
பாடிய வண்டொடும் பனித்த தேனொடும்
சூடின மலர்களிர் தோய்த்த போன்றவால்.

ஊடின சீற்றத்தால் - (தனபால் தன் மணவாளன்) மனம் சலித்துக் காட்டிய சினத்தால் எழுந்த வருத்தத்தால், உதித்த வேர்களும் - எழுந்த வேர்வைத் துளிகளும், வாடின இல்லை - உலர வில்லை; உணர்த்தும் மாறு உண்டோ - (இவ்வொரு நிகழ்ச்சியே பிராட்டியின் கற்பினை நன்கு எடுத்துக்காட்டும்); வேறு இதனைத் தெரிவிக்கவேண்டிய வகையும் உள்ளதோ? (எனினும் அன்னார் தன் கற்பின் வன்மையைக் காட்டுவனவற்றையும் மொழிவேன்), சூடின மலர்கள் - (அந்தத் தெய்வமகள் கூந்தலில்) புனைந்த மலர்கள், பாடிய வண்டொடும் - (தம்மிடம் தேன் பருகற்காக அடர்ந்து) இசைபாடி நின்ற வண்டுகளோடும், பனித்த தேனொடும் - இடையருது துளிக்கின்ற தேனொடும்; (தீயிற்பட்ட குறிகள் ஒரு சிறிதுமின்றி), நீர் தோய்த்த போன்ற - தண்ணீரில் தோய்த்து எடுக்கப்பட்டனபோன்று காணப்பட்டன. ஓகாரம்: வினு. ஆல்: அசை.

இராமபிரான் பிராட்டிபாற் கொண்ட சீற்றம், தானுணர்ந்து நின்ற அவன் கற்புநிலையினை உலகத்தார்க்கு அறிவுறுத்த எண்ணியே மேற்கொள்ளப்பட்டதாதலின், அது தாற்காலிகமானதே; இதனை, 'நங்கை மற்றுநின் கற்பினை யுலகுக்கு நாட்ட, வங்கிபுக் கிடென் றுணர்த்தியவது' (யுத்த. 4014) என்ற தயரதன் கூற்ருனும் உணர்க. 'குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி, கணமேயுங் காத்தலரிது' (குறள். 29): என்றது காண்க. இந்த ஊடுதலும் அடுத்துக் கூடுதலில் முடிதல் வேண்டும்: அது முதிர்ந்து துனியாயவழித்துன்பம் பயக்கும். ஊன்றியதன்று என்பான் 'ஊடின சீற்றம்' என்ருர் கவியரசர். பாடிய வண்டு, பனித்த தேன், சூடின மலர்; வடமொழிநடை. இங்கு மணி: 16 : 28-34ல் ஆதிரை தீப்புக்க போது நிகழ்ந்தவை காண்க.

கண்ணீர் : கணீர் எனா நின்றது. இனி, 'ஊடின சீற்றம்' என்பதற்குத் தேவி இராமபிரானிடம் கொண்ட பிணக்கினால் எழுந்த சினம் எனினுமாம்.

பி - ம். 1. ஊறின ; உதிர்ந்த.

2. மாறின, வாடினது ; மற்று.

3. பாடின.

4. மலர்க் ; தோய்ந்த ; போலுமால். 87

இங்கு ஓர் அதிகப்பாடல் :—

கற்பெனும் கனல்சுடக் கலங்கிப் பாவகன்
சொற்பொலி துதியினன் தொழுத கையினன்
விற்பொலி கரத்தொரு வேத நாயகா
அற்புத னேயுனக் கபயம்யா னென்றான்.

அப்பொழுது உலகம் நடுமாற்றம் நீங்க
உயிர்கள் களித்தல்

3980. திரிந்தன வுலகமுஞ் செவ்வ னின்றன
பரிந்தவ ருயிரெலாம் பயந்த விர்ந்தன
அருந்ததி முதலிய மகளி ராடுதல்
புரிந்தனர் நாணமும் பொறையு நீங்கினார்.

திரிந்தன உலகமும் - (பிராட்டி தீப்பாயச் சென்றபோது) நிலைகுலைந்த உலகங்களும், செவ்வன் நின்றன - (இப்பொழுது அத்தன்மை தவிர்ந்து) சரியான நிலையில் நின்றன ; பரிந்தவர் உயிர் எலாம் - இரங்கியேங்கினவர்களின் உயிர்கள் எல்லாம், பயம் தவிர்ந்தன - அச்சம் நீங்கப்பெற்றன ; அருந்ததி முதலிய மகளிர் - அருந்ததி முதலான கற்புடை மாதர்கள், ஆடுதல் புரிந்தனர் - ஆனந்தக் கூத்தாடி, நாணமும் பொறையும் நீங்கினார் - வெட்கமும் அடக்கமும் தவிரப்பெற்றனர்.

திரிந்தன : வினையாலணையும் பெயர். செவ்வன் நின்றன : 'செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற், கொல்கார் குடிப்பிறந்தார்' (நாலடி. 149). கற்பில் தலைசிறந்தவளாதல்பற்றி, 'அருந்ததி முதலிய' எனப்பட்டது. நாணம் பொறை முதலிய மகளிரின்

இயற்கைப் பண்புகளும் சிறிது நெகிழ்ந்தமை உவகை மிகுதியால் என்க.

பி - ம். 1. செவ்வை, செம்மை.

2. பரிந்தன ; பயமும் நிங்கின, பயந்து நீங்கின, பயந்து னீங்கின, பயந்த நிங்கின.

3. மகளிர் யாவரும், மகளிராரொடும்.

4. பொருந்திய நாஞெடும் ; போற்றினர், ஏந்தினர். 88

## அக்கினிதேவன் இராமபிரான்பக்கல் முறையிடுதலும் இராமபிரான் வினவும்

3981. கனிந்துயர் கற்பெனுங் கடவுட் டீயினல்
நினைந்திலை யென்வலி நீக்கி ஞயென
அநிந்தனை யங்கிநீ யயர்வி லென்னையும்
முனிந்தனை யாமென முறையிட் டானரோ.

'நீ நினைந்திலை - நீ (எனது தன்மையை) நினையாமல், கனிந்து உயர் - முற்றி உயர்ந்த, கற்பெனும் கடவுள் தீயினல் - (உன் இல்லாளுடைய) கற்பு என்னும் தெய்வத்தன்மை செறிந்த தீயினல், என் வலி நீக்கிஞய் - என் வன்மையைப் போக்கிஞய்', என - என்றும் ; '(நீ சீதாதேவியைமட்டும் அன்றி), 'அநிந்தனை அயர்வில் என்னையும் - (உன் பக்கல் சிறிதும்) அபசாரப்பட்டு மனம் தளராத என்னையும், முனிந்தனை ஆம் - கோபித்தனை போலும்' என - என்றும், முறையிட்டான் - முறையீடு செய்தான், அங்கி - அக்கினித்தேவன். அரோ : ஈற்றசை.

சாதாரணமான தீ தன்பால் சேர்ந்தாரையே சுடுவது : கற்பெனும் தீ உள்ளத்தாலேயே சுடுவது என்ற வேறுபாடு தோன்றத் 'தெய்வத்தீ' எனப்பட்டது ; (ஒப்பு): 'அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும், வெம்பிச் சுடினும் புறம்சுடும், 'நீருட், குளிப்பினும் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினும் காமம் சுடும்' (நாலடி. 89). எல்லோரையும் எரிக்கவல்ல அங்கிக் கடவுள், பிராட்டியின் கற்புத்தீயால் சுடப்பட்டு முறையிட்டான் என்க.

பி - ம். 1. நியைநீ, தீமைநீ.

2. நினைந்தனை ; என்வயின் ; நீங்கினுய்.

3. அறிந்தனை வழங்கிநி மனத்தினுலெனை, அனந்தனை மயங்கிநி மனத்தினென்னையும், அறிந்தனை யங்கியான் மனத்தினுலென, அறிந்தனை யங்கிநி யயர்கி லென்னையும், அறிந்தனை யங்கிநி யாகி லென்னையும்.

3982. இன்னதோர் காலையி னிராமன் யாரைநீ
என்னைநீ யியம்பிய தெரியுள் தோன்றியிப்
புன்மைசா லொருத்தியைச் சுடாது போற்றினுய்
அன்னதார் சொல்லவீ தறைதி யாலென்ருன்.

இன்னதோர் காலையில் - இவ்வாருக அங்கிக் கடவுள் முறையிடும்போது, இராமன் - இராமபிரான் (அங்கியைப் பார்த்து), 'நீ யாரை - நீ யார்? நீ எரியுள் தோன்றி இயம்பியது என்னை - நீ தீயினிடத்தினின்று வெளிவந்து மொழிந்தது யாது? இபுன்மை சால் ஒருத்தியை - இத்தத் தீய ஒழுக்கம் மிக்க ஒருத்தியான இவளை, சுடாது போற்றினுய் - எரிக்காமல் காப்பாற்றினுய்; அன்னது ஆர் சொல்ல-அத்தன்மை யார் சொல்ல (நிகழ்த்தினுய்); ஈது அறைதி - இந்தக் கேள்விக்கு விடை தா', என்ருன் - என்று பகர்ந்தான். ஆல் : அசை.

யாரை : 'யாரைநீ யென்னையிங் கெய்தக் காரணம்' (சுந்தர. 1115); 'வண்டறை கொன்றையான் முன், வந்து நீயாரை என்ருன்' (திருவிளை. விறகு. 24).

பி - ம். 1. இன்னதே.

2. இயம்புவது.

3. போக்கினுய்.

4. சொல்லுவது ; அறிதி.

90

அங்கிக்கடவுள் மறுமொழி

3983. அங்கியா னென்னையிவ் வன்னை கற்பெனும்
பொங்குவெந் தீச்சுடப் பொறுக்கி லாமையால்
இங்கணைந் தேனுறு மியற்கை நோக்கியும்
சங்கியா நிற்றியோ வெவர்க்குஞ் சான்றுளாய்.

'யான் அங்கி - நான் அக்கினிதேவன்; என்னை - என்னை, இவ் அன்னை - உலகமாதாவாகிய தாயின், கற்பு எனும்-பதிவிரதா தருமமாகிய, பொங்கு - பொங்கியெழும், வெம் தீ சுட - கடுமையான நெருப்பு எரிக்க, பொறுக்கிலாமையால் - (அந்தக் கொதிப்பை நான்) தாங்கமாட்டாமையின, இங்கு அணந்தேன் - இங்கு அடைந்தேன்; எவர்க்கும் சான்றுளாய் - எல்லாருடைய சாட்சியாக உள்ளவனே! உறும் இயற்கை நோக்கியும் - (இவ்வாறு) எனக்கு நேர்ந்த தன்மையைக் கண்டபின்பும்' சங்கியா நிற்றியோ - இத்தேவியின் ஒழுக்கத்தைக் குறித்து நீ ஐயுறுகின்றனையோ?.

அன்னை - உலகமாதா. சான்றுளாய் - எல்லாக் காரியங்கட்கும் சான்றாக உள்ளவனே! 'யார்க்கும் சான்றென நின்றவீரன், தான்வந்து வீடுதந்தான்' (கிட்கிந்தா. 375). நீயேகற்பிற்கொரு சான்று நினக்கே தெரியுங் கற்பதனிற் றாயே னென்னிற் றெழுகின்றேன் எரியே யவனைச் சுடலென்றாள் (சுந்தர. 1169) என்பது இங்குக் காண்க.

பி - ம். 1. இணைவிலா, இணையிலரள்; அணையின்.
2. தீச்சுடவது.
3. எனதியற்கை நோக்கியும், என்றிறத்தை பொண்ணியும்.
4. சங்கையாய் நிற்றியோ. 91

3984. வேட்பது மங்கையர் விலங்கி னரெனில்
கேட்பதும் பல்பொருட் கையங் கேடற
மீட்பது மென்வயி னென்னு மெய்ப்பொருள்
வாட்பெருந் தோளினய் மறைகள் சொல்லுமால்.

'வாள் பெரு தோளினய் - வாட் பயிற்சியில் தேர்ந்த பருத்துயர்ந்த புயங்களை யுடையவனே! வேட்பதும் - குல மடந்தையர்களைத் திருமணம் புரிந்து கொள்வதும், மங்கையர் விலங்கினர் எனில் - அந்த மாதர்கள் இல்லற நெறியினின்று நீங்கினர் என்று எவராலும் குறை கூறப்படுவராயின், கேட்பதும் - அவர்களை விசாரிப்பதும், (மேலும்) 'பல்பொருட்கு - பல விடயங்கட்கு, ஐயம் கேடு அற - சந்தேகமோ பிழையோ இல்லாதவாறு, மீட்பதும் - சங்கையை ஒழிவதும், (ஆன இவையனைத்தும்) என் வயின் - என்னிடத்திலேயே (நிகழக் கூடியன), என்னும் - என்கின்ற, மெய்

பொருள் - உண்மைப் பொருளை, மறைகள் சொல்லும் - வேதங்கள் கூறு நிற்கும். ஆல் : அசை.

வேட்டல் - அக்கினி சான்றாக ஒருவன் ஒருத்தியை விவாகம் புரிதல். திருமணத்தைத் தீவேள்வி என்னும் வழக்குக் காண்க. விலங்குதல் - நெறி தவறுதல். கேட்டது - உண்மை பொய்களை கேட்டறிதல். மீட்பது - சங்கை தவிர்தல். ஐயம் கேடற மீட்பது - பலவகையான கொடுந் தண்டனைகளுக்குள்ளாக்கி நெறி தவறினர் இல்லை என்று தெளிவது. இது எந்த நாட்டிலும் உள்ள ஒரு பிரபல பண்டைக்கால வழக்கு. தீயில் இறங்கச் சொல்லுதல், நெய்க் குடத்திற் கையிடச் செய்தல். பாம்புறையும் குடத்துக் கைவிடுதல், முதலியன காண்க. இத் தண்டனைகளி னின்று உயிர் மீளப்பெறின் அன்னர் குற்றமில்லாதவர் என்று கொள்வது ; இம் முறைகளை ஆங்கிலம் வல்லார் (ordeal) என்பர் மறைகள் - வேதத்தில் பிராயச்சித்த காண்டத்தில் கூறப்படும் முறைகள். இந்த அரிய முறைகளை ஆளுடைய பிள்ளையாரும் சமணர்களும் கூடலில் இயற்றிய அனல் வாதம் புனல்வாதம் கொண்டும் உணர்க.

பி - ம். 1. மங்கையை.
2. கேட்பது.
3. மேன்மையின்.
4. வாட்பொரு ; கூறுமால்.



3985. ஐயுறு பொருள்களை யாசின் மாசொரீஇக்
கையுறு நெல்லியின் கனியிற் காட்டுமென்
மெய்யுறு கட்டுரை கேட்டு மீட்டியோ
பொய்யுரு மாருதி யுரையும் போற்றலாய்.

'பொய் உரு மாருதி உரையும் போற்றலாய் - பொய்ம்மை சிறிதும் அணுகப் பெறாத அநுமனுடைய சொற்களையும் (ஏற்றுப்) பிராட்டியைக் கைக்கொள்ளாத நீ, ஐயுறு பொருள்களை - சந்தேகப் படுதற்கமைந்த பொருள்களின் உண்மை நிலையை, ஆசில் - விரைவாக, மாசு ஒரீஇ - (ஐயமாகிய) குற்றம் களைந்து, கைஉறு - உள்ளங் கையிற் பொருந்திய, நெல்லியின் கனியில் - நெல்லிக் கனியைப் போன்று, காட்டும் - விளக்கும் தன்மை பெற்ற, என் மெய் உறு

கட்டுரை - எனது சத்தியமான உறுதி மொழியை, கேட்டும் - செவி யேற்றுயினும், மீட்டியோ - (அந்த தேவியைத்) திரும்பவும் கூட்டிக் கொள்வாயோ? ஓ: வினு.

ஆசு - விரைவு. தங்கு தடையின்றிக் காளமேகப் புலவர் போன்று விரைவிற் பாடலியற்றுவோனை ஆசு கவி எனக் கூறுதல் காண்க. இனி மாசு ஆசின் ஒரீஇ என மொழி மாற்றி. ஐயம் முதலியவற்றை அறவே நீக்கி எனினுமாம். மாசொரீஇ - அளபெடை செய்யுளிசை நிறைக்க வந்தது. கையுறு நெல்லியங் கனி - இது ஆசிரியரால் பல இடங்களிலும் உவமையாக்கப் பட்டுளளது. சுந்தர. 513, 676; பால. திருவவ. 121; பொய்யுரு மாருதி; 'மெய்ம்மை பூண்டான்' (சுந்தர. 62); 'மெய்ம்மையின் வேலி' (கிட்கிந்தா. 68).

பி - ம். 1. ஐயறு.

2. நெல்லியங்; காட்டுவேன்.

3. கேட்டு மீட்டியால்.

4. பொய்யுறும்; பொய்யறு; போக்குமோ. 93

3986. தேவரு முனிவரு திரிவ நிற்பவும்
மூவகை யுலகமுங் கண்கண் மோதிநின்
ருவெனல் கேட்கிலை யறத்தை நீக்கிவே
றேவமென் ருருபொருள் யாண்டுக் கொண்டியோ.

'தேவரும் - அமரரும், முனிவரும் - இருடிபுங்கவரும், திரிவ நிற்பவும் - அலைந்து கொண்டிருப்பனவான ஏனைய உயிர்களும், மூவகை உலகமும் - மூன்று புவனங்களில் வதிவனவும், (சீதா தேவி தீப்புக்க போது அதைக்கண்டு மனம் பொருமல் தத்தம்) கண்கள் மோதி நின்று - விழிகளைக் கைகளால் அடித்துக் கொண்டு, ஆ எனல் கேட்கிலை - ஆவென்று வாய் விட்டரற்றி யதை நீ கேட்கவில்லை போலும்; அறத்தை நீக்கி- அற நெறியைக் கைவிட்டு, வேறு - அதற்கு நேர்மாருன, ஏவம் என்று ஒரு பொருள் - பாவமாகிய ஒரு பொருளை, யாண்டு கொண்டியோ - எங் கிருந்து ஏற்றனையோ? ஆ: இரக்கக் குறிப்பு.

கண்களைக் கைக்கொண்டு மோதுதல் - அவலத்தின் மெய்ப்பாடுகளுள் ஒன்று. ஏவம் - குற்றம். 'ஏவம் பாரா யினமுறை நோக்காய்' (அயோத்தி. கைகேசி. 38); 'ஏவமு மென்பவை மண்ணுல கான்பவ ரெண்ணுரோ' (அயோத்தி. கங்கை காண். 17); ஏவம் என்பது எவ்வம் என்றதன் விகாரம் என்பர் சிலர். ஆவெனல் - வாய்விட்டழுதல்; 'ஆவென்ற வாய்கிழிப்பேன் விடுத்தேதன்வளர்த்தாரை கொண்டே' (நளிப்பா.) யாண்டு - எவ்விடத்து.

பி - ம். 1. திரிய, தெரிய, திரி.

3. ஆவென ; நீக்கவே.

3. எங்ஙன் ; கண்டியோ, காண்டியால். 94

3987. பெய்யுமே மழைபுவி பிளப்ப தன்றியே
செய்யுமே பொறையறம் நெறியிற் செல்லுமே
உய்யுமே யுலகிவ ளுணர்வு சீறினல்
வையுமேல் மலர்மிசை யயனு மாயுமே.

'(சாலச் சிறந்த கற்பினளாகிய) இவள் - இப் பிராட்டி, உணர்வு சீறினல் - உள்ளத்தாற் சினந்தால், மழை பெய்யுமே - மேகம் மழை பொழியுமா? புவி பிளப்பது அன்றி - பூமியானது (உயிர்களை) விழுங்குமாறு பிளந்துடைவதன்றி, பொறை செய்யுமே - எல்லாப் பாரங்களையும் தாங்கி நிலைபெறுமோ? அறம் நெறியில் செல்லுமே - தருமம் மேன்மையாக நடைபெறுமா? உலகு உய்யுமே - உலகம் பிழைக்குமா. வையுமேல் - (இவள் வெகுண்டு) சாபமிடுவாளேல், மலர்மிசை அயனும் மாயுமே - தாமரை மலரின்மீது உறையும் பிரமனும் இறந்திடுவன் அன்றே?' என்று அங்கிக் கடவுள் கூறி முடித்தான். ஏகாரங்கள் எதிர்மறைப் பொருளை உணர்த்தின.

பெய்யுமே, செய்யுமே, உய்யுமே என்ற வினை முற்றுக்களை முன்னிறுத்தியது கூறியவற்றின் வன்மையை விளக்க என்க. இச் செய்யுளுடன்; 'தீண்டிலனென்னும்' (சுந்தர. 1277) என்று தொடங்கும் செய்யுளை ஒப்பு நோக்குக. மாய்தல் - இறத்தல். 'மாய்ந்தவர் மாய்ந்தவரல்லர்' (பால. வேள்வி. 30); 'வைதவைவின்' (பால. கடவுள். 5).

பி-ம். 1. மெய்யுமே.

2. செல்லுமோ.

3. உலகில் வாழ் ; உணர்விற் சிறியே.

4. வையமேல், வையுமே ; மலரய னுலகுமாயுமால். 95

இங்கு அதிகப் பாடல்கள் :—

இன்னுமென் ஐயகேள் இசைப்பென் மெய்யுனக்
கன்னவை மனக்கொளக் கருது மாகையால்
முன்னைவா னவர்துயர் முடிக்கு றும்பொருட்
டன்னையென் னகத்தினுள் அருவ மாயினர். 1

யான்புரி மாயையின் சனகி யென்றுணர்ந்
தான்கவர் அரக்கனம் மாயை யென்சுடர்க்
கான்புகக் கரந்ததிக் கமல நாயகி
தான்புரி தவத்துனைத் தழுவ வுற்றுளாள். 2

## அங்கிக் கடவுள் பிராட்டியை இராமனருகிற் கொணர்தல்

3988. பாடுறு பன்மொழி யினைய பன்னிநின்
றாடுறு தேவரோ டுலக மார்த்தெழச்
சூடுறு மேனிய வலரி தோகையை
மாடுறக் கொணர்ந்தனன் வள்ளல் கூறுவான்.

சூடு உறு மேனி அவ் அலரி - தாபம் மிக்க உடலையுடைய அந்த அங்கிக் கடவுள், இனைய - இப்பெற்றி வாய்ந்ததும், பாடு உறு - பெருமை மிக்கதுமான, பல்மொழி - பல வார்த்தைகளை, பன்னி நின்று - பகர்ந்து நின்று, (சீதாதேவியின் கற்பு மேம்பாட்டைக் கண்ணுற்ற மகிழ்ச்சியால்) ஆடுறு தேவரோடு - ஆடல் புரிந்து நின்ற அமரருடன், உலகம் ஆர்த்து எழ - ஏனைய உலகத்துயிர்களும் ஆரவாரித்து எழ, தோகையை - மயில் போன்ற சாயலையுடைய பிராட்டியை, மாடு உற - பெருமான் அருகில் பொருந்த, கொணர்ந்தனன் - அழைத்து வந்தான்; (அப்பொழுது) வள்ளல் - இராமபிரான், கூறுவான் - (பின் வருமாறு) பகர்ந்தான், இராமன் கூறியதை அடுத்த செய்யுளில் காண்க.

பாடு - பெருமை. 'பாடுறு பெரும்புகழ்ப் பரதன்' (மீட்சி. 332) உலகம் - இடவாகு பெயர். அலரி - சூரியன். இங்கு இலக்கணையால் அங்கிக் கடவுள். தோகை - பிராட்டிக்கு உவமவாகு பெயர். மாடு - பக்கம். 'ஊர்தரு குரங்கின் மாடே' (கிட்கிந்தா. 309).

பி - ம். 1. பணி மொழி ; யனையா.
2. உலகமார்ப்புற.
3. மேனியன் வணங்கி, மேனியபவங்கி. 96

இங்கு அதிகப் பாடல் :—

மிருத்த மூன்றரைக் கோடியில் மெய்யரைக் கோடி
யுகத்தி னெல்லையு மிராவணன் ஏவல் செய்துளதெம்
அகத்தின் நோயறுத் தருந்துயர் களைந்தெமக் கூழியாச்
சுகத்தை நல்கிய சுருதிநா யகனெனத் தொழுதார்.

## அப்பொழுது இராமன் ஏற்றுக் கூறிய வார்த்தை

3989. அழிப்பில சான்றுநீ யுலகுக் காதலால்
இழிப்பில சொல்லிநீ யிவளை யாதுமோர்
பழிப்பில ளென்றனை பழியு மின்றினிக்
கழிப்பில ளென்றனன் கருணை யுள்ளத்தான்.

கருணை உள்ளத்தான் - அருளொடு கூடிய நெஞ்சினன் ஆன இராமபிரான், 'நீ உலகுக்கு அழிப்பில சான்று - நீ உலகத்துச் சீவராசிகட்கெல்லாம், (நெறி பிறழாத) சாட்சியாவாய் ; ஆதலால் - ஆதலின், இழிப்பு இல - இகழ்தற்கு இடமில்லாத, சொல்லி - உயர்ந்த மொழிகளைக் கூறி, நீ இவளை - நீ இந்தச் சீதாதேவியை, யாதும் ஓர் பழிப்பிலள் - எந்தவிதமான குற்றமுமில்லாதவள், என்றனை - என்று பகர்ந்தாய் ; பழியும் இன்று - எனவே (இவளிடம் எவ்வகைப்) பழியும் இல்லை ; இனி கழிப்பிலள் - இனி (இவள்) நீக்கத்தக்கவள் அல்லள்', என்றனன் - என்று கூறினன்.

அழிப்பில சான்று : 'நீயே கற்புக்கொரு சான்று நிற்கே தெரியுங் கற்பதனில், தாயே னென்னிற் றொழுகின்றேன் எரியே' (சுந்தர. 1169) என்பது பிராட்டி கூற்று. அநுமன் வாலில் அரக்கர்

தீயிட்டபோது கூறியது. மற்றும், 'ஆதவனுந் தண்மதியு மங்கி வளிதோய மனம், மேதினியா காயமொடு மேதியனும், ஓதிர வும், துன்றுபகல் சந்தித் துணையு மறமதுவும், நின்றுணரு மக்கட் செய்தி' (தனிப்பா.) என்றபடி மக்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை அன்றாடம் நிலையாக உணரும் பதினான்கு சாட்சிகளில் அக்கினி ஒன்றாதல் காண்க. கருணை உள்ளத்தான் ஆகலின், 'இனிக் கழிப்பிலள்' என்று உறுதி கூறினான்.

பி-ம். 2. சொல்லி வந்து.

3. என்றெனை யமரரங்கினி. 97

சில பிரதிகளில் சீதாபிராட்டி திருவடி தொழுத படலம் அல்லது பிராட்டி திருவடி தொழுத படலம் முடிய, அதன்மேல் 'இன்று சென்று' என்ற செய்யுள் வரையில் கடவுள் காட்சிப் படலம் என்றுள்ளது.

### வேறு

### அவ்வமயம் இராமபிரானுக்கு அவனது உண்மை வடிவினை உணர்த்தும்படி பிரமனை வேண்ட, அவன் உணர்த்துதல்

3990. உணர்த்து வாயுண்மை யொழிவின்று
காலம்வந் துளதால்
புணர்த்து மாயையிற் பொதுவுற
நின்றவை யுணரா
இணர்த்து ழாய்த்தொங்க லிராமற்கென்
றிமையவ ரிசைப்பத்
தணப்பில் தாமரைச் சதுமுக
னுரைசெயச் சமைந்தான்.

'புணர்த்தும் மாயையில் - (தானே தனதிச்சையால்) தோற்று விக்கும் மாயைக்கண், பொது உற நின்று - ஏனைய உயிர்களை ஒப்பப் (பரமான்மாவாகிய தானும்) இருந்து, அவை - அந் நிகழ்ச்சி களை, உணரா - தெளியாதவன் போலுள்ள, இணர் துழாய் தொங்

கல் - பூங்கொத்துக்களை யுடைய திருத்துளவ மாலையைப் புனைந்த, இராமற்கு - இராமபிரானுக்கு, காலம் வந்துளதால் - ஏற்ற காலம் வந்து பொருந்தியதாதலால், உண்மை ஒழிவின்று உணர்த்துவாய் - உண்மை நிலையைத் தவறாமல் அறிவிப்பாய்', என்று - என்று இமையவர் இசைப்ப - தேவர்கள் கூற, தணப்பில் தாமரை - திருமாலின் நாபிக் கமலத்தினின்று அகலாத, சதுமுகன் - பிரமன், உரை செய சமைந்தான் - (பெருமானுடைய உண்மை வடிவங்களைச்) சொல்லத் தொடங்கினான். சொல்லியதை அடுத்து வரும் பதினான்கு செய்யுட்களிற் காண்க.

திருமாலின் அமிசமான இராமபிரான் தான் கொண்ட நர வடிவுக்கேற்ப, மாயையுக் குழல் பவனாய், மீட்ட மனைவியிடம் சங்கை கொண்டது போன்று நடித்துக் காட்டுதலின், அவனுக்கு அவன் தானான தன்மையில் உள்ள உண்மை நிலைகளை உணர்த்த வேண்டிப் பிரமதேவன் இங்ஙனம் கூறினன் என்க. பொதுவுற - சீவான்மாவிற்கும் பரமான்மாவிற்கும் யாதொரு பேதமும் தோன்றுதபடி என்க. தணத்தல் - பிரிதல்; 'தணப்பிலாக் கன்னிமுகங் கருக' (திருவானை. உலா. 116).

பி - ம். 2. புணர்ந்த; பொதுவற; நின்றவ; புணரா, புராணன், புராண.

3. இராமனென்று;



இங்கு பிராட்டி திருவடி தொழுத படலம் முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது.

3991. மன்னர் தொல்குலத் தவரினத்
துணையொரு மனிதன்
என்ன வுன்னலை யுன்னை நீ
யிராமகே ளிதனைச்
சொன்ன நான்மறை முடிவினிற்
றுணிந்தமெய்த் துணிவு
நின்ன லாதில்லை நின்னின்வே
றுளதிலை நெடியோய்.

'இராம - இராமபிரானே, நெடியோய் - பெரியோய், உன்னை - உன்னை, தொல் குலத்தவர் மன்னர் இனம் துணை ஒரு மனிதன்

என்ன - பழமையான சூரிய குலத்தவரான மன்னருடைய வர்க்கத்தில் உதித்த ஒரு மனிதன் என்று மாத்திரம், உன்னலை - கருதி விடாதே; நீ இதனை கேள் - (யான் சொல்லப்புகும்) இச் செய்தியை நீ செவியேற்பாயாக; சொன்ன நால்மறை - புகழ்ந்து பாராட்டப் பெறுகின்ற நான்கு வேதங்களின், முடிவினில்-முடிவில் (வேதாந்தத்தில்), துணிந்த மெய் துணிவு - சித்தாந்தம் செய்யப் பெற்ற உண்மையான தத்துவம், நின் அலாது இல்லை - உன்னை அன்றி வேறு இல்லை, நின்னின் வேறு உளது இலை - நின்னை யல்லாது என்றும் நிலைத்து நிற்கும் வேறு பொருள் இல்லை.

தொல் குலம் என்று சூரிய குலத்தினையும், இராமன் என்று அவன் திருநாமத்தையும், அவன் தயரதன் மகனாகத் தோன்றியதையும் குறித்துப் பின்னர் இவர்கட்கெல்லாம் மேம்பட்ட ஓர் தெய்வீக நிலையும் அப்பிராற்குண்டு என அறிவிக்கின்றான் பிரமன். 'அவஜானந்தி மாமூடாகா, மானுஷீந் தனுமாசிரதாகா' (பகவற் கீதை. அத். 9:11) என்று மக்கள் அவன் உண்மை நிலையை அறியாம லிருத்தல் கூடும்; இங்குப் பிரானே தன்னைத்தான் அறியாதவன் போன்று நடிக்கின்றான். 'ஆத்மானம்மானுஷம் மன்யே, இராகவம் தசரதாத் மஜம்' என்று இராமபிரானே கூறியதாக முதனூல் கூறும். 'சொன்ன நான்மறை முடிவு' 'சொன்ன நால்வகைச் சுருதியோ' (வி. பா. கிருட்டினன். 80); நான்மறை முடிவு-வேதாந் தம். துணிந்த மெய்த் துணிவு; 'மறைகளு முனிவர் யாரு மலர்மிசைய யனு மற்றைத், துறைகளின் முடிவும் சொல்லும் துணிபொரு டுணிவிற்றூக்கி, அறைகழ லிராமனாகி யறநெறி நிறுத்த வந்த விறை' (கிட்கிந்தா. 360) எனறு வாலி கூறுதல் காண்க. 'மூலமு நடுவுமீறும்' (சுந்தர. 1122) என்று தொடங்கும் செய்யுளும் இங்குக் காணத்தகும். 'முத்தேவரின் மூலமுதற் பொருளாமத் தேவரிம் மானுடர்' (ஆரணிய. 904) என்பது பிராட்டி கூற்று. 'நின்னலா தில்லை நின்னின் வேறுளதிலை' என்று அநுவதித்தது வற்புறுத் தற்பொருட்டு; 'எல்லாப் பொருளு மிதிலுளவாலிதி லில்லாத வெப் பொருளுமில்லையால்' என்ற இடத்துப் போல என்க,

பி - ம். 1. குலத்தவதரித்தனை, குலத்தவரினத்துனை, குலத்தவ ரினத்துளன்.

2. உன்னினை; இன்னமுமிறைவ; துணிவினிற்; துணிபெருந் துணிவு, துணிந்தவெத் துணிவும்.

4. ஆகிலும்; பழையது, வேறுன்னிலை, வேறுள்ளன, வேறுலகமும். 99

இங்கு தசரதக் காட்சிப் படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில் உள்ளது.

3992. பகுதி யென்றுள தியாதினும் பழையது பயந்த
விகுதி யால்வந்த வினைவுமற் றதற்குமேல் நின்ற
புகுதி யாவர்க்கு மரியவப் புருடனு நீயிம்
மிகுதி யுன்பெரு மாயையி னுல்வந்த வீக்கம்.

'யாதினும் பழையது - எப்பொருளினும் புராதனமான, பகுதி என்று உளது-மூலப் பிரகிருதி என்று உள்ள தத்துவமும், பயந்த-(அந்தப் மூலப் பிரகிருதி) தந்த, விகுதியால் வந்த - விகாரத்தால் எழுந்த, வினைவும் - காரியங்களாகிய தத்துவங்களும், மற்று - பின்னும், அதற்குமேல் நின்ற - அந்தத் தத்துவப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் மேலாய் நின்றவனும், யாவர்க்கும் புகுதி அரிய - எவர்க்கும் ஓர்ந்து உணர்தற்கு அரியவனுமான, அ புருடனும் - அந்தச் சீவான்மாவாகிய புருடதத்துவமும் (ஆன எப் பொருள் களும்) நீ - நீயாவாய்; இம் மிகுதி - இந்தப் பரந்து காணப்படுகின்ற இந்த உலகக் காட்சி யனைத்தும், உன் பெரு மாயையினுல் வந்த வீக்கம் - உனது பிரமாண்டமான மாயையாகிய சங்கற்பத்தால் தோற்றிய பரப்பாகும்.

பிரகிருதி விகிர்தி என்ற சொற்கள் பகுதி விகுதி என விகாரப் பட்டன. பகுதி - மூலப் பிரகிருதி. இந்தப் பிரகிருதித் தத்துவங் கள் 24 என்ப; அவை: சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து தன் மாத்திரைகளும், மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும், வாக்குபாணி பாதம் பாயுரு உபத்தம் என்னும் ஐந்து கன்மேந்திரியங்களும், நிலம் நீர் தீ வளி விசும்பு என்னும் ஐம்பெரும் பூதங்களும், மகத் அகங்காரம் மனம் பிரகிருதி என்னும் நான்கும் ஆம். 25-வது தத்துவம் ஆன்மா; 26-வது தத்துவம் பரமான்மா; பரமான்மாவும் சீவான்மாவும் என்றும் நித்தியப் பொருள்கள். உயிர்கள் தத்தம் வினைக்கீடாக உலகிற் பிறந்து துய்த்து முடிவில் முக்தியடைய வேண்டுதலின் பரமான்மா வினது சங்கற்பத்தால் மூலப் பிரகிருதியினின்று மகத்தத்துவமும், அதினின்று அகங்காரமும், அதினின்று சத்தமும், சத்தத்தி னின்று ஆகாசமும், ஆகாயத்தினின்று ஊறும், ஊற்றினின்று காற்றும், காற்றினின்று ஒளியும், ஒளியினின்று அங்கியும், அங்கி

யினின்று ரஸமும், ரஸத்தினின்று புனலும், புனலினின்று மணமும், மணத்தினின்று பூமியும் தோன்றின என்று கூறும். மேற்கூறிய தத்துவங்கள் எல்லாம் இறைவன் திருவுருவே. ஆகலின், 'அவைகள் எல்லாம் நீ' எனப்பட்டது. சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என்று கூறப்படுவனவற்றுள் சுத்த மாயா மயமாகிச்சித்தாக நிற்றலின், சிவான்மாவை அத் தத்துவங்களுக்கு மேல் நின்ற எனப்பட்டது. புகுதி - புகுந் தறிவது. மற்றும் இச் செய்யுட்கண் கூறப்பட்டனவற்றை, யுத்த. 187 - 207 வரை உள்ள செய்யுட்களின் விரிவுரையால் அறிக. தத்துவாதீதன் என்றும், தத்துவங்களின் மேல் நிற்பவன் என்றும் இறைவன் புகழப்படுவன்; 'போகமாய் விரிந்தும் போகியா யிருந்தும் புலன்கள் வழிமலம் செலுத்தா யோகியா யிருந்தும், யோகிகள் முதலா முரைப்பரு பரம் பொருளா யும், ஏகமாய் நின்ற தத்துவ மறைக்கும் எட்டுதற்கரிய தன் வடிவு' (வி. பா. அருச்சுனன் தவ. 78) என்றும், 'பேணு தத்துவங்க ளென்னும் பெருகுசோ பானமேறி, யாணையாஞ்சிவம்' (பெரியபு. கண்ணப்ப. 105) என்றும் வந்துள்ளமை காண்க.

பி - ம். 2. மிகுதியால்; விளம்பும்.

3. யாவதும்; புகலும், நீயோ, நீயும், நீயாம்.

4. விருதியாவு நின் மாயையபினுல் வந்த; தகுதியுள் பெரு மாயையினுல் தந்த. 100

3993. முன்பு பின்பிரு புடையெனுங்
குணிப்பரு முறைமைத்
தன்பெ ருந்தன்மை தாந்தெரி
மறைகளின் தலைகள்
மன்பெ ரும்பர மார்த்தமென்
றுரைக்கின்ற மாற்றம்
அன்ப நின்னையல் லான்மற்றிங்
கியாரையு மறையா.

'அன்ப - சகல சீவராசிகளிடத்தும் அன்பு பூண்டவனே! முன்பு - ஆதித் தோற்றமும், பின்பு - அந்தமாகிய நிலையும் ஆகிய, இரு புடை எனும் - இரண்டு பக்கங்கள் என்று கூறப்படுகின்ற, குணிப்பு அரு முறைமை - கணக்கிடற்கரிய முறைமைப்பாட்டினை

யுடைய, தம் பெரு தன்மை - தமது பெருந் தகைமையை (ப் பிறர் உணர முடியாமல்), தாம் தெரி மறைகளின் - தாமே அறிவனவான வேதங்களின், தலைகள் - சிரசுகள், (உபநிடதங்கள்), மன் பெருபர மார்த்தம் என்று - மிகவும் உயர்ந்த பரம்பொருளென்று உரைக்கின்ற மாற்றம் - கூறுகின்ற சொல், நின்னை அல்லால், உன்னை உணர்த்துமேயன்றி, இங்கு வநதுள்ள (யானும் சிவனும் இந்திரனும் முதலிய) இங்கு யாரையும் அறையா - பிற தேவர்களுள் எவரையும் உணர்த்தமாட்டா. மற்று : வினைமாற்று.

இங்குத் திருமாலின் அமிசமான இராமபிரானுக்குப் பரத்வம் கூறினர் ஆசிரியர். வேதம் கடவுள் போன்று அழிவற்றது, நித்தியமானது, ஒருவரால் தோற்றுவிக்கப் பெருதது. பெருந்தன்மை வாய்ந்தது, இருக்கு முதலாகப் பலதிறப்படுவது, என்ப ஆதலின், முன்பு பின்பிருபுடையெனும குணிப்பரு முறைமைத், தன் பெருந் தன்மைதாந் தெரி மறைகள் எனப்பட்டன. மறைகளின் தலை - உபநிடதங்கள் ; அத்தகைய நான் மறைகளும் உன்னையே பரம் பொருள் என்று கூறுமன்றிப் பிற தெய்வங்களைக் கூரு என்று சொல்லப்பட்டது. இங்கு "வேதத்தானு நல் வேள்வியினானும்" (யுத்த. 159) என்ற செய்யுளும் அதன் உரையும் காண்க. பரமார்த்தம் - உண்மைப் பொருள் (சாகுந்தலம்).

பி - ம். 1. பின்பிடை, பின்பின ; முறைய.

2. நெரியா மறைகளின்ற, தெரிய மறைகளின்றலைய, தெரியா மறைத் தலைய, தெரி மறைகளின் தலைகொள்.

3. பேர் மாயை, பரமாற்பன், பரமாற்பம், பரமார்த்தன்.

4. அன்பு, அன்பின் ; இன்ருரையும், இங்காரையும்.

101

3994. எனக்கு மெண்வகை யொருவற்கு மிமையவர்க் கிறைவன்
தனக்கும் பல்பெரு முனிவர்க்கு முயிருடன் தழீஇய
அனைத்தி னுக்குநீ யேபர மென்பதை யறிந்தார்
வினைத்து வக்குடை வீட்டருந் தளைநின்று மீள்வார்.

' எனக்கும் - (பிரமனாகிய) எனக்கும், எண்வகை ஒருவற்கும் - எட்டு வடிவினையுடைய ஒப்பற்ற சிவபெருமானுக்கும், இமையவர்க்கு இறைவன் தனக்கும் - தேவர்கட்கு அரசனான இந்திரனுக்கும், பல்பெரு முனிவர்க்கும் - பலவாகிய பெருமைசான்ற இருடிகளுக்

கும், உயிருடன் தழீஇய அனைத்தினுக்கும் - உயிருடன் இயைந்த எல்லாப் பொருள்களுக்கும், 'நீயே பரம் - நீயே பரம்பொருள்', என்பதை - என்ற நுட்பத்தை, அறிந்தார் - உணர்ந்தவர்கள், வினை துவக்கு உடை - இருவினைகளின் பிணிப்பினை யுடையதும், வீட்ட அரும் - விடுதற்கு அரியதுமான, தளை நின்று மீள்வார் - பாசக்கட்டினின்று விடுதலையடைந்து மீளாக்கதியினை அடைவர்.

இங்கும் திருமாலின் பரத்வம் உபதேசிக்கப்பெற்றது. எண் வகை ஒருவன் - அட்டமூர்த்தியாகிய சிவபெருமான்; 'கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான், தாளை வணங்காத் தலை' (குறள். 9); 'அட்டமூர்த்தி தாள்பணியு மாற்றலான்' (கிட்கிந்தா. 117); 'அட்டமூர்த்தி யாகிய வப்பர்' (தேவா. 842 : 3); 'எனக்கு நான்முகத் தொருவற்கும்' (யுத்த. 162) என்ற செய்யுளை யும் காண்க. எண்குணம்: நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும் கதிர்மதியும் இயமானனும் என்ப. சேதனு சேதனங்கள் அனைத்துக்கும் இறைவன் என்னும் சிறப்புப்பற்றி, 'உயிருடன் தழீஇய அனைத்தினுக்கும்' எனப்பட்டது. வினை - நல்வினை, தீவினை; 'ஆகாமியம் சஞ்சிதம் பிராரத்தம்' எனினு மாம். வீட்டரும் தளை - எளிதில் தவிர்க்க முடியாத பாசத்தளை.

பி - ம். 1. எண்வகை மூர்த்திக்கும், எண்வகை யுருவற்கும், எண்களாய் மூர்த் திக்கும்.
2. பல்வகை; உடற்றழீஇய.
3. பரன்; அறியார்.
4. துடக்குடை, துடக்கிடை; சுட்டிருந்; விடுவார். 102

3995. என்னைத் நான்முத லாகிய வுருவங்க ளெவையும்
முன்னைத் தாய்தந்தை யெனும்பெரு மாயையின் மூழ்கித்
தன்னைத் தானறி யாமையிற் சலிப்பவச் சலந்தீர்ந்
துன்னைத் தாதையென் றுணர்குவ முத்திவித் தொழிந்த.

'என்னை முதலாகிய - என்னை ஆதியாகவுடைய, உருவங்கள் எவையும் - உயிர்களிற் பலவும், முன்னை - (தோற்றத்திற்கு) ஏது வான, தாய் தந்தை எனும் - தாயும் தந்தையும் என்கின்ற (பந்துக்

களிடத்துப் பற்றுகிய), மாயையில் மூழ்கி - மாயாவிகாரத்தில் ஆழ்ந்து, தன்னை தான் அறியாமையின் - தனது உண்மை நிலையை (ஆன்ம சொரூபத்தைத்) தான் உணராமையின்; (நற்கதி பெறு மல்), சலிப்ப - மனம் வருந்துவனவாம்; அ சலம் தீர்ந்து - அந்த அவித்தை நீங்கி, ஒழிந்த - ஒழிந்த சில உயிர்வர்க்கங்கள், உன்னை தாதை என்று - உன்னையே எல்லாவற்றிற்கும் மூலகாரணம் என்று, உணர்குவ - (உண்மை) உணர்வனவாய், முத்தி வித்து - முத்திக்கு வித்தாகும். தான்: அசை.

விராட் புருடனுடைய பேருருவத்திலிருந்தே சகல சராசரங் களும் உண்டாவன என்று மறைகள் கூறுதலின், 'என்னைத் தான் முதலாகிய உருவங்கள்' எனப்பட்டது. இதனை வடமொழி யில், புருடசூக்தம் முதலியன கொண்டு உணர்க. தாய் தந்தை யெனும் பெருமாயையின் மூழ்கி: உலகின் தாயும் தந்தையும் இறைவன் என்றுணராமல், எடுக்கும் சனனந்தோறும் கொண் டுள்ள தாய் தந்தையரையே பெரிதும் கருதுமவர் பாவம் நீங்கப் பெறார். 'அன்னை யெத்தனை யெத்தனை யன்னையோ, அப்பன் எத்தனை யெத்தனை யப்பனோ' என்றார் பட்டினத்தார்; எனவே, தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் தான் கண்டானேல், பின்னையத் தலைவன் தானாய்ப் பிரமமாய் நிற்பன்' (கைவல்ய. தத்வ. 20) என்றபடி தற்காலிகத் தாய் தந்தையரை விடுத்து, உலகின் தாயாகிய இறைவனை உள்ளபடி உணரவே பாவம் நீங்கி, முத்தி எளிதாம் என்று கூறப்பட்டது. தன்னைத்தான் அறியாமை: 'உன்னைநீ யறிந்தாயாகில் உனக்கொரு கேடுமில்லை' (கைவல்ய. தத்வ. 20); 'இன்னது தேகந் தேகி யிவனென வுணர்ந்தோன் யாவன், அன்னவன் தன்னைத் தானென் றறிந்தவ னாகும்' (கைவல்ய. தத்வ. 22) என்றமை காண்க. முத்திக்குவித்து: 'வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' (குறள். 247)ம் அதன் உரையும் காண்க; 'முத்திக் கொருவித்து' (திருக்கருவை. கலித். அந். 81).

பி - ம். 1. ஆக்கியிவ்; உருவந்த.

2. முயங்கித், முடங்கித்.

3. சலித்தலிற்சலம், சலித்ததர்சலம், சலித்தவத்தனை.

4. உன்னைத்தா னினைந்து, தாமெனன வுணர்வது, தாயென வுணர்வது முந்திவித் தொழிந்தாய், தாயென னுணர்வது முற்றிவித் தொழிந் தாய், தாமென வுணர்வது முற்றுவித் தொழிந்தாய், தாமென வுணர்வது மோதிவித் தொழிந்திர்.

3996. ஐயஞ் சாகிய தத்துவந் தெரிந்தறிந் தவற்றின்
மெய் யெஞ் சாவகை மேனின்ற நினக்குமேல் யாதும்
பொய் யெஞ் சாவில தென்னுமீ தருமறை புகலும்
வையஞ் சான்றினிச் சான்றுக்குச் சான்றிலை வழக்கால்.

'ஐயஞ்சு ஆகிய தத்துவம் - இருபத்தைந்தாகிய தத்துவங்களை, தெரிந்து அறிந்து - ஆராய்ந்து தெளியுமிடத்து, அவற்றின் - அவற்றின், மெய் எஞ்சா வகை - உண்மை குறையாதவண்ணம், மேல் நின்ற நினக்குமேல் - அந்த இருபத்தைந்து தத்துவங்களுக்கும் மேலே (இருபத்தாருவது தத்துவமாய்) நின்ற உனக்கு மேலே, யாதும் - எந்தவிதமான, பொய் எஞ்சா இலது - பொய்மைமிகாமல் (மெய்யாக) இல்லை, என்னும் - என்று சொல்லும், ஈது - இந்த உண்மைப்பொருளை, அருமறை புகலும் - அருமையான வேதம் கூறும்; வையம் சான்று - (இதற்குப்) பூலோகத்துள்ளவர்கள் யாரும் சாட்சியாவர்; இனி - இனி அவர்களை நம்புவதற்குப் பிறிதொரு சாட்சி வேண்டுவதின்று; (ஏனென்றால்), வழக்கால் - விவகார விஷயத்தில், சான்றுக்கு சான்றிலை - சாட்சியை நம்புதற்கு ஒரு சாட்சி வேண்டப்படுவதின்று அன்றோ?

ஐயஞ்சாகிய தத்துவம்: யுத்த. 3992 உரை காண்க; 'ஐயஞ்சி னப்புறத் தானும்' (தேவா.). 26வது தத்துவம் இறைவன். வையம் - இடவாகுபெயர்; 'உலக மென்ப துயர்ந் தோர் மாட்டே' (நிகண்டு); 'வழக் கெனப்படுவ துயர்ந்தோர் மேற்றே, நிகழ்ச்சியவர் கட்டாகலான' (தொல். மரபி. 92). சாட்சிக்குச் சாட்சியில்லை என்பது விவகார நூல் துணிபு. பொய்யெஞ்சாவில; மறை பகருமதற்குப் பெரியோர் தேகதத்துவம் ஆன்மதத்துவம் ஈசுரதத்துவம் என்ற தத்துவத்திரயம் இந்தப் பாட்டிலே வெளியிடப்பட்டது என்க. மெய்யெஞ்சாவிலது: 'தத்துவத்தின் உண்மையைக் கலங்காமல் உணர்ந்து மேம்பட்ட எனக்கு மேலான மூர்த்தியென்று வேதம் கூறுமிதற்கு நீ படைத்த உலகமே சாட்சி' என்றான்.

பி - ம். 1. ஐயைஞ்சு, ஐயைந்து; தேர்ந்தறிந்து, தேர்ந்தறிவு.
2. மெய்யஞ்சா; எனக்கு: மேலாகிப், மேலாயோர், மேல்யாரோ.
3. பொய்யஞ்சார், அஞ்சா; உளது, நின்றது.
4. சான்றுக்குஞ்; வழக்கே.

3997. அளவை யாலளந் தாமன்றென் றறிவுறு மமைதி
உளவை யாவையு முனக்கில்லை யுபநிடத் துனது
களவை யாய்ந்துறத் தெளிந்தில தாயினுங் கண்ணால்
துளவை யாய்முடி யாயுளை நீயெனத் துணியும்.

'ஆய் துளவை முடியாய் - அழகிய துளசியை யணிந்த திருமுடியை யுடையவனே! அளவையால் அளந்து ஆம் அன்று என்று அறிவுறும் அமைதி உளவை யாவையும் - பிரமாணங்களைக் கொண்டு அளந்து ஆம் என்றும் அன்று என்றும் தெளிகின்ற நிகழ்ச்சிகளாக வுள்ளவை யாவும், உனக்கு இல்லை - உனக்கு அன்வயிக்காது; உபநிடத்து - உபநிஷத்தானது, உனது களவை ஆய்ந்து - உன்னுடைய கரவினை ஆராய்ந்து, உற - மிகவும் நன்றாக, தெளிந்திலது ஆயினும் - அறிந்து கொண்டிலதானாலும், கண்ணால் - ஞானக்கண்ணால், நீ உளை என துணியும் - நீ உள்ளாயென்று உறுதியாகச் சொல்லும்.

முதலடிக்கு: 'ஏதுக்களாலும் எடுத்த மொழியாலுமிக்குச் சோதிக்கவேண்டாம் சுடர்விட்டுளன் எங்கள் சோதி' (தேவா. 1178:5) 'அளவையான் அளப்பரிது' (யுத்த. 191)ம் அதன் உரையும் காண்க. உளவை: வினையாலணையும் பெயர். உபநிஷத்: தமிழில் உபநிடத்து என நின்றது. களவு - உண்மை யுணராதார்க்குக் கரந்துரையும் தன்மை; 'விறகிற் றீயினன் பாலி னறுநெய்போல், மறைய நின்றுளன் மாமணிச் சோதியான், உறவு கோல்நட்டுணர்வுக் கயிற்றினால், முறுக வாங்கிக் கடையமுன் னிற்கும்' (தேவா. 1204, 10); நீயே பரம்பொருள் என்று உபநிடதங்கள் துணியும் 'மறைகளும் முனிவர்யாரும் மலர்மிசை யயனும், மற்றைத் துறைகளும் பிறவுமெல்லாம் துணிபொருள்' (கிட்கிந்தா. 360); அளவை - பிரமாணங்கள், அவை எட்டு; அவற்றுள் பிரத்யக்ஷம், ஆகமம், அநுமானம் என்ற மூன்றும் மிகவும் முக்கியம்; 'ஆட்சியில் ஆவணத்தில் அன்றிமற் றயலார்தங்கள் காட்சியில்' (பெரியபு. தடுத்தாட்.56); என்பர் சேக்கிழார் பெருமான். இவ்வளவைகள் பொருளின் உண்மைச் சொரூபத்தை உணர்தற்கு உதவுவன

காட்சி: ஐம்பொறிகளின் உணர்வால் அறிதல்: புகையுண்டு எனின் அனல் உண்டு என்று அறிவது அநுமானம். பெரியோரின் வாய்மொழி ஆகமம்; மற்றும் உபமானம் அருத்தாபத்தி, அபாவம், ஐதிக்யம், சம்பவம் என்பனவுமாம். கைவல்யம் முதலிய வேத நூல்கள் கொண்டும், தருக்க நூல்கள் கொண்டும் அறிக. உள்ளவை உளவை எனத் தொக்கது. உன் உண்மை வடிவினை உள்ளவாறு கண்டு அறிவுறுத்தக் கருதி அதனை ஆராய்ந்து சென்ற வேதாந்தம் என்ற உபநிடதம், தனக்கு அது எட்டாமையின் அறிந்த அளவிலே கடவுளின் திறத்தை யறிவுறுத்தி நின்றது; 'அல்லையீதல்லை யீதென வருமறைகளும், அன்மைச் சொல்லினல் துதித் திளைக்கும்' (திருவிளை. அவை. 8) 'மறையினு லயனுல் மாலான் மனத்தினுல் வாக்கான் மற்றும், குறைவிலா வளவி னுலும் கூறெணு தாகி நின்ற, விறைவனர்' (சிவ. சித்தி. அவையடக்கம்.) என்று வருவன காண்க.

பி - ம். 1. அனந்தமாகுமென்று. அறிந்தாமன்றென்று, அளந்தாமெனா, அளந்தாறுமென்று ; அளவுறும்.

2. உபநிடதத்துன், உபநிடதத்துனக்கு, உபநிடதத்துநின், உபநிடதத்தம்முன்.

3. யாவையு மறிந்திலது, ஆய்ந்துறத் தெரிகிலது, ஆய்த்துறத் தெரிந்தில ; கள்ளார்.

4. துளவையார் ; முடியா யவனுளன், முடியா னவனுளன், முடிமா யவனுளன், முடியா னுளது. 105

3998. கரண மென்றுள வுன்னைவந் தறிவுகா ணுமே
அரண மல்லவர்க் கிவைகடந் தறிவரி தாக
மரணந் தோற்றமென் றிவற்றிடை மயங்குப வவர்க்குன்
சரண மல்லதோர் சரணில்லை யன்னவை தவிர்ப்பான்.

'அரணம் அல்லவர்க்கு - உன்னைச் சரண்புக்கு உனது அருளைப் பெருதார்க்கு, அறிவு வந்து - அறிவு வரப்பெற்று, காணுமே - (உன் திரு சொரூபத்தை) அறிய வொண்ணுவாறு, கரணம் என்று உள - ஐம்பொறிகள் என்று உள்ளவை

பெருந்தடையாம்; இவை - இவ்வைம் பொறிகளை, கடந்து - வெற்றி கொண்டு, உன்னை - உன்னை, அறிவு அரிதாக - அறிந்து தெளிதல் அருமையாதலின், (அவர்கள்) மரணம் தோற்றம் - இறப்பு பிறப்பு, என்று - என்று சொல்லப் பெறும், இவற்றிடை - இத் துன்பங்களிலே, மயங்குப - திகைப்பார்கள்; அவர்க்கு - அத்தகையார்க்கு, அன்னவை தவிர்ப்பான் - அவற்றை நீக்குவதற்கு, உன் சரணம் அல்லது ஓர் சரண் இல்லை - உனது திருவடியன்றி வேறு ஓர் புகலிடம் இல்லை.

மன மொழி மெய்களாலும், புத்தி, சித்தி அகங்காரம் என்ற இவற்றாலும் அறியப்பட வேண்டுபவன் நீயே - பற்றற்றவனாகிய உன்னைப் பற்றாமல், அகப் பற்றுப் புறப் பற்றுக்களைக்கொண்டு பவசாகரத்தில் விழுபவர் உன் திருவடிப் புணையால்தான் கரையேற முடியும் என்க. 'தானாகும் பிரமரூபம் சற்குரு நூலாற்றோன்றும், ஆனாலும் தடைகள் உண்டேல் அநுபவ முறைத் திடாதே'; 'தடையெவை யெனிலஞ்ஞான சந்தேக விபரீதங்கள், படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத்தாலே, உடனுடன் வரும் வந்தக்கால் உயர் ஞானப்கெடு மிவற்றைத், திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே' (கைவல்யம். தத்துவ. 88, 89) காண்க. அகப் பற்றுப் புறப் பற்று இன்றி பெருமாள் திருவடியே சரண் என்று இருப்பவர் பிறப் பிறப்பற்றவராவர். இறைவனைக் காணவொட்டாது தடுப்பன ஐம்புலன்களும் கரணங்களும்; எனவே அவை தத்தம் வழிகளிற் செலவிடாமல் தடுக்க வேண்டும் எனப்பட்டது. தவிப்பான்-பானீற்று வினையெச்சம். 'கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப், பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால் கமழும், மெய்யொன்றுசாரச் செவியொன்று கேட்க விரும்பும் யான்' என்பர் பட்டினத்தார். 'இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்' (திருவாச. கண்ட.1) என்றார் மணிவாசகப் பெருமான். செய்கின்ற செயலெல்லாம் பசுச் செயலாகச் செய்யாமல். பதிச் செயலாகவே செய்து, இறைவன் திருவடியைப் பற்றி நின்றவரே பிறப்பு இறப்புக் கடந்தவராவர். 'பின்ரு நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தா

தம்மை, ஆண்டானே' (திருவாச. திருச்சதகம். 23) என்றதும் காண்க.

பி - ம். 1. அரணமாவையும். கரணமென்றுள, கரணமொன்றுளது.

2. அரணமவ்வவர் கிளைந்தன ... நடத்தற்குமரிதாம், கரணமற்றவை யாவையுங் கடந்திலதாக, அரணமவ்வறிவகைக்கடந்த நல்லறிவரிதாக, கரணமவ்வறிவைக் கடந்தகல்வரிதாக.

3. அவற்றிடை ; மயங்குறு மவற்றுள், மயக்குறு மவற்றுள், மயங்குறு மவற்றுள், மயங்குறு மவற்குள்.

4. அன்னது. 106

3999. தோற்ற மென்பதொன் றுனக்கில்லை
நின்கணே தோற்றும்
ஆற்றல் சான்முதற் பகுதிமற்
றதனுளாம் பண்பால்
க்காற்றை முன்னுடைப் பூதங்க
ளவைசென்று கடைக்கால்
வீற்று வீற்றுற்று வீவுறு
நீயென்றும் வீளியாய்.

'உனக்கு தோற்றம் என்பது ஒன்று இல்லை - உனக்கு (ஒரு பொருளினிடம்) உதிப்பது என்கின்ற ஒரு நிலை இடையாது; ஆற்றல் சால் - வல்லமை மிக்க, முதல் பகுதி - மூலப் பிரகிருதி, நின்கணே தோற்றும் - உன்னிடத்திருந்தே வெளிப்பட்டது; மற்று - மற்றை எல்லாத் தத்துவங்களும், அதன் உளாம் பண்பால் - அந்த மூலப் பகுதியினின்று தோன்றுதலின், காற்றை முன் உடை பூதங்கள் அவை - வாயு முதலான பஞ்ச பூதங்களும் மற்றுமுள்ள தத்துவங்களும், கடைகால் - எல்லாம் அழிகின்ற பேரூழிக் காலத்தில், சென்று - போய், வீறு வீறு உற்று - தனித் தனியாகப் பிரிந்து, வீவு உறும் - அழியும்; நீ என்றும் விளியாய் - நீ என்றும் அழியாய்.

தோற்றம் என்பது உனக்கில்லை; 'பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோரிலையே' 'அஜாயமானோ பகுதா விஜாயதே'

என்பது சுருதி; 'தாயுமிலி தந்தையிலி' (திருவாச. திருச்சாழல். 3) முதற்பகுதி மற்ற 'தனுளாம்' (யுத்த. 3992)ன் விரிவுரை காண்க. வாயுவாதி பூதங்களைத் தோற்றுவித்தலின் ஆற்றல்சால் மூலப் பகுதி எனப்பட்டது. காற்றை முன்னுடைப் பூதங்கள். 'ஆகாசாத் வாயு, வாயு அக்கினி, அக்கினி யாபகா, ஆபோ பிருதிவி' என்றமை காண்க. 'நிலனும் நீர்தரு நெருப்பும் வன் காற்றும்' என்றது கொண்டு காற்றை முன்னுடைப் பூதம் எனப் பட்டது. கடைக்கால் - ஊழிக் காலம். இந்த ஐம்பெரும் பூதங்கள் தாம் தோன்றிய முறையிலேயே பூமியானது நீரிலும், பூமி - நீர் என்ற இவ்விரண்டும் அங்கியிலும், இவை மூன்றும் வாயுவிலும், அனைத்தும் ஆகாசத்திலும் அடங்கும் என்றும், இதனை அபவாத முறையென்றும் கூறும் கைவல்யமாதி நூல்கள், உன்னிடமிருந்து தோற்றிய மூலப் பகுதியும், அதனின்றெழுந்த ஐ பூதங்களும் அழிய, நீ என்றும் அழியாதவனாயுள்ளனை. வீற்று வீற்றுறுதல்; கடிகாவில் காற்றுற்றெறிய வெடிபட்டு, வீற்றுவீற் றோடு மயிலினம் போல்' (களவழி. 29).

107

4000. மின்னைக் காட்டுதல் போல்வந்து
விளியுமிவ் வுலகம்
தன்னைக் காட்டவுந் தருமத்தை
நாட்டவுந் தனியே
என்னைக் காட்டுதி யிறுதியுங்
காட்டுதி யெனக்கு
முன்னைக் காட்டலை யொளிக்கினு
மிலமறை யுரையால்.

'மின்னை - மின்னலை, காட்டுதல் போல் வந்து - (மேகம்) தோற்றுவித்தல் போன்று தோன்றி, விளியும் இவ் உலகம் தன்னை - அழியும் இயல்பினதான உலகினை, காட்டவும் - தோற்றுவிக்குமாறும், (அவ்வுலகங்களில்) தருமத்தை நாட்டவும் - தருமத்தை நிலை பெறுத்துமாறும், நீ தனியே - நீ தனியாக, (ஒருவனாயிருந்து), என்னை காட்டுதி - என்னைத் தோற்றுவிக்கின்றாய்;

இறுதியும் காட்டுதி - (அவ்வுலகங்களோடு எனக்கு) அழிவையும் காட்டுகின்றாய்; எனக்கு - எனக்கும், உன்னை காட்டலை - உன்னுடைய உண்மைச் சொரூபம் முழுவதும் காட்டுகின்றாயில்லை; ஒளிக்கினும் - அப்படி நீ ஒளிந்து நிற்பினும், மறை உரையால் - வேதவாக்கியங்களின் உதவியால் (நான் உண்மைவடிவைச்) சிறிது உணர்வதால், இலை - உன்னை எனக்கு முற்றும் கரக்கின்றாயில்லை.

மின்னல் - நிலையாமைக்கு வந்தது. விளித்தல் - இறத்தல்; 'விளிந்தாரின் வேறல்லர்' (குறள். 143); ஒளிக்கினும்; 'தீயாரி லொளித்தியால் வெளிநின்றாற் றீங்குண்டோ' (ஆரணிய. 54); முதலடிக்கு; 'நீரின் முளைத்தெழுந்த மொக்குளே போல முகுளித்த அண்டங்கள்' (ஆரணிய. 1178). உலகம் தன்னைக் காட்டவும்; 'நின்னுளே யென்னை நிருமித்தாய் நின்னருளால், என்னுளே யெப்பொருளும் யாவரையும் யானீன்றேன்' (யுத்த. 289); 'நான்முகனை நாராயணன் படைத்தான்' (இயற்பா. 4 : 1); ஆரணிய. 53ம் காண்க; 'உயிர் படைப்பான் என்னைப் படைத்தாய்' (யுத்த. 286).

பி - ம். 1. மின்னுக், மின்விக்; காட்டுவ, காட்டிய, விளியுமாம், விளியுமே, விளியுமெய்.
2. தருமத்தைக் காட்டவும்.
3. என்னைக் காட்டினை; காட்டிலை.
4. காட்டிலை; ஒளிக்கின்றாய்; உரையாய். 108

4001. என்னு ருக்கொடிவ் வுலகினை
யீனுதி யிடையே
உன்னு ருக்கொடு புகுந்துநின்
றேம்புதி யுமையோன்
தன்னு ருக்கொடு துடைத்திமற்
றிதுதனி யருக்கன்
முன்னு ருக்கொடு பகல்செயுந்
தரத்தது முதலோய்.

'முதலோய் - ஆதிப் பரம்பொருளே ! என் உரு கொடு - (பிரமனாகிய) என் வடிவத்தை யேற்று, இவ் உலகினை ஈனுதி - இவ்வுலகங்களைப் படைக்கின்றாய், உன் உரு கொடு - (திருமாலாகிய) உன் வடிவத்தைக் கொண்டு, இடையே - இடையில், புகுந்து - புக்கு, நின்று ஓம்புதி - (அவ்வுலகங்களைப்) பாதுகாவல் செய்கின்றாய்; உமையோன் தன் உரு கொடு - உமையொரு பாகனான சிவபெருமான் வடிவமேற்று, துடைத்தி - அவற்றை அழிக்கின்றாய்; இது - இந்த நின் செயல், தனி அருக்கன் - ஒப்பற்றவனான சூரியன், முன் - (யாவர்க்கும்) எதிரில் காணப்படும், உருகொடு - தன் வடிவத்தைக் கொண்டு, பகல்செயும் தரத்தது - பகற் பொழுதைச் செய்வதை ஒத்துள்ளது. மற்று : அசை.

திருமாலே மும்மூர்த்திகளாக நின்று படைத்தல் காத்தல் அழித்தலைச் செய்வன் எனப்பட்டது. 'தேவரு முனிவருந் தெரிக்கிலா முதன், மூவருந்தானென முடிந்த தொத்ததே' (பால. கடிமண. 66); 'சூலமுந் திகிரிசங்குங் கரகமும் துறந்து தொல்லை, ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டயோத்தி வந்தான்' (சுந்தர. 1122) என்பன காண்க. உமையோன் - சிவபெருமான். அருக்கன் - சூரியன். 'அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே, பெருக்க வலி யுடனிற்க' (பெரியபு. திருஞான. 22); சூரியன் உதிப்பதால் பகலைச் செய்து தான் உலவிக் கழிதலால் அப் பகலைக் கடத்தி, மாலையில் மறைவதால் அப் பகலை இறுதி செய்வது போன்று, நீ மும்மூர்த்திகளின் வடிவாய் மூன்று தொழிலையும் செய்கின்றனை எனப்பட்டது. (ஒப்பு): 'தேய்தலுண்மையும் பெருகலுண்மையும், மாய்தலுண்மையும், பிறத்தல் உண்மையும், அறியாதோரையும் மறியக்காட்டித், திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து' (புறநா. 27); சூரியன் எல்லா ஒளிக்கும் காரணம். 'ஆதித்யானும் அகம் விஷ்ணு' (பகவற் கீதை).

பி - ம். 1. பூணுதி.
2. உமைகோன்.
3. மற்றது.
4. உருக்கொடவ்வருள் செய்யும்; உருத்தொரு; தரத்தினை.



இதன் பின் 'ஓங்காரப்' என்ற செய்யுள் ஓர் பிரதியில்.

4002. திருக்கு வான்மலி செல்வத்துச் செருக்குவேந் திறத்துத்
தருக்கு மாய்வுறத் தானவ ரரக்கர்வெஞ் சமரில்
இரிக்க மாழ்கிநொந் துனைப்புகல் யாம்புக வியையாக்
கருக்கு ளாய்வந்து தோற்றுதி யீங்கிது கடனே.

'திருக்குவால் மலி செல்வத்து - பொருட் குப்பையாக நிறைந்த செல்வத்தால், செருக்குவேம் - கருவம் கொள்ளும், திறத்து - எங்கள் மாட்டுள்ள, தருக்கு மாய்வு உற - ஆணவம் இல்லையா மாறு, தானவர் அரக்கர் வெம் சமரில் - தானவரும் அரக்கரும் கொடிய போர்செய்து, இரிக்க - எங்களை அஞ்சியோடுமாறு செய்ய, யாம்-நாம், மாழ்கி-மனம் அழுங்கி, நொந்து-வருந்தி, யாம்உனை புகல் புக-நாங்கள் உன்னைச்சரணமாக அடைய, (அத் தீயோரை அழித்து எங்களைக் காக்கும்பொருட்டு), இயையா - நீ உனக்குச் சிறிதும் பொருந்தாத, கருக்குள் ஆய் வந்து - பிறவிகளில் பொருந்தி வந்து, ஈங்கு தோற்றுதி - ஈண்டு அவதாரம் செய்கின்றாய்; இது கடனே - (உனக்குக்) கடமை போலும். ஓகாரம் : வினா.

திருக்குவால்- பொருட் குவியல்; 'மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்' (திருவாச. 3, 124); இந்த நல்லோர் முறையீட்டுக் கிரங்கிப் பெருமான் அவதாரம் செய்து துட்டர்களை வதைத்த செய்தி குறிக்கப்படுகிறது. 'மசரத மனையவர் வரமும்' (பால. திருவவ. 22); என்ற பாடல் இங்குக் காணத்தகும். இது கடனே ; என்றது இறைவனுக்கு இவ்வாறு தோன்றுவது கடமை என்று கூறியவாறு. தூய அஷ்ட குணசம்பன்னனான, பெருமான் மாயைக்குட்பட்டு மக்கள் உருவெடுப்பது தக்கதன்று எனக் குறிப்பான் இயையாக் கருக்குள் என்றான். எடுத்த உருவங்கட் கேற்ப நடித்துக் காட்டும் லீலா மானுஷ விக்ரகப் பெருமான் என்பான், கருக்குள் ஆய் வந்து என்றார்.

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

4003. ஓங்கார ரப்பொருள் தேருவோர் தாமுன்னை யுணர்வோர்
ஓங்கா ரப்பொரு ளென்றுணர்ந் திருவினை யுகுப்போர்
ஓங்கா ரப்பொரு ளாமன்றென் றூழிசென் றாலும்
ஓங்கா ரப்பொரு ளேபொரு ளென்கலா வுரவோர்.

'ஓங்காரம் பொருள் தேருவோர் தாம் - பிரணவத்தின் உட்பொருளை ஓர்ந்து தெளிபவர்தாம், உன்னை உணர்வோர் - உன்னை உள்ளபடி உணர்பவராவர்; ஓங்காரப் பொருள் என்று உணர்ந்து - (அவர்கள் உன்னை)ப் பிரணவப் பொருள் என்று அறிதலால், இரு வினை உகுப்போர் - இரு வினைகளை ஒழிப்பார்கள்; ஓங்காரப் பொருளே பொருள் என்கலா உரவோர் - பிரணவப் பொருளே பரம்பொருளாகும் என்ற உண்மையை உணரமாட்டாத (உலகியல்) அறிவினை உடையவர்கள், ஓங்காரப் பொருளே - பிரணவப் பொருளாகிய உன்னை, ஆம் என்றும் உண்மைப் பொருளென்றும் அன்று என்று-அன்றென்றும், ஐயுற்று சந்தேகம் கொண்டு ஊழி சென்றாலும்-நெடுங்காலம் கழித்தாலும் (இருவினை நீங்கப் பெறார்).

இருவினை உகுப்போர் உணர்வோர் என்றதனால் இருவினை உகுக்காதவர் உணராதவர் என்று வருவிக்கப்பட்டது. 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தா ரிறைவனடி சேராதார்' (குறள். 10); ஓம் - என்பது பிரணவம். அது அ, உ, உம் எனப் பிரிந்து அகார வாச்சியனுன திருமாலுக்கு மகாரவாச்யனுன சீவன் அடிமை எனப் பொருள்படும். யுத்த. 152, 205 உரை காண்க. முதலடிக்கு; 'ஓமராமரை' (ஆரணிய. 31) காண்க. இதற்கு ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் பொருளாகிய இராமபிரான் என்பது பொருள். பிரணவத்தின மூன்று எழுத்துக்களும் மூன்று வேதங்களின் சாரமாகும்; இதன் முதலெழுத்துக்குப் பொருள் ரக்ஷகம். எனவே அது ஈச்வரனையே உணர்த்தும். இது சகல தேவர்கட்கும் பிறப்பிடமாயும், மந்திரங்கட்கெல்லாம் மூலமாயு மிருக்கும். இதனை வேத ஆரம்பத்திலும் முடிவிலும் உச்சரிப்பார்கள். இதன் உற்பத்தி சூத சங்கீதையில் கூறப்பட்டுள்ளது. மற்றும் இதன் விரிவுகளை உபநிஷத்துக்களைக் கொண்டு தெளிக. 'ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங் கண்டு தூங்கார்' (கந்தரலங்.) என்பர் அருணகிரிநாதர். உரவோர் - பிற குறிப்புமாம். 'ஓங்காரமாகிய பிரணவத்தின் பொருள் எல்லார்க்கும் சேடியான உனக்குயிரனைத்

தும் சேடம்' இதனை யறிந்த பின்னர் ஓங்காரப் பொருள் என்று உன்னை யறிந்து, அதாவது நீயே ரட்சகன், நானே ரட்சண்ணியம் என உணர்ந்து இருவினையைத் தள்ளிப்பவசாகரத்தைக் கடக்க முயல்வர் அறிஞர்.

பி-ம். 1. பொருளாவுனை யுணர்வுறு முரவோர்.

2. பொருளென்று வந்து, பொருளென்றென்று, பொருளென்று கொண்டு, பொருளென்றுணர்ந்து ; உருப்போர்.

3. தூழி கண்டாலுங், இடையறிந்தூழி சென்றாலும், ஆமென்றென்றூழி கண்டாலும்.

4. பொருள் மெய்ப்பொருளென மனத்துன்னுர், பொருளியென வுணர்குவ குரவோர். 111

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

4004. இனைய தாகலி னெமையு மூன் றுலகையு மீன்று
மனையின் மாட்சியை வளர்த்தவெம் மோயினை வாளா
முனைய லென்றது முடித்தனன் முந்துநீர் முளைத்த
சினையின் பந்தமும் பகுதிக ளனைத்தையுஞ் செய்தோன்.

முந்து நீர் - எல்லாவற்றிற்கும், முற்பட்ட தன்மையினையுடைய, முளைத்த-திருமாலினின்று உதித்தவனும், (சிவான்மாக்கட்கு) சினையின் பந்தமும் - உடற்றொடர்பினையும், பகுதிகள் அனைத்தையும் - செய்தோன் பலவாகிய பகுப்புக்களையும் உண்டு பண்ணினவனுமான பிரமன், 'இனையது ஆகலின் - உனது உண்மை வடிவம், இத்தகையது ஆதலின், எமையும் மூன்று உலகையும் ஈன்று-எம்மையும் மூன்று புவனங்களையும் பெற்று, மனையின் மாட்சியை - இல்வாழ்க்கையின் மாண்பினை, வளர்த்த - (நடத்திக் காட்டுகின்ற), எம் ஓயினை-எங்களது தாயினை, (சீதாதேவியை), வாளா முனையல்-வாளா வெறுக்க வேண்டா', என்று - என்று, அது - தான் சொல்லவெண்ணிய அந்தப் பொருள்களை, முடித்தனன் - கூறி முடித்தான்.

மனையின் மாட்சி - இல்லறத்தின் பெருமை. 'மனையின் மாட்சியென்றுன் மனுநீதியான்; (கிட்கிந்தா. 344); 'பேண நோற்றது மனைப்பிறவி' (சுந்தர. 402) எனத் தொடங்கும் செய்யுட்களைக் காண்க.

'குலத்தில் வந்தில்லின் மாண்புடை, நங்கையர் மனத்தவ நவிலற் பாலதே' (சுந்தர. 401)ம் காணத்தகும். ஓய் - தாய்; 'தேவர்க்குந் தம்மோயை' (யுத்த. 292); 'என்னினிச் செய்வதெம்மோய்' (சுந்தர. 1272); முனையல் - அல்லீற்று வியங்கோள்; வேண்டுதற் கண் வந்தது. வாளா - காரணமின்றி. 'முன்னுரைத்தேனை வாளா முனிந்தனை' (யுத்த. 1242); முந்து நீர் - எல்லாவற்றிற்கு முற்பட்ட இயல்பினையுடைய. திருமால் - வினைத் தொகை யன் மொழி. முந்து நீரின் முளைத்த - முளைத்தவனாகிச் செய்தோன் என்க. சினை - உடலுறுப்புக்கள். பந்தம் - பாச பந்தம். பகுதி - பிரிவு, எழுவகைப் பிறப்புக்களின் விரிவான எண்பத்து நான்கு லக்ஷம் யோனி பேதங்கள். சினையின் பந்தம் - அண்டகோளம் என்றும் கூறுவர் ஒரு சாரார்.

பி - ம். 1. இனைய தாதலினெம்மை; மூவுலகையும்; சன்றிம், ஈன்ற.

2. வளர்த்து.

3. முனைய லென்றது, முனிய லென்றுரை; முன்புநீர் முளரிச்.

4. சினையின் வந்துதொல் மந்திரம் யாவையும், சினையின் வந்திவ் வுலகங்களனைத்தையும், செய்தாய், சினையின் வந்தரும்பவுதிக மனைத்தையும் செய்தோன். 112

## சிவபிரான், இராமபிரானுக்கு அவன் தன்மையை யுணர்த்துதல்

4005. என்னு மாத்திரத் தேறமர் கடவுளு மிசைத்தான்
உன்னை நீயொன்று முணர்ந்திலை போலுமா லுரவோய்
முன்னை யாதியா மூர்த்திநீ மூவகை யுலகின்
அன்னை சீதையா மாதுநின் மார்பின்வந் தமைந்தாள்.

என்னு மாத்திரத்து - என்று பிரமன் கூறி முடித்த அளவில், ஏறு அமர் கடவுளும் - இடப வாகனத்தின் வீற்றிருப்பவனான சிவபெருமானும், இசைத்தான் - சொல்பவனானான்; 'உரவோய் - வன்மை வாய்ந்தவனே! நீ - நீ, உன்னை ஒன்றும் உணர்ந்திலை போலும் - உன் தகைமையை (இன்னதென்று) சிறிதும் அறிந்திலை போலும்; நீ முன்னை ஆதியாம் மூர்த்தி - நீ மிகவும் அநாதியாயுள்ள முதற் கடவுளாவாய்; மூவகை உலகின் - மூவகையான உலகங்கட்கும், அன்னை சீதையாம் மாது - தாயான சீதையாகிய

தேவி, நின் - (திருமாலான) உனது, மார்பின் - திருமார்பின், வந்து அமைந்தாள் - வந்து வீற்றிருக்கும் திருமகளே. ஆய், அசை.

என்னுமாத்திரத்து; 'என்னுமாத்திரத் தீண்டெரி நீண்டுக' (சுந்தர. 1152); உன்னை நீயொன்றும் உணர்ந்திலை, நீ ஏற்ற மனித வடிவிற்கேற்ப நடித்து உன்னை நீ உணராதவன் போன்றுள்ளாய்' 'ஆத்மானம் மானுஷ மன்யே இராமம் தசரதாத்மஜம்' என்பது முதனூல். யுத்த. 4002-ன் உரை காண்க. இராமபிரான் திருமால் என்றும் சீதாபிராட்டியே திருமகள் என்றும் கூறினன் சிவ பெருமான். அன்னை சீதையாம் மாது; 'என்றும் தோன்றாத், தாயவள் உலகுக் கெல்லாம்' (யுத்த. 762).

பி - ம். 1. ஏறுடை; இசைப்பான்.

2. அறிந்திலை.

3. முன்னை ஆகிய; மூவுலகிற்கும்.

4. மார்பிடை, மார்பகத்தமைந்தாள், மார்பமைந்தமைந்தாள், மார்பில் வந்தணைந்தாள். 113

4006. துறக்குந் தன்மைய ளல்லளாற் றொல்லையெவ் வுலகும்
பிறக்கும் பொன்வயிற் றன்னையிப் பெய்வளை பிழைக்கின்
இறக்கும் பல்லுயி ரிறைவநீ யிவள்திறத் திகழ்ச்சி
மறக்குந் தன்மைய தென்றனன் வரதர்க்கும் வரதன்.

'(யாவர்க்கும்) இறைவ நீ-எல்லாச் சீவராசிகட்கும் தலைவனே! தொல்லை எவ் உலகும் - பழமையான எல்லா உலகங்களும், பிறக்கும் - உதித்தற்கிடமான, பொன் வயிற்று அன்னை - அழகிய வயிற்றையுடைய தாயாகிய சீதாதேவி, துறக்கும் தன்மையள் அல்லள்-நீ (வெறுத்து) நீக்கத்தக்ககெட்ட தன்மை யுடையவள் அல்லள்; (அல்லாமலும்) இ பெய்வளை பிழைக்கின்-இந்த அணியப் பட்ட வளையல்களை யுடைய இவள் விஷயத்தில் நீ தவறான எண் ணம் கொண்டு கைவிட்டால், பல் உயிர் இறக்கும் - பல சீவராசி களும் மரிக்க நேரிடும்; (ஆதலின்) நீ - நீ, இவள் திறத்து இகழ்ச்சி - இவள் மாட்டு அவமதிப்புக் கொள்ளுதல், மறக்கும் தன்மையது-மறந்துவிடத் தக்கது,' என்றனன்-என்று, வரதர்க்கும் வரதன் - வரந்தரும் தெய்வங்கட்கெல்லாம் வரமளிக்கக் கூடிய வனான சிவபெருமான் புகன்றான். ஆல்: அசை.

எவ்வுயிரும் பிறக்கும் பொன்வயிற்றன்னை - சராசரங்களை யீன்றதாய்; 'எம்மோயை' (யுத்த. 4004) காண்க. பெய்வளை - வினைத்தொகை யன்மொழியாகப் பிராட்டியைக் குறித்தது. காப்புத் தொழிலை மேற்கொண்ட திருமாலின் மனைவியாய், உலகனைத்தும் காக்கின்ற தாய்க்கு ஓர் அவதூறு நேரின், சகல சீவராசிகளும் உய்தற்கில்லை யென்பார். 'பல்லுயிர் இறக்கும்' என்றார். முன்னர் அங்கிக் கடவுளும் பிரமனும் தேவியின் கற்பு மேம்பாட்டைக் கூறினர். இங்குச் சிவபெருமான் கூறியது காண்க.

பி - ம். 1. மென் மையிற்றன்மை.

3. பல்லுயிர் யாவையும், இராம நி.

4. தன்மைய; மழுவலான் வழுத்தி. 114

## சிவபெருமான் தசரதனுக்கு இராமபிரானைத் தெருட்டுமாறு பணித்தல்

4007. பின்னு நோக்கினன் பெருந்தகைப் புதல்வனைப் பிரிந்த
இன்ன லாலுயிர் துறந்திருந் துறக்கத்து ளிருந்த
மன்னற் சென்றுநின் மைந்தனை மனங்கொளத் தெருட்டி
முன்னை வான்றுயர் நீக்குதி மொய்ம்பினே யென்றான்.

பின்னும் நோக்கினன் - (சிவபெருமான்) பின்னும் (செய்ய வேண்டுவதை) ஆராய்ந்தவனாகி, பெருந்தகை புதல்வனை - பெருந்தகைமை வாய்ந்த (தனது) குமாரனாகிய இராமனை, பிரிந்த இன்னலால் - பிரிந்ததனால் எழுந்த துன்பத்தால், உயிர் துறந்து - உயிர் நீங்கி, இரு துறக்கத்துள் இருந்த-பெரிய வைகுண்டத்தில் இருந்தவனான, மன்னன் சென்று - தயரதப் பேரரசனிடம் போய், 'மொய்ம்பினோய் - வலிமையுள்ளவனே! நின் மைந்தனை - உன் புதல்வனாகிய இராமனை, (க்கண்டு அவன்) மனம் கொள தெருட்டி - அவன் உள்ளத்தில் நன்று ஏற்கும்படியாகத் தெளிவித்து, முன்னை வான் துயர் நீக்குதி - (உன் உள்ளத்தில்) நீண்டகாலமாக உள்ள மிக்க துயரத்தினை போக்குவாயாக', என்றான் - என்று பகர்ந்தான்.

நோக்குதல் : மனத்தால் நோக்குதல்; 'போதகம் அனையவன் பொலிவு நோக்கியவ், வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன். மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய, கோதமன் காதலன் கூறன் மேயினன்; (பால. கார்முக. 11); என்ற இடத்துப்போல; 'அகனோக்கி யுற்ற துணர்வார்ப் பெறின்' ((குறள். 708); என்றதும் காண்க. இன்னல் - துன்பம்; 'இனிமையல்லாதது' என்பது பொருள். 'இறலுறும்படி யியற்றுவ ரிடையருவின்னல்' (அயோத்தி. மந்தரை. 169); புத்திரனைப் பிரிந்த சோகத்தால் இறந்தவனாகலின் பிரிந்தஇன்னல் : பிரிந்ததனாலாகிய இன்னல்; என்க. துறக்கம் : வீடு; பெரும்பாலும் துறவிகளாலும் அகப்பற்றுப் புறப்பற்றுத் துறந்த ஞானிகளாலுமே அடையப்படுவது என்று காரணக்குறி. 'மறக்க முற்றுததன் வாய்மை காத்தவன், துறக்கமுற் றுனென இராமன் சொல்லலும்' (ஆரணிய. 195); புத்திரரில்லாதவர் 'புத்தாவை கொடு நரகைத்தைத் துய்ப்பர்' என்றதனால் ஏங்கிப் புத்திரகாமேஷ்டி யாகம் புரிந்தவனான தயரதன் மகப்பெற்று மகிழ்ந்தவனாதலின் அவனுக்குத் துறக்கம் கிட்டிற்று; எனினும், புதல்வனைப் பிரிந்து இறந்தவன் ஆதலின், அவனுடைய துயர் வான்றுயர் எனப்பட்டது. 'வீரன் வந்தனனோ' என்று புலம்பிய விடத்துச் சுமந்திரன் 'வேயுயிர் கானில் தானும் தம்பியும் மிதிலைப்பொன்னும், போயினன் என்றான் என்றபோழ்த்தே யாவிபோனான்' (அயோத். தைலம். 60); என்று நாடக முறையில், அமைச்சன் சொல்லும், தயரதனுடைய விண்ணோக்கிய செலவும் ஒருங்கே நிகழ்ந்ததாகக் கம்பநாடராற் கூறப்பட்டமை காண்க. எந்நாட்டினரும், எச்சமயத்தாரும், இறக்கும் தறுவாயில் என்ன எண்ணம் ஒருவரிடம் உண்டோ, அதுவே மறுபிறப்பிற்குக் காரணமென்பர்; இங்கு இராமபிரானை மகவாகப் பெற்றமையின் தயரதற்கு மறுபிறப்பு இன்றேனும், மரிக்கும் காலத்துப் புதல்வன் நினைப்பு இருந்ததாகலின், அந் நினைப்பின் காரணமாக இங்கும் போர் முடிவில் விமானத்து வர நேர்ந்தது என்க. இப்பேரரசனது வான்றுயரை 'அன்று கேகயன் மகள் கொண்ட வரமெனும் அயில்வேல்' (யுத்த. 4010); எனத்தொடங்கும் செய்யுட் கொண்டுணர்க. இங்கு 'இந்திரன் முதல்வரான' (அயோத்தி. தைல: 61); எனத்தொடங்கும் செய்யுளைக் காட்டித் துறக்கம் விஷ்ணு லோகமாகிய வைகுண்டம்

என்பர். மனம் கொளத் தெருட்டுதல்; பிராட்டியின் கற்பு மேம்பாட்டை எடுத்துக் கூறி இராமபிரானுடைய சங்கையைப் போக்குதல்; இதனை 'நங்கை மற்றுநின் கற்பினை யுலகுக்கு நாட்ட'; 'பொன்னைத் தீயிடைப் பெய்வது' (யுத்த. 4014, 4015); எனத்தொடங்கும் செய்யுட்கள் கொண்டறிக.

பி-ம். 1. முன்புதான், முன்புகுற், முன்புநிற், உன்னைமுன் ;

3. மன்னர் மற்றவன் தசரதற் காண்டலும் வணங்கி, மன்னனூங்குள வண்ணலைச் சென்றுக நகைத்து, மன்னவற் சென்று கண்டு நின் மைந்தனைத் தெருட்டி, மன்னனூங்குவற்சென்று நிகண்டனை வணங்க, மன்னனுங்குவற் சென்று நீகண்டிவண் வணங்கி.

4. உன்னுயர், வன்றுயர் ; நிக்குவானயன்தனை மொழிந்தான் ; நிக்குதி யென்பது முறையால், நீக்குதி முன்பினே யென்றான். 115

இதன்பின் ஓர் பாடல் :—

என்ற வாசக மெறுழ்வலித் தோளினு லியம்ப
மன்ற றங்கிய மலரவன் வாசவற் கூவித்
துன்று தாரினேன் சுரருடன் துருவினை தொடரச்
சென்று மற்றவற் றருகென வணங்கினன் சென்றான்.

### தசரதன் பூமியில் வருதலும், இராமபிரான் அவனை வணங்குதலும்

4008. ஆதி யான்பணி யருள்பெற்ற வரசருக் கரசன்
காதன் மைந்தனைக் காணிய வுவந்ததோர் கருத்தால்
பூத லத்திடைப் புக்கனன் புகுதலும் பொருவில்
வேத வேந்தனு மவன்மலர்த் தாள்மிசை விழுந்தான்

ஆதியான் - முதற்கடவுளான சிவபெருமான், பணி அருள் பெற்ற - அருளிய கட்டளையைப் பெற்ற, அரசருக்கு அரசன் - மன்னாதி மன்னன் ஆன தயரதன், காதன் மைந்தனை - (தன்) அன்பிற்குப் பாத்திரமான புதல்வனை, காணிய - காணுமாறு, உவந்தது ஓர் கருத்தால் - மகிழ்ந்த ஓர் எண்ணத்துடன், பூதலத்து இடை புக்கனன் - பூமியிடத்து வந்து இழிந்தான்; புகுதலும் - வந்த அளவில், பொரு இல் வேதம் வேந்தனும் - ஒப்பற்ற மறைகளின் தலைவனான இராமபிரானும், அவன் மலர்

தாள்மிசை விழுந்தான் - அவனுடைய திருவடித் தாமரைகளில் வீழ்ந்து பணிந்தான்.

பணி அருள் : வினைத்தொகை. காணிய : செய்யிய என்னும் வாய்பாடு ; வேத வேந்தன் : வேதத்தை யறிந்தவன் அல்லது வேதத்தால் அறியப்பட்டவன் ; 'வேத வேத்யே புரே வம்சி ராஜா தசரதஸ்ததா' (முதனூல்) ; 'மறைகளுக் கிறுதியாவார்' (சுந்தர. 1) ; வேதவேத்யன் என்பதன் திரிபு என்பர். முதற் கடவுளர் மூவர் ஆதலின் அவருள் ஒருவராகிய சிவபெருமான் ஆதியான் எனப்பட்டான், இந்தப் பதமும் பற்பல சமயத்தார் தத்தம் சமயப் பெருமானுடைய பரத்வம் குறிப்பதற்காக வெவ்வேறு வகையாக வழங்கப்பெறும் ; 'முதலாழ்வார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரி நீர் வண்ணன்' (இயற்பா. 1 : 15); 'முப்பரம் பொருளிற்குண் முதலை மூலத்தை, இப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை' (பால. கடிமணப். 69). என வருவன காண்க.

பி - ம். 1. ஆதியாய் : அரசர்க்குமரசன்.
2. காணிய வந்ததோர், காணிய விருப்புறுங், காணிய வமைந்ததோர், காணிய வுயர்ந்ததோர்.
3. புகுந்தனன் ; பொருமி.
4. வேதநாயகனும் ; தாளிணை, தாளினில். 116

தசரதன் மகிழ்ந்து சொல்லுதல்

4009. வீழ்ந்த மைந்தனை யெடுத்துத்தன் விலங்கலா கத்தின்
ஆழ்ந்த ழுந்திடத் தழுவித்தன் கண்ணினீ ராட்டி
வாழ்ந்த சிந்தையின் மலங்களுங் களிப்புற மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட நின்றிவை புகன்றான்.

மன்னன் - தயரத மன்னன், வீழ்ந்த மைந்தனை எடுத்து - (தனது அடியில்) படிந்து வணங்கிய புதல்வனை(க் கரங்களால்) எடுத்து, தன் விலங்கல் ஆகத்தின் - தனது மலையொத்த மார்பிடத்து, ஆழ்ந்து அழுந்திட தழுவி - நன்றாக அழுந்துமாறு அணைத்து, தன் கண்ணின் நீர் ஆட்டி - தனது விழிநீரினால் நீராட்டி, வாழ்ந்த

சிந்தையின் - நல்வாழ்வு பெற்றேமென்ற நினைவுடன், மனங்களும் களிப்பு உற - அந்தக்கரணங்கள் மகிழ்ச்சி மிகுமாறும், போழ்ந்த துன்பங்கள் - (இராமனைப் பிரிந்ததனால் தன்னைப்) பிளந்த துன்பங்கள், புறப்பட - வெளியேறவும், நின்று - (இராமபிரான் முன்பு) நின்று கொண்டு, இவை புகன்றான் - இவ்வார்த்தைகளைப் பகர்வானாயினன். அடுத்து வரும் மூன்று கவிகளிற் காண்க.

தயரதன் மைந்தனைத் தழுவியது: முன்னர் மந்திரப் படலத்தில், 'கனிவாய்ச்சீதை கொண்கனைத் திருவுறை மார்பகம் சேர்த்தான்' (அயோத்தி. 59) 'விலங்க லன்னதிண்டோளையு மெய்த்திரு விருக்கும், அலங்கன் மார்பையுந் தனது தோணமார்புகொண் டளந்தான்' (அயோத்தி. 60); 'அரசர்கோன், இனிய பைங்கழல் பணிந்தெழுதலும் தழுவினான், மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந் தனமலைத், தனிநெடுஞ் சிலையிறத்தவழ்தடங் கிரிகளே' (பால. எதிர்கோள். 23). என்றன காண்க. விலங்கல்-ஆகம், மலைபோன்ற மார்பு. ஆழ்ந் தழுந்திடத் தழுவல்: இதனைக் காடாலிங்கனம் என்பர். கண்ணின் நீர் ஆட்டி - ஆனந்தபாஷ்பம்; 'அண்ணல் வீரனைத் தம்பியு மன்னமுங், கண்ணி னீரினிற் பாதம் கழுவினர்' (ஆரணிய. 549); 'ஆங்குயர் மழைக்கணீரா லாயிரங் கலசமாட்டி' (சுந்தர. 1287). மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற நான்கு அந்தக்கரணங்கள் உள ஆகலின் மனங்கள் எனப்பட்டது. அந்தக்கரணத்தின் விருத்தியும் சிதாபாசம் என்னும் பலமும் கூடும் விகாரமே மனம் என்பர்; (கைவல்யம். சந்தேகந். 14). இனி, அந்தக்கரணங்கள் நான்கில், 'சித்தமா மவ்வியத்தம் சிந்தனை யதுவுஞ் செய்யும், புத்தியவ் வியத்திற் றோன்றிப் புண்ணிய பாவஞ் சார்ந்து, வத்து நிச்சயமும் பண்ணி வரும்சுக துக்க மோகப், பித்தனின் மயங்கி ஞானக் கிரியையும் பேணிநிற்கும்'; 'ஆங்காரம் புத்தியின்கணுதித் தவத்தைக்கு வித்தா, யீங்கார்தா னென்னோ டொப்பா ரென்றியானென்ன தென்றே, நீங்காதே நிற்குந் தானு மூன்றதாய் நிகழும்' (சிவ. சிந்தி. 2 : 57—58) என்று வருவனவும், அவற்றின் உரையும் கொண்டு இவற்றின் விவரம் அறிக. போழ்தல் - பிளத்தல்;

'போழக்கிற்கில வென்று புகன்றார்' (யுத்த. 219); 'வாளாற், போழ்ந்தன னென்னக் கூறிப் புரண்டனன் பொருமுகின்றான்' (யுத்த. 2830).

பி-ம். 1. எடுத்தனன்; மார்பத்தில்.

2. ஆழ்ந்தழுந்துற; தழுவிக் கண்ணருவி நீராட்டி, தன் கண்ணருவி நீராடி

3. சிந்தையன்; மனமிகக் களிப்புற்று.

4. புறம்புக,

117

4010. அன்று கேகயன் மகள்கொண்ட வரமெனு மயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி னிடைநின்ற தென்னைக்
கொன்று நீங்கல திப்பொழு தகன்றதுன் குலப்பூண்
மன்ற லாகமாங் காந்தமா மணியின்று வாங்க.

'அன்று - அக்காலத்தில்; (இளவரசு முடிசூட்டக் கருதிய போது), கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில் வேல் - கேகய மன்னனுடைய புதல்வியாகிய கைகேயி பெற்றுக்கொண்ட வரம் என்ற வேற்படை, இன்று காறும் - இதுவரையிலும், என் இதயத்தின் இடை நின்றது - என் நெஞ்சிடை நின்றது; என்னை கொன்று - என்னை இறக்கச் செய்தும், நீங்கலது - (என்னை விடாமலே பற்றியிருந்தது; (அது), உன் குலம் பூண் மன்றல் ஆகமாம் காந்தம் மாமணி இன்று வாங்க - இன்று உனது சிறந்த அணிகளை யணிந்ததும் (துளவம் முதலான மாலைகளால்) நன்மணம் கொண்டதுமான மார்பாகிய சிறந்த காந்தமாமணி உன்னைத் தழுவிய) இவ்வமயத்தில் ஒழித்ததனால், இப்பொழுது அகன்றது - இப்பொழுது நீங்கியது.

வரத்தினை: அயில்வேலாகக் கூறினார்; இங்கு, கைவேல் புண்ணுழை தைக்க வுழைக்குமானை போல்வான்' (அயோத்தி. கைகேசி. 15) காண்க. 'மரணாந்தானி வைராணி' என்பது முதநூல்; இங்கு, வயிரம் கல்லறையும் கடந்து சென்றமை காண்க. அயில்வேல் - இருபெயரொட்டு, கூரிய வேல் எனினும் ஆம்; 'அயில்வேற் செங்கையுடைய வன்கணீ ராருணன்' (தனிப்பா.). காந்த மாமணி - காந்தக்கல். கைகேயி பெற்ற வரத்தினால் இராமபிரானைப் பிரிந்து அதனால் தனக்கு நேர்ந்த மனத்துயர் இப்பொழுது அவனைத் தழுவியதால் நீங்கியதை, 'வரமெனும் அயில்வேல் உன்

ஆகமாங் காந்த மாமணி இன்று வாங்க அகன்றது' என்றார். வரம் இங்கு இரும்பு மயமான வேல்: இராமனுடைய மார்பு அதனை ஆகர்ஷிக்கும் காந்தம் என்க; உருவகவணி.

பி-ம். 1. நெடுவேல்.

3. அகன்றநின்.

4. மார்பமாம், ஆகமாள்; வரந்தர மணியிவனின், வரந்தந்த மணியினின், மரகதத்தாணியின். 118

4011. மைந்த ரைப்பெற்று வானுயர் தோற்றத்து மலர்ந்தார்
சுந்த ரப்பெருந் தோளினு யென்துணைத் தாளின்
பைந்து கட்களு மொக்கில ராமெனப் படைத்தாய்
உய்ந்த வர்க்கருந் துறக்கமும் புகழும்பெற் றுயர்ந்தேன்.

'சுந்தரம் பெரு தோளினுய் - அழகிய பெரிய தோள்களை யுடையவனே! மைந்தரை பெற்று - சிறந்த புதல்வரைப் பெற்று, வானுயர் தோற்றத்து - ஆகாயம்போ லுயர்ந்த காட்சியுடன், மலர்ந்தார் - விளங்கினவர்களும், என் துணை தாளின் - எனது இரண்டு கால்களிலுள்ள, பைந்துகள் களும் - பசிய தூளிகளுக்கும், ஒக்கிலர் ஆம் என - ஒப்பாகார் என்னும்படி, (திருமாலாகிய நீ என்னிடம் தோன்றி எனக்கு மிக்க பெருமையை), படைத்தாய் - உண்டு பண்ணினுய்; உய்ந்தவர்க்கு - தீவினையினின்று நீங்கின வர்க்கும், அரு - கிட்டுதற்கரிய, துறக்கமும் - வீட்டுலகத்தையும், புகழும் பெற்று உயர்ந்தேன் - கீர்த்தியையும் மேவிச் சிறப்புற்றனன்.'

மக்களைப்பெற்று உயர்ந்த உலகத்து ஒளிர்பவர் தன் கால் துகளுக்கும் நிகராகார் என்று பெருமிதத்துடன் தயரதன் கூறியது. திருமாலே தன் மகவாகப் போந்தமைகொண்டு என்க; (ஒப்பு): 'நிருப நின்குல மன்னவர் நேமிபண் டுருட்டிப், பெருமை யெய்தினர் யாவரே யிராமனைப் பெற்றார்' (அயோத்தி. மந்திரப். 35); 'அம்மாண கருக்கரச னரசர்க்கரசன், இம்மாண் கதைக்கோ ரிறை யாய விராமனென்னும், மொய்ம்மாண் கழலாற் றருநல்லற மூர்த்தி யன்னுன்' (பால. அரசியல். 1). வானுயர் தோற்றத்து: 'வானுயர் தோற்றமெவன் செய்யும்' (குறள். 272). 'வான்றோய் குடி' என்றாற் போல இலக்கணை வழக்கு. அருந்துறக்கம் - மகப்பெறு தவர் பெறற்கரிய வீடு; 'தென்புலம் வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் பொன்போற் புதல்வர்ப் பெறுநீரும்' (புறநா. 9) என்றபடி.

பெற்றோர் நல்வீட்டை யடைவதற்கு அவர் தம் புதல்வர்ப் பேறே காரணம் என்றது காண்க.

பி - ம். 1. கொற்றத்து ; மலர்ந்த, வாழ்ந்தார்.
2. தோளினர் ;
4. உயர்ந்தவர்க்குறும். 119

'மைந்தரைப் பெற்று வானுல காள்வரென் றுலகில்
அந்த ரத்தவ ருரைக்கின்ற வாய்மையின் றகவால்
நின்றனைப் பெற்று நேயமா லெழுத்தெட்டு நினையா
உய்ந்த மாதவ ருலகுறுந் துறக்கநா டுற்றேன்.'

என்று சில ஏட்டுப் பிரதிகளிற் பாடம்.

4012. பண்டு நான்றொழுந் தேவரு முனிவரும் பாராய்
கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி
புண்ட ரீகத்துப் புராதனன் றன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்தோ ராசனத் திருத்தினை யழக.

'அழக - அழகுடையவனே! பண்டு - முன்பு; (பூமியில் மனிதனு யிருந்தபோது), நான் தொழும் தேவரும் முனிவரும் - என்னால் வணங்கப்பெறும் தேவர்களும் முனிவர்களும் (இப் பொழுது, எனை கண்டு கண்டு - என்னைப் பலமுறையும் நோக்கி, கைதலம் குவிக்கின்ற காட்சி - கைகுவித்து வணங்குகின்ற காட்சியை, பாராய் - நோக்காய்; (இன்னும் என்னைத் திருமாலின்) புண்டரீகத்து - உந்தித்தாமரையில் உதித்த, புராதனன் தன்னொடும் - பழமையானவனான பிரமனோடும், பொருந்தி - சமமாக நின்று, அண்டம் மூலத்து - அண்டகோளத்தின் மீதுள்ளதான, ஓர் - ஒரு, ஆசனத்து இருத்தினை - பீடத்தில் அமரச்செய்தாய்.'

தேவர்களும் முனிவர்களும் இடையறாது நோக்கித் தயரதனைக் கைகூப்பி வணங்கியது, இராமபிரான் அம்மன்னன் வயிற்றுத் தோன்றி அரக்கராதிகளை யழித்து நல்லோரைப் புரந்தமைபற்றி யென்க. புண்டரீகம் - தாமரை; 'கப்யாஸப் புண்டரீகம்' என்பது வேதம்; 'நெறிப் புண்டரீக மன்ன முகத்தியர்' (யுத்த. 948). அழக: 'அல்லை யாண்டமைந்த மேனி யழகனும்' (அயோத்தி.

குகப். 42). முதலிரண்டடிக்கு: தொழப்படுந்தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத், தொழப்படுந் தேவர்தம்மால் றொழு விக்குந்தந் தொண்டரையே (தேவா: *1199:5*):

பா-ம். 2. கொண்டெமைக்.

3. புண்டரிகப்; புரவலன்; பொருந்த, பொருந்தத்.

4. துண்டமூலத் தொராசனத்து, அண்டர் மூவரோ டாசனத்து, அண்ட மூலத் திலரசென; திருத்திய. 120

## தயரதன் சீதையினருகிற் சென்று, வணங்கிய பிராட்டியைத் தேற்றல்

4013. என்று மைந்தனை யெடுத்தெடுத் திறுகுறத் தழுவிக்
குன்று போன்றுள தோளினன் சீதையைக் குறுகத்
தன்று ணைக்கழல் வணங்கலுங் கருணையாற் றழுவி
நின்று மற்றிவை நிகழ்த்தின னிகழ்த்தரும் புகழோன்

என்று - என்று சொல்லி, மைந்தனை - புதல்வனை, குன்று போன்று உள தோளினன் - மலைபோன்று (உயர்ந்து) ஒளிரும் தோள்களை உடையவனான தயரதன், எடுத்து எடுத்து - பலமுறை தூக்கி, இறுகுற தழுவி - அழுந்துமாறு கட்டி அணைத்து(ப் பின்பு), சீதையை குறுக - சீதாதேவியை அணுக; (அவள்), தன் துணை கழல் வணங்கலும் - தன்னுடைய இரண்டு பாதங்களையும் பணிந்த அளவில், நிகழ்த்தரும் புகழோன் - சொல்லுதற்கரிய கீர்த்தியுடையவனான தயரதன், கருணையால் தழுவி நின்று - (அவளை) அருளொடும் அணைத்து நின்று, இவை நிகழ்த்தினன் - இவற்றைக் கூறினன். இவற்றை அடுத்த மூன்று கவிகளிற் காண்க. மற்று: அசை.

நிகழ்த்தரும் புகழோன்: 'வாய்மையு மரபும் காத்து மன் னுயிர் துறந்த வள்ளலாதலின்; புரவலர்தம் புரவலனே பொய்ப் பகையே மெய்க்கணியே புகழின் வாழ்வே' (ஆரணிய. *197*) என்று சடாயு புகழ்ந்தமை காண்க. 'அரசர்க் கரசன், செம்மாண் டனிக் கோல் உலகேழினும் செல்ல நின்றான்' (பால. அரசியல். *1*).

பா-ம். 1. எடுத்தணைத்து.

2. போன்றுயர்; குறுகி.

3. தாழ்தலும்.

4014. நங்கை மற்றுநின் கற்பினை யுலகுக்கு நாட்ட
அங்கி புக்கிடென் றுணர்த்திய வதுமனத் தடையேல்
சங்கை யுற்றவர் தேறுவ துண்டது சரதம்
கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல்.

'நங்கை - நங்காய்! நின் கற்பினை - உனது கற்பின் மகிமையை, உலகுக்கு நாட்ட - உலகத்தில் எவரேனும் சந்தேகித்திருப்பின் அந்தச் சங்கையை நீக்க, 'அங்கி புக்கிடு - தீயில் வீழ்தலைச் செய்', என்று - என்று, உணர்த்திய அது - (இராமன் உன்னை நோக்கிக்) கட்டளையிட்டதான அவ்வார்த்தையை, மனத்து அடையேல்-உள்ளத்துக் கொள்ளாதே; சங்கை உற்றவர் - உள்ளத்தில் ஐயம் உற்றவர்கள் தம், (அந்த ஐயம் நீங்கும்பொருட்டு), சரதம் - சத்தியம் செய்யச் சொல்லி, அது தேறுவது உண்டு - அந்தச் சங்கையினின்றும் தெளிவதுண்டு; (இஃது உலக வழக்காதலின்), கங்கை நாடு உடை கணவனை முனிவு உற கருதேல் - கங்கையாறு பாயப்பெற்ற நாட்டுக்கிறைவனும் உனது கணவனும் ஆன இராமன்மீது சினம் கொள்ளக் கருதவேண்டாம்.

நங்கை: அண்மைவிளி. அங்கி: அக்கினியின் தமிழாக்கம். தயரதன் உலகியலைக் கூறிப் பிராட்டியைத் தேற்றுகின்றான். கங்கை நாடுடைக் கணவன்; (ஒப்பு): 'கோசல நாடுடை வள்ளல்' (யுந்த: 1210). இலக்குவனைக் 'கங்கைக் கிறைவன்' (அயோத்தி: நகர் நீ: 117) என்பர். நாட்டினைப் பரதற்கு ஈந்தபோதிலும், இங்ஙனம் கூறியது அவர்களின் பிறப்புரிமைபற்றி என்க. அன்றி முதனூலில் இராமபிரான் தன்னைப் பரதனுடைய பிரதிநிதியாகவே கூறியதும் காண்க.

பி - ம். 1. நின்பெருங் கற்பினை; உலகினின்; காட்ட.
2. உரைத்தனன்; மனத்திடையே.
3. தேறுவதுண்டரு.
4. முனிவென்க. 122

4015. பொன்னைத் தீயிடைப் பெய்வதப்
பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது
மனக்கொளல் தகுதி

உன்னைக் காட்டினன் கற்பினுக்
கரசியென் றுலகில்
பின்னைக் காட்டுவ தரியதென்
றெண்ணியிப் பெரியோன்.

'பொன்னை தீ இடை பெய்வது - பொன்னினை அக்கினியில் இட்டு உருக்குதல், அ பொன் உடை தூய்மை தன்னை காட்டுதற்கு என்பது மனம் கொளல் தகுதி - அந்தப் பொன்னினது களங்கமற்ற தன்மையைக் காட்டுதற்கே யாகும்' என்பதனை மனம் கொளல் தகுதி - உள்ளத்தே கொள்வது பொருத்தமுடைத்து; இ பெரியோன் - இந்த பெருந்தகையான இராமபிரான், உலகில் - இவ்வுலகில் (இத்தருணமில்லையானால்), பின்னை - பின்னர், காட்டுவது அரியது - உன் கற்பின் திறத்தைப் பிறர் அறியுமாறு செய்வது இயலாது, என்று - என்று, எண்ணி - நினைந்து, (உன்னைத் தீப்புகுமாறு செய்து), கற்பினுக்கு அரசி என்று உன்னை காட்டினன் - கற்பினுக்கரசி என்று உன்னை அறிவித்தான்.

கற்பினுக் கரசியென் றுன்னைக் காட்டினன் என மாற்றுக; 'கற்பினுக் கரசியைப் பெண்மைக் காப்பினை' (யுத்த. 3952); 'திட்டி விடமன்ன கற்பின் செல்வியை' (யுத்த. 1284) என்றன காண்க. பிறிது மொழிதல் அணி. இச்செய்யுட்கு, (ஒப்பு): 'அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய், நட்டாலு நண்பல்லார் நண்பல்லர், கெட்டாலு மேன்மக்கள் மேன்மக்களே சங்கு, சுட்டாலும் வெண்மை தரும்' (மூதுரை.).

பி - ம். 2. பெய்தவப், பெய்வது.
2. கொளக்கருதி, கொளத்தகுதி.
4. பின்னைக் காட்டுதற்கு; அருமை; அப்.



4016. பெண்பி றந்தவ ருருந்ததி யேமுதற் பெருமைப்
பண்பி றந்தவர்க் கருங்கல மாகிய பாவாய்
மண்பி றந்தக முனக்குநீ வானின்றும் வந்தாய்
எண்பி றந்தநின் குணங்களுக் கினியிழுக் கிலையால்.

'பெண் பிறந்தவர் - பெண்ணாகப் பிறந்தவர்களாகிய, அருந்ததியே முதல் - அருந்ததியே முதலான, பெருமை பண்பு - பெருமை

சான்ற கற்பின் நலம், இறந்தவர்க்கு - மிக்கவர்களுக்கு, அருகலம் ஆகிய பாவாய் - அருமையான அணிகலம் போன்று ஒளி செய்கின்ற, பாவை போன்ற சீதையே! உனக்கு பிறந்தகம் மண் - உனக்குப் பிறப்பிடமோ (சாதாரண மக்கட்குப் போலன்றி) பூமியாகும்; நீ வானின்றும வந்தாய் - நீ பரமபதத்திலிருந்து (திருமால் இராமபிரானுகத் தோன்றியபோது சீதையாக) உடன்றேன்றினை; இனி - (இங்ஙனம்) சிறப்பெய்தியதால், நின் எண்பு இறந்த குணங்களுக்கு இழுக்கு இலை - உன்னுடைய மதிக்க முடியாத நற்பண்புகட்கு எவ்விதமான களங்கமுமில்லை'. ஆல்: அசை.

அருந்ததியே முதற் பெருமை; 'சீலமின்ன தென்றருந்ததிக் கருளிய திருவே' (அயோத்தி. சித்திர. 15) என்பது இராமபிரான் கூற்று. 'அருந்ததிக் கற்பினஞ்சொல்' (ஆரணிய. 284); அருந்ததியெனத்தகைய சீதை' (கிட்கிந்தா. 845); 'அருந்ததிக் கற்பினுளுக் கழிவுண்டோ' (யுத்த. 2838); 'அருந்ததியும் வந்தனை செயஞ் சொலிள வஞ்சி' (யுத்த. 698); 'காதலி கற்பு காசினியின் மீதலால், மீதலமிசை யருந்ததியு மேத்துவ, தாதலை யனகனே யறிவல் யானெனக், கோதிலா வருமறை முனிவன் கூறினன்' (உத்தர. அசுவமேத. 287); 'பூதலமிசை யருந்ததியும் போற்றிய தாதலை யறிந்திருந்து' (உத்தர. அசுவமேத. 292); பண்பு இறத்தல் - பண்பு மிகுதல். 'இறப்ப நினையுங்கால் இன்னுதெனினும், பிறப்பினையாரு முனியார்' (நாலடி. 174); அருங்கலம் - அரிய ஆபரணம். 'நாவினிற் கருங்கலம் நமச்சிவாயவே' (தேவா. 1182); மண் பிறந்தகம், வானின்று வந்தாய் என்பது கருவாய்ப்பட்டுப் பிறவாத அயோநிஜை யென்பதைக் காட்ட; மண் பிறந்தகம் என்றதில் 'அகழ்வாரைத் தாங்கும்' நிலத்திடத் துதித்தவளாதலின் உனக்குப் பொறுமைக் குணம் வேண்டும் என்ற தொனியும் காண்க. இதே பிறந்தகமாகிய மண்ணையே சிறிது மாற்றிக், 'கோளில் பீடம்போல் நிலத்தினிற் பிறந்தமை நிரப்பினுயரோ' (யுத்த. 3957) என்று இராமபிரான் அவளைப் பழித்தது காண்க. 'ஆகாசம் போட்டது பூமி ஏந்திற்று' என்பது ஓர் பழமொழிக் கருத்து இச் செய்யுள் மூன்றுமடியில் அமைந்திருத்தல் காணலாம். மற்றும் இவள் மண்மகள் என்பதை, 'புனைக்காயாம்பூ நிறத்தானை யன்றி

மற்றோர் பூமனை யான், மனத்தால் வாக்கா லினையேனேல் 'வழிதா வெனக்கு மண்மகளே' (உத்தர. அசுவமேத. 296) என்பது கொண்டும் காணலாம்.

பி - ம். 1. பிறந்தவர்க்கு ; யெனுமுதற்.
3. மாறின்றி வந்தாய், அருந்தவமாகிய பாவாய்.
4. இனியிழுக் கிழையேல். 124

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

எனக்கு மெண்வகை முனிவர்க்கு மிமையவருலகந்
தனக்கு மற்றிவள் தாயென மனக்கொளத் தகுதி
மனத்தின் யாவர்க்கு மறுவறுத் திடு மிவண் மலரான்
புனத்து ழாய்முடிப் புரவல னீநின்ற புகழோய்.

## பிறகு தசரதன் இலக்குவனைத் தழுவிப் பாராட்டுதல்

4017. என்னக் கூறிட வேந்திழை திருமனத் தியாதும்
உன்னச் செய்வதோர் முனிவின்மை மனங்கொளா [வுவந்தாள்
பின்னைச் செம்மலவ் விளவலை யுள்ளன்பு பிணிப்பத்
தன்னைத் தானெனத் தழுவினன் கண்கணீர் ததும்ப.

என்ன கூறிட - என்று இவ்வாறு இயம்ப, அவ் ஏந்திழை - அணிகள் புனைந்த அச் சீதாதேவி (இராமன் தீப்புகுமாறு கூறியதைக் குறித்துத் தன்), திருமனத்து யாதும் உன்ன செய்வது ஓர் முனிவின்மை - உயர்ந்த உள்ளத்தில் நினைவு கூர்கின்ற ஓர் வெறுப்பின்மையை, மனம் கொளா உவந்தாள் - தன் உள்ளத்தில் ஏற்று மகிழ்ந்தாள் ; பின்னை - பிறகு, செம்மல் - சிறப்பு வாய்ந்த தயரதன், உள் அன்பு பிணிப்ப - மனத்தை அன்பானது கட்ட, (அன்பாரும் உள்ளத்தனாய்), கண்கள் நீர் ததும்ப - விழிகளில் உவகைக் கண்ணீர் நிறைய, அவ் இளவலை - இராமபிரானுடைய தம்பியான இலக்குவனை, தன்னை தான் என தழுவினன் - தன்னையே தான் தழுவினதுபோல் (ஈருடம்பென்று தோன்றாது ஒருடம்பென்று புலப்படுமாறு இறுக) அணைத்தான்.

மனம் கொளா - செய்யா என்னும் வாய்பாடு. இளவல் - அல் பெயர் விகுதி. உள் - உள்ளத்தை. தன்னைத் தானெனத் தழுவினன் - புதல்வரை 'அங்கப் பிரத்யங்கம்' என்பர்; எனவே அஞ்சச்சும் பாவனையும் தன்னைப் போன்ற புதல்வன் இலக்குவனைத் தழுவினன் என்க. கண்கணீர் - ஆனந்தக் கண்ணீர். தன்னை என்பதற்குத் தமையனை எனக் கொண்டு, இலக்குவன் தமையனான இராமபிரானைத் தழுவியது போலும் என்றும் உரைப்பர். இங்கு 'முனிவின்மை மனங்கொளா வுவந்தாள்' என்று கூறப்படினும், உத்தர காண்டத்துக் காணப்பெறும் ஒரு செய்தி இங்குக் காணத்தகும். அசுவமேத யாகப் படலத்து வான்மீக முனிவன், தன்னை அடிபணிந்து நின்ற இராமனை நோக்கி, 'காதலி கற்பு காசினியின் மீதலால், மீதலமிசை யருந்ததியு மேத்துவ, தாதலை யனகனே யறிவலியான்' என்றும், 'அன்னது வாய்மை யொன்றுதிக் கங்கைபோல், மன்னிய குலத்தொடு மாசு கூறுவோர், துன்னிய நரகிடைத் துய்ப்பரான்' (உத்தர. அசுவமேத. 288) என்றும் கூறினன். அப்பொழுது இராமபிரான், 'முனிவ நீயருளிய மொழியை வானவர், அனைவரும் யானு முன் னறிவ மாயினும்,

கனை கடலுலகுளோர் காண்டல் வேண்டுமென், றினையன விராகவ னெடுத் தியம்பினன்' (உத்தர. அசுவமேத. 398); இதனைச் செவியேற்ற மைதிலி, 'ஒன்றிய கேண்மையா னுவந்த போதினும், கன்றிய போதினும் கசந்த போதினும், நன்றென நிலைகெடா நலங் கொள் கற்பினை, இன்றொரு பொருளினு லியம்பற் பாலதோ' (291); 'பூதல மிசை யருந்ததியும் போற்றிய, தாதலை யறிந்திருந் தவனி மீமிசைத், தீதிலென் கட்டளை நிகழுமேவிய, காதலன் றீதெனிற் கற்புண்டாகுமோ' (292) என்றமை காணத்தகும். இவ்வாறு மனவமைதியின்றியே 'புனைக் காயாம்பூ நிறத்தானை யன்றி மற்றோர் பூமனையான், மனத்தால் வாக்கா னினையேனேல் வழிதா வெனக்கு மண்மகளே' (296) என்றும், 'வருந்தியே பயந்த நீ மற்றென் கற்புமவ், வருந்ததிக் கற்பு மொன்றுன தென்றிடின், பெருந்துதி மாநிலம் பிளத்தி யென்று,' முடிவாகக் கூறி இருந்துதி அமரருமேத்தும் கற்பினுள் தன் உலக வாழ்வை

நீத்தமை காண்க. 'தீயினாற் சுட்டபுண் உள்ளாறும், ஆறாதே, நாவினாற் சுட்டவடு' (குறள். 129) என்பது இங்குக் காணத்தகும்.

பி-ம். 1. என்னைச்; சொல்லியது, சொல்லிய.

2. உன்னற் செய்வதோர், முன்னிச் செய்வதோர், முன்னைச் செய்யவோர், முன்னைச் செய்வினை; மனக்கொளாவுவர்தான்.

3. செம்மலை; பிணிக்கும், பிணிக்க.

125

4018. கண்ணி னீர்ப்பெருந் தாரைமற்
றவன்சடைக் கற்றை
மண்ணி னீத்தமொத் திழிதரத்
தழீஇநின்று மைந்த
எண்ணி னீக்கரும் பிறவியு
மென்னெஞ்சி னிறந்த
புண்ணு நீக்கினை யுமையனைத்
தொடர்ந்துடன் போந்தாய்.

கண்ணின் நீர் பெரு தாரை-(தயரதன், தனது) விழிகளினின்று பெருகும் நீர் ஒழுக்கானது, அவன்-அவ்விலக்குவனுடைய, கற்றை சடை-தொகுதியான சடையினின்று, மண்ணின் நீத்தம் ஒத்து இழிதர-நீராட்டினாற் பெருகுகின்ற நீர்ப்பெருக்கொப்ப இழியுமாறு, தழீஇ நின்று-அவனைத் தழுவிக்கொண்டே, 'மைந்த-புதல்வா! உமையனை-உன் அண்ணனை, தொடர்ந்து-(அவன் வனத்திற்கு வந்தது தொட்டு) விடாது பின்பற்றி (அவனுக்கு விருப்பமான பல சேவைகளையும் புரிந்து), உடன் போந்தாய்-அவனுடனே (நீங்கா நிழல் போன்று) வந்தாய்; அதனால், எண்ணில்-கணக்கற்ற, நீக்க அரு பிறவியும்-எளிதில் போக்கற்கரிய பிறப்பினையும், என் நெஞ்சின்-என உள்ளத்தில், இறந்த-மிக்குள்ள, புண்ணும் நீக்கினை-இடர்ப்பாட்டினையும் இல்லையாகச் செய்தாய். மற்று: வினைமாற்று,

தயரத மன்னன் இலக்குவனை இறுகத் தழுவியபோது அவன் விடுத்த கண்ணீர் புதல்வன்மீது நிறைந்து, அவன் சடையின் வழியாகத் தரையில் வீழ்ந்தது, குளிப்பாட்டிய நீர் கீழ் பாய்வது போன்றது எனப்பட்டது. தற்குறிப்பேற்றவணி. கண்ணினீர்; 'கண்ணினீரினிற் பாதம் கழுவினர்' (ஆரணிய. 549); அவன் சடை-இலக்குவன் சடை. மாற்றாந் தாயான கைகேயி 'தாழிருஞ்

சடைகள் தாங்கி, பூழி வெங்கான நண்ணுமாறு' இராமபிரானுக்குக் கட்டளை யிட்டனள் அன்றி, இளைய பெருமாளுக்கு இடவில்லை. எனினும், தமையன் மீதுற்ற பரிவால், இலக்குவனும் தாழிருஞ் சடைகள் தாங்கினன் போலும். இதனை, 'தான் புனை சீரையைத் தம்பி சாத்திட' (அயோத்தி. நகர் நீ. 153) என்ற செய்யுட்கொண்டு, சீரை சாத்தவே தவக்கோலத்துக் கியைந்த சடை முதலியனவும் கொண்டனன் என்றுய்த்துணர்க. 'காசுங் கறையுடைக் கூறைக்கு மங்கோர் கற்றைக்கும்' என்பது (பெரியாழ். திருமொழி.4; 6) இலக்கு வன் சேவையால் 'வானோர்க்குயர்ந்த வுலகம்' புக்கவன்; இராம பிரான் திருவடிப் பெருமையையும் வன்மையையும் அவனுக்கு நேர் எதிரியாக நின்று அவன் வாளிபட்டு மரித்த வாலி கூற்றைக் கொண்டு அறிக. 'கைதவமியற்றி யாண்டும் கழிப்பருங் கணக் கில் தீமை, வைகலும் புரிந்துளாரும் வானுயர் நிலையை வள்ளல், எய்தவர் பெறுவர் என்றால் இணையடி யிறைஞ்சி யேவல், செய்தவர் பெறுவ தையா செப்பலாம் சீர்மைத் தாமோ' (கிட்கிந்தா. 362) என்றது வாலி கூற்று. இனி, பரதன் சடை புனைந்தமையும், 'கண்ணன் கண்ணெனும், புண்டரீகம் பொழிபுனலவன் சடா, மண்டிலம் நிறைந்துபோய் வழிந்து சோரவே' (அயோத்தி. கிளை கண்டு. 54) என்றதனால் காண்க. மண்ணின் நீத்தம் - நீராட்டிப் பெருகிய நீர்ப் பெருக்கு. 'மண்ணிய சென்ற வொண்ணுதலரிவை' (குறுந். 292); 'வார்மணிப் புனலான் மண்ணை மண்ணு நீராட்டும் கண்ணன்' (அயோத்தி. கங்கைப் 39); எண்ணில் - ஆலோசிக்கு மிடத்து எனினுமாம். எண்ணில் பிறவி - கணக்கிட முடியாத பிறப்புக்கள். 'தொல்லைநம் பிறவியெண்ணிற் றொடுகடல் மணலு மாற்றுவெல்லைய' (சீவக. 270); நீக்கரும் பிறவி - வினை நீங்கின லன்றி போக்கற்கரிய பிறப்பு; அந்த வினை நீங்குதல் இறைவன் திருவருளாலேயே என்க. நீக்கரும் பிறவி நீங்கப் பெற்றது இலக்கு வன் இராமபிரானுக்கு ஆற்றிய சேவையாலென்க. லக்ஷ்மணோ லக்ஷ்மி சம்பந்நகா என்று இளைய பெருமானிடத்துக் கைங்கரிய லக்ஷ்மி குடியிருந்தமையைப் பெரியோர் பகர்வர். 'பின்னும் பகர் வாள் மகனை யிவன் பின்செல் தம்பியென்னும் படிக்கன்றடி யாரினின் ஏவல் செய்தி' (அயோத்தி. நகர் நீ. 151) என்றதும் காண்க. இலக்குவன் புரிந்த அரிய சேவையைக் குகப்படலம், கங்கைப் படலம், சித்திரகூடப் படலம் என்ற இவை கொண்டு தெளிக. தம்பி தனக்குப் புரிந்த அரிய சேவையைப் பிறர் கூறுவது ஒருபுற

மிருக்க, இராமபிரான் மனமிரங்கிக் கூறியவற்றைக் காண்டல் தகும். 'அறப்பாலுளதேலவன் முன்னவனுய்ப், பிறப்பானுறின் வந்துபிறக்க' (ஆரணிய. 1106) என்றும், 'பயிலுங் காலம் பத்தொடு நாலும் படர்கானில், அயில்கின் றேனுக் காவன நல்கி யயிலாதாய்' (யுத்த. 2583) என்றும் வருவன கொண்டு தெளிக.

பி - ம். 2. மன்னு ; நின்ற.

3. எண்ணரி ; துன்பமென்னெஞ்சி நின்றகலா.

4. நீக்கி, நீத்தனை ; உனையனை, நுமையனை, தமையனை ; போந்து, போந்தே. 126

4019. புரந்த ரன்பெரும் பகைஞனைப் போர்வென்ற வுன்றன்
பரந்து யர்ந்ததோ ளாற்றலே தேவரும் பலரும்
நிரந்த ரம்புகல் கின்றது நீயிந்த வுலகின்
அரந்தை யாம்பகை துடைத்தற நிறுத்தினை யைய.

'ஐய - அழகனே ! புரந்தரன் பெரு பகைஞனை - இந்திரனுக்குப் பெரும் விரோதியான இந்திரசித்தினை, போர் வென்ற - சமரில் பொருது வென்று அழித்த, உன்தன் - உன்னுடைய, பரந்து உயர்ந்த தோள் - அகன்று உயர்ந்த தோள்களின், ஆற்றலே - வல்லபமே, தேவரும் பலரும் நிரந்தரம் புகல்கின்றது - தேவர்களும் பிறர் பலரும் இடைவிடாது புகல்வதாகும் ; நீ - நீ, இந்த உலகின் அரந்தை ஆம்பகை - இந்த உலகத்துக்கு துன்பத்தைத் தருகிற பகையை, துடைத்து - நீக்கி, அறம் நிறுத்தினை - தருமத்தை நிலை பெறச் செய்தாய்'.

புரந்தரன் - இந்திரன். பகைவரை அழிப்பவன் என்பது பொருள். பெரும் பகைஞனைப் போர் வென்ற உன்றன் - இந்திரசித்தாகிய பகைவனைவென்ற உன்னுடைய என்க. ஏகாரம் - தேற்றம். நிரந்தரம் - எப்பொழுதும். 'புழைத்த போலநீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்' (சுந்தர. 335) ; 'நிரந்தரங் கணங்களோடும்' (யுத்த. 1990) ; உலகின் அரந்தையாம் பகை துடைத்தது - பூவில் துட்ட நிக்கிரகசிட்ட பரிபாலனத்தின் பொருட்டு, இராமபிரானுதி நால்வரில் ஒருவனுக அவதரித்தவன் ஆகலின் இங்ஙனம் கூறப் பட்டது. 'உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்' (பால. திருவவ. 122) எனத் தொடங்கும் செய்யுளைக் காண்க. இலக்குவன் அவ

தாரம் கூறும்பொழுதே, 'தணையவிழ் தருவுடைச் சயில கோபனும், கிளையுமந்தர மிசைகெழுமி யார்ப்புற, வளைபுகு மரவினோ டலவன் வாழ்வுற, இளையவற் பயந்தன னிளைய மென்கொடி' (பால. திருவவ. 109)ம் என்றுரைத்தது இங்குக் காணத்தகும். அரந்தை-துன்பம். 'அரந்தை வெம்பிறவி நோய்க்கோ ரருமருந் தனைய வையர' (கிட்கிந்தா. 349); 'இந்திரன் பகைஞனு மிராமன் தம்பிகை, மந்திர வம்பினால் மடிதல் வாய்மை (யுத்த. 1301) என்பது கொண்டு, பதினான்காண்டுகள் ஊண் உறக்க மின்றி மேகநாதனைக் கொல்ல வந்தவனே இலக்குவன் ஆதல் காண்க.

பி - ம். 1. பொரரா வென்றது.

2. வரம்பு, பரம்பு; உய்ந்த, பரந்துயர்ந்த, தேவரும், வானமு மண்ணும்.

3. புகழ்கின்றது; நிறியினில்லா.

4. அறம் நிறுத்தினை, நிமிர்ந்தது வுலகின். 127

தயரதனை இராமன் வரம் கேளென அப்பிரான் கூறுதல்

4020. என்று பின்னரு மிராமனை யானுனக் கீவ
தொன்று கூறுதி யுயர்குணத் தோயென வுனையான்
சென்று வானிடைக் கண்டிடர் தீர்வனென் றிருந்தேன்
இன்று காணப்பெற் றேனினிப் பெறுவதென் னென்றான்.

என்று - என்று பகர்ந்து, (தயரதன்) பின்னரும் இராமனை - மீட்டும் இராமனைப் பார்த்து, 'உயர் குணத்தோய் - பெருமைமிக்க பண்புடையவனே, யான் உனக்கு ஈவது ஒன்று கூறுதி - யான் உனக்கு அளிக்கத்தக்க ஒரு வரம் கேட்பாயாக', என - என்று மொழிய, (அதற்கு இராமபிரான்) 'யான் - யான், உனை - உன்னை, வான் இடை சென்று - விண்ணகம் சென்று, கண்டு - தரிசித்து, இடர் தீர்வென் - மனத்துயர் நீங்கப் பெறுவேன்', என்று - என்று, இருந்தேன் - நினைத்திருந்தேன்; அவ்வாறன்றி, (நீயே வந்ததனால்) இன்று - இப்பொழுது, காண பெற்றேன் - தரிசிக்கும் பேறு பெற்றேன்; இனி பெறுவது என் - இனி யான் பெறக்கூடிய பேறு என்ன உள்ளது', என்றான் - என்று பகர்ந்தான்.

இடர் - தான் வனம் ஏகப், பிரிவாற்றாது தந்தை இறந்ததும், அவன் மரணத் தருவாயில் உடனிருக்கப் பெறாமையும் என்க. கைகேயி, வனம் ஏகுமாறு இராமபிரானுக்குக் கட்டளை யிட்டவுடன், இராமபிரான் அக் கட்டளையை மேற்கொண்டு வனம்புகு முன்னர், தந்தையான தயரதனைச் சென்று கண்டதாக முதனூல் கூறும். முன்னரே இராமன் வனம் புகுவான் என்னும் மறுக்கத்தால் மூர்ச்சையுற்று ஏங்கிக் கிடந்த தயரதன் முன்பு, மீட்டும் இராமபிரான் சென்றிருப்பின், பின்னும் சிலமணி நேரங் கழித்துப் பிரியும் உயிர் முன்கூட்டியே பிரிந்திருக்கும். இந்தச் சங்கடமான நிலையைத் தவிர்ப்பான் வேண்டியே 'மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையும் கொண்டேன்' (அயோத்கி : கைகேசி: 110) என்று இராமபிரான் கூறியதாகக் கம்பநாடர் வரைவர். இந்த அமைப்பு உலகியற்குப் பெரிதும் ஒத்ததாதல் உய்த்துணர்க. இங்கு, பாரதம்; பதினேழாம் போரில் தான் செய்த புண்ணியமனைத்தும் வேதியனாகப் போந்திரந்தவற்கு உதிர நீரட்டி யளித்த கன்னன் பால் மகிழ்ந்து அவனுக்குத் தன் விசுவரூபம் காட்டியருளிய பெருமான், சில வரங்களைக் கேட்குமாறு கன்னனிடம் சொல்ல க்கன்னன், 'அமல நாரணனைக் காணப்பெற்ற பேறே பெரும் பேறு' எனக் கூறியதை ஒப்பு நோக்குக. (வி· பா. 17-ஆம். 245). 128

4021. ஆயி னும்முனக் கமைந்ததொன் றுரையென வழகன்
தீய ளென்றுநீ துறந்தவென் தெய்வமு மகனும்
தாயுந் தம்பியு மாம்வரந் தருகெனத் தாழ்ந்தான்
வாய்தி றந்தெழுந் தார்த்தன வுயிரெலாம் வழுத்தி.

'ஆயினும் - ஆனாலும், உனக்கு அமைந்தது ஒன்று உரை - உனக்குத் தக்க ஒரு வரத்தை (நீ) கேட்பாயாக', என - என்று, (தயரதன்) கூற; (அதற்கு), அழகன் - பேரழகன் ஆன இராமபிரான், 'தீயள் என்று நீ துறந்த - கொடியவள் என்று நீ கைவிட்ட, என் தெய்வமும் - எனக்குத் தெய்வம் போன்று சிறந்தவளான கைகேயியும், மகனும் - (அவளது) புதல்வனான பரதனும், (எனக்கு முறையே), தாயும் தம்பியும் ஆம் - தாயும் தம்பியும் ஆம்படியான, வரம் தருக - வரத்தைத் தந்தருள்வாயாக', என - என்று, தாழ்ந்தான் - வணங்கினான்;

(அப்பொழுது இவனுடைய நற்குண விசேடத்தைக் கண்டு பூதலத்துள்ள) உயிர் எலாம் - சீவராசிகள் அனைத்தும், வாய் திறந்து எழுந்து ஆர்த்தன - வாய் திறந்து துதித்து ஆர்ப்பாட்டம் செய்தன -

தயரதன் இராமபிரானிடம் வரம் கேட்குமாறு சொல்ல, முன் தயரதன் கைகேயிக்கு அளித்த இரு வரங்களுமே ஏழு காண்டமாக விரிந்ததே, இன்னும் வரம் வேண்டுமா? என்று கூட இராமபிரான் நினைந்திருத்தல் கூடும். ஆயினும் தந்தை கட்டளையாதலின், தயரதன் முன்னர்த் தன் மனையாளல்லள் என்றும், மகன் அல்லன் என்றும், வெறுத்தொதுக்கிய கைகேயியையும் பரதனையும், மனைவியாகவும் மகனாகவும் ஏற்க வேண்டுவதின்றென்றும், அவர்களைத் தனக்குத் தாயாகவும் தம்பியாகவும் மட்டும், முறைப்படி அங்கிகரிக்க வேண்டும் என்றும் நயம்படக் கூறினான் இராமபிரான். மன்னன் இவர்களை வெறுத்தொதுக்கியதை; 'இன்னே பலவும் பகர்வானிரங்காதவளை நோக்கிச், சொன்னேனின்றே யிவளென் றாரமல்லள் துறந்தேன், மன்னே யாவான் வருமப்பரதன் றனையும் மகனென், றுன்னேன் முனிவாவவனுமாகா னுரிமைக் கென்றான்' (அயோத்தி. நகர்நீ : 50). என்று வருவது கொண்டு காண்க. சிறிய திருவடி கற்பிற் சிறந்த பிராட்டியை 'என பெரும் தெய்வம்' (சுந்தர : 1270) என்றான். இங்கு இராமபிரான் தாயிடத்தன்பு கூர்ந்து, என் தெய்வம் எனறமை காண்க தயரதனுக்குத் தீயவள் தனக்குத் தெய்வம் என்ற நயம் காண்க. கைகேயி கேட்ட வரங்களிலையேல் இராமாயண முழுக் கதைக்கே இடமின்மை உணர்க. 'அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமும், துரக்க நல்லறந் துறந்தனன் றூய்மொழி மடமான், இரக்க மின்மை யன்றோ வின்றிவ்வுலகங்களிராமன், பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின் றதுவே' (அயோத்தி. மந்தரை. 78) என வருதல் காண்க. இது கொண்டு அன்னனைத் தன் தெய்வம் எனப் போற்றியதன் உட் கருத்துணர்க. பின்னரும் 'கைகயன் தனயை முந்தக் காலுறப் பணிந்து' (யுத்த. மீட்சி. 343) என்று இராமபிரான் இராவணன் சங்காரத்தின் பின் அயோத்தி சென்று முதற்கண் கைகேயியையே வணங்கியதையும், அவனைப் பின் பற்றியே இலக்குவனும் சீதா தேவியும், அவளையே முதற்கண் வணங்கியதையும்

உணர்ந்து இராமபிரானுடைய கருத்தை அறிக. இங்கு இராமனை அழகன் என்றதால், திருமேனி யழகுமட்டுமல்ல சொல்லழகும் குறிக்கப்பட்டது காண்க.

பி-ம். 2. அனையான், உரையார்.

பி-ம். 2. உன் தேவியும்; சேயும்.

4. எடுத்தார்த்தன, எடுத்தழைத்தன; உலகெலாம் வாழ்த்தி. 129

## தசரதன் மறுமொழி

4022. வரத கேளெனத் தயரத னுரை செய்வான் மறுவில்
பரத னன்னது பெறுகதான் முடியினைப் பறித்திவ்
விரத வேடமற் றுதவிய பாவிமேல் விளிவு
சரத நீங்கல தாமென்றுன் றழீஇயகை தளர.

'வரத-வேட்டார்க்கு வேட்ட வரங்களை யீபவனே! கேள் - என் உரையைக் கேட்பாயாக!' என - என்று, தயரதன் உரை செய்வான் - தயரதன் (இராமனை நோக்கி) மொழிவானாகி, மறு இல் பரதன் - குற்றமற்ற பரதன், அன்னது பெறுக - (நீ வேண்டியபடி உனக்குத் தம்பியும் எனக்கு மகனுவதுமான) அம் முறையைப் பெறக் கடவன்; முடியினை பறித்து - (உனக்குச் சூட்டுமாறு கருதி யிருந்த மகுடத்தை(ச் சூட்ட வியலாதவாறு) வலிந்து கைப்பற்றி, (அதற்கு மாறுக உனககு), தான் இவ்விரதம் வேடம் உதவிய - தான் இந்தத் தவ வேடத்தைத் தந்த, பாவிமேல் - பாவியான கைகேயிமீது, விளிவு - நான் கொண்ட சினமானது, சரதம் நீங்கலது ஆம் - நிச்சயம் நீங்காததாகும்', என்றுன் தழீஇய கைதளர - என்று (இராமபிரானை) அணைத்த கரங்கள் தளருமாறு புகன்றுன்.

வரதன் - இராமனை நோக்கி விளித்தது. 'வரதன் பகர்வான்' (அயோத்தி. நகர்நீ. 137); மறுவில் பரதன் - எவ்விதமான குற்றமு மற்ற பரதன். 'கரதல முற்றுெளிர் நெல்லிகடுப்ப, விரத மறைப் பொருள் மெய்ந்நெறி கண்ட பரதன்' (பால. திருவவ. 121); 'மும்மையி னிறை குணத்தவன் நின்னினு நல்லன்' (அயோத்தி நகர் நீ. 5); 'முன்னை நுங்குல முதலுளோர் கடாம், நின்னை யாவரே நிகர்க்கு

நீர்மையார்' (அயோத்தி. பள்ளியடை. 119) என்றது கோசலை கூற்று. 'மறுவில் மைந்தனே' (அயோத்தி. பள்ளியடை. 122); 'கோதறு குணத்தினய்' (அயோத்தி. ஆற்றுப். 5) என்பன வசிட்டன் கூற்று. 'ஆயிரமிராமர் நின்கேழாவரோ தெரியிலம்மா' (அயோத்தி. குகப். 35) என்பது குகன் கூறியது. 'எனைத்துள மறையவை யியம்பற் பாலன, பனைத்திரள் கடகரிப் பரதன் செய்கையே' (அயோத்தி. கிளைகண்டு. 44); 'சேனுயர் தருமத்தின் தேவைச் செம்மையி ஞணியை' என்பன இராமபிரான் கூற்று. 'தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும் பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை' (பால. குலமுறை. 21) என்பது கவிக்கூற்று. 'மன்னுயிர் துறந்த வள்ளல் தூயவன் மைந்தனே நீ பரதன்முன் தோன்றினையே' (கிட்கிந்தா. 305) என்பது வாலி கூற்று. 'எத்தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்க ளெல்லாம், ஒத்தாற் பரதன் பெரிதுத்தம ஞத லுண்டோ' (கிட்கிந்தா. 269) என்பது இராமபிரான் பரதனைப் புகழ்ந்து கூறியது. 'தரும நீயலதில் லெனுந் தன்மையோய்' (யுத்த. 4120); 'எண்ணில் கோடி யிராமர்க ளென்னினும், அண்ணல் நின்னருளுக் கருகாவரோ, புண்ணியம் எனும் நின்னுயிர் போயினல், மண்ணும் வானும் மறித்துயிர் வாழுமோ' (யுத்த. 4118) என்பன கோசலையின் அன்பார்ந்த மொழிகள். 'அன்புருக் கொண்ட தாமென லாகுவான்' (யுத்த. 4082); இவை கொண்டு, பரதாழ்வானுடைய அரும்பெருங் குணப் பண்புகளை ஓர்க. 'மரணுந் தானி வயிராணி என்னும் முதனூல்; கடுத்த பகையும் கல்லறை கடவாது என்பது பழமொழி. ஆயினும், இதற்கு நேர் மாருகத் தயரதன் கைகேயினிடம் கொண்ட சினம். நட்பு, தயை, கொடை, கல்வி முதலிய பண்புகள் போன்று தயரதனுடைய ஆன்மாவை ஒட்டிச் சென்றது. தயரதன் அவள் காலில் வீழ்ந்து கெஞ்சியதையும், பொருட்படுத்தாது, அவள் ஒரே பிடிவாதமாக இராமனைக் காட்டிற்கு அனுப்பியதையும், இங்கு நினைவு கூர்க. பல்லாண்டுகள் பணியாற்றி இறந்துபோன ஓர் ரிவினியூ அதிகாரி விண்ணுலகம் படரும்கால் வழியில் செழித்திருந்த நிலங்களைக் கண்டு அவற்றிற்கு நீர்க்கூலி விதித்தார்களா என்று வினவியதாக ஒரு வரலாறுண்டு. அது போன்றதே இம்மன்னர் வெகுளி. வெகுளி நீங்கிலது என்பது; 'முடியினைப்

பறித்து' 'பாவ' என்ற சொற்களால் விளங்கும். தமையன் திருவடி நிலைகளைச் சுமந்து மீண்ட பரதன், அயோத்தி நகர்க்குட் செல்லாது, நந்திக் கிராமத்திலேயே இராமன் மீளும் அளவும், விரத வேடம் பூண்டிருந்தமைபற்றி 'மறுவில்' என்றான் எனினுமாம். இறுகுறத் தழுவிய கை தளர்ந்தது கைகேயியின் கடும் செயலை நினைவு கூர்ந்ததால் நிகழ்ந்த சோகத்தால் என்க. தயரதன் முன்னர் இராமபிரானைத் தழுவினன்; பின்னர் இலக்குவனைத் 'தன்னைத் தானெனத் தழுவினன்' அதன் பின்னர் இராமபிரானைத் தழுவியதாகச் செய்யுள் இல்லை. எனவே இங்குத் தழீஇய கைதளர என்றதால் (4020) வது செய்யுளில் 'என்று பின்னரும் இராமனை (த் தழுவி) என்று கூட்டிக் கொள்க.

பி-ம். 1. முடி; பறித்து.

3. விரத வேடமன்று, என்று.

130

## இராமபிரானது மொழியால் தயரதன் கோபந் தவிர்தல்

4023. ஊன்பி ழைக்கிலா வுயிர்நெடி
தளிக்குநீ யரசை
வான்பி ழைக்கிது முதலெனு
தாள்வுற மதித்து
யான்பி ழைத்தல் லாலெனை
யீன்றவெம் பிராட்டி
தான்பி ழைத்ததுண் டோவென்று
னவன்சலந் தவிர்ந்தான்.

(அதற்கு இராமபிரான்), 'ஊன் பிழைக்கிலா உயிர் - உடற்றொடர்பினைத் தவறுமற் பெற்ற பிராணிகளை, நெடிது அளிக்கும் - நன்கு பாதுகாக்க வேண்டிய, நீள் அரசை - பெரிய அரசுரிமையை, 'இது வான் பிழைக்கு முதல் - இது பெரிய குற்றத்திற்கு ஏதுவாகும்', எனு து-என்று கருதாமல், ஆள்வுற மதித்து - ஆளுமாறு எண்ணியதால், யான் பிழைத்தது அல்லால் - நான் தவறிழைத்தேனே யன்றி, எனை ஈன்ற எம்பிராட்டி - என்னைப் பெற்ற கைகேயி, தான் பிழைத்தது உண்டோ - தான் தவறு

செய்தது உண்டோ?' என்றான் - என்று கூறினான் இராமபிரான், அவன் - அந்தத் தயரதன், சலம் தவிர்ந்தான் - சினம் நீங்கப் பெற்றான்.

இதனை 'பின் குற்றமன்னும் பயக்குமா சென்றல் பேணேன், முன் கொற்ற மன்னன் முடிகொள்கெனக் கொள்ள பூண்ட, தென் குற்ற மன்றோ விகல்மன்னவன் குற்றமியாதோ' (அயோத்தி. நகர்நீ. 132) என்ற செய்யுளுடன் ஒப்பு நோக்குக. 'பயந்து நமைப் புரந்தாள் மதியின் பிழையன்று மகன் பிழையன்று மைந்த, விதியின் பிழைநீ யிதற் கென்னை வெகுண்டதென்றான்' என்பதும் காணத்தகும். முதல் - மூல காரணம். ஈனையீன்ற எம்பிராட்டி; 'விராவரும் புவிக்கெலாம் வேதமேயன, விராமனைப் பயந்தவெற்கு' (அயோத்தி. மந்தரை. 47) என்று கைகேயி அபிமானித்துக் கூறுதலும் இங்கே கருதத்தகும். பிழைத்தல் - தவறு செய்தல்; 'வேட்கின்ற வேள்வியின்று பிழைத்தது வென்றோம்' (யுத்த. 2953).

பி - ம். 1. பிழைத்திலா, பிழைத்திடா, பிழைக்கிலாது; அளிக்க நின்னுரையை, அளித்தரசுரிமை, அளித்திடுமுரவோய், அளித்த நின்னரசை.

2. பிழைக்கிது முதலெனுதநனையே மதித்த, பிழைக்கிலா மதித்தது முதலென; மதித்த, பிழைக்கிது முதலெனத் தளர்வதே மதித்த. 131

## தயரதன் இராமபிரானுக்கு வரமளித்தது கண்டு தேவர்கள் வியந்து கூறுதல்

4024. எவ்வ ரங்களுங் கடந்தவ னப்பொரு ளிசைப்பத்
தெவ்வ ரம்பறு கானிடைச் செலுத்தினுட் கீந்த
அவ்வ ரங்களு மிரண்டவை யாற்றினுற் களித்த
இவ்வ ரங்களு மிரண்டென்றார் தேவரு மிரங்கி.

எவ்வரங்களும் கடந்தவன் - எல்லா வரங்களையும் மீறினவனான இராமபிரான், அ பொருள் இசைப்ப - அங்ஙனம் சொல்ல, (அவற்றைக் கேட்ட) தேவரும் - வானவரும், இரங்கி - (இராமன்மீது) இரக்கம் கொண்டு, 'வரம்பு அறு தெவ்கான் இடை - எல்லையற்ற பகைவர்களுடைய காட்டிலே, செலுத்தினுட்கு - காட்டிலே (இராமனைப்) புகச் செய்தவளான கைகேசிக்கு, ஈந்த அவ்வரங்களும் - தந்த அந்த வரங்களும், இரண்டு - இரண்டு; அவை ஆற்றினுற்கு - அந்த வரங்களின் படியே ஒழுகினவனுகிய

இராமபிரானுக்கு, அளித்த - (அத் தயரதனே) ஈந்த, இவ் வரங்களும் இரண்டு - (இப்பொழுது ஈந்த) இந்த வரங்களும் இரண்டு,' என்றார் - என்று வியந்து பகர்ந்தனர்.

எவ் வரங்களும் கடந்தவன்; 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' (குறள். 4); வரம்பறு தெவ்கானிடை என மாற்றுக. தெவ்வுப் பகைமை; (தொல். உரி. 29): 'தெவ்வடக்கும் வென்றியானும் நன்றிதென்று சிந்தியா' (கிட்கிந்தா. 236); பிரமன் முதலானோர் இராவணாதி அரக்கர்க்களித்த வரங்களனைத்தையும் கடந்தவன் எனவே அவ்வரங்களை வலியற்றனவாகச் செய்த இராமபிரான், அங்ஙனம் சொல்ல; 4020-ன் உரை பார்க்க. 'இனி எவ்வரங்களும் கடந்தவன் என்பதற்குத் தான் பிறரிடம் சென்று வேண்டிப் பெறத்தக்க வரம் ஒன்றும் இல்லாதவன் என்றுமாம். தனக்கு வனவாசம் அளித்த கைகேசியிடம் வெறுப்புக் காட்டாமல் தயரதன் தந்த இரண்டு வரங்களையும் கொண்டு கைகேயி, பரதன் இவர்கள்பால் தயரதற்கு இருந்த பகைமையை நீக்கி உதவியது கண்டு, தேவர் வியந்தார் என்க.

பி-ம். 1. இதுபொருளிசைப்ப ; இசையத்.

3. ஆற்றினுட்கு ; அளித்த.

4. அமரரும், இமையவர். 132

## தயரதன் விமானமேறி மீண்டு மேலுலகஞ் செல்லுதல்

4025. வரமி ரண்டளித் தழகனை யிளவலை மலர்மேல்
விரவு பொன்னினை மண்ணிடை நிறுத்திவிண் ணிடையே
உரவு மானமீ தேகின னும்பரு முலகும்
பரவு மெய்யினுக் குயிரளித் துறுபுகழ் படைத்தோன்.

உம்பரும் உலகும் - தேவரும் பிறவுலகத்தினரும், பரவும் - போற்றுகின்ற, மெய்யினுக்கு உயிர் அளித்து - உண்மைக்காக உயிரைத் தத்தம் செய்து, உறு புகழ் படைத்தோன் - (சத்தியந் தவறாதவன் என்று) மிக்க கீர்த்திபெற்றுயர்ந்தவனான தயரதப் பேரரசன், (இராமபிரான் விழைந்தபடி), இரண்டு வரம் அளித்து - இரண்டு வரங்களையீந்து, அழகனை இளவலை - பேரழகனான இராமபிரானையும் அவன் தம்பியாகிய இலக்குவனையும், மலர்மேல் விரவு

பொன்னினை - தாமரை மலர்மீது வீற்றிருக்கும் திருமகளின் அமிசமான சீதாப்பிராட்டியையும், மண் இடை நிறுத்தி - பூமியிலேயே நிற்கும்படி கூறிவிட்டு, உரவு மானம் மீது - வலிய விமானத்தின்மீது ஏறி, விண் இடையே ஏகினன் - மேலுலகு சென்றான்.

இரண்டு வரங்கள் மேலே (4021ல்) காண்க. அழகன்: கம்பர் இராமபிரானை அழகன் என்றே பல இடங்களிலும் கூறுவர்; ஆரணிய. 785; அயோத்தி. குகப். 42; பால. மிதிலைக். 39; கிட்கிந்தா. 976; சுந்தர. 197, 390, 612 என்பனவற்றால் அறிக. மெய்யினுக்கு உயிரளித்து: 'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (கிட்கிந்தா. 505); 'பொய்ப்பகையே மெய்க்கணியே' (ஆரணிய. 197); அயோத்தி. பள்ளிபடை. 77; நகர்நீ. 150, 70; கங்கைகாண். 68; கிளைகண்டு. 57; 'வையக முற்று நடந்த வாய்மை மன்னன்' (அயோத்தி. கைகேசி. 23, 211, 217); திருவடி சூட்டு. 60. சிறப்புப்பற்றி உம்பரைக்கூறிப் பின்னர் எஞ்சிய உலகங்களை 'உலகும்' என்றார். உயிர் விடுத்து என்றது, உயிர் அளித்து என்றது; பூதவுடம்பினின்று இயங்கிய உயிரைத் தன் புகழுடம்பிற்கீந்தது குறித்து என்க; 'நத்தம்போற் கேடுமுளதாகும் சாக்காடும், வித்தகர்க் கல்லா லரிது' (குறள். 235) என்பது இங்குக் காணத்தகும்.



இது முதல் நான்குசெய்யுட்கள் சில பிரதிகளில் இல்லை; எனினும், செய்யுட்களின் தொடர்புபற்றி இவை சேர்க்கப்பட்டுள்ளன.

## இராமன் தேவர்களிடம் வரம் வேண்டுதல்.

4026. கோட்டு வார்சிலைக் குரிசிலை யமரர்தங் குழாங்கள்
மீட்டு நோக்குரு வீரநீ வேண்டுவ வரங்கள்
கேட்டி யாலென வரக்கர்கள் கிளப்பருஞ் செருவில்
விட்ட மாண்டுள குரங்கெலா மெழுகென விளம்பி.

அமரர் தம் குழாங்கள் - வானவர்களின் கூட்டங்கள், கோட்டு - வளைக்கின்ற, வார்சிலை - நீண்ட வில்லினை ஏந்திய, குரிசிலை - பெருந்தகையான இராமபிரானை, மீட்டும் நோக்குறு - திரும்பவும் பார்த்து,

'வீர - வீரனே! நீ வேண்டுவ வரங்கள் - நீ விரும்பிய வரங்களை (எம்மிடத்துக்), கேட்டி - கேட்பாயாக' என - என்று கூற, (இராம பிரான்) 'கிளப்பு அரும் செருவில் - எடுத்துக் கூறுதற்கரிய போரில், அரக்கர்கள் - இராக்கதர்கள், வீட்ட - அழிப்ப, மாண்டுள குரங்கு எலாம் - உயிரிழக்கப் பெற்ற குரங்குகள் யாவும், எழுக - உயிர் பெற்று எழுவனவாக', என - என்று, விளம்பி - ஒரு வரம் கேட்டு. என்ருன் என்ற அடுத்த கவியோடு முடியும். ஆல்: அசை.

கோட்டுவார் சிலைக்குரிசில் - கோதண்ட பாணியான இராம பிரான். கிளப்பருஞ் செரு - எடுத்து வருணிக்க முடியாத பெரும் போர். வீட்ட - செய்ய என்னும் வாய்பாடு. எழுக என என்பது அகர ஈறு கெட்டு எழுகென என நின்றது.

பி - ம். 1. குழுவும்.
3. அரக்கர்தம்; கிளர்பெருஞ்.
4. விட்டி; இயம்பி. 134

4027 பின்னு மோர்வரம் வாநரப் பெருங்கடல், பெயர்ந்து
மன்னு பல்வன மால்வரைக் குலங்கள்மற் றின்ன
துன்னி டங்கள்காய் கனிகிழங் கோடுதேன் றுற்ற
இன்னு ணீருள வாகென வியம்பிடு கென்ருன்.

'வாநரர் பெருகடல் - பெருங் கடல் போன்று பரந்த வாநரப் படை, பெயர்ந்து - சென்று, மன்னும் - நிலை பெறுகின்ற, பல்வனம் - பல் காடுகளும், மால்வரை குலங்கள் - பெரிய மலைத் தொகுதிகளும், மற்று - மற்றும், இன்ன - இவை போன்ற, துன் இடங்கள் - குரங்குகள் சென்று சேர்தற்குரிய இடங்களும், (இக் குரங்குகட்கு உணவாகக் கூடிய), காய் கனி கிழங்கோடு - காய் கனி கிழங்கு களோடு, தேன் துற்ற - தேனடைகள் நெருங்கியனவும், இன் - இனிய, உண் நீர் உள - பருகற்குரிய நீருள்ளனவும் ஆக, ஆகென - ஆகக்கடவன என்று, பின்னும் ஓர் வரம் - மற்றும் ஓர் வரம், இயம்பிடுக - கூறுக', என்ருன் - என்று மொழிந்தான்.

பி - ம். 1. மன்னும் அவ்வனம்.

2. மற்றிவர்கள், மற்றிவைகன், மற்றவர்கள்.

3. இடங்களில்; தேன் காய் கனி கிழங்கோடு; துற்றும், துற்றி, துன்றி, துவன்றி.

4. இன்னுயிருளவாகென இன்று நீள்வரவாகமேல்; விளம்பிடும். 135

## தேவர்கள் வரமளிக்க மாண்ட குரங்குகள் உயிர்பெற்றெழுந்து வணங்குதல்.

4028. வரந்த ரும்முதன் மழுவலான் முனிவரர் வானோர்
புரந்த ராதிமற் றேனையோர் தனித்தனிப் புகழ்ந்தாங்
கரந்தை வெம்பிறப் பறுக்குநா யகநின தருளாற்
குரங்கி னம்பெறு கென்றன ருள்ளமுங் குளிர்ப்பார்

வரம் தரும் மழுவலான் முதல் வானோர் - வரங் கொடுக்கு மியல்புள்ள மழுவேந்திய சிவபிரான் முதலான தேவதைகளும், முனிவரர் - தேவ விருடிகளும், புரந்தராதி - இந்திரன் முதலிய, மற்று - பின்னும், ஏனையோர் - பிற தேவ கணங்களும், தனி தனி புகழ்ந்து - தனித் தனியாகத் துதித்து, உள்ளமும் குளிர்ப்பார் - மனமும் குளிரப் பெற்றவராய், ஆங்கு - அப்பொழுது, 'அரந்தை - துன்பத்துக்கிடமான, வெம்பிறப்பு அறுக்கும் நாயக -' கொடிய பிறப்பினை வேரறுக்கும் தலைவனே! நினது அருளால் - உன் கருணையினால், குரங்கு இனம் பெறுகென்றனர் - வானரக் குலங்கள் (உயிரையும் உணவுகளையும்) பெறக்கடவனவாக', என்றனர் - என்று அருளினர்.

இங்கு முதல் என்பதைப் பிரமன் எனச் சிலர் குறிப்பர். வானோர் தலைவன் இந்திரனாதலின், 'புரந்தராதி எனப்பட்டது. 'இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்' (குறள். உரைப்பாயிரம்) என்றமை காண்க. 'அரந்தை வெம் பிறப்பு அறுக்கு நாயக' 'அரந்தைவெம் பிறவி நோய்க்கோ ரருமருந் தனைய வையா' (கிட்கிந்தா. 349); 'சன்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே யிராமவென் றிரண் டெழுத்தினால்' (பால. பாயிரம்); 'ஒப்பிறையும் பெறலரிய வொருவா' (ஆரணிய. 61) என்று தொடங்கும்

செய்யுளில், 'இப் பிறவிக் கடல் கடந்தே னினிப் பிறவே னிருவினை யும் துப்புற நீத்தனைய சுடர்த் திருவடியாற் றுடைத்தாய் நீ' என விராதன் கூறுதல் காண்க. யுத்த. 432-ம் காணத்தகும்.

பி - ம். 1. மலரவன் மழுவலான்.

2. புரந்தராதியர் தனித்தனியவர்களே புகல, புரந்தராதி மற்றேனையோர் தனித்தனிப் புகல்வார்.

3. நின்றன்.

4. குளிர்ப்பான். 136

4029. முந்தை நாண்முதற் கடைமுறை யளவையு முடிந்த
அந்த வாநர மடங்கலு மெழுந்துட னார்த்துச்
சிந்தை யோடுகண் களிப்புறச் செருவெலா நினையா
வந்து தாமரைக் கண்ணனை வணங்கின மகிழ்ந்து.

முந்தை நாள் முதல் - (போர்) தொடங்கிய நாள் முதலாக, கடை முறை அளவையும் - போர் முடிவடைந்த நாள் வரையில், முடிந்த - இறந்தனவான, அந்த வாநரம் அடங்கலும் - அந்தக் குரங்குகள் அனைத்தும், உடன் எழுந்து - உடனே உயிர் பெற்றெழுந்து, செரு எலாம் நினையா - போரினைப் பற்றியெல்லாம் நினைத்து, ஆர்த்து - (தமக்குண்டான வெற்றியைக் குறித்து) ஆரவாரம் செய்து, சிந்தையோடு கண் களிப்பு உற - மனத்துடன் விழிகளும் களிக்குமாறு, தாமரை கண்ணனை - சிவந்த தாமரை போன்ற நேத்திரங்களை உடையவனான இராமபிரானை, வந்து - நெருங்கி வந்து, மகிழ்ந்து வணங்கின - மகிழ்ச்சியுடன் வணக்கம் செய்தன.

அடங்கலும் - எல்லாம்; 'மரமடங்கலும் கற்பகம்' (சுந்தர. 104); நினையா - செய்யாவென்னும் வாய்பாடு.

பி - ம். 1. கடன் முறை; யாவையும், அளவையின்.

2. வானரர், அடங்கலும்; எழுந்துடனார்த்த, எழுந்தெழுந்தார்த்துச், எழுந்துறனுற்றுச்.

3. சிந்தை கண்ணினை.

4. வந்த; வணங்கினர், வணங்கியே, மகிழ்ந்தார். 137

## வாநரங்கள் ஆரவாரித்தலும், தேவர்கள் இராமனை நோக்கிக் கூறுதல்.

4030. கும்ப கன்னனே டிந்திர சித்துவெங் குலப்போர்
வெம்பு வெஞ்சினத் திராவணன் முதலிய வீரர்
அம்பின் மாண்டுள வாநர மங்குவந் தார்ப்ப
உம்பர் யாவரு மிராமனைப் பார்த்திவை யுரைத்தார்.

கும்பகன்னனோடு - கும்பகன்னனும், இந்திரசித்து - இந்திரசித்தும், வெம் குலம் போர் - கொடிய சிறந்த போரில், வெம்பு - கொதிக்கின்ற, வெம் சினத்து - கடுங் கோபத்தினையுடைய, இராவணன் - இராவணனும், முதலிய வீரர் - முதலான வீரர்களுடைய, அம்பின் - அம்புகளினால், மாண்டு உள - இறந்து பட்டனவான, வாநரம் - குரங்குக் கூட்டங்கள் (பிழைத்தெழுந்து), அங்கு - இராமபிரானருகில், வந்து - வந்து, ஆர்ப்ப - பெரு முழக்கம் செய்ய, (அப்பொழுது) உம்பர் யாவரும் - தேவர்கள் அனைவரும், இராமனைப் பார்த்து, இவை உரைத்தார் - இராமபிரானை நோக்கி இவ் வார்த்தைகளைப் பகரலானார்கள். இவற்றை அடுத்த மூன்று செய்யுட்களிற் காண்க.

உம்பர் - மேலிடம்; அங்குள்ள தேவர்கள். 'உம்பர் தரு தேனுமதிக் கசிவாகி' (திருப்புகழ்); 'உம்பர்க்கு முனக்கு மொத்திவ்வுலகெங்கும் பரந்துளானை' (யுத்த. 254).

பி - ம். 1. வெங்குலந்தோர்.
3. அடங்க வந்து, அடங்கலும். 138

4031. இடையு வாவினிற் சுவேலம்வந் திறுத்தெயி லிலங்கைப்
புடைய வாவுறச் சேனையை வளைப்புறச் போக்கிப்
படைய வாவுறு மரக்கர்தங் குலமுற்றும் படுத்துக்
கடையு வாவினி லிராவணன் றன்னையுங் கட்டு.

'இடை உவாவினில் - அமர பட்சத்தின் நடுவில், (அட்டமி திதியில்), சுவேலம் வந்து இறுத்து - சுவேல மலையில் வந்து தங்கி, (அன்றைய தினமே), எயில் இலங்கை - மதில்கள் சூழ்ந்த இலங்காபுரியின், புடை - சுற்றுப்புறத்தில், சேனையை அவா உற

வளைப்பு உற போக்கி - வானரப் படைகளை விரும்பி முற்றுகை செய்யும் வண்ணம் செலுத்தி, படை அவா உறும் - போர்க் கருவிகளை விழையும், அரக்கர் தம் - இராக்கதருடைய, குலம் முற்றும் படுத்து - வருக்கம் முழுவதும் கொன்று தீர்த்து, (அந்த அமர பக்கத்தின்), கடை உவாவினில் - இறுதி நாளில், இராவணன் தன்னையும் கட்டு - இராவணனையும் கொன்று, அடுத்த செய்யுளுடன் குளகமாய்த் தொடர்ந்து முடியும்.

இராமபிரான் பங்குனி மாதத்தில் அமரபட்சம் அட்டமி தினயன்று மாலைப் போழ்தினில், இலங்கா நகரத்தைத் தன்பால் கொண்ட சுவேல மலையில் வானரப் படையுடன் ஏறி, அன்றிரவே பெரும் படையினைக் கொண்டு இலங்காபுரியை முற்றுகையிட்டு, மறுநாள் (நவமி திதி) பகற்பொழுது கழித்து, அரக்கரோடு போர் தொடங்கி, ஆறு நாட்களில் கும்பகன்னன் இந்திரசித்து முதலிய பல இராக்கதர்களையும் கொன்று மூலபலத்தையும் சிதைத்து, வெற்றிகொண்டு, ஏழாம் நாள் (அமாவாசையன்று) இராவணனுடன் மீண்டும் போர் தொடங்கி அன்று இரவின் பிற்பகுதியில் அவனையும் கொன்று வாகை சூடினன்' என்று இராமாயண சார சங்கிரகம் என்னும் வடநூல் கூறும். இடை உவா - உவாவின் இடை ; முன் பின்னாகத் தொக்க ஆறாம் வேற்றுமைத் தொகை. கடை உவா - கடையாகிய உவா. சுவேலம் - ஓர் மலை. இராமபிரான் பரிவாரங்களுடன் சுவேல மலையின் உச்சியில் ஏறி நின்றதை, 'இருந்த மால்வரையினுச்சி யேறின னிராம னிப்பால்' (யுத்த. 775) என்ற வரி கொண்டுணர்க. கட்டு - அழித்து ; 'ஏரினும் நன்றா லெருவிடுதல் கட்டபின், நீரினும் நன்றதன் காப்பு' (குறள். 1038) ; 'வானவர் தம்பதிகைகொடுகட்டவர்' (யுத்த. 1727).

பி - ம். 2. உடையவாவுற ; வளைவுற.

3. படையை விழ்வுறும்.

4. கட்டும், கரந்தாய், கடிந்தாய். 139

4032. வஞ்ச ரில்லையிவ் வண்டத்தி னெனும்படி மடித்த
கஞ்ச நாண்மலர்க் கையின னன்னைசொற் கட்வா
அஞ்சொ டஞ்சுநான் கென்றெனு மாண்டுபோய் முடிந்த
பஞ்ச மிப்பெயர் படைத்துள திதி யின்று பயந்த

'இவ் அண்டத்தில் - இந்த உலகத்தில், (இனி) வஞ்சர் இல்லை எனும்படி - வஞ்சகர் களாகிய இராக்கதர்கள் இல்லை என்று சொல்லுமாறு, மடித்த - கொன்று தீர்த்த, நாள் கஞ்சம் மலர் கையினுய் - அன்றலர்ந்த செந்தாமரை யொத்த கரத்தை யுடையவனே! (நீ) அன்னை சொல் கடவா - தாயின் சொல்லை மீருமல், அஞ்சொடு அஞ்சு நான்கு என்று எனும் - பதினுன்கு ஆண்டுகள், (முடியும்) என்று நினைக்கின்ற, ஆண்டு போய் முடிந்த - ஆண்டுகள்' சென்று விட்டன; இன்று - இன்றைத் தினமானது, பஞ்சமி பெயர் படைத்து உள திதி பயந்த - பஞ்சமி என்னும் பெயர் கொண்ட திதியை உண்டாக்கியது.

கடவா - கடவாமல் என்றதன் ஈறு கெட்டது. கஞ்சம்; வட சொல். நீரில் முளைப்பது என்பது பொருள். அன்னை - கைகேயி. அவள் சொல்; 'ஆழி சூழுலகமெல்லாம்' (அயோத்தி. கைகேசி. 107) என்ற செய்யுளில் கூறப்படுவது. அஞ்சொ டஞ்சு நான்கு - பதினுன்கு ஆண்டு; வரத்திற் குறித்த பதினுன்காண்டுகள் கழிந்தனவாதலின், இனி அயோத்திக்கு ஏகலாம் என்ருர் என்க. வில்லி பாரதத்தும், பாண்டவருடைய மறைந்துறையும் காலம் முடிந்ததா, என்று சுயோதனன் கேட்டபோது, விடுமன், 'இன்னலே யுழந்தோர்கால மிந்துவி னியக்கந் தன்னுல், நென்னலே கழிந்ததென்ருன்' (வி. பா. நிரை மீட்சி 106); என்று கூறியதை இங்கு ஒப்பு நோக்குக.

அமாவாசையில் இராவணன் வதை நிகழ்ந்த பின்னர் பிர தமையில் இராவணனுடைய நல் அடக்கமும், துவிதையில் வீடணன் முடி சூட்டும், திருதியில் பிராட்டி பரிசோதனையும், முடிந்து, சதுர்த்தியில் இராமபிரான் வானரப் படையுடன் புட்பகத் தினமீது ஏறிப் புறப்பட்டு, பஞ்சமியன்று பரத்துவாசன் இருக்கை யடைந்து, அன்றையத்தினமே, பதினுன்கு ஆண்டுகள் முடிவதால், தன் வருகையை அறிவிக்குமாறு அநுமனைப் பரதனிடம் அனுப் பினன் இராமபிரான்; இச் செய்தி இராமாயண சார சங்கிரகத்துக் கண்டது. பஞ்சமி - சித்திர கூடத்திலிருந்து பரதாழ்வான் பதினுன்கு ஆண்டு முடிவு சொன்ன பஞ்சமி.

பி - .ம் 1. அண்டத்தின் புறந்தென ; மடித்தாய்.
5. கையனே, கையினல் ; காந்த கடவாது, காரும், காறும்.
3. நாலென்றது.
4. திதியென்று ; பகர்ந்து.

4033. இன்று சென்றுநீ பரதனை யெய்திலை யென்னில்
பொன்று மாலவ னெரியிடை யன்னது போக்க
வென்றி வீரநீ போதியா லென்பது விளம்பா
நின்ற தேவர்கள் நீங்கினு ரிராகவ னினைந்தான்.

'வென்றி வீர - வாகை சூடிய வீரனே! நீ - நீ, இன்று சென்று - இன்று போய், பரதனை எய்திலை என்னில் - பரதனிடம் சேராமற் போனால், அவன் - அந்தப் பரதன், (முன்பு நீ மொழிந்த வண்ணம் குறித்த நாளில் வரவில்லை என்பது கொண்டு), எரி இடை பொன்றும் - தீயில் புக்கு மரிப்பான்; அன்னது போக்க - அவ்வாறு நிகழாமல் தடுக்க, போதி - இப்பொழுதே நீ செல்வாயாக', என்பது விளம்பா - என்பதைக் கூறிவிட்டு, நின்ற தேவர்கள் - (அங்கு இராமபிரான் முனபு) நின்ற தேவர்கள், நீங்கினுர் - அகன்றனர்; இராகவன் நினைந்தான் - இராமபிரான் பரதனிடம் செல்வதைக் குறித்துச் சிந்தித்தான். ஆல்: இரண்டும் அசைகள்.

பொன்று மாலவன் எரியிடை; 'நான் பாதுகைகளின்மீது அரசியலை வைத்து நகர்ப்புறத்தே வசித்திருப்பேன்; பதினுன்கு வருடம் கழிந்ததும் வராவிடில் தீக்குதிப்பேன்' என்று சித்திர கூடத்தில் பரதன் இராமபிரானிடம் கூறியதாக முதனூல் கூறுவதை இங்கே குறிக்கொள்க. 'ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ, நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலை யெனனிற் கூரெரிச், சாமிது சரதம் நின் ஞணை சாற்றினேன்' (அயோத்தி. கிளை கண்டு. 133); என்றதும், 'சொன்ன நாளினிலிராகவன் தோன்றிலன், மின்னு தீயிடை யானினி வீடுவன்' (யுத்த. மீட்சி. 220) என்ற பரதன் கூற்றும் காண்க. விளம்பா - செய்யா என்னும் வாய்பாடு. 'நின்ற தேவர்கள் நீங்கினுர்' என்பதில் முரண்தொடை காண்க. இராகவன நினைந்தான் என்பது கொண்டு. தான் தம்பியினிடம் கூறிய உறுதியை மறந்திருந்தான் என்பது புலப்படும். 'நினைந்தேன்' என்ருன் தலைவன். மற்று என் மறந்தீர்' என்ருள் தலைவி. ஒன்றை மறந்தால்தானே நினைவு கூர நேரும்.

இந்தச் 'சானகி சிறைமீட்சிப் படலம்' முற்றும் என்று ஓர் பிரதியில் உள்ளது. சில பிரதிகளில் பிராட்டியார் திருவடி தொழு படலம்

இச்செய்யுளோடு முடிய, மேல் மீட்சிப் படலம் தொடங்குகின்றது. சில பிரதிகளில் மீட்சிப் படலம் இங்கு தொடங்குகின்றது. மற்றும் சில பிரதிகளில், 'எழுபது வெள்ளம்' என்ற பாடலில் மீட்சிப் படலம் தொடங்கும்.

பி-ம். 1. நீ சென்று.
3. விளம்பி, இயம்பம.
4. ஏகினர்.



இராமன் அயோத்திக்கு விரைந்துசெல்ல ஊர்தியுண்டோ? என்று வினவ, வீடணன் விமான முண்டென்றல்.

4034. ஆண்டு பத்தொடு நாலுமின் றேடறு மாயின்
மாண்ட தாமினி யென்குலம் பரதனே மாயின்
ஈண்டுப் போகவோ ரூர்தியுண் டோவென வின்றே
தூண்டு மானமுண் டென்றடல் வீடணன் சொன்னன்

'ஆண்டு பத்தொடு நாலும் - பதினன்கு ஆண்டுகளும், இன்றோடு அறும் ஆயின - இன்றுடன் முடிவு பெறுமானல், (நான் உறுதி கூறியபடி) பரதன் மாயின் - இறந்தால், இனி என் குலம் மாண்டது ஆம் - இனிமேல் எனது வமிசம் அழிந்ததாகும்; (ஆதலின்) ஈண்டு - இப்பொழுதே, போக - சென்று சேர, ஓர் ஊர்தி உண்டோ - ஓர் வாகனம் உள்ளதோ?' என - என்று, (இராமபிரான் வீடணனைக்) கேட்க, (அதற்கு) வீடணன் - வீடணன், இன்றே - இன்றைக்கே, தூண்டும் - ஏறி விரையத்தக்க, அடல் மானம் உண்டு - வலிமை மிக்க விமானம் (இங்கு) உள்ளது', என்று - என்று, சொன்னன் - கூறினன்.

பத்தொடு நாலும்; 'பத்து நாலும் பகலலவோ வென்முன்' (அயோத்தி. நகர்நீ. 22); சூரிய குலம் என்னுது 'என் குலம்' என்றது காண்க. 'உன் குலம் உன்னதாக்கி' (சுந்தர. 1272) என்று இராமபிரானிடம் சிறிய திருவடி கூறியதை இங்குக் குறிக் கொள்க. மாண்டதாம் - கால வழுவமைதி; தெளிவு பற்றி வந்தது.

மகா உத்தமனான பரதன் இறப்பின் அவனைச் சார்ந்த பிறரும் வாழார் என்று தனக்குத் தம்பி மீதிருந்த அன்பினை இராமபிரான் குறித்தான். இங்கு : 'பேதைப் பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும் பிழைப்பில்லா, காதற்றம் பியர்க்கு மூர்க்கு நாட்டிற்கும் காட்டிற் றன்றே' (யுத்த. 2853)ம், 'மாண்டாய் நீயோ யானொரு போதுமுயிர் வாழேன், ஆண்டானல்ல னனில மந்தோ பரதன்றான், பூண்டா ரெல்லாம் பொன்றுவர் துன்பம் பொறையாற்ரார்' (யுத்த. 2587)ம் காண்க. இங்கு இராமர் இலக்குவர் முதலானோர்க்கு ஏதேனும் ஊறு நிகழ்ந்ததாகப் பரதன் முதலானோர்க்குத் தெரிந்தால் என்னென்ன நிகழும் என்று சிந்திக்கப்பட்டமை யுணர்க.

இங்கு மீட்சிப் படலம் என்று மர்ரே பதிப்பில் உள்ளது.

பி - ம். 1. பத்தொரு.

2. பரதனும், பரதனே; மாளும்.

3. இன்றேக, போவது, போவதோர்; உபாய மேதென்றவன் வினவ, உபாய மென்னேவென வின்றே.

4. மானமுண்டென்றனன் விடணன்; தொழுதான். 142

இங்கு அதிகப் பாடல்கள் :—

1. வங்க நீணெடு வடதிசை வானவன் விமானம்
துங்க மாகவி யெழுபது வெள்ளமும் சூழ்ந்தால்
எங்கு ளாரெனு மிடமுள ததன்மிசை யேறிப்
பொங்கு மாநகர் புகுதியிப் பொழுதினி லென்றான்.

2. வாங்கி னனிரு நிதியொடு தனதனில் வள்ளால்
ஒங்குமால் வெள்ள மேழுபஃ தேறினு மொல்கா
தீங்கு ளாரெலா மிவருவ திவரினீ யினிது
பூங்கு லாநகர் புகுதியென் றான்றெனப் புகன்றான்.

இச் செய்யுள் சிறிது வேறுபாட்டுடன்.

வாங்கி னனள கேசனைத் துரந்திந்த மானம்
ஓங்க மூவுல கத்தவ ரேறினு முரவோய்
ஆங்கி டம்பினு முடையதா மதுதனி லேறிப்
பூங்குலா நகர் புகுதியிப் பொழுதினி லென்றான்.

என்று ஓர் பிரதியில் காணப்படுகின்றது.

மற்றும் சில பாடல்கள் :—

3. என்று தேரினை வீடண னெய்திய தென்றான்
நன்று தானென நாயக னேறின னவரோ
டன்றுதா னிளங் கோவொடு மக்கவி வெள்ளம்
ஒன்று தானென வொருதிசை யிருந்தது மொக்கும்.

இங்கு இயமப் படலம் என்ற தலைப்பில் சில பாடல்கள் காணப் படுகின்றன.

வேறு

4. ஏறினன் விமானந் தன்னி லிராமனு மிளைய கோவும்
மாறிலாச் சனகி யோடு வளநக ரிலங்கை வேந்தும்
கூறிய வநுமன் சாம்பன் குமரன்வெங் கவிவந் தேற
மாறிலோர் நிலத்து நின்றார் வயந்தனார் கொத்தி
[லுள்ளார்.

5. மாறதாய் வெள்ளஞ் சேனை மானத்தின் வராமை நோக்கி
ஏறுநீர் தேரி லென்னக் கருணன்வந் தெதிர்ந்த போது
சீறிய நுமரி லெங்கோன் றுக்கிட வரக்கன் சீறி
நீறெழப் பிசைந்தே யிட்டா னெற்றியி லென்னச்
[சொன்னார்.

வேறு

6. என்ற வாசகங் கேட்டலும் வானர ரிறங்கி
நின்ற போதினி லிராகவன் றேரினின் றிழிந்தான்
பொன்று மாவரக் காரண மென்னெனப் புழுங்காத்
துன்று தார்ப்புயத் திலக்குவ பொறியெனச் சொன்னான்.

வேறு

7. வரிசிலை யிராம னேலை மறம்புரி மறலி காண்க.
எரிகொளு மிலங்கைப் போரி லின்னுயிர் துறந்து போந்த
குரிசிலை வயந்தன் றன்னைத் தேடியே கொணர்க வன்றேல்
உரியதன் பதமும் வாழ்வும் ஒழிப்பெ னென் றெழுதி
[விட்டான்.

இந்த இமயப் படலமே 'வசந்தனுயிர் வருபடலம்' என்ற தலைப்புள்ளதாக இங்குக் காட்டப்பட்ட பாடல்கள் காணப்படுகின்றன. வசந்தன் என்று பெயர் பூண்ட வானர வீரனைக் கும்பகன்னன் பிசைந்து உயிர் போக்கி அவனது தசை முதலியவற்றை உடலிற் பூசிக் கொண்டானென்ற செய்தி, உத்தர காண்டத்து அசுவமேதப் படலத்துள்ள 'வெய்யவன் மறுத்து வயந்தனைப் பிசைந்து' என்பதனாற் பெறப்படும். ஆயினும் இப் பாடல்கள் உத்தர காண்டத்துப் பிரதிகளில் காணப்படவில்லை. ஆகவே இடைச் செருகலாக இருத்தல் கூடும் என்று ஊகிக்கப்படுகின்றது,

8. அக்கணத் தருகு நின்ற வநுமன்கைத் திருமு கத்தைத்
தக்கவ னீட்ட வாங்கித் தன்றலை மிசையிற் சூடி
இக்கணம் வருவென் வாழி யிராம வென் றிருதோள்
[கொட்டி
மிக்கமா மடங்கல் போல விண்ணிடை விசைத்துப்
[பாய்ந்தான்.

வேறு

9. மண்டிப் புக்கனன் மறலிதன் பெரும்பத நரகில்
தண்டிப் புண்டறுப் புண்டெரிப் புண்டவர் தம்மைக்
கண்டு மாருதி கண்புதைத் தரியரி யென்ன
மிண்டி யேறினர் நரகிடை வீழ்ந்தவ ரெல்லாம்.

10. துளங்கி யந்தகன் வந்தடி தொழுதலுந் தோலா
வளங்கொள் மாருதி வசந்தனைக் காட்டென வவனும்
உளங் கலங்கியுன் னாயக னடியரிங் குளார்கள்
விளங்கு கீர்த்தியாய் தேடுவிண் ணவர்புரத் தென்றான்.

11. சொன்ன கூற்றுவன் றன்னைத் தன் வாலிடைத் துவக்கிப்
பொன்னின் கற்பகப் பதியிடைக் கொண்டுபோய்ப்
[புகலும்
முன்னை வந்துகண் டிந்திரன் முனிவெனோ வென்ன
மன்ன வேகுவென் வயந்தனைக் காட்டுதி யென்றான்.

12. வல்ல ரக்கரை மடித்தெமை யெடுத்தமா ருதியே
யில்லை யிங்கய னுலகிடை யறிதியென் றிசைப்பச்
சொல்லு மங்கவன் றன்னையும் வாலிடைத் துவக்கிப்
பல்லுயிர்த் திறம் படைத்தவ னுலகிடைப் பாய்ந்தான்.

13. சிந்தை தூயவன் செலவுளந் துளங்குநான் முகனும்
வந்த காரிய மேதென வயந்தனைப் பார்த்துச்
சுந்தரத் தடந் தோள்வில்லி நின்றன னவன்றான்
உந்த னீள்பதத் துளா னெனின் காட்டென வுணர்த்தும்.

14. என்னு டைப் பெரும் பதத்தின்மே லாகிய வெந்தை
தன்னுடைப் பெருஞ் சோதியிற் கீழதாய்த் தழைத்த
மின்னு நீடொளி விண்டுவின் பதத்துளான் விறலோய்
அன்ன வன்றனைக் கொணருதி யாங்கணேந் தென்றான்.

15. என்ற நான்முகன் சொல்லவு மிந்திரன் மியமனிந்திரனை
ஒன்ற வால்கொடு துவக்கின னெருகுதி கொண்டான்
மின்றி கழ்ந்தொளி விளங்கிடும் விண்டுவின் பதத்திற்
சென்று கண்டுகொண் டிழிந்தனன் திசைமுகன் பதியில்.

16. மலரின் மேலயன் வசந்தற்கு முன்னுரு வழங்கக்
குலவு வாசவன் யமனைவிட் டிருநிலங் குறுகி
யலகில் வீரன்ற னடியிணை யவனெடும் வணங்கிச்
சலமுந் தீர்த்தனன் படையையு மேற்றினன் தேர்மேல்.

இனி 'வாங்கினன்' என்று தொடங்கும் செய்யுட்குப் பின் காணப்படும் சில பாடல்கள்.

என்று - ஒக்கும். (143 : 3 காண்க.)

17. ஏறினனி ராமன் தேர்மே லெழின்மலர் மாதி னோடும்
ஏறின னிளைய கோவு மிராக்கதர் வேந்த னோடும்
ஏறின னநுமன் சாம்ப னிடபனே முதலோ ரேற
மாறினர் நிலத்து நின்றார் வசந்தகோத் திரத்தி
[னுள்ளார்.

18. ஏறின னிளைய கோவு மிரவிசெய் சாம்ப னீலன்
ஏறினன் வாலி மைந்த னென்றனர் பலரு மேறச்
சீறிய கும்ப கன்னன் சினத்திடைச் சிதைந்து பட்டோன்
மாறிலா வுசந்தன் சேனை நின்றது பாரின் மண்மேல்.

வேறு

19. பாரி னின்றதங் கொருவெள்ளப் படையவர் தம்மை
வாருந் தேரின்மே லெனக்கும்ப கன்னன்வந் தேன்ற
போரி லெம்படைத் தலைவனே பொன்றின னவனை
நீறு நேர் பிசைந் திட்டன நெற்றியி லென்றார்.

20. ஆழி வெள்ளமோ ரெழுபது மநுமனை முதலாம்
ஏழு மூன்றுமாம் பெரும்படைத் தலைவரை யிராமன்
சூழ நோக்கினன் சுக்கிரீ வன்றனைப் பாரா
வாழி மாப்படை யனைத்தும்வந் தனகொலோ வென்றான்.

21. இரவி கான்முளை யிறங்கிவந் திராமனை யிறைஞ்சிச்
சுருதி யாயொரு பேரருள் சொல்லுவ தொடர்ந்து
வருவ தானவிச் சேனையில் வசந்தனென் றுரைக்கும்
ஒருவன் வந்திலன் கண்டரு ளுதியென வுரைத்தான்.

22. கசிந்த ஞானங்கள் கலங்கலில் கழற்கும்ப கருணன்
இசைந்த பேரின்வந் தெய்தலு மிவன்றனை யெடுத்துத்
தசைந்த தோல்மயி ரெலும்பிவை தனைத் தெரியாமல்
பிசைந்து மோந்துடற் பூசினன் பெருநுதற் கணிந்தே.

வேறு

23. இசைத்தசீ ராமனேலை யிலங்கையிற் பூச றன்னில்
வசந்தனைக் கண்ட தில்லை மதித்தவா றழுகி தம்மா
வசந்தனைக் கொண்டு தானும் வருகெனே வாரா னாகில்
நம்குலம் களைவ னென்றா னவர வென்ற வீரன்.

24. செல்வனே யின்னங் கேளா யான் றெரி பாசக் கையால்
அல்லெனு மரக்கர்தம்மை வரமினென் றழைத்து வெள்ள
நல்லிருட் பரவை மேனி நாரணன் றமரைக் கண்டால்
செல்லவே போமி னென்று விடுக்குவன் செவியிற் செப்பி.

ஒரு பிரதியில் கடவுட் காட்சிப் படலம் இங்கே முடிய 147-ஆம் பாடலில் திருவணைச் சிறப்புப் படலம் தொடங்குகின்றது.

## இராமன் பணியைமேற்கொண்டு வீடணன் விமானம் கொணர்தல்.

4035 இயக்கர் வேந்தனுக் கருமறைக் கிழவனன் றீந்த
துயக்கி லாதவர் மனமெனத் தூயது சுரர்கள்
வியக்க வான்செலும் புட்பக விமானமுண் டென்றே
மயக்கி லான்சொலக் கொணருதி வல்லையி னென்றான்.

'இயக்கர் வேந்தனுக்கு-யக்ஷர்களின் மன்னனான குபேரனுக்கு, அரு மறை கிழவன் - அரிய வேதங்கட்குரியவனான பிரமதேவன், அன்று - அவன் தவம் ஆற்றிய அக்காலத்து, ஈந்த - அளித்ததும், துயக்கு இலாதவர் மனம் என - பாச பந்தங்களற்றவரான ஞானிகளுடைய உள்ளம் போன்று, தூயது - தூய்மை வாய்ந்ததும், சுரர்கள் - வானோரும், வியக்க - வியக்குமாறு, வான் செலும்-விண்ணில் இயங்க வல்லதுமான, புட்பக விமானம் உண்டு - புட்பக விமானம் இங்கே உள்ளது,' என்று - என்று, மயக்கு இலான் சொல - உள்ளத்தெளிவுடன் கூடிய வீடணன் பகர, (இராமபிரான்) '(நீ அதனை), வல்லையின் கொணர்தி' - விரைவாகக் கொண்டு வருவாயாக', என்றான் - என்று கட்டளையிட்டான்.

இயக்கர் - யக்ஷர். 33 கோடி தேவர்களில் ஓர் வகையினர்; இவர்களின் அரசன் வடக்குதிசை யதிபனும் நிதிக் கிழவனுமான குபேரன் என்ப. மறைக்கு அருமை - எளிதில் பயிலவியலாமை. கிழவன் என்ற சொல் கிழமை அல்லது உரிமையை உணர்த்தும்; இக் காலத்து வழங்கும் வயது முதிர்ந்தவர்களே முன்னர் இல்லக் கிழவனாக இருந்திருத்தல் கூடும்; ஆதலின் பிற்காலத்து வயோதிகன் என்ற பொருள் அதற்கு ஏற்பட்டது. ஆயினும், சங்கமருவிய நூல்களில் உரியவன் என்ற பொருளிலேதான் வழங்கப்பட்டது. முதல் முதலாகத் தேவாரத்தில் 'மூத்துடனடுங்கி நிற்குமிக்கிழவன்' (தேவா. 648, 4) என்ற இடத்துத் தான் வயது முதிர்ந்தவன் என்ற பொருளிற் காண்கிறோம்; 'குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்றோதுங் குவலயமே' (கந்தரலங்காரம். 5); என்பது கந்தரலங்காரம். திருக்குறளிலும் 'கிழவனுக்கு உரியவன் என்பதே பொருள்; 'செல்லான் கிழவனிருப்பின்' (குறள். 1039); என்றது காண்க. துயக்கு - பந்தபாசம், 'த்வக்' என்ற வடசொல் திரிபு. துயக்கிலா

தவர் மனம்; இங்குத் தூய்மைக்கு உவமையாயிற்று. உயர்ந்த உவமை; (ஒப்பு); 'தங்கணாயகரிற் றெய்வந் தவம்பிறி திலவென் றெண்ணும், மங்கைமார் உள்ளம் போலத் தூயது' (பால. வேள்வி. 16); புட்பக விமானம்அடிக்கடி காணக்கூடிய தேவர்களும் வியப்பர். எனவே, இந்த விமானத்தின் சில சிறப்பியல்புகள் உணரப்படும். மயக்கு - அகப்பற்று புறப் பற்றுக்களாலான மயக்கம்; 'யான் எனது என்னும் செருக்கு அறுத்தல்' (குறள். 346); இங்கு செருக்கு என்பதற்குப்பரிமேலழகர் 'மயக்கம் என்று பொருள் கூறி, அதனைக் கெடுத்தலாவது தேசிகர்பாற் பெற்ற உறுதி மொழிகளா லும் யோகப் பயிற்சியாலும் அவை, யான் என தன்மை தெளிந்து அவற்றின்கட்பற்றை விடுதல்' என்று எழுதுதல் காண்க.

பி - ம். 4. வல்லை நீ. 143

வசந்தனை மீட்டும் கொணர்ந்ததைத் தெரிவிக்கும் பாடல் கள் கொண்ட பிரதிகளில், இச் செய்யுளும் இதனை அடுத்துள்ள மூன்று செய்யுட்களும் காணப்படவில்லை.

4036. அண்ட கோடிக ளநந்தமொத் தாயிர மருக்கர்
விண்ட தாமென விசும்பிடைத் திசையெலாம் விளங்கக்
கண்டை யாயிர கோடிக ளொலிப்புறக் கஞலக்
கொண்ட ணைந்தன னொடியினி னரக்கர்தங் கோமான்.

அநந்தம் அண்ட கோடிகள் ஒத்து - பல உலக கோளங்கள் ஒன்று திரண்டதை ஒத்து, விசும்பு இடை - விண்ணில், ஆயிரம் அருக்கர் விண்டது ஆம் என - ஆயிரம் கதிரவர்கள் (ஒரே காலத் தில்) தோன்றினாற் போன்று, திசை எலாம் விளங்க - தன் பரந்த ஒளியால் திக்குகள் அனைத்தும் ஒளிரவும், (தன்னிடம் கட்டிய) ஆயிரம் கோடி கண்டைகள் - ஆயிரக்கணக்கான மணிகள், ஒலிப்பு உற கஞல - ஒலியெழும்படி சத்திக்கவும், அரக்கர் தம் கோமான் - இராக்கதர் தலைவனான வீடணன், நொடியினில் கொண்டு அணைந் தனன் - ஒரு நொடிப் பொழுதில் கொண்டு வந்தான்.

வந்த புட்பக விமானத்தின் பேர் ஆகிருதியும் பேரொளியும் இங்குக் கூறப்பட்டன. ஒளிமிகுதிக்கு ஆயிரம் சூரியரை

உவமிப்பது கவி மரபு; 'பல்லாயிர மிருள்கீறிய பகலோனென' (ஆரணிய. 450); 'கண்டை யாயிர கோடியின் தொகையது' (யுத்த. 3600); கனுலுதல் - ஒலித்தல்.

பி - ம். 2. விண்டுலாவென; விசும்பொடு திசைகளும்.

3. மறையெனக் கலிப்ப.

4. இலங்கையர் கோமான். 144

இது சில பிரதிகளில் இல்லை.

4037. அனைய புட்பக விமானம்வந் தவனியை யணுக
இனிய சிந்தனை யிராகவ னுவகையோ டினிநம்
வினைய முற்றிய தென்றுகொண் டேறினன் விண்ணோர்
புனைம லர்சொரிந் தார்த்தன ராசிகள் புகன்றே.

அனைய புட்பக விமானம் - அத்தகைய புட்பக விமானம், அவனியை வந்து அணுக - பூமியை வந்தடைந்த அளவில், இனிய சிந்தனை இராகவன் - எப்பொழுதும் நல்ல எண்ணங்களையே யுடைய இராமபிரான், (அவ் விமானத்தைக் கண்ணுற்றதால்), உவகையோடு - மகிழ்வுடனே, 'இனி நம் வினையம் - இனிமேல் நமது காரியம், (இன்றே பரதனைச் சென்று காண்பது), முற்றியது - உறுதியாக நிறைவேறும்', என்று கொண்டு - என்று உளத்திற் கொண்டு ஏறினன் - (அதன்மீது) ஆரோகணித்தான்; (அப்பொழுது), விண்ணோர் - வானவர்கள், ஆசிகள் புகன்று - வாழ்த்துரைகள் சொல்லி, புனை மலர் சொரிந்து ஆர்த்தனர் - அழகிய மலர்களைப் பொழிந்து ஆரவாரித்தனர்.

புட்பகம்; இது முதலில் குபேரனுக்குச் சொந்தமாக இருந்தது. பின்னர் இராவணன் திக்விசய காலத்து அதனைக் கைப்பற்றினான். எத்தனை பேர்களாயினும் தன்னகத்து ஏற்கும் ஆற்றல் வாய்ந்தது. 'மங்கல நீக்கினாரை யாருயிர் வாங்கினாரை, நங்கை யிக்கடவுண் மானம் தாங்குறுநவை யிற்றன்றால்' (யுத்த. 2634) என்று இதன் தன்மையைத் திரிசடை கூறியது காண்க. மீட்சி. 41 குறிப்பும் காண்க. யுத்த. 4036-ம் காணத்தகும்.

பி - ம். 1. புட்பக மானம் ; அவனிடை.

2. சிந்தையன் ; உவகையின்.

3. எழுந்தனன்.

4. புனையு மாமலர் பொழிந்தனர் ; புகன்றூர். 145

## புட்பகத்தின்மீது சீதையும் இலக்குமணனும் ஏறுதல்

4038. வணங்கு நுண்ணிடைத் திரிசடை
வணங்கவான் கற்பிற்
கிணங்க ரின்மையா ளேக்கியோ
ரிடரின்றி யிலங்கைக்
கணங்கு தானென விருத்தியென்
றையன்மாட் டணைந்தாள்
மணங்கொள் வேலிளங் கோளரி
மானமீப் படர்ந்தான்

வான் கற்பிற்கு இணங்கர் இன்மையாள் - சிறந்த கற்பில் நிகரில்லாதவளான பிராட்டி, வணங்கும் நுண் இடை திரிசடை - ஒசிந்த நுட்பமான இடையினை யுடைய திரிசடை என்பவள், வணங்க - தன்னைப் பணிய, (அவளை) நோக்கி - பார்த்து, '(நீ) ஓர் இடர் இன்றி - எவ்விதத் துன்பமுமில்லாமல், இலங்கைக்கு - இந்த இலங்கை மாநகர்க்கு, அணங்கு தான் என - ஒரு தேவகன்னியைப் போன்று, இருத்தி - அமர்வாயாக', என்று - என்று கூறி, ஐயன் மாட்டு அணைந்தாள் - இராம பிரானிடம் சென்று சேர்ந்தாள்; (விமானத்தில் ஏறினுள்); மணம் கொள் - (பகைவன் உதிரம் தோய்தலால்) புலால் மணம் வீசும், வேல் - வேலையேந்திய, இள கோளரி - இளம் சிங்கம் போன்ற இலக்குவனும், மானம்மீ படர்ந்தான் - அந்த விமானத்தின்மீது ஏறினன்.

இணங்கு - இணங்கர்; போலி. திரிசடை - சீதாபிராட்டிக்கு ஆருயிர்த் தோழி; இவள் சீதாதேவிக்கு ஆற்றிய பல உதவிகளை யும் சுந்தர காண்டத்துக் காண்க. மற்றும் மாயா சனகப் படலத்து வந்தவன் சனகன் அல்லன் என்றும் மருத்தன் என்னும் அரக்கன், என்றும் சொல்லித் தேற்றியும் (யுந்த. 1660), சீதை களங்காண் படலத்து (24 - 29)-ல் பல நியாயங்களைச் சொல்லித் தேறுதல்

உரைத்தும் நின்றமை காண்க. இவளை மூச்சடை என்றும் தமிழ்ப் படுத்திக் கூறுவர் ஆசிரியர்.

இங்கு திருவணைச் சிறப்புப் படலம் ஆரம்பம் என்று ஓர் பிரதியில்.

பி - ம். 1. வணங்குவான்.
2. இன்மையான்.
3. அணங்குதார்.
4. பணங்கொளுகணைப். 146

இங்கு அதிகப் பாடல்கள் :—

வணங்கு நுண்ணிடை திரிசடை வணங்குவான் கற்பிற்
கிணங்க ரின்மையா னேக்கியோ ரிடரின்றி யிலங்கைக்
கணங்கு தானெனு விருத்திய நயன்றந்தை யருளப்
பணங்கொள் வேலிளங் கண்ணினுள் சிதைபா டணைந்தாள்.

மைய லின்றியே யிலங்கைமா நகர்காத்து மாதே
செய்ய வாகிய திருவெனப் பொலிந்தினி திருத்தி
கைக ளான்மிகப் புல்கியே கண்கணீர் ததும்பப்
பொய்யிலா மனத் திரிசடை விடையெனப் போனாள்.

## விமானத்தின்மீது உள்ள இராமபிரான் வீடணன் முதலியோரைப் பார்த்து கூறுதல்

4039. அண்ட முண்டவன் மணியணி யுதரமொத் தனிலன்
சண்ட வேகமுங் குறைதர நினைவெனுந் தகைத்தாய்
விண்ட லந்திகழ் புட்பக விமானமா மதன்மேற்
கொண்ட கொண்டல்தன் துணைவரைப் பார்த்திவை
[குணித்தான்.

அண்டம் உண்டவன் - ஊழிப் பிரளயத்தில் புவனமனைத்தையும் தன் வயிற்றுக் கொள்பவனான திருமாலினுடைய, மணி அணி உதரம் ஒத்து - அழகிய வயிற்றை யொத்து, அனிலன் - காற்றின், சண்டம் வேகமும் குறைதர - உக்கிரமான வேகமும் பின்னிடைய, நினைவு எனும் தகைத்தாய் - மனோவேகம் உடையது என்று

சொல்லக் கூடியதாய், விண் தலம் திகழ் புட்பக விமானம் ஆம் அதன்மேல் கொண்ட - ஆகாயத்தில் ஒளிரும் விமானமாகிய புட்பகத்தின் மேல் ஏறிக்கொண்ட, கொண்டல்-காளமேகம் ஒத்த இராமபிரான், தன் துணைவரை பார்த்து இவை குணித்தான் - (வீடணன் முதலிய) தனது நண்பர்களை நோக்கிப் பின்வரும் வார்த்தைகளை எண்ணிச் சொல்லலானான். அவற்றை அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

அண்டமுண்டது ; 'ஈசனுண்ட வண்டமுற்றும் உண்டதே' (கிட்கிந்தா. 237) ; 'ஒரு வாயின் விழுங்குதியால்' (ஆரணிய. 58) ; 'பாரை யிடந்தவனும் பாரை யளந்தவனும், பாரை யெடுத்தவனும், பண்பாகப், பாரை மணங் கொண்டவனும் உண்பவனும் கொண்டலென நின்றருளும், வண்டமருந் தண்டுளவ மால்'. என்றது காண்க. நினைவெனும் தகைத்தாய் - மானுருவாக நின்மனம் பூட்டினையோ' (அகம். 384) ; 'கொண்டல் - நீலமேக மொத்த இராமபிரான் உருவிலும் பண்பிலும் பயனிலும் உவமை.

பா - ம். 1. அணிமணி.

2. தரத்தாய்.

3. விமானமாம் புட்பக மதன்மேல், புட்பக விமானத்தின்மேல், புட்பக மானமா மதன்மேல், விமானப் புட்பக மென்னும்.

4. குறித்தான். 147

4040. வீட ணன்றனை யன்புற நோக்குரு விமலன்
தோட ணைந்ததார் மவுலியாய் சொல்வதொன் றுளதுன்
மாட ணைந்தவர்க் கின்பமே வழங்கிநீ ளரசின்
நாட ணைந்தவர் புகழ்ந்திட வீற்றிரு நலத்தால்.

விமலன் - குற்றமற்றவனான இராமபிரான், வீடணன் தனை அன்புற நோக்குறு - விபீடணனை அன்புடன் பார்த்து, 'தோடு அணைந்த தார் - பூவிதழ்களுடன் கூடிய மாலையைப் புனைந்த, மவுலியாய் - முடியை உடையவனே ! சொல்வது ஒன்று உளது - (நான் உனக்குக்) கூற வேண்டுவது ஒன்று உள்ளது ; உன்மாடு அணைந்தவர்க்கு-உன் இடம் கூடியுள்ளவர்க்கு, இன்பமே வழங்கி - இனியவற்றையே அருளி, நாடு அணைந்தவர் புகழ்ந்திட - நாட்டில் பொருந்தியவர் யாவரும் பாராட்டும்படி, நீள் அரசில் - பெரிய

இந்த அரசாட்சியிலே, நலத்தால் - (பல்வித) நன்மைகளோடும், வீற்றிரு - பிறர் எவரும் நிகரில்லை என்னுமாறு இருந்தருள்வாயாக, (என்றனன்).

நோக்குரு - செய்யாவென்னும் வாய்பாடு. அணைந்தவர் - விரும்பிக் குடியேறியவர்.

பி - ம். 1. விரைப்பூம்.

2. தோடணிந்த.

3. வான ; விர. 148

4041. நீதி யாறெனத் தெரிவுறு நிலைமைபெற் றுடையாய்
ஆதி நான்மறைக் கிழவனின் குலமென வமைந்தாய்
ஏதி லார்தொழு மிலங்கைமா நகரினு ளினிநீ
போதி யாலெனப் புகன்றனன் நான்மறை புகன்றான்.

'நீதி ஆறு என தெரிவுறு நிலைமை பெற்று உடையாய்-நீதிகளடங்கிய ஆறு என (உலகினர்) தெரிந்து கொள்ளும்படியான தகைமை பெற்றுள்ளவனே ! ஆதி - அநாதியான, நான்மறை கிழவன் - நான்கு வேதங்கட்கும் உரியவன் ஆன பிரமன், நின் குலம் என அமைந்தாய் - உன் குல முதல்வன் என்று கூறும் சிறப்புற்றவனே ! நீ ஏதிலார் தொழும் - நீ பகைவர்கள் வணங்கும்படியான, இலங்கை மாநகரினுள் - (அரண்களையுடைய) இலங்கை மாநகரத்திற்குள், போதி - செல்வாயாக', என - என்று, புகன்றனன் - என்று கூறி விடையீந்தான் ; நான்மறை புகன்றான் - நான்கு வேதங்களையும் வெளியிட்டருளிய திருமாலின் அவதாரமான இராமபிரான். ஆல் : அசை

நீதியாறு ; (ஒப்பு) : 'தள்ளரிய பெரு நீதித் தனியாறு புகமண்டும், பள்ளமெனும் தகையானை' (பால. குலமுறை. 2) ; (ஒப்பு) : 'இயைந்த நீதி, வளையாவரு நன்னெறி நின்னறிவாகுமன்றே' (அயோத்தி. நகர் நீ. 129) ஆதி நான்மறைக் கிழவனின் குலமென வமைந்தாய் ; 'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி' (ஆரணிய. 258) என்றும், 'வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன் மைந்தன்' (சுந்தர. 483) என்றும் வருவன காண்க. வீடணன்

பிரமதேவனின் கொள்ளுப் பேரன். இலங்கை ஏழு மதில்களைக் கொண்டு, நீரரண் நிலவரண் காட்டரணுடன் விளங்கியமையின் பகைவரால் போற்றப்படுவதென்க. ஆல்: அசை. நான்மறை புகன்றான். 'அன்னமாயரு மறைகள் அறைந்தாய்நீ' (ஆரணிய. 60) இனி நீதியாறு - நீதி வழி யெனினுமாம்.

பி - ம். 1. நீர்மை.

2. அமைத்தால்.

3. நகரினுக்கினி நீ.

149

4042. சுக்கி ரீவநின் தோளுடை வன்மையாற் றெசந்தொ
சுக்கி ரீவனைத் தடிந்துவெம் படையினு லசைத்த
மிக்க வாநரச் சேனையி னிளைப்பற மீண்டூர்
புக்கு வாழ்கெனப் புகன்றன னீறிலாப் புகழோன்.

ஈறு இலா புகழோன்-வரம்பற்ற புகழை யுடையவனான இராம பிரான், (சுக்கிரீவனை நோக்கி), 'சுக்கிரீவ - சுக்கிரீவா, நின் தோள் உடை வன்மையால் - உன்னுடைய புய வலியினால், தெசம் தொகு அ கிரீவனை - பத்து என்னும் எண் கூடப்பெற்றுள்ள கழுத்துக்களை உடையவனான இராவணனை, தடிந்து-கொன்றேன்; வெம்படையினால் - (பகைவர்களுடைய) கொடிய ஆயுதங்களினால், அசைத்த - நிலை குலைக்கப்பட்ட, மிக்க வாநர சேனையின் - தொகுதி யான குரக்குப் படையின், இளைப்பு அற - தளர்ச்சி நீங்கும்படி, மீண்டு ஊர் புக்கு வாழ்க - மீண்டும் ஊர்க்குள் சென்று வாழ்க', என புகன்றனன் - என்று சொன்னான்.

தசக்கிரீவனைத் தொகத்தடிந்து என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். இப் பொருளில், தொகுதல் - மறைத்தல். ஊர் - கிட்கிந்தை.

பி - ம். 1. தோளிடை; வன்மையிற் றெகைத்த, வன்மையிற் றுணிவால், வன்மையினுற்றச்.

2. தடிந்தநம்; படைகளா லசந்து, படைகளாற் றளர்த்து.

3. சேனையும்; விளைப்புற மீண்டூர்ப், இளைப்புற மீண்டூர். 150

4043. வாலி சேயினைச் சாம்பனைப் பனசனை வயப்போர்
நீல னாதிய நெடும்படைத் தலைவரை நெடிய
காலின் வேலையைத் தாவிமீண் டருளிய கருணை
போலும் வீரனை நோக்கிமற் றிம்மொழி புகன்றான்.

(பின்னும் இராமபிரான்) வாலி சேயினை - அங்கதனையும், சாம்பனை - சாம்பனையும், பனசனை - பனசனையும், வயம் போர் நீலன் ஆதிய நெடு படை தலைவரை - வலிய போர் புரியும் ஆற்றல் சான்ற நீலன் முதலான பெரும்படைத் தலைவர்களையும், நெடிய காலின் வேலையை தாவி - நீண்ட கால்களால் கடலைத் தாண்டி, (இலங்கை சேர்ந்து பிராட்டியின் செய்தியைத் தெரிந்து), மீண்டு அருளிய - திரும்பி வந்த, கருணை போலும் வீரனை - இரக்கமே வடிவாகக் கொண்டாற் போன்ற வீரனான அநுமனையும், நோக்கி - கடாட்சித்து, இ மொழி புகன்றான் - (ஊர் புக்கு வாழ்கென்ற) வார்த்தைகளைப் பகரலானான். மற்று : அசை.

நெடிய காலின் வேலையை - நீண்ட காலினால் வேலையைத் தாவினவன் அநுமன். 'கருங்கடல் கடந்தனன் காலினா லென்றான்' (சுந்தர. 585); 'ஓதநீர் கடந்து பகை கடிந்துலகை யுய்யக் கொண்டான்' (யுத்த. 408); 'அருங்கடல் கடந்திவ்வூரை யள்ளெரி மடுத்து' (யுத்த. 2825) என்று சிறிய திருவடியே கூறுதல் காண்க. காலின் தாவினன் - காற்று வாயிலாகத் தாவினவன் என்றுமாம்; காற்றுப் போல என்றுமாம். கருணை போலும் வீரன் - அநுமன் ; 'அறவனார்த் தெழுமோசையின்' (சுந்தர. 720); 'அறவனு மதனை யறிந்தான்' (சுந்தர. 774); அநுமன் - வீரன். 'அநுமனென்பவனை யாழி யைய நின்செய்ய செங்கைத் தனுவென நினைதி' (கிட்கிந்தா. 358); என்று வாலியே கூறுதல் காண்க.

பி - ம். 2. மறப்போர்.

2. ஆதியா, ஆதியர்.

3. கடந்துநீ.

4. நோக்கி நின்று.

அதற்கு அவர்கள் உடன்படாமை

4044. ஐய னிம்மொழி புகன்றிடத் துனுக்கமோ டவர்கள்
மெய்யு மாவியுங் குலேதர விழிகணீர் ததும்பச்
செய்ய தாமரைத் தாளிணை முடியுறச் சேர்த்தி
உய்கி லேநினை நீங்கினென் றினையன வுரைத்தார்.

ஐயன் - இராமபிரான், இ மொழி புகன்றிட - இவ் வார்த்தையைக் கூற, அவர்கள் - சுக்கிரீவாதிகள், (இராகவனைப் பிரிய நேருமே என்ற), துனுக்கமோடு - அச்சத்தால், மெய்யும் ஆவியும் குலேதர - உடலும் உயிரும் நடுக்குறவும், விழிகள் நீர் ததும்ப - கண்களில் நீர் ததும்பவும், (இராமபிரானுடைய) செய்ய தாமரை தாளிணை - சிவந்த தாமரை மலர் போன்ற இரு திருவடிகளையும், முடி உற சேர்த்தி - (தங்கள்) தலை பொருந்துமாறு சேர்த்து (வணங்கி), நினை நீங்கின் - உன்னைப் பிரியப் பெற்ருல், உய்கிலேம் - பிழைக்க மாட்டோம்', என்று - என்று மொழிந்து, (மேலும்) இனையன உரைத்தார் - இவ் வார்த்தைகளைப் பகரலானுர்.

இம் மொழி; அவரவர்கள் தங்கள் ஊரில் சென்று வதிக என்று கூறிய சொல். குலேதர - குலைய. தர - துணைவினை விழிகண்ணீர் ததும்ப எனினுமாம். (ஒப்பு): 'நீருள வெனினுள மீனு நிலமும், பாருள வெனினுள யாவும்' (அயோத்தி. நகர் நீ. 151); செய்ய தாமரைத் தாளிணை; 'சேயிழைத் தாமரை யென்று சேனுளோர், ஏயின தன்றுனை யெளிய தில்லையால்' (சுந்தர. 528) என்பது அநுமன் கூற்று.

பி - ம். 1. ஐயனம்மொழி.
2. கணிரரும்பச்.
3. தாளிணை.
4. உய்கிலோ முன்னை ; பிரியில். 152

விடணன் முதலியோர் இராமனை
நோக்கிக் கூறுதல்

4045. பார மாமதி லயோத்தியி னெய்திநின் பைம்பொன்
ஆர மாமுடிக் கோலமுஞ் செவ்வியு மழகும்
சோர்வி லாதியாங் காண்குறு மளவையுந் தொடர்ந்து
பேர வேயரு ளென்றன ருள்ளன்பு பிணிப்பார்.

உள்ளன்பு பிணிப்பார் - (இராமபிரானை) மனத்தில் நிறைந்த அன்பினாற் கட்டக் கூடியவர்களாகிய வீடணன் முதலானோர், (இராமபிரானை நோக்கி), 'பாரம்-பெரிய, மாமதில்-மதில்கள் சூழ்ந்த, அயோத்தியின் எய்தி - அயோத்தியை அடைந்து, நின் - உனது, (முடிசூட்டு விழாவில்) பைம்பொன் ஆரம் மாமுடி கோலமும் - பசிய பொன்னாலியன்றதும், முத்துப் பதிக்கப் பெற்றதுமான பெரிய மகுடத்தை, நீ புனையும் அழகினையும், செவ்வியும் அழகும் - அக் காலையில் நடைபெறும் சிறப்புக்களையும் அழகினையும், சோர்விலாது - மனத் தளர்ச்சி நீங்குமாறு, யாம் - நாங்கள், காண்குறும் அளவையும் - காணும் அளவும், தொடர்ந்து - உங்கள் பின்வந்து, பேரவே அருள் - எங்கள் ஊர்கட்குத் திரும்புமாறு அருள் புரிக' என்றனர் - என்று இரந்தனர்.

பாரமா மதில்; 'பார வெஞ்சிலை' (கிட்கிந்தா. 319); போலக் கொள்க. ஆரம் - முத்து; 'அரைத்த வாரமு மாரமு மாலையும் அணிந்து' (வி. பா. நிரை. 29) என்ற இடத்து இச் சொல் சந்தனம் முத்து முதலிய பொருள்களில் வருதல் காண்க. கோலம் - முடியின் கண்கவர் புறவனப்பு. செவ்வி - மகுடம் இராமபிரான் சிரத்தில் பொருந்தி விளங்கும் சீர்மை; அழகு; இரண்டுடன் சேர்த்தியழகு என்க. ஆதலின், பேர்தி : 'ஓதி பேர்தியென்றுரைத்தனன் உலகெலா முயர்ந்தோன்' (யுத்த. 185); உள்ளன்பு பிணிப்பார்; 'பத்தி வலையில் படுவோன் காண்க' (திருவாச. திருவண்ட. 42); 'அன்பெனும் வலையில் அகப்படுமலையே, யன்பெனும் குடில்புகு மரசே' (திருவருட்பா.).

பி - ம். 2. செவ்வியும் சிறப்பும்.
3. சோர்கிலாது ; காண்டுறும்.
4. போகவே ; பிணித்தார், பிரியார். 153

## இராமன் அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடன்பட்டுக் கூறுதல்

4046. அன்பி னுலவர் மொழிந்தவா சகங்களு மவர்கள்
துன்ப மெய்திய நடுக்கமு நோக்கிநீர் துளங்கல்
முன்பு நானினைந் திருந்ததப் பரிசுநும் முயற்சி
பின்பு காணுமா றுரைத்ததென் றுரைத்தனன் பெரியோன்.

பெரியோன் - பெருந்தகையான இராமபிரான், அன்பினுல் அவர் மொழிந்த வாசகங்களும் - அன்புடன் அவர் பகர்ந்த சொற்களையும், அவர்கள் - அவர்கள், துன்பம் எய்திய நடுக்கமும் - (பிரிவு நேருமோ) என்ற மனத்துயரால் அடைந்த நடுக்கமும், நோக்கி - எண்ணி, நீர் துளங்கல் - நீங்கள் கலங்க வேண்டா; முன்பு நான் நினைந்திருந்தது அப் பரிசு - முதலில் நான் எண்ணியிருந்ததும் அவ்விதமே; (அதாவது உங்களையும் உடன்கொண்டு செல்ல வேண்டும் என்பதே), (ஆயினும்) பின்பு - பின்னர், (நான் இங்ஙனம்) உரைத்தது - கூறியது, நும் முயற்சி காணுமாறு - உங்களுடைய ஏற்பாட்டைக் காண்பதற்காகவே, 'என்று உரைத்தனன் - என்று மொழிந்தான்,

துன்பம் எய்திய நடுக்கம் - பிரிவுத் துயரால் நிகழக்கூடியது; துயரம் காரியம். நடுக்கம் - காரணம். துளங்கல் - அசைதல் அல்லது கலங்குதல். 'துளக்கலாகா' (நன். பாயிரம். 38); பின்னிரண்டடிகளில் இராமபிரானுடைய உலகியல் அறிவைக் காணலாம். இத்துணைப் பெரியோனிடத்தும் இச் சோதனைக் குறிப்புக்கள் காணப் பெறுமோ எனின், ஓர் பேரரசனுக்கும் தகுதியுள்ளானுக்கு இஃது இன்றியமையாததென்க. வெளுத்ததெல்லாம் பால் என்று இருப்பது அரசர்களுக்கு அழகன்று ஆதலின். அயோத்தியா காண்டத்தில், தயரதன் பேரவையில் எல்லோரும் ஒரு மனதாக இராமபிரானே முடிசூட வேண்டும் என்று கூறக் கேட்ட பேரரசன், 'பொம்மல் வாசகம், உகவையின் மொழிந்ததோ வுள்ள நோக்கியோ, தகவென நினைந்ததோ' (அயோத்தி. மந்திரப். 79) என்று வினவியது காண்க.

பி - ம். 1. துணிந்தவா.

2. நோக்கிய தூயோன்.

3. நாறிநினைந்து ; பரிசினும்.

4. காணுமாறுற்றது ; தென்றிராகவன் புகன்ருன். 164

## சுக்கிரீவன் முதலியோர் இராமபிரான் வார்த்தையால் மனமகிழ்தல்

4047. ஐயன் வாசகங் கேட்டலு மரிகுலத் தரசும்
மொய்கொள் சேனையு மிலங்கையர் வேந்தனு முதலோர்
வைய மாளுடை நாயகன் மலர்ச்சரண் வணங்கி
மெய்யி னோடருந் துறக்கமுற் றாரென வியந்தார்.

ஐயன் வாசகம் கேட்டலும் - இராமபிரான் வார்த்தைகளைக் கேட்டவுடனே, அரிகுலத்து அரசும்-குரக்குக் குழுவின் தலைவனான சுக்கிரீவனும், மொய்கொள் சேனையும் - அடர்ந்து நின்ற வானரப் படையும், இலங்கையர் வேந்தனும - வீடணனும், முதலோர் - முதலிய எல்லோரும், வையம் ஆள் உடை நாயகன் - பூதலத்தை யாளுதலுடைய மன்னனான இராமபிரானுடைய, மலர் சரண் வணங்கி - தாமரை மலர் போன்ற பாதங்களில் பணிந்து, மெய்யி னோடு அரு துறக்கம் உற்றார் என வியந்தார் - தத்தம் உடம் புடனே (பெறுதற்கு) அருமையான சுவர்க்கத்தை அடைந்தவர் போன்று வியப்பு எய்தினர்.

வையம் ஆள்உடை நாயகன் - சக்கரவர்த்தித் திருமகனாக அவதரித்துக் கோசலை நாட்டினை ஆட்சி செய்யும் எல்லாத் தகுதி கள் பெற்றிருந்தும், கால கதியால் அதனை இதுகாறும் புரியாது, இப்பொழுது புரியும் நிலையை விரைவில் எய்தப் போகின்றான் என்பது பற்றி, 'வையம் ஆளுடை நாயகன்' எனப்பட்டது. மற்றும் பெருமான் ஆண்டான், மன்னுயிர் அனைத்தும் அவன் அடிமை. 'அவன் உடையான், உயிர்கள் உடைமை' என்றது பற்றியும் இங்ஙனம் கூறப்பெற்றது எனினுமாம். 'மெய்யினோ டுந்துறக்க முறுதல்' இதனைச் சதேகமுத்தி என்ப. இதனை அடைபவர் சீவன் முத்தர் எனப்படுவர். இதற்கு எதிர்ப்பதம் 'விதேக முக்தி' இவற்றினைப் பற்றியவிவரங்களைக் கைவல்யமாதி நூல்களிற் கண்டு கொள்க. 'உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்' (பால. கடிமண. 1); 'துறக்க முற்றானென முன்னம் சொல்லும்' (ஆரணிய. 195); 'எந்நாளும், சாகாமற் கற்பதே கல்வி' (தனிப்பா.) என்ற ஔவை வாக்கும் இங்கு ஆராய்தல் தகும்.

பா-ம். 2. முதலேழ்.
4. மெய்யினோடிருந்.

## சுக்கிரீவன் முதலியோரை விமானமேற இராமன் கட்டளையிடுதல்

4048 அனைய தாகிய சேனையோ டரசனை யனிலன்
தனய னாதியாம் படைப்பெருந் தலைவர்கள் தம்மை
வனையும் வார்கழ லிலங்கையர் மன்னனை வந்திங்
கினிதி னேறுமின் விமானமென் றிராகவ னிசைத்தான்.

*அனையது ஆகிய - அவ்வாறு வியப்பெய்திய, சேனையோடு - (குரக்குப்) படையுடனே, அரசனை - (அவைகட்கு) மன்னனான சுக்கிரீவனையும், அனிலன் தனயன் ஆதியாம் படை பெருந்தலைவர்கள் தம்மை - காற்றின் புதல்வனான அநுமன் முதலான பெரிய சேனைத் தலைவர்களையும், வனையும் வார்கழல் - புனைந்த நீண்ட வீர கண்டையை யுடைய, இலங்கையர் மன்னனை - இலங்கை வேந்தனான வீடணனையும், (நோக்கி), 'இங்கு வந்து - நீங்கள் இங்கு வந்து, இனிதின் விமானம் ஏறுமின் - இன்பகரமாக விமானத்தின்மீது ஏறுங்கள்', என்று - என்று, இராகவன் இசைத்தான் - இராமபிரான் சொன்னான்.*

*அநிலன் - காற்று வேந்தன். அநிலம் - காற்று; 'அகத்துறு மக்களும் யானும், அநிலமதாகும் உணவினை உண்போம்' (தனிப்பா.); 'கதிகொண்ட சேனை நடவ வெழுதுகள் ககனம் சுலாவி யநிலகதியுற' (வி. பா. 16. ஆம்போர். 73); அநிலன் - வடசொல்.*

பி - ம். 1. அனையர்; அமலன்.
4. உரைத்தான். 156

## அவர்கள் யாவரும் புட்பகத்தின்மீது ஏறுதல்

4049. சொன்ன வாசகம் பிற்படச் சூரியன் மகனும்
மன்னு வீரரு மெழுபது வெள்ளவா நரரும்
கன்னி மாமதி லிலங்கைமன் னெடுகடற் படையும்
துன்னி னார்நெடும் புட்பக மிசையொரு சூழல்.

*சொன்ன வாசகம் பிற்பட - (இராமபிரான்) பகர்ந்த சொற்களும் பின்னாகும்படி, சூரியன் மகனும் - சுக்கிரீவனும், மன்னும் வீரரும் -*

பொருந்திய படைத் தலைவர்களும், எழுபது வெள்ளம் வானரரும் - எழுபது வெள்ளம் வானரர்களும். கன்னி - அழியாத, மாமதில் இலங்கை மன்னொடு - உயர்ந்த மதில்கள் சூழ்ந்த இலங்காபுரி வேந்தனான வீடணனும், கடல் படையும் - கடல் போலப் பரந்த அவனது சேனையும், நெடு புட்பகம் மிசை - பெரிய (அந்தப்) புட்பக விமானத்தின்மீது, ஒரு சூழல் - ஒரு சுற்றில், துன்னினார் - நெருங்கியமர்ந்தார்கள்.

வீடணன் ஆதியோர் விமானத்தில் ஏறிய விரைவு தோன்றச் 'சொன்ன வாசகம் பிற்பட' எனப்பட்டது. போரில் மரித்த வானரர்களும், தேவர்களின் ஆசியால் உயிர் பெற்றெழுந்தனர் ஆகலின், முதற்கண் கூறிய எழுபது வெள்ளம் வானரர்களே இங்கும் குறிக்கப் பெற்றனர். கன்னி மாமதில் - அழியாத பெரிய மதில். கடல் படை - கடல் போன்ற அரக்கர் படை. நெடும் புட்பக மிசையொரு சூழலில் இத்துணைப் பெருங் கூட்டமும் தங்கிற்று என்று, இப்பெருங் கூட்டத்தின் சிறுமையையும், விமானம் இன்னும் பலரையும் ஏற்கக் கூடியதென்ற அதன் பெருமையையும் நயம்படக் கூறியவாறு.

பி - ம். 1. சூரியன் புதல்வன்.

4. பெரும் புட்பகமீதொரு. 157

சில பிரதிகளில் கடவுளர் காட்சிப் படலமும், திருவடி தொழுத படலமும் இங்கு முடிய, இதன்மேல் வசந்தன் உயிர்பெறு படலம் என்ற பெயருடன் சில பாடல்கள் காணப்படுகின்றன. அவை வருமாறு :—

1 என்ற காலையி லெழுந்தவ னியற்கையை நோக்கி
நன்று நாயக னறிவொடு நினைவன நயந்தான்
சென்று சேனையை நாடினன் திரிந்துவந் தெய்தி
வென்றி வீரரில் வசந்தனைக் கண்டிலா வெறுத்தான்.

2 என்னுங் காலை யிராமனும் யம்படர் யாரும்
மன்னுந் தொல்புர நோக்கியே மணிநகை முறுவல்
உன்னி னன்றியான் தேவருக் குதவிசெய் தென்னுப்
பொன்னின் வார்சிலை யெடுத்தனன் பொறுத்தனன்
[பொரவே,

3 எண்டி சாமுக மிரிந்துக யமபுரங் குலைய
அண்ட கோளகை யடுக்கழிந் துலைவுற வழியாப்
புண்ட ரீகத்துப் புராதனன் முதலிய புலவோர்
தொண்டைவா யுலர்ந் தலமரத் தொடுவிணு ணெறிந்தார்.

4 பாக வான்பிறை யாமெனப் பலர்நின்று துதிப்ப
வாகை கொண்டவெஞ் சிலையினை வளைவுற வாங்கி
மேக சாலங்கள் குலைவுற வெயிற்கதிர் மாட்சி
சோக மெய்திமெய் துளங்கிடச் சுடுசரந் துரந்தான்.

5 வல்லை மாதிர மறைந்திட வானவர் மயங்க
எல்லை காண்குரு யாவரு மிரியிலி லேக
வில்லை வாங்கிய கரமவை விதிர்விதிர்ப் பெய்தத்
தொல்லை நான்மறை துளங்கிடச் சுடுசரந் துரந்தான்

6 வன்பு லங்கிளர் நிருதரை வருக்கமோ டறுக்க
பின்பு'லங்கொளு முருமென்ன வீசிய வில்லைத்
தன்பொலங் கையிற் ருக்கியே தொடுத்தவச் சரங்கள்
தென்பு லன்றனை நிறைத்தது செறிந்தன சேணில்.

7 தரும ராசனும் காலனும் யமபடர் தாமும்
உருமு வீழ்ந்தெனச் சரம்வந்து வீழ்ந்ததை யுணர்ந்தும்
மரும' தாரையிற் பட்டதோர் வடிக்கணை வாங்கி
நிருமி யாவிது விராகவன் சரமென நினைந்தரர்.

8 கெட்ட தின்றினித் தென்புலங் கேடுவந் தெய்திப்
பட்ட னம்மினிப் பிழைப்பில மென்பதோர் பயத்தான்
முட்ட வெய்திய முயற்சியோ டியாவரு மொய்ப்பச்
சிட்டர் தந்தனித் தேவனை வணங்கினர் சென்றார்.

வேறு

9 சிறந்த நின்கருணை யல்லாற் செய்தவம் பிறிதி லார்மேற்
புறந்தரு முனிவு சாலப் போதுமோ புத்தே ணின்னை
மறந்திருந் துய்வ துண்டோ மலர்மிசை யயனைத் தந்த
அறந்கரு சிந்தை யையய யபயநின் அபய மென்றார்.

வேறு

10 ஐயனேயெமை யாளுடை யண்டர் நாயகனே
மெய்யனேயெனச் சரணின்வந் தியாவரும் வீழ்ந்தார்
பொய்யினேர்செய்த பிழைபொறுத் தருள்கெனப்
[போர்மூண்
டெய்ய நேரிலாச் சிலையினை மடக்கின னிராமன்.

11 வந்தடைந்துமக் கபயமென் றடியினில் வணங்கி
எந்தனிப்பிழை பொறுத்தியென் றியம்பினி ரிதனல்
உந்தன் மேற்சலந் தவிர்ந்தனன் யூகநா யகன்ருன்
தந்த சேனையின் வசந்தன்வந் திலன்தரு கென்ருன்.

12 தன்றனிச் சரண் வணங்கலு மிராகவன் சாற்றும்
என்ற னிப்பிழை பொறுத்தி யென் றியம்பினை அதனல்
உன்றன் மேல்சலம் தவிர்ந்தனம் யூபநாய கன்தான்
தந்த சேனையில் வசந்தன் வந்திலன் தருகென்ருன்.

13 அண்ண லாரியன் தருதியென் றருளலு மவர்போய்
விண்ணெ லாம்புகுந் தோடியே வசந்தனை விரைவில்
நண்ணி ஞடிநல் லுயிரினைக் காண்கிலா திருந்தார்
திண்ணன் யாக்கையெங் கேயெனச் சாம்பவன் செப்பும்.

இப்பாடல் சில மாறுபாட்டுடன் 143 : ல் குறிக்கப் பெற்றது.

வேறு

14 அன்ன தேயென வவனுயிர்க் கமரர்தம் பதிக்கே
முன்ன தோருடற் கொண்டிவண் டருகென மொழியச்
சொன்ன வாய்மைகேட் டநுமனுந் துணைவரைப் பாராப்
பொன்னின் பாதுகம் பணிந்தனன் விடையெனப்
[போனன்.

இதனேடு வசந்த னுயிர்பெறு படலம் முடிய, இனித் திரு வணைச் சிறப்புப் படலம் என்று காண்கின்றது.

15 அன்ன தாதலி னமரர்தம் நகரிடை யாங்கள்
முன்ன தோருடல் நாடியே கொணர்ந்திட முந்தச்
சொன்ன வாயுவைத் தரிசிக்க வசந்தனும் தோன்றிப்
பொன்னின் பாதுகம் புனைந்தனன் தருமனும் போனன்.

16 அன்ன காலையிற் புட்பக விமானமாங் கடைய
முன்னி ராகவன் சானகி யிலக்குவன் முதலா
மன்னு வானர மெழுபது வெள்ளமும் வரையா
உன்னி யேறலு முச்சியிற் சொருகுபூப் போன்ற.

17 என்ற புட்பக விமானத்தி னேறினர் எவரும்
நன்று தானென நாயக னேறினன் திருவோ
டன்று தானிளங் கோவொடும் அக்கவி வெள்ளம்
ஒன்று தானென வொருதிசை யிருந்தது மொக்கும்.

வேறு

18 ஆயகண் டமல னுள்ள மகிழ்ந்தன னநுமன் தன்பால்
நேய முண் டதுதா னிற்க நெடியவன் சரணம் சூழ
மேயினன் தமர்க ளோடு வசந்தனும் விண்மீ தாகப்
போயின திராமன் சொல்லின் புட்பக விமானமம்மா.

## விமானத்தின் சிறப்பு

4050. பத்து நாலென வடுக்கிய வுலகங்கள் பலவின்
மெத்தி யோனிக லேறினும் வெற்றிட மிகுமால்
முத்த ரானவ ரிதனிலை மொழிகுவ தல்லால்
இத்த ராதலத் தியம்புதற் குரியவர் யாரே.

பத்து நாலென அடுக்கிய - பதினான்காக (ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கப் பெற்ற), உலகங்கள் பலவின் - பல உலகங்களிலும், மெத்தி யோனிகள் ஏறினும் - மிகுந்துள்ள உயிர் வர்க்கங்கள் ஏறியமர்ந்தாலும், வெற்றிடம் மிகும் - இவ் விமானத்தில் காலி இடம் அதிகமாகக் காணப்படும்; இதன் நிலை - இந்த விமானத்தின் இயல்பினை, முத்தர் ஆனவர் மொழிகுவது அல்லால் - முத்தர்கள் பகரக் கூடுமேயன்றி, இ தராதலத்து இயம்புதற்கு உரியவர் யார் - இப் பூமியில் மொழிதற்குரியவர் யாவர், (எவருமில்லை). ஏகாரம்: எதிர்மறைப் பொருள். ஆல்: அசை.

மெத்த யோனிகள் - மெத்தி யோனிகள். மெத்த - மிகுதியான. தங்கு தடையின்றி எவ்வுலகத்தும் தூலசூக்குமாதி வடிவு கொண்டு செல்லக் கூடியவர்கள் சிவன் முத்தர் ஆகலின், 'முத்த

ரானவர் மொழிகுவதல்லால் எனப்பட்டது. முத்தர் - பாச பந்தங்களினின்று விடுபட்டவர் என்பது உறுப்புப் பொருள். தராதலம்; 'தராதலத்தில் உற்ற தமிழ்க்குற்ற மெல்லாம், அராவும் மரமாயிற் றன்றே' (கம்பரா. பாயிரம்.); தராதலம் - தரையாகிய தலம் என இரு பெயரொட்டுமாம். 'வானில், தராதலத் தெவரும் பேணத் தண்மதி யுதித்த தோற்றம்' (ஆரணிய. 661); இதனைத் தராவலயம் (ஆரணிய. 610) என்றும் கூறுவர் ஆசிரியர்.

பா - ம். 1. பலவும்.

2. மெய்த்த ; வெளியிடம் ; மிருமா.

3. அதனில.

4. தராதல மொழிதர லாற்றலர். 158

## வேறு

### இராமன் புட்பகத்தின்மீது விளங்குதல்

4051. எழுபது வெள்ளத் தோரு
மிரவிகான் முளையு மெண்ணின்
வழுவிலா விலங்கை வேந்தும்
வான்பெரும் படையுஞ் சூழத்
தழுவுசீ ரிளைய கோவுஞ்
சனகன்மா மயிலும் போற்ற
விழுமிய குணத்து வீரன்
விளங்கினன் விமானத் தும்பர்.

வசந்தன் உயிர்பெறு படலம் பாடல் 27. குறுங்குடிப் பிரதியிலும் உள்ளது. திருவணைச் சிறப்புப் படலம் 35.

எழுபது வெள்ளத்தோரும் - எழுபது வெள்ளம் வானரப் படைகளும், இரவிகான் முளையும் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், எண்ணில் - மனத்தில், வழு இலா - எவ்விதக் களங்கமும் இல்லாத, இலங்கை வேந்தும் - வீடணனும், வான் பெரு படையும் - அவனுடைய சிறந்த பெரிய சேனையும், சூழ - சுற்றிலும் நிற்கவும், சீர் தழுவு - பெருமையால் அணையப் பெற்ற, இளைய

கோவும் - இலக்குவனும், சனகன் மாமயிலும்-சனக மன்னனுடைய மகளான பெரிய மயில் போன்ற சாயலையுடைய பிராட்டியும், போற்ற - துதி செய்ய, விழுமிய குணத்து வீரன் விமானத்து உம்பர் விளங்கினன் - மிகவும் உயர்ந்த பண்புகளையுடைய வீரனை இராமபிரான் புட்பக விமானத்தின்மீது சிறப்புடன் அமர்ந்து விளங்கினன்.

வான் பெரும்படை-அரக்கர் படை. சீரை இலக்குவன் தழுவுவ தன்றிச் சீரே இவனை வலிய வந்து தழுவியது என்க. (ஒப்பு): 'குணங்களை யென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவை யுய்யப் பிணங்குவன வழகிவளைத் தவம் செய்து பெற்றது காண்' (பால. கார் முகப். 18) என்றது காண்க.

பி - ம். 2. சூழ்ந்த.
3. மகளும்
4. குணத்தினனும். 159

4052. அண்டமே போன்ற தையன்
புட்பக மண்டத் தும்பர்
எண்டருங் குணங்க ளின்றி
முதலிடை யீறின் றாகிப்
பண்டைநான் மறைக்கு
மெட்டாப் பரஞ்சுடர் பொலிவதேபோற்
புண்டரீ கக்கண் வென்றிப்
புரவலன் பொலிந்தான் மன்னோ.

ஐயன் புட்பகம் - இராமபிரான் ஏறியமர்ந்த புட்பகமானது, அண்டமே போன்றது - உலக உருண்டையை ஒத்திருந்தது; (அதன்மீது) புண்டரீகம் கண் வென்றி - தாமரை மலர்போன்ற நேத்திரங்களையும் வெற்றியையும் உடையவனும், புரவலன் - காப்புக் கடவுளுமான இராமபிரான், அண்டத்து உம்பர் - எல்லா உலகங்களுக்கும் மேலே, (பரமபதத்தில்), எண் தரு குணங்கள் இன்றி - எண்ணத்தக்க குணங்கள் இல்லாமல், (கணக்கிறந்த குணங்களுடன் கூடி), முதல் இடை ஈறு இன்று ஆகி - உற்பத்தி வளர்ச்சி அழிவு என்பன இல்லாமல், (என்றும் ஒரே தன்மைத்

தாய்): பண்டை நான் மறைக்கும் - அநாதியான நான்கு வேதங்கட்கும், எட்டா - புலனுகாத, பரம் சுடர் பொலிவதே போல் - மேலான ஒளி வடிவமான பரமன் ஒளிர்வது போன்று, பொலிந்தான் - விளங்கினுன். மன்: ஓ, அசை.

தற்குறிப்பேற்ற வணி.

பி - ம். 1. போன்றதன்றே.

2. கணங்கள்.

3. நான்முகற்கும். 160

## இராமன் கட்டளையினுல் யாவரும் மனித வடிவங் கொள்ளுதல்

4053. தேனுடை யலங்கன் மௌலிச்
செங்கதிர்ச் செல்வன் சேயும்
மீனுடை யகழி வேலை
யிலங்கையர் வேந்தும் வெற்றித்
தானையும் பிறரு மற்றைப்
படைப்பெருந் தலைவர் தாமும்
மானுட வடிவங் கொண்டார்
வள்ளல்தன் வாய்மை தன்னுல்.

தேன் உடை - தேனை உடைய, அலங்கல் - மாலையை அணிந்த, மௌலி - முடியை யுடையவனும், செ கதிர் செல்வன் சேயும் - சிவந்த கிரணங்களையே செல்வமாகக் கொண்ட சூரியனுடைய மகனுன சுக்கிரீவனும், மீன் உடை - மீன்களை யுடைய, வேலை - கடலையே, அகழி - அகழியாகக் கொண்ட, இலங்கையர் வேந்தும் - இலங்கை நகர்வாசிகட்கு அரசனுகிய வீடணனும், வெற்றி - வெற்றியினை யுடைய, தானையும் - இரு பக்கத்துச் சேனைகளும், பிறரும் - ஏனையோரும், மற்றை படை பெரு தலைவர் தாமும் - பெரிய சேனைத்தலைவர்களும், வள்ளல் தன் வாய்மை தன்னுல் - கருணையாளனுகிய இராமபிரானுடைய வார்த்தையின்படி, மானுட வடிவம் கொண்டார் - மனித வடிவம் ஏற்றனர்.

மௌலி - இருமுடியாகு பெயர். அரக்கர் வடிவுடனும் வானர வடிவுடனும் இவர்கள் அயோத்தி சென்றுல், அந்நகர் வாசிகள்

அஞ்சுவர் என்று, மனிதவுருவம் ஏற்குமாறு கட்டளை யிட்டான் இராமபிரான். அரக்கர் இயற்கையிலேயே காமரூபிகள் ஆகலானும், வாநரர்கள் முன் வானவர்களே ஆகலானும், இரு சாராரும் மானிடவுருக் கொள்ளவல்லவர் என்க 'தீயவை தீய நோற்றுத் தேவரிற் பெற்றதென்றாள்' (ஆரணிய. 260) என்றது சூர்ப்பணகை கூற்று. மருத்தனை மாயா சனகனாக மகோதரன் செய்ததும், வீடணன் வண்டின் உருக்கொண்டதும் காண்க. இவ்வாறன்றியும் திருமால் அவதாரமான இராமபிரான் கட்டளையாதலின் வேறுருக் கொள்வதில் எவ்வித வருத்தமும் இல்லை என்க. வாய்மை என்ற சொல்லையும் காண்க.

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை. 161

## விமானம் வடக்கு முகமாகச் செல்லுகையில் இராமன் சீதையை நோக்கி ஒன்று கூறத் தொடங்குதல்

4054. குடதிசை மறைந்த பின்னர்க்
குணதிசை யுதயஞ் செய்வான்
வடதிசை யயன முன்னி
வருவதே கடுப்ப மானம்
தடையொரு சிறிதின் றாகித்
தாவிவான் படரும் வேலை
படையமை விழியாட் கைய
னினையன பகர லுற்றான்.

குட திசை மறைந்த பின்னர் - (மாலைப் போழ்தில்) மேற்குத் திக்கில் மறைந்த பிறகு, குண திசை உதயம் செய்வான் - காலையில் கீழ்த் திசையில் உதிப்பவனான கதிரவன் (அம் முறை தவிர்ந்து), வட திசை அயனம் முன்னி வருவது கடுப்ப - வடக்கு வழியில் செல்லக் கருதி வருவது போன்று, மானம் - புட்பக விமானம், தடை ஒரு சிறிது இன்று ஆகி - ஒரு சிறிய தடங்கலுமில்லாமல், வான் - ஆகாய மார்க்கத்தில், தாவி படரும் வேலை - பாய்ந்து செல்லத் தொடங்கும் போழ்து, ஐயன் - இராமபிரான், வேலை படை அமை விழியாட்கு - வேற்படை போன்ற விழிகளை யுடையவளான சீதாப் பிராட்டிக்கு, இனையன பகரல் உற்றான் -

இவ் வார்த்தைகளைச் சொல்லத் தொடங்கினன். அவற்றை அடுத்துவரும் கவிகளிற் காண்க.

விமானம் சூரியன் போன்று பேரொளி வாய்ந்தது. ஆகவே, கிழக்கில் உதித்து மேற்கு நோக்கிச் செல்லும் கதிரோன், தெற்கிலிருந்து வடக்கே போவது போன்று எனக் கூறப்பட்டது. இல்பொருள் உவமை; (ஒப்பு): 'மேற்றிசைக்கு மொரு மேருவுண்டென வுயர்த்தினன்' (வி. பா. இராச சூய. 52); (சுந்தர. 27) 'கெடக் குறியாகி மாகம் கிழக்கெழு வழக்கு நீங்கி, வடக்கெழுந் திலங்கை செல்லும் பருதி வானவனும் ஒத்தான்' (சுந்தர. 30); குடக்கு + திசை - குடதிசை. குணக்கு + திசை - குண திசை. 'திசையொடு திசையும் பிறவும் சேரின்' (நன். உயி. 36) என்ற சூத்திரம் காண்க. பிராட்டி விழிக்கு வேல், 'வில்லொக்கும் நுதலென்றாலும் வேலொக்கும் விழியென்றாலும்' (ஆரணிய. 627); மானம் தடை சிறிதுமின்றி; 'சேண்மீதி வர்ந்து செல்கின்ற தேருக்குத் திட்டேது தட்டேது காண்' (தனிப்பா.)

பி - ம். 1. மறைந்து, மறையப்; கொள்வான்.

2. வடதிசை வெய்யோன், வாயில்; போல.

3. தாவின.

4. பகர்வதானன்.

182

அதிகப் பாடல்கள் :—

1. வென்றிசேர் கவியின் வெள்ளக் கடன்முகந் தெழுந்து [விண்மேல்
சென்றது விமானம் செல்லத் திசையொடு தேசம் ஆதி
யென்றவை யனைத்தும் தோன்ற விராமனு மினிது தேறித்
தென்றிசை யிலங்கை யின்சீர் சீதைக்குத் தெரிக்க லுற்றான்.

2. வென்றிவீ டணன்கொணர்ந்த புட்பக விமானந் தன்மேல்
ஒன்றுநற் சீதை யோடு மும்பரும் பிறருங் காண
வென்றுயர் சேனை யோடு மிராமனும் விரைவி னெய்தித்
தென்றிசை யிலங்கை யாதி தேவிக்குத் தெரியக் காட்டும்.

இச் செய்யுள் ஒரு பிரதியில் 'குடதிசை' என்றதன் முன் உள்ளது.

3. மன்னு பொற் கொடிகளாட மாடமா ளிகையி னுங்குத்
துன்னுபைம் பொழில்கள் சுற்றத் தோரணந் துவன்றி
[வானோர்
பொன்னக ரொக்கு மென்று புகழ்தலிற் புலவ ராலும்
பன்னரு மிலங்கை மூதூர் பவளவாய் மயிலே பாராய்.

4. வெதி ரெதி ரஞ்சு மென்றேன் வெண்ணகைக் கனிவாய் வல்லி
எதிர்பொர வந்த விண்ணோ ரிறைவனைச் சிறையில் வைத்த
அதிர்கழ லரக்கன் றனை யஞ்சலி லாறு செல்லக்
கதிர்மதி விலங்கி யேகுங் கடிமதின் மூன்றுங் காணாய்.

5. வென்றிவேற் கருங்கண் மானே யென்னொடு மிகலி வெய்ய
வன்றிற லரக்க னேற்ற வடதிசை வாயி னோக்காய்
கன்றிய வரக்கன் சேனைக் காவலன் றன்னை நீலன
கொன்றுயிர் கூற்றுக் கீந்த குணதிசை வாயி னோக்காய்.

6. மறத்திறல் வாலி மைந்தன் வச்சிரத் தெயிற்றோன் றன்னைச்
செறுத்துயிர் செகுத்து நின்ற தென்றிசை வாயி னோக்காய்
அறத்தினுக் கலக்கண் செய்யும் அகம்பன்ற னுடைய யாவி
வெறுத்தெதி ரநும னின்ற மேற்றிசை வாயி னோக்காய்.

7. கருங்கட னிகர்ப்ப வான வகழியோர் மூன்றுங் கராணாய்
மருங்கடர் களபக் கொங்கை மதிநுதல் மிதிலை வல்லி
இருங்கட முகத்த யானை யிவுளிதேர் காலாள் துஞ்சிப்
பொருங்கடர் நிறத்தர் வீய்ந்த போர்க்களந் தன்னைப் பாராய்.

8. கொடிமதி லிலங்கை வேந்தன் கோபுரத் தும்பர்த் தோன்ற
அடுதிறற் பரிதி மைந்த னவனிலை குலையத் தாக்கிச்
சுடர்முடி பறித்த வந்நா ளன்னவன் றெல்லை வெம்போர்ப்
படியினை நோக்கி நின்ற சுவேத் மால் வரையைப் பாராய்.

9. பூக்கமழ் குழலினாய் நின் பொருட்டியான் புகலா நின்றேன்
மேக்குயர் தச்சன் மைந்த னளனிவன் விலங்கலாலன்
றாக்கிய விதனை வெய்ய பாதக மனைத்தும் வந்து
நோக்கிய பொழுதே நாறுஞ் சேதுவை நீயும் நோக்காய்.

10. இலங்கையை வலஞ்செய் தேக வெனநினைந் திடுமுன் மாலம்
வலங்கிளர் கிழை வாயில் வரப்பிர கத்த னீலன்
நலங்கிளர் கையின் மாண்ட திவணென நமன்றன் வாயில்
கலந்திட வீங்குக் கண்டாய் சுடாரிசற கட்ட தென்றான்.

11. குடதிசை வாயி லேகக் குன்றரிந் தவனை வென்ற
விடநிகர் மேக நாத னிளவலால் வீழ்ந்த தென்முன்
வடதிசை வாயின மேல விராவணன் மவுலி பத்தும்
உடலமு மிழந்த திங்கென் றுணர்த்திவே றுரைக்க லுற்றான்.

12. நன்னுதல் நின்னை நீங்கி நாள்பல கழிந்த பின்றை
மன்னவ னிரவி மைந்தன் வான் றுணையாக நட்ட
பின்னை மாருதிவந் துன்னைப் பேதறுத் துனது பெற்றி
சொன்னபின் வாநரேசர் தொகுத்ததிச் சேது கண்டாய்.

13. மற்றிதன் தூய்மை யெண்ணின் மலரயன் தனக்கு மெட்டா
பொன்தொடித் தெரிவை யாளென் புகலுகேன கேட்டி
[யன்பால்
பெற்றதாய் தந்தை யோடும் தேசிகற் பிழைத்துச் சூழ்ந்த
சுற்றமும் கெடுத் துளோரும் எதிர்ந்திடின் சுரர்கள் ஆவார்.

14. ஆவினைக் குரவ ரோடும் அருமறை முனிவர் தம்மைப்
பாவையர் குழுவை யின்சொற் பாலரைப் பயந்து தம்மில்
மேவின வவரைச் செற்றோர் விரிகடற் சேது வந்து
தோய்வரேல் அவர்கள் கண்டாய் சுரர்தொழும் சுரர்கள்
[ஆவார்.

15. மரக்கல மியங்க வேண்டி வரிசிலைக் குதையாற் கிறித்
தருக்கிய விடத்துப் பஞ்ச பாதக ரேனும் சாரின்
பெருக்கிய வேழு மூன்று பிறவியும் பிணிகள் நீங்கி
நெருக்கிய வமரர்க் கெல்லாம் நீணிதி யாவ ரன்றே.

16. கண்டிலா தொன்று கண்டோம்
என்றுகைக் கூலி கொள்வோர்
மண்டலா திபர்முன் சென்று
வாழ்குடிக் கழிவு செய்வோர்

மிண்டுகள் சபையில் சொல்வோ
 மேன்மையால் ஒருவன் சோற்றை
யுண்டிருந் தவர்கள் தம்பால்
 இகழ்ச்சியை யுரைக்குந் தீயோர்.

4055. இந்திரற் கஞ்சி மேனு
 ளிருங்கடல் புக்கு நீங்காச்
கந்தர சயிலந் தன்னைக்
 கண்டவர் வினைக டீர்க்குங்
கந்தமா தனமென் றோதுங்
 கிரியிவண் கிடப்பக் கண்டாய்
பைந்தொடி யடைத்த சேது
 பாவன மாய தென்றான்.

'பைந்தொடி - பசிய பொன்னாலாகிய வளையை லணிந்தவளே! மேனுள் இந்திரற்கு அஞ்சி - முன்னாளிலே இந்திரனுக்குப் பயந்து, இரு கடல் புக்கு - பெரிய கடலினுள் புகுந்து, நீங்கா-வெளிப்படாத, கந்தரம் - குகைகளையுடைய, சயிலம் தன்னை - மலைகளுள், கந்தமா தனம் என்று ஓதும் - கந்தமாதனம் என்று பெயர் சொல்லப் பெறுவதும், கண்டவர் வினைகள் தீர்க்கும் - தன்னை (ஒருகால்) தரிசித்த வருடைய தீவினைகளை யெல்லாம் போக்குவதுமான, கிரி - மலை, இவண் - இங்கு, கிடப்ப கண்டாய் - இருப்பதை நோக்குவாயாக; (அம் மலை கடலை) அடைத்து- அணைத்துக் கட்டப் பட்ட,'சேது பாவனம் ஆயது - சேதுவின் தொடர்பால் தூய்மை பெற்றது,' என்றான் - என்று (சீதா தேவியைப் பார்த்துக்) கூறினான்.

இந்திரற்கஞ்சி மலை கடல் புக்கது; வரலாறு: மலைகள் சிறகு பெற்றிருந்த காலத்தில் அவற்றால் நிகழ்ந்த துன்பங்களைப் போக்குதற்காக, இந்திரன் தன் வச்சிரப் படையால் அச் சிறகுகளை வெட்டினன். அவன் படையில் தப்பியது மைந்நாகம் என்னும் மலை என்ப. கந்தரம் - குகை; வடசொல். 'கந்தரப் பொற்கிரி

யாண்மைக் களிறனையான்' (யுத்த. 1558); 'கந்தரத்தினிவிருள' (சிவப். பிரபந். சோண. 15); பாவனம் - தூய்மை.

பி - ம். 1. முன்னுள்.
2. கந்தமா; தன்னுட்; வினைகடரும்.
3. கிடத்தலாலே.
4. பாவன மாவது.

4056. கங்கையோ டியமுனை கோதா
விரிநரு மதைகா வேரி
பொங்குநீர் நதிகள் யாவும்
படிந்தலாற் புன்மை போகா
சங்கெறி தரங்க வேலை
தட்டவிச் சேது வென்னும்
இங்கிதி னெதிர்ந்தோர் புன்மை
யாவையு நீக்கு மன்றே.

'கங்கையோடு யமுனை கோதாவிரி - கங்கையாறு யமுனை கோதாவிரி, நருமதை காவேரி - நருமதை காவேரி (இவை முதலான), நீர் பொங்கும் நதிகள் - நீர் மிகுத்துள்ள ஆறுகள், யாவும் - எல்லாவற்றிலும், படிந்தலால் புன்மை போகா - முழுகினல் அன்றித் தீவினைகள் நீங்க மாட்டா, சங்கு எறி தரங்கம் வேலை - சங்குகளைக் கரைக்கண் எறிகின்ற அலைகளையுடைய கடலில், தட்ட - தடுத்து அணைத்த, சேது என்னும் - சேது என்று சொல்லப்படும், இங்கு இதின் - இங்குள்ள புண்ணிய தீர்த்தத்தை, எதிர்ந்தோர் - கண்ணுற்றவர்க்கு, புன்மை யாவையும் நீக்கும் - மலங்கள் அனைத்தையும் போக்கிவிடும். அன்று ஏ: அசை.

கங்கை யமுனை கோதாவரி நருமதை காவேரி என்ற இவைகள் புண்ணிய நதிகள். கங்கை நதியில் முழுகுதல் மிக விசேடம் என்ப. தோயத்தில் பாகீரதியான் என்றார் கண்ணன். நருமதை - கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி ஓடும் நதி; இதனை நதம் என்பர். நீர் பொங்கும் நதி என மாற்றுக. புன்மை-உடல் அழுக்கு மட்டுமன்றி ஆணவமாதி மல அழுக்குக்களும் என்று கொள்க. தட்ட -

தடுக்க; 'தட்டோரம்ம விவண்தட்டோரே தள்ளாதோர் இவட் டள்ளாதோரே' (புறநா. 19).

பி - ம். 1. கங்கையோ டியலும்; கவிந்தைச் சூழ்ந்த, கர்வரிந்தி சூழ்ந்த.

2. நீர்க்கன்னி.

3. தந்த.

4. எழுமையு நீங்கும்; என்றுன். 164

4057. மரக்கல மியங்க வேண்டி
வரிசிலைக் குதையாற் கீறித்
தருக்கிய விடத்துப் பஞ்ச
பாதக ரேனுஞ் சாரிற்
பெருக்கிய வேழு மூன்று
பிறவியும் பிணிக ணீங்கி
நெருக்கிய வமரர்க் கெல்லா
நீணிதி யாவ ரன்றே.

'மரக்கலம் - நாவாய்கள், இயங்க வேண்டி - (கடலில் எவ்விதத் தடையுமின்றிச்) செல்ல விரும்பி, வரிசிலை குதையால் கீறி - கட்டமைந்த வில்லின் நுனியினுற் கோடு செய்து, தருக்கிய இடத்து - (நான்) சிதைத்த இடத்தில், பஞ்ச பாதகர் ஏனும் - ஐந்து பெரும் கொடுஞ் செயல்கள் புரிந்தவராயினும், சாரில் - வந்து படிந் தால், (அவர்கள்), ஏழு மூன்று பெருக்கிய பிறவியும்-இருபத்தோரு பிறப்புக்களிலும், பிணிகள் நீங்கி - வியாதிகள் நீங்கப் பெற்று, நெருக்கிய அமரர்க்கு எல்லாம் - திரளான எல்லா அமரர்கட்கும், நீள் நிதி ஆவர்-பெரும் செல்வம் போன்று விளங்குவார். அன்று: ஏ, அசை.

வில்லின் குதையாற் கீறித் தருக்கிய விடம்; இன்றும் தனுக் கோடி என்றும், அவ்விடத்தில் உள்ள நீர்ப் பகுதி தனுக்கோடி தீர்த்தம் என்றும் வழங்குகின்றது. நிரம்பவழகிய தேசிகர்

இயற்றிய சேது புராணத்திலும், பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் இயற்றிய 'தேவை உலாவிலும்' இதன் வரலாறு காண்க. தருக்குதல் - சினத்தல். பஞ்ச பாதகம் - பொய், கொலை, களவு, கட்குடி, குரு நிந்தை என்ப. பிறவாறும் கூறுப. சாரில் - சார்ந்து மூழ்கிடில். ஏழு மூன்று பெருக்கவே இருபத்தொன்றுதல் அறிக.

பி - ம். 1. குதையினீக்கி.

4. என்றுன்.



ஒரு பிரதியில் இச்செய்யுள் அதிகப்பாடல்.

4058. நெற்றியி னழலுஞ் செங்க
ணீறணி கடவு ணீடு
கற்றையஞ் சடையின் மேவு
கங்கையுஞ் சேது வாகப்
பெற்றில மென்று கொண்டு
பெருந்தவம் புரிகின் றுளால்
மற்றிதன் தூய்மை யெவ்வா
றுரைப்பது மலர்க்கண் வந்தாய்.

'மலர்கண் வந்தாய் - தாமரை மலரில் தோன்றிய திருமகளின் அமிசமாக வந்தவளே! நெற்றியின் அழலும் செகண் - நெற்றியிலே எரிகின்ற சிவந்த விழியையும், நீறு அணி - விபூதியையும் பூண்டுள்ள, கடவுள் - சிவபெருமானுடைய, நீடு - நீண்ட, கற்றை அம் சடையின் - தொகுதியான அழகிய சடாபாரத்தின் கண், மேவும் - வீற்றிருக்கும், கங்கையும் - தூய்மை (சான்ற) கங்கா தேவியும், சேதுவாக பெற்றிலம் - (நாம்) சேதுவாகும் பெரும் பேற்றை அடைந்திலோமே', என்று கொண்டு - என்று மனத்துட் கொண்டு, (அங்கு) பெருதவம் புரிகின்றுளால் - பெருந்தவம் ஆற்று கின்றுள் என்னின், இதன் தூய்மை எவ்வாறு உரைப்பது - இதன் தூய்மையை நான் எப்படி எடுத்துச் சொல்லக் கூடும்'. ஆல்: அசை.

கங்கை நுதல் விழியினையுடைய சிவபிரானுடைய சடைக் கற்றையி லிருப்பதைத்தான் சேதுவாக இல்லையே என்ற குறை

நீங்கத் தவம் புரிவதாகக் குறித்தார். நற்குறிப்பேற்றவணி. கங்கையும் - உம்மை உயர்வு சிறப்பு.

பி - ம். 2. கற்றையின்.

3. மென்று நாளும், கொண்டே.

4. மலரின் மாதே. 168

இதன்பின் அதிகப் பாடல்:—

17. ஆங்கது காட்டக் கண்ட வாயிழை கமல மன்ன
பூங்கழற் புயல்போன் மேனிப் புனிதவென் பொருட்
[டாற்செய்த
ஈங்கிதற் கேற்ற நீயே வியம்பென விமானத் தின்று
பாங்குற நிறுவி நின்றிங் கிவையிவை பகர லுற்றான்.

18. அந்தணர் தம்மைக் கொன்றோ ரருந்தவர்க் கிடுக்கண்
[செய்தோர்
செந்தொழில் வேள்வி செற்றோர் தீமனை யிடுவோர் தம்பால்
வந்திரந் தவற்கொன் றீயா வைக்கும்வன் னெஞ்சர் பெற்ற
தந்தையைத் தாயைப் பேணாத் தறுகணர் பசுவைச் செற்றோர்.

19. குருக்களை யிகழ்வோர் கொண்ட குலமக ளொழியத் தங்கள்
செருக்கினாற் கணிகை மாரைச் சேர்பவ ருயிர்கொல் தீம்பர்
இருக்குட னமரும் தெய்வ மிகழ்பவ ரூன்க டின்று
பெருக்கிய வுடலர் பொய்ம்மை பிதற்றுவோர் பீடை
[செய்வோர்.

20. வெய்யவ னுச்சி சேர மிகவழி நடந்து போவோர்
மையறு முன்னோன் றன்னை வலிசெயும் தம்பி மார்கள்
கையுள முதல்கள் தம்மைக் கரந்துதம் பிக்கொன் றீயார்
துய்யன சொற்கள் சொல்வோர் சோம்பரைச் சுளித்துக்
[கொல்வோர்.

21. பின்னவா தருவ னென்று பேசித்தட் டுவிக்கும் பேதை
கன்னியைக் கலக்கும் புல்லோர் காதலாற் கள்ளும் பாந்தர்
துன்னிய கலைவல் லோரைச் சுளிந்துரைத் திகழ்வோர் சுற்றம்
இன்ன லுற் றிடத்தாம் வாழ்வோ ரெளியரை யின்னல்
[செய்வோர்.

22. ஆண்டவன் படவுந் தாங்க ளாருயிர் கொண்டு மீண்டோர்
நாண்டுறந் துழல்வோர் நட்பா னவரைவஞ் சிப்போர் நன்மை
வேண்டிடா திகழ்ந்து தீமை செய்பவர் விருந்தை நீப்போர்
பூண்டுமேல் வந்த பேதை யடைக்கலம் போக்கி வாழ்வோர்.

23. கயிற்றிலாக் கண்டத் தாரைக் காதலித் தணைவோர் தங்கள்
வயிற்றிடைக் கருவைத் தாமே வதைப்பவர் மாற்றார் தம்மைச்
செயிர்க்குவ தன்றிச் சேர்ந்த மாந்தரி னுயிரைச் செற்றோர்
மயிர்க்குரு ளொழியப் பெற்றம் வெளவுவோர் வாய்மை
[யில்லோர்.

24. கொண்டவன் தன்னைப் பேணக் குலமகள் கோயி லுள்ளே
பெண்டிரைச் சேர்வோர் தங்கள் பிதிர்க்களை யிகழும் பேதை
உண்டலே தரும மென்போ ருடைப்பொரு ளுலோப ரூரைச்
தண்டமே யிடுவோர் மன்று பறித்துண்ணுந் தறுகண் ணாளர்.

25. ஊரது முனிய வாழ்வோ ருண்ணும்போ துண்ண வந்தோர்க்
கார்வமோ டளியா தில்லை யடைப்பவ ரமணே சென்று
நீரினு ளிழிவோர் பாவ நெறிகளில் முயல்வோர் சான்றோர்
தாரம தணைவோர் மூத்தோர் தமையிக ழறிவிலா தோர்.

26. தேவதா னங்கள் மாற்றித் தேவர்கள் தனங்கள் வெளவும்
பாவகா ரியர்க ணெஞ்சிற் பரிவிலா தவர்கள் வந்து
காவெனு வபய மென்று கழலடைந் தோரை விட்டோர்
பூவைமார் தம்மைக் கொல்லும் புல்லர்பொய்ச் சான்று
[போவோர்.

27. முறையது மயக்கி வாழ்வோர் மூங்கையந் தகர்க்குத் தீயோர்
மறையவர் நிலங்க டன்னை வன்மையால் வாங்கு மாந்தர்
கறைபடு மகளிர் கொங்கை கலப்பவர் காட்டில் வாழும்
பறவைகள் மிருகம் பற்றிப் பஞ்சரத் தடைக்கும் பாவர்.

28. கார்க்கன வரைசேர் கானில் கடுங்குழி கல்லுங் கட்டர்
நீர்க்கரை யதனி லோட்டி நெடுங்கலை முயல்மான் கொல்வோர்
ஊர்க்கெழு கூவல் வீழ்ந்த வுயிர்ப்பசு வெடாது போவோர்
வார்க்கெழு தனமின் னாரை வழியில்விட் டேகு மாக்கள்.

29. வழியடித் துண்போர் கேட்டால்
வழிசொல்லா தவர்கள் வைப்பைப்
பொழியிருள் களவு காண்போர்
பொய்சொல்லிப் பண்டம் விற்போர்
அழிவிலா வாய்மை கொன்றோர்
அடைந்தது............தெரிசிக்கத் தீர்க வென்றான்.

30. ஆதியர் மூவர்க் கந்நா ளருமறை யறைந்த வந்த
நீதியாம் புராணன் றன்னை யிகழ்பவர் நிறையக் கேளார்
பாதியில் விட்டு வைப்போர் படித்தவர் பிரியப்ப டுத்தார்
போத மிலாதார் மற்றச் சமயம் பொல் லாத தென்பார்.

31. என்றிவர் முதலா மற்று மெழுநர கடையும் பாவம்
ஒன்றினர் நன்றி தன்னை மறந்தவர் ஒழிய வுள்ளோர்
துன்றிய வினைக ளெல்லாம் சுடர்கண்ட விருளே போலத்
தென்றிசை வந்து சேதுத் தரிசிக்கத் தீரு மென்றான்.

வேறு

32. ஆங்கதுகேட் டருந் ததியே யனையாளு மவதியுடன்
திங்களுகுஞ் செய்ந் நன்றி மறந்திடுந்தீ மனத் தோர்கள்
தாங்க ரும்பா வங்களையு மெலாக்காகத் தவிர்க்க வென
நீங்கிடுக வதுவு மென்று னிலமடந்தை பொறை தீர்த்தான்.

33. பாரெழுவி வாழ்வோர்கள் பஞ்சமாபா தக முதலா
சீர்கெழுவு திருவணையைத் தெரிசிக்கத் தீர்க வெலாக்
காரெழுவு திருமேனி கண்ண னிணைப் பின்படியே
ஈரெழுவர் நால்வ ரெனு மிருடிகளு மெழுதினரால்.

34. பார் மேவு மாந்தர்கள்செய் பஞ்சமா பாதகமும்
சீர் மேவும் திருவணையைத்:தெரிசிக்கத் தீர்க வெனு
கார் மேவும் திருமேனிக் காகுத்தன் கட்டுரைத்து
வார் மேவும் முலைச்சனகி மாதோடும் வழி கொண்டான்.

வேறு

35. என்பன பலவு மந்த வேந்திழைக் கிருந்து கூறித்
தன்பெருஞ் சேனை யோடுந் தம்பியு மரக்கர் கோவும்
பொன் பொரும் விமானந் தன்மேற் போகின்ற போதுமிக்க
வின்புடை யிராமன் வேலைக் கிப்புறத் திழிந் தென் செய்வான்.

36. முன்பெல அரக்கன் தன்னை முனி கொலை தொடரக் கண்டாங்
கன்பினு லரிபால் தோன்றும் அரனையருச் சித்தா லன்றித்
துன்பமே தொடரும் பொல்லாச் சூழ்கொலை தொலையா [தென்றுங்
கின்புறும் இராமன் வேலைக் கிப்புறத் திழிந்து நின்றான்.

வேறு

37. திருவணை யுயர்பதஞ் செப்பி மீண்டபின்
அருகணை திருமகட் காங்கு மற்றுள
தருவணை திரள்புயச் சனகி வல்லிக்காங்
கருவரை முகில்நிற வண்ணன் காட்டுவான்.

வேறு

38. கப்பையெனுங் கன்னியையுங் கந்த னார் தந் தாதையையும்
அப் பொழுதே திருவணைக்குக் காவலரா யங்கிருத்திச்
செப்பரிய சிலையாலே திருவணையை வாய் கீறி
ஒப்பரியா டன்னுடனே யுயர் சேனைக் கடலுடனே.

வேறு

39. வேந்தர் வேந்தனும் வேலையின் கரை யினில் வரவே
வாய்ந்த சாய்கையும் வந்தது வானவர் வணங்க
ஏந்து தோள்புயத் திராமனு மிலக்குவன் றானும்
வாய்ந்த சீதையும் மானமும் வாநர வேந்தும்.

40. நின்ற போதினில் நிகரிலா வகத்தியன் முதலோர்
குன்று போற் புயத் திராகவன் றனைவந்து குறுக
நன்று நின் வர வென்னவே நாதனும் வணங்கி
வென்றி வேந்தனும் வேதியர் தம்மொடு வியந்து.

41. பாய்ந்த வேலையின் கரை மிடைப் பரமனங் குறவே
சாய்ந்த சாயகையும் வந்தணு காதயல் கிடக்க
ஏந்து திண்புயத் திராமனும் இளையவன் தானும்
வாய்ந்த சிதையும் சேனையு மற்றுள பேரும்.

42. சேதுவின்கரை சேர்ந்தவத் திறல்புனை யிராமன்
ஏதுவித்தல மெனக்குறு முனிவனைக் கேட்ப
வாதராசனும் வாசுகி தானுமுன் மலைந்த
போது வந்ததிப் பொன்னக மென்றவன் புகன்றான்.

13. புகன்ற வன்றனைப் பூங்குழ லிராகவன் சாய்கை
அகன்ற காரணம் குறுமுனி யுரைசெய வவனும்
பகர்ந்த தேவரும் பாற்கடற் பள்ளியான் பரமன்
புகுந்த திவ்வழிப் பூவில்வந் தவனுமற் றியாரும்.

44. இருப்ப தித்தல மாகையா லிராவணன் சாய்கை
அருத்தி யின்றியே யகன்றதென் றருள்முனி யறையப்
பெருத்த தோளுடை யண்ணலும் பிரியம்வந் தெய்திக்
கருத்து மற்றினி யுரையெனக், குறுமுனி கழறும்.

45. இந்த மாநகர் தன்னிலே யிறைவனை யருச்சித்
துந்தன் மாநகர் எய்திறற் சாய்கைபோ முரவோய்
அந்த நீதியே செய்துமென் றநுமனை யழைத்திட்
டெந்த ஞதனை யிமைப்பினிற் கொடுவர தென்றான்.

வேறு

46. அந்த வேலை முனிவ னளித்தருள்
இந்த மாநிலத் தியாவரு மின்புறக்
கந்த மேவிய கங்கையி லோர்சிலை
தந்து காணென மாருதி தாவினன்.

வேறு

47. போதியென் றவற் போக்கிய விராமனு நிந்த
மாது சீதையு மைந்தனு மிலக்குவன் றானும்
தீது தீரவே தீர்த்தங்கள் யாவையு மாடி
ஆதி நாதனு மிருந்தனன் அமரர்கள் வியப்ப.

வேறு

48. ஆன போதினி லையன் மனத்துளே
தானி னைந்தது தாஞ ரறிகுவார்
ஞான மோர் வடிவாகிய நாரணன்
மோன மாகி யிருந்தனன் மூவரான்.

49. காலஞ் சென்ற தெனக் கருதிக் கையால்
கோல மான மணலினைக் கூட்டியே
ஆல முண்ட தேவிவ ராமென
ஞால முண்டவர் தம்மன நாட்டவே.

வேறு

50. முகுத்த மானதே யென முனி மொழிதலு மிராமன்
மிகுத்த தோரிடத் தெய்தியே வெண்மணல் கூப்பி
அகத்தி னிற் புறம் பூசித்தே யடிமல ரிறைஞ்சிச்
செகுத்த தோளுடைத் தம்பியுஞ் சீதையுந் தானும்.

51. ஒத்த பூசனை செய்யவு மமைதியி னுள்ள
சித்தி மேவிய ஞானமுந் தொடர்விடா திருந்தோன்
அத்தன் பாதக மானவை யழிதர வியற்றிச்
சித்தம் வாழ்தர நின்றனன் தேவர்க டுதிப்ப.

52. நின்ற போதினி னிறங்களும் படலமுங் கொண்டு
வென்றி சேர்புய மாருதி விரைவினில் வந்து
நன்று செய்தனை யென்னப்போய் நாதனைப் பிடுங்கி
வென்றி வாலற்று மேதினி வீழ்ந்தனன் வீரன்.

53. விழுந்த வன்றனை வெந்திற லிராகவ னோக்கி
யழுந்து சிந்தையா யறிவிலா ததனையென் செய்தாய்
பொழிந்து மாமல ரிட்டு நீ யருச்சியென் றுரைப்ப
எழுந்து போயவ னிறைவனை யருச்சனை செய்தான்.

வேறு

54. அவ்வி டத்தனு மான்றந்த கங்கைமேல்
வவ்விடப் புறம் வந்திடுவான் சிலை
இவ்வி டத்தினி லியாவரு மேத்தெனத்
தெவ் வடக்கும் சிலையவன் செப்பினன்.

55. எந்தனுத னிவனென் றிறை மகன்
தந்த நாமஞ் சராசரம் சார்ந்தபோ
திந்திரன் பிரமா முதலெய் தினர்
வந்து வானவர் யாவரும் வாழ்த்தினர்.

56. இத் தலத்தினில் யாருமங் கோர்சிலை
வைத்து மாமனத் துள்ளே வழுத்துவார்
நத்து லாயகை நாரண னுன்முகன்
பித்தன் மூவரு மேத்தப் பெறுகெனு.

வேறு

57. ஆய வேலையிற் கங்கையின் அருஞ்சிலை வாங்கித்
தூய வார்கழ லநுமனும் தோன்றினன் தோன்றுச்
சீய மாய்மலி யண்ணல்முன் திருச்சிலை வைத்து
நேய மோடிரு தாள்பணிந் தங்கவன் நின்றான்.

58. நின்ற காலையில் அமலனங் கநுமனை நோக்கிக்
யொன் றலாதபல் முகமனங் குரைத்து நம் பூசை
சென்ற தாதலின் திருச்சிலை தாழ்த்ததிப் புளினக்
குன்றினுற் சிவன் தன்னுருக் குறித்தனன் கோடீ.

59. என்னும் வாய்மை யங் கிராகவ னியம்பிட விறைஞ்சி
முன்னி மாருதி மொழிந்தனன் மூவுல குடையோய்!
இன்னும் யான்றரும் கங்கையின் சிலையிடைப் பிழையா
தன்ன தானத்தின் அமைப்பெனு ரிமைப்பிடை
[யெனவே.

60. ஈர்த்தனன் வாலினுலே யிராகவன் பூசை கொள்ளும்
கூத்தனை அநந்தன் வாழும் குவலய மளவும் கூடி
வார்த்தபே ருருவம் கொள்ள வால்விசைத் தநும னந்த
மூர்த்தியென் றுணரான் நெஞ்ச மூச்சறத் தளர்ந்து
[வீழ்ந்தான்.

61. மனுபர னநுமன் றன்னை வரவழைத் தீசன் வன்மை
தனையுரைத் திடைநீ தந்த நாதனை நடுவே நாட்டி
முனமதை யேத்திப் பின்னிம் மூர்த்தியை யேத்தும்என்ன
அனைவரும் அமரர் தாமும் அம்முறை யேத்தி நின்றார்.

62. என்றி ராகவ னீசன் பெருமையின்
நன்றி தன்னை நவில வடங்குமோ
சென்று சென்று செயசெய போற்றியென்
றன்றி ராச குமார'னறைகுவான்.

வேறு

63. பூசனைத்தொழில் முடிந்தபின் பூங்கழலிராமன்
தேவர் தச்சனை யழைத்துநீத் திரைகடற் கிடந்த
காவன் மாமலை கொணர்ந்து நீ கண்ணுதற்கோயில்
பூவில் வந்தவன் சொல்வழிச் சமையெனப் புகன்றான்.

64. நந்தி யம்பதி யிறைவனை நாதனு மழைத்தே
இந்த மாமலை யிருமென யாவையு நல்கி
விந்தை தங்கிய தோளினீர் வேந்தனைப் பூசித்
திந்த மாநக ரிருமென விராமனு மகன்றான்.

65. போன காலையிற் பூங்கழ விராகவன் பின்னை
சேனை தான்வரத் தேவர்கள் யாவரும் வணங்கி
மேனிலத்தவர் சென்றிட விடை கொடுத் தருளித்
தானும் சீதையும் தம்பியும் சேதுவைச் சார்ந்தார்.

வேறு

66. தேரேறி மாநாகஞ் சென்னிமிசைச் சென்றேறக்
காரேறு கண்ணபிரான் காவலவன் கமழ்துளபத்
தாரேறு தடந்தோளான் தனிவயிரக் குனிசிலைக்கைப்
போரேறு பொலிவுடனே வடதிசையிற் போயினனால்.

பூசைப் படலம் முற்றும்; இனி மீட்சிப் படலம்.

67. சேர்ந்து சேதுவின் தென்கரை கடந்துவந் தெய்திக்
கூர்ந்த மானமே லிருந்தவன் வடதிசை குறுகிப்
போந்து வானரப் புதுமையுஞ் சனகிக்குப் புகன்று
தீர்ந்த சேதுவின் கரையையுங் காட்டினன் திறலோன்.

68. நின்னை மீட்பதே நினைத்துச்சின் னெறியெலா நீந்தி
என்னை யீட்டிய திறத்தினிற் றிருவுட னிருப்பச்
சொன்ன வேற்படை யரக்கரைக் குறைத்தவிச் சேனை.
மன்னனுற் பெற்ற வழியிது வென்றியு மதனுல்.

வேறு

69. தேய்ந்த மாமதி போலும் சிலை நுதல்
வாய்ந்த வானர வாரண மாருதி
யாய்ந்த மாமணி யாழியை யன் றுதான்
பாய்ந்த வெற்பு மயேந்திரம் பார்த்தியால்.

70. வரைய லுற்றனன் மலர்க்கரத் திருந்தவன் சிலையால்
திரையில் உற்றிட மரக்கலத் தொகுதிகள் செல்ல
விரைவிலுற்றிடு விமானத்தின் மீதினி லிருந்தே
உரைசெய் துற்றனன் சனகிக்குப் பின்னுமங் குரவோன்.

வேறு

71. மாருதி நின்னை நாடி வருபவ னேறிப் பாயப்
பாரிடைக் குனித்து நின்ற பவளமால் வரையைப் பாராய்
போரிடைப் பொலன்கொள் பொன்ருர்ப் புரவிகள் [போக்கிற்றென்ன
நீரிடைத் தரங்க மோங்கு நெறிகட லதனை நோக்காய்.

## வருணன் சரணமடைந்த இடத்தை இராமன் சீதைக்குக் காட்டுதல்

4059. தெவ்வடுஞ் சிலைக்கை வீரன்
சேதுவின் பெருமை யாவும்
வெவ்விடம் பொருது நீண்டு
மிளிர்தருங் கருங்கட் செவ்வாய்
நோவ்விடை மயில னுட்கு
நுவன்றுழி வருண னேனு
தீவ்விடை வந்து கண்டாய்
சரணென வியம்பிற் றென்ருன்.

தெவ் அடும் சிலை கை வீரன் - பகைவரை அழிக்கவல்ல (கோதண்டம்) என்னும் வில்லை ஏந்திய இராமபிரான், சேதுவின் பெருமை யாவும் - சேதுவின் சிறப்பு முழுவதையும், வெவ் விடம் பொருது - கொடிய விடத்துடன் போர் செய்து, நீண்டு - செவியளவும் நீண்டு, மிளிர்தரும்-ஒளிர்கின்ற, கரு கண் செவ்வாய்-கரிய விழிகளையும் சிவந்த வாயினையும், நொவ் இடை-நோகின்ற இடையினையும், மயில் அனுட்கு - மயில் போன்ற சாயலினையும் பெற்ற சீதாப் பிராட்டிக்கு, நுவன்றுழி - சொல்லிக்கொண்டு வருங்கால், (புட்பகம் தருப்ப சயனத்தைச் சார) 'இவ் இடை - இந்தத் தலம், வருணன் - வருண பகவான், (எனது அங்கி அத்திரத்தின் வாதை), நோனுது - பொறுக்க மாட்டாது, வந்து - வந்து, (என்னை நோக்கி), சரண் என இயம்பிற்று - அடைக்கலம் என்று கூறியது, கண்டாய் - காண்பாயாக', என்றுன் - என்று பகர்ந்தான்.

தெவ் - தெவ்வுப் பகைமை. வெவ்விடம் பொருது நீண்டு மிளிர்தரு ; 'இரு நோக்கிவள் உண்கண் உள்ளது' (குறள். 1091); என்ற இடத்து மகளிரின் ஒரு நோக்கை நோய் நோக்கு என்றமை காண்க. 'நஞ்சினோ டமுதங்கூட்டி நயனங்களான வென்ன' (பால. கோலங். 15) ; 'சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி வெவ்வே, றேணுற மிளிர்ந்து நாண விதம்புரண் டிருண்ட வாட்கண்' (ஆரணிய. 465); இங்கு, 'ஈசற்கியான் வைத்த வன்பினகன்று' (திருக்கோ. 109) என்ற பாசுரம் ஒப்பு நோக்கத் தக்கது. உத்தம மகளிரின் கண்கட்கு இன்றியமையாத அகற்சி, கருமை, ஒளி வெண்மை,' நீளம் முதலிய இலக்கணங்கள் அனைத்தும் கூறப்பட்டமை காண்க. நொவ்விடை ; 'நொவ்விடைக் குயிலே நுவல்கென் றனன், வெவ்விடத்தை யமுதென வேண்டுவான்' (சுந்தர. 430) ; இங்கு இராமபிரான் பிராட்டிக்குக் காட்டியது இப்போது (திருப்புல்லாணி) என்று வழங்குகின்றது. இராமபிரான் தருப்ப சயனத்தில் அமர்ந்தமை. 'தருண மங்கையை மீட்பதோர் நெறிதரு கென்னும், பொருள் நயந்துநன் னூனெறி யடுக்கிய புல்லிற், கருணை யங்கடல் கிடந்தது கருங்கட னோக்கி, வருண மந்திர மெண்ணினன் விதிமுறை வணங்கி' (யுத்த. 535) என்ற இடத்துக் காண்க.

பி - ம். 1. பெருமையெல்லாம்.

2. பொருது மீண்டு.

3. குயிலறுட்கு, அல்குலாட்கு; நுவன்றுழி வருணனேனே, நுவன்றுபின் வருணனேனேன்.

167

4. கண்டான்.

## இராமன், பொதியமலை திருமாலிருஞ் சோலைமலை திருவேங்கடமலை முதலியவற்றைச் சீதைக்குக் காட்டுதல்

4060. இதுதமிழ் முனிவன் வைகு
மியறகு குன்ற முன்னன்
அதுவளர் மணிமே லோங்க
லப்புறத் துயர்ந்து தோன்றும்
அதிதிக ழநந்த வெற்பென்
றருடர வநுமன் றேன்றிற்
றெதுவென வணங்கை நோக்கி
யிற்றென விராமன் சொன்னன்.

இராமன் - இராமபிரான், 'இது - இம் மலை, தமிழ் முனிவன் வைகும் - தமிழ் மொழிக்கிலக்கணம் வரையறை செய்த முனிவனன அகத்தியன், இயல் தகு - வதிகின்ற, குன்றம் - மலை; அது - அதோ காணப்படுகின்றதே அது, முன்னன் வளர் - எல்லோருக்கும் முன்னவனை திருமால் எழுந்தருளிய, மணிமேல் ஓங்கல் - இரத்தினங்களையுடைய உயர்ந்த திருமாலிருஞ் சோலை மலை; அதி திகழ் - மிக்கு ஒளிர்கின்ற, அநந்த வெற்பு - திருவேங்கடமானது, அபுறத்து உயர்ந்து தோன்றும் - அதோ அந்தப் புறத்தில் உயர்ந்து காணப்படுகின்றது'; என்று - என்று, அருள்தர - (பிராட்டிக்கு) அருள் செய்ய, (அப்பொழுது பிராட்டி) 'அநுமன் தோன்றிற்று எது - அநுமான் வந்து காணப்பட்ட இடம் யாது' என - என்று கேட்க, (உடனே இராமபிரான்) அணங்கை நோக்கி - சீதா தேவியைப் பார்த்து, (ருசியமூக மலையைச் சுட்டிக் காட்டி) 'இற்று - இதுதான்', என சொன்னன் - என்று பகர்ந்தான்.

அநந்த வெற்பு - திருவேங்கட மலை. தமிழ் முனிவன் - அகத்தியன். கம்பருக்கிருந்த சிறந்த மொழிப்பற்று அவன் அகத்தி

யரைப் பற்றிக் கூறியுள்ள பகுதிகளால் நன்கு விளங்கும். 'நீண்ட தமி ழாலுலகை நேமியி னளந்தாள்' (ஆரணிய. 150); 'தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்' (ஆரணிய. 158); 'என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்' (ஆரணிய. 164); தமிழ் மொழியைச் சிவபெருமான் அகத்தியர்க்கு அருளினர் என்ப. 'வட மொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற் கிணையாத், தொடர்புடைய தமிழ் மொழியை யுலகமெலாம் தொழுதேதத்தக், குட முனிக்கு வற்புறுத்தார் கொல் லேற்றுப் பாகர்' (தொல். சொல். சேனுவரையம்); 'ஆதியிற் றமிழ் நூலகத்தியற் கருளிய, மாதொரு பாகன்' என்று வருவன காண்க. இனி மொழி என்பது மக்களாலேயே ஆக்கப்படுவது, என்பது மொழி நூல் வல்லுநர் கொள்கை; எனவே அகத்தியர் தமிழ்க்குச் செய்த பேருதவி இலக்கணம் வகுத்தமையே யென்க; அவர் இயற்றிய இலக்கணம் ஆக்கியோன் பெயராலேயே அகத்தியம் என வழங்கும் அம் மொழிக்கு ஆயினும் அந்நூல் முழுதும் இப்பொழுது கிடைக்க வில்லை. தமிழ் மொழியை 'அகத்தியன் பயந்த செஞ்சொலா ரணங்கு' என்றும் கூறுவர். தமிழ் மொழிக்கே ஆகஸ்தியம என்ற ஒரு பெயரும் உண்டு. இம் முனிவர் தமிழ் மொழிக்கு அகத்தியம் வேண்டப்படுபவர். எனவே அகத்தியர் எனப் பெயர் பெற்றுர் என்பர் காலஞ்சென்ற கா. சுப்பிரமணியபிள்ளை (தமிழ் வரலாறு பார்க்க) 'தென றமிழ் நாட் டகன் பொதியிற் றிரு முனிவன் தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்' (கிட்கிந்தா. 750) என்பது சுக்கிரீவன் கூற்று. இச் செய்யுளின் உரைக் குறிப்பினைக் காண்க. இவ்வகத்தியரைத் தென்னுட்டவர் என்று சிலரும், வட நாட்டிலிருந்து தெற்கண் போந்தவர் என்று சிலரும் கூறுவர். தொல்காப்பியம் எழுத்ததி காரத்துப பாயிரத்தில் 'அகத்தியர் தென்னுடு போதுகின்றவர் ....................என்று தொடங்கிப் பொதியிலின் கணிருந்தனர்' என்று நச்சினர்க்கினியர் வரைதல் காண்க. பொதிய மலை பாண்டி நாட்டில் உள்ளது. அநந்த வெற்பு - சேஷகிரி எனப்படும் திரு வேங்கடமலை. அநுமன் தோன்றியது என்பதற்கு அநுமன் பிறந்தது என்று சிலர் பொருள் கொள்வர். அது பொருந்தாது; அநுமன் பிறந்தது மேரு மலையில் என்று புராணம் கூறும்.

இங்கு மீட்சிப் படலம் என்று ஓர் குறிப்புக் காண்கின்றது.

பி-ம். 1. இயலுறு, இகலறு, முன்னுறு, முன்னோர். முன்னோன்றும்.
2. உது; வளம்; மணிமால்; ஓங்கலுப்புறத்.
3. மதிநிகழ், அது சுழல்; அமலன், உம்பர்த்.
4. அதுளென. 108

## இராமன் சுக்கிரீவனுடைய நகரைக் காட்டுதல்

4061. வாலியென் றளவி லாற்றல்
வன்மையான் மகர நீர்சூழ்
வேலையைக் கடக்கப் பாயும்
விறலுடை யவனை வீட்டி
நூலியற் றரும நீதி
நுனித்தறங் குணித்த மேலோர்
போலியற் றபனன் மைந்த
னுறைதரும் பொறையீ தென்றான்.

'அளவில் ஆற்றல் வன்மையான் - அளக்கவியலாத திறலின் உறுதியுடையவனும், மகரம் - சுரு மீன்களைத் தன்னகத்துக் கொண்ட, நீர் சூழ் - நீர் நிறைந்த, வேலையை - கடல்களை, கடக்க பாயும் - தாண்டும்படி தாவவல்ல, விறல் உடை வாலி என்ற அவனை - வலியுடையவனுமாகிய வாலி என்பவனை, வீட்டி - கொன்று, நூல் இயல்தருமம் நீதி - அற நூல்களில் அமைந்துள்ள நீதி நெறிகளையே, நுனித்து - நுட்பமாக ஆராய்ந்து, அறம் குணித்த - தருமங்களையே கருதி நின்ற, மேலோர் போல் இயல் - மேன்மையாளர் ஒத்த தன்மையுடைய, தபனன் மைந்தன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், உறைதரும பொறை ஈது - வசிக்கும் பாறையது'; என்றான் - என்று மொழிந்தான் இராம பிரான்.

வாலி என்று அளவின் ஆற்றல் வன்மையான்; 'நீரு நீர் தரு நெருப்பும் வளிகாற்றும் கீழ்மிமிர்ந்த, பாரும் சார்வலி படைத்தவன்' (கிட்கிந்தா. 289); 'வாலியென்றுளான வரம்பிலாற்றலான்' (கிட்கிந்தா. 114); சுக்கிரீவனை 'மறுவிலாதவன் 'செவ்வழி யுள்ளத்தான்' (கிட்கிந்தா. 63); என்று கூறுதல் காண்க. பொறை: பாறை; 'அறையும் பொறையு மணந்ததலைய' புறநா. 118); தபனன்: சூரியன்; எரிப்பவன் என்பது பொருள்.

'தங்கள் குலக்கலை மதியைத் தபனனெனும்' (வி. பா. அருச். தீர்த்த. 32).

பி - ம். 1. வண்மையாளன்.

2. வேலியை; கடத்தலாயும்.

3. குளிக்குமேலோர். 101

இங்கு ஓர் அதிகப்பாடல்:—

ஆரிய னனைய கூற வடியிணை யிறைஞ்சி யைய
வேரியங் கமலை செப்பும் விரிந்தகிட் கிந்தை யுள்ளார்
சீரிய வயோத்தி சேரத் திருவுளஞ் செய்தி யென்னக்
கார்நிற வண்ணல் மானங் காசினி குறுக வென்றான்.

## வாநர மகளிரையும் உடனழைத்துச் செல்லவேண்டுமென்று சீதை கூறுதல்

4062. கிட்கிந்தை யிதுவே லைய
கேட்டியா லெனது பெண்மை
மட்குந்தா னுய வெள்ள
மகளிரின் றுகி வானேர்
உட்கும்போர் சேனை சூழ
வொருத்தியே யயோத்தி யெய்தின்
கட்கொந்தார் குழலி னுரை
யேற்றுதல் கடன்மைத் தென்றாள்.

'ஐய-தலைவனே! இது கிட்கிந்தையேல்-இது கிட்கிந்தாபுரியாயின், கேட்டியால்-(யான் சொல்வதைக்) கேட்டருள்க; தான்-தான், வெள்ளம் ஆய - பல வெள்ளம் என்னும் எண்ணினதாகி, வானோர் - அமரர்களும், உட்கும் - அஞ்சும்படியான, போர் - போர் செய்ய வல்ல, சேனை சூழ - சேனை சூழ்ந்திருக்க, மகளிர் இன்றுகி - வனிதையரின் துணையின்றி, 'ஒருத்தியே - நான் ஒருத்தி மட்டுமே, அயோத்தி எய்தின்-அயோத்தி மாநகரை அடைந்தால், எனது பெண்மை மட்கும் - எனது பெண்ணியல்பு குறைவுபடும்; (ஆதலின்), கள் கொந்து ஆர் - தேன் பொதிந்த பூங்கொத்துக்

களை யணிந்த, குழலினரை - கூந்தலையுடைய (இக் கிட்கிந்தையில் உள்ள) பூவையரை (ப் புட்பகத்தின்மீது), ஏற்றுதல் - ஏற்றிக் கொண்டு செல்லுதல், கடன்மைத்து - முறைமையுடையதாகும்', என்றாள் - என்று பகர்ந்தாள்.

மட்குதல்: பெருமை குன்றுதல்; 'நாகத்தின் வஞ்ச வாயில் மதியென மட்குவான்; (ஆரணிய. 1041); கள் கொத்து ஆர்: எனப்பிரிக்க; கடன்மைத்து: ஒன்றன்பாற் குறிப்பு முற்று. பெண்மை: நாணம் மடம் அச்சம் பயிர்ப்புடன் கூடியிருத்தல். 'பெண்மைக் கிரதியென வந்த பெண்ணாரமுதே' (வி. பா திரௌபதி மாலை. 39), 'ஒருவில் பெண்மையென் றுரைக்கின்ற வுயிரினுக் குயிரோ' (அயோத்தி. சித்திர. 14).

பி - ம். 2. இன்றுகில்.

3. எய்தக். 170

இங்கு இரண்டு அதிகப்பாடல்கள்:—

என்றவன் சேயை நோக்கி யிசைந்தகிட் கிந்தை யுள்ளார்
நன்றுநம் பதியைக்காண நாயக வழைத்தி யென்னச்
சென்றவன் சாம்பன் றன்னைத் திசையெட்டுந் திரியச் சாற்றி
யின்றுநஞ் சுற்ற மெல்லா மியல்புட னழைத்தி யென்றான். 1

என்றபோ தெழுந்து சாம்ப னிசைந்தகிட் கிந்தை யுள்ளார்க்
கொன்றொழியாத வண்ண மோதினு னேதக் கேட்டே
ஒன்றிய கடல்களேழு முற்றுட னுவா வுற்றென்ன
மன்றலங் குழலினார்கள் துவன்றினர் மகிழ்ச்சி கூட. 2

## வாநர மகளிரைக் கொணரும்படி இராமன் கட்டளையிடச் சுக்கிரீவன் கட்டளைப்படி அநுமன் அவர்களைக் கொணர்தல்

4063. அம்மொழி யிரவி மைந்தற்
கண்ணரு னுரைப்ப வன்னுன்
மெய்ம்மைசே ரநுமன் றன்னை
நோக்கிநீ விரைவின் வீர

மைம்மலி குழலி னாரை
மரபினாற் கொணர்தி யென்னாச்
செம்மைசே ருள்ளத் தண்ணல்
கொணர்ந்தனன் சென்று மன்னோ.

அமொழி - சீதாதேவி சொன்ன அந்த வார்த்தையை, அண்ணல் - இராமபிரான், இரவிமைந்தற்கு உரைப்ப - சுக்கிரீவனுக்குச் சொல்ல, அன்னான் - அந்த வானரேசன், மெய்ம்மை சேர் அநுமன் தன்னை நோக்கி - சத்திய வாதியான அநுமனைப் பார்த்து வீர - வீரனே, 'நீ - நீ, விரைவின் - வேகமாக, மை மலி குழலினாரை - கருமை நிறைந்த கூந்தலுடன் கூடிய வானர மகளிரை, மரபினால் கொணர்தி - வரன் முறையாக அழைத்து வருவாயாக' என்னா - என்று பணிக்க, செம்மை சேர் உள்ளத்து அண்ணல் சென்று கொணர்ந்தனன் - நடுவுநிலைமையுடன் கூடிய மனத்தினனும் பெருந்தகையுமான அநுமன் போய் அழைத்து வந்தான். மன் : ஓ, அசை.

அம்மொழி முன்பாட்டில் பிராட்டி கூறியது. இங்கு மெய்ம்மை சேர் என்றும், செம்மை சேர் என்றும் அண்ணல் என்றும் அநுமனுக்கு அடைமொழி கொடுத்ததன் காரணம். எண்ணிறந்த மகளிரிடத்து ஏகிவருமாறு பணிக்கப்பட்டதாலும், மகளிர் குழாத்தில் சிறந்த உத்தமர்களே செல்லக்கூடியவராதலாலும் என்க. உண்மையான நைட்டிக பிரமசாரியாதலின் மெய்ம்மை சேர் எனப்பட்டது. 'நினைவானு மாதர் நலம் பேணாது வளர்ந்தவன்' (கிட்கிந்தா. 992); என்று சாம்பவன் அநுமனைக் கூறுதல் காண்க. 'மெய்ம்மையின வேலி' (68); மை : மேகமுமாம். கொணர்வதில் மரபு யாதெனின் சுக்கிரீவன் பட்ட மகிஷிகளை முன்னும். மற்றும் அவரவர் தகுதிப்படிப் பிறமகளிரைப் பின்னும் கொணர்தல். இதன் விளக்கத்தை அடுத்த கவியிற் காண்க. செம்மை : நடுவுநிலைமை ; 'இலங்கையை முழுதும் நாடி யிராவண னிருக்கை யெய்திப் பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்' (சுந்தர. 1279); என்று அநுமனே கூறுதல் காண்க. 'மேகாதில் சிந்தை யநுமன்' (கிட்கிந்தா. 578); 'செவ்வழி யுள்ளத் தானும்' (கிட்கிந்தா. 57).

பி - ம். 2. மேன்மை.
3. என்றான்.

## வாநர மகளிர் சுக்கிரீவனையும் இராமனையும் சீதையையும் வணங்குதல்

4064. வரிசையின் வழாமை நோக்கி
மாருதி மாதர் வெள்ளம்
கரைசெய லரிய வண்ணங்
கொணர்ந்தனன் கணத்தின் முன்னம்
விரைசெறி குழலி னார்தம்
வேந்தனை வணங்கிப் பெண்மைக்
கரசியை யைய னோடு
மடியிணை தொழுது நின்றார்.

மாருதி - அநுமன், கரை செயல் அரிய வண்ணம் மாதர் வெள்ளம் - எல்லைகாண முடியாதபடி யிருந்த (வாநர) மகளிர் குழுவை, கணத்தின் முன்னம் - ஒரு நொடிப் போதிற்குள்ளாக, வரிசையின் வழாமை - (அவரவர்க்குரிய) சிறப்புக்களில் குறைவு நேராதபடி, நோக்கி - கவனித்து, கொணர்ந்தனன் - அழைத்து வந்தான்; (உடனே) விரை செறி - மணம் பொருந்திய, குழலினார் தம் - கூந்தலையுடையரான அம்மகளிர், (விமானத்தின் மீதேறி), வேந்தனை வணங்கி - தமது அரசனை வணங்கி, ஐயனோடும் - இராமபிரானையும், பெண்மைக்கு அரசியை - பெண்கள் நாயக மான பிராட்டியையும், இணை அடி தொழுது நின்றார் - உபய பாதங்களில் வணங்கி நின்றனர்.

முன் செய்யுளில் குறித்த 'மரபினால்' என்பதை உள்ளத் துக் கொண்டு, அந்த முறைப்படியே சிறிதும் வழுவின்றிக் கொணர்ந்தனன் என்று இச் செய்யுளின் முதலிரண்டடிகளின் கருத்து; விரை செறி: 'விரை செறி கமலத்தாள்' (யுத்த. திரு முடி. 38); வரிசை: தகுதி வரிசை; 'வரிசையறிதலோ வரிதே' (புறநா. 121); 'பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் அது நோக்கி வாழ்வார் பலர்' (குறள். 528).

பி - ம். 3. தாம் வேந்தரை.

இங்கு அதிகப்பாடல்கள் :—

1. சந்திர மானந் தன்மேற் றூரகை சூழ்ந்த தென்ன
இந்திரன் மகனூர் தாரத் தாரையும் ருமையும் கூடி
வந்தனர் வந்து மொய்த்தார் வானர மடந்தை மார்கள்
இந்திரை கொழுநன் றன்னை யேத்தின ரிறைஞ்சி நின்றூர்.

2. நின்றவா ரிதியை முன்பு நெருப்பெழக் கடைந்த போதங்
கொன்றல பலவு மாங்கே யுற்பவித் தவற்றி னுள்ளே
தன்னுடன் பிறந்த முத்து மாலையைத் தரையிற் றூேன்றி
மின்னென நின்ற சீதைக் களித்தனள் விரைவிற் றூரை.

3. தாரையைச் சீதை புல்கித் தாமரைக் கண்ண னம்பாற்
பாரைவிட் டகன்றூன் வாலி பாருளோர்க் கவதி யுண்டோ
நீரிது மலரோன் செய்கை தெரியுமோ தெரியா தன்றோ
யாரிது தெரிய கிற்பார் காலத்தி னளவை யம்மா.

4. என்றிடத் தாரைநிற்க வெதிர் கதிர்க் கடக மொன்று
மின்றி ரிந்தனைய கொள்கை மேலைநாள் விரிஞ்சனீந்த
தன்றது விரவி பெற்று நாயகற் கிந்த தன்று
சென்றடி யிணையிலிட்டே யிறைஞ்சியே ருமையு நின்றூள்.

5. நின்றவள் தன்னை நங்கை யங்கையாற் றழுவி நின்று
வன்றுணை மங்கை மாரு மைந்தரு மங்குச் சூழத்
தன்றிருக் கைகளாலே தழுவின ளென்னக் கண்ணுல்
ஒன்றல பலவுங் கூற வுணர்ந்துள முவகை யுற்றே.

## விமானம் மீண்டும் எழுந்து செல்லுதல்

4065. மங்கல முதலா வுள்ள
மரபினிற் கொணர்ந்த யாவும்
அங்கவர் வைத்துப் பெண்மைக்
கரசியைத் தொழுது சூழ
நங்கையு முவந்து வேறூர்
நவையிலை யினிமற் றென்றூள்
பொங்கிய விமானந் தானு
மனமென வெழுந்து போன.

அங்கு அவர் - அப்பொழுது அவ்வானர மடவார், மரபினில் கொணர்ந்த - முறைப்படி கொண்டு வந்த, மங்கலம் முதலா உள்ள யாவும் - அட்ட மங்கலங்கள் ஆதியாகவுள்ள பொருள் அனைத்தையும், வைத்து - எதிரில் வைத்து; பெண்மைக்கு அரசியை - பெண்கட்குரிய பண்புகளில் தலைசிறந்தவளான பிராட்டியை, தொழுது - வணங்கி, சூழ - சுற்றி நிற்க, நங்கையும் உவந்து - சீதா தேவியும் மகிழ்வு கொண்டு, 'இனி வேறு ஓர் நவை இலை - இனி வேறு ஒரு குறையும் இல்லை; என்றாள் - என்று மொழிந்தாள்; பொங்கிய விமானம் தானும் மனம் என எழுந்து போன - ஒளி மிகுந்து நின்ற புட்பகம் மனவேகத்துடன் கிளம்பிச் சென்றது; மற்று : அசை.

மங்கலம் - அட்ட மங்கலம்; 'சாமரை தீபம் தமனியப் பொற்குடம், காமர் கயலினிணை முதலாத் - தேமருவு, கண்ணாடி தோட்டி கதலிகை வெண்முரசம், எண்ணிய மங்கலங்க ளெட்டு' என்பது கொண்டறிக. முதலாக என்பது ஈறு குறைந்தது. மரபு - அடிபட்ட வழக்கு. அவர் - வானர மகளிர்; தான் விரும்பிய வண்ணம் மகளிர் துணை பெற்றதனால் இனி நவையிலை எனப்பட்டது. உத்தமர் பலரைச் சுமந்து நின்றதால் பூரித்த எனினுமாம். மன மெனப்போன: 'மானுருவாக நின் மனம் பூட்டினையோ' ((அகநா. 384).

பி - ம். 1. மங்கல முதலவாய ! கலப்பை யாவும், கலங்கள் யாவும்.

2. அங்கவர் கொணர்ந்து.

3. மற்றென்ன. 173

இங்கு அதிகப் பாடல்கள் :—

1. கடிகமழ் குழலினளே கார் காலம் யாங்கள் வைகும்
வடிவுடைச் சிகர மோங்கு மாலிய வானை நோக்காய்
அடுதிறர் பரிதி மைந்த னகரத னழகு பாராய்
வடிவுள மலையே ழென்ன மராமர மேழு நோக்காய்.

2. கனிவளர் பவளச் செவ்வாய்க் கனங்குழை நின்னைக் காணாத்
துனிவளர் துன்ப நீங்கத் தோழமை நாங்கள் கொண்ட
பனிவள ரிருளை மாற்றும் பகலவன் சேயும் யாமும்
நனிவளர் நட்புக் கொண்ட நலந்தரு நாக நோக்காய்.

3. மாழை யொண் கண்ணு யுன்னைப் பிரிந்தியான் வருந்து நாளில்
தாழ்விலாத் துயரம் நீங்கத் தாமரை யுந்தி யான்கை
ஆழியா மாற்ற லானை யநுமனை யரக்க ரஞ்சும்
பாழியான் றன்னைக் கண்ட பம்பையா றதனைப் பாராய்.

4. பொய்வித்தி வஞ்சங் காத்து
புலைவினைத் தறத்தைத் தின்றோன்
கைவித்துஞ் சரத்தி னுனக்
கடற்பெரும் படையை யெல்லாம்
நைவித்த விரவு நான்கான்
மருந்துக்கு நடந்து நம்மை
உய்வித்த வீரன் றன்னைக்
கண்டிட மிதுகண் டாயே.

5. சவரிய திருக்கை தானும் கவந்தனைத் தடிந்த கானும்
இவர்செய வெழுந்த வாற்றற் கரனுயி ரிழந்த பாரும்
சவையுறு சுகுட்டன் மைந்தன் சரபங்கன் முதலோர் காதற்
சவையறு முனிவர் தங்க ளிடங்களும் கருதி நோக்காய்.

6. விரைகம ழோதி மாதே விராதன்வந் தெதிர்ந்து போர்செய்
நிரைதவ ழருவி யோங்கு நெடுவரை யதனை நோக்காய்
சரதநா னரசு வேண்டேன் றடமுடி சூடு கென்று
பரதன்வந் தழுது வேண்டும் பருவரை யதனைப் பாராய்.

7. வளைபயி றளிர்க் கைமாதே வருபுனல் பெருகக் கண்டு
துளைபயில் வேயின் றெப்ப மியற்றியான் றுயர மின்றி
விளைதரு புலைலை நோக்கி வியந்துட னிருப்ப வெல்போர்
இளையவன் றனியே நீந்தும் யமுனையா றிதனைப் பாராய்.

8. பயனுறு தவத்தின் மிக்க பரத்துவனி ருக்கை பாராய்
அயல்பொரு கங்கை யாறுங் குகனுறை நகருங் காணுய்
அயன்முத லமரர் போற்ற வநந்தன்மே லாதி மூலம்
துயல்வருங் கடலே யன்ன வயோத்தியைத் தொழுது
[நோக்காய்.

9. என்றுரைத் திளவ லோடு சனகியு மிரவி சேயும்
வென்றிவீ டணனுஞ் சேனை வெள்ளமும் விளங்கித்
[தோன்றப்
பொன் றிகழ் புட்பகத் தேர் பூதலத் திழிய வேவி
யின்றுணைப் பரத்து வாச னிடவகை யிழிந்தா னன்றே.

## வேறு

## கோதாவரி, தண்டகவனம் முதலியவற்றைச் சீதைக்குக் காட்டுதல்

4066. போதா விசும்பிற் றிகழ்புட்பகம் போத லோடும்
சூதார் முலைத்தோகையை நோக்கிமுன் றோன்று சூழல்
கோதா விரிமற் றதன்மாடுயர் குன்று நின்னைப்
பேதாய் பிரிவுத் துயர்பீழை பிணித்த தென்றான்.

போதா - எழுந்து போந்து, விசும்பில் திகழ் - ஆகாயத்தில் விளங்குகின்ற, புட்பகம் - புட்பக விமானம், போதலோடும் - சென்ற அளவில், சூது ஆர் முலை-சூதாடும் வட்டுக்காயை ஒத்த முலையினை யுடைய, தோகையை நோக்கி - பிராட்டியைப் பார்த்து, (இராம பிரான்), 'பேதாய் - பெண்ணே, முன் தோன்று சூழல் - எதிரே காணப்படுகின்ற) இடம், கோதாவிரி - கோதாவிரி; அதன் மாடு உயர் - அதன் அருகில் உள்ள உயர்ந்த, குன்று நின்னை - குன்றம் போன்ற தலந்தான், (நாம் ஒருவரை யொருவர்) பிரிவு துயர் பீழை பிணித்தது - பிரிவினால் துயரமாகி வருந்தக் காரணமான துன்பத்தை உண்டாக்கியது', என்றான் - என்று சொன்னான்.

போதா - செய்யா என்னும் வாய்பாடு. போதாக என்பது ஈறு குறைந்ததெனக் கொண்டு மலரும் பருவத்து அரும்பு போன்று விளங்கும் புட்பகம் எனினும் ஒன்றும். போதா போதல் - முரண் காண்க. திகழ் புட்பகம் - வினைத் தொகை. சூது - வட்டு என்னும் சூதாடு கருவி. 'சூதாடும் வட்டென்றுவமை மதிக்கலரம் வட்டதனை, வெட்டென்று சொல்ல விதியுண்டே' (வருண குலாதித்தன் மடல்.); 'கையாடு வட்டிற் றோன்றும்' (அகநா. 108); கோதாவிரி; 'கோதாவிரியைச் சினங் கொண்டனன் கொண்ட லொப்பான்' பீழை - பீடா என்ற வட சொல்லின் திரிபு

என்ப. 'கணவன்றன்னைப் பெற்றிடைப் பிரிந்து முற்றும், தன் னெடும் பீழை நீங்கத் தழுவினுள் தளிர்க்கை நீட்டி' (யுத்த. திருமுடி. 41).

வீ - ம். 1. போதார். 174

## வேறு

4067. சிரத்து வாசவண் டலம்பிடு தெரிவைகே ளிதுநீள்
தரத்து வாசவர் வேள்வியர் தண்டக மதுதான்
வரத்து வாசவன் வணங்குறு சித்திர கூடம்
பரத்து வாசவ னுறைவிட மிதுவெனப் பகர்ந்தான்.

(இராமபிரான் பிராட்டியை நோக்கி) 'சிரத்துவாசம் - மயிர் முடியில் உள்ள நறுமணத்தால், (அங்கு) வண்டு அலம்பிடு தெரிவை - வண்டுகள் ரீங்காரம் செய்யப்பெற்ற தெரிவையே! கேள் - செவி சாய்ப்பாயாக, இது - இது, நீள் தரத்து வாசவர் - மிக்க தகுதி வாய்ந்த உபாசனை செய்பவர்களும், வேள்வியர் - யாகம் செய்பவர்களும், (வதிகின்ற) தண்டகம் - தண்டக வனமாகும்; அது - அங்கே காணும் அது, வரத்து வாசவன் - பெருமை சான்ற இந்திரனும், வணங்குறு - வணங்கத்தக்க, சித்திரகூடம் - சித்திர கூட மலையாகும்; இது பரத்துவாசவன் உறைவிடம் - இது பரத்துவாச முனிவன் வசிக்கின்ற ஆசிரமமாகும்'. என பகர்ந்தான் - என்று சொன்னான்.

திரிபு என்னும் சொல்லணி. உவாசவன் - உபாசகன் என்ற வட சொல்லின் திரிபு. உபாசனை - மனதை ஒரு நிலைப்படுத்திக் கடவுளைத் தியானித்தல். இது சகுணோபாசனை, நிர்க்குணோபாசனை என இரு வகைப்படும். பரத்துவாசவன் - மேலான இந்திரன். வாசவன் - அஷ்ட வசுக்களின் தலைவன். 'வாசவன் திருவும் கொண்டான் வழியலா வழிமேற் செல்வான்' (யுத்த. 916); 'வாச வனும் பிறர் நகைக்க வுடலெடுத்தான்' (தனிப்பா.); தண்டக வனம் - சூரிய குலத்தில் தோன்றிய இக்குவாகுவின் மக்களுள் கடைப்பட்டவனான தண்டன் என்பவன், விந்திய மலைக்கும் கைலை மலைக்கும் இடையில் உள்ள நிலத்தைத் தன் ஆட்சியிற் கொண்டு, மதுமந்தம் என்னும் நகரை அமைத்து அங்கு அரசாண்டு வருகை யில் ஒருநாள் தனது புரோகிதரான சுக்கிர பகவானின் மகள்

அரஜை என்பவளைக் காதலித்து வலியக் கற்பழித்ததனால், 'அவன் ஏழு நாளில் அழிய வேண்டும் என்றும், அவனுடைய நாடு மண் மாரியால் அழியக்கடவது' என்றும் முனிவர் சாபமிட, அழிந்தான். பின்னர் அது நாடாகித் தண்டகாரணியம் எனப் பெயர் பெற்றுப் பல முனிவர்களைத் தன்னகம் கொண்டு விளங்கிற்று.

பி - ம். 2. கரத்துவாசனை.
4. பரத்துவாசனது.

175

## பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொள்ளுதல்

4068. மின்னை நோக்கியவ் வீரனீ தியம்பிடும் வேலை
தன்னை நேரிலா முனிவர னுணர்ந்துதன் னகத்தின்
என்னை யாளுடை நாயக னெய்தின னென்னுத்
துன்னு மாதவர் சூழ்தர வெதிர்கொள்வான் றொடர்ந்தான்.

மின்னை நோக்கி - பிராட்டியைப் பார்த்து, அ வீரன் - அந்த வீரனாகிய இராமபிரான், ஈது இயம்பிடும் வேலை - இவ்வாறு கூறி வருங்கால், தன்னை நேர் இலா - தன்னை நிகர்ப்பாரைப் பெறாத, முனிவரன் - முனி புங்கவன் ஆன பரத்துவாச முனிவன், உணர்ந்து - (இராமபிரான் எழுந்தருள்வதை ஞான திருட்டியால்) அறிந்து கொண்டு, தன் அகத்தின் என்னை ஆள் உடை நாயகன் - தான் இருக்கும் இடத்தில் என்னை ஆட்கொண்ட கடவுளான இராமபிரான், எய்தினன் - எழுந்தருளினன்', என்னு - என்று மகிழ்ந்து, (அப் பெருமானை), எதிர் கொள்வான் - வரவேற்கும் பொருட்டு, துன்னும் மாதவர் சூழ்தர - நெருங்கிய தவச் சிரேட்டர்கள் சுற்றிப் பின்வர, தொடர்ந்தான் - சென்றான்.

மின் - மின்னல் போன்ற ஒளியும் இடையினையும் உடைய சானகிக்கு உவமவாகு பெயர். தன்னை நேரிலா முனிவரன் - தவம் யோகம் மனவடக்கம் முதலானவைகளில் தானே தனக்கு நிகர் ஆகுபவன். 'என்னை யாளுடை நாயகன' இது முனிவன் கூற்று. சூழ்தர - தர துணைவினை. அகத்தின் உணர்ந்து தொடர்ந்தான் எனினுமாம். கொள்வான் - வானீற்று வினையெச்சம். பரத்துவன் - இராமர் வனம் படருங்கால், பரத்துவன் இருப்பிடத்துக்கு தானாகச் சென்று கண்டு தன்னைத் தெரிவித்துக் கொண்டதாக முதனூல்

கூறும். இம் முனிவன் வருணனையை அயோத்தியா காண்டம் வனம்புகு படலம் 21, 22 செய்யுட்களிற் காண்க. இதே பரத்துவாச முனிவர் பரதனை எதிர்கொண்டதும் அவரிருவரும் அளாவளாவினதும், அயோத்தியா காண்டம் 1075 - 1077ல் காண்க. திருவடி தொழுபடலத்தும் பரத்துவாசவர் வந்திருந்தமை (1143)ல் காண்க. இவன் வரத்தில் மிக்குயர்ந்தவன் (1075).

பி - ம். 2. தன்னை நோக்கிய.

4. துணிந்தான்.

176

## இராமன் பரத்துவாசனைக் காணுதல்

4069. ஆத பத்திரங் குண்டிகை யொருகையி னணைத்துப்
போத முற்றிய தண்டொரு கையினிற் பொலிய
மாத வப்பய னுருவுகொண் டெதிர்வரு மாபோல்
நீதி வித்தக னடந்தமை நோக்கின னெடியோன்.

ஆத பத்திரம்-குடையையும், குண்டிகை-கமண்டலம் என்னும் பாத்திரத்தையும், ஒரு கையின் அணைத்து - ஒரு கையிற் பற்றிக் கொண்டு, தண்டு ஒரு கையினில் பொலிய - மற்றொரு கரத்தில் பிரமதண்டம் விளங்க, போதம் முற்றிய - ஆன்ம போதம் என்ற தத்துவ அறிவு முதிர்ந்த, நீதி - நீதி நெறியையுடைய, வித்தகன் - பேரறிவனான பரத்துவாசன், மாதவம் பயன் உருவு கொண்டு எதிர் வருமாபோல் - பெருந் தவத்தின் பேறு முனிவன் வடிவு கொண்டு, நடந்தமை - (தன் எதிரில்) வருவது போன்று வந்தமையை, நெடியோன் - பெருமை மிக்க இராமபிரான், நோக்கினன் - கண்ணுற்றான்.

ஆத பத்திரம் - குடை; வடசொல். 'ஆதபத்திராயதி இதி' என்பது சமரசம். குண்டிகை - நீர்க் கரகம். 'குண்டிகையினிற் பெரிய காவிரி கொணர்ந்தான்' (ஆரணிய. 163); போதம் - ஆன்ம ஞானம். தன்னை யுணர்ந்து தலைவனையும் உணர்ந்து சிவப் பிரம்ம ஐக்கியத்தில் ஈடுபட்ட நல்லுணர்வு. முனிவர்க்கு இன்றியமையாத சில பொருள்கள் இச் செய்யுளில் கூறப்பட்டமை காண்க. முனிவர் அல்லது துறவிகட்கு ஏக தண்டமும் உண்டு, திரி தண்டமும் உண்டு; 'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல், உறித்

தாழ்ந்த கரகமும் உரைசார்ந்த முக்கோலும்' (கலித். பாலை. 9)-ம் அதன் உரையும் காண்க. 'நூலே கரக முக்கோல் மணையே, ஆயுங்காலை யந்தணர்க்குரிய' (தொல். மரபி. 70)ம் 'ஆயுங்காலை' என்றதனால், ஒரு கோலுடையார் இருவருளர், அவர் துறவறத்து நின்றாராகலின் உலகியலின் ஆராயப்படார் என்பது. முக்கோலுடையார் இருவருள் பிச்சை கொள்வானும் பிறருண் டிருந்து தனதுண்பானும் உலகியலின் நீங்காமையின் அவரையே வரைந்தோதினன் என்பது' என்ற பேராசிரியர் உரையும் இங்குக் காண்க. நெடியோன் - இங்கு அவன் அமிசமான இராமபிரான். 'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்' (சிலப். 8:1). 177

## பரத்துவாச முனிவனது ஆச்சிரமத்திற் புட்பகம் இறங்குமாறு இராமன் கருதுதல்

4070. எட்ப கத்தினை யளவையுங் கருணையோ டிசைந்த
நட்ப கத்திலா வரக்கரை நருக்கிமா மேரு
விட்ப கத்துறை கோளரி யெனப்பொலி வீரன்
புட்ப கத்தினை வதிகென நினைந்தனன் புவியில்.

கருணையோடு இசைந்த - இரக்கம் அல்லது தயையுடன் அமைந்த, நட்பு - நட்புத் தன்மை, தினை அளவையும் - மிகச் சிறிதளவேனும், அகத்து இலா - உள்ளத்திலில்லாத, அரக்கரை - இராக்கதர்களை, நருக்கி எண்பக - தன் மனம் பிளந்ததனால், மாமேரு விட்பு அகத்து உறை கோளரி என - பெரிய மேரு மலையின் வெடிப்பினுள் வதியும் ஆண் சிங்கம் போன்று, பொலி - விளங்கும், வீரன் - இராமபிரான், புட்பகத்தினை புவியில் வதிக என - புட்பக விமானத்தை அங்கு இறங்கி நிற்குமாறு, நினைந்தனன் - திருவுள்ளம் கொண்டான்.

முதலடியில் எண்பக: எனப் பிரிக்க. தினை - ஒரு சிறிய அளவுக்கு எடுத்துக் கூறப்படுவது; 'தினைத்துணை யுள்ளதோர் பூவினில் தேனுண்ணாதே' (திருவா. கோத்தும்பி. 3); கருணையோ டியைந்த நட்பகத்திலா; 'இரக்கமென் றொருபொருளிலாத நெஞ்சினர்' (ஆரணிய. 129); விட்பு - பாறைகளில் வெடிப்பு

அல்லது பிளவு. விள்: பகுதி. பு: தொழிற் பெயர் விகுதி. புட்பகம் இயக்குவாரின்றி ஏறியிருப்பவர் நினைப்புக்கேற்ப இயங்குவது. இலங்கையை வலஞ் செய்தேகவென நினைந்திடுமுன் யானம், புவியில் இறங்கியது.

பி-ம். 1. இயைந்த. 178

இதன்பின் அதிகப் பாடல்கள்:—

1. என்று மன்னவன் பற்பல புதுமையும் யாவும்
மன்றலங்குழற் சனகிக்குக் காட்டினன் மகிழ்ந்து
குன்று துன்றிய நெறிபயிற் குடதிசைச் செவ்வே
சென்று கங்கையின் றிருநதித் தென்கரை சேர்ந்தான்.

2. ஆர்த்து விண்ணவ ராடினா ராடகத் தேரும்
போர்த்த போதினி னிலமிசை யணுகுறப் பெரியோர்க்
கார்த்த மாகிய வடற்கரு மலையென நடந்து
தீர்த்த மாகிய கங்கையின் றென்கரை சேர்ந்தார்.

3. மான மானமீப் போனது வடதிசை வருவ
தான காலையில் அவனும் ஆயிழை யறியச்
சேனையோர் திறல் போதுவான் பெருமையும் செப்பத்
தான மாகிய தீர்த்தமாம் திருநதி சார்ந்தார்.

4. பாக மங்கை யோடமர்ந்தவன் பயில்வுறு கங்கை
யாகு மீதென வறநெறி வழுவுரு வலங்கல்
மேக வண்ணனுந் துணைவரும் வியந்துட னுடித்
தாக நீங்கின ரவ்விடைத் தேவரும் சேர்ந்தார்.

ஓர் பிரதியில் இங்குப் பரத்துவாசப் படலம் தொடங்குகின்றது.

5. இறுத்த தேரினை யிருடிக ளெவரும் வந் தெய்தி
வெறித் துழாய்முடி வேதமெய்ப் பொருளினை வியவாப்
புறத்த தாமுயிர் பெற்றன னென்வகம் பொங்கத்
திறத்தி ராமன்பால் திருமுனி யவனும்வந் துற்றான்.

## இராமன் பரத்துவாச முனிவனை வணங்கி அவன் உபசாரத்தை ஏற்று மகிழ்தல்

4071. உன்னு மாத்திரத் துலகினை
யெடுத்தும்ப ரோங்கும்
பொன்னி னுடுவந் திழிந்தெனப்
புட்பகந் தாழ
என்னை யாளுடை நாயகன்
வல்லையி னெதிர்போய்ப்
பன்னு மாமறைத் தபோதனன்
றாண்மிசைப் பணிந்தான்.

உன்னு மாத்திரத்து - நினைத்த அளவைக்குள், புட்பகம் - புட்பக விமானம், உலகினை எடுத்து - உலகில் உள்ள மக்களைத் தாங்கிக் கொண்டு, உம்பர் ஓங்கும் - விண்ணிடை உயர்ந்து செல்கின்ற, பொன்னின் நாடு வந்து இழிந்தென - பொன் மயமான சுவர்க்க லோகம் வந்து இறங்கினாற் போல, தாழ - (பூமியில்) இறங்க, என்னை ஆளுடை நாயகன் - என்னை அடிமையாக ஏற்று ஆண்டவனான இராமபிரான், வல்லையின் எதிர் போய் - விரைந்து எதிர் சென்று, பன்னும் - இடையறாது ஓதும், மாமறை தபோதனன் - சிறந்த வேதங்களில் வல்லவனும் தவத்தையே தனமாக உடையவனுமான, பரத்துவாச முனிவனுடைய, தாள்மிசை பணிந்தான் - பாதங்களில் விழுந்து வணங்கினான்.

பொன் மயமான புட்பகம் உலகில் உள்ளாரைத் தாங்கி விண் வழிச் சென்றது, பொன்னுலகம் பூலோகத்தில் உள்ளவரைத் தாங்கிக் கொண்டு சென்றதை நிகர்க்கும் எனப்பட்டது. தபோதனம: தவத்தையே தனமாகக் கொண்டவன் முனிவன்; 'ஆங்குறை தபோதன ரரக்கர்க் காற்றலேம்' (யுத்த. 4164); இதன் பெண்பால் தபோதனி. 'மன்னுதபோ தனியார்க்குக் கனவின்கண் மழ விடையோன்' (பெரிய பு. திருநாவுக். 48); உலகு: இடவாகு பெயர். என்னை ஆளுடை நாயகன், இது கவியரசரான கம்பர் கூற்று. இதிலிருந்து அவரது வைணவ ஈடுபாட்டை அறியலாம். இங்குப் பரத்துவாசரைப் பணிந்தது போன்றே இராமபிரான்

அகத்திய முனிவரைப் பணிந்தமை இங்குக் கருதத்தகும். 'நின்றவனை வந்த நெடியோ னடிபணிந்தான்' (ஆரணிய. 164).

பி ம். 2. வந்துளதெனை.

4. பன்னு நான்மறை நாயகன். 179

4072. அடியின் வீழ்தலு மெடுத்துநல் லாசியோ டணைத்து
முடியை மோயின னின்றுழி முளரியங் கண்ணன்
சடில நீடுக ளொழிதரத் தனதுகண் ணருவி
நெடிய காதலங் கலசம தாட்டின னெடியோன்.

(இராமபிரான் தனது) அடியின் வீழ்தலும் - தன் பாதத்தில் வீழ்ந்து வணங்கிய அளவில், நெடியோன் - பெருமை மிக்கவனான பரத்துவாச முனிவன், எடுத்து - அவனை தூக்கி, நல் ஆசியோடு அணைத்து - நல்ல வாழ்த்துரைகளோடு தழுவிக் கொண்டு, முடியை மோயினன் நின்றுழி - உச்சிமோந்து நின்ற போழ்து, முளரி அம் கண்ணன் - தாமரை மலர் போன்ற அழகிய விழிகளை யுடையவனான இராமபிரானுடைய, சடிலம் - சடைக் கற்றைகளில் இருந்த, நீள் துகள் ஒழி தர - மிக்க புழுதிகள் நீங்கும்படி (அவன் மாட்டுள்ள), நெடிய காதல் - மிக வளர்ந்த அன்பினாலுண்டான, தனது கண் அருவி - தனது கண்ணீராகிய, கலசமது - அழகிய கலசத்து நீரால், ஆட்டினன் - நீராட்டினான்.

முடி மோத்தல் - உச்சி மோந்தல்; இஃது அன்பினால் செய்யப் படுவது. நின்றவழி என்பதில் அகர ஈறு தொக்கது. முளரிக் கண்ணன்; முளரி: தாமரை. இதனைக் காரண விடுகுறி என்பர் இலக்கண வல்லுநர். கண் கலசம்: 'ஆங்குயர் மலர்க்க ணீராலாயிரம் கலசமாட்டி' (சுந்தர. 1387); நெடிய காதல் நெடியோன் என்றது காண்க. அன்பிலும் மிக்கான் பெருமையிலும் மிக்கான் என்க. இராமபிரானை நெடியோன் (4069) என்றார். இங்கு முனிவனை அச் சொல்லாற் கூறினார். நெடுமை பெருமை மேற்று; பிரம வித்தாக லின் முனிவனை நெடியோன என்றார். 'திக்க்ஷத்திரிய பலம் பிரம தேஜோ பலம் பலம்' என்று விசுவாமித்திரன் புகன்றது காண்க.

பி ம். 2. மோந்துடல்; நின்றனன், நின்றவிழ்.

3. நீர் கிளர்ந்திழிதரத், நீர் கழிந்திழிதரத்.

4. காதலின்; கலசநீர்; ஆடினன். 180

4073. கருகும் வார்குழற் சனகியோ டிளவல்கை தொழுதே
அருகு சார்தர வருந்தவ னுசிகள் வழங்கி
உருகு காதலி னெழுகுகண் ணீரின னுவகை
பருகு மாரமிழ் தொத்துளங் களித்தனன் பரிவால்.

கருகும் - கறுத்த, வார் குழல் சனகியோடு - சீதா தேவியும், இளவல் - இலக்குவனும், கை தொழுது - வணங்கி, அருகு சார்தர - பரத்துவாசன் பக்கத்திலே அடைய, அரு தவன் - அரிய தவச் சிரேட்டனுன முனிவன், ஆசிகள் வழங்கி - (அவ்விருவர்க்கும்) வாழ்த்துரைகள் கூறி, (அவர்களை நோக்குதலால்), உருகு காதலின் - உள்ளம் உருகுதற்குக் காரணமான அன்பினுல், ஒழுகு கண்ணீரினன் - வழிகின்ற (ஆனந்தக்) கண்ணீரை யுடையவனுய், உவகை பருகும் - மகிழ்ச்சியுடன் பானம் செய்யும், அருமை அமிழ்து ஒத்து - அருமையான தேவாமிருதத்தை ஒத்து, (தேவாமிர்தம் பருகினவர் போன்று உவகை உற்று), பரிவால் - (அவர்கள் மாட்டு உள்ள) அனபினுல், உளம் களித்தனன் - மன மகிழ்ந்தான்.

கருகும் வார் குழல்; 'மஞ்சொக்கும் அளகவோதி மழை யொக்கும் வடித்த கூந்தல்' (ஆரணிய. 623); அருந்தவன் - பரத்துவாசன். அருமை - ஆற்றற் கருமை.

பி - ம். 1. கருகு; குழல.
2. சார்குழி.
3. காதலன். (181)

சுக்கிரீவன் விடணன் முதலியோர் முனிவனை வணங்க, அவன் வாழ்த்திவிட்டுப் பிராட்டியையும் இராமபிரானையும் தன்னுச்சிரமத்தினுள் அழைத்துச் செல்லுதல்

4074. வான ரேசனும் விடணக் குரிசிலு மற்றை
ஏனை வீரருந் தொழுந்தொறு மாசிக ளியம்பி
ஞான நாதனைத் திருவொடு நன்மனை கொணர்ந்தான்
ஆன மாதவர் குழாத்தொடு மருமறை புகன்றே.

(பரத்துவாசன்) வானரேசனும் - குரக்கரசனுன சுக்கிரீவனும், வீடணன் குரிசிலும் - வீடணன் என்னும் அரக்கர் கோமானும்,

மற்றை ஏனை வீரரும் - மற்றுமுள்ள வீரர்களும், தொழுந்தொறும் - (தன்னை) வணங்கும் தோறும், ஆசிகள் இயம்பி - வாழ்த்துக் கூறி, (பின்னர்) ஆன மாதவர் குழாத்தொடும் - தன்னுடைய பரிவாரங்களான பெரிய தவ முனிவர் குழுவுடன், அருமறை புகன்றே - அருமையான வேதங்களை ஓதிக்கொண்டு, ஞான நாதனை - தத்துவ ஞானத்தால் உணரப்படும் தலைவனை இராமபிரானை, திருவொடு - திருமகள் அமிசமான பிராட்டியுடனே, நன்மனை கொணர்ந்தான் - (தனது) அழகிய இலைக்குடிலுக்கு அழைத்துச் சென்றான். ஏ : அசை.

வாநர + ஈசன் - வடமொழி தீர்க்க சந்தி. 'தொழுந்தொறும் தொழுந்தொறும் ஆசி சொல்லுவார்' (ஆரணிய. 126); ஞான நாதன் - தத்துவ ஞானத்தால் தெளியப்படுபவன். திருக்குறள் மெய்யுணர்தல் என்ற அதிகாரம் இங்குக் காணத்தகும். மாதவர் ஆன குழாத்தொடு என்று மாற்றி யுரைத்தலுமாம்.

பி - ம். 2. ஏனையோர்களும் ; ஆசிகள் பகர்ந்தே.

4. பகர்ந்தே. 182

## முனிவன் இராமபிரானை யுபசரித்து ஒன்று கூறத் தொடங்குதல்

4075. பன்ன சாலையுட் புகுந்துநீ டருச்சனை பலவும்
சொன்ன நீதியிற் புரிந்தபின் சூரியன் மருமான்
தன்னை நோக்கினன் பன்முறை கண்கணீர் ததும்பப்
பின்னொர் வாசக முரைத்தனன் தபோதரிற் பெரியோன்.

தபோதரில் பெரியோன் - தவ முனிவருட்டலை சிறந்தவனாகிய பரத்துவாச முனிவன், பன்னசாலையுட் புகுந்து - (தனது) இலைக் குடிற்குள்ளே புக்கு, (இராமபிரானுக்கு) நீடு அருச்சனை பலவும் - சிறந்த வழிபாடுகள் பலவற்றையும், சொன்ன நீதியில் புரிந்த பின் - நூல்களிற் கூறப்பட்ட முறைப்படி ஆற்றிய பின், சூரியன் மருமான் தன்னை - கதிரவன் வழித் தோன்றலான இராமபிரானை, கண்கள் நீர் ததும்ப பல்முறை நோக்கினன் - விழிகளில் நீர் துளும்ப அநேக தடவைகள் பார்த்தவனாகி, பின் - பின்னர், ஒரு வாசகம் உரைத்தனன் - சில வார்த்தைகள் பகரலானான். இதனை அடுத்த கவியிற் காண்க.

பர்ணசாலே - வடசொல். அருச்சனே - வழிபாடு. சொன்ன - நூல்களில் கூறப்பட்ட. மருமான் - வழித்தோன்றல். 'புலத்தியன் மருமான்' (யுத்த. 1432); கண்ணீர் - உவகைக் கண்ணீர். தபோதனர் என்பது குறுகி நின்றது.

பி - ம். 4. பின்னேர் காரியம்; உணர்த்தினன். 183

## பரத்துவாசன் இராமனது சிறப்பைக் கூறுதல்

4076. முனிவர் வானவர் மூவுல கத்துளோர் யாரும்
துனியு ழந்திடத் துயர்தரு கொடுமனத் தொழிலோர்
நனிம டிந்திட வலகைகள் நாடக நடிப்பக்
குனியும் வார்சிலேக் குரிசிலே யென்னினிக் குணிப்பாம்.

'முனிவர் - மனன சீலர்களும், வானவர் - அமரரும், மூ உலகத்துளோர் யாரும் - மூன்றுலகத்தில் உள்ள அனைவரும், துனி உழந்திட - அச்சமுற்று வருந்துமாறு, துயர்தரு - துன்புறுத்திய, கொடு மனம் தொழிலோர் - கொடிய உள்ளத்தையும் (கொடிய) செய்கைகளையும் உடைய அரக்கர்கள், நனி மடிந்திட - பெருவாரியாக இறந்துபடவும், அலகைகள் நாடகம் நடிப்ப - சமர்க்களத்தில் பேய்கள் கூத்தாடவும், குனியும் - வளைந்த, வார்சிலே குரிசிலே - (நீண்ட கோதண்டம் என்னும்) வில்லையேந்திய வீரனே! என் இனி குணிப்பாம் - (எங்கள் எண்ணங்கள் அனைத்தும் நிறைவேறின ஆகவே) இனி, நாங்கள் எதைக் கருதிச் சொல்வோம்' (ஒன்றும் சொல்வதற்கில்லை).

மூவுலகத்துளோர் எனின் எல்லோரும் அதில் அடங்கியவர் ஆவார்; எனினும் முனிவர் வானவர் என்று விதந்தது அவர்களின் தனிச் சிறப்புப் பற்றி என்க. முனிவர் வந்தார் அகத்தியரும் வந்தார் என்ற இடத்துப்போல என்க. துனி - அச்சம், இங்கு அது காரணமாக உற்ற துயர்; கொடுமை மனம் செய்கை இரண்டிற்கும் கொள்க. இவ்விரண்டும் சொல்லவே மொழியையும் கொள்க. நாடகம் - கதை தழுவி வரும் கூத்து என்ப; இங்கே பேய்க் கூத்து. அலகை; 'உலகத்தார் உண்டென்ப தின்றென்பான் வையத், தலகை யாவைக்கப் படும்' (குறள். 850); 'அரக்

கியர் அளவற்றுரர்கள் அலகையின் குழுவுமஞ்ச' (சுந்தர. 1280); குனித்தல் - வளைதல்; 'குனித்த புருவமும்' (தேவா. 11 : 4).

பி - ம். 1. வானுளோர்.

2. துயருறும், துயர் தொடர், துணர்தரு. 184

## வேறு

4077. விராதனுங் கரனு மானும்
விறல்கெழு கவந்தன் ருனும்
மராமர மேழும் வாலி
மார்பமு மகர நீரும்
இராவண னுரமுங் கும்ப
கருணன தேற்றந் தானும்
அராவரும் பகழி யொன்றா
லழித்துல களித்தா யைய.

'ஐய - தலைவனே! விராதனும் கரனும் மானும் விறல்கெழு கவந்தன் தானும் - விராதனையும் கரனையும் மாரீசனாகிய மாய மானையும் வலிமை சான்ற கவந்தனையும், மராமரம் ஏழும் - ஏழு மராமரத்தினையும், வாலி மார்பமும் - வாலியின் மார்பகமும், மகரம் நீரும் - சுரு மீன்களை உடைய ஓர் கடலையும், இராவணன் உரமும் - இராவணனுடைய, மார்பையும், கும்பகருணனது ஏற்றம் தானும் - கும்பகன்னனுடைய பெருமையையும், அராவு அரும்பகழி ஒன்றால் - அராவிச் செய்யப்பட்ட அருமையான ஒப்பற்ற கருவியால், அழித்து உலகு அளித்தாய் - அழியச் செய்து எல்லா உலகங்களையும் காத்தருளினாய்.

பி - ம். 3. கும்பகன்னன் தன் தோற்றம்.

4. அளித்தா யென்றான். 185

இங்கு அதிகப் பாடல்கள் :—

1. வந்த மாமுனி வோர்களை வணங்குமுன் னவர்கள்
எந்தைநீ யின்றிங் கிருந்துள வருத்தமும் நீக்கிச்
சென்று வேறு திருநகர் அடைகெனச் செப்பி
யுந்து சித்திர கூடத்துள் யாரும் வந் துற்றார்.

வேறு

2. தகு மருந்தவங்கள் ஈட்டித் தசமுகத் தரக்கன் பெற்ற
யுகமரைக் கோடி காலும் ஏவல் செய்துழலும் தேவர்
சுகமுறச் சிலைகைக் கொண்ட தொல்மறை யமரர் யார்க்கும்
இகபர மிரண்டும் காக்கும் இறைவனீ யன்றி யுண்டோ.

வேறு

3. இந்த வாசக மியம்பிலன் பின்னரு மிசைப்பான்
எந்தை நீயின் றிங் கிருந்துள வருத்தமும் போக்கிச்
சிந்தை யன்புசெய் திருநகர் நாளைநீ சேர்கென்
றந்த மில்பரத் துவன்சொல வவ்விடத் தடைந்தான.

4. அடைந்த மாமுனித் தலைவனை யருச்சனை செய்து
மிடைந்த சேனையம் பெருங்கடல் சூழ்தர மேனாள்
கடைந்த பாற்கடல் கண்டுயில் நீங்கிவா னவர்கள்
படிந்து போற்றிட விருந்தெனப் பரிவுட னிருந்தான்.

வேறு

5. இருந்தபோ திராமன் றன்னை யிருடியு மியம்பு மெந்தாய்
பொருந்திற லிலங்கை தன்னை யெங்ஙனம் பெரியோய் நீயே
வருந்தினை குரங்கு கொண்டு மாயவல் லரக்கன் றன்னைத்
திருந்தவப் போரின் வென்று மீண்டவா செப்பு கென்றான்.

6. இராகவ னவனை நோக்கி யிறந்தவா ளரக்க ரெல்லாம்
அராவின் மாருதியு மேன்மை வீடணன் றானு மாங்கே
குராவருஞ் சேனை யெல்லாங் கொன்றிடக் கொற்றங் கொண்டு
விராவியே மீண்ட தென்று மீளவும் பகர லுற்றான்.

7. தந்திர முற்ற சேனை தரைப்பட மறுப்ப டாமல்
அந்தர முற்ற போதங் கருமருந் தநுமன் றந்தான்
மந்திர வித்தே யெம்பி வரிசிலை வளைத்த போரில்
இந்திர சித்தும் பட்டா னிலங்கையு மழிந்த தன்றே.

8. கறங்குகால் செல்லா வெய்ய கதிரவ னொளியுங் காணா
மறம்புகா நகரந் தன்னில் வானவர் புகுதல் வம்பே
திறம்புகா தவிரு நாளுஞ் சிதைவிலா தேவருங் காலை
அறம்புகா மறத்தி னாலே யழிந்ததப் பதியு மையா.

9. மறக்கண் வெஞ்சினத்தின் வனகண் வஞ்சக வரக்கர் யாரும்
இறக்கமற் றிறந்த தெல்லா மெம்பித னீட்டி னெந்தாய்
பிறப்பு மேலுளதோ சூழ்ந்த பெருந்திசை பேரிற் பேராத்
துறக்கத்தோ யாதோ பெற்று ரறிந்தருள் சுருதி நூலோய்.

வேறு

10. என்ற வாசக மிருந்தவன் கேட்டிக விராமன்
தன்றுணைப் பெருந் தம்பியைத் தழுவிநீ தக்கோய்
வென்று மீண்டிலை யாயினவ் விண்ணவர் முனிவர்
பொன்று மாறன்றி யாருயிர் புரப்பதொன் றுளதோ.

11. மாதவன்சொன்ன வாய்மையை மனங்கொண்டு மறையோன்
பாத முந்துற வணங்கிமா முனிவனைப் பாரா
ஏதும் யான்செய்த தில்லையவ் விலங்கைமேல் வெகுண்டு
வேத நாயகன் புருவத்தை நெரித்தனன் விளிந்தார்.

12. அன்றி யும்பிறிதுள்ள தொன் றுரைசெய்வ னதுவத்
துன்று தார்புனை மாருதி பெரும்புயத் துணையால்
வென்றி கொண்டனம் யாங்கண்மேல் விளம்புவ தெவனோ
என்றி யம்பின னிருடிக்கு மிளவலு மியைந்தே.

13. அநும னென்பவன் வாண்முக நோக்கின னவனும்
புனித மாதவன் றனைத்தொழாப் புண்ணியப் பொருளாம்
தனுவ லங்கொண்ட தாமரைக் கண்ணவன் றலையன
எனும தென்கொலோ யாவர்க்குந் தந்தைநீ யென்றான்.

14. அங்க வன்சொல வநுமனு முரைசெய்வா னருணப்
பங்க யந்தனிற் சீதையாம் பராபரை யாட்டி
சங்கர னயன் றன்னையுந் தரணியீ ரேழும்
தங்குபொன் வயிற் றன்னைதன் றன்மையை நிகழ்த்தும்.

15. இராகவன் பெருங் குலத்தையு மிப்பெருஞ் செல்வத்
தராத லம்புகழ் சனகன்றன் மரபையுந் தந்தென்
பராப ரத்தினைப் பங்கயத் தமுதெனப் பணித்தான்
புராத னர்க்கரசேயென மாருதி புகன்றான்.

16. அன்ன வாசகங் கேட்டலு மந்தணர் கோவும்
என்ன வாசகம் சீதைக்கின் றியம்புவ தியாமென்
றென்றும் வாசக முரைத்தில னுள்ளன்பு குளிர
அன்னை வாசவன் திருவினைத் தந்ததென் றறைந்தான்.

17. பண்குலாவிய சுக்கிரீ வன்றனைப் பாராக்
கண்குலாமனங் களித்தவன் கழன்மீசைப் பணிந்து
மண்குலாம்புகழ் வீடணன் நீலனே முதலாம்
எண்கின வேந்தனும் அழித்தன ரிலங்கையை யென்றான்.

வேறு

18. பான நெய்யுட னனமும் சாந்தமும் பல்பூண்
ஏனை வானவர் மகளிர்க ளேந்திவந் திழிந்தார்
ஆன மெய்ப்படைத் தம்முடைப் போகத்து ளமுந்த
ஆன கற்பின ளுடனெழுந் திராமனு மறைவான்.

19. முனிவன் வாண்முக நோக்கி மெய் முழுதுணர் முனியே
அநும னுண்டகை யளித்தபே ருதவியின் றெம்மால்
நினையவும் முரை நிரப்பவு மரிதினி நீதி
புனித வுண்டியெம் முடனெனப் புரவலன் புகன்றான்.

20. என்ற வாசகங் கேட்டலு மிருந்தவத் தெவரும்
நன்று நாயகன் கருணையென றுவகையி னவிலாத்
துன்று தாரவன் பாதுகம் தொழுதருந் தொல்லோய்
இன்று கேளென வுவகையின் மாருதி யுரைக்கும்.

21. செய்த மாதவ முடைமையி னினக்கன்பு சிறந்து
பொய்யில் சாதனம் பூண்டனன் புண்ட ரீகக்கண்
ஐய நின் பெருங் கருணை தா னடியனேற் கமையும்
உய்யு மாறிகல் வேறுள தோவென்று மொழிந்தான்:

22. திருந்து மாதவன் செய்ததோர் பூசனை செயவாண்
டிருந்த போதுதன் திருவுளத் திராகவ னினைந்தான்
பொருந்த மாமுடி புனைகெனப் பொருந்துறுன் போத
வருந்து தம்பிக்கு வருவன்யா னென்பதோர் வாக்கை.

## 'இன்று எம் விருந்தாளியாக இருக்க' என்று பரத்துவாசவன் இராமனை வேண்டுதல்

4078. சித்திர கூடந் தீர்ந்து
தென்திசைத் தீமை தீர்த்திட்
டித்திசை யடைந்தெம் மில்லி
னிறுத்தமை யிறுதி யாக
வித்தக மறந்தி லேன்யான்
விருந்தினை யாகி யெம்மோ
டித்தின மிருத்தி யென்றான்
மறைகளி னிறுதி கண்டான்.

'வித்தக - பேரறிஞ! (நீ முன்னர்) சித்திரகூடம் தீர்ந்து - சித்திரகூடத்தை விடுத்து. (தண்டக வனத்தை நோக்கிச் சென்றது முதலாக) தென் திசை தீமை தீர்த்திட்டு - தெற்குத் திக்கில், (விராதன் முதலிய இராவணன் ஈறாகவுள்ள அரக்கர்களால் எழுந்த) கெடுதிகளைப் போக்கி, (பின்னர்) இ திசை அடைந்து - இந்த வடக்குத் திக்கினை யடைந்து, எம் இல்லின் இறுத்தமை இறுதி ஆக - எமது பன்னகசாலையில் தங்கியது வரையில் (நிகழ்ந்தவற்றை ஞானதிருட்டியால் அறிந்த), யான் - யான், மறந்திலேன் - மறந்தேன் இல்லை; (நீ), விருந்தினை ஆகி - விருந்தாளியாகி, எம்மொடு - எம்முடன், இ தினம் இருத்தி - இன்றைக்கு மட்டும் தங்குவாயாக', என்றான் - என்று வேண்டினான், (யாவன் எனில்), மறைகளின் இறுதி கண்டான் - வேதத்தின் முடிவான வேதாந்தத்தின் பொருள் முற்றும் நன்கு அறிந்தவனான பரத்துவாச முனிவன்.

அனைத்து நிகழ்ச்சிகளையும் ஞானக் கண்ணாற் கண்டான் முக்காலமும் உணரவல்ல முனிபுங்கவன் என்க. மறைகளின் இறுதி - வேதாந்தம். இது கூறவே மறைகளும் முனிவர் யாரும் மலர்மிசை யயனும் மற்றைத் துறைகளும் எல்லாம் துணிபொருளும், மறைகளின் இறுதியுமான ஈச்வரனைக் கண்டவன் என்று கொள்க

பா - ம். 3. மறந்திலேம்யாம்,

## பரத்துவாசன் இராமனிடம் பரதனியல்பைக் கூறுவேனெனல்.

4079. கரதல மதனி னீடு
　　கார்முகம் வளைய வாங்கிச்
சரதவா னவர்கள் துன்பந்
　　தணித்துல கங்கள் தாங்கும்
மரகத மேனிச் செங்கண்
　　வள்ளலே வழுவா நீதிப்
பரதன தியல்பு மின்றே
　　பணிக்குவென் கேட்டி யென்றான்.

கரதலம் அதனில் நீடு கார்முகம் வளைய வாங்கி - (பின்னும் அம் முனிவன் இராமனைப் பார்த்து) 'கையில் நீண்ட வில்லினை வளையுமாறு பண்ணி, வானவர்கள் துன்பம் சரதம் தணித்து - தேவர்களின் துயரத்தைத் தான் கொடுத்த வாக்கின் பிரகாரம் உண்மையாக ஒழித்து, உலகங்கள் தாங்கும் - புவனமனைத்தையும் காவல் புரிந்து காக்கும், மரகதம் மேனி - மரகதம் போன்ற மேனியையும், செ கண் - சிவந்த விழிகளையும் கொண்ட, வள்ளலே - கருணாநிதியே! வழுவா நீதி பரதனது இயல்பும் - பிழையாத நீதிகளை யுடைய பரதனுடைய தன்மைகளையும், இன்றே - இப்பொழுதே, பணிக்குவென் - உரைப்பேன், கேட்டி - கேட்பாயாக', என்றான் - என்று மொழிந்தான். இதனை அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

கார்முகம் - வில். 'கார்முகப் படலம்' என்றே தனித்து ஓர் படலம் பாலகாண்டத்தில் உள்ளமை காண்க. சரதம் - சத்தியம். 'மசரத மணையவர்' (திருவவ. 22): என்ற செய்யுளில் கூறப் பட்டதை உணர்க. 'சரதமிப் புவியெலாம்' (அயோத்தி. மந்தரை. 57) வழுவா நீதி; 'தள்ளரிய பெரு நீதித் தனியாறு புகமண்டும் பள்ளமெனும் தகையானை' (பால. குலமுறை. 21); 'செம்மையின் ஆணி' (அயோத்தி. கிளை கண்டு. 47) என்றமை காண்க. பணித்தல் - சொல்லியருளல்.

பி - ம். 2. சரதம்; அளித்துலகந் தாங்கும்.
　　4. இன்னே; கேண்மின்.

வேறு

## பரத்துவாசன் பரதன் தன்மையை இராமனுக்கு எடுத்துக் கூறுதல்

4080. வெயர்த்த மேனியன் விழிபொழி
மழையன்மூ வினையைச்
செயிர்த்த சிந்தையன் தெருமர
லுழந்துழந் தழிவான்
அயர்த்து நோக்கினுந் தென்திசை
யன்றிவே றறியான்
பயத்த துன்பமே யுருவுகொண்
டென்னலாம் படியான்.

'(பரதன்) வெயர்த்த மேனியன் - வெயர்க்கின்ற மேனியை உடையவன், பொழி விழி மழையன் - பெய்கின்ற கண்ணீர் வெள்ளத்துடன் கூடியவன்; மூவினையை செயிர்த்த சிந்தையன் - மூன்று வினைகளையும் கடிந்து அகற்றிய (தூய்மையான) மனத்தினன்; தெருமரல் உழந்து உழந்து அழிவான் - மனச் சுழற்சியுடன் வருந்தி வருந்தி அழுங்குவான்; அயர்த்து நோக்கினும் - மறந்து (எதை) நோக்கினாலும், தென் திசை அன்றி வேறு அறியான் - (நீ) எழுந்தருளியிருந்த தெற்குத் திக்கினை அல்லாமல் வேறொன்றையும் காண்பவனல்லன்; பயத்த - அச்சத்துடனியைந்த, துன்பமே 'உருவு கொண்டென்னலாம் படியான் - துன்பமே ஓர் உருவெடுத்தது என்னும் தன்மையுடையவன்.

வெயர்த்த மேனியன் விழிபொழி மழையன், செயிர்த்த சிந்தையன்; வடமொழி நடை. இங்கு, வற்கலையி னுடையானை' (அயோத்தி. குகப். 29): 'துன்பமொரு முடிவில்லை திசை நோக்கித் தொழுகின்றான்' (அயோத்தி. குகப். 30); 'தொழுதுயர் கையினன் துவண்ட மேனியன், அழுதிழி கண்ணினன் அவல மீதென, எழுதிய படிவமொத் தெய்து வான்றனை' (அயோத்தி. கிளைகண்டு. 49); 'அந்தியும் பகலும் நீர் அறாத கண்ணினன்' (அயோத்தி. கிளைகண்டு. 140); என்ற பகுதிகள் ஒப்பு நோக்கத்தகும். செயிர்த்தல் - வெறுத்தல். 'செயிர்ப்பினும் அழகு செய்யும் திருவினை' (யுத்த. 706).

பி - ம். 1. இழிவான்.

2081. இந்தி யங்களைந் திருங்கனி காய்நுகர்ந் திவுளிப்
பந்தி வந்தபுற் பாயலான் பழம்பதி புகாது
நந்தி யம்பதி யிருந்தனன் பரதனின் னுமம்
அந்தி யும்பக லதனினு மறப்பில னுகி.

'பரதன் - பரதாழ்வான், இந்தியம் களைந்து - பத்து இந்திரியங்களையும் (அவ்வவற்றின் தனிச் செலவினைத்) தடுத்து, (நல்ல உணவின்றி), இரு கனி காய் நுகர்ந்து-பெருமைமிக்க கனிகளையும் காய்களையுமே உட்கொண்டு, இவுளி பந்தி வந்த-குதிரைக் கூட்டங் கட்கு ஏற்ற, புல் - புல்லினையே, பாயலான் - படுக்கையாக வுடையவன் ; நின் நாமம் - உன் திருப் பெயரையே, அந்தியும் பகல் அதனினும்-இரவிலும் பகலிலும், மறப்பிலன் ஆகி-மறவாதவனுகி, (உச்சரித்துக் கொண்டு), பழம்பதி புகாது-சூரிய வங்கிசத்தார்க்குப் பழந் தலைநகரமான அயோத்திக்குட் புகாமல், நந்தி அம்பதி இருந்தனன் - நந்திக் கிராமம் என்ற கிராமத்தில் தங்கி உள்ளான்.'

இந்தியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஞானேந்திரியங்களும் ; வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபத்தம் என்ற கன்மேந்திரியங்களும். தாங்கரும் தவமேற்கொண்ட இராமபிரான் உணவாகலின் இரு கனி காய் எனப்பட்டது. இவுளி - குதிரை. நந்தியம்பதி - நந்திக் கிராமம். 'நந்தியம்பதியிடை' (அயோத்தி. கிளைகண்டு. 140) ; பழம்பதி - அயோத்தி ; 'பாண்டி நாடே பழம் பதியாகவும்' (திருவாச. கீர்த்தி. 118). அந்தியும் பாலும் : 'அந்தியும் பகலுநீ ரருதகண்ணினன்'.

பி - ம். 2. பந்தியேய்ந்தபுற்.
4. பகல் தன்னினும். 189

அதிகப் பாட்டல் :—

முனிவ னிம்மொழி கூறலும் முதுமறைப் பெருமான்
தனைநி னைந்துளம் வருந்திய தம்பிபா லயரும்
மனநெ கிழ்ந்திரு கண்கணீர் வாரவங் கமலன்
நினைவின் முந்துறு மாருதிக் கினையன நிகழ்த்தும்.

## வேறு

### பரத்துவாச முனிவன் இராமனுக்கு முகமன் கூறுதல்

4082. என்றுரைத் தரக்கர் வேந்த
னிருபதென் றுரைக்கு நீலக்
குன்றுரைத் தனைய தோளுங்
குலவரைக் குவடு மேய்க்கும்
என்றுரைத் தனைய மௌலித்
தலைபத்து மிறுத்த வீர
நின்றனைப் பிரிந்த துண்டே
யானென நிகழ்த்தி னானல்.

என்று உரைத்து - என்று பகர்ந்து (பின்னும் அம் முனிவன்), அரக்கர் வேந்தன் - இராவணனுடைய, இருபது என்று உரைக்கும் நீலம் குன்று - இருபது என்று சொல்லும் நீலமலைகள் போன்ற, தோளும் - தோள்களையும். குலம்வரை குவடும் - எட்டுக் குல மலைகளின் சிகரங்களையும், ஏய்க்கும் - நிகர்க்கும், என்று உரைத்து - என்றுரைத்தால், அனைய - அதற்கு இயைய, மௌலி தலை பத்தும் - கிரீடங்கள் அணிந்த பத்துத் தலைகளையும், இறுத்த - வெட்டி யெறிந்த, வீர - வீரனே! நின்றனை பிரிந்தது உண்டே - (நான்) உன்னைப் பிரிந்தது உண்டோ?' என நிகழ்த்தினான் - என்று கூறினான் முனிவன். ஆல்: அசை.

இடையறாது இராமபிரானை நினைந்திருந்தவனாதலின் பிரிந்த துண்டோ என்றான். உண்டோ - ஏகாரம் எதிர்மறைப் பொருள். இல்லை என்றபடி; (ஒப்பு): 'ஆண்டகை நெஞ்சினின்றும் அகன்றிலை யழிவுண்டாமோ' (சுந்தர. 525) என்றது காண்க. உடற் பிரிவன்றி உள்ளப் பிரிவின்று என்க.

பி ம். 3. பின்றிரைத் தனைய
4. உண்டோ.

## இராமபிரான் பரத்துவாசனை நோக்கிக் கூறிய விநய வார்த்தைகள்

4083. மின்னையே யுமையி னானும்
விரைமலர்த் தவிசி னானும்
நின்னையே புகழ்தற் கொத்த
நீதிமா தவத்தின் மிக்கோய்
உன்னையே வணங்கி யுன்ற
னருள்சுமந் துயர்ந்தேன் மற்றிங்
கென்னையே பொருவு மைந்தன்
யானலா தில்லை யென்றான்.

'மின்னையே உமையினானும் - மின்னலைப் போன்ற பார்ப்பதிப் பிராட்டியைத் தன் இடப்பாகத்து ஏற்றவனான சிவபிரானும், விரைமலர் தவிசினானும் - நறுமணம் உள்ள தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரமதேவனும், நின்னையே புகழ்தற்கு ஒத்த - உன்னையே துதிப்பதற்கு ஏற்ற, நீதி - முறைமையினையுடைய, மா தவத்தின் மிக்கோய் - பெரிய தவத்தாற் சிறந்து விளங்குவோனே! உன்னையே வணங்கி - (எல்லோரினும் உயர்ந்தவனான) உன்னையே தொழுது, உன்றன் அருள் சுமந்து உயர்ந்தேன் - உனது கருணையைப் பெரிதும் பெற்று, மேம்பட்டேன்; என்னையே பொருவும் மைந்தன் யான் அலாது இங்கு இல்லை - என்னை நிகர்க்கும் மைந்தன் யான் அன்றி இவ்வுலகத்தில் இல்லை' என்றான் - என்று பகர்ந்தான் முனிவன். மற்று: வினைமாற்று.

உழை: சிவபிரான் இடது கையிற் கொண்ட மான் எனினுமாம்; மானேந்திய வரலாறு தாருக வனத்து நிகழ்ச்சி; முனிவர்கள் சிவபிரானுக்குத் தீங்கிழைக்கச் செய்த ஆபிசார ஓமத்தின் எழுந்தது. தவிசு: ஆசனம்; இங்கே நாபிக் கமலம். நான்கு அடிகளிலும், ஏ: தேற்றேகாரங்கள். 'உன்னருள் சுமந்தேன்' (ஆரணிய. 167);

பி - ம். 1. பின்னையோர்; மழுவினானும்.
3. என்னையே.

பரத்துவாச முனிவன் இராமபிரானை, வேண்டிய வரம் கேள் என்றலும், இராமபிரான் கேட்டபடி முனிவன் வரந்தருதலும்

4084. அவ்வுரை புகலக் கேட்ட
வறிவனு மருளி னேக்கி
வெவ்வரம் பொருத வேலோய்
விளம்புகேன் கேட்டி வேண்டிற்
றெவ்வர மெனினுந் தந்தே
னியம்புதி யெனலு மையன்
கவ்வையின் ருகி வென்றிக்
கவிக்குலம் பெற்று வாழ்க.

அவ்உரை - (இராமபிரான்) அவ்வார்த்தை, 'புகல கேட்ட அறிவனும்-அத்தகைய துதிவார்த்தைகளைப் பகரக் கேட்ட அறிஞனை பரத்துவாசனும், அருளின் நோக்கி - கருணையுடன் கடாட்சித்து, 'வெம்மை அரம் பொருத வேலோய் - கொடிய அரத்தினல் அராவிக் கூர்மைப்படுத்தப்பட்ட வேலினை யுடையவனே! விளம்புகேன் - ஒன்று கூறுவேன், கேட்டி - கேட்பாயாக; வேண்டிற்று எவ்வரம் எனினும் - (நீ) விழைந்தது எந்த வரம் ஆயினும், தந்தேன் - தந்தேன்; இயம்புதி - கேட்பாயாக,' எனலும் - என்று மொழிதலும், ஐயன் - இராமபிரான், 'வென்றி கவிகுலம் - வெற்றியுடன் கூடிய குரங்குக் கூட்டம், கவ்வை இன்று ஆகி - துன்பம் இன்றி, பெற்று வாழ்க - விரும்பினவற்றைப் பெற்று வாழக் கடவதாக' என்ருன்.

விளம்புகேன்: 'யாரென விளம்புகேன் நான்' (கிட்கிந்தா. 68). கவ்வை : துன்பம்.

பி - ம். 2. வேலாய்
3. யென்ன.
4. வாழ்கவென்ருன்.



4085. அரியினஞ் சென்ற சென்ற
வடவிக ளனைத்தும் வானம்
சொரிதரு பருவம் போன்று
கிழங்கொடு கனிகாய் துன்றி

விரிபுனல் செழுந்தேன் மிக்கு
　　விளங்கு கென்றியம்பு கென்றான்
புரியுமா தவனு மஃதே
　　யாகெனப் புகன்றிட் டானால்.

'அரி இனம் - வானரக் கூட்டம், சென்ற சென்ற - விரும்பிச் செல்கின்ற, அடவிகள் அனைத்தும் - காடுகள் எல்லாம், வானம் சொரிதரு பருவம் போன்று - மழை நன்கு பொழிகின்ற காலத்தில் (தழைத்திருப்பது) போன்று, கிழங்கொடு கனிகாய் துன்றி - கிழங்குகளும் பழங்களும் காய்களும் நிறைந்து, விரிபுனல் - பரந்த தண்ணீரும், செழு தேன் - வளமான தேனும், மிக்கு - நிறையப் பெற்று, விளங்குக - மிளிர்வதாக', என்று இயம்புக என்றான் - என்று வரம் தருக எனவேண்டினான்; புரியும் மாதவனும் - (செய்ய வேண்டுவனவான) தவத்தைப் புரியும் அந்தத் தவச் சிரேட்டனும், 'அஃதே ஆக என - அவ்வாறே ஆகட்டும்', என - என்று, புகன்றிட்டான் - சொன்னான். ஆல் : அசை.

சொரி தரு : தரு துணைவினை; பருவம் போன்று - பருவத்தில் விளங்குதல் போன்று. விளங்குக - ஆகுக என்பனவற்றில் அகர ஈறு கெட்டது, முன்னரும் இராமபிரான் குரங்குகளின் சார்பாகச் செய்த வேண்டுகோளும், தேவர்கள் அருளியதும் (யுத்த. 4027, 4028)-ல் காண்க. இவ்வேண்டுகோளிலிருந்து இராமபிரான் சர்வ சீவ தயாபர மூர்த்தி என்பது விளங்கும்.

பி - ம். 2. போலக்; கனியுந்துன்னி.
3. விளக்கென விளம்புகென்றான்.



பரத்துவாச முனிவன் எல்லோர்க்கும் விருந்தளித்தல்

4086. அருந்தவ னைய நின்னே
　　டனிகவெஞ் சேனைக் கெல்லாம்
விருந்தினி தமைப்பெ னென்னு
　　விளங்குமுத் தீயி னுப்பண்
புரிந்தொரா குதியை யீந்து
　　புறப்படு மளவிற் போகம்
திருந்திய வான நாடு
　　சேரவந் திறுத்த தன்றே.

அருந்தவன் - அரிய தவ முனிவன், (இராமபிரானைப் பார்த்து) ஐய-தலைவனே ! நின்னெடு அனிகம் - உனக்கும், அணிவகுப்புடன் கூடிய (உன்னுடைய), வெம் சேனைக்கு எல்லாம் - விரும்பத்தக்க எல்லாச் சேனைகட்கும், இனிது விருந்து அமைப்பென் - இனிதாக விருந்து அளிப்பேன்' என்ற - என்று சொல்லி, விளங்கும் அ தீயின் நாப்பண் - ஒளிர்கின்ற ஓமத்தீயின் நடுவில், ஓர் ஆகுதியை புரிந்து - ஓர் ஆகுதியை (தனக்குப் பிரியமான தேவதையைக் குறித்துச்) செய்து முடித்து, புறப்படும் அளவில் - வெளி வரும்போது, போகம் திருந்திய வானநாடு - போகத்தால் நன்கு விளக்கமுற்ற தேவருலகம், சேர வந்து இறுத்தது - அங்கே அண்மையில் வந்து தங்கிற்று. அன்று ஏ; அசை.

அனிகம் - அணிவகுப்பு. தீ - முத்தீ; ஆகவனீயம் காருகபத்தியம் தென்றிசைத்தீ. ஆகுதி - நெய் முதலியவற்றைச் சுருவை கொண்டு அக்கினியிற் பெய்தல். சேர ; உடன் சேர.

அதிகப்பாடல் :—

அன்றவர் தம்மை நோக்கி யந்தமா தவனு மிந்த
வென்றியந் தானைக் கெல்லாம் விருர்தொடு சயன மற்றும்
குன்றினி லருளு மென்று கூறலும் வான நாட்டுள்
ஒன்றிய வரம்பை மாதர் அமுதெடுத் தொருங்கு வந்தார்.

## அப்பொழுது இராமபிரான் அநுமனை நோக்கி ஒன்று கூறத் தொடங்குதல்

4087. அரசரே யாதி யாக
வடியவ ரந்த மாகக்
கரைசெய லரிய போகந்
துய்க்குமா கண்டி ராமற்
கரசியல் வழாமை நோக்கி
யறுசுவை யமைக்கும் வேலை
விரைசெறி கமலக் கண்ண
னநுமனை விளித்துச் சொன்னன்.

அரசரே ஆதியாக அடியவர் அந்தம் ஆக - சுக்கிரீவ மன்னன் முதலாக அடித்தொழில் புரிவோர் வரையிலும், கரை செயல் அரிய போகம் துய்க்குமா கண்டு - (தான் செய்த விருந்தினால்) அளவிடற்கரிய இன்பத்தைத் துய்ப்பதை நோக்கி (ப்பரத்து வாசன்), இராமற்கு - இராமபிரானுக்கு, அரசியல் வழாமை நோக்கி - அரசு முறைமை கெடாதபடி பார்த்து, அறுசுவை அமைக்கும் வேலை - அறுவகைச் சுவையுடன் கூடிய உண்டிகளை அமைக்கும்கால், விரை செறி - மணம் பொருந்திய, கமலம் கண்ணன் - தாமரை மலர்போன்ற கண்களையுடையவனான இராமபிரான், அநுமனை விளித்து சொன்னான் - அநுமனை அழைத்து பகர்ந்தான்; அதனை அடுத்த கவியிற் காண்க.

துய்க்குமாறு என்பது ஈறு குறைந்தது. கண்டிராமற்கு: குற்றியலிகரம். அறுசுவை - கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு; 'அறுசுவை யுண்டி யமர்ந்தில்லாள் ஊட்டி' (நாலடி. 1); விரை செறி: 'விரை செறி குழலினர்' (யுத்த. 4064); அரசரே - என்றது சுக்கிரீவ மன்னன் அரக்கர் கோமான் என்ற இருவரையும் குறிக்கும்.

பி - ம். ௪. சொல்வான். 184

வேறு

## இராமபிரான் அநுமனைப் பரதனிடம் அனுப்ப, அவனும் கணையாழி ஏற்றுச் செல்லுதல்

4088 இன்று நாம்பதி வருதுமுன்
மாருதி யிண்டச்
சென்று தீதின்மை செப்பியத்
தீயவித் தினையோன்
நின்ற நீர்மையு நினைவுநீ
தேர்ந்தெம்மி னேர்தல்
நன்றெ னுவவன் மோதிரங்
கைகொடு நடந்தான்.

'மாருதி - அநுமான்! நீ - நீ, நாம் பதிவருதும் முன் - நாம் அயோத்தி நகர்க்கு வருவதன் முன்னரே, இன்று - இப்பொழுதே, ஈண்ட சென்று - விரைந்து போய், (நந்திக் கிராமத்தின்கண் உள்ள பரதாழ்வானுக்கு), தீதின்மை செப்பி - எனது நலத்தைப் பகர்ந்து அதீ அவித்து - (அவன் புகுதற்காக மூட்டப்பட்ட) தீயை அணைத்து, இளையோன் - (எனது தம்பியாகிய) அப்பரதன், நின்ற நீர்மையும் - மேற்கொண்டு நின்ற தன்மையையும், நினைவும் - அவன் மனத்தெண்ணத்தையும், தேர்ந்து - ஆராய்ந்தறிந்து, எம்மின் நேர்தல் - எம்பால் வந்து அடைதல், நன்று - நல்லது', எனு - என்று கூறி, (தன்கை மோதிரத்தைத் தர) அவன் - அந்த மாருதி, மோதிரம் கைகொடு நடந்தான் - மோதிரத்தைக் கையில் ஏற்றுக்கொண்டு சென்றான்.

நலமுண்மை செப்பி யென்னாது தீதின்மை செப்பி என்றது பொதுவாக நலம் கூறுவது மரபு 'அதிலும் சிறப்பாகத் தீதின்மையே செப்ப வேண்டினான் என்க. சூர்ப்பணகை இராமபிரானைக் கண்ணுற்றபோது 'நல்வரவாகுக' என்னாது 'தீதில் வரவாக திருநின் வரவு' (ஆரணிய. 257); என்றதும், 'நன்றுடையானைத் தீயதில்லானை' (தேவா. 367 : 1); என்றதும் இங்குக் காணத்தகும். எல்லா நலன்களும் இருப்பினும், முக்குணவசத்தான் முறை பிறழ்வதும் உண்டாகலின் அங்ஙனம் கூறப்பட்டதென்க. அத்தீயவித்து; திருவடி நிலையைப் பெற்றுப் பரதன் விடைபெறும் கால் 'ஆமெனி லேழிரண் டாண் டிலையநீ, நாமநீர் நெடு நகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரிச், சாமிது சரதம் நின்னாணை' (அயோத்தி. கிளைகண்டு. 133); என்று சூளுரைத்ததை இராமபிரான் அறிவன் ஆதலின் இங்ஙனம் கூறினான் என்க. அத்தீ - அவன் புகுவதாகக்கூறிய அந்தத் தீ.

பி-ம். 1. நம் ; போகலம், ஏகலம், ஏகுமுன் ; ஈண்டிச், இன்று அன்னே.

2. நம் வரவுபடைத்து வெம ; நீயையுந்நிர்த்து, நீமையும் விலக்கி.

3. காலையின் வருது மென்றேயின னெடியோனும்.

4. ஆழியும்.

ஒரு பிரதியில் பாத்துவாசப் படலம் இதனுடன் முடிய, மேல் பரதனுயிர்வருபடலம் தொடங்குகிறது. அந்தப் பிரதியில் குகனைப்பற்றிப் பின்னர்க் காட்டப்பெறும் செய்யுட்கள் இல்லை. சில பிரதிகளில் குகன் விரதப் படலம் என்று காண்கின்றது.

இந்த இராமபிரான் கட்டளைக்கேற்பவே மாருதி. 'ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்' என்றும், 'கையினு லெரியைக் கரியாக்கினுன்' (யுத்த. 4126) எனறும் வருதல் காண்க.

இளையோன நினைவு: அரசாட்சியில் வல்லவனுகலின் இராமபிரான் பரதன் நினைவினை ஆயுமாறு கூறுகின்றுன். நினைவு: தானே அரசாள்வது, இராமன் அரசு புரிவது, இராமன நாட்டிற்கு வராமலே காட்டிடைத் தங்குவது, என்க. சருவோத்தமனை பரதனிடம் இராமபிரான் வந்து ஆட்சிப் பொறுப்பினை ஏற்பதன்றி ஏனைய நினைவுகளும் நிகழுமோ என்பார்க்கு; 'அற நிரம்பிய மனத்திடை யந்தணர்க்கேனும், பெறலரும்புவி பெற்றபின் சிந்தனை பிறிதாம்' (அயோத்தி. மந்திரை. 70); என்பது நினைவு கூரத்தகும் பாடல். பரதனுக்கு அநுமனிடம் நம்பிக்கையெழுமாறு மோதிரம் கைக்கொடு நடந்தான்; அநுமன் எவ்வளவோ கூறியும் அமைதியுருது அவன்பால் சங்கைகொண்ட பிராட்டி, அவன் இராமபிரான் கணையாழியைக் காட்டிய அளவில் மனம் தேறியது காண்க. 'ஐயுற லுறு தடையாள மாரியன், மெய்யுற உணர்த்திய உரையும் வேறுள.' (சுந்தர. 513). என்றது காண்க. 196

4089. தந்தை வேகமுந் தனதுநா யகன்தனிச் சிலையின்
முந்து சாயகக் கடுமையும் பிற்பட முடுகிச்
சிந்தை பின்வரச் செல்பவன் குகற்குமச் சேயோன்
வந்த வாசகங் கூறிமேல் வான்வழிப் போனுன்.

தந்தை வேகமும் - தனது தந்தையாகிய காற்றின் விசையும், தனது நாயகன் தனி சிலையின் - தனது தலைவனுன இராமபிரானுடைய ஒப்பற்ற வில்லிலிருந்து, முந்து சாயகம் கடுமையும் - முற்படும் அம்பினுடைய விரைவும், பின்பட - பின்னிடுமாறு, முடுகி - விரைந்து, சிந்தை பின் வர செல்பவன் - (தனது) மனமும் பின்னிடுமாறு செல்பவனுன மாருதி, குகற்கும் - (இடை வழியில் சிருங்கபேரநகர்க்கணிருந்த) குகப்பிரானுக்கும், அ சேயோன் - அந்த இராம

பிரான், வந்த வாசகம் கூறி - மீண்டு வந்த செய்தியைச் சொல்லி விட்டு, மேல் - பின்னர், வான் வழி போனான் - ஆகாய வழியிலே சென்றான்.

கதாபாத்திரங்களின் சொற் செயல்களை உவமை கூறுவது கம்பநாடர் பெருவழக்கு. அங்கதன் விரைந்து சென்றமைக்கு, 'வீரன் வெஞ்சிலையிற் கோத்த வம்பென விசையிற் போனான்' (யுத்த. 925)ம் அதன் உரையும் காண்க. சிந்தை பின்வர : 'மனத் திறகும் கடியனானான' (யுத்த 2684); 'முடிவு காலத், தழிவுறக் கடுகும் வேகத் தாதையு மனையனானான்' (சுந்தர. 29); அநுமன் பறந்த வேகமும், செல்லும் வழியில் நில்லாமலே குகற்குச் செய்தி சொல்லியதும சிறந்த வகையில் கூறப் பெற்றமை காண்க. அநுமன் வேகத்துக்கு இராம பாணம்.

பி-ம். 3. செய்வன்.

4. கூறவும், கூறென, கூறியே ; சென்றான். 197

இங்கு 203 - 4க்கு இடையில் பன்னிரண்டு அதிகப் பாடல்கள் :—

1. மாருதி விடை கொண்டேக வரதனும் மறையோன் பாதம்
ஆரரு ளோடு நீட வணங்கின னவனு மாகி
சீரிது கூறிச்சேறி யென்றலும் மானம் சேர்ந்து
போரியல் தானையோடும் பொருக்கென வெழுந்து போனான்.

வேறு

2. மானேர் விழியா ளுடனே வனமுன்
போனா னொருநாள் வருநா ளிலதோ
தேனே யமுதே தெளிவே தெளிவின்
ஊனே யுயிரே யுலகா ளுடையாய்.

வேறு

3. அம்பவளச் செவ்வா யணிகடகச் சேவகனை
வம்பவிழும் சோலைக் கோசலநா டுடைவள்ளல்
எம்பெருமா னென்னை யிழிகுலத்து நாயேனைத்
தம்பியென வுரைத்த தாசரதி தோன்றானே.

4. வாழி மலைத் திண்டோள் சலகன் தன் மாமயிலை
யேழுலகு மாளும் இறைவன் மருமகளைத்
தாழ்வில் பெருங் குணத்தான் தானுன் கொழுந்திநீ
தோழ னெனவுரைத்த தோன்றலார் தோன்றுரோ.

வேறு

5. துங்க விற்கரத் தோழனுர் சொன்னநாள்
இங்கு வந்திலர் யானிறப் பேனென்று
மங்கை மாரும்படையும் வன் சுற்றமும்
அங்கு நீர்க்கங்கை யம்பியி லேற்றினன்.

வேறு

6. வேத நாதனும் வில்லியும் விரைமலர்த் திருவும்
ஏது செய்யினும் என்னுயிர் முடிப்பெனென் றெண்ணி
ஓது நீரிடை யோட மதுடைத் துயிர் விடுவான்
காதலாருடன் கங்கையி னடுவுறச் சென்றான்.

வேறு

7. கண்ணுந் தோளும் வலந்துடிக் குங்கரை
வண்ணம் புள்ளும் வலியும் வலத்திலே
எண்ணுங் காலையி லேயெழில் மாருதி
அண்ணல் வந்தனன் என்றுரை யாடினன்.

8. உள்ள வான்கிளை யேற்றியுயர் குகன்
வெள்ளக் கங்கையின் ஆக்கி விரைந்தவள்
உள்ளும் நெற்றி யுடைப்பள விற்புகும்
வள்ளலார் விடும் மாருதி தோன்றினன்.

9. ஓங்கு வாலினை யோட்டி யவ் வோடங்கள்
தீங்குறுவகை சுற்றித் குறுகிநீர்
ஆங்கு நின்றங் கவைவலித் தாவை
நீங்கி லாவகை தென்கரை சேர்ந்தவால்.

வேறு

10. கையார் வெஞ்சி லைக்காகுத் காதலுடைத் தோழ
மையார் சிருங்க வேரபுரம் உடையாய் மிருகோ சலைகளிறு
மையார் நிறத்தான் வந்தொழிந்தான் மிதிலைவல்லி
[யவளுடனே
ஐயா வந்தான் தம்பியொடும் அடியேம் உய்ய வந்தானே.

வேறு

11. ஆர்உணை யுரையென வநுமன் கூறுவான்
சீரிய வாயுவின் தோன்றல் சீரியோய்
சூடுடை யிரா மற்குத் தூத னென்றுரை
தேருடைத் தலையின் மீதெழுப் பட்டுளேன்.

12. பரதனைத் தீயையும் விலக்கிப் பாருடை
வரதனை யிராமனை மாறிக் காண்பது
சரதமே யினியிறை தாழ்க் கொணுதெனுக்
கரதலத் தாழியுங் காட்டிப் போயினன்.

வேறு

4090. இன்றி சைக்கிட மாய விராகவன்
தென்றி சைக்கரு மச்செயல் செப்பினும்
அன்றி சைக்கு மரிய வயோத்தியில்
நின்றி சைத்துள தன்மை நிகழ்த்துவாம்.

இன்று இசைக்கு இடம் ஆய இராகவன் - இதுகாறும் புகழுக்கு இருப்பிடமான இராமபிரான், தென் திசை கருமம் செயல் செப்பினும் - தெற்குத் திசையில் ஆற்றிய செயல்களைப் பார்த்தோம்; (இனி மாருதி சென்ற) அன்று - அப்பொழுது, இசைக்கும் - (யாவராலும்) புகழப்படுகின்ற, அரிய - (பகைவரால் நெருங்குதற்கு) அருமையான, அயோத்தியில் - அயோத்தி மாநகரத்தில், நின்று இசைத்து உள தன்மை நிகழ்த்துவாம் - பொருந்தி நடைபெற்ற வரலாற்றைக் கூறுவாம்.

புராண முறையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் இவை; இனி, அயோத்தியின் அருகில் உள்ளதும் பரதாழ்வான் அமர்ந்து இராமபிரான் திருவடி நிலைகொண்டு அரசு புரிந்ததுமான நந்திக் கிராம நிகழ்ச்சிகளைக் கூறுவோம் எனப்பட்டது. நிகழ்ச்சிகள் நந்திக் கிராமத்தில் நடைபெற்றனவாயினும், மிதிலை நகர்க்கும் அவ்வூர்க்கும் உள்ள மிக நெருக்கம் பற்றி, அயோத்தி நிகழ்ச்சி களாகவே மொழிந்தார். இசைக்கிடமாய இராகவன்: 'பேரிசை யாளர்க் கழிவுண்டேல், பொன்ருமுன்னம் பொன்றுதி யென்ருள்' (ஆரணிய. 1160); இசைக்கும் அயோத்தி, அரிய அயோத்தி என்று தனித்தனிக் கூட்டுக. இசைக்கும் அறிஞரால் புகழப் படுகின்ற; 'ஏமாங் கதமென் றிசையாற் றிசை போயதுண்டே' (சீவக. 31); 'செங்கோற் றென்னவர் காக்கு நாடென, எங்கணும் போகிய விசையோ பெரிதே' (சிலப் 13, 9, 10); (ஒப்பு): 'கொழுந் தோடிப் படர்கீர்த்திக் கோவேந்தன்' (பால. திருவவ 59); இனி அயோத்தி என்பதற்கே பகைவர்களால் படையெடுக்கப்படாதது என்ற பொருள் உண்டாகலின், இசைக்கு அரிய என்றே கொண்டு புகழ்ச்சிக்கு அடங்காத எனினுமாம். நான்காம் அடியில் இசைந் துள என்பது வலித்ததாகக் கோடலுமாம். இசைதல் - பொருந்துதல்.

பி - ம். 1. இடன்.

2. கருமந்தையும்.

3. இன்றிசைக்கு; இனிய; அயோத்தியுள்.

4. இசை நின்ற. 198

இங்கு பரதன் விரதப் படலம் என்று ஓர் பிரதியில் காண் கின்றது.

## பரதனது நிலைமையைக் கூறல்

4091. நந்தி யம்பதி யின்றலை நாள்தொறும்
சந்தி யின்றி நிரந்தரத் தம்முனர்
பந்தி யங்கழற் பாத மருச்சியா
இந்தி யங்களை வென்றிருந் தானரோ

அம் - அழகிய, நந்தி பதியின் தலை - நந்திக் கிராமத்தில், நாள் தொறும் - ஒவ்வொரு நாளும், சந்தி இன்றி - காலை நண்பகல் மாலை என்ற மூன்று சந்தியா காலங்களையே (பூசைக்குரிய பொழுதாகக் கொள்ளுதலை) இன்றி, நிரந்தரம் - எப்பொழுதும், தமமுனர் - தமது அண்ணனை இராமபிரானுடைய, பந்தி அம் கழல் - பத்தியோடு வழிபடற்குரிய அழகிய வீரக்கழல் புனைந்த, பாதம் - திருவடிகளை, (பாதுகையை) அருச்சியா - வழிபட்டு, இந்தியங்களை வென்றிருந்தான் - (தனது) ஐம்பொறிகளையும் அடக்கித் தன்வயமாக்கியிருந்தான். அரோ : ஈற்றசை.

தலை - ஏழாம் வேற்றுமை உருபு. இனி தலை நந்தி யம்பதி எனக்கொண்டு, தாற்காலிகமாகத் தலைநகரமாகிய நந்திக் கிராமம் எனினுமாம். இராமனிருக்கும் இடம் அயோத்தி என்ற வழக்குக் காண்க. 'ஆகாததன் றுலுனக்கவ்வனம் இவ்வயோத்தி' (அயோத்தி., நகர்நீ. 150); என்று சுமித்திராதேவி கூறியதும் இங்குக் காணத் தகும். சந்தி - இரு சந்தி எனக் கோடலுமாம். காலை சந்தி மாலை சந்தி என்று கூறுவது பெருவழக்கு. 'அகஸ்ச ராத்திரஸ்ச உபேச்ச சந்தியைஹி' என்றல் காண்க. இனி காலை, உச்சி, மாலை எனப்படும் நாட் பிரிவுகளைச் சந்தி என்பர்; (தமிழ் லெக்சிகன்). நிரந்தரம் - வடசொல்; 'நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்' (சுந்தர. 335); பந்தி என்பதை வரிசை, ஒழுங்கு என்றும் கூறுவர். ஆயினும் பத்தி என்பது எதுகை நோக்கி பந்தி என மெலிந்ததாகக் கொண்டு பொருளுரைக்கப் பெற்றது. புத்தி-புந்தி என்றது போல என்க. பாதம் - திருவடி நிலை; இதன் பெருமையை நிகமாந்த தேசிகர் இயற்றி யருளியுள்ள. 'பாதுகாசகச்ரம்' என்ற நூலிற் காண்க. அருச்சியா - செய்யா என்னும் வாய்பாடு. இந்திரியம் என்ற வடசொல்; இந்தியம் எனத் திரிந்தது. 'இந்தியம் அடக்கி நின்ற மாரீசன்' (ஆரணிய. 723); 'இந்தியம் பகையாயவை யைந்து மொத்திசைந்தார்' (சுந்தர. 879); இவ் விந்தியங்கள் கன்மேந்திரியம் ஐந்து என்றும் ஞானேந்திரியம் ஐந்து என்றும் பகர்வர். இங்கு, 'நந்தியம் பதியிடை நாதன் பாதுகஞ், செந்தனிக்கோன்முறை செலுத்தச் சிந்தையான், இந்தியங்களை யவித் திருத்தல் மேயினன்,

அந்தியும் பகலுநீரரு த கண்ணினன்' (அயோத்தி. கிளைகண். 140) காணத்தகும்.

பி - ம். 1. நந்தியின் ; நாளெலாம், நான்வரும்.

3. அந்தி ; பாதமதர்ச்சியா. 199

4092. துன்பு ருக்கவுஞ் சுற்றி யுருக்கொணு
என்பு ருக்குந் தகைமைய தீட்டதாய்
முன்பு ருக்கொண் டொருவழி முற்றுரு
அன்பு ருக்கொண்ட தாமென லாகுவான்.

(இராமனைப் பிரிதலால் தோன்றிய) துன்பு - மனத்துயராகிய தீயானது, சுற்றி உருக்கவும் - சுற்றி வெம்மை விளைத்தலால், உருக்க ஒணு -(வேறு எவ்விதத்திலும்) உருக்க வியலாததான, என்பு உருக்கும் தகைமையது இட்டதாய்-எலும்பும் உருக்கப்படும் தன்மை அமைந்ததாக, முன்பு - முன்னர், ஒரு வழி - ஓரிடத்தும், (ஒரு காலத்திலும்), உரு கொண்டு முற்றுரு -வடிவு கொண்டு நிறைவு பெருத, அன்பு உரு கொண்டது ஆம் எனல் ஆகுவான் - அன்பென்னும் பண்புதானே ஒரு வடிவு கொண்டதாம் என்று கூறும்படி இருந்தான்.

துன்பு உருக்கவும் - உருக்கவும் என்ற சொற் கொண்டு தீ என்பது வருவிக்கப்பட்டது. உருக்க ஒணு என்பதில் அகர ஈறு தொக்கது. அன்பு உருக் கொள்ளுதல் - பண்பினைப் பண்பியாகவே கொண்டு கூறுவது கவிமரபு. 'அவனுடைய வடிவெல்லாம் நம்பக்க லன்பு' (பெரியபு. கண்ணப். 157) என்றமை காண்க. 'விற்பெருந் தடந்தோள வீர' (சுந்தர. 1273) என்ற செய்யுளும் இங்கு நோக்கத்தகும். 'பிரிவெ னுந்துய ருருவு கொண் டாலன்ன பிணியாள' (சுந்தர. 336); 'உண்டென வுரையிற் கேட்பா ருயிருறு பாவ மெல்லாம், கண்டினித் தெளிக வென்று காட்டுவாள்போல வாகி... ......தமியளானுள்' (சீவக. 503) என்ற பகுதிகளும் காண்க. எவ்வகையாலும் உருகாத என்பு இராம பிரானைப் பிரிந்ததாலான சோகத்தால் உருகும்படி யாயிற்று என்க. பண்பு உருவேற்பதில்லை: அதுவும் உருக்கொண்டாற் போன்று காணப்பட்டான் பரதன் என்பது பின் அடிகளின் கருத்து. இங்கு, 'குடத்துள் விளக்கும், தடற்றுள் வாளும்போல்' (இறையனூர். சூத். 1-உரை) எனத் தொடங்கும் அன்பின் விளக்கம்

நோக்கத்தகும். முன்னர் (யுத்த. 4079)ல் 'துன்பமே யுருவு கொண் டென்னலாம் படியான்' என்றமையும் காண்க.

ப - ம். 1. சுற்ற முருக்கவும், சுற்றமுருக்கொணு, துற்றி யுருக்கொணு.
2. தன்மையி னீட்டதாய், தகைமையி னீட்டத்தான், தகைமையி னீட்டத்தாய்.
3. முற்றுற, முற்றற
4. ஆயினுன். 200

4093. நினைக்க வுந்தடங் கண்ணிணை நீர்வர
இனத்த தண்டலை நாட்டிருந் தேயுமக்
கனத்த கந்தமுங் காயுங் கனிகளும்
வனத்த வல்ல வருந்தலில் வாழ்க்கையான்.

நினைக்கவும் - (இராமபிரான் வனம் புக்கதை) நினைந்த அளவிலே, தட கண் இணை நீர்வர - அகன்ற தனது இரு கண்ணி லும் நீர் பெருக, இனத்த தண் தலை நாட்டு இருந்தேயும் - தருத் தொகுதிகள் மிக்கிருந்த சோலைகளையுடைய நாட்டின் கண் (தான்) இருந்தும், அ கனத்த கந்தமும் காயும் கனிகளும் - அந்த உருவாற் பருத்த கிழங்கும் காய்களும் பழங்களும் ஆகிய, வனத்த அல்ல - காட்டில் உள்ளன அல்லாதவற்றை(நாட்டில் உள்ள பொருள்களை), அருந்தல் இல் வாழ்க்கையான் - (உண்ணுத) உயிர் வாழ்வினை யுடையவன்.

இனத்த: பல்வேறு சாதி மரங்களைக் கொண்ட. தண்டலை - சோலைக்குப் பண்பு தொகைப் பிறந்த அன்மொழி. தண்டலை - குளிர்ந்த இடம் எனவே சோலை. 'தண்டலை மயில்களாட' (பால. நாட்டு. 4); மூன்று நான்காமடிகள் முற்று மோனை. வாழ்க்கை - கைவிகுதி பெற்ற தொழிற் பெயர். 'ஒரு பகல் வாழ்க்கைக் குல மருவோரே' (புறநா. 51).

பி - ம். 1. நினைந்த, நினைத்த ; தருங்கற்பக நேர்வரும், தடங் கண்ணினை நீரவாய்.
2. நனைந்த, நனைத்த.
3. கனித்த, கனியுமவ்.
4. வனைந்த ; அல்லது 201

4094. நோக்கிற் றென்றிசை யல்லது நோக்குருன்
ஏக்குற் றேக்குற் றிரவி குலத்துளான்
வாக்கிற் பொய்யான் வரும்வரு மென்றுயிர்
போக்கிப் போக்கி யுழக்கும் பொருமலான்.

நோக்கில் தென் திசை அல்லது நோக்குருன்-கண் உயர்த்துப் பார்ப்பதெனின் (தன் தமையன் வரக்கூடிய) தெற்குத் திக்கை யன்றி, (பிறிதொரு திக்கையும்) நோக்குருன் - பாராதவனுய், ஏக்குற்று ஏக்குற்று - ஏங்கியேங்கி, ' இரவி குலத்துளான் - சூரிய குல வழித்தோன்றலாகிய இராமபிரான், வாக்கில் பொய்யான் - வாயினுல் பொய் வழங்கானுகலின், வரும்வரும் - நிச்சயமாக வந்தே தீருவான்', என்று - என்று எண்ணி, உயிர் போக்கி போக்கி உழக்கும் பொருமலான் - மிகுதியாகப் பெருமூச்செறிந்து வருந்துகின்ற புலம்புதலை யுடையவன்.

நோக்கில் தென்திசை; ' அயிர்த்து நோக்கினுந் தென்றிசை யன்றி வேறறியான் ' (யுத்த. 4080); ' பரிதிவானவன் குலத்தையும் பழியையும் பாரா, சுருதிநாயகன் வரும் வரு மென்பதோர் துணிவாற், கருதி மாதிர மனைத்தையும் அளக்கின்ற கண்ணுள்' (சுந்தர. 338); ஏக்குறுதல் - ஏக்கமுறுதல். இரவி குலத்துளான் வாக்கிற் பொய்யான்; வாய்மைக்குச் சூரியனைக் கூறுதல் மரபு; ' ஞாயிறன்ன வாய்மை'

பி - ம். 1. நோக்குரு.

4. அழைக்கும், உழைக்கும், இழைக்கும்.



இச் செய்யுள் சில பிரதிகளில் ' உண்ணு நீர்க்கு ' என்றதன் பின் உள்ளது.

4095. உண்ணு நீர்க்கு முயிர்க்கு முயிரவன்
எண்ணுங் கீர்த்தி யிராமன் திருமுடி
மண்ணு நீர்க்கு வரம்புகண் டாலன்றிக்
கண்ணி நீர்க்கொர் கரையெங்குங் காண்கிலான்.

உண்ணும் நீர்க்கும் - பருகுகின்ற தண்ணீர்க்கும், உயிர்க்கும் - பிராணிகட்கும், உயிரவன் - உயிர் போன்றவனை, எண்ணும்

கீர்த்தி - யாராலும் நன்கு மதிக்கப்படுகின்ற புகழ்பெற்ற, இராமன் - இராமபிரானுடைய, (முடிசூட்டு விழாவில்), திருமுடி - அழகிய மகுடத்தை, மண்ணும் நீர்க்கு - தலக்கித் தூய்மை செய்யும் போது வீழும் புனலுக்கு, வரம்பு கண்டால் அன்றி - ஓர் எல்லையைக் கண்டாலல்லாமல், கண்ணின் நீர்க்கு ஓர் கரை எங்கும் காண்கிலான் - (தன்) விழிகளினின்று பெருக்கெடுக்கும் நீர்க்கு ஒரு முடிவை எப்பொழுதும் காணப்பெறாதவனும்.

இராமபிரானுக்குத் திருமுடி சூட்டிக் கண்டாலன்றிப் பரதனுக்குத் துயரம் நீங்காது என்பதைச் சமத்காரமாகக் கூறினர் கம்ப நாடர். நிலம் முதலிய பூதங்கள் அனைத்துமே உலகில் மக்கள் உணவிற்கும் வாழ்விற்கும் காரணமாதலின், 'உண்ணு நீர்க்கும் உயிர்க்கும் உயிரவன்' எனப்பட்டது. 'ஆகாசாத்' வாயு என்று தொடங்கும் உபநிடதத்து, பிருதிவீம் ஓஷதிஸ்சா என்றது காண்க. 'உண்ணும் சோறும் பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ண னெம்பெருமான்' (திருவாய். 6, 7, 1); என்றதும் இக் கருத்துப் பற்றியே என்க. 'வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி ஊனாகி யுயிராகி யுள்ளதுமா யில்லதுமாய்' (திருவாச: திருச்சதகம். 15) என்றதும் காண்க மண்ணு நீர்; 'வார்மணிப் புனலான் மண்ணை மண்ணு நீராட்டுங் கண்ணன்' (அயோத்தி. குகப். 39); 'மண்ணக மடந்தையை மண்ணு மங்கலம்' 'எண்ணருஞ் சீர்த்தி யிறைவனெய்தி, மண்ணுமங்கல மலிவுரைத் தன்று' (பு. வெ. மா. பாடாண். 36).

பா - ம். 1. உயிரதாய், உயிர்தர, உயர வைத்து, உயர்வதே.

2. திருளடி.

3. வரம்பு முண்டாலன்றிக், வரம்பு முண்டாமென்பரன்.

4. நீர்க்கும், நீர்க்குக்; கரையொன்றும்.



'இராமன் வரவேண்டியது எந்நாள்?' என்று கேட்க அவர்கள் 'வரவேண்டிய நாள் இன்றுதான்' எனல்

4096. அனைய னைய பரத னலங்கலிற்
புனையுந் தம்முனர் பாதுகைப் பூசனை
நினையுங் காலை நினைத்தன னமரோ
மனையின் வந்தவ னெய்த மதித்தநாள்.

அனையன் ஆய - அப்படிப்பட்ட தன்மை யுடையவனான, பரதன் - பரதன், அலங்கலில் - பூமாலையினால், [1] புனையும் - அலங்காரம் செய்யப் பெற்ற, தம்முனார் - அண்ணனது, பாதுகை பூசனை - மரவடிகளின் பூசை புரிய, நினையும் காலை - கருதிய போழ்தில், அவன் - அந்த இராமபிரான், மனையின் வந்து எய்த - (தனது) அரண்மனைக்குத் திரும்பி வந்து சேர்தற்கு, மதித்த நாள் - எண்ணிக் குறித்த நாளைப் பற்றி, நினைத்தனன் - எண்ணினான். ஆம்: அரோ - அசை.

'அனையன் ஆய' என்ற தொடர் மேலே 4091-முதல், 4095 வரைக் கூறப்பெற்ற தன்மையையுடையவன் ஆன என்பது ஆம். அலங்கல் - இராமபிரான் இராவணாதிகளை ஒழித்துப் புனைந்த வாகை மாலை. 'நீடிய வரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை, சூடிய சிலையிராமன்' (பால. பாயி.) என்றது காண்க. தம்முன்; தமையன்; 'அரசனு வாத்தியான் தாய்தந்தை தம்முன்' (ஆசாரக். 16); 'தம்முனைப் பிரிந்தது தரும நீதியோ' (யுத்த. 365); 'தகையுறு தந்தையைத் தாயைத் தம்முனை' (யுத்த. 366); பாதுகை - திருவடி நிலை. அவன் மனையின் வந்து எய்த என மாற்றுக.

பி - ம். 1. முன்னவன் பாதுகை; பாதுக பூசனை.
3. நினையுங் காலம்; நினைந்தனன். 204

4097. யாண்டு வந்திங் கிருக்குமென் றெண்ணினன்
மாண்ட சோதிட வாய்மைப் புலவரை
ஈண்டுக் கூய்த்தரு கென்னவந் தெய்தினர்
ஆண்ட கைக்கின் றறுதியென் றுரரோ.

'(இராமபிரான்) யாண்டு - எப்பொழுது, இங்கு வந்து இருக்கும் - இங்கே வந்து தங்குவான்?' என்று எண்ணினன் - என்று நினைந்தவனான பரதாழ்வான், (தனது ஏவன்மாக்களைப் பார்த்து), 'மாண்ட - மாட்சிமைப்பட்ட, சோதிடம் வாய்மை புலவரை - சோதிடத்தில் திறமை பெற்ற வாக்குநலம் உள்ள புலவர்களை, ஈண்டு - இங்கே, கூய் தருக - அழைத்துக்கொண்டு வாருங்கள்' என்ன - என்று கட்டளையிட, (அச்சோதிடர்கள்) வந்து எய்தினர் - வந்து சேர்ந்து, 'ஆண்டகைக்கு இன்று அறுதி - ஆண்மை மிக்கோனான இராமபிரானுக்கு இன்றைத்தினம் (ஏழிரண்டாண்டு

முடியும் காலம்', என்றார் - என்று மொழிந்தார்கள். அரோ : அசை.

'மாண்ட - மாட்சிமைப்பட்ட ; 'மாண்டவென் மனைவியொடு மக்களும் நிரம்பினர்' (புறநா. 191); வாய்மை - வாயின் தன்மை ; அதாவது பொய் வழங்காமை. மனம் மொழி காயம் என்னும் மூன்றும் தூய்மை யுற்றிருத்தல் வேண்டும் என்றே திருவள்ளுவர் பெருந்தகை, உண்மை வாய்மை மெய்ம்மை என்று மூன்றாகக் கொண்டமை உணர்க. சோதிடரை தெய்வஜ்ஞர் என்பர். இன்றறுதி - இன்றே பதினான்கு ஆண்டுகள் முடியும் நாள்.

பா - ம். 1. ஆண்டு வந்திங்கடுக்கும், ஈண்டுதான் வந்திறுக்கும், யாண்டு மின்றெடுறுதி.

3. என்றனன்.

4. அவதி

205

## சோதிடர் வார்த்தையைக் கேட்டுப் பரதன் மூர்ச்சித்து விழுதல்

4098. என்ற போதத் திராமன் வனத்திடைச்
சென்ற போதத்த தவ்வுரை செல்வத்தை
வென்ற போதத்த வீரனும் வீழ்ந்தனன்
கொன்ற போதத் துயிர்ப்புக் குறைந்துளான்.

என்ற போதத்து - என்று சோதிடர்கள் கூறிய போழ்தில், செல்வத்தை வென்ற போதத்த - (அரசாட்சியான) செல்வத்தை (வேண்டாம் என்று வெறுத்து) பணத்தாசையை வென்ற நல்லறிஞனை, வீரனும்-வீரனை பரதனும், இராமன் வனத்திடை சென்ற போதத்து - (இராமபிரானைத் திரும்பி யழைப்பதற்காகத் தான்) வனம் சென்ற காலையில், (தன்னைப் பார்த்துக்) கூறிய, அவ்வுரை - (இராமபிரானுடைய) அந்த வார்த்தை, (தன்மனத்தில்) கொன்றபோ தத்து - (தன்னை) வருத்தியபோது, உயிர்ப்பு குறைந்துளான் - மூச்சு ஒடுங்கினவனாய், வீழ்ந்தனன் - வீழ்ந்தான்.

நான்கு அடிகளிலும் 'போதத்து' என்பதில் அத்து சாரியை. அவ்வுரை : முன்னர்க் கிளைகண்டு நீங்குபடலத்து ; 'ஆமெ

னிலேழிரண்டாண்டிலேயே, நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலே யென்னிற் கூர் எரிச், சாமிது சரதம் நின்னாணை' என்று பரதன் கூற, 'அன்னதா கென்றான்' (135, 134); என்று இராமன் கூறியது என்க. செல்வத்தை வென்ற வீரன் : பரதன்; இதனைத் 'தாயுரை கொண்டு தாதை யுதவிய தரணி தன்னைத் தீவினை யென்ன நீத்து' (அயோத்தி. குகப். 35); என்ற குகன் கூற்றால் அறிக.

பி-ம். 1. போதில்.
2. போழ் தொத்து, போதொந்தது; உரைச் செல்வனை.
3. ஓதத்து, போழ்தொத்து.
4. உயிருங் குறைந்துளான். 208

## இராமன் வாராமை பற்றிப் பரதன் பலவாறு சிந்தித்தல்

4099. மீட்டெ ழுந்து விரிந்தசெந் தாமரைக்
காட்டை வென்றெழு கண்கலு ழிப்புனல்
ஓட்ட வுள்ள முயிரினை யூசனின்
ருட்ட வும்மவ லத்தழிந் தானரோ.

மீட்டு எழுந்து-(பரதன்) திரும்பவும் (நினைவுபெற்று) எழுந்து, விரிந்த செ தாமரை காட்டை வென்று எழு கண் - மலர்ந்த செந் தாமரைத் தொகுதியை வென்று உயர்ந்த விழிகள், கலுழி புனல் ஓட்ட - கலங்கிய நீரை விரைந்து பொழியவும், உள்ளம் - மனம், (தமையன் வராமை குறித்து ஏக்கம் கொண்டு) நின்று - நின்று, உயிரினை ஊசல் ஆட்ட - உயிரினை ஊசலாட்டவும், அவலத்து அழிந்தான் - துயரத்தால் நிலைகலங்கி நின்றான். அரோ; ஈற்றசை.

ஒருபுறம் இராமபிரான் வாய்மையன் ஆகலின் குறித்த காலத்து வந்தே தீருவன் என்ற உவகையால் கண்களின் மலர்ச்சி, மற்றொருபுறம் வரத்தவறினால் என் செய்வது என்ற ஏக்கம்; இவ்விரண்டின் நடுவே மனம் ஊசலாடிற்று என்க. ஊசல்: 'பெண்மை தன்னை, அள்ளிக் கொண்டகன்ற கானை யல்லன்கொலாங்கொ லென்பாள், உள்ளத்தின் ஊசலாடும் குழை நிழல்' (பால. கோலம். 9); 'ஊசலாட லொழிந்த வுள்ளத்தான்'

(சுந்தர. 428); 'மாசுறு பிறவிபோல வருவது போவதாகி ........ மரகதக் கமுகுபூண்ட, பூசலின் மகளிர் மைந்தர் சிந்தையோடுலவக் கண்டார்' (பால. மிதிலைக். 10). பால: கையடை: 11 ப் காண்க.

பி - ம். 1. விரைச்செழுந்.

2. வென்றதன், வென்றுளிர்.

3. ஆட்ட ; உள்ள ; ஊசிறுன்று.

4. மலர்த்தாள்களருச்சியா ; அவலித்திருந்தான். 207

4100. எனக்கி யம்பிய நாளுமென் னின்னலும்
தனைப்ப யந்தவள் நேயமுந் தாங்கியவ்
வனத்து வைகல்செய் யான்வந் தடுத்ததோர்
வினைக்கொ டுப்பகை யுண்டென விம்மினன்.

'(இராமபிரான்) எனக்கு - என்னிடம், இயம்பிய - (ஏழிரண்டாண்டு கழிந்ததும் வருவதாகச்) சொன்ன, நாளும் - தினத்தையும், என இன்னலும் - (அவன் இது காறும் வாராமையின்) யான் துய்க்கும் துயரையும், தனை பயந்தவள் நேயமும் - தன்னை ஈன்ற அன்னையான கோசலை தேவி (தன்பாற் கொண்டுள்ள) அன்பையும், தாங்கி - பொறுத்துக்கொண்டு, அவ்வனத்து வைகல் செய்யான் - அக்காட்டில் தங்கியிரான்; (இங்கு இந்நேரம் வந்தேயிருப்பான); (அங்ஙனம் அவன் வருதற்குத் தடையாகக் காட்டிடை), வந்து அடுத்தது - வந்து நிகழ்ந்துள்ள (அவனுயிர்க்கு விபத்து விளைக்கக்கூடிய) ஓர் - ஒப்பற்ற, கொடு வினை பகை உண்டு - கொடிய தீவினையின் விளைவாகிய பகை உள்ளது போலும்', என விம்மினன் - என்று மனம் கலங்கினன் (பரதன்).

இராமன் தன் வாக்குப்படி திரும்பி வருதற்கு மேலே கூறிய மூன்று காரணங்களில் யாதேனும் ஒன்றே அமையும். அவ்வாறிருந்தும் வரத் தாழ்த்ததால் எதிர்பாராத ஓர் தீங்கு நேர்ந்திருக்க வேண்டும் என்று எண்ணி மனம் வருந்தினன். இங்கு: இராமபிரானுக்கு மானைத் துரத்திச் சென்ற இடத்து ஏதேனும் ஊறு நேர்ந்ததோ என்று பிராட்டி கவன்று இளைய பெருமாளைச் சென்று அறியும்படிக் கூறிய காலத்து, இலக்குவன் இராமபிரானுடைய பராக்கிரமத்தையும், பிறரால் அவனுக்கு அழிவெய்தற்கில்லாமையையும் கூறிய, 'ஏழுமே: கடலுலகேழு மேழுமே'

(ஆரணிய. 812); எனத்தொடங்கும் செய்யுளையும் அதனை அடுத்துள்ள ஐந்து செய்யுட்களையும் காண்க.

பி-ம். 2. துன்பமும்.

3. அடுந்ததோ.

4. உண்டென்று. 208

4101 மூவ கைத்திரு மூர்த்திய ராயினும்
பூவ கத்தில் விசும்பிற் புறத்தினில்
ஏவர் கிற்ப ரெதிர்நிற்க வென்னுடைச்
சேவ கற்கென வையமுந் தேறினன்

'என்னுடை சேவகற்கு - 'எனது (தமையனான) வீரனுக்கு, எதிர் நிற்க - போரில் எதிர்த்து நிற்க, மூவகை திருமூர்த்தியர் ஆயினும் - மூன்று சிறந்த மூர்த்திகள் ஆனாலும், பூ அகத்தில் - பூமியில், விசும்பில் - ஆகாயத்தில், புறத்தினில் - பிறிதொன்றாகிய பாதாளத்தில், (வதிபவராயினும), ஏவர் கிற்பர் - எவர் வன்மையுடையவராவர்? (எவருமிலர்), என - என்று நினைந்து, ஐயமும் தேறினன் - (முன் கொண்ட) சந்தேகம் நீங்கப் பெற்றான்.

மும்மூர்த்திகள் : படைப்பு, காப்பு, அழிப்பு என்ற மூன்று தொழில்களை யியற்றும் பிரமன், திருமால், உருத்திரன். 'கிற்பர்; கில்; ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. சேவகன் 'வீரன்: என்னுடைச் சேவகன் என்றது அன்பு பற்றி எழுந்த தொடர்'. ஒருவகையாகத் தமையனுடைய பெரும் வீரம் தெரிந்து ஐயம் நீங்கப்பெற்றும், அண்ணன் வாராமையால் இன்னும் மனவுறுதி பெறக்கூடவில்லை.

பி-ம். 3. நிற்பர்; என்னுடைச். 209

4102. என்னை யின்னு மரசிய லிச்சையான்
அன்ன னுசி னவனது கொள்கவென்
றுன்னி னுன்கொ லுறுவது நோக்கினுன்
இன்ன தேநல னென்றிருந் தானரோ.

'(இராமபிரான்) என்னை - என்னைக் குறித்து, அன்னன் - அப் பரதன், (பதினான்கு ஆண்டுகள் ஆட்சி செய்தது போதாமல்), இன்னும் - மேலும், அரசியல் இச்சையான் ஆகில் - அரசு புரிவதில் நிகழ்ந்த ஆசையுடையவன ஆயின், அவன் - அந்தப் பரதன், அது கொள்க - அரசாட்சியை ஏற்பானாக', என்று உன்னினான் கொல் - என்று நினைத்தானோ?' என்று - (என்று வருந்தி) உறுவது நோக்கினான், - செய்ய வேண்டுவதைக் கருதி, இன்னதே நலன் - இச்செயலே (நாம் செய்யத்) தக்கது,' என்று இருந்தான் - என்று துணிந்திருந்தான். அரோ : அசை.

இங்கு மாருதியை நோக்கி 'ஈண்டச், சென்று தீதின்மை செப்பியத் தீயவித் திளையோன், நின்ற நீர்மையு நினைவுந் தேர்ந்து' (யுத்த. 4088); என்று இராமபிரான் கூறிய அடிகளையும் அதற்கு எழுதப்பட்டுள்ள உரைக் குறிப்பையும் காண்க. உறுவது : மேல் நிகழவேண்டுவது ; 'உற்றது கொண்டு மேல்வந் துறுபொருள் உணரும் கோளார்' (அயோத்தி. மந்திர. 7).

பி - ம். 1. இச்சையன்.
2. அன்னதாகில். 210

### பரதன் இறக்கத் துணிந்து சத்துருக்கனை அழைத்துவரச் சொல்லுதல்.

4103. அனைத்தி லங்கொன்று மாயினு மாகுக
வனத்தி ருக்கவிவ் வையம் புகுதுக
நினைத்தி ருந்து துயர முழக்கிலேன்
மனத்து மாசென் னுயிரொடும் வாங்குவேன்.

'வனத்து இருக்க - (இராமபிரான்) காட்டிலேயே இருக்கட்டும் ; (அன்றி) இவ் வையம புகுதுக - இந் நாட்டிற்கு வரட்டும் ; அனைத்தில் - அவற்றுள், அங்கு ஒன்றும் ஆயினும் ஆகுக - யாது நிகழினும் நிகழட்டும் ; நினைத்திருந்து துயரம் உழக்கிலேன் - (இராமனைக் குறித்துப் பலவாறு) எண்ணி, இந்தத் துன்பத்தால் வருந்தமாட்டேன் ; என் உயிரொடும் - என் உயிருடன், மனத்து மாசு - என் மனத்துள்ள துயரையும், வாங்குவேன் - நீக்கிக் கொள்வேன்.

இரண்டில் ஒன்று என்று கூருது, அனைத்தில் என்றது இராமபிரான் வருதல் வராமை என்ற இரண்டும் அல்லாத, நினைக்கவும் தகாத பிறிதொரு நிகழா நிகழ்ச்சியாகிய அவன் திருமேனிக் கூறுபாடு எனினுமாம்; அதனை வெளிப்படையாகக் கூருதது அதனைக் கூறற்கும் அஞ்சி என்க. (ஒப்பு) 'மண்ணை கொண்ணீ மற்றைய தொன்றும் மறவென்றுன்' உயிரொடும் என்றதனல் உயிர் நீங்கினலன்றி. மாசு நீங்காது என்று கருதினன் பரதன். வையம் - இங்கு கோசலை நாடு. புகுதக; 'தேமலரங்கட் டிருவே புகுதக' (சீவக. 2131); புகுதுக, ஒரு சொல் விழுக்காடு என்பது நச்சினர்க்கினியர் உரைக் குறிப்பு. மாசற்ற மனத்தினனேனும் இங்கு மாசு என்றது இராமபிரான் வராமல் தாழ்த்தது தன் மனத்தின்கண் உள்ள களங்கத்தினற்ருனே எனக் கருதுகின்ருன். தான் நிரபராதியேனும் இராமபிரான் தன்னைப் பற்றி ஏதேனும் சங்கை கொண்டானே என்பது. (ஒப்பு): மணிமேகலையில் மருதி என்னும் பார்ப்பனி, ககந்தன் சிறுவன் காதலிக்கத் தான் காதலியாமலிருந்தும், 'மண்டிணி ஞாலத்து மழைவளந் தரூஉம், பெண்டிராயிற் பிறர்நெஞ்சு புகாஅர், புக்கேன் பிறனுளம்' (மணி. 22 : 41 - 48) என்று குற்றத்தைத் தன் மேற் கொண்டு எரி புகுந்தமை காண்க. 'மனத்துக்கண் மாசிலனுதல்' (குறள். 34); இதனைப் பரதனுடைய ஐயம், தெளிவு என்று முன்னர்க் குறிக்கப் பெற்றமை கொண்டு தெளிக. (யுத்த 4102); இறுதியடிக்கு; (ஒப்பு): 'குறும்பயிர் தடவிப் பாசப் பழி முதல் பறிப்பார் போலப் பறித்தவை கறிக்கு நல்க' (பெரியபு. இளை. 21).

பி - ம். 1. அனைத்தும்; அனைத்திலங் கொன்ருயினதாகுக.

2. வனத் திருக்குக.

3. நெடுந்துயர் மூழ்கிலேன், உய்க்கிலேன், பெருந்துயர், துயரக் கடனீந்தி.

4. உயிரேனும் வாங்குவேன்.



4104 என்னப் பன்னி யிளவலை யென்னுழைத்
துன்னச் சொல்லுதி ரென்றலுந் தூதர்போய்
உன்னைக் கூயின னும்மு னெனுமுனம்
முன்னர்ச் சென்றனன் மூவர்க்கும் பின்னுளான்.

என்னடன்னி - (பரதன்) இவ்வண்ணம் பலவாறு சொல்லி, (தூதர்களை நோக்கி), 'என் உழை - என் இடத்து, இளவலை - என் தம்பியான சத்துருக்கினனை, துன்ன சொல்லுதிர் - அணுகுமாறு சொல்லுங்கள்', என்றலும் - என்று பணித்த அளவில், தூதர் - தூதர்கள், போய் - சத்துருக்கனிடம் சென்று, 'உம்முன் - உன் தமையன் பரதன், உன்னை கூயினன் - உன்னை அழைத்தனன்', என முனம் - என்று சொல்லுதற்கு முன்னரே, மூவர்க்கும் பின் உளான் - இராமபிரான் பரதன் இலக்குவன் என்ற மூவர்க்கும் பின் தோன்றியவனான சத்துருக்கினன், முன்னர் சென்றனன் - பரதன் முன்பாகச் சென்றான்.

இளவல் - சத்துருக்கினன். 'பரதனு மிளவலு மொருநொடி பகிரா' (பால. திருவவ. 127); மூவர் - இராமபிரான் முதலிய மூவர். மூன்றுமடிக்கு; 'தன் முன்னே யவன்றன்மை தன்றுணைவன் முந்துரைத்த, சொன்முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்' (குகப். 27) என்று பரதன் கூறப்படுதல் காண்க.

பி - ம். 1. என்னிடைத். 212

இது ஓர் பிரதியில் இல்லை.

வந்ததம்பியிடம் மன்னனுகுமாறு பரதன் கூறுதல்

4105. தொழுது நின்றதன் தம்பியைத் தோய்கணீர்
எழுது மார்பத் திறுகத் தழுவினன்
அழுது வேண்டுவ துண்டைய வவ்வரம்
பழுதி லாமையி னுற்றரற் பாற்றென்றான்.

(பரதன்), தொழுது நின்ற தன் தம்பியை - (தன்னை) வணங்கி நின்ற தனது இளவலான சத்துருக்கினனை, தோய் கண்ணீர் - தேங்கிய கண்ணீர், எழுது - (பலவாறாக) வழிந்தோடப் பெற்ற, மார்பத்து - (தன்) மார்பில், இறுக தழுவினன் - அழுந்த அணைத்துக் கொண்டவனாய், அழுது - அழுது, 'ஐய - ஐயனே! வேண்டுவது உண்டு - (நான் உன்பால் விரும்பிக்) கேட்பதொன்றுண்டு, அவ் வரம் - அந்த வரம், பழுதிலாமையின் - திங்குறாத வண்ணம், தரல் பாற்று - தருதற்குத் தகுதி யுடையது', என்றான் - என்று வேண்டினான்.

கணீர் எழுதலாவது - வழிந்தோடும் நிலையில் மேனியில் பல வரிக்கோலம் செய்வது என்க. இறுகத் தழுவுதல் - காடாலிங்கனம் என்ப. பழுதிலா: 'பழுதிலா வொழுகலாற்றுப் பலசதுப் பேதிமார்கள்' (திவ். திருமாலை. 42); தரற் பாலது: தரற்பாற்று என்றாயது. 'தானமிழ்த மென்றுணரற்பாற்று' (குறள். 11).

பி - ம். 2. ஒழுகமார்பத்.

3. முழுதும்.

4. பழுதில் வாய்மையினுய்; பழுதில் காட்சியினுய். 213

4106. என்ன தாகுங்கொ லவ்வர மென்றியேல்
சொன்ன நாளி லிராகவன் தோன்றிலன்
மின்னு தீயிடை யானினி வீடுவென்
மன்ன னுதியென் சொல்லை மருதென்றான்.

(பின்னும் பரதன் இளவலைப் பார்த்து), 'அ வரம் என்னது ஆகும் கொல்என்றியேல் - அந்த வரம் யாதாகுமோ என்று வினவுவாயாகில் (கூறுவேன்); சொன்ன நாளில் - தான் வருவதாகச் சொல்லிய நாளில், இராகவன் தோன்றிலன் - இராகவன் வரவில்லை; (ஆதலின் நான் முன்னரே கூறுரைத்தபடி) இனி - இப்பொழுது, மின்னு தீ இடை - ஒளி விட்டெரிகின்ற தீயினில், யான் வீடுவென் - விழுந்து உயிர் துறப்பேன்; என் சொல்லை மருது - (நீ) என் சொல்லை மறுக்காமல், மன்னன் ஆதி - (அயோத்திக்கு) அரசன் ஆவாய்', என்றான் - என்று மொழிந்தான்.

மின்னு தீயிடை யான் இனி வீடுவென் - 'ஆமெனி லேழிரண்டாண்டி லையநீ, நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலை யென்னிற் கூடெரிச், சாமிது சரதநின் னாணை சாற்றினேன்' (அயோத்தி. கிளைகண்டு. 133; என்று வந்தது காண்க.

பி - ம். 1. எவ்வரம்.

3. விடலென்.

4. மன்னனாணை; மருய். 214

## அதுகேட்டு சத்துருக்கினன் வருந்தி உரைத்தல்

4107. கேட்ட தோன்றல் கிளர்தடக் கைகளால்
தோட்ட தன்செவி பொத்தித் துணுக்குரு
ஊட்டு நஞ்சமுண் டானொத் துயங்கினன்
நாட்டமும் மனமுந் நடுங்கா நின்றான்.

கேட்ட தோன்றல் - (பரதன் சொற்களைச்) செவியேற்ற சத்துருக்கன், கிளர்தட கைகளால் - விளங்குகின்ற பெரிய கைகளினால், தோட்ட - துளைபட்ட, தன் செவி பொத்தி - தனது காதுகளை அடைத்துக் கொண்டு, துணுக்குரு - திடுக்கிட்டு, ஊட்டும் நஞ்சம் உண்டான் ஒத்து - (பிறரால்) புகுத்தப்பட்ட விடத்தை உட்கொண்டவன் போன்று, உயங்கினன் - வருத்தமுற்றவனாய், நாட்டமும் மனமும் நடுங்கா நின்றான் - கண்களும் மனமும் நடுங்கி நின்றான்.

தடகை - பெரிய கரம்; 'தடவுங் கயவும்நளியும் பெருமை' (தொல். உரி. 24); தோட்ட - துளைக்கப்பட்ட; 'கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப் படாத செவி' (குறள். 418); தொள் - பகுதி; 'தோளா மணியே' (திருக்கோ. 29); செவி பொத்தி: 'போதத் தன் செவித்தொளை யிரு கைகளாற் பொத்தி' (யுத்த. 151); உரு - உற்று; செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். 'மக்களை முன் காணா மனம் நடுங்கா வெய்துயிராப், புக்கணைத்து வீரப் புயத்தணையா' (நள. 369); தானாக உட்கொண்ட நஞ்சம் எனின் தானாக வேண்டி யுண்டதாகலின் துணுக்குறற்கில்லை; இங்குப் பரதன் சொல், ஊட்டு நஞ்சம் போன்றிருந்ததாகலின், 'துணுக்குரு' எனப்பட்டது. நாட்டமும் மனமும் - புறமும் உள்ளும்; 'நாட்ட மிரண்டு மறிவுடம்படுத்தற்குக் கூட்டி யுரைக்குங் குறிப்புரையாகும்' (தொல். களவி. 5).

பா - ம். 3. ஊட்ட. 215

4108. விழுந்து மேக்குயர் விம்மலன் வெய்துயிர்த்
தெழுந்து நானுனக் கென்ன பிழைத்துளேன்
அழுந்து துன்பத்தி னாயென் றரற்றினன்
கொழுந்து விட்டு நிமிர்கின்ற கோபத்தான்.

(சத்துருக்கினன்) விழுந்து - கீழே வீழ்ந்து, மேக்குயர் - மேன் மேல் எழுகின்ற, விம்மலன் - விம்முதலை யுடையவனாய், வெய்து உயிர்த்து - வெம்மையாகப் பெருமூச்செறிந்து, எழுந்து - எழுந்து நின்று, கொழுந்துவிட்டு நிமிர்கின்ற கோபத்தான் - கொழுந்து விட்டுக் கிளர்கின்ற சினத்தினனாய், (பரதனைப் பார்த்து) 'அழுந்து துன்பத்தினாய் - துயரில் அழுந்தி யுள்ளவனே! (என்னை நோக்கி இங்ஙனம் கூறுமாறு), நான் உனக்கு என்ன பிழைத்துளேன் - நான் உனக்கு என்ன தவறு செய்து விட்டேன்.', என்று அரற்றினான் - என்று சொல்லிப் புலம்பினான்.

மேக்குயர்: 'மேக்குயரு நெடுமூக்கு மங்கையர்க்கு மிகையன்றோ' (ஆரணிய. 548); நானுனக் கென்ன பிழைத்துளேன் - இங்கு இலக்கு வனும் சீரை சாத்திக் காட்டிற்கு வர முயன்றபோது இராகவன் தடுக்க, இளையவன் கூறிய 'என்னுனக் கடியனேன் பிழைத்ததியா தென்றான்' (அயோத்தி. நகர் நீ. 155) எனபது காணத்தகும். அழுந்து துன்பத்தினாய்-வடமொழி நடை. கொழுந்துவிட்டு நிமிர்; (ஒப்பு): 'கொழுந்தோடிப் படர் கீர்த்தி' (பால. திருவவ. 59).

பி - ம். 2. பிழைத்துளது.

3. எனச் சாற்றினான், என்றருளினான்- 218

வேறு

4109. கானாள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்துப் பின்பு
போனானு மொருதம்பி போனவர்கள்
வருமவதி போயிற் றென்னா
ஆனாத வுயிர்விடவென் றமைவானு
மொருதப்பி யயலே; நானு
யானுமிவ் வரசாள்வெ னென்னேயிவ்
வரசாட்சி யினிதே யம்மா.

'(தான் மூத்த மகனாய் அரசுரிமை பெற்றிருக்கவும்), நில மகளை கைவிட்டு - பூவரசை விடுத்து, கான் ஆள - காட்டை ஆளும்படி, போனானை - வனம் சென்ற இராமபிரானை, காத்து - பாதுகாத்துக் கொண்டு, பின்பு போனானும் - பின் சென்றவனும்,

ஒரு தம்பி - (இலக்குவப் பேர் கொண்ட) தம்பியாவன்; போன வர்கள் - வனம் சென்ற இருவரும், வரும் அவதி - மீண்டு வரும் கால எல்லை, போயிற்று - கடந்து விட்டது, என்று - என்று நினைந்து, ஆற்றாத - அமையாது துன்புற்ற, உயிர்விட என்று அமைவானும் ஒரு தம்பி - உயிரைவிட எண்ணி முயல்பவனும், ஒரு தம்பி - ஒரு தம்பியாவன்; (இவர்களுடனே தோன்றியிருந்தும்) அயலே யான் - மற்றொரு தம்பியாகிய யான் மட்டும். நாணாது - வெட்கமின்றி, இவ் அரசு ஆள்வென் ஆம் - இந்தப் பேரரசை ஆள்வேனாம்; என்னே - (இது) எவ்வாறுள்ளது; இவ் அரசாட்சி இனிது - இந்த அரசாட்சி மிகவும் இனியது. ஏ: அசை. அம்மா - வியப்பிடைச் சொல்.

இனியது - பிற குறிப்பு; சத்துருக்கினனைப் பற்றி இப் பெருங் காப்பியத்தில் அதிகமாகக் கூறப்பெறவில்லை எனினும், மேலே யுள்ள 'கேட்ட, விழுந்து' என்ற பாடல்களைக் கொண்டும், இனி வரும் பாடல் கொண்டும் அவனுடைய உயர்ந்த பண்புகளை உணரலாம். ஆற்றாமை - நீங்காமை; 'ஆற்றாத செல்வ வரம்பையர் கள் தற்சூழ' (பெருமாள். திருமொழி. 4 : 2); யாம் ஆம்; என்றதில் உள்ள 'ஆம்' பிரித்துக் கூட்டப்பட்டது.

பி - ம். 1. போவானை.
3. ஆற்றாத எரிபுக; நின்ற, ஆன.
4. இருந்தவாறே. 217

4110. மன்னிற்பின் வளநகரம் புக்கிருந்து
வாழ்ந்தானே பரத னென்னும்
சொன்னிற்கு மென்றஞ்சிப் புறத்திருந்து
மருந்தவமே தொடங்கி னுயே
என்னிற்பின் னிவனுளனு மென்றேயுன்
னடிமையுனக் கிருந்த தேனு
முன்னிற்பின் னிருந்ததுவு மொருகுடைக்கீ
ழிருப்பதுவு மொக்கு மென்ருன்.

'மன்னின் பின் - இராமபிரான் வனம் சென்ற பின்னர், பரதன் - பரதன், வளம் நகரம் புக்கு இருந்து வாழ்ந்தானே -

செழிப்பு மிக்க அயோத்தி நகருட் புகுந்து தங்கி வாழ்ந்தான் அன்றோ? என்னும் - என்கின்ற, சொல் நிற்கும் - பழிச் சொல் (புவியில்) நிலைபெறும், என்று அஞ்சி - என்று எண்ணிப் பயந்து, புறத்து இருந்து - நீ ஊரின் புறத்திலே (நந்திக் கிராமத்தில்) தங்கி, அருதவமே தொடங்கினையே - புரிதற்கரிய தவத்தைச் செய்யத் தொடங்கினாய்; (உன் செயல் இங்ஙனமாக), 'என்னின் பின் - நான் தீயிற் புகுந்து மரித்த பின், இவன் உளன் ஆம் - (எனது தம்பி யான) இந்த சத்துருக்கன் பிழைத்திருப்பான், என்றே - என்றே, உன் அடிமை - உன் அடியவனை என்னிடத்து, உனக்கு இருந்த தேனும் - உனக்கு எண்ணம் இருந்தது என்றாலும், உன்னின் பின் - நீ இறந்த பின்னர் (நானும் உடன் இறவாமல்), இருந்ததுவும் - பிழைத்திருப்பதும், ஒரு குடை கீழ் இருப்பதுவும் ஒக்கும் - ஒற்றை வெண் கொற்றக் குடையின் கீழ் இருப்பதுவும் (தம்மில்) ஒத்தன வாகும்', என்றான் - என்று மொழிந்தான் சத்துருக்கன்.

'என்னிற் பின் இவன் உளனாமென்றே யுன்னடிமை யுனக் கிருந்ததேனும்' என்பது பரதாழ்வான் கூற்றாகக் கூறியது. உன் அடிமையிடத்து.

பா - ம். 1. நகரே புக லொழிந்தானே யன்றோ பரதனென்று.

2. புறத்திருத்தவ், புறத்தகன்றிவ்; தொடங்கிச் செய்தாய்.

3. என்றாயேல், என்றேபின்.

4. இருந்தேனுல், இருந்ததுவும். 218

## பரதன் சத்துருக்கினனுக்குச் சமாதானங் கூறித் எரியமைக்கும்படி பணித்தல்

4111. முத்துருக்கொண் டமைந்தனைய முழுவெள்ளிக்
கொழுநிறத்து முளரிச் செங்கண்
சத்துருக்க னஃதுரைப்ப வவனிங்குத்
தாழ்க்கின்ற தன்மை யானிங்
கொத்திருக்க லாலன்றே யுழந்தாற்பி
னிவ்வுலகை யுலைய வொட்டான்
அத்திருக்குங் கெடுமுடனே புகுந்தாளு
மரசெரிபோ யமைக்க வென்றான்

முத்து உரு கொண்டு - முத்தினது வடிவு கொண்டு, அமைந்தனைய - அமைத்தாற் போன்றவும், முழு வெள்ளி கொழு நிறத்து - சுயமான (கலப்பற்ற) வெள்ளி போன்றதுமான கொழுவிய வண்ணத்தையும், முளரி செங்கண் சத்துருக்கன் - செந்தாமரை மலர் போன்ற சிவந்த கணகளையும் உடைய சத்துருக்கினன், அஃது உரைப்ப - அச் சொற்களைப் பகர, (அதற்குப் பரதன்) ' அவன் - அவ்விராமபிரான், இங்கு தாழ்க்கின்ற தன்மை - இவ் விடம் வராமல் தாமதிப்பது, யான் இங்கு - நான் இங்கு, ஒத்து இருக்கலால் அன்றே - மனமொத்து (அரசியலைக்) கைக் கொண் டிருத்தலால் அல்லவோ? (அங்ஙனமின்றி) உலந்தால் - நான் மரிப் பேனுனல், பின் - அதன் பின்னர், இவ் உலகை உலைய ஒட்டான் - (அரசனில்லாத) இந்த உலகத்தை வருந்துமாறு விடமாட்டான், அ திருக்கும் - அவன் இங்கு வராமையாகிய அந்த மாறுபாடும், கெடும் - நீங்கும்; உடனே புகுந்து அரசு ஆளும் - உடனே நாட்டிற் புகுந்து அரசாளத் தொடங்குவான்; (ஆதலின நான் இறத்தற் பொருட்டு நீ) போய் - சென்று, எரி அமைக்க - தீ மூட்டுவாயாக', என்ருன - என்று கட்டளை யிட்டான் (பரதன்).

சத்துருக்கினன் என்றதற்கேற்ப எடுத்த எதுகை நயங்களைக் காண்க. 'முத்துருக் கொண்டு செம்முளரி யலர்ந்தால், ஒத்திருக் கும் மெழிலுடைய விவ்வொளியால், எத்திருக்கும் கெடுமென்பதை யெண்ணுச், சத்துருக்கன் னெனச் சாத்தின ணமம்' (பால. திருவவ. 123) காண்க. முழு வெள்ளி - கலப்பற்ற வெள்ளி. முளரி - தாமரை. திருக்கு - மாறுபாடு. 'சூலையின் திருக்கலால்' (யுத்த. 206).

பி - ம். 2. அது, ஈது.
3. ஒத்திருக்கலாமென்றே; இவ்வுலகம்.
4. கேட்டதுவே, கெடவுடனே, கேட்கவே. 219

## கோசலை அஃதறிந்து பரதனை விலக்க வந்து அடைதல்

4112. அப்பொழுதி னவ்வுரைசென் றயோத்தியினி
னிசைத்தலுமே யரியை யீன்ற
ஒப்பெழுத வொண்ணுத கற்புடையாள்
வயிறுபுடைத் தலமந் தேங்கி

இப்பொழுதே யுலகிறக்கும் யாக்கையினை
முடித்தொழிந்தால் மகனே யென்று
வெப்பெழுதி னலன்ன மெலிவுடையாள்
கடிதோடி விலக்க வந்தாள்.

அ பொழுதின் - அச் சமயத்தில், அ உரை-அந்த வார்த்தை, அயோத்தினியில் சென்று இசைத்தலுமே - அயோத்தி சென்று பேசப்பட்ட அளவிலே, (அதைச் செவியேற்று), அரியை ஈன்ற - திருமாலின் அமிசமான இராமபிரானைப் பெற்றவளும், ஒப்பு எழுத ஒண்ணுத - உவமை கூறற்கியலாத, கற்புடையாள் - கற்புடையவளு மான கோசலாதேவி, வயிறு புடைத்து - வயிற்றில் அடித்துக் கொண்டு, அலமந்து - மனம் சுழன்று, ஏங்கி - ஏக்கமுற்று, 'மகனே - மகனே! (நீ உன்), யாக்கையினை - உடலை (தீயிலிட்டு), முடித்து ஒழிந்தால் - இறந்து ஒழிவை யாயின், இப்பொழுதே உலகு இறக்கும் - இக் கணமே உலகத்து உயிர் அனைத்தும் மடிந்து விடும்', என்று - என்று புலம்பிக் கொண்டே, வெப்பு எழுதினுல் அன்ன - மனத்தின் கொதிப்பினுலேயே உருவாக்கப் பட்டது போன்று, மெலிவு உடையாள் - தளர்ந்த உடலினளாகி, விலக்க-(மகனை தீப் புகுவதினின்றும்) தடுக்க, கடிது ஓடி வந்தாள் - விரைந்து ஓடி வந்தாள்.

அரி - திருமாலின் அமிசமான இராமபிரான்; இராமபிரானை இவ்வாறு கூறுவதை இக் காப்பியத்திற் பல இடங்களிலும் காணலாம். யுத்த. 757, 758, உரை காண்க. கற்புடையாள்; 'குலம்பொறை கற்பிவை சுமந்தகோசலை அருவமாகிய வெம்மையை உருவாக எழுதின சித்திரம் போலும் அறமெலிந்தவள், (அயோத்தி. பள்ளிபடை. 95); அரியை யீன்ற; 'மூவுலகு மீன்றானை முன்னீன்றானைப் பெற்றத்தாற் பெருஞ்செல்வம், யான் பிறத்தலாற் றுறந்த பெரியாள்' (அயோத்தி குகப். 65); 'தன் காதலன், வைகு மாலிலையன்ன வயிற்றினைப், பெய்வளைத் தளிராற் பிசையும்' (அயோத்தி. நகர் நீ. 11) லும், ஆலிலை திருமால் தானன நிலையில் யோகத் துயில் கொள்ளும் இலை என்பதை உய்த்துணர்க. இராம பிரான் கோசலாதேவியின் கருப்பத்தில் பன்னிரண்டு திங்கள் இருந்ததாக முதனூல் கூறும். 'ததஸ்சே துவாதசே மாஸே' என்றது காண்க. ஒப்பெழுத வொண்ணுத கற்புடையாள் என்ற

இடத்துச் சொல் நயம் பொருள் நயம் காண்க. வெப்பு எழுதல்; 'அவல மீதெனை வெழுதிய படிவமொத்து' (அயோத்தி. கிளைகண்டு. 49); வயிறு புடைத்தல் - அவலக் குறிப்பு. இப்பொழுதே யுலகிறக்கும்; 'புண்ணியமெனு நின்னுயிர் போயினல், மண்ணும் வானு முயிர்களும் வாழுமோ' (யுத்த. 4118); யாக்கை - எழுவகைத் தாதுக்களால் சேர்த்து ஆக்கப்பட்டது என்று உடலுக்குக் காரணக்குறி; 'யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர்' (நாலடி. 28); தீப்புகும் நிகழ்ச்சி நடைபெற்று விட்டால் பெருங் கிலேச மாகுமே என்று எண்ணிக் 'கடிதோடி விலக்க வந்தாள்' எனப் பட்டது. தெய்வத் தன்மை பொருந்திய இராமபிரான் உள்படப் பல முக்கிய பாத்திரங்கள் தற்கொலை புரியத் துணிவதை இக்காபபி யத்தில் ஆங்காங்குக் காணலாம். உலகியலைப் படம் பிடித்துக் காட்டும் வான்மீகரும், கம்பநாடரும் ஆற்ருெணுத் துயரம் மக்கட்கு நேருங்கால் அவர்கள் இயல்பாக மேற்கொள்ளும் இக்கடுஞ் செயலைக் காட்டியுள்ளனர். அயோமுகியாற் கவரப்பட்டு இலக்குவன் பிரிந்த நிலையில் இராமபிரானும், இராமபிரான் உதவிக்குச் செல்லுமாறு பணிக்கப்பட்டு இலக்குவன் செல்வதற்கு மறுத்த நிலையிலும் இராமபிரான் தன்னை மீட்க வரவில்லையே என்று பலவாறு வருந் திய காலத்தும் பிராட்டியும், தமையன் குறித்த காலத்தில் வராத நிலையில் பரதனும் தீப்புக முயன்றமை காண்க. பெற்ற தாயான கைகேயியும், சிற்றன்னையான சுமித்திரையும் இருக்க, கோசலை மட்டும் விரைந்து விலக்க வந்தமை கோசலைக்குப் பரதனிடமிருந்த வாத்ஸல்யத்தைக் காட்டும். 'நிறை குணத்தவன் நின்னினும் நல்லனல், குறைவி லன்பினில் கூறினள் நால்வர்க்கும், மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினுள்' (அயோத்தி. நகர் நீ. 5) என்றது காண்க. இனி கைகேயி, விலக்க முற்பட்டிருப்பின் இன்ன நிகழும் என்று நினைத்தற்குமில்லை. 'ஆயவன் முனியு மென்றஞ்சினே னலால், தாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ' (அயோத்தி. பள்ளிபடை. 72) என்றது காண்க.

பி - ம். 1. இவ்.

2. அலமந்தோடி, ஓங்கி.

3. இருக்கையினை, இயற்கைதனை; இயற்கையினை; தொழிந்தாய், இன்ருெழிவாய்.

4. ஒழுகினுல்.

4113. மந்திரியர் தந்திரியர் வளநகரத்
தவர்மறையோர் மற்றுஞ் சுற்றச்
சுந்தரிய ரெனைப்பலருங் கைதலையிற்
பெய்திரங்கித் தொடர்ந்து துற்ற
இந்திரனே முதலாய விமையவரு
முனிவரரு மிறைஞ்சி யேத்த
அந்தரமங் கையர்வணங்க வழுதரற்றிப்
பரதனைவந் தடைந்தா ளன்றே.

(கோசலாதேவி) மந்திரியர் தந்திரியர் - மந்திரிமார்களும் சேனைத் தலைவர்களும், சுற்றம் சுந்தரியர் - உறவினரான அழகிகளும், மறையோர் - அந்தணரும், வளம் நகரத்தவர் - செழிப்பான அயோத்தி நகர்க்கண் உள்ள, மற்றும் எனை பலரும் - மற்றும் பல வகையோரும், கைதலையில் பெய்து - கைகளைத் தலைமேல் வைத்து, இரங்கி - அழுது கொண்டு, தொடர்ந்து துற்ற - (தன்னைப் பின்) தொடர்ந்து சூழ, இந்திரனே முதலாய இமையவரும் - இந்திரனே முதலான தேவர்களும், முனிவரரும் - இருடிகளும், இறைஞ்சி ஏத்த - வணங்கி வாழ்த்தவும், அந்தரம் மங்கையர் வணங்க - ஆகாயத்தின் கண் உள்ள மாதர்கள் வணங்கவும், அழுது அரற்றி - அழுது ஓலமிட்டுக் கொண்டு, வந்து - வந்து, பரதனை அடைந்தாள் - பரதனிடம் வந்து சேர்ந்தனள்.

தந்திரியர் - மந்திரிமார்க்குப் புத்தி சொல்வோர். இந்திரன் ஆதியோர் கோசலையைத் துதித்தது. திருமால் அவதாரமான இராமபிரானை ஈன்றதாலும், தன் மகனை வனம் புகுமாறு செய்தவளான கைகேயியின் மகன் என்று கறுக்கொள்ளாது அவன் தீப் புகுவதைத் தடுக்க முன் வந்ததாலும் என்க. 'சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற கோசலை' (அயோத்தி. குகப். 65) என்ற இடத்துத் தேவர்கள் அவளை வணங்கியது, பரதன், தாய்மார் என்ற இவர்களின் விருப்பிற்கிணங்கி, இராமபிரான நாட்டிற்குத் திரும்புவானாகில், தங்கள் காரியத்திற்குப் பிரதிகூலமாகுமே என்பது பற்றியாகும். இவ்வாறு தேவர்கள் தங்கள் காரியத்தை இராமபிரானிடம் நினைவூட்டுவதை இக் காப்பியத்திற பல இடங்களிலும் காணலாம். தந்திரியர் - சேனைத் தலைவர்கள் தந்திரம் -

சேனை; 'தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. 1333); கைதலைப் பெய் திரங்கல் - அவலத்தின் மெய்ப்பாடு.

பி - ம். 1. வளரந் தரத்தவர்.

2. தொடர்ந்து செல்ல.

4. அடைந்தார்.

221

## கோசலை பரதனைத் தீயில்விழ வொட்டாது தடுத்துச் சிலகூறுதல்.

4114. எரியமைத்த மயானத்தை யெய்துகின்ற
காதலனை யிடையே வந்து
விரியமைத்த நெடுவேணி புறத்தசைந்து
வீழ்ந்தொசிய மேனி தள்ளச்
சொரிவமைப்ப தரிதாய மழைக்கண்ணுள்
தொடருதலுந் துணுக்க மெய்தாப்
பரிவமைத்த திருமனத்தா னடிதொழுதா
னவள் புகுந்து பற்றிக் கொண்டாள்.

சொரிவு அமைப்பது அரிது ஆய - நீர்ப் பொழிவு அடக்குதற் கில்லையான (இடைவிடாது நீர்சொரிகின்ற), மழை கண்ணுள் - மழை போன்று பொழிகின்ற கண்களை யுடையவளான கோசலாதேவி, விரி அமைத்த - விரித்தல் பொருந்திய, நெடு வேணி - நீண்ட சடைமுடி, புறத்து - பின்புறத்தில், அசைந்து வீழ்ந்து ஒசிய - தளர்ந்து வீழ்ந்து புரளவும், மேனி தள்ள - உடம்பு, (மெலிவால்) தள்ளாடவும், எரி அமைத்த மயானத்தை - (சத்துருக்கினன்) தீ வளர்த்த, மயானத்தை - நன் காட்டை, எய்துகின்ற - அடைகின்ற, காதலனை - புதல்வனான பரதனை, இடையே வந்து தொடருதலும் - இடை வழியில் தொடர்ந்து வர, பரிவு அமைத்த திருமனத்தான் - (இராயபிரானிடம் நீங்காத) அன்புடன் கூடிய அழகிய உள்ளத் தானான பரதன், துணுக்கம் எய்தா - அச்சம் உற்று (ப் பினபு), அடி தொழுதான் - பாதத்தில் வணக்கம் செய்தான், அவள் புகுந்து பற்றி கொண்டாள் - அத்தேவி நெருங்கித் தழுவிக் கொண்டாள்.

காதலன் - புதல்வனான பரதன். சொரிவு அமைத்தல் - பொழிவதைத் தடுத்தல். மழைக்கண் - சிலர் குளிர்ச்சி செய்யும் கண்கள் என்பர். இங்கு துக்க மீதூர்ந்து அழுகின்ற கண்ணீர் ஆகுமன்றிக் குளிர்ந்த கண்ணீர் ஆகாது. ஆகவே, விடா மழை போன்று பெருகுகின்ற கண் எனப் பொருள் தரப்பட்டது. 'நீர் நிரந்தரம் பொழிகின்ற பொழிவால், மழைக்கணென்பது காரணக் குறியென வகுத்தாள்' (சுந்தர. 335); என்று ஆசிரியரே கூறுதல் காண்க. 'மழைக் கணேழை' (ஆரணிய. 804) என்றதும் காணத்தகும். பலரும் புடைசூழ நின்றவன் ஆதலின் கோசலாதேவி கும்பலில் நுழைந்து பரதனை எய்த வேண்டியிருந்ததென்பது குறிக்கப், 'புகுந்து' எனப் பட்டது.

. பி - ம். 1. எரியமைக்கும்.

2. விழ்ந் தவிழ்ப்ப, விழ்ந் தொழிய.

3. சொரி; அமைப்பற்றிரு தாரை.

4. பரிவமைந்த ; அடி பணிந்தான். 222

3-ஆம் அடி அரியமைத்த கருந்தாரை மழைக்கண்ணொடொடருதலுமிடுக்கணெய்தி' என்று ஓர் பிரதியில் உள்ளது.

## வேறு

4115. மன்னி ழைத்தது மைந்த னிழைத்ததும்
முன்னி ழைத்த விதியின் முயற்சியால்
பின்னி ழைத்தது மெண்ணிலப் பெற்றியால்
என்னி ழைத்தனை யென்மக னேயென்றாள்.

'மன் இழைத்ததும் - தயரத மன்னன் செய்ததும், மைந்தன் இழைத்ததும் - இராமபிரான் செய்ததும், முன் இழைத்த விதியின் முயற்சியால் - (நான்) முன்பு புரிந்த தீவினையின் விளைவால் (ஆயின); எண்ணில் - ஆராயுமிடத்து, பின் இழைத்ததும் - (இராமபிரான்) பின்னர்ப் புரிந்ததும், அ பெற்றியால் - அத்தன்மையாலாயே (எழுந்ததாம்); என் மகனே - என் புதல்வனே! என் இழைத்தனை - என்ன காரியம் செய்யத் தொடங்கினாய்?' என்றாள் - என்று (கோசலாதேவி பரதனைப் பார்த்துக்) கூறினாள்.

மன் இழைத்தது - புதல்வர்ப் பிரிவால் மரித்தது. மைந்தன் இழைத்தது - இராமபிரான் வனம் புக்கது. இராமபிரான் பின் இழைத்தது-தான் வாக்களித்தபடி வராமல் தாழ்த்தது. விதியின் வன்மை இக் காப்பியத்தில் பல இடங்களிலும் வற்புறுத்தல் ஆங்காங்குக் காண்க. 'விதியின் பிழைநீ யிதற்கென்னை வெகுண்டது' (அயோத்தி. 133) என்று இராமபிரானே கூறினர். 'விதியது வலியினாலும் மேலுள வினைவினாலும்' (ஆரணிய. 3·9) 'கணவன் இறந்து, மகனும் பிரிந்து நின்ற நிலையில் நீயும் இவ்வாறு எரிபுக நினைப்பது தகுதியோ' என்றாள் கோசலா தேவி. இழைத்தல் - செய்தல்; 'அந்தோவுன் றிருமேனிக் கன் பிழைத்த வன்பிழையால்' (ஆரணிய. 333); மகனே என்னாது, 'என் மகனே' என்றது கருதத் தக்கது 'மன்னவன் மன்னனோற் கணவன் மைந்தனோற் பன்னரும் பெரும் புகழ்ப் பரதன்' (அயோத்தி. மந்தரை. 49); என்றும் 'வேற்றுமை யுற்றிலள் வீரன் தாதைபுக், கேற்றவ ளிருதயத் திருக்கவே கொலாம்' (அயோத்தி. மநதரை. 51); என்றும், மறுவி லன்பினில் வேற்றுமை மாற்றினாள்' (அயோத்தி. நகர் நீ. 5) என்றும் வருவன இங்குக் குறிக் கொள்ளத் தகும்.

பி - ம். 2. முயற்சியும்.

3. எண்ணலை, எண்ணிலை.

4. இழைத்தனையோ. 223

4116. நீயி தெண்ணினை யேல்நெடு நாடெரி
பாயு மன்னருஞ் சேனையும் பாய்வரால்
தாய ரெம்மள வன்று தனியறம்
தீயின் வீழு முலகுந் திரியுமால்.

'நீ இது எண்ணினையேல் - நீ இங்ஙனம் செய்வதை (தீப்புகுவதைக்) கருதினையாகில், நெடு நாடு எரி பாயும் - நீண்ட பெருமை வாய்ந்த, (கோசலம் என்னும்) இந் நாட்டு மக்கள் (உன்னுடன்) தீப் புகுவர்; மன்னரும் சேனையும் பாய்வர் - (நமக்கு நட்பான) அரசர்களும் படைகளும் (தீயில்) வீழ்ந்து மரிப்பார்கள்; தாயர் எம் அளவு அன்று - (தீக்குளிப்பது) அன்னைமாராகிய எம்மோடு மட்டும் நின்றுவிடாது; (நாங்களும் தீப்புகுவோம்); தனி அறம் - ஒப்பற்ற தருமமும், தீயின் வீழும் - தீயில் விழுந்து விடும்; உலகும் திரியும் - உலகமும் நிலை குலையும். ஆல்: அசை.

இது - தீப்புகுதல், தாயாகிய எம் மறைவு. தனி அறம்; 'முனிவர் குழுவும் தனி அறனும்' (சுந்தர. 544); 'அறத்தி னூஉங் காக்க மெவனோ வுயிர்க்கு' (குறள். 31); 'அறத்தி னூஉங் காக்கமுமில்லை' (குறள். 32); 'பொன்றுங் காற் பொன்றாத்துணை' (குறள். 36) என்பன பொய்யா மொழியாகலின் 'தனி அறம்' எனப்பட்டது. நாடு - இடவாகு பெயராக நாட்டு மக்களை யுணர்த் திற்று.

பி - ம். 1. நீயது ; எண்ணினையே.

2. பாயுமால், பாறுமால்.

3. தாயரோம்.

4. உலக முந்தியும். 224

இதன் பின் 'எண்ணில்' என்ற பாடல் ஓர் பிரதியில்.

4117. தரும நீதியின் றற்பய னுவதுன்
கரும மேயன்றிக் கண்டிலங் கண்களால்
அருமை யொன்று முணர்ந்திலை யையநின்
பெருமை யூழி திரியினும் பேருமோ

'ஐய - ஐயனே! உன் கருமம் - உன் செயல், தருமம் நீதியின் தன் பயன் ஆவது அன்றி - தருமமான நீதி நெறியின சாரமாக வுள்ளதே யன்றி, (அறத்திற்கு முரண்பட்டதாக எங்கள்). கண் களால் கண்டிலம் - கண்களால் கண்டதில்லை; அருமை ஒன்றும் உணர்ந்திலை - உனது அருமையை ஒரு சிறிதும் நீ அறிந்தா யில்லை; நின் பெருமை - உன்னுடைய பெருமை, ஊழி திரியினும் பேருமோ - யுகமே மாறுபட்டாலும் நீங்குமோ?

தரும நீதியின் தற்பயனுவதுன் கருமம்; 'தள்ளரிய பெரு நீதித் தனியாறு புகமண்டும், பள்ளமெனுந் தகையானைப் பரத னெனும் பெயரானை' (பால. குலமு. 21); 'எனைத்துள மறையவை யியம்பற் பாலன, பனைத்திரள் கடகரிப் பரதன் செய்கையே, அனைத்திற மல்லனவல்ல' (அயோத்தி. கிளைகண்டு. 44); 'சேனுயர் தருமத்தின் தேவைச் செம்மையின ஆணியை' (அயோத்தி. கிளை கண்டு. 47); 'தரும நீயலதில் லெனுந் தன்மையோய்' (யுத்த. 4120);

'கர தல முற்றொருவிர் நெல்லி கடுப்ப, விரத மறைப்பொருள் மெய்ந் நெறி கண்ட வரதன்' (பால. திருவவ. 121); ஓகாரம் - எதிர்மறைப் பொருள்; போராது என்பது பொருள். மற்றும், 'தெவ்வடு சிலைக்கை யென் சிறுவர் செவ்வியர், அவ்வவர் துறைதொறு மறந் திறம்பலர்' (அயோத்தி. மந்தரை. 46) என்று பொதுப்படக் கூறியதும் காண்க.

பி - ம். 1. தம்பயன்.

2. கருமா மற்றொன் றும்; கண்டிலன். 225

இஃது ஓர் பிரதியில் இல்லை.

4118. எண்ணில் கோடி யிராமர்க ளென்னினும்
அண்ணல் நின்னரு ளுக்கரு காவரோ
புண்ணி யம்மெனு நின்னுயிர் போயினல்
மண்ணும் வானு முயிர்களும் வாழுமோ.

'அண்ணல் - பெருமை மிக்கோய்! எண்ணில் - கணக்கற்ற, கோடி இராமர்கள் என்னினும் - பலகோடி இராமர்கள் ஒன்று கூடினும், நின் அருளுக்கு அருகு ஆவரோ - உனது அருளுக்கு ஒத்தவராவரோ? (ஆகமாட்டார்); புண்ணியம் எனும் நின் உயிர் போயினல் - புண்ணியமே உருக்கொண்டது என்று கூறத்தக்க, நின் உயிர் போயினல் - உனது உயிர் நீங்கப் பெற்றால், மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ-பூவுலகும் விண்ணுலகும் (அவற்றில் வாழும்) பிராணி வர்க்கங்களும், வாழுமோ - உயிர் நீங்கப் பெறமல் இருக்குமோ?

அண்ணல் - அண்மைவிளி. 'புகழினோய் தன்மை கண்டால், ஆயிரமிராமர் நின் கேழாவரோ' (அயோத்தி. குகப். 35) என்றது காண்க. எண்ணில் எனத் தனித்து எடுத்து - ஆராயுங்கால் எனினுமாம். கோடி - நூறு லக்ஷம். ஓகாரம் - எதிர் மறைப் பொருள். அருள்; 'அருள் என்னும் அன்பீன் குழவி' (குறள். 757) அருகு ஆவரோ - உன்னைக் கிட்டுதற்கும் பொருந்துவரோ எனினுமாம்.

பி - ம். 3. போக்கினல்.

4. மறைகளும் வாழுமோ. 226

4119. இன்று வந்தில னேயெனி னுளையே
ஒன்றும் வந்துனை யுன்னி யுரைத்தசொல்
பின்று மென்றுண ரேற்பிழைத் தானெனில்
பொன்றுந் தன்மை புகுந்தது போயென்றுள்.

'(இராமபிரான்), இன்று வந்திலனே எனின் - இன்றைக்கு வராவிட்டினும், நாளையே - நாளையே, உனை வந்து ஒன்றும் - உன்பால் வந்தடைவான்; உன்னி உரைத்த சொல் - நன்கு எண்ணி (பதினான்கு ஆண்டுகள் கழித்து வருவேன் என்று) கூறிய வாக்கு, பின்றும் - தவறுவான், என்று, என்று உணரேல் - மனத்துயர் கொள்ளாதே, பிழைத்தான்எனில் - (ஒருக்கால்) (அவன் கூறிய) சொல் தவறுவானாகில், பொன்றும் தன்மை போய் புகுந்தது - (அவனுக்கு) இறந்துபடும்படி அபாயம் நேர்ந்து விட்டது என்பது ஏற்படும்', என்றுள் - என்று சொன்னாள் கோசலாதேவி.

பின்றுதல் - பின்னிடைதல். சொல் பின்றும் என்றுணரேல்; 'பின்று மென்றுலு நம்பாற் புகழன்றிப் பிழைப்புண்டாமோ' (யுத்த. 412); புகுந்தது - தெளிவு பற்றிய கால வழுவமைதி.

பி - ம். 1. வந்திலனேலினி.
2. உன்னில்.
3. ஒன்றுண்டிரேல்.
4. புரிதிபின்; புகுந்தது போல், பொய்யிலாய். 227

4120 ஒருவன் மாண்டன னென்றுகொண் டூழிவாழ்
பெருநி லத்துப் பெறலரு மின்னுயிர்க்
கருவு மாண்டறக் காணுதி யோகலைத்
தரும நீயல தில்லெனுந் தன்மையாய்.

'கலை தருமம் நீ அலது இல் எனும் தன்மையாய் - நீதி நூல்களில் கூறிய தருமம் நீயல்லாது வேறில்லை என்று பகரத்தக்க சிறப்பு வாய்ந்தவனே! ஒருவன் - ஒருவன், (இராமபிரான்) மாண்டனன் - இறந்தான், என்று கொண்டு - என்று உட்கொண்டு, ஊழி வாழ் - பேரூழி வரையில் வாழக்கூடிய, பெரு நிலத்து - பெரிய இந்த

உலகின் கண்ணுள்ள, பெறல் அரு - அடைதற்கு அருமையான, இன் உயிர் - இனிய உயிர்களை, கருவும் மாண்டு அறாகணுதியோ - வயிற்றின்கண் உள்ள கருவும் அழிந்து ஒழியும்படி எண்ணுகின்றாயோ ?

ஒருவன் - இங்கே இராமபிரான். இராமபிரானுக்கு இறப்பில்லை ; அப்படியே அவன் இறந்து போனான் என்றே கொண்டாலும், அந்த ஒருவன் பொருட்டு உலகினையும அதன்கண் உள்ள உயிர்களையும் அழிக்கக் கருதுவது நீதியா என்றாள் கோசலை. இங்கு கோசலையின் கருணை நிறைந்த உள்ளப் பாங்கினைக் காண்க. பெறல் அரும் - பெறுதற்கு அருமை; 'பெறலரும் திருப்பெற்ற பின் சிந்தனை பிறிதாம்' (அயோத்தி. மந்தரை. 70); கலைத் தருமம் நீயல தில்லெனும் தன்மையோய்' (யுத்த. 4117) உரைக் குறிப்புக் காண்க. (ஒப்பு): 'நின செய்கை கண்டு நினைந்தனவோ நீண் மறைகள், உன் செய்கை யன்னவைதான் சொன்ன வொழுக் கினவோ' (ஆரணிய. 1173); 'இயைந்த நீதி, வளையாவரு நன்னெறி நின்னறிவாகுமன்றே' (அயோத்தி. நகர் நீ. 129); நீயலதில் லெனும்; (ஒப்பு): 'நின்னலதில்லை நின்னை யொப்பு' (சுந்தர. 1271).

பி - ம். 1. மன்னுயிர், 228

4121. இறக்கை யுஞ்சில ரேகலு மோகத்தால்
பிறக்கை யுங்கட னென்றுபின் பாசத்தை
மறக்கை யும்மக னேவலி யாவது
துறக்கை தானு மென் றுள்மனந் தூய்மையாள்.

'மகனே - மகனே ! சிலர் இறக்கையும் - சிலர் மரித்தலும், ஏகலும் - விட்டுச் செல்லுதலும், மோகத்தால் பிறக்கையும் - மோகத்தால் உருவெடுத்தலும், கடன் - (உலகத்தார்க்குக்) கடமை என்று நினைந்து, பின் - பின்னர், பாசத்தை மறக்கையும் - பாசத்தை மறந்தொழிதலும், துறக்கை தானும் - (நான் எனது என்றும் அகப்பற்றுப் புறப் பற்றுக்களை) அறவே விடுத்துப் பாசம் நீங்கப் பெறுவதும், வலியாவது - (உயிர்க்கு) உறுதி தருவது', என்றாள் - என்று மொழிந்தாள், மனம் தூய்மையாள் - உளத் தூய்மை வாய்ந்த கோசலாதேவி.

நான்கடிகளிலும் முதற்சீர் கை விகுதி பெற்ற தொழிற் பெயர். மோசம் - காமக் குரோதாதி ஆறு தீய குணங்களில் ஒன்று. மோகம் - மாயையால் உண்டாகும் மயக்க உணர்ச்சி; (சி. போ. பா. 2 : 2); 'சத் சங்கத்வே நிச்சங்த்வம், நிச்சங்கத்வே நிர்மோகத்வம், நிர்மோகத்வே நிச்சல தத்வம், நிச்சல தத்வே சீவன்முத்தி' என்றது காண்க. பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலும் இந்த மயக்கத்தான் நிகழ்வது. 'பிறந்தோருறுவது பெருகிய துன்பம், பிறவா ருறுவது பெரும்பேரின்பம், பற்றின் வருவது முன்னது, பின்னதற்றோருறுவதறிக' (மணி. 7) என்றபடி பற்றே பிறப்பிற்குச் காரணம் என்பதும், பற்றற்ற நிலையே வீட்டிற் குக் காரணம் என்பதும் உணர்க. 'யானென தென்னும் செருக் கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்' (குறள். 346); 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்' (குறள். 349); 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' (பழமொழி); 'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்றுவிடற்கு' (குறள். 350) என்று வருவன காண்க.

பி - ம். 1. ஏகலும் யோகத்தால்.

3. மறக்கைகான்; வலியாவதென், வலியாதுவன்.

4. நுறக்க நாணவென்றுன்; மனத் தூய்மையாள். 229

## கோசலை சொல்லைப் பரதன் மறுத்தல்

4122. மைந்த னென்னை மறுத்துரைத் தானெனல்
எந்தை மெய்ம்மையு மிக்குலச் செய்கையும்
நைந்து போக வுயிர்நிலை நச்சிலேன்
முந்து செய்த சபத முடிப்பெனுல்.

(பரதன் கோசலையைப் பார்த்து), 'எந்தை மெய்ம்மையும்' என் தந்தை போன்றவனான இராமபிரானுடைய சத்திய வாக்கும், இ குலம் செய்கையும் - இந்தச் சூரிய குலத்தின் ஒழுக்க நெறியும், நைந்து போக - நலிந்து அழிய, உயிர் நிலை நச்சிலேன் - (நான்) உயிருடன் வாழ்தலை விழைகிலேன்; முந்து செய்த சபதம் முடிப்பென் - முன் செய்துள்ள சூளுரையை முடித்தே தீருவேன்; (ஆதலில்)

'மைந்தன் என்னை மறுத்துரைத்தான் எனல் - மகன் எனது சொற்களைத் தடுத்து மொழிந்தான் என்று மனங் கொள்ளாதே'. ஆல்: அசை.

எனல்: 'பயனில் சொற் பாராட்டு வானை மகனெனல் மக்கட் பதடி எனல்' (குறள். 196); இங்கு எனல் என்ற சொல் எதிர்மறை, உடன்பாடு என்ற இரு பொருளிலும் வந்தமை யுணர்க, பதடி எனல் என்ற இடத்து, எனல் என்னும் சொல்லெச்சம். என்று சொல்க என, சொல் என்னும் தன் எச்சத்தைக் கொண்டது. முன்னது - அல் ஈற்று எதிர்மறை வியங்கோள். எந்தை - என் தந்தை என்பதன் மரூஉ, இங்கு அன்பு பற்றிய வழுவமைதி; அன்றியும், 'எந்தையும் யாயு மெம்பிரானு மெம்முனும், அந்தமில் பெருங்குணத் திராமன் ஆதலால்' (அயோத்தி. பள்ளிபடைப். 58) என்று பரதாழ்வானே கூறியுள்ளானாதலின் தந்தை என்றே கொள்க. 'ஜ்யேஷ்டப்ராதா பிதுஸ் ஸமா' 'மாதா ராமோமத் பிதா ராமச்சந்திரகா, ப்ராதா ராமோ மத்ஸகா ராகவேசகா' என்பதும் இங்கே காணத்தகும். தந்தை யொப்பத் தமையனும் ஐம்பெருங் குரவருள் ஒருவனாகக் கூறப்பட்டிருத்தலும் ஓர்க. 'அரச னுவாத்தியான் தாய் தந்தை தம்முன்' (16) என்பது ஆசாரக் கோவை. 'எந்தை மெய்ம்மை' 'அன்பினன் உருகின னன்னதா கென்றான், தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான்' (அயோத்தி. கிளைகண்டு. 134) என்றது காண்க. இக் குலச் செய்கை - சூளுறவு தவிராமை. முந்து செய்த சபதம்: 'ஆமெனி லேழிரண் டாண்டி லையநீ, நாமநீர் நெடுநகர் நண்ணி நானிலம், கோமுறை புரிகிலை யென்னிற் கூரெரி, சாமிது சரதநின் னாணை சாற்றினேன்' (அயோத்தி. கிளைகண்டு. 133); எந்தை - தயரதனென்பார் ஒரு சாரார்.

பி - ம். 1. உரைத்தானெனில்.
2. மேன்மையும்; இக் குடி.
3. உயிரினை.
4. முந்து சொன்ன.

230

4123. யானு மெய்யினுக் கின்னுயி ரீந்துபோய்
வானு ளெய்திய மன்னவன் மைந்தனல்
கானு ளெய்திய காகுத்தற் கேகடன்
ஏனை யோர்க்கி திழுக்கில் வழக்கன்றே.

'யானும் - நானும், மெய்யினுக்கு இன் உயிர் ஈந்து-உண்மைக்காக (த் தன்) இனிய உயிரை விடுத்து, போய் - சென்று, வானுள் எய்திய மன்னவன் மைந்தன் ஆல் - விண்ணுலகடைந்த தயரத மன்னனுடைய மகன் அன்றோ? (தந்தை கட்டளையைச் சிரமேற் கொண்டு நிறைவேற்றுவது என்பது) கான் உள் எய்திய காகுத்தற்கே கடன் - காடு சென்று அடைந்த இராமபிரானுக்கே கடமை, ஏனையோர்க்கு - பிறருக்கும், இது - (சூளுறவை மேற் கொண்டு செலுத்துவது) இழுக்கு இல்வழக்கு அன்றோ - மாசற்ற வழக்காறு அன்றோ?

முதலிரண்டடிக்கு, 'வாய்மையு மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்' (கிட்கிந்தா. 305); 'ஆதிம் மறையு மருளும்' (பால. அரசியற். 2) என்றதுவும் காண்க. 'ஒன்றும் பொய்யா மன்னன்' (அயோத்தி. பள்ளிபடை. 76); 'மெய்த்திறத்து நம் வேந்தன்' (அயோத்தி. நகர் நீ. 15); 'மெய்யின் மெய்யே' (அயோத்தி. நகர் நீ. 70); 'நெறி திறம்பாத் தன்மெய்யை நிற்பதாக்கி யிறந்தான்' (அயோத்தி. குகப் 68); 'தனக்குரிய மெய்நிறுவிப் போய்' (அயோத்தி. கிளைகண்டு. 57); 'வாய்மை மன்னன்' (அயோத்தி. கைகேசி. 23); 'பொய்ப் பகை, மெய்க்கணி, வாய்மை காத்தவன்' (ஆரணிய. 195, 197); காகுத்தன் - இராமபிரான்- தத்திதாந்த நாமம்; (சுந்தர. 295, 322); 'காகுத்தன் கன்னிப் போரில்' (பால. தாடகை. 71); 'கண்ட கன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ' (பால. அகலிகை. 71); காகுத்தற்கே - ஏகாரம் தேற்றம். அன்றோ : ஓகாரம் வினா.

பி - ம். 1. ஏனை.

2. வானிலெய்திய ; மைந்தன் போற், மைந்தனுய்க்.

3. கானில் வைகிய ; காகுத்தற்கோ.

4. ஈனனேற்கு. 231

4124. தாய்சொற் கேட்டலுந் தந்தைசொற் கேட்டலும்
பாசத் தன்பினைப் பற்றற நீக்கலும்
ஈசற் கேகடன் யானஃ திழைக்கிலென்
மாசற் றேனிது காட்டுவென் மாண்டென்றான்.

'தாய் சொல் கேட்டலும் - அன்னையின் உரையைக் கேட்டு நடத்தலும், தந்தை சொல் கேட்டலும் - தந்தையின் சொல்லைக்

கேட்டு நடத்தலும், பாசத்து அன்பினை பற்று அற நீக்கலும் - அன்பு காட்டற்குரிய இடத்து அன்பை வேருடன் அழித்தலும், ஈசற்கே கடன் - சர்வ வல்லமையுள்ள இராமபிரானுக்கே முறைமையாம்; யான் அஃது இழைக்கிலென் - நான் அத்தொழில்களைச் செய்ய மனம் கொள்ளேன்; (நான்) மாண்டு மாசற்றேன் - எரிவீழ்ந்து மடிந்து குற்றம் தீர்ந்தேனாய், (இராமபிரானிடம் அன்புடைமையாகிய) இது - இந்தத் தன்மையை, சாட்டுவென் - காட்டுவேன்', என்றான் - என்று கூறினன் பரதன்.

இது பரதனுடைய நிட்டூர வார்த்தை; வாக்களித்தபடி இராமபிரான் வாராமையால் எழுந்தது; தாய் சொற் கேட்டல் தந்தை சொற் கேட்டல்; 'மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையும் கொண்டேன்'; பாசத்தன்பினைப் பற்றற நீக்கியது பரதன் சித்திரகூடத்திற் சென்று அரசனுகும்படி வேண்டின போது மறுத்தமையும், பின்னர்த்தன்து வாக்கின்படி குறித்த காலத்து அயோத்தி வாராமையும் என்று கொள்க. அஃது தொகுதியொருமை. அவ்வாறு செய்யாமல் 'தாய் சொல்லையும் கேளேன், இராமனிடம் அன்பையும் விடமாட்டேன்; ஆதலால் இறப்பேன்' என்றவாறு 'தான் கொண்ட சூளுறவினை மாண்டே நிறைவேற்றிக் காட்டுவதாகக் கூறினன்; மாண்டு காட்டுவென என்க.

பி. ம். 2. நீத்தலும்; தந்தைசொற் கேட்டலும்.

4. மாசற்றேயிது, மாசற்றேவிது. 32

இங்கு அதிகப்பாடல்கள் :—

1. மானேர் விழியா ளுடனே வருமுன்
போனல் வருநாள் ஒருநா ளுளதோ
தேனே யமுதே தெளிவே தெரிவி
னனே யுயிரே யுலகா ளுடையாய்.

2. அம்பவளச் செவ்வா யணிகடலச் செவ்வியனும்
வம்பவிழும் சோலைசூழ் கோசலையாள் மைந்தனெனும்
எம்பெருமா னென்னை யிழிக்குலத்து நாயேனைத்
தம்பி யெனவுரைக்குந் தானுவே தோன்றுயொ

3. வாழுமலை திண்டோட் சனகன்றன் மாமயிலை
யேழுலகு மாளு மிறைவன் மருமகளைத்
தாழ்வினிற் பல்மன்னுயிர்க்கும் தாயேயனையாளைத்
தோழியெனக் கொண்டுடைய தோன்றலே தோன்றல்.

## பரதனிடம் அநுமான் வருதல்

4125. என்று தீயினை யெய்தி யிரைத்தெழுந்
தொன்று பூச லிடுமுல கோருடன்
நின்று பூசனை செய்கின்ற நேசற்குக்
குன்று போல்நெடு மாருதி கூடினன்.

என்று - என்று மொழிந்து, தீயினை எய்தி - தீயினை அணுகி, (தான் திரும்புவதைக் குறித்து) இரைத்து எழுந்து ஒன்று - கூக்குரலிட்டு எழுந்து அமைந்த, பூசல் இடும் - ஆரவாரம் செய்யும், உலகோருடன் - மக்களுடன், நின்று - (தீயின் முன்) நின்று கொண்டு, பூசனை செய்கின்ற - அதற்குப் பூசை செய்கின்ற, நேசற்கு - இராமனிடம் பேரன்பு பூண்ட பரதனிடம், குன்றுபோல் நெடு மாருதி கூடினன் - மலைபோன்ற பெரு வடிவத்தினையுடைய அநுமன் வந்து சேர்ந்தான்.

நேசற்கு: உருபு மயக்கம்; இங்குக் குறிக்கப்பெற்ற செய்திகள் முதனூலில் இல்லை.

பி - ம். 1. எழுந்திரைந்து, எழுந்திரைத்து, எழுந்திரை.

2. உலகொலிட, உலகோடரு

3. நெஞ்சற்கு, நீதியிற். 233

## அநுமான் இராமபிரான் வருகையைத் தெரிவித்துத் தீயை அவித்தல்

4126. ஐயன் வந்தன னாரியன் வந்தனன்
மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீட்டினால்
உய்யு மேயவ னென்றுரைத் துட்புகாக்
கையி னலெரி யைக்கரி யாக்கினன்.

(அநுமன் பரதனைப் பார்த்து), 'ஐயன் வந்தனன் - தலைவனான இராமபிரான் வந்தனன், ஆரியன் வந்தனன் - மேலோன் வந்தான்; மெய்யின் மெய் அன்ன - வாய்மைக்கு உடல் போன்று ஆதாரமா யுள்ளவனான, (உண்மையினின்றும் பிறழாத), நின் உயிர் வீட்டினால் - உனது உயிரைப் போக்குவாயாகில், அவன் - அந்த இராமபிரான், உய்யுமே - உயிர் தரித்து வாழ்வானோ ? ' என்று உரைத்து - என்று பகர்ந்து, (அந்தப் பெருங் கூட்டத்தின்) உள் புகா - உள்ளே நுழைந்து, கையினால் எரியை கரி ஆக்கினான் - (தனது) கரத்தால் அத்தீயைப் (பிசைந்து)க் கரியாகுமாறு செய்தான்.

முன்னர் 'ஈண்டச் சென்று, தீதின்மை செப்பியத் தீயவித்து' (யுத்த. 4088); என்று உரைத்த இராமபிரான் கட்டளைப்படி செய்தான் என்பான் 'எரியைக் கரியாக்கினான்' எனப்பட்டது 'மெய்யின் மெய்' (அயோத்தி. நகர்நீ. 70)-ல் தயரதனைக் கூறியது இங்கே காண்க. புகா - புக்கு; அநுமன் வந்து குதித்த வேகத்தால் கொழுந்து விட்டெரியும் தீ யவிந்ததாக, எஞ்சிய தழலையும் கையாற் பிசைந்து கரியாகச் செய்தான் என்க.

பி - ம். 2. மெய்யவனின்னுயிர், மெய்யறினின்னுயிர், மெய்யெ நின்னுயிர் ; வீயுமேல்.

3. உய்யுமேலவன். 234

4127. ஆக்கி மற்றவ னுய்மலர்த் தாள்களைத்
தாக்கத் தன்தலை தாழ்ந்து வணங்கிக்கை
வாக்கிற் கூடப் புதைத்தொரு மாற்றநீ
தூக்கிக் கொள்ளத் தருமெனச் சொல்லினான்.

ஆக்கி - (அவ்வாறு தீயைக்) கரியாக்கிவிட்டுப் பின்பு, (அநுமன்), அவன் - அந்தப் பரதனுடைய, ஆய்மலர் தாள்களை - அழகிய தாமரை மலர்போன்ற பாதங்களை, தாக்க - பொருந்து மாறு, தன் தலை தாழ்ந்து - தனது சிரத்தாற் பணிந்து, வணங்கி - வழிபட்டு, வாக்கில் கைகூட புதைத்து - வாயிற் கைபொருந்தும் படி (கையினால் வாயினைப் பொத்திக்கொண்டு), 'ஒரு மாற்றம் - (நான் இப்போது பகரும்) ஒரு வார்த்தையை, நீ - நீ, தூக்கி கொள்ளத்தரும் - ஏற்றுக்கொள்ள வேண்டும்', எனச் சொல்லினான் -

என்று கூறினன். அச் சொற்களை அடுத்துவரும் சில கவிகளிற் காண்க.

ஆக்கி : அந்தாதித் தொடையில் வந்தது. கரியாக்கி என்பது பொருள். மற்று : வினைமாற்று; பெரியோரை வணங்குங்கால் அவர்தம் திருவடி தம் தலையிற் படுமாறு வணங்குவதும், கை கட்டி வாய் புதைத்தலும் இயல்பு என்பது இங்கு அறிக. வாக்கு : வாய் புதைத்தல்; 'சிந்துரப் பவளச் செவ்வாய் செங்கையிற் புதைத்து' (அயோத்தி. கைகேசி. 104); மாற்றம் : செய்தி; 'தீ மாற்றம் சில விளம்பி' (ஆரணிய. 341); தூக்கிக்கொள்ளத் தகும் : ஆராய்ந்து ஏற்றல் தகும் எனக.

பி - ம். 1. ஆக்க ; தாளிணை.
2. வணங்கினன்.
3. கூட்டி.
4. சொல்லுவான். 235

4128. இன்ன நாழிகை யெண்ணைந் துளவைய
உன்னை முன்னம்வந் தெய்த வுரைத்தநாள்
இன்ன தில்லை யெனினடி நாயினேன்
முன்னம் வீழ்ந்திவ் வெரியின் முடிவெனல்.

'ஐய-ஐயனே ! (இராமபிரான்), உன்னை வந்து எய்த முன்னம் உரைத்த நாள் - உன்னை வந்தடைவதாக முன்னர் மொழிந்த நாளில், இன்னம் - இன்னும், எண் ஐந்து நாழிகை உள - நாற்பது நாழிகைப் பொழுது உண்டு; இன்னது இல்லை எனின் - (நான் பகரும்) இச்சொல் பொய்க்குமாகில், அடி நாயினேன் - அடியவனை நாய்போல் இழிந்த நான், முன்னம் - (உனக்கு) முன்னமே, இவ் எரியின் வீழ்ந்து முடிவென் - இந்த அக்கினியில் விழுந்து மரிப்பேன்'. ஆல் : அசை.

பின் இரண்டடிகள் தான் சொல்லிய சொல் தவறாது என்று வற்புறுத்த வந்தன; எரியைக் கரியாக்கிப்பின் 'இவ் வெரியில் முடிவேன்' என்றது கொண்டு இதனை உய்த்துணர்க; அவ்வாறு நேர்தற்கிடனில்லை என்று பரதனைத் தெளித்தவாறு எனக. 'நாழிகை எண்ணைந்துள' என்றது இராமபிரான் திரும்பிவரக்

குறிப்பிட்டவைகல் வந்தபோதும் சில நாழிகைகள் எஞ்சியுள்ளன என்று சொல்லிக் கவலை நீக்கியவாறு. 'அடிநாயினேன்' அன்பர்கள் ஆண்டவனிடமும் பெரியோரிடமும் கூறும் பணிவுச் சொற்கள். இனி எண்ணப்பட்ட ஐந்து நாழிகை என்றும், எட்டும் ஐந்தும ஆகப் பதின்மூன்று நாழிகையென்றும் கொள்ள லாம். பாண்டவர் மறைந்து வதிய வேண்டிய ஓராண்டும் கழிந்ததோ என்று துரியோதனன் வினவியபோது, 'இன்னலே யுழந்தோர் காலம் இந்துவின் இயக்கந் தன்னால், நென்னலே கழிந்தது' என்று வீடுமன் கூறியதை இங்கு ஒப்பு நோக்குக.

பி ம். 1. ஏழுளவெம்பிரான், எண்ணைஞ்சுளந்நய.

2. உன்னை மன்னன்.

4. முடிவனுல். 236

4129. ஒன்று தானுள துன்னடி யேன்சொலால்
நின்று தாழ்த்தருள் நேமிச் சுடர் குணக்
குன்று தோன்றள வும்மிது குன்றுமேற்
பொன்று நீயு முலகமும் பொய்யிலாய்.

'பொய்யிலாய் - உண்மையினின்றும் பிறழாதவனே! (நான் பகர வேண்டுவது) ஒன்றுதான் உளது - ஒன்றுதான் உண்டு; (அது யாதெனில்), நேமி - வட்டவடிவான, சுடர் - ஒளிப்பிழம் பாகிய கதிரவன், குணக்கு குன்று - கிழக்குத் திக்கிலுள்ள உதய கிரியில், தோன்று அளவும் - தோன்றும் வரையிலும், உன் அடியேன் சொலால் - உனது அடியவனை, எனது சொற்களை நம்பி, நின்று தாழ்த்து அருள் - (தீப்புகாமல்) நின்று தாமதிப் பாயாக; (அதற்குள்ளாக இராமபிரான் வருவான்); இது குன்று மேல் - இத்தவணை கெடுமாயின், நீயும் உலகமும் பொன்றும் - நீயும் உலகமும் அழிய வேண்டிவரும்.

தாழ்த்தல்: தாமதித்தல்; 'தாழ்த்திடாமல் மின்னிடை வெந்தீத்தம்மின்' (சேது பு. சங்கர. 71); 'தாழா தேகுதி யறிஞ' (யுத்த. 433); இனி சுடர் நேமிக் குணக்குன்று என்று கொண்டு ஒளிவிடுகின்ற சுதரிசனம் என்ற ஆழிப் படையை ஏந்திய திருமாலின் அமிசமும் குணமலையுமான இராமபிரான் தோன்றும் அளவும் என்றும் கூறலாம். இங்கு எண்ணைந்து நாழிகை என்று

சொன்ன சிறிய திருவடி மறுநாள் உதயத்தைக் குறித்தது ஆராயத்தக்கது. குணக்குன்று : இராமபிரானென்றே கோடல் தகும். மற்றும் குணச் சுடர் : கிழக்கே தோன்றும சூரியன், குன்று தோன்றளவும் - அத்தமன கிரியில் சென்று நிற்கும் அளவும், எனவே அத்தமனத்தற்குள்ளாக எனினுமாம்.

பி - ம். 1. சொல.

2. தாழ்தரு, தாழ்த்திரு, தாழ்க்குறின் ; நேமி நெடுங். 237

இங்கு அதிகப்பாடல் :—

பரத்துவன் வருதலும் பரிந்தி ராமனும்
கரத்துணை குவித்தன னிணைய காளையோ
டெரித்திற முனியுமா சிகளி யம்பிட
விருப்பொடு மிடவகை யினிது மேயினன்.

4130. எங்க ணுயகற் கின்னமு தீகுவான்
பங்க யத்துப் பரத்துவன் வேண்டலால்
அங்கு வைகின னல்லது தாழ்க்குமோ
இங்க ணல்லதொன் றின்னமுங் கேட்டியால்.

'பங்கயத்து பரத்துவன் வேண்டலால் - தாமரை மலர் மாலையை யணிந்த பரத்துவாச முனிவன், எங்கள் நாயகற்கு-எமது தலைவனான இராமபிரானுக்கு, இன் அமுது ஈகுவான் - இனிய உணவளிக்க, (அதை ஏற்கும்படி) வேண்டலால் - வேண்டியதால், அங்கு வைகினன் அல்லது - அம் முனிவனுடைய ஆசிரமத்தில் தங்கினானே யன்றி, தாழ்க்குமோ - தாமதிப்பானோ? இங்கண் - இப்பொழுது, இன்னமும் - இன்னமும், நல்லது ஒன்று கேட்டி-நல்லது ஒன்றைக் கேட்பாயாக. ஆல் : அசை.

எங்கணுயகன் : 'எங்கணுயகற்கினி யாவதாங் கொலோ' (பால. மிதிலைக். 33); பிரம முனிவர் ஆகலின் பரத்துவாசருக்குத் தாமரை மாலை கூறப்பட்டது. தாமரை மணிமாலையுமாம். ஈகுவான் - வானீற்று வினையெச்சம் எதிர்காலம் காட்டிற்று. வேண்டல் - விரும்புதல் ; 'வேண்டுதல் வேண்டாமை யிலானடி' (குறள். 4); 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை' (குறள். 362) ; அங்கு - பரத்துவன் ஆசிரமத்து. தாழ்க்குமோ - ஓகாரம் எதிர்மறை

பொருள்; தாழான் என்பது பொருள். இங்கண் - இவ்விடத்து அல்லது இப்பொழுது.

பி-ம். 3. தாழ்க்குங்கொல்.

238

## அநுமன் பரதனுக்கு இராமபிரான் மோதிரத்தைக் காட்டலும் பரதன் உவகையும்

4131. அண்டர் நாத னருளி யளித்துள
துண்டோர் பேரடை யாள முனக்கது
கொண்டு வந்தனென் கோதற்ற சிந்தையாய்
கண்டு கொண்டருள் வாயெனக் காட்டினன்.

'அண்டர் நாதன் - தேவர் தேவனாகிய இராமபிரான், அருளி அளித்துளது - அருள் செய்து (என்னிடம்) தந்ததாகிய, ஓர் பேர் அடையாளம் உண்டு - ஒரு பெரிய அடையாளம் உண்டு, உனக்கு அது கொண்டு வந்தனென் - உனக்கு அது கொண்டு வந்தேன்; கோது அற்ற சிந்தையாய் - களங்கம் அற்ற எண்ணம் உள்ளவனே! கண்டு கொண்டு அருள்வாய்-அதனைப் பார்த்தருள்வாயாக'; என- என்று கூறி, (அநுமன் அவ்வடையாளமாகிய மோதிரத்தைக்) காட்டினன் - காண்பித்தான்.

அண்டர் - தேவர்; 'அண்டரே தேவராயர்' (நிகண்டு); சொல்லின் செல்வனே எனினும் தன் சொற்களில் பூரண நம்பிக்கை பரதனுக்கு ஏற்படாதென்று கருதியே கணையாழியைக் காட்டு கின்றான் சிறிய திருவடி; பிராட்டியினிடம் அநுமன் சென்று காட்டி அவளை நம்பச் செய்ததும் இக்கணையாழியே யென்பதறிக. இப் பொழுது பரதனிடம் காட்டிய மோதிரம் இராமபிரான் கட்டளைப் படி அநுமன் பிராட்டியிடம் அளித்ததோ அல்லது வேறொன்றோ ஆராய்தற்குரியது. ஒரு சமயம் பிராட்டி இராமபிரான் கட்டளைக் கிணங்கத் தீப் புகுந்தபோது கழற்றி வைத்து அது இராமபிரான் கைக்கு வந்திருத்தல் கூடும். இக் கணையாழி பிராட்டி திருமணத் தில் சனக மன்னனால் அளிக்கப்பட்டதாகும். பேர் அடையாளம் - இராமபிரான் திருப்பெயர் பொறிக்கப்பட்ட அடையாளமாகிய மோதிரம் எனினுமாம். அணிகளிடத்தும் பிறவற்றிலும் பெயர் பொறிக்கப்படுவது அக்காலத்திலும் உண்டு. அம்பிற் பொறிக்கப்

பட்ட, 'செம்மை சேர் நாமந் தன்னைக் கண்களாற் றெரியக் கண்டான்' (கிட்கிந்நா. 300) என்றது காண்க.

பி - ம். 1. அளித்தொன்று, அளித்துள.
2. உண்ட, உண்டு.
3. கோதறு; சிந்தையால்.
4. கொண்டருளாய். 239

## வேறு

## அநுமான் காட்டிய மோதிரத்தைக் கண்டு அங்குள்ளவர் யாவரும் மகிழ்தல்

4132. காட்டிய மோதிரங் கண்ணிற் காண்டலும்
ஊட்டிய வல்விட முற்று முற்றுவார்க்
கூட்டிய நன்மருந் தொத்த தாமரோ
ஈட்டிய வுலகுக்கு மிளைய வேந்தற்கும்.

காட்டிய மோதிரம் கண்ணில் காண்டலும் - (அநுமன்) காட்டிய மோதிரத்தைக் கண்களால் பார்த்தவுடன் (அம் மோதிரம்), ஈட்டிய உலகுக்கும் - (அங்கு) திரண்டுள்ள உலக மக்கட்கும், இளைய வேந்தற்கும் - (இராமனுடைய) தம்பியான பரதனுக்கும், ஊட்டிய வல் விடம் உற்று - ஊட்டப்பட்ட கொடிய விடத்தைப் பொருந்தி, (உண்டு), முற்றுவார்க்கு - இறக்கும் தருணத்தில் இருப்போர்க்கு, ஊட்டிய நல் மருந்து ஒத்தது ஆம் - ஊட்டப்பட்ட தேவாமுதத்தை நிகர்த்து இருந்தது. அரோ : அசை.

உட் கொண்டாரைக் கொல்லும் இயல்பினதாகலின் 'வல் விடம்' எனப்பட்டது. விடமுண்டு சாகும் தருணத்தில் அமுது பெற்றுயிர் நிலைக்கப் பெற்றது போன்றதென்க. 'வண்ண மோதிரம் காட்டக் கொண்டாள், இறுதியின் உயிர் தந்தீயும் மருந் தொத்தனைய தெந்தாய்' (சுந்தர. 1285); பெரு மகிழ்ச்சி பரதனுக்கு மட்டும் அல்ல உலகிற்கே உண்டாயது என்பான். 'உலகுக்கும் இளைய வேந்தர்க்கும் ஊட்டிய நன் மருந் தொத்தது' எனப் பட்டது. 'துறந்தவுயிர் வந்திடை தொடர்ந்ததுகொ லென்கோ (சுந்தர. 553); 'வீயுமுயிர் மீளு, மருந்து மெனலாகியது' (சுந்தர.

558) என்பனவும் காணத்தகும். மருந்து - அமுதம்; 'சாவா மருந்தெனினும் வேண்டற் பாற்றன்று' (குறள். 82); ஈண்டிய என்பது எதுகை நோக்கி ஈட்டிய என வலித்தது. இளைய வேந்தற்கும் உலகுக்கும் என்னுது மாற்றிக் கூறியது உலகுயிர்களின் வாழ்க்கையே பெரிதெனக் கருதி என்க. பின்னர் இராமபிரான் முடி சூடுங்கால் 'பரதன் வெண்குடை பிடிக்க' (யுத்த. 4281); என வருதலினாலும், அவனே இளவரசாக ஆதல் கூடுமாகலானும், 'இளைய வேந்தற்கு' எனப்பட்டது. இதன் முன்னர்ப் பரதனை வேந்தன் என்று குறிப்பிடப்படாமையும், இளையான் என்ற சொல் இலக்குவற்கே வழங்கப்பட்டமையும் அறிதல் தகும்.

பி - ம். 2. வெவ்விடம், நல்விடம், நீயனல்; முறுக, முருக்கி.

3. ஒத்தவாமரோ.

4. விரற்கும். 240

4133. அழுகின்ற வாயெலா மார்த் தெழுந்தன
விழுகின்ற கண்ணெலாம் வெள்ள மாறின
உழுகின்ற தலையெலா முயர்ந்தெ ழுந்தன
தொழுகின்ற கையெலாங் காலின் தோன்றலை

அழுகின்ற வாய் எலாம் ஆர்த்து எழுந்தன - (அப்பொழுது அங்கிருந்தவர்களுடைய) கதறிப் புலம்புகின்ற வாய்கள் எல்லாம் மகிழ்ச்சியால் ஆரவாரித்து நின்றன; விழுகின்ற கண் எலாம் வெள்ளம் மாறின - (கண்ணீர்) ஒழுகப் பெற்ற விழிகள் எல்லாம் நீர்ப் பெருக்கு ஒழிந்தன; உழுகின்ற தலை எலாம் - (துன்பத்தினால்) தரையை நோக்கிக் கவிழ்ந்திருந்த தலைகள் எல்லாம், உயர்ந்து எழுந்தன - (மகிழ்ச்சியினால்) நிமிர்ந்து தோன்றின; கை எலாம் காலின் தோன்றலை தொழுகின்ற - கரங்கள் எல்லாம் வாயுவின் புதல்வனான அநுமனை வணங்குவனவாயின.

அழுதவர்கள் அனைவரும் மகிழ்ச்சியுற்று ஆர்த்தனர் - கண்ணீர் விடுத்து நின்றவர்கள் அந்த அவலநிலை மாறப் பெற்றனர். உழுகின்ற தலை - குனிந்து நின்ற தலை; இத் தலைகள் நிமிர்ந்தன. காலின் தோன்றல் - மாருதி. தொழுதது; எவரும்

மகிழக்கூடிய நற்செய்தி கொணர்ந்து கணையாழியும் கொடுத்தான் ஆகலின்.

பி - ம். 1. எழுந்த நீர்.

2. மாறி முன், மாறி மண்.

3. முயன்று.

4. கையவாய். 241

4134 மோதிரம் வாங்கித்தன் முகத்தின் மேலணைத்
தாதரம் பெறுவதற் காக்கை யோவெனு
ஓதினர் நாணுற வோங்கி னுன்தொழும்
தூதனை முறைமுறை தொழுது துள்ளுவான்.

தொழும் தூதனை - (தன்னை) வணங்கி (க்கணையாழி காட்டி) நின்ற தூதனாகிய மாருதியை, முறை முறை தொழுது - பலமுறை வணங்கி, துள்ளுவான் - ஆனந்த மேலிட்டுக் கூத்தாடுபவனான பரதன், (அந்த) மோதிரம் - மோதிரத்தை, வாங்கி - பெற்று, தன் முகத்தின்மேல் அணைத்து - தனது முகத்தின்மீது அணைத்துக் கொண்டு, 'ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ - (இராம பிரானுடைய அன்பைப் பெறுதற்கு இவனுடைய) இளைத்த சரீரம் உரியதாகுமோ? எனு - என்று, ஓதினர் நாண் உற - என்று சொன்ன வர் வெட்கும்படி, ஓங்கினன் - (மகிழ்ச்சியால்) உடல் பூரித்தான்.

ஆதரம் பெறுவதற்கு ஆக்கையோ எனு ஓதினர். நாண் உற ஓங்கினன் - இந்தக் கணையாழியைக் கண்டு பூரிப்பதற்கு பரதனுடைய உடல் போதுமோ என்று சொன்னவர்கள் வெட்கமுறும் படி தேகம் பருத்தது என்க. 'ஆதரம் பெருக நெற்றியணி நிலம் தோயத் தாழ்ந்து' (குசேலோ. 2 : 190) முகத்தின்மேல் அணைத்தது நிறைந்த அன்பு பற்றி; இங்கு 'வாங்கினள் முலைக்குவையில் வைத் தனள் சிரத்தாற், றாங்கினள் மலர்க்கண்மிசை யொத்தினள் தடந் தோள், வீங்கினள் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ, டேங்கின ளுயிர்த்தனள்' (சுந்தர. 555) என்ற பிராட்டியின் செய்தி ஒப்பு நோக்கத்தகும். கும்பகன்னன் மரித்த செய்தியைக் கேட்ட பிராட்டி 'உண்டாள் உடல் தடித்தாள் வேறொருத்தி ஒக்கின்றாள்' (யுத்த. 1655); என்று வந்ததும் இங்குக் காணலாம். 'ஆழி காட்டியென் னுருயிர் காட்டினாய்' என்று பிராட்டி கூறி மகிழ்ந்து

அநுமனைப் பாராட்டிய பகுதியும் காண்க. துள்ளுதல்: 'துள்ளு மறியா மனதைப் பலி கொடுத்தேன்' (தாயு. கருணாகர. 54); 'துள்ளித் திரிகின்ற காலத்திலே யென் துடுக்கடக்கிப் பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே' (தனிப்பா.)

பி-ம். 1. முடியின்.

3. ஒதினன்; உடலுற, உடற்பெற.

4. துள்ளினன், சொல்லுவான். 242

4135. ஆதிவெந் துயரலா லருந்த லின்மையால்
ஊதுறப் பறப்பதா யுலர்ந்த யாக்கைபோய்
ஏதில னொருவன்கொ லென்ன லாயது
மாதிரம் வளர்ந்தன வயிரத் தோள்களே.

ஆதி-(இராமபிரானைப் பிரிந்தது) முதலாக, வெம் துயர் அலால்-கடுமையான துன்பமே அல்லாமல், அருந்தல் இன்மையால் (யாதொரு இன்பமும்) துய்க்காதபடியால், ஊதுற பறப்பதாய் உலர்ந்த யாக்கை-வாயினால் ஊதிய அளவில் பறக்கக் கூடியதாகி வாடின (பரதனுடைய) உடல், (மோதிரம் கண்ணுற்ற காலையில்) போய்-மாறி, (இவன் பரதன் அல்லன்), ஏதிலன் ஒருவன் கொல்-பிறிதொருவன் கொல்லோ', என்னல்-என்று எண்ணுமாறு, ஆயது - பருத்துக் காணப் பட்டது. வயிரம் தோள்கள்-உறுதியான அவனுடைய தோள்கள், மாதிரம் வளர்ந்தன-மலைகள் போன்று ஓங்கி எழுந்தன. ஏ: தேற்றேகாரம்.

வயிரம். தோள்கள் மாதிரம் வளர்ந்தன-அவனது வலியபுயங்கள் திக்குகளை யளாவும்படி வளர்ந்தன எனினுமாம். இனி அருந்தல் இன்மையால் என்பதற்கு உணவுட் கொளாமையால் என்றும் பொருள் கொள்வர் ஒரு சிலர்; ஆயினும், 'இருங்கனி காய் நுகர்ந்து' (யுத்த. 4081) என்று பரத்துவாச முனிவனும், 'தண்டலை நாட்டிருந்தே யுமக், கனத்த கந்தமுங் காயுங் கனிகளும், வனத்த வல்ல வருந்தலில் வாழ்க்கையான்' (யுத்த. 4093) என்று கம்ப நாடரும் கூறுகின்றமையின், அப்பொருள் கோடற்கில்லை. ஆதி வெந்துயர்-ஆதியான்மிகத் துன்பமுமாம். ஊதுறப் பறத்தல்: 'ஊதப் பறக்கும் உமிபோலும் குதமெனைக், காதப் பயின்ற தென்ன கண்காட்சி' (சாவித்திரி வெண்பா.); ஏதிலன்-

அயலான். 'ஏதிலா ரார்த் தமர் பசிப்பர்' (குறள். 837); 'மாதுல ஞகியு மேதிலஞகியும்' (வி. பா. 16-ஆம் போர். 1); மாதிரம் - மலையுமாம்; 'மழை தொழிலுதவ மாதிரம் கொழுக்க' (மதுரைக். 10 உரை); ஏதிலன் ஒருவன் கொலெலன்னலாயது: 'உடறடித்தாள் வேறொருத்தி யொக்கின்ருள்' (யுந்த. 1655).

பா - ம். 1. துயரினுல்.

3. ஆயினுன்.

4. அளந்தன, பொருதன. 243

4136. அழுநகு மனுமனை யாழிக் கைகளால்
தொழுமெழுந் துள்ளும்வெங் களிது ளக்கலால்
விழுமழிந் தேங்கும்போய் வீங்கும் வேர்க்குமக்
குழுவொடுங் குனிக்குந்தன் தடக்கை கொட்டுமால்.

(பரதன்) வெம் களி துளக்கலால் - மிக்க மகிழ்ச்சி தூண்டுதலால், அழும் - அழுவான்; நகும் - சிரிப்பான், அநுமனை - மாருதியை, ஆழி கைகளால் - கணையாழியைப் பெற்ற தன் கரங்களால், தொழும் - கூப்பி வணங்குவான்; எழும் - உயர எழும்புவான்; துள்ளும் - துள்ளிக் குதிப்பான்; விழும் - (சோர்வால்) தரையில் விழுவான்; அழிந்து ஏங்கும் - உள்ளமழிந்து மறுகுவான்; போய் வீங்கும் - உடல் மிகவும் பூரிப்பான்; வேர்க்கும் - உடல் வேர்ப்பான்; அ குழு வொடும் - அங்குக் கூடியிருந்த குப்பலுடனே, குனிக்கும் - கூத்தாடுவான்; தன் தடகை கொட்டும் - தன்னுடைய பெரிய கைகளைத் தட்டுவான். ஆல்: அசை.

இங்குப் பரதன் அளவு கடந்த மகிழ்ச்சியால் தன்னை மறந்து நின்ற உன்மத்தன் போன்ருன் என்று கூறப்பட்டவை; உவகையான் எழுந்த மெய்ப்பாடுகள். இங்கு இறைவனன்பில் ஈடுபட்ட பேரடியார்களின் நிலை ஒப்பு நோக்கத் தகும். 'ஆடுவார் உன் மத்தர் போற்றிரிவாரங் கைகொட்டிப் பாடுவார்' (குசேலோ 124), என்பது காண்க. 'சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் திருவார்த்தை, விரிப்பார் கேட்பார் மெச்சுவார்' (திருவாச. கோயில் மூத்த. 9); ஆழி - கணையாழி. களி - இச்சொல் சங்க காலத்துக் கள்ளுண்டதால் உற்ற மகிழ்ச்சியையே குறித்து நின்றது. பின்னர் நாளடைவில் 'உயர் பொருட் பேறு' என்ற

இலக்கணத்தின்படிப் பலவகை மகிழ்ச்சியையும் குறித்தது. (குறள். 923, 938, 939 காண்க. 'களிமடி மானி கள்வன்' (நன். பொது. 39); இவர்கள் மாணுக்கராகத் தகாதவர் என்ப. துளக்கல்-அசைத்தல். 'துளக்காலாகா நிலையும தோற்றமும்' (நன். பொது. 28).

பி-ம். 1. அழும் விழும்; கையினுல்.

2. துள்ளுறுந், துள்ளுமொய், துளங்கால்.

3. விழுமெழுந்து.

4. குளிக்கும்; கூப்புமால். 244

4137. ஆடுமி னுடுமி னென்னு மையன்பால்
ஓடுமி னேடுமி னென்னு மோங்கிசை
பாடுமின் பாடுமி னென்னும் பாவிகாள்
சூடுமின் சூடுமின் தூதன் தாளெனும்.

'பாவிகாள் - பாவிகளே! ஆடுமின் ஆடுமின் - கூத்தாடுங்கள் கூத்தாடுங்கள்', என்னும் - என்று, (எதிரில் உள்ளாரை நோக்கிச்) சொல்வான்; 'ஐயன்பால் - இராமபிரானிடம், ஓடுமின் - ஓடுமின், (எதிரேற்று) ஓடுங்கள் ஓடுங்கள்', என்னும் - என்றுரைப்பான்; 'ஓங்கு இசை பாடுமின் பாடுமின்-(இராமபிரானுடைய) வளர்ந்துள்ள புகழைப் பாடுங்கள் பாடுங்கள், என்னும் - என்று கூவுவான்; 'தூதன் தாள் சூடுமின் சூடுமின் - (இராமபிரான் வருவதாக நற்செய்தி கூறினதுமன்றி அடையாளமாகக் கணையாழியையும் கொடுத்த) தூதனுடைய பாதங்களை (த் தலைமிசை) த்தரியுங்கள் தரியுங்கள்', எனும் - என்று மொழிவான்,

எதிரில் உள்ளாரைப் 'பாவிகாள்' என விளித்தது இராமபிரானைப் பிரிந்து பதினுன்காண்டு தனித்திருக்கும் பாவம் செய்தமைபற்றியும், தன்போல் பிரிவாற்றுமையால் எரிவீழத் துணியாமை பற்றியும் என்க. சொல்லடுக்கு அளவு கடந்த மகிழ்ச்சியால் எழுந்தது; 'அசைநிலை பொருணிலை யிசை நிறைக் கொருசொல், இரண்டு மூன்று நான் கெல்லை முறை அடுக்கும்' (நன். பொது. 44) காண்க, குசேல முனிவரை வரவேற்ற கண்ணபிரான் போயழைந் திடுமினின்லே என்று மூன்று முறை கூறி,

'இலக்கண மின்மை நோக்கி யிதற்கு மேற் சொற்றூனல்லன்' (குசேலோ. 2:93) என்று மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை நயம்பட உரைத்தது இங்கே காண்டல் தகும். தாள் சூடுதல்: 'பாதமலர் சூடுகின்றிலை' (திருவாச. திருச்சதக. 31).



1438. வஞ்சனை யியற்றிய மாயக் கைகையார்
துஞ்சுவ ரினியெனத் தோளைக் கொட்டுமால்
குஞ்சித வடிகள் மண் டிலத்திற் கூட்டுற
அஞ்சனக் குன்றினின் றூடும் பாடுமால்.

'வஞ்சனை இயற்றிய-சூழ்ச்சி புரிந்த, மாய கைகையார்-மாயத் தன்மை வாய்ந்த கைகேயியார், இனி துஞ்சுவர் - இனி மனம் தளர்வார்', என - என்று சொல்லி, தோளை கொட்டும் - (தன்) தோளைத் தட்டுவான், குஞ்சித அடிகள் - வளைந்த அடிகள், மண்டலத்தில் கூடு உற-மண்டலாகாரமாக அமையும்படி சுழன்று, அஞ்சனம் குன்றின் நின்று ஆடும் பாடும் - கைம்மலை ஒப்ப நின்று ஆடிப் பாடுவான். ஆல்: அசை.

வஞ்சனை - இராமபிரானை வனம் படருமாறு செய்த சூழ்ச்சி. 'ஆழிசூழ் உலகமெல்லாம்' (அயோத்தி. கைகேசி. 107) என்ற செய்யுளிற்காண்க. கைகேயியார் என்பது கைகையார் என வந்தது. கைகேயி - தத்திதாந்த நாமம். துஞ்சுதல் - மன வலிமை குன்றிச் சோர்தல். பதினான்கு ஆண்டு வனம் படர்ந்தவன் மீட்டும் எங்கு வரப்போகின்றான் என்று எண்ணியவள், திரும்பிவரும் செய்தி கேட்டு மனம் உடைதல் இயல்பு ஆதலின்; ஒப்பு: (யுத்த. 2620) தோளைக் கொட்டுதல் - உவகையின் மெய்ப்பாடு. குஞ்சித அடி - சிறிதுயர்ந்த அல்லது வளைந்த அடி. 'குஞ்சித பாதம்' என்று நடராசப் பெருமான் திருவடி கூறப்படுதல் காண்க. மண்டிலம் - வட்டமாகச் சுற்றும் கதி விசேடம். அஞ்சனம் - மை. பரதன் கருநிறம் என்பது அறிக. இராமபிரானும் பரதனும் அஞ்சனவண்ணராவார்; எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த,

வள்ளலையே யணையானை' (பால. குலமுறை.) 'நம்பியுமென் நாயகனை ஒக்கின்ருன் (அயோந்தி. குய் :).

பி-ம். 1. மாயக் கேபியார்.

2. என்றுதன்.

3. குஞ்சிதவடியன், குஞ்சிதனடியன், குஞ்சித மண்டலம்; மண்டலங்கள் கூட்டுற, கால்கள் கூடுற, மண்டிலத்தைக் கூடுற.

4. குன்றனுன். 246

4139. வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழும்
தாதியர் தமைத்தொழுந் தன்னைத் தான்தொழும்
ஏதுமொன் றுணர்குரு திருக்கு நிற்குமால்
காதலென் றதுவுமோர் கள்ளின் தோற்றமே.

வேதியர் தமை தொழும் - (பரதன்) ஆங்கிருந்த பிராமணர்களை வணங்குவான்; வேந்தரை தொழும் - மன்னர்களை வணங்குவான்; தாதியர் தமை தொழும் - பணியாற்றும் ஏவல் மகளிரை வணங்குவான்; தன்னை தான் தொழும் - தன்னைத் தானே வணங்குவான்; ஏதும் ஒன்று உணர்குருது இருக்கும் நிற்கும் - யாதொன்றையும் அறியாமலே இருப்பான்; நிற்பான், காதல் என்று அதுவும் ஓர் கள்ளின் தோற்றமே - அன்பு என்று கூறப்படுவதும் ஒரு கள்ளின் இயல்பினையுடையதே. ஆல்: ஈற்றசை.

கீழே குறிப்பிடப்பட்ட சிறப்புப் பொருள்களை ஈற்றடியிற் கூறிய பொருள் விளக்க வந்ததனுல் வேற்றுப் பொருள் வைப்பணி. முன்னர் 'களித்தவின் களி கள்ளினிற் காட்டுமோ' (யுத்த. 3915)ம் அதன் உரையும் காண்க. 'தன் மந்திரம் பிராமணாதீனம், பிராமணு மமதேவதா' என்பது கொண்டும், 'கரிய மாலினும் கண்ணுதலானினும், உரிய தாமரை மேலுறை வானினும், விரியும் பூத மொரைந்தினு மெய்யினும், பெரிய ரந்தணர்' (அயோத்தி. மந்தரை. 7) என்ற பிரம புத்திரனுகிய வசிட்டன் உரை கொண்டும், வேதியரை முன்னர் வணங்கினுன். 'இறைஞ்சுக பெரும நின் சென்னி, நான் மறை முனிவர் ஏந்து கையெதிரே' (புறநா. 6); என்ருர் காரிகிழார். இங்குக் குறிக்கப் பெற்ற வேதியர் பிறப்பான் மட்டுமன்றி,

கல்வி கேள்வி யொழுக்கங்களால் சிறந்த பெரியார் என்க. இங்கு 'இருமூன்றெய்திய, வியல்பினின் வழாஅது' (திருமுரு. 177, 187) எனத் தொடங்கும் வரிகளைக் காண்க. இனி 'தனக்குச் சம மானவர் ஆகலின் வேந்தரை வணங்கினான்; அடுத்து, தன் மனை யில் ஏவல் புரியும் பெண்களைக் கண்டு, அவர்கள் புரிந்த புண்ணி யத்தின் பயனே இராமபிரான் மீண்டும் நகர்க்கு வந்தது என்று அவர்களையும் வணங்கினான். முடிவாகத் தன் அதிட்டமே இராம பிரானை நகர்க்கு மீட்டும் வரச் செய்தது என்று கொண்டு தனக் குத் தானே வணக்கம் செலுத்தினான். அண்ணனும் அவனைச் சார்ந்தோரும் வந்தமை குறித்தேனும், மற்றும் நடைபெற வேண்டிய அலுவல்களைப் பற்றியேனும், அரசியலைக் கருதியேனும், செய்ய வேண்டுவது யாது என்று ஒன்றும் அறியாதவன் போன்றிருப்பான். அசையாமல் ஒரே இடத்தில் தம்பம்போல் நிற்பான். இவ்வாறு அவன் தன் வயமிழந்து நின்றது கொண்டே உடன் பிறப்புப் பாசத்தால் நிகழ்ந்த அவனது அளவுகடந்த மகிழ்ச்சியும், கட் குடித்தவன் மகிழ்ச்சிபோற் காணப்பட்டது என்க. இக் கருத்துக்களைக் கம்பநாடரே கூற அவற்றைச் செவி யேற்று நின்ற கொங்குதேச மன்னன், பணியாற்றும் தொழுத்தை களாகிய தாதிகளை முடி மன்னன் வணங்கியது உலக நடைக்கு மாறாக உள்ளது என்று கூற, அதற்குக் கல்வியிற் பெரியார், மகிழ்ச்சி மேலீட்டினால் தன்வச மிழந்த செயல் அது என்றும், ஆகவே அது குற்றமாகாது என்றும், எல்லாவற்றிற்கும் மேலாகப் பரதன் தன்னையே பிறிதொருவனாக நினைந்து, தன்னைத்தான் வணங்கியதே பெரு வியப்பு என்றும் கூறக்கேட்டு அனைவரும் மகிழ்ந்தார்கள் 'என்று விநோதரச மஞ்சரி கூறும். இங்கு இராவணன் வதை செய்து திரும்பிய இராமபிரான் முடிசூடப் போகின்றான் என்று கேட்டு நகர மாந்தர்கள் பேருவகையைக் குறிக்கும் 'வேசியருடுத்த கூறை வேந்தர்கள் சுற்ற, வெற்றிப், பாசிழை மகளிராடை யந்தணர் பறித்துச் சுற்ற, வாசமென் கலவைச் சாந்தென் றனையன மயக்கந் தன்னாற், பூசினர்க் கிரட்டி யானார் பூசலாற் புகுந்துளோரும்' (யுத்த. 4257) என்ற பாடல் காணத்தகும். மற்றும் 'நாடினான் தருவ னென்ற நல்லறி வாளன் நாளும், தேடி நான் முகனுங் காணாச் சேயவன் சிரித்த லோடும், ஆடினா னாடிப் பாடி யரற்றினான் சிரத்திற் செங்கை

சூடினன் தொழுதான் ஓடி யுலகெலாம் துகைத்தான் துள்ளி' (யுத். 257) என்று வரும் பிரகலாதன் பேருவகையாற் புரிந்த செயல்களும் காணத்தகும். இங்கு, தான் வேறு உலகத்துள்ள பொருள்கள் வேறு என்ற வேறுபாட்டுணர்ச்சியின்றி அத்துவித ரீதியில், அகம்பிரமம் என்ற யசுர்வேத வாக்கியத்தின்படி நடந்த பரதனது செயல் பாராட்டத் தக்கது. மற்றும் இவன் எண்ணம் முழுவதும் இராமபிரான்மீதேயாதலின், ஓர் பெருங் காமுகனுக்குக் கோடும் குணமும் குணத்தருகே நின்ற குன்றுகளும், காடும் செடியும் அவன் காமுற்ற வடிவாகவே காணப்படுவது போன்று வேதியரும் வேந்தரும் தாதியரும் என்ற அனைவரும் இராம்பிரானாகத் தோற்றமளிக்க மகிழ்ந்தான் எனினுமாம். தன்னைத்தான் தொழுததும் தானே பிரமம் என்று கருதிய பிரம வணக்கமாகவே கொள்க.

பி-ம். 3. உணர்ந்திலன்; நிக்குமால்.
4. கள்ளிற் ரேன்றிற்றே, கள்ளிற் ரேன்றுமால். 247

## பரதன் அனுமனைப் பாராட்டி 'நீ யார்?' என்றல்

4140. அத்திறத் தாண்டகை யனுமன் தன்னைநீ
எத்திறத் தாயெமக் கியம்பி யீதியால்
முத்திறத் தவருளே யொருவன் மூர்த்திவே
ருெத்திருந் தாயென வுணர்கின் ரேனென்ருன்.

அ திறத்து-(கீழே கூறிய) அந்தத் தன்மைகளை யுடைய, ஆண் தகை - ஆண்மைத் தகுதி வாய்ந்த பரதாழ்வான், அநுமன் தன்னை - அநுமானை (ப் பார்த்து), 'நீ எ திறத்தாய் - நீ எத் தன்மை யுடையவன்? எமக்கு இயம்பி ஈதி - எமக்குக் கூறியருள் வாயாக', (வேறு நீ தனிப்பட்டவனாகக் காணப்படினும்) முத்திறத் தவர் உளே - திரிமூர்த்திகளில், மூர்த்தி வேறு ஒருவன் ஒத்திருந் தாய் - ஒருவனாக வேறு வடிவன் போன்று காணப்பட்டாய்; என - என்று, உணர்கின்றேன் - தெளிகின்றேன்', என்ருன் - என்று பகர்ந்தான் பரதன். ஆல்: அசை.

இயம்பி ஈதி - சொல்லுவாயாக. முத்திறத்தவர் - பிரமன், திருமால், சிவன். மூர்த்தி ஒருவன் ஒத்திருந்தா யென மொழி

மாற்றுக. இங்கு அநுமனைக் கண்டு இராவணன் வினவின, 'நேமியோ குலிசியோ'; 'நின்றிசைத் துயிர்கவர்; அந்தணர் வேள்வியினுக்கி' (சுந்தர. 1112, 1113, 1114) என்று செய்யுட்கள் ஒப்பு நோக்கத் தகும். அசாதாரணமான ஆற்றலும் பெருந் தோற்றப் பொலிவும் வாக்கு வன்மையும் ஆண்மையும் உள்ளவனு கலின் பெரும் பெயர் மூர்த்திகளோடும் பிறரோடும் ஒப்பிட்டுக் கூறப் பட்டது என்க. 'இங்கரர் சம்புமாலி கேடிலா வைவரென்றிப், பைங் கழலரக்கரோடு முடன்சென்ற பகுதிச் சேனை, யிங்கொரு பேரு மீண்டா ரில்லையேற் குரங்க தென்தாய், சங்கர னயன்மா லென்போர் தாமெனுந் தரத்ததாமே' (சுந்தர. 990) என்ற கவியும் ஒப்பு நோக்கத் தகும். 'வில்லார்தோ ளிளைய வீர விரிஞ்சனோ விடை வல்லானோ' (கிட்கிந்தா. 61) என்பது இராமபிரான் கூற்று; இயம்பியீதி - ஈ துணைவினை. எத்திறத்து: 'எத்திறத்தாள் ஈர்ங் கோதையாள்' (நாலடி. 46).

பி - ம். 2. எனக்கு ; இயம்பிக் காட்டெனு.

3. மூந்திறத் தேவருள் ; மூர்த்தியோடு, மூர்த்திதான்.

4. உணர்கின்றேனுனை, உணரக் கூறினன். 248

4141. மறையவர் வடிவுகொண் டணுக வந்தனை
இறைவரி னொருத்தனென் றெண்ணு கின்றெனென்
துறையெனக் கியாதெனச் சொல்லு சொல்லென்றான்
அறைகழ லனுமனு மறியக் கூறுவான்.

'மறையவர் - வேதம் வல்லவரான பிராமணருடைய, வடிவு கொண்டு - உருத்தாங்கி, அணுக வந்தனை - சேர வந்தனை ; (ஆனாலும் உன்னை), இறைவரின் - தலைமைக் குணத்தை யுடைய மும்மூர்த்திகளில், ஒருத்தன் என்று எண்ணுகின்றனென் - ஒருவன் என்று ஊகிக்கின்றேன் ; துறை யாது - உன் வரலாறு யாது. என - என்று, எனக்கு - எனக்கு, சொல்லு சொல்லு - விரைவாகச் சொல்வாயாக', என்றான் - என்று வேண்டினான் ; அறைகழல் அநுமனும் அறிய கூறுவான் - ஒலிக்கின்ற வீரக் கழலினையுடைய சிறிய திருவடியும், (தன் வரலாற்றை) விளங்குமாறு மொழிவான் ஆயினன் ; அதனை அடுத்த இரண்டு செய்யுட்களில் காண்க.

மறையவர் வடிவு கொண்டணுகியது - ஏனையோர் யாவரும் போலாது மன்னர் முதலாக உள்ளவர்களின் மனையில் தடையின்றிப் புகும் உரிமையுள்ளவர் என நூல்கள் கூறுதலில் மறையவர் வடிவு கொண்டான் என்பது புலப்படும். கிட்கிந்தா காண்டத்தில் இராமர் இலக்குவர் முன்பு, அநுமன் பிராமண மாணியாகச் சென்றமையும் காண்க. 'இறைவரி னொருத்தனென் றெண்ணு கின்றனன்' கீழ்க் கூறிய கருத்தையே மீட்டும் அநுவாதம் செய்கின்றான் பரதன். துறை - வாழ்க்கைப் பகுதி. சொல் சொல் என்றது விரைவுக் குறிப்பு, ஆதரத்தான் எழுந்தது. உகரம் சாரியை, 'சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சான்' (குறள். 647); என்றபடி வாக்கு வன்மையுள்ளவன் ஆதலின் 'செலச் சொல்லுவார்' என்றபடி அறியக் கூறுவான் எனப்பட்டது. அறைகழல் - வீரச் சின்னமாக ஒற்றைக் காலில் அணியப்படும் ஓர் அணி விசேடம்; 'அறைகழ லிராமனுகி' (கிட்கிந்தா. 360) என்ற வாலி கூற்றைக் காண்க.

பி - ம். 1. அணுகி.
2. இறைவனில்.
3. ஆரென ; சொல்வாயென்றான், உணர்த்துவாய் ; சொல்லுமென்று.

## அநுமன் தன் வரலாறு கூறித் தன் பேருருவத்தைக் காட்டுதல்

4142. காற்றினுக் கரசன்பாற் கவிக்கு லத்தினுள்
நோற்றனள் வயிற்றின்வந் துதித்து நும்முனற்
கேற்றிலா வடித்தொழி லேவ லாளனேன்
மாற்றினெ னுருவொரு குரங்கு மன்னயான்.

'மன்ன - அரசே! யான் ஒரு குரங்கு - யான் ஓர் குரங்கு; காற்றினுக்கு அரசன்பால் - காற்றுக்கு அதி தேவதையான வாயு பகவான் மூலமாக, கவி குலத்தினுள் - வானர சாதியினுள், (புதல்வர்ப் பேற்றைக் குறித்து) நோற்றனள் - தவம் புரிந்தவளான அஞ்சனா தேவியின், வயிற்றில் வந்து உதித்து - வயிற்றில் வந்து பிறந்து, ஏற்றிலா நும்முனற்கு - ஒப்பில்லாத நுமது தமையன் ஆன இராமபிரானிடம், அடி தொழில் ஏவல் ஆளனேன் - அடிமைத் தொழிலை யுடைய பணியாளனாக உள்ளேன்; உருமாற்றி

னென் - என்னுடைய இயற்கையான வடிவை மாற்றி மானிட உருக்கொண்டு வந்தேன்.

வாயு பகவானுக்கும் அஞ்சனா தேவிக்கும் மகவாகப் பிறந்தவன் அநுமன் என்பது முன இரண்டடிகள் குறிப்பிடப் பெற்றது. 'யான் காற்றிற் வேந்தற் கஞ்சனை வயிற்றின் வந்தேன் நாமமும் அநுமன் என்றான்' (கிட்கிந்தா. 58); 'நன்னெடுங் காலின் மைந்தனுமமு மநும னென்றான்' (சுந்தர. 519); அநுமனைப் போன்ற பேராற்றலும் அறிவும் பணிவும் கொண்ட ஓர் பெருமகனைப் பெற நோன்பாற்ற வேண்டுமாகலின் 'நோற்றனள்' எனப் பட்டது. 'நற்பாலர் வேண்டின் உமை யம்மையார் தவம் நாடுக' (பாஸ்கர சேதுபதி); உமையம்மையார்: வடமொழி தென்மொழி நிலை கண்டுணர்ந்த மாதவச் சிவஞான சுவாமிகளின் அன்னையார். 'மகன் தந்தைக் காற்று முதவி யிவன் தந்தை, என்னோற்றான் கொல்லெனும் சொல்' (குறள். 70); (ஒப்பு): 'அழகிவளைத் தவம் செய்து பெற்றது காண்' (பால. கார்முக. 17); அடித் தொழில் - அடிமைத் தொழில். குரங்குரு மாற்றினென் - நினைத்த வுருக் கொள்ளுதல் அட்டமா சித்தியின் வன்மையால் இயைவது. இவ்வாறு கொள்பவரைக் காமரூபி யென்பர் வடநூலார். ஏற்றிலா - ஏவலாளன் எனினுமாம்.

பி - ம். 1. அரசனுல் ; கவிக்கயல் வந்த.

2. நோற்றுளாள் ; நும்முறேற்கு.

3. ஆற்றல் சாலடியருக் கடியனேயென, ஏவலாளன் யான்.

4. மன்னனே. 250

4143. அடித்தொழில் நாயினே னற்ப யாக்கையைக்
கடித்தடந் தாமரைக் கண்ணி னேக்கெனுப்
பிடித்தபொய் யுருவினைப் பெயர்த்து நீக்கினன்
முடித்தலம் வானவர் நோக்கின் முன்னுவான்.

'அடி தொழில் நாயினேன் - (இராமபிரானுக்குக் குற்றேவல் புரியும், நாய்போற் கடைப்பட்டவன் ஆன என்னுடைய, அற்ப யாக்கையை - சிறிய குரக்குடலை, கடி தட தாமரை கண்ணின் நோக்கு - நறுமணமுள்ள பெரிய தாமரை போன்ற விழிகளால் காண்பாயாக', என - என்று கூறி, பிடித்த - தான் மேற் கொண்ட,

பொய் உருவினை பெயர்த்து நீக்கினன் - பொய் வடிவினை மாற்றி ஒழித்தவனாகி, முடி தலம் - (தனது) தலைப் பக்கம், வானவர் நோக்கின் முன்னுவான் - தேவர்களின் பார்வையில் எதிர்ப் படவளர்பவனானான்.

அடித் தொழில்; முன் செய்யுட் கண்ணும் வந்துள்ளமை காண்க. அற்ப யாக்கை என்று கூறிப் பின்னர் விண்ணையும் முட்டும்படி பேருருக் கொண்டதன் நயம் அறிந்து மகிழற்பாலது. கடி - நறுமணம். 'கடியென் கிளவி' (நன். உரியியல். 16) என்ற நன்னூல் காண்க. பிடித்த பொய் உருவு - கைக்கொண்ட பொய் உருவம். உருவினைப் பெயர்த்து - உருவினை மாற்றி. முன்னுதல் - எதிர்ப்படுதல். 'கதிர்முலைக் கன்னிமார்பம் முன்னினர் முயங்கின னல்லால்' (சீவக. 483); தடம் தாமரை - குளத்திற் பூத்த தாமரை எனினுமாம். தடம் - நீர்நிலை. (பிங்.) இராமபிரான் முன்னர்க் காட்டிய விசுவரூபம் இங்கு ஒப்பு நோக்கத் தகும். (கிட்கிந்தா. 73, 74, 75); மேலும் 'இத்துணைச் சிறியதோ ரெண்ணில் யாக்கை யைத், தத்தினை கடலது தவத்தின் ஆயதோ' (சுந்தர. 586) என்று பிராட்டி வினவச் சிறிய திருவடி, 'மேக்குயர், எட்டரு நெடுமுக டெய்தி நீளுமேல், முட்டுமொன் றுருவொடு வளர்ந்த மூர்த்தியான்' (சுந்தர. 587) என்றதும் காண்க.

பி - ம். 1. அருப்ப யாக்கையை.
2. கண்ணிற் காணொறு.
3. பெயர்ந்து நீங்கினன்.
4. நோக்கின் முந்துவோன், நோக்கி முற்றுவார். 251

## அதைக் கண்டவர்கள் வியப்பும் அச்சமுங் கொள்ளப் பரதன் உருவினைச் சுருக்குமாறு வேண்டுதல்

4144. வெஞ்சிலை யிருவரும் விரிஞ்சன் மைந்தனும்
எஞ்சலி லதிசய மிதுவென் றெண்ணினர்
துஞ்சில தாயினுஞ் சேனை துண்ணென
அஞ்சின தஞ்சனை சிறுவ னாக்கையால்.

அஞ்சனை சிறுவன் ஆக்கையால் - அஞ்சனா தேவியின் புதல் வனான அநுமனது (பெரிய) சரீரத்தைக் கண்ணுற்று, வெம் சிலை

இருவரும் - கொடிய வில்லை யேந்திய (பரதன் சத்துருக்கினன் என்ற) இருவரும், விரிஞ்சன் மைந்தனும் - பிரம புத்திரனான வசிட்ட முனிவனும், இது - இந்த உரு, எஞ்சல் இல் அதிசயம் - குறைவற்ற புதுமையாக உள்ளது' என்று எண்ணினர் - என்று நினைந்தார்கள்; சேனை - அருகிலிருந்த சேனை, துஞ்சிலது ஆயினும் - (பயங் கொண்டு) இறந்து பட்டிலதாயினும், துண் என அஞ்சினது - திடுக்கிட்டுப் பயந்தது.

இங்கு வெஞ்சிலை, இருவரும் என்ற சொற்றொடர் ஆராயத் தக்கது; (பால. திருவவ. 127: 128); அநுமன் நற்செய்திகளைக் கூறிக் கணையாழி கொடுத்திருந்த போதினும், திடீரென எதிர்பாராத ஓர் பயங்கரமான பேருருவம் கொண்டான் ஆதலின் இங்ஙனம் கூறினர். இங்கு அநுமனைப் பலவாறு சங்கித்து முடிவாக 'அரக்கனே யாக வேறோர் அமரனே யாக' (சுந்தர. 515); என்று கூறிப் பிராட்டி துணிந்து, அவன்பால் உரையாடியதை ஒப்புக் காண்க. வெஞ்சிலை யிருவருமே அஞ்சினர் என்க. விரிஞ்சன் மைந்தன் - வசிட்ட முனிவன். 'தேன்தரு மலருளான் சிறுவ' (அயோத்தி. கிளைகண்டு. 126); 'வரச ரோருகன் மகன்' (பால. திருவவ. 5); 'நான் மறைத் திசைமுகன் திருமகன்' (அயோத்தி. மந்திர. 34); 'கோமலரோன் பெற்ற பெருமைத் தவ முனிவன்' (அயோத்தி. கிளைகண்டு. 69); என்பன காண்க. விரிஞ்சன் - பிரமன். யுத்த. 130, 3245; கிட்கிந்தா. 61, 986. எஞ்சுதல் - குறைதல். அதிசயம் - வியக்கத்தக்க செய்தி. 'அதிசய மொருவரா லமைக்க லாகுமோ' (ஆரணிய. 997); 'அதிசய மளிப்பதற்கு' (ஆரணிய. 572); சேனை, மரண பயத்துக்கு ஒப்பான பயத்தை யுற்றது என்க. அஞ்சனை சிறுவன்: 'அஞ்சனைக்கொரு சிறுவன்' (கிட்கிந்தா. 47).

பி-ம். 3. துஞ்சில தென்னினுஞ், துஞ்சுவ தெனவிருந்; தூக்கமுற்று.

4. ஆக்கையை.

252

4145. ஈங்குநின் றியாமுனக் கிசைத்த மாற்றமத்
தூங்கிருங் குண்டலச் செவியிற் சூழ்வர
ஓங்கலில் உயர்ப்புறு முலப்பில் யாக்கையை
வாங்குதி விரைந்தென மன்னன் வேண்டினன்,

'அ-அழகிய, ஈங்கு நின்று-இங்கே (பூமியில்) நின்றுகொண்டு யாம் - நாங்கள், உனக்கு இசைத்த மாற்றம் - உனக்குச் சொல்லும் சொற்கள், தூங்கு - தொங்குகின்ற, இரு - பெரிய, குண்டலம் - குண்டலங்களை யணிந்த, அ செவியில் சூழ்வர - (உன்னுடைய) அந்தக் காதுகளில் சுழலா நிற்க, ஓங்கலில் - மலை போன்று, உயர்ப்பு உறும் - உயர்ந்து விளங்கும், உலப்பில் யாக்கையை - உனது குறைவில்லாத இப் பேருடலை, வாங்குதி - அடக்கிக் கொள்வாயாக', என - என்று, மன்னன் வேண்டினான் - பரத மன்னன் (அநுமனை) இரந்தான்.

நின்றியாம் - குன்றிய லிகரம். 'யகரம் வரக்குறளுத் திரியிகரம்' (நன். எழுத்தியல். 38); மாற்றம் - செய்தி. 'மாற்ற மங்கலம்' (யுத்த. 174); 'தீ மாற்றம் சில விளம்பி' (ஆரணிய. 341); தூங்குதல் - தொங்குதல்; 'தூங்கு சிறை வாவலுறை தொன் மரங்க ளென்ன' (சீவக. 498); 'தீஞ்சுவை நசைஇல தூங்குசிறை வாவல்' (பெருங். 1 : 52 ; 71); குண்டலச் செவி, இந்தக் குண்டலம் அநுமன் பிறந்த போழ்தே உடன் பிறந்ததாக முதனூல் கூறும். 'பொலன் கொள் சோதிக், குண்டல வதனமென்றுற் கூறலாம் தகைமைத் தன்றால்' (கிட்கிந்தா. 74); யாக்கையை வாங்குதி-உடலைச் சுருக்கிக் கொள்வாயாக. விரைந்து என என்பது விரைந்தேன என நின்றது.

பி - ம். 1. நின்றுனக்கியான் ; மாற்றந்தான்.

2. குண்டலஞ் ; துன்னுற. 253

## அநுமனுக்குப் பரதன் பரிசு கொடுத்தல்

4146. சுருக்கிய வுருவனைத் தொழுது முன்னின்ற
அருக்கன்மா ணவகனுக் கைய னன்பினால்
பொருக்கென நிதியமும் புனைபொற் பூண்களின்
வருக்கமும் வரம்பில நனிவ ழங்கினான்.

ஐயன் - பரதன், அன்பினால் - அன்புடன், சுருக்கிய - (தனது கோரிக்கையின்படி) சிறிதாக்கிக் கொண்ட, உருவனை - வடிவினை உடையவனாகி, தொழுது - வணங்கி, முன் நின்ற - தன் முன்னர் நின்ற, அருக்கன் மாணவகனுக்கு - கதிரவன் சீடனான அநு

மனுக்கு, பொருக்கென - விரைவாக, நிதியமும் - செல்வத்தையும், புனை-பூணத்க்க, பொன் பூண்களின் வருக்கமும் - பொன் ஆபரணங்களின் வகைகளையும், வரம்பில - எல்லை யற்றனவாக, நனி வழங்கினான் - மிகுதியாக அளித்தான்.

அருக்கன் மாணவன்; உத்தர காண்டம் அநுமப் படலம் காண்க. 'காதனான் முகனாலும் கணிப்பரிய கலையனைத்தும் கதிரோன் முன்சென, ஞேதினன் ஓதநீர் கடந்துபகை கடிந் துலகை யுய்யக் கொண்டான்' (யுத்த. 408); 'பண்டை நூற் கதிரோன் சொல்லப் படித்தனன் படிவ மம்மா' (கிட்கிந்தா. 74); 'ஆம்பலம் பகைஞன் றன்னோ டயிந்திர மமைந்தோ னன்னாய்' (யுத்த. 3277).

பி - ம். 2. மாறுக்கனை யையன் மேயினன்.

3. நிதிகளும்; பூண்களும்.

4. வனத்திடைப் புகுந்த தன்மையை, ஒருக்கியென் னுணர்வுற வுணர்த் தியா லென்றான். 254

4147. கோவொடு தூசுநற் குலம ணிக்குழாம்
மாவொடு பரிக்குலம் வாவு தேரினம்
தாவுநீ ருடுத்தநற் றரணி தன்னுடன்
ஏவருஞ் சிலைவலான் யாவு நல்கினான்.

ஏவரும் சிலை வலான் - அம்பு செலுத்தற்குரிய வில்லாற்றலில் மிக்க பரதன், (மேலும்) கோவொடு - பசுக்களையும், தூசு - ஆடைகளையும், நல் குலம் மணி-சிறந்த சாதி நவரத்தினங்களின், குழாம் - திரள்களையும், மாவொடு - யானைகளையும், குலம்பரி - சாதிக் குதிரைகளையும், வாவு - தாவிச் செல்கின்ற, தேர் இனம் - தேர்த் தொகுதிகளையும். தாவும் நீர் உடுத்த - தத்திப் பாய்கின்ற நீர் சூழ்ந்த, நல் தரணி தன்னுடன், செழிப்புள்ள நிலங்களையும், யாவும், (மற்றும்) எல்லாப் பொருள்களையும், நல்கினான் - கொடுத்தான்.

குலமணி - சாதி மாணிக்கம் முதலியன, தரணி - பூமி. ஏ - அம்பு; 'ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப' சிலை வலான்;

'இந் நெடுஞ் சிலை வலானுக் கேவல்செ யடியன் யானே' (கிட்கிந்தா. 70).

பி. ம். 1. தூசினங்.........குலம்

2. கரிந்திரள், கார்த்திரள்; தேர்க்குலம்.

3. உடுத்நவத்; மற்றெலாம்.

4. யாது நல்கினன், தூதற் கிந்தனன். 255

இங்கு அதிகப் பாடல்கள் என்பது ஐயரவர்கள் குறிப்பு.

இங்கு அதிகப் பாடல்கள் :—

1 நின்றவ னிவ்வயி னெடிய வன்றனைச்
சென்றிறைப் பொழுதினிற் கொணர்வென் சென்றெனாப்
பொன்றிணிப் பொலங்கழல் வணங்கிப் போயினான்
வன்றிறல் மாருதி வளர்ந்த கீர்த்தியான்.

வேறு

2 ஆய காலையி லயனைக் கொண்டுதன்
தூய காலி னுறைவிடந் துன்னினான்.
மேய சேனைக் கமைப்பென் விருந்தெனாத்
தீயி னாகுதி செங்கையி னேக்கினான்.

வேறு

3 பான நெய்யொடு நானமும் சாந்தமும் பலவும்
ஆன வெள்ளிலை யோடடைக் காய்கருப் பூரம்
தேன ளாவிய முக்கனி காயொடு தேன்பால்
வான நாட்டர மங்கையர் மகிழ்ந்து கொண் டிழிந்தார்.

வேறு

4 கங்கைதரு கழலாற்கு மிளவலுக்குங் காரிகைக்கும்
துங்க முடி வீடணற்கும் சுக்கிரீவப் பெருமாற்கும்
தங்கு பெரு சேனைக்கும் தனித்தனியே பொற்கலத்தால்
அங்கடை வின் மண்டலமிட் டணிவிளங்க
[நிறைத்தனரால்.

5 வெள்ளை நறும் போனகமு மிகுபருப்பும் பொரிக்கரியும்
தள்ளரிய முக்கனியும் சருக்கரையும் நறுநெய்யும்
எள்ளரிய பலவிதத்துக் கறியமுது மிமையவர்தம்
வள்ளல்முத லனைவோர்க்கும் வரிசைமுறை
[படைத்தனரால்.

6 நீருலவி நீர்குடித்து நினைத்திருந்தா குதிபண்ணிக்
காருலவு மேனியனுங் காரிகையும் இளங்கோவும்
தேரிரவி திருமகனும் தென்னிலங்கைப் பெருமானும்
போரினுயர் சேனையுடன் போனகம்பற் றினர்பொலிவால்.

வேறு

7 இரவி காதலன் இலங்கையர் கோனிவ ருதவி
அரச ருசைய தென்னலா மனுமனே யென்பான்
விரவு காதலின் நீசெய்த வுதவிக்கு வேறு
தருவ தொன்றிலை யுடனுணுந் தரமது வல்லால்.

8 கொற்ற வன்னுட னுண்ணுமோ கோதின்மா தவனே
வெற்றி வீரனே யெனவஞ்சி நின்றனன் விமலன்
மற்றப் போனக மொருகைவாய் வைத்தபின் வாராப்
பற்றி யப்பொழு தநு மனும் பரிகலம் பரித்தான்.

9 பரிக லத்தமு தேந்தியே பந்திக டோறும்
இரவி காதலற் கங்கதற் கிலங்கையர் வேந்தற்
குரிய வீரர்கட் களித்துத்தா னவர்களோ பாதி
வரிசை யாலுண்ண மாமுனி விருந்துமுண் டனரால்.

10 அன்ன காலையிற் போனக மமரர் பொற் கலத்தே
முன்னம் போற்படைத் துத்திரு முன்புவைத் தனரால்
உன்னும் பேருல கனைத்து முண் டும்பசி தீரா
மன்னன் மாமுனி விருந்துமுண் டகமகிழ்ந் தனனால்.

11 பான நல்லமு துடன்கருப் பூரமும் பலவும்
ஏனை வானவர் மகளிர்க ளேந்திமுன் நிற்பத்
தான மெய்ப்படைத் தம்முடைப் போகத்துட் டந்த
ஆன கற்பக நாட் டமிழ் தென்பது மயின்றான்.

12 அண்ணல் மாமுனி யருளிய போனக மளக்கர்
வண்ணனே முதல் வாநரக் கடலெலாம் வாய்ப்பெய்
துண்ணும் வாசகம் கேட்டிமை யோர்முனி வோரும்
மண்ணு நாகரும் யாவரு மருந் துயர் மறந்தார்.

13 மான வேந்தரும் வள்ள லு மலர்க்கரம் விளக்கி
ஆன வெள்ளிலை யோடடைக் காயமு தருந்தி
ஞான மாமுனி பெருமையைப் புகழ்ந்துநா யகனும்
பானல் வேல்விழி யாளொடும் படையொடு மிருந்து.

வேறு

14 ஆரிரு ளகலுங் காலை யமலனு மறையோன் பாதம்
ஆர்வமோ டெழுந்து சென்று வணங்கலு மவனுமாசி
சீரிது கூறிச் சேறி யென்றலும் தேர்மேற் கொண்டு
சீரிய தானை யோடுஞ் சிறப்பொடு மகிழ்ந்து சென்றான்.

வேறு

15 விருந்து முண்டுமா முனிவனை விடைகொண்டு தேர்மேல்
அருந்த திக்கற்பி னாளொடும் படையொடு மமைந்தான்
வருந்து கோசலை நாடட னயோத்தியும் வாழப்
பரிந்தி ராமனு மேகினன் பரதனைக் காண்பான்.

## பரதன், நகரை அலங்கரித்து இராமபிரானை யெதிர் கொள்வதற்கேற்ற ஏற்பாடுகளைச் செய்ய அயோத்தியிலுள்ளார்க்கு முரசறைவிக்கச் சத்துருக்கினனை யேவுதல்

4148. இளவலை யண்ணலுக் கெதிர்கொண் மென்றுநம்
வளைமதி லயோத்தியில் வாழு மாக்களைக்
கிளையொடு மேகெனக் கிளத்தி யெங்கணும்
அளையொலி முரசின மறைவிப் பாயென்றான்.

(பரதன்), இளவலை-தம்பியாகிய சத்துருக்கினனை (ப் பார்த்து) 'வளை மதில் அயோத்தியில் வாழும் மாக்களை-சூழ்ந்த மதிலையுடைய (நமது) அயோத்தியா புரியில் வாழ்கின்ற மனிதர்களுக்கு,

அண்ணலுக்கு எதிர் கொணம் என்றும் - இராமபிரானை எதிர் கொண்டு செல்லுங்கள்' எனவும், 'கிளையொடும் - சுற்றத்தாருடன் (யாவரும்), ஏகு-செல்லுங்கள்' என-எனவும், கிளத்தி-கூறித் தெரிவித்தற்காக, 'எங்கணும்-எல்லா இடங்களிலும், அளை ஒலி-பரவும் பேரொலியுடன் கூடிய, முரசு இனம் அறைவிப்பாய் - முரசு வகைகளை (வள்ளுவரைக் கொண்டு) அடிக்கச் செய்து அறிவிப்பாயாக', என்றான் - என்று கட்டளை யிட்டான்.

அண்ணலுக்கு, மாக்களை உருபு மயக்கம்; 'யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும்' (நன். 60) என்றது காண்க. கொணம் - செய்யும் என்னும் முற்றின் ஈற்று மெய்கெட்டு ளகரம் ணகரமாயிற்று. மாக்கள் - இங்குப் பொதுமக்களைக் குறித்தது. 'மாவு மாக்களும்' என்ற இடத்தில் கூறப்பட்ட பொருளில் வந்ததன்று. 'இங்கிதங் காஸ்து கோசலரகா' என்று அவர்கள் புகழப் பெற்றிருத்தல் காண்க.

பி - ம். 1. அண்ணலை யெதிர்கொள் வானகம், அண்ணலை யெதிர் கொள்கென்றுநம், கண்ணனுக் கெதிர்கொள் கென்றுநம்.

3. மெய்தெள.

4. அளவொலி. 256

இந்தப் பாடல் முதலாக 4206 வரையில் வை. மு. கோவில் காணப்படும் பாடல்கள் மர்ரே பதிப்பில் அதிகப் பாடல்களாக எடுக்கப்பட்டுள்ளன. மேல் நிகழ்ந்த செய்திகளையே அநுவாதமாகக் கூறியுள்ளன என்று கருதி மிகை எனக் கொண்டார் போலும். ஆயினும் நடந்த செய்திகளை இடங்கட்கேற்ப, கம்ப நாடர் கூறுவது வழக்கம் என்பது இங்கே உணரத்தக்கது. இங்கு முன்னர்க் கூறப்படுவன இராமபிரானை வரவேற்றற்குரிய நிகழ்ச்சிகள். பிராட்டி கேட்கச் சிறிய திருவடி அன்னை இராவணன் கவர்ந்து சென்றதன்பின் நிகழ்ந்தவற்றைப் பல செய்யுட்களில் கூறுதல் காண்க. முதனூலிலும் இந்த அநுவாத முறையைக் காணலாம்.

4149. தோரண நட்டுமேற் துகில்பொ திந்துநற்
பூரணப் பொற்குடம் பொலிய வைத்துநீள்
வாரண மிவுளிதேர் வரிசை தான்வழாச்
சீரணி யணிகெனச் செப்பு வாயென்றான்.

(பின்னும் பரதன் தன் தம்பியை நோக்கி), 'தோரணம் நட்டு - மகர தோரணம் நாட்டி (த் தோரணக் கம்பங்களின்), மேல் - மீது, துகில் - ஆடைகளால், பொதிந்து - மூடி, நல் - அழகிய, பூரணம் பொன் குடம் பொலிய - நீர் நிறைந்த பொற் குடங்களை விளங்கு மாறு, வைத்து - வைத்து, நீள் - பெரிய, வாரணம் - யானைகளையும், இவுளி - குதிரைகளையும், தேர் - தேர்களையும், வரிசை வழா - (அவ்வவற்றிற்குரிய) ஒழுங்கு தவறாமல், சீர் அணி அணிக எனா - சிறந்த அலங்காரங்களைச் செய்க என்றும், செப்புவாய் - கூறு வாயாக', என்றான் - என்றும் கூறினான். தான் - அசை.

தோரணம் நடுதலும் மேற்கட்டி கட்டுதலும், பூரணகும்பம் வைத்தலும், மங்கலகரமான காரியங்கள். '
தோரணநாட்டுவார் நீட்சி - பெருமை மேற்று. இவுளி - குதிரை. அணிக என என்பது அகரம் தொகுத்து அணிகென என நின்றது. செப்பு - இது பண்டைத் தமிழ்ச் சொல்லேனும், இப்பொழுது தெலுங்கரிடமே பெரிதும் பயில்கின்றது. 'செப்புங் காலைச் செங்கமலத் தோன் முதல்யாரும்' (பால. மிதிலைக். 24); செப்பு என்பது பெயராக வார்த்தை என்ற பொருளிலும் வழங்கி யுள்ளது. 'ஏதுபோலிருந்த தையன, இசைத்த செப்பென்றார்' (திருவிளை. வளையல். 9); சீரணி: 'சீரணி சோழ நாட்டின் திருவழுந்தூரில் வாழ்வோர், தாரணக் கொடையான் கம்பன்' (கம்ப. பாயி. 5); 'சீரணி சிந்தரமணி' (திருக்கோ. 400) என்ற இடத்து, 'நினைத்தது கொடுத்தலிற் சீரையுடைய அணி' என்று பேராசிரியர் உரை வரைதல் காண்க. இன்னவின்ன அணிகள் இன்ன வின்னவாறு அணிந்தால், இன்ன நன்மையை விளைக்கும் என்பதன் விரிவைப் பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில், 'மெய்வரவணிவோ ரெய்தும் பயனிவை விதியாற் கேண்மின்' (36) எனத் தொடங்கிக் கூறப்படும் செய்யுட்கள் கொண்டுணர்க. (ஷை 37, 50).

பி - ம். 1. தோரண நிறுவி, நாட்டிமேல்.

2. வைத்துளே.

4150. பரத்துவ னுறைவிடத் தளவும் பைம்பொனீள்
சிரத்தொகை மதிற்புறத் திறுதி சேர்தர
வரத்தகு தரளமென் பந்தர் வைத்துவான்
புரத்தையும் புதுக்குமா புகறி போயென்ருன்.

'பரத்துவன் உறைவிடத்து அளவும் - பரத்துவாச முனிவ னுடைய பன்னசாலையிலிருந்து, பைம்பொனின் - பசும் பொன் மயமான, நீள் சிரம் தொகை - நீண்ட சிகரங்களின் ஒழுங்குகளை யுடைய, (அயோத்தி நகரின்), மதில் புறத்து இறுதி அளவும் சேர்தர மதில் புறத்தின் இறுதி உளப்பட, வரம் தகு தரளம் மெல் பந்தர் வைத்து - சிறந்த தகுதி வாய்ந்த நன் முத்துக்களைக் கொண்டு மெல்லியகா வணம் அமைத்து, வான்புரத்தையும் - உயர்ந்த நகரத்தையும் புதுக்குமா - புதுக்குமாறு, போய் புகறி - போய்ப் பகர்வாயாக', என்று - என்று (சத்துருக்கினனைப் பார்த்துக்) கூறினன்.

பசுமை என்பதன் ஈறுகெட்டு அடியகரம் ஐ ஆகி, முன்னின்ற மெய் திரிந்து பொன என்பதுடன் புணர்ந்து பைம்பொன் என்ருயது. சிரம - சிகரம். சேர்தர - தர துணைவினை. பந்தல் - பந்தர் ஈற்றுப் போலி. புதுக்குமாறு என்பதில் ஈறு கெட்டது. புகல் + தி- புகறி, போய்ப் புகறி என மாற்றுக.

பி - ம். 1. உறைவிடம்; பைம்பொனின்.

4. புரத்தையும் புதுக்குக, புரத்தையும் புதுக்குவ. 258

அக் கட்டளையைச் சத்துருக்கினன்
சுமந்திரற்குத் தெரிவித்தல்

4151. என்றலு மவனடி யிறைஞ்சி யெய்தியக்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினன்
நன்றுணர் கேள்விய னவையில் செய்கையன்
தன்றுணைச் சுமந்திரற் கறியச் சாற்றினன்.

என்றலும் - என்று பரதன் மொழிந்தவுடன், வரிசிலை - கட்டமைந்த வில்லை யேந்திய, குன்று உறழ்குவவு தோளினன் - அந்தமலை யொத்த திரண்ட தோள்களை யுடையவனுன சத்துருக்கினன், அவன் - அந்தப் பரதனுடைய, அடி - திருவடிகளை,

இறைஞ்சி எய்தி - வணங்கிப்போய், நன்று உணர் கேள்வியன் - சிறந்த முறையில் கேட்டு அறிந்த நூற் கேள்விகளையுடையவனும், நவை இல் செய்கையன் - (அதற்கேற்ற) குற்றமற்ற செய்கைகளை உடையவனும், தன் துணை - தனக்கு நண்பனுமான, சுமந்திரற்கு - சுமந்திரனுக்கு, அறிய சாற்றினான் - (பரதன் கட்டளையைத்) தெரியுமாறு விண்ணப்பித்தான்.

அவன்; என்றது பரதாழ்வானை. இறைஞ்சுதல்: 'இறைஞ் சுக பெருமநின் சென்னி சிறந்த, நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே' (புறநா. 6); வரிசிலைக் குன்றுறழ் தோளினான் என்று மொழி மாற்றிப் பொருள் தரப்பட்டது. 'வரிசிலை வடித்த தோளான்' (ஆரணிய 275); குவவு - திரட்சி; 'குவவின கொங்கை குரும்பை' (திருக்கோ. 108); நன்றுணர் கேள்வியன்: 'செவி யுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி னான்றாரோ டொப்பர் நிலத்து' (குறள். 413); கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக' (குறள். 391); என்பதும் இங்குக் காணத்தகும். 'ஐயமில் சிந்தையானைச் சுமந்திரன' (திருமுடிசூட்டு. 36); என்று பின்னர் வருதல் காண்க. ஐயந் திரிபு அறியாமை நீங்கக் கற்றுக் கேட்டிருப்பவன் ஒழுகலாற்றினும் சிறந்தொளிர்வான் ஆகலின், 'நவையறு சிந்தையான்' எனப்பட்டது. துணை - நண்பன். தம்முயிர்க் கிறுதியெண்ணாது தலைமகன் வெகுண்ட போதும், வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்றுரைக்கும் வீரன் ஆத லானும், உற்றது கொண்டு மேல்வந் துறும்பொருள் உணரும் பெருமையும், மற்றது வினையின் வந்ததாயினு மாற்ற லாற்றும் பெற்றியும் உடையன் ஆதலானும், பிறப்பின் மேன்மைப் பெரிய னும், அரிய நூலும் கற்றவனுமாகி, சமயம் வரின் தலைவற் கிடித் துரைத்துத் தக்க வழி செலச் செய்பவனாதலானும், தொன்று தொட்டு இக்குவாகு குலத்துக்கு அமைச்சன் ஆதலானும், நன்றுணர் கேள்வியன் நவையில் செய்கையன் தன்துணை என்றான்.

பி-ம். 1. எய்திய.

2. குன்றன.

3. கேள்வியும்; செய்கையும்.

## சுமந்திரன் வள்ளுவர்க்குக் கட்டளையிட, அவர்கள் முரசறைதல்

4152. அவ்வுரை கேட்டலு மறிவின் வேலையான்
கவ்வையி லன்பினுற் களிக்குஞ் சிந்தையான்
வெவ்வெயி லெறிமணி வீதி யெங்கணும்
எவ்வமின் றறைபறை யெற்று கென்றிட.

அறிவின் வேலையான் - அறிவு செறிந்த கடல் போன்றவனை சுமந்திரன், அவ் உரை கேட்டலும் - (சத்துருக்கினன் பகர்ந்த) அச் சொற்களைக் கேட்டவுடனே, கவ்வை இல் அன்பினுல் - பழித்’ தற்கில்லாத ஆர்வத்துடன், களிக்கும் சிந்தையான் - மகிழ்கின்ற உள்ளத்தனுய், ‘வெவ் வெயில் எறிமணி - விரும்பத்தக்க ஒளியை வீசும் மணிகளையுடைய, வீதி எங்கணும் - தெருக்களில் எல்லாம், எவ்வம் இன்று - குற்றமின்றி அடித்தற்குரிய, பறை - பறைகளை; எற்றுக - அறைவீராக’, என்றிட - என்று புகன்ற அளவில், வள்ளுவர் முரசம் எற்றினுர் என அடுத்த கவியுடன் முடியும்.

கவ்வை - பழிச் சொல்; ‘கவ்வை கூர்தர’ (அயோத்தி. கைகேசி 88); ‘கவ்வை யின்றாக நுங்கள் வரவென’ (கிட்கிந்தா. 57); வெம்மை வெயில்; ‘வெம்மை வேண்டல்’. எவ்வம் இன்று என்பதற்கு நகர மக்கள் மனத்திருந்த பிரிவுத் துக்கம் அடியோடழிய எனினுமாம். மற்றும் பறைக்கு, ஈரம் தாக்கல் முதலியன குற்றங்கள் இல்லாமல் எனினுமாம். அறை பறை - வினைத்தொகை. ‘அறை பறை யன்னர் கயவர்’ (குறள். 1076); ‘அறை பறை கண்ணாரகத்து’ (குறள். 1180); முரசறைபவர் வள்ளுவர்: ‘வள்ளுவர் சாக்கை யெனும் பெயரரசற் குள்படு கருமத் தலைவற் கொன்றும்’, (பிங்கலம்.); யுத்த. 3236; அயோத்தி. மந்தரை. 25 காண்க. எற்றுக என்பதில் அகர ஈறு குறைந்தது.

பி - ம். 2. அன்பினிற்.
3. வெயில் புரைமணி.
4. எவ்வமில்.

4153. வானையுந் திசையையுங் கடந்த வான்புகழ்க்
கோனையின் றெதிர் கொள்வான் கோல மாநகர்த்
தானையு மரசரு மெழுக தானென
யானையின் வள்ளுவர் முரச மெற்றினர்.

(ஏவப் பெற்ற வள்ளுவர்), 'வானையும் திசையையும் - ஆகாயத்தையும் திக்குகளையும், கடந்த - கடந்துள்ள, (எங்கும் விரிந்துள்ள), வான் புகழ் - சிறந்த புகழினை யுடைய, கோனை - தலைவனான இராமபிரானை, இன்று - இன்றைய தினத்தில், எதிர் கொள்வான் - எதிர் கொள்ளுமாறு, கோலம் - அழகிய, மாநகர் - பெரிய அயோத்தி நகரத்தில் உள்ள, தானையும் - சேனையும், அரசரும் - அரச வங்கிசத்தினரும், எழுக - புறப்படுவார்களாக', என - என்று, யானையின் - யானை மீதிருந்து, வள்ளுவர் - வள்ளுவர், முரசம் எற்றினர் - முரசத்தை குறுந் தடிகொண்டு அடித்தார். தான் : அசை.

வானையும் திசையையும் கடந்த வான்புகழ் ; 'இசையாற்றிசை போயதுண்டே' (சீவக. 31) ; வானும் ஓர் திசையெனக் கொள்ளப் படுதல் காண்க. யானையின் வள்ளுவர் முரசமெற்றினர் ; 'திரு நாள் படை நாள் கடிநா ளென்றிப், பெருநாட் கல்லது பிறநாட் கறையாச், செல்வச் சேனை வள்ளுவ முதுமகன்' (பெருங். 2 : 2 : 32 - 34) ; 'அரசு கொற்றத் தருங்கடம் பூண்ட, முரசெறி வள்ளுவ முதியனை' (பெருங். 1, 42 ; 115 - 156) ; 'வள்ளுவார் முரச மூதூ ரறைக்' (சீவக. 2149).

பி - ம். 1. வாழ்விகழ்.
2. எதிர்கொளக்.
4. ஆனைமேல் ; வள்ளுவன் முரசறைந்தனன். 261

## முரசொலி கேட்டலும் நகரத்தவர் புறப்படுதல்

4154. முரசொலி கேட்டலு முழங்கு மாநகர்
அரசரு மாந்தரு மந்த ணாளரும்
கரைசெய லரியதோ ருவகை கைதரத்
திரைசெறி கடலென வெழுந்து சென்றவால்.

முரசு ஒலி கேட்டலும் - அந்த முரசின் ஒலியைக் கேட்ட வுடனே, கரை செயல் அரியது ஓர் உவகை கைதர - எல்லை காண வியலாத ஒப்பற்ற களிப்பு மிக, அரசரும் - மன்னர்களோடும், மாந் தரும் - குடி மக்களோடும், அந்தணரும் - பிராமணர்களோடும், முழங்கும் மாநகர் - முழக்கம் செய்கின்ற பெரிய அந்த அயோத்தி நகரம், திரை செறி - அலைகள் செறிந்த, கடல் என - கடலொப்ப, எழுந்து சென்ற - எழுந்து போயிற்று. ஆல் : அசை.

மாந்தரும் என்னும் சொல் என்றும் பன்மைச் சொல் ; இதனை நித்திய பகுவசனம் என்பர் வட நூலார். கைதரல் - மிகுதல். அரசர் முதலானோருடைய பெருந் தொகைக்குக் கடலும், அவர்தம் முழக்கத்திற்குத் திரையும் உவமை என்க. 'கரை செயலரிய வேதம்' (யுத்த. 4241).

பி - ம். 2. சேனையும்.
3. கைம்மிக.
4. சென்றதால். 262

4155. அனகனை யெதிர்கொள்கென் றறைந்த பேரிநற்
கனகநல் கூர்ந்தவர் கைப்பட் டென்னவும்
சனகன தூர்க்கென முன்னஞ் சாற்றிய
வனைகடிப் பேரியு மொத்த வாமரோ.

'அனகனை எதிர் கொள்க - குற்றமற்றவனான இராமபிரா னுக்கு வரவேற்புத் தாருங்கள்', என்று - என்று, பேரி - (வள்ளுவ ரால் அடிக்கப்பட்ட) முரசொலியானது, நல் கனகம் - மிக்கபொன், நல்கூர்ந்தவர் கைபட்டு என்னவும் - வறியவர்க் கிட்டினால் அதனையும் சனகனது ஊர்க்கு - சனக மன்னனுடைய நகர்க்கு (ச் செல்லுக), என - என்று, முன்னம் சாற்றிய - முன்பு அறைந்த, வனை - புனையப் பெற்ற, கடி பேரியும் ஒத்த ஆம் - மண முரசொலியையும் நிகர்த்திருந்தன. அரோ : அசை.

அனகன் - குற்றம் தீர்ந்தவன் ; வடசொல். 'அனகனெடு மமரின் முடுகியெதிர வெழு' (யுத்த. 3395) ; கொள்க என என்பது கொள்கென நின்றது குறுக்கல் விகாரம். பன்னாள் வறுமையால் பீடிக்கப் பட்டவர்க்குப் பொற் குவியல் கிடைத்தது போன்று,

பலவாண்டுகளாக இராமபிரான் பிரிவால் வாடிய அயோத்தி மக்கட்கு அப் பெருமான் வருகையைச் சாற்றிய அம் முரசொலி பெரு மகிழ்வினை யீந்த தென்க. பின்னிரண்டடிகட்கு; 'மிதிலை நோக்கி நம், சேனையு மரசரும் செல்க முந் தென, ஆனைமேல் மண முர சறைகென் றேவினான்' (பால. எழுச்சி. 7); 'வள்ளுவன், தேம் பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன், ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள், சாம்பவன் திரிந்தெனத் திரிந்து சாற்றி னான்' (பால. எழுச்சி. 8); 'சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன், கோற்றொடி மகளிரும் கோல மைந்தரும், வேற்றரு குமரரும் வென்றி வேந்தரும், காற்றெறி கடலெனக் களிப்பி னோங்கினர்' (பால. எழுச்சி. 9) என்பனவற்றை ஒப்பு நோக்குக. இராம கதை ஆசிரியர் மிக்க நினைவாற்றலுடன் முன்பின் தாம் கூறிய செய்திகளை ஏற்ற பெற்றி வாசகர்க்கு ஆங்காங்கு நினைப் பூட்டிச் செல்வது இறும்பூது விளைப்பதொன்றாகும். உவமைகளைக் கையாளும் போதும் இந்த அவரது ஆற்றலைக் காணலாம். ஓர் உதாரணம் அமையும்; கோபாக்கிருகத்தில் 'நவ்வி வீழ்ந்தெனக் கிடந்த' தன மனைவியான கைகேசியை 'மானை யெடுக்கு மானையே போல்' (அயோத்தி. கைகேசி. 3) என்று கூறிய கவிஞர் பிரான், அடுத்து அம் மன்னனை, 'வேகமடங்கிய வேழம் என்றும்' (அயோத்தி. கைகேசி. 11); 'புண்ணுழை தக்க வுழைக்கு மானை போல்வா னென்றும்' (அயோத்தி. கைகேசி. 15) கூறியமை காண்க. மற்றும் மிதிலை நோக்கிச் சென்ற பெருந்திரள். 'புடை பெயர் கடலென வெழுந்து போயது' (பால. எழுச்சி. 10) என்றதும் காண்க. 'கனகநல் கூர்ந்தவர் கைப்பட் டென்னவும்' (ஒப்பு): 'பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தார்' (சுந்தர. 554); 'இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டாலென' (திருவிளை. விருத்த. 14) நலகூர்ந்தார்: வறிஞர்; 'நல்கூர்ந்தார் செல்வமகள்' (கலித். 56).

பி-ம். 1. கொள்வான்.
2. நல் கூர்ந்தவன்.
3. சனகனூர்க் கெழுகென.
4. வனை கடற்.

## பலரும் இராமபிரானை எதிர் கொள்ளுதற்குச் செல்லுதல்

4156. அறுபதி னுயிர மக்கு ரோணியென்
றிறுதிசெய் சேனையு மேனை வேந்தரும்
செறிநகர் மாந்தருந் தெரிவை மார்களும்
உறுபொரு ளெதிர்ந்தென வுவந்து போயினர்.

அறுபதினுயிரம் அக்கு ரோணி என்று இறுதி செய் - அறுபதினுயிரம அக்குரோணி என்று முடிவாகக் கணக்கிடப் பெற்ற, சேனையும் - படைகளும், ஏனை வேந்தரும் - பிற அரசர்களும் செறி நகர் மாந்தரும் - அடர்ந்த நகர வாசிகளும், தெரிவைமார் களும் - (அங்குள்ள) மகளிர்களும், உறு பொருள் எதிர்ந்தென உவந்து போயினர் - அடைய வேண்டும் என்று கருதிய பொருள் தானே வலுவில் வந்து கிட்டினுற் போல, (இராமபிரானை) வர வேற்குமாறு, உவந்து போயினர் - மகிழ்வுடன் சென்றனர்.

இறுதி செய்தல் - முடிவு கட்டுதல். நகர் செறி மாந்தர் என்க. உறு பொருள் - தனக்குரித்தாக வேண்டிய பொருள். 'உறு பொருளும் உல்குபொருளும்' (குறள். 756); பொருள் ஒருவனுக்குப் பொருந்துவது அவன் முன் பிறப்பின் ஆற்றிய நல் வினைகளின் வினைவே யாகும் என்ப. 'முற் பிறப்பிற் செய்த முறைமையால் வந்த செல்வம்' (பட்டினத்.); 'இடை நடுவிற் குறிக்குமிச் செல்வம் சிவன் தந்தது' (பட்டினத். திருவேகம்ப. 7): ஆன்மா பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மே, லிறக் கும் பொழுது கொடுபோவதில்லை' எனவே இடையில் ஆன்மா முன் பிறப்பில் அர்ச்சித்த புண்ணிய பாவத்தினளவு இடையிற் பட்ட தென்பார். 'இடை நடுவிற் குறிக்குமிச் செல்வம்' என்றுர். எதிர்ந்தால் என என்பது எதிர்ந்தென எனத் தொகுத்தது; உறு பொருள் புதை பொருளுமாம். 'பழந்தன மிழந்தன படைத்தவரை ஒத்தார்' (சுந்தர. 554); 'மேலைத் தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்' (மூதுரை. 7) என்றதும் காண்க.

பி-ம். 2. மன்னரும்.

4157. அன்னையர் மூவரு மமரர் போற்றிடப்
பொன்னியல் சிவிகையி னெழுந்து போயபின்
தந்நிகர் முனிவருந் தமருஞ் சூழ்தர
மன்னவன் மாருதி மலர்க்கை பற்றுரு.

அன்னையர் மூவரும் - (கோசலை சுமத்திரை கைகேயி என்னும்) தாய்மார் மூவரும், அமரர் போற்றிட - தேவர்கள் துதி செய்ய, பொன் இயல் - பொன்னுற் செய்யப்பட்ட, சிவிகையின் - பல்லக்கு களில், எழுந்து - கிளம்பி, போய பின் - சென்ற பிறகு, மன்னவன் - அரசனுகிய பரதன், தம் நிகர் முனிவரும் - தமக்குத் தாமே நிகரான தவசிகளும், தமரும் - சுற்றத்தார்களும், சூழ் தர - சுற்றி வர, மாருதி - அநுமனுடைய, மலர் கை பற்றுரு - தாமரை மலர் போன்ற கையைப் பிடித்துக் கொண்டு; போயினுன் என்று குளக மாக அடுத்த செய்யுளுடன் தொடர்ந்து முடியும்.

இராமபிரானைப் பெற்றவள் ஆதலின் கோசலையையும், திருமால் அமிசம் கொண்ட பரதன் முதலானேரைப் பெற்றவர்கள் ஆதலின் ஏனையோரான இருவரையும், அமரர் போற்றினர் என்க. 'கைக்கரி யெய்த்தே, அராவணை யிற்றுயில் வோயென அந்நாள், விராவியளித்தருள் மெய்ப் பொருளே இராமபிரான்' (பால. திருவவ. 120); என்றும், 'விரிந்திடு தீவினை செய்த.........கருங்கடலைக் கவுசலை யென்பாள் பயந்தாள்' (பால. குலமுறை. 20); என்றும் கூறப் பெற்றமையும் காண்க. தம் நிகர் முனிவர் - தாமே தனக்கு ஒப்பு; இதனைப் பொது நீங்குவமை என்பர். (ஒப்பு): சாகரஸ் ஸாகரோபமம்; இராம இராவண யுத்தமேவ இராம ராவண யுத்தம் என்ருற் போல என்க. 'தன் பெருங்குணத்தாற் றன்னிற் றுனல தொப்பிலாதான்' (கிட்கிந்தா 52); 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய. 148); 'என்னலதில்லை யென்னை யொப்பு' (சுந்தர. 1271) என்பன காண்க.

பி - ம். 1. பொன்னினற்; சிவிகை மேலினது போயினன் சூழ்தர; தரதுணை விணை.

4158. திருவடி யிரண்டுமே செம்பொன் மௌலியா
இருபுறஞ் சாமரை யிரட்ட வேழ்கடல்
வெருவரு முழக்கென வேழ மார்த்தெழப்
பொருவரு வெண்குடை நிழற்றப் போயினன்.

திருவடி இரண்டும் - (இராமபிரானுடைய) இரண்டு திருவடி நிலைகளே, செம் பொன் மௌலியா - செம் பொன்னாலியன்ற மகுடமாக, (அவற்றைச் சிரத்தின்மேல் வைத்துக் கொண்டு) அந்தப் பரதன், இருபுறம் சாமரை இரட்ட - (தனது) இரண்டு பக்கங்களிலும் கவரி வீசவும், ஏழ் கடல் - ஏழு கடல்களின, வெரு வரு முழக்கு என - அஞ்சத்தக்க ஒலி போன்று, வேழம் ஆர்த்து எழ - இன்னிசைக் கருவிகளின் ஒலி மிகுத்து எழவும், பொரு அரு வெண் குடை நிழற்ற போயினன் - ஒப்பற்ற (அரசச் சின்னமாகிய) ஒற்றை வெண் கொற்றக் குடை நிழல் செய்யவும் சென்றான், ஏ : அசை.

திருவடி நிலை இரண்டு; முன்னர் அயோத்தியா காண்டம், கிளைகண்டு நீங்கு படலத்தில் 'அடித்தல மிரண்டையு மழுத கண்ணினன், முடித்தல மிவையென முறையிற் சூடினன்' (136). இத் திருவடிகளையேதான் 'இளையவற் கவித்தமோலி யென்னையும் கவித்தி' (யுத். 448) என்று வீடணன குறித்தது என்க. சாமரை - கவரி; சமரம் என்ற மானின் வாலினால் செய்யப் படுவது. வெருவரு - அஞ்சும்படியான; 'வெருவந்த செய் தொழுகும் வெங்கோலனாயின், ஒருவந்த மொல்லைக் கெடும்' (குறள். 563); வேழம். இசைக்குப் பரியாயப் பெயர். (பிங்கலம்). வேழம் - மூங்கில்; இந்த மூங்கில் துளையிற் காற்றுப் புகுவது கொண்டே வேய்ங்குழல் உருவாய தென்க. குழலின் துளையில் இசை பிறக்குமாறு; சிலப்- அரங்கேற்று காதை. பக். 181. 'ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற், கோடை யவ்வழி குழலிசையாக' (அகநா. 82) என்றதும் காண்க. இசைகளில் குழலிசையே பிரதம இசை : அல்லது ஆதியிசை யென்ப. 'குழலினிதி யாழினிதென்ப' (குறள். 66); 'குழல் வழி நின்றது யாழே யாழ் வழித், தண்ணுமை நின்றது தகவே' (சிலப். அரங்கேற்று பக். 139 - 140); 'குழலும் யாழு மமிழ்தும் குழைத்த நின்' (சிலப். மணியறம். 58); 'குழலினும் யாழினும் குரன்முத லேழும்' (சிலப். இந்திர விழா. 35) என்பன கண்டு உணர்க. வேழம் - யானையுமாம்.

பி - ம். 3. முழக்கெழ ; வேதம்.

4. நிழலிற். 366

## சூரியாத்தமன வருணனை

4159. எல்லவன் மறைந்தன னென்னை யாளுடை
வில்லியை யெதிர்கொளப் பரதன் மீச்செல்வான்
அல்லியங் கமலமே யனைய தாள்களில்
கல்லதர் சுடுந்தன கதிரி னென்னவே.

பரதன் - பரதன், 'என்னை ஆள் உடைவில்லியை எதிர் கொள் - என்னை அடிமையாகக் கொண்ட கோதண்டம் என்னும் வில்லினை ஏந்திய இராமபிரானை எதிர் கொள்வதற்கு, மீச் செல்வான் - (தரையின்) மீது நடந்து செல்கின்றான் ; (ஆதலின்), அல்லி - அகவிதழ்கள் நிறைந்த, அம் கமலமே அனைய - அழகிய தாமரை மலரையே நிகர்த்த, தாள்களில் - (அவனுடைய) பாதங்களில், கல் அதர் - கற்கள் நிறைந்த வழியானது, தன கதிரில் சுடும் - தன்னுடைய கிரணங்களினால் சுடும்', என்ன - என்று கருதி, (அங்ஙனம் சுடாதிருக்குமாறு), எல்லவன் மறைந்தனன் - சூரியன் மலைவாயில் விழுந்து மறைந்தான். ஏ : அசை.

எல்லவன் ; யுத்த. 1463. என்னை ஆள் உடை - கவிக்கூற்று. 'என்னை யாளுடைய வையன்' (பால. திருவவ. 26) ; மீச் செல்லுதல் - அரசர்க்குரிய சிவிகை முதலியன இன்றி, தரைமீது செல்லுதல். 'அல்லியங் கமலமே யனைய செங்கணோர் வில்லி' (சுந்தர. 1116)ல் இதே தொடர் இராமபிரான் விழிகளையும் வில்லினையும் குறித்து வந்தது காண்க. கல் அதர் - பருக்கைக் கற்கள் நிறைந்த வழி ; இனி அயோத்தியா நகரத்தும் அதன் அண்மையிலும் நன்கமைக்கப்பட்ட சாலை இன்றோ, கல் அதர் தானோ ? எனின் ; 'ஆடக மாடம் கடந்தறியாத ஆரணங்கு போல்வாட்கும், ஒன்பதின் சாண் நடப்பினும் ஒருகாத மென்றஞ்சும் இயல்பினர்க்கும், நல்ல சாலைகளும் அவ்வாறு தோன்றும் என்க. சுந்தர. 550 காணத்தகும. அதர் - வழி ; 'மானடி பொறித்த மயங்கதர் மருங்கின்' (பெரும்பாண். 106) ; கல்லதர் : 'கடநெறி கடத்தற் கின்னாக் கல்லதரத்த முண்டே' (சீவக. 1185) ; இங்கு, 'காயெரி கனலுங் கற்கள் கள்ளுடை மலரே போலத், தூய செங்கமல பாதந் தோய்

தொறுங் குழைந்து தோன்றும்' (கிட்கிந்தா. 55) : என்ற வரிகளை ஒப்பு நோக்குக. முன்னர்ச் சூரியனே தன்னுடைய கிரணத்தைப் பெற்ற கற்கள் சுடுமே என்று கூறப்பட்டது. இங்குக் கற்களே குழைந்து தோன்றியதாகக் கூறப்பட்டது. வேறுபாடும் நயமும் உணர்க. கதிரவன் இயற்கையாக மறைந்ததற்கு, பரதன் பாதங்களில் கல் சுடாமலிருப்பதன் பொருட்டு மறைந்தான் :என்று கூறியது ஏதுந் தற்குறிப்பேற்றவணி. கதிர் மதியங்களின் உதயமும் மறைவும் ஆங்காங்குக் கூறப்படுதல் பெருங் காப்பியத்தின இலக்கணத்தின் பாற்படும். சூரியன் மறைவு. யுத்த. 703 ; சந்திரன் உதயம். யுத்த. 704 ; சூரியோதயம். யுத்த. 907, 2291, 3084.

பி-ம். 3. கல்லெனச் சுடுகிலேன், கல்லதர் சுடுமெனக் ; கதிர்சென்றென்னவே.

### பரதன் அநுமனை நோக்கி இராமனது செய்கையைக் கூறும்படி வினவல்

4160. அவ்வழி மாருதி யங்கை பற்றிய
செவ்வழி யுள்ளத்தான் திருவி னயகன்
எவ்வழி யுறைந்ததச் செயலெ லாம்விரித்
திவ்வழி யெமக்குநீ யியம்பு வாயென்றான்.

அவ் வழி - அச் சமயத்தில், மாருதி அம்கை பற்றிய - அநுமானுடைய அழகிய கரங்களைப் பிடித்துக் கொண்டிருந்த, செவ் வழி உள்ளத்தான் - (எப்பொழுதும்) நன்னெறியிலே செல்கின்ற மனத்தனான பரதன், 'திருவின் நாயகன் - இலக்குமி கேள்வனான இராமபிரான், எ வழி உறைந்தது - (வானத்தில்) எங்குத் தங்கியிருந்தான்?' அ செயல் எலாம் விரித்து - அச் செய்திகள் அனைத்தையும் நீ - நீ, எமக்கு - எமக்கு, இ வழி - இப்பொழுது, விரித்து இயம்புவாய் - விரிவாகப் பகர்வாயாக', என்றான் - என்று பணித்தான்.

அவ்வழி : 'அவ்வழி யிமையவர் அறிந்து கூடினர்' (அயோத். கிளைகண்டு. 130) ; செவ்வழி யுள்ளத்தான் : 'செவ்வழி யுள்ளத்தானும்' (கிட்கிந்தா. 57) ; எவ்வழி : 'எவ்வழி யிருந்தான் சொன்ன கவிக் குலத்தரசன் யாங்கள், அவ்வழி யவனைக் காணும்' (கிட்கிந்தா.

63)' திருவினுயகன் : 'திருமக டலைவ' (ஆரணிய. 111); நாயகன் உறைந்தது; திணைவழுவமைதி.

பி - ம். 3· வௌவழியுறைந்த. 288

## அநுமன் இராமபிரானைப் பற்றிக் கூறுதல்

4161. என்றலு மாருதி வணங்கி யெம்பிரான்
மன்றலர் தொடையினு யயோத்தி மாநகர்
நின்றது மணவினை நிரப்பி மீண்டுகான்
சென்றதும் நாயினேன் செப்பல் வேண்டுமோ.

என்றலும் - என்று (பரதன்) வினவியவுடனே, மாருதி - அநுமன், வணங்கி - (அவனைப்) பணிந்து, 'மன்று - நறுமணமிக்க, அலர் - மலர்ந்த (மலர்களினுலாய), தொடையினுய் - மாலையை அணிந்தவனே! எம்பிரான் - எமது தலைவனுகிய இராமபிரான், மா அயோத்தி நகர் நின்றதும் - பெரிய அயோத்தியாபுரியில் வதிந்ததையும், மணம் வினை நிரப்பி - (மிதிலை சென்று) திருமணம் புரிந்து முடித்துக் கொண்டு, மீண்டு - திரும்பி, (அயோத்திக்கு வந்து பின்னர்), கான் சென்றதும் - காட்டிற்குப் போனதும் நாயினேன் செப்பல் வேண்டுமோ-அடியேன் பகர வேண்டுமோ' (வேண்டப்படாதன்றே). ஓகாரம் : எதிர்மறைப் பொருள்.

மன்று - மன்றல்; நறுமணம். 'மன்றலங் கோதை மாதர்' (ஆரணிய. 797); செப்பல் வேண்டுமோ; இவையனைத்தும் பரதன் முன்னரே தெரிந்துளான் ஆகலின் அவை கூற வேண்டுவதின்று என்று கூறினுன் சிறிய திருவடி. முன்னர்ச் சுந்தர காண்டத்தில், 'வீரன், யாண்டையா னிளவலோடு மெவ்வழி யெய்திற் றுன்னை, ஆண்டகை யடியேன் றன்னை யார் சொல வறிந்தான்' (சுந்தர. 562) என்று வினவிய காலத்து, அநுமன் 'உழைக்குலத் திசையுமாய வுருவுகொண்டு' (சுந்தர. 563) எனத் தொடங்கி, 'பிற்கூடிய சேனை' (சுந்தர. 582) வரையுமே கூறியமையும் இங்குக் காண்க. இங்கு அநுமன் கூறிய செய்திகளும் சிறிய திருவடி இலக்குவன் கூறக் கேட்டறிந்தவைகளே என்பதைச் 'சூரியன் மரபிற் றோன்றி' (கிட்கிந்தா. 69) என்று தொடங்கி

இரண்டு செய்யுட்களில் இரத்தினச் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளமை கண்டு தெளிக. 'தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி, நன்றி பயப்பதாந் தூது' (குறள். 685); என்ற தூதின் இலக்கணமும், 'பல சொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சில சொல்லல் தேற்றாதவர்' குறள். 649) என்ற குறட்பாவும் இங்கு அறியத் தகும். சுந்தரகாண்டத்தில் பிராட்டி கேட்க அநுமன் வரலாறு கூறுங்கால், 'அன்னை நின்னைத் தூயவன் பிரிந்த பின்னை' (517) எனத் தொடங்குதல் காண்க. பெரும்பாலும் முதனூலில் மகாகவி விரித்துக் கூறிய பகுதிகளைச் சுருக்கியும், சுருக்கியவற்றை விரித்தும் கவி புனைவது கம்பநாடர் கொள்கை. சந்தர்ப்பத்துக்கும் காலத்திற்கும் ஏற்ப முதனூலிலிருந்து சிறிது மாறுபடுதலும் உண்டு. 'ஆதலா லிறத்தலே யறத்தினாறு' (சுந்தர. 509) என்ற முடிவிற்கு வந்து பிராட்டி உயிர்த் தியாகம் செய்ய நினைத்த அளவில், தூதுவனாகச் சென்ற அநுமன், எவ்விதமான யோசனையும் இன்றி, 'கண்டனன் அநுமனும் கருத்து மெண்ணிலன்' (சுந்தர. 510); என்று எழுதினர் கம்பநாடர். இவ்விடத்தில் பிராட்டி கேட்க, 'இக்ஷ்வாகு வம்சப்ரபவோ' என்று தொடங்கி, முன் நான்கு காண்ட நிகழ்ச்சிகளைச் சுருக்கிக் கூறுவர் வான்மீக பகவான். கம்பநாடர் உலகியலை நன்குணர்ந்தே, முழு வரலாற்றையும் கூறி நிற்பின் அதற்குள் விபரீதம் ஏதேனும் நிகழ்ந்துவிடின் என் செய்வது என்று எண்ணிக், 'கண்டனன் அநுமனும்' என்று கூறியது இங்கு ஆராயத் தக்கது. இங்கு மணவினை நிரப்பி என்பதற்கு இளவரசுப் பட்டாபிடேகச் சடங்கின் ஒரு பகுதியை நிறைவேற்றி, முடிசூட்டைப் பெறாமல் காடு சென்றதும் என்று பொருள் கொண்டாரும் உளர்.

பி - ம். 1. தொழுதிங்கு.
2. மன்றலந்.
3. மீண்டுதான். 269

4162. சித்திர கூடத்தைத் தீர்ந்த பின்சிரம்
பத்துடை யவனுடன் விளைந்த பண்பெலாம்
இத்தலை யடைந்தது மிறுதியாய பேரர்
வித்தகத் தூதனும் விரிக்குஞ் சிந்தையான்.

'சித்திர கூடத்தை தீர்ந்த பின் - (இராமபிரான்) சித்திரகூட மலையை விட்ட பின்னர், சிரம் பத்து உடை - பத்துத் தலைகளை யுடையவனான இராவணனுடன், விளைந்த பண்பு எலாம் - நிகழ்ந்த செயலனைத்தும், இ தலை அடைந்ததும் இறுதியாக - (தான்) இவ் விடத்தை அடைந்தது வரையிலும் நடைபெற்ற வரலாறுகளை, போர் வித்தகம் தூதனும் - போரில் மிகவும் வல்லவனான இராம பிரான் தூதனும், விரிக்கும் சிந்தையான் - விரித்துக் கூறும் கருத் துக் கொண்டவனானன்.

இத் தலை யடைந்தது - சிறிய திருவடி பரதனைச் சார்ந்தது. இந்தச் செய்திகளை அடுத்த கவி முதலாகக் காண்க. சிந்தை யான் - சிந்தையான் ஆனன்.

பி - ம். 2. பந்துடையானொடும்; விளைந்த; பண்புந்தான்.
3. அடைந்தவே; இறுதியாமென.
4. வித்தகனுரைகளால் விளங்கச் சொல்கிறன். 270

4163. குன்றுறழ் வரிசிலைக் குரிசி லெம்பிரான்
தென்றிசைச் சித்திர கூடந் தீர்ந்தபின்
வன்றிறல் விராதனை மடித்து மாதவர்
துன்றிய தண்டக வனத்துள் துன்னினன்.

'குன்று உறழ் வரிசிலை - மலையை ஒத்த கட்டமைந்த வில்லை ஏந்திய, குரிசில் - ஆண் மகனான, எம்பிரான் - எமது தலைவன்; (இராமபிரான்) தென் திசை - தெற்குத் திக்கின் கண்ணுள்ள, சித்திர கூடம் தீர்ந்த பின் - சித்திரகூட மலையை விடுத்துச் சென்ற பின், வல் திறல் விராதனை - மிக்க வலிமை வாய்ந்த விராதன் என்னும் அரக்கனை, மடித்து - கொன்று, மாதவர் - பெரிய தவச் சிரேட்டர்கள், துன்றிய - நெருங்கி வசிக்கும், தண்டக வனத்துள் துன்னினன் - தண்டகாரணியத்தில் சென்றிருந்தான்.

குன்றுறழ் வரிசிலைக் குரிசில்; என்பதை அண்மை விளி யாகக் கொண்டு பரதனை முன்னிலைப் படுத்தியதுமாம். விராதன் வன்றிறலை: 'எட்டொ டெட்டுமத மாகரி' எனத் தொடங்கிக் காணப்படும் பதினைந்து பாடல்களால் உணர்க. தண்டகத்து

மாதவர் - சரபங்கர், சுதீக்கணர், அகத்தியர் முதலானோர். தண்டக வனம்; கிட்கிந்தா. 735 உரைக் குறிப்புக் காண்க.

பி-ம். 4. துன்றின. 271

4164. ஆங்குறை தபோதன ரரக்கர்க் காற்றலேம்
நீங்கினந் தவத்துறை நீதி யோயெனத்
தீங்குசெய் பவர்களைச் செகுத்தல் திண்ணநீர்
வாங்குமின் மனத்துயர் வாய்மை யாலென்றான்.

'ஆங்கு உறை-அந்தத் தண்டக வனத்தில் வாசம் செய்கின்ற, தபோதனர் - தவ முனிவர்கள், (இராமபிரானை நோக்கி), 'நீதியோய் - நீதியை யுடையவனே! அரக்கர்க்கு - இராக்கதர் இழைக்கும் துன்பங்களை, ஆற்றலேம் - பொருதவர்களான நாங்கள், தவம் துறை நீங்கினம் - தவம் செய்யும் நன்னெறியினின்று விலகினோம்: என-என்று முறையிடு செய்ய, தீங்கு செய்பவர்களை - (உங்கட்குத்) தீமை யிழைப்பவர்களை, செகுத்தல் திண்ணம் - (நான்) அழித்தல் உறுதி; வாய்மையால் - எனது வார்த்தையால், நீர் மனம் துயர் வாங்குமின் - நீங்கள் உங்களுடைய மன வருத்தத்தை நீங்கப் பெறுவீர்களாக', என்றான் - என்று (அவர்கட்கு அபயம் அளித்து) அருளினன்.

தவ முனிவர் வருத்தமும் அவர்கள் இராமபிரானிடம் செய்த முறையிடும், இராகவன் அவர்கட்கு அபயம் அளித்ததும், 'வையகம் காவலன் மைந்த வந்ததோர், வெய்ய வெங்கொடுந் தொழில் விளைவுகேள் என' (ஆரணிய. 128); என்பது முதலான செய்யுட்கள் கண்டுணர்க. அரக்கர் காற்றலேம் நீங்கினேம் தவத் துறை நீதியோய், இங்கு, 'இரக்க மென்றொரு பொருளிலாத நெஞ்சினர், அரக்க ரென்றுளர் சிலர் அறத்தி னீங்கினார், நெருக்கவும் யாம்படர் நெறியலா நெறி, துரக்கவு மருந்தவத் துறையும் நீங்கினர்' (ஆரணிய. 129); 'சொல்லிய வறநெறித் துறையி னீங்கினேம்' (ஆரணிய. 130); 'மாதவத் தொழுகலே மறைகள் யாவையும், ஓதலெ மோதுவார்க்குதவ லாற்றலெம், பூதெரி வளர்க்கலெ முறையி னீங்கினெம்' (ஆரணிய. 131) என்பன காண்க. வாய்மை - வாயின் தன்மை; அதாவது உண்மை யன்றிப் பிறிதொன்றும் உரையாமை. 'வாய்மை யெனப்படுவதி

யாதெனின் யாதொன்றும், தீமையிலாத சொலல்' (குறள். 291); என்று அதன் இலக்கணம் கூறப்பட்டமை காண்க.

பி - ம். 1. ஆற்றலா.

3. செய்தவர்களே; செருப்பன்.

4. துயரென வாய்மை கூறினன். 272

4165. ஆறுநா லாண்டவண் வைகி யப்புறத்
தீறிலா முனிவர ரேய வாணையால்
மாறிலாத் தமிழ்முனி வனத்தை நண்ணினன்
ஊறிலா முனிவர னுவந்து முன்வர.

'(இராமபிரான்), ஆறு நால் ஆண்டு - பத்து ஆண்டுக் காலம், அவண் - அந்தத் தண்டக வனத்தில், (தம்பாதனா பன்னசாலை களில்) தங்கியிருந்து, அப்புறத்து - அதன் பின்னர், ஈறு இலா - முடிவில்லாத, முனிவரர் - இருடி புங்கவர்கள், ஏய - ஏவிய, ஆணையால் - கட்டளைக் கிணங்க, மாறு இலா - தன்னிகரற்ற, தமிழ் முனி வனத்தை - தமிழ் முனிவனான அகத்தியனுடைய வன விடுதியை, ஊறு இலா முனிவரன் - துன்பமில்லாத அந்த முனிவரன், உவந்து - மகிழ்ச்சியுடன், முன் வர - எதிர் கொண்டு வர, நண்ணினன் - அடைந்தான்.

ஆறு நாலாண்டு - பத்தாண்டு; 'பத்துநாலும் பகலலவோ' (அயோத்தி. நகர்நீ: 22); என்றாற் போன்று, இராமபிரான் தண்டக வனத்தில் தங்கியது பத்தாண்டுகள் என்பது இச் செய்யுளிற் காண்க. 'அன்னதாதலி னேயின வாண்டெலாம், இன்னல் காத்திங் கினிதுறைவா யெனச், சொன்ன மாதவர்' (ஆரணிய. 142) என்றது காண்க. சிறந்த சீவன் முத்தர்கள் ஆகலின யமவாதனை யாகிய இறுதி முடிவில்லாதவர், முடிவில்லாத தவத்தர் எனினு மாம். வாலகல்யர் சுதீக்ஷணர் என்பவர் என்ப. முனிவரர் ஆணை யால் அகத்தி யாச்சிரமம் சென்றது: 'மாதவர், சிந்தை யெண்ணி யகத்தியர் சேர்கென' (ஆரணிய. 143) என்றது காண்க. மாறு - ஒப்பு; 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்தபு. வள்ளி, 216); 'மாறன்மையின் மறம் வாடுமென் றிளையாரையு மெறியான்' (சீவக. 2261); தமிழ் முனி - அகத்தியன். 'நீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்'; 'தழற் புரைசுடர் கடவுடந்த தமிழ் தந்தான்'; 'என்றுமுள தென்

றமிழி யம்பியிணைச கொண்டான்' (ஆரணிய. 153, 158, 164) காண்க. கிட்கிந்தா. 736 உரைக் குறிப்பும் காணத்தகும். 'தென்றமிழ் நாட்டகன் பொதியிற் றிருமுனிவன் தமிழ்ச் சங்கம் சேர்கிற்பீரேல்' (கிட்கிந்தா. 750) என்பது சுக்கிரீவன் கூற்று. 'மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல், எண்ணிடைப் படக்கிடவாத முத்தமிழ்க்குப் பேரிலக்கணம் வகுத்த பேராசிரியராதலின் 'தமிழ் முனி' எனப்பட்டான். தமிழிலக்கணத்தைச் சிவபிரானிடமிருந்தே கற்றவன் இம் முனிவன். 'ஆதியிற்றமிழ் நூல் அகத்தியற் குணர்த்திய, மாதொரு பாகனை' (தொல்: சொல் பாயி); 'தொடர்புடைய தமிழ் மொழியை யுலகமெலாம் தொழுதேத்த, குடமுனிக்கு' என்று வருவன காண்க. இக்குறுமுனிவனே நக்கீரற்குத் தமிழ் இலக்கணம் கற்பித்ததாகத் திருவிளையாடல் கூறும்: (திருவிளை: கீரனுக்கிலக்கணம் உரைத்தபடலம்) மேலே நூல் என்றது இலக்கணம் என்றுணர்க. அகத்தியர் வதிந்த திசையாதலின் தென்றிசைக்கே ஆகஸ்தியம் என்று பெயருண்டு.

பி-ம். 4. முன் வந்தான். 273

4166. குடங்கையில் வாரிதி யணைத்துக் கொண்டவன்
நடங்கணுன் றனையெதிர் தழுவிச் சாபமும்
கடுங்கணைப் புட்டிலுங் கவசந் தானுமத்
திடம்படு சுரிகையுஞ் சேர வீந்தனன்.

'குடங்கையில் - உள்ளங் கையில், வாரிதி அணைத்து கொண்டவன் - கடல் புனலை (ஆசனமாகப்) பருகும் பொருட்டு முகந்தெடுத்துக் கொண்டவனுன அகத்திய முனிவன், தடகணுன் தனை - அகன்ற பெரிய விழிகளை யுடையவனுன இராமபிரானை, எதிர் தழுவி, (அவனுக்குச்), சாபமும் கடுகணை புட்டிலும் - வில்லும் விரைவாகச் செல்லும் அம்புகளைத் தன் அகம் கொண்ட (இரண்டு) தூணீரங்களையும், கவசம் தானும் - கவசத்தையும், அ - அந்த திடம்படு சுரிகையும் சேர, ஈந்தனன் - உறுதிவாய்ந்த உடைவாளும் ஒருசேரக் கொடுத்தான்.

குடங்கை - உள்ளங்கை; நீரைப் பருகற்குக் குடம் போன்று அமைத்துக் கொண்ட கை எனினுமாம். 'குடங்கை யளவே யுள கண்ணினுளை' (சீவக. 22); 'குடங் கையாற் கொம்மை கொட்டுவ போன்றவே' (சீவக. 529); 'குடங்கையி னெடியன தவளை யுண்

கணே' (வந. 2006) வாரிதி ; 'ஆழி - வடசொல். குடங்கையில் அணைத்தல் - ஆசமனம் செய்தல். குடங்கையில் அணைத்துக் கொண்டது ; ஆரணிய. 154 ; சாபமும் புட்டிலு மீந்தது ; ஆரணிய. 172. சாபம் - திருமாலுடைய வில்லேயே அகத்தியர் இராமபிரானுக்குக் கொடுத்துதவியது என்பது. பின் : 'கலுழன் மேலொருவ னின்றார் செய்தானுடைய வில்லும், தெறு சினத்தவர்கள் முப்புரம் நெருப்புற வுருத் தெய்த வம்பும், குறுமுனிப் பெயரினு னிறைதவர்க் கிறைதரக் கொண்டு' (யுத்த. 98) என்பது கொண்டு உணரலாம். முதனூலிலும் ஆரணிய காண்டம் 11-வது சர்க்கத்திலும் இச் செய்தி கூறப் பெற்றுள்ளது. இனி, பரசுராமனுல் முன் கொடுக்கப் பெற்றதும், பின் இராமபிரான் வருணனிடம் ஒப்பித்ததுமான வில்லே (பால. பரசு. 45) கரன் போரில் வருணன் கொண்டு வந்து கொடுத்து உதவினுன் என்பது ஆரணிய 539-ஆம் செய்யுளால் தெளியப்படும். இப்பொழுது அகத்தியர் கொடுத்த வில் இதனின்றும் வேருக இருத்தல் கூடும். ஆரணிய காண்டம் அகத்தியப் படலத்து, 'மேனுள் முழு முதல்வன் வைத்துளது' (172) என்ற இடத்துக் கூறப்பட்டமுதல்வனைத் திருமால் என்று சிலரும் கொள்வர். முன்னர் கணே 'முப்புர மெரித்த தனி மொய்கணே' யென்று குறிக்கப் பெற்றதும் ஆராய்தற்குரியது. இக் கணே திருமாலே என்பது வரலாறு. சுரிகை - முன்னர். 'இப் புவனமுற்று மொருதட்டினிடை யிட்டால், ஒப்புவர விற்றென வுரைப்பரிய வாள்' (ஆரணிய. 173) என்றதும் காண்க. அகத்திய முனிவர் இராமபிரானுக்கு வாளும் வில்லும் தூணியும் கொடுத்ததாகக் (கூர்ம புராணம். இராமன் வனம்புகு. 55) கூறும். இனி, அந்த வில் திருமாலுடையது. விச்வகன்மனுல் உண்டாக்கப் பட்டது என்றும், அந்த அம்பு பிரமனுல் அளிக்கப்பட்டதென்றும், அம்பும் இரு புட்டில்களும் வாளும் இந்திரனுல் கொடுக்கப் பெற்றவை என்றும் கூறி அகத்தியர் இராமபிராளிடம் அளித்தார் என்று வான்மீகம் கூறும். மற்றும் 'மகேந்திரம்' என்னும் பெரிய வில்லேயும், அம்பருத் தூணீரத்தையும், மணிகள் இழைக்கப் பெற்ற ஒரு வாளேயும் தந்தனர் என்று அத்யாத்ம ராமாயணம் பேசும்.

பி - ம். 1. அணைத்தும்.

2. தானுமற்.

4167. அப்புறத் தெருவையி னரசைக் கண்ணுருத்
துப்புறச் சிவந்தவாய்த் தோகை தன்னுடன்
மெய்ப்புகழ்த் தம்பியும் வீரன் தானும்போய்
மைப்பொழி லுறுபஞ்ச வடியின் வைகினர்.

'அ புறத்து - அதன் பின்னர், துப்பு உற சிவந்த வாய் தோகை - பவழம் போன்று சிவந்த வாயினையும், தோகை தன்னுடன் - மயில் போன்ற சாயலையும் உடைய சீதா தேவியுடன், மெய் புகழ் தம்பியும் - உண்மையான (நிலைத்த) புகழினையுடைய, வீரன் - இலக்குவனும், தானும் - இராமபிரானும், போய் - சென்று, எருவையின் அரசைகண்உரு - கழுகுகட்கு அரசனான சடாயுவைக்கண்டு, மைஉறு பொழில் பஞ்ச வடியின் வைகினர் - மேகங்கள் தங்கப் பெற்ற (மிக வுயர்ந்த) பொழில் - சோலைகளை யுடைய, பஞ்சவடியின் வைகினர் - பஞ்சவடியில் சென்று த்ங்கி யிருந்தார்.

எருவையின் அரசு - சடாயு. பஞ்சவடி: 'பனிதரு தெய்வப் பஞ்சவடி' (ஆரணிய. 226) வடசொல்; ஐந்து ஆலமரங்கள் சூழ் நின்ற இடம். இப்பொழுது அகண்ட கோதாவரிக் கரையில் அது நாஸிக் என்ற பெயரான் வழங்கும் இடம் என்பர். அகத்தியர் பன்னசாலையிலிருந்து இந்த இடம் இரண்டு யோசனை தூரம் என்று வான்மிகமும், ஒரு காத தூரம் என்று அத்யாத்மமும் கூறும். வடி - வட விருக்ஷம் உள்ள இடம்.

பி - ம். 3. புகட்டம்பியும்.

4. மைப்பறப் பொழிற், மைப்பொழிலுறு, மைப்பொழிலப் ; வைகினன்.

வேறு

4168. பல்பக லிறந்த பின்றைப்
பாதக வரக்கி தோன்றி
மெல்லிய விடையி னளை
வெருண்டுழி யிளைய வீரன்
அல்கிய திருவைத் தேற்றி
யவளுடைச் செவியு மூக்கும்
மல்கிய முலையுங் கொய்தான்
மறித்தவள் கரற்குச் சொன்னள்.

'(அந்தப் பஞ்சவடியில்), பல்பகல் இறந்த பின்றை-பல நாட்கள் கழிந்த பிறகு, பாதக அரக்கி தோன்றி - சூர்ப்பணகை என்னும் கொடிய அரக்கி எதிர்பட்டு, மெல்லிய இடை யினுளை வெகுண்டுழி-நுண்ணிய இடையை யுடையவளான பிராட்டியினிடம் வெறுப்புக் கொண்டு, (அவளைத் தூக்கிச் செல்ல முயல்கையில்) இளைய வீரன்-இலக்குவன், அல்கிய திருவை தேற்றி - மனம் உளைந்த சீதா தேவியைத் தேற்றி, அவ்வுள் உடை - அந்த அரக்கியினுடைய, செவியும் மூக்கும் மல்கிய முலையும் கொய்தான் - செவி மூக்கு பருத்த முலை எனற இவைகளை அறுத்தான்; அவள் - அந்த அரக்கி, மறித்து - மீட்டும், கரற்கு சொன்னுள் - கரனிடம் நிகழ்ந்ததை அறிவித்தாள்.

செவி மூக்கு முலைகளைக் கொய்தமை: 'மூக்கும் காதும் வெம் முரண் முலைக் கண்களும் முறையால், போக்கிப் போக்கிய சினத் தொடும் புரிகுழல் விட்டான்' (ஆரணிய. 312) என்றது கொண்டு காண்க. இச் செய்யுளின் உரைக் குறிப்பும் காணத்தகும்.

பி - ம். 3. அல்லியந்; அரக்கியை.

4. மடுத்தவள், மதித்தவள். 276

4169. கரனொடு திரிசி ராவுங்
கடியதூ டணனுங் காந்தி
எரியுமூன் றனலே யொப்பா
ரெழுந்துவெஞ் சேனை யோடும்
விரவின ரையன் செங்கை
வில்லினை நோக்கு முன்போர்
எரிதவழ் பஞ்சி னுக்கா
ரரக்கியு மிலங்கை புக்காள்.

'கரனொடு திரிசிராவும் - கரனும் திரிசிரனென்பவனும், கடிய தூடணனும் - கொடிய தூடணனும் என்னும் மூவரும், காந்தி - கொதித்து, எரியும் மூன்று அனலே ஒப்பார் - எரிகின்ற முத்தீப் போல்பவராய், எழுந்து - கிளம்பி, வெம் சேனையோடும் - கொடிய படையோடும், விரவினர் - கூடினவராய், ஐயன் - இராமபிரான், செ கை வில்லினை நோக்கும் முன்பு - (தனது) சிவந்த கரத்தில் உள்ள வில்லைப் போர் புரிய எண்ணி நாணேற்றுமாறு நினைத்தற்கு

முன்பே), எரி தவழ் பஞ்சின் உக்கார் - நெப்பை யடைந்த பஞ்சு போன்று அழிந்தார்; (பின்னர்) அரக்கியும் இலங்கை புக்காள் - சூர்ப்பணகையும் இலங்காபுரிக்குச் சென்றாள்.

மூன்றனல் - ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினியம் என்பர். 'வில்லொன்றிற் கடிகை மூன்றில் ஏற்றினன் விண்ணில்' (ஆரணிய. 617) என வருதல் காண்க.

பி - ம். 1. கரிய தூடணனும்.
2. மூன்றனலை; எதிர்ந்து வெஞ்சேனையோடும், ஏழிரு கோடியோடு.
4. எரிதழற்; பஞ்சி யொத்தார். 277

4170. இருபது தடக்கை யான்மாட்
டிசைத்தலு மெழுந்து பொங்கி
ஒருபது திசையு முட்க
வஞ்சக வுழையொன் றேவித்
தருபதஞ் சமைந்த முக்கோற்
றூபத வடிவங் கொண்டு
திருவினை நிலத்தொ டேந்தித்
தென்றிசை யிலங்கை புக்கான்

'இருபது தடக்கையான் மாட்டு - (இலங்கையில் இருந்த) இருபது பெரிய கரங்களை யுடையவனான இராவணனிடத்தில், இசைதலும் - (தனக்கு நேர்ந்த பரிபவத்தை அரக்கி) கூறின அளவில், பொங்கி எழுந்து - வெகுண்டெழுந்து, ஒருபது திசையும் உட்க - ஒப்பற்ற பத்துத் திக்குகளும் அஞ்சுமாறு, வஞ்சகம் உழை ஒன்று ஏவி - பிராட்டியை வஞ்சனையால் கவரக் கருதி மாய மானை ஏவி, தரு பதம் - இராமபிரான் பிராட்டியைப் பிரிந்த சமயம் பார்த்து, சமைந்த - அயன் அரி அரன் என்ற மூவரும் ஒன்றாகக் கூடி நின்ற, முக்கோல் தாபதன் வடிவு கொண்டு - திரிதண்ட சன்னியாசியின் வேடம் தரித்து, திருவினை - பிராட்டியை, நிலத்தொடு ஏந்தி - பூமியுடன் பெயர்த்து எடுத்து, தென் திசை இலங்கை புக்கான் - தென் திசையிலிருந்த இலங்கையுட் புகுந்தான்.

முக்கோல் தாபதர்: 'உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்' (கலித். பாலை. 9); என்ற இடத்து நச்சினார்க்கினியர்

கூறும் உரை காண்க. தாபதர்: 'இருவர் மானிடர் தாபதர்' (ஆரணிய. 365); நிலத்தோடேந்தி: 'மண்ணொடுங் கொண்டு போனான்' (சுந்தர 1276); 'கீண்டானில யோசனை கீழ்புடையே' (ஆரணிய. 878); 'ஆண்டு நின்று மரக்கனகழ்ந்து கொண், டண்டு வைத்த திளவலியற்றிய, நீண்ட சாலையொடு நிலை நின்றது' (சுந்தர. 630); தென்றிசை யிலங்கை நோக்கி, 'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டித் தென்றிசை யிலங்கை நோக்கி' (திவ். திருமாலை. 19).

பி-ம். 3. தருபதமமைத்த; தாபதர்; வடிவங் கொள்ளாத்.

4. சென்றான், போனான். 278

4171. போகின்ற காலை யேற்ற
சடாயுவைப் பொருது வீட்டி
வேகின்ற வுள்ளத் தாளை
வெஞ்சிறை யதனின் வைத்தான்
ஏகின்ற வஞ்ச மான்மா
ரீசற்கொன் றிளவ லோடு
பாகின்ற கீர்த்தி யண்ணல்
தந்தையைப் பரிவிற் கண்டான்.

போகின்ற காலை-(இராவணன் பிராட்டியைத் தூக்கிக் கொண்டு) செல்லும் போழ்தில், (அவளது தீனக் குரலைக் கேட்டு வந்து அவளைக் காக்கும் பொருட்டு) ஏற்ற-எதிரேற்ற, சடாயுவை-சடாயுவை, பொருது வீட்டி-போர் செய்தழித்து, வேகின்ற உள்ளத்தாளை-(இராமபிரானைப் பிரிந்து கொதிக்கின்ற மனத்தினளான சீதா தேவியை (இலங்கைக்கு எடுத்துச் சென்று), வெம் சிறை அதனின் வைத்தான்-(சிஞ்சுபவனத்தில்) கடுங் காவலில் அமைத்தான்; (சீதா தேவியின் செய்தி இங்ஙனமிருப்ப), பாகின்ற-பரவுகின்ற, கீர்த்தி அண்ணல்-புகழுடன் கூடிய இராமபிரான், ஏகின்ற-(தன்னை இழுத்துச் சென்ற) வஞ்சம்மான்-வஞ்சனையால் வந்த மானாகிய, மாரீசன் கொன்று-மாரீசன் என்ற இராக்கதனைக் கொன்று, இளவலோடு-இலக்குவனுடன், தந்தையை பரிவில் கண்டான்-தந்தையாகிய சடாயுவை அன்புடன் பார்த்தான்.

சடாயு - கழுகரசன். அருணன் புதல்வன் - சம்பாதி பின் பிறந்தவன்; ஆரணிய. 825, 201 காண்க. பாவுதல் - பரவுதல். ஏகுகின்ற ஏகுகின்ற என்றுயது பாவுகின்ற பாகின்ற எனக் குறுகியது 'மீப்பாவிய விமையோர் குலம்' (யுந்த. 3018); 'பாவி வேலை யுலகு பரத்தலால்' (யுந்த். 3359).

பி-ம். 1. போது காத்த; சடாயுவைப் புரட்டிப் போறன், போதுங் காத்த சடாயுவைப் புரட்டிப் போயவ்.

3. ஏகின்ற வுழை மாரீசன் தன்னை வீழ்த்து.

4. வள்ளறந்தையை, அன்னுன் ருதையை. 279

4172. அன்னவன் தனக்கு வேண்டு
மருங்கடன் முறையி னூற்றி
நன்னுதல் தன்னைத் தேடித்
தென்றிசை நடக்கு மையன்
மன்னிய கவந்தன் தன்னை
யுயிரொடு சாப மாற்றித்
தன்னையே மறப்பி லாத
சவரிபூ சனையுங் கொண்டான்.

அன்னவன் தனக்கு - அந்தக் கழுகரசனுக்கு, வேண்டும் - (ஆற்ற) வேண்டிய, அரு கடன் முறையின் ஆற்றி - அரிய நீர்க் கடன் தீக் கடன்களை முறைப்படி செய்து முடித்து, (மரித்த சடாயு வின் சொற்படி), நல் நுதல் தன்னை தேடி - அழகிய நெற்றி யுடைய சீதா தேவியைத் தேடிக் கொண்டு, தென் திசை நடக்கும் ஐயன் - தெற்குத் திக்கை நோக்கிச் செல்லும் இராமபிரான், (இடை வழியில்), மன்னிய கவந்தன் தன்னை - பொருந்திய கவந்தன் என்னும் அரக்கனுடைய, உயிரொடு சாபம் மாற்றி - உயிருடன் (அவனுக்கிருந்த) சாபத்தையும் போக்கி, தன்னை மறப்பு இலாத சவரி பூசனையும் கொண்டான் - தன்னை மறவாமல் எண்ணியிருந்த சவரி யென்பாளுடைய பூசனையையும் பெற்றுக் கொண்டான்.

அருங்கடன் ஆற்றியது; (ஆரணிய. 1025 - 1028); பூசனை: 'பூசனை விரும்பி யெம்பாற் போதுதி யென்று' (ஆரணிய. 1191); உயிரொடு சாப மாற்றி; உடனவிற்சியணி.

பி-ம். 2. நடக்கு நாதன். 280

4173. ஆங்கவள் தனது சொல்லா
லருக்கன்மா மகனை யண்மிப்
பாங்குற நட்டு வாலி
பருவரல் கெடுப்ப லென்னு
ஓங்கிய மரமும் வாலி
யுரமுமூ டுருவ வெய்திட்
டாங்கவன் தனக்குச் செல்வ
மரசொடு மருளி னீந்தான்.

ஆங்கு - அப்பொழுது, அவள் தனது சொல்லால் - அந்தச் சவரி சொல்லின்படி, அருக்கன் மாமகனை அண்மி - சூரியனுடைய சிறந்த புதல்வனான சுக்கிரீவனை அணுகி, பாங்குற நட்டு - (அவனுடன்) மனம் கலந்து நட்புக் கொண்டு, 'வாலி பருவரல் கெடுப்பல்- வாலியினால் நிகழ்ந்த துன்பத்தைப் போக்குவேன்', என்னு - என்று, ஓங்கிய மரமும் - உயர்ந்து வளர்ந்த ஏழு மரங்களையும், வாலி உரமும் - வாலியின் மார்பையும், ஊடுருவ எய்திட்டு-ஊடுருவு மாறு அம்பெய்து, ஆங்கு - தான் கூறிய உறுதி மொழியின் படியே, அவன் தனக்கு செல்வம் அரசொடும் அருளின் ஈந்தான் - அந்தச் சுக்கிரீவனுக்குச் செல்வத்தையும் அரசாட்சியையும் அருளொடும் அளித்தான்.

ஆங்கு - அவன் கூறிய உறுதி மொழி; ' வில்லிடை வாளியின் வீட்டித், தலைமை யோடுநின் தாரமு முனக்கின்று தருவென் ' (கிட்கிந்தா. 148) காண்க. ஓங்கிய மரமும் வாலியுரமு மூடுருவ ; உடனவிற்சியணி.

பி - ம். 1. மகனை யெய்திப்.
2. பருவரம்.



4174. காலமா மாரி நீங்கக்
கவயனோ டிடபன் காந்து
நீலன்மா மயிந்தன் சாம்பன்
சதவலி பனச னீடு .

வாலிமா மைந்த னென்றிவ்
வாநரத் தலைவ ரோடு
கூலவான் சேனை சூழ
வடைந்தன னெங்கள் கோமான்.

மா மாரி காலம் நீங்க - பெரிய மழைக் காலம் கழிந்ததாக, கவயனோடு - கயவனும், இடபன் - இடபனும், காந்தும் நீலன் - வெகுள்கின்ற நீலனும், மா மயிந்தன் - பெரிய மயிந்தனும், சாம்பன் சதவலி பனசன் - சாம்பன் சதவலி பனசன், நீடு - பெருமை மிக்க, வாலிமா மைந்தன் - வாலியின் பெரிய புதல்வனை அங்கதனும், என்ற இவ் வாநரர் தலைவரோடு - என்ற இந்த வாநரத் தலைவருடன், கூலம் வான் சேனை சூழ எங்கள் கோமான் அடைந்தனன் - கூட்டமான சிறந்த குரக்குச் சேனை சூழ்வர எங்கள் தலைவனை சுக்கிரீவன் (இராமபிரானிடம் வந்து சேர்ந்தான்).

கவயன் - வாநர வீரன்; கிட்கிந்தா. 697; நீலன், மயிந்தன், சாம்பன், சதவலி, பனசன், கிட்கிந்தா. 696, 707, 701, 699, 695; முறையே உரைக் குறிப்புக் காண்க. சாம்பன் என்ற கரடியரசனை யும் குரங்குடன் சேர்த்துக் கூறியது சுருங்கச் சொல்லல் என்னும் அழகு பற்றி என்க. எங்கள் கோமான்: 'எங்கள் கோமான் சூரியன் தோன்றல் என்றான்' (சுந்தர: 1126),

பி - ம். 3. வாநரப் படைஞராய, தலைவராய.
4. சேனையோடும்; வந்தனன்; விரைந்தனன். 282

4175. எழுபது வெள்ளத் துற்ற
குரக்கின மெழுந்து பொங்கி
அழுவநீர் வேலை யென்ன
வடைந்துழி யருக்கன் மைந்தன்
தழுவிய திசைகள் தோறுந்
தனித்தனி யிரண்டு வெள்ளம்
பொழுதிறை தடாது மீளப்
போக்கினன் திருவை நாட.

எழுபது வெள்ளத்து உற்ற - எழுபது வெள்ளமாகத் திரண்ட, குரங்கு இனம் பொங்கி எழுந்து - குரங்குப் படைகள் வெகுண்

டெழுந்து, அழுவம் நீர் வேலை என்ன - பெரும் பரப்பினதான நீரை யுடைய கடல் போல, அடைந்துழி - (தன்னைச்) சேர்ந்த பொழுது, அருக்கன் மைந்தன் - சூரியன் புதல்வனான சுக்கிரீவன், தழுவிய திசைகள் தோறும் - சூழ்ந்து பொருந்திய திக்குகளில் எல்லாம், திருவை நாட - பிராட்டியைத் தேடும் பொருட்டு, தனி தனி இரண்டு வெள்ளம் - தனித் தனியாக இரண்டு வெள்ளம், பொழுது இறைதடாது - குறிப்பிட்ட காலத் தவணையில் சிறிதும் தவறாமல், மீள - மீண்டு வருமாறு, போக்கினன் - அனுப்பினான்.

எழுபது வெள்ளம் - இத் தொகை விடாமல் இக் காப்பியத்தில் பல இடங்களிலும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. எழுபது வெள்ளத்துற்ற' யுத்த: 896, 4186 காண்க. 'எழுபது வெள்ளம் கொண்ட வெண்ணனை' (சுந்தர. 520); 'வெள்ளமெழு பதுள தன்றோ வீரன் சேனை' (சுந்தர. 603); 'எழுபது வெள்ளம் யாக்கைக் கோருயி ரெய்திற்றன்றே' (யுத்த. 866); 'ஏற்ற வெள்ள மெழுபதினிற்ற' (கிட்கிந்தா. 724); தனித் தனி இரண்டு வெள்ளம்: 'தாரை மைந்தனும் சாம்பனுந் தாமுதல், வீரர் யாவரு மேம்படு மேன்மையார், சேர்க நின்னெடுந் திண்டிறற் சேனைகள், பேர்க, வெள்ள மிரண்டொடும் பெற்றியால்' (கிட்கிந்தா. 729) காண்க. பொழுதிறை தடாது: 'வெற்றி வானர வெள்ள மிரண்டொடுந், சுற்றியோடித் துருவி யொருமதி, முற்று றுதமுன் முற்றுதி ரிவ்விடைக், கொற்ற வாகையினீர்' (கிட்கிந்தா. 793); 'கொற்றவ னாணையுங் குறித்து நின்றனம், இற்றது நஞ் செயல்' (கிட்கிந்தா. 922); 'சொன்னநா ளவதியை யிறைவன் சொல்லுமோ' (கிட்கிந்தா. 938).

பி-ம். 1. வெள்ளத் திற்ற.
4. நாடி. 283

4176. தென்றிசை யிரண்டு வெள்ளஞ்
சேனையும் வாலி சேயும்
வன்றிறற் சாம்ப னேடு
வாவின ரேவ நாயேன்
குன்றிடை யிலங்கை புக்குத்
திருவினைக் குறித்து மீண்ட
பின்றைவந் தளக்கர் வேலை
பெரும்படை யிறுத்த தன்றே.

இரண்டு வெள்ளம் சேனையும் - இரண்டு வெள்ளம் வானரச் சேனையுடன், தென் திசை வாவினர்-தெற்கு திக்கிற்றுவிச் சென்ற வர்களாகிய, வாலி சேயும்-அங்கதனும், வல் திறல் சாம்பனோடு - வலிய திறமை செறிந்த சாம்பனும், ஏவ - என்னைத் தூண்ட, நாயேன் - அடியேன், குன்றிடை இலங்கை புக்கு - மகேந்திர மலையி னின்று தாவி இலங்கைக்குட் சென்று, திருவினை குறித்து - பிராட்டியைக் கண்டு அவளைப் பொறுத்த செய்திகளை அறிந்து, மீண்ட பின்றை - திரும்பிய பின்னர், வேலை பெரு படை - சுக்கிரீவ மன்னனுடைய பெரும் குரக்குச் சமுத்திரம், அளக்கர் வந்து இறுத்தது - கடற் கரைக்கண் வந்து தங்கிற்று.

தென்றிசை யிரண்டு வெள்ளம்: 'நின்னெடுந் தெண்டிறற் சேனைகள், பேர்க வெள்ள மிரண்டொடும் பெற்றியால்' (கிட்கிந்தா. 729); வன்றிறற்: 'வன்றிறற் குரங்கி னாற்றல்' (சுந்தர. 989); குன்றிடை இலங்கை - திரிகூட மலைமேலிருந்த இலங்கை யெனினுமாம். வேலை பெரும்படை அளக்கர் வந்திறுத்தது என மொழி மாற்றுக. அளக்கர் வேலை - இரு பெயரொட்டுமாம். 'அளக்கரைக் கடந்து மேலறிந்த நம்பியும்' (யுத்த. 321); அநுமன் தன் வெற்றியைக் கூறவில்லை என்பது அறியத்தகும். 'நீண்ட வாளரக்கரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி, மீண்டதும் விளம் பான் தான் தன் வென்றியை விளம்ப வெள்கி' (சுந்தர. 1253) காண்க.

பி-ம். 2. லாவின ரெவரும், என்னில்.

4. சென்றிடை.



4177. அறிவினுக் கறிவு போல்வான்
வீடண னலங்கற் றோளான்
செறிபுயத் தரக்கன் தம்பி
திருவினை விடுதி யன்றேல்
இறுதியுற் றனநீன் வாழ்வு
என்னவவ னுரைப்பச் சீறிக்
கறுவுறப் பெயர்ந்து போந்து
கருணையான் சரணம் பூண்டான்.

அறிவினுக்கு அறிவு போல்வான் - அறிவுக்கும் அறிவு போல்பவனும் (நிறைந்த அறிவாளியும்), அலங்கல் தோளான் - மாலையணிந்த தோள்களை யுடையவனும், செறி புயத்து அரக்கன் தம்பி வீடணன் - அடர்ந்த (இருபது) கரங்களை யுடையவனான இராவணனுடைய தம்பியுமாகிய வீடணன், (தன் தமையனை நோக்கி) 'திருவினை விடுதி - சீதா தேவியை விட்டிடுவாயாக, அன்றேல் - அன்றேல் (விடாமலிருப்பையாயின்), நின் வாழ்நாள் இறுதி உற்றன - உனது ஆயுட்காலம் முடிவடையும்', என - என்று சொல்ல, அவன் - அந்த இராவணன், சீறி உரைப்ப - வெகுண்டு பேச, (அவ் வீடணன் அவன்பால்), கறுவு உற - வயிரம் பொருந்த, பெயர்ந்து போந்து-(இலங்கையினின்று) நீங்கி வந்து, கருணையான் சரணம் பூண்டான் - அருள் மிக்கவனான இராமபிரானுடைய திருவடியைப் புகலாக அடைந்தான்.

அறிவினுக்கு அறிவு - இது அத்துவிதிகட்கு உடன்பாடன்று. 'அறிவுக்கு மறிவு செய்யு மறிவு வேறுண்டென்றெண்ணும், அறிவற்ற குதர்க்க மூடர்க் கனவஸ்தை பலமாய்த் தீரும்' (கைவல்யம். தத்துவ விளக்கம். 74)ம் அதன் விரிவுரையும் காண்க. சீறி உரைப்ப என மாற்றுக. 'திருவினை விடுதி' என்றது: 'இசையும் செல்வமு முயர்குலத் தியற்கையு மெஞ்ச, வசையும் கீழ்மையு மீக்கொளக் கிளையொடு மடியா தசைவில் கற்பினவ்வணங்கை விட்டருளுதியதன் மேல், விசைய மில்லெனச் சொல்லினன்' (யுந்த. 110) என்ற இடத்துக் காண்க. கறுவு: 'கறுத்த மமுனி (பால: கையடை: 14); கருணையான் சரணம் பூண்டான்: 'வரங்களின் வாரியன்ன தாளிணை வந்துவீழ்ந்தான்' (யுந்த. 443).

பி - ம். 1. தோளாய்.

2. விடாது காப்பின்.

3. இறுதியுற்றனை, உற்றுளது; என்றவன்.

4. பாதங் கண்டான்.

4178. ஆங்கவற் கவய நல்கி
யரசொடு முடியு மீந்து
பாங்கினல் வருணன் தன்னை
யழைத்திடப் பதைப்பி லாது
தாங்கினன் சிறிது போது
தாமரை நயனஞ் சேப்ப
ஓங்குநீ ரேழு மன்ன
னுடலமும் வெந்த வன்றே.

ஆங்கு - அப்பொழுது (இராமபிரான்), அவற்கு - அந்த வீடணனுக்கு, அவயம் நல்கி - அபயம் அளித்து, அரசொடு முடியும் ஈந்து - இலங்கை யரசினையும் மகுடத்தையும் தந்து, வருணன் தன்னை - (கடற்கிறைவனை) வருணனை, பாங்கினல் - விதி முறைப்படி, அழைத்திட - அழைக்குமாறு, பதைப்பு இலாது - மனத்தில் பரபரப்புச் சிறிதுமின்றி, சிறிது போது - சிறிது காலம், (புல்லணையில்) தாங்கினன்-பிராயோபவேசம் செய்தான்; (அப்பொழுதும் வருணன் எதிர்ப்படாமையின்) தாமரை நயனம் சேப்ப - செங்கமலம் போன்ற விழிகள் (சினத்தால்) சிவப்புற, அன்றே - அப்பொழுதே, ஓங்கும் நீர் ஏழும் - அலைகள் உயர்ந்து எறிகின்ற கடல்கள் ஏழும், அன்னன் - வருணனுடைய, உடலமும் - சரீரமும், வெந்த - வெந்து விட்டன.

அவய நல்கி: 'பற்றுதலன்றி யுண்டோ புகலெமைப் பகர்கின்றானை' (யுத். 411); 'ஆதலானபய மென்ற பொழுதத்தே யபய தானம், ஈதலே கடப்பாடு' (யுத். 423); சிறிது போது தாங்கினன்: 'நன்னூ னெறியடுக்கிய புல்லிற், கருணையங் கடல் கிடந்தது கருங் கடனோக்கி, வருண மந்திர மெண்ணினன் விதி முறை வணங்கி' (யுத். 535); தாமரை நயனம் சேப்ப: 'புனலிடை யெரிமுளைத் தென்னச், சீற்ற மீக்கொடு சிவந்தன தாமரைச் செங்கண்'. அம்பு செலுத்தியதன் விளைவினை யுத். 549 - 589 செய்யுட்களில் காண்க. 'சிறிது போது' என்ற தொடரை இடைநிலை விளக்காக்கி முன்னும் பின்னும் கூட்டிப் பொருள் கோடலுமாம். உடலம் - அம்சாரியை.

பி - ம். 2. பரிவிலாமை.

4. வெந்தது.

4179. மற்றவ னவய மென்ன
　　மலர்ச்சர ணடைந்த வேலை
வெற்றிவா நரர்கள் பொங்கி
　　வெற்பினல் வேலை தட்டல்
முற்றுற நன்சி யற்றி
　　மொய்யொளி யிலங்கை புக்குப்
பற்றினர் சுற்றி யார்த்தார்
　　வானவர் பயங்கள் தீர்ந்தார்.

மற்று - பின்பு, அவன் - அவ் வருணன், அவயம் என்ன - அபயம் என்று சொல்லி, மலர் சரண் அடைந்த வேலை - (இராம பிரானுடைய) செந்தாமரை போன்ற திருவடியைப் புகல் அடைந்த போழ்தில், வெற்றி வாநரர்கள் பொங்கி - வென்றியுடன் கூடிய குரங்குகள் மனவெழுச்சி மிகுந்து, வெற்பினல்-மலைகளைக்கொண்டு, வேலை தட்டல் - கடலை (அணைகோலித்) தடுத்தல் கைகூடுமாறு, நன்கு - செம்மையாக, முற்றுற இயற்றி - நிறைவேறுமாறு செய்து, (பின்னர்) மொய் ஒளி இலங்கை புக்கு - நிறைந்த ஒளியை யுடைய இலங்காபுரியில் புகுந்து, சுற்றி பற்றினர் ஆர்த்தார் - சுற்றிலும் பற்றிக் கொண்டவராய் ஆரவாரித்தார்; வானவர் பயங்கள் தீர்ந் தார் - (இனி அரக்கர்கள் அழிவர் என்று) அமரர் அச்சம் நீங்கப் பெற்றார்.

அவய மென்ன மலர்ச்சரண் அடைந்தது: 'கவையம் நின் சரணமல்லாற் பிறிதொன்று கண்டதுண்டோ, இவையுனக் கரிய வோதா னெனக்கென வலி வேறுண்டோ. அவயம் நின் அவய மென்ன, வடுத்தடுத் தாற்றுகின்றான்' (யுத்த. 597) என்றது காண்க. தட்டல் - அணை கட்டித் தடுத்தல்; 'தட்டோரம்ம விவண் தட்டோரே' (புறநா. 18); 'மொய்யொளி இலங்கை; 'கூடம், இரவி வெட்கிட விமைக்கின்ற வியற்கைய' (சுந்தர. 109); 'பருகு மின்னகர்த் துன்னொளி பரத்தலிற் பசும்பொன், உருகு கின்றது போன்றுள துலகுசூ ழுவரி' (சுந்தர. 110).

பி - ம். 1. மலர்ச்சரண் கொடுத்த.
2. வேலை கோடு.
3. பெற்றிட வியற்றி நீசர் பிறங்கெயில், பிறங்கொளி.

4180. மலையினை யெடுத்த தோளு
மதமலை திளைத்த மார்பும்
தலையொரு பத்துஞ் சிந்தித்
தம்பிதன் தாளுந் தோளும்
கொலைத்தொழி லரக்க ராயோர்
குலத்தொடு நிலத்து வீழச்
சிலையினை வளைவித் தையன்
தேவர்க ளிடுக்கண் தீர்த்தான்.

'ஐயன் - இராமபிரான் (இராவணனுடையனவான), மலையினை எடுத்த தோளும் - கயிலையங்கிரியைத் தூக்கிய (இருபது) தோள்களும், மதம்மலை திளைத்த மார்பும் - மதம் செறிந்த மலை போன்ற திக்கு வேழங்கள் அழுந்தப் பெற்ற மார்பும், தலையொரு பத்தும் - பத்துத் தலைகளும், தம்பி தன் தோளும் தாளும் - அவன் தம்பியாகிய கும்பகன்னனுடைய தோள்களும் கால்களும், கொலைதொழில் அரக்கர் ஆயோர் குலத்தொடும் - கொல்லும் தொழிலினரான இராக்கதர்களின் கூட்டமும், சிந்தி நிலத்து வீழ - சிதறித் தரையில் வீழ்ந்து அழியுமாறு, சிலையினை வளைவித்து - (தனது) வில்லினை வளைத்து (அம்பெய்து), தேவர்கள் இடுக்கண தீர்த்தான் - வானவர்களின் துயரத்தையும் போக்கி யருளினன்.

மலையினை எடுத்த தோளும்; இத் தொடர் முன்னும் (யுத்த. 1211); வந்துள்ளமை காண்க. மதமலை திளைத்த மார்பு; சுந்தர. 415; ஆரணிய. 557; யுத்த. 5851 காண்க. மதமலை - வெளிப்படை. தம்பி - கும்பகன்னன். தேவர்கள் இடுக்கண் தீர்த்தான் - இராமபிரான் தேவகாரியமாகவே அவதரித்தான் என்பதை ஆங்காங்கு நினைவூட்டுவர் ஆசிரியர். 'அரக்கர் பாவமு மல்லவ ரியற்றிய வறமும், துரக்க நல்லறம் துறந்தனள் தூய்மொழி மடமான்' (அயோத்தி. மந்தரை. 78) 'கைகேயி தூயவுள்ளமுந் திரிந்தது சூழ்ச்சியினிமையோர், மாயையும்மவர் பெற்றநல் வரமுண்மையாலும்' (அயோத்தி. மந்தரை. 77); தேவர் செய் தவத்தினுற் செம்மலேகினன்' (ஆரணிய. 825).

பி - ம். 1. கிளைத்த.
2. தோளுந் தாளும்.
3. அரக்கர் சுற்றம், அரக்கனுர்தங்; தலத்து; மாள.
4. ஐய.

4181. இலக்குவன் பகழி யொன்று
லிந்திர சித்தென் றோதும்
விலக்கரு வலத்தி னானு
மிளைஞருங் கிளையும் வீழ்ந்தார்
மலக்கமுண் டுழலுந் தேவர்
மலர்மழை தூவி யார்த்தன்
றுலக்குநர் குழுக்கள் தோறு
முடற்குறை யாடல் கண்டார்.

இலக்குவன் பகழி ஒன்றால் - இலக்குவனது ஒரு அம்பினால், இந்திரசித்து என்று ஓதும் - இந்திரசித்து என்று சிறப்பித்துக் கூறப்பட்டவனும், விலக்க அரு வலத்தினானும் - எவராலும் தவிர்த்தற்கரிய பலத்தையுடையவனும், இளைஞரும் - இளைய வீரர்களும், கிளையும் - பந்துக்களும், வீழ்ந்தார் - மடிந்தனர்; மலக்கம் உண்டு உழலும் தேவர் - கலக்கமுற்று வருந்திய வானோர், மலர் மழை தூவி - மலர் மாரி பெய்து, ஆர்த்து - ஆரவாரித்து, அன்று - அந்நாளில், உலக்குநர் குழுக்கள் தோறும் உடல் குறை ஆடல் கண்டார் - இறந்தவர்களின் கூட்டங்கள் தோறும் கவந்தங்கள் கூத்தாடுதலைக் கண்டார்கள்.

விலக்க + அரு: அகர ஈறு குறைந்து நின்றது. மலக்கம்' 'மலக்க முண்டாகினுக' (யுத்த. 3570); உலக்குநர்: 'உலக்குநர் வஞ்சக ரும்பரு முய்ந்தார்' (பால. திருவவ: 122).

பி-ம். 1. பகழி தன்னால்.
2. வெலற்கரு; வரத்தினானும்.
3. அலக்கணுண்டுழலுந் தேவரவர்.
4. கண்டான்.



4182. தேவரு முனிவர் தாமுஞ்
சித்தருந் தெரிவை மாரும்
மூவகை யுலகு ளோரு
முறைமுறை தொழுது மொய்ப்பப்
பூவைபோல் நிறத்தி னானும்
வீடணப் புலவர் கோமாற்கு
யாவையு மியம்பி மாண்டார்க்
கியற்றுதி கடன்க ளென்றான்.

'தேவரும் - வானோரும், முனிவர் தாமும் - இருடிகளும், சித்தரும் - சித்தர்களும், தெரிவை மாரும் - அவரவர்களின் மனைவி மாரும், மூவகை உலகுளோரும் - மூன்று வகைப்பட்ட உலகத்தினரும், முறை முறை தொழுது மொய்ப்ப - முறை முறையாக (இராமபிரானை) வணங்கிச் சூழ, (அப்பொழுது) பூவை பூ நிறத்தினும் - காயாம் பூவண்ணனான இராமபிரானும், புலவர்; கோமான் வீடணற்கு - அறிஞர்களிற் தலை சிறந்தவனான விபீடணனுக்கு, யாவையும் இயம்பி - சொல்ல வேண்டுவன அனைத்தையும் சொல்லி, மாண்டார்க்கு கடன்கள் இயற்றுதி - மரித்தவர்கள் யாவர்க்கும் ஈமக்கிரியைகளைச்செய்வாய்' என்றான் - என்று பகர்ந்தான்.

பூவை - கிளியுமாம்.

பி - ம். 2. மூவுலகிடை, மூவருமுலகு; தனித் தனிப் புகழ்ந்து; மொய்த்து, மொய்த்தார். 290

இதன்பின் அதிகப் பாடல்:—

ஏடிணை ரலங்கன் மார்பத் திராவணன் முதலோர்க் கெல்லாம்
வீடணன் கடன்கள் செய்து மீண்டனன் அவனுக் கின்னே
சூடுக மௌலி யென்னச் சுந்தர விராமன் தம்பி
மாடணை துணைவ ரோடும் மகுடமே புனைந்து விட்டான்.

4183. நான்முகன் விடையை யூரு
நாரியோர் பாகத் தண்ணல்
மான்முகன் முதலா யுள்ள
வானவர் தொழுது போற்ற
ஊன்முகங் கெழுவு வேலா
யும்பர்நா யகியைச் சீறித்
தேன்முக மலருந் தாரா
னெரிசொலச் சீற்றந் தீர்ந்தான்.

'ஊன் முகம் கெழுவு வேலாய் - (பகைவரது) மாமிசங்கள் நுனியில் பொருந்தி விளங்கும் வேற் படையைக் கொண்ட பரதனே, தேன் முகம் மலரும் தாரான் - தேனைத் தன்னகத்துக் கொண்ட மலர்கின்ற பூமாலையை அணிந்த இராமபிரான், நான்முகன் - பிரம

தேவனும், விடையை ஊரும் நாரியோர் பாகத்து அண்ணல் - இடபத்தை ஏறி நடத்துபவனும் உமா தேவியைத் தன் இடது பாகத்தில் ஏற்றவனுமான சிவபெருமானும், மான் முகன் முதலாய் உள்ள - மானின் முகம் கொண்ட மயன் என்னும் தெய்வச் தச்சன் முதலாகவுள்ள, வானவர் - தேவர்களும், தொழுது போற்ற - வணங்கி வாழ்த்த, உம்பர் நாயகியை சீறி - தேவர்கட்கெல்லாம் தலைவியாகிய சீதா தேவியைப் பிறனிடத்தில் உயிர் வாழ்ந்தமை குறித்து (ச் சினந்து, (உடனே) எரி சொல சீற்றம் தீர்ந்தான் - அக்கினி தேவன் (நேரில் வந்து அவள் கற்பின் மாட்சியைக் கூறிய அளவில்) சினம் தவிரப் பெற்றான்.

அரி - தன்னிடம் சார்ந்த பொருள்களை அழிப்பவன் அக்கினி; 'சேர்ந்தாரைக் கொல்லி' என்றது காண்க.

பி - ம். 2. மான் முதல், வாள் முகன்.; வாழ்த்த, தோற்ற

3. கமழும் ; வேலான்.

4. தேன்முக மலர்ந்த ; தாராய் ; நீச் சொலச் ; அரி சொலச். 281

4184. மெய்யினுக் குயிரை யீந்த
வேந்தர்கோன் விமானத் தெய்த
ஐயனு மிளைய கோவு
மன்னமு மடியில் வீழக்
கையினுற் பொருந்தப் புல்லிக்
கண்ணினீர்க் கலச மாட்டிச்
செய்யவட் கருள்க வென்றுன்
திருவிளை யகனுங் கொண்டான்.

'மெய்யினுக்கு உயிரை ஈந்த வேந்தர் கோன் - சத்தியத்தின் பொருட்டு உயிர் விடுத்த அரசர்க்கரசனான தயரதன், விமானத்து எய்த - விண்ணிழி விமானத்தின்மீது (ஏறி வர அப்பொழுது), ஐயனும் - இராமபிரானும், இளைய கோவும் - இலக்குவனும், அன்னமும் - அன்னம் போன்ற நடையினளாகிய பிராட்டியும், அடியில் வீழ - அடியில் வீழ்ந்து பணிய, கையினால் பொருந்த புல்லி - கரங்களால் நன்கு அணைத்துக் கொண்டு, கண்ணீர் கலசம் நீர் - கண்

ணீராகிய கலச நீரினால், ஆட்டி - நீராட்டி, செய்யவட்கு அருள்க - திருமகளிடம் (கலக்கம் கொள்ளாமல்) அருள் கொண்டிருப்பாயாக', என்றான் - என்று மொழிந்தான், திருவின் நாயகனும் கொண்டான் - இராமபிரானும் அதற்கு இசைந்தான்.

மெய்யினுக் குயிரை யீந்த வேந்தர் கோன் - தயரதன்; 'நெறி திறம்பாத் தன் மெய்யை நிற்பதாக்கி, யிறந்தான்' (அயோத்தி. குகப். 68); அன்னம் - உவமவாகு பெயர். 'அன்னமுந் துயர்க் கடலடி வைத்தாள்' (அயோத்தி. கிளைகண்டு. 87); 'ஆவியைச் சனகன் பெற்ற அன்னத்தை' (கிட்கிந்தா. 307); 'தடத்திடை யிருந்த தோர் அன்னத் தன்மையாள்' (சுந்தர. 393); 'தூவியன்ன மன்னாள்' (சுந்தர. 1073); கண்ணீனீர்க் கலசமாட்டி: 'ஆங்குயர் மழைக்கண்ணீரா லாயிரங் கலச மாட்டி' (சுந்தர. 1287) 'கண்ணி னீரினிற்பாதங் கழுவினர்' (ஆரணிய. 549); 'கோதிலர்ப், பொன் னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான், மின்னிடையா ளோடும் விழுந்து' (நள. 72).

பி - ம். 4. செய் வரமருளு கென்றான். 292

4185. என்னைநன் கருணை தன்னா
லீன்றெடுத் தினிது பேணும்
அன்னையு மகனு முன்போ
லாகென வருளி னீந்து
மன்னவன் போய பின்றை
வாநரம் வாழ்வு கூரப்
பொன்னெடு நாட்டி னுள்ளார்
வரம்பல வழங்கிப் போனார்.

(பின்னர்) 'என்னை - அடியேனை, நல் கருணை தன்னால் - நல்ல அருளுடனே, ஈன்று எடுத்து - பெற்றெடுத்து, இனிது பேணும் - நன்றாகப் பாதுகாக்கின்ற, அன்னையும் - தாயான கைகேயியையும், மகனும் - அன்னாருடைய மகனை பரதனையும், முன் போல் - (என்னை வனம் படருமாறு ஏவியதன்) முன்னர் இருந்தது போலவே, ஆக - எனக்குத் தாயும் தம்பியும் ஆக வேண்டும்',

என - என்று வரம் வேண்ட, அருளின் ஈந்து - அருளுடன் கொடுத்து, மன்னவன் - தயரதன், போய பின்றை - சென்ற பின்னர், நெடு பொன் நாட்டில் உள்ளார் - விசாலமான தேவர் உலகில் வசிக்கும் தேவர்கள், வானரம் வாழ்வு கூர - குரங்குகள் (உயிரும் உணவும் பெற்று) இனிதாக வாழும்படி, வரம் வழங்கி போனார் - பலவாகிய, வரங்களை யீந்து மறைந்தனர்.

முதலிரண்டடிகட்கு; யுத்த. 4021 பார்க்க. மன்னவன் - தயரதன். பின்னிரண்டடிகட்கு; யுத்த. 4027, 4028 காண்க.

பி - ம். 1. என்னிடைக் ; என்னைத் தந்த.
2. தன்போல்.
3. வாநரர், வானவர் ; மகிழ்வுகூர. 283

4186. வெள்ளமோ ரேழு பத்து
விலங்கரும் வீர ராகி
உள்ளவ ரறுபத் தேழு
கோடியு மொற்றை யாழி
வள்ளறன் மகனு முள்ள
மகிழ்வுற விமான மீந்தான்
எள்ளலி லாத கீர்த்தி
வீடண னிலங்கை வேந்தன்.

எள்ளல் இலாத கீர்த்தி - பழிப்பற்ற புகழை யுடையோனும், இலங்கை வேந்தன் - இலங்காபுரியின் அரசனுமாகிய வீடணன், ஏழு பத்து வெள்ளம் விலங்கரும் - எழுபது வெள்ளம் குரங்குகளும், வீரர் ஆகி - இராக்கத வீரர்களாகி உள்ளார், அறு பத்து ஏழு கோடியும் - அறுபத்தேழு கோடியோரும், ஒற்றை ஆழி - ஒற்றை உருளை அமைந்த தேரையுடைய, வள்ளல் தன் மகனும் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், உள்ளம் மகிழ்வு உற விமானம் ஈந்தான் - மனம் உவக்குமாறு புட்பக விமானத்தை (விரைந்து அயோத்திக்குச் செல்லுமாறு) இராமபிரானுக்கு ஈந்தான்.

வெள்ளம எழுபத்து: யுத்த. 4175 குறிப்புப் பார்க்க. விலங்கு - விலங்கர்; ஈற்றுப் போலி. ஒற்றை ஆழி வள்ளல் - சூரியன்.

ஆழி சினையாகு பெயராகச் சூரியன் தேரைக் குறித்தது. 'ஓராழித் தேருங் கண்ட உனக்கு' (கிட்கிந்தா. 756); உலகத்துயிர் வர்க்கங் கட்கு இன்றியமையாமை பற்றிச் சூரியனை வள்ளல் என்றான்.

பி-ம். 1. வீரரும் விலங்கலாதி, விலங்கல் போல் வீரராகி.

3. மகிழ்வுறு மிரதம், மகிழ்வுற மானம். 294

4187. ஆரியன் பின்னை நின்னை
யன்பினல் நினைந்து காதல்
சூரியன் மகனுந் தொல்லைத்
துணைவரு மிலங்கை வேந்தும்
பேரியற் படையுஞ் சூழப்
பெண்ணினுக் கரசி யோடும்
சீரிய விமானத் தேறிப்
பரத்துவ னிருக்கை சேர்ந்தான்.

ஆரியன் - இராமபிரான், பின்னை - பின்பு, நின்னை - உன்னை (விரைவிற் கூடவேண்டும் என்று), அன்பினல் நினைந்து - அன்புடன் கருதி, சூரியன் காதல் மகனும் - கதிரவனுடைய காதற்குப் பாத்திரமான சுக்கிரீவனும், தொல்லை துணைவரும் - பழமையான நண்பர்களும், இலங்கை வேந்தும் - இலங்கைக்கு மன்னனான வீடணனும், பேர் இயல் படையும் - பெரிய பண்புகள் வாய்ந்த சேனைகளும், சூழ - தன்னைச் சுற்றிலும் நிற்குமாறு, பெண்ணினுக்கு அரசியோடும் - பெண்கள் நாயகமான பிராட்டியுடனே, சீரிய விமானத்து ஏறி - சிறப்பு வாய்ந்த புட்பகத்தில் ஏறி, பரத்துவன் இருக்கை சேர்ந்தான் - பரத்துவாச முனிவருடைய பன்னசாலையை அடைந்தான்.

பி-ம். 1. ஆரிய னய்யபின்னை.

2. பேரியற் சேனை.

4. சேர்ந்தார். 295

4188. அன்பினு லென்னை நின்பா
லாழியுங் காட்டி யான்ற
துன்பெலாந் துடைத்தி யென்று
துரந்தனன் தோன்ற லென்று
முன்பினு லியன்ற வெல்லா
மொழிந்தனன் முதுநீர் தாவி
அன்பினு லிலங்கை முற்று
மெரிக்குண வாக வைத்தோன்.

'தோன்றல் - இராமபிரான், அன்பினுல் - உன்பாலுள்ள அன்பினுல், என்னை - என்னைப் பார்த்து, நின்பால் ஆழியும் காட்டி - உன்னிடத்தில் கணையாழியையும் காட்டி. ஆன்ற - மிக்க, துன்பு எலாம் துடைத்தி - துயரத்தை யெல்லாம் நீக்குவாயாக', என்று - என்று கூறி, துரந்தனன் - விரைவாக ஏவினான்', என்று - என்று, முன்பினுல் இயன்ற எல்லாம் மொழிந்தனன் - முன்னும் பின்னும் நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும் எடுத்துக் கூறினுன், (யாவன் எனில்), முது நீர் தாவி - பழமையான கடலைத் தாவிக் கடந்து, அன்பினுல் - (இராமபிரானிடம் உள்ள) பத்தியால், இலங்கை முற்றும் - இலங்கா நகர் முழுதும், எரிக்கு உணவாக வைத்தோன் - தீக்கிரை யாக்கினவனுன அநுமன்.

ஆன்ற துன்பெலாம் - இராமபிரானைப் பிரிந்ததனுலும், அவன் குறித்த தவணையில் வராமையாலும் நிகழ்ந்த மனத் துன்பம். சிறிதும் வருத்தமின்றிக் கடலைக் கடந்தமை தோன்றத் தாவி என்றுன், முது நீர் தாவி, 'கருங்கடல் கடந்தனன் காலினு லென்றுன்' (சுந்தர. 585); 'ஓதநீர் கடந்துபகை கடிந்துலகை யுய்யக் கொண்டான்' (யுத்த. 408); 'அருங்கடல் கடந்திவ் வூரை யள்ளெரி மடுத்து' (யுத்த. மாயா சீதை. 52); எரிக்குண வாக்கியது (யுத்த. மாயா சீதை. 22). 4161 முதல் இப்பாடல் வரையில் அநுமன் கூற்று.

பி - ம். 2. விடுத்தனன்; என்று தோன்ற.
3. முன்னீர்.
4. வன்பினுல்; ஆக்கி வந்தான்.

## பரதன் தன் நிலையைப் பற்றி இரங்கிக் கூறுதல்

4189. காலின்மா மதலை சொல்லப்
பரதனுங் கண்ணீர் சோர
வேலிமா மதில்கள் சூழு
மிலங்கையில் வேட்டங் கொண்ட
நீலமா முகில்பின் போனு
னொருவனு னின்று நைவேன்
போலுமா லிவைகள் கேட்பேன்
புகழுடைத் தடிமை மன்னே.

காலின் மாமதலை - வாயுவின் பெரிய புதல்வனான அநுமன், சொல்ல - (இங்ஙனம்) பகர, (அது கேட்ட) பரதனும் - பரதனும், கண்ணீர் சோர - விழிகளில் நீர் (தாரை தாரையாய்ப்) பெருக, 'ஒருவன் - ஒரு தம்பியாகிய' இலக்குவன், மாமதில்கள் வேலி சூழும்- பெரிய மதில்கள் வேலி போன்று சுற்றிய, இலங்கையில் - இலங்கா புரியில், வேட்டம் கொண்ட - (அரக்கரை) வேட்டையாடிக் கொன்ற, நீலம் மாமுகில் - கரிய பெரிய மேகம் போன்ற இராமபிரான், பின - பின்னர், போனான்-சென்றான்; நான - மற்றொரு தம்பியாகிய நான், நின்று நைவேன் - அவன் பின்னர்ச் செல்லாமல் இங்கிருந்து கொண்டே துன்புறுவேனாய், இவைகள் கேட்பேன் போலும் - இச் செய்திகள் அனைத்தையும் கேட்டல் மாத்திரம் செய்வேன் போலும், அடிமை புகழ் உடைத்து - என் அடிமைத்திறம் மிகவும் புகழுடைத்தாயிருந்தது'. ஆல் : ஓ : அசை.

'மதலை - புதல்வன்; வயது முதிர்ந்த நிலையில் தந்தைக்கு உதவி யாக நிற்பவன். 'மதலையாம், சார்பிலாற் கில்லைநிலை' (குறள். 449) 'சிதலை தினப்பட்ட வாலமரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு' (நாலடி. 41); வேட்டம் - வேட்டை; 'வேட்டம் கடுஞ்சொல் மிகுதண்டம் சூதுபொரு, ளீட்டம் கள் காம மிவையேழ்' (பு. வெ. மா. ஓம்படை. 9); இங்கு வேட்டம் அரக்கரை வேட்டை யாடிக் கொன்றமை. 'காதல் மைந்தன்பின் போனானு மொரு தம்பி' (யுத்த. 4109); போலும் - ஒப்பில் போலி. புகழுடைத்து. 'அடிமை சால வழகுடைத்தே' என்ற இடத்துப் போலப் பிற குறிப்பு.

பி - ம். 2. சோலை மாமதினீர் ; இலங்கை மாவேட்டை.

3. போவான் ; ஒருவனும்.

4. அடிமை யென்றான். 297

## பரதன் கங்கையை அடைதல்

4190. என்றவ னிரங்கி யேங்கி
யிருகணு மருவி சோர
வன்றிற லனுமன் செங்கை
வலக்கையாற் பற்றிக் காலிற்
சென்றன னிருளி னூடு
செறிபுனற் கங்கை சேர்ந்தான்
குன்றினை வலஞ்செய் தேரோன்
குணகடற் றோன்று முன்னர்.

என்று - என்று கூறி, அவன் - அந்தப் பரதன், இரங்கி ஏங்கி - வருந்தி ஏக்கமுற்று, இரு கணும் அருவி சோர - இரண்டு விழிகளிலும் கண்ணீர் அருவி போன்று பெருக, வல் திறல் அநுமன் செங்கை - மிகவும் வன்மை வாய்ந்த அநுமனுடைய சிவந்த கரத்தை, வலம் கையால் பற்றி-வலது கையினாற் பிடித்துக் கொண்டு, காலில் சென்றனன் - காலினாலே நடந்து சென்றவனாகி, குன்றினை வலம் செய்தேரோன் - மேரு மலையை வலமாகச் சூழும் தேரினையுடைய சூரியன், குணக்கு கடல் தோன்றும் முன்னர் - கீழ்க் கடலில் உதயமாகு முன்னர், இருளின் ஊடு- இருட் பொழு திலேயே, புனல் செறி கங்கை சேர்ந்தான் - நீர் மிக்குள்ள கங்கை நதிக் கரையை அடைந்தான்.

தான் மன்னனாகி யிருந்தும் தேர் சிவிகை முதலியன இன்றிக் காலினால் சென்றான் பரதன். எனப்பட்டது, சூரியன், தேர்மீதேறி மேரு மலையைச் சுற்றி வருவதாகக் கூறுவது மரபு. குண கடல் தோன்றுதல் : 'பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு' (திருமுரு. 2).

பி - ம். 1. கண்ணீர்.

2. மலர்க்கையாற்.

3. கங்கை சூழல்.

4. தோன்று முன்னம். 298

## சூரியோதய வருணனை

4191. இராவணன் வேட்டம் போய்மீண்
டெம்பிரான யோத்தி யெய்தித்
தராதல மகளும் பூவிற்
றையலு மகிழச் சூடும்
அராவுபொன் மௌலிக் கேய்ந்த
சிகாமணி குணபா லண்ணல்
விராவுற வெடுத்தா லென்ன
வெய்யவ னுதயஞ் செய்தான்.

எம்பிரான் - எமது தலைவனாகிய இராமபிரான், இராவணன் வேட்டம் போய் - இராவணனை வேட்டையாடிக் கொல்லும் பொருட்டு, போய் - சென்று, மீண்டு - திரும்பி, அயோத்தி எய்தி - அயோத்தியை அடைந்து, தராதல மகளும் - பூ மடந்தையும், பூவில் தையலும் - தாமரைப் பூவில் வசிக்கும் திருமகளும், மகிழ - உவகையுறும்படி, சூடும் - தரிக்கப் போகின்ற, அராவும் பொன் - அராவிச் செய்யப்படும் பொனனால் இயன்ற, மௌலிக்கு ஏய்ந்த - மகுடத்துக்குப் பொருத்தமான, சிகாமணி - முடிமீது தரித்தற் கொத்த விலையுயர்ந்த மாணிக்கத்தை, குணக்குபால் அண்ணல் - கீழ்த்திசைப் புரவலனாகிய இந்திரன், விராவு உற எடுத்தால் என்ன - பொருந்துமாறு எடுத்தாற் போல, வெய்யவன் உதயம் செய்தான் - கதிரவன் தோன்றினான்.

கதிரவன் கீழ்த் திசையில் உதயம் செய்ததை அத் திக்குக் காவலனாகிய இந்திரன், இராமபிரான் தரிக்க இருக்கும் மகுடத்துக் குரிய சிகாமணியை ஏந்தினாற் போலும் எனப்பட்டது. தன்மைத் தற்குறிப்பேற்றவணி. தன்னை நல்ல முறையில் ஆட்சி புரிபவன் இராம பிரான் என்று பூ மடந்தையும், துயரங்கள் நீங்கி நன்மை மிகு மாதலின் திருமகளும் மகிழ்வர் என்க. பூவிற்றையல் : (யுந். 1628) ; குல முதல்வன் ஆகலின் தன் வழித் தோன்றலும், திருமால் அவதாரமுமான இராமபிரான் சூடும் மகுடத்திற்கு அரதனம் அமைத்துச் சிறப்பித்தான் சூரியன் என்க. இங்கு வெய்யவன் என்றார் எனினும்; இராமபிரான் முடிசூட்டில் விருப்பம் கொண்டவன் என்க. வெம்மை - வேண்டல்.

## இராமனது வருகையில் ஐயுற்றுப் பரதன் அநுமனை வினவல்

4192. காலைவந் திறுத்த பின்னர்க்
கடன்முறை கமலக் கண்ணன்
கோலநீள் கழல்க ளேத்திக்
குரக்கினத் தரசை நோக்கிச்
சாலவுங் கலைகள் வல்லோய்
தவறுண்டு போலும் வாய்மை
மூலமே யுணரி னுன்றன்
மொழிக்கெதிர் மொழியு முண்டோ.

(பரதன்), காலை வந்து - காலைவர, கடன்முறை இறுத்த பின்னர் - கடமைகளைச் செய்து முடித்த பிறகு, கமலம் கண்ணன் - தாமரை மலர் போன்ற கண்களை யுடையவனான இராமபிரானுடைய, கோலம் நீள் கழல்கள் ஏத்தி - அழகிய நீண்ட திருவடி நிலைகளை வணங்கி, குரங்கு இனத்து அரசை நோக்கி - குரங்குக் கூட்டங்கட்குத் தலைவன் ஆன அநுமனைப் பார்த்து, 'சாலவும் கலைகள் வல்லோய் - மிகவும் சாஸ்திரங்களில் தேர்ந்தவனே! வாய்மை தவறு உண்டு போலும் - உன் வாய்ச் சொல்லில் பிழை உள்ளது போலும்; மூலமே உணரின் - அடி முதலாக ஆராய்ந்து நோக்கின், உன் தன் மொழிக்கு எதிர் மொழியும் உண்டோ - உனது உரைக்கு மாற்றுரையும் உள்ளதோ?'

சாலவும் கலைகள் வல்லோய்: 'இல்லாத வுலகத்து' (கிட்கிந்தா 61); என்ற செய்யுளைக் காண்க. ஓகாரம் - எதிர்மறை. இல்லை என்றபடி. இராமபிரான் வருகையை விடாது எதிர் பார்த்து நின்றவனாகலின் ஆழி தந்து பல உண்மைச் செய்திகளைக் கூறி நின்ற அநுமன்மீது நம்பிக்கை பிறவாமல் சங்கித்தான் பரதன் எனப்பட்டது. 'நினைவருங் குணங்கொடன்றோ இராமன் மேனி மிர்ந்த காதல்' (அயோத்தி. குகப். 37).

பி . ம். 2. கூல நீளடிகள், கோலநீள் புகழ்கள்; குரங்கினத்தவனை.
3. கவிகளன்றோ தவறிற்றுண்டுனது வாய்மை.
4. உந்தம்.

4193. எழுபது வெள்ளஞ் சேனை
வாநர ரிலங்கை வேந்தன்
முழுமுதற் சேனை வெள்ளங்
கணக்கில முடுகிற் றென்றால்
அழுவநீர் வேலை யன்ன
வரவமின் றாக வற்றோ
விழுமிதெம் பிரான்வந் தானென்
றுரைத்தது வீர வென்றான்.

'வீர - வீரனே! எழுபது வெள்ளம் வாநரர் சேனை - எழுபது வெள்ளமான குரங்குப் படையும், இலங்கை வேந்தன் - இலங்கை அரசனான வீடணனுடைய, முழு முதல் சேனை வெள்ளம் - பெருந் திரளான சேனைத் தொகுதிகளும், கணக்கு இல முடுகிற்று என்றால் - கணக்கில்லாமலே விரைந்து வந்ததானால், அழுவம் நீர் வேலை அன்ன - ஆழமான நீரையுடைய கடல் போன்று, அரவம் இன்று ஆக வற்றோ - ஆரவாரம் இல்லாமல் இருக்கக் கூடுமோ? (இராது), (அங்ஙனம் பேரொலி இன்மையின்) 'எமபிரான் வந்தான் என்று உரைத்தது விழுமிது - எமது தலைவன் எழுந்தருளினன்' என்று நீ பகர்ந்தது மிக அழகியதா யிருந்தது' என்றான் - என்று மொழிந்தான்.

அழுவம் - பரப்புமாம். விழுமிது - பிற குறிப்பு.

பி - ம். 1. வன்றிறல்.
2. முழுதுறு ; மொய்ந்த வென்றால்.
3. வேலை சுற்றும்.



4194. ஓசனை யிரண்டுண் டன்றே
பரத்துவ னுறையுஞ் சோலை
வீசுதெண் டிரையிற் றூய
வெள்ளமோ ரேழு பத்தும்
மூசிய பழுவ மிங்ஙன்
கிடப்பதோ முரற்ற லின்றிப்
பேசிய தமையு நங்கோ
னெங்குளன் பெரும வென்றான்.

'பெரும - பெருந்தகாய்! பரத்துவன் உறையும் சோலை - பரத்துவாச முனிவன் வதியும் சோலையானது, (இங்கிருந்து) இரண்டு ஓசனை உண்டு - இரண்டு யோசனை தூரத்திலேயே உள்ளது; வீசு தெள் திரையிற்று ஆய - கரையில் மோதுகிற தெள்ளிய அலையைக் கொண்டதான கடலின் தன்மையைப் பெற்ற, ஓர் - ஒப்பற்ற, வெள்ளம் ஏழு பத்தும் ஏ - எழுபது வெள்ளம் சேனைகளும், மூசிய பழுவம் - மொய்த்து நிறைந்த அச் சோலை, (இங்குக் கேட்குமாறு) முரற்றல் இன்றி இங்ஙன் கிடப்பதோ - ஆரவாரமின்றி இவ்வாறு இருக்குமோ? பேசியது அமையும் - நீ கூறியது மிகவும் அழகாயுள்ளது; நம் கோன் - நமது தலைவனான இராமபிரான், எங்கு உளான் - எங்குள்ளான?' என்றான் - (அவன் அந்த முனிவன் ஆச்சிரமத்தில் இல்லை என்பது தெளிவு) என்று பரதன் அநுமன் சொற்களில் நம்பிக்கை யில்லாமல் சொன்னான். அன்று: ஏ அசை.

வீசு தெண்டிரை: 'வீச தெண்டிரை வீங்கிள வேனிலும்' மூசுதல் - மொய்த்தல்; 'மூசும் வண்டு வாசமுண்டு, யோகன முகாரி ராகம் பாடுமே' (காவடிச் சிந்து); பழுவம் - சோலை; 'பழுமரப் பொழிறுவன்ற பழுவம்' (ஆரணிய. 2); முரலுதல் - ஒலித்தல்; 'வண்டினம் முரலும் சோலை மானினம் மருளும் சோலை' (திருமாலை. 14). பேசியதமையும பிற குறிப்பு.

பி - ம். 1. இரண்டேயுள்ள ; உறை பிரையாசை.

3. இன்றே, இன்னே ; கிடப்பதாம், கிடப்பதே.

4. ஐயன். 302

### அநுமன் கூறிய சமாதானம்

4195. பரதனஃ துரைத்த லோடும்
பணிந்துமா ருதியுஞ் சீர்சால்
விரதமா தவத்து மிக்கோய்
விண்ணவர் தம்மை வேண்டி
வரதனன் றளித்த வந்த
வரத்தினுன் மலருந் தேனும்
சரதமே மாந்தி மாந்தித்
துயின்றது தானை யெல்லாம்.

பரதன் அஃது உரைத்தலோடும் - பரதன் அச் சொற்களைக் கூறியவுடனே, மாருதியும் - அநுமனும், பணிந்து - அப் பரதாழ் வானை வணங்கி, சீர்சால் விரதம் மாதவத்து மிக்கோய் - சிறப் பமைந்த விரதமாகிய பெருந் தவத்தினால் மேன்மை யுற்றவனே! வரதன்-வரந் தாவல்ல பரத்துவாச முனிவன், விண்ணவர் தம்மை வேண்டி - தேவர்களை வேண்டி, அன்று அளிப்ப - அப்பொழுது அளித்த, அந்த வரத்தினால் வந்த மலரும் தேனும் - அந்த வரத் தினால் வந்த மலரையும் தேனையும், மாந்தி மாந்தி - பருகிப் பருகி, தானை எல்லாம் - சேனை அடங்கலும், துயின்றது - (உண்ட களைப் பினால்) நித்திரை கொண்டன, சரதம் - இது உறுதி.

விரத மாதவத்து மிக்கோய்: 'சரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப, விரத மறைப்பொருள் மெய்ந்நெறி கண்ட வரதன்' (பால. திருவவ. 121); சரதம் - நிச்சயம். 'சரதமிப் புவி யெலாம் தம்பி யோடுமிவ் வரதனே யாளுமேல்' (அயோத்தி. மந்தரை. 57); வரதன்- இராமபிரான்; 'வாதனு மிளவலும் ஒருநொடி பகிரா' (பால. திருவவ. 131); மாந்தி மாந்தி என்ற அடுக்கு, மிகுதி குறிக்க வந்தது. 'உண்ட களைப்புத் தொண்டனுக்கு முண்டு' என்பது பழமொழி. தேவர்கள் ஈந்த வரம்; மீட்சி. 135 - 136 பார்க்க.

பி - ம். 1. மாருதி தானைய, மாருதியுந்தானை.

2. தவன்றன்றேடும், தவன் மற்றேரை; விண்ணுளோர்; தமையும்.

3. ஆண்டளிப்ப வந்த வரத்தினல்.

4. சுரதமே, போலுந்தானை. 303

4196. வானவர் கொடுக்க வந்த
வரத்தினுன் மதுப மூசும்
தேனொடு கிழங்குங் காயுங்
கனிகளும் பிறவுஞ் சீர்த்துக்
கானகம் பொலித லாலே
கவிக்குல மவற்றை மாந்தி
ஆனன மலர்ந்த தில்லை
யாகுநீ துயர லெந்தாய்.

'எந்தாய் - எமது தலைவனே! வானவர் கொடுக்க வந்த வரத் தினால் - தேவர்கள் அருளக் கிடைக்கப் பெற்ற வரங்களினால்,

கானகம் - காட்டினிடத்தே, மதுபம் மூசும் - வண்டுகள் மொய்க்கின்ற, தேனொடு கிழங்கும் - தேனும் கிழங்கும், காயும் கனிகளும் - காய்களும் கனிகளும், பிறவும் - மற்றுமுள்ளனவும், சீர்த்து பொலிதலாலே - சிறப்பாகத் திகழ்வதால், கவி குலம் - குரங்குக் கூட்டங்கள், அவற்றை மாந்தி - அவற்றை உண்டு, ஆனனம் மலர்ந்தது இல்லை ஆகும் - வாய் திறந்து ஆரவாரம் செய்யாதனவாகும், நீ - நீ, துயரல் - வருந்தாதே?

மதுபம் - வண்டு. வானவர் கொடுக்க வந்த வரம்; மீட்சி. 135 - 136. மந்தி : 'கிளிகட்கெல்லா மருளினு லழகை மாந்தி' (பால. கோலங். 19); ஆனனம் - வடசொல். முகம் என்று பொருள்படு மிச்சொல் இங்கு வாய் என்ற பொருளில் வந்தது.

பி - ம். 1. மதுவிற் சாலும், மதுவுஞ் சாலந்.

2. பிறவுந் தெற்றிக்.

3. அதனை மாந்தி.

4. ஐயனி முனிய லென்றுன், ஆனை நீ முனிய லென்றுன். 304

4197. இனியொரு கணத்தி னெங்கோ
னெழுந்தருள் தன்மை யீண்டுப்
பனிவருங் கண்ணி னீயே
பார்த்தியென் றுரைத்தா னிப்பால்
முனிதன தீடத்து வந்த
முளரியங் கண்ணன் வண்ணக்
குனிசிலைக் குரிசில் செய்த
திற்றெனக் குனிக்க லுற்றும்.

'இனி - இனிமேல், ஒரு கணத்தில் - ஒரு கண நேரத்தில், எங்கோன் - எமதிறைவன், எழுந்தருள் தன்மை - எழுந்தருள்வதை, ஈண்டு - இவ்விடத்தில், பனிவரும் கண்ணின் நீயே பார்த்தி - நீர் பெருகுகின்ற விழிகளையுடைய நீயே கண்ணுறுவாய்', என்று உரைத்தான் - என்று பகர்ந்தான் மாருதி ; 'இப்பால் - இனிமேல், முனி தனது இடத்து வந்த - பரத்துவாச முனிவனுடைய பன்ன சாலையில் வந்து தங்கிய, முளரி அம் கண்ணன் - செந்தாமரை போன்ற அழகிய நேத்திரங்களை யுடையவனும், வண்ணம் - அழகிய, குனிசிலை - வளைந்த வில்லினை ஏந்திய, குரிசில் - பெருந்தகையு

மான இராமபிரான், செய்தது - செய்த செயலை, இற்று என குணிக்கல் உற்றும் - இத் தன்மைத்து என்று கூறத் தொடங்கினேம்'. இது கவிக்கூற்று.

முளரி - தாமரை ; முள்ளை அரையிலே உள்ளது; காரணக்குறி. இங்கே ஓர் பிரதியில் 'கெட்டவான் பொருள்' (321) என்ற பாடலும் அதன்பின் 255 ஆம் செய்யுளடியிற் காட்டியுள்ள, 'நின்றவன்' என்ற பாடல் முதல் 'இராவணன்' என்ற செய்யுள் வரை யுள்ளனவற்றுள், 12, 13, 14, 18, 21-ஆம் பாடல்கள் தவிர மற்றவையும் உள்ளன.

பி - ம். 1. நங்கோ.
2. கண்ணிறுனே ; பாரெனப் பணித்தான்.
3. முனிவனது ; அங்கண்ண.
4. செய்த திறனெலாம். 305

## குகன் தன் சேனையோடு இராமனைக் காண வருதல்

4198. அருந்தவன் சுவைக ளாறோ
டமுதினி தளிப்ப வையன்
கருந்தடங் கண்ணி யோடுங்
களைகணுந் துணைவ ரோடும்
விருந்தினி தருந்தி நின்ற
வேலையின் வேலை போலும்
பெருந்தடந் தானை யோடுங்
கிராதர்கோன் பெயர்ந்து வந்தான்.

அரு தவன் - அருமையான தவத்தினையுடைய பரத்துவாசன், ஆறு சுவைகளோடு அமுது - ஆறு சுவைகளுடன் இயைந்த உணவை, இனிது அளிப்ப - நன்றாகப் படைத்தருள, ஐயன் - இராமபிரான, கருதட கண்ணியோடும் - கரிய பெரிய கண்களையுடைய பிராட்டியோடும், களைகணும் துணைவரோடும் - (தனக்கு) ஆதரவாயுள்ள நண்பர்களோடும், விருந்து - அவ் விருந்தை, இனிது அருந்தி நின்ற வேலையில் - நன்றாக உண்டு நின்ற போழ்தில், கிராதர் கோன - வேடர் தலைவனான குகப் பெருமான், வேலை போலும் பெருதட தானையோடும் - கடல் போன்ற மிகப்

பெரிய சேனையுடன, பெயர்ந்து வந்தான் - (இராமபிரானைத் தரிசிக்கும் பொருட்டு சிருங்கிபேரம் என்னும் தன் ஊரிலிருந்து) புறப்பட்டு வந்தான்.

அருந்தவன் - அருமை; செயற்கருமை. சுவைகள் ஆறு: கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்பபு; 'அறு சுவை யுண்டியமர்ந்தில்லாள் ஊட்ட' (நாலடி. 1); களைகண் - ஆதரவு அல்லது பற்றுக்கோடு; 'காவலாளர் விழக் களைகண்ணிலா, ஏவலாளரின்' (யுத்த. 671).

பி ம். 2. தம்பியோடும். 306

## இராமபிரான் குகனைத் தழுவி நலம் வினவுதல்

4199. தொழுதனன் மனமுங் கண்ணுந்
துளங்கினன் சூழ வோடி
அழுதனன் கமல மன்ன
வடித்தல மதனின் வீழ்ந்தான்
தழுவின னெடுத்து மார்பிற்
றம்பியைத் தழுவு மாபோல்
வழுவிலா வலிய ரன்றோ
மக்களு மனையு மென்றான்.

(குகப் பெருமான் இராமபிரானைக் கண்களாற் சேவித்து), மனமும் கண்ணும் துளங்கினன் - உள்ளமும் விழிகளும் ஒளிரப் பெற்றவனாய் (அப் பிரானை), சூழ ஓடி - சுற்றி வந்து, (நெடுங்காலம் பிரிந்தமைக்கு வருந்தி), அழுதனன் - அவலித்தவனாய், கமலம் அன்ன - தாமரை மலர் போன்ற (இராமபிரானுடை), அடிதலம் அதனில் வீழ்ந்தான் - திருவடிகளில் வீழ்ந்து பணிந்தான்; (அப் பொழுது இராமபிரான் அந்தக் குகனைத் தமது கரங்களால்), எடுத்து - உயர்த்தி, தம்பியை தழுவுமா போல் - தன் தம்பியை அணைப்பது போன்று, மார்பில் தழுவினன் - மார்பில் தழுவி, 'மக்களும் மனையும் - உனது மக்களும் மனைவியும், வழுவு இலா வலியர் அன்றோ - குறைவிலாத உடல் நலம் உள்ளவராய் இருக்கின்றார்களா?' என்றான் - என்று கேட்டான்.

தம்பியைத் தழுவு மாபோல் - குகன் தம்பி முறையாக ஏற்கப் பட்டதை; 'குகனொடு மைவரானோம்' (யுத்த. 449); 'ஏழை வேடனுக் கெம்பியுன் தம்பி' (சுந்தர. 352); தம்பியை - பரதனை யெனினுமாம். 'தந்தையினும் களிகூரத் தழுவினன்; புளிஞர் வேந்தன் என்று முன் வந்தமை காண்க. இங்கு இராமபிரானுடைய அன்பும் சௌலப்யமும் காண்க.

பி - ம். 3. இராமன்; தம்பியர்த்.
4. வழுவில்; வலியவோ நின். 307

## குகன் தான் இராமனுடன் சென்று வனவாசஞ் செய்து அடிமை செய்யப் பெறுமைக்கு வருந்துதல்

4200. அருளுன துளது நாயேற்
கவரெலா மரிய வாய
பொருளலர் நின்னை நீங்காப்
புணர்ப்பினற் றொடர்ந்து போந்து
தெருள்தரு மிளைய வீரன்
செய்வன செய்க லாதேன்
மருள்தரு மனத்தி னேனுக்
கினிதன்றோ வாழ்வு மன்னோ.

(குகப் பெருமான் இராமபிரானைப் பார்த்து), 'உனது அருள் உள்ளது - (அடியேன்பால்) உன்னுடைய அருள் உள்ளது; அவர் எலாம் - மனைவி மக்கள் அனைவரும், நாயேற்கு - அடியேனுக்கு, அரிய ஆயபொருள் அலர் - அருமையான பொருள் ஆகமாட்டார், நின்னை - உன்னை, நீங்கா புணர்ப்பினல் - விட்டுப் பிரியாத மனப் பற்றுடனே, தொடர்ந்து போந்து - பின் தொடர்ந்து வந்து, தெருள் தரும் - மெய்யுணர்வு மிக்க, இளைய வீரன் - இலக்குவன், செய்வன செய்கலாதேன் - செய்த அடிமைப் பணிகளைச் செய்யக் கொடுத்து வைக்காதவனான, மருள் தரு மனத்தினேனுக்கு - அவித்தை நிறைந்த உள்ளத்தனாகிய எனக்கு, வாழ்வு - உயிர் வாழ்க்கை, இனிது அன்றோ - இனிய தொன்றல்லவா' (இனிய தன்று) என்பது. மன்: ஓ அசை.

தன்னைத் தான் வெறுத்துக் கூறுகின்றான் குகன். இங்கு தந்தை தாய்தமர் தாரம் மகவென்ற இவை யெலாம் சந்தையிற்

கூட்டம் என்றும், இறைவன் அருளே உண்மையான உதவி புரியும் என்றும் உணர்ந்த மெய்யுணர்வினைப் பெற்றவன் குகன் என்பது விளங்கும். 'தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்க ளென்றும்' (பெரியதிரு. 1 : 9 : 1) என்ற பாசுரம் காண்க.

பி - ம். 1. நாயே னுயினேற்கு, நாயேற்கவை யெலாம்.

2. பொருளல'

3. செய்கலாது.

4. மனத்தேற் கெற்றே வாழ்வு மன்னர் மன்று, மனந்திஜேனுக்கரி தன்றே வாழ்வுமன்றே. 308

## இராமன் குகனுக்குச் சமாதானங் கூற அவன் இளைய பெருமாளையும் சிதையையும் வணங்குதல்

4201. ஆயன பிறவும் பன்னி
யழுங்குவான் தன்னை யைய
நீயிவை யுரைப்ப தென்னே
பரதனி னீவே றுண்டோ
போயினி திருத்தி யென்னப்
புளிஞர்கோ னிளவல் பொற்றுள்
மேயினன் வணங்கி யன்னை
விரைமலர்த் தாளின் வீழ்ந்தான்.

ஆயன - அப்படிப்பட்ட, பிறவும் பன்னி - மற்ற வார்த்தைகளை யும் புகன்று, அழுங்குவான் தன்னை - மனம் வருந்துபவனாகிய குகனைப் பார்த்து, (இராமபிரான்) 'ஐய - ஐயனே! நீ - நீ, இவை உரைப்பது என்னே - நீ இத்தகைய வார்த்தைகளை மொழிவது யாது காரணம் பற்றியோ? பரதன் நீ நீ வேறு உண்டோ - பரதனி னும் நீ வேறுவையோ? போய் இனிது இருத்தி-சென்று இனிதாக இருப்பாயாக;' என்ன-என்று கூற, புளிஞர் கோன்-வேடர் தலைவ னான குகன், இளவல் பொன்தாள் - இலக்குவனுடைய அழகிய பாத மலர்களை, மேயினன் வணங்கி-சேர்ந்து பணிந்து, அன்னை-உலகின் தாயாகிய பிராட்டியின், விரைமலர் தாளின் வீழ்ந்தான் - நறுமணம் கமழும் திருவடியில் வீழ்ந்து வணங்கினன்.

பரதன் காட்டிற்கு உடன் வராது தன் கட்டளைப்படி நகரி லிருந்தது போன்றே, குகனும் தன்னைப் பின் தொடராது காட்டிலேயே இருந்ததைப் பாராட்டுகின்றான் இராமபிரான். புளிஞர் - புளிந்தர். 'வெவ்விய புளிஞரென்ன' (கிட்கிந்தா. 345); மேயினன் - முற்றெச்சம்.

பி - ம். 1. ஐயன்.

309

## இராமபிரான் சுக்கிரீவன் முதலியோர்க்குக் குகனை இன்னானென்று தெரிவித்தல்

4202. தொழுதுநின் றவனை நோக்கித்
துணைவர்கள் தமையு நோக்கி
முழுதுணர் கேள்வி மேலோன்
மொழிகுவான் முழுநீர்க் கங்கை
தழுவிரு கரைக்கு நாதன்
தாயினு முயிர்க்கு நல்லான்
வழுவிலா வெயினர் வேந்தன்
குகனெனும் வள்ள லென்பான்.

முழுது உணர் கேள்வி மேலோன் - எல்லாவற்றையும் நன்கு உணரவல்ல நூற் கேள்வியிற் தலை சிறந்தவனான இராமபிரான், தொழுது நின்றவனை நோக்கி - (தன்னை) வணங்கி நின்றவனான குகனைப் பார்த்து, (பின்னர்) துணைவர்கள் தமையும் நோக்கி - (தனக்கு) நண்பர்களான சுக்கிரீவன் முதலியோரையும் பார்த்து, மொழிகுவான் - பேசுவான்; '(இவன்) முழுநீர் கங்கை - நிறைந்த புனலையுடைய கங்கை யாற்றை, தழுவு இரு கரைக்கு நாதன் - தழுவியுள்ள இரண்டு கரைக்கும் தலைவன்; உயிர்க்கு தாயினும் நல்லான் - எல்லா உயிர்களிடத்தும் தாயைக் காட்டிலும் அதிக மான அன்புடையவன், வழு இலா எயினர் வேந்தன் - குற்றமற்ற வேடுவர்க்கு அரசன், குகன் எனும் வள்ளல் என்பான் - குகனென் னும் பெயருடைய வண்மையாளன் என்று கூறப்படுவான்'.

முழுதுணர் கேள்வி மேலோன் இராமபிரான். கங்கை தழுவிரு கரைக்குநாதன்: 'கங்கையிருகரை யுடையான்' (அயோத்தி. குகப்

25) ; தாயினும் உயிர்க்கு நல்லான்' (ஒப்பு): 'தாயென வுயிர்க்கு நல்கி' (கிட்கிந்தா. 348); 'தாயின் மன்னுயிர்க் நன்பினன்' (யுத்த. 148).

பி - ம். 1. சுட்டி.

2. கேள்வியரளன் ; முறிநர்.

4. என்றுன். 310

## சுக்கிரீவன் முதலியோர் குகனை நட்புக் கொள்ளுதல்

4203. அண்ணலஃ துரைத்த லோடு
மரிகுலத் தரச னாதி
நண்ணிய துணைவர் யாரு
மினிதுறத் தழுவி நட்டார்
கண்ணகன் ஞால மெல்லாங்
கங்குலாற் பொதிவான் போல
வண்ணமால் வரைக்கு மப்பால்
மறைந்தன னிரவி யென்பான்.

அண்ணல் - இராமபிரான், அஃது உரைத்தலோடும் - அங்ஙனம் சொன்னவுடனே, அரி குலத்து அரசன் ஆதி - குரங்குக் கூட்டத்துக்கு அரசனாகிய சுக்கிரீவன் முதலாக, நண்ணிய - வந்தடைந்த. துணைவர் யாரும் - நண்பர்கள் அனைவோரும் (குகனை), இனிது உற தழுவி - இன்புற அணைத்து, நட்டார் - நட்புக் கொண்டனர்; இரவி என்பான் - சூரியன், கண் அகல் ஞாலம் எல்லாம் - இடம் அகன்ற பூதல முழுவதையும், கங்குலால் பொதிவான் போல - இருளினால் மூடுவான் போன்று, (இருள் பரவுமாறு விடுத்து), வண்ணம் மால் வரைக்கும் அப்பால் மறைந்தனன் - அழகிய பெரிய மேரு மலையின் மேற்புறத்தில் மறைந்தான்.

நட்டார் - நண்பர் ; 'நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்' (மூதுரை. 4); பொதிதல் - மூடுதல். வண்ணம் மால்வரை - பொன் வண்ணமான பெரிய மேருமலை. தற்குறிப்பேற்றவணி. கதிரவன் மறையவே இருள் சூழ்ந்தது என்க. என்பான் - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. 'இரவி என்பான் தன்புகழ்க் கற்றை மற்றை' ((அயோத்தி. குகப். 36)

பி - ம். 4. வரைக்கு மேல்பால் ; மறையா வெய்யோன். 311

### அன்று இரவு கழியச் சூரியன் உதயமாதல்

4204. அலங்கலந் தொடையி னானு
மந்தியின் கடன்க ளாற்றிப்
பொலங்குழை மயிலி னோடு
துயிலுறப் புணரி போலும்
இலங்கிய சேனை சூழ
விளவலு மெயினர் கோனும்
கலங்கலர் காத்து நின்றார்
கதிரவ னுதயஞ் செய்தான்.

அலங்கல் - அசைகின்ற, அம் தொடையினானும் - அழகிய மலர் மாலையை யணிந்த இராமபிரானும், அந்தியின் கடன்கள் ஆற்றி - (சந்தியாவந்தனம் முதலிய) மாலைக் கடமைகளை நிறைவேற்றிப் பின்பு, பொலம் குழை மயிலினோடும் - பொன்னாலியன்ற காதணிகளை யுடையவளும் மயில் போன்ற சாயலை யுடையவளுமான பிராட்டியுடன், துயில் உற - நித்திரை செய்ய, இளவலும் - இலக்குவனும், எயினர் கோனும் - வேட்டுவர் தலைவனான குகப் பெருமானும், புணரி போலும். இலங்கிய - கடல் போன்று விளங்குகின்ற, சேனை சூழ - சேனை சூழ்ந்திருப்ப, கலங்கலர் - மனங் கலங்காதவராய், காத்து நின்றார் - பாதுகாத்து நின்றனர். கதிரவன் உதயம் செய்தான் - சூரியன் உதித்தான்.

அந்திக் கடன் - சந்தியோபாசனை முதலிய நித்திய கன்மங்கள், கன்மங்கள் நித்யம், நைமித்யம் காமியம் என மூவகைப்படும் என்ப. சாயல் - மயில். 'விழியாற் பிணையாம் விளங்கியலால் மயிலாம்' (திருக்கோ. 29.); புணரி - கடல்; பல நதிகளும் தன்னிடம் வந்து புணரப் பெறுவது. இ - பெயர் விகுதி. பொலம் - பொன். பொலங்குழை - அன் மொழித் தொகை. 'பொலங்குழையவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போந்தேன்' (சுந்தர. 1279); இளவல் - அல் பெயர் விகுதி. எயினர் கோன் - குகன்; 'எயினர் கோன் துண்ணென்றான்' (அயோத்தி. குகப். 28); கலங்கலர் காத்து நின்றார்: 'அல்லை யாண்டமைந்த மேனி யழகனும்

அவனும் துஞ்ச' (அயோத்தி. குகப். 42); 'மாலைவாய் நியமஞ் செய்து' (அயோத்தி. கங்கை. 48); 'தும்பியின் குழாத்திற் சுற்றும் சுற்றத்தன்' (அயோத்தி. கங்கை. 49) என்பன காண்க.

பி - ம். 1. சந்தி முற்றிப்.ச
2. மயிலினேடுந்; துயிறர; புணரிபோல.
3. இலங்கையிற்.

312

## இராமபிரான் விமானமேறிச் செல்லுதல்

4205. கதிரவ னுதய காலைக்
கடன்கழித் திளவ லோடும்
அதிர்பொலன் கழலி னனவ்
வருந்தவன் தன்னை யேத்தி
விதிதரு விமான மேவி
விளங்கிழை யோடுங் கொற்றம்
முதிர்தரு துணைவ ரோடு
முனிமனந் தொடரப் போனன்.

அதிர் - ஒலி செய்கின்ற, பொலன் கழலினன் - பொன்னாலாகிய வீரக் கழலணிந்தவனான இராமபிரான், கதிரவன் உதயம் காலை - சூரியன் உதிக்கும் காலையில், கடன் கழித்து - ஆற்ற வேண்டிய நித்தியகடன்களைச் செய்து முடித்து, அவ் அருதவன் தன்னை ஏத்தி - அருமையான தவத்தினையுடைய பரத்துவாச முனிவனை வணங்கி, (விடைகொண்டு), இளவலோடும் - இலக்குவனேடும், விளங்கிழை யோடும் - ஒளிர்கின்ற அணிகளைப் புனைந்த பிராட்டியோடும், கொற்றம் முதிர்தரு துணைவரோடும் - வெற்றி மிகுந்த துணைவருடனும், விதி தருவிமானம் மேவி - பிரம தேவனால் குபேரனுக்குக் கொடுக்கப் பெற்றதும், பின்னர் இராவணன் கைக்கு வந்ததுமான புட்பகத்தின்மீது அமர்ந்து, முனி மனம் தொடர போனன் - முனிவனுடைய உள்ளம் (தன்னைப்) பின் தொடர்ந்து வர அயோத்தி நகர் நோக்கிச் சென்றான்.

காலைக் கடன் - இங்கு கூறப்பட்டது காலைச் சந்தி நியமம். அந்தணர் முதலிய துவிஜர் மூவர்க்கும் விதிக்கப்பட்டவை திரிகால

சந்தியோபாசனை என்ப. இவை நித்யகன்மம் ஆதலின் ஒவ்வொரு வரும் செய்தே தீர வேண்டும். பலன் என்ன என்று கேட்பதற் கில்லை. 'கௌசல்யா சுப்ரஜா ராமா, பூர்வாசந்தியா பிரவர்த்ததே, உத்திஷ்ட நரசார்த்தூல, கர்த்தவ்யம் தெய்வ! மான்ஹிகம்' என் பது முதனூல். விசுவாமித்திர முனிவன் இராமபிரானைத் துயி லெழுப்புவது. அருந்தவன் - பரத்துவாசன். விதி - பிரமன். 'நலஞ் சார் தெய்வப் புட்பகமும் நாடற் கரிய நிதியிரண்டும், சலஞ்சார் வில்லாத் தவத்தாலே சாதித் துடையோ னின் தமையன்' (உத்தர. இராவணன் வதை. 22); கேகசி இராவணனுக்குக் கூறியது. இந்தப் புட்பகம் குபேரனுடன் போர் புரிந்து இலங்கேசன் கைப்பற்றியது; 'பண்டைநாள், புண்டரீக வாசனன் 'கொடுத்த புட்பகத்தையும், கொடு வென்றிக் கொண்டரக்கர் 'கோனுவந்து போயினான்' (உத்தர. வரையெடுத்த. 12); மற்றும் இப் புட்பகத் தைப் பற்றிய செய்திகளை யுத்த. 2634, 4036-ல் காண்க. விளங் கிழை: 'விளங்கிழை யொருத்தி தாம்பால் வீசியது சொல்லென்ன' (தனிப். சிவப்பிரகாசர்.); முதிர் தரு; தரு - துணைவினை. முனி மனம் தொடர; 'பாகனைய சொல்லியொடு தம்பி பரிவிற்பின், போகமுனி சிந்தை தொடரக் கடிது போனான்' (ஆரணிய. 176); (ஒப்பு): 'நாணனும்மன்பு முன்பு நளிர் வரையேற' (பெரிய பு. கண்ணப்ப).

பி - ம். 2. அதிர்தரு.
3. மானமேறி.
4. கருணையோடு. 313

## விமானத்துச் செல்லுகையில், அயோத்தியின் மதிற்புறம் தோன்றுதல்

4206. தாவிவான் படர்ந்து மானந்
தடையில தேகும் வேலைத்
தீவிய கனிய தாகிச்
செருக்கிய காமச் செவ்வி
ஓவிய முயிர்பெற் றென்ன
வும்பர்கோ னகரு மொவ்வா
மாவிய லயோத்தி சூழு
மதிற்புறந் தோன்றிற் றன்றே.

மானம் - புட்பகம், தாவி - தாவி, வான் தடை இலது படர்ந்து- ஆகாயத்தில் இடையூறெதுவுமின்றி விரைந்து, ஏகும் வேலை - செல்லும் பொழுதில், தீவிய கனியது ஆகி - இனிய அழியாத தன்மையுடையதாய், செருக்கிய - களிப்பேறிய, காமம் செவ்வி - விரும்பற்கேற்ற அழகுடனியைந்த, ஓவியம் உயிர் பெற்றென்ன - சித்திரம் உயிர் பெற்ருற் போன்று, உம்பர் கோன் நகரும் ஒவ்வா - தேவேந்திரனுடைய நகரமும் (தனக்கு) நிகர் ஆகாத, மா இயல் அயோத்தி சூழும்-பெருமை வாய்ந்த அயோத்தியா புரியை வளைந்து நின்ற, மதில் புறம் தோன்றிற்று - புறமதில் கட்புலனுயிற்று. அன்று ஏ : ஈற்றசை.

தீவிய - இனிப்பு மிக்க, உயிர் பெற்றது என்ன என்பது பெற்றென்ன என நின்றது. உம்பர் கோன் - தேவேந்திரன். நகர் - அமராவதி நகரும் ஒவ்வா; 'அவ்வுலகத்தோ ரிழிவதற் கருத்தி புரிகின்ற தயோத்தி மாநகரம்' (பால. நகரப். 1); 'செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலம் திருவின்வீற் றிருந்தமை தெரிந்தால், அங்கண்மா ஞாலத் தந்நக ரொக்கும் பொன்னக ரமரர் நாட்டி யாதோ' (பால. நகரப். 6); கன்னிமா மதில் என்பன காண்க. கன்னி - அழியாத் தன்மை; 'கன்னிக்கொடி மதில் நாதன்' (சீவக, 525).

பி - ம். 1. நாவில்.

3. திருவுமொவ்வா. 314

## இராமன் 'அயோத்தி இதுதான்' என்ன, யாவரும் வணங்குதல்

4207. பொன்மதிற் கிடக்கை சூழப்
 பொலிவுடை நகரந் தோன்ற
நன்மதித் துணைவர் தம்மை
 நோக்கிய ஞான மூர்த்தி
சொன்மதித் தொருவ ராலுஞ்
 சொலப்படா வயோத்தி தோன்றிற்
றென்னலுங் கரங்கள் கூப்பி
 யெழுந்தன ரிறைஞ்சி நின்ருர்.

(அப்போது) பொன் மதில் கிடக்கை சூழ - பொன் மயமான மதிலிடங்கள் வளைந்து ஒளிர, பொலிவு உடை - விளக்கமுடைய, நகரம் தோன்ற - அயோத்தி கட்புலனாக, நன்மதி துணைவர் தம்மை - நல்லஅறிவுடைய நண்பர்களை, நோக்கிய - கண்ணுற்றருளிய, ஞான மூர்த்தி - ஞான வடிவினனான இராமபிரான், ''ஒருவராலும் - யாவ ராலும், (இத்துணைப் பெருமையதென்று), மதித்து - எண்ணி, சொல் சொலப்படா - சொல்லாற் புகழ்ந்து முடியாததான, அயோத்தி தோன்றிற்று - அயோத்தி தெரிகின்றது', என்னலும் - என்று சொல்லிய அளவில், (அது கேட்ட எல்லோரும்), கரங்கள் கூப்பி - கைகளைக் குவித்து, எழுந்தனர் - எழுந்து, இறைஞ்சி நின்றார் - வணங்கி நின்றனர்.

சொல் மதித்துச் சொலப்படா - வாசா மகோசரம்; வாக் கிறந்தது என்றபடி. எழுந்தனர் - முற்றெச்சம். இராமபிரான் பிறந்த நகர் ஆதலானும் தெய்வத் தன்மையைக் கொண்டு விளங்குதலானும் முத்தி தரும் நகரேழனுள் ஒன்றுதலானும் அனைவரும் வணங்கினர் என்க. மற்றும் ஓர் நகர்க்குப் பெருமை அந்நகர்க்கண் வதியும் உத்தமராலேயே ஏற்படுவது. 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' (புறநா. 187)-ம் அதன் உரையும் காண்க. சில பிரதிகளில் இதனோடு பரதன் விரதப் படலம் முடிய, மேல் நகர் புகுபடலம் தொடங்குகின்றது.

பி - ம். 1. சூழ்ந்த, சூழும்.
2. கிழவர்.
4. தொழுதனர்.

315

## வேறு

### பரதனுடன் வருகிற அநுமன் அவ் விமானத்தைக் காணுதல்

4208. அன்னதோ ரளவையின் விசும்ப தாயினும்
துன்னிருங் கதிரவர் தோன்றினா ரெனப்
பொன்னணி புட்பகப் பொருவின் மானமும்
மன்னவர்க் கரசனும் வந்து தோன்றினர்.

அன்னது ஓர் அளவையின் - அச் சமயத்தில், விசும்பது ஆயி னும் - (தான்) ஆகாயத்தில் நெடுந் தூரத்தில் உள்ளதா யிருந்

தாலும், துன் - நெருங்கிய, இரு கதிரவர் - பெரிய (பல) சூரியர்கள், தோன்றினர் என - ஒரே காலத்தில் உதயமாயினர் என்னுமாறு, பொன் - பொன் மயமான, அணி - அழகிய, புட்பகம் - புட்பகம் என்னப்பட்ட, பொரு இல் மானமும் - தன்னிகரற்ற விமானமும், (அதன்கண் அமர்ந்திருந்த), மன்னவர்க்கு அரசனும் - அரசர்க்கரசனான இராமபிரானும், வந்து தோன்றினர் - வந்து (அநுமனுக்கு) எதிரில் காணப்பட்டார்கள்.

விசும்பு - ஆகாயம். 'நிலனேந்திய விசும்பும்' (புறநா. 2); இருங் கதிரவர் தோன்றினரென : 'அண்ட கோடிகளனந்தமொத் தாயிர மருக்கர், விண்டதாமென விசும்பிடைத் திசையெலாம் விளங்கக், கண்டை யாயிரக்கோடிகள் ஒலிப்புற' (யுத்த. 4036) காண்க. விமானத்துக்கு ஒளியுண்மையை : 'பன்னகாதிபர் பணாமணி பறித்தவை புகுத்தென்ன வானவர் விமானம்' (ஆரணிய. 12).

பி - ம். 1. விசும்பினுயிரம்.

2. துன்னொளிக், துன்னரும் ; கதிரவன், தோன்றினல்.

3. பொன்னொளிர் ; மானமேல்.

4. வந்து தோன்றவே, தானுந் தோன்றிற்ருல். 316

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

தோன்றலுஞ் சுமந்திரன் றொழுத கையினன்
ஈன்று காத் தளித்தவை யியற்று மவ்வுரு
மூன்றுமாய் நான்குமாய் ஐந்துமா முதல்
சான்றினைப் பரதற்குச் சுட்டிச் சாற்றுவான்.

## அநுமன் விமானத்திலுள்ளாரைப் பரதனுக்குச் சுட்டிக் காட்டுதல்

4209. அண்ணலே காண்டியா லலர்ந்த தாமரைக்
கண்ணனும் வாநரக் கடலுங் கற்புடைப்
பெண்ணருங் கலமுநின் பின்பு தோன்றிய
வண்ணவிற் குமரனும் வருகின் றூர்களே.

(அநுமன் பரதனை நோக்கி), 'அண்ணலே - பெருமையுடையவனே ! அலர்ந்த - மலர்ந்த, தாமரை கண்ணனும் - செந்தாமரை

போன்ற நேத்திரங்களை யுடையவனான இராமபிரானும், : வாநரர் கடலும் - கடல் போன்ற வாநரப் படையும், கற்பு உடை பெண் அருகலமும் - கற்பு நிறைந்த பெண்கட்கெல்லாம் அரியதோர் ஆபரணம் போன்று அழகு செய்பவளான பிராட்டியும், நின் பின்பு தோன்றிய - உன் பின்னர்ப் பிறந்தவனாகிய, வண்ணம் வில் குமரனும் - அழகிய வில்லினை ஏந்திய இலக்குவனும், வருகின்றார்களை - (புட்பகத்தில்) வருபவர்களை, (இதோ) காண்டி - காண்பாயாக.

பெண்ணருங்கலம் : 'பெண்ணின் அருங்குலக் கலமே' (யுத்த. 2818).

பி - ம். 1. அலங்கு தாமரை. 317

4210. ஏழிரண் டாகிய வுலக மேறினும்
பாழ்புறங் கிடக்குறு படிய தாயதோர்
சூழொளி மானத்துத் தோன்று கின்றனன்
ஊழியா னென்றுகொண் டுணர்த்துங் காலையே.

'ஏழு இரண்டு ஆகிய உலகம் ஏறினும் - பதினான்கு உலகில் உள்ளவர்களும், (ஒரு சேரத்) தன்மீது ஏறினாலும், பாழ்புறம் கிடக்குறு - வெற்றிடம் கொண்ட, படியது ஆயது - தன்மையினை யுடையதும், ஓர் - ஒப்பற்றதும், சூழ் ஒளி - எங்கும் பரவிய ஒளியை யுடையதுமான, மானத்து - புட்பகத்தில், ஊழியான் - காலத்துக்கும் ,தலைவனாய் அழிவில்லாதவனான இராமபிரான், தோன்றுகின்றனன் - (இதோ) காணப்படுகின்றான்', என்று கொண்டு - என்று, (இங்ஙனம் பரதனுக்கு அநுமன்) உணர்த்தும் காலை - அறிவிக்கும் போழ்தில்; தோன்றலும், ஆர்ப்பு சென்றது எனச் சென்று முடிவது காண்க. ஏ : அசை.

உலகம் - இடவாகு பெயர். பாழ்புறம் - வெற்றிடம். ஊழியான் - யுகப்பெரு வெள்ளத்தும் அழிவுறாத பெருமான். 'ஊழி முதல் நாயகன்' (யுத்த. 689); 'ஊழிக் காலத்துத் திருமால் தன வயிற்றிற் சரா சரங்களடங்கச் சிறு குழவி வடிவாகி ஓர் ஆலிலையில் அறிதுயில் கொள்பவன் ஆதலின், 'ஊழியான்' எனப்பட்டது.

பி - ம். 1. உலகமெய்தினும்.
2. கிடப்பது படியின்றுவதோர்.
4. காலையில். 318

## இராமபிரானைக் கண்ட வளவில் எதிர்கொள்ளச் சென்றவர்கள் ஆரவாரித்தல்

4211. பொன்னொளி மேருவின் பொதும்பிற் புக்கதோர்
மின்னொளி மேகம்போல் வீரன் தோன்றலும்
மன்னெதிர் வருகுந ரார்ப்பி ராவணன்
தென்னகர்க் கப்புறத் தளவுஞ் சென்றதால்.

பொன் ஒளி மேருவின் - பொன் போலும் ஒளி படைத்த மேரு மலையின், பொதும்பில் புக்கது ஓர்-(பெரிய) குகையிற் புக்கதொரு, மின் ஒளி மேகம் போல் - மின்னலின் ஒளியுடன் கூடிய மேகம் போன்று, வீரன்-வீரனான இராமபிரான், தோன்றலும் - (புட்பகத்தில் பிராட்டியுடன்) எதிர்ப்பட்ட போதில், மன் எதிர் வருகுநர்-(தமக்கு) அரசனாகிய அவ்விராமபிரானை எதிர் ஏற்க வருகின்ற மக்களின், ஆர்ப்பு-(உவகையாலுண்டான) ஆரவாரம், இராவணன்-இராவணன் ஆண்ட, தென் நகர்க்கு அப்புறத்து அளவும் சென்றது - தென் திசையில் உள்ள இலங்கா நகரத்திற்கு அப்பாலும் சென்று பரவியது. ஆல் - அசை.

பொதும்பு - சோலை; இங்கு மரம் அடர்ந்த குகை என்க. மேரு புட்பகம் - பொதும்பில் புக்கதோர் மின்னொளி மேகம்; அதன் கண் அமர்ந்திருந்த பிராட்டியுடன் கூடிய இராமபிரான். முன் இரண்டடி உவமையணி. பின்னிரண்டடி உயர்வு நவிற்சி. 'மேரு என் துணைக் கணவனுற்றற் குரனிலாதிற்று வீழ்ந்த, அன்றெழுந் துயர்ந்த ஓசை கேட்டிலை போலுமம்மா' (சுந்தர. 451) என்ற இடத்து இராமபிரான் கன்யா சுல்கமாக அமைந்த வில்லை முறித்ததனால் எழுந்த ஓசை, இலங்கை வரையில் கேட்டிருக்கக் கூடும் என்று கூறியது காண்க. 'ஊர் தீயிட்ட தோங்கிரும் புகையே யோத' (சுந்தர. 1254) என்ற இடத்தும் இலங்கை நகரில் எழுந்த புகை கடல் கடந்தும் காணப்பட்டது என்று கூறுதலும் ஓர்க. 'எழுந்திடைப் படருஞ் சேனையின், கொழுந்து போய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே' (பால. எழுச்சி. 24); இவ்வாறு மிகைபடக் கூறுவது கவிமரபு என்றுணர்க. தென்னகர் - அழகிய நகருமாம்.

பி - ம். 1. பொன்னொளிர்.

3. அந் நகரார்த்தெழும், அந் நகரமர்ந்த போர், மன்னெதிர் வருநர்கள்.

4. தன்னகர்ப் புறத்தவுந்தாவி ; சென்றவால்.

## பரதன் இராமனைக் கண்டு வணங்குதல்

4212. ஊனுடை யாக்கைவிட் டுண்மை வேண்டிய
வானுடைத் தந்தையார் வரவு கண்டெனக்
கானிடைப் போகிய கமலக் கண்ணனைத்
தானுடை யுயிரினைத் தம்பி நோக்கினன்.

ஊனுடை யாக்கை விட்டு-(தனது) மாமிசவுடலை விடுத்து, (மரித்து), உண்மை வேண்டிய - சத்தியத்தை விழைந்தவனும், வான் உடை - விண்ணுலகத்தை யடைந்தவனும், தந்தையார் - தந்தையுமான தயரதனுடைய, வரவு கண்டுஎன - வருகையைக் கண்ணுற்றாற் போன்று, கான் இடை போகிய கமலம் கண்ணனை - காட்டிடைச் சென்ற தாமரை மலர் போன்ற விழிகளை யுடையவனும், தான் உடை உயிரினை - தன்னுடைய உயிர் போன்றவனுமாகிய இராமபிரானை, தம்பி நோக்கினன் - (அவனுடைய) தம்பியாகிய பரதன் பார்த்தான்.

அண்ணன் வரவுக்குத் தந்தையின் வரவு கூறியது தமையன் தகப்பனோடொப்பன் ; ஆதலின், ஜேஷ்டப் பிராதா பிதிர் சமகா ; என்றது காண்க. (ஒப்பு) : ஆரணிய. 202. இராமபிரானும் பரதனும் ஒருவர்க்கொருவர் உயிர் போன்றவர் : கிட்கிந்தா, 261. தயரதன் சத்தியத்திற்காக உயிர் விடுத்தவன் ஆதலின், ஊனுடை யாக்கை விட்டுண்மை வேண்டிய, வானுடைத் தந்தையார் எனப்பட்டான்' 'எந்தையும் ஆயும் எம்பிரானு மெம்முனும், அந்தமில் பெருங் குணத் திராமனுதலால்' (அயோத்தி, பள்ளியடை. 58) என்று பரதன் கூறுதல் காண்க. 'மாதாராமோ மத்பிதா ராமச்சந்திரகா' என வருவதும் காண்க. தாய் தந்தையுடன் குரவருள் ஒருவராகச் சேர்த்துக் கூறுவதும் அறியலாம். (ஆசாரக். 16) ; (ஒப்பு) : 'தொழு தெழும் பரதனைப் பொன்னின் மார்புறவளைத் துயிருறப் புல்லி னன், தன்னையத் தாதை முன் தழுவினனென்னவே' (பால. எதிர்கொள். 26).

பி - ம். 2. தந்தையை.
3. கானிடை யெய்திய.
4. உயிரெனத், அகமகிழ் ; கண்டனன்.

4213. கெட்டவான் பொருள்வந்து கிடைப்ப முன்புதாம்
பட்டவான் படரொழிந் தவரிற் பையுளேய்
சுட்டவன் மானவற் றொழுத லுன்னியே
விட்டனன் மாருதி கரத்தை மேன்மையான்.

மேன்மையான் - நல்லறிவு பண்புகளால் மேம்பட்ட பரதன், கெட்ட வான் பொருள் - (தாம் முன்பு) இழந்துவிட்ட சிறந்த பொருள், வந்து கிடைப்ப - (மீண்டும் தம்மிடம்) வந்து சேர்ந்த அளவில், முன்பு தாம் பட்ட வான்படர் ஒழிந்தவரில் - முன்னர்த் தாம் துய்த்த பேரிடர்கள் யாவும் நீங்கப் பெறுபவர் போன்று, பையுள் நோய் - (இராமபிரானை நீங்கி நின்றதால் உண்டாயிருந்த) துன்பமாகிய பிணி, சுட்டவன் - (இப்பொழுது அவனைக் கண்ணுற்ற தால்) முற்றும் ஒழியப் பெற்றவனாய், (மனக் களி கொண்டு)' மானவன் தொழுதல் உன்னி - மனுவழித் தோன்றலாகிய (இராம பிரானை) வணங்க எண்ணி, மாருதி கரத்தை விட்டனன் - தான் பற்றியிருந்த அநுமன் கையை நெகிழவிட்டான். ஏகாரம் : அசை.

முதலடிக்கு ; 'பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்' (சுந்தர. 554); தாம் பட்ட - தாம் அநுபவித்த. 'படமுடி யா தினித் துயரம் படமுடியா தரசே, பட்டதெல்லாம் போதும்' (திருவருட்பா. 6, பிரியேன். 3); படர் - துன்பம்; 'படரெலாம் படைத்தானை' (அயோத்தி. குகப். 70). பையுள் நோய்: 'பையுளுற் றுயங்கினைவான்' (ஆரணிய. 650); பையுளாகிய நோயென்க. 'பருகும் வேட்கையன் பையுள்கூர' (பெருங். 1, 44, 145); 'பருவரலுரு அப்பையு ணெஞ் சினள்' (பெருங். 1, 46, 167); 'பயலை கொண்டவென் பையுளாக்கை' (பெருங். 1, 35, 55); சுட்டவன் - அறவே வேருடன் களைந்தவன் ; 'வேரறுத்து வெந்நீர் விடுதல்' போன்று ; 'ஆங்கார முள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டெரித்து' (தாயு. பராபரம்.) என்றது காண்க. மானவன் - மனுவழி வந்தவன். தந்திதாந்த நாமம் - உவமையணி. அநுமன் கையைப் பற்றிக்கொண்டு பரதன் வந்தது முதனூலில் கூறப்படவில்லை.

## அநுமன் இராமபிரானை எதிர்சென்று வணங்குதல்

4214. அக்கணத் தனுமனு மவணின் றேகியத்
திக்குறு மானத்தைச் செவ்வ னெய்தியச்
சக்கரத் தண்ணலைத் தாழ்ந்து முன்னின்ருன்
உக்குறு கண்ணநீ ரொழுகு மார்பினன்.

அ கணத்து - அப்பொழுது, அநுமனும் - மாருதியும், அவண் நின்று - அவ்விடத்தினின்று, ஏகி - சென்று, அ திக்கு உறு - அந்த வடதிசை நோக்கி வருகின்ற, மானத்தை - அந்த விமானத்தை, செவ்வன் எய்தி - நேராக அடைந்து, (அதில் அமர்ந்துள்ள), அ சக்கரத்து அண்ணலை - அந்த ஆழிப்படைக்குரிய இராமபிரானை, உகு உறு கண்ண நீர் ஒழுகு மார்பினன் - பெருகுகின்ற (உவகைக் கண்ணீர்) வழியப் பெற்ற மார்பினை யுடையவனாய், தாழ்ந்து முன் நின்ருன் - வணங்கி முன்னே நின்ருன்.

திக்கு - வட திசை. சக்கரத்தண்ணல் - திருமால் அவதாரமான இராமபிரான். கண்ணீர் - மகிழ்ச்சியாற் பெருகிய புனல்.

பி - ம். 1. அருக்கனே யெனத்.
2. செலவி னெய்தினன்.
3. சக்கரத்தையனை, கரத்தனை. 322

'மிக்குயர் முனிவனுச்சிரம மேவினன்' என்றது சில பிரதிகளில் இரண்டாமடி.

## அநுமன் இராமனுக்கு அயோத்தியின் செய்தியைக் கூறுதல்

4215. உருப்பவிர் கனலிடை யொளிக்க லுற்றவப்
பொருப்பவிர் தோளனைப் பொருந்தி நாயினேன்
திருப்பொலி மார்பநின் வரவு செப்பினேன்
இருப்பன வாயின வுலகம் யாவையும்.

(அநுமன் இராமபிரானைப் பார்த்து), 'திருபொலி மார்ப - திருமகள் விளங்குகின்ற மார்பினை யுடையவனே! நாயினேன் - நாய் போன்று கடைப்பட்டவனான அடியேன், உருப்பு அவிர் - வெப்பம் மிக்க, கனல் இடை - தீயினில், ஒளிக்கல் உற்ற - குதித்து மறையத் தொடங்கிய, அ பொருப்பு அவிர் தோளனை - அந்த மலை போன்று விளங்குகின்ற தோள்களை யுடைய பரதனை, பொருந்தி - சேர்ந்து, நின் வரவு செப்பினேன் - உனது வருகையை அறிவித்தேன், (அது கேட்டுப் பரதன் தீக்குளித்தலைத் தவிர்ந்தனன் ஆகலின்), உலகம் யாவையும் இருப்பன ஆயின. எல்லா வுலகங்களும் நிலைப்பன ஆயின'.

உருப்பு - வெப்பம்; 'கன்மிசை உருப்பிறக் கனைதுளி சிதறென' (கலித். 16, 7); ஒளிக்கல்: மங்கலம் உலகம் யாவையும் இருப்பன ஆயின: 'புண்ணியம் மெனும் நின் உயிர் போயினால், மண்ணும் வானு மறித்துயிர் வாழுமோ' (யுத்த. 4118) என்றது காண்க. 323

## இராமபிரான் அநுமனைத் தழுவிப் புகழ்தல்

4216. தீவினை யாம்பல செய்யத் தீர்விலா
வீவினை முறைமுறை விளைவ மெய்ம்மையாய்
நீயவை துடைத்துநின் றளிக்க நேர்ந்தனை
யாயினு மன்பினு யாஞ்செய் மாதவம்.

(இராமபிரான் அநுமனை நோக்கி) 'மெய்ம்மையாய் - சத்திய சந்தனே! ஆயினும் அன்பினுய் - தாயினும் அன்புடையவனே! யாம் - நாங்கள், பல தீவினை செய்ய - பல கெட்ட செயல்களை (முன்பு) செய்ய, தீர்விலா - (அவைகள் எம்மை விட்டு) அகலாதனவாய், வீவினை - சாகுந்தொழில், முறை முறை விளைவ - அடிக்கடி நிகழா நிற்க, நீ - நீ, அவை - அந்த விபத்துக்களை, துடைத்து நின்று - போக்கி நின்று, அளிக்க நேர்ந்தனை - காப்பாற்றும்படி எதிர்ப்பட்டாய்; (இது) யாம் செய் மா தவம் - நாங்கள் (முற்பிறப்பிற்) செய்துள்ள பெருந்தவத்தின் விளைவேயாகும்'.

இங்கு, 'பல்லாவுளுய்த்து விடினும் குழக்கன்று வல்லதாந் தாய் நாடிக் கோடலைத் — தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தே

தற்செய்த, கிழவனை நாடிக் கொளற்கு' (நாலடி. 101); 'வேண்டினும், வேண்டாவிடினும் உறற்பால, தீண்டா விடுதலரிது' (நாலடி. 109); 'எனைப் பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின் சென்றடும்' (குறள். 207); 'தீயவை செய்தார் கெடுதல் நிழறன்னை, வீயா தடி யுறைந் தற்று' (குறள். 208) என்பன காண்க. 'தினை விதைத்தவன் தினை யறுப்பான், வினை விதைத்தவன் வினை யறுப்பான்' என்பது பழமொழி. 'தாந்தாமுன் செய்த வினை தாமே யனுபவிப்பார்' (நல்வழி. 30) என்றதும் காண்க. எத்தகைய தீவினையின் விளைவும் எம்பெருமான் திருவடி தீட்சையால் அறவே ஒழியும் என்பர் அறிஞர். 'ஒப்பிறையும் பெறலரிய ஒருவாமு னுவந்துறையும், அப் புறையுட் டுறந்தடியேன் அருந் தவத்தா னணுகுறலால், இப்பிறவிக் கடல் கடந்தே னினிப்பிறவே னிருவினையும், துப்புற நீத் தனையசுடர்த் திருவடியாற் றுடைத் தாய் நீ' (ஆரணிய. 61); 'மொய்த் திருண்டு பந்தித்து நின்ற பழவினை தீர்ப்பன பாம்பு சுற்றி, யந்திப் பிறை யணிந்த தாடுமை யாற னடித்தலமே' (தேவா. 292 : 1); 'அவன் திருக்கை வேல் பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்புமவன், கால்பட்டழிந்த திங்கென்றலை மேலயன் கையெழுத்தே' (கந்தரலங். 40) என்பனவும் காண்க. புள்ளிருக்கும் வேளூர்ப் பெருமானுக்கு வினை தீர்த்தான் என்ற பெயருண்மையும் அறிக. வீதல் - இறத்தல்; 'வீயுமுயிர் மீளும்' (சுந்தர. 558); ஆயினும் அன்பினுய்; ஆய் - தாய்; தாயன்பு சாலச் சிறந்ததாகலின் இங்ஙனம் கூறப்பட்டது. 'தாயொக்கு மன்பில்' (பால. அரசியல். 4); 'போற்றலாற்றுய ரொத்தும்; திரிசிரா மலையில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானின் மூர்த்தத்துக்குத், தாயுமானவன் என்ற பெயருண்மை காண்க. இஃது இராமபிரான் கூற்று: திருமாலின் அமிசமான அவனே 'வினையினீங்கி விளங்கிய அறிவன்' எனினும் இங்கு தான் மேற் கொண்ட மனித வடிவுக்கேற்ப இங்ஙனம் கூறினன் என்க. வீவிலை முறை முறை விளைவ என்ற பாடம் கொண்டும் பொருள் கூறுவர் ஒரு சாரார். வீவினை முறை முறை விளைய - பன்முறை எங்கட்கு இறப்பு நிகழ்ந்ததாக. இந்திரசித்தின் பிரமாத்திரத்தாலும் இராவணன் எறிந்த வேலினாலும், இலக்குவன முதலானோர்க்கு நேர்ந்த சாவை, மருத்து மலைகொண்டு போக்கியதாலும், பரதன் இறப்பதை அவன் வீழத் தயாராக இருந்த

அங்கியை அவித்துத் தடுத்ததாலும், இங்ஙனம் கூறினன் இராமபிரான் என்க.

பி - ம். 1. நீர்விலே.

2. மெய்ம்மையால்.

3. நீயிவை ; நின்றளித்து ; நேர்ந்ததால்.

4. தாயினும் ; யான். 324

4217 என்றுரைத் தனுமனை யிறுகப் புல்லினன்
ஒன்றுரைத் திறுப்பதென் னுனக்கு மெந்தைக்கும்
இன்றுணைத் தம்பிக்கும் யாய்க்கு மென்றனன்
குன்றிணைத் தனவுயர் குவவுத் தோளினன்.

என்று உரைத்து - என்று கூறி, குன்று இணைத்து அன - இரண்டு குன்றுகளைச் சேர்த்தாற் போன்று, உயர் குவவு தோளினன் - உயர்ந்து திரண்ட (இரண்டு) தோள்களையுடையவனான இராமபிரான், (கைம்மாறு கருதாது உதவிய) உனக்கும் - உன்னைப் பற்றியும் (கைம்மாறு எதிர்பாராத), எந்தைக்கும் - உண்மையின் பொருட்டு உயிர் விடுத்த என் தந்தையான தயரதப் பேரரசனைப் பற்றியும், இன் துணை தம்பிக்கும் - (எக்காலும் இடைவிடாது என்னுடனிருந்து எனக்கு ஆவன செய்து) உதவியாளனாக இருந்த தம்பி இலக்குவனைப் பற்றியும், ஆய்க்கும் - என்னைப் பெற்ற தாயான கோசலையைக் குறித்தும், ஒன்று உரைத்து இறுப்பது என் - (புகழ்ச்சியாக) ஒரு வார்த்தை கூறி முடிப்பது எங்ஙனம் இயலும்?' என்றனன் - என்று மொழிந்து, அநுமனை இறுக புல்லினன் - அநுமனை இறுகத் தழுவினன்.

ஒன்றுரைத்து இறுப்பதென் - அவர்கள் செய்த அரிய உதவிகளைச் சொல்லி முடியாது என்றபடி. எந்தை - மரூஉ. குன்றிணைத்தனவுயர் தோள்: 'இரு தோளெனுஞ் சோம்பியோங்கும், கல்லுஞ் சுமந்தேன்' (அயோத்தி. நகர்நீ. 159); 'பொன்னுருக் கொண்டமேரு புயத்திற்குமுவமை போதாத், தன்னுருக் கொண்டு நின்றான்' (கிட்கிந்தா. 73); இன்றுணைத் தம்பி பரதனுமாம்.

பி - ம். 2. ஒன்றுரைத்திடுவது.

3. யார்க்கும்.

4. குன்றிசைத்து அனையன, அனையதோர். 325

## பரதன் இராமனருகில் தோன்றுதல்

4218 ஈடுறு வான்துணை யிராமன் சேவடி
சூடிய சென்னியன் தொழுத கையினன்
ஊடுயி ருண்டென வுலர்ந்த யாக்கையன்
பாடுறு பெரும்புகழ்ப் பரதன் தோன்றினான்.

(இவ்வளவில் புட்பகம் சென்று இராமபிரானை வரவேற்க வந்தவர்கள் இருந்த இடத்தை அணுகியதாக), ஈடு உறு-(ஒன்றோ டொன்று) இணையொத்தனவும், வான் துணை - தனக்குப் பெருந் துணையாக வுள்ளனவுமான, இராமன் சேவடி-இராமபிரானுடைய திருவடி நிலைகளை, சூடிய சென்னியன் - தரித்த தலையினை யுடைய வனும், தொழுத கையினன் - கூப்பிய கரங்களை யுடையவனும், உயிர் ஊடு உண்டு என - உயிர் உள்ளதென்று நுட்பமாகக் கண்டு அறியுமாறு, உலர்ந்த யாக்கையன் - வற்றிய உடம்பினை யுடைய வனுமான, பாடு உறு - சிறப்புப் பெற்ற, பெரு புகழ் - மிக்க கீர்த் தியையுடைய, பரதன் தோன்றினான் - பரதன் (அருகில்) காணப் பட்டான்.

சேவடி - திருவடி நிலை. பாதுகை சூடிய சென்னியன், தொழுத கையினன் - வடமொழி நடை. தொழு தகையினன் எனப் பிரித் தலுமாம். பாடு - பெருமை. 'கீழ்ப் பிறந்துங் கற்றானைத்திலர் பாடு' (குறள், 409); மற்றும்; குறள். 597, 798, 1322-ம் காண்க. பரதாழ்வானுடைய பல்வகைப் பெருமைகள் இக் காப்பியத்தில் ஆங்காங்குக் கூறப் பெற்றிருத்தல் காண்க. அயோத்தி. குலமுறை. 22; அயோத்தி. மந்தரை. 161; திருவடி சூட்டு. 47, 55, 104, 133; பள்ளிபடை. 47, 94, 119; கங்கைகாண். 36; 'விரத மாதவப் பரதன்' (அயோத்தி. ஆறு செல். 1); கிட்கிந்தா. 269; யுத்த. 48, 4081, 4092, 4120, 4218. பாடுறு - புலவர் பாடும் புகழுடைமையு மாம். 326, 327-ல் அந்தாதித் தொடைகள் காண்க.

பி - ம். 1. தேடிய மாமறை, ஈடியல்வான், ஈடியவன்; இணை.

## அநுமன் இராமபிரானுக்கு பரதன் வந்ததை அறிவித்தல்

4219. தோன்றிய பரதனைத் தொழுது தொல்லறச்
சான்றென நின்றவ னினைய தம்பியை
வான்றொடர் பேரர சாண்ட மன்னனை
ஈன்றவள் பகைஞனைக் காண்டி யீண்டென்றான்.

தொல் அறம் சான்று என நின்றவன் - பழமையான தருமத்துக்குச் சாட்சி போன்றவனாகிய (நீதி முறையிற் சிறந்த) அநுமன், தோன்றிய பரதனை - அருகில் காணப்பட்ட பரதனை, தொழுது - வணங்கி, (இராமபிரானைப் பார்த்து), 'வான் தொடர் பேர் அரசு ஆண்ட - பரமபதத்தை அடைதற்கு எளிய வழியாகிய (பாரதந்திரியம் என்னும்) பெரிய அரசை (எவவிதப் பற்றுமின்றி) ஆட்சி புரிந்த, மன்னனை - மன்னனும், ஈன்றவள் பகைஞனை - (தன்னைப்) பெற்ற தாய்க்குப் பகைஞனுமாகிய, இனைய தம்பியை-இத்துணைச் சிறப்பினையுடைய தம்பியான பரதனை, ஈண்டு காண்டி - இப்பொழுது காண்பாயாக', என்றான் - என்று மொழிந்தான் அநுமன்.

அறச் சான்றென நின்றவன்; கிட்கிந்தா. 57, 63, 68, 73; சுந்தர. 28, 1041. வான் தொடர் பேரரசு - புகழ் வானளவும் தொடரப் பெற்ற அயோத்தி நகர் ஆட்சி எனினுமாம். 'செம்மாண் டனிக்கோலுல கேழினுஞ் செல்ல நின்றான்' (பால. அரசி. 1); 'குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீகொண், டன்றளித்த வரசன்றோ புரந்தரனின் றாள்கின்றதரச வென்றான்' (பால. கையடை. 8); 'தோடி வர்ந்ததார்ச் சம்பரன் தொலைவுற்ற வேலை, ஆடல் வென்றியானருளிய' (அயோத்தி. மந்தரை. 81); 'சம்பரப் பெயருடைத் தானவர்க் கிறைவனைத் தனுவலத்தால், அம்பரத் தும்பர்புக் கமரிடைத் தலைதுமித் தமரருய்ய, உம்பருக் கிறைவனுக் கரசளித் துதவினா னொருவனேமி, யிம்பரிற் பணி செயத் தசரதப் பெயரினான்' (யுத்த. 93) என்று வந்தன காண்க. தசரதன் என்ற பதத்திற்கே பத்துத் திக்கினும் தன் தேரைச் செலுத்துபவன் என்பது பொருள் என்ப. ஈன்றவள் பகைஞனை - (தன்னைப்) பெற்ற தாய்க்குப் பகைஞன். தாய் - கைகேசி; இவள் காட்டிற்கனுப்பிய முறையற்ற செயலை நினைந்து தான் அவள்

வயிற்றிற் பிறந்ததற்காக வருந்துவதை அயோத்தி பள்ளியடைப் படலத்தும்; 'படரெலாம் படைத்தாளை', 'சுடு மயானத்திடை' எனத் தொடங்கும் குகப் படலச் செய்யுட்கள் கொண்டும் உணர்க.

பி-ம். 2. நின்ற நின்னிளைய.

3. பேரசாட்சி.

4. பகைஞனைச் சுட்டி, காட்டி; ஈன்றெடு. 327

## பரதன் வரவு கண்டு இராமன் மகிழ்தல்

4220. காட்டினன் மாருதி கண்ணிற் கண்டவத்
தோட்டலர் தெரியலா னிலைமை சொல்லுங்கால்
ஓட்டிய மானத்து ளுயிரிற் றந்தையார்
கூட்டுருக் கண்டன்ன தன்மை கூடினன்.

மாருதி - அநுமன், காட்டினன் - அநுமனைக் காட்டினான்; கண்ணில் கண்ட - (அப் பரதனை) நேரில் கண்ணுற்ற, அ தோடு அலர் தெரியலான் - அந்த இதழ்கள் விரியப் பெற்ற மாலை புனைந்த அந்த இராமபிரானுடைய, நிலைமை சொல்லும் கால்-நிலைமையைப் புகலுமிடத்து, (அப் பெருந்தகை) ஓட்டிய - ஏறிச் செலுத்திய, மானத்து - விமானத்தில், (வந்து காட்சியளித்த), உயிரின் தந்தையார் - உயிருடன் கூடிய தந்தையான தயரத மன்னனுடைய, கூடு உறுகண்டு அன்ன - பொருந்திய உருவத்தைக் கண்டது போன்ற, தன்மை கூடினன் - தன்மையை யடைந்தான்.

தோடு + அலர் - தோட்டலர். ஓட்டுதல் - செலுத்துதல்; இலங்கையில் விமானத்திலிருந்து இறங்கி வந்த தந்தையைத் தான் கண்டபோதுற்ற மகிழ்ச்சியை, இராமபிரான் இங்குத் தம்பியாகிய பரதனைக் கண்டபோதும் பெற்றனன் என்க. யுத்த. 4212 பார்க்க.

பி-ம். 1. காணவத்.

3. ஓட்டிய தேர்வர வுயிரிற், ஊட்டியதேர மயத்துயிரிற். 326

இதன் பின் சில பிரதிகளில் 'ஆனதோர்' என்ற பாடல் உள்ளது.

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

அப்பொழு தவ்வயி னடைந்து ளோர்களைத்
தப்பறக் காண்பெனென் றையன் தன்மனத்
தொப்பற வெண்ணுமுன் உம்பர் நாடுவந்
திப்புறத் திழிந்தென விழிந்த மானமும்.

வேறு

## விமானம் கீழிறங்குதல்

4221. அவ்வயி னயோத்தி வைகுஞ்
சனமொடு மக்கு ரோணி
தவ்வலி லாறு பத்தா
யிரமொடுந் தாய ரோடும்
இவ்வயி னடைந்து ளோரைக்
காண்பெனென் றிராம னுன்னச்
செவ்வையி னிலத்தை வந்து
சேர்ந்தது விமானந் தானும்.

அவ்வயின்-அப்பொழுது, 'அயோத்தி வைகும் சனமொடும் - அயோத்தியில் வாழும் மக்களோடும், தவ்வல் இல் - கெடுத லில்லாத, ஆறுபத்து ஆயிரம் அக்குரோணியொடும் - அறுபதி னாயிரம் அக்ஷௌகிணி சேனையோடும், தாயரோடும் - (கோசலை சுமித்திரை கைகேயி என்ற) தாய்மாரோடும், இவ்வயின் அடைந் துளோரை காண்பென் - இவ்விடத்தில் வந்துள்ளவர் எல்லோரை யும் பார்ப்பேன்', என்று - என்று, இராமன் உன்ன - இராமபிரான் நினைத்தமாத்திரத்தில், விமானம் தானும் - புட்பக விமானமும், நிலத்தை செவ்வையின் வந்து சேர்ந்தது - பூமியில் நேராக வந்து இறங்கியது.

தன்னைத் தரிசிக்க வந்தவர்கள் முன் வந்து தன்னைக் காண் பதன் முன்னே, தானே அவர்களைக் காண வேண்டும் என்று கருதினான் காட்சிக்கெளியனான இராமபிரான். இதிலிருந்து அவனுடைய சௌலப்யத்தைக் காணலாம். சகச்சிர நாமத்தில் இராமபிரானுக்குப் 'பூர்வபாஷி' என்ற ஓர் பெயருண்டு. 'தன்

முன்னே யவன்றன்மை தன்றுணைவன் முந்துரைத்த, சொன் முன்னே யுவக்கின்ற துரிசிலாத் திருமனத்தான்' (அயோத்தி. குகப். 27) என்று பரதனைக் கூறினமை காண்க.

பி-ம். 3. உன்னும். 329

## வேறு

## நிலத்தைச் சார்ந்த புட்பகத்தின் வருணனை

4222. எவ்வயி னுயிர்கட்கு மிராம னேறிய
செவ்விய புட்பக நிலத்தைச் சேர்தலும்
அவ்வவர்க் கணுகிய வமரர் நாடுய்க்கும்
எவ்வமின் மானமென் றிசைக்க லாயதால்.

இராமன் ஏறிய-இராமபிரான் ஏறியிருந்த, செவ்விய புட்பகம்-அழகிய புட்பகமானது, நிலத்தை சேர்தலும்-பூமியைச் சார்ந்தவுடன், எவ்வயின் உயிர்கட்கும்-எல்லா இடங்களிலும் உள்ள உயிர்கட்கும், அவ்வவர்க்கு அணுகிய அமரர் நாடு உய்க்கும்-அவ்வப் பிராணிகட்கு (நல்வினையின் விளைவாக)க் கிடைக்கப் பெற்றதும், தேவருலகிற் செலுத்தும் தன்மை வாய்ந்ததுமான, எவ்வம் இல்-குற்றமற்ற, மானம் என்று-விமானமென்று, இசைக்கல் ஆயது-சொல்லலாம் தரத்தாயிருந்தது. ஆல்: அசை.

புட்பகம் வந்து சேர்ந்த அளவில், அதன்கண் வீற்றிருந்த இராமபிரானைத் தரிசித்த பலரும், சுவர்க்கம் எய்தினால் ஒத்த இன்பத்தைப் பெற்றமையின், அதற்குக் காரணமாயிருந்த அந்த விமானம், பிராணி வர்க்கங்களைச் சுவர்க்க போகத்தின்கண் செலுத்தும் விமானத்தை ஒக்கும் எனப்பட்டது நற்குறிப்பேற்றவணி. 'புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வான வூர்தி, எய்துப வென்பதம் செய்வினை முடித்தென' (புறநா. 27) காண்க. இங்கு, 'நிலவரை நீள் புகழாற்றிற் புலவரைப் போற்றாது புத்தேளுலகு' (குறள். 234)ம்; 'இம்மையிற் புகழை யீட்டாமல் அறிவை மாத்திரம் பெற்று யோக முயற்சியால் மறுமையில் தேவ சரீரத்தையும் பெற்றவர்கட்குச் சுவர்க்க லோகத்தில் மிக்க சிறப்பு நடக்கும்' என்ற அதன் உரையும் காணத்தகும். எவ்வம்-குற்றம். 'எவ்வந்தரு பிறவி யெய்தா துழலுளமே, செவ்வந்தி

யானடியே சேர்' (தனிப்பா.); அமரர் நாடு: 'அமரர் நாடாளாதே யாரூராண்ட, வயிராவணமே' (தேவா. 713, 1); அவரவர்-அவ்வவர்; 'அவ்வவர் துறைதொறுமறம் திறம்பலர்' (அயோத்தி. மந்தரை. 46).

பி - ம். 2. திவ்விய; சேர்தலால்.

3. அவ்வவர்க்கெய்திய.

4. ஆனதே. 330

## வேறு

### எதிர்கொண்ட நகரத்தாரின் நிலைமையைக் கூறும்

4223. தாயருக் கன்று சார்ந்த
கன்றெனுந் தகைய னானன்
மாயையிற் பிரிந்தோர்க் கெல்லா
மனோலயம் வந்த தொத்தான்
ஆயிளை யர்க்குக் கண்ணு
ளாடிரும் பாவை யானன்
நோயுறுத் துலர்ந்த யாக்கைக்
குயிர்புகுந் தாலு மொத்தான்.

(இராமபிரான்), தாயருக்கு - தாய்மார்கட்கெல்லாம், அன்று சார்ந்த கன்று எனும் தகையன் ஆனான் - (பிரிந்து) அப்பொழுது கூடிய கன்றென்று புகலத்தக்க தன்மை யுடையவன் ஆயினான்; மாயையின் பிரிந்தோர்க்கு எல்லாம் - மாயையினின்று விலகினவர்கட்கு எல்லாம், மனோலயம் வந்தது ஒத்தான் - மனம் சென்று பொருந்துமிடத்தை நிகர்த்து விளங்கினான்; ஆய் - அழகிய, இளையர்க்கு - பரத சத்துருக்கினர்க்கு, கண் உள் ஆடு இரும் பாவை ஆனான் - கண்களினில் அசைகின்ற கருவிழியை ஒத்து விளங்கினான்; (அனைவர்க்கும்), நோய் உறுத்து உலர்ந்த - வியாதியினால் பீடிக்கப்பட்டு உயிர் நீங்கிச் சென்ற, யாக்கைக்கு - உடலுக்கு, உயிர் புகுந்தாலும் ஒத்தான் - உயிர் புகுந்தாற் போன்ற தன்மையையும் ஒத்திருந்தான்.

தாயருக் கன்று சார்ந்த கன்று; (ஒப்பு): 'மாதர்கள் கற்பின் மிக்கார் கோசலை மனத்தை ஒத்தார்' (அயோத்தி. கைகேசி. 65);

மாயை ; இதனை 'இன்னதென்றுரைத்திடப்படாமை யாலவாச்சிய வடிவாம், அவிவேகத்தால் வெறும் பொய்யான பேய்த் தோற்றம் உண்டாவது போல, அசத்துச் சடதுக்காத்மகமானமாயை அவிவேகத்தாற்றேன்றும்; இதன் விரிவான இலக்கணத்தைக் கைவல்யம் சந்தேகம் தெளிதற் படலத்துக் காண்க. மற்றும், 'இந்த மாயையினல் சீவர்க்கேழவத்தைகளுண்டாகும்' (கைவல்யம். தத்துவ. 57) என்பது முதலாக வரும் செய்யுட்களும் காணத்தகும். மாயை நீங்கப் பெற்ற உண்மை ஞானிகள் மனது லயிக்குமிடம் பரப்பிரம மாதலால் இராமபிரானைக் கண்டதும் பேரானந்தம் உறுவதாயிற்று. மாயை யென்பது உள்ளதை யில்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றைப் பிறிதொன்ருகவும் காட்டும் கடவுளின் ஓர் அபூர்வ ஆற்றல், மனம் அதன் வசமானபோது, பொருள்களின் நிலையை உள்ளது உள்ளவாறு அறியும் தத்துவ உணர்ச்சி பிறப்பதில்லை. எனவே தானல்லுடலை யானென்றும் தன்னேடுரிமையல்லாத, ஈனமுறுபல் பொருள் அனைத்தும் என்ன தென்றும் உற நினைந்து, ஆன்மா அயரும். இந்தச் செருக் கற்ருல் அது வானேர்க்குயர்ந்த உலகம் புகும் என்ப. கண்ணுள் பாவை : 'கருமணியிற் பாவாய்' (குறள். 1123) ; நான்காமடிக்கு ; 'துறந்த வுயிர் வந்திடை தொடர்ந்ததுகொலென்கோ' (சுந்தர. 553) ; 'இறந்தவர் பிறந்த பயனெய்தினர் கொலென்கோ' (சுந்தர. 553).

பி - ம். 1. கன்றெனத்.

3. ஆய வளையார்க்கு, ஆயிழை யார்க்கு ; ஆடிய ; பாவை யொத்தான்.

4. நோயுற வுலந்த, நேர்ய்வுறுத் துலர்ந்த ; புகுந்தனையது. 331

4224. எளிவரு முயிர்கட் கெல்லா
மீன்றதா யெதிர்ந்த தொத்தான்
அளிவரு மனத்தோர்க் கெல்லா
மரும்பத வமுத மானுன்
ஒளிவறப் பிறந்த தொத்தா
னுலகினுக் கொண்க ணுர்க்குத்
தெளிவருங் களிப்புச் செய்யுந்
தேம்பிழித் தேற லொத்தான்.

எளிவரும் உயிர்கட்கு எல்லாம் - (தனது அரிய காட்சி கிடைக்கப்பெருமல்) எளிமையுற்ற உயிர்கள் அனைத்திற்கும், ஈன்றதாய் எதிர்ந்தது ஒத்தான் - (தம்மைப்) பெற்றதாய் எதிர்ப் பட்டதை ஒத்தான்; அளிவரும் மனத்தோர்க்கு எல்லாம் - (தன்னிடம்) அன்பு பூண்ட மனத்தார்க்கெல்லாம், அருபத அமுதம் ஆனன் -அரிய பக்குவமான தேவாமிர்தம் கிடைத்தாற் போன்ருன்; உலகினுக்கு - உலகினுக்கே (ஞானத்தால்) உயர்ந்த வரான முனிவர்களுக்கு, ஒளிவு அற பிறந்தது ஒத்தான் - (தனது உண்மைச் சொரூபம்) மறைதல் இன்றி நேராகக் காணப்பட்டதை, நிகர்த்து விளங்கினன், ஒள் கணர்க்கு - அழகிய விழிகளையுடைய மகளிர்க்கு, தெளிவு அரு களிப்பு செய்யும் - தெளிவில்லாத மயக் கத்தைச் செய்கின்ற, தேம்பிழி தேறல் ஒத்தான் - இனிய மதுவின் தெளிவை ஒத்திருந்தான்.

முன் செய்யுளில் தாயர்க்குக் கன்று போன்றிருந்தான் என்ற கருத்தையே சிறிது மாற்றி அநுவதித்து உயிர்கட்கெல்லாம் தாய் போன்றிருந்தான் என்ருர். அரும்பதம் : அருமை; பெறுதற் கருமை; பதம்: பக்குவம்; 'நல்ல பதமுற வெந்து' (பெரியபு. கண்ணப்ப: 148). 'கொழுவிய தசைகளெல்லாம் கோலினிற் றெரிந்து கோத்திங், கழலுறு பதத்திற் காய்ச்சி' பெரியபு: கண்ணப்ப: 125). 'ஒருபானைச் சோற்றுக் கொருசோறு பதம்' என்ற பழமொழியும் காண்க. ஒளிவு: மறைவு; உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே' (நிகண்டு) என்பவாதலின் இங்கு உயர்ந்த ஞானியரைக் குறித்தது, இடவாகு பெயர். தேம்பிழி: 'தேம்பிழி மகரயாழின், வண்டுகளினிதுபாட' (பால. நாட்டு: 4); தேறல்: 'தேறலின் றெளிவே' (திருவாச. கோயில்: 1). தெளிவு அரு எனப் பிரிக்க. களிப்பு: காமக் களிப்பு. ஒண்கணர்: 'சேலுண்ட வொண்கணரில்' (பால, நாட்டு: 13).

பி - ம். 2. அரும்பத வமுதமொத்தான்.
3. ஒளியவனுதித்த தொத்தா னுலகமழைந்தும்பர்க்கெல்லாம.
4. தெளிவரக், களிப்பு நல்கும். 332

4225. ஆவியங் கவன லான்மற் றின்மையா லனைய னீங்கக்
காவியங் கழனி நாடு நகரமுங் கவன்று வாழும்
மாவிய லுண்க ணரு மைந்தரும் வள்ள லெய்த
ஓவிய முயிர்பெற் றென்ன வோங்கின ருணர்வு பெற்ருர்.

அங்கு ஆவி - அந்நாட்டின் உயிர், அவன் அலான் - அந்த இராமபிரானேயன்றி, மற்று இன்மையால் - பிறிது இல்லாமையின், அனையன் - அந்த இராமபிரான், நீங்க - (வனம்படர்வதற்காகப்) பிரிய, காவி - நீல மலர்கள் நிறைந்த, அம் - அழகிய, கழனி நாடும் - வயல்களையுடைய கோசல நாட்டிலும், நகரமும் - அதன் தலைநகர மான அயோத்தியாபுரியிலும், கவன்று வாழும் - (உள்ளத்திற்) கவலைகொண்டு வாழ்கின்ற, மா இயல் - வடுவகிரின் தன்மை கொண்ட, உண் கணாரும் - மை யெழுதப்பெற்ற கண்களையுடைய வரான மகளிர்களும், மைந்தரும் - ஆடவர்களும், வள்ளல் எய்த - இராமபிரான் (காட்டிலிருந்து) மீண்ட அளவில், ஓவியம் உயிர் பெற்று என்ன - சித்திரப்பாவை உயிர் பெற்றாற் போன்று, ஓங்கி னர் உணர்வு பெற்றார் - (இழந்த) அறிவு மீண்டும் உயர்ந்து விளங்கப்பெற்றார்கள்.

ஆவியங் கவனலால்: 'நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே, மன்ன னுயிர்த்தே மலர் தலையுலகம்' (புறநா. 186)-ம், மன்னனுயிர்த் தென்ற கருத்து. 'உயிரை யாக்கும் நெல்லும் நீரும் உளவாவது மன்னன் முறைசெய்து காப்பின் என்றதாம்' என்ற அதன் உரையும் காண்க. 'மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர்க் கண்டாய், நல்லுயிர் ஞாலந்தன்னு ணம்பி யென ருன்' (சிவக. 2908); 'உலகிற் கோருயிர்ப் பெற்றியான பயாபதி' (சூளா. நாரர். 161); இவ்வாறு மன்னனை உலகின் இன்னுயிராக் குவர் கவிகள். மற்றும் இதனைச் சிறிது மாற்றிக் கம்ப நாடர் 'உயிரெலா முறைவதோருடம்பு மாயினான்' (பால. அரசியல். 10); என்று கூறிய நயமும் இங்குக் காணத்தகும். எவ்வகையினும் மன்னனும் குடிகளும் உடலுமுயிரும் போன்றவர் என்க. கழனி நாடு: 'காவிரி நாடன்ன கழனி நாடொரீ' (அயோத்தி. குகப். 1); மா இயல்: பிளந்த மாவடுவின் தன்மை 'வடுப்பிளவனைய கண்ணாள்' (சிவக. 1573). பெற்றது என்ன: என்பது பெற்ற தென்ன என நின்றது. 'வானுயர் நிலையை வள்ள லெய்தவர் பெறுவரென்றால்' (கிட்கிந்தா. 562); 'எள்ளரு முருவுள விலக் கணங்களும், வள்ளறன் னுரையொடு' (சுந்தர. 394).

பி - ம். 1. ஐயன், அனையோன்.
2. கலந்து.
3. ஒண்கணாரும்.
4. பெற்றாலே யொத்தனர்.

4226. சுண்ணமுஞ் சாந்து நெய்யுஞ் சுரிவளை முத்தும் பூவும்
எண்ணெயுங் கலின மாவி லாழியு மெண்ணில் யானை
வண்ணவார் மதமுந் நீரு மான்மதந் தழுவு மாதர்
கண்ணவாம் புனலு மோடிக் கடலையுங் கடந்த வன்றே.

சுண்ணமும் - நறுமணப் பொடிகளும், சாந்தும் - சந்தனமும், நெய்யும் - நெய்யும், சுரிவளை முத்தும் - சுழியை உடைய சங்குகள் ஈன்ற முத்துக்களும், பூவும் - மலர்களும, எண்ணெயும் - எண்ணெ யும், கலினம் மா விலாழியும் - கடிவாளம் பூண்ட குதிரையின் வாய் நுரையும், எண்ணில் யானை - கணக்கில்லாத யானைகளின், வண்ணம் - பலவகை நிறமுள்ள, வார் - பெருகுகிற, மதமுநீரும் - மூன்றுவகை மத ஜலமும், மான்மதம் தழுவும் - கத்தூரியணிந்த, மாதர் - மகளிருடைய, கண்ண ஆம் புனலும் - கண்களினின்று பெருகுகின்ற ஆனந்தக் கண்ணீரும் (ஒன்றுகூடி), ஓடி - விரைந்து, கடலையும் கடந்த - ஆழியையும் தாண்டிவிட்டன. அன்று ; ஏ - ஈற்றிசை.

இராமபிரான் வந்தனன் என்ற உவகையால் ஆடவரும் பெண் டிரும் அவன் மீதும் ஒருவர் ஒருவர் மீதும் வாரி வாரி இறைக்கின்ற நறுமணத்தூள், குதிரைகளின் வாய் நுரையுடனும் யானைகளின் மத நீருடனும், அவர்கள் விழிகளினின்று பொழிகின்ற உவகைக் கண்ணீருடனும் ஒன்ருக இயைந்து பெருகிக் கடலைக் கடந்தன என்க. சுண்ணம், வாசனைப்பொடி ; சுண்ண வெண் சந்தனக் சாந்தும் (தேவா. 949: 1); திருவாசகத்து வரும் பொற் சுண்ணமும் காண்க. சுரிவளை : வளைந்த சங்கு. கலினம் : குதிரைக் கடி வாளம். 'காற்றுறழ் கலினமான் தேர்' (யுத்த. 1111). விலாழி - குதிரை வாய் நுரை. 'கலினமா விலாழியும்' (சுந்தர. 135) ; 'பரிக்கலின வாய் விலாழி' (சுந்தர. 872) ; யானையின் உமிழ்நீர் என்றும் கூறுவர். 'வனயானை யங்கை விலாழி நீர்' (யுத்த. 2346) 'மான் மதம்', 'மருமலரும் மான் மதமும் துறந்த கூந்தல்' (வி.பா. நிரைமீட்சி. 139).

பி - ம். 2. மிக நல்; இள நல்

3. தழுவி.

4. கடலிடைக் கலந்த தன்றே, கடலிடை மடுத்ததன்றே.

## வசிட்டன் முதலியோர் விமானத்தின் மீது ஏறுதலும் இராமபிரான் அம்முனிவரை வணங்குதல்.

4227. அனைவரு மனைய ராகி யடைந்துழி யருளின் வேலை
தனையினி தளித்த தாயர் மூவருந் தம்பி மாரும்
புனையுநூன் முனிவன் தானும் பொன்னணி விமானத் [தேற
வனைகழற் குரிசின் முந்தி மாதவன் தாளில் வீழ்ந்தான்.

அனைவரும் - எல்லோரும், அனையர் ஆகி - அத்தன்மையுடையவராகி, அடைந்துழி - (விமானம்) நெருங்கியபொழுது, அருளின் வேலை தனை - கருணைக் கடலான இராமபிரானை, இனிது அளித்த - இனிமையாகப் பெற்றெடுத்த, மூவர் தாயரும் - மூன்று தாய்மார்களும், தம்பிமாரும் - தம்பிமாரும், புனையும் நூல் முனிவன் தானும் - தரித்த பூணூலையுடைய வசிஷ்ட முனிவனும், பொன் அணி விமானத்து ஏற - பொன்னால் அழகுறுத்தப்பெற்ற புட்பகத்தின் மீது ஏற, வனைகழல் - புனைந்த வீரகண்டையையுடைய, குரிசில் - இராமபிரான், முந்தி - முதலில், மாதவன் தாளில் வீழ்ந்தான் - (தனது குல குருவான) பெரிய தவ முனிவன் திருவடியில் வீழ்ந்து வணங்கினன்.

அருளின் வேலை - கருணைக்கடல். தாயர் மூவர் : கோசலை, சுமித்திரை, கைகேயி. குரிசில் - இராமபிரான். மாதவன் : வசிட்டன். 'கரிய மாலினும் கண்ணுதலானினும், உரிய தாமரை மேலுறை வானினும், பெரியரந்தணர்' (அயோத்தி. மந்தரை. 7); என்றபடி வசிட்டனை வணங்கினன். 'வனைகழல் வீரர்' (ஆரணிய. 587).

பி - ம். 1. இளையர். 335

## வசிட்டன் இராமஇலக்குவர்க்கு ஆசி கூறல்

4228. எடுத்தனன் முனிவன் மற்றவ் விராமனை யாசி கூறி
அடுத்துள துன்ப நீங்க வணைத்தணைத் தன்பு கூர்ந்து
விடுத்துழி யிளைய வீரன் வேதியன் தாளில் வீழ
வடித்தநூன் முனியு மேந்தி வாழ்த்தின னாசி கூறி.

முனிவன் - வசிட்டன், (வீழ்ந்து வணங்கிய) அவ் இராமனை - அந்த இராமபிரானை, எடுத்தனன் - (கரங்களால்) தூக்கியெடுத்து, ஆசி கூறி - ஆசீர்வதித்து, அடுத்து உள துன்பம் நீங்க - இனி அடுத்து நிகழும் பிறவித் துன்பம் முதலான துன்பங்கள் அகலும் படி, அன்பு கூர்ந்து - அன்பு மிகுந்து, அணைத்து அணைத்து - பன் முறையும் தழுவி, விடுத்துழி - விட்ட பின்பு, இளைய வீரன் - இலக்குவன், வேதியன் தாளில் - வசிட்ட முனிவனுடைய திருவடியில், வீழ - வீழ்ந்து வணங்க, வடித்த நூல் முனியும் - நன்கு தேர்ந்துணர்ந்த சாத்திரங்களையுடைய வசிட்டனும், ஏந்தி - தூக்கி எடுத்து, ஆசிகூறி வாழ்த்தினான் - ஆசிகள் கூறி வாழ்த்தினன். மற்று: அசை.

அணைத்தணைத்து - பேரார்வம் குறித்த அடுக்கு; 'நோக்கிய கண்ணிமையாமல் நோக்கி நோக்கி, நுண்ணிய மென் கலவியிலே நொந்து நொந்து, தேக்கியசெங் கனியிதழா ரமுதுண்டுண்டு, சேர்த்தியகை நெகிழாமற் சேர்ந்து சேர்ந்து' (வி. பா. அருச். தீர்த்த. 42); என்ற இடத்துப்போல. வடித்த நூல்: 'வண்டு மொய்த் தரற்றும்பிண்டி வாமனர் வடித்த நுண்ணூல்' (சீவக. 271); இளைய வீரன்: 'வில்லார் தோளிளைய வீர' (கிட்கிந்நா. 61); அடுத்துள துன்பம் ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்விகம் என்பனவுமாம்.

பி - ம். 2. அடுத்தன.
4. முனியேல்.

338

### இராமபிரான் தாயரை வணங்கல்

4229. கைகயன் தனயை முந்தக்
காலுறப் பணிந்து மற்றை
மொய்குழ லிருவர் தாளு
முறைமையின் வணங்குஞ் செங்கண்
ஐயனை யவர்கள் தாமு
மன்புறத் தழுவித் தத்தம்
செய்யதா மரைக்க ணீரால்
மஞ்சனத் தொழிலுஞ் செய்தார்.

கைகயன் தனயை - கேகய நாட்டு மன்னன் மகளான கைகேயியை, முந்த - முற்பட, கால் உற பணிந்து - தன் சிரம் அவள் காலிற் படுமாறு, வீழ்ந்து வணங்கி, மற்றை - பின்னர், மொய் குழல் இருவர் தாளும் - அடர்ந்த கூந்தலை உடையவரான கோசலை சுமித்திரை என்ற இரு தாய்மார்களின் பாதங்களையும், முறைமையின் வணங்கும் - கிரமப்படி வணங்குகின்ற, செ கண் - சிவந்த கண்களையுடைய, ஐயனை - இராமபிரானை, அவர்கள் தாமும் - அந்தத் தாய்மாரும், அன்பு உற தழுவி - அன்பு பொருந்த அணைத்து, தம்தம - தங்கள் தங்களுடைய, செய்ய - சிவந்த, தாமரைகண் நீரால் - தாமரை போன்ற விழிகளினின்று பெருகிய நீரால், மஞ்சனம் தொழிலும் செய்தார் - நீராட்டும் தொழிலையும் செய்தார்கள்.

கைகயன் தனயை: 'தவ்வை யாமெனக் கிடந்தனள் கைகயன் தனயை' (அயோத்தி மந்தரை. 88); இங்குக் கூறப்படும் இராமபிரானுடைய அரிய செயல் ஊன்றிக் கவனிக்கத் தக்கது. தன்னைக் காட்டிற்கனுப்பி அரசாள முடியாத வண்ணம் செய்தவள் என்று அவள்மீது எவ்வகை வெறுப்பும் காட்டவில்லை என்பது அவனுடைய பெருந்தன்மையைக் காட்டுகின்றது மழைக் கண்ணீரால் மஞ்சனத் தொழில் செய்தல். 'ஆங்குயர் மழைக்க ணீரா லாயிரம் கலசமாட்டி' (சுந்தர. 1287); மஞ்சனம் - திரு மஞ்சனம். 'வானவர் மகளிராட்ட மஞ்சனமாடுவாரை' (சுந்தர. 199).

பி - ம். 1. தனயன்; வணங்க.

2. முறைமையிற் பணிந்த.

3. அணைத்தனர் வழுத்தியன்பால். 337

## சீதையும் இலக்குவனும் வசிட்டனையும் கைகேயி முதலியோரையும் வணங்குதல்.

4230. அன்னமு முன்னர்ச் சொன்ன
முறைமையி னடியில் வீழ்ந்தாள்
தன்னிக ரிலாத வென்றித்
தம்பியுந் தாயர் தங்கள்

பொன்னடித் தலத்தில் வீழத்
தாயரும் பொருந்தப் புல்லி
மன்னவற் கிளவ னீயே
வாழியென் றாசி சொன்னார்.

அன்னமும் - பிராட்டியும், முன்னர் சொன்ன முறைமையின் - கீழ்க் கூறிய முறைமைப்படியே, (முனிவன் கைகேயி மாமிமார் என்ற இவர்களுடைய) அடியில் வீழ்ந்தாள் - பாதங்களில் வீழ்ந்து வணங்கினாள்; தன் நிகர் இலாத வென்றி தம்பியும் - தனக்கு எவரையும் ஒப்பாகப் பெறாத இலக்குவனும், தாயர் தங்கள் - தாயர் மூவருடைய, பொன் அடி தலத்தில் வீழ - அழகிய திருவடிகளில் வீழ்ந்து வணங்க, தாயரும் பொருந்த புல்லி - தாய்மார்களும் நன்கு சேர்த்து அணைத்து, 'மன்னவற்கு இளவல் நீயே - அரசனாகிய இராமபிரானுக்குத் தம்பியென்ற தன்மையில் உண்மையாக ஒழுகியவன் நீயொருவனே, வாழி - வாழ்வாயாக', என்று ஆசி சொன்னார் - ஆசீர்வாதம் கூறினர்.

அன்னம் - உவமவாகு பெயர். 'அண்ணல் வீரனைத் தம்பியும் அன்னமும்' (ஆரணிய. 549). தம்பி - இலக்குவன்; மன்னவற் கிளவல் நீயே: 'வரதனு மிளவலுமென மருவினரே' (பால. திருவவ. 131) என்றும், 'தொழு குலமாம் இராமன் பின்பு, பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான் தனைப்பயந்த' (அயோத்தி. குகப். 68) என்றும் வருவன காண்க. இளவல் - அல் பெயர் விகுதி. 'ஒருவனே விவற்கிவ்வுருற வென்றார் சிலர்' (அயோத்தி. நகர்நீ. 192) என்றதும் காணலாம்.

பி. ம். 1. விழத்.
3. தலத்து விழ்ந்தான் விழ்ந்லும்.
4. அரசி நீயே வாழி, அரசனுகி வாழ்தி. 338

பரதன் வணங்க அவனை இராமபிரான் தழுவுதல்.

4231. சேவடி யிரண்டு மன்பு மடியுறை யாகச் சேர்த்திப்
பூவடி பணிந்து வீழ்ந்த பரதனைப் பொருமி விம்மி
நாவிடை யுரைப்ப தொன்று முணர்ந்தில னின்ற நம்பி
ஆவியு முடலு மொன்றத் தழுவின னழுது சோர்வான்.

சேவடி இரண்டும் - இராமபிரானுடைய இரண்டு திருவடி நிலைகளையும், அன்பு - பத்தியையும், அடி உறை ஆக சேர்த்தி - பாதகாணிக்கையாக, (அப் பெருமானுக்குச்) சமர்ப்பித்து (அவனுடைய), பூ அடிபணிந்து வீழ்ந்த - தாமரை மலர்போன்ற திருவடிகளில் விழ்ந்து வணங்கிய, பரதனை - பரதாழ்வானைப் பார்த்து, பொருமி விம்மி - விம்மிப்புலம்பி(த் தனது), நா இடை உரைப்பது ஒன்றும் உணர்ந்திலன் - நாவினால் பேச ஒன்றும் அறியாதவனாய், நின்ற - நின்ற, நம்பி இராமபிரான, ஆவியும் உடலும் ஒன்ற - உயிரும் உடம்பும் ஒன்றுபட, தழுவினன் - அணைத்துக் கொண்டு, அழுது சோர்வான் - அழுது தளர்ச்சியுற்றான்.

நாவிடை - நாவினால்; உருபு மயக்கம். உணர்ச்சி மிகுதியால் பேசுதற்கு நா எழவில்லை, எனவே ஏனையோரை வாழ்த்தியது போன்று பரதனை வாழ்த்திலன் என்க. 'இனைய தின்ன தியம்புவ தென்பதோர், நினைவிலாது நெடிதிருந்தாள்' (யுந்த. 3916). சேவடியும் அன்பும்: உடனவிற்சியணி; (ஒப்பு): 'நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேற' (பெரியபு. கண்ணப்ப. 103); 'உரிய வன்பினையுங் கூட்டி யொருபிடி யவல் தின்றானே' (குசேலோ. 2: 283).

பி - ம். 1. அன்பின்.
2. பணிந்து நின்ற.
3. பெயர்ப்பது.
4. தழுவினனன்புகூர. 339

## இராமபிரான் பரதன்மீது கொண்ட அன்பின் செயல்

4232. தழுவின னின்ற காலைத் ததிவீ ழருவி காலும்
விழுமலர்க் கண்ணீர் மூரி வெள்ளத்தான் முருகின் செவ்வி
வழுவுறப் பின்னி மூசு மாசுண்ட சடையின் மாலை
கழுவின னுச்சி மோந்து கன்றுகாண் கறவை யன்னான்.

தழுவினன் நின்ற காலை - (இங்ஙனம் இராமபிரான் தம்பியைத் தழுவி நின்ற பொழுது, ததி வீழ் அருவி காலும் - ததும்பிப் பெருகும் நீர் அருவியை வெளி விடுகின்ற, விழுமலர் கண்ணீர் மூரி வெள்ளத்தால் - சிறந்த தாமரை மலர் போன்ற விழிகளின்

பெரிய வெள்ளத்தால், முருகின் செவ்வி - இளமையின் எழில், வழு உற-கெடும்படி, பின்னி மூசு - முறுக்கேறி நெருங்கிய, மாசு உண்ட சடையின் மாலை - அழுக்கடைந்த (பரதனது) சடைக் கற்றையை, கழுவினன் - கழுவினவனாகி, உச்சி மோந்து - உச்சி மோந்து, கன்று காண் கறவை அன்னான் - கன்றைக் கண்ணுற்ற தாய்ப் பசுவை ஒத்து விளங்கினான்.

தத்துதல் - ததும்பி வழிதல்; 'தத்திக் கரை புரளும் பரமானந்த சாகரத்தே' (கந்தரலங். 47); விழுமலர் - சிறந்த தாமரை மலர். விழுமம் - சீர்மை. மூரி வெள்ளம்-பெருக்கு. முருகு-இளமை. மூசுதல் - மொய்த்தல்; 'மூசு வண்டறை பொய்கையும் போன்றதே' (தேவா. 1231, 3); 'மூசுகின்ற வாசவண்டு மோகன முகாரி ராகம் பாடுமே' (காவடிச் சிந்து); மாசுண்ட: 'வற்கலையினுடை யானை மாசடைந்த மெய்யானை' அயோத்தி. குகப். 29); 'மாசுண்ட மணியனாள்' (சுந்தர. 597); மாலை - வரிசை. உச்சி மோத்தல் வாத்சல்யத்தால் தாய்ப் பசு கன்றிடம் செய்வது. 'புதல்வன்றனை யுச்சிமோந்து' (கோயிற், பு. வியாக்கிர. 2); கறவை-கறக்கும் பசு; 'கறவையும் கன்றும் ஒப்பார் தமக்கிடர் காண்கி லென்றான்' (யுத்த. 3515 ); 'கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே' (திருவாச. திருப்புலம்பல். 3); 'கறவைகள் பின் சென்று' (திருப்பாவை. 28).

பி - ம். 1. நின்ற பின்னர்; சாலும்.
2. முழுகண்ணன்.
3. மூசி, பின்னி; கற்றை.
4. களிறே யன்னான். 340

## இலக்குவன் பரதனை வணங்குதல்

4233. அனையதோர் காலந் தம்பொற் சடைமுடி யடிய தாகக்
கனைகழ லமரர் கோமாற் கட்டவற் படுத்த காலை
துனைபரி கரிதே ரூர்தி யென்றிவை பிறவுந் தோலின்
வினையுறு செருப்புக் கீந்தான் விரைமலர்த் தாளின்
[வீழ்ந்தான்.

அனையது ஓர் காலத்து - அப்போது, கனை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலை யுடைய, அமரர் கோமான் கட்டவன் - தேவேந்திரனை (வென்று) வலியை ஒழித்தவனான இந்திரசித்தினை, படுத்த காளை - கொன்றவனும் இடபம் போன்றவனுமான இலக்குவன், துனை - விரைந்து செல்கின்ற, பரி - குதிரை, கரி - யானை, ஊர்தி தேர் - வாகனமாகிய தேர், என்ற இவை பிறவும் - என்ற இவைகளையும் பிறவற்றையும், தோலின் வினை உறு - தோலினால் ஆக்கப்பட்ட (இராமபிரானுடைய) செருப்புக்கு ஈந்தான் - பாதுகைகட்கே உரியனவாகச் செய்த பரதனுடைய, விரை மலர் - நறுமணமிக்க தாமரை மலர் போன்ற, அம்பொன் சடை முடி - அழகிய பொன்னிற மான (தனது) சடையையுடைய முடி, அடியது ஆக - கீழே பொருந்த தாளின் வீழ்ந்தான் - திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

இலக்குவனும் சடை புனைந்தது முன்னரும் கூறப்பட்டது. கட்ட - அழித்த; 'களைகட்டதனொடு நேர்' (குறள். 550); பிறவுந் தோலின் செருப்புக் கீந்தான்: 'நந்தியம்பதியிடை நாதன் பாதுகம் செந்தனிக் கோன்முறை செலுத்த' (அயோத்தி. கிளை கண்டு. 140); செருப்பு: 'மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணி யழுத்திச், செய்ததெனினும் செருப்புத்தன் காற்கேயாம்' (நாலடி. 347); 'செருப்படிப் பரல்' என்ற வழக்கும் காண்க.

பி - ம். 1. படியதாகக்.

2. அமரர் கோனைக் கட்டறப்பிணித்த, அரக்கரச்சம் கடியவிற் பிடித்த, அரக்கர்கோனைக் கட்டறப் பிணித்த, கட்டறத் தொலைத்த ; வீரன்.

3. என்றிவை போலக்.

4. வினையறு ; செருப்பு நீத்த, செருப்புக்கேய்ந்த. 341

இங்கு ஓர் அதிகப் பாடல் :—

நீடுவேலேற்றவர்க் கிளைய நின்மலன்
வாடிய மனத்தனாய் வசிட்டன் முன்வரச்
சூடிய கடிமலர் தூவி யார்த்தனன்
ஓடவிழ் தாமரை யிறைஞ்சி யெய்தினான்.

## பரதன் இலக்குவனைத் தழுவுதலும், இவர்களைப்பற்றி உலகத்தவர் வருந்துதலும்.

4234. ஊடுறு கமலக் கண்ணீர்
திசைதொறுஞ் சிவிறி யோடத்
தாடொடு தடக்கை யாரத்
தழுவினன் தனிமை நீங்கிக்
காடுறைந் துலைந்த மெய்யோ
கையறு கவலை கூர
நாடுறைந் துலைந்த மெய்யோ
நைந்ததென் றுலக நைய.

உலகம் - (அப்பொழுது கண்ணுற்ற) உலகத்தார், (இவ்விருவருடைய உடல்களுள்), தனிமை நீங்கி - தனிமை நீங்கப் பெறுமல், (இராமபிரானை விட்டுக் கணமும் பிரியாமல்) காடு உறைந்து - (அவனுடன்) காட்டில் வசித்து, உலைந்த மெய்யோ - வருந்திய (இளைய பெருமாளின்) உடலோ, (தனிமைப்பட்டு) கை அறு கவலை கூர - செயலறு தற்குக் காரணமான வருத்தம் மிக, நாடு உறைந்து உலைந்த மெய்யோ - நாட்டில் வசித்து வருந்திய (பரதனுடைய) உடலோ, நைந்தது - (எது மிகவும்) மெலிவுற்றது, என்று - என்று இரங்கி, நைய - வருத்தமுற, கமலம் கண் ஊடு உறு கண்ணீர் - தாமரை மலர்போன்ற கண்களினின்று மிகுதியாகப் பெருகும் கண்ணீர், திசை தொறும் சிவிறி ஓட - திக்குகளில் எல்லாம் புரந்து ஓட, (பரதன் தனது), தாள் தொடு தடகை ஆர தழுவினன் - முழந்தாளைத் தொடும்படியான நீண்ட கைகளால் (இலக்குவனை) மனமாரத் தழுவினன்.

தாடொடு தடக்கை - வடமொழியில் 'ஆஜாநுபாகு' என்ப; 'தாடுறு தடக்கை வேறுவமை சாலுமோ' (சுந்தர. 536); கைகள் முழந்தாளைத் தொடுமாறு நீண்டிருப்பது உத்தம ஆடவரிலக்கணம் என்ப (ஒப்பு): 'தாழ்தரு தடக்கை' (பெருங். 1 ; 56 : 61); 'தாழ்ந்த கைகளும்' (பால. மிதிலைப். 56): கையறுதல்: 'காணு உயிர்க்கும் கையற்றேங்கி' (மணி. 3, 89); 'கையறுகவலைகூற நாடுறைந் துலைந்தமெய்' என்ற தொடரால் பரதன் உடலே மிகவும் நைந்தது என்க. இலக்குவன் உடல் நைந்தது சக்கரவர்த்தித் திருமகன் காட்டில் உழன்ற வருத்தம் கண்டு எனினும், அண்ணன்

சேவை அவனுக்கிருந்தது; பரதனுக்கு அவன் காட்சி அறவே இல்லாமையால் அவன் உடல் மிக மெலிந்தது என்க.

பி - ம். 1. சேடுறு; சிந்தி
2. தாடுறு; ஆட; நீக்கி.
3. உலர்ந்த; கையுறு; ஊர.
4. நைவ. 342

## இராமன் இலக்குவன் பிராட்டி இவர்களைச் சத்துருக்கினன் வணங்குதல்

4235. மூவர்க்கு மிளைய வள்ளல்
முடிமிசை முகிழ்த்த கையன்
தேவர்க்குந் தேவன் தாளுஞ்
செறிகழ லிளவல் தாளும்
பூவர்க்கம் பொழிந்து வீழ்ந்தா
னெடுத்தனர் பொருந்தப் புல்லி
வாவிக்கு ளன்ன மன்னாள்
மலரடித் தலத்து வீழ்ந்தான்.

மூவர்க்கும் இளைய வள்ளல் - முதல் மூவர்க்கும் தம்பியாகிய சத்துருக்கினன், முடி மிசை முகிழ்த்த கையன் - தலைமிசைக் குவித்த கரங்களை யுடையவனாய், தேவர்க்கும் தேவன் - தேவர்கள் தேவனான இராமபிரானுடைய, தாளும் - திருவடிகளிலும், செறி கழல் - புனைந்த கழலையுடைய, இளவல் தாளும் - இலக்குவனுடைய பாதங்களிலும், பூ வர்க்கம் பொழிந்து - மலர் வகைகளைச் சொரிந்து, வீழ்ந்தான் - வீழ்ந்து பணிந்தான்; (அவனை அவ்விருவரும்) எடுத்தனர் பொருந்த புல்லி - (தூக்கி எடுத்து இறுகத் தழுவ, (அவன்) வாவிக்குள் அன்னம் அன்னாள் - தடாகத்தில் வதிகின்ற அன்னப் புள் போன்ற பிராட்டியின், மலர் அடிதலத்து வீழ்ந்தான் - தாமரை மலரை நிகர்த்த பாதங்களில் வீழ்ந்து வணங்கினான்.

செறிகழல்: 'செறிகழ லரக்கர்தமரசு' (யுத்த. 396); வாவிக்குள் அன்னம்: 'தடத்திடை யிருந்ததோர் அன்னத் தன்மையாள்' (சுந்தர. 393).

பி - ம். 4. அடியிணை. 343

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை,

## இராமபிரான் தன்னுடன் வந்தவர்களைப் பரத சத்துருக்கினர்க்குத் தெரிவிக்க அனைவரும் அவ்விருவரையும் வணங்கல்

4236. பின்னிணைக் குரிசில் தன்னைப்
பெருங்கையால் வாங்கி வீங்கும்
தன்னிணைத் தோள்க ளாரத்
தழுவியத் தம்பி மாருக்
கின்னுயிர்த் துணைவர் தம்மைக்
காட்டின னிருவர் தாளும்
மன்னுயிர்க் குவமை கூர
வந்தவர் வணக்கஞ் செய்தார்.

*பின் இணை குரிசில் தன்னை* - (இராமபிரான் தனது) தம்பியும் பரதனுடன் இணை பிரியாது வாழ்பவனுமான சத்துருக்கினனை, *பெரு கையால் வாங்கி* - பெரிய கைகளால் எடுத்து, *தன்* - தன்னுடைய, *வீங்கும் இணை தோள்கள் ஆர தழுவி* - பருத்து வளர்ந்த இரண்டு தோள்களால் இறுக அணைத்துப், (பின்பு) *அ தம்பிமாருக்கு*-அவ்விரண்டு தம்பியர்க்கும், *இன் உயிர் துணைவர் தம்மை*-(தனது) இனிய உயிர் போன்ற (சுக்கிரீவனாதி) நண்பர்களை, *காட்டினன்*-அறிமுகம் செய்வித்தான; *மன் உயிர்க்கு உவமை கூர*-(தனது) நிலை பெற்ற உயிர்க்கு ஒப்பாகுமாறு, *வந்தவர்* - வந்தவர்கள் ஆன அவர்கள், *இருவர் தாளும் வணக்கம் செய்தார்* - (பரத சத்துருக்கினர் என்ற) இருவருடைய பாதங்களையும் வணங்கினார்கள்.

இணைக்குரிசில் - பரதனுமிளவலு மொருநொடி பகிராது. 'பரதனு மிளவலுமென மருவினரே' (பால. திருவவ: 131); இன்னுயிர்த் துணைவர் - சுக்கிரீவன் முதலியோர். 'ஆவி யொன்றாக நட்டான்' பின் - பின் தோன்றியவன் தம்பி.

பா - ம். 1. பின்னிணை ; குரிசில் மின்னை ; வணங்கி வாங்கும், வணங்கி நீங்கத், வாங்கி நீங்கத்.
2. தழுவிய தம்பிமாருக்கு.
4. உண்மை கூர ; மைந்தரும்.

344

அங்கு அதிகப் பாடல் :—

ஆயிடைக் குகனும் வந்தாங் காண்டவ னடியில் வீழ
நாயக னுவந்து புல்லி நண்ணி யென் பின்புவந்த
தூயனே கிளேயி னேடுஞ் சுகமிருந் தனேயோ வென்று
வாயிடை மொழிந்தான் மற்றை மறைகளுங் காணு
[வண்ணல்.

இதன் பின் 'அசனி' என்ற செய்யுள் உள்ளது. 'குரக் கினத்து' முதலான செய்யுட்கள் இல்லை.

## பரதன் அவர்கட்கு முகமன் கூறல்

4237. குரக்கினத் தரசைச் சேயைக்
குமுதனேச் சாம்பன் தன்னேச்
செருக்கிளர் நீலன் தன்னே
மற்றுமத் திறத்தி னேரை
அரக்கருக் கரசை வெவ்வே
றடைவினின் முதன்மை கூறி
மருக்கமழ் தொடையன் மாலை
மார்பினன் பரத னின்றுன்.

மருகமழ் - நறுமணம் கமழ்வதும், தொடையல் - தொடுக்கப் பெற்றதுமான, மாலை மார்பினன் - பூமாலை யணிந்த மார்பினே யுடையவன் ஆகிய பரதன், குரங்கு இனத்து அரசை - குரங்கினங் கட்கு அரசனுன சுக்கிரீவனேயும், சேயை-அவன் மகனுன அங்க தனேயும், குமுதனே - குமுதனேயும், சாம்பன் தன்னே - ஜாம்ப வானேயும், செரு கிளர் - போர் புரிவதில் மன எழுச்சிகொண்ட, நீலன் தன்னே - நீலனேயும், மற்றும் - பின்னும், அ திறத் தினேரை - அத்தன்மையரான மற்றவர்களேயும், அரக்கருக்கு அரசை - இராக்கதர்கட்கு மன்னனுகிய வீடணனேயும் (பார்த்து), வெறுவேறு - தனித் தனியாகவும், அடைவினில் - முறையாகவும், முதன்மை - சிறந்த உபசார மொழிகளே, கூறி நின்றுன் - சொல்லி நின்றுன்.

பி - ம். 1. திறத்துளோரை.
3. மேன்மை கூறி.
4. மருக்நறு ; தொடையல் மார்பன் பரதற்கு மகிழச் சொன்னுன். 345

## சுமந்திரன் மந்திரிகள் முதலியோருடன் இராமபிரானைக் காணவருதல்

4238. மந்திரச் சுற்றத் துள்ளார்
தம்மொடும் வயங்கு தானைத்
தந்திரத் தலைவ ரோடுந்
தமரொடுந் தரணி யாளும்
சிந்துரக் களிறு போல்வா
ரெவரொடுஞ் சேனை யோடும்
சுந்தரத் தடந்தோள் வெற்றிச்
சுமந்திரன் தோன்றி னானால்.

சுந்தரம் தடதோள் வெற்றி சுமந்திரன் - அழகிய பெரிய தோள்களையும் வெற்றியையும் உடைய சுமந்திரன் என்னும் முதல் அமைச்சன் ஆனவன், மந்திரம் சுற்றத்து உள்ளார் தம்மொடும் - மந்திராலோசனைக்குரிய அரசியற் 'சுற்றத்தார்களான மந்திரிமாரோடும், வயங்கு தானை - விளங்குகின்ற சேனைகளையுடைய, தந்திரர் தலைவரோடும் - சேனாதிபதிகளுடனும், தமரொடும் - (மற்றும்) தன்னைச் சார்ந்த தலைவர்களோடும், தரணி ஆளும் - பூமியை ஆட்சி புரிகின்றவரும்; சிந்துரம் களிறு போல்வார் எவரொடும் - சிந்துர திலகமணிந்த ஆண் யானையை நிகர்த்தவர்களுமாகிய அரச குலத்தார் அனைவருடனும், சேனையோடும் - சேனையோடும், (இராம பிரானைக் காண), தோன்றினன் - வந்தான். ஆல் : அசை.

மந்திரச் சுற்றம் : 'மந்திர சுற்றத்தாரும் வானுதற் சுற்றத்தாரும்' (யுத்த : 1215); தந்திரத் தலைவர் - சேனைத் தலைவர்கள் ; 'தந்திரக் கடலை நீந்தி' (யுத்த. 1333); சிந்துரம் - ஓர் வகைச் சிகப்புப் பொடி. சிந்துரம் - குங்குமமுமாம்; 'வயக் களிற்றின் சிந்துரத்தை மாறுகொள்ள' (சுந்தர 312).

பி. ம். 1. வானினீண்ட.
2. தந்திரச் சுற்றத்துள்ளார் ; பலரொடுந்.
3. போல்வார்த் திரளொடும்.
4. தொழுது வந்தான்.

## சுமந்திரன் வணங்க, இராமனும் இலக்குவனும் அவனைத் தழுவுதல்

4239. அழுகையு முவகை தானுந்
தனித்தனி யமர்செய் தேறத்
தொழுதன னெழுந்து விம்மிச்
சுமந்திர னிற்ற லோடும்
தழுவின னிராமன் மற்றைத்
தம்பியு மனைய நீரான்
வழுவினி யுளதன் றிந்த
மாநிலக் கிழத்திக் கென்றான்.

அழுகையும் உவகை தானும் தனி தனி அமர் செய்து ஏற - அழுகையும் மகிழ்ச்சியும் (தம்மில்) ஒன்றுடன் ஒன்று போரிட்டு (ஒன்றின் ஒன்று) முற்பட்டு வர, தொழுதனன் - (இராமபிரானை) வணங்கி, எழுந்து - எழுந்து, விம்மி - தேம்பி, சுமந்திரன் நிற்றலோடும் - சுமந்திரன் நின்ற அளவில், இராமன் தழுவினன் - இராமபிரான் (அந்த அமைச்சனை) அணைத்தான்; மற்றை தம்பியும் - மற்றொருவனாகிய இலக்குவனும், அனைய நீரான் - அவன் செய்த தன்மையை மேற்கொண்டு (சுமந்திரனைத்) தழுவினான்; (அவ்வாறு இருவராலும் தழுவப் பெற்றவனான அச் சுமந்திரன், இராமபிரானை நோக்கி) 'இந்த மாநிலம் கிழத்திக்கு இனி வழு உளது அன்று - இனி இந்தப் பூமிம் பிராட்டிக்குத் துன்பம் இல்லையாகும்', என்றான் - என்று கூறினான்.

இரண்டு வலிய உணர்ச்சிகள் தம்முடன் போட்டியிட்டு ஒன்றை யொன்று முற்பட முனைந்தது என்பது காட்ட, 'அழுகையும் உவகை தானும்' எனப்பட்டது. (ஒப்பு): 'முனிவனு முவகையும் தானு மூந்துவான்' (அயோத்தி. மந்தரை: 4); 'புந்தியோங்கு முவகைப் பொருமலோ, உந்தியோங்கு மொளிவளைத் தோள்களோ, சிந்தியோடு கலையுடைத் தேர்கொலோ, முந்தி யோங்கின யாவை முலைகொலோ' (யுத்த. 3914)ம் காண்க. காட்டில் ஏழிரண்டாண்டுகள் வதிந்து வருந்தியது பற்றி அவலமும், இப்பொழுது ஊர்க்கு வந்தமை பற்றி உவகையும் எழுந்தன என்க. மாநிலக் கிழத்திக்குவழுவினியிலை யென்றது; அரக்கராதி கொடியவர்கள் பூண்டு, அறவே ஒழிக்கப் பெற்றதனால் என்க. 347

இங்கு அதிகப் பாடல் :—

வேறுவே றுள்ள சுற்றத் தவர்களும் வேந்த ராதி
கூறிய குழுவி னோடுங் குழுமியங் கிராமன் பாதம்
ஊறிய வுவகை தூண்டத் தொழுதன ருவந்த பின்பு
தேறிய கமலக் கண்ணன் திருநகர்க் கெழுத லுற்றான்.

## சேனைகள் இராமன் கட்டளைப்படி புட்பக விமானத்தின்மீது ஏறி இலக்குவனை வணங்குதல்

4240. ஏறுக சேனை யெல்லாம் விமானமீ தென்று தன்போல்
மாறிலா வீரன் கூற வந்துள வனீக வெள்ளம்
ஊறிரும் பரவை வானத் தெழிலியு ளொடுங்கு மாபோல்
ஏறிமற் றிளைய வீர னிணையடி தொழுத தன்றே.

(எல்லோரும் இறைஞ்சி நிற்ப), தன்போல் மாறு இலா வீரன் - தனக்கு நிகராக எவருமில்லாத வீரனான இராமபிரான், 'சேனை எல்லாம் விமானமீது ஏறுக - சேனைகள் எல்லாம் புட்பகத்தின் மீது ஏறக் கடவன', என்று கூற - என்று கட்டளையிட, வந்து உள அனீகம் வெள்ளம் - (அங்குச் சுமந்திரனுடன்) வந்திருந்த சேனைத் தொகுதி, ஊறு இரு பரவை - சுரக்கும் தன்மையுள்ள பெரிய கடல், வானத்து - ஆகாயத்தின்கண் உள்ள, எழிலியுள் ஒடுங்குமா போல் - மேகத்திடை அடங்குமாறு போன்று, ஏறி - விமானத்தின் மீது ஏறி, (பின்னர்) இளைய வீரன் இணை அடி தொழுதது - இலக்குவனுடைய உபய பாதங்களை வணங்கிற்று. அன்று, ஏ : அசை.

மாறிலா வீரன்: 'மாறிலா வள்ளி வாழ்க' (கந்த. வள்ளி: 216); அனீகம் - சேனை ; வடசொல். உவமையணி. சேனை - கடல். ஆகாயத்தில் உள்ள மேகம் - விமானம். சேனையின் ஆரவாரம் - கடல் ஒலி. மேகத்தின் செலவு - விமானத்தின் செலவு என்க.

பி - ம். 1. செம்பொன்.
4. காத்து நின்ற.

## தேவர்கள் புட்பக விமானத்தைக் கொண்டாடிப் பூ மழை பொழிதல்

4241. உரைசெயி னுலக முண்டான்
மணியணி யுதர மொவ்வா
கரைசெய லரிய வேதக்
குறுமுனி கையு மொவ்வா
விரைசெறி யலங்கன் மாலைப்
புட்பக விமான மென்றென்
றுரைசெய்து வானு ளோர்க
ளொண்மலர் தூவி யார்த்தார்.

வானுளோர்கள் - ஆகாயத்தில் உள்ள தேவர்கள், (புட்பகத்தைக் கண்ணுற்று), விரை செறி அலங்கல் மாலை - மனம் நிரம்பிய அசையும் தன்மையுள்ள மாலைகளைத் தொங்கும்படி கட்டிய, புட்பகம் விமானம் - இந்தப் புட்பகத்துக்கு, உரை செயின் - உவமை கூறப்புகின், உலகம் உண்டான் - உலகனைத்தும் உட்கொண்டருளிய திருமாலின், மணி அணி உதரம் ஒவ்வா - அழகிய பொருந்திய வயிறும் உவமையாக மாட்டாது; கரை செயல் அரிய வேதம் குறுமுனி கையும் ஒவ்வா - எல்லை காண்டற்கரிய வேதங்களை உணர்ந்தவனான குறுகிய படிவமுள்ள அகத்திய முனிவனுடைய கையும் உவமையாக மாட்டாது; என்று என்று உரை செய்து - என்று விடாமற் கூறி, ஒள் மலர் தூவி ஆர்த்தார் - ஒள்ளிய மலர்களை வாரி இறைத்து ஆர்ப்பரித்தார்கள்.

'மதுர விராமாயண கதை யுரைசெய்த வான்மிக பகவனும்' (சேக்கிழார் புரா. 91); கடல் முழுதும் தன் அகங் கையிற்கொண்டு பருகினவன் ஆதலின் அவன் கரத்தை உவமை கூறினர். விரைசெறி: 'விரைசெறி கமலத்தாள்' (யுத்த. 4281); ஒள் மலர் - பாரிசாதம் அரிசந்தனம் கற்பகம் முதலிய மலர்கள். திருமால் உதரமும் உவமையாகா தென்றது; எல்லா அண்டங்களையும் தன்னகத்தடக்கி நின்ற அவ்வுதரத்தினையுடைய திருமாலின் அமிசமான இராமபிரானையே அடக்கி நின்றமையின் என்க. இங்ஙனம் திருமால் உதரமே நிகராகாத போது, ஒரு கடலை

மட்டும் ஆசமனம் செய்த குறுமுனி கை எவ்வாறு உவமையாகக் கூடும் என வியந்தார் என்க.

பி - ம். 2. கரை செய.

3. மிதென்று ; ஒன்றென்று. 349

## புட்பக விமானத்தில் மங்கள வாத்தியங்கள் முழங்குதல்

4242. அசனியின் குழுவு மாழி
யேழுமொத் தார்த்த தென்ன
விசையுறு முரசும் வேதத்
தோதையும் விளிகொள் சங்கும்
இசையுறு குரலு மேத்தி
னரவமு மெழுந்து பொங்கித்
திசையுறச் சென்று வானோ
ரந்தரத் தொலியிற் றீர்ந்த.

விசை உறு முரசும் - விரைந்து பரவுகின்ற முரசங்களின் ஒலியும், வேதத்து ஓதையும் - வேதங்களின் ஓசையும், விளிகொள் சங்கும் - பேரிசைச்சல் செய்யும் சங்கமும், இசை உறு குரலும் - இசையுடன் இயைந்த கண்டத் தொனியும், ஏத்தின் அரவமும் - துதிக்கின்ற இனிய சத்தமும், அசனியின் குழுவும் - இடியின் தொகுதிகளும், ஏழு ஆழியும் - ஏழு கடல்களும், ஒத்து - ஒரு சேர, ஆர்த்தது என்ன - ஆரவாரித்தது என்னுமாறு, எழுந்து பொங்கி - மிக்குப் பரவி, திசை உற சென்று - திக்குகளில் பொருந்தும்படி போய், வானோர் - தேவர்கள், அந்தரத்து ஒலியில் - ஆகாயத்தில் செய்யும் (இராமபிரானைப் பற்றிய வாழ்த்துக்களின்), தீர்ந்த - அடங்கின.

சத்தத்தின் பிரதி பதங்களான ஓதை, விளி, இசை, அரவம், ஒலி என்ற சொற்கள் வந்துள்ளமை காண்க, அந்தரத்து வானோர் ஒலியில் எனினுமாம். தீர்தல் - முடிவடைதல்.

பி - ம். 1. வேலை ; ஆர்ந்த, இழிந்தது ; என்னை.

2. விசியுறு ; வேதவோசையும் ; இளி கொள்சங்கின்.

3. ஏற்றின்.

4. வானோர் தோத்திரத் தொலியும். 350

இங்கு அதிகப் பாடல்கள்:—

1 நம்பியும் பரத னோடு நந்தியம் பதியை நண்ணி
வெம்பிய லெரியின பாங்கர் விலக்குவ னென்று விம்மும்
கொம்பியல் மருங்குல் தெய்வக் கோசலை குளிர் பொற் பாதம்
தம்பிய ரோடுந் தாழ்ந்தான் தாமரைக் கணணீர் தாழ.

2 மூன்றென நின்ற தன்மைக் குணங்களி னுயர்ச்சிக் கெல்லாம்
சான்றென நின்ற மானச் சிறுவனைத் தலைப்பட் டாட்குத்
தோன்றிய வுவகைக் காங்கோ ரெல்லையுஞ் சொல்லற் பாற்றோ
ஈன்றபோ தொத்த தன்றே எதிர்ந்தபோ தொத்த தன்மை.

3 இணைமலர்த் தாளின் வீழ்ந்த விலக்குவன் றன்னை யேந்திப்
பணைமுலைப் பாலுங் கண்ணீர்த் தாரையும் பாய நின்றாள்
பிணையெனத் தகைய நோக்கிற் சீதையைப் பேடை யன்னத்
துணையினை யுலகிற் கற்பின் பெருங்கதித் துறையைக்
[கண்டாள்.

4. நான்முகன் றுதை தான்றன் மகனென்று நல்கி விம்மிப்
பான்முலை சோர நின்ற பல்பெருந் தவத்தி னாளைக்
கான்முதற் றொழுது தங்கள் கட்டி ரும்பாவம் விட்டார்
வான்முய லுருவத் தோடும் தோன்றிய வானோ ரெல்லாம்.

சில பிரதிகளில் இந் நான்கு பாடலுடனே நகர்புகும் படலம் முடிகின்றது. இவற்றில் எல்லாம் 351, 352 பாடல்கள் இல்லை.

விமானம் விண்ணில் எழுந்து செல்லுதல்

4243. அவ்வயின் விமானந் தாவி
யந்தரத் தயோத்தி நோக்கிச்
செவ்வையிற் படர லுற்ற
செகதல மடந்தை யோடும்
இவ்வுல கத்து ளோர்க
ளிந்திர ருலகு காண்பான்
கவ்வையி னேகு கின்ற
நீர்மையைக் கடுக்கு மன்றே

அவ்வயின்-அவ்விடத்தினின்று, (நிலத்திலிருந்து) விமானம்-புட்பகம், அந்தரத்து தாவி-விண்ணி லெழுந்து, அயோத்தி நோக்கி செவ்வையில் படரல் உற்ற-அயோத்தியா நகரம்நோக்கி நேராகச்சென்றது, செக தலம் மடந்தையோடும்-பூமிதேவியுடனே, இவ் உலகத்து உளோர்கள்-இந்தப் பூமியில் உள்ளவர்கள், இந்திரர் உலகு காண்பான்-தேவேந்திரன் உலகினைக் காணும் பொருட்டு, கவ்வையின்-பேராரவாரத்துடன், ஏகுகின்ற-செல்கின்ற, நீர்மையை கடுக்கும்-தன்மையை நிகர்க்கும். அன்று ஏ: ஈற்றசை.

அந்தரத்துத் தாவி என மாற்றுக. செக தலம்-இரு பெயரொட்டு. கவ்வை-பேராரவாரம். 'எவ்வையர் சேரியிரவு மிமை பொருந்தாக் கவ்வை' பு. வெ. மா. பெண்பாற். 10); நீர்மை: 'தண்ணீர் நிலநலத்தால் தக்கோர் குணங்கொடையால் கண்ணீர்மை மாறாக் கருணையால், பெண்ணீர்மை - கற்பழியா வாற்றாற் கடல் சூழ்ந்த வையகத்துள், அற்புதமா மென்றே அறி' (நல்வழி. 16); தற்குறிப்பேற்றவணி.

பி-ம். 3. இந்திரற் குவமைகூரக், இந்திரற் குவமைகூறக்.

4. ஏறுகின்ற, ஏகுமென்ற, எழுந்து செல்லும்; கடுத்த வன்றே. 351

வேறு

## புட்பக விமானம் நந்திக் கிராமத்தை அடைதல்

4244. ஆனதோ ரளவையி னமரர் கோனெடும்
வானவர் திருநகர் வருவ தாமென
மேனிறை வானவர் வீசும் பூவொடும்
தானுயர் புட்பக நிலத்தைச் சார்ந்ததால்.

ஆனது ஓர் அளவையின் - அச் சமயத்தில், தான் உயர் புட்பகம் - (எல்லாவற்றிலும்) தான் உயர்ந்து விளங்கும் புட்பக விமானம், அமரர் கோனொடும் - தேவேந்திரனோடும், வானவர் திரு நகர் வருவது ஆம் என - தேவர்களுடைய அமராவதி நகரம் (அயோத்தி மாநகரைக் காணுமாறு பூமிக்கு) வருகின்றது போலும் என்று பலருமாறு, மேல் - ஆகாயத்தில், நிறை - (இராமபிரானைத் தரிசித்தற்காக) நிறைந்து நின்ற, வானவர் வீசும்

பூவொடும் - தேவர்கள் வாரியிறைத்த மலர்களுடன், நிலத்தைச் சார்ந்தது - நந்திக் கிராமத்தை அடைந்தது. ஆல் : அசை.

இராமபிரானுக்கு இந்திரனும், ஏனையோர்க்குத் தேவர்களும், புட்பகத்துக்கு அமராவதியும் உவமை. புட்பக விமானம் சென்றடைந்த இடம் நந்திக் கிராமம் என்பதை, நம்பியும் பரதனோடு நந்தியம்பதியை நண்ணி, என அடுத்து வரும் திருமுடி சூட்டுப் படலத்தில் முதற் செய்யுள் கொண்டறிக. 'இராமபிரான் நந்திக் கிராமத்தை யடைந்தது சஷ்டி திதியின் பிற்பகலில்' என்று இராமாயண சார சங்கிரகம் கூறும் என்பர். இச்செய்யுளுடன் 'ஆதரிக்கின்ற, அவ்வுலகத்தோர் இழிவதற்கருத்தி புரிகின்ற தயோத்தி மாநகரம்' (பால : நகர : 1); என்பதை ஒப்பு நோக்குக. 352

ஒரு பிரதியில், இந்தப் பாடலுக்குப் பிரதியாக,

> அவ்வயி னயோத்தி வைகும் சனமுட னக்குரேரணி
> தவ்விலா வாறு பத்தா யிரரொடுந்தாய ரோடும்
> இவ்வயி னடைந்து ளோரைக் காணவென் றிராம னென்னத்
> திவ்விய விமானம் வந்து நந்தியம் பதியைச் சேர்ந்த.

என்பதுள்ளது.

இதன் பின் மீட்சிப் படலம் முற்றும் என்று காணப்படுகிறது.

---

## இப்படலம் குறித்து முதனூல் கூறுவது பின்வருமாறு :

இராவணன் வதம் முடிந்தது. இராமபிரான் உத்திரவின் பேரில் மாதலி இரதத்தை ஒட்டிக்கொண்டு இந்திரன் உலகுக்கு ஏகினன். வீடணனுக்கு முடிசூட்டுமாறு இராமபிரான் பணிக்க. இலக்குவன் மகுடம் சூட்டினன். பின்னர் பெருமான் அநுமனைப் பார்த்துத் தனது வெற்றிச் செய்தியைப் பிராட்டியிடம் அறிவிக்குமாறு சொல்ல, மாருதியும் சென்று கூறினன். சீதாதேவி மகிழ்ச்சி மீதூர ஒன்றும் பேசுவதற்கு நா எழாமலிருந்தாள். அநுமன் அவள் உரையாடாதது ஏன் என்ன, பிராட்டி 'இன்னது சொல்வது என்று புரியவில்லை என்றும், உன் நன்றிச் செய்திக்கு

ஏற்ப பரிசு இம்மூவுலகினுமில்லை' என்றும் கூறிப் பாராட்டினள். அந்நிலையில் பிராட்டியை வருத்திய அரக்கிமார்களைக் கொல்லுமாறு உத்தரவு கேட்கப் பிராட்டி, அவர்கள் தலைவன் சொற்படி நடந்தார்களாதலின் அவர்களிடம் பிழையாதொன்றுமில்லையென்று அவர்கட்கு பரிந்து தன் பெருந்தன்மையைக் காட்டிக் கரடி, புலிக் கதையைக் கூறுகின்றாள். அநுமன் அவனது பெருங்கருணையை போற்றிப் பிராட்டியைப் பற்றிய செய்தியை இராமபிரானிடம் சொல்கின்றான்.

இந்நிலையில் இராமபிரான் உத்திரவுப்படி வீடணன் சீதாதேவியை நீராட்டி அலங்காரம் செய்து அழைத்துவரச் செல்கின்றான். பிராட்டி முதலில் அலங்காரம் செய்ய மறுக்கின்றாள். பின்னர்ப் பெருமான் கட்டளையெனவே தூயகோலம் புனைந்து பல்லக்கில் ஏறி, இராமபிரானிடம் வருகின்றாள். வரும் வழியில் கூட்டமாகச் சூழ்ந்து நின்ற அரக்கியர் வானர மகளிர் என்ற இவர்களின் பேராரவாரம் எழ, வீடணன் கையில் பிரம்பு கொண்டு விலக்குகின்றான். இராமபிரான், கூச்சலின் காரணத்தைக் கேட்டு, அங்ஙனம் ஒறுத்தல் தகாது என்று வீடணனைக் கண்டிக்கின்றான். பிராட்டி இராமபிரான் அணித்தாக வந்து 'ஆர்யபுத்ர' என்று அழைத்து நிற்கின்றாள். அப்பொழுது இராமபிரான் 'மனைவியைப் பிறன் கையினின்று மீட்க வழிதெரியாதவன்' என்ற பழிக்குப் பாத்திரமாகாமல் இருப்பதற்காகவே இராவணனை வெற்றி கொண்டதன்றிப் பிறன் மனையில் பலகாலம் வாழ்ந்த அவளை மீட்டற்காகத்தான் வரவில்லை என்று கூறிப் பலவாறு ஏசுகின்றான். கண் முன்பு நிற்கவேண்டாம் என்றும் அவளுக்கும் பிரியமான இடத்துக்குச் செல்லலாம் என்றும் கடிந்து கூறுகின்றான். பிராட்டி மிகவும் வருந்தித் தான் களங்கமற்ற கற்புடையவள் என்றறிவித்துப் பின்னர் மைத்துனனைப் பார்த்து எரியமைக்குமாறு வேண்டுகின்றாள்.

சீதாதேவி 'என் மனம் இராமபிரானைத் தவிரப் பிறிதொரிடத்துச் செல்லாதிருந்தது உண்மையாயின், உலகச் சான்றாகவுள்ள அக்கினி பகவான் என்னைக் காக்கட்டும்' என்று சொல்லி எரியில் வீழ்கின்றாள்.

இச்சம்பவத்தைக் கண்டு சிவன், பிரமன் முதலிய தேவர்கள் அனைவரும் விமானத்தில் வந்து இறங்கி, இராமபிரானுடைப் பல்வேறு பெருமைகளையும் அவன் அவதார புருடன் என்பதையும் தெளிவாகக் கூறித் தேற்றுகின்றனர். இராமபிரான் தான் தயரதன் புதல்வனாகத் தன்னை நினைப்பதாகவே புகல, பிரமன் 'நீ முழு முதற் கடவுளான நாராயணன், இந்த சீதாதேவி இலக்குமி! இராவண வதத்திற்காக மனிதவுருவெடுத்தாய்' என்றான். இந்நிலையில் அங்கு கடவுள் மனிதவுருத்தாங்கி எரிக் குழியினின்றும் வெளிப்போந்து, மலர் முதலிய வாடாமல் பொன் மேனியுடன் விளங்கிய பிராட்டியை ஏந்தி வந்து இராமபிரானிடம் நிறுத்திக் களங்கமற்றவளாகிய பிராட்டியை ஏற்குமாறு வேண்டு கின்றான். இராமபிரான் அங்கீகரிக்கின்றான.

அப்போது சிவபிரான் இராமனிடம் தோன்றி அயோத்தி சென்று அரசுபுரியுமாறு கூறித் தயரதன் வைகுண்டத்திலிருந்து அவனைப் பார்க்க வந்திருப்பதாகக் கூறுகின்றார். தயரதன் வந்து இராமபிரானை வாழ்த்துகின்றான். இராமபிரான் கைகேயியும் பரதனும் தன் மனைவியும் மகனும் அல்லர் என்று முன் மொழிந்ததை மாற்றிக்கொள்ளுமாறு வேண்டத் தயரதன் சரி என்று கூறிப் பிராட்டியையும் தேற்றிச் செல்கின்றான்.

பின்னர் இந்திரன் அரக்கர் தொல்லையை ஒழித்துத் தன்னையும் தேவர்களையும் காத்ததற்காகத்தான் வரம் தருவதாகக் சொல்ல, 'இராமபிரான் இறந்துபட்ட வானரர் எல்லாம் உயிர் பெற்றெழு மாறும், குரங்குகள் சென்ற இடம் எல்லாம் அவைகட்கு வேண்டிய காய்கனி முதலியன நிறைந்து விளங்குமாறும் அருள வேண்டும்' என, இந்திரன் அவ்வாறே அருள்கின்றான்.

பிறகு வீடணனிடம் விடைபெற்று, உடனே அயோத்தி சேர வேண்டும் என்று இராமபிரான் சொல்ல, வீடணன் புட்பக விமானத்தைக் கொண்டு வந்து நிறுத்துகின்றான். இந் நிலையில் சுக்கிரீவாதியரும் வீடணனும் இராமபிரான் முடிசூட்டு விழா வினைக் காண வேண்டும் என்று குறையிரப்ப, இராமபிரான் அனை வரையும் ஏற்றிக் கொண்டு புறப்படுகின்றான்.

விமானம் செல்லும் மார்க்கத்தில் இராமபிரான் பல இடங்களை யும் காட்டிப் பிராட்டிக்குக் கூறுகின்ருன். கிட்கிந்தை அணுகப் பிராட்டி வானர மகளிரையும் உடனழைத்துச் செல்ல விழை கின்றனள். ஆகவே அவர்களையும் அழைத்துக் கொண்டு விமானம் விரைந்து சென்று அயோத்தியை அடைகின்றது. இடையில் பரத்துவாச முனிவனைக் கண்டு நலன் வினவி அவனிடம் வரம் பெற்றுச் செல்கின்ருன் இராமபிரான்.

இந் நிலையில் தான் மீண்டு வரும் செய்தியை, குகனுக்கு கூறி விட்டுப் பின்னர்ப் பரதனை அவன் மனேபாவத்தை அறிந்து வருமாறு சிறிய திருவடிக்குக் கூறுகின்ருன் இராமபிரான். மாருதி யும் நந்திக் கிராமத்தை அடைந்து அங்குக் குறித்த தவணையில் தமையன் வராமையால், எரியில் வீழச் சித்தமாக இருந்த பரத னிடம், இராமபிரான் திரும்பி எழுந்தருளும் நற் செய்தியைத் தெரிவிக்கின்ருன். பரதாழ்வான் இராமபிரானைப பற்றிய செய்தி கள் அனைத்தும் கூறுமாறு பணிக்க, அநுமன் பாதுகைகளைப் பெற்றுப் பரதன் மீண்டதிலிருந்து நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் விரித்துக் கூறி, 'இராமபிரான் உடனே வந்து விடுவான்' என்றும் புகல்கின்ருன்.

பரதன் நகரை அலங்கரிக்குமாறு செய்து இராமபிரான் வரவை ஆவலுடன் எதிர் பார்க்கின்ருன. புட்பகம் வருகின்றது. பரதன் தன் அண்ணனைக் கண்ணுற்று அவனது மரவடியை அவன் திருவடிகளில் சேர்ப்பிக்கின்ருன்.

அப்பால் எல்லோரும் விமானத்தில் ஏறிவர, நந்திக் கிராமத் தில் பரதன் ஆச்சிரமத்தை யடைந்து, புட்பக விமானத்தைக் குபேரனிடம் சேர்ப்பிக்குமாறு பணித்து இராகவன் இனிது வீற்றிருக்கின்ருன்.

---

# 38. திருமுடி சூட்டு படலம்

இராமபிரான் அயோத்திக்கு மீண்டு வந்து திருமுடி சூடிக் கொண்டதைக் கூறும் படலம் என்று விரியும். இது திருமுடி சூட்டுப் படலம் என்றும் காணப்படுகிறது. பல பிரதிகளில் திருவபிடேகப் படலம் என்றுள்ளது. 'தேவரும்' (திருமுடி. 8) என்ற பாடலே இப் படலத்தின் முதற்பாடலாக உள்ளது.

## ஸ்ரீராமன் தம்பியரோடு நந்திக் கிராமத்திற் சடையை நீக்கி நீராடி அலங்கரித்துக் கொள்ளுதல்.

4245. நம்பியபரத னோடு நந்தியம் பதியை நண்ணி
வம்பலர் சடையு மாற்றி மயிர்வினை முற்றி மற்றைத்
தம்பிய ரோடு தானும் சரயுவின் புனலிற் றோய்ந்தே
உம்பரு முவகை கூர வொப்பனை யொப்பச் செய்தார்.

நம்பிய - தன்னிடம் விசேடப் பற்றுள்ள, பரதனோடு - பரதனுடனே, மற்றைத் தம்பியரோடு - மற்றைத் தம்பியரும், தானும் - தானுமாக, நந்தி அம்பதியை நண்ணி - நந்திக் கிராமமாகிய அழகிய நகரத்தை யடைந்து, வம்பு அலர் சடையும் மாற்றி - நறுமணம் கமழ்கின்ற சடையைக் கழித்து, மயிர் வினை முற்றி - மயிர் கழிக்கும் செயலையும் முடித்து, சரயுவின் புனலிற் தோய்ந்து -(சரயூ நதியின்) நீரில் முழுகி நீராடிய பின், உம்பரும் உவகை கூர - தேவர்களும் மகிழ்ச்சி மிகுமாறு, ஒப்பனை ஒப்ப செய்தார் - அலங்காரங்கள் தக்க வகையில் செய்தார்கள். ஏ : அசை.

சில பிரதிகளில் நம்பியும் என்று முதலடியில் காணப்படுகிறது. எனினும் மூன்றுமடியில் தானும் என்று இராமபிரான் குறிக்கப் படுதலின் நம்பிய என்ற பாடம் தழுவப்பட்டது. இராமபிரான் வனத்து வதிந்திருந்த நிலையில் ஆட்சித் தானமாக இருந்தது பற்றி அம்பதி எனப்பட்டது. காட்டில் சீவிச் சிக்கறுத்து வாரி வகிராமல் இருந்த சடைக்கு வம்பு ஏதெனின்; 'நீண்டு குழன்று

நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம், பூண்டு புரிந்து சரிந்து கடைசுருண்டு புகையு நறும்பூவும், வேண்டு மல்லவெனத் தெய்வவெறியே கமழு நறுங்குஞ்சி, ஈண்டு சடையாயினது' (சுந்தர. 546) என்ற சிறிய திருவடி கூற்றுக் கொண்டு தெளிக. உத்தம இலக்கணமமைந்தவர் பங்கி இயற்கை மணம் உடைமை; (குறுந். 2). மயிர் வினை - மயிர் கழித்தல், ஓர் முக்கியமான வைதிகச் சடங்கு. உம்பரும் - உம்மை உயர்வு சிறப்பு. ஒப்பனை : 'அப்பினுளமிர்தந் தன்னையே, ஒப்பனை யொப்பனை யுரைக்க வொண்ணுமோ' (பால. கடிமண. 69).

பி - ம். 1. நம்பியும் ; நம்பியம்பதியை நண்ணி.
2. வம்பியல் ; ஆக முற்றித், முற்றி மண்ணித்.
3. தண்புனற் படிந்த பின்னர், அணையது சமைத்த பின்னர்.
4. ஒப்பமை ; ஒப்பம். 1

## தம்பிமார் பணியாற்ற இராமபிரான் தேரேறி அயோத்தி புகுதல்

4246. நிருதியின் றிசையிற் றோன்று
நந்தியம் பதியை நீங்கி
குருதிகொப் பளிக்கும் வேலான்
கொடிமதி லயோத்தி மேவச்
சுருதியேத் தனைய வெள்ளைத்
துரகதக் குலங்கள் பூண்டு
பருதியொத் திலங்கும் பைம்பூட்
பருமணித் தேரி னானன்.

குருதி கொப்பளிக்கும் வேலான் - உதிரத்தைக் கக்குகின்ற வேற்படையை யுடையவனான இராமபிரான், நிருதியின் திசையில் தோன்றும் - தென் மேற்குத் திக்கில் தோன்றுகின்ற, நந்தி அம் பதியை நீங்கி - நந்திக் கிராமத்தினின்று நீங்கி, கொடி மதில் அயோத்தி மேவ - கொடிகளால் புனையப் பெற்ற மதில் சூழ்ந்த அயோத்தி நகரை அடையுமாறு, ஏத்து சுருதி அனைய - ஏத்து தலைக் கொண்ட வேதத்தை ஒத்த, வெள்ளை துரகதம் குலங்கள்

பூண்டு - வெள்ளைக் குதிரைகளைப் பூண்டு, பருதி ஒத்து இலங்கும் - சூரியனை நிகர்த்து விளங்குகின்ற, பைம்பூண் பருமணி தேரின் ஆனான் - பசிய பொன்னால் அலங்கரிக்கப் பெற்ற பருத்த மணிகளைக் கொண்ட தேரின்மீது ஆரோகணிக்கலானான்.

நிருதி - தென்மேற்குத் திசைக் காவலன், சிலர் நிருதி பெண்பால் என்றும் கூறுவர். 'நிருதி வந்தென்னை யென்செய்வாள்' (தனிப்பா.); மதில்களில் கொடி கட்டுவது பெரு வழக்கு. பால. மிதிலைக் காட்சி 1. காண்க. மேவ - விரும்பி யடையும்படி எனினுமாம். சுருதி யேத்து - குதிரைச் செலவிற்கு ஏற்றினுமாம்; (ஒப்பு): முப்புரம் எரித்த காலையில் பூமி தேவியாகிய தேர்க்கு நான் மறைகளே நான்கு குதிரைகள் ஆன வரலாறுணர்க. ஏத்து-ஏத்துதல்; 'இழிப்பு மெடுத்தேத்தும், வையார் வடித்த நூலார்' (நாலடி. 163); துரகதம் - குதிரை. தேருக்கு மணி கட்டுவது பண்டைய வழக்கு. 'மணிநா வார்த்த மாண் வினைத்தேரன்' (அகம். 4); சத்துவம் நிறைந்தது மறைகள்; சத்துவம் - வெண்ணிறம் என்ப. எனவே வெண்ணிறமுள்ள குதிரை என்க. பருதி: 'பருதியஞ் செல்வன்' (கலிங். 26, 2).

பி - ம். 1. நிருதியந்; பதியினிங்கி.
2. அயோத்தி நோக்கி.
3. ஒத்நனைய; வெள்ளத்; பூண்ட.
4. தேரன்.

2

இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

4247. ஊழியி னிறுதி காணும்
வலியின துயர்பொற் றேரின்
ஏழுயர் மதமா வன்ன
விலக்குவன் கவிகை யேந்தப்
பாழிய மற்றைத் தம்பி
பால்நிறக் கவரி பற்றப்
பூழியை யடக்குங் கண்ணீர்ப்
பரதன்கோல் கொள்ளப் போனான்.

ஊழியின் இறுதி காணும் - பேரூழிக் காலத்தின் முடிவினைக் காணவல்ல, வலியினது - வலியை யுடைத்தாகிய, உயர் பொன் தேரின் - உன்னதமான பொன் தேரிலே, ஏழு உயர் மதம்மா அன்ன - ஏழுமுழ முயரமுள்ள மதம் செறிந்த யானை போன்ற, இலக்குவன் - இளைய பெருமாள், கவிகை ஏந்த - வெண் கொற்றக் குடையைப் பிடித்து நிற்கவும், பாழிய - வன்மை வாய்ந்த, மற்றை தம்பி - பிறிதொரு தம்பி (சத்துருக்கினன்), பால் நிறம் கவரிபற்ற - வெண்ணிற முள்ள சாமரை ஏந்தவும், பூழியை அடக்கும் கண்ணீர் - புழுதியை யும் அடக்குமாறு (உவகைக்) கண்ணீரை வடிக்கின்ற பரதன் (பாகனாகி), கோல் கொள்ள - உளவு கோலைக் கொண்டு (குதிரை களைத்) தூண்டிச் செலுத்தவும், போனான் - (இராமபிரான்) சென்றான்.

ஊழியினிறுதி காணும் வலியினது ; (ஒப்பு) : 'ஊழி தோறேறுங் குமவ்வோங்கல்' (திருவிளை. திருக்கயி. 2) ; ஏழு முழம் உயர்ந் திருத்தல் பட்டத்து யானையின் சிறப்பிலக்கணம் என்ப. 'ஏழுறுப்பும் நிலந்தோய்வ' (சீவக ; 2151) 'சேணுயர் போதர வெழுமுழ முடையது தெவ்வரஞ்சு மவ்வேழம்' (வி. பா. 16, 10) ; மற்றும் 'ஏழ்முழ முயர்ந்தொனபான் முழநீண்டு, பதின்மூன்று முழம் சுற்றுடைத்தாகி' எனறதும் காண்க. கோல் கொளல் : 'கோல்கொளு மொருவனோடும்' (யுத்த. 3048) ; பூழியை அடக் கும் கண்ணீர், வீறுகோளணி : 'குழையெறிந்து கோழி கடியும் வாழ்க்கையர்' என்றாற் போல என்க. (ஒப்பு) : 'வார்மணிப் புனலான் மண்ணை மண்ணுநீ ராட்டும் கண்ணன்' (அயோத்தி. கங்கைகாண். 39). முடிசூட்டில் குடைபிடிப்பவன் இங்குக் கோல் கொண்டான்.

பி - ம். 1. இந்திர னுயர்ந்த பொற்றேர், உயர் பொற்றேர்மேல் ; வலியன துயர் பொற்றேரளான்.
2. ஏந்திப்.
3. பாழியம் புயந்துத் ; கவரி வீச.
4. அடைக்கும்.

3

### வீடணன் முதலியோர் சென்ற திறம்

4248. வீடணக் குரிசின் மற்றை
வெங்கதிர்ச் சிறுவன் வெற்றிக்
கோடணை குன்ற மேறிக்
கொண்டறேர் மருங்கு செல்லத்

தோடணை மவுலிச் செங்கண்
வாலிசேய் தூசி செல்லச்
சேடனைப் பொருவும் வீர
மாருதி பின்பு சென்றான்.

குரிசில் வீடணன் - சிறந்தோனாகிய வீடணனும், மற்றை - பின்னும், வெம் கதிர் சிறுவன் - வெம்மையான ஒளிக் கற்றைகளை யுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவனும், வெற்றி - வெற்றியுடன் கூடிய, கோடு அணை - தந்தம் பொருந்திய, குன்றம் ஏறி - மலை யொத்த யானையின்மீது ஏறி, கொண்டல் - மேகம் போன்றவனான இராமபிரானுடைய, தேர் மருங்கு செல்ல - தேரின் அருகிற் செல்லவும், தோடு அணை - மலரிதழ்களைக் கொண்ட, மவுலி - மகுடம் புனைந்த, செகண் வாலி சேய் தூசி செல்ல - சிவந்த கண்களை யுடைய வாலி மகன் அங்கதன் முன்னணியிற் செல்லவும், சேடனை பொருவும் - ஆதிசேடனை ஒத்த, வீர மாருதி - வீரம் செறிந்த அநுமன், பின்பு சென்றான் - பின்னர்ச் சென்றான்.

கோடணை குன்றம் - வெளிப்படை. குன்றம் - யானைக்கு உவம வாகு பெயர். 'வருங்குன்ற மொன்றுரித் தோன்' (திருக்கோ. 15); கோடணை - பெரு முழக்கமுமாம். (பெருங். 1, 49, 85.) கொண்டல் - நீலமேகம் போன்ற இராமபிரான். தோடு - மலரிதழ்; 'தோடே மடலே யோலை யென்றா' (தொல். மரபி. 86); தூசி: 'தொண்டர் காள் தூசி செல்லீர்' (திருவாச. திருப்படை. 2); 'தூசியின் வந்து முனைந்து' (வி. பா. 16, 11); பேரறிவாற் சேடன்; முன்னர் அநுமனை விரிஞ்சன், விடைவல்லானுக்கு உவமித்தார்; இப்பொழுது சேடனுக்குவமை கூறினர். புத்தி, பலம் இரண்டும் ஒருங்கே குறிக்கப்பெற்றன - இவ்விரண்டும் கூறவே அவற்றான் எய்தும் கீர்த்தியும் தைரியமும் உபலக்கணத்தாற் கொள்க.

பி - ம். 1. வெங்கதிர்ச் செல்வன்.
2. மருங்கு போதத்.
3. தூசு.
4. தேர்ப்பின்.

## வாநரத் தலைவர்கள் சென்ற திறம்

4249. அறுபத்தே ழமைந்த கோடி
யானைமேல் வரிசைக் கான்ற
திறமுற்ற சிறப்ப ராகி
மானுடச் செவ்வி வீரம்
பெறுகுற்ற வனப்ப ருச்சி
பிறங்குவெண் குடையர் செச்சை
மறுவற்ற வலங்கன் மார்பர்
வாநரத் தலைவர் போனர்.

வரிசைக்கு ஆன்ற திறம் உற்ற - (தம்) தகுதிக்கேற்ப கூறுபாடு அமைந்த, சிறப்பர் ஆகி - சிறப்பை யுடையவராகி, மானுடம் செவ்வி - மனித வுருவுடனே கூடி, வீரம் பெறுகுற்ற - ஆண்மை யுடனே பெற்ற, வனப்பர் - அழகினை யுடையவரும், உச்சி பிறங்கு வெள் குடையர் - உச்சிமீது விளங்குகின்ற வெண் குடையை உடையவரும், செச்சை - செஞ் சந்தனக்குழம்பு பூசப்பெற்றதும், மறு அற்ற - குற்றமற்றதுமான, அலங்கல் மார்பர் - மாலையை யணிந்த மார்பினை யுடையவரும், அறுபத்து எழு அமைந்த கோடி - அறுபத்தேழு கோடிக் கணக்கினருமான, வாநர் தலைவர் யானை மேல் போனர் - வாநரத் தலைவர்கள் யானைமீது ஏறிச் சென்றனர்.

எழுபது வெள்ளம் வாநர சேனை என்று முன்னர் (யுத்த. 4051)ல் குறிக்கப் பெற்றது. இங்கு அறுபத்தேழு கோடி வாநரத் தலைவர் என்றுள்ளது. செஞ் சந்தனச் சேறு பூசப்பட்ட மார்பு. செச்சைக் கண்ணியன்.

பி - ம். 1. வரிசைக் கேற்ற.
2. செவ்வி யெய்தி.
3. வன்பர்; வானம்.
4. மறுவுற்ற; செச்சை மார்வர். 5

சில பிரதிகளில்,

இருபத்தே ழமைந்த கோடி யானைமேல் வரிசைக் கேற்ற
திரு வொத்த சிறப்பராகி மானிடச் செவ்வி வீரர்
உருவத்தோ ளொளிரும் பூண ருச்சி வெண் குடையர் பச்சை
மருவொத்த வலங்கல் மார்பர் வாநரத் தலைவர் போனர்.

என நான்கடியும் மாறுபட்டு ஓர் பிரதியில் காணப்படுகிறது.

## பதினெண் பூமி வேந்தர் இராமபிரானைத் தொழுது சூழ்ந்திருத்தல்

4250. எட்டெனு விறுத்த பத்தி
னேழ்பொழில் வளாக வேந்தர்
பட்டம்வைத் தமைந்த நெற்றிப்
பகட்டினர் பைம்பொற் றேரர்
வட்டவெண் குடையர் வீசு
சாமரை மருங்கர் வானைத்
தொட்டவெஞ் சோதி மோலிச்
சென்னியர் தொழுது சூழ்ந்தார்.

பட்டம் வைத்து அமைந்த - பட்டம் தைக்கப்பட்டுப் பொருந்திய, நெற்றி பகட்டினர் - நெற்றியைக் கொண்ட களிற்றினை யுடையவரும், பைம் பொன் தேரர் - பசிய பொன்னாலியன்ற தேரினை யுடையவரும், வட்டம் வெண் குடையர் - வட்ட வடிவமான வெண் குடையை உடையவரும், சாமரை வீசும் மருங்கர் - வெண் சாமரம் இரட்டும் பக்கங்களை உடையவரும், வானை தொட்ட - ஆகாயத் தைத் தீண்டுகின்ற, வெம் சோதி - வெவ்விய ஒளியுடன் கூடிய, மோலி சென்னியர் - மகுடம் அணிந்த சிரத்துடன் கூடியவருமான, எட்டுஎன இறுத்த பத்தின் - எட்டு என்ற எண்ணிக்கையில் முடிகின்ற பத்து (பதினெட்டுப் பிரிவான), ஏழ் பொழில் வளாகம் வேந்தர் - ஏழு பூமி வட்டத்து மன்னர்கள், தொழுது சூழ்ந்தார் - வணங்கிய வண்ணம் சுற்றிக் கொண்டனர்.

எட்டென இறுத்த பத்தி - பதினெட்டு, பதினெட்டு நாடுகள்: சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம, கன்னடம், கொல்லம், தெலுங்கம், திராவிடம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம் பூமியுமாம். இவை செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலன் என்ப. (நன். பெயரியல். 16); (ஒப்பு): 'அயனளித்த கடையிட்ட கணிதப்பாத லக்கம்' (ஆரணிய. 18); ஏழ் பொழில் - ஏழு தீவுகளுமாம். 'ஏழுடையான் பொழில்' (திருக்கோ. 7); வளாகம் - நிலப்பரப்பு. 'தெண்கடல் வளாகம் பொதுமை

யின்றி' (புறநா. 189); இங்கு வளாகம் என்பதற்குப் பூமி முழுவதையும் என்று உரை வரைதல் காண்க. நெற்றிப் பட்டம் - இதனை ஓடை யென்ப. பகடு - யானை; 'பகட்டை வீட்டுமால்' (யுத்த. 2277); தொட்ட வெஞ்சோதி - வடமொழி நடை.

பி - ம். 1. எட்டமை யிறுதிப் பக்கத்து, எட்டமை யிறுத்த பத்தின், எட்டமை யிறுதிப்பந்தோடு, ஏழ்பெரு.

4. தொட்ட செஞ். 6

இதன் பின் ஓர் அதிகப் பாடல் :—

எழுவகை முனிவ ரோடு மெண்டிசைத் திசைகாப் பாளர்
குழுவினர் திசைக டோறும் குழாங்கொண்டு களித்துக்கூடித்
தொழுவன வமரர் கைகள் சுமக்கலாம் விசும்பிற் றுன்னி
வழுவலின் மலர்கள் சிந்தி மானிடம் சுருங்கச் சார்ந்தார்.

## வாநர மகளிர் சூழச் சீதாபிராட்டி வானத்திற் சென்றமை

4251. வானர மகளி ரெல்லாம்
வானவர் மகளி ராய்வந்
தூனமில் பிடியு மொண்டார்ப்
புரவியும் பிறவு மூர்ந்து
மீனின மதியைச் சூழ்ந்த
தன்மையின் விரிந்து சுற்றப்
பூநிற விமானந் தன்மேன்
மிதிலைநாட் டன்னம் போனாள்.

வானர மகளிர் எல்லாம் - வானர மகளிர் அனைவோரும், வானவர் மகளிராய் வந்து - தேவ மாதர் உருவினராய் வந்து, ஊனம் இல் பிடியும் - குற்றமற்ற பெண் யானைகளையும், ஒள் தார் புரவியும் - ஒள்ளிய கிண்கிணி மாலையணிந்த குதிரைகளையும், பிறவும் - மற்றும் உள்ள (சிவிகை முதலியவற்றையும்), ஊர்ந்து - ஏறிச் செலுத்தி, மீன் இனம் - உடுக்களின் தொகுதிகள், மதியை சூழ்ந்த தன்மையின் விரிந்து சுற்ற - சந்திரனைச் சூழ்ந்துள்ள தன்மையை யொப்பப் பரவிச் சூழ, பூ - பொலிவும், நிறம் - நிறமும் கொண்ட, விமானம் தன்மேல் - விமானத்தின்மீது, மிதிலை நாடு

அன்னம் போனாள் - மிதிலை நாட்டில் தோன்றிய அன்னம் போன்ற வளான பிராட்டி சென்றாள்.

முன்னர்த் திருவவதாரப் படலத்தில், 'வானுளோர் அனைவரும் வாநரங்களா' (பால. திருவவ. 21); வந்தவர் ஆகலின், வந்த காரியம் முடிவு பெற்று முன்னிருந்த வானவர் வடிவை மீண்டும் பெற்றனர் எனக. மகளிர் புரவியூரும் வழக்கு காண்க. பிராட்டியைச் சுற்றி வானவர் மகளிர் உருக்கொண்டு வாநர மகளிர் இருந் தமைக்கு மதியைச் சூழ்ந்த உடுக்கள் உவமை. உவமையணி. 'அனைய தன்மையளாகிய கேகயன் அன்னம்' (அயோத்தி. மந்தரை. 79); அன்னம்; 'அன்னமுந் துயர்க்கடலடி வைத்தாள்' (அயோத்தி. கிளைகண்டு. 87) என்ற இடத்துப் பிராட்டியை அன்னமென்றே கூறியது காண்க. அன்னம் பிராட்டிக்கு நடையால் உவமை; 'அன்னநடையு மன்னமில்லா வையர் நடையும் தளர்வெய்தக், கன்னி நடக்கும் நடை கற்றாள் கரும்பு கசக்கு மொழி பெற்றாள்' (பிரபு. உற்பத்தி. 57); மீனினம் மதியைச் சூழ்தல்; இதனை மாற்றி 'மதியினுப்பண் மீனுண்டேல்' (பால. கோலங். 16) என்றும் கூறுவர் ஆசிரியர். 'இந்துவின் கொழுந்து விண்மீனினத்தொடும் வருவதென்ன, நந்தலில் விளக்கமன்ன நங்கையு நடக்கலுற்றாள்' (பால. கோலங். 23).

பி - ம். 1. ஆகி.
4. போந்தாள்.

7

## தேவரும் முனிவரும் மலர் மழை பொழிதல்

4252 தேவரு முனிவர் தாமுந்
திசைதொறு மலர்கள் சிந்த
ஓவலின் மாரி யேய்ப்ப
வெங்கணு முதிர்ந்து வீங்கிக்
கேவல மலராய் வேறே
ரிடமின்றிக் கிடந்த வாற்றால்
பூவெனு நாம மின்றிவ்
வுலகிற்குப் பொருந்திற் றன்றே.

தேவரும் - தேவர்களும், முனிவர் தாமும் - இருடியரும், திசை தொறும் - திக்குகள் தோறும், ஓவலில் மாரி ஏய்ப்ப - இடை

யருது பெய்கின்ற மழையை ஒக்குமாறு, எங்கணும் - எல்லா விடங்களிலும், மலர்கள் சிந்த - மலர்களைச் சிதற, உதிர்ந்து வீங்கி கேவலம் மலராய் - உதிர்ந்து பரந்து மலர் மாத்திரையேயாகி, வேறு ஓர் இடம் இன்றி - பிறிதொன்றைக் கொண்ட இடம் இல்லாத வாறு (மலர்கள் நிறைந்து), கிடந்த ஆற்றால் - கிடந்த தன்மையால், பூ எனும் நாமம் - பூ வென்கின்ற பெயரானது, இன்று இவ்வுல கிற்கு பொருந்திற்று - இப்போது இ உலகிற்குப் பொருத்தமான தாயிற்று. அன்று, ஏ : தேற்றம்.

பூமிக்குப் பூ என்ற பெயர் உண்மையின் அந்தப் பெயரே தேவரும் பிறரும் தூற்றிய மலர் நிறைவினால் உண்டாயதென்று கற்பிக்கப்பட்டது. இயற்கையான காரணத்தை ஒழித்துப் பிறி தொரு காரணம் கற்பித்தமையின் பிரிநிலை நவிற்சியணி; (ஒப்பு): 'புழைத்த போலநீர் நிரந்தாம் பொழிகின்ற பொலிவால், மழைக்க ணென்பது காரணக் குறியென வகுத்தாள்' (சுந்தர. 335); 'கடி யென்றார் கற்றறிந்தார்' (நாலடி. 57); 'ஆசையா லழிந்து வெந் தானனங்கனவ் வுருவமம்மா' (ஆரணிய 624); கேவலம்-வடசொல்.

பி - ம். 1. முறையிற் சிந்த.
2. மேவலின்; ஒப்ப; எதிர்ந்து.
3. மலரால்; அன்றிவ்.
4. உலகிற்கும். 8

## சேனைகள் முதலியவற்றின் மகிழ்ச்சி

4253. கோடையில் வறந்த மேகக்
குலமெனப் பதினு லாண்டு
பாடுறு மதஞ்செய் யாத
பணைமுகப் பரும யானை
காடுறை யண்ண லெய்தக்
கடாந்திறந் துகுத்த வாரி
ஓடின வுள்ளத் துள்ள
களிதிறந் துடைந்த தேபோல்.

கோடையில் - முதுவேனிற் காலத்து, வறந்த - நீர் வறண்ட, மேகம் குலம் என - மேகக் கூட்டம் போன்று, பதினாலு ஆண்டு

பாடு உறு - பதினான்கு ஆண்டுகள் வெளிப்படுதல் பொருந்திய, மதம் செய்யாத - மதத்தை யுண்டு பண்ணாத, பணை - தந்தங்களை முகம் - முகத்திலே கொண்ட, பருமம் யானை - பண்ணமைக்கப் பெற்ற வேழங்களை, காடு உறை அண்ணல் எய்த-காட்டில் வசித்த இராமபிரான் மீண்டு வர, கடாம் திறந்து உகுத்த வாரி - கன்னம் திறந்து வீழ்ந்த மதத் தாரைகள், (அவற்றின்) உள்ளத்து உள்ள களி திறந்து உடைந்ததே போல் ஓடின - (அவற்றின்) மனத்துக் கொண்டுள்ள களிப்பு வெளிப்பட்டு உடைப்பெடுத்தது போன்று ஓடலாயின.

கோடை - ஆனி ஆடியாகிய முதுவேனிற் காலம். குடக்கி லிருந்து வந்தது கோடை; கோடை; மேல் காற்று - பெரும்பாலும் மேல் காற்று வீசும் பருவம். பாடுறு - வெளிப்படுதல். படுதல் - தோன்றுதல். மதம் செய்யாத பரும யானை - முன்னர் நகர் நீங்கு படலத்துள், 'தான யானையும் களி துறந்தன' (205) என்றார். இங்கு இராமபிரான் மீட்சி கண்டு, 'களி துளும்பின' என்றார். பருமம்; யானைச் சேணம் - யானைக் கழுத்திடு மெத்தையும் ஆம். 'பருமமு முதுகிடு படிகையும்' (யுத்த. 1792); 'பருமங் களையாப் பாய் பரிக்கலிமா' (நெடுநல். 179); உடைந்ததே போல் ஓடின என்க. (ஒப்பு); 'வினைத்தவன் புமிழ்வார்போல விமலனார் முடிமேல் விட்டார்' (பெரிய. பு. கண்ணப்ப. 123).

பி - ம். 2. மதம் செலாத

3. காடுறைந்து, காடிறந்து.

4. ஓடிற்றுள்ளங். 9

4251. துருவத்தார்ப் புரவி யெல்லா
மூங்கையர் சொற்பெற் றென்ன
அரவப்போர் மேக மென்ன
வாலித்த மரங்க ளான்ற
பருவத்தாற் பூத்த வென்னப்
பூத்தன பகைவிற் சீறும்
புருவத்தார் மேனி யெல்லாம்
பொன்னிறப் பசலை பூத்த.

துருவம் தார் புரவி எல்லாம்-நிலைபெற்ற கிண்கிணி மாலையை யணிந்த குதிரைகள் அனைத்தும், மூங்கையர் சொல் பெற்று என்ன - ஊமையர்கள் பேசும் வன்மையைப் பெற்றாற் போலவும், அரவம் போர் மேகம் என்ன - இடி ஒலி நிரம்பிய மேகம் போலவும், ஆலித்த - ஆரவாரித்தன; மரங்கள் - மலர் மரங்கள், ஆன்ற - (அவற்றிற்கு) அமைந்த, பருவத்தால் - பருவத்தில், பூத்த என்ன - மலர்ந்தன போல, பூத்தன - மலர்ந்தன; பகை - பகைவர்மீது, வில் சீறும் - வில்லைப் போலச் சீறுகின்ற, (காதலித்தார்மீது வளைந்து காட்டுகின்ற), புருவத்தார் - புருவத்தை யுடையரான, மேனி எல்லாம் - மகளிரின் உடல் முழுவதும், பொன் நிறம் பசலை பூத்த - பொன்னிறமான பசலை தோன்றின.

துருவம் - நிலை பெறுதல்; துருவம், என்றும் ஒரே படித்தா யுள்ள துருவ நட்சத்திரம். உத்தான பரத மன்னனுடைய மூத்த மனைவியான சுநீதியிடம் பிறந்து, சுருசி என்ற சிற்றன்னையின் வசைச் சொல் தாங்கமாட்டாது, ஸ்ரீமந்நாராயணனை நோக்கி, துருவன் தவ மாற்றி அவன் அருளால் நிலைபேறுகவுள்ள ஓர் நட்சத்திரமாக மாறினன். மூங்கையர் சொல் பெற்றென்ன; இது அசம்பாவித மேனும், நிகழ்ந்ததாகக் கூறினர். முன்னர்ப் பாயிரத்தில் 'மூங்கையான் பேசலுற்றான் என்ன யான் மொழியலுற்றேன்' என்று கம்பநாடர் அவையடக்கம் கூறினர். அங்கு மூங்கையன் தான் பருகிய கள்ளின் வேகத்தால் பேசியது போன்று, தானும் இராமபிரானிடத்துற்ற அன்பெனும் நறவமாந்தி இராமாயணம் எழுதியதாகக் கூறினர். 'சாராயத்தை வார்த்துப் பூராயத்தைக் கேள்' என்பது பழமொழி. இங்ஙனம் ஆசிரியர் கூறிய அவை யடக்கத்தினின்றே முதனூல் ஆசிரியராகிய வான்மீக முனிவரிடம் கம்பநாடர் கொண்டிருந்த நன்மதிப்புப் புலனாகும் இங்கு, 'அன்னானொடு போயின தானை யளந்துகூற, வென்னா லரிதேனு மியம்பு வான்மீகனென்னும் நன்னான் மறையானது நாற்பது வெள்ள மென்னச் சொன்னான் பிறரி யாரஃதுணர்ந்து தொகுக்க வல்லார்' (யுத்த. 1960) என்றதும் காண்க. தலை சிறந்த புலவர்கள் சிறந்த பேராசிரியர் மாட்டுப் பெருமதிப்பு வைத்திருந்தமை இவற்றால் நன்கு புலனாகும். 'நண்டிற்கு மூக்குண்டோவெனின், அஃது ஆசிரியர் கூறலான் உண்டென்பது பெற்றாம். அவர் புலவுத் துறந்த பொய்யா நோன்பியாகலின் பொய் கூறாரென மறுக்க',

என்று (தொல். மரபி. 31)ன் உரையிற் பேராசிரியர் கூறுதல் காண்க. முன்னர் மதநீர் வற்றிக் களிதுறந்த யானைகள், இராமபிரான் மீண்டு வந்த அளவில் மதநீர் பெருக்கியமை கூறி, இங்கு, இராமபிரான் தணந்த துயரத்தால், கனைக்காமலே நின்ற குதிரைகள் இப்பொழுது ஆலித்தன என்றார். 'நீர்த்தளி துறந்தனபரி' (அயோத்தி. நகர் நீ. 205); பருவத்தால்: 'பருவத்தாலன்றிப் பழா' (நல்வழி).

பி-ம். 1. துரகத்; மங்கையர்.

2. அருவப்; பேர்; மேகமந்த, அல்க; ஆன்று.

3. பூத்தது; பகையிற்.

4. மேனி முற்றும், 10

## இராமபிரான் தாய்மார் முதலியோரை வணங்கி, அரண்மனையை யடைதல்

4255 ஆயதோ ரளவில் செல்வத்

தண்ணலு மயோத்தி நண்ணித்

தாயரை வணங்கித் தங்க

ளிறையொடு முனியைத் தாழ்ந்து

நாயகக் கோயி லெய்தி

நானிலக் கிழத்தி யோடும்

சேயொளிக் கமலத் தாளுங்

களிநடஞ் செய்யக் கண்டான்.

ஆயது ஓர் அளவில் - அந்தப் போழ்தில், செல்வத்து அண்ணலும் - (மன்னவர் திருவும் வைதிகத் திருவுமான) எல்லாச் செல்வங்கட்கும் உரிய பெருந்தகையான இராமபிரானும், அயோத்தி நண்ணி - அயோத்தியாபுரியை அடைந்து, தாயரை வணங்கி - அன்னைமாரைப் பணிந்து, நாயகம் கோயில் எய்தி - சர்வலோக நாயகனான திருமாலின் ஆலயத்தைச் சார்ந்து, தங்கள் இறையொடு - தமது குலதெய்வமான ஸ்ரீ ரங்கநாதனுடனே, முனியை தாழ்ந்து - வசிட்ட முனிவனையும் வணங்கி, நானிலம் கிழத்தியோடும் - பூமிப் பிராட்டியுடனே, செம்மை ஒளி - சிவந்த நிறம் கொண்ட, கமலத்தாளும் - தாமரையில் வதிபவளான திருமகளும், களிநடம் செய்ய கண்டான் - மிக்க மகிழ்ச்சியுடன் ஆனந்தக் கூத்தாடுவதைக் கண்ணுற்றான்.

நாயகக் கோயில் - அரண்மனை யெனினுமாம், இறை; என்பதற்குக் கையுறை என்றும் கூறுவர்; இறுப்பது என்க. தங்கள் குலதெய்வத்தை முதற்கண் வணங்குவது முறையாகலின், நாயகக் கோயில், திருமாலின் ஆலயமே என்க. அரண்மனையிலே யுள்ள பூசாக்கிருகமான ஆடகமாட மெனினும் ஆம். 'ஆடக மாடங் கடந்தறியாத வெம்மாரணங்கே' (இறை. அகப்.); திருமணப் படலத்தும், முதற்கண் 'கோதறு தவத்துத்தங் குலத்துளோர் தொழும், ஆதியஞ் சோதியை யடிவணங்கினன்' (பால. கடிமணப் 50) என்று வருவது காண்க. தாயரை வணங்கி - முன்னர் விமானத்தினின்று இறங்கியவுடன் கைகேயியை முதற்கண் பணிந்து பின்னர்ப் பிறதாய்மாரைப் பணிந்ததற்கும், இங்குப் பணிந்ததற்கும் உள்ள வேற்றுமையை யுய்த்துணர்க. களிநடம் புரிதல்: 'இற்பிறப்பென்பதொன்றும் இரும்பொறை யென்பதொன்றும், கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273).

பி - ம். 2 முனிவனைத் தாழ்ந்து தாமம்.
3. எய்த; நானிலமாது மற்றைச்.
4. திருநடம்.

## நகர மாந்தரின் மகிழ்ச்சித் திறம்

1256. வாங்குதுந் துகில்க ளென்னு
மனமிலர் கரத்திற் பல்கால்
தாங்கின ரென்ற போது
மைந்தரும் தையலாரும்
வீங்கிய வுவகை மேனி
சிறக்கவு மேன்மேற் றுள்ளி
ஓங்கவுங் களிப்பாற் சோர்ந்த
வுடையிலா தாரை யொத்தார்.

துகில்கள் வாங்குதும் என்னும் - ஆடைகளைக் களைந்துவிட வேண்டும் என்னும், மனம் இலர் - எண்ணமில்லாதவரான, மைந்தரும் தையலாரும் (அயோத்தியா புரியில் இருந்த) ஆடவரும் பெண்டிரும் தளர்கின்ற ஆடையை, கரத்தில் - தம் கைகளால், பல்கால் - பல தடவை, தாங்கினர் என்ற போதும் - தாங்கினவராய் நின்ற போதும், வீங்கிய உவகை - பொங்கிய மகிழ்ச்சியால், மேனி சிறக்கவும் - உடல் பூரித்தலாலும், (அந்த மகிழ்ச்சி மிகுதியால்'

மேல்மேல் துள்ளி ஓங்கவும் - மேல்மேல் துள்ளிப் பாய்தலாலும்; களிப்பால்-(மதுப்பருகிய) களிப்பினாலே, சோர்ந்த உடை இலாதாரை ஒத்தார்-நெகிழ்ந்து ஆடையில்லாதவரான திகம்பரரை யொத்தார்.

கட் குடியர் மெய்ம் மறந்த நிலையில் ஆடை சோர நிற்பர், அது போன்று ஆடவரும் மகளிரும் இராமபிரான் வரவால் உடல் பருத்தலாலும் துள்ளிக் குதித்தலாலும் ஆடை நெகிழ நின்றனர். என்க. சமணரில் ஓர் வகையினரான திகம்பரர் வேண்டும் என்றே உடை தரியாராதலின் 'வாங்குதும் துகில்கள் என்னும் மனமிலர்' எனப்பட்டது. இங்கு மெய்ம்மறந்த நிலையில் துகில் நெகிழ நின்றனர். இந்திரசித்து, இறந்த காலத்து உற்ற மகிழ்ச்சியால், 'எல்லோரும் தூசுநீக்கி யேறிட வார்த்தபோது, சொல்லாத விரதத்தார் தம் கடவுளர் கூட்டமொத்தார்' என்று ஆடையை நீக்கியதாகவே கூறியது காண்க. (யுத்த. 3106); துகில்கள் வாங்கும் மனமிலர் என்றது. துகில் களைந்து நிற்றல் நாகரிகம் அன்றாகலின், 'உடுக்கை யிழந்தவன கைபோல' (குறள். 788); என்றது காண்க. தாங்குதல்: 'தன்னையுந் தாங்காலாதாள் துகிலொன்றுந் தாங்கிநின்றாள்' தையல்; கட்டழகு-அது அழகினை யுடைய மகளிர்க்குஆயிற்று. தையல் என்ற சொல்லைக் கலித் தொகையிலேயே காணலாம். 'தையால் தம்பலம் தின்றியோ' (கலித். 65, 13); இச்சொல்லைப்பிற எட்டுத்தொகை நூல்களிலோ, பத்துப் பாட்டிலோ காண்டரிது. தையல் - தைத்தல் என்ற பொருளிலேயே காணப்படுகிறது. பெருங் கதையில் இச் சொல்லைக் காணலாம். மற்றும், , தையற்கடனின் றெடுத்தவனைத் தைலக்கடலின் றலையுய்த்தார்' (அயோத்தி தைலம் 75); 'நானு மென் சிந்தையு நாயகனுக் கெவ் விடத்தோம், தானுந்தன் தயலுந் தாழ்சடையோ னாண்டிலனேல்' (திருவாச. கோத்தும்பீ. 15) காண்க.

பி ம். 1. துயில்கள் ; என்று, என்ன ; மனமிலரெனினும், மனமிலராலும்.
2. தாங்கல மென்ற போதும், நாங்குறப் பொருந்தாரங்கன்.
3. மேனி சிறுற.
4. களியாற். 12

4257. வேசிய ருடுத்த கூறை
வேந்தர்கள் சுற்ற வெற்றிப்
பாசிழை மகளி ராடை
யந்தணர் பறித்துச் சுற்ற

வாசமென் கலவைச் சாந்தென்
றினையன மயக்கந் தன்னால்
பூசினர்க் கிரட்டி யானார்
பூசலார் புகுந்து ளோரும்.

வேசியர் உடுத்த கூறை - விலைமகளிர் புனைந்த ஆடையை (அப்பொழுது எழுந்த தடுமாற்றத்தின் விளைவாக), வெற்றி வேந்தர்கள் சுற்ற - வெற்றி பொருந்திய மன்னர்கள் தரிக்கவும், பசுமை இழை மகளிர் ஆடை - பைம் பொன்னிலாகிய அணிகளை அணிந்த மாதர்களின் ஆடையை, அந்தணர் பறித்து சுற்ற - அந்தணர் வலியக்கைப்பற்றிக் கொண்டு சுற்றிக் கொள்ளவும், வாசம் - நறுமணப் பொருள்களும், மெல் கலவை சாந்து மெல்லிய கலவைச் சாந்தும், என்று இனையன - என்ற இவற்றை, பூசலார் - பூசிக்கொள்ளாதவராய், புகுந்துளோரும் - புக்கோரும், மயக்கம் தன்னால் - (மக்களின்) நெருக்கடியால், பூசினர்க்கு இரட்டி ஆனார் - கலவைச் சாந்தைப் புனைந்து கொண்டவரைக் காட்டிலும் இரு மடங்கு அப்பிக் கொண்டார்கள்.

வேசியர் - பொருட் பெண்டிர்; வேஸ்யா - வடசொல். கூறை - புத்தாடை; இப்பொழுதுகூடத் திருமணங்களில் மணமகள் தரிக்கும் புத்தாடை கூறை எனப்படும். இத்தகைய ஆடையைப் பேரளவில் நெய்யும் நாடு இன்றும் கூறை நாடு என வழங்குவது காண்க. வெற்றிப் பாசிழை மகளிர் எனக் கொள்ளாது வெற்றி என்ற சொல் வேந்தர்க்கு இயைக்கப்பட்டது. என்ற இனையன என்பது தொக்கது. பறித்துச் சுற்றியது: உடுக்கையிழந்தவன் கையாகலின் என்க. மயக்கம் - ஒன்றுடன் ஒன்று சேருவது எழுத்து மயக்கம், என்ற இடத்துப் போன்று. இராமபிரானைக் காண வேண்டும் என்ற பேரார்வத்தால் ஒருவர் ஆடையை மற்றொருவர் புனைய நேர்ந்தது என்க. இனிப் பூசலார் என்பதற்கு இயல்பாகவே ஆசிரம நிலையைப் பொறுத்துக் கலவைச் சாந்தினைப் பூசாதவரான பிரமசாரிகளும், துறவியர்களும் கூட்ட நெருக்கத்தால் பூச நேர்ந்தது எனினுமாம்.

பி - ம். 1. வேறு வெற்பில், மற்றைப், ஏறப்.

3. மயக்கத்தன்னர்.

4. பூசலாற், வேதியர் ; புகுந்துனோர்கள். 13

4258. இறைப்பெருஞ் செல்வ நீத்த
வேழிரண் டாண்டும் யாரும்
உறைப்பில ராத லானே
வேறிருந் தொழிந்த வன்னார்
பிறைக்கொழுந் தனைய நெற்றிப்
பெய்வளை மகளிர் மெய்யை
மறைத்தனர் பூணின் மைந்த
ருயிர்க்கொரு மறுக்கந் தோன்ற.

இறை - அரசனாகி ஆட்சி நடத்துவதாகிய, பெரு செல்வம் - பெரிய செல்வத்தை, நீத்த - விட்டுச் சென்றிருந்த, ஏழிரண்டு ஆண்டும் - பதினான்கு ஆண்டுகளும், உறைப்பிலர் ஆதலால் - மன மகிழ்ச்சி யுறுதவராதலின், (தம் கணவன்மாருடன் கூடாது), வேறு இருந்து ஒழிந்த - தனித்திருந்து கழித்த, பிறை கொழுந்து அனைய நெற்றி - பிறைமதி போன்ற நுதலினையும், பெய் வளை - அணியப் பெற்ற வளையல்களையும் உடைய, மகளிர் அன்னார் - அந் நகரத்து மகளிர், யாரும் - அனைவரும், மைந்தர் - ஆடவரின், உயிர்க்கு ஒரு மறுக்கம் தோன்ற - ஆடவர் உயிர்க்கு ஒரு கலக்கம் உண்டாகுமாறு, மெய்யை பூணின் மறைத்தனர் - தமது உடலை அணிகலன்களால் மூடிக் கொண்டனர். ஏ, அசை.

இராமபிரான் வனம் படர்ந்த நாளில் இருந்து தத்தம் கணவருடன் உடற் சேர்க்கை யற்றிருந்த மகளிர் அனைவரும், அவன் மீட்டும் வந்தமை கண்டு பிரிந்த காலத்துக் களைந்திருந்த பல அணிகலங்களையும் சுமந்து தம்மை அழகுபடுத்திக் கொண்டு, ஆடவர்க்குக் காம விகாரம் மிகும்படி செய்தனர் என்க. இனி அவர்கட்கு இயல்பாக அமைந்த அழகினை அணிகலச் சுமையால் மறைத்தனரே என ஆடவர் மறுகினர் எனினுமாம்; 'உமிழ் சுடர்க் கலன்கள் நங்கை யுருவினை மறைப்ப தோரார், அமிழ்தினைச் சுவைச் செய்தென்ன வழகினுக் கழகு செய்தார்; இமிழ்திரைப் பரவைஞால மேழைமையுடைத்து' (பால. கோலங். 3); என்று இரங்கியது காண்க. மறுக்கம்: 'வானவர் மறுக்கங் கண்டான்' (யுத். மாயா சீதை. 2867). பெய் வளை: வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை- பூணின் மறைத்தனர் எனப்பட்டது. வளை ஓர் பூண் அன்றோ எனின், அது மகளிர் கையில் என்றும் இருக்க வேண்டியதாகலின் என்க; 'வளைபட்டகை மாதொடு மக்களெனும' (கந்தரநுபூதி).

பி ம். 1. காற்றும்.

2. மிறைப்பு ; வென்று ; மின்னூர்.

3. மெய்ம்மை.

4. மறைப்பன பூண்கள் ; உயிர்களும், மறுகுந். 14

4259. விண்ணுறை வோர்தந் தெய்வ
வெறியொடும் வேறு ளோர்தம்
தண்ணறு நாற்றந் தம்மிற்
றலைதடு மாறு நீரால்
மண்ணுறை மாத ரார்க்கும்
வானுறை மடந்தை மார்க்கும்
உண்ணிறைந் துயிர்ப்பு வீங்கு
மூடலுண் டாயிற் றன்றே.

விண் உறைவோர் தம் - வானுலகத்தில் வாழ்கின்றவரின், தெய்வம் வெறியொடும் - தெய்வீக நறுமணத்தோடும், வேறு உளோர் தம் - (வேறுலக) மனித உலகத்துள்ளவரின், தண்நறு நாற்றம் - குளிர்ந்த நறிய மணம், தம்மில் தலை தடுமாறு நீரால் - தம்மில் விரவி வீசுகின்ற தன்மையால், மண் உறை மாதரார்க்கும் - பூவுலகில் வதியும் மகளிர்க்கும், வான் உறை மடந்தைமார்க்கும் - விண்ணுலகத்து நின்ற மாதர்கட்கும், உள் நிறைந்து உயிர்ப்பு வீங்கும் - உட்புறத்து நிறைந்து பெருமூச்சு மிக்கு வெளிப்படுகின்ற, ஊடல் உண்டாயிற்று - பிணக்கு நிகழ்ந்தது. அன்று, ஏ : அசை, தேற்றமுமாம்.

வானவர்க்கு இயல்பாகவுள்ளது தெய்வமணம். மண்ணவர்க்கு உடற்கண் உள்ள மணம் கலவைச் சாந்து முதலியவற்றால் உண்டாய செயற்கை மணம்; இரு சாராரும் இயைந்து நின்ற நிலையில் மணவேறுபாடு தோன்ற, இருபுறத்துப் பெண்டிரும் தத்தம் ஆடவர் பிற மகளிரைத் தோய்ந்தனர் என்று கொண்டு ஊடல் தொடங்கினர் என்க. கிட்கிந்தா. 466-ம் அதன் உரையும் காண்க. தெய்வ வெறி : 'தெய்வ வெறியே கமழும் நறுங்குஞ்சி' (சுந்தர. 546); இனி மண்ணுறை ஆடவர் மகளிர்க்கும் இயல்பாகவே ஓர் மணம் உடற்கண் உண்டென்றும் உடற் கூற்றிலக்கணம் கூறும். பத்மினி முதலிய மகளிர்க்கியல்பான மணம் கூறப்பெறுதலும், கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டென்று கூறப்பெறுதலும்

இங்குக் குறிக்கொள்ளத் தகும். உண்ணிறைந்து: 'உண்ணிறை யூடலிற் ரேூற்ற வோதிமம்' (யுந்த. 337); 'உண்ணிறைந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டுமே' மயக்கவணி.

பி-ம். 1. உறையமரர், உலகோர்தந்.
2. தன்னுறு.
4. விங்கி.

15

## வீடணுதியர்க்கு அரண்மனையைக் காட்டுமாறு இராமபிரான் பரதனுக்குக் கட்டளை யிடுதல்

4260. ஆயதோ ரளவி லையன் பரதனை யருளி னேக்கித்
தூயவீ டணற்கு மற்றைச் சூரியன் மகற்குந் தொல்லை
மேயவா னரர்க ளாய வீரர்க்கும் பிறர்க்கு நந்தம்
நாயகக் கோயி லுள்ள நலமெலாந் தெரித்தி யென்றுன்.

ஆயது ஓர் அளவில் - அத்தகைய ஒப்பற்ற சமயத்தில், ஐயன் - இராமபிரான், பரதனை அருளின் நோக்கி - பரதனை அன்புடன் பார்த்து, 'தூய வீடணற்கும் - (உள்ளத்) தூய்மை வாய்ந்த வீடணனுக்கும், மற்றை - மற்றும், சூரியன் மகற்கும் - சூரியன் புதல்வனுன சுக்கிரீவனுக்கும், தொல்லை மேய - பழைமை வாய்ந்த, வாநரர்கள் ஆய வீரர்க்கும்-வாநரர்களாகிய வீரர்க்கும், பிறர்க்கும் - ஏனையோர்க்கும், நம் தம் - நம்முடைய, நாயகம் கோயில் உள்ள - தலைமைக் கட்டிடமான அரண்மனைகளில் உள்ள, நலம் எலாம் தெரித்தி - சிறப்புக்கள் அனைத்தையும் அறிவிப்பாயாக', என்றுன்- என்று கட்டளை யிட்டான்.

வானவர்கள் இராமபிரான் அவதரித்த காலத்தேயே வாநரங்களாக வந்தமையின் 'தொல்லை வாநரர்கள்' எனப்பட்டது. 'வானுளோரனைவரும் வாநரங்களா' (பால. திருவவ. 21); 'செப்பியென் குரங்காய் வந்தார் தனித்தனித் தேவரென்றுர்' (யுதந். 761); என்பது மாலியவான் கூற்று. நாயகக் கோயில்: (யுந்த. 4255); 'நாயகப் பெண் பிள்ளாய்' (திருப்பாவை. 7) என்றுற் போல; இங்குப் 'பொல்லா முத்து' (சீவக. 2184) என்ற இடத்துத் துளையிடா 'நாயக முத்து' என்று நச்சினர்க்கினியர் உரைத்தலும் காண்க.

நலம் - சிறப்பு ; அழகு. நாயகக் கோயில் : திருமால் எழுந்தருளி யிருக்கும் கோயில் எனினுமாம்.

பி - ம். 1. வீரன்.

2. வானரங்களாய ; பிறர்க்குமந்த, விளம்பி நந்தம்.

4. முற்றுங் காட்டுதிர் நம்பி. 16

## இராமபிரான் கட்டளையால் துணைவர்களோடு பரதன் நாயகக் கோயிலிற் புகுதல்

4261. என்றலு மிறைஞ்சி மற்றைத்
துணைவர்கள் யாவ ரோடும்
சென்றன னெழுந்து மாடம்
பலவொரீஇ யுலகிற் றெய்வப்
பொன்றிணிந் தமர ரோடும்
பூமக ளுறையு மேருக்
குன்றென விளங்கித் தோன்று
நாயகக் கோயில் புக்கான்.

என்றலும் - என்று இராமபிரான் கட்டளையிடவே, (பரதன்) இறைஞ்சி - வணங்கி, மற்றை துணைவர்கள் யாவரோடும் - பிற நண்பர்கள் எல்லாரோடும், எழுந்து சென்றனன் - எழுந்து சென்று, மாடம்பல ஒரீஇ - மாடங்கள் பலவும் கடந்து, பொன் திணிந்து - பொன்னாற் செய்யப்பட்டு, அமரரோடும் - தேவரோடும், பூ மகள் உறையும் - தாமரை மலரில் உள்ள திருமகள் வதிகின்ற, மேரு குன்று என - மேரு மலையை ஒப்ப, உலகில் - உலகில், விளங்கி தோன்றும் - திகழ்கின்ற, தெய்வம் - தெய்வத் தன்மை வாய்ந்த, நாயகம் கோயில் புக்கான் - நாயகக்கோயிலிற் புகுந்தான்.

மேருக் குன்றென ; இங்கு, 'ஊரினிந் நெடுங் கோபுரத் துயர்ச்சி கண்டுணர்ந்தால், மேரு வெங்ஙனம் விளர்க்குமோ முழு முற்றும் வெள்கி' (சுந்தர. 115) ; 'மேருவை நிறுத்தி வெளி

செய்ததுகொல்' (சுந்தர. 161); 'கடவுள் மால்வரை கண் விடுத் தன்ன' (சிறுபாண். 205, 206) ஒப்பு நோக்கத் தகும்.

பி-ம். 1. அவர்களோடு மெழுந்தன னிறைஞ்சி வல்லே.
2. சென்றன சுதை செய்மாடம்.
3. அமரர் நாடும்; பூமகன்; உறைந்து வாழும்.
4. குன்றமு நாண வோங்கும்; புக்கார். 17

## நாயகக் கோயிலைக் கண்ட வீடணனுதியர் வியத்தல்

4262. வயிரமா ணிக்க நீல மரகத முதலா யுள்ள
செயிரறு மணிக ளீன்ற செழுஞ்சுடர்க் கற்றை சுற்ற
உயிர் துணுக் குற்று நெஞ்சு முள்ளமு மூச லாட
மயர்வறு மனத்து வீர ரிமைப்பிலர் மயங்கி நின்றார்.

மயர்வு அறும் மனத்து - என்றும் மயக்கமில்லாத மனமுள்ள, வீரர் - வீரரான வீடணன் முதலானவர்கள், வயிரம் மாணிக்கம் நீலம் மரகதம் முதலாய் உள்ள - வயிரமும் மாணிக்கமும் நீலமும் மரகதமும் முதலாகவுள்ள, செயிர் அறு - குற்றம் தீர்ந்த, மணிகள் ஈன்ற - இரத்தினங்கள் காலுகின்ற, செழு சுடர் கற்றை - வளமை யுள்ள ஒளித் தொகுதிகள், சுற்ற - எங்கும் சூழ்தலால், உயிர் - தமது உயிர், துணுக்குற்று - அச்சம் பொருந்தி, நெஞ்சும் - மனமும், உள்ளமும் - (அதனைத் தூண்டும்) எண்ணமும், ஊசல் ஆட - ஒரு நிலை நில்லாமல் தடுமாற, இமைப்பு இலர் - கண் கொட்டாமல் மயங்கி நின்றார் - திகைப்புற்று நின்றார்.

இதுகாறும் அத்தகைய பேரொளி படைத்த மாளிகையைக் கண்டிராதவர் ஆகலின் மயங்காத வீடணன் முதலியோரும் திகைத்து நின்றார் என்க. முதலாய் என்றது கொண்டு நவமணி களும் கொள்க. நவமணிகள் - கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வைரம். (திவா.); நவமணிகளின் பிறப்பும், அவற்றின் குணதணங்களும், அவற்றை அணிய வேண்டிய முறையும், அணிந்தால் அவற்றுள் விளையும் நலன் தீங்குகளும் பிறவும், பரஞ்சோதியார் இயற்றியருளிய திரு விளையாடல், மாணிக்கம் விற்ற படலத்துக் காண்க. நெஞ்சும்

உள்ளமும் என வெவ்வேறு கூறினர். அந்தக் கரணம் நான்கு; மனம், புத்தி, சித்தம், அகங்காரம். ஞானத்திற்குச் சாதனமாகத் தேகத்தினுள்ளே இருத்தலின் அந்தக் கரணம் எனப்பட்டது. பூதங்களின் சத்துவ குணக்காரியமாகலான் அந்தக் கரணத்திற்குச் சத்துவம் என்றும் நாமமாம். அந்தக் கரணத்தின் பரிணுமத்தை விருத்தி யென்பர். அவ் விருத்தி நான்கு வகைப்படும். பதார்த் தங்களின் நன்மை தீமைகளை நிச்சயிக்கின்ற விருத்தியைப் புத்தி என்றும், சங்கற்ப விகற்ப விருத்தியை மனம் என்றும், சிந்தா விருத்தியைச் சித்தம் என்றும், நான் என்னும் அபிமான விருத்தியை அகங்காரம் என றும் சொல்லுவர். சித்தத்தை மனத் திலும், அகங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி அந்தக் கரண விருத்தி இரண்டென்றும் கூறுவர். காமக்ரோதாதி ஆறு பகை வர்க்கங்களைக் காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றில் அடக்கு தல் போலவும், இறைவன் ஐந்தொழிலை மூன்றில் அடக்குதல் போலவும் என்க. (விரிவினைக் கைவல்யமாதி நூல்களிற் கண்டு தெளிக.) இனி நெஞ்சு நினைப்பது: 'நெஞ்சே நீ நினையாய்' (தேவா. 118, 6); உள்ளம் - உள்ளிருந்து நினைக்கத் தூண்டுவது என்று வேறுபாடு கூறலாம். 'உள்ளம் உள்கலந் தேத்த வல்லார்க் கலார்' (தேவா. 1124) என வருவன காண்க. மயர்வறு: 'மயர்வற மதிநல மருளினன்' (திருவாய். 1 - 1).

### பரதன் அம்மாடத்தின் வரலாறு கூறுதல்

4263. விண்டுவின் மார்பிற் காந்து
மணியென விளங்கு மாடம்
கண்டனர் பரதன் தன்னை
வினவின ரவர்க்குக் காதற்
புண்டரீ கத்துள் வைகும்
புராதனன் கன்னற் ருேளான்
கொண்டநற் றவந்தன் ருலே
யுவந்துமுன் கொடுத்த தென்ருன்.

விண்டுவின் மார்பில் காந்தும் - திருமாலின் திருமார்பிலே ஒளிவிடுகின்ற, மணி என - கவுத்துவ மணியைப் போன்று,

விளங்கும் மாடம் - திகழ்கின்ற அந்த மாடத்தை, கண்டனர் - கண்ணுற்றவராய், பரதன் தன்னை - பரதனை நோக்கி, வினவினர் அவர்க்கு - (அதன் வரலாற்றைக்) கேட்ட, வீடணனுதியர்க்கு, (அந்தப் பரதன்), 'புண்டரீகத்துள் வைகும் புராதனன் - தாமரை மலரில் வாழ்பவனுகிய பழமை சான்ற பிரமதேவன், கன்னல் தோளான் - கரும்பு போன்று (இன்பத்தை விளைக்கும்) தோளை யுடைய இக்குவாகு, கொண்ட - மேற்கொண்ட, நல்தவம் தன்னுலே - சிறந்த தவத்தின் விளைவாக, உவந்து - மகிழ்ந்து, காதல் - அன்புடன், முன் கொடுத்தது - முன்னர் அவனுக்குக் கொடுத்ததாகும் இது' என்முன் - என்று கூறினுன.

விண்டு : விஷ்ணு என்னும் சொல்லின் திரிபு. 'அடல் விண்டுவென, ஒல்வானுமிவன்' (யுத்த. 1746); சர்வவியாபி என்பது பொருள் என்பர். மணி : கவுத்துவ மணி. 'பருமணி வண்ணன் மார்பிற் செம்மணி' (யுத்த, 879); காதல் நான் முகன் என இயைத்தலுமாம். காதல் நான் முகனுலும்' (யுதத். 408); என்று முன் வந்தது காண்க. காதல் நான் முகன் : திரு மாலின் நாபிக்கமலத்துத் தோன்றி அவனது காதற்குப் பாத்திர மானவன் என்க. 'தனிக் காதலைப் பேரனை' (யுத்த. 1777); என்றது காண்க. காதல் புதல்வன் : அநுமனை 'மாருதத்தின காதல்' என்று கூறியது காண்க. இனி காதல் புண்டரீகம் என்று 'பூவெனப்படுவது பொறிவாழ் பூ' வாதலினுலும் திரு மகள் அம்மலரில் உறைவதாலும் யாவரும் ஆசை கொள்ளும் தரமரை எனினுமாம். இங்கு திருக்கோவையா முதல் செய்யுட்குப் பேராசிரியர் வகுத்த உரை காணத்தகும். பிரமதேவனுல் நிருமாணிக்கப்பட்டது அம்மாடம் என்க.

பி - ம். 1. கோயில்.

2. வினவின வர்க்கு, வாங்கு.

3. புராதன னன்பிற் பூசை. புராதனன் கன்னுற் ருேளான், புராதன னைகன்ற தோளான்.



'கொண்டு வந்தனனந்நாளே யுவந்து கொண்டளித்த தென்முன்,
எண்டவந் தன்னினுலே யுவந்து முன்னளித்ததென்றுன்
கொண்டபின் னவனன்பா லெங்குலத்து ளோர்க்களித்த
[தென்முன்.

## அவர்கள் அம்மாடத்தினின்று வேறோர் மண்டபம் சேர்தல்.

4264. பங்கயத் தொருவ னிக்கு வாகுவிற் களித்த பான்மை
இங்கிது மலராள் வைகு மாடமென் றிசைத்த போதின்
எங்களாற் றுதிக்க லாகு மியல்பதோ வென்று கூறிச்
செங்கைகள் கூப்பி வேறோர் மண்டப மதனிற் சேர்ந்தார்.

பங்கயத்து ஒருவன் - தாமரை மலரில் வதிபவனுகிய ஒப்பற்ற நான்முகன், இக்கு வாகுவிற்கு - இட்சு வாகுவிற்கு, அளித்த - கொடுத்த, பான்மை - இயல்பினைக் கொண்ட, இங்கு இது - இங்கே காணப்படும் இம்மாடம், மலராள் வைகும் மாடம் - திருமகள் குடிகொள்ளும் இடம் ஆகும், என்று - என்று, இசைத்த போதில் - (பரதன்) புகன்ற அளவில, '(இது) எங்களால் துதிக்கல் ஆகும் இயல்பதோ - எங்களால் புகழக்கூடிய இயல்பினையுடையதோ,' என்று கூறி - என்று மொழிந்து, (அதனைப் பாராட்டித் தமது) செகைகள் கூப்பி - செங்கரங்களைக் குவித்து, (வீடணன் முதலானோர்) வேறு ஓர் மண்டபம் அதனில் சேர்ந்தார் - மற்றொரு மண்டபத்தை அடைந்தார்கள். ஓகாரம்: எதிர்மறைப்பொருள்.

இக்குவாகு: கரும்பன்ன தோளையுடையவன் என்பது பதப்பொருள். சூரிய குல முதல்வன்: 'இக்ஷ்வாகு வம்சப்ரபவோ' (வான்மீகம்) என்று வருவது காண்க. இவன் மனு தும்முகையில் அவன் மூக்கிலிருந்து பிறந்தவன். இவனுக்கு நூறு புதல்வர்கள்; அவர்களில் ஒருவனான விகுக்ஷி என்பவன் ஒருநாள் தந்தை கட்டளைப்படி திதிக்கு ஊண் கொண்டுவருமாறு சென்று, அங்கு பசியின் மிகுதியால் தான் வேட்டையாடிக் கொன்ற முயல் மாமிசத்தில் சிறிது தின்று, பின் கொண்டுவந்து கொடுத்தான். அது கண்டு தந்தை தவம் மேற்கொண்டனன். பிரமன் இவனுக்கு வாகுவலயம் தந்தனன் என்ப. திருவரங்கப் பெரிய கோவிலில் அரங்கப் பெருமானைப் பிரதிட்டை செய்தவன் இவன் என்பர். இவனை இக்ஷுவின் குமரன் என்றும் சொல்வர். (அபி. சிந்) 'ஆடுவமே கொட்டிச் செங்கையே' (பாரதக் கும்மி).

1. ஒருவல்லிக் கூப்பாங்குற, ஒருவனிக்கு வாகுவுக்கருளும், பண்பால், பான்மைத்து.
2. இங்கித, மலரோன், தெய்வ பூசை, நல்குமாடம், இசைந்தலோடும்.
3. இயல்பிற்றே.
4. செங்கரம், மண்டபந்தன்னில். 20

## சுக்கிரீவன் இராமன் முடிசூட்டுநாள் தெரிந்திடாமைக்குக் காரணம் என்? என்று பரதனை வினவல்

4265. இருந்தன ரனைய மாடத்
தியல்பெலா மெண்ணி யெண்ணிப்
பரிந்தன னிரவி மைந்தன்
பரதனை வணங்கித் தூயோய்
கருந்தடங் கண்ணி னற்குக்
காப்புநா ணணியு நன்னாள்
தெரிந்திடா திருத்த லென்னோ
வென்றலு மண்ணல் செப்பும்.

வீடணன் முதலியோர், அனைய மாடத்து இயல்பெலாம் எண்ணி எண்ணி இருந்தனர் - அந்த மாடத்தின் சிறப்பியல்புகள் அனைத்தினையும் எண்ணி எண்ணி இருந்தனர்; (அப்பொழுது) இரவி மைந்தன் - சூரிய புத்திரனான சுக்கிரீவன், பரிந்தனன் - அன்பு கொண்டவனாய், பரதனை வணங்கி - பரதனைப் பணிந்து, தூயோய் - பரிசுத்தமானவனே! கருதட கண்ணினற்கு - கரிய பெரிய விழிகளையுடையவனாகிய இராமபிரானுக்கு, (முடி சூட்டிற்காக) காப்பு நாண் அணியும் - காப்பு நாண் புனைவதற்கு ஏற்ற, நல் நாள் - சிறந்த நாளை, தெரிந்திடாது இருத்தல் - ஆராயாதிருப்பது, என்னோ - என்ன காரணம்பற்றி' என்றலும் - என்று வினவிய அளவில், அண்ணல் செப்பும் - பரதாழ்வான் கூறலுற்றான். ஓ : வினா.

காப்பு நாண் அணிதற்குரிய நாளைத் தெளிந்திடாமைக்குத் தக்க காரணம் இருக்கும். ஆதலின் அதனை அறியவே 'தூயோய்' என விளித்தான் சுக்கிரீவன் என்க. கருந்தடங் கண்ணினன் இராமபிரான், காப்பு நாண்: 'உன் கழுத்தினனுன் மகற்குக் காப்பு நாணு மென்றான்' (அயோத்தி. நகர்நீ. 49); மணவினைகளி

லும் முடிசூட்டிலும் விரதங்களிலும் ஆடவரும் மகளிரும், மங்களக் காப்பு நாண் முறையே முன்கையிலும் இடது முன்கையிலும் அணிவது மரபு.

பி - ம். 1. இனைய.

2. பரிந்தனர், பண்பாற்.

3. தடமுகிலினுர்க்கு

4. இருப்பதென்னே.

21

தீர்த்தங்களெல்லாம் வருவதற்காகவே தாழ்க்கின்ற தென்று பரதன் விடைகூற, சுக்கிரீவன் அநுமனைக் கடைக்கணிக்க, அவன் தீர்த்தங்கள் கொணரச் செல்லல்

4266. ஏழ்கட லதனிற் றேய
மிருநதி பிறவிற் றேயம்
தாழ்விலா திவண்வந் தெய்தற்
கருமைத்தோர் தன்மைத் தென்ன
ஆழியொன் றுடையோன் மைந்த
னநுமனைக் கடிதி னேக்கச்
சூழ்புவி யதனை யெல்லாங்
கடந்தனன் காலின் தோன்றல்.

ஏழ்கடல் அதனில் தோயம் -ஏழு கடல்களில் உள்ள தீர்த்தங்களும், பிற இருநதியில் தோயம் - மற்றுமுள்ள பெரிய நதிகளில் உள்ள புண்ணிய தீர்த்தங்களும், தாழ்வு இலாது - கால தாமதம் சிறிதும் இன்றி, இவண் வந்து எய்தற்கு - இவ்விடம் வந்து சேர்தற்கு, ஓர் அருமை தன்மைத்து - ஒரு அரிய தன்மையையுடையது என்ன - என்று (பரதன் பகர), ஒன்று ஆழி உடையோன் மைந்தன் - ஒரு சக்கரத்தையுடைய சூரியன் புதல்வனான சுக்கிரீவன், அநுமனை கடிதின் நோக்கி - அநுமனை விரைந்து பார்க்க, (தீர்த்தங்கள் கொணருமாறு) சூழ்புவி அதனை எல்லாம் கடந்தனன் - கடல் சூழ்ந்த பூமியையெல்லாம், கடந்தனன் - கடந்து சென்றான்.

ஏழ்கடல்: (கிட்கிந்தா. 175) உரை காண்க. தோயம், நீர்: வடசொல் 'பத்திரம் புஷ்பம் பலம் தோயம்' (பகவத். 9 : 26);

'தோயமும் புணரியும்' (சுந்தர. 187); 'துய்யவொளி யானனம் கரிய விழி காதுவாய் தோயத்திலுண்டோ' (சிவப். தனிப்பா.) தாழ்வு : குழைவு எனினுமாம். ஆழி ஒன்றுடையோன் : சூரியன்: அவன்பவனி ஊரும் தேர்க்கு ஆழியொன்றென்ப. 'பனிவென் ருேங்கும் ஓராழித் தேருங் கண்டவுனக்கு' (சுந்தர. 756); காலின் தோன்றல் அநுமன்.

பி-ம். 1. கடறன்னில்.

2. உவமைத்தோ தன்மைத்தென்ன, அருமைத்தோ தன்மைத்தென்ன. 22

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

### பரதன் சொல்லியனுப்ப, வசிட்ட முனிவன் வருதல்

4267. கோமுனி யோடு மற்றை மறையவர்க் கொணர்க வென்று
ஏவினன் தேர்வ லான்சென் றிசைத்தலு முலக மீன்ற
பூமகன் தந்த காதற் புனிதமா தவன்வந் தெய்த
யாவரு மெழுந்து போற்றி யிணையடி தொழுது நின்ருர்.

'கோமுனியோடு - முனிவர்கள் தலைவரான வசிட்ட முனிவனுடன், மற்றை மறையவர் கொணர்க - ஏனைய அந்தணரையும் அழைத்து வருக', என்று - என்று, ஏவினன் (பரதன் சுமந்திரனுக்குக்) கட்டளையிட்டனன்; (உடனே) தேர்வலான் - தேர் ஓட்டுவதில் சமர்த்தனுன சுமந்திரன், சென்று இசைத்தலும் - போய்ச் சொல்லியவளவில், உலகம் ஈன்ற - உலகனைத்தையும் படைத்த, பூமகன் தந்த - பிரமன் பெற்ற, காதல்-அன்புக்குப் பாத்திரமான, புனிதன் மாதவன் வந்து எய்த - தூய்மையான பெரிய தவத்தை யுடையவன் ஆன வசிட்ட முனிவன் வந்து சேர, யாவரும் எழுந்து போற்றி - எல்லோரும் எழுந்து துதித்து, இணை அடி தொழுது நின்ருர் - அடியிணையை வணங்கி நின்ருர்.

கோமுனி : வசிட்டன் 'முனிவர் வந்தார் ,அகத்தியனும் வந்தான்' (நன்.) என்ற எடுத்துக் காட்டில், முனிவருள் ஒருவரேனும், அகத்தியன் சிறப்புப்பற்றித் தனித்துக் கூறப்பட்டமை காண்க. தேர்வலான் ; சுமந்திரன், இவன் முக்கிய அமைச்சனுமாவான்.

என்ற இருவரும் இணைபிரியாத சத்திகள் என்று காட்ட. கிழமை: உரிமை.

பி - ம். 1. அனகன், அப்போ.

2. அவரை.

3. உரிய மாமகளிரோடு முவந்தனர், உரியன மலர்களோடு முகந்தனர் ஒழிவில் செல்வம்.

4. துய்த்தற் கேய்ந்த. 24

## இராமபிரானுடைய முடிசூட்டுநாளைக் குறித்துப் பலர்க்குஞ் செய்தி போக்குதல்

4269. இந்திர குருவு மன்னு ரேனைய ரென்ன நின்ற
மந்திர விதியி னரும் வசிட்டனும் விரைந்து விட்டார்
சந்திர கவிகை யோங்குந் தயரத ராமன் தாமச்
சுந்தர மவுலி சூடு மோரையு நாளுந் தூக்கி.

இந்திர குருவும் அன்னர் - தேவ குருவான பிருகற்பதியை நிகர்த்தவராய், ஏனையர் என்ன நின்ற - எத்தனையோ பேர் என எண்ணுமாறு மிகப் பலராகவிருந்த, மந்திர விதியினரும் - மந்திர விதிகளில் வல்லுநரும், வசிட்டனும் - வசிட்ட மாமுனிவனும், சந்திரன் கவிகை ஓங்கும் - சந்திரன் போன்ற ஒற்றை வெண் கொற்றக்குடை உயர்ந்து விளங்கப்பெற்ற, தயரத ராமன் - தயரத ராமனுக்கு, தாமம் - ஒளியுடன் கூடியதும், சுந்தரம் - அழகுள்ளது மான, மவுலி சூடும் - திருமுடி சூடுகின்ற, ஓரையும் நாளும் தூக்கி - நல்ல வேளையையும் நாளையும் ஆராய்ந்து எழுதி, விரைந்து விட்டார் - விரைவிற் செய்தி அனுப்பினர்.

இந்திரகுரு: பிருகற்பதி. 'வேதியர் வசிட்டனைத்தார்' (அயோத் கைகேசி. 66) என்று முன் வந்துள்ளமை காண்க. தாமம்: ஒளி, ஓரை: ஹோரா என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து வந்ததென்பர். இச்சொல் தொல்காப்பியத்திலேயே இடங்கொண்டுள்ளமையின் தமிழ்ச் சொல் என்பர். 'ஓரையு நாளுந் துறந்த வொழுக்கம்' (தொல். 135); ஆங்கிலத்தில் Hour என்றது காண்க. ஓரை: ஒரு முகூர்த்தத்தையும் குறிக்கும் 'மங்கலப் பெருங்கணி வகுத்த வோரையான்' (சீவக. 2411); 'ஒத்த வோரை நோக்கி' (பெருங்.

2, 4, 137); இக்கவி பூட்டுவில் பொருள் கோளில் அமைந்தது. 'எழுவாயிறுதி நிலைமொழி தம்முட், பெருவேணக்குடையது பூட்டு வில்லாடிம்' (நன். பொது. 64).

பி - ம். 1. இந்திரன், அன்னூர்க்கேணையர், அன்னூர்க்கேய்வன, அன்னுரேயின, என்ன நின்ருர், எனவு நின்ற,

2. விதியினுலே, விதியினுனும், முனிவர் மற்றை, விதியினுர்க்கும், மயர்வற வரைந்துவிட்ட, முனிவரும் விரைத்து விட்டான், வசிட்டனே விரைத்து விட்டான்.

4. சூட, சூட்ட, வாரமும், தூற்றி. 25

## மூவுலகத்தவரும் அயோத்தியில்வந்து கூடுதல்

4270. அடுக்கிய வுலக மூன்று
மாதரத் தூதர் கூற
இடுக்கொரு பேரு மின்றி
யயோத்திவந் திருத்தா ரென்ருல்
தொடுக்குறு கவியான் மற்றைத்
தொகையினை முடிவு தோன்ற
ஒடுக்குறுத் துரைக்குந் தன்மை
நான்முகத் தொருவற் குண்டோ.

ஆதரம் தூதர் - ஆர்வத்துடன் கூடிய தூதுவர் (அந்தத் திரு வபிடேகவைபவத்தை), அடுக்கிய உலகம் மூன்றும் கூற-ஒன்றன் மேல் ஒன்ருக அடுக்கியது போன்றுள்ள உலகம் மூன்றிலும் அறி விக்க, (அந்த மூன்று உலகங்களிலும்), இடுக்கு ஒரு பேரும் இன்றி- இடுக்கிலும் ஒரு பேரும் இல்லாமல், அயோத்தி வந்து இறுத்தார் என்ருல் - அயோத்தி மாநகரில் வந்து தங்கினர் எனின், மற்றை - வேறு, தொகையினை - (அந்நகரிற் கூடியவரின்) அளவினை, முடிவுதோன்ற - முடித்துக் காட்டுமாறு, தொடுக்குறு கவியான் - தொடுக்கின்ற கவியால், ஒடுக்குறுத்து உரைக்கும்-தொகுத்துச் சொல்லும், தன்மை - தகுதி, நான்முகத்து ஒருவற்கு உண்டோ - நான்கு முகங்களையுடைய ஒரு கடவுட்குத்தான் உள்ளதோ!

அடுக்கிய உலகம் மூன்றும்: 'அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்ருேர், கொடுத்தார் எனப்படும் சொல். (நாலடி.

100); ஆதரம்: பேரன்பு 'ஆதரம் பெருகுகின்ற வன்பினு லன்ன யொத்தும்' (சீவக. 189); இடுக்கு: சிறு சந்து அல்லது இடைவெளி. தொடுக்குறு: 'தொடுக்குங் கடவுட் பழம் பாடல்' (மீனுட்சி: பிள்ளை. வருகை); ஒடுக்குறுத்தல்-அடக்கிக் கூறுதல். ஒரு முகமின்றி நான்கு முகம் கொண்டிருந்தும் அயனுலும் முடியாதென்பான் நான்முகத் தொருவற்குண்டோ எனப்பட்டது. இதை முற்றும் கூறற்கு ஆயிரம் நாப்படைத்த ஆதிசேடனுலும் இயலாது என்று கூறும் உலக வழக்கும் காண்க. நான்முகத் தொருவற்கு: சிறப்பும்மை விகாரத்தாற்றெக்கது; கருத்துடை யடைமொழி அணி. பிரமற்கே இயலாதெனின் தனக்கெவ்வாறு இயலும் என்பது குறிப்பு.

பி - ம். 1. கூவ.

2. இறுத்தது. எய்திற்று.

3. அற்றைத், துளங்கியவுரையால், துழனியையிறுதி, துளங்குறு முடியால்;

4. ஒடுக்குவந்து. 26

## வசிட்டன் முதலியோர் ஸ்ரீராமனுக்கு அபிடேகச் செய்தியைத் தொழுது கூறுதல்

4271. அவ்வயின் முனிவ னேடும் பரதனு மரியின் சேயும்
செவ்விய நிருதர் கோனுஞ் சாம்பனும் வாலி சேயும்
எவ்வமி லாற்றல் வீரர் யாவரு மெழுந்து சென்றுங்
கவ்விய மவித்த சிந்தை யண்ணலைத் தொழுது
[சொன்னர்.

அவ்வயின் - அப்பொழுது, முனிவனேடும் - வசிட்ட முனிவனுடனே, பரதனும் - பரதாழ்வானும், அரியின் சேயும் - சூரியன் புதல்வனுன சுக்கிரீவனும், செவ்விய - செம்மையான பண்புள்ள, நிருதர்கோனும் - அரக்கர் தலைவனுன வீடணனும், சாம்பனும் - சாம்பவானும், வாலி சேயும் - வாலி மகனுன அங்கதனும், எவ்வம் இல் ஆற்றல் - குற்றமற்ற வன்மை வாய்ந்த, யாவர் வீரரும் - எல்லா வீரர்களும், ஆங்கு எழுந்து சென்று - அவ்விடத்தினின்று எழுந்து சென்று, அவ்வியம் அவித்த சிந்தை - பொருமை என்பதை அகற்றிய மனத்தினையுடைய, அண்ணலை - இராம

பிரானை, தொழுது - வணங்கி, சொன்னார் - (பட்டாபிடேகம் நாளைக்கு என்பதைக்] கூறினார்.

அரி: இது பலபொருள் ஒருசொல்: இங்கு சூரியன் 'அரிவிரசுந் துழாய்மகுடத் தரியுமிரண் டரிகளரு ளாண்மை யோரும்' (வி. பா. இராசசூய. 17) என்ற இடத்து அரி என்றது வண்டு. இந்திரன், வாயு என்ற பல பொருளில் வந்தமை காண்க. அரி: சூரியன் (பிங்). அவ்வியம்: பொறாமை 'அவ்விய நெஞ்சத் தான்' (குறள். 163); என்ற இடத்து, 'கோட்டத்தினைப் பொருந்திய மனத்தையுடையவன்' என்பர் பரிமேலழகர். 'அவ்வியமில்லார் அறத்தா றுரைக்கும் கால், செவ்வியர் ல்லார் செவி கொடுத்துங் கேட்கலார்' (நாலடி 322); என்ற நாலடியார் வெண்பாவின் எதுகையை இச்செய்யுள் ஒட்டியிருத்தல் காண்க. அவித்தல்: 'ஐந்தவித்தா னாற்றல்' (குறள். 25).

பி-ம். 1. அரியின் வேந்தும்

2. செவ்வெயில், வெவ்வியல்.

4. இலாத, அழித்த. 27

## முடிசூட்டிற்கு முன்னர்ச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யப் பணித்து வசிட்டன் சென்றிடுதல்

4272 நாளைநீ மவுலி சூட நன்மைசால் பெருமை நன்னாள்
காளைநீ யதனுக் கேற்ற கடன்மைமீ தியற்று கென்று
வேளையே காயு நெற்றி விழியினன் மேவு மென்பூப்
பூளையே சூடுவானைப் பொருவுமா முனிவன் போனான்.

(வசிட்ட முனிவன் இராமபிரானைப் பார்த்து), 'காளை-விடை போன்றவனே! நீ-நீ, மவுலி சூட - மகுடம் புனைதற்கு, நன்மை சால் - நன்மை மிகுந்த, பெருமை நல்நாள் - பெருமை சான்ற சிறந்த நாள், நாளை - நாளையாகும்; நீ - நீ, அதனுக்கு ஏற்ற - நீ அதற்குத்தக்க, மீது கடன்மை - மேம்பாடுற்ற கடமைகளை இயற்றுக - புரிவாயாக', என்று - என்று புகன்று, வேளையே காயும் - மன்மதனையே எரிக்க வல்ல, நெற்றி விழியினன் - நுதற் கண்ணையுடையவனும், மேவும் - விருப்பம் உண்டாக்கவல்ல, மெல் - மெல்லிய, பூ - பூவாக, பூளையே சூடுவானை பொருவும் - பூளைப்பூச்சூடுபவனுமான சிவபெருமானை நிகர்த்தவனுமான,

மாமுனிவன் போனுன் - பெருமைபெற்ற முனிவனுன வசிட்டனும் ஏகினுன்.

இச் செய்யுட் போக்குடன், 'நாளையே வெளிப்படுவர் நெரு நலேதம் நாளுள்ள கழிந்தனவா னயந்து கேண்மோ, வேளேயே யனேய வெழிற்ருேகை வாகை வேளேயே யனேய விறல் விசய னென்னும், காளேயே யடியேனுக் கிளேய காதற் கன்னிகைக்கு வரனென்று கருதுவாயே' (வி. பா. நிரைமீட்சி. 140); என்ற செய்யுளே ஒப்பு நோக்குக. நன்மை சால் நாள் என்று சொல்லி யமையாது பெருமை நன்னுள் என அநுவதித்தது, குறித்த நாள் சுபயோகத்துடன் கூடியிருப்பினும், மகுடம் அணிபவன் திரு நட்சத்திரத்திற்கும் அநுகூலம் விளேப்பதாயிருத்தல் வேண்டும் என்று கருதி; முன்னர் அயோத்தியா காண்டத்தில் இவ்வண்ணம் நாள் நாளே என்று கூறி இடர்ப்பட்டமை காண்க. காளே : உவமவாகுபெயர். 'கைத்தலத்துவரி நீரைக் கலக்கினுன் பயந்த காளே' (கிட்கிந்தா. 367); என்று அங்கதன் புகழப்பட்டமை காண்க. வேளேயே காயும் நெற்றி விழியினன் ; சிவபெருமான் பால. தாடகை. 1-ல் காண்க. தன்னுல் நியமிக்கப்பட்டு உலகத்து மக்கள் விருத்திக்குக் காரணமான மன்மதனேயே எரித்தது கொண்டு வேளேயே என்ற தேற்றம் வந்தது. மற்றும் காமம் எவர்க்கும் வெல்லற்கரிதாம தன்மை பற்றி.யெனினுமாம். மென் பூப்பூளே: பூளே வீயன்னதன் அங்கம்' (பால. தவ. 1); 'பூளேயாயின கண்டனே' (யுத்த. 1210); பூளேப்பூ அதன் மென்மையான், அமளியில் பரப்பப்படும் மலராதல் காண்க. 'ஐந்து மூன்றெடுத்த செல்வத்தமளி' (சீவக. 538); என்ற இடத்து, 'சிறுபூளே செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சேக்கை யோரைந்து' என்றமை காண்க. இங்கு 'பூளேயே சூடுவானேப் பொருவுவான்' எனப்பட்டது. அயோத்தி. மந்திரப் படலத்தும், 'மூவரினுல் வராமுனி வந்தெய்தினுன் என்றதும் காணத்தகும். வேளேயே காயு நெற்றி விழியினன் என்பது சிவபெருமானுக்கும், ஐந்தவித் தவனுன வசிட்டமுனிவனுக்கும் ஒருங்கே இயைதல் காண்க.

பி - ம். 1. நீடு நலந்திகழ் பெரிய.

2. காளே நீ சரிசமெல்லாம், கிரிச்சமெல்லாம், கருச்சியெல்லாம், கழித்தியென்றுரைத்துக் கன்னல்.

3. பொடியதாக, பொடியவாக, பொடிசெய்தாக ; விழிக்கு நீணுதனின் வெண்பூப், வெண்பூம்.

4. நீடுவோனிற் பொள்ளென ; மாருதியும், மாமுனியும். 28

## பிரமன் கட்டளையால் மயன் முடிசூட்டு மண்டபமமைத்தல்

4273. நான்முகத் தொருவ னேவ
நயனறி மயனென் றோதும்
நூன்முகத் தோங்கு கேள்வி
நுணங்கியோன் வணங்கு நெஞ்சன்
கோன்முகத் தளந்து குற்றஞ்
செற்றுல கெல்லாங் கொள்ளும்
மான்முகத் தொருவ னன்னுள்
மண்டபம் வயங்கக் கண்டான்.

நான்முகத்து ஒருவன் ஏவ - பிரமனாகிய ஒப்பற்றவன் கட்டளையிட, நயன் அறி - (கட்டிடம் அமைக்கும்) நெறியுணர்ந்த, மயன் என்று ஓதும் - மயன் என்று சிறப்பித்துச் சொல்லப்படும்; நூல்முகத்து ஓங்கும் கேள்வி - சிற்ப நூலில் சிறந்த கேள்வியுடனே, நுணங்கியோன் - நுண்மாணுழை புலம் உடையவனாகிய, மான் முகத்து ஒருவன் - மான்முகம் பெற்ற, ஒருவன் - ஒப்பற்றவன், (மயன்), வணங்கும் நெஞ்சன் - வணக்கம் நிறைந்த உள்ளத்தனாய், கோல் முகத்து அளந்து - கோல் முகத்தினால் அளந்து, குற்றம் செற்று - குறைகளை நீக்கி. உலகு எல்லாம் கொள்ளும் - உலகம் எல்லாம் தனக்கு விலையாகக் கொள்ளக்கூடிய, மண்டபம் - மண்டபத்தை, வயங்க கண்டான் - விளக்கமுறக் கட்டியமைத்தான்.

நயன் - சிற்ப நூல் நெறி; 'சிற்பமு மயன் மனம் வருந்திச் செய்தது' 'தெய்வத் தச்சனைப்புகழ்துமோ' (சுந்தர. 113); மயன்: மண்டோதரியின் தந்தை. நூல் முகம்: சிற்பம். நுணங்கியோன்: 'நுணங்கிய கேள்வியரல்லார்' (குறள். 419); 'நுணங்கிய கேள்வியான்' (யுத்த. 390); இங்கு, 'விரிகதிர் பரப்பிய வியன் வாய்மண்டிலம், இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்பு, ஒருதிறஞ்சாரா வரை நாளமயத்து, நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டு, மனைவகுத்து' (நெடுநல். 73, 76); என்ற வரிகளும் அவற்றிற்கு நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரையும் காணத் தகும். இங்குக் கூறப்பட்ட நூலினை மயமதம் என்பர், (சிலப். 14: 97-ல் அரும்பதவுரையாசிரியர். 'மயமதம்' என்று குறிப்பிடுவது காண்க. உலகெல்லாங் கொள்ளும்; உலகத்தில் உள்ள உயர்ந்தோர் அனைவரும், சிறந்தது என்று ஏற்றுக்கொள்ளக்

கூடிய வெனினுமாம். (ஒப்பு) ; 'உலக மூன்று முதவற்கொருதனி விலையிலாமையும்' (யுத்த. 3920) ; என்றதும் காண்க. 'கடல் மண்ணெல்லாம் விலேயோவென மிளிருமிவள் கண்' (திரு விருத்தம். 60); மான்முகன் : மயன் ; 'வாச நாண்மலரோன் செலமான் முகன்' (யுத்த. 3897); 'மான்முகன் முதலாயுள்ள' (யுத்த. 4183).

பி - ம். 1. நயனெறி ; நயனுறு.

2. ஒருங்கு.

3. கோன்முகத்துற்ற, உகந்து.

4. நான்முகத்தொருவ னன்னுன் ; மலங்க.

29

## அநுமன் புண்ணிய தீர்த்தம் கொணர்தல்

4274. சூழ்கட னன்கிற் றேய
மெழுவகை யாகச் சொன்ன
ஆழ்திரை யாற்றி னீரோ
டமைத்தியின் றென்ன வாமென்
றூழியி னிறுதி செல்லுந்
தாதையி னுலவி யன்றே
ஏழ்திரை நீருந் தந்தா
னிருந்துயர் மருந்து தந்தான்.

'சூழ் - உலகைச் சூழ்ந்துள்ள, கடல் நான்கின் தோயம் - நான்கு கடலின் நீரும், எழுவகை ஆக சொன்ன - எழுவகையாகச் சொல்லப்பட்ட, ஆழ்திரை - ஆழ்ந்த திரைகளையுடைய, கடலின் நீரும், ஆற்றின் நீரொடு - புண்ணிய நதிகளின் தீர்த்தங்களுடனே, இன்று அமைத்தி - இன்று கொணர்ந்து சேர்ப்பாய்', என்ன - என்று (சுக்கிரீவன்) ஆணையிட, இரு துயர் - பெரிய துயரம் துய்க்குங்கால், மருந்து தந்தான் - மருத்து மலையைக் கொண்டு வந்துதவியவனான அநுமன, 'ஆம் அப்படியே கொணர்வேன்', என்று - என்று கூறி, ஊழியின் இறுதி செல்லும் - யுகக் கடையிற் செல்லும், தாதையின் - தன் தந்தையான வாயுபகவான் போன்று, உலவி - விரைந்து சென்று, ஏழ்திரை நீரும் தந்தான் - ஏழு கடலின் நீரையும், அன்றே - நியமிக்கப்பெற்ற அந்தத்

தினத்திலேயே கொண்டுவந்து அளித்தான். அன்றே : ஏகாரம் தேற்றம்.

தோயம் : நீர். யுத்த. 4266-ல் காண்க. ஆழ்திரை நீர் ஆற்றின் நீர் எனத் தனித்தனிக் கூட்டப்பட்டது. ஆழ்ந்திருத்தலாலேயே கடலுக்கு 'ஆழி' என்ற ஒரு பெயர் உண்மை காண்க. ஆம் : என்பது உடன்பாட்டைக் குறிக்கும் சொல்; சிலர் 'ஓம்' என்றும், சிலர் 'புத்தி' என்றும் உரைப்பர்; மகாப்பிரளய காலத்தில் சண்டமாருதம் உண்டென்பர்; அநாயசமாகச் சென்றான் என்பார்: உலவி என்றார். (ஒப்பு) 'உன்னத பருவதங்கள் அவர் விளையாடும் பந்துகள் என்றாற்போல. துயர் மருந்து : துயர்போக்கும் மருந்து நோய் மருந்து' என்றாற்போல; இருந்துயர் மருந்து என்ற இடத்து இணையெதுகை காண்க.

பி - ம். 1. வகைத்தாகச்.

2. அமைந்தனனென்னவாமென்று, அமைத்தனனென்னலாமே, அன்றெனவாகுமாமென்று.

3. அன்றே, என்றே.

4. ஏழ்கடல்; இருந்துய்ய, இடர்கெட; மருந்திற்றீர்த்தான். 30

4275. எரிமணிக் குடங்கள் பன்னூற்
றியானைமேல் வரிசைக் கான்ற
விரிமதிக் குடையி னீழல்
வேந்தர்கள் பலரு மேந்திப்
புரைமணிக் காள மார்ப்பப்
பல்லியந் துவைப்பப் பொங்கும்
சரயுவிற் புனலுந் தந்தார்
சங்கின முரல மன்னே.

வேந்தர்கள் பலரும் - மன்னர் பலரும், வரிசைக்கு ஆன்ற - (தமது) பெருமைக்கு ஏற்ப, விரிமதி - பூரண சந்திரன் போன்ற, குடையின் நீழல் - வெண் குடையின் நிழலிலே விளங்குகின்ற, பல்நூறு எரிமணி குடங்கள் - பல நூற்றுக்கணக்கான இரத்தினக் குடங்களை, யானைமேல் ஏந்தி - யானைமேல் ஏற்றிக் கொண்டு, புரை - உள் துளையுள்ள, மணி - அழகிய, காளம் ஆர்ப்ப - எக்காளம் என்னும் துளைக்கருவி பேரொலி

முழக்கவும், பல் இயம் துவைப்ப - பல இசைக் கருவிகளும் ஒலிக்கவும், சங்கினம் முரல - சங்குத்திரள்கள் சத்திக்கவும், பொங்கும் - அலைகள் கொந்தளிக்கின்ற, சரயுவில் புனலும் - சரயுவினின்று நீரையும், தந்தார் - கொணர்ந்தனர். மன், ஓ : அசை.

எரிமணி - மாணிக்கம். 'எரிமணிக் கொட்டை நெற்றி, வாய்ந்த பொன் குயிற்றிச் செய்த மரவடி' (சீவக. 1300); விரிமதிக் குடை - சுவேத சத்திரம். காளம் - எக்காளம். துவைத்தல் - ஒலித்தல்; 'தூரியங் கடலினின்று துவைப்ப' (யுத்த. 810); சரயு - கோசலை நாட்டில் அயோத்தி நகரின் அண்மையில் பாயும் ஓர் ஆறு. 'சரையெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக், குரை புனல்' (சீவக. 39); 'சரயு வென்பது தாய்முலை யன்னதிவ், வரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்' (பால. ஆற்று. 12); இந் நதி மானச ஸரஸிலிருந்து வருவது: 'மானசமடுவிற் றோன்றி வருதலாற் சரயுவென்றே, மேன்முறை யமரர் போற்றும் விழு நதி' (பால. வேள்விப். 5); வைவஸ்வத மனு ஓர் அம்பினால் மானச ஸரஸின் கரையை யுடைத்து இந் நதியை வருவித்தார் என்பது வரலாறு. முன்னர் ஏழ்கடற் றோயமும், பல புண்ணிய நதிப் புனலும் கொணர்ந்தனர் என்று கூறி, இங்குச் சரயுவிற் புனலும் என்று சிறப்பும்மை தந்து கூறினமையின் அந்த நதிப் புனலின் பெருமையை அறியலாம்.

பி. ம். 1. வரிசைக்கேற்ற, ஏன்ற.
3. பருமணி.
4. சரயுநற்; சங்கின மார்ப்ப. 31

## இராமபிரான் சீதையோடு பளிங்குமண்டபத்திட்ட பீடத்தில் விளங்குதல்

4276. மாணிக்கப் பலகை தைத்து
வயிரத்தின் கால்கள் சேர்த்தி
ஆணிப்பொன் சுற்றி முற்றி
யழகுறச் சமைத்த பீடம்

ஏனுற்ற பளிக்கு மாடத்
திட்டன ரதனின் மீது
பூணுற்ற திரடோள் வீரன்
திருவொடும் பொலிந்தான் மன்னோ.

மாணிக்கம் பலகை தைத்து - மாணிக்கத்தினால் ஆக்கப்பட்ட பலகை பொருத்தப் பெற்று, வயிரம் திண் கால்கள் சேர்த்தி - வயிரத்தாலான உறுதிபெற்ற கால்கள் இணைக்கப் பெற்று, ஆணி பொன் சுற்றி - மாற்று உயர்ந்த பொன்னைக் கொண்டு சுற்றுப் புறம், முற்றி-பூர்த்தி செய்யப் பெற்று, அழகு உற சமைத்த-அழகு விளங்கச் செய்த, பீடம் - பீடத்தை, ஏண் உற்ற-பெருமை சான்ற, பளிங்கு மாடத்து இட்டனர் - பளிங்கினாலியன்ற மாடத்தே அமைத்தனர்; அதனின்மீது - அதன்மேல், பூண் உற்ற - ஆபரணம் பொருந்திய, திரள் தோள் வீரன் - திரண்ட தோள்களை யுடைய வீரன், திருவொடும் பொலிந்தான் - திருமகளின் அமிசமான பிராட்டியோடும் விளங்கினான். மன், ஓ : அசை.

மாணிக்கம் வயிரம் - நவமணி வகை. ஆணிப் பொன் - உரையாணியாக அமையும் சாம்பூநதம் என்ற பொன்; 'ஆணிப் பொன் அம்பலத்தே கண்ட காட்சிகள் அற்புதக் காட்சியடி' (திருவருட்பா. தனிப்பா.); 'ஆணிப் பொன்னினாகியது' (ஆரணிய. 773): 'மாற்றறியாத செழும் பசும்பொன்னே' (திருவருட்பா. சற்குரு. 1) என்றது காண்க. ஏண் - பெருமை; உயர்ச்சி. 'ஏணிலே னிருந்தேன்' (பெரிய திரு. 1, 6, 1); 'ஏணுற மிளிர்ந்து' (ஆரணிய. 265).

பி - ம். .1 தைத்த ; வயிரத்தின் ; ஏய்ந்த.
2. பொற் கட்டுமுற்றி, பொன் சுற்றுமுற்றி ; மரகத மலங்குபீடம்.
3. ஆணிப்பொற் ; இதனின் ; உம்பர்.
4. சேணுற்ற ; ஐயன், வள்ளல் ; ஏறினன் சீதையோடும். 32

இங்கு ஓர் அதிகப் பாடல்;—

அந்தணர் வணிகர் வேளாண் மரபினோ ராலி நாட்டுச்
சந்தணி புயத்து வள்ளல் சடையனே யனைய சான்றோர்
உய்ந்தன மடிய மென்னு முவகையி னுவரி காண
வந்தன ரிராமன் கோயின் மங்கலத் துரிமை மாக்கள்.

## தேவர்கள் இராமபிரானுக்கு மங்கலநீராட்டுதல்

4277. மங்கல கீதம் பாட
மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டில்
தண்ணுமை யொலிப்பத் தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப்
பூமழை பொழிய விண்ணோர்
எங்கணா யகனை வெவ்வே
றெதிரபி டேகஞ் செய்தார்.

மறை ஒலி முழங்க - வேதம் கோஷிக்கவும், மங்கலம் கீதம் பாட - மங்கலப் பாடல்கள் பாடவும், வல் வாய் - வலிய வாயினை யுடைய, சங்கு இனம் குமுற - சங்குத் தொகுதிகள் முழங்கவும், பாண்டில் தண்ணுமை ஒலிப்ப - தாளமும் மத்தளமும் ஒலிக்கவும், தா இல் - குற்றம் தீர்ந்த, பொங்கு - ஒலிமிக்க, பல் இயங்கள் ஆர்ப்ப - பலவித இசைக் கருவிகள் சத்திக்கவும், பூ மழை பொழிய - மலர்மாரி பெய்யவும், விண்ணோர் - அமரர்கள், எங்கள் நாயகனை - எங்களுடைய நாயகனான இராமபிரானை, வெவ்வேறு - தனித்தனியாக, எதிர் அபிடேகஞ் செய்தார் - அயோத்தியில் நிகழ்வது போன்றே வானாட்டில் அபிடேகம் செய்தனர்.

வல்வாய் - வலிய அல்லது பெரிய வாய்; 'நெல்லொடு வந்தவல் வாய்ப் பஃறி' (பட்டினப். 30); வல் வாய் - வலிய இடம் என்று நச்சினார்க்கினியர் கூறுதல் காண்க. 'வல் வாயோடு கழுத்தேந்திச் சுணங்கன்' (தனிப்பா.); சங்கினம்: 'தேரோடும் வீதியெலாம் செங் கயலும் சங்கினமும், நீரோடுலாவி வருநெல்லையே' (நெல்லையந்தாதி.); தண்ணுமை - மத்தளம். 'வாயுரைக்கு மொழிபோலத் தண்ணுமை செங் கைகளால் வார்த்தை சொல்ல' (பிரபு. மாயை பூசை. 52); எங்கள் நாயகனை என்பது கவிக்கூற்று; தன்னுடன் அடியார்களை யும் உளப்படுத்திக் கூறியது. கீதம் - வடசொல்; 'கீதமினிய குயிலே கேட்டி' (திருவாச. குயில். 1).

பி - ம். 1. வள் வாய், வெற்றிச்.
2. தண்ணுமை முழங்க வெங்கும், ஒலிப்பத் தாவி.
4. வேதத் தொழில், வெவ்வே றெதிர்ந்து.

## மாதவர் முதலியோரும் சுக்கிரீவாதியரும் அபிடேகஞ் செய்தல்

4278. மாதவர் மறைவ லாளர்
மந்திரக் கிழவர் மற்றும்
மூதறி வாள ருள்ள
சான்றவர் முதனீ ராட்டச்
சோதியான் மகனு மற்றைத்
துணைவரு மனுமன் றனும்
தீதிலா விலங்கை வேந்தும்
பின்னபி டேகஞ் செய்தார்.

மாதவர் - பெரு தவத்தரும், மறைவலாளர் - வேதம் வல்லவர்களும், மந்திரம் கிழவர் - மந்திராலோசனைக்குரியவரான அமைச்சரும், மற்றும் - பின்னும், முதுமை அறிவாளர் - மிக்க பேறிஞராக, உள்ள - ஆங்குள்ள, சான்றவர் - பெரியோர்களும், முதல் நீர் ஆட்ட - முதற்கண் நீராட்ட, பின் - பின்னர், சோதியான் மகனும் - ஒளி மயமான கதிரவன் மகனாய சுக்கிரீவனும், மற்றை துணை வரும் - பிற நண்பர்களும், அநுமன் தானும் - அநுமானும், தீது இலா இலங்கை வேந்தும் - வீடணனும், அபிடேகம் செய்தார் - அபிடேகம் செய்தனர்.

இச் செய்யுட்கண் அபிடேகம் செய்தவர்களை அவரவர் தகுதிக்கேற்ப வரிசைப் படுத்தியமை காண்க. சான்றவர் - சால்பு அல்லது அமைதியுடன் கூடியவர். 'அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றிய தூண்' (குறள். 983) காண்க. மேலே கூறிய மூன்று பாடல்களிலும், அபிடேகம், எதிர் அபிடேகம், பின் அபிடேகம் என்ற வகைகள் கூறப்பட்டிருத்தல் காணத்தகும். இலங்கை வாசிகள் அனைவரும் பாவ காரிகளாகலின், தீதிலா இலங்கை வேந்து எனப்பட்டது.

பி - ம். 2. உள்ளம். 54

அதிகப் பாடல், —

அங்கண்வா னுலகந் தாய வடிமலர்த் தவிசோ னாட்டும்
கங்கைவார் சடையி னேற்றான் கண்ணுத லொருவ னிந்நாள்
சிங்கவே றனையான் செய்ய திருமுடி யாட்டு நன்னீர்
எங்கணேற் றன்னோன் வாழு மென்றனர் புலவ ரெல்லாம்.

## சீதாபிராட்டியுடனே இராமபிரான் பட்டாபிடேகஞ் செய்து கொண்டு இருந்த தன்மை

4279. மரகதச் சயிலஞ் செந்தா
மரைமலர்க் காடு பூத்துத்
திரை யெறி கங்கைவீசுந்
திவலையா னனைந்து செய்ய
இருகுழை தொடரும் வேற்கண்
மயிலொடு மிருந்த தேய்ப்பப்
பெருகிய செவ்வி கண்டார்
பிறப்பெனும் பிணிகள் தீர்ந்தார்.

*மரகதம் சயிலம் - மரகத மலை, செ தாமரை மலர்காடு பூத்து - செந்தாமரை மலர்த் தொகுதி மலரப் பெற்று, திரை எறி - அலை வீசுகின்ற, கங்கை - கங்கா நதியானது, வீசும் - வாரி யிறைக்கும், திவலையால் - துளிகளால், நனைந்து - நனைந்து, செய்ய - சிவந்த, இரு குழை - இரண்டு குழைகளில், தொடரும் - தொடர்ந்து செல்கின்ற, வேல்கண் மயிலொடும் - வேற் கண்களைக் கொண்ட மயிலோடும், இருந்தது ஏய்ப்ப - வீற்றிருந்ததை ஒப்ப, பெருகிய - மிக்க, (அந்த இராமபிரானுடைய), செவ்வி கண்டார் - அழகினைக் கண்ணுற்றவர், பிறப்பு எனும் பிணிகள் தீர்ந்தார் - பிறப்பென்னும் நோய் தீரப் பெற்றார் ஆவர்.*

இல்பொருள் உவமை. *தாமரை மலர் - நீர்க்கண் முளைப்பது. சயிலத்து முளைப்பதன்று; மரகதச் சயிலம் - இராமபிரான். மலர்க் காடு - அவனுடைய பல்வேறு அவயவங்கள். வேற்கண் மயில் - பிராட்டி. இரு குழை தொடரும் வேல்கண்: குழைபொருது நீண்டு' (தண்டி. பொருளணி) (விலக்குவமை); என்றது காண்க. 'செவியுற நீள்படைக் கண்கள்' (திருக்கோ. 15). 'குமிழ் மிசை மறிந்து குழையெதிர் நடந்து' (நைடத. அன்னத்தை. 13); 'சேலனைய சில்லரிய............ பொருகயற்கண் செவியுறப் போந்தகன்றனவே' (சீவக. 167).*

பி - ம். 1. மரகத மலைமேற்.

3. மனையொடும்; ஏய்வ, தெய்வப்.

4. பெருமிதச்.

### திருஅபிடேகத்திற்கு வேண்டியனயாவும் இயலுதல்

4280 தெய்வநீ ராடற் கொத்த
செய்வினை வசிட்டன் செய்ய
ஐயமில் சிந்தை யானச்
சுமந்திர னமைச்ச ரோடும்
நொய்தினி னியற்ற நோன்பின்
மாதவர் நுனித்துக் காட்ட
எய்தின வியன்ற பல்வே
றிந்திரற் கியன்ற வென்ன.

தெய்வம் நீர் ஆடற்கு ஒத்த - தெய்வத் தன்மை வாய்ந்த தீர்த்தங்களினால், அபிடேகம் செய்தற்கேற்ற, செய்வினை - சடங்குகளை, வசிட்டன் செய்ய - வசிட்ட முனிவன் செய்து முடிக்குமாறு, நோன்பின் மாதவர் நுனித்து காட்ட - நோன்பினையுடைய பெருந் தவச்சிரேட்டர்கள் நுட்பமாகக் காட்டா நிற்கையில், ஐயம் இல் - ஐயுறவு இல்லாத, சிந்தையான் - மனத்தை உடையவனை, அ சுமந்திரன் - அந்தச் சுமந்திரன, அமைச்சரோடும் - மந்திரிமாருடனே, நொய்தினின் இயற்ற - விரைந்து சித்தம் செய்ய, இந்திரற்கு இயன்ற என்ன - இந்திரற்கு இயன்றன போல, பல்வேறு இயன்ற எய்தின - பல்வேறு பொருள்களும் வந்து அடைந்தன.

பி - ம். 2. சிந்தையானைச் சுமந்திர வமைச்சனேடும்.
3. இயற்றி ; மாதவன்.
4. வெய்தினி னியன்ற, எய்தின வியைந்த ; ஏய, ஏய்வது.



### இராமனுக்கு வசிட்டமுனிவன் திருமுடிசூட்டுதல்

4281 அரியணை யனுமன் தாங்க
வங்கத னுடைவாள் பற்றப்
பரதன் வெண் குடைக விக்க
விருவருங் கவரி வீச
விரைசெறி கமலத் தாள்சேர்
வெண்ணெய்மன் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

அரி அணை அநுமன் தாங்க - சிங்காசனத்தை அநுமன் பரிக்கவும், அங்கதன் உடைவாள் பற்ற - அங்கதன் உடைவாளைக் கையிற் பற்றி நிற்கவும், பரதன் வெண் குடை கவிக்க - பரதன் ஒற்றை வெண் கொற்றக் குடை நிழற்றவும், இருவரும் - மற்றை இரண்டு தம்பிமார்களும், கவரி வீச - வெண் சாமரை இரட்டவும், விரை செறி - நறுமணம் செறிந்த, கமலம் தாள் - செந்தாமரை மலரில் வதிபவளான திருமகள், சேர் - கூடியிருக்கப் பெற்ற, வெண்ணெய்மன் - திருவெண்ணெய் நல்லூர்க்கு அதிபனான, சடையன் தங்கள் மரபுளோர் - சடையப்ப வள்ளலுடைய கால் வழியின் முன்னோராக வுள்ளோர், கொடுக்க வாங்கி - எடுத்துத் தர வாங்கி, வசிட்டனே மவுலி புனைந்தான். இராமபிரானுக்கு வசிட்டனே முடி சூட்டினான்.

அரியணை : 'இட்ட விவ்வரியணை யிருந்த தென்னுடல்' யுத்த. 23); 'உடைவாள் : 'கையம்பற்றுடை வாளினும் கை வைத்தான' (பால. உலா வரு. 33); இங்கு 'பொன்னுடை வாளை நீட்டி நீயிது பொறுத்தி யென்றான்' (கிட்கிந்தா. 380)ம் இதன் உரையும் காண்க. வெண்ணெய்மன் சடையன்; இங்கு உபகார ஸ்மிருதி என்ற வகையில் கம்பநாடர் தன்னை ஆதரித்த சடையப்ப வள்ளலைப் பெருமைப்படுத்தி நிற்பது காண்க. கிட்கிந்தா காண்டம் 828-ம், யுத்த. 3199 விரிவுரைகளை இங்குக் காணத்தகும். பண்டைத் தமிழ் நூல்கள் வேளாண் மாந்தரை உழுதுண்போரும் உழுவித் துண்போரும் என இரு திறத்தினராகக் கூறும்; தொன்று தொட்டுச் சூரிய குலத்தோரான சோழ மன்னர்க்கு முடி சூட்டுங்கால், முடியெடுத்து உதவும் பெருமை இந்த உழுவித்துண்ணும் வேளாளர்க்குண்டு; அந்த வழக்கினை ஒட்டிச் சடையனுடைய முன்னோர்களான வேளாண்மக்கள் சூரிய வங்கிசத்தவனான இராமபிரான் முடி சூட்டு விழாவில், முடியெடுத்து உதவினர் என்க. இங்குச் சடையன் சிவபெருமான் என்று கொண்டு, திருமாலுக்குரிய முடிசூட்டு விழாவில் முதனின்று உதவுபவன் சிவபெருமான் ஆகலின், அவன் வழிவந்த சைவ வேளாளர் கொடுக்க வாங்கி என்றும் ஒரு சாரார் கூறுவர். இனி, வசிட்டனே புனைந்தான் மவுலி என்று தேற்றேகாரம் வந்தது என் எனின், முன்னர் இளவரசாக முடி சூட்டும் காலத்து நல்லநாள் பார்த்துத் தான்கூற, அவ் விழா நடைபெறாது போயினமையின், மிகவும் வருந்தி நின்ற வசிட்ட முனி

வரன், எவ்வாற்றானும் இராமபிரானுக்கு முடி சூட்டும் பெருமையைத் தானே பெற வேண்டும் என்று கருதி யிருந்து மவுலி புனைந்தான் ஆகலின் என்க.

பி-ம். 1. ஏந்த.
2. கவிகை யேந்த.
3. குழலி யோங்க.
4. வெண்ணெயூர்ச்சடையன்றன்ன. 37

## இராமபிரான் மௌலிசூடியிருத்தல்

4282. வெள்ளியும் பொன்னு மொப்பார்
விதிமுறை மெய்யிற் கொண்ட
ஒள்ளிய நாளி னல்ல
வோரையி னுலக மூன்றும்
துள்ளின களிப்ப மௌலி
சூடினன் கடலின் வந்த
தெள்ளிய திருவுந் தெய்வப்
பூமியுஞ் சேருந் தோளான்.

கடலின் வந்த - திருப்பாற் கடலில் தோன்றிய, தெள்ளிய திருவும் - தெளிந்த அழகுடைய இலக்குமியும், தெய்வம் பூமியும் - தெய்வத் தன்மையுள்ள பூமிப் பிராட்டியும், சேரும் - அணையும், தோளான் - தோளை யுடையவனான இராமபிரான், கொண்ட ஒள்ளிய நாளில் - தேர்ந்து எடுத்துக் கொண்ட சிறந்த நாளில், நல்ல ஓரையில் - சுப முகூர்த்தத்தில், உலகம் மூன்றும் துள்ளின களிப்ப - உலகம் மூன்றும் துள்ளினவாய் மகிழ்வெய்த, வெள்ளியும் பொன்னும் ஒப்பார் - அசுரர் குருவான சுக்கிரனையும், தேவ குருவான பிருகற்பதியையும், ஒப்பார் - ஒத்த புரோகிதர்கள், விதி முறை - விதித்த முறைப்படியே, மௌலி - மகுடத்தை, மெய்யில் சூடினன் - சிரசில் தரித்தான்.

வெள்ளி - சுக்கிராசாரியன்; 'வெள்ளியை யாதல் விளம்பினை' (பால. வேள்வி. 29); 'கவீநா முசனாகவி' (பகவற். விபூதி. 37); உசனாகவி - சுக்கிர பகவான். பொன் - தேவ குரு; 'பொன்னும் புதனும் உதயத்திற் பொருந்தில் வலியரே யாவர்' (சாதகாலங்காரம்.); 'அறவினையின்புறூஉம் அந்தணரிருவரும்' (சுந்தர.

99) என்ற இடத்து, 'அறத்தொழிலாக இன்புறுத்தும் வியாழனும் வெள்ளியுமாகிய குரு இருவரும்' என்று நச்சினார்க்கினியர் வரைதல் காண்க. மெய் - உடல்; இங்கு அதன் ஒரு முக்கிய பாகமான சிரத்தை உணர்த்தி நின்றது; 'சர்வஸ்யகாத்ரஸ்ய சிரம் பிரதானம்' என்றமை காண்க. ஒள்ளிய நாள் - எவ்வித களங்கமுமில்லாத திதி வாரம், நட்சத்திரம், யோகம், கரணங்கள் சுத்தமாய் நிட்பஞ்சகமான நாள். ஓரை - லக்கினம். யுவராஜ்ய பட்டாபிடேகம் என வருதலின் மூவர்க்கும் முடி சூட்டினன் என்க.

பி - ம். 1. என்போர்.
2. நாளு நல்ல வோரையும்.
3. துள்ளினர்; குளிப்ப; சூட்டினன்; சுருதி நான்கும்.
4. பூமியுஞ் செங்கணும். 38

## இராமபிரான் முடிசூட, மூவுலகமுந் துயர்தீர்தல்

4283. சித்தமொத் துளனென் றோதுந்
திருநகர்த் தெய்வ நன்னூல்
வித்தக னொருவன் சென்னி
மிலைச்சிய தெனினு மேன்மை
ஒத்தமூ வுலகத் தோர்க்கு
முவகையி னுறுதி யுன்னில்
தத்தமுச் சியின்மேல் வைத்த
தொத்ததத் தாம மௌலி

திரு நகர் தெய்வ நல் நூல் - அத் திரு நகர்க்கண் உள்ள தெய்வத் தன்மை வாய்ந்த சிறந்த நூலில், (மறைகளில்) வல்லவனும், சித்தம் ஒத்துளன் - மனத்திற்கு ஒத்தவனும், என்று ஓதும் - என்று கூறத் தக்க வசிட்ட முனிவன், வித்தகன் ஒருவன் சென்னி - பேரறிஞனை இராமபிரானுடைய சிரசில், மிலைச்சியது எனினும்; சூட்டியது என்ற போதிலும், அ தாமம் மௌலி - அந்த ஒளியுள்ள கிரீடம் ஆனது, மேன்மை ஒத்த - மேன்மை பொருந்திய, மூஉலகத்தோர்க்கும் - மூன்று உலகத்தோர்க்கும், (அப்போது தோன்றிய) உவகையின் உறுதி - மகிழ்ச்சியின் உறுதியை, உன்னில் - எண்ணி நோக்குவோம் ஆயின், தம்தம் உச்சியின் மேல் வைத்தது

ஒத்தது - தங்கள் தங்களுடைய சிரசில் வைத்ததை நிகர்த்திருந்தது.

தெய்வ நன்னூல் - வேதம்; வித்தகன்: 'வித்தகனே ராமாவோ' (பெரியாழ். 3 : 10 : 6); மிலைச்சுதல் - தரித்தல்; 'விதியான் மௌலி மிலைச்சுவாயென' (கிட்கிந்தா. 400); இங்கு, 'ஒத்த சிந்தைய ருவகையின் ஒருவரி னொருவர், தத்தமக் குற்ற வரசெனத் தழைக்கின்ற மனத்தர்' (அயோத்தி. மந்திரப். 78); ஒத்த சித்தம் - இராமபிரான் மனத்துடன் ஒத்த மனமுடையவன்; 'தலங்கள் யாவையும் பெற்றனன் தானெனத் தளிர்ப்பான்' 'வேந்தன் மனம்போல வந்த மகன்' (பு. வெ. மா 26).

பி - ம். 1. சித்த மொத்துளவு, சித்த மொத்தனன், சித்த மொத்தியது, செல்வ மென்ன.

2. உத்தமத் தொருவன், விளங்கியதேனு மெய்ம்மை; விளங்கிய வுயர் பொன் மௌலி.

3. உவகையின் இறுதி; ஒத்து மெய்க்குவமை கூரவோங்கு மூவுலகத் தோர்க்கும்; வைத்த தொத்தெனத் தளர்வு நீர்ந்தார். 89

## பூமிப்பிராட்டி இராமபிரானைச் சேர்தலின் வருணனை

4284. பன்னெடுங் கால நோற்றுத் தன்னுடைப் பண்பிற் கேற்ற
பின்னெடுங் கணவன் தன்னைப் பெற்றிடைப் பிரிந்து முற்றும்
தன்னெடும் பீழை நீங்கத் தழுவினுள் தளிர்க்கை நீட்டி
நன்னெடும் பூமி யென்னு நங்கைதன் கொங்கை யார.

பல் நெடுகாலம் நோற்று - பலவாகிய நீண்டகாலம் நோன்பினை மேற்கொண்டு. (அதன் பயனாக), பின் - பின்னர், தன் உடை பண்பிற்கு ஏற்ற - தன்னுடைய தகுதிக்கு ஏற்ற, நெடுகணவனை பெற்று - பெருமை வாய்ந்த கணவனை அடைந்து, இடைபிரிந்து - இடையிலே பிரிவு நேர்ந்ததால் உண்டான, தன் - தன்னுடைய, நெடு பீழை முற்றும் நீங்க - நீண்டகாலத் துன்பம் எல்லாம் நீங்கவே. நல்நெடு பூமி என்னும் நங்கை - சிறந்த நெடிய பூமி என்கின்ற மாது, தளிர்கை நீட்டி - தளிர்போன்ற கரத்தை நீட்டி, தன் கொங்கை யார - தன் தனங்கள் திளைப்ப, தழுவினுள் - தழுவினுள்.

மகுடம் சூட்டிக் கொண்ட வகையில் - பூமிப் பிராட்டி இராம பிரான் வசமாயினள் என்பது இக் கவியில் நயம் பெறக் கூறப் பட்டது. 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ மீண்டு முயலப்படும்' (குறள். 265) என்றதனால் 'நோற்றுத் தன்னுடைப் பண்பிற் கேற்ற கணவன் தன்னைப் பெற்று எனப்பட்டது; பிரிவும் புணர்ப்பும் பிறந்தவர் யார்க்கும் பெருவிதியே (குலோத். கோவை). என்றதற்கேற்ப 'இடைப் பிரிந்து' எனப்பட்டது; நெடுங் கணவன் - நெடுமை பெருமை மேற்று; நெடும் பீழை - நெடுமை மிகுதிமேற்று, நங்கை தன் கொங்கை! என்ற இடத்து இணை யெதுகை காண்க. ஆர - மனமார, மன்னன் பூவரசு புரிபவன் ஆகலின் அவன் பூமிதேவியை மணப்பதாகக் கூறுவது கவிமரபு, 'சீவக சிந்தாமணியில் மண் மகள் இலம்பகம் உண்மை காண்க.

பி - ம். 1. தானுடைப், தன்னிடைப்

பி - ப். 2. பிரிந்திடைப் பெற்று முற்றும், பெற்றிடைப் பிரிந்து தேம்பும், பெற்றிடைப் பிரிந்தேமுற்ருள்.

3. தன்னுடைப்: ஆசையார, யானநிங்க, மாசு நிங்கத்; தழுவிய; இருகை, தடக்கை, தாங்க, தன்றுல்.

4. கொங்கையோடும். 40

இதன்பின் ஒரு பிரதியில்:—

இப்படித் தழுவி மாத ரிருவரு மிரண்டு பாலும்
செப்புற வரிய வின்பச் செல்வத்துட் செலுத்து நாளில்
கப்புடைச் சிரத்தோன் சென்னி கடிந்தவி லிராமன் காதல்
வைப்புடை வளாகந் தன்னில் மன்னுயிர் வாழ்த்த வந்தான்.

## பரதனுக்கு இளவரசு முடிசூட்டி இராமபிரான் இனிதிருத்தல்

4285. விரத நூன் முனிவன் சொன்ன விதிநெறி வழாமை நோக்கி
வரதனு மிளைஞர்க் காங்கண் மாமணி மகுடஞ் சூட்டிப்
பரதனைத் தனது செங்கோல் நடாவுறப் பணித்து நாளும்
கரைதெரி விலாத போகக் களிப்பினு ளிருந்தான் மன்னே.

விரதநூல் முனிவன் - விரதங்களைக் கைக்கொண்டு செய்யும் தன்மைவாய்ந்த, சாத்திரங்களில் வல்லவனாகிய வசிட்ட முனிவன், சொன்ன - சொல்லிய, விதிநெறி வழாமை நோக்கி - விதிமுறை

தவறுமற் பார்த்து, வரதனும் - வேட்டார்க்கு வேட்டவை அளிக்க வல்லவரான இராமபிரானும், இளைஞர்க்கு - தன் தம்பிமார் மூவர்க்கும், ஆங்கண் - அந்த இடத்தில், மாமணி மகுடம் சூட்டி - (இளவரசராகச்) சிறந்த இரத்தினமிழைத்துச் செய்த கிரீடத்தை அணிவித்து, பரதனை - அந்தப் பரதாழ்வானை, தன் செங்கோல் நடாவுற பணித்து - தன் செங்கோலைச் செலுத்துமாறு கட்டளையிட்டருளி, நாளும் - நாள்தோறும், கரைதெரிவிலாத போகம் களிப்பினுள் இருந்தான் - எல்லை காணவியலாத போகங்களைத் துய்ப்பதனாலான மகிழ்ச்சியில் ஆழ்ந்திருந்தான்; மன் - ஒ - அசை.

வரதன் - வரமளிப்பவன். இளைஞன் - பரதன்.

பி - ம். 1. வரத மாமுனிவன்

2. இளைஞர்க்கு; மணியணி; சூடிப்.

4. களியினுள்; இருந்த காலை.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை :—

இங்கு

மறையவர் வாழி வேத மனுநெறி வாழி நன்னூல்
முறைசெயு மரசர் திங்கள் மும்மழை வாழி மெய்ம்மை
இறையவ னிராமன் வாழி யிக்கதை கேட்போர் வாழி
அறைபுகழ்ச் சடையன் வாழி யரும்புக ழநுமன்வாழி.

என்று ஓர் அதிகப் பாடல்.

---

## திருமுடி சூட்டுப்படலம்; முதனூலிற் கண்டது :—

அயோத்திநகர் மாந்தர் அனைவரும் நந்திக் கிராமத்தை யடைந்தனர். இராமபிரானுடைய பாதுகைகளை முடியின்மேல் அணிந்தவனாய், மரவுரியும் மான் தோலும் புனைந்து மங்கலப் பொருள்களும் வெண் குடையும் கொண்டு தமையனை எதிர் கொண்டு சென்றான் பரதன். செல்லுங்கால் இராமபிரான் உரிய காலத்தில் வராமல் காலந் தாழ்ப்பதற்குக் காரணம் என்ன என்று பரதன் வினவ, சிறிய திருவடி பரத்துவாச முனிவன் படைத்த உணவின் வைபவத்தால் சிறிது தாமதம் ஏற்

பட்டிருத்தல் கூடும் என்றும், ஆனால் அனைவரும் வருகின்றனர் என்றும் கூறினன். இராமபிரான் வந்தவுடன் அவரைப் பரதன் வணங்கினான். இருவரும் ஒருவரை ஒருவர் அன்புடன் தழுவினர். பின்னர்ப் பரதன் இலக்குவனையும் வானர வீரர்களையும் தழுவி, வீடணனையும் போற்றினன். இராமபிரானும் பிராட்டியும் இலக்குவனும் தாய்மார்கள் மூவரையும் பணிந்தனர். ஏககாலத்தில் ஆயிரக்கணக்கான தாமரை மொட்டுக்களைப் பார்ப்பதுபோல நகர மக்கள் அங்கு அஞ்சலி செய்துகொண்டிருந்ததை இராமபிரான் கண்ணுற்றார். அப்போது பரதன், மரவடிகளை இராமபிரான் திருவடிகளில் பூட்டித் தமையனை வரவேற்றுப் புகழ்ந்தான். இராமபிரானும் பரதனுடைய ஆசிரமத்தைச் சார்ந்து புட்பகவிமானத்தைக் குபேரனிடம் அனுப்பிவிட்டுத் தம் குல குருவாகிய வசிட்ட முனிவனை வணங்கினர். அதன்பின்னர் அயோத்தி நகர் எய்திப் பரதன் இராச்சிய பாரத்தை ஏற்குமாறு வேண்ட, இராமபிரான் இசைந்து ஏற்றார். இராமபிரான் நவரத்தின கசிதமான தேரேறி நன்கு அலங்காரம் செய்யப்பெற்ற நகருட்புகுந்தார். மந்திரிமார்களாலும் அந்தணர்களாலும் குடிகளாலும் சூழப்பட்டு விளங்கிய இராமபிரான் நட்சத்திரக் கூட்டங்களின் நடுவே சந்திரனைப்போல விளங்கினர். நகர் சென்றவுடன் வீடணன் சுக்கிரீவன் முதலிய விருந்தினர்கட்கெல்லாம் இடவசதிகளும் உண்டி வசதிகளும் நன்கு செய்யுமாறு ஏவி, இராமபிரான் இனிதிருக்க, புண்ணிய நதிகளின் நீரும் நான்கு கடல் நீரும் வானர வீரர்களால் கொண்டுவரப்பட்டது. வசிட்டர் வாமதேவர் முதலிய முனிவர்கள் அட்ட வசுக்கள் இந்திரனுக்கு அபிடேகம் செய்வதுபோல இராமபிரானுக்கு அபிடேகம் செய்தனர். பொன்மயமான சபையில் பொற்பீடத்தில் இராமபிரானை அமருமாறு செய்து, பிரமதேவனால் நிருமிக்கப்பட்டு இரத்தினங்களால் விளங்கிய கிரீடத்தை வசிட்டர் இராமபிரானுக்குச் சூட்டினார்.

---

# 39. விடை கொடுத்த படலம்

முடி சூட்டிற்கு வந்திருந்தவர் அனைவோர்க்கும் இராமபிரான் விடையீந்ததைக் கூறும் படலம் என விரியும்.

## விடை கொடுக்குமாறு ஸ்ரீராமன் சீதாதேவியுடன் ஓலக்க மண்டபத்திற்கு வருதல்

4286. பூமகட் கணிய தென்னப் பொலிபசும் பூரி சேர்த்தி
மாமணித் தூணிற் செய்த மண்டப மதனி னுப்பண்
கோமணிச் சிவிகை மீதே கொண்டலு மின்னும் போலத்
தாமரைக் கிழத்தி யோடுந் தயரத ராமன் சார்ந்தான்

பூமகட்கு அணியது என்ன - பூமிப் பிராட்டிக்கு அணிகலம் போன்று, பொலி - விளங்குவதும், பசும் பூரி சேர்த்தி - பைம்பொன் பொருந்தப் பெற்ற, மாமணி தூணில் - சிறந்த மணிகள் பதிக்கப் பெற்ற தூண்களையுடையதாய், செய்த - நன்கு செய்யப்பட்டது மான, மண்டபம் அதனின் நாப்பண் - மண்டபத்தின் நடுவில், கோமணி - வயிரங்கள் அழுத்தப்பெற்ற, சிவிகை மீது - சிவிகையின் மேல், கொண்டலும் மின்னும்போல - மேகமும் மின்னலும் போன்று, தாமரை கிழத்தியோடும் - செந்தாமரையில் வீற்றிருப்பவளும் இலக்குமி அமிசம் பெற்றவளுமான சீதா பிராட்டியுடன், தயரத ராமன் சார்ந்தான் - தயரதன் புதல்வனை இராமபிரான் வந்து சேர்ந்தான். ஏ : அசை.

பூரி : பொன். (திவ); பூரி தட்சிணை என்ற வழக்குச் சொல்லி லும் பொன்னையே குறிக்கும். பண்டைநாளில் பொன் என்ற நாணயமே பெருவழக்காகவிருந்தமை காண்க. 'பத்து நூறுயிரம் பொன், பண்டு பட்டினப்பாலை கொண்டதும்' (கலிங். பரணி); நாப்பண் : நடு. 'அரிகுலச் சேனை நாப்பண்' (யுத்த. 436) கோமணி : வயிரம். 'மாமணி மரபுக்கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதி, யாமென வுரைப்பர் நூலோ ரதிகம்யா தென்னி னேனைக் காமரு மணிகட் கெல்லாம் தமரிரு கருவி யாமத், தூமணி தனக்குத்

தானே துணையருங் கருவியாகும்' (திருவிளை. மாணிக்கம். 61); என்றது காண்க. தயரதராமன்: (யுத்த. 4269).

பி - ம். 1. பொரசி.

1

## இராமபிரான் சிங்காதனத்து வீற்றிருத்தல்

4287. விரிகடல் நடுவுட் பூத்த மின்னென வாரம் வீங்க
எரிகதிர்க் கடவுள் தன்னை யினமணி மகுட மேய்ப்பக்
கருமுகிற் கரசு செந்தா மரைமலர்க் காடு பூத்தோர்
அரியணைப் பொலிந்த் தென்ன விருந்தன னயோத்தி
[வந்தான்.

விரிகடல்-விரிந்த கடலின், நடுவுள் பூத்த-நடுவிலே, பூத்த மின் என - தோன்றிய மின்னல் போன்று, ஆரம் வீங்க - முத்தாரம் மிக வுயர்ந்து விளங்கவும், எரி - பிரகாசிக்கின்ற, கதிர் கடவுள் தன்னை - கிரணங்களையுடையவனான சூரியனை, இனம் மணி மகுடம் ஏய்ப்ப - தொகுதியான மணிகள் அழுந்தப்பெற்ற மகுடம் ஒத்து விளங்கவும், கரு முகிற்கு அரசு - கரிய மேகராசன். செந்தாமரை மலர் காடு பூத்து - செந்தாமரை மலர்த்திறள்கள் பூத்து, ஓர் - ஒப்பற்ற, அரி அணை பொலிந்தது என்ன - சிங்காதனத்திற் விளங்கினாற் போல, அயோத்தி வேந்தன் - அயோத்தியில் திருவவதாரம் செய்தவனான இராமபிரான், இருந்தனன் - வீற்றிருந்தான்.

விரிகடல் நடுவுட் பூத்த மின்: உவமையணி. ஆரம் - முத்துமாலை. இனம்: பிறவியாலும் அளவாலும் நிறையாலும் நிறத்தாலும் தம்முள் ஒத்த மணியெனினும் ஆம், கருமுகிற் கரசு செந்தாமரை பூத்து: 'கரு முகிற் றாமரைக் காடு பூத்து' (பால. திருவவ. 14); 'நீலக் கார்முகில் கமலம் பூத்து, மண்ணுற்றுவரி விலேந்தி' (கிட்கிந்தா. 303); இல்பொருளுவமையணி. 'அமலத் திண் கரமுங் காலும் வதனமுங் கண்ணுமான, கமலத்திண் காடு பூத்த காள மாமேக மொத்தான்' (யுத்த. 778); 'கண்டனன் வதனம் வாய் கண் கைகாலெனப், புண்டரீ கத்தடம் பூத்துப் பொற் சிலை, மண்டபம் தொடர்ந்து மண் வயங்க வந்தவோர், கொண்டலிற் பொலிதரு கோலத்தான்றனை' (யுத்த. 1483).

பி - ம். 1. நடுவட்.

4. பொலிவதேபோல், பொலிந்ததேய்ப்ப.

2

## இராமபிரான் அத்தாணிமண்டபத்திற் சிறப்புடன் வீற்றிருத்தல்

4288. மரகதச் சயில மீது வாணிலாப் பாய்வ தென்ன
இருகுழை யிடறும் வேற்க ணிளமுலை யிழைந லார்தம்
கரகம லங்கள் பூத்த கற்றையங் கவரி தெற்ற
உரகரு நரரும் வானத் தும்பரும் பரவி யேத்த.

மரகதம் சயிலம் மீது - மரகத மலையின் மீது, வாள் நிலா பாய்வது என்ன - வெண்ணிறமுள்ள நிலா பரவுவதுபோல, இருகுழை இடறும் வேல்கண் - இருகுழைகளிலும் இடறும் வேல் போன்ற விழிகளையும், இள முலை - இள முலைகளையும் உடைய, இழை நலார் தம் - அணிகலன் புனைந்த மகளிருடைய, கரம் கமலங்கள் - கைத் தாமரைகளிலே, பூத்த - தோன்றிய. அம் கற்றை கவரி - அழகிய சாமரைக் கற்றை, தெற்ற - தன்புறத்தில் முட்டவும், உரகரும் - நாகலோக வாசிகளும், நரரும் - நரரும், வானத்து உம்பரும் - விண்ணகத்துள்ள தேவர்களும் என்ற இவர்கள், பரவி ஏத்த - போற்றித் துதி செய்யவும்.

மரகதச் சயிலம்: (யுத்த. 4279); இச்செய்யுள் முதலாக உள்ள செயவெனச்சங்கள் அடுக்கி, ஏழாம் செய்யுட்கண் 'இருந்தகாலை' என்ற இடத்து. 'இருந்த' என்றதனோடு இயையும். இருகுழையிடறும் வேற்கண்: 'காதோடளாவிய கண்' 'இருகுழை தொடரும் வேற்கண்' (யுத்த. 4279)-ம் உரையும் காண்க. 'சென்று செவியளக்கும் செம்மையவாய்ச் சிந்தையுள்ளே, நின்றளவிலின்ப நிறைப்பவற்றுள் - ஒன்று, மலரி வருங் கூந்தலார் மாதர் நோக்கு' (தண்டி. 49); 'குமிழ்மிசை யெறிந்து குழையெதிர் நடந்து' (நைடத: அன்னத்தைத்தூது ; 13). குழை: 'காது சேர் தாழ்குழையாய்' (நன். பொது. 65); இழைத்து: இழைத்துச் செய்யப் படுதலின் ஆபரணத்துக்குக் காரணக் குறி. உரகர்: நாகலோக வாசிகள். உரகம்: பாம்பு; மார்பினால் ஊர்வது. இல்பொருளுவமையணி.

பி - ம். 1. வானிலாப், பரந்த தேய்ப்ப.
2. குழை தொடரும்.
3. கவரி தோற்ற.
4. பரசி.

4289. உலகமீ ரேழுந் தன்ன
வொளிநிலாப் பரப்ப வானில்
திலகவா ணுதல்வெண் டிங்கள்
சிந்தைநொந் தெளிதிற் றேயக்
கலகவா ணிருதர் கோனைக்
கட்டழித் திட்ட கீர்த்தி
இலகிமே னிவந்த தென்ன
வெழுதனிக் குடைநின் றேய.

(இராமபிரானுடைய) திலகம் வாள் நுதல் - திலகமணிந்த ஒளி பொருந்திய நுதலாகிய, வெள் திங்கள் - வெண்ணிற மதியம், உலகம் ஈரேழும் - பதினான்கு உலகங்களிலும், தன்ன - தன்னுனுடைய, ஒளி நிலா பரப்ப - ஒளி பொருந்திய நிலவினைப் பரப்புதலால், வானில் வெண் திங்கள் - வானிலுள்ள வெள்ளை மதியம், சிந்தை நொந்து - மனம் வருந்தி, எளிதில் தேய - இரங்கும்படி தேயவும், கலகம் - போர் விருப்பம் உள்ள, வாள் நிருதர் கோனை - வாளேந்திய அரக்கர் தலைவனான இராவணனை, கட்டு அழித்து இட்ட கீர்த்தி - உறவு வர்க்கத்தோடும் அழித்திட்ட புகழானது, இலகி மேல் நிவந்தது என்ன - விளக்கமுற்று மேலோங்கியது என்று கருதுமாறு, எழு - மேலோங்கிய, தனி குடை நின்று ஏய - தனிக்குடை நின்று நிழற்றவும்.

தன்ன : தன்னிடமிருந்து வெளிப்படுகின்ற. கலகம் : போர். வாள் : சந்திரகாசம் என்ற வாள். கட்டழிதல் : 'இனிக் கட்டழிந்த தரக்கர் குலம்' (சுந்தர. 544); கீர்த்தி : வெண்ணிறம் : குடையும் வெண்ணிற மாகலின் புகழ் உயர்ந்து விளங்கியது போன்ற குடை எனப்பட்டது.

மதி, அமர பக்கத்து நாடோறும் தேய்வது, இராமபிரானுடைய முகமதி ஈரேழுலகங்களிலும் ஒளி நிலா பரப்புவது கண்டு, எளிமையுற்று வருந்தியதாகக் கற்பிக்கப்பட்டது. வெண்டிங்கள் : இடைநிலை விளக்காக, 'திலக வாணுதல்' வானில் என்ற ஈரிடத்தும் இயைக்கப் பெற்றது. வெண் கொற்றக் குடை; இதனைச் சந்திர வட்டக்குடை என்றும் கூறுவர். சந்திரிகையும் புகழ்க் குவமையாதல்; (பால. மிதிலைக். 73); இராவணனைப்

பூண்டுடன் ஒழித்ததால் விளங்கிய கீர்த்தியே உயர்ந்ததுபோல் காணப்பட்டது. தன்மைந்நற் குறிப்பேற்றவணி,

பி-ம். 1. மீதெழுந்ததென்ன.

2. திலகவாளொளி கொடிங்கள், திலதமா நின்ற திங்கள். 4

4290. மங்கல கீதம் பாட
மறையவ ராசி கூறச்
சங்கினம் குமுறப் பாண்டில்
தண்ணுமை துவைப்பத் தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப்
பொருகயற் கருங்கட் செவ்வாய்ப்
பங்கய முகத்தி னார்கள்
மயினடம் பயில மாதோ.

மங்கலம் கீதம் பாட - மங்கலப் பாடல்களைப் (பாடற்குரியவர்) பாடவும், மறையவர் - வேதியர்கள், ஆசி கூற - வாழ்த்துரை வழங்கவும், சங்கு இனம் குமுற - சங்கினம் பேரொலி செய்யவும், பாண்டில் - கஞ்ச தாளமும், தண்ணுமை - மத்தளமும், துவைப்ப - ஒலிப்பவும், தா இல் - குற்றமற்ற, பொங்கு - முழங்குகின்ற, பல் இயங்கள் ஆர்ப்ப - பலவித வாத்தியங்கள் ஆரவாரிக்கவும், பொரு - ஒன்றோடொன்று போர் செய்கின்ற, கயல் - கயல்மீனை யொத்த, கருகண் செவ்வாய் - கரிய விழிகளையும் சிவந்த வாயினையு முடையரான, பங்கயம் முகத்தினார்கள் - செங்கமலம் போன்ற முகமுள்ள மாதர்கள், மயில் நடம் பயில - மயில் நடம் போன்ற நாட்டியத்தைப் பழகவும். மாது ஓ: அசை.

முதல் மூன்றடிகள் இங்குள்ளவாறே (யுத்த. 4277)-இல் வந்து இருத்தல் காண்க. பாண்டில்: கஞ்சதாளம். 'இடிக்குரன் முரச மிழுமென் பாண்டில்' (சிலப். 26, 194); தாவில்: 'தாவில் சரா சரங்களெலாம், சிவம் பெருக்கும் பிள்ளையார்' (பெரியபு. திருஞான. 26); பொருகயற் கருங்கண்: 'நஞ்சுமமிர்தமுமே, போல் குணத்த பொருகயற்கண்' (சீவக. 167); பங்கயம்: பங்கஜம் என்ற வடசொல்

யகரம் பெற்று வந்தது. சேற்றில் முளைப்பது என்று தாமரைக்குக் காரணக் குறி. 'சேற்று வளர் தாமரை பயந்த' (புறநா. 27).

பி - ம். 2. தாவிப்.

4. பயிளடம், பயிலலுற்ருர். 5

4291. திரைகடற் கதிரு நாணச்
செழுமணி மகுட கோடி
கரைதெரி விலாத சோரிக்
கதிரொளி பரப்ப நாளும்
வரைபொரு மாட வாயில்
நெருக்குற வந்து மன்னர்
பரசியே வணங்குந் தோறும்
பதயுகஞ் சேப்ப மன்னே

திரைகடல் கதிரும் நாண - அலைகின்ற கடலில் தோன்றும் (உதய) சூரியனும் வெட்கிடுமாறு, செழுமணி - வளப்பமான மணிகளையுடைய, மகுடம் கோடி - மகுட வரிசைகள், கரை தெரிவு இலாத - அளவு காணமுடியாத, சோரி - சொரிதலைக் கொண்ட, கதிர் ஒளி பரப்ப - கிரணங்களுடன் கூடிய ஒளியைப் பரவுமாறு செய்யவும், நாளும் - நாளும், வரைபொரும் மாடம் வாயில் - மலையை நிகர்த்துத் தோன்றுகின்ற மாடவாயிலிலே, நெருக்கு உற - நெருக்கம் உண்டாகும்படி (பெருங் கூட்டமாக) வந்து - வந்து, மன்னர் - அரசர்கள், பரசி - துதித்து, வணங்கும் தோறும் - பணியும் தோறும், பதயுகம் சேப்ப - தாளிணைகள் செந் நிறம் உறவும். மன் : ஓ அசை.

திரைகடல்: 'திரைகடலோடியுந் திரவியந் தேடு' கடல் கதிர் - கீழ்க் கடலில் தோன்றுவதாகக் கூறும் சூரியன். 'பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு' (திருமுருகு. 2); சோரி: சொரிதல் அடியாகப் பிறந்த சொல்; மகுட கோடி: இராமபிரானைப் பேட்டி காணவந்த மன்னர்கள் அணிந்தவை; மகுட கோடி: கோடிக் கணக்கான மகுடமுமாம். வரை பொருமாடம் வாயில்; (ஒப்பு); 'மேருவை நிறுத்தி வெளி செய்ததுகொல்' (சுந்தர. 161); பரசுதல்: போற்றுதல்; 'பரசுவது நம்பெருமான் கழல்களென்றுற் பழுதடையாது' (பெரிய. பு. திருஞான. 616); மன்னவரின்

மகுடகோடிகள் அவர்கள் வணங்குந்தோறும் இராமபிரான் திருவடிகளிற் றீண்டுவதால், பதயுகம் சிவந்த என்க. 'நின்றிமின் மன்னீர் நெருநற் றிறை கொணர்ந்து, முன்றந்த மன்னர் முடி தாக்க-இன்றுந், திருந்தடி புண்ணுகச் செவ்வியிலனே. பெருந்தண் ணுறந்தையார்கோ' (முத்தொள். 67) (ஒப்பு) 'ஆய்வரும் பெருவலியரக்கராதியோர், நாயகர் நளிமண மகுடம் நண்ணலால், தேய்வுறத் தேய்வுறப் பெயர்ந்து செஞ்சுடர், ஆய்மணிப் பொலன்கழ லடி நின்றுர்ப்பன' (ஆரணிய. 559); 'தாடொழுத பகைவேந்தர் முடியுழுத தழும்பிருந்த சரணத்தானை' (சுந்தர. 312); 'மாந்தையிலே வாழு மகுடத்தி யாகியுனக், கேய்ந்த தழும்போ ரிரண்டுளவால் - வேந்தர், முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க் கீயும், படித்தழும்புன் கையிலேபார்' (தனிப்பா.); 'கோவுடை நெடுமணி மகுட கோடியால், சேவடியடைந்த பொற் கழலுந் தேயுமால்' (பால. அரசியற், 8); 'வந்து, பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள், மணிமுடியிற் றேய்ந்த வடு' (நள. 374); 'ஒன்னலர் மணிமுடி யுரிஞ்சுந் தாளினுன்' (நைடதம். நகரப், 39); என்பன காண்க.

பி-ம். 1. திரைபொரு கடலும்.

2. சோதிக்; கடுப்ப.

6

4292. மந்திரக் கிழவர் சுற்ற
மறையவர் வழுத்தி யேத்தத்
தந்திரத் தலைவர் போற்றத்
தம்பியர் மருங்கு சூழச்
சிந்துரப் பவளச் செவ்வாய்த்
தெரிவையர் பலாண்டு கூற
இந்திரற் குவமை யேய்ப்ப
வெம்பிரா னிருந்த காலை.

மந்திரம் கிழவர் சுற்ற - மந்திராலோசனைக்குரியவர்கள் சூழ்ந்திருப்ப, மறையவர் வழுத்தி ஏத்த - வேதியர்கள் வாழ்த்தித் துதிக்க, தந்திரம் தலைவர் போற்ற - சேனுதிபதிகள் போற்றி யென்று கூறவும், தம்பியர் மருங்கு சூழ - தம்பிமார்கள் அண்மையில் சுற்றி நிற்கவும், சிந்துரம் பவளம் செவ்வாய் - சிந்துரம் ஒத்த (செந்நிறமுள்ள) பவழம் போன்ற சிவந்த வாயினையுடைய,

தெரிவையர் - மகளிர், பல் ஆண்டு கூற - பல்லாண்டு பாடவும், இந்திரற்கு உவமை ஏய்ப்ப - தேவேந்திரனுக்கு உவமை பொருந்துமாறு, எம்பிரான் இருந்த காலை - எமது இறைவனாகிய இராமபிரான் வீற்றிருந்தபோது.

பி - ம். 1. மறையவற் கிறைவனோடும். 7

இங்கு அதிகப் பாடல்கள் :—

1 கெவனொடு கெவாக்கன் சாம்பன் கேசரி கெந்த மாதன்
தவனுறு சரபன் சாம்பன் சுடேணன் சம்பாதி நீலன்
நவையறு பனசன் குரன் கெசனளன் சமீரணன் பாம்
இவனரி லோமன் மின்போ லெயிற்றின னிடப னென்போன்.

2 விரதன்வீ மாக்கன் வேக கேசரி விந்தன் வெற்றிக்
கரமுடைச் சதுக்கன் சோதி முகன் ததிமுகன் கயந்தன்
அரன் விறற் கொடிய கோப னிடும்பனோ டரம்ப னுண்மை
தெரிதரு வசந்தன் கொற்றத் துன்முகன் தீர்த்த பாதன்.

4293. மயிந்தன்மா துமிந்தன் கும்ப
னங்கத னனுமன் மாறில்
கயந்தரு குமுதக் கண்ணன்
சதவலி குமுதன் தண்டார்
நயந்தெரி ததிமு கன்கோ
கசமுகன் முதல நண்ணர்
வியந்தெழு மறுபத் தேழு
கோடியாம் வீர ரோடும்.

மயிந்தன் முதலாகக் கசமுகன் ஈறாகக் கூறப்பட்டவர்களே, முதல - முதன்மையாக வுடைய, நண்ணார் - பகைவர்கள், வியந்து எழும் - வியக்குமாறு கிளம்பிப் போராற்றவல்ல, அறுபத்தேழு கோடியாம் வீரரோடும் - அறுபத்தேழு கோடி யெண்ணிக்கையினரான வீரருடனே, 'ஏனைய பிறரும் சுற்ற' என்ற அடுத்த கவியுடன் முடியும்.

அறுபத்தேழு கோடி; முன்னர் 'அறுபத்தேழமைந்த கோடி' (யுத்த. 4249) என்று வந்தமை காண்க. சுந்தர காண்டத்தில்

'வெள்ளமேழு பத்துள தால் வீரன் சேனை' (சுந்தர. 603) என்பது அநுமன் கூற்று.

பி - ம். 1. அகம்பன்.

4. கோடிய. 8

4294. ஏனையர் பிறருஞ் சுற்ற
வெழுபது வெள்ளத் துற்ற
வானர ரோடும் வெய்யோன்
மகன்வந்து வணங்கிச் சூழத்
தேனிமி ரலங்கற் பைந்தார்
வீடணக் குரிசில் செய்ய
மானவா ளரக்க ரோடு
வந்தடி வணங்கிச் சூழ்ந்தான்.

ஏனையர் பிறரும் சுற்ற-மற்றுமுள்ளார் பிறரும் சூழவும், எழுபது வெள்ளத்து உற்ற வானரரோடும்-எழுபது வெள்ளமாகப் பொருந்திய வானரரோடும், வெய்யோன் மகன் வந்து-சூரியன் புதல்வனை சுக்கிரீவன் வந்து, வணங்கி சூழ - பணிந்து சூழ்ந்திருக்கவும், தேன் இமிர் அலங்கல் பசுமை தார் - வண்டுகள் ரீங்காரம் செய்யும்படியான அசையும் தன்மையுள்ள புதிய மாலையை அணிந்த, வீடணன் குரிசில் - வீடணன் என்ற பெருந்தகை, செய்ய மானம் - செவ்விய மானத்தையும், வாள் - வாட் படையையும் உடைய, அரக்கரோடு - இராக்கதர்களோடு, வந்து - வந்து, அடி வணங்கி சூழ்ந்தான் - திருவடிகளில் வணக்கம் செலுத்திச் சுற்றி நின்றான்.

முன் பாட்டில் அறுபத்தேழு கோடி வானர வீரர் என்றார். இங்கு எழுபது வெள்ளம் என்று கூறப்பட்டது. ஒருக்கால் 70 வெள்ளம் அறுபத்தேழு கோடியாதல் கூடும். இந்த அரக்கர் வானரரைக் கணக்கிடுவதில் கம்பநாடர் முதனூலை ஒட்டியே செல்கின்றனர். நாகபாசப் படலத்தில் இந்திரசித்துடன் சென்ற பெருஞ் சேனையைக் குறிக்கும்போது, கவியரசர் 'அன்னதெடு போயின தானையளந்து கூற, என்னாலரிதேனு மியம்புவான் மீகனென்னும், நன்னான் மறையானது நாற்பது வெள்ளமென்னச் சொன்னான் பிறர்யா ரஃதுணர்ந்து தொகுக்க வல்லார்' (யுத்த. 1960) என்றமை காண்க. இங்கு பிறர் என்றதில் தன்னையும் உளப்படுத்தியே

பகர்ந்தார் கவிசார்வபௌமராகிய கம்பநாடர் என்க. யுந். 1960 உரைக் குறிப்பும் காண்க. தேன் நிமிர் என்று பிரித்துத் தேன் பொதிந்த எனினுமாம். அலங்கல் - அசைதல் பற்றி மாலைக்குக் காரணக் குறி. பசுமை தார்; பைந்தார் ஈறு போதல் என்றபடிமை கெட்டு, அடியகரம் ஐயாகி, முன் நின்ற மெய்யும் கெட்டு, மெலி மிகுந்தது. செய்ய மானம் வாள் அரக்கர்: 'மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற, மெனநான்கே மேமம் படைக்கு' (குறள். 766) என்பது பொய்யா மொழி. இங்கு வழிச் செலவு - நல் நெறிக்கண் சேறல்; அதாவது முன் வீரராயினர் சென்ற நன் னெறிக் கட்சேறல் - அது அறப்போர். இதனையேதான் கல்வியிற் பெரியார் 'செய்ய' என்ற சொல்லாற் குறித்தார். மானம் - தன் னிலையிற் றாழாமையும், தாழ்வு நேரின் உயிர் வாழாமையுமாம். 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார் உயிர் நீப்பர் மானம் வரின்' (குறள். 969) என்றமை காண்க.

பி - ம். 1. வெள்ளத்திற்ற.
4. வணக்கஞ் செய்தார்.

9

## குகன் சேனையுடன் வந்தமை

4295. வெற்றிவெஞ் சேனை யோடும்
வெறிப்பொறிப் புலியின் வெவ்வால்
சுற்றுறத் தொடுத்து வீக்கு
மரையினன் சுழலுங் கண்ணன்
கற்றிரள் வயிரத் திண்டோள்
கடுந்திற மடங்க லன்னான்
எற்றுநீர்க் கங்கை நாவாய்க்
கிறைகுகன் தொழுது சூழ்ந்தான்.

வெறி - மூர்க்கத்தனத்தையும், பொறி - உடற் புள்ளியையு முடைய, வெம்மை புலியின் வால் - கொடிய புலியின் வாலை, சுற்று உற தொடுத்து - சுற்றுறப் பொருந்தி, வீக்கும் - கட்டுகின்ற, அரையினன் - இடையை யுடையவனும், சுழலும் கண்ணன் - சுழலும் இயல்பினதான விழிகளை யுடையவனும், கல் திரள் - கற் போன்று திரண்ட, வயிரம் திண் தோள் - உறுதி வாய்ந்த தோளுடனே, கடு திறம் - கடுமையான வலியினையுமுடைய, மடங்கல் அன்னான் - சிங்

கத்தை நிகர்த்தவனும், எற்றும் நீர் கங்கை நாவாய்க்கு இறை குகன் - அலை மோதுகின்ற புனல் நிறைந்த கங்கைக் கரையிலே நாவாய்கட்குத் தலைவனுமான குகப் பெருமான், வெற்றி வெம் சேனை யோடும்-வெற்றி செறிந்த (தனது) வெவ்விய வீரம் செறிந்த படையுடனே, சூழ்ந்து தொழுதான் - வலம் வந்து பணிந்தான்.

கற்றிறள் வயிரத் திண்டோள்; 'கற்காணுந் திண்மையான்' (அயோத்தி. குகப். 26); முன்னர் 'வெங்கரியி னேறனையான்' (அயோத்தி. குகப். 25); 'புலியின் வெவ்வால் சுற்றுறத் தொடுத்து வீக்கும் அரையினன்' 'தயங்குறச்சூழவிட்ட தொருபுலி வாலினன்' (அயோத்தி. கங்கை. 31); என்றார். இங்கு மடங்கலன்னான் எனப் பட்டது. மடங்கல்; பிடரி மயிர் மடங்கியிருப்பது என்று சிங்கத் திற்குக் காரணக் குறி. 'வெம் மடங்கலை யுன்னி வெதும்புவாள்' (சுந்தர. 348); கங்கை - இங்குக் கங்கைக் கரையை குறித்தது; 'கங்காயாம் கோஷகா' (கைவல்யம்) என்று விட்ட இலக்கணக்கு உதாரணம் காட்டியது காண்க. நாவாய்க்கிறை; 'கங்கை யிருகரை யுடையான் கணக்கிறந்த நாவாயான்' (அயோத்தி. குகப். 25); 'ஆயிரமம்பிக்கு நாயகன்' (அயோத்தி. கங்கைப். 28); புலியின் வாலினை அரையிற் புனைந்தது குகனுடைய போராற்றல் தெரிவித் தற்கு, 'எற்று நீர்க் கங்கை நாவாய்க் கிறைகுகன்' (அயோத்தி. கங்கைப். 39) என்ற தொடர் முன்னும் வந்துள்ளமை காண்க.

பி - ம். 1. வெறிப் பொலிப்; வெவ்வாய்.
2. கழல் செங்.
3. கற்றிறல்.
4. இறைஞ்சி நின்றான். 10

### வந்தவர்க்கு இருக்கை தந்து இராமபிரான் கூறுதல்

4296. வள்ளலு மவர்கள் தம்மேல்
வரம்பின்றி வளர்ந்த காதல்
உள்ளுறப் பிணித்த செய்கை
யொளிமுகக் கமலங் காட்டி
அள்ளுறத் தழுவி னன்போ
றகமகிழ்ந் தினிதி னேக்கி
எள்ளலி லாத மொய்ம்பி
ரீண்டினி திருத்தி ரென்றான்.

வள்ளலும் - வரதனான இராமபிரானும், அவர்கள் தம்மேல் - அவர்கள்மீது, வரம்பு இன்றி வளர்ந்த காதல் - எல்லையின்றி வளர்ந்த அன்பு, உள் உற பிணித்த செய்கை - உள்ளே பொருந்தப் பிணித்த செய்கையை, ஒளிமுகம் கமலம் காட்டி - ஒளி பொருந்திய முகத் தாமரையாற் காட்டிக் கொண்டு, அள் உற தழுவினன் போன்று - (நெருக்க) அழுத்தமாக அணைத்தான் போன்று, அகம் மகிழ்ந்து - மனமுவந்து, இனிதின் நோக்கி - இன்பமுறப் பார்த்து, 'எள்ளல் இலாத மொய்ம்பீர் - இகழ்தற்கில்லாத வல்லமையுடையீர்' ஈண்டு - இங்கே, இனிது இருத்திர் - இனிதாக வீற்றிருங்கள்', என்றான் - என்று கூறி உபசரித்தான்.

'நெஞ்சத் தகநக நட்பது நட்பு' (குறள். 786) என்றபடி, 'காதல் உள்ளுறப் பிணித்த செய்கை' எனப்பட்டது. அரசியற் பதவிக்கேற்ப நடந்துகொள்ள வேண்டியவனாகலின், 'அள்ளுறத் தழுவி' என்னாது தழுவினன்போல் எனப்பட்டது. மற்றும் பலரை ஏககாலத்தில் வரவேற்றானாகலின் அங்ஙனம் கூறினானுமாம். 'முகத் தானமர்ந்தினிது நோக்கி யகத்தானா மின்சொல னாகப்பெறின்' (குறள். 93); எள்ளல் - இகழ்தல்; 'உருவுகண் டெள்ளாமை வேண்டும்' (குறள். 667); 'எள்ளற்படுங்கீழ் மக்க ளானு மிழிந்த குலத்தோ ரானாலும்' (பிரமோத்தர).

பி - ம். 2. காட்ட.
3. போல்.
4. மொய்ம்பர்; இருக்க. 11

## இனிதிருப்ப இரண்டு மாதங் கழிந்ததெனல்

4297. நன்னெறி யறிவு சான்றோர்
நான்மறைக் கிழவர் மற்றைச்
சொன்னெறி யறியு நீரார்
தோமறு புலமைச் செல்வர்
பன்னெறி தோறுந் தோன்றும்
பருணிதர் பண்பின் கேளா
மன்னவர்க் கரசன் பாங்கர்
மரபினாற் சுற்ற மன்னோ

நல்நெறி அறிவு சான்றோர் - நல்ல வழியில் அறிவு மிக்கவரும், நால் மறை கிழவர் - நான்கு வேதங்கட்கும் உரிமை பூண்டவரும், சொல் நெறி அறியும் நீரார் - பேச வேண்டிய முறைமையைத் தெளிந்த தன்மை யுடையவரும், தோம் அறு புலமை செல்வர் - குற்றமற்ற புலமையைச் செல்வமாகக் கொண்டவரும், மற்றை - மற்றும், பண்பின் கேள் ஆம் - நற் பண்புகட்கு உறவினருமான, பல்நெறி தோறும் தோன்றும் - பலவாகிய சாத்திரத் துறைகளிலும் சிறந்து ஒளிரும், பருணிதர் - பக்குவசாலிகள், மன்னவர்க்கு அரசன் பாங்கர் - அரசர்க்கரசனுன இராமபிரான் பக்கத்தில், மரபினுல் சுற்ற - முறைப்படி சூழ்ந்து நிற்ப. மன் ; ஓ : அசை.

நல் நெறி - சன்மார்க்கம்; செந்நாப் போதார் திருவாய் மலர்ந்தருளிய திருக்குறள் அறத்துப்பாலிலும் பிற சமய நீதி நூல்களிலும் கூறப் பெற்றவை. தருமத்தைச் சுருக்கிக் கூற வந்த வேத வியாசர், 'பரோபகாராய புண்யாயா பாபாய பரபீடனம்' என்று கூறியமை காண்க. இங்கு ; 'ஈதல் அறம் தீவினைவிட் டீட்டல் பொருளெஞ்ஞான்றும், காதலிருவர் கருத்தொருமித், தாதரவுப்-பட்டதே யின்பம் பரனை நினைந்திம் மூன்றும், விட்டதே பேரின்ப வீடு' (ஔவை) என்பது காணத்தகும். சொன்னெறி - சொல் நெறி ; யாதும் தீமையிலாத சொலல், மற்றும் சொல்லும் முறையறிந்து சுருக்கிச் சொல்லுதல். இராமபிரானுக்குப் பூர்வபாஷி மிதபாஷி என்ற நாமங்கள் உள்ளமை காண்க. இங்கு, சொல்வன்மை, பயனில சொல்லாமை, என்ற திருக்குறள் அதிகாரங்களும் ஊன்றி நோக்கத் தக்கவை. தோம் அறு புலமை - ஐயம் திரிபு அறியாமை நீங்கிய புலமை. தோடம் என்பது தோம் என வந்ததென்பர். தோமறு புலமைபரஞானமாகிய பதிஞானமும், தன்னை யுணர்ந்து தலைவனை யுணர்வதும், எவ்வுயிரும் பராபரன் சந்நிதியாகும், இலங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயில் என்று உணர்வதும் ஆம். பன்னெறித் திகழ்கின்ற சமயமு மனந்தம்' (தாயு. பரசிவ. 2) என்றபடி கடவுளரைப் பற்றிய மதங்களும் அனந்தம் ; ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. 'பல்லியல் நெறியிற் பார்க்கும் பரம்பொருள்' (பால. கோலங். 12) என்று ஆசிரியரே கூறுதல் காண்க. பருணிதர் - பேரறிஞர் ; (யுத்த. 2246) ; புலவருமாம் : 'தொன்மைப் பருணிதர் தொகுத்த பத்தி, நாவருங் கிளவி' (கிட்கிந்தா. நாட. 64) ; பண்பின் கேளாம் மன்னவன் என இயைத்

தலுமாம்; (ஒப்பு): 'குணங்களை யென் கூறுவது கொம்பினைச் சேர்ந்தவை யுய்யப், பிணங்கு' (பால. கார்முகப். 18).

பி-ம். 2. சொன்னெறி யறிவு.
3. பன்னெறி வகையிற்; தொன்று; பருமணிப்; பண்பிற்.
4. அரசன் றன்னை. 12

4298. தேம்படு படப்பை மூதூர்த்
திருவொடு மயோத்தி சேர்ந்த
பாம்பணை யமலன் றன்னைப்
பழிச்சொடும் வணக்கம் பேணி
வாம்புனற் பரவை ஞாலத்
தரசரு மற்று ளோரும்
ஏப்பலுற் றிருந்தார் நொய்தி
னிருமதி யிறந்த தன்றே.

வாம் புனல் பரவை - தாவுகின்ற நீரைக் கொண்ட கடலாற் சூழப்பெற்ற, ஞாலத்து அரசரும் - பூமண்டலத்து மன்னரும், மற்றுளோரும்-ஏனையோரும், தேம்படு-தேன் நிறைந்த, படப்பை - சோலைகளைக் கொண்ட, முதுமை ஊர் அயோத்தி - பழ நகராகிய அயோத்தியில், திருவொடு சேர்ந்த பாம்பு அணை அமலன் தன்னை - திருவுடன் கூடியவனும் சேர்ந்த ஆதிசேடனைத் அணையாகக் கொண்டவனுமான திருமாலின் அமிசமான இராமபிரானை, பழிச்சொடும் வணக்கம் - துதித்தலோடு பணிதலையும், பேணி - விரும்பிச் செய்து, ஏம்பல் உற்று இருந்தார் - மகிழ்ச்சி கூடியிருந்தார்; நொய்தின் - வருத்தமின்றி, இருமதி இறந்தது - இரண்டு மாதங்கள் கழிந்தன. அன்று, ஏ: அசை.

தேம்படு - தேன் பொருந்திய, 'தேம்படு பனையின்' படப்பை- சோலை அல்லது வயல், கொல்லைத் தோட்டம் என்பர் சிலப்பதிகார உரையாசிரியர். 'பூவிரி படப்பைப் புகார் மருங்கெய்தி' (சிலப். 6, 32); 'இளைசூழ் படப்பை' (சிலப். 12, 24). பாம்பு - ஆதிசேடன். பாம்பணை அமலன்-சேஷசாயி. (ஒப்பு): 'ஆயிரம் விரித்தெழு தலையுடை யருந்திறற், பாயற்பள்ளிப் பலர்தொழு தேத்த, விரி திரைக் காவிரி வியன்பெருந் துருத்தி, திருவமர் மார்பன் கிடந்த

வண்ணமும்' (சிலப். 11, 37, 40); பழிச்சுதல் - புகழ்தல். 'நீர்வார் கண்ணேன் தொழுது நிற்பழிச்சி' (புறநா. 1/3). பழிச்சுதல் - வாக்கின் செயல். வணக்கம் - உடலின் செயல். இரண்டும் மன மின்றேல் நிகழா; ஆகவே மனம் வாக்குக் காயம் என்ற மூன்றும் இங்குத் தொழிற்பட்டமை காண்க. மனம் உபலக்கணத்தாற் கொள்க. கய்கள் தலைபுக்கன கருத்துளது யெல்லாம், தெய்வ மெனலுற்றவுடல் சிந்தைவச மன்றே' (பால. கோலங். 34)) என்றதும் காண்க. வாவும் - வாம் எனத் தொக்கது, வாம்பரி பரவை - பரந்திருத்தலாற் கடலுக்குச் காரணப் பெயர். ஐ - பெயர் விகுதி. ஏம்பல் - மகிழ்ச்சி. இருமதி - இரண்டு திங்கள். முன் காலத்தில் சாந்திரமானத்தைப் பின்பற்றி மாதங்கட்குப்பெயர் வந்தன ஆகலின், மாதம் மதி எனப்பட்டது. முதல் நான்கடி களில் திருமாலே இராமபிரான் என்று குறித்தது காண்க.

பி - ம். 1. தேம்புனற்; படலை; திருநகர்.
2. பழிப்பற. 13

## இராமபிரான் செய்தது

4299. நெருக்கிய வமர ரெல்லா
நெடுங்கடற் கிடைநின் றேத்தப்
பொருக்கென வயோத்தி யெய்தி
மற்றவர் பொருமல் தீர
வருக்கமோ டரக்கர் யாரு
மடிதர வரிவிற் கொண்ட
திருக்கிளர் மார்பி னுன்பிற்
செய்தது செப்ப லுற்றும்.

நெடு கடற்கு இடை - அகன்ற பாற்கடலின் இடையிலே, நெருக்கிய - மிகத் திரண்ட, அமரர் எல்லாம் - தேவர்கள் அனைவரும், நின்று ஏத்த - நின்று துதிக்க, பொருக்கென - விரைந்து, அயோத்தி எய்தி - அயோத்தியிலே அவதாரம் செய்து, அவர் பொருமல் தீர - அவர்களின் வருத்தம் போகுமாறு, வருக்கமோடு - கூட்டத்துடனே, அரக்கர் யாரும் மடிதர - இராக்கதர் அனைவரும் இறந்துபடுமாறு, வரிவில் கொண்ட - கட்டமைந்த வில்லினைக்

கொண்டவனும், 'திரு - திருமகள், கிளர் - விளங்குகின்ற, மார்பினன் - மார்பை யுடையவனுமான இராமபிரான், பின் செய்தது செப்பல் உற்றும் - பின்னர்ப் புரிந்ததைச் சொல்லத் தொடங்குவோம். கவிக்கூற்று. மற்று: வினைமாற்று. வினை மாற்றசை விலைபிறிதெனு மற்றே' (நன். இடை. 14).

இராவணாதிகளை ஒழிக்க அயோத்தியில் இராமபிரான் அவதரித்த வரலாறு இங்கு குறிக்கப் பெற்றது. 'நீடிய வரக்கர் சேனை நீறுபட்டழிய வாகை சூடிய சிலையிராமன்' (பாயிரம்). என்றது காண்க. 'கோல் துறந்து, காடுங் கடலுங் கடந்திமையோர் இடுக்கண் காத்த கழல்வேந்தை' (அயோத்தி. துதி).

பி-ம். 1. நெடுங் கட்டிற்கிறை.
2. எய்தா ; மாற்றவர்.
4. செய்ததும். 14

## இராமபிரான் அந்தணர்க்குத் தானமளித்துவிட்டு, அரசரை வருக எனல்

4300. மறையவர் தங்கட் கெல்லா
மணியொடு முத்தும் பொன்னும்
நிறைவளம் பெருகு பூவுஞ்
சுரபியு நிரைத்து மேன்மேல்
குறையிதென் றிரந்தோர்க் கெல்லாங்
குறைவறக் கொடுத்துப் பின்னர்
அறைகழ லரசர் தம்மை
வருகென வருள வந்தார்.

மறையவர் தங்கட்கு எல்லாம் - வேதியர்களுக்கெல்லாம், மணியொடு - அரதனமுடனே, முத்தும் பொன்னும் - நல் முத்துக்களும் பொன்னும், வளம் நிறை பெருகு பூவும் - வளம் நிறைந்து பெருகுகின்ற பூமியும், சுரபியும் - கறவைப் பசுக்களும், மேல் மேல் நிரைத்து - மேலும் மேலும் வரிசையாகத் தந்து, 'இது குறை- இது எமக்குத் தேவையான பொருள்', என்று இரந்தோர்க்கு எல்லாம்-என்று இரந்தவர்க்கு எல்லாம், குறைவு அற கொடுத்து- மனக்குறை நீங்குமாறு ஈந்து, பின்னர் - பின்பு, அறைகழல் அரசர் தம்மை - ஒலிக்கின்ற வீரகண்டை புனைந்த மன்னர்களை, 'வருக -

வருவீர்களாக', என - என்று, அருள - அழைத்தருள, வந்தார் - (அவர்கள்) வந்தனர்.

நிறைவளம் பெருகும் என்ற தொடரைப் பூ, சுரபி என்ற இரண்டிற்கும் கூட்டுக, சுரபி - பால் சுரக்கும் பசு. 'தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலை பற்றி, வாங்கக் குடநிறைக்கும் வள்ளற் பெரும் பசுக்கள்' (திருப்பாவை. 3) என்றது காண்க. குறைவறக் கொடுத்து; தயரதனைப் பற்றிக் கூறுங்கால் ஆசிரியர் 'ஈய்ந்தே கடந்தான் இரப்போர் கடல்' (பால. அரசியல். 5) எனறது காண்க. 'இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல், குலனுடையான் கண்ணே உள' ( 223 ) என்ற குறட்பாவும், விநாயக புராணம் அரசியற்கைப்படலத்து வரும், 'இரப்பவன் வாளாவேக விலனென்னும் எவ்வம் கூறுது' ( 38 ) என்று தொடங் கும் செய்யுளும் காண்க. 'குறை தீர்ந்த கொடையே பகையை யுறவாக்கும்' (விநாயக. பு.); அறைகழல்: 'அறைகழலிராம ஞகி யறநெறி நிறுத்த வந்த இறை' (கிட்கிந்தா. 360) வருகவென என்பதில் அகரவீறு தொக்கது.

பி - ம். 1. பொன்னும் பூணும், பொன்னு முத்தும். 15

வந்த அரசர்களுக்கு வெகுமதியளித்து விடை தருதல்

4301. ஐயனு மவர்கள் தம்மை
யகமகிழ்ந் தருளி னேக்கி
வையகஞ் சிவிகை தொங்கன்
மாமணி மகுடம் பொற்பூண்
கொய்யுளைப் புரவி திண்டேர்
குஞ்சர மாடை யின்ன
மெய்யுறக் கொடுத்த பின்னர்க்
கொடுத்தனன் விடையு மன்னே.

ஐயனும் - இராமபிரானும், அவர்கள் தம்மை - அவ்வரசர்களை, அகம் மகிழ்ந்து - மனமுவந்து, அருளின் நோக்கி - கருணையுடன் பார்த்து, (அவர்கட்கு), வையகம் - பூமி, சிவிகை - பல்லக்கு, தொங்கல் - மாலை, மாமணி மகுடம் - உயர்ந்த மணிகள் இழைத்துச்

செய்யப் பெற்ற கிரீடங்கள், பொன் பூண் - பொன்னாலாகிய அணிகள், கொய் உளை - கொய்யப்பட்ட பிடரி மயிரையுடைய, புரவி - குதிரைகள், திண் தேர் - உறுதியான இரதங்கள், குஞ்சரம் - யானைகள், ஆடை - உயர்ந்த பட்டாடைகள், என்ன - என்ற இவைகளை, மெய் உற கொடுத்த பின்னர் - உள்ளன்புடன் உதவிய பின்னர், விடையும் கொடுத்தனன் - விடையும் ஈந்தான். மன் : ஓ : அசை.

அவர்கள் - மன்னர்கள். கொய்யுளை : 'கொய்யுளைப் பரியிற் செல்லும்' (நைடத. அன்னத்தைக் கண். 23).

பி - ம். 3. இன்சொல். 16

சுக்கிரீவன் முதலோனோர்க்கு வெகுமதி யளித்தல்

4302. சம்பரன் தன்னை வென்ற
தயரத னீன்ற காலத்
தும்பர்தம் பெருமா னீந்த
வொளிமணிக் கடகத் தோடும்
கொம்புடை மலையுந் தேருங்
குரகதக் குழுவுந் தூசும்
அம்பரத் தனந்தர் நீத்தா
னலரிகா தலனுக் கீந்தான்.

அம்பரத்து அனந்தர் நீத்தான் - திருப்பாற் கடலில் துயில் வதை விடுத்து, (அயோத்தியில்) அவதரித்தவனான இராமபிரான், சம்பரன் தன்னை வென்ற - சம்பராசுரனை வென்ற, தயரதன் ஈன்ற காலத்து - தசரதன் தன்னைப் பெற்ற காலத்தில், உம்பர் தம் பெருமான் - தேவேந்திரன், ஈந்த - தந்த, ஒளி மணி கடகத்தோடும் - ஒளியமைந்த இரத்தினக் கடகத்தோடும், கொம்பு உடை - மருப்புக்களையுடைய, மலையும் - மலைபோன்ற யானைகளும், தேரும் - தேர்களும், குரகதம் குழுவும் - குதிரைக் கூட்டமும், தூசும் - ஆடைகளும், (என்ற இவற்றை), அலரி காதலனுக்கு ஈந்தான் - சூரியன் புதல்வனான சுக்கிரீவனுக்கு அளித்தான்.

சம்பரன் ; யுந்த. 93 உரைக் குறிப்புப் பார்க்க. உம்பர் தம் பெருமான் - தேவேந்திரன். கொம்புடை மலை; யானை; வெளிப்படை;

'வருங் குன்றம்' (நிருக்கோ. 15); 'கைம்மலை' 'காரளிக் கலுழக் கருங் கைம்மலை' (கிட்கிந்தா. 31): 'கைம்மலைச் சுவரின்' (ஆரணிய. 481). என்றாற் போல. குரகதம் - குதிரை. 'குரகதந் தடந்தேரினம்' (சுந்தர. 34); தூசு - பட்டாடை; 'வடகமுந் தூசும் வீசினர்' (யுத்த. 3790); அம்பரந் தன்னை நீத்தான்: 'ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்' (சுந்தர. பிணிவீட்டு. 80); 'வானின்றிழிந்து...... ......இமையோரிடுக்கண் காத்த கழல் வேந்தை' அலரி - சூரியன். 'அலரியுழந்து செல்லுமாறு நீத்தஞ் சியப்பால்' (யுத்த. 3185); அம்பரம்; யுத்த. 1030 உரை பார்க்க. சுக்கிரீவன்: யுத்த. 821 உரைக் குறிப்பும் காண்க. அம்பரம் தன்னை நீத்தான்: (ஒப்பு): 'அரவணைத் துயிலினீங்கிய தேவன்' (சுந்தர. 395).

பி - ம். 1. வென்றுதசரதனின்ற.

4. அப்பரந்தன்னை. 17

4303. அங்கத மிலாத கொற்றத்
 தண்ணலு மகில மெல்லாம்
அங்கத னென்னு நாம
 மழகுறத் திருத்து மாபோல்
அங்கதங் கன்னற் றோளாற்
 கயன்கொடுத் ததனை யீந்தான்
அங்கதன் பெருமை மண்மே
 லாரறிந் தறைய கிற்பார்.

அங்கதம் இலாத - பழிச் சொல்லுக்கு இடம் இல்லாத, கொற்றத்து அண்ணலும் - வெற்றியையுடைய பெருமை மிக்கவனான இராமபிரானும், அகிலம் எல்லாம் - பூமி முழுவதும், (அவனுடைய), அங்கதன் என்னும் நாமம் - அங்கதன் என்ற பெயரை, அழகு உற திருத்து மாபோல் - அழகு அமையும்படி (காரணக் குறியாகத்) திருந்த வழங்கச்செய்யுமாறு போன்று, கன்னல் தோளாற்கு-கரும்பு போன்ற இனிய தோளையுடைய இக்குவாகுக்கு, அயன் கொடுத்ததனை - பிரமதேவன் அளித்ததான, அங்கதம் - அங்கதம்என்ற அந்த அணியை, (அங்கதன் என்ற வானர வீரனுக்கு)க் கொடுத்தான்; அங்கு அதன் பெருமை

மண்மேல்-அங்கு அதன்பெருமையை பூமியில், அறிந்து அறைய கிற்பார் ஆர் - தெரிந்து பகரவல்லவர் யார்.

அங்கதம் - வசை ; இச் செய்யுள் யமகம் - கன்னல் தோளார் எனப் பிரிக்க. கன்னல் - கரும்பு: அங்கதனுடைய பெருமை என்றே பொருள் கூறலுமாம், அங்கதன் என்ற சொல்லுக்கேற்ப எதுகை அமைத்த நயம் காண்க ; ஒப்பு. 'காமலைய ; கரதலம் ; உலக்குநர் முத்துறு ; (பால ; 119, 120, 121, 122) ; அங்கதம் : வசை - தொல் ; செய்யுளியல். அங்கதன் ; யுத்த. 822 ; உரைக் குறிப்புக் காண்க. அங்கதம் அங்கதனுக்கீந்தான் என்றதன் நயம் காண்க.

பி - ம். 1. அந்தம்
2. நாமத்து
3. அகன்ற ; கழன்ற 18

4304. பின்னரு மவனுக் கையன்
பெருவிலை யாரத் தோடு
மன்னுநுண் தூசு மாவு
மதமலைக் குழுவு மீந்து
உன்னைநீ யன்றி யிந்த
வுலகினி லொப்பி லாதாய்
மன்னுக கதிரோன் மைந்தன்
தன்னோடு மருவி யென்றான்.

பின்னரும் - மீண்டும், ஐயன் - இராமபிரான், அவனுக்கு - அந்த அங்கதனுக்கு, பெருவிலை ஆரத்தோடு - மிகவும் விலை மதிக்கத்தக்க முத்து மாலையுடன், மன்னும் - பொருந்திய, நுண் - நுட்பமான வேலைப்பாடமைந்த, தூசும் - பட்டாடைகளும், மாவும் - குதிரைகளும், மதமலை குழுவும் ஈந்து - மதம் செறிந்த யானைத் தொகுதிகளும் தந்து, 'இந்த உலகினில் - இந்தப் புவியில், உன்னை அன்றி - உன்னையல்லாமல் ! (பிறர் ஒருவரை ), ஒப்பு இலாதாய் - நிகராகப் பெறாதவனே !, நீ - நீ, கதிரோன் மைந்தன் தன்னோடு - சூரியன் புதல்வனான சுக்கிரீவனோடு, மருவி மன்னுக - பொருந்தி வாழ்வாயாக' என்றான் - என்று கூறினான்.

மதமலை - யானை ; வெளிப்படை ; கைம்மலை என்றாற் போல. மூன்றாமடி ; 'தானே யுவமை தனக்கு' (தண்டி. பொருளணி) என்றபடி

பொது நீங்குவமை - (திருவாய். 6 : 3 : 9); 'தன்னொப்பா ரில்லப்பண்' 'உவமை நீங்கிய தோன்றல்' (ஆரணிய; 148); 'ஒப்பிலுறையும் பெறற் கரிய பொருளை (ஆரணிய; 61); 'என்னலதில்லை என்னை யொப்பு 'நின்னல தில்லை நின்னை யொப்பு' (ஒப்பு ; 1271) ; என்பன காண்க. மைந்தன் தன்னோடு மருவிமன்னுக ..ன்க.

பி - ம். 2. மன்ன ; மலைக்கரசும் ; ஈயா.

4. மன்னுவை.

19

4305. மாருதி தன்னை யையன்
மகிழ்ந்தினி தருளி னோக்கி
ஆருத விடுதற் கொத்தார்
நீயலா லன்று செய்த
பேருத விக்கி யான்செய்
செயல்பிறி தில்லைப் பைம்பூண்
போருத வியதிண் தோளாய்
பொருந்துறப் புல்லு கென்றான்.

ஐயன் - இராமபிரான், மாருதி தன்னை - வாயுவின் புதல்வனை அநுமனை, மகிழ்ந்து - மகிழ்ச்சியுடனும், அருளின் - கருணையுடனும், 'இனிது நோக்கி - இனிமையாகப் பார்த்து, உதவிடுதற்கு ஒத்தார் - உதவி புரிவதில் (உன்னை) நிகர்த்தவர்; நீ அலால் - நீ அல்லாமல், ஆர் - பிறர் யார்! (நீ) அன்று செய்த பேருதவிக்கு - அன்று ஆற்றிய பெரிய உதவிக்கு, யான் செய் செயல் - நான் செய்யும் செயல், பிறிது இல்லை - வேறொன்றில்லை ; பைம்பூண் - பசிய பூணை யணிந்த, போர் உதவிய - போரில் உதவி புரிந்த, திண் தோளாய் - உறுதியான புயங்களையுடையவனே! பொருந்துற புல்லுக - அழுந்தத் தழுவிக் கொள்க,' என்றான் - என்று பகர்ந்தான்.

மாருதி செய்த வுதவியை முன்னர்ப் பல் லிடங்களிலும் பாராட்டிய இராமபிரான் இங்கும் புகழ்ந்து பேசுகிறான். 'முன்னிற் றோன் றினோர் முறையினீங்கலா, தென்னிற் றோன்றிய துயரி னீறுசேர், மன்னிற் றோன்றினே முன்ன மாண்டுளோம், நின்னிற் றோன் றினோம் நெறியிற் றோன்றினாய்' (யுத்த ; 2747) 'அழியுங் காற்றரு முதவி யையனே, மொழியுங் காற்றரு முயிரின் முற்றுமே, பழியுங் காத்தரும் பகையுங் காத்தனை, வழியுங் காத்தனை மறையுங் காத்தனை' 'எல்லைவாய் ஊழிகாணுநீ யுதவினையரோ' (யுத்த.

2748, 2749); என்று பேருதவிக்கியான் செய் செயல் பிறிதில்லை, 'என்று இராமபிரானே வாயார மொழிகின்றார்" 'காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப் பெரிது' (குறள்; 102); 'செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது' (குறள். 101); 'பயன் றூக்கார் செய்த நன்றி நயன்றூக்கின் நன்மை கடலிற் பெரிது' (குறள். 103); 'வானத்தை நோக்கிக் கைம்மாறியற்றுமோ வையமென்றான் (யுத்த. 2207). இவ் வண்ணமே பிராட்டி அநுமனிடம் கூறுவதை: (சுந்தர. 506); காண்க. பொருந்துறப் புல்லு கென்றான், திருமகளைத் தழுவற் குரிய மார்பகத்தில் அணைத்துத் தழுவியதிலிருந்து, இராமபிரானுடைய அளவுகடந்த அன்பும் நன்றியறிவும் வெளியாகும், முனிவர் 'அமரரார்த்தெழத், தாயினன்பனைத் தழுவினான் தனி நாயகன்' (யுத்த. 2745); சிறிய திருவடி, தான் இலங்கை சென்று பிராட்டியைக் கண்டுவந்த நற்செய்தியைச் சொன்ன அளவில் இராமபிரான் அவனை அணைத்துக் கொண்டதாக முதனூல் கூறும். இவ்விடத்து, 'திருமேனியைக் கொடுக்கவே எல்லாம் கொடுத்த தாமிறே சர்வபாஸ்வர மாயிறே திருமேனியிருப்பது' எனத் தொடங்கும் பெரியார் வியாக்யானம் காண்க. பொருந்துறப் புல்லுதல்: காடாலிங்கனம் என்ப.

பி-ம். 1. மாருதி தன்னை பின்னே; மாருத விமலசேயை! நோக்க.
3. உதவிக் கிங்கியான்; மெய்ப்பூண். 20

4306. என்றலும் வணங்கி நாணி
வாய்புதைத் திலங்கு தானை
முன்றலை யொதுக்கி னின்ற
மொய்ம்பனை முழுது நோக்கிப்
பொன்றிணி வயிரப் பைம்பூ
ணாரமும் புனைமென் றூசும்
வன்றிறற் கயமு மாவும்
வழங்கினன் வயங்கு சீரான்.

வயங்கு சீரான் - விளங்குகின்ற சிறப்பினையுடையவனான இராமபிரான், என்றலும் - என்று கூறலும், நாணி - நாணம் கொண்டு, வணங்கி - தலைதாழ்த்தி, வாய்புதைத்து - வாயை மூடிக்கொண்டு, இலங்கு - விளங்குகின்ற, தானை - சேனையின், முன்தலை - முன்

னிடத்தில், ஒதுக்கின் நின்ற - ஒதுக்கிடத்தில் நின்ற, மொய்ம் பனை - வன்மை வாய்ந்தவனுன அந்த அநுமனை, முழுதும் நோக்கி- முழுதும் பார்த்து, பொன் திணி-பொன் திணிந்திட்ட, வயிரம் பைம் பூண் - வயிரப்பூண்களையும், ஆரம் - மாலைகளையும், புனை - தரிக்கத் தக்க, மெல் தூசும் - மெல்லிய பட்டுடைகளையும், வல்திறல் கயமும் - மிக்க வலிமை வாய்ந்த யானைகளையும், மாவும் - குதிரைகளையும், வழங்கினன் - தந்தான்.

வணங்கி நாணி வாயிற்புறத்தில் அடக்கத்தைக் காட்டுவன. முழுதும் நோக்கி - உச்சி முதல் உள்ளங்கால் வரையில் பார்த்து. முழுதுணர் சிந்தையான் முற்று நோக்கினுன்: இங்கும் புறநோக்கு மட்டுமன்றி அகநோக்கும் காண்க, வயங்குசீரான் : இராமபிரான்.

பி - ம். 1. காலை.

2. ஒதுக்கி.

3. புனை பொன் றூசும்.

4. வயங்கும், வழங்கு. 21

4307. பூமலர்த் தவிசை நீத்துப்
பொன்மதின் மிதிலை பூத்த
தேமொழித் திருவை யையன்
திருவருண் முகந்து நோக்கப்
பாமறைக் கிழத்தி யீந்த
பருமுத்த மாலை கைக்கொண்
டேமுறக் கொடுத்தா ளன்னு
ளிடரறிந் துதவி னுற்கே.

பூ மலர் தவிசை நீத்து - பொலிவு பெற்ற தாமரை மலராகிய ஆதனத்தை விடுத்து, பொன்மதில் மிதிலை பூத்த - பொன்னு லாகிய மதிலைக் கொண்ட மிதிலா நகரத்தில் தோன்றிய, தேம் மொழி - தேன்போல் இனிய சொற்களையுடைய, திருவை-இலக்குமி யின் அமிசமான சீதாப்பிராட்டியை (அன்னுரிடம் ஒரு முத்து மாலையை அளித்து உனக்கு விருப்பமானவர்க்கு இதனைப் பரிசாக ஈவாயாக என்று சொல்லிக் குறிப்புடன்), ஐயன் - இராமபிரான், திருவருண் முகந்து நோக்க - திருவருளை முகந்து பார்க்க (அந்தப் பிராட்டி), பாமறை கிழத்தி - பாவிற்குரியவளாய் வேதத்திற்கூறப்

படுபவளான கலைமகள், ஈந்த - அளித்த, பருமுத்தம் மாலை - பருத்த முத்துக்களால் தொடுக்கப் பெற்ற மாலையைக், கைகொண்டு - கையில் ஏந்திக்கொண்டு, அன்னாள் இடம் அறிந்து உதவினார்க்கு - அப்பிராட்டியார் தன் துன்பத்தை அறிந்து உதவி புரிந்தவனான அனுமனுக்கு, ஏம் உறகொடுத்தாள் - இன்பமுறக் கொடுத்தாள்.

பூமலர்த் தவிசை நீத்து; 'போதினை வெறுத்தரசர் பொன் மனை புகுந்தாள்' (பால. கோலம். 33.); 'மையறு மலரினீங்கி யான் செய் மாதவத்தின் வந்து, செய்யவள் இருந்தாள் என்று' (பால. மிதிலைக். 1); 'பொன்மதில் மிதிலை' (பால. மிதிலைக் காட்சி: 1); பாமறைக் கிழத்தி: கலைமகள். இடரறிந்துதவினவன்: சிறிய திருவடி "காலத்தினாற் செய்த நன்றி" (குறள். 102); ஏமம் உற என்பது ஏமுற எனத் தொகுத்தது. அநுமன்; யுத்த. 823. உரைக் குறிப்புக் காண்க. பரிசளித்து விடை கொடுத்தனுப்பிய தினும், சுக்கிரீவன், அங்கதன், அநுமன், சாம்பன், நீலன் என்று வரன் முறை பிறழாமல் ஆசிரியர் கூறிச் செல்வதை ஓர்ந்துணர்க. இராவணன் வானரத்தானை காண் படலத்தும் இந்த முறையை மேற்கொண்டிருப்பதும் காண்க. 'சோழன் அரசியலில் நன்கு பழகியவர் கம்பநாடர் என்பது இவ்வாறு வரிசையால் நோக்கிய தனின்று உணரப்படும். (குறள். 528. புறநா.: 121).

பி - ம். 2. தெரிவை; நோக்கிப்.

3. பார் முதல். 22

4308. சந்திரற் குவமை சான்ற
தாரகைக் குழுவை வென்ற
இந்திரற் கேய்ந்த தாகு
மென்னுமுத் தாரத் தோடு
கந்தடு களிறு வாசி
தூசணி கலன்கள் மற்றும்
உந்தின னெஞ்சின் வேந்தற்
குலகமுந் துதவினானே.

தாரகை குழுவை வென்ற - நட்சத்திரக் கூட்டங்களை(க் காந்தியால்) வென்றதும், சந்திரற்கு உவமை சான்ற - சந்திரனுக்கு உவமையாகுமாறு மேம்பட்டதும், இந்திரற்கு ஏய்ந்தது ஆகும் -

இந்திரனுக்குப் பொருத்தமானதாகும், என்னும் - என்று கூறு மாறும் உள்ள, முத்து ஆரத்தோடு - முத்துமாலையுடனே, கந்து அடு களிறு - கட்டுத்தறியை முறிக்கின்ற, களிறு - யானை, வாசி - குதிரை, தூசு - ஆடை, அணிகலன்கள் - ஆபரணங்கள் என்பவற்றையும், மற்றும் - மற்றும் ஏற்றவற்றையும், எண்கின் வேந்தற்கு - கரடிகட்கரசனான சாம்பவனுக்கு, உலகமும் உதவினான் - முன்னர் உலகங்களை உதவினவனான திருமாலின் அமிசமான இராமபிரான், உந்தினன் - வாரிவழங்கினான், ஏ : அசை.

தாரகை : நட்சத்திரம் ; சந்திரற் குவமை சான்ற முத்தாரம், தாரகைக் குழுவை வென்ற முத்தாரம், இந்திரற்கேய்ந்த தாகு முத்தாரம் எனத் தனித்தனிக் கூட்டுக. கந்து அடு களிறு ; (சீவக. 1219), கந்து : கட்டுத்தறி ; எண்கின் வேந்தன் ; சாம்பன் ; உலகமும் உதவினான் : 'உலகம் யாவையும் தாமுள வாக்கலும், (பால. பாயிரம்) ; மூவுலகமீன்றானை முன்னீன்றானை, (அயோத்தி. குகப் 65) ; உந்தினன் - வாரி வழங்கினான், சாம்பன் : யுத்த. 826 : உரைக் குறிப்புக் காண்க.

பி - ம். 2. இயைந்ததாகும் ; எண்ணும். 23

4309. நவமணிக் காழு முத்து
மாலையு நலங்கொள் தூசும்
உவமைமற் றிலாத பொற்பூ
ணுலப்பில பிறவு மொண்டார்க்
கவனவெம் பரியும் வேகக்
கதமலைக் கரசுங் காதல்
பவனனுக் கினிய நண்பன்
பயந்தெடுத் தவனுக் கீந்தான்.

நவமணி காழும் - ஒன்பது வகை மணிகளால் இயன்ற ஆரமும், முத்து மாலையும் - முத்து மாலையும், நலம் கொள் தூசும் - அழகினைக்கொண்ட பட்டாடைகளும், மற்று உவமை இலாத பொன் பூண் - வேறு உவமை நீங்கிய பொன் அணிகளும், உலப்பு இல - அழிவில்லாத, பிறவும் - மற்றும் உள்ளனவான, ஒள் - ஒள்ளிய, தார் - கிண்கிணிமாலையை யணிந்தனவும், கவனம்

வெம்பரியும் - விரைந்து ஓடவல்ல வெவ்விய குதிரைகளும், வேகம் - வேகம் அமைந்த, கதம் மலைக்கு அரசும் - சினம் கொண்ட யானை அரசும் என்பவற்றை, பவனன் - வாயு பகவானுடைய, இனிய நண்பன் - இனிய நண்பனான அங்கிக் கடவுள், பயந்து எடுத்தவனுக்கு - பெற்றெடுத்தவனான, காதல் - அன்புக்குப் பாத்திரமான நீலன் என்பவனுக்குக் கொடுத்தான்.

காழ்: வடம்; 'முப்பத்திருகாழ்' (சிலப். 6, 87); தார்: கிண் கிணிமாலை; கவனம்: வேகம்; 'கவன முறுகரணமிடுவர்' (யுத்த. 3398); 'கவனவாம்பரி' (கந்த. பு. படையெழு. 18); கதமலையரசு; தலைமைபெற்ற களிறு; வெளிப்படை. பவனனுக்கு இனிய நண்பன் பயந்தெடுத்தவன். அக்கினி குமாரனான நீலன்; பவனன்: காற்று; 'பவனனுக்கு வீசுதலும்' (விநாயக. பு. துதி.) அக்கினியை வாயுசகாயன் என்ப. தாயே யனைய கருணையான துணையே' (சுந்தர, 1169); என்ற இடத்துக் கருணையானை அநுமனாகவும் அவனுக்குத் துணைவன் அக்கினியென்றும் கூறுப; இது அநுமன் தந்தையான வாயுதேவன் துணை அக்கினியாதல் கொண்டு என்க. மற்றும் தாயே யன்ன கருணையானை நேர்முகமாக வாயுதேவன் என்றே கோடலுமாம். பிராணவாயுவின்றி உயிர்கள் இயங்காவாகலின், மாத்வர் வாயுவினை முக்கியப் பிராண தேவுடு என்று கூறுதல் காண்க. 'உள்ளே போன மூச்சு, வெளியே வந்தால் போச்சு' என்ற பழமொழியும் காண்க, நீலன்: யுத்த. 824. உரைக்குறிப்புக் காண்க.

பி - ம். 1. நவமணிக்காசும். 24

4310. பதவலிச் சதங்கைப் பைந்தார்ப்
பாய்பரி பணைத்திண் கோட்டு
மதவலிச் சைலம் பொற்பூண்
மாமணிக் கோவை மற்றும்
உதவலிற் றகைவ வன்றி
யில்லன வுள்ள வெல்லாம்
சதவலி தனக்குத் தந்தான்
சதுமுகத் தவனைத் தந்தான்.

சதுமுகத்தவனை தந்தான் - பிரமனைப் பெற்ற திருமாலின் அமிசமான இராமபிரானுடைய, பதம் - பாதத்தில், வலி - கொடியை ஒத்த, சதங்கை - சதங்கையுடன் கூடிய, பைதார் - பொன்னால் செய்யப்பட்ட மாலையை அணிந்த, பாய்பரி - தாவிச் செல்லும் குதிரைகளும், பணை - பருத்த, திண் - உறுதியான, கோடு - தந்தங்களையும், மதம் வலி - மிக்க பலத்தையும் உடைய, சைலம் - மலைபோன்ற யானைகளும், பொன்பூண் - பொன் அணிகளும், மாமணி கோவை - சிறந்த இரத்தின மாலைகளும், மற்றும் - மற்றும், உதவலில் - கொடுப்பதில், தகைவ அன்றி இல்லன - இவை கொடுத்தற்குரிய வல்லாதன என்று தடுப்பதற்குரியது எதுவும் (ஆகாதிருக்க), உள்ள எல்லாம் - (மனையில் உள்ளன) எல்லாவற்றையும், சதவலி தனக்கு தந்தான் - சதவலி என்ற வானர வீரனுக்குக் கொடுத்தான்.

சதவலி என்ற சொற்கேற்ப அழகுபெறத் திரிபுச் செய்யுள் அமைத்தவாறு காண்க. முதலடியில் வல்லி வலியென வந்தது; சதங்கை: 'குமரேசரிருதாளும் சிலம்பும் சதங்கையும்' கந்தரலங். 38); பைந்தார்: குதிரைகட்கணியும் கிணகிணிமாலை. மதவலிச் சைலம்: யானை; வெளிப்படை. தகைத்தல்: தடுத்தல்; 'சென்றீ பெரும நிற் றகைக்குநர் யாரே' (நன். வினை. 17); உரை. முன்னிலை ஏவல் முற்றின்முன் ஈ ஊர்ந்து வந்தது. இல்லன வுள்ள: தொடைமுரண்; எதிர்மறை வினைக்குறிப்பு; சதுமுகத்தவனைத் தந்தான்; இராமபிரான். நான்முகனை நாராயணன் படைத்தான் (திருவந்தாதி. 1); சதுமுகத்தவனைத் தந்தான்: 'நின்னுளே யென்னை நிருமித்தாய்' (யுத்த. 289); 'மூவுலகமீன்றானை முன்னீன்றானை' (அயோத்தி. குகப். 65). சதவலி: யுத்த 829; உரைக்குறிப்புப் பார்க்க.

பி - ம். 2. கோவைமுத்தும், மூற்றும்.
3. உதவலிலுருத்ததன்றி, உதவலித் தகையதன்றி; உள்ளது 25

4311. பேசரி தொருவர்க் கேயும்
பெருவிலை யிதனுக் கீதுக்
கோசரி யிலதென் றெண்ணு
மொளிமணிப் பூணுந் தூசும்

மூசரிக் குவமை மும்மை
மும்மதக் களிறு மாவும்
கேசரி தனக்குத் தந்தான்
கிளர்மணி முழவுத் தோளான்.

கிளர் - விளங்குகின்ற, மணி-நவமணிகளாலியன்ற பூண்களைப் புனைந்த, முழவு தோளான் - மத்தளம் போன்ற தோளையுடைய வனுன இராமபிரான், 'இதனுக்கு ஏயும் பெரு வலை - இதற்குப் பொருந்திய பெரிய வலை, ஒருவர்க்கேயும் பேசரிது - ஒருவர்க்கும் உரைக்க இயலாது, ஈதுக்கோ - இதற்கோ, சரி இலது - சரிநிகரான பொருள் இல்லை', என்று எண்ணும் - என்று மதிப்பிட்டுக் கூறப் படுகின்ற, ஒளிமணி பூணும் தூசும் - ஒளிமிக்க இரத்தி ஞபரணங் களும் ஆடைகளும், மூசு - எங்கும் பரவும் தன்மையுள்ள, அரி - வடவைத் தீயின், மும்மை-மூன்று மடங்கு, உவமையாதற்குத்தக்க (அக்கனல் மூன்றின் திறலைக்கொண்ட), மும்மதம் களிறும்-மூன்று மதங்களுடைய யானைகளும், மாவும் - குதிரைகளும், கேசரிதனக்கு தந்தான் - கேசரி என்ற வானர வீரனுக்குதவினுன்.

இங்குக் கேசரி என்ற சொல்லுக்கேற்ப, திரிபமைத்தமை காண்க. இதுக் கோ சரி இலது எனப்பிரிக்க. மூசுதல் : மொய்த் தல்; 'மூசுகின்ற வாசவண்டு மோகன முகாரி ராகம் பாடுமே' (காவடிச் சிந்து); 'மூசுவண்டறை பொய்கையும் போன்றதே' (தேவா. 1203 ; 1); மும்மதம்: கன்ன கபோல கோச மதங்கள் 'மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி யானை' (தனிப்பா. ஒட்டக் கூத்தா); கேசரி: அநுமன் தாதை, அஞ்சனையின் கணவன்; யுத்த. 828 ; உரை காண்க. இதனுக்கு ஏயும் பெருவிலை, ஒருவர்க் கேயும் எனக் கொள்க.

பி - ம். 2. ஓர்சரி.
3. மூசெரிபிறக்கும்.
4. தனக்கும்; ஈந்தான். 26

4312. வளனணி கலனுந் தூசு மாமதக் களிறு மாவும்
நளனெடு குமுதன் தார னவையறு பனசன் மற்ருேர்
உளமகிழ் வெய்தும் வண்ண முலப்பில பிறவு மீந்தான்
களனமர் கமல வேலிக் கோசலக் காவ லோனே.

களன் - நெற்களம், அமர் - பொருந்திய, கமலம் வேலி - தாமரை வேலியமைந்த, கோசலம் காவலோன் - கோசல நாட்டின் அதிபனான இராமபிரான், வளன் - செழிப்பான, (சிறந்த) அணி கலனும் - ஆபரணங்களும், தூசும் - ஆடையும், மாமதம் களிறும் - மிக்கமதம் செறிந்த ஆண் யானைகளும், மாவும் - குதிரைகளும், உலப்பு இல - அளவற்ற, பிறவும் - வேறு பொருள்களும் என்ற இவற்றை, நளனொடு - நளனும், குமுதன் தாரன் - குமுதனும் தாரனும், நவை அறு பனசன் - குற்றமற்ற பனசனும், மற்றோர் - மற்றும் உள்ளோரும், உளம் மகிழ்வு எய்தும் வண்ணம் ஈந்தான்- மனம் உவக்குமாறு தந்தான். ஏ : அசை.

நளன் : யுத்த. 825. உரைக்காண்க. குமுதன் : யுத்த. 828. உரை காண்க. பனசன் : (830)-ல் உரை. வேலி கோலிக்காக்க வேண்டிய கமலமே இங்கு வேலியாகக் கூறியது கொண்டு கோசல நாட்டின் வளம் நன்கு அறியலாம். களம் : களன் ; ஈற்றுப்போலி. கோசலம் : நாட்டைக் குறித்தது. 'கோசல நாடுடை வள்ளல்' (யுத்த. 1210).

பி - ம். 2. காரான்.

4. கௌசலை காதலானே. 27

4313 அவ்வகை அறுபத் தேழு
கோடியா மரியின் வேந்தர்க்
கெவ்வகைத் திறனு நல்கி
யினியன பிறவுங் கூறிப்
பவ்வமொத் துலகிற் பல்கு
மெழுபது வெள்ளம் பார்மேல்
கவ்வையற் றினிதுவாழக் கொடுத்தனன்
கடைக்க ணோக்கம்.

அவ்வகை - அவ்வாறு, அறுபத்து ஏழு கோடியாம் அரியின் வேந்தர்க்கு - அறுபத்தேழு கோடி என்னும் எண்ணினரான வானர வீரர்க்கும், எவ்வகை திறனும் நல்கி - பலவகைப்பட்ட கூறுபாட்டினையுடைய பொருள்களைக் கொடுத்து உதவி,

இனியன பிறவும் கூறி - இன்சொற்கள் பலவற்றையும் சொல்லி, பவ்வம் ஒத்து - கடலினை நிகர்த்து, உலகில் பல்கும் - உலகத்தில் நிறைந்து தோன்றுகின்ற, எழுபது வெள்ளம் - எழுபது வெள்ளம் குரக்குச் சேனைகளும், பார்மேல் - இவ்வுலகில், கவ்வை அற்று - துன்பமின்றி, இனிதுவாழ - இன்புற்று வாழுமாறு, கடைகண் நோக்கம் கொடுத்தனன் - கடைக்கண் பார்வையால் கண் டருளினன்.

அறுபத்தேழு கோடி வானரர்: இது முன்னும் குறிக்கப் பட்டமை காண்க. (யுத்ந. 4249); மனம் உவந்து அளித்தது மன்றி, இனிய சொல்லும் வழங்கினன்; 'ஈதல் அரிதெனினுமின் சொலினு நல்கூர்தல், ஓகோ கொடிது' என்றமை காண்க. அரியின் வேந்தர் என்று வானர சேனாபதிகளையும் எழுபது வெள்ளம் என்று வானர வீரர்களையும் குறித்தமை காண்க. 'கவ்வையின்றாக நுங்கள் வரவென' (கிட்கிந்தா. 57). கடைக் கண் நோக்கமே சகல சம்பத்தும் தரக்கூடுமாகலின், நோக்கம் கொடுத்தனன்; (ஒப்பு): 'விழிக்கே யருளுண்டு' (அபிராமியந். 28) எனப்பட்டது காண்க.

4314 மின்னையேர் மவுலிச் செங்கண்
 வீடணப் புலவர் கோமான்
றன்னையே யினிது நோக்கிச்
 சராசரஞ் சூழ்ந்த சால்பின்
நின்னையே யொப்பார் நின்னை
 யலதில ருளரே லைய
பொன்னையே யிரும்பு நேரு
 மாயினும் பொருவன் றென்றான்.

மின்னை ஏர் - மின்னலை யொத்த, (பேரொளி வாய்ந்த) மவுலி செ கண் - மகுடம் புனைந்த சிவந்த விழிகளையுடைய, வீடணன் புலவன் கோமான் தன்னையே - வீடணன் என்கின்ற புலவர் தலை வனையே, இனிது நோக்கி - இன்புறப் பார்த்து, 'சராசரம் சூழ்ந்த சால்பின் - சராசரத்தை (உலகினை)ச் சூழ்ந்த அமைதியினையுடைய, நின்னை ஒப்பார் - உன்னை ஒப்பவர், நின்னை அலது இலர் - உன்னை அல்லாது (பிறர் ஒருவர்) இலர் ஆவர்; உளரேல் - உள்ளாராயின்,

ஐய - ஐயனே ! (ஒருகால்), பொன்னையே இரும்பு நேரும் ஆயினும் - பொன்னையே இரும்பு நிகர்க்குமானாலும், (ஒருவரும் உனக்கு) பொரு அன்று - நிகர் அன்று ' என்றான் - என்று புகழ்ந்தான்.

சால்புள்ளவர் உலகில் இருத்தல்கூடும் எனினும், அவர்கட்கும் உனக்கும் உள்ள வேற்றுமை சீர்தூக்கின், இரும்புக்கும் பொன்னுக்கும் உள்ள வேறுபாடு காணப்படும் என்க. தன்னையே என்ற ஏகாரத்தால் முழுதும் விடாமற் பார்த்து என்க. உளரேல் என்றமையின் மாருதி ஒப்பார் இலையென்பது கூறிற்றாம். பொன்னையே இரும்பு நேருமாயின்; இங்கும் ஆயின் என்றது ஆகாமையைக் குறித்து நின்றது; (ஒப்பு): 'மின்னும் தமனியமும் வெற்பிரும்பும் ஓரினமாய்ப் பொனனின் பெயர் படைத்தாற் போலதே' 'நெல்லொக்கும் புல்லென்றாலும், நேருரைத்தாக வற்றே' (ஆரணிய. 627).

பி - ம். 1. விடணன்.

2. சுமந்த சால்பின்.

3. அலதில்லை.

4. நேரே பொருவென வொக்கு மென்றான். 29

4315. என்றுரைத் தமர ரீந்த
வெரிமணிக் கடகத் தோடு
வன்றிறற் களிறுந் தேரும்
வாசியு மணிப்பொற் பூணும்
பொன்றிணி தூசும் வாசக்
கலவையும் புதுமென் சாந்தும்
நன்றுற வவனுக் கீந்தான்
நாகணைத் துயிலைத் தீர்ந்தான்.

நாகு அணை துயிலை தீர்ந்தான் - ஆதிசேடனாகிய பாயலில் அறிதுயில் கொள்வதை விடுத்து அயோத்தியில் வந்து அவதரித்த இராமபிரான், என்று உரைத்து - என்று இவ்வாறு கூறி, அமரர் ஈந்த - தேவர்கள் அளித்த, எரி - பிரகாசிக்கின்ற, மணி

கடகத்தோடு - மணிக் கடகத்துடனே, வல்திறல் களிறும் - மிக்க வலி படைத்த யானைகளும், தேரும் - தேர்களும், வாசியும் - குதிரைகளும், மணி பொன் பூணும் - மணிகள் பதித்துச் செய்யப் பெற்ற அணிகளும், பொன் திணி தூசும் - பொன்னையே இடையிட்டு நெய்யப்பட்ட பட்டாடைகளும், வாசம் கலவையும் - நறுமணம் கொண்ட கலவைச் சாந்தும், புதுமெல் சாந்தும் - புதிதான மெல்லிய (பூசற்கினிய) சந்தனமும் ஆகிய இவற்றை, நன்று உறவு அவனுக்கு - சிறந்த தம்பி முறையில் உள்ளவனான வீடணனுக்கு, ஈந்தான் - கொடுத்தான்.

பொன் திணிதூசு-பொன்னுடை. நாகணைத் துயிலை நீத்தான்; 'அரவணைத் துயிலி னீங்கிய தேவன்; (சுந்தர. 895); 'பன்னகப் பாயலுட் பள்ளி நீங்கினன்' (அயோத்தி. நகர்நீ. 164); 'படஞ்செயல் நாகணைப் பள்ளி நீங்கினன்' (அயோத்தி. திருவடிசூட்டு. 94); வன்திறற்: 'வன்திறற் குரங்கினுற்றல்' (சுந்தர. 989); நன்றுறவு; யுத்த. 449-ம் உரையும் காண்க. இனி நன்று உற என்று பொருள் செய்தாரும் உளர்.

பி-ம். 3. பூவு மருங்குற வுதவிப் பின்னர்.
4. மன்றனி வீடணனுக்குதவினன் விடையு மன்னே; துயிலிற்றிர்ந்தான்.

## குகப் பெருமானுக்கு வெகுமதியுடன் விடையும் ஈதல்

4316. சிருங்கபே ரியதென் றோதுஞ்
செழுநகர்க் கிறையை நோக்கி
மருங்கினி யுரைப்ப தென்னோ
மறுவறு துணைவற் கென்னக்
கருங்கைமாக் களிறு மாவுங்
கனகமுந் தூசும் பூணும்
ஒருங்குற வுதவிப் பின்ன
ருதவினன் விடையு மன்னோ.

மருங்கு - புக்கிருந்த, சிருங்க பேரியது என்று - சிருங்கபேர மென்று, ஓதும் - புகழ்ந்து கூறப்படுகின்ற, செழு நகர்க்கு - வள

நகர்க்கு, இறையை நோக்கி - தலைவனான குகனைப் பார்த்து, 'மறு அறு துணைவற்கு - குற்றமற்ற துணைவனான உனக்கு, இனி உரைப்பது என்னோ - இப்போது சொல்ல வேண்டுவது என் உளது?' என்னா - என்று சொல்லி, கரு கைமா கரு களிறும் - வலிய கைம்மாவாகிய கரிய ஆண் யானைகளும், மாவும் - குதிரைகளும், கனகமும் - பொன்னும், தூசும் - பட்டாடையும், பூணும் - அணிகளும், ஒருங்கு உற உதவி - ஒருசேர உதவி, பின்னர் - பின்பு, விடையும் உதவினன் - உத்தரவும் தந்தான். மன், ஓ : அசை.

சிருங்கபேரபுரம் - குகன் ஆட்சியில் இருந்த ஊர். கரு கைமா - யானை; 'கைம்மா வென்றேன் சும்மா கலங்கினளே' (தனிப்பா.); 'கைம்மா வுரிவை யம்மான் காக்கும்' (தேவா. 1244, 10); கருமை - வலிமை; 'கருங்கைக் கொல்லன் (பெரும்பாண். 437).

பா - ம். 1. பேரியம், வேரியம்.
2. துணைவற் கென்னே.
3. தூசும் பூவும்.
4. ஒருங்கற. 31

## அநுமன் முதலியோர்க்கு விடை தருதல்

4317. அனுமனை வாலி சேயைச்
சாம்பனை யருக்கன் தந்த
கனைகழற் காலி னானைக்
கருணையங் கடலு நோக்கி
நினைவதற் கரிது நும்மைப்
பிரிகென்ற னீவிர் வைப்பும்
எனதது காவற் கென்ற
னேவலி னேகு மென்றான்.

அநுமனை - அநுமன், வாலி சேயை - வாலி புதல்வனான அங்கதன், சாம்பனை - சாம்பன், அருக்கன் தந்த - சூரியன் பெற்ற, கனை கழல் - ஒலிக்கின்ற வீர கண்டையை யணிந்த, காலினானை - காலை

யுடையவனுன சுக்கிரீவன் என்ற இவர்களை, கருணை அம் கடலும் - கருணைக் கடலாகிய இராமபிரானும், நோக்கி - பார்த்து, 'நும்மைப் பிரிக - நும்மைப் பிரிந்து செல்க', என்றல் - என்றுரைத்தல், நினைவதற்கு அரிது - நினைவதற்கும் இயலாததா யுள்ளது; நீவிர் வைப்பும் - உங்களுடைய வாசஸ்தானமாகிய பூமியும், காவற்கு எனது அது - காத்தற்கு எனக்கு உரியது; (ஆதலின்), என்றனன் ஏவலின் ஏகும் - என் கட்டளைப்படி (நும்மிடத்திற்குச்) செல்லுங்கள்', என்றான் - என்று மொழிந்தான்.

பிரிக என்ற என்பது தொகுத்தது. நீவிர் - உங்களுடைய. வைப்பு - பூமி; 'எனது காவற்கு' என்றதிலிருந்து கிட்கிந்தை வரையில் கோசல ராஜ்யம் பரவி நின்றதென்னலாம். அல்லது அபிமானம் பற்றி இராகவன் அந்தக் கிட்கிந்தைப் பேரரசைத் தன் ஆதீனத்துக்குட்படுத்திப் பேசியதுமாம். இங்கு விடையளித்த முறைமையும் காண்டற்குரியது. கீழ்ப் படியிலிருந்து தொடங்குவதறிக. இங்கும் வரன்முறை பிறழாமை காண்க. 'நும்மைப் பிரிக என்றல் நினைவதற்கரிது' (ஒப்பு): 'செய்கென விடுக்குவன் அல்லன்' (பொருந. 177).

பி - ம். 2. கருணையங் கடவுள்.
3. பிரிகென்றல், பிரியென்றல்.
4. காவற்கின்றென். 32

## வீடணனுக்கு விடை கொடுக்க யாவரும் தம்மூர்க்குச் செல்வது கடமையே யென்று கருதுதல்

4318. இலங்கைவேந் தற்கு மிவ்வா
றினியன யாவுங் கூறி
அலங்கல்வேன் மதுகை யண்ணல்
விடைகொடுத் தருள லோடும்
நலங்கொள்பே ருணர்வின் மிக்கோர்
நாமுறு நெஞ்சர் பின்னர்க்
கலங்கல ரேவல் செய்தல்
கடனெனக் கருதிச் சூழ்ந்தார்

இலங்கை வேந்தற்கும் - இலங்கை மன்னனான வீடணற்கும், இவ்வாறு இனியன யாவும் கூறி - இங்ஙனம் இனிய சொற்கள் பலவும் சொல்லி, அலங்கல் வேல் - வெற்றிமாலை சூடிய வேற்படை தாங்கிய, மதுகை அண்ணல் - வலிமை சான்றவனும் பெருந் தகையுமான இராமபிரான், விடை கொடுத்து அருளலோடும் - விடை கொடுத்தருளலும், நலம் கொள் - சிறப்புப் பொருந்திய, பேர் உணர்வின் மிக்கோர் - பேரறிவினால் சிறந்தவரான, சுக்கிரீவன், குகன், வீடணன், முதலியோர்; (முதலில் பிரிவுக்கு) நாம் உறு நெஞ்சர் - அஞ்சுகின்ற மனமுடையவராய், பின்னர் - பின்பு, கலங்கலர் - கலக்கம் தவிரப் பெற்று, 'ஏவல் செய்தல் கடன் ஏவிய வற்றைப் புரிதலே கடமை', என - என்று, கருதி சூழ்ந்தார் - நன்கு சிந்தித்துத் தீர்மானித்தார்கள்.

மதுகை - வலிமை; 'உரங்கிளர் மதுகையான்' (யுத்த. 5876); நலங்கொள்: 'நலங்கொள் தேவரிற் றோன்றி' (கிட்கிந்தா. 336); நாம் - அச்சம்; 'பேம் நாம் உரும் என வரூஉங் கிளவி, ஆமுறை மூன்று மச்சப் பொருள' (தொல். சொல். 27 : 67); ஏவல் செய்தல் கடன்; (ஒப்பு): 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' (தேவா. 221 : 9).

பி - ம். 1. வேந்தனுக்கும்.
2. நலனுறு நெஞ்சர்.
3. ஏய. 33

வந்தவர் தம் பதிக்கு ஏகுதல்

4319. பரதனை யிளைய கோவைச்
சத்துருக் கினனைப் பண்பார்
விரதமா தவனைத் தாயர்
மூவரை மிதிலைப் பொன்னை
வரதனை வலங்கொண் டேத்தி
வணங்கினர் விடையுங் கொண்டே
சரதமா நெறியும் வல்லோர்
தத்தம பதியைச் சார்ந்தார்.

சரதம் மாநெறியும் வல்லோர் - உண்மையான மார்க்கங்கள் அனைத்தும், வல்லவரான அவர்கள், பரதனை இளையகோவை சத்துருக்கினனை - பரதன் இலக்குவன் சத்துருக்கினன், பண்பு ஆர் - நற்குணம் நிறைந்தவனும், விரதம் மாதவனை - விரதம் பூண்ட பெருந் தவத்தினையுமுடைய வசிட்டன், மூவர் தாயரை - தாயர் மூவர், மிதிலைப் பொன்னை - சீதாதேவி, வரதனை - வரங்கள் தர வல்லவனான இராமபிரான் என்ற இவர்களை, வலம் கொண்டு - வலம் செய்து, ஏத்தி - துதித்து, வணங்கினர் - பணிந்தனராய், விடையும் கொண்டு - விடையும் பெற்றுக் கொண்டு, தம்தம் பதியைச் சார்ந்தார் - தங்கள் தங்களுடைய நகர் சென்று சேர்ந்தார். ஏ : அசை.

வரத மாதவன் - வசிட்டன். மிதிலைப் பொன் - மிதிலையிற் றோன்றிய திருமகள் அமிசமான பிராட்டி; 'வேயுயர் கானில் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்' (அயோத். தைலம். 60); வரதன் - வரையாது வழங்கும் வள்ளல். 'வரதன் வந்துற்றா னென்ன' சரதமா நெறி - சன்மார்க்கம்.

பி - ம். 1. பண்டை. 34

## குகன் சுக்கிரீவன் என்பவர்களை வீடணன் அவர்களுடைய பதியில் விட்டு இலங்கை சேர்தல்

4320. குகனைத்தன் பதியி னுய்த்துக்
குன்றினை வலஞ்செய் தேரோன்
மகனைத்தன் புரத்தில் விட்டு
வாளெயிற் றரக்கர் சூழக்.
ககனத்தின் மிசையே யேகிக்
கனைகட லிலங்கை புக்கான்
அகனுற்ற காத லண்ண
லலங்கல் வீடணன்சென் றன்றே.

அகன் உற்ற காதல் அண்ணல் - மனத்துப் பொருந்திய அன்பினை யுடையவனாகிப் பெருமையில் மிக்கோனும், அலங்கல் -

வெற்றி, மாலை புனைந்தவனுமான, வீடணன் - வீடணன், குகனை தன் பதியின் உய்த்து - குகனை அவனுடைய நகரத்திற் கொண்டு போய் விட்டு, குன்றினை வலம் செய்தேரோன் மகனை - மேரு கிரியை வலமாக வருகின்ற தேரினை உடையவனான சூரியன் புதல்வனை (சுக்கிரீவனை), தன் புரத்தில் விட்டு - அவனுடைய கிட்கிந்தா புரியில் விட்டு, வாள் எயிறு - வாள் போன்ற (கோரப்) பற்களையுடைய, அரக்கர் சூழ - இராக்கதர்கள் சூழ்ந்திருக்க, ககனத்தின் மிசையே ஏகி - ஆகாய வழியாகவே போய், கனைகடல் இலங்கை அன்றே சென்று புக்கான் - ஒலிக்கின்ற கடலால் சூழப்பெற்ற இலங்காபுரியுள் அன்றே சென்று புகுந்தான்.

குன்றினை வலஞ்செய் தேரோன் மகன் - சுக்கிரீவன். அவன் புரம்-கிட்கிந்தாபுரி. ககனம்-ஆகாசம்; 'ககனமுட்டை கிழிந்தது' (யுத்த. 259); ககனம் ககனாகாரம், சாகரஸ் ஸாகரோபமம், இராம ராவணயோ யுத்தம் இராம ராவண யுத்தம் என வழங்குதல் காண்க. விரைந்து செல்லும் விமானமாகலின் அன்றே சென்றான் எனப் பட்டது. அகன் உற்ற காதல் - உள்ளத்தில் இராமபிரானிடம் ஊன்றிய காதலை யுடையவன் என்றுமாம். (ஒப்பு): 'அகனமர் காதலைய' (யுத்த. 449).

பி - ம். 3, மிசையே பொய்ந்தி.
4. வீடணனுமன்றே, வீடணன் சென்றதன்றே.



## இராமபிரான் யாவருஞ் சென்றபின் இனிது அரசு புரிதல்

4321. ஐயனு மவரை நீக்கி
யருள்செறி துணைவ ரோடும்
வையக முழுதுஞ் செங்கோன்
மனுநெறி முறையிற் செல்லச்
செய்யமா மகளு மற்றச்
செகதல மகளுஞ் சற்றும்
நையுமா றின்றிக் காத்தா
னிலப் பொறைகள் தீர்த்தே.

ஐயனும் - இராமபிரானும், அவரை நீக்கி - அத் துணைவர் அனைவரையும் உத்திரவு தந்து அனுப்பிவிட்டு, அருள் செறி துணைவரோடும் - தன் அருள் நிரம்பிய பரதன் முதலாய தம்பி மாரொடும், வையகம் முழுதும் - பூமி மண்டலம் முழுவதிலும், செங் கோல்,- செங்கோலானது, மனுநெறி முறையில் செல்ல - மநுநூல் முறைப்படியே நடைபெற, செய்ய மாமகளும் - செவ்விய இலக்குமி யாகிய மகளும், மற்று அச்செகதலம் மாமகளும்-பூமிப் பிராட்டியும், சற்றும் - சிறிதும், நையும் ஆறு இன்றி - வருந்தும் வகை யில்லாமல், பொறைகள் தீர்த்து - பூபாரங்களைப் போக்கி, காத் தான் - பாதுகாத்தான். ஏகாரம் : தேற்றம்.

தயரதனை : 'மநுவென்ற நீதியான்' எனக் குறித்தமை காண்க. செய்ய மாமகள்- திருமகள். செகதல மகள்-பூமிப் பிராட்டி ; சீதாதேவி சமேதனை என்க. நானிலம் நையு மாறின்றி ; 'நையா திவ்வுலகுயிர்கள் நாடோறும் மருள் சுரப்போன்' (குசேலோ. 3 : 50) ; பொறைகள் தீர்த்து - பூபாரம் தீர்க்கப் பிறந்தவன் ஆகலின் இங்ஙனம் கூறினர். 'பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணா' (வி. பா. கிருட்டினன். 34); செகதலம்-செகத்தாகிய தலம் என இரு பெயரொட்டாகக் கொள்க. பூதலம் காத்தான் -இயல்பாக அவனுக்கமைந்த காத்தல் அல்லது திதித் தொழிலை மேற் கொண்டான் என்க.

பி - ம். 1. அடிதொழு.
2. மறை நெறி.
3. மகளை ; மற்றும்.
4. நானிலம்.



4322. உம்பரோ டிம்பர் காறு
முலகமோ ரேழு மேழும்
எம்பெரு மானென் றேத்தி
யிறைஞ்சிநின் றேவல் செய்யத்

தம்பிய ரோடுந் தானுந்
    தருமமுந் தரணி காத்தான்
அம்பரத் தனந்தர் நீங்கி
    யயோத்தியில் வந்த வள்ளல்.

அம்பரத்து அனந்தர் நீங்கி - திருப்பாற் கடலில் அறிதுயில் கொள்வதை விட்டு, அயோத்தியில் வந்த வள்ளல் - அயோத்தியில் வந்து பிறந்த வண்மையனான இராமபிரான், உம்பரோடு இம்பர் காறும் - மேலுலகோடு இவ்விடம் வரையும் உள்ள, உலகம் ஓர் ஏழும் ஏழும் - பதினான்கு உலகத்துள்ளவரும், 'எம்பெருமான் - எம் இறைவன்', என்று ஏத்தி - என்று துதித்து, இறைஞ்சி நின்று - வணங்கி நின்று, ஏவல் செய்ய - குற்றேவல் புரிய, தம்பியரோடும் தானும் - தம்பியரும் தானும், தருமமும் - அற நெறியையும், தரணி காத்தான் - பூமியையும் புரந்தருளினான்.

தருமமும் தரணியும் என்க. தருமமும் இராமபிரானைக் காக்க, இராமபிரான் தருமத்தைக் காத்தான் என்க. 'தர்மஸ்ய பரிரக்ஷிதா' என்னும் முதனூல். அம்பரம் - கடல். 'அனந்தர் நீங்கி அயோத்தியில் வந்த வள்ளல்' யுத்த. 4302, 4215 உரை காண்க. அனந்தர் - அறிதுயில்; 'அனந்தரான் மயங்கி வந்தார் (யுத்த. 2216).

பி - ம். 1. பாரும்.

4. அனர்ந்தர் நீக்கி; அயோத்தி வந்திருந்த வள்ளல்; இருத்தகாலை. 37

இங்கு சில அதிகப் பாடல்கள் :—

1 வான் வளம் சுரக்க நீதி மனுநெறி முறையே யென்றும்
தான் வளர்ந் திடுக நல்லோர் தங்கிளை தழைத்து வாழ்க
தேன் வழங் கமிழ்தமாலை தெசரத ராமன் செய்கை
யான் அளந் தறைந்த பாடல் இடைவிடா தொளிர்க
[வெங்கும்.

2 எறிகடல் ஞாலந் தன்னு ளின்தமிழ்ப் புலவர்க் கெல்லாம்
முறுவலுக் குரிய வாக முயன்றன மியன்ற வெஞ்சொல்
சிறுமையே நோக்கார் தங்கள் பெருமையே சிந்தை
[செய்யும்
அறிவுடை மாந்தர்க் கெல்லாம அடைக்கல மாக வாழி.

3 வாழிய ஸ்ரீ ராமன் வாழிய சீதை கோமான்
வாழிய கௌசலேசை மணிவயிற் றுதித்த வள்ளல்
வாழிய வாலி மார்பும் மராமரம் ஏழும் சாய
வாழிய கணையொன் றேவுந் தசரதன் மதலை வாழி.

பல சுருதி

4323. இராவணன் தன்னை வீட்டி
யிராமனாய் வந்து தோன்றி
தராதல முழுதுங் காத்துத்
தம்பியுந் தானு மாகப்
பராபர மாகி நின்ற
பண்பினைப் பகரு வார்கள்
நராபதி யாகிப் பின்னு
நமனையும் வெல்லு வாரே,

பராபரம் - பராபரப் பொருள், இராமனாய் வந்து தோன்றி - இராமபிரானாகத் திருவவதரித்து, இராவணன் தன்னை வீட்டி - இராவணனைச் சங்கரித்து, தம்பியும் தானும் ஆக - தம்பியும் தானுமாக, தராதலம் முழுதும் காத்து - பூமண்டலம் முழுதும் பாது காத்து, ஆகி நின்ற - இவ்வாறாகி நின்ற, பண்பினை பகருவார்கள் - பண்புள்ள சரிதையைச் சொல்பவர்கள், நராபதி ஆகி - மன்னவராகி, பின்னும் நமனையும் வெல்லுவாரே - பின்னும் யமனையும் வெற்றி கொள்ளும் தன்மையை அடையப் பெறுவார்கள். ஏ: அசை.

இராமபிரான் தோற்றமே அந்தச் சங்காரத்திற்காகலின் தோன்றி வீட்டி எனப்பட்டது. 'மசரதமனை யவர்' என்ற

பாடலைக் காண்க. தராதலம் -பூமி; 'தராதலத்தில் உள்ள தமிழ்க் குற்றம் நீக்கி' (பால. பாயிரம்). தோன்றி - அவதரித்து; இங்கு அர்ச்சாவதாரம். இம்மையில் இராஜ்ய போகங்களைப் பெற்று நமன் வாதனையும் வென்று மறுமையில் மீளாக்கதியென்ற வீடு பேற்றையும் அடைவார்கள் என்று நூற்பயன் கூறப்பட்டது.

கம்பன் கவிதையுரை கண்டெழுத லுற்றேற்குச்
செம்பொருளைக் காட்டிநின்ற தெய்வதத்தை-மெய்ம் மறைகள்
ஈரிரண்டும் வல்ல எழில் ராமன் தூதுவனும்
மாருதியை வாழ்த்துகவென் வாய்.

ஸ்ரீ ஆஞ்சனேயர் துணை

ஸ்ரீ இராமபிரான் திருவடிகளே சரணம்.

---

## விடை கொடுத்த படலம் முதனூல் கூறுவது

முடி சூட்டிக் கொண்ட இராமபிரான் நூறுயிரம் குதிரைகள் நூறுயிரம் பசுக்கள் முதலியவற்றை இரணிய தானத்துக்கு முன்பு அந்தணர்கட்கு ஈந்தார். பல்வகை அணிகளும் பட்டாடைகளும் கொடுத்தார். கதிரவனுடைய ஒளிக் கற்றைபோல் மின்னிய ஓர் அழகிய மாலையைச் சுக்கிரீவனுக்கு அளித்தார். இரண்டு சிறந்த தோள்வளைகளை அங்கதனக்குதவினர். ஓர் விலையுயர்ந்த முத்தாரத்தைப் பிராட்டிக்குத்தந்தார். பிராட்டி அந்த ஆரத்தைக் கையில் வைத்துக்கொண்டு இராமபிரானை நோக்க, இங்கிதஜ்ஞரான இராமபிரான் அவள் கருத்தை உணர்ந்து, 'இனிய அழகுடையவளே! எவனிடம் வல்லமை புத்தி உடல் பலம் முதலியவை மிகுதியாக உள்ளனவோ அவனுக்கு இந்த மாலையை அளிக்கலாம்' என்ன, சீதாதேவியார் அந்த மாலையைச் சிறிய திருவடிக்களித்தாள். மற்றும் துவிவிதன் மைந்தன் நீலன் என்ற இவர்கட்கும் வேண்டுவன வழங்கினர் இராமபிரான். வானர வீரர்களும் வானரப் படைத் தலைவர்களும் ஆடைகளாலும் அணிகலன்களாலும் பெருமைப்படுத்தப் பெற்றுர்கள்.

பின்னர் வீடணன் சாம்பன் முதலானோர்க்கு வரிசைக்கேற்ற வாறு பரிசுகள் வழங்கப் பெற்றன. முடி சூட்டிற்கு வந்திருந்த அனைவரும் தத்தம் பதிக்கு விடைபெற்று மகிழ்வுடன் ஏகினர்.

பரதாழ்வானை இளவரசாக வைத்து மநுமுறை தவறாது பதினாயிரத்து நூற்றுப்பத்து ஆண்டுகள் அரசு புரிந்தார் இராம பிரான். பல வேள்விகள் செய்தார், இராமபிரானுடைய நல்லாட்சி யில் அகால மரணமோ, சோரர் பயமோ, நோய்களால் ஏற்படும் நலிவுகளோ இல்லை. புத்திரப் பேறில்லாதவர்களே கிடையாது. மகா காவியமாகிய இந்த இராம காதையை அன்புடன் கற்பவரும், கேட்பவரும், கேட்டவற்றை பிறர்க்குக் கூறுபவரும இம்மை' மறுமை, வீடு என்கின்ற மூன்றையும் பெறுவர்.

நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே
சன்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண் டெழுத்தினால்.

கல்வியிற் பெரியாராய்க் கம்பநாடர் இயற்றியருளிய இராமாயணம் யுத்த காண்டம் விருத்தியுரை முற்றும்.

---

# செய்யுள் முதற் குறிப்பகராதி

[எண் - செய்யுள் எண்.]

அ

ஏ



ஐ

ஒ



ஓ



க



கா



கி



கு

மே



மை



மொ



மோ



யா



வ



வா



வி

---

# இக்காண்டத்தின்

## அரும்பத முதலியவற்றின் அகராதி

(எண் - செய்யுள் எண்)

இ

ஈ

ஓ

க

கூ

கெ



கே

கை



கொ

கோ

சா

சி

சீ

சு

சூ

சே

சை



சொ



சோ



ஞா

தி

தீ

தே

## தை



## தொ

நா

நீ

பூ

பெ



பே

பை



பொ

போ

வீ

வே

# புராண வரலாறுகள்

### அகத்தியர் கடல் பருகியது

வானவரைத் துன்புறுத்திய விருத்திராசுரன் தேவேந்திர னுடைய வயிரப் படைக்கு அஞ்சிக் கடல் புக்கொளிக்க, தேவர் களின் வேண்டுகோளால் அம் முனிவர் கடல் நீரைப் பருகி அவ் வரக்கனைக் கொல்வித்தனர். பால. 381.

### அகத்தியர் தமிழ் உரைத்தது

அகத்தியர் சிவபிரானிடமும் முருகனிடமும் தமிழ் கற்றதாக நூல்கள் கூறும். சிவபிரானிடம் கற்றது: 'வட மொழியைப் பாணினிக்கு வகுத்தருளியதற் கிணையாத், தொடர்புடைய தமிழ் மொழியை யுலகமெலாந் தொழுதேத்தக், குடமுனிக்கு வற்புறுத் தார் கொல்லேற்றுப் பாகர்' 'ஆதியிற்றமிழ் நூல் அகத்தியர்க் குணர்த்திய, மாதொரு பாகன்' என்பது கொண்டுணர்க. அகத்திய முனிவர் பொதிய மலைக்கண் அமர்ந்து பல மாணவர் கட்குத் தமிழ் கற்பித்தனர். இங்குத் தமிழ் என்றது இலக்கணம். அகத்தியம் என்ற நூல் அவர் செய்ததென்ப. ஆனால், அந்நூல் இப்பொழுது கிடைத்திலது.

### அநுமன் கதிரவன் தேர்மேற் குதித்தது

அநுமன் சிறு பிராயத்தில் சிவந்த சூரியனை ஓர் கனியெனக் கருதி அவன்மீது பாய்ந்ததாகவும், அப்போது இந்திரன் வயிரப் படையால் முகத்தில் அடிபட்டதாகவும் அதன் காரணமாகவே அநுமன் என்ற பெயர் அவனுக்கு எழுந்ததென்றும் உத்தர காண்டம் கூறும். சுந்தர. 770.

### ஆதிசேடனுக்கும் வாயு பகவானுக்கும் நிகழ்ந்த போர்

யார் மிக்க வலியுள்ளவர் என்று காணும் பொருட்டு ஆதி சேடனும் வாயுவும் பொரத் தொடங்கினர். சேடன் மேருவின்

சிகரம் ஒன்றைத் தேவர்களின் விருப்பப்படித் தன் உடலால் சூழ்ந்துகொள்ள, வாயு தன் முழு வலிமையுடன் அச் சிகரத்தைப் பெயர்க்க முயன்றும் இயலவில்லை. பின்னர்க் கருடன் அங்கு எழுந்தருள, ஆதிசேடன் உடல் சிறிது தளர்ந்தது. அவ்வமயம் நோக்கிக் காற்று பலமாக வீச, முத்தலைகளுடன் திகழ்ந்த அச் சிகரம் பெயர்ந்து நெடுந்தூரம் சென்று கடலில் வீழ்ந்தது. பின்பு இலங்கை அதன்மீது கட்டப் பெற்றது என்பர்.

### இந்திரன் மலைகளின் சிறகரிந்தது

ஒரு காலத்தில் மலைகளும் சிறகு பெற்றுப் பறந்து சென்று பல இடங்களையும் பாழ் செய்து வந்தது. அவற்றின் அட்டூழியத்தைப் போக்குமாறு இந்திரன் தன் வயிரப் படையால் அவற்றின் சிறகுகளை வெட்டி, அவற்றை அசைய முடியாதபடி செய்தனன். அப்பொழுது தப்பி ஓடிக் கடலில் ஒளிந்தது மைநாகம் என்னும் மலை என்ப. சுந்தர. 1025.

### இராவணன் கயிலையைத் தூக்கியது

திக்குவிசய காலத்தில் இராவணன் குபேரனை வென்று அவனுக்குச் சொந்தமான புட்பக விமானத்தில் ஏறிச் சென்றபோது கயிலை எதிர்ப்பட்டது. ஆகவே, புட்பக விமானம் தடைப்பட்டது. இராவணன் வெகுண்டான். அப்பொழுது கயிலையின் மகிமையை நந்திகேசுவரப் பெருமான் கூறவும் கேளாமல், தன்னைத் தடுத்த மலையைப் பெயர்க்கத் தொடங்கினான். அப்பொழுது அம் மலைக்கண் தவம் புரிந்து கொண்டிருந்தவர்கள் அஞ்சினர். உமாதேவியும் அஞ்சித் தன் கணவனை சிவபிரானை ஊடல் தீர்ந்து தழுவினள். அதனைக் கண்டு சிவபெருமான் தன் பெருவிரலால் அழுத்த, இராவணன் அம் மலையடியில் அகப்பட்டுக் கதறினான். அப்பொழுது அவன் தலைகளில் ஒன்றைத் தடிந்து, தன் கைநரம்புகளை அதிற் பூட்டி ஒரு வீணையாக்கிச் சாமகீதம் பாடி இறைவனைத் துதிக்கப் பெருமான் மகிழ்ந்து அவனை விடுவித்ததோடு மூன்றரைக்கோடி ஆயுளையும் சந்திரகாசம் என்ற வாளினையும் ஈந்தான். சுந்தர. 117, 272, 303.

கருடன் அமுதம் கொண்டு சென்றது

காசிப முனிவர்க்கு விநதையிடம் தோன்றியவன் கருடன். அது காரணமாகவே அவன் வைநதேயன் எனப்பட்டான். அவன் மாற்றாந்தாயிடம் அடிமைப்பட்டிருந்த தன் தாயை விடுதலை செய்ய, தெய்வலோகத்தில் கடுங்காவலில் வைக்கப் பெற்றிருந்த தேவாமிர்தத்தை நாகர் உலகுக்கு எடுத்து வந்து தன் தாயின் அடிமைத்தளையைப் போக்கினான். போக்கிய பின்னர் அமுதத்தை நாகர் உண்ணாதபடி அவர்களை வஞ்சனையால் அகலுமாறு செய்து, அதனைத் திரும்பவும் எடுத்துச் சென்று தேவர் உலகில் முன்னிருந்த இடத்தில் வைத்தனன். சுந்தர. 798.

கார்த்தவீரியன்

இவன் ஓர் அரசன். அத்திரி முனிவரின் புதல்வரின் அருளால் இவன் ஆயிரம் கைகள் பெற்றான். இவன் மகளிரொடு நருமதையாற்றில் நீர் விளையாட்டினைச் செய்து கொண்டிருக்கும் போது இவன் ஆடிய நீர் அப்பொழுது அங்கு போந்திருந்த இராவணனை நனைக்க, அவன் வெகுண்டு போர் தொடுத்தான். கார்த்தவீரியன் அவனைப் பிடித்துத் தன் நகர்க்கு கொண்டு சென்றான். பின் ஒருநாள் இவன் சமதக்கினி முனிவன் தவம் செய்து கொண்டிருந்த தலத்தை அடைந்து அவரிடமிருந்த காமதேனுவைக் கவர்ந்து சென்றான். அதனை உணர்ந்த முனிவரின் புதல்வனான பரசுராமன் வெகுண்டு கார்த்தவீரியனைக் கொன்றான். சுந்தர. 456, 664.

சிவபெருமான் திரிபுரங்களை எரித்தது

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூவரும் சிவபெருமான் அருளால் பொன் வெள்ளி இரும்புகளாலாகிய கோட்டைகளை அமைத்துக் கொண்டு, வானவர்களையும் பிறரையும் வருத்தினர். தேவர்கள் சிவபெருமானிடம் முறையீடு செய்ய, அவர் பூமியைத் தேராகவும், நான்கு மறைகளையும் குதிரைகளாகவும், சூரிய சந்திரரைச் சக்கரங்களாகவும், பிரமனைச் சாரதியாகவும், மேரு மலையை வில்லாகவும், திருமாலை அம்பாகவும், வாசுகி என்ற அரவத்தை நாணாகவும், அக்கினியை அதன் நுனியாகவும் கொண்டு போர்க்குச் சென்றான். ஆயினும் தேரின் உறுப்புக்

களாக அமைந்த தேவர்கள் தம்முட் கலாய்த்துக் கொள்ளப் பெருமான் தனது புன்னகையாலேயே புரங்களை எரித்தான். இதனை, 'நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம், பாண மென்றால் மண்தின்ற பாணமே-தாணுவே, சீராரூர் மேவும் சிவனே நீ எப்படியோ, நேரார் புரமெரித்த நேர்' 'வில்லைப் பிடித்தெய்ய மாட்டாமல் நீரந்த வேளையிலே, பல்லைத் திறந்து விட்டெரிதுவோ நின் படைத் திறமே' என்ற காளமேகப் புலவரின் வஞ்சப் புகழ்ச்சிச் செய்யுட்கள் கொண்டுணர்க. சுந்தர. 451.

## சிவபெருமான் நஞ்சுண்டது

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைய அதிலிருந்து கொடிய ஆலகால விடம் எழுந்தது. அதன் வெம்மையால் உலகெலாம் தீய, சிவபெருமான் அருள்கொண்டு அந் நஞ்சினைத் தான் உட்கொண்டு நீலகண்டன் என்ற பெயர் பெற்றான். யுத்த. 418.

## சிவபெருமான் யானைஉரி போர்த்தது

யானை வடிவில் தோன்றி வானவர்களையும் பின்னர்ச் சிவ பெருமானையும் பகைத்து வந்த கயாசுரன் என்ற அரக்கனை வதைத்து அதன் தோலை மேலே போர்த்திக் கொண்டார்.

மற்றும் ஓர் வரலாறு, சிவபிரான் பிச்சாடணன் வடிவுகொண்டு தாருகாவனம் சென்று ஆங்கிருந்த முனிபன்னியரை மயக்கினுராக, முனிவர்கள் வெகுண்டு அபிசார ஓமம் செய்ய, அதிலிருந்து எழுந்த யானையினை உரித்துப் போர்த்தது. இவ் வரலாற்றினைத் தேவாரத்தில் பல இடங்களிலும் காணலாம். 'வாயே வாழ்த்து கண்டாய் மத யானையுரி போர்த்துப், பேய்வாழ் காட்டகத்தாடும் பிரான்றன்னை' என்று அப்பர் அடிகள் பாடுவது காண்க. சுந்தர. 139.

## சூரியனை அரவு தீண்டுதல்

திருப்பாற் கடலில் தோன்றிய அமுதினைத் திருமால் மோகினி வடிவு கொண்டு தேவர்களுக்கு மாத்திரம் பகிர்ந்ததை உணர்ந்த இராகு என்னும் கோள், தேவ உருமேவி இடையில் மறைந்து நின்று தானும் வாங்கிப் புசித்தனன். இவ்வடாத செயலைச் சூரிய

சந்திரர் திருமாலுக்குத் தெரிவிக்க, அவர் இராகுவை ஓர் கருவியால் புடைக்க, அவன் தலை வேறு உடல் வேறாகி, அமுதம் அயின்றமையால் இறப்பின்றித் தலை இராகு என்றும், உடல் கேதுவென்றும் ஆகினன். பின்னர் தன்னைக் காட்டித்தந்த சூரிய சந்திரர்மீது மாறாப் பகைமை கொண்டு அவர்களைப் பீடிக்கத் தொடங்கினன். அப்படிப் பீடிக்கும் காலமே கிரகணங்கள் என்று கூறப்படும். சுந்தர. 170.

### தாருகாசுரன் வதை

தாருகன் ஓரசுரன். பெண்ணாலன்றிப் பிறரால் கொல்லப்படலாகாதென்று வரம் பெற்றுத் தேவர்களை வருத்தக் காளிதேவி அவனைக் கொன்றாள். இப் பெயருடைய பிற அசுரர்களும் உண்டு. யுத்த. 1781.

### திருமால் ஆமையாகி மந்தரம் ஏந்தியது

திருப்பாற் கடல் கடைந்த காலத்து மந்தர மலை அசைய, அதனை அசையாது நிறுத்தும் பொருட்டுத் திருமால் ஆமையுருத் தரித்து அதனைத் தாங்கினர். இதுவே கூர்மாவதாரம் என்ப. சுந்தர. 42.

### திருமால் இரணியாக்கனை அழித்தது

இரணியாக்கன் காசிபருக்குத் திதியிடம் தோன்றியவன். இரணியன் சகோதரன். இவன் தேவர்களை வருத்தி, ஒரு முறை பூமியைப் பாய்போற் சுருட்டிக் கொண்டு கடலுட் புகுந்தான். திருமால் வராகவதாரம் எடுத்து இவனைக் கொன்றனர். சுந்தர. 415.

### திருமால் உலகளந்தது

மகாபலி என்ற ஓர் அசுரன் முன்னாளில் இருந்தான். இவன் பிரகலாதாழ்வானின் பெயரன். வானவர்க்கு விரோதி. திருமால், 'ஒரு குறளாய் இருநிலத்து மூவடி மண் வேண்டிப் பெற்றுப் பின்னர் பேருருக் கொண்டு ஓரடியால் விண்ணுலகையும் அளக்க, மூன்றாமடிக்கு இடமின்மையின் அந்த அசுரன் தலையில் வைத்

தான். திருமாலின் இந்த அரிய செயலில் வாமனவதாரம் திருவிக்கிரமவதாரம் என்ற இரண்டும் அடங்குதல் காண்க. யுத்த. 3606.

### திருமால் யானையைக் காத்தது

கஜேந்திரன் ஒருநாள் ஓர் குளத்தில் நீரருந்தச் சென்றபோது, அங்கிருந்த முதலையொன்று அதனைப் பற்றியீர்க்க, ஆயிரம் ஆண்டுகள் போர் செய்தும் விடுவித்துக் கொள்ள முடியாமல் சளைத்து ஆதிமூலமே என்று கதறிற்று. திருமால் அங்கு எழுந்தருளி முதலையைக் கொன்று அவ்வியானையைக் காத்தனர். கஜேந்திரன் முன் பிறப்பில் இந்திரத்யும்நனாக இருந்து ஓர் முனிவன் சாபத்தால் யானையாகப் போந்ததாகவும், முதலை ஓர் கந்தர்வன் என்றும் கூறுவர். யுத்த. 416

### திருமால் உந்தியில் பிரமன் தோன்றியது

உலகப் பெரு வெள்ளத்திற்குப் பின் திருப்பாற் கடலில் அறிதுயில் கொண்டிருந்த திருமால் தம் சங்கற்பத்தால் தம் நாபியினின்று சுவர்ண அண்டத்தை யுண்டாக்கி, அதினின்று பிரமனைத் தோற்றுவித்தனர். உந்தித் தாமரையினின்றும் பிரமன் வந்ததாகவும் கூறுவர். 'நான்முகனே திருமால் உந்தி வந்தோன்' என்றது காண்க. யுத்த. 260.

### திருமால் மது, கைடவரை அழித்தது

மது, கைடவன் என்ற இருவர் திருமாலிடம் தோன்றி அசுரராயினர். அவர்கள் பிரம தேவனிடமிருந்து வேதங்களைப் பறித்துக்கொண்டு நீரினுள் மறைந்தாராக, பிரமனின் வேண்டுகோளால் திருமால் ஹயக்ரீவராகி அவர்களைப் பாடி மயக்கி வேதங்களைத் திருமால் திரும்பப் பெற்றார். பின்னர் அவர்கள் தம்மைப் பயந்த திருமாலுடனேயே போர் புரிய, திருமால் அவர்களிடம் இருந்தே, அவர்களை இறக்கச் செய்வதாக வரம் பெற்று அவர்களைக் கொன்றனர். யுத்த. 1736.

### துருவாசர் இந்திரனுக்குச் சாபமிட்டது

துருவாசர் ஓர் முனிவர். கோபத்திற்குப் பெயர் பெற்றவர். இவர் ஒருக்கால் திருமகள் அணிந்திருந்த மாலையைப் பெற்று

இந்திரனுக்கு அளிக்க, அவன் அதனை ஆணவத்தால் தன் யானை மத்தகத்தில் வைக்க, அது அதனைத் தன் காலிலிட்டுத் துகைத்தது. முனிவர் வெகுண்டு அவன் செல்வமெல்லாம் அழியும்படி சாபமிட்டார். பாற்கடலைக் கடைந்தபோது இந்திரன் அவற்றைத் திரும்பவும் பெற்றான். சுந்தர 46.

### வாலி பாற்கடல் கடைந்தது

தேவர்களும் அசுரர்களும் ஒருக்கால் மந்தரகிரியை மத்தாகவும் வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அப்போது மந்தரமலை ஒருபுறம் சாயத் திருமால் கூர்ம வடிவில் அதனைத் தாங்கி நின்றனர். கடையும்கால் முதலில் நஞ்சு வெளிப்பட்டது. யாவரும் அஞ்சியிருந்த நிலையில் சிவபெருமான் அதனை அருந்தினர். பின் பல காலம் முயன்றும் அமுதம் வராமற் போகவே, தேவரும் அசுரரும் களைத்தனர். அப்போது வாலி அங்கு சென்று தன் வாலினாலேயே கடைந்து வெளிப்படுத்தினான். மோகினி உருவத்தில் வந்து திருமால் தேவர்கட்கு அமுதளித்தனர். யுத்த. 822.

### பரசுராமன் தாயைக் கொன்றது

பரசுராமன் சமதக்கினியின் புதல்வன். இவன் அன்னை ரேணுகாதேவி. சிறந்த கற்பு வாய்ந்தவள். இவள் தினந்தோறும் ஆற்றிற்குச் சென்று அங்குள்ள மணலையே திரட்டிக் குடமாக்கி அதில் நீர்மொண்டு கொண்டு வருவது வழக்கம். ஓர் நாள் நீரில் நின்று கொண்டு கீழே நோக்கும்போது ஓர் எழில் வாய்ந்த கந்தர்வனுடைய சாயலைக் கண்ணுற்றுச் சிறிது மயங்கி நின்றாள். அவ்வளவில் மணல் குடமாக மாறவில்லை. இச் செய்தியை ஞானத் திருட்டியால் உணர்ந்த முனிவன், தன் மக்களை ஒருவர் ஒருவராக அழைத்துத் தாயைக் கொலை செய்யுமாறு கட்டளை யிட்டான். அவர்கள் மறுத்தனர். கடைப் பையனாகிய பரசுராமன் துணிந்து தாயை வெட்டி வீழ்த்தினான். தந்தை பெரிதும் மகிழ்ந்து வேண்டிய வரம் கேட்குமாறு கூற, இறந்த அன்னை உயிர் பெற்றெழ வேண்டும் என்றான். முனிவன் அவனை மெச்சி அவளைப் பிழைப்பித்தான். யுத்த. 1348.

### சிவபெருமான் பிரமன் தலையை அறுத்தது

பிரமனுக்கு ஒருக்கால் ஐந்து தலைகள் இருந்தன. அவன் ஆணவங் கொண்டு ஐந்து தலைகளையுடைய சிவபிரானுக்குச் சமமாக எண்ணினான். சிவபெருமான் அவன் தலைகளில் ஒன்றைக் கிள்ளியெறிந்து அவன் அகந்தையை அடக்கினார். யுத்த. 1349.

### மார்க்கண்டற்காக யமனை உதைத்தது

மிருகண்டு என்ற ஓர் முனிவர் மகவினை வேண்டிப் பெருந் தவம் செய்தார். சிவபெருமான் அவற்கிரங்கி எழுந்தருளி வேண்டுவது யாதென்று வினவினார். இவர் ஆண்மகவு வேண்டும் என்றார். சிவபெருமான், 'அறிவிலிகளாக நூறு மக்கள் வேண்டுமா அல்லது நுண்மாணுழை புலம் உள்ளவனும் அல்ப ஆயுளும் உள்ளவனுன ஒரு மகன் வேண்டுமா' என்று கேட்டார், 'பெறுமவற்றுள் யாமறிந்ததில்லை யறிவறிந்த மக்கட் பேறல்ல பிற' (குறள். 61) என்றது பொதுமறையாகலின், முனிவர் அறிவறிந்த மகனையே வேண்டிப் பெற்றார். அந்த மகவே தான் மார்க்கண்டன். பதினாறு வயது வந்தது, முனிவரும் அவர் மனைவியும் கவன்றனர். மார்க்கண்டன் கவற்சியின் காரணம் உணர்ந்து சிவாலயம் சென்று சிவலிங்கத்தைத் தழுவிக்கொண்டு போற்றலானான். காலன் பாசம் விடுத்தான். இவனைத் தனியே இழுக்கவியலாமற் போகவே, லிங்கத்தையும் சேர்த்து இழுத்தான். சிவபிரான் எழுந்தருளி அவனை உதைத்துக் கொன்றார் என்ப. 'மார்க்கண்டற்காக மறலி பட்ட பாட்டை யுன்னிப் பார்க்கினன்பர்க்குப் பயம் உண்டோ பரா பரமே' என்ற தாயுமானவர் வாக்கினைக் காண்க. யுத்த. 418.

## சிவபிரான் குறிப்பிடப்பெற்ற இடங்கள்

இந் நூல் திருமாலின் அவதாரமான இராமபிரானுடைய சரிதம் எனினும், சிவபிரானைப் பற்றிய பல குறிப்புக்களை இதில் ஆங்காங்குக் காணலாம். இவற்றில் அப்பெருமானுடைய அட்ட வீரட்டச் செயல்களும் பிறவும் காணப்படும். இராவணனே ஓர் சிவபக்தன். சிவபிரானிடமிருந்து மூன்றரைக் கோடி ஆயுளையும் சந்திரகாசம் என்ற வாளினையும் பெற்றவன்,

யுத்த. 118, 770, 808, 879, 880, 935, 1073, 1179, 1180, 1213, 1 61, 1380, 1349, 1354, 1368, 1396, 1432, 1465, 1587, 1744, 1850, 1874, 1942, 1948, 2058, 2122, 2155, 2389, 2522, 2531, 2573, 2578, 2984, 3016, 3034, 3130, 3192, 3203, 3205, 3206, 3207, 3223, 3256, 3282, 3308, 3342, 3382, 3405, 3415, 3452, 3463, 3582, 3588, 3602, 3620, (சிவன் கூற்று) 3634, 3670, 3690, 3734, 3765, 3799, 3833, 3878, 3897, 3945, 3969, 3994, 4028, 4058, 4083, 4183.

இவற்றில், ஏழை பங்காளன், நாரியோர் பாகன், மின்னேயோர் புழையினன், உமையன் என்று சிவபெருமானுடைய அர்த்தநாரி வடிவமும், அரங்கின் ஆடுவதும், விடைப்பரியூர்வதும், மார்க் கண்டற்காக கூற்றுதைத்ததும், சூலம் ஏந்துவதும், மழுத் தாங்குவதும், ஊழியில் சங்காரம் செய்து அனைத்துல கும் தன்விடம் அடக்குவதும், விடமயின்று கண்டம் கறுத்ததும், கங்கையும் பிறையும் சூடியதும், தேவதேவன் என்பதும், நான்கு தோளான், முக்கண்ணன் என்பதும், திரிபுரம செற்றதும், பித்தன் என்ற பெயருடையவன் என்பதும், கண்ணுதல் என்பதும், ஈசன் என்பதும், ஆனையுரி போர்த்ததும், மேருவை வில்லாகக் கொண்ட வன் என்பதும், கொன்றைமாலை புனைந்தவன் என்பதும், ஐந்து முகம் உடையவன் என்பதும், கந்தனார் தந்தை என்பதும், காந்தை சூடி என்பதும், ஈமத்துட்டனி நின்றுடும் கறைமீடற்றவன் என்பதும், கயிலையை இராவணன் தூக்கியதும், பின்னர் காமரம் பாடிச் சிவனிடம் வாள் பெற்றதும், எண்குணத்தான் என்பதும், பிறவும் காணப்படும். மற்றும் சிவபெருமான் கலங்கிய தேவரை ஆங்காங்குத் தேற்றியதும், இராமபிரானைச் சென்று காணுமாறு தயரதற்குக் கூறியதும், பிறவும் நூல் உரையில் காணலாம்.

சில இயற்கை நிகழ்ச்சிகள் :—

பெருங் காப்பிய இலக்கணத்தில் சூரியன் சந்திரன் என்ற இவர்களின் தோற்றமும் மறைவும் ஆங்காங்குக் குறிக்கப்பெறும். இதில் புலவர் பெருமான் நிகழ்ச்சிக் கேற்பவும் தன் ஆற்றலாற் கற்பித்தும் பலவற்றை நயம்பெறக் காண்போம்.

வானரர்கள் சேது அணையின் பொருட்டுப் பெரிய மலைகளைக் கடலில் எறிய, கடலின் உவர்நீர் தன்மீது தெறித்தலால், அதனைக்

62

கழுவித் தன்னைத் தூய்தாக்கும் பொருட்டு, 'அப்பு நீராடுவான் போல் அருக்கனும் அத்தம் சார்ந்தான்' (703)

2 இராமபிரானுக்குப் பிராட்டியின் பிரிவால் நேர்ந்த விரகத்தைப் பெருக்க மன்மதன் கொண்ட வில் போன்று தோன்றிற்று மதி. (704)

3. முன்னர் இராவணற்கஞ்சி இலங்கைமேற் செல்லாத சூரியன், 'போர்மேற்கொண்டு, மன்னவர்க்கரசன் வந்தான் வலியமால் என்று, தொன்னகர் காண்பான் போலக் கதிரவன் உதயம் செய்தான்' (774)

4. தசமுகன் முடியிற்றைத்த பன்மாமணியினைச் சுக்கிரீவன் பறித்துச் சென்றான்; 'ஒன்றொழித் தொன்று மென்றவ்வரக்கனுக் கொளிப்பான் போல, வன்றிணிக் குன்றுக் கப்பால் இரவியு மறையப் போனான்' (882)

5. போர் நிகழும் போதில், கதிரவன் தன் சிவந்த கரங்களால் எதிர்ந்த வலிய இருளாகிய யானையை அழித்து, எழும்போது குருதி வெள்ளத்தில் மூழ்கி எழுந்தவன் போன்று காணப்பட்டான். (சூரியோதயம். 2291).

5. 'செம்புனற் சோரிச் செக்கர் திசையுறச் செறிகையாலும் அம்பெனவுற்ற கொற்றத் தாயிரங் கதிர்களாலும், வெம்புபொற் றேரிற் றோன்றும் சிறப்பினும் அரக்கன் வெய்யோன், உம்பரிற் சென்று ரோடொத் துதித்தன னருக்கனிப்பால்' (3085) பிறவும் வந்த வழிக் காண்க.

## அணிகள்

தொல்காப்பியர் உவமை என்ற ஒன்றையே அணியெனக் கொண்டார். அந்த உவமை யென்னும் தவலருங் கூத்தி, பல் பெருங் கோலம் பாங்குறப் புனையப் பிற்காலத்துத் தண்டியலங்காரம் உடையார், மாறனலங்கார முடையார் முதலானோர் வடமொழியைப் பின்பற்றிப் பற்பல அணிகளைத் தமது காப்பியத்தில் காட்டியுள்ளார். அவற்றில் சில :

தொடர்புயர்வு நவிற்சியணி (யுத்த. 1, 456, 5)

வேற்றுப்பொருள் வைப்பு 14, 586, 635

கருத்துடை யடைகொளியணி 369
பிறிது மொழிதல், பொற்பொருட்பின் வருநிலை 373, 544
தற்குறிப் பேற்றம் 461, 536, 555, 581, 582, 628, 649, 704
இல்பொருளுவமை 5051, 680, 682, 774, 788
பிறிதினவிற்சி, 507
தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி, 564, 5882
ஏதுத் தற்குறிப்பேற்றம், 595
ஏகதேச உருவகம் 600
வீறுகோளணி 632
எதிர்நிலையணி, 656
பிறிதின் குணம் பெறலணி, 789
உவமையணி 886, 889

முதலியன காண்க.

கம்பநாடர் கூறும் உவமைகள் செம்பாகமானவை ஆழ்ந்த கருத்துள்ளவை. அவை வெளியியற்கையைப் பொறுத்தும் மக்களியற்கையைப் பொறுத்தும் கதா நிகழ்ச்சிகளைப் பொறுத்தும், கதையில் வரும் பாத்திரங்களைப் பொறுத்தும் கூறப்படும். சிலவற்றை நோக்குவோம்.

1. கைத்தொன்று நெல்லியங்கனி 186
2. நீத்த நீர்ப்பொய்கையி னிறைந்த நாண்மலர்
3. வைதெனக் கொல்லும் விற்கை மானுடர் 751
4. நாயினம் சியம் கண்டதாமென 754
5. ஏகராசியி னெய்த வெதிர்ந்த வேகராகு 817
6. வையெயிற்ருலு நேராமணி யிழந்திரங்கலாலும் பையுயிர்த் தயரும் பேழ்வாய்ப் பஃறலைப் பரப்பினுலும், மெய்யனைத் திரையின் வேலை மென்மலர்ப் டள்ளியான, ஐயனைப் பிரிந்து வைகுமனந்தனே யரக்கர் வேந்தன்.

இதில் கதைப் பாத்திரத்தை உவமை கூறியது காண்க.

7. நாய்தரக் கொள்ளும் சியம் நல்லரசு 941
8. இடையுறு கருமத்தி னெல்லை கண்டனன், கடையுறு நோக்கினிற் காணுங் காட்சியான், (1064)

9. ஒத்திரு சிறுகுறள் பாதமுய்த்த நாள், வித்தகரருமறை யுலகை மிக்குமேல், பத்துடை விரல்புடை பரந்த பண்பெனச், சித்திரச் சேவடிக் கழலும் சேர்த்தினன். 1065

10. நல்லிய னவையறு கவிஞர் நாவரும், சொல்லெனத் தொலைவிலாத் தூணி தூக்கினன். 1068

11. யானை சீயத்தின் முழக்கம் கேட்டல் 1097

12. வைதாலெனா வைதாவினை 1113

13. மகவு கொண்டுபோய் மரம்புகு மந்தி 1168

14. கன்று தாங்கிய தாய் 1173

15. அம்பின் முன்செலு மனத்திற்கு முன்செலும், 1186

16. மாருத மறைந்தபூளை 1210

17. வாங்கிய வரிவிலன்ன மாலியவான் 1222

18. நல்லியற் கவிஞர் நாவிற் பொருள் குறித்தமர்ந்த சொல் (1232)

19. புன்னுனைப் பனிநீர் (1250)

20. தட்டுறு குறங்குபோலத் தடந்துயில் கொள்ளல் 1257

21. துணைப்பிரிந் தயரு மன்றில், 780

22. கடலிடம் கோட்டம் தேய்த்துக் கழித்தல் 1350

23. கனிவரும் காலத்துப் பூக்கொய்தல் 1356

24. இரவு கற்றன போன்றன விலக்குவன் பகழி 1429

25. நிலவரைத் தருபொருள்வழி தண்டமிழ் நிரப்பும், புலவர் செற்றுறை புரிந்தவும் போன்றன புங்கம் 1430

26. வல்வினை தீயன வந்த போதொரு, நல்வினை யொத்தது நடந்ததானையே, 1518

27. தாயெரி வீழக்கண்ட பார்ப்பு 1597

28. அரியொடும் வாழ்ந்த பேடை யங்கணத் தழுக்குத் தின்னும், நரியொடும் வாழ்வதுண்டோ 1624

29. வைவன முனிவர் சொல்லனைய வாளியும் 1766

30. உலைக்குவட்டுருகு செம்பொத்து நீர் உகுக்கும் கண்ணன். 1927

31. வெதிரின் காட்டெரிபோற் சரம் வித்திஞனே 2097

32. தாங்கலாற்றும், கோளிலா மன்னனுட்டிற்குடி 2524

33. வேலையிற் புக்கழுந்திய மரக்கலம் போல் 2669

34. சிங்கலி னழுதிஞேடும் புளியளாந் தேறலென்ன, வெங் குரலெடுத்த பாடல் 2764

35. வேதத் தோட்டியின் தொடக்கினிற்கும் துளைக்கைமால் யானே.

36. புண்ணிடை யெரிபுக்கன்ன மானத்தாற் புழுங்கி நையும்.

37. ஆழியங் கமலக் கையனுகிய பரமனென்று ஏழையருள்ள மென்ன விருண்டன திசைகளெல்லாம்.

38. மத்துறு தயிரினுள்ள மறுகினன்.

39. கரியின் வாரிக் கெதிர்ப்பட்ட சீயம்.

40. வஞ்சன் செய்த கற்பனை யென்ன வோடிக் கலந்தது கள்ளின் வேகம்.

41. பாலுறுபிரை.

42. சீயம், தும்பியைத் தொடர்வதல்லால் குரங்கினைத் தொடர்வதுண்டோ.

43. காமக்குல மடமங்கையர் கடைக் கண்ணெனக் கணைகள்.

44. ஏழுவகை முனிவர் தம் சொல்லினும் வலியதோர் சுடுகணை.

45. காமம் விற்கின்ற விரகிற் ருெலார், பொய்வினை மகளிர் கற்பும் போன்றதப் பொலந்தேர்.

46. உழுவைப போத்தை யுழை யுயிருண்டல்.

47. வேத வேதாந்தம் கூறும் பொருளினை விரிக்கின்ருற் போல், தாதுவரணிகடோறும் வரன்முறை காட்டிச் சொன்னுர்.

48. பதங்கமாாழல் விளக்கினில் வீழ்ந்தென.

---

## காப்பியத்திற் கண்ட சில அறவுரைகளும் மூதுரைகளும்

1. தாம் பிழை செய்தாரேனும் தஞ்சமென் றடைந்தோர் [தம்மை
நாம் பிழை செய்யலாமோ.

2. மானின் இனங்களும் பலவென் செயுமரியை.

3. பெருமையும் வண்மை தானும் பேரெழிலாண்மை தானும்
ஒருமையின் உணர நோக்கின்பொறையினூ தாற்றம்.

4. வென்றவர் தோற்பர் தோற்றோர் வெல்குவர்
நின்றவர் தாழ்வார் தாழ்ந்தோருயர்குவர்.

5. அன்பினுக் கவதியில்லை.

6. இறுதியே யியைவதானல் இடையொன்ருற்
றடை யுண்டாமோ.

7. தாயவை தந்தையாரென் றுணர்வரோ தருமம் பார்ப்பார்.

8. தூயவை துணிந்தபோது பழிவந்து தொடர்வதுண்டோ
1346.

9. ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கினியது 1361.

10. ஆகுவதாகும் காலத்தழிவது மழிந்து சிந்திப்
போகுவ தயலே நின்று போற்றினும் போதல் செய்யும்.

11. உய்திறனுடையார்க் கன்றோவறநெறி யொழுக்கமுண்மை.

12. விதியை யார் தீர்க்க கிற்பார்.

13. துரக்கு மெய்யுணர் விருவினை களையெனும் சொல்லில்
காக்கும் வீரதை தீமையையெனு மிதுகண்டோம்.

14. வெல்லா தருமத்தைப் பாவம்.

15. அறந்தலை நின்ருர்க்கில்லை யழிவு.

16. தம்பியுடையான் படைக்கஞ்சான்.

17. சோர்வுறு பாலில் வெள்ளைச் சிறு
துளி தெறித்ததே போல் 709.

18. தன்னைக் கொல்வது துணிவரேற் றனக்கது தகுமேல்
முன்னர்க் கொல்லிய முயல்க.

19. கூவலிற் புக்குவேலை கோட்படாது.

20. கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்தல்.

21. அன்பென்ப தொன்றின் தன்மை
யமரரு மறிந்த தன்றால் 2669.

---

# செய்யுட்களின் காணும் பிழையும் திருத்தமும்



| பக்க எண் | செய்யுள் எண் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 3580 | 4 | சேற்று | செற்று |
| 12 | 3590 | 1 | உதயக் | உதய |
| 89 | 3668 | 3 | யுந்தர | யுந்நர |
| 146 | 3733 | 3 | வீமலன் | விமலன் |
| 217 | 3807 | 1 | மஞ் ரங்கிய | மஞ்சரங்கிய |
| 261 | 3851 | 2 | லாமற் | லாமல் |
| 335 | 3915 | 3 | ருயினான் | ருயினாள் |
| 345 | 3926 | 1 | நீரேனா | நீரெனா |
| 367 | 3943 | 4 | புந்நி | புந்தி |
| 398 | 3969 | 3 | சிறத்த | சிறந்த |
| 402 | 3972 | 1 | தியிடை | தீயிடை |
| 496 | 4050 | 2 | லேறினும் | ளேறினும் |
| 580 | 4113 | 2 | மற்றாஞ் | மற்றுஞ் |
| 623 | 4154 | 4 | வெழுத்து | வெழுந்து |
| 629 | 4159 | 3 | யளைய | யனைய |
| 651 | 4181 | 5 | டூழலுந் | டுழலுந் |
| 654 | 4185 | 7 | பொன்னெடூ | பொன்னெடு |
| 655 | 4186 | 6 | மிந்தான் | மீந்தான் |
| 662 | 4193 | 3 | சேளை | சேனை |
| 699 | 4230 | 5 | தலக்தில் | தலத்தில் |
| 701 | 4233 | 1 | காலந் | காலத் |
| 719 | 4246 | 2 | நந்நியம் | நந்தியம் |
| 719 | 4246 | 2 | நீங்கி | நீங்கிக் |

## [illegible]
# கம்பராமாயணப் பதிப்புகள்

—✻—

| | | ரூ. ந.பை. |
|---|---|---|
| 1. | பாலகாண்டம்— (மூலம், குறிப்புரை முதலியவற்றுடன் பக். 646) ... | 6—50 |
| 2. | அயோத்யாகாண்டம்— (மூலம், குறிப்புரை முதலியவற்றுடன் பக். 619) ... | 6—50 |
| 3. | ஆரணியகாண்டம்— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1159) ... | 12—00 |
| 4. | கிஷ்கிந்தாகாண்டம்— (மூலம், குறிப்புரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1027) ... | 12—00 |
| 5. | சுந்தரகாண்டம்— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1036) ... | 12—00 |
| 6. | யுத்தகாண்டம் (முதற் பகுதி)— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1261) ... | 12—00 |
| 7. | ௸ (இரண்டாம் பகுதி)— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1096) ... | 12—00 |
| 8. | ௸ (மூன்றும் பகுதி)— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1191) ... | 12—00 |
| 9. | ௸ (நான்காம் பகுதி)— (மூலம், பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் பக். 1120) ... | 12—00 |